கொண்டால் இயற்கையின் மர்மம் முழுதும் விளங்கிவிடுகிறது? இந்த ஆழ்ந்த ஆராய்ச்சியில் அவர்கள் வெற்றியும் பெற்றனர். அனைத்துக்கும் முதற்காரணம் எது என்பதை அன்னவர் அனுபூதியில் உணர்ந்தனர். எல்லாப் பிரச்னைகளுக்கும் விடை மூல தத்துவத்தை அறிந்தபின் கிடைத்தது. மூலப்பொருளைப் பற்றிய வித்தை பிரம்மவித்தை என்ற பெயர் பெற்றிருக்கிறது. வேறு பல பெயர்களைக் கொண்டும் இதை அழைப்பதுண்டு. அவைகளுள் பர வித்தை அல்லது பரஞானம் என்பது சர்வசாதாரணமானது. சமயங்கள் தெய்வத்துக்குக் கொடுத்திருக்கிற பெயரை இந்த ஞானத்துக்கும் கொடுத்து விடுவது இயல்பு. உதாரணம் ஒன்று எடுத்துக்கொண்டால் சிவஞானம் என்பதும் பரஞானம் என்பதும் வெவ்வேறு ஆனவைகளல்ல. பொருளுக்கு விளக்கம் சொல்லுமிடத்து இவையாவும் ஒன்றையே குறிக்கின்றன என்பது வெளியாகும். இந்த பிரம்ம வித்தையைப் புகட்டுவது கீதையின் நோக்கமாகும். அர்ஜுனன் கேட்டது போர் புரிவதா, பின் வாங்குவதா என்பதாகும். அதற்கு இரண்டில் ஒன்றை இயம்புதற்குப் பதிலாக, பிரம்ம வித்தையை ஏன் பகவான் எடுத்துக்கொண்டார் என்ற கேள்வி பிறக்கக்கூடும். அப்போதைக்கப்போது உண்டாகும் சந்தேகங்களை அகற்றி வைப்பது ஒருவித உதவியாகும். புதிய சந்தேகம் பிறப்பதற்கு இடமில்லாது ஐயங்கள் அனைத்தையும் அறவே அகற்றி வைப்பது உயர்ந்த உபகாரமாகிறது. ஒரு ஜீவனுக்குக் கொடுக்கும் கொடைகளுள் முடிவானது பிரம்மஞானம். ஜீவாத்மா அதை ஏற்க வல்லவனாகும்போது பரமாத்மா அதை எடுத்து உவந்து அளித்துவிடுகிறார்.

## 16. யோக சாஸ்திரம்

ஒவ்வொரு சாஸ்திரத்திலும் உபபத்தி என்றும் அனுஷ்டானம் என்றும் இரண்டு பகுதிகள் உண்டு. ஆங்கிலத்தில் இவைகளை theory and practice என்பார்கள். யுக்தி

யால் முடிவு கட்டுவது உபபத்தி; நடைமுறையில் செய்து காட்டுவது அனுஷ்டானம். சாதாரண மனிதன் ஒருவனுக்கு பிரம்மஞானம் வெறும் உபபத்தியாகப் போய்விடலாம். அப்பொழுது அவன் அதில் நன்மையொன்றும் அடைய மாட்டான். வாய் வேதாந்தம் என்பது அதுவே. ஆனால் பிரம்மஞானம் வேறு, வாய்ப்பேச்சு வேறு. பிரம்மஞானம் முற்றிலும் வாழ்க்கைக்கு உரியது. ஒவ்வொரு மனிதனும் தனது வாழ்க்கையில் அதை அனுஷ்டானத்துக்குக்கொண்டு வரலாம். ஆகையால் அது யோக சாஸ்திரம் என்னும் பெயர் பெறுகிறது. கூலிவேலை செய்பவனுக்குக் கீதா தத்துவம் தெரிந்திருந்தால் அவன் தன் வேலையைத் திறம்படச் செய்வான். பயிர்த்தொழில் செய்பவனுக்குக் கீதா தத்துவம் தெரிந்திருந்தால் அவன் நல்ல கிருஷிகன் ஆவான். வர்த்தகம் செய்பவனுக்கு இக்கோட்பாடுகள் தெரிந்திருந்தால் அவன் சிறந்த வியாபாரியாவான். அரசாங்க உத்தியோகஸ்தர் கீதையை நன்கு கற்றறிந்தால் அவர்களுடைய உத்தியோகம் சீராக நிகழும். பாடம் புகட்டும் ஆசிரியர்கள் கீதையின் கோட்பாடுகளை அறிந்துகொண்டால் அவர்கள் சீரிய ஆசிரியர்கள் ஆவார்கள். சுருங்கச் சொல்லின் கீதையைக் கற்று அனுஷ்டிக்கும் ஒவ்வொரு மனிதனும் மேலான மனிதன் ஆவான். திறமை வாய்க்கப்பெற்ற மனிதனுக்கு யோகி என்று பெயர்.

கீதையில் பதினெட்டு அத்தியாயங்களுள் ஒவ்வொரு அத்தியாயத்துக்கும் ஒவ்வொரு யோகம் என்ற பெயர் வந்து அமைகிறது. மனத்தின் பண்பாடு யோகமாகிறது. மனம் தளர்வுறுவார்க்கும் துயருறுவார்க்கும் யோகமில்லை என்பது கோட்பாடு. அதாவது வியாகூலமுடையவன் யோகியாகான். பதஞ்சலி முனிவர் இயற்றிய யோக சாஸ்திரத்தில் அஷ்டாங்கங்களில் ஓர் அங்கமாகிய நியமம் என்னும் பகுதியில் சந்தோஷம் என்பது யோகத்துக்கு இன்றியமையாத கோட்பாடாகும். மனத்தகத்து அமைதியும் ஆனந்தமும் கொள்ளுதல் வேண்டும். அப்படியானால் கீதையின் முதல் அத்தி

யாயத்துக்கு யோகம் என்னும் தலைப்புப் பொருந்தாது. அர்ஜுன விஷாத யோகம் என்னும் பெயர் அதற்கு அமைந்துள்ளது. இருளை வெளிச்சம் என்று சொல்லுவது எப்படிப் பொருந்தாதோ அப்படித் துயரத்தை யோகம் என்று அழைப்பது சரியன்று. பின்பு அந்த அத்தியாயத்துக்கு ஏன் யோகம் என்ற பெயர் வந்தது?

துயரத்தில் இரண்டு விதம் உண்டு. ஒன்று உலக ஆசையைக் குறித்தது. தனக்கு வந்து அமைந்த போகமும் பொருளும் போதவில்லை யென்று துயருறுபவன் உண்டு. அத்தகைய துயரத்தால் ஆண்மை அகன்றுவிடுகிறது; வீரம் விரயமாய் விடுகிறது; அஞ்ஞான இருள் அதிகரிக்கிறது. ஆனால் அர்ஜுனனுக்கு அமர்க்களத்தில் வந்த துயரம் அத்தகையதன்று. அவனுக்கு உலக ஆசை போய்விடுகிறது. மூவுலகின் ராஜ்யமும் வேண்டாம் என்கிறான். போர்புரிவதா, பின்வாங்குவதா, எது தன் கடமையென்று தனக்குப் புலப்படவில்லை யென்று பரிதவிக்கிறான். வாழ்க்கையின் மர்மம் அவனுக்கு விளங்கவில்லை. உயிர்வாழ்க்கை அவனுக்குத் தாங்கமுடியாத தலைச்சுமை போன்று ஆய்விட்டது. அதைக் குறித்து அவன் வருந்தினான். அது வாழ்க்கையில் விரக்தி அல்லது பற்றின்மைக்குச் சமானம். அருள்தாகம் என்றும் அதை இயம்பலாம். அர்ஜுனன் அடைந்த துயரம் அவனை யோகத்துக்கு ஆயத்தப்படுத்துகிறது. நல்லறிவும் அறநெறியும் வேண்டுமென்று பரிதாபப்படுபவர் பாக்கியவான்கள். ஏனென்றால் அன்னவர் அருள் நிலையில் ஆறுதல் அடைவர் என்பது கோட்பாடு. "வல்வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே," என்றார் ஆத்ம சாதகன் ஒருவர். இப்பொழுது விஜயனுக்கு வந்துள்ள விசனம் இனி யோகத்தை வருவிப்பதற்கு ஏதுவாகிறது. ஆகவே அந்த விசனமும் யோகம் என்று சொல்லப்படுகிறது.

பதினெட்டு அத்தியாயங்களில் உள்ள பதினெட்டு யோகங்களையும் மேலும் தொகுத்து நான்கு யோகங்களில்

அடக்கிவிடலாம். அந்த நான்கும் முறையே கர்மயோகம், ராஜயோகம், பக்தியோகம், ஞானயோகம் என்று பெயர் பெறுகின்றன. இந்த நான்கினுள் ஆரம்பத்தரையில் இருப்பது கர்மயோகமென்றும், பிறகு அது ராஜயோகமாகப் பரிணமிக்கிறது என்றும், அதினின்று பக்தியோகம் ஓங்குகிறதென்றும், இறுதியில் அது ஞானமாக முற்றுப்பெற்றுவிடுகிறது என்றும் பொருள்படுத்துவது ஐதிகமாக வந்துள்ளது. கீதையில் பதினெட்டு அத்தியாயங்களின் அமைப்பே அதற்குத் தக்க சான்றாகிறது. நான்கு யோகங்களையும் அரும்பு, பிஞ்சு, காய், கனி என்று பொருள்படுத்துவாரும் உளர். ஆனால் ஸ்ரீ கிருஷ்ண பகவான் இந்த நான்கினுள் வேற்றுமையோ தாரதம்மியமோ பாராட்டுகிற அறிகுறிகளைக் காணமுடியாது. கர்மத்தோடு உயர்ந்த ஞானத்தை அவர் இணைக்கிறார். பிறகு பக்தியையும் ஞானத்தையும் ஒரேபாங்கில் பொருள்படுத்துகிறார். யோகத்தையும் பக்தியையும் மற்றோர் இடத்தில் ஒன்றுபடுத்துகிறார். இங்ஙனம் ஒரு யோகம் மற்றொன்றுக்கு முந்தியதுமல்ல பிந்தியதுமல்ல, மேலானதுமல்ல கீழானதுமல்ல என்று எடுத்துக் காட்டுவது அவரது சிறப்பியல்பு ஆகும். வாழ்க்கை என்னும் ரதத்துக்கு அவர் நான்கு யோகங்கள் என்னும் நான்கு குதிரைகளைப் பூட்டுகிறார். அவைகள் வெண்குதிரைகளாயிருப்பது அவைகளின் சாத்துவிக இயல்பையும் தூய்மையையும் விளக்குகிறது. ரதத்தை விரைந்து ஓட்டுதற்கு நான்கு குதிரைகளும் சேர்ந்து உழைக்கவேண்டும். அங்ஙனம் நான்கு யோகங்களும் ஏக காலத்தில் சேர்ந்து அனுஷ்டிக்கப்படும் பொழுது வாழ்க்கையின் லட்சியம் இனிது நிறைவேறுகிறது. நான்கு யோகங்களையும் சமரசமாக வழங்குகின்ற அப்பரம புருஷனுக்கு யோகேசுவரன் என்னும் பெயர் வந்துள்ளது.

## 17. போதனை முறை

அவதார புருஷர்கள் எல்லாரும் மக்களுக்குத் தாங்கள் புகட்டியவைகளை மிக எளிய முறையில் கொடுத்திருக்கிறார்

கள். குழந்தைகளுக்கும், பாமரருக்கும் விளங்கும் வண்ணம் மேலாம் தத்துவங்களைச் சுலபமாக்கியிருக்கிறார்கள். அவர்களுடைய உபதேசங்களுக்கு வியாக்கியானம் செய்யவேண்டிய அவசியமில்லை. வியாக்கியானம் செய்ய முயன்றவர்கள் தங்களுடைய கொள்கை அவதார புருஷருடைய கூற்றில் அடங்கியிருக்கிறது என்பதைக் காட்டுதற்கே முன்வந்தனர். தர்க்கம் முதலிய உபகரணங்களைக் கையாண்டவர்களும் பாஷ்யக்காரர்களேயாம். ஆனால் அவதார புருஷர்கள் புகட்டியதிலோ தாய் தன் குழந்தைக்கு எடுத்துச் சொல்லுவது போன்று அவ்வளவு இனியதும், எளியதுமான முறையைக் கையாண்டிருக்கின்றனர். ஸ்ரீ ராமன், புத்தர், ஏசுநாதர் போன்றவர்களுடைய பேச்சுக்களை நாம் உள்ளபடி தெரிந்துகொள்ளுதற்கு யாருடைய வியாக்கியானமும் அவசியமல்ல.

ஸ்ரீமத் பகவத்கீதையும் போதனை முறையில் மிக எளியதே. மூலத்தை அவரவர்க்குத் தெரிந்த மொழியிலே பெயர்த்தெடுத்துப் படித்துப் பார்த்தால் படிக்கின்றவர்களுக்கு விளங்காத பகுதி மிகக் குறைவு; விளங்குகிற பகுதியே பெரும்பான்மை எனலாம். அது அவ்வளவு எளியதாக இருப்பது மட்டுமல்ல, மிக ஆழ்ந்ததாகவும் இருக்கின்றது. பகவத்கீதைக்கு மூல மொழியாகிய சம்ஸ்கிருதத்தில் அமைந்ததே அது ஆழத்தில் செல்லுதற்கு இடங்கொடுத்தது. மொழி அழகானது. விதவிதமான பொருள், அழகாக வடிவெடுக்கவல்லதாக, கீதையில் அமைந்திருக்கிறது. விதவிதமான பொருள்களையும், சம்பிரதாயங்களையும் அதில் காணலாம் என்றாலும் அத்தனைவித விளக்கங்கள் ஒன்றோடொன்று முரண்படுபவைகளல்ல. ஆகையால்தான் அது பிரஸ்தானத்திரயத்தில் ஒன்றாக இடம் பெற்றிருக்கிறது.

ஒரு கோட்பாட்டை பகவான் ஓரிடத்தில் பகர்ந்தால் அதன் பொருள் நன்கு விளங்குதற்பொருட்டு வேறு பல இடங்களிலும் வேறு விதங்களில் அதை விளக்கிவிடு

வார். சான்றுகள் சில எடுத்துக் கொள்வோம். உயிரோடிருப்பவனைக்குறித்தோ, உயிர் துறந்தவனைக்குறித்தோ பண்டிதன் விசனப்படுவதில்லை என்கின்றார் ஓரிடத்தில். ஒரு விதத்தில் பண்டிதன் என்னும் சொல்லுக்கு அது விளக்கமாகிறது. மற்றொரு இடத்தில் சிற்றுயிர் பேருயிர் ஆகிய அனைத்திடத்தும் சம திருஷ்டி உடையவன் பண்டிதன் என்கின்றார். இங்ஙனம் பண்டிதன் என்னும் சொல்லை எங்கெங்கு கையாண்டிருக்கிறார் என்று பார்த்தால் அதற்கு முழு விளக்கம் கிடைத்துவிடும். யோகம் என்னும் சொல்லை அடிக்கடி உபயோகப் படுத்துகின்றார். செயலில் திறமை வாய்க்கப் பெற்றிருப்பது யோகம் என்னும் விளக்கம் ஓரிடத்தில் அமைகிறது. மனம் நடுநிலை வகிப்பது யோகம் என்ற விளக்கம் இன்னொரிடத்தில் வருகிறது. வலிய எடுத்துக்கொண்ட வருத்தங்களினின்று விடுபடுவது யோகம் என்ற விளக்கம் இன்னும் ஓர் இடத்தில் வருகிறது. இவைகளையெல்லாம் திரட்டினால் யோகத்தைப்பற்றிய எல்லாக் கோட்பாடுகளும் நமக்கு விளங்கிவிடும்.

புகட்டிய ஒரு கருத்தையே திரும்பவும் அவர் புகட்டுவதுபோன்று சில இடங்களில் தென்படும். ஆயினும் சொன்னதையே சொல்லுதல் என்னும் குற்றம் அவரைச் சாராது. யோகம் என்னும் சொல் முதல் ஆறு அத்தியாயங்களில் பெரும்பாலும் கருமயோகத்தையே குறிக்கும். இரண்டாவது ஆறு அத்தியாயங்களில் அது சிறப்பாக பக்தி யோகத்தைக் குறிக்கும். கடைசி ஆறு அத்தியாயங்களில் அது ஞானயோகத்தைக் குறிக்கும். அஹங்காரம் என்னும் சொல்லும் அங்ஙனமே இடத்துக்கு ஏற்றாற்போன்று விதவிதமாகப் பொருள்படும். ஒரே கோட்பாட்டை கர்மம், பக்தி, ஞானம் ஆகிய மூன்று யோகங்களில் மூன்று விதமாகப் பொருள்படுத்தலாம். அப்படிப் பொருள் படுத்துவதும் முற்றிலும் அவசியமாகிறது. ஆத்மா என்னும் சொல் முதல் ஷட்கத்தில் சத் சொரூபமாக வடிவெடுக்கும். இரண்டாவது ஷட்கத்தில் அது ஆனந்த சொரூபமாக அல்லது

பிரேமை சொரூபமாக வடிவெடுக்கும். கடைசி ஷட்கத்தில் ஆத்மா சித் சொரூபமாக வடிவெடுக்கும். இவை யாவற்றை யும் ஞாபகத்தில் வைத்துக்கொண்டால் பகர்ந்த கோட் பாட்டையே திரும்பவும் பகர்ந்திருக்கின்றார் என்ற குற் றத்தை கீதாசாரியன்மீது நாம் சாட்டமாட்டோம். எதை யும் அவர் மிகைபடவோ, குறைவுபடவோ பகரவில்லை. அனைத்தையும் அளந்தெடுத்தே அவர் விளக்கியுள்ளார்.

## 18. சுருதியும் ஸ்மிருதியும்

பகவத்கீதைக்கு அமைந்துள்ள தனிச் சிறப்புக்கு முக்கியமான காரணம் ஒன்று உண்டு. அது ஏககாலத்தில் சுருதியாகவும் ஸ்மிருதியாகவும் வழங்குகிறது. சுருதி எது; ஸ்மிருதி எது என்று முதலில் ஆராய்வோம். உபநிஷதங் களுக்குச் சுருதி என்று பெயர். கர்ண பரம்பரையாகக் காதால் கேட்டுக் காப்பாற்றி வைக்கப்பட்டது எதுவோ அது சுருதி. நெடுங்காலமாக ஒருவர்பின் ஒருவராகக் கேட்டு வந்தது எனினும் அதன் சொல் அமைப்பை யாரும் மாற்றி விடவில்லை. ஆகையால் மூலப்பொருளமைப்பும் திரிவுபடாது இருந்துவந்திருக்கிறது. கணிதத்தில் எண்சுவடியையும் பெருக்கல் வாய்பாட்டையும் எப்படி யாரும் மாற்றமுடியாதோ அப்படி சுருதிப்பொருளை யாரும் மாற்றமுடியாது. மெய்ப்பொருளை விளக்குகின்ற சுருதி மொழியும் என்றும் மாறாதிருக்கிறது. ஆக, சுருதி யாண்டும் சாசுவதமானது.

ஸ்மிருதி என்பது ஞாபகத்தில் வைத்துக்கொண் டுள்ளது என்று பொருள்படுகிறது. சமூகவாழ்க்கை சம்பந்தமான கட்டுப்பாடுகளும் சட்டதிட்டங்களும் சேர்ந்து ஸ்மிருதி என்னும் பெயர் பெறுகிறது. நன்கு அமைக்கப் பெற்ற ஸ்மிருதிகள் எப்பொழுதும் பரதத்துவங்களை அடிப்படையாகக் கொண்டவைகள். பராசர ஸ்மிருதி, மனுஸ்மிருதி முதலியவைகள் பிரசித்திபெற்றவைகள். ஸ்மிருதிகள் சாசுவதமானவைகளல்ல. காலத்துக்கும், இடத்துக்கும், சந்தர்ப்பத்துக்கும் ஏற்ப அவைகள் மாறி

யமையும். சமூக நடைமுறைகளை நன்கு அறிந்துள்ள மேலோன் ஒருவன், அல்லது மேலோர் கூட்டம் ஒன்று ஸ்மிருதிகளைக் காலத்திற்கு ஏற்றவாறு திருத்தியமைத்துக் கொள்வதுண்டு. சுதந்தர இந்தியாவுக்கு இப்பொழுது இந்திய அரசாங்கம் அமைத்துள்ள சட்டதிட்டங்களையும் ஸ்மிருதியெனலாம். ஆக, ஸ்மிருதியென்பது அப்போதைக் கப்போது மாறியமையும் தன்மையுள்ள சமூகக் கோட்பாடுகளாம்.

ஸ்ரீமத் பகவத்கீதையானது ஏககாலத்தில் சுருதியாகவும் ஸ்மிருதியாகவும் அமைந்துள்ளது. பரதத்துவத்தை அது நன்கு விளக்குவதால் அது சுருதியாகிறது. பரதத் துவத்துக்கு ஏற்ற வாழ்க்கை வாழ்வது சநாதனதர்மம். இந் நூலினின்று சநாதனதர்மத்தை உள்ளபடி கற்றுக்கொள்ள லாம். சமுதாய அமைப்பு எத்தகையது என்பதையும், அது எங்ஙனம் நடைபெறவேண்டும் என்பதையும் கீதை எடுத்து விளக்குகிறது. சநாதன தர்மம் யுகதர்மமாக வடிவெடுக்கும் விதத்தையும் அது காட்டிக்கொடுக்கிறது. இதை ஒரு உப மானத்தைக்கொண்டு அறிவது நன்று. பொன் என்றைக் கும் விலையுயர்ந்த பொருள் ஆகிறது. பொற்காசு பெறுகிற முத்திரை ஒவ்வொரு அரசாங்கத்திலும் மாறியமைகிறது. பொன் போன்றது சநாதன தர்மம். பொற்காசு போன்றது யுகதர்மம். இனி, ஸ்மிருதியும் பொற்காசுக்குச் சமான மானது. சாஸ்திரப் பிரமாணங்களைச் சொல்ல வருகிற மத ஸ்தாபகர்கள் ஸ்மிருதியும் அங்ஙனம் பகர்கிறது என்று சொல்லுவார்களானால் அவர்கள் குறிப்பிடுவது பகவத்கீதை யாகும். ஆசாரியர்களுக்கிடையில் அது ஸ்மிருதி என்னும் சிறப்புப் பெயர் பெற்றுள்ளது. மற்ற ஸ்மிருதிகள் காலத் துக்கு ஏற்றவாறு மாறியமையும். ஆனால் பகவத்கீதையை மாற்றியமைக்க முடியாது. ஏனென்றால் சமூக நடைமுறை யிலும் எக்காலத்துக்கும் பொதுவாயுள்ள கோட்பாடுகள் உண்டு. மாறுபாடு அடையும் உலகில் மாறுபாடு அடையாத கோட்பாடுகளையே கீதா சாஸ்திரம் விளக்குகிறது. ஆகவே

இது எக்காலத்துக்கும் எல்லா சமூகங்களுக்கும் உதவுகிற ஸ்மிருதியாகும். கீதையைக் கற்றறிந்தவன் பாரமார்த்திகத் தத்துவங்களையும் வியவகாரிக தத்துவங்களையும் கற்றறிந்தவன் ஆவான்.

## 19. மஹாவாக்கிய விளக்கம்

உலகில் உள்ள சமயங்கள் போற்றும் உயர்ந்த நூல்களெல்லாம் பொது இயல்பு ஒன்றைப்படைத்திருக்கின்றன. நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ அவையாவும் மஹாவாக்கியத்துக்கு விளக்கமாக வந்து அமைந்திருக்கின்றன. மஹாவாக்கியம் என்பது பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் உள்ள சம்பந்தத்தைச் சொல்லுகிறது. வேதங்களில் நான்கு மஹாவாக்கியங்கள் அமைந்திருக்கின்றன. அவைகளுள் மிகச்சிறப்புடையது தத் த்வம் அஸி என்னும் மூன்று சொற்களைக் கொண்டது. துவம் நீ, தத் அதுவாக, அஸி இருக்கிறாய் என்பது அதன் பொருள். ஜீவாத்மாவாகிய நீ பரமாத்மாவாகிய அதற்கு அன்னியமானவன் அலலன் என அதற்கு விளக்கம் வருகிறது. இக்கோட்பாட்டை எல்லா சாஸ்திரங்களும் ஏதேனும் ஒரு விதத்தில் இயம்புகின்றன. இதை எடுத்து ஓதாத நூல் உயர்ந்தநூல் ஆகாது. தத் துவம் அஸி என்னும் மஹாவாக்கியத்துக்கு உற்ற உயர்ந்த விளக்கம் என்று பகவத்கீதையைச் சொல்லலாம்.

அது பதினெட்டு அத்தியாயங்களையுடையது. திரிஷட்கம் அல்லது மூவாறு (3×6) என்று அப்பதினெட்டு அத்தியாயங்களும் பகரப்பெறுகின்றன. அவைகளுள் முதல் ஆறு அத்தியாயங்கள் த்வம் (நீ) என்னும் பதத்துக்கு இலக்காக இருக்கிற ஜீவ தத்துவத்தை விஸ்தாரமாக விளக்கிக்கொண்டு போகின்றன. ஜீவனிடத்துள்ள குறைபாடு, அவன் அடையவேண்டிய நிறை நிலை, அதற்காக அவன் எடுத்துக்கொள்ளவேண்டிய முயற்சி ஆகிய இத்தனையும் முதல் ஆறு அத்தியாயங்களில் அடங்கியிருக்கின்றன. இது

முதல் ஷட்கம். ஏழாவது அத்தியாயத்திலிருந்து பன்னிரண்டாம் அத்தியாயம் ஈறாக உள்ளவை இரண்டாவது ஷட்கம். மஹா வாக்கியத்தில் தத் (அது) என்னும் பதத்துக்கு இலக்காக இருக்கிற பரதத்துவம் அல்லது பரமாத்மாவை அந்த ஆறு அத்தியாயங்களும் விளக்குகின்றன. உலகனைத்தும் அவர் எப்படியாயிருக்கின்றார்; உலகங்களில் அவர் எப்படி அந்தராத்மாவாக இருக்கிறார்; பிறகு உலகத்தைக் கடந்தவராகவும் அவர் எப்படியிருக்கிறார், ஆகிய இவை யாவும் இந்த இரண்டாவது பகுதியில் வந்தமைகின்றன. பதின்மூன்றாவது அத்தியாயத்திலிருந்து பதினெட்டாம் அத்தியாயம் வரையில் உள்ள ஆறு அத்தியாயங்களுக்கு மூன்றாவது ஷட்கம் என்று பெயர். மஹாவாக்கியத்தில் அஸி (இருக்கிறாய்) என்னும் சொல்லுக்கு இலக்காயுள்ள பரமாத்ம – ஜீவாத்ம இணக்கத்தை இப்பகுதி தெளிவுபடுத்துகிறது. தத் த்வம் அஸி என்ற மூன்று பகுதிகளுக்கும் சமமான அந்தஸ்து கொடுத்திருப்பது பகவத்கீதை. அந்தந்தப் பகுதியை அது ஓர்மைப்படுத்தி விளக்கியிருப்பதுபோன்று தெளிவாகவும் முறையாகவும் வேறு ஒரு நூல் செய்யக்கிடையாது. ஆக, மஹாவாக்கியத்துக்கு முறையான வியாக்யானம் என்று இதை இயம்பவேண்டும்.

## 20. பாஷ்யங்கள்

ஒரு நூலின் உட்கருத்து எல்லாருக்கும் விளங்கும்படி அதை விரித்து எடுத்து விளக்குங்கால் அதற்கு பாஷ்யம் என்று பெயர். ஆழ்ந்த கருத்துடைய நூல்களுக்கு பாஷ்யங்கள் பல அமைவது இயல்பு. பிரஸ்தானத்திரயமாகிய உபநிஷதங்கள், பிரம்மசூத்திரம், பகவத்கீதை ஆகிய மூன்றுக்கும் பாஷ்யக்காரர் பலர் உளர். ஒரு மதம் அல்லது சம்பிரதாயத்தை நிலைநாட்ட முயலுபவர் தமது கருத்தைத்தான் பிரஸ்தானத்திரயம் விளக்குகின்றனவென்று சாஸ்திரப் பிரமாணம் மூலமாகவும் யுக்திபூர்வமாகவும் எடுத்துக் காட்டுவர். இதுவரையில் தோன்றியுள்ள விரிவுரைகளில்

பல அந்தந்த மதக்கோட்பாட்டையே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. பிரஸ்தானத்திரயங்களுள்ளும் பகவத்கீதைக்குத்தான் விரிவுரைகள் ஏராளமாயிருக்கின்றன. அதாவது உபநிஷதங்களுக்கும் பிரம்மசூத்திரங்களுக்கும் வியாக்யானங்கள் அமைந்திருப்பதைவிட அதிகமாக பகவத்கீதைக்கு உண்டு.

பல மொழிகளில் மொழிபெயர்ப்பு ஏற்பட்டிருப்பது ஒரு நூலின் சிறப்பைக் காட்டுகிறது. உலகில் உள்ள எல்லா மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டது கிறிஸ்து மத சாஸ்திரமாகிய பைபிள் ஆகும். அப்படி மொழிபெயர்ப்பை உண்டுபண்ணுவதற்குப் பணமும் ஆதிக்கமும் இருந்தால் போதுமானது. கிறிஸ்துவ ஆட்சியில் அவ்விரண்டும் சேர்ந்து அமைந்துள்ளன. ஆனால் கீதைக்கு அமைந்துள்ள மொழிபெயர்ப்புகள் ஆதிக்கத்தையோ பெருஞ்செல்வத்தையோ அடிப்படையாகக் கொண்டவைகளல்ல. இந்த உயர்ந்த கோட்பாடுகளை மக்கள் அறிந்து கொண்டால் அவர்களுக்கு நலன் ஏற்படும் என்ற எண்ணமே மொழிபெயர்ப்பில் மேலோரைத் தூண்டியது. சமயப்பற்றும் சமயப் பிரசாரமும் வேறு; தத்துவ ஞானமும் தத்துவப் பிரசாரமும் வேறு. கீதையின் மொழிபெயர்ப்புகளில் பல தத்துவ ஞானத்தை ஆதாரமாகக்கொண்டவை என்பதற்கு சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். ஆங்கில பாஷையில் கீதையின் முதல்மொழிபெயர்ப்பு East India Company — ஈஸ்ட் இந்தியா கம்பெனி என்ற ஆங்கில ஆட்சியாளர்களால் செய்யப்பட்டது. அந்த மொழிபெயர்ப்புக்கு Warren Hastings, வாரன் ஹேஸ்டிங்ஸ் என்ற ஆட்சித்தலைவர் முன்னுரையொன்று கொடுத்திருக்கிறார். அதில் அவர் பகர்ந்ததின் கருத்து:— "இங்கிலாந்து ஒரு காலத்தில் இந்தியா தேசத்தை இழக்க நேரிடலாம். ஆனால் இந்தியாவில் உதித்த இந்த பகவத்கீதையின் கோட்பாடுகளை இங்கிலாந்து அனுஷ்டானத்துக்குக் கொண்டுவருமானால் இங்கிலாந்து என்றைக்கும் மேன்மையுற்று விளங்கும்."

வாழ்க்கைத் தத்துவத்தின் பெருமையை உணர்ந்த ஒரு பேரறிஞரே இங்ஙனம் பகரமுடியும்.

இனி, பகவத்கீதைக்கு வியாக்யானம் எழுதியவர்கள் எல்லாம் பணத்தையும் ஆதிக்கத்தையும் ஆதரவாகக் கொண்டல்ல. குருக்ஷேத்திர பூமியில் இப்பொழுது கீதா மந்திரம் என்ற ஒரு ஆலயம் கட்டி வைக்கப்பட்டிருக்கிறது. அதே இடத்தில்தான் கீதா உபதேசம் அன்று நிகழ்ந்திருக்க வேண்டும் என்று அறிஞர் யூகிக்கின்றனர். அந்த ஆலயத்தில் முன்னூற்றுக்கு மேற்பட்ட வியாக்யானங்களைச் சேகரித்து வைத்திருக்கிறார்கள். அந்த விரிவுரைகளெல்லாம் வெவ்வேறு காலங்களில் எழுதப்பெற்றவை. அப்படி எழுதியவர்களெல்லாம் பேரறிவும் நல்லொழுக்கமும் வாய்க்கப்பெற்றவர்கள். சான்றோருலகில் கீதை எத்தகைய ஸ்தானம் வகித்து வருகிறது என்பதற்கு அதுவே சான்றாகும். அன்றைக்கு இருந்ததுபோன்று இன்றைக்கும் புதிய புதிய வியாக்யானங்கள் கீதைக்கு வந்துகொண்டே இருக்கின்றன.

## 21. சிறந்த பாஷ்யம் எது?

நூற்றுக்கணக்கான விரிவுரைகள் கீதைக்கு வந்திருக்கின்றனவென்றால் அவைகளில் எதை ஏற்பது, எதை விலக்குவது; எதைக்கற்பது, எதைத் தள்ளுவது என்ற கேள்விகள் எழலாம். சூரியோதயத்தின் அழகை ஒவ்வொரு கலைஞானியும் தன்தன் துறையில் வைத்து சிலாகித்துப் பேசலாம். வானநூல் துறை, மருத்துவநூல் துறை, இயற்கையழகுத் துறை, கணிதநூல் துறை, ஜோதிடநூல் துறை, பருவ விளக்கத்துறை, உயிர்த்தத்துவத் துறை இன்னும் என்னென்னவோ துறைகளினின்று உதய சூரியனை வர்ணிக்கலாம். அத்தனைவித வர்ணனைகளுக்கும் ஞாயிறு இடங்கொடுக்கும். கீதா சாஸ்திரமும் எண்ணிறந்த சம்பிரதாயங்களை விளக்குதற்கு ஆதரவாகும். அத்தனைவிதமான விளக்கங்களையும் அது தன்னகத்து அடக்கிக்கொண்டிருக்கிறது. அதற்கெல்லாம் மேலாக கீதைக்கென்றே அமைந்துள்ள வியாக்யானம் ஒன்று உளது. ஒருவிதத்தில் கீதை

யைவிட அது சிறந்தது. ஸ்ரீ கிருஷ்ணபகவான் வாழ்ந்துகாட்டிய வாழ்க்கையே அவருடைய கூற்றுக்கு ஒப்பற்ற விளக்கமாகிறது. அவதார புருஷர் ஒருவர் தமது ஜீவிதத்தின் மூலம் புகட்டுவதுதான் முதன்மை பெறுகிறது. அவர் பகர்ந்தருள்வது அதற்கு அடுத்தபடியாக வருகிறது. அவதார புருஷருடைய பேச்சுக்கே அருளையும் பொருளையும் தருவது அவதார புருஷருடைய ஜீவிதம். இக்கோட்பாடு வாசுதேவரது வாழ்க்கையில் உச்சநிலையைப் பெற்றுவிடுகிறது. மனத்தகத்திருந்து கச்மலத்தைக் களைந்துவிடு என்று அவர் புகட்டினார். சூரியனிடத்து எப்படி இருள் இருக்க இடமில்லையோ அப்படி அச்யுதனிடத்துக் கீழ்மை குடிகொள்ள இடமில்லை. 'ஆற்றல் படைத்தவனாய் எழுந்திராய்' என்று இயம்பினார் அவர். பின்பு ஆற்றல்கள் அனைத்துக்கும் அவரே இருப்பிடமாய் இலங்கினார். 'உயிர்களிடத்து அன்பு பூண்டு ஒழுகுக' என்று அவர் உபதேசித்தார். தாமே அன்பின் வடிவினராய் நன்கு மிளிர்ந்திருந்தார். நலத்தை நிலைநாட்டும் வீரன் ஒருவனுக்கு உற்றார் என்றும் வேற்றார் என்றும் வேற்றுமையில்லையென்று அவர் எடுத்தோதினார். கோவிந்தனது பாங்கும் அங்ஙனமே இருந்தது. இயற்கை கர்மமே வடிவெடுத்தது. அதற்கு ஆதாரமாயிருக்கும் ஆத்மாவின்கண் கர்மமில்லை என்பது கண்ணன் போதனை. கண்ணனாக வடிவெடுத்திருந்த சரீரம் கர்ம வீரனாக வினையாற்றிற்று. மகாபாரதத்தில் கூடியிருந்த பாத்திரங்கள் எல்லாம் ஒன்றுகூடி கண்ணன் செய்த கர்மத்தில் கால் பங்கும் செய்யவில்லை. சரீரம் அவ்வளவு வேலை செய்துகொண்டிருந்ததற்கு இடையில் கிருஷ்ண பரமாத்மா என்றைக்கும் பரமாத்ம சொரூபமாகவே இருந்தார். மற்ற உயிர்கள் போன்று அவர் அழக்கிடையாது, ஏமாற்றம் அடையக்கிடையாது, வியப்படையக் கிடையாது, கவலைப்படக் கிடையாது, துயருறக் கிடையாது. யாண்டும் நிறைநிலையிலேயே இருந்தார். கண்ணனை அறிபவர் கீதையை அறிவார்கள். கண்ணனே கீதைக்குச் சிறந்த பாஷ்யம்.

## 22. பாஷ்யங்களின் பாகுபாடுகள்

பாஷ்யங்கள் பல இருப்பதால் அவைகளுள் முரண்பாடு உண்டாவது இயல்பு. மாறுபடுகின்ற கருத்துக்களையெல்லாம் மேலானவைகளாக அங்கீகரிப்பது எங்ஙனம், என்ற கேள்வி எழலாம். மாறுபாடுகளுக்கிடையில் ஒற்றுமை பல அமைந்தாக வேண்டும். பகவத்கீதையை ஒரு நிலைக் கண்ணாடி என்று வைத்துக்கொண்டால் ஒவ்வொரு பாஷியமும் அதில் தோன்றும் பிம்பம் போன்றதாகும். அவரவர் முகம் எப்படியோ அப்படியே பிம்பமும் தென்படுகிறது. கண்ணாடியில் தோன்றுவது என்பது அனைத்துக்கும் பொதுவானது. அங்ஙனம் ஒவ்வொரு கொள்கைக்கும் மூலகருத்து கீதையில் இருக்கவேண்டும். மூல கருத்து கீதையில் இல்லாவிட்டால் வியாக்யானம்வைதிகத்துக்கு ஒவ்வாததாய்விடும். வைதிகத்துக்கு ஒத்ததாய் இருந்துகொண்டே விரிவுரைகள் பலவாக வடிவெடுப்பதுதான் முறை. ஒருவர் கீதையை முற்றும் பக்திநூல் என்றுபகரலாம். இன்னொருவர் அதை ஞான மார்க்கம் என்று நவிலலாம். மற்றொருவர் அதை யோக சாஸ்திரம் என்றே எடுத்துக்காட்டலாம். இகலோகத்தைப் பற்றிய பேச்செல்லாம் வெறும் பெயரளவில் என்று ஒருவர் நிரூபிக்கலாம். பரத்தைப்பற்றிப் பேசவேண்டியது அவசியமில்லை; சொற்பதங்கடந்த பொருளைப்பற்றிப் பேச்சு எதற்காக? கீதை பகர்வதெல்லாம் பாரமார்த்திகத்தை அடிப்படையாகக்கொண்ட சீரிய சமுதாய வாழ்க்கையே என்று ஒருவர் எடுத்தோதலாம். அரசியல் தத்துவம் அதில் ஏராளமாய் இருக்கிறது என்று ஒருவர் பொருள்படுத்தலாம். அங்ஙனமே ராணுவ தத்துவம் அதில் பொதிந்து கிடக்கிறது என்று இன்னொருவர் இயம்பலாம். இப்படியெல்லாம் வியாக்யானம் செய்தவர்கள் சிறுபான்மையோர்.

பாஷ்யக்காரர்களில் பெரும்பான்மையோர் அத்வைதம், விசிஷ்டாத்வைதம், துவைதம் ஆகிய மூன்று மதங்களில் ஏதேனும் ஒன்றைச் சார்ந்தவர்களாயிருந்து வருகின்

றனர். அவர்களுடைய மனப்பான்மையும் அதற்கேற்ற வாறு மாறியமைகிறது. கீதா தத்துவத்துக்கு அவர்கள் பொருள் தருவதும் அவரவர் மனப்பான்மைக்கு ஏற்றபடி மாறி அமைந்துவிடுகிறது. இனி, அத்வைத மதத்தைச் சேர்ந்தவர்கள் எல்லார்க்கும் அதில் ஓரே விதமான நம்பிக் கையிருக்கிறது என்று சொல்லமுடியாது. அவர்களது கொள்கையில் உட்பிரிவுகள் ஏராளமாயிருக்கின்றன. எது அத்வைதம் என்பதை அத்வைதிகளே விதவிதமாக விளக்குவார்கள். அதே பாங்கில்தான் விசிஷ்டாத்வைதமும் அமைந்துள்ளது. விசிஷ்டாத்வைதம் என்னும் எல்லைக்குள் இருப்பவர்களுள் கருத்து வேற்றுமைகளைக் காணலாம். இனி, துவைத மதத்திலும் உட்பிரிவுகளை ஏராளமாகக் காணலாம். அவரவர் கோட்பாட்டைப் பரப்புதற்கென்றே ஒவ்வொருவரும் பாஷ்யம் எழுத முன்வந்தனர். அத்வைத சம்பிரதாயத்துக்கு சிறந்த முன்மாதிரியாயிருப்பவர் ஸ்ரீ சங் கராசாரியர் ஆவர். விசிஷ்டாத்வைதிகள் அனைவர்க்கும் பிரதிநிதியாயிருப்பவர் ஸ்ரீ ராமானுஜாசாரியர். துவைத மத வாதிகள் எல்லார்க்கும் முன்னணியில் இருப்பவர் ஸ்ரீமத்வா சாரியர். பகவத்கீதைக்கு இம்மூவரும் பாஷ்யங்கள் இயற் றியிருக்கின்றனர். இம் மூவரும் தென்னிந்தியாவில் தோன் றியவர்கள் என்பதும் கருத்தில் வைக்கவேண்டிய விஷய மாகும். ஒரு மதத்தைச் சேர்ந்தவர் மற்ற மதத்தை அல்லது மதங்களைத் தாக்குவதையும் பாஷ்யங்களில் காணலாம். தத்துவ ஆராய்ச்சி என்ற முறையில் ஒரு கோட்பாட்டைத் தகர்த்தல் நியாயமேயாம். ஆனால் அதில் வரம்பு கடந்து போய்விடுவது யாருக்கும் பொருந்தாது. அச்செயலில் சில பாஷ்யக்காரர் வரம்பு கடந்தும் போயிருக்கின்றனர்.

## 23. வேதாந்தம்

பிரஸ்தானத்திரயம் புகட்டுகின்ற கோட்பாடுகளை யெல்லாம் தொகுத்து வேதாந்தம் என்று சொல்லுவது முறை. வேதத்தினுடைய அந்தம் அல்லது முடிவு வேதாந்

தம் என்பதாகிறது. இம்மை என்று சொல்லப்படும் இவ்வுலக வாழ்க்கையைப் பற்றியும், மறுமை என்று சொல்லப்படும் சுவர்க்கம் முதலிய மறு உலக வாழ்க்கையைப் பற்றியும் பகர்வது வேதம். வேறு ஒரு விதத்தில் அதே கோட்பாட்டைப் பகர்வோமானால் இந்திரியங்கள் மூலம் நுகர்கின்ற பிரபஞ்ச வாழ்க்கையைப் பற்றிப் பேசுவது வேதம். இந்திரியங்களுக்கும், மனதுக்கும் அப்பால் உள்ள பரத்தைப் பற்றிப் புகட்டுவது வேதாந்தம். இந்திரிய வாழ்க்கையைத் தியாகம் செய்தாலொழிய பரம் என்னும் பெருநிலை சித்திக்காது.

இந்தியாவிலும் புற நாடுகளிலும் தோன்றியுள்ள எல்லா மதங்களின் அடிப்படைத் தத்துவங்களை வேதாந்தத்தில் காணலாம். வேதாந்தத்தில் இல்லாத கோட்பாடு உலகில் எந்த மதத்திலுமே இல்லையென்று உறுதி கூறலாம். ஆக, மதங்களுக்கெல்லாம் தாய் மதமாயிருப்பது வேதாந்தம். மெய்ப்பொருளுக்கு எப்பெயர் இட்டு அழைப்பதும் வேதாந்தத்துக்குச் சம்மதம். பெயரையும் விளக்கத்தையும் முன்னிட்டுச் சமயங்கள் பெரிதும் சண்டையிட்டுக் கொள்கின்றன. அடிப்படையாயுள்ள கோட்பாட்டைக் காணுமாறு தூண்டுவது வேதாந்தம். தாகத்தைத் தணிப்பது ஜலமா, தண்ணீரா, பானியா, வெள்ளமா என்று வாதாடாதே. ஜலம், தண்ணீர், பானி, வெள்ளம் என்ற சொற்கள் குறிக்கும் பொருள் யாது என்று ஆராய்ந்து பார். பின்பு வேற்றுமையும் வீண்விவாதமும் ஒடுங்கும். மனிதன் அடையும் மேலாம் நிலையை ஐயம் திரிவு இன்றி விளக்குவது வேதாந்தம்.

இனி துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் ஆகிய மூன்று மதங்களின் உட்கருத்தைச் சுருக்கமாகத் தெரிந்துகொள்ளவேண்டும். நமக்குப் புலப்படுவது இவ்வுலகம் அல்லது ஜகத் என்பதாம். இதில் வாழ்ந்திருக்கும் உயிர்களுக்கு ஜீவன் என்று பெயர். ஜகத்தையும், ஜீவர்

களையும் தாங்கியிருக்கும் பெரிய பொருளுக்குப் பரம் என்று பெயர். அது பேரறிவும் பேராற்றலும் படைத்துள்ளது. உலகனைத்தையும், உயிர்கள் யாவையும் அது யாண்டும் ஆண்டு வருகிறது. ஜகத்தில் கட்டுண்டு கிடக்கும் ஜீவர்கள் எண்ணிறந்த பிறவிகளை எடுக்கின்றனர். பிறவிகள் வாயிலாக அவைகள் மேலான நிலைக்குப் போவதும் உண்டு; கீழான நிலைக்குப் போவதும் உண்டு. புண்ணியம் மேல் எடுத்துச் செல்கிறது; பாபம் கீழ்மையில் ஆழ்த்து பரம் அல்லது ஈசுவரனைச் சார்ந்திருந்து ஜகத்தினின்று ஜீவன் விடுதலை யடைவது முக்தி. எல்லா உயிர்களும் முக்தியடைய வேண்டும். இக்கோட்பாடு துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் ஆகிய மூன்று மதங்களுக்கும் சம்மதம். இனி, மூன்று மதங்களின் தனியியல்புகளை ஆராய்வோம்.

துவைதமதத்தின்படி ஜகத், ஜீவன், பரம் ஆகிய மூன்றும் அனுதியானவைகள். அவைகளுக்கு முடிவும் இல்லை, துவக்கமும் இல்லை. பரம்பொருள் ஜகத்தையும் ஜீவர்களையும் ஆளுகின்றூர். ஆனால் ஜகத்தும் ஜீவனும் யாண்டும் பரத்துக்கு வேறு ஆனவைகள். ஜீவனானது அவருடைய கருணையால் ஜகத்திலிருந்து விடுதலை யடைந்து அவருக்குத் தொண்டனாய் ஆட்படுவது முக்தி. முக்தியிலும் பரம் வேறு ஜீவன் வேறு.

விசிஷ்டாத்வைதம் என்பது ஒரு விசேஷத்தோடு கூடிய அத்வைதம். கடவுள் ஒருவர்தான் இருக்கிறூர். அவருக்கு உடலாயிருப்பது ஜகத். அந்த உடலில் கணக்கற்ற உயிர்த்தத்துவங்களாயிருப்பது ஜீவன். சூரியனிடத்திருந்து கிரணங்கள் எண்ணிக்கையில் அடங்காதவை தோன்றி வருவதுபோன்று ஜீவர்கள் பரமாத்மாவின் கிரணங்கள் ஆகின்றனர். பரமாத்மாவைப் பூரணனென்றும் அதில் தன்னை ஓர் அம்சம் என்றும் ஜீவன் சுவானுபவத்தில் அறிந்துகொள்ளுதல் முக்தி. அதற்கு ஜீவன் தன்னைப் பரமாத்மாவிடத்துப் பிரபத்தி பண்ணவேண்டும். பிரபத்தி

என்பதும், சரணாகதி என்பதும், அடைக்கலம் என்பதும் ஒரே கருத்தைக்குறிக்கும் பல சொற்களாம். அவர் அருளால் ஜீவன் தன்னை அவருடைய ஒரு அவயவம் என்று அறிந்திருப்பது முக்தி.

அத்வைதம் என்பது இரண்டற்றது எனப் பொருள் படுகிறது. ஜகத், ஜீவன் என்று சொல்லப்படுபவை வேறு, பரம் வேறு அல்ல; உள்ளது ஒரே பொருள். அது அகண்ட சத் சித் ஆனந்தம். தன்னை ஜகத் ஆகவும் ஜீவனாகவும் காட்டிக்கொள்ளுகிற வல்லமை அதனிடத்து உண்டு. அந்த வல்லமைக்கு அதனுடைய மாயா சக்தி என்று பெயர். பிரம்மமும் பிரம்மத்தினுடைய சக்தியும் இரண்டல்ல. அத்வைதம் என்பதற்கு இரண்டல்ல என்பது பொருள். ஜீவனிடத்துள்ள அக்ஞானத்தால் ஜகத் என்றும் ஜீவன் என்றும் பேதம் அவனுக்குத் தோன்றுகிறது. பிரம்ம ஞானத்தில் பிரம்மம் ஒன்றே யாண்டும் உளது. நதி கடலில் லயமாவது போன்று ஞானமடைந்த ஜீவன் பரத்தில் கலக்கிறான். இது அத்வைதம் புகட்டும் முக்தி. அதை இன்னும் நன்றாகத்தெளிவுபடுத்துமிடத்து, கடலில் தோன்றி,கடலில் நிலைபெற்றிருக்கும் அலையானது, தனது நாமரூபத்தை அழித்துவிடும்பொழுது பழையபடி கடலாகி விடுகிறது. அப்படி முக்திநிலையில் ஜீவன் பரத்தில் கலந்துவிடுகிறான்.

சாஸ்திரங்களில் துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் ஆகிய மூன்று நிலைகளுக்கும் இடம் உண்டு. மனிதனுடைய வாழ்க்கையிலேயே இம் மூன்று நிலைகளும் அதனதன் ஸ்தானத்தைப் பெறுகின்றன. மனிதன் விழித்திருந்து வியவகாரம் பண்ணுகிறான். அது துவைத நிலை. ஆங்கு தான் வேறு, மற்ற உயிர்கள் வேறு, உலகம் வேறு. பிறகு சொப்பனம் காண்கிறான். சொப்பனத்தில் தென்படும் மனிதர்களும், உலகமும் அவனுடைய மனத்துக்கு அன்னியமானவைகளல்ல. பேதம் போன்று தென்பட்டுக் கொண்டிருக்கும் அபேத நிலை அது. விசிஷ்டாத்வைத நிலையை இது நன்கு விளக்குகிறது. பிறகு சொப்பன

மில்லாத அயர்ந்த உறக்கம் வருகிறது. அதில் பிரக்ஞை ஒன்றைத்தவிர பாக்கி யெல்லாம் போய்விடுகிறது. எல்லா அவஸ்தைகளுக்கும் பொதுவாகிய பிரக்ஞை யொன்றே அங்கு மிச்சம். அது அத்வைத நிலையாகும். இந்த மூன்று நிலைகளும் அக்ஞானத்தில் இருப்பதுபோன்று ஞானத்திலும் வந்து அமையக்கூடியவைகள். இவைகளில் எது பெரியது எது சிறியது, எது சாதனம் எது சாத்தியம் என்று மத வாதிகள் விரிவாகவும் விதவிதமாகவும் பேசிவருகிறார்கள்.

## 24. கிருஷ்ணனது போக்கு

சுருதி என்று சொல்லப்படும் வேதாந்த சாஸ்திரம் கிருஷ்ணனை விளக்க முயலுகிறது. கிருஷ்ணன் என்பதும் பரமாத்மா என்பதும் ஒன்றே. ஒரு தேகத்துக்குள் கட்டுப் பட்டவன் போன்று அவன் தென்படுகிறான். உடைக்குள் கட்டுப்பட்டது போன்று நமது உடல் தென்படலாம். ஆனால் உடையிருப்பதாலும் போவதாலும் உடலுக்கு லாப மும் இல்லை, நஷ்டமும் இல்லை. கண்ணன் காயத்தோடு அங்ஙனம் சம்பந்தப்பட்டவன் போன்று இருந்தான். லோக ஹிதத்தின் பொருட்டு உடல் என்னும் அங்கியை அவன் விளையாட்டுக்காக அணிந்தவன் ஆகிறான். அவன் துவைதியு மல்ல, விசிஷ்டாத்வைதியுமல்ல, அத்வைதியுமல்ல. இம் மூன்று சம்பிரதாயங்களும் அவனுக்கு சேவைபுரிகின்றன. அவனைக் காணவும், உணரவும், இணக்கம் கொள்ளவும் அம் மூன்று மதங்களும் அதனதன் போக்கில் முயலுகின் றன. மும் மதங்களையும் அவன் தன்னகத்து அடக்கியிருக் கின்றான்; பிறகு அவைகளுக்கு அப்பாலுமிருக்கிறான்.

நீ அத்வைதியாயிரு, விசிஷ்டாத்வைதியாயிரு, துவைதியாயிரு என்றெல்லாம் கீதை புகட்டுவதில்லை. "ஆத்மபோதம் அடையப்பெற்றவன் ஆவாயாக. உனது பேரியல்பில் நிலைபெற்றிரு. பேராற்றல் படைத்துள்ள நீ கரவாது உன் கடமையைச் செய். புன்மையனுகப் பிழைத் திருக்க நீ இந்தப் பூலோகத்துக்கு வந்துள்ளவனல்லன்.

உலகத்துக்கும் உனக்கும் தொடர்புண்டு. அதை நிலை நாட்டுவது யோகம். நாக்கி விடா செய்து அத்தொடர்பை நிருபிப்பாயாக. ஆத்ம சிந்தனையில் அனைத்தையும் அடக்கிக் கொள்வாயாக. மலர் மணம் வீசுவது போன்று உன் அன்புக்கு அனைத்தும் இலக்காகட்டும். ஒளிர்விடும் ஞாயிறு போன்று உன் அறிவு ஓங்கியிருப்பதாகுக. பிறகு அத்வைதம், விசிஷ்டாத்வைதம், துவைதம் ஆகிய மதங்கள் பெற வேண்டிய ஸ்தானங்களை உன் ஆத்ம சொரூபத்தில் பெற்றுவிடும்.'' இங்ஙனம் யோகேசுவரன் உயிர்களை யோகிகள் ஆகும்படி தூண்டுகிறான்.

ஓரளவில் கண்ணன் காட்டிய வழியையே ஸ்ரீ ராம கிருஷ்ண பரமஹம்ஸர் பின்பற்றுகிறார். அவர் சமயங்களின் உயர்வு தாழ்வைப்பற்றிக் கவலைப்படவில்லை அத்வைதம், விசிஷ்டாத்வைதம், துவைதம் ஆகிய சம்பிரதாயங்களைப்பற்றியும் அவர் நினைக்கவில்லை. வாழ்வு எவ்வளவு சீரிய வாழ்வாகவேண்டும் என்பதிலேயே அவர் கருத்தைச் செலுத்தினார். அருள்தாகம் பிடித்து அவர் அலைந்து திரிந்தார். உடலைக்கொண்டு அவர் உழைத்ததெல்லாம் தெய்வ வழிபாட்டிற்கென்றே; உள்ளத்தில் அவருக்கு எழுந்த உணர்ச்சியெல்லாம் இறைவனைப்பற்றியதே. அவருடைய தூய தெய்விக அன்புக்கு இலக்காகாதது ஒன்றுமில்லை. தெய்வத்தைத் தவிர வேறு எந்த உறவையோ இணக்கத்தையோ அவர் அறிந்திலார். தெய்வ அருள் ஒன்றே அவர் பெற்ற பேறு. இங்ஙனம் கீதையின் கோட்பாடே வடிவெடுத்து ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் வாழ்ந்துவந்தார். ஆனால் அவர் கீதையையோ வேறு எந்த சாஸ்திரத்தையோ கற்றது கிடையாது. புத்தகப்படிப்புக்கும் அவருக்கும் வெகுதூரம். பெருவாழ்வினின்று அவர் பெற்ற அனுபவங்களையே அவர் மற்றவர்களுக்குப் பகர்ந்தருளினார். அவருடைய உபதேசங்கள் எங்கெல்லாம் கீதைக்கு ஒத்ததாயிருக்கிறதோ ஆங்கெல்லாம் அவைகளை நமக்கு எட்டியவளவு கீதையுடன் இணைத்து அமைத்துள்

ளோம். அத்துறையில் நாம் செய்துள்ள முயற்சி மிகக் குறைந்தது. அதை இன்னும் விரித்தும் திருத்தியும் அமைக்கலாம் என்பதை வினயபூர்வமான மகிழ்வுடன் தெரிவித்துக்கொள்கிறோம். ஆக, எந்த சமயத்தையோ சம்பிரதாயத்தையோ நிலை நாட்டுதற்கு என்று அல்லாது, யோக சாஸ்திரம் என்கிற முறையில் ஸ்ரீமத் பகவத்கீதையை விளக்க ஈண்டு முயன்றுள்ளோம்.

## 25. சொரூப லக்ஷணம்

பரம்பொருள் மனம் மொழிக்கு எட்டாதது. அது பிரபஞ்ச மயமாக வடிவெடுக்குமிடத்து அதை ஸத் சித் ஆனந்தம் என்று சொல்லலாம். சொல்லற்கரிய பொருளை ஒரு சொல்லால் விளக்குமிடத்து ஸச்சிதானந்தம் என்பதற்கு நிகரான சொல் வேறு ஒன்றுமில்லை. ஸத் என்னும் சொல் உள்ளது எனப் பொருள்படுகிறது. ஸத்தியம் அல்லது உண்மை அதனிடத்திருந்து வருகிறது. காலத்தால், இடத்தால், செயலால் மாறுபடாதிருப்பது ஸத். கால தேச வர்த்தமானத்தைக் கடந்திருப்பது பரம்பொருள். அதே ஸத்பொருள் காலத்திலும், இடத்திலும், செயலிலும் தன்னை விளக்கிக்கொண்டிருக்கும்போது எண்ணிறந்த ஜீவகோடிகளாகக் காட்சிகொடுக்கிறது. ஜீவாத்மா தோற்றத்துக்கு வந்துள்ள நிலைமையில் கர்மமும் நிகழ்ந்துகொண்டே இருக்கும். சூரியனிடத்து வெப்பமும் வெளிச்சமும் இருப்பது போன்று ஜீவாத்மாவிடம் கர்மமுண்டு. ஆகவே பகவத்கீதையின் முதல் ஆறு அத்தியாயங்களும் ஜீவதத்துவத்தையும் கர்மயோக தத்துவத்தையும் சேர்த்தே புகட்டிக்கொண்டு போகின்றன. ஆறுவது அத்தியாயத்தில் உள்ள தியானம் அல்லது எண்ணம் சூக்ஷ்மமான கர்மமாகிறது.

இனி, கர்மத்துக்கு அடிப்படையாயிருப்பது சங்கற்பம் அல்லது தீர்மானம். ஆங்கிலத்தில் அதை will என்று
ம். கிரியா சக்தி என்பது பரிபாஷையில்

அதற்கு அமைந்துள்ள பெயராகும். எல்லாக் கர்மங்களும் will அல்லது சங்கற்பத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. நடமாட, உண்ண, உறங்க, எழுந்திருக்க மனிதன் முதலில் சங்கற்பிக்கிறான். பிறகு அங்ஙனம் கர்மம் செய்கிறான். சிருஷ்டி முழுதும் சங்கற்பத்திலிருந்து வந்தது. நேராகவோ அல்லது மறைமுகமாகவோ எல்லா சங்கற்பங்களும் முடிவில் ஒரு சங்கற்பமாய்விடுகின்றன. Will to live - வாழ விருப்புதல்தான் முடிந்த சங்கற்பம். ஜீவர்கள் எக்கர்மத்தைச் செய்தாலும் அதன் மூலம் வாழ்ந்து நிலைத்திருத்தல் என்பதை நிலைநாட்ட முயலுகின்றனர். அதாவது தங்களது யதார்த்த சொரூபமாகிய ஸத் சொரூபத்தை நிலைநாட்டவே ஜீவகோடிகள் கர்மம் புரிகின்றனர். God is Life - என்பது கோட்பாடு. ஆத்மாவானது உயிருக்கு உயிர் என்பது அதன் கருத்து. உயிர்களின் நடைமுறையாவையையும் ஆழ்ந்து ஆராய்ந்து பார்த்தால் இவ்வுண்மை விளங்கும். ஆக, கீதையின் முதல் ஆறு அத்தியாயங்களும் ஸத் சொரூபத்தை விளக்குதற்கான சாஸ்திரமாகும்.

யந்திரங்கள் கர்மம் செய்கின்றன, உயிர்கள் கர்மம் செய்கின்றன—இவ்விரண்டுக்கும் உள்ள வித்தியாசம் யாது? யந்திரங்களிடத்து உணர்ச்சி யில்லை; உயிர்களிடத்து உணர்ச்சியுண்டு. உணர்ச்சியும் உயிர் வாழ்க்கையும் இணைபிரியாதவைகள். உணர்ச்சி விதவிதமான வடிவெடுக்கிறது. விருப்பு வெறுப்பு, நட்பு பகை, ஆசை சினம், பொறை பொறாமை, பாராட்டுதல் புறக்கணித்தல் ஆகிய இவையாவும் உணர்ச்சியின் வெவ்வேறு தோற்றங்களாம். விருப்பு, நட்பு, ஆசை, பொறைபோன்றவை உடன்பாடான உணர்ச்சிகள். வெறுப்பு, பகை, சினம், பொறாமை போன்றவை எதிர்மறையான உணர்ச்சிகள். உடன்பாட்டு உணர்ச்சிகள் வளர்ச்சிக்குத் துணை புரிகின்றன. எதிர்மறை யுணர்ச்சிகள் வளர்ச்சியைத் தடை செய்கின்றன. இவ் உணர்ச்சிகள் ஆங்கிலத்தில் emotion என்னும் பெயர் பெறுகின்றன.

உணர்ச்சியைப் பண்படுத்துமளவு மனிதன் மேலோன் ஆகிறான்.

பகவத்கீதையில் ஏழாவது அத்தியாயத்திலிருந்து பன்னிரண்டாம் அத்தியாயம் வரையில் கடவுள் சொரூபத்தை விளக்குவதோடு பக்தியையும் அப்பகுதி வளர்க்கிறது. உணர்ச்சியின் திரள் பக்தி என்னும் பெயர் பெறுகிறது. கேடுடைய உணர்ச்சிகளெல்லாம் நலம் வாய்ந்த உணர்ச்சிகளாக மாறுகின்றன. கடவுளுடைய மகிமை விளங்குமளவு அவனிடத்து அன்பு ஊற்றெடுக்கிறது. ஊசியானது காந்தத்தினிடம் கவரப்படுவது போன்று அன்புடைய உயிர் தெய்வத்தினிடம் கவரப்படுகிறது. God is Love–என்பது கோட்பாடு. அன்பே கடவுள் என்பது அதன் கருத்து. அன்பு என்னும் கவர்ச்சி ஓங்குதற்கு ஏற்ப இனிமை மிளிர்கிறது. அது ஆனந்தமாகப் பரிணமிக்கிறது. ஆனந்தம் வளர வளர அது உலப்பில்லா ஆனந்தமாகிறது. ஆனந்தமே பிரம்மம். பரமாத்மாவின் சொரூபம் ஆனந்தம். இந்த ஆனந்தத்தை நாடியே உயிர்கள் வாழ்க்கையில் பற்று வைக்கின்றன. ஆனந்தம் இல்லாவிட்டால் உயிர்கள் கணப்பொழுதும் வாழ்ந்திருக்கமாட்டா. ஆக, ஆனந்தம் என்னும் ஆத்மசொரூபத்தை வளர்ப்பது கீதையின் இரண்டாவது ஷட்கத்தின் நோக்கமாகும்.

ஜடப்பொருள் ஒன்று இருக்கிறது. சேதனப்பொருள் ஒன்று இருக்கிறது. இரண்டுக்குமுள்ள வித்தியாசம் என்னவென்று அறியவேண்டும். 'இருக்கிறேன்' என்ற அறிவு சேதனப் பொருளுக்கு உண்டு; அந்த அறிவு ஜடத்துக்கு இல்லை. உயிர்களிடத்து உணர்வு இருப்பது போன்று அறிவு இருக்கிறது. சூரியன் இருப்பதை சூரியப் பிரகாசம் காட்டுகிறது. வேறு வெளிச்சத்தின் துணைகொண்டு சூரியனை நாம் அறிவதில்லை. ஜீவன் உயிரோடிருக்கிறான் என்பதற்கு அவனுடைய அறிவே பிரமாணம். ஒவ்வொரு உயிரும் தன்னைத்தான் அறிந்து கொண்டிருக்கிறது. இங்ஙனம் அறியும் தன்மையை ஆங்கிலத்தில் cognition என்கிறோம். அறியும்

திருத்தியமைக்கிறது. God is Light என்பது கோட்பாடு. ஆத்மா ஜோதிர்மயம் என்பது அதன் பொருள். இங்ஙனம் ஸத் சித் ஆனந்தமாகிய பர சொரூபத்தின்கண் ஜீவனை எடுத்துச் செல்லுதல் பகவத்கீதையின் திட்டமாகும்.

## 26. பொது நூல்

சாஸ்திரம் ஒன்று எல்லார்க்கும் பொதுவாவதற்கு விதிகள் சில உள. அத்தகைய நூல் எந்த மொழியில் அமைந்திருக்கிறது, அல்லது எத்தனை மொழிகளில் இயற்றப்பெற்றிருக்கிறது என்பது முக்கியமானதல்ல. எத்தனை பிரதிகள் அச்சிடப்பெற்று எத்தனை பேர் கைவசம் அது சேர்ந்துள்ளது என்பதும் முக்கியமல்ல. எத்தனை ஆயிரம் பேர் அல்லது லக்ஷம் பேர் அதை நாள்தோறும் ஓதுகிறார்கள் என்பதும் அந்நூலுக்கு மகத்துவம் கொடுத்துவிடாது. மனிதன் மேலோன் ஆவது மொழியை முன்னிட்டல்ல. ஒழுக்கமே மேன்மைக்கு முதற்காரணம். பெரும்பான்மையோர் கையாளுதலைப் பொறுத்தும் ஒரு நூலுக்குச் சிறப்பு வந்துவிடாது. சமாசாரப் பத்திரிகையைப் பெரும்பாலோர் நாள்தோறும் பார்க்கிறார்கள். ஆனால் அதன் மதிப்பு அன்றன்று அகன்று விடுகிறது. முக்தி நெறியை ஆராய்பவர் சிலரே. அதன்படி ஒழுகுபவர் அதிலும் சிலர். இனி, முக்தியை அடைபவர் அரிதிலும் அரிது. ஆயினும் முக்தி மார்க்கத்துக்கு என்றைக்கும் எல்லார்க்கிடையிலும் மதிப்பு உண்டு. ஏனென்றால் ஒரு காலம் அல்லாவிட்டால் வேறு ஒரு காலத்தில் எல்லாரும் அவ்வழிக்கு வந்தாகவேண்டும்.

கீதா சாஸ்திரத்தை ஸர்வகத சாஸ்திரம் – Universal Scripture என்றும், பொதுநூல் என்றும் பகருதற்குத் தக்க காரணங்கள் உண்டு. முக்தி மார்க்கத்தைப் புகட்டும் சாஸ்திரங்களே யாவற்றிலும் மேலானவைகள். முக்தி அடைதற்கு நிகரான பேறு மனிதனுக்கு இல்லை. இக்கோட்பாடு யாவர்க்கும் ஒப்பமுடிந்தது. கீதா சாஸ்திரம் முக்தியைப் புகட்டுகிறது. வாழ்க்கையின் குறிக்கோள் முக்தி என்பதை அது நன்கு தெளிவுறுத்துகிறது.

மேலாம் கர்மத்தையும் கெடுத்து பந்தபாசத்துக்குரியதாக்கி விடலாம். வினைகளை யெல்லாம் மேலாம் வினைகளாக மாற்றக் கற்றுக்கொடுப்பது பகவத்கீதை. இக்கோட்பாடு இந்த நூலின் தனிச்சிறப்பு ஆகும்.

மன அமைப்பில் செயல், உணர்வு, அறிவு என்று மூன்று பகுதிகள் உண்டு. நவீன மனோதத்துவ ஆராய்ச்சியாளர் அவைகளை முறையே will, emotion, cognition என்று பகர்வர். அன்னை பராசக்தியே மாந்தர் உள்ளத்தில் **इच्छाशक्ति ज्ञानशक्ति क्रियाशक्ति स्वरूपिणी** — இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி ஸ்வரூபிணியாக எழுந்தருளியுள்ளாள் என்பது கோட்பாடு. மனதில் இந்த மூன்றுவித மாண்புகளும் ஒருங்கே மிளிருதல் வேண்டும். அப்பொழுதுதான் பண்பாடு பூர்த்தியாகிறது. மனிதன் திண்ணியன் ஆவதற்கும் அதுவே உற்ற உபாயம். நல்ல உள்ளத்துக்குரிய மூன்று மாண்புகளையும் கீதா சாஸ்திரம் முறையே இயம்புவதால் அது எல்லார்க்கும் பொது நூலாகும்.

மனிதனை நிறை மனிதன் ஆக்குவது கீதையின் கோட்பாடாகும். உறுதியான உடலும் உயர்ந்த உள்ளமும் தெளிந்த அறிவும் நிறை நிலைக்கு இன்றியமையாத உறுப்புகளாகும். பேராற்றல் படைத்திருப்பது முதல் கோட்பாடு. ஒழுக்கம் ஆற்றலில் அடங்கிவிடுகிறது. நலத்தைச்செய்யவும் செய்விக்கவும் ஆற்றல் உடையவனுக்கே சாலும். அடுத்த கோட்பாடாவது அன்பு. உயிர்கள் அனைத்துக்கும் அது பொதுவானது. அன்பைத்தூய அன்பாக மாற்றியமைப்பது பக்தியோகத்தின் நோக்கமாகும். தூய அன்பினின்று இனிமையாவும் தோன்றும். எல்லாவற்றையும் ஒன்றுபடுத்துவது தூய அன்பு. உலகில் உள்ள உயிர்கள் அனைத்தும் தூய அன்பு படைத்திருப்பவனுக்குச் சொந்தமாய் விடுகின்றன. இனி அறிவு மூன்றாவது கோட்பாடு ஆகும். பட்டப்பகலை உண்டுபண்ணும் ஞாயிறு போன்றது அறிவு. அனைத்தையும் அது விளக்குகிறது. மாண்புகளை யெல்லாம்

அது எடுத்துக்காட்டவல்லது. உயிர்களைச் செயலில் ஏவுவதும் அறிவு. கொடுத்த கர்மத்தைக் குற்றம் குறையின்றிச்செய்து முடிப்பதற்கு வழிகாட்டுவதும் அறிவு. ஆக, ஆற்றலையும் அன்பையும் அறிவையும் ஒருங்கே அடையப்பெற்றவனுக்கு 'மேலும் பெறவேண்டிய பேறு ஒன்றுமில்லை. அவன் நிறை மனிதன் ஆகிறான். அவனுக்கே நிறை நிலை சொந்தம். நிறை நிலையெய்தி, நிறை மனிதன் ஆக விரும்புவார் அனைவர்க்கும் ஸ்ரீமத் பகவத்கீதை பொது நூலாகும். சமயங்கள் அனைத்துக்கும் அதைப் பொது நூலாகவைத்துக்கொள்வதும் சாத்தியமாகிறது.

**சுவாமி சித்பவானந்த**

## இரண்டாம் பதிப்பின்

# பிரசுரக்குறிப்பு

முதல் பதிப்பில் சுலோகங்களை தேவநாகரி எழுத்தில் அமைத்திருந்தது போன்று தமிழ் எழுத்திலும் அமைப்பது நலம் என்று சில அன்பர்கள் தெரிவித்தார்கள். அவர்கள் விருப்பத்துக்கு இணங்க இப்பதிப்பில் தமிழிலும் சுலோகங்களையும் பதங்களையும் அமைத்திருக்கிறோம். ஆனால் ஒவ்வொரு மொழிக்கும் உள்ள உச்சரிப்பு பிழைபடாதிருத்தல் வேண்டும். ஆங்கிலத்தில் **F, Z** முதலிய எழுத்துக்களுக்குரிய ஒலியைக் கேட்டுக் கற்றுக்கொள்ளுதலே முறை. அங்ஙனம் சம்ஸ்கிருத பாஷைக்குரிய சிறப்பு ஒலிகளைத் தெரிந்தவர்களிடம் கேட்டுச் சில நாட்களில் கற்றுக்கொள்ளலாம். இக்காலத்தில் இந்தியாவில் எல்லா மாகாணங்களுக்குமிடையில் நெருங்கிய தொடர்வு ஏற்பட்டு வருகிறது. சிறிதளவு சம்ஸ்கிருதமும் சிறிதளவு ஹிந்தியும் கற்றிருப்பது அதற்குப் பெருந்துணைபுரியும். சாஸ்திர ஞானத்துக்கு சம்ஸ்கிருதம் பயன்படும். பேச்சுக்கு ஹிந்தி உதவும்.

இந்தியாவில் உள்ள மக்களின் நாமகரணங்கள் பெரிதும் சம்ஸ்கிருதச் சொற்களாக அமைந்திருக்கின்றனவென்பது பலருக்குத் தெரியாது. அவைகளைச் சரியாக உச்சரிப்பதும் அவசியமாகிறது. **राघवन्** – Raghavan என்பது ராகவன் என எழுதப்பெற்று பிழைபட்டு உச்சரிக்கப் பெறுவது பொருந்தாது. **राधाकृष्णन्** – Radhakrishnan தமிழில் ராதாகிருஷ்ணன் என எழுதப்பெற்று உச்சரிப்பில் தவறுதலாகப் போய்விடுகிறது. அர்ச்சனை செய்ய முயலுபவர் இறைவனுடைய திருநாமம் போன்றவைகளையெல்லாம் சரியாக உச்சரிக்க வேண்டும். இதை முன்னிட்டும் கொஞ்சம் சம்ஸ்கிருதம் கற்றிருப்பது அவசியமாகிறது. தமிழ் மொழிக்கும் சம்ஸ்கிருத மொழிக்கும் நெருங்கிய தொடர்வு இருந்து வந்திருக்கிறது. சிறந்த தமிழ் இலக்

இயமாகிய நிருக்தநூலில் சமஸ்கிருதச் சொற்கள் இருப்பதே அதற்குச் சான்றாகும்.

தேவநாகரி எழுத்துக்களையும் கூட்டு எழுத்துக்களையும் ஒரு மாதத்துக்குள் கற்றுக்கொள்ளலாம். அவைகளுக்குரிய உச்சரிப்பைக் கேட்டுத் தெரிந்துகொள்வது அவசியம். பிறகு கீதையில் நாள் இரண்டு சுலோகம் கற்றுக் கொள்ள இயலும். ஒரு வருஷத்துக்குள் கீதை முழுதும் சரியாக வாசிக்க வந்துவிடும். மேலும் இப்புத்தகத்தின் துணைகொண்டு பதவுரையையும் பொழிப்புரையையும் அவைகளில் அடங்கியுள்ள மேலான கருத்துக்களையும் தெரிந்துகொள்ளலாம். நாள்தோறும் கீதா பாராயணம் செய்வதால் நாப்பழக்கம் உண்டாகும்; மேலாம் கருத்துக்களைச் சிந்திக்கும் வாய்ப்பும் ஏற்படும்.

தேவநாகரி எழுத்துக்களும் அவைகளுக்கேற்ற தமிழ் அல்லது ஆங்கில எழுத்துக்களும் ஈண்டுத் தரப்படுகின்றன :-

**உயிர் எழுத்துக்கள்**

| | | | |
|---|---|---|---|
| अ அ | आ ஆ | इ இ | ई ஈ |
| उ உ | ऊ ஊ | ऋ ர்ரு | ॠ ர்ரூ |
| ऌ ர்லு | —— | ए ஏ | ऐ ஐ |
| ओ ஓ | औ ஔ | अं அம் | अः அஹ |

**மெய்யெழுத்துக்கள்**

| | | | | |
|---|---|---|---|---|
| क க | ख kha | ग ga | घ gha | ङ ங |
| च ச | छ cha | ज ஜ | झ jha | ञ ஞ |
| ट ட | ठ tta | ड da | ढ dha | ण ண |
| त த | थ ttha | द dha | ध ddha | न ந |
| प ப | फ pha | ब ba | भ bha | म ம |
| य ய | र ர | ल ல | व வ | श sa |
| ष ஷ | स ஸ | ह ஹ | ळ ள | क्ष க்ஷ |

ज्ञ க்ஞ

## உயிர்மெய் எழுத்துக்கள்

क க, का கா, कि கி, की கீ, कु கு, कू கூ, कृ க்ரு, कॄ க்ரூ,
के கே, कै கை, को கோ, कौ கௌ, कं கம், कः கஹ.

*இதுபோன்று மற்ற மெய்யெழுத்துக்களுடன் உயிரெழுத்துக்களை சேர்த்துத் தெரிந்துகொள்க.*

## கூட்டெழுத்துக்கள்

1. பக்கத்தில் வரும் எழுத்துக்கள் :

क्य = क् + य　　ध्म = ध् + म　　स्त = स् + त
ग्ध = ग् + ध　　म्प = म् + प　　श्व = श् + व
च्व = च् + व　　ल्व = ल् + व　　ह्य = ह् + य
त्स = त् + स　　ष्क = ष् + क　　ठ्य = ठ् + य

2. ஒன்றின்கீழ் ஒன்ருக வரும் எழுத்துக்கள் :

क्क = क् + क　　ड्ड = ड् + ड　　ध्न = ध् + न
च्च = च् + च　　ड्ढ = ड् + ढ　　प्त = प् + त
ङ्क = ङ् + क　　द्द = द् + द　　ल्ल = ल् + ल
ञ्ज = ञ् + ज　　द्ध = द् + ध　　ह्न = ह् + न
द्व = द् + व　　द्व = द् + व

3. र ஓடு மெய் சேர்ந்தது :

र्क = र् + क　　र्ष = र् + ष　　र्ह = र् + ह

4. மெய்யோடு र சேருவது :

क्र = क् + र　　घ्र = घ् + र　　त्र = त् + र
ट्र = ट् + र　　प्र = प् + र　　ड्र = ड् + र
ह्र = ह् + र

5. இரண்டெழுத்துக்கள் சேர்ந்து 1|து எழுத்து உண்டாவது :

क्ष = क् + ष　　द्म = द् + म
ज्ञ = ज् + ञ　　ह्य = ह् + य
त्त = त् + त　　ह्म = ह् + म
द्य = द् + य　　श्व = श् + व

முன்பு ஒருகாலத்தில் இந்தியா முழுதிலும் எல்லா மொழிகளுக்கும் ஒரே எழுத்து இருந்தது என்பது சில ஆராய்ச்சிக்காரர் கருத்து. தமிழ் எழுத்துக்களுக்கும் நாகரி எழுத்துக்களுக்கும் உள்ள வடிவ ஒற்றுமையை ஒருவாறு இங்கு விளக்குகிறோம்:—

| தமிழ் | சிதைவு | நாகரி | தமிழ் | சிதைவு | நாகரி |
|---|---|---|---|---|---|
| அ | அ | अ | ம | प | म |
| க | க | क | ய | २ | य |
| ச | ச | च | ர | ʃ | र |
| ட | Γ | ट | ல | ல | ल |
| ண | ண | ण | வ | व | व |
| த | த | त | ள | ள | ळ |
| ப | ப | प | ன | ன | न |

# தியான சுலோகங்கள்

ॐ पार्थाय प्रतिबोधितां भगवता नारायणेन स्वयं
व्यासेन ग्रथितां पुराणमुनिना मध्ये महाभारतम् ।
अद्वैतामृतवर्षिणीं भगवतीं अष्टादशाध्यायिनीं
अंब त्वामनुसन्दधामि भगवद्गीते भवद्वेषिणीम् ॥ १

ஓம் பார்த்தாய ப்ரதிபோதிதாம் பகவதா நாராயணேன ஸ்வயம்
வ்யாஸேன க்ரதிதாம் புராணமுநிநு மத்யே மஹாபாரதம் ।
அத்வைதாம்ருதவர்ஷிணீம் பகவதீம் அஷ்டாதசாத்யாயிநீம்
அம்ப த்வாம்அனுஸந்ததாமி பகவத்கீதே பவத்வேஷிணீம் ॥ 1

ओं ஓம் *ஓம்* अम्ब அம்ப *தாயே* भगवद्गीते பகவத்கீதே *பகவத்கீதே* स्वयं ஸ்வயம் *சாக்ஷாத்* भगवता பகவதா *பகவானுன* नारायणेन நாராயணேன *நாராயணனுல்* पार्थाय பார்த்தாய *பார்த்தனுக்கு* प्रतिबोधितां ப்ரதிபோதிதாம் *உபதேசிக்கப் பெற்றவள்* पुराण मुनिना व्यासेन புராணமுனிநு வ்யாஸேன *புராண முனிவரான வியாசரால்* मध्ये महाभारतम् மத்யே மகாபாரதம் *மகாபாரதத்தின்கண்* ग्रथितां க்ரதிதாம் *அமைக்கப்பெற்றவள்* अद्वैत अमृत वर्षिणीं அத்வைத அம்ருத வர்ஷிணீம் *அத்வைத அமிர்த்தை வர்ஷிப்பவள்* भवद्वेषिणीम् பவத்வேஷிணீம் *பிறவிப்பிணியைப் போக்குபவள்* अष्टादश अध्यायिनीम् அஷ்டாதச அத்யாயினீம் *பதினெட்டு அத்தியாயங்களையுடையவள்* भगवतीं பகவதீம் *பகவதி* त्वाम् த்வாம் *உன்னை* अनुसन्दधामि அனுஸந்ததாமி *தியானிக்கிறேன்.*

***ஓம்! தாயே, பகவத்கீதே, சாக்ஷாத் பகவான் நாராயணனுல் பார்த்தனுக்கு உபதேசிக்கப்பெற்றவள், புராண முனியாகிய வியாசரால் மகாபாரதத்தின்கண் அமைக்கப் பெற்றவள், அத்வைத அமிர்தத்தை வர்ஷிப்பவள், பிறவிப் பிணியைப் போக்குபவள், பதினெட்டு அத்தியாயங்களை யுடையவள் ஆகிய பகவதீ, உன்னைத் தியானிக்கிறேன்.*** **1**

नमोऽस्तु ते व्यास विशालबुद्धे फुल्लारविन्दायतपत्रनेत्र ।
येन त्वया भारततैलपूर्णः प्रज्वालितो ज्ञानमयः प्रदीपः ॥ २

நமோஸ்து தே வ்யாஸ விசாலபுத்தே
புல்லாரவிந்தாய தபத்ரநேத்ர

யேன த்வயா பாரததைலபூர்ண:
ப்ரஜ்வாலிதோ ஞானமய: ப்ரதீப: 2

विशाल बुद्धे [illegible] फुल्ल अर-
विन्द आयत पत्रनेत्र [illegible] அலர்ந்த
[illegible] व्यास [illegible] வியாஸரே
येन त्वया [illegible] भारत तैल पूर्णः [illegible] பூர்ண:
[illegible] ज्ञानमयःप्रदीपः ஞானமய:
ப்ரதீப: [illegible] प्रज्वालितः [illegible] வைக்கப்பட்டது
ते [illegible] नमः [illegible] अस्तु [illegible].

*விசால புத்தியுடையவரும், நன்கு அலர்ந்த தாமரையிதழ் போன்ற கண்களையுடையவரும் ஆகிய வியாசரே, மகாபாரதம் என்னும் எண்ணெய் நிறைந்த ஞான தீபத்தை ஏற்றிவைத்த உமக்கு நமஸ்காரம்.* 2

प्रपन्नपारिजाताय तोत्रवेत्रैकपाणये ।
ज्ञानमुद्राय कृष्णाय गीतामृतदुहे नमः ॥ ३

ப்ரபன்னபாரிஜாதாய தோத்ரவேத்ரைகபாணயே।
ஞானமுத்ராய க்ருஷ்ணாய கீதாம்ருததுஹே நம:॥ 3

प्रपन्न पारिजाताय [illegible] சரணடைந்தவர்களுக்குக்
கற்பக விருக்ஷம் [illegible] तोत्र वेत्र एक पाणये [illegible]
[illegible] பிடித்தவனுக்கு
गीता अमृत दुहे [illegible] அமிர்தத்தைக்
கறந்தவனுக்கு ज्ञान मुद्राय [illegible] உடையவனுக்கு
कृष्णाय [illegible] नमः [illegible].

*சரணடைந்தவர்களுக்குக் கற்பக விருக்ஷம் போன்றவனும், பசுவை ஓட்டுதற்கு ஒரு கையில் பிரம்பைப் பிடித்திருப்பவனும், கீதை என்னும் அமிர்தத்தைக் கறந்தவனும், ஞான முத்திரை தாங்கியிருப்பவனும் ஆகிய கிருஷ்ணனுக்கு நமஸ்காரம்.*

सर्वोपनिषदो गावो दोग्धा गोपालनन्दनः ।
पार्थो वत्सः सुधीर्भोक्ता दुग्धं गीतामृतं महत् ॥ ४

ஸர்வோபநிஷதோ காவோ தோக்தா கோபாலநந்தன :।
பார்த்தோ வத்ஸ: ஸுதீர்போக்தா துக்தம் கீதாம்ருதம் மஹத் ॥ 4

सर्वे उपनिषद: ஸர்வ உபநிஷத: *எல்லா உபநிஷதங்களும்* गाव: காவ: *பசுக்கள்* गोपाल नन्दन: கோபால நந்தன: *கோபாலனுடைய மகன் (கிருஷ்ணன்)* दोग्धा தோக்தா *பால் கறப்பவன்* पार्थ: பார்த்த: *பார்த்தன்* वत्स: வத்ஸ: *கன்று* सुधी: ஸுதீ: *பேரறிவாளர்* भोक्ता போக்தா *அநுந்துபவர்கள்* गीता अमृतं கீதா அம்ருதம் *கீதை என்னும் அமிர்தம்* महत् மஹத் *மேலான* दुग्धं துக்தம் *பால்.*

***உபநிஷதங்கள் யாவும் பசுக்கள்; கிருஷ்ணன் பால் கறப்பவன்; பார்த்தன் கன்று; அருந்துபவர் பேரறிஞர்; கீதை என்னும் அமிர்தம் ஒப்பற்ற பால் ஆகிறது.*** **4**

**वसुदेवसुतं देवं कंसचाणूरमर्दनम् ।**
**देवकीपरमानन्दं कृष्णं वंदे जगद्गुरुम् ॥ ५**

வஸுதேவஸுதம் தேவம் கம்ஸசாணூரமர்த்தனம் ।
தேவகீபரமானந்தம் க்ருஷ்ணம் வந்தே ஜகத்குரும் ॥ 5

वसुदेव सुतं வஸுதேவ ஸுதம் *வசுதேவருடைய மகனை* कंस चाणूर मर्दनं கம்ஸ சாணூர மர்த்தனம் *கம்ஸனையும் சாணூரனையும் கொன்றவனை* देवकी परम आनन्दं தேவகீ பரம ஆனந்தம் *(தாய்) தேவகிக்குப் பரமானந்தத்தைக் கொடுப்பவனை* जगद् गुरुम् ஜகத்குரும் *ஜகத்குருவை* देवं कृष्णं தேவம் க்ருஷ்ணம் *தேவனாகிய கிருஷ்ணனை* वन्दे வந்தே *வணங்குகிறேன்.*

***வசுதேவருடைய மகன், கம்சனையும் சாணூரனையும் கொன்றவன், தேவகிக்குப் பரமானந்தத்தைக் கொடுப்பவன், ஜகத்குரு, தேவன் ஆகிய கிருஷ்ணனை வணங்குகிறேன்.*** **5**

**भीष्मद्रोणतटा जयद्रथजला गान्धारनीलोत्पला**
**शल्यग्राहवती कृपेण वहनी कर्णेन वेलाकुला ।**
**अश्वत्थामविकर्णघोरमकरा दुर्योधनावर्तिनी**
**सोत्तीर्णा खलु पाण्डवै रणनदी कैवर्तकः केशवः ॥ ६**

பீஷ்மத்ரோணதடா ஜயத்ரதஜலா காந்தாரநீலோத்பலா
சல்யக்ராஹவதீ க்ருபேண வஹனீ கர்ணேன வேலாகுலா ।
அச்வத்தாமவிகர்ணகோரமகரா துர்யோதனாவர்த்தினீ
ஸோத்தீர்ணா கலு பாண்டவை ரணநதீ கைவர்த்தக: கேசவ: ॥ 6

भीष्म द्रोण तटा பீஷ்மத்ரோண தடா *பீஷ்மரும் துரோணரும் கரைகள்* जयद्रथ जला ஜயத்ரத ஜலா *ஜயத்ரதன் ஜலம்* गान्धार नील उत्पला காந்தார நீல உத்பலா *காந்தார மன்னன் நீலோத்பலம் என்னும் புஷ்பம்* शल्य ग्राहवती சல்ய க்ராஹவதீ *சல்யன் என்பவன் சுறுமீன்* कृपेण वहनी க்ருபேண வஹனீ *கிருபன் என்பவன் பிரவாகம்* कर्णेन वेला आकुला கர்ணேன வேலா ஆகுலா *கர்ணன் பேரலைகள்* अश्वत्थाम विकर्ण घोर मकरा அச்வத்தாம விகர்ணகோரமகரா *அச்வத்தாமனும் விகர்ணனும் பயங்கரமான மகர மீன்கள்* दुर्योधन आवर्तिनी துர்யோதன ஆவர்த்தினீ *துர்யோதனன் நீர்ச்சுழல்* सा ஸா *அந்த* रण नदी ரண நதீ *ரண நதியானது* खलु கலு *உண்மையாகவே* पाण्डवैः பாண்டவை: *பாண்டவர்களால்* उत्तीर्णा உத்தீர்ணா *கடக்கப்பட்டது* केशवः கேசவ: *கேசவன்* कैवर्तकः கைவர்த்தக: *படகோட்டி.*

***குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் இருந்த ரண நதிக்கு பீஷ்மரும் துரோணரும் கரைகள்; ஜயத்ரதன் ஜலம்; காந்தார மன்னன் நீலோத்பலம் என்னும் புஷ்பம்; சல்யன் சுறுமீன்; கிருபன் என்பவன் பிரவாகம்; கர்ணன் பேரலைகள்; அச்வத்தாமனும் விகர்ணனும் பயங்கரமான மகர மீன்கள்; துர்யோதனன் நீர்ச்சுழல். கிருஷ்ணனைப் படகோட்டியாகக் கொண்டு அது பாண்டவர்களால் கடக்கப்பட்டது.***

पाराशर्यवचः सरोजममलं गीतार्थगन्धोत्कटं
नानाख्यानककेसरं हरिकथासंबोधनाबोधितम् ।
लोके सज्जनषट्पदैरहरहः पेपीयमानं मुदा
भूयाद्भारतपङ्कजं कलिमलप्रध्वंसिनः श्रेयसे ॥ ७

பாராசர்யவச: ஸரோஜமமலம் கீதார்த்தகந்தோத்கடம்
நாநாக்யானககேஸரம் ஹரிகதாஸம்போதனுபோதிதம் ।
லோகே ஸஜ்ஜனஷட்பதைரஹரஹ: பேபீயமானம் முதா
பூயாத்பாரதபங்கஜம் கலிமலப்ரத்வம்ஸின: ச்ரேயஸே ॥ 7

पाराशर्य वचः सरोजं பாராசர்ய வச: ஸரோஜம் *பராசரர் புதல்வராகிய வியாசர் வாக்கு என்னும் நீரில் உதித்த* नाना आख्यानक केसरं நாநா ஆக்யானக கேஸரம் *பல கதைகளை மகரந்தமாயுடைய* हरिकथा

सम्बोधन आबोधितम् ஹரிகதா ஸம்போதன ஆபோதிதம் *ஹரிகதா பிர சங்கத்தால் அலர்ந்தது* लोके லோகே *உலகத்தில்* सत् जन षट्पदैः ஸத்ஜன ஷட்பதை: *ஸத் ஜனம் என்னும் தேன் வண்டுகளால்* अहः अहः அஹ: அஹ: *நாள்தோறும்* मुदा முதா *ஆனந்தமாக* पेपीयमानं பேபீயமானம் *அருந்தப் பெற்றது* कलिमल प्रध्वंसिनः கலிமல ப்ரத்வம்ஸின: *கலியின் தோஷத்தை நீக்க விரும்புபவனுக்கு* गीता अर्थ गन्ध उत्कटं கீதா அர்த்த கந்த உத்கடம் *கீதையின் மூலம் சுகந்தத்தையுடைய* अमलं அமலம் *குற்றமற்ற* भारत पंकजं பாரத பங்கஜம் *மகாபாரதம் என்னும் தாமரைப் பூ* श्रेयसे ச்ரேயஸே *நலத்தின் பொருட்டு* भूयात् பூயாத் *இருக்கட்டும்.*

***பராசரர் புதல்வராகிய வியாசர் வாக்கு என்னும் நீரில் உதித்த, பல கதைகளை மகரந்தமாக வுடைய, ஹரி கதா பிரசங்கத்தால் அலர்ந்து உலகத்தில் நல்லோர் என்னும் தேன் வண்டுகளால் நாள் தோறும் ஆனந்தமாக அருந்தப் பெற்ற, கீதையின் மூலம் நறுமணத்தையுடைய, குற்றமற்ற மகாபாரதம் என்னும் தாமரைப் பூவானது கலியினுடைய தோஷத்தை நீக்க விரும்புபவனுக்கு நலம் தருவதாகுக.*** 7

मूकं करोति वाचालं पङ्गुं लङ्घयते गिरिम् ।
यत्कृपा तमहं वन्दे परमानंदमाधवम् ॥ ८

மூகம் கரோதி வாசாலம் பங்கும் லங்கயதே கிரிம் |
யத்க்ருபா தமஹம் வந்தே பரமானந்தமாதவம் || 8

यत्कृपा யத்க்ருபா *யாருடைய கிருபையானது* मूकं மூகம் *ஊமையை* वाचालं வாசாலம் *பேசவல்லவனாய்* करोति கரோதி *செய்கிறது* पङ्गुम् பங்கும் *முடவனை* गिरिं लङ्घयते கிரிம் லங்கயதே *மலையைத் தாண்டச் செய்கிறது* तं தம் *அந்த* परमानन्दमाधवं பரமானந்த மாதவம் *பரமானந்த மாதவனை* अहं அஹம் *நான்* वन्दे வந்தே *வணங்குகிறேன்.*

***யாருடைய கிருபையானது ஊமையைப் பேச வைக்கிறதோ, முடவனை மலையைத் தாண்டச் செய்கிறதோ, அந்தப் பரமானந்த மாதவனை நான் வணங்குகிறேன்.*** 8

यं ब्रह्मा वरुणेंद्ररुद्रमरुतः स्तुन्वन्ति दिव्यैः स्तवैः
वेदैः साङ्गपदक्रमोपनिषदैर्गायन्ति यं सामगाः ।

ध्यानावस्थिततद्गतेन मनसा पश्यन्ति यं योगिनो
यस्यान्तं न विदुः सुरासुरगणा देवाय तस्मै नमः ॥ ९

யம் ப்ரம்மா வருணேந்திரருத்ரமருத: ஸ்துன்வந்தி திவ்யை: ஸ்தவை:
வேதை: ஸாங்கபதக்ரமோபநிஷதைர்காயந்தி யம் ஸாமகா: ।
த்யானுவஸ்திததத்கதேன மனஸா பச்யந்தி யம் யோகினோ
யஸ்யாந்தம் ந விது: ஸுராஸுரகணு தேவாய தஸ்மை நம: ॥ 9

ब्रह्मा वरुणः इन्द्रः रुद्रः मरुतः ப்ரும்மா வருண: இந்த்ர: ருத்ர: மருத: *பிரம்மா, வருணன், இந்திரன், ருத்திரன் மருத்தேவதைகள்* यं யம் *யாரை* दिव्यैः स्तवैः திவ்யை: ஸ்தவை: *திவ்யமான ஸ்துதிகளால்* स्तुन्वन्ति ஸ்துன்வந்தி *ஸ்துதிக்கிறார்கள்* सामगाः ஸாமகா: *சாமகானம் செய்கின்றவர்கள்* यं யம் *யாரை* स अङ्ग पदक्रम उपनिषदैः ஸ அங்க பதக்ரம உபநிஷதை: *அங்கமும், பதக்கிரமமும் உபநிஷதங்களும் கூடிய* वेदैः வேதை: *வேதங்களால்* गायन्ति காயந்தி *பாடுகிறார்கள்* योगिनः யோகின: *யோகிகள்* यं யம் *யாரை* ध्यान अवस्थित तद्गतेन मनसा த்யான அவஸ்தித தத்கதேன மனஸா *தியான முதிர்ச்சியால் மனதை அவன்பால் வைத்து* पश्यन्ति பச்யந்தி *பார்க்கிறார்கள்* सुर असुरगणाः ஸுர அஸுரகணு: *சுர, அசுரக் கூட்டங்கள்* यस्य யஸ்ய *யாருடைய* अन्तं அந்தம் *முடிவை* न विदुः ந விது: *அறிகிறார்களில்லை* तस्मै देवाय தஸ்மை தேவாய *அந்த தேவனுக்கு* नमः நம: *நமஸ்காரம்.*

***பிரம்மா, வருணன், இந்திரன், ருத்திரன், மருத்தேவதைகள் யாரை திவ்யமான ஸ்துதிகளால் ஸ்துதிக்கிறார்களோ, ஸாமகானம் செய்கின்றவர்கள் யாரை அங்கமும் பதக்கிரமமும் உபநிஷதங்களும் கூடிய வேதங்களால் பாடுகிறார்களோ, யோகிகள் தியான முதிர்ச்சியால் மனதை யார்பால் வைத்து உணர்கிறார்களோ, சுர அசுரகூட்டங்கள் யாருடைய முடிவை அறிகிறார்களில்லையோ, அந்த தெய்வத்துக்கு நமஸ்காரம்.*** 9



कर्मण्यकर्म यः पश्येदकर्मणि च कर्म यः ।   स बुद्धिमान्मनुष्येषु स युक्तः कृत्स्नकर्मकृत् ।

கிருஷ்ணனும் அர்ஜுனனும் போர்க்களத்துக்கு வந்தகோலமே இக் கோட்பாட்டை விளக்குகிறது. ரதம் உடல். அர்ஜுனன் ஜீவாத்மா. போர்புரியாத கிருஷ்ணன் பரமாத்மா. (பக்கம் 848)

ॐ

# ஸ்ரீமத் பகவத்கீதை

## முதல் அத்தியாயம்

## अर्जुनविषादयोगः

### அர்ஜுன விஷாதயோகம்

**धृतराष्ट्र उवाच**

**धर्मक्षेत्रे कुरुक्षेत्रे समवेता युयुत्सवः ।**
**मामकाः पाण्डवाश्चैव किमकुर्वत सञ्जय ॥ १**

த்ருதராஷ்ட்ர உவாச

தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ: ।
மாமகா: பாண்டவாஸ்சைவ கிமகுர்வத ஸஞ்ஜய ॥ 1

धृतराष्ट्रः த்ருதராஷ்ட்ர: *திருதராஷ்டிரர்* उवाच உவாச *சொன்னது.*

(भोः) सञ्जय (போ:) ஸஞ்ஜய *ஓ ஸஞ்ஜயா* धर्मक्षेत्रे कुरुक्षेत्रे தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே *தர்மக்ஷேத்திரமாகிய குருக்ஷேத்திரத்தில்* युयुत्सवः யுயுத்ஸவ: *யுத்தம் செய்ய விரும்பி* समवेताः ஸமவேதா: *திரண்ட* मामकाः மாமகா: *நம்மவர்களும்* पाण्डवाः च பாண்டவா: ச *பாண்டவர்களும்* किं एव अकुर्वत கிம் ஏவ அகுர்வத *என்னதான் செய்தார்கள்?*

திருதராஷ்டிரர் சொன்னது

***ஓ ஸஞ்ஜயா! தர்ம க்ஷேத்திரமாகிய குருக்ஷேத்திரத்தில் யுத்தம் செய்ய விரும்பித் திரண்ட நம்மவர்களும் பாண்டவர்களும் என்னதான் செய்தார்கள்? 1***

*ஸஞ்ஜய என்னும் சொல் விருப்பு வெறுப்பு முதலியவைகளை அறவே வென்றவன் என்று பொருள்படுகிறது. ஓரம் சாராது நடுநிலையில் இருப்பவனுக்கே ஞானக்கண் உண்டாகிறது. ஆதலால்தான் வியாஸ பகவான் ஸஞ்ஜயனுக்கு யுத்தத்தில் நிகழ்பவைகளை உள்ளபடி காணவல்ல ஞானக்கண்ணைக் கொடுத்தருளுகிறார்.*

*துள்ள கலக்கத்தை விளக்குகிறது. அவன் அடையப் போகும் தோல்விக்கும் அது அறிகுறியாகும்.*

अत्र शूरा महेष्वासा भीमार्जुनसमा युधि ।
युयुधानो विराटश्च द्रुपदश्च महारथः ॥ ४
धृष्टकेतुश्चेकितानः काशिराजश्च वीर्यवान् ।
पुरुजित् कुन्तिभोजश्च शैब्यश्च नरपुङ्गवः ॥ ५
युधामन्युश्च विक्रान्त उत्तमौजाश्च वीर्यवान् ।
सौभद्रो द्रौपदेयाश्च सर्व एव महारथाः ॥ ६

அத்ர சூரா மஹேஷ்வாஸா பீமார்ஜுனஸமா யுதி ।
யுயுதானோ விராடஸ்ச த்ருபதஸ்ச மஹாரத: ॥ 4
த்ருஷ்டகேதுஸ்சேகிதான: காசிராஜஸ்ச வீர்யவான் ।
புருஜித் குந்திபோஜஸ்ச சைப்யஸ்ச நரபுங்கவ: ॥ 5
யுதாமன்யுஸ்ச விக்ராந்த உத்தமௌஜாஸ்ச வீர்யவான் ।
ஸௌபத்ரோ த்ரௌபதேயாஸ்ச ஸர்வ ஏவ மஹாரதா: ॥ 6

**अत्र** அத்ர *இங்கே* **शूरा** சூரா *சூரர்களாகவும்* **महेष्वासाः** மஹேஷ்வாஸா: *பெரிய வில்லாளிகளாகவும்* **युधि** யுதி *யுத்தத்தில்* **भीमार्जुनसमाः** பீமார்ஜுனஸமா: *பீமனுக்கும் அர்ஜுனனுக்கும் சமானமானவருமான* **युयुधानः (सात्यकिः)** யுயுதான: (ஸாத்யகி:) *சாத்யகி என்ற மறுபெயரை யுடைய யுயுதானனும்* **विराटः च** விராட: ச *விராட தேசத்தரசனும்* **महारथः द्रुपदश्च (द्रुपदः च)** மஹாரத: த்ருபதஸ்ச (த்ருபத: ச) *மகாரதனாகிய துருபத தேசத்தரசனும்* **धृष्टकेतुः** த்ருஷ்டகேது: *திருஷ்டகேதுவும்* **चेकितानः** சேகிதான: *(சிகிதானன் மகன்)சேகிதானனும்* **वीर्यवान् काशिराजः च** வீர்யவான் காசிராஜ: ச *வீரியமுடைய காசி ராஜனும்* **पुरुजित्** புருஜித் *புருஜித் என்பவனும்* **कुन्तिभोजः च** குந்திபோஜ: ச *குந்திபோஜனும்* **नरपुङ्गवः शैब्यः च** நரபுங்கவ: சைப்ய: ச *மனிதருள் முதன்மை வகிக்கும் சைபியன் என்பவனும்* **विक्रान्तः युधामन्युः च** விக்ராந்த: யுதாமன்யு: ச *பேராற்றல் படைத்திருக்கும் யுதாமன்யுவும்* **वीर्यवान् उत्तमौजाः च** வீர்யவான் உத்தமௌஜா: ச *வல்லமையுடைய உத்தமௌஜஸ் என்பவனும்* **सौभद्रः** ஸௌபத்ர: *சுபத்திரையின் புதல்வனும்* **द्रौपदेयाः च** த்ரௌபதே

யா: ச *திரௌபதியின் புதல்வர்களும்* सर्वे महारथाः ஏவ ஸர்வே மஹாரதா: ஏவ *எல்லோரும் மகாரதர்களே யாவர்.*

***இங்கே (பாண்டவப்படையில்) சூரர்களாகவும், பெரிய வில்லாளிகளாகவும், யுத்தத்தில் பீமனுக்கும் அர்ஜுனனுக்கும் சமானமானவருமான யுயுதானனும், விராட தேசத்தரசனும், மகாரதனாகிய துருபததேசத்து அரசனும், திருஷ்டகேதுவும், சேகிதானனும், வீரியமுடைய காசிராஜனும், புருஜித் என்பவனும், குந்திபோஜனும், மனிதருள் முதன்மை வகிக்கும் சைபியன் என்பவனும், பேராற்றல் படைத்திருக்கும் யுதாமன்யுவும், வல்லமையுடைய உத்தமௌஜஸ் என்பவனும், சுபத்திரையின் புதல்வனும், திரௌபதியின் புதல்வர்களும் கூடியிருக்கின்றனர். இவர்கள் எல்லாரும் மகாரதர்களே யாவர்.*** **4–6**

*மகாரதன் – போர்ப்பயிற்சி மிகப்பெற்றவன். பதினோராயிரம் வில்லாளிகளை நடத்துபவன்.*

**अस्माकं तु विशिष्टा ये तान्निबोध द्विजोत्तम ।**
**नायका मम सैन्यस्य संज्ञार्थं तान् ब्रवीमि ते ॥ ७**

அஸ்மாகம் து விசிஷ்டா யே தாந்நிபோத த்விஜோத்தம ।
நாயகா மம ஸைன்யஸ்ய ஸம்ஞார்த்தம் தான் ப்ரவீமி தே ॥ 7

द्विजोत्तम த்விஜோத்தம *பிராம்மண சிரேஷ்டரே* अस्माकं तु அஸ்மாகம் து (*ஆனால்*) *நம்மவர்களுள் கூட* ये विशिष्टाः யே விசிஷ்டா: *யார் சிறந்தவர்களோ* तान् निबोध தான் நிபோத *அவர்களைத் தெரிந்து கொள்ளும்* मम सैन्यस्य மம ஸைன்யஸ்ய *என்னுடைய சேனையின்* नायकाः (ये) நாயகா: (யே) *நாயகர்கள் (எவர்களோ)* ते संज्ञार्थं தே ஸம்ஞார்த்தம் *உமக்குத் தகவல் தெரிவித்தற்பொருட்டு* तान् ब्रवीमि தான் ப்ரவீமி *அவர்களைப்பற்றிச் சொல்லுகிறேன்.*

***பிராம்மண சிரேஷ்டரே, நம்மவர்களுள் யார் சிறந்தவர்களோ அவர்களைக்கூடத் தெரிந்துகொள்***

***ளும். என்னுடைய சேனையின் நாயகர்களைப்பற்றி உமக்குத் தகவல் தெரிவித்தற்பொருட்டுச் சொல்லுகிறேன். 7***

*துர்யோதனன் மறைமுகமாகத்தனது குருவை நிந்திக்கிறான். 'போர்முறையில் நீர் எவ்வளவு வல்லவராயிருந்தாலும், முடிவாகப் பார்க்குமிடத்து நீர் ஒரு பிராம்மணைத்தமர்தானே. பயங்கொள்ளியாகிய உமக்குச் சண்டையில் எங்கிருந்து உற்சாகம் வரப்போகிறது! பாண்டவப் படையைப்பார்த்து நீர் பயப்படுவது இயல்பு. எனினும் எதற்கும் அஞ்சாதீர். நம் பக்கத்திலும் பேராற்றல் வாய்ந்த வீரர்கள் இருக்கின்றனர்.' இதுதான் அவன் பேச்சின் கருத்து.*

**भवान् भीष्मश्च कर्णश्च कृपश्च समितिञ्जयः ।**
**अश्वत्थामा विकर्णश्च सौमदत्तिर्जयद्रथः ॥ ८**

பவான் பீஷ்மஸ்ச கர்ணஸ்ச க்ருபஸ்ச ஸமிதிஞ்ஜய: ।
அச்வத்தாமா விகர்ணஸ்ச ஸௌமதத்திர்ஜயத்ரத: ॥ 8

भवान् பவான் *தாங்களும்* भीष्मः च பீஷ்ம: ச *பீஷ்மரும்* कर्णः च கர்ண: ச *கர்ணனும்* समितिञ्जयः कृपः च ஸமிதிஞ்ஜய: க்ருப: ச *போர் முனையில் வெற்றியே வடிவெடுத்துள்ள கிருபாசாரியரும்* अश्वत्थामा அச்வத்தாமா *அஸ்வத்தாமாவும்* विकर्णः च விகர்ண: ச *விகர்ணனும்* सौमदत्तिः ஸௌமதத்தி: *சோமதத்தன் புதல்வன் பூரிசிரவஸும்* जयद्रथः ஜயத்ரத: *ஜயத்ரதனும்*

***தாங்களும் பீஷ்மரும் கர்ணனும் போர்முனையில் வெற்றியே வடிவெடுத்துள்ள கிருபாசாரியரும் அச்வத்தாமாவும் விகர்ணனும் சோமதத்தன் புதல்வன் பூரிசிரவஸும் ஜயத்ரதனும் இருக்கின்றீர்கள். 8***

*துரோணாசாரியரை அளவுக்குமிஞ்சி அவமரியாதை செய்துவிட்டதாக அஞ்சுகிற துர்யோதனன் அதற்கு ஈடாக சேனாதிபதியாகிய பீஷ்மருக்கு முன்பாக அவரை வைத்து முகஸ்துதி செய்கிறான். மேலும் துரோணருடைய மைத்துனராகிய கிருபரை "போர்முனையில் வெற்றியே வடிவெடுத்*

*துள்ளவன்" என்று புகழ்ந்து பேசுகிறான். இதுபோன்ற முகஸ்துதிக்கு யார்தான் வசப்படமாட்டார்!*

अन्ये च बहवः शूरा मदर्थे त्यक्तजीविताः ।
नानाशस्त्रप्रहरणाः सर्वे युद्धविशारदाः ॥ ९

அன்யே ச பஹவ: சூரா மதர்த்தே த்யக்தஜீவிதா: ।
நாநாசஸ்த்ரப்ரஹரணா: ஸர்வே யுத்தவிசாரதா: ॥ 9

अन्ये च அன்யே ச *மேலும்* बहवः शूराः பஹவ: சூரா: *பல சூரர்கள்* सर्वे ஸர்வே *எல்லாரும்* मदर्थे மதர்த்தே *என்பொருட்டு* त्यक्तजीविताः த்யக்த ஜீவிதா: *உயிரைக் கொடுக்கத் துணிந்தவர்களாயும்* नानाशस्त्रप्रहरणाः நாநாசஸ்த்ரப்ரஹரணா: *பலவிதமான ஆயுதங்களையும் அம்புகளையும் உடைத்தவர்களாயும்* युद्धविशारदाः யுத்தவிசாரதா: *யுத்தத்தில் மிகத்தேர்ந்தவர்களாயும்* (सन्ति ஸந்தி *இருக்கின்றனர்.*)

***மேலும் எல்லாரும் என்பொருட்டு உயிரைக் கொடுக்கத் துணிந்தவர்களாயும் பலவிதமான ஆயுதங்களையும் அம்புகளையும் உடைத்தவர்களாயும் யுத்தத்தில் மிகத் தேர்ந்தவர்களாயும் பல சூரர்கள் இருக்கின்றனர். 9***

अपर्याप्तं तदस्माकं बलं भीष्माभिरक्षितम् ।
पर्याप्तं त्विदमेतेषां बलं भीमाभिरक्षितम् ॥ १०

அபர்யாப்தம் ததஸ்மாகம் பலம் பீஷ்மாபிரக்ஷிதம் ।
பர்யாப்தம் த்விதமேதேஷாம் பலம் பீமாபிரக்ஷிதம் ॥ 10

भीष्म+अभिरक्षितम् பீஷ்ம+அபிரக்ஷிதம் *பீஷ்மரால் காக்கப்படும்* तत् अस्माकं बलं தத் அஸ்மாகம் பலம் *இந்த நமது படை* अपर्याप्तं அபர்யாப்தம் *அளவில் அடங்காதது* तु து *ஆனால்* भीम+अभिरक्षितम् பீம+அபிரக்ஷிதம் *பீமனால் காக்கப்படுகிற* एतेषां इदं बलम् ஏதேஷாம் இதம் பலம் *அவர்களுடைய இந்தச் சேனை* पर्याप्तं பர்யாப்தம் *கட்டுக்குட்பட்டது.*

***பீஷ்மர் பாதுகாக்கும் நமது படை பரந்து அளவுகடந்து இருக்கிறது. பீமன் பரிபாலிக்கும் அவர்கள் படையோ கட்டுக்கு அடங்கியது. 10***

அசுர இயல்பு உடையாருக்கு அழிவுகாலம் அணுகும்பொழுது வீண்பெருமை கொள்ளுதல் அதிகரிக்கிறது. அத்தகையதற்புகழ்ச்சியில் தனக்கே கேடுதரும் கருத்துக்கள் தற்செயலாய் வந்து அமைவதும் உண்டு. இங்கு துர்யோதனனுடைய கூற்று இக்கோட்பாட்டுக்கு இலக்காகிறது. தனக்கு ஜன்ம சத்துருவாயிருக்கின்ற பீமனைவிட பீஷ்மர் சிறந்த சேனுபதி என்பது அவன் கருத்து. பீமன் தன் வெற்றிக்காகப் பாடுபடுபவன். பாட்டனராகிய பீஷ்மரோ பட்சபாதமில்லாதவர். உடன்படிக்கையின்படி துர்யோதனனுக்காகப் போர்புரிந்தாலும் தர்மம் ஒன்றே வெற்றியடையவேண்டும் என்னும் கோரிக்கையுடையவர். அவருடைய சீரிய மனநிலையை துர்யோதனன் அறியான்.

ஆட்களின் எண்ணிக்கையிலிருந்து ஒரு சேனையின் வலிவை அறிந்துகொள்ள முடியாது. கட்டுக்கு அடங்கியிருக்கிற அளவிலிருந்து ஒரு படையின் திறமை தோன்றும். தங்களுடைய சேனை கட்டுக்கு அடங்காதது, பாண்டவர்களுடையதோ கட்டுக்கு அடங்கியது என்று எண்ணிக்கையின் விரிவைத் துர்யோதனன் தற்பெருமையாகச் சொல்லுகிறுன். வண்ணத்தில் பெரியது எனினும் வலிவில் சிறியது என்ற அமங்கலக்கருத்து அதில் அடங்கியிருக்கிறது.

ஒரு சமூகத்தினுடைய வாழ்க்கை முறைக்கும் இக்கோட்பாடு பொருந்தும். கட்டுப்பாடும் திட்டமும் உடைய சிறு சமூகங்கள் நன்கு முன்னேற்றமடைகின்றன. கட்டில் அடங்காத பெரிய சமூகங்கள் பிற ஆட்சிக்கு அடிமையாகின்றன ; அல்லது சீரும் சிறப்புமின்றித் தம்மைத் தாமே ஆண்டுவருகின்றன. அடக்கமுடைமைக்கும் அடக்கமின்மைக்கும் உள்ள சிறந்த வேறுபாட்டை உலகில் எப்பொழுதும் காணலாம்.

**अयनेषु च सर्वेषु यथाभागमवस्थिताः ।**
**भीष्ममेवाभिरक्षन्तु भवन्तः सर्व एव हि ॥ ११**

அயனேஷு ச ஸர்வேஷு யதாபாகமவஸ்திதா: ।
பீஷ்மமேவாபிரக்ஷந்து பவந்த: ஸர்வ ஏவ ஹி ॥ 11

सर्वेषु अयनेषु च ஸர்வேஷு அயனேஷு ச *எல்லா படை வகுப்புகளிலும்* यथा भागं யதா பாகம் *அவரவர் இடங்களில்* अवस्थिता: அவஸ்திதா: *நின்றுகொண்டு* भवन्त: सर्वे एव हि பவந்த: ஸர்வே ஏவ ஹி *நீங்கள் எல்லாருமே* भीष्मं एव பீஷ்மம் ஏவ *பீஷ்மரையே* अभिरक्षन्तु அபிரக்ஷந்து *காப்பாற்றுக.*

***படை வகுப்புகள் அனைத்திலும் அவரவர் இடங்களில் நின்றுகொண்டு எல்லாருமே பீஷ்மரையே காப்பாற்றுக.*** **11**

*முயற்சியற்றவர்களாகிய நீங்கள் என் சொற்படியாவது கேட்டு நடந்துகொள்ளுங்கள் என்று சேனாதிபதிகளை அவமதிப்பது போன்றிருக்கிறது துர்யோதனனது கூற்று.*

तस्य सञ्जनयन् हर्षं कुरुवृद्धः पितामहः ।
सिंहनादं विनद्योच्चैः शङ्खं दध्मौ प्रतापवान् ॥ १२

தஸ்ய ஸஞ்ஜனயன் ஹர்ஷம் குருவ்ருத்த: பிதாமஹ: ।
ஸிம்ஹநாதம் விநத்யோச்சை: சங்கம் தத்மௌ ப்ரதாபவான் ॥ 12

प्रतापवान् ப்ரதாபவான் *வல்லவராகிய* कुरुवृद्ध: குருவ்ருத்த: *குருகுலத்து வயோதிகர்* पितामह: பிதாமஹ: *பாட்டனார்* तस्य தஸ்ய *அவனுக்கு (துரியோதனனுக்கு)* हर्षं ஹர்ஷம் *உற்சாகத்தை* संजनयन् ஸஞ்ஜனயன் *ஊட்டுதற்கு* उच्चै: உச்சை : *உரக்க* सिंहनादं ஸிம்ஹநாதம் *சிம்மநாதத்தை* विनद्य விநத்ய *நாதித்து* शङ्खम् சங்கம் *சங்கை* दध्मौ தத்மௌ *ஊதினார்.*

***வல்லமை வாய்ந்தவரும், குருகுல வயோதிகருமாகிய பாட்டனார் அவனுக்கு (துர்யோதனனுக்கு) உற்சாகத்தை ஊட்ட உரக்கச் சிம்மநாதம் செய்து சங்கை ஊதினார்.*** **12**

*துரோணாசாரியரை இகழ்கின்ற போக்கில் துர்யோதனன் பேசிவிட்டான். அதனால் அவருடைய ஊக்கமும்*

*குறைந்தது. மற்ற சேனாபதிகள் ஓரளவில் அவமதிக்கப் பட்டனர். துர்யோதனனுடைய உள்ளத்திலோ அச்சம் குடிகொண்டுவிட்டது. நிலைமை கெட்டுவருவதைப் பீஷ்மர் பார்த்தார். மேலும் மனத்தளர்ச்சிக்கும் குழப்பத்துக்கும் இடந்தரலாகாது. தம் பேரன்மீது இரக்கம் வைத்துப் பாட்டனார் சங்குநாதித்துத் திடீரென்று காட்சியை மாற்று கிறார். அதன் மூலம் கௌரவர்களே யுத்தத்தைத் துவக்கி யவர் ஆகின்றனர். ஆக்கிரமிப்பு என்னும் குற்றம் அவர் களைச் சார்ந்ததாகிறது.*

**ततः शङ्खाश्च भेर्यश्च पणवानकगोमुखाः ।**
**सहसैवाभ्यहन्यन्त स शब्दस्तुमुलोऽभवत् ॥ १३**

தத: சங்காஸ்ச பேர்யஸ்ச பணவானககோமுகா: ।
ஸஹஸைவாப்யஹன்யந்த ஸ சப்தஸ்துமுலோऽபவத் ॥ 13

ततः தத: *பிறகு* शङ्खाः च சங்கா: ச *சங்குகளும்* भेर्यः च பேர்ய: ச *பேரிகைகளும்* पणव – आनक – गोमुखाः பணவ-ஆனக-கோமுகா: *தம் பட்டங்களும், பறைகளும், கொம்புகளும்* सहसा एव ஸஹஸா ஏவ *திடீரென்று* अभ्यहन्यन्त அப்யஹன்யந்த *முழங்கின* सः शब्दः ஸ: சப்த: *அந்த ஒலி* तुमुलः अभवत् துமுல: அபவத் *பெரியதாயிருந்தது.*

***பிறகு சங்குகளும் பேரிகைகளும் தம்பட்டங் களும் பறைகளும் கொம்புகளும் திடீரென்று முழங் கின. அது பேரொலியாயிருந்தது.*** **13**

*இது கௌரவர்கள் பக்கம் உண்டாய இரைச்சல்.*

**ततः श्वेतैर्हयैर्युक्ते महति स्यन्दने स्थितौ ।**
**माधवः पाण्डवश्चैव दिव्यौ शङ्खौ प्रदध्मतुः ॥ १४**

**தத: ச்வேதைர்ஹயைர்யுக்தே மஹதி ஸ்யந்தனே ஸ்திதௌ ।**
**மாதவ: பாண்டவஸ்சைவ திவ்யௌ சங்கௌ ப்ரதத்மது: ॥ 14**

ततः தத: *பின்பு* श्वेतैः हयैः ச்வேதை: ஹயை: *வெள்ளைக்குதிரை களோடு* युक्ते யுக்தே *பூட்டிய* महति மஹதி *சிறந்த* स्यन्दने ஸ்யந்தனே *தேரில்* स्थितौ ஸ்திதௌ *வீற்றிருந்த* माधवः पाण्डवः च एव மாதவ: பாண்

டவ: ச ஏவ *மாதவனும் பாண்டவனும்* दिव्यौ शङ्खौ திவ்யௌ சங்கௌ *தெய்வீக சங்குகளை* प्रदध्मतुः ப்ரதத்மது: *உரக்க ஊதினார்கள்.*

***பின்பு வெள்ளைக் குதிரைகள் பூட்டிய சிறந்த தேரில் வீற்றிருந்த மாதவனும் பாண்டவனும் தங்கள் தெய்வீக சங்குகளை உரக்க ஊதினார்கள். 14***

*மாதவன் என்பது கிருஷ்ணனுடைய பெயர்களில் ஒன்று. மா – இலக்ஷ்மியின், தவ: – தலைவன். இலக்ஷ்மீ பதியே பாண்டவர் பக்கமிருப்பதால் இனி ராஜ்யலக்ஷ்மிக்கு இருப்பிடம் பாண்டவர் பக்கமாய் விடும்.*

*பாண்டவன் என்று ஐவரில் யாரை வேண்டுமானாலும் அழைக்கலாம். நாராயணன், நரன் என்ற இரண்டு ரிஷிகள் இப்பொழுது கிருஷ்ணனாகவும் அர்ஜுனனாகவும் அவதரித்திருக்கிறார்கள். அவர்கள் இணைபிரியாதிருப்பதால் ஈண்டுப் பாண்டவன் என்னும் சொல் சிறப்பாக அர்ஜுனனைக் குறிக்கிறது.*

**पाञ्चजन्यं हृषीकेशो देवदत्तं धनंजयः ।**
**पौण्ड्रं दध्मौ महाशङ्खं भीमकर्मा वृकोदरः ॥ १५**

பாஞ்சஜன்யம் ஹ்ருஷீகேசோ தேவதத்தம் தனஞ்ஜய: ।
பௌண்ட்ரம் தத்மௌ மஹாசங்கம் பீமகர்மா வ்ருகோதர: ॥ 15

हृषीकेशः ஹ்ருஷீகேச: *ஹிருஷீகேசன்* पाञ्चजन्यं பாஞ்சஜன்யம் *பாஞ்ஜஜன்யம் என்ற சங்கை* धनञ्जयः தனஞ்ஜய: *தனஞ்ஜயன்* देवदत्तं தேவதத்தம் *தேவதத்தம் என்ற சங்கை* भीमकर्मा பீமகர்மா *பெருவினையாற்றுபவனாகிய* वृकोदरः வ்ருகோதர: *பீமசேனன்* महाशङ्खम् पौण्ड्रम् மஹாசங்கம் பௌண்ட்ரம் *பெரிய சங்காகிய பௌண்ட்ரத்தை* दध्मौ தத்மௌ *ஊதினான்.*

***ஹிருஷீகேசன் பாஞ்சஜன்யம் என்ற சங்கை ஊதினான். தனஞ்ஜயன் தேவதத்தம் என்ற சங்கை நாதித்தான். பெருவினையாற்றுபவனாகிய பீமசேனன் பௌண்ட்ரம் என்ற பெரிய சங்கை ஒலித்தான். 15***

ஹ்ருஷீகேசன் என்பது இந்திரியங்களுக்குத் தலைவன் என்று பொருள்படுகிறது. இது கிருஷ்ணனுக்கு ஓர் அடைமொழி. இந்திரியங்களைக் கட்டி ஆளுபவன் எச்செயலைச் செய்தாலும் அதை ஒழுங்காகவும் நேர்மையாகவும் செய்வான்.

தனஞ்ஜயன் என்றசொல் செல்வத்தை வென்றவன் என்றகருத்தையுடையது. அர்ஜுனன் ஆங்காங்குச் சென்று அரசர்களிடம் ஒன்றுக்கும் பயன்படாது அடைபட்டுக் கிடந்த செல்வங்களையெல்லாம் பெயர்த்தெடுத்துக்கொண்டு வந்துவிட்டான். ஆகையால் அவனுக்கு அப்பெயர் வந்தது. பீமசேனனுக்கு மூலத்தில் வ்ருகோதரன் என்று பெயர். ஓநாய் போன்று ஒடுங்கிய வயிறு உடையவன் என்றும், எதையும் எளிதில் ஜீரணம் செய்யக்கூடியவன் என்றும் இது பொருள்படுகிறது. நல்ல ஜீரண சக்தியுடையவர்தான் எச்செயலையும் ஆற்றவல்லவர் ஆகின்றனர்.

**अनन्तविजयं राजा कुन्तीपुत्रो युधिष्ठिरः ।**
**नकुलः सहदेवश्च सुघोषमणिपुष्पकौ ॥ १६**

அனந்தவிஜயம் ராஜா குந்தீபுத்ரோ யுதிஷ்டிர: ।
நகுல: ஸஹதேவஸ்ச ஸுகோஷமணிபுஷ்பகௌ ॥ 16

कुन्तीपुत्रः குந்தீபுத்ர: *குந்தியின் புதல்வன்* राजा युधिष्ठिरः ராஜா யுதிஷ்டிர: *ராஜாயுதிஷ்டிரன்* अनन्तविजयं அனந்தவிஜயம் *அனந்தவிஜயம் என்ற சங்கை* नकुलः सहदेवः च நகுல: ஸஹதேவ: ச *நகுலனும் சஹதேவனும்* सुघोष मणिपुष्पकौ ஸுகோஷ மணிபுஷ்பகௌ *சுகோஷத்தையும் மணிபுஷ்பகத்தையும்* (दध्मतुः தத்மது: *ஊதினார்கள்.*)

***குந்தியின் புதல்வன் ராஜாயுதிஷ்டிரன் அனந்தவிஜயம் என்ற சங்கையும், நகுலனும் சஹதேவனும் சுகோஷம், மணிபுஷ்பகம் என்ற சங்குகளையும் ஊதினார்கள். 16***

நாடு ஆண்டாலும் ஆளாவிட்டாலும் அரசனது இயல்பு அனைத்தையும் அடையப் பெற்றிருக்கிறபடியால்

*யுதிஷ்டிரனுக்கு ராஜா என்னும் சிறப்புச்சொல் பொருத்த மாக அமைகிறது.*

**काश्यश्च परमेष्वासः शिखण्डी च महारथः ।**
**धृष्टद्युम्नो विराटश्च सात्यकिश्चापराजितः ॥ १७**

காச்யஸ்ச பரமேஷ்வாஸ: சிகண்டீ ச மஹாரத: ।
த்ருஷ்டத்யும்னோ விராடஸ்ச ஸாத்யகிஸ்சாபராஜித: ॥ 17

परमेष्वासः (परम इष्वासः) பரமேஷ்வாஸ: (பரம இஷ்வாஸ:) *சிறந்த வில்லாளியாகிய* काश्यः च காச்ய: ச *காசிராஜனும்* महारथः शिखण्डी च மஹாரத: சிகண்டீ ச *மஹாரதிகனான சிகண்டியும்* धृष्टद्युम्नः த்ருஷ்டத்யும்ன: *திருஷ்டத்யும்னனும்* विराटः च விராட: ச *விராடதேசத்தரசனும்* अपराजितः सात्यकिः च அபராஜித: ஸாத்யகி: ச *பிறரால் வெல்லப்படாத சாத்யகியும்.*

***விற்படையில் தலைசிறந்த காசிராஜனும், மகா ரதிகனான சிகண்டியும், திருஷ்டத்யும்னனும் விராட தேசத்தரசனும், பிறரால் வெல்லப்படாத சாத்ய கியும் 17***

*சிகண்டி என்ற சொல் முகத்தில் மீசையில்லாதவன் எனப் பொருள்படுகிறது. இவன் பேடுவாக இருந்தான். பீஷ்மருக்கு எதிரில் இவனை நிறுத்தியபொழுது அவர் போர்புரியாது இருந்துவிட்டார். ஆதலால் அவருக்குத் தோல்வி உண்டாயிற்று. திருஷ்டத்யும்னன் என்ற பதத் திற்குப் பொருள் எவராலும் எதிர்க்கமுடியாதவன் என்பது.*

**द्रुपदो द्रौपदेयाश्च सर्वशः पृथिवीपते ।**
**सौभद्रश्च महाबाहुः शङ्खान् दध्मुः पृथक् पृथक् ॥ १८**

த்ருபதோ த்ரௌபதேயாஸ்ச ஸர்வச: ப்ருதிவீபதே ।
ஸௌபத்ரஸ்ச மஹாபாஹு: சங்கான் தத்மு: ப்ருதக் ப்ருதக் ॥ 18

पृथिवीपते பிருதிவீபதே *மண்ணுள்பவனே (திருதராஷ்டிரனே)* द्रुपदः த்ருபத: *துருபதனும்* द्रौपदेयाः च த்ரௌபதேயா: ச *திரௌபதியின்*

புதல்வர்களும் महाबाहुः सौभद्रः च மஹாபாஹு: ஸௌபத்ர: ச பெருந் தோளுடையவனுகிய சுபத்திரையின் மகனும் सर्वशः ஸர்வச: எல்லாரும் पृथक् पृथक् ப்ருதக் ப்ருதக் தனித்தனியே शङ्खान् சங்கான் சங்குகளை दध्मुः தத்மு: ஊதினர்கள்.

**மண்ணுள்பவனே, துருபதனும், திரௌபதியின் புதல்வர்களும், தோள்வலிவுடையவனுகிய சுபத்திரையின் மகனும் ஆக எல்லாரும் தனித் தனியே சங்குகளை ஊதினுர்கள். 18**

*பிருதிவீபதே–மண்ணுள்பவனே என்று திருதராஷ்டிரன் இங்கு ஸஞ்ஜயனுல் அழைக்கப்படுவது அரசனது பொறுப்பை அவனுக்கு ஞாபகமூட்டுதற்பொருட்டேயாம். நாட்டைக் கடும்போரில் ஆழ்த்திவிடுவதும், சண்டை சச்சரவின்றி சமாதானமாயிருக்கச் செய்வதும் ஆகிய இரு செயலும் நாடாள்பவனுக்கு இயலும். உமது விருப்பம் யாதோ என்னும் கருத்து இங்கே தொக்கி நிற்கிறது.*

स घोषो धार्तराष्ट्राणां हृदयानि व्यदारयत् ।
नभश्च पृथिवीं चैव तुमुलो व्यनुनादयन् ॥ १९

ஸ கோஷோ தார்த்தராஷ்ட்ராணும் ஹ்ருதயானி வ்யதாரயத் ।
நபஸ்ச ப்ருதிவீம்சைவ துமுலோ வ்யநுநாதயன் ॥ 19

सः तुमुलः घोषः ஸ: துமுல: கோஷ: அந்தப் பெருமுழக்கம் च ச மேலும் नभः நப: விண்ணையும் पृथिवीं च ப்ருதிவீம் ச மண்ணையும் व्यनुनादयन् வ்யநுநாதயன் சேர்ந்தொலிக்கச் செய்வதாய் धार्तराष्ट्राणां தார்த்தராஷ்ட்ராணும் திருதராஷ்டிரக் கூட்டத்தாரின் हृदयानि ஹ்ருதயானி நெஞ்சுகளை व्यदारयत् வ்யதாரயத் வீறப்பிளந்தது.

**மேலும் அப்பெருமுழக்கம் விண்ணையும் மண்ணையும் சேர்ந்தொலிக்கச் செய்வதாய், திருதராஷ்டிரக் கூட்டத்தாரின் நெஞ்சுகளை வீறப்பிளந்தது. 19**

*பாண்டவப்படை தொகையில் சிறியது எனினும் அப்பக்கம் இருப்பவர்களுக்குப் பெருமுழக்கம் செய்ய இயன்றது. தெய்வத்தின் துணையும் தர்மத்தின் வலிவுமே*

அதற்குக் காரணமாயிற்று. குற்றமுடையவர்கள் நெஞ்சில் சிறுபிள்ளையின் பழிப்பும் சுடு சரம்போன்று பாயும். கௌரவர்களுடைய நெஞ்சத்தில் வஞ்சகமிருந்தபடியால் அது வீறப்பிளக்கப்பட்டதில் வியப்பு ஒன்றுமில்லை.

अथ व्यवस्थितान्दृष्ट्वा धार्तराष्ट्रान् कपिध्वजः ।
प्रवृत्ते शस्त्रसम्पाते धनुरुद्यम्य पाण्डवः ॥ २०
हृषीकेशं तदा वाक्यमिदमाह महीपते ।

அத வ்யவஸ்திதான்த்ருஷ்ட்வா தார்த்தராஷ்ட்ரான் கபித்வஜ: ।
ப்ரவ்ருத்தே சஸ்த்ரஸம்பாதே தனுருத்யம்ய பாண்டவ: ॥ 20
ஹ்ருஷீகேசம் ததா வாக்யமிதமாஹ மஹீபதே ।

महीपते மஹீபதே *திருதராஷ்டிர வேந்தே* अथ அத *அப்பால்,* कपिध्वजः கபித்வஜ: *குரங்குக் கொடியுடையோனாகிய* पाण्डवः பாண்டவ: *அர்ஜுனன்* व्यवस्थितान् धार्तराष्ट्रान् வ்யவஸ்திதான் தார்த்தராஷ்ட்ரான் *போர்துவக்கத்தலைப்பட்ட திருதராஷ்டிரக்கூட்டத்தாரை* दृष्ट्वा த்ருஷ்ட்வா *பார்த்து* शस्त्रसम्पाते प्रवृत्ते சஸ்த்ரஸம்பாதே ப்ரவ்ருத்தே *அம்புகள் பறக்க ஆரம்பிக்குமுன்* धनुः தனு: *வில்லை* उद्यम्य உத்யம்ய *ஏந்திக் கொண்டு* तदा ததா *அப்பொழுது* हृषीकेशं ஹ்ருஷீகேசம் *ஹிருஷீகேசனுக்கு (கிருஷ்ணனுக்கு)* इदं वाक्यं இதம் வாக்யம் *இச்சொல்லை* आह ஆஹ *உரைத்தான்.*

***அரசே! அப்பால் குரங்குக் கொடியுடையோனாகிய அர்ஜுனன் போர்துவக்கத் தலைப்பட்டிருந்த திருதராஷ்டிரக் கூட்டத்தாரைப்பார்த்து, அம்புகள் பறக்க ஆரம்பிக்குமுன், வில்லை ஏந்திக்கொண்டு கிருஷ்ணனுக்கு இச்சொல்லை உரைத்தான்.*** 20

अर्जुन उवाच

सेनयोरुभयोर्मध्ये रथं स्थापय मेऽच्युत ॥ २१
यावदेतान्निरीक्षेऽहं योद्धुकामानवस्थितान् ।
कैर्मया सह योद्धव्यमस्मिन् रणसमुद्यमे ॥ २२

அர்ஜுன உவாச

ஸேனயோருபயோர்மத்யே ரதம் ஸ்தாபய மேऽச்யுத ॥ 21
யாவதேதாந்நிரீக்ஷேऽஹம் யோத்துகாமானவஸ்திதான் ।
கைர்மயா ஸஹ யோத்தவ்யமஸ்மின் ரணஸமுத்யமே ॥ 22

अर्जुनः அர்ஜுன: *அர்ஜுனன்* उवाच உவாச *சொன்னது*.

अच्युत அச்யுத *அச்யுதா* उभयोः सेनयोः உபயோ: ஸேனயோ: *இரண்டு சேனைகளினுடைய* मध्ये மத்யே *மத்தியில்* मे रथं மே ரதம் *என்னுடைய ரதத்தை* स्थापय ஸ்தாபய *நிறுத்து* अस्मिन् रणसमुद्यमे அஸ்மின் ரணஸமுத்யமே *இந்தப் போர்த்துவக்கத்தில்* मया மயா *என்னால்* कैः सह கை: ஸஹ *யாரோடு* योद्धव्यम् யோத்தவ்யம் *யுத்தம் செய்ய வேண்டும்* योद्धुकामान् अवस्थितान् एतान् யோத்து காமான் அவஸ்திதான் ஏதான் *யுத்தம் செய்ய விரும்பி நிற்கின்ற இவர்களை* यावत् யாவத் *அப்பொழுது* अहं निरीक्षे அஹம் நிரீக்ஷே *நான் கவனிக்கிறேன்*.

அர்ஜுனன் சொன்னது

***அச்யுதா, படைகளிரண்டுக்குமிடையில் என் தேரை நிறுத்துக. இப்போரில் யான் யாரோடு யுத்தம் செய்ய வேண்டுமென்பதையும், போர் விரும்பி முன்னிற்பார் யார் என்பதையும் கவனிக்கிறேன். 21–22***

*அச்யுதன் என்பது விஷ்ணுவுக்கு அமைந்துள்ள பெயர்களில் ஒன்று. தன் பெருநிலையினின்று இறங்காதவன் என அது பொருள்படுகிறது.*

**योत्स्यमानानवेक्षेऽहं य एतेऽत्र समागताः ।**
**धार्तराष्ट्रस्य दुर्बुद्धेर्युद्धे प्रियचिकीर्षवः ॥ २३**

யோத்ஸ்யமானானவேக்ஷேऽஹம் ய ஏதேऽத்ர ஸமாகதா: ।
தார்த்தராஷ்ட்ரஸ்ய துர்ப்புத்தேர்யுத்தே ப்ரியசிகீர்ஷவ: ॥ 23

अत्र அத்ர *இவ்விடத்து* युद्धे யுத்தே *போரில்* दुर्बुद्धेः धार्तराष्ट्रस्य துர்புத்தே: தார்த்தராஷ்ட்ரஸ்ய *துஷ்டபுத்தியுடைய திருதராஷ்டிர புதல்வனுக்கு* प्रियचिकीर्षवः ப்ரியசிகீர்ஷவ: *பிரியம் செய்ய விருப்பமுடைய*

*வர்களாய்* ये யே *எந்த* एते ஏதே *இந்த புருஷர்கள்* समागताः ஸமாகதா: *கூடியிருக்கிறார்களோ* योत्स्यमानान् யோத்ஸ்யமானான் *யுத்தம் செய்யப் போகிறவர்களை* अहं अवेक्षे அஹம் அவேக்ஷே *நான் பார்க்கிறேன்.*

***புல்லறிவாளனாகிய துர்யோதனனுக்குப் பிரீதி செய்யும் வண்ணம் போர்புரிய இங்குத்திரண்டிருப் போரை நான் காணவேண்டும்.*** **23**

*அளவுக்குமிஞ்சிய ஊக்கம் விரைவில் சோர்வை உண்டுபண்ணக்கூடியது. இனி வரப்போகும் மனத்தளர்ச் சிக்கு முன்னறிகுறியாக அர்ஜுனனுக்கு அளவில்லாப் போர்த்திறம் பிறக்கிறது. ஆகவே தன்னை எதிர்ப்பார் யார் என்று காண அவன் காமுறுகிறான்.*

**सञ्जय उवाच**

**एवमुक्तो हृषीकेशो गुडाकेशेन भारत ।**
**सेनयोरुभयोर्मध्ये स्थापयित्वा रथोत्तमम् ॥ २४**
**भीष्मद्रोणप्रमुखतः सर्वेषां च महीक्षिताम् ।**
**उवाच पार्थ पश्यैतान् समवेतान्कुरूनिति ॥ २५**

ஸஞ்ஜய உவாச

ஏவமுக்தோ ஹ்ருஷீகேசோ குடாகேசேன பாரத ।
ஸேனயோருபயோர்மத்யே ஸ்தாபயித்வா ரதோத்தமம் ॥ 24
பீஷ்மத்ரோணப்ரமுகத: ஸர்வேஷாம் ச மஹீக்ஷிதாம் ।
உவாச பார்த்த பச்யைதான் ஸமவேதான்குரூனிதி ॥ 25

सञ्जय उवाच ஸஞ்ஜய உவாச *ஸஞ்ஜயன் சொன்னது.*

भारत பாரத *பரத குலத்தில் வந்தவரே, திருதராஷ்டிரரே* गुडाकेशेन குடாகேசேன *குடாகேசனால்* एवं उक्तः ஏவம் உக்த: *இங்ஙனம் சொல்லப்பட்ட* हृषीकेशः ஹ்ருஷீகேச: *ஹ்ருஷீகேசர்* उभयोः सेनयोः உபயோ: ஸேனயோ: *இரண்டு சேனைகளினுடைய* मध्ये மத்யே *மத்தியில்* भीष्मद्रोणप्रमुखतः பீஷ்மத்ரோணப்ரமுகத: *பீஷ்மத்துரோணர்களுக்கு எதிரிலும்* सर्वेषां महीक्षितां च ஸர்வேஷாம் மஹீக்ஷிதாம் ச *எல்லா வேந்தர்க்கும் (எதிரிலும்)* रथोत्तमं ரதோத்தமம் *மாண்புடைய தேரை*

स्थापयित्वा ஸ்தாபயித்வா *நிறுத்தி* 'पार्थ பார்த்த *பார்த்தா* समवेतान् ஸமவேதான் *கூடியுள்ள* एतान् कुरून् ஏதான் குருன் *இந்தக் கௌரவர்களை* पश्य பச்ய *பார்*' इति இதி *என்று* उवाच உவாச *சொன்னார்.*

குடாகேசன் — गुडाक குடாக *தூக்கம்* ईशः ஈச: *இறைவன்*

ஸஞ்ஜயன் சொன்னது

***திருதராஷ்டிரரே, குடாகேசனால் இங்ஙனம் சொல்லப்பட்ட ஹ்ருஷீகேசர் இரண்டு சேனைகளினிடையில் பீஷ்மத்துரோணர்களுக்கெதிரிலும் எல்லா வேந்தர்களுக்கெதிரிலும் மாண்புடைய தேரை நிறுத்தி, "பார்த்தா, கூடியுள்ள இக்கௌரவர்களைப் பார்" என்று பகர்ந்தார். 24–25***

*அர்ஜுனனுக்கு குடாகேசன் அல்லது தூக்கத்தை வென்றவன் என்பது ஒரு பெயர். நினைத்தபடி, நினைத்த பொழுது தூங்கவோ அல்லது தூங்காதிருக்கவோ அவனுக்கு இயலும். மனதை நன்கு வென்றவனுக்கே இது இயலும். மனதை வென்றவன் எதற்கும் கலங்கான். அத்தகைய மனவுறுதியுடையவனையும் கலக்கும்படியான பெரியதோர் போராட்டம் வரப்போகிறது என்பது அவனுக்குக் காண்பிக்கப்படுகிறது.*

**तत्रापश्यत् स्थितान् पार्थः पितॄनथ पितामहान् ।**
**आचार्यान्मातुलान्भ्रातॄन् पुत्रान्पौत्रान्सखींस्तथा ॥ २६**
**श्वशुरान्सुहृदश्चैव सेनयोरुभयोरपि ।**

தத்ராபச்யத் ஸ்திதான் பார்த்த: பித்ரூனத பிதாமஹான் ।
ஆசார்யான்மாதுலான்ப்ராத்ரூன் புத்ரான்பௌத்ரான்ஸகீன் [ஸ்ததா ॥ 26
ச்வசுரான்ஸுஹ்ருதஸ்சைவ ஸேனயோருபயோரபி ।

अथ அத *பிறகு* पार्थः பார்த்த: *பார்த்தன்* तत्र தத்ர *அங்கே* उभयोः உபயோ: *இரண்டு* सेनयोः अपि ஸேனயோ: அபி *சேனைகளிலும்* स्थितान् ஸ்திதான் *இருக்கின்ற* पितॄन् பித்ரூன் *தகப்பன்மார்கள்* पितामहान् பிதாமஹான் *பாட்டன்மார்கள்* आचार्यान् ஆசார்யான் *ஆசாரியர்கள்*

मातुलान् மாதுலான் *அம்மான்மார்* भ्रातॄन् ப்ராத்ரூன் *சகோதரர்கள்* पुत्रान् புத்ரான் *புத்திரர்கள்* पौत्रान् பௌத்ரான் *பேரன்மார்கள்* तथा ததா *அப்படியே* सखीन् ஸகீன் *தோழர்கள்* श्वशुरान् ச்வசுரான் *மாமன்மார்* सुहृद: च एव சுஹ்ருத: ச ஏவ *அன்பர்களையும்* अपश्यत् அபச்யத் *பார்த்தான்.*

**அங்கே இரண்டு சேனைகளிலும் இருக்கும் தந்தையரையும், பாட்டன்மாரையும், ஆசாரியர்களையும், மாதுலரையும், அண்ணன் தம்பிகளையும், மக்களையும், பேரர்களையும், தோழர்களையும், மாமன்மார்களையும், அன்பர்களையும் அவன் பார்த்தான். 26**

**तान्समीक्ष्य स कौन्तेयः सर्वान्बन्धूनवस्थितान् ॥ २७**
**कृपया परयाऽऽविष्टो विषीदन्निदमब्रवीत् ।**

தான்ஸமீக்ஷ்ய ஸ கௌந்தேய: ஸர்வான்பந்தூனவஸ்திதான் ॥
க்ருபயா பரயாऽऽவிஷ்டோ விஷீதன்னிதமப்ரவீத் ।

कौन्तेयः கௌந்தேய: *குந்தியின் மகனாகிய* सः ஸ: *அவன்* अवस्थितान् அவஸ்திதான் *நிற்கின்ற* तान् सर्वान् बन्धून् தான் ஸர்வான் பந்தூன் *அந்த பந்துக்கள் எல்லாரையும்* समीक्ष्य ஸமீக்ஷ்ய *உற்றுப் பார்த்து* परया பரயா *ஆழ்ந்த* कृपया க்ருபயா *இரக்கத்தினால்* आविष्टः ஆவிஷ்ட: *நிரம்பப் பெற்றவனாய்* विषीदन् விஷீதன் *விசனத்துடன்* इदं இதம் *இதை* अब्रवीत् அப்ரவீத் *பகர்ந்தான்.*

**குந்தியின் மகனாகிய அர்ஜுனன் நிற்கின்ற பந்துக்கள் எல்லாரையும் உற்றுப்பார்த்து பேரிரக்கம் படைத்தவனாய் விசனத்துடன் இங்ஙனம் பகர்ந்தான். 27**

*குந்தியின் மகன் என்று இயம்புவதன்மூலம், தாயின் இயல்பை – பேதைமையை அர்ஜுனன் விரைவில் பெற்று விட்டான் என்பது குறிப்பிடப்படுகிறது. இதுகாறும் சத்துருபாவனையோடிருந்த அவனுக்கு இப்பொழுது ஒரு நெருக்கடியில் திடீரென்று மித்திரபாவனை வருகிறது. இதை விவேகத்தின் விளைவு எனலாகாது. விவேகமின்*

*மைக்கே இது எடுத்துக்காட்டாகும். நிலைதடுமாற்றம் நிகழ்ந்துவிட்டது. அஞ்ஞானம் இருள்போன்றது. மனிதனுடைய வீழ்ச்சிக்கு அதுவே காரணமாகிறது. வீழ்ச்சியின் முதற்படி இப்பொழுது ஆரம்பித்துவிட்டது.*

अर्जुन उवाच

**दृष्ट्वेमं स्वजनं कृष्ण युयुत्सुं समुपस्थितम् ॥ २८**
**सीदन्ति मम गात्राणि मुखं च परिशुष्यति ।**

அர்ஜுன உவாச

த்ருஷ்ட்வேமம் ஸ்வஜனம் க்ருஷ்ண யுயுத்ஸும் ஸமுபஸ்திதம் ||
ஸீதந்தி மம காத்ராணி முகம் ச பரிசுஷ்யதி |

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது*

कृष्ण க்ருஷ்ண *கிருஷ்ண* युयुत्सुं யுயுத்ஸும் *யுத்தம் செய்தற்பொருட்டு* समुपस्थितं ஸமுபஸ்திதம் *கூடியுள்ள* इमं இமம் *இந்த* स्वजनं ஸ்வஜனம் *உற்றாரை* दृष्ट्वा த்ருஷ்ட்வா *பார்த்து* मम மம *என்னுடைய* गात्राणि காத்ராணி *அவயவங்கள்* सीदन्ति ஸீதந்தி *சோர்வடைகின்றன* मुखं च முகம் ச *வாயும்* परिशुष्यति பரிசுஷ்யதி *வறண்டு போகிறது.*

அர்ஜுனன் சொன்னது

***கிருஷ்ண, போர்புரிதற்குக் கூடியுள்ள உற்றாரைப்பார்த்து என் உறுப்புகள் சோர்வடைகின்றன. வாயும் வறள்கிறது.*** **28**

*கிருஷ்ண:– (1) கருநீல வர்ணமுடையவன்.*

*(2) கிருஷ் = சத்; ண (ந) = ஆனந்தம். சச்சிதானந்த சொரூபம், பிரம்ம சொரூபம்.*

*(3) அடியார் படும் துயரம் துடைப்பவன்.*

*இங்ஙனம் இப்பதத்துக்கு மூன்று அர்த்தங்கள் இருக்கின்றன.*

**वेपथुश्च शरीरे मे रोमहर्षश्च जायते ॥ २९**
**गाण्डीवं स्रंसते हस्तात्त्वक्चैव परिदह्यते ।**

வேபதுஸ்ச சரீரே மே ரோமஹர்ஷஸ்ச ஜாயதே ॥ 29
காண்டீவம் ஸ்ரம்ஸதே ஹஸ்தாத்த்வக்சைவ பரிதஹ்யதே ।

मे மே *என்* शरीरे சரீரே *சரீரத்தில்* वेपथुः च வேபது: ச *நடுக்கமும்* रोमहर्षः च ரோமஹர்ஷ: ச *மயிர்க்கூச்சலும்* जायते ஜாயதே *உண்டாகின்றன* हस्तात् ஹஸ்தாத் *கையினின்று* गाण्डीवं காண்டீவம் *காண்டீவமென்கிற என்னுடைய வில்* स्रंसते ஸ்ரம்ஸதே *நழுவுகிறது* त्वक् च एव த்வக் ச ஏவ *சர்மம் அல்லது மேல் தோலும்* परिदह्यते பரி

***என் உடலில் நடுக்கமும் மயிர்ச்சிலிர்ப்பும் உண்டாகின்றன. கையினின்று காண்டீவம் நழுவுகிறது. மேலெல்லாம் தோலும் எரிகிறது. 29***

न च शक्नोम्यवस्थातुं भ्रमतीव च मे मनः ॥ ३०
निमित्तानि च पश्यामि विपरीतानि केशव ।

ந ச சக்னோம்யவஸ்தாதும் ப்ரமதீவ ச மே மன: ॥ 30
நிமித்தானி ச பச்யாமி விபரீதானி கேசவ ।

केशव கேசவ *கேசவரே* अवस्थातुं அவஸ்தாதும் *நிற்பதற்கு* न च शक्नोमि ந ச சக்னோமி *சக்தியற்றவனாயிருக்கிறேன்* मे மே *என்னுடைய* मनः மன: *மனது* च ச *உம்* भ्रमति इव ப்ரமதி இவ *சுழற்பமடைவது போலிருக்கிறது* विपरीतानि விபரீதானி *விபரீதமான* निमित्तानि च நிமித்தானி ச *சகுனங்களையும்* पश्यामि பச்யாமி *காண்கிறேன்.*

***கேசவா, என்னால் நிற்க இயலவில்லை. மனது சுழல்கிறது. கேடுடைய சகுனங்களையும் காண்கிறேன். 30***

*கேசவ–(1) கேசின் என்ற அசுரனைக் கொன்றவன்.*
*(2) அழகான ரோமத்தையுடையவன்.*
*(3) க- பிரம்மா, அ – விஷ்ணு, ஈச – ருத்திரன் வசமாய் வைத்திருப்பவன்.*

*நிமித்தம், சகுனம், குறிமுதலியவைகள் ஒருபொருட் சொற்கள். சகுனத்தில் ஓரளவு உண்மையுண்டு. காலதேச*

;ம ஆகிய மூன்றுக்கும் நெருங்கிய தொடர்வுண்டு. நாடிய கருமம் ஒன்று குறித்தவேளையில் அல்லது இடத்தில் நிறைவேறும் அல்லது நிறைவேறாது என்பதற்கு இயற்கையில் இதர உயிர்களின் செயல்கள் சில முன்னறி குறிகளாக வந்தமைகின்றன. ஓரிடத்தில் ஒரு வேளையில் ஒரு மனிதனைக் காண மற்றொருவன் புறப்படுகிறான் என்று வைத்துக்கொள்வோம். அது இயலும் அல்லது இயலாது என்பதற்குத் தற்செயலாய்ச் சகுனம் வந்தமைவதுண்டு. முக்கியமல்லாத செயல்களை இன்று செய்யலாம் அல்லது நாளைக்குச் செய்யலாம் என்று சகுனம் பார்த்து விட்டு வைக்கலாம். ஆனால் மாணாக்கன் ஒருவன் பரீக்ஷைக்குப் போம்பொழுது, நாடு ஒன்று தர்மயுத்தத்தில் பிரவேசிக்கும் பொழுது சகுனம் பார்ப்பது பொருள்படாச் செயலாகும். அப்போதைக்கப்போது செய்துமுடிக்கவேண்டிய வினையில் தீவிரமாகக் கருத்தைச் செலுத்தவேண்டும். தம் கடமையை முறையாகச் செய்பவர் குறிபார்ப்பதில் கருத்துவைக்கலாகாது.

அர்ஜுனனுக்கு அபசகுனங்கள் தென்பட்டதற்கு அவனுடைய மனக்கலக்கமே காரணமாகும். வீரன் ஒருவனுக்கு மனக்கலக்கம் பொருந்தாது.

**न च श्रेयोऽनुपश्यामि हत्वा स्वजनमाहवे ॥ ३१**
**न काङ्क्षे विजयं कृष्ण न च राज्यं सुखानि च ।**

ந ச ச்ரேயோऽனுபச்யாமி ஹத்வா ஸ்வஜனமாஹவே ॥ 31
ந காங்க்ஷே விஜயம் க்ருஷ்ண ந ச ராஜ்யம் ஸுகானி ச ।

कृष्ण க்ருஷ்ண *கிருஷ்ணா* आहवे ஆஹவே *யுத்தத்தில்* स्वजनम् ஸ்வஜனம் *சுற்றத்தாரை* हत्वा ஹத்வா *கொல்லுதலில்* श्रेयः च ச்ரேய: ச *நன்மையையும்* न அனுपश्यामि ந அனுபச்யாமி *காண்கிறேனில்லை* न विजयं ந விஜயம் *வெற்றியல்ல* न राज्यं च ந ராஜ்யம் ச *ராஜ்யமுமல்ல* (न) सुखानि च (ந) ஸுகானி ச *சுகமுமல்ல* काङ्क्षे காங்க்ஷே *நான் விரும்புவது.*

), போரிலே சுற்றத்தாரைக் கொல்லுதலில் நன்மையை நான் காண்கிறேனில்லை. வெற்றியையும், ராஜ்யத்தையும், இன்பங்களையும் நான் வேண்டுகிலேன். 31

*இந்த விரக்தி விவேகத்தினின்று வந்ததன்று, மயக்கத்தின் விளைவானது; பற்றற்றவனது பாங்கு போன்று வடி*

**किं नो राज्येन गोविन्द किं भोगैर्जीवितेन वा ॥ ३२**
**येषामर्थे काङ्क्षितं नो राज्यं भोगाः सुखानि च ।**
**त इमेऽवस्थिता युद्धे प्राणांस्त्यक्त्वा धनानि च ३३**
**आचार्याः पितरः पुत्रास्तथैव च पितामहाः ।**
**मातुलाः श्वशुराः पौत्राः स्यालाः संबन्धिनस्तथा ॥ ३४**

கிம் நோ ராஜ்யேன கோவிந்த கிம் போகைர்ஜீவிதேன வா ॥ 32
யேஷாமர்த்தே காங்க்ஷிதம் நோ ராஜ்யம் போகா: ஸுகானி ச ।
த இமேऽவஸ்திதா யுத்தே ப்ராணாம்ஸ்த்யக்த்வா தனானி ச ॥ 33
ஆசார்யா: பிதர: புத்ராஸ்ததைவ ச பிதாமஹா: ।
மாதுலா: ச்வசுரா: பௌத்ரா: ஸ்யாலா: ஸம்பந்தினஸ்ததா ॥ 34

गोविन्द கோவிந்த *கோவிந்த* येषां अर्थे யேஷாம் அர்த்தே *யார் பொருட்டு* नः ந: *நம்மால்* राज्यं ராஜ்யம் *ராஜ்யமும்* भोगाः போகா: *போகங்களும்* सुखानि च ஸுகானி ச *சுகங்களும்* काङ्क्षितं காங்க்ஷிதம் *விரும்பப்பட்டவைகளோ* (*அவர்களாகிய*) आचार्याः ஆசார்யா: *ஆசாரியர்கள்* पितरः பிதர: *தந்தையர்* पुत्राः புத்ரா: *மக்கள்* तथा एव च ததா ஏவ ச *அப்படியே* पितामहाः பிதாமஹா: *பாட்டன்மார்கள்* मातुलाः மாதுலா: *அம்மான்மார்கள்* श्वशुराः ச்வசுரா: *மாமனார்கள்* पौत्राः பௌத்ரா: *பேரர்கள்* स्यालाः ஸ்யாலா: *மைத்துனர்* तथा ததா *அப்படியே* संबन्धिनः ஸம்பந்தின: *சம்பந்திகள்* ते தே *அவர்கள்* इमे இமே *இவர்கள் எல்லாரும்* प्राणान् ப்ராணன் *பிராணன்களை* धनानि च தனானி ச *தனங்களையும்* त्यक्त्वा த்யக்த்வா *துறந்துவிட்டு* युद्धे யுத்தே *யுத்தத்தில்* अवस्थिताः அவஸ்திதா: *நிற்கிறார்கள்* नः ந: *நமக்கு* राज्येन ராஜ்யேன *ராஜ்யத்தால்* किं கிம் *ஆவதென்ன* भोगैः वा

போகை: வா *போகங்களாலாவது* जीवितेन ஜீவிதேன *ஜீவிப்பதாலாவது* किं கிம் *ஆவதென்ன.*

***கோவிந்தா, யாவர் பொருட்டு நாம் ராஜ்யத்தையும், போகங்களையும், இன்பங்களையும் விரும்புகிறோமோ அவர்களாகிய ஆசாரியர்கள், தந்தையர், மக்கள், பாட்டன்மார், மாதுலர், மாமனர், பேரர், மைத்துனர், சம்பந்திகள் முதலாயினோர் உயிரையும் செல்வங்களையும் துறந்தவராய் இங்கு வந்துநிற்கின்றனர். நமக்கு ராஜ்யத்தால், போகத்தால், அல்லது ஜீவித்திருப்பதால்தான் ஆவதென்ன ! 32–34***

*கோவிந்தன் (கோ – உயிர், விந்தன் – அறிபவன்) உயிர்களின் உள்ளத்தில் இருப்பதை நன்கு அவன் அறிகிறபடியால் இதற்கு ஒரு முடிவு அவன்தான் சொல்லியாக வேண்டும்.*

एतान्न हन्तुमिच्छामि घ्नतोऽपि मधुसूदन ।
अपि त्रैलोक्यराज्यस्य हेतोः किं नु महीकृते ॥ ३५

ஏதான்ன ஹந்துமிச்சாமி க்னதோऽபி மதுஸூதன ।
அபி த்ரைலோக்யராஜ்யஸ்ய ஹேதோ: கிம் நு மஹீக்ருதே ॥ 35

मधुसूदन மதுஸூதன *மதுஸூதன* घ्नत: अपि க்னத: அபி *நான் கொல்லப்படினும்* त्रैलोक्यराज्यस्य हेतो: अपि த்ரைலோக்யராஜ்யஸ்ய ஹேதோ: அபி *மூன்று லோகங்களின் ராஜ்யத்தின் பொருட்டு ஆயினும்* एतान् ஏதான் *இவர்களை* हन्तुं ஹந்தும் *கொல்ல* न इच्छामि ந இச்சாமி *விரும்புகிறேனல்லேன்* महीकृते மஹீக்ருதே *பூமியின் பொருட்டு* किं नु கிம் நு *என்ன?*

***மதுஸூதனா, நான் கொல்லப்படினும், மூவுலகை ஆளுதற்கென்றும் இவர்களைக் கொல்லேன். பூமியின்பொருட்டுக் கொல்வேனோ? 35***

*மது என்ற அசுரனைக் கொன்றதனால் அவருக்கு மதுசூதனன் என்ற பெயர் வந்தது.*

निहत्य धार्तराष्ट्रान्नः का प्रीतिः स्याज्जनार्दन ।
पापमेवाश्रयेदस्मान्हत्वैतानाततायिनः ॥ ३६

நிஹத்ய தார்தராஷ்ட்ரான்ந꞉ கா ப்ரீதி꞉ ஸ்யாஜ்ஜனார்தன ।
பாபமேவாச்ரயேதஸ்மான்ஹத்வைதானாததாயின꞉ ॥ 36

जनार्दन ஜநார்தன *ஜநார்தனரே* धार्तराष्ट्रान् தார்தராஷ்ட்ரான் *திருதராஷ்டிரப் புதல்வர்களை* निहत्य நிஹத்ய *கொன்று* नः ந꞉ *நமக்கு* का கா *என்ன* प्रीतिः ப்ரீதி꞉ *இன்பம்* स्यात् ஸ்யாத் *இருக்கப் போகிறது.* एतान् ஏதான் *இந்த* आततायिनः ஆததாயின꞉ *ஆததாயிகளை* हत्वा ஹத்வா *கொல்லுவதால்* अस्मान् அஸ்மான் *நம்மை* पापं एव பாபம் ஏவ *பாபமே* आश्रयेत् ஆச்ரயேத் *வந்தடையும்.*

***ஜநார்தனா, திருதராஷ்டிரப் புதல்வர்களைக் கொன்று நமக்கு என்ன இன்பம் வரப்போகிறது? இந்த ஆததாயிகளைக் கொல்வதால் பாபமே நம்மை வந்தடையும். 36***

*ஜநார்தனன் – பொருள், வ் இரண்டின் பொருட்டு ஜனங்களால் வழுத்தப்படுபவன். இது கிருஷ்ணனுடைய மற்றொரு பெயர்.*

*ஆததாயினர் என்னும் சொல் பெரும் பாபிகள் எனப் பொருள்படும். ஒருவன் குடியிருக்கும் வீட்டில் தீ வைப்பது, உணவில் விஷத்தை வைத்து வழங்கல், உருவிய வாளோடு ஒருவனைக் கொல்லப் பாய்தல், ஒருவனுடைய செல்வத்தை, நிலத்தை, அல்லது மனைவியைத் திருடவும் அபகரிக்கவும் முயலுதல் ஆகிய இவை யாவும் மகா பாபங்களாகின்றன. திருதராஷ்டிரனுடைய மக்கள் இத்தனைவிதக் குற்றங்களையும் செய்தவர்கள் ஆவர். ஆததாயி ஒருவன் பண்டிதனாயிருப்பினும் அவனைக் கொல்லுதல் முறை. ஆனால் இளகிய நெஞ்சத்தால் அர்ஜுனன் அங்ஙனம்செய்ய இசையவில்லை.*

तस्मान्नार्हा वयं हन्तुं धार्तराष्ट्रान्स्वबान्धवान् ।
स्वजनं हि कथं हत्वा सुखिनः स्याम माधव ॥ ३७

தஸ்மாந்நார்ஹா வயம் ஹந்தும் தார்தராஷ்ட்ரான்ஸ்வபாந்த-
[வான் ।
ஸ்வஜனம் ஹி கதம் ஹத்வா ஸுகின: ஸ்யாம மாதவ ॥ 37

तस्मात् தஸ்மாத் *ஆகையினால்* स्वबान्धवान् ஸ்வபாந்தவான் *நம் சுற்றத்தாராகிய* धार्तराष्ट्रान् தார்தராஷ்ட்ரான் *திருதராஷ்டிர புத்திரர்களை* वयं வயம் *நாம்* हन्तुं ஹந்தும் *கொல்ல* न अर्हाः ந அர்ஹா: *தகுந்தவரல்ல* माधव மாதவ *மாதவ* स्वजनं ஸ்வஜனம் *சுற்றத்தாரை* हत्वा ஹத்வா *கொன்று* कथं हि கதம் ஹி *எப்படி* सुखिनः ஸுகின: *சுகத்தையுடையவர்கள்* स्याम ஸ்யாம *ஆவோம்.*

***ஆதலால் நம் சுற்றத்தாராகிய திருதராஷ்டிர புத்திரர்களைக் கொல்லுதல் நமக்குத்தகாது. மாதவா, உற்றுரைக்கொன்று நாம் இன்புற்றிருப்பது எங்ஙனம்?*** ***37***

यद्यप्येते न पश्यन्ति लोभोपहतचेतसः ।
कुलक्षयकृतं दोषं मित्रद्रोहे च पातकम् ॥ ३८
कथं न ज्ञेयमस्माभिः पापादस्मान्निवर्तितुम् ।
कुलक्षयकृतं दोषं प्रपश्यद्भिर्जनार्दन ॥ ३९

யத்யப்யேதே ந பச்யந்தி லோபோபஹதசேதஸ: ।
குலக்ஷயக்ருதம் தோஷம் மித்ரத்ரோஹே ச பாதகம் ॥ 38
கதம் ந ஜ்ஞேயமஸ்மாபி: பாபாதஸ்மாந்நிவர்திதும் ।
குலக்ஷயக்ருதம் தோஷம் ப்ரபச்யத்பிர்ஜனார்தன ॥ 39

लोभोपहतचेतसः லோபோபஹதசேதஸ: *பேராசையால் கவரப்பட்ட மனதையுடைய* एते ஏதே *இவர்கள்* कुल क्षय कृतं दोषं குல க்ஷய க்ருதம் தோஷம் *குல நாசத்தால் உண்டாகும் தோஷத்தையும்* मित्रद्रोहे पातकम् च மித்ரத்ரோஹே பாதகம் ச *மித்ர துரோகத்தால் உண்டாகும் பாதகத்தையும்* यद्यपि न पश्यन्ति யத்யபி ந பச்யந்தி *அறிந்து கொள்ளாவிடினும்* जनार्दन ஜநார்தன *ஜநார்தனை* कुल क्षय कृतं दोषम्

குல க்ஷய க்ருதம் தோஷம் *குல நாசத்தால் உண்டாகும் தோஷத்தை* प्रपश्यद्भिः ப்ரபச்யத்பி: *தெளிவுபட அறிகிற* अस्माभिः அஸ்மாபி: *நம்மால்* अस्मात् पापात् அஸ்மாத் பாபாத் *இப்பாபத்தினின்று* निवर्तितुं நிவர்த்திதும் *பின்வாங்கிக்கொள்ள* कथं கதம் *ஏன்* न ज्ञेयं ந ஜ்ஞேயம் *தெரிந்து கொள்ளலாகாது.*

***ஆசை மிகுதியால் அறிவிழந்த இவர்கள் குல நாசத்தால் விளையும் கேட்டையும் மித்திர துரோகத்தால் விளையும் பாதகத்தையும் காண்கிலராயினும் குல நாசத்தால் உண்டாகும் கேட்டை நன்கு உணர்ந்த நாம் ஏன், ஜநார்தனு, இப் பாபத்தினின்று பின்வாங்கத் தெரிந்துகொள்ளலாகாது? 38-39***

*நாளைக்கு அர்ஜுனனே இக்குலநாசத்தைச் செய்யப் போகிறான் என்பது இப்போது அவனுக்குத் தெரியாது. ஆசை மிகுதியால் கௌரவர்கள் உற்றுரை ஒழிக்க முன்வந் திருக்கிறார்கள். உறவினர் வாஞ்சையால் அர்ஜுனன் மனந் தளர்ந்து பின்வாங்கப் பார்க்கிறான். பொருளாசையும் மக்கள் வாஞ்சையுந்தானு வாழ்வின் கோட்பாடு?*

**कुलक्षये प्रणश्यन्ति कुलधर्माः सनातनाः ।**
**धर्मे नष्टे कुलं कृत्स्नमधर्मोऽभिभवत्युत ॥ ४०**

குலக்ஷயே ப்ரணச்யந்தி குலதர்மா: ஸநாதனு: ।
தர்மே நஷ்டே குலம் க்ருத்ஸ்னமதர்மோ஽பிபவத்யுத ॥ 40

कुलक्षये குலக்ஷயே *குலம் அழிந்தால்* सनातनाः ஸநாதனு: *என்று மிருப்பனவாகிய* कुल धर्माः குல தர்மா: *குல தர்மங்கள்* प्रणश्यन्ति ப்ரணச்யந்தி *அழிகின்றன.* धर्मे नष्टे தர்மே நஷ்டே *தர்மம் நசித்தால்* कृत्स्नं க்ருத்ஸ்னம் *முழு* कुलं उत குலம் உத *குலத்தையும்* अधर्मः அதர்ம: *அதர்மம்* अभिभवति அபிபவதி *சூழ்கிறது.*

***குலம் அழிந்தால் என்றுமுள்ள குலதர்மங்கள் அழிகின்றன. தர்ம நாசத்தால் குலம் முழுவதையும் அதர்மம் சூழ்கிறது. 40***

अधर्माभिभवात्कृष्ण प्रदुष्यन्ति कुलस्त्रियः ।
स्त्रीषु दुष्टासु वार्ष्णेय जायते वर्णसङ्करः ॥ ४१

அதர்மாபிபவாத்க்ருஷ்ண ப்ரதுஷ்யந்தி குலஸ்த்ரிய: ।
ஸ்த்ரீஷு துஷ்டாஸு வார்ஷ்ணேய ஜாயதே வர்ணஸங்கர: ॥

कृष्ण க்ருஷ்ண *கிருஷ்ணா* अधर्म अभिभवात् அதர்ம அபிபவாத் *அதர்மம் மிகுதலால்* कुलस्त्रियः குலஸ்த்ரிய: *குலஸ்திரீகள்* प्रदुष्यन्ति ப்ரதுஷ்யந்தி *கற்பிழப்பார்கள்* वार्ष्णेय வார்ஷ்ணேய *விருஷ்ணி குலத்துதித்தவரே (கிருஷ்ணா)* स्त्रीषु दुष्टासु ஸ்த்ரீஷு துஷ்டாஸு *ஸ்திரீகள் கற்பிழக்குமிடத்து* वर्णसङ्करः வர்ணஸங்கர: *வர்ணக் கலப்பு* जायते ஜாயதே *உண்டாகிறது.*

***அதர்மம் மிகுதலால் குலப்பெண்கள் கற்பிழக்கின்றனர். கிருஷ்ணா, மாதர் கற்பிழக்குமிடத்து வர்ணக் கலப்பு உண்டாகிறது.*** **41**

सङ्करो नरकायैव कुलघ्नानां कुलस्य च ।
पतन्ति पितरो ह्येषां लुप्तपिण्डोदकक्रियाः ॥ ४२

ஸங்கரோ நரகாயைவ குலக்நானாம் குலஸ்ய ச ।
பதந்தி பிதரோ ஹ்யேஷாம் லுப்தபிண்டோதகக்ரியா: ॥ 42

सङ्करः ஸங்கர: *கலப்பினால்* कुलघ्नानां குலக்நானாம் *குலநாசம் செய்தவர்களுக்கும்* कुलस्य च குலஸ்ய ச *குலத்திற்கும்* नरकाय एव हि நரகாய ஏவ ஹி *நரகமே ஏற்படுகிறது* एषां ஏஷாம் *அவர்களுடைய* पितरः பிதர: *பித்ருக்கள்* लुप्त - पिण्ड - उदक - क्रियाः லுப்த - பிண்ட - உதக - க்ரியா: *பிண்டம், நீர்க்கிரியைகளை இழந்தவர்களாய்* पतन्ति பதந்தி *வீழ்கிறார்கள்.*

***கலப்பினால் குலத்தார்க்கும் அதனை அழித்தார்க்கும் நரகமே ஏற்படுகிறது. அவர்களுடைய பித்ருக்கள் பிண்டத்தையும் நீரையும் இழந்து வீழ்கிறார்கள்.*** **42**

*மரணமடைந்தவர் கொஞ்சகாலம் பித்ருலோகத்தில் வசிக்கின்றனர். அவர்களையும் பித்ருலோகத்தில் அவர்களைச்*

*சூழ்ந்திருப்பவர்களையும் குறித்து எண்ணும் நல்லெண்ணம் அவர்களுக்குச் சகாயம் செய்கிறது. இச்செயல் சிராத்தம் என்று சொல்லப்படுகிறது. முன்னோர்களைக் குறித்து எழும் நல்லெண்ணம் உறுதிப்படுதற்பொருட்டுப் பிண்டம், ஜலம் முதலிய பண்டங்கள் கையாளப்படுகின்றன. மற்றும் பல மனிதர்களுடைய நல்லெண்ணங்களை அவ்வேளையில் துணைக் கொள்ளுதற்பொருட்டு வறியோர்க்கும் மற்றவர்க்கும் சிராத்த காலங்களில் உணவளிக்கப்படுகிறது.*

**दोषैरेतैः कुलघ्नानां वर्णसङ्करकारकैः ।**
**उत्साद्यन्ते जातिधर्माः कुलधर्माश्च शाश्वताः ॥ ४३**

தோஷைரேதை: குலக்நாநாம் வர்ணஸங்கரகாரகை: ।
உத்ஸாத்யந்தே ஜாதிதர்மா: குலதர்மாஸ்ச சாச்வதா: ॥ 43

कुलघ्नानां குலக்நாநும் *குல நாசகர்களுடைய* वर्णसङ्करकारकैः வர்ணஸங்கரகாரகை: *வர்ணக் கலப்பையுண்டுபண்ணுகின்றவைகளான* एतैः दोषैः ஏதை: தோஷை: *இத்தோஷங்களால்* शाश्वताः சாச்வதா: *சாசுவதமாயுள்ள* जातिधर्माः ஜாதிதர்மா: *ஜாதி தர்மங்களும்* कुल धर्माः च குல தர்மா: ச *குல தர்மங்களும்* उत्साद्यन्ते உத்ஸாத்யந்தே *அழிக்கப்படுகின்றன.*

***குலநாசகர்கள் செய்யும் வர்ணக் கலப்பை விளைவிக்கும் இக்கேடுகளால் நிலைத்துள்ள ஜாதி தர்மங்களும் குல தர்மங்களும் நிலை குலைக்கப்படும். 43***

**उत्सन्नकुलधर्माणां मनुष्याणां जनार्दन ।**
**नरके नियतं वासो भवतीत्यनुशुश्रुम ॥ ४४**

உத்ஸன்னகுலதர்மாணும் மனுஷ்யாணும் ஜனார்தன ।
நரகே நியதம் வாஸோ பவதீத்யனுசுச்ரும ॥ 44

जनार्दन ஜனார்தன *ஜனார்தனா,* उत्सन्न कुल धर्माणां मनुष्याणां உத்ஸன்ன குல தர்மாணும் மனுஷ்யாணும் *குல தர்மத்தையிழந்த மனிதர்களுக்கு* नरके நரகே *நரகத்தில்* नियतं நியதம் *நெடிது* वासः வாஸ: *வசித்தல்* भवति பவதி *ஏற்படுகிறது* इति இதி *என்று* अनुशुश्रुम அனுசுச்ரும *கேட்டிருக்கிறோம்.*

*ஜநார்தனு, குலதர்மத்தை இழந்தவர் நரகத்தில் நெடிது வசிக்கின்றனர் என்று கேட்டிருக்கிறோம்.* **44**

अहो बत महत्पापं कर्तुं व्यवसिता वयम् ।
यद्राज्यसुखलोभेन हन्तुं स्वजनमुद्यताः ॥ ४५

அஹோ பத மஹத்பாபம் கர்த்தும் வ்யவஸிதா வயம் ।
யத்ராஜ்யஸுகலோபேன ஹந்தும் ஸ்வஜனமுத்யதா: ॥ 45

वयं வயம் *நாம்* राज्यसुखलोभेन ராஜ்யசுகலோபேன *ராஜ்யசுக ஆசையினுல்* स्वजनं ஸ்வஜனம் *சுற்றத்தாரை* हन्तुं ஹந்தும் *கொல்ல* उद्यता यत् உத்யதா யத் *துணிந்தோமென்கிற* महत् पापं மஹத் பாபம் *இந்தப் பெரிய பாபத்தை* कर्तुम् கர்த்தும் *செய்ய* व्यवसिताः வ்யவஸிதா: *முன் வந்தோம்* अहो बत அஹோ பத *அந்தோ !*

*அரச சுக ஆசையினுல் சுற்றத்தாரைக் கொல்லத் துணிதல் என்ற பெரும் பாபத்தைச் செய்யத் தலைப்பட்டோம், அந்தோ !* **45**

यदि मामप्रतीकारमशस्त्रं शस्त्रपाणयः ।
धार्तराष्ट्रा रणे हन्युस्तन्मे क्षेमतरं भवेत् ॥ ४६

யதி மாமப்ரதீகாரமசஸ்த்ரம் சஸ்த்ரபாணய: ।
தார்தராஷ்ட்ரா ரணே ஹன்யுஸ்தன்மே க்ஷேமதரம் பவேத் ॥

अप्रतीकारं அப்ரதிகாரம் *எதிர்க்காமலும்* अशस्त्रं அசஸ்த்ரம் *ஆயுதமில்லாமலும்* मां மாம் *என்னை* शस्त्रपाणयः சஸ்த்ரபாணய *கையில் ஆயுதம் பிடித்துள்ள* धार्तराष्ट्राः தார்தராஷ்ட்ரா: *திருதராஷ்டிர புதல்வர்கள்* रणे ரணே *யுத்தத்தில்* हन्युः यदि ஹன்யு: யதி *கொல்லுவார்களானல்* तत् தத் *அது* मे மே *எனக்கு* क्षेमतरम् க்ஷேமதரம் *க்ஷேமமுள்ளதாக* भवेत् பவேத் *ஆகும்.*

*எதிர்க்காமலும் ஆயுதமில்லாமலும் இருக்கிற என்னைக் கையில் ஆயுதம் பிடித்துத் திருதராஷ்டிர மக்கள் யுத்தத்தில் கொல்லுவார்களானல் அதுவே எனக்குப் பெரு நன்மையாகும்.* **46**

*இக் கூற்றானது அளவுக்கு மிஞ்சிய மனக் குழப்பத்தின் அறிகுறியாகும்.*

**सञ्जय उवाच**

**एवमुक्त्वाऽर्जुनः सङ्ख्ये रथोपस्थ उपाविशत् ।**
**विसृज्य सशरं चापं शोकसंविग्नमानसः ॥ ४७**

ஸஞ்ஜய உவாச
ஏவமுக்த்வாऽர்ஜுன: ஸங்க்யே ரதோபஸ்த உபாவிசத் |
விஸ்ருஜ்ய ஸசரம் சாபம் சோகஸம்விக்னமானஸ: || 47

सञ्जय उवाच ஸஞ்ஜய உவாச *ஸஞ்ஜயன் சொன்னது.*

अर्जुनः அர்ஜுன: *அர்ஜுனன்* एवं ஏவம் *இவ்விதம்* उक्त्वा உக்த்வா *சொல்லி* सङ्ख्ये ஸங்க்யே *யுத்தத்தில்* सशरं ஸசரம் *அம்போடு கூடிய* चापं சாபம் *வில்லை [காண்டீவத்தை]* विसृज्य விஸ்ருஜ்ய *எறிந்து விட்டு* शोकसंविग्न मानसः சோகஸம்விக்ன மானஸ: *துக்கத்தில் தவிக்கிற மனதுடையவனாய்* रथोपस्थे ரதோபஸ்தே *தேர்த்தட்டில்* उपाविशत् உபாவிசத் *உட்கார்ந்தான்.*

ஸஞ்ஜயன் சொன்னது

***இங்ஙனம் இயம்பி, அம்பையும் வில்லையும் அரங்கத்தில் எறிந்து விட்டுத் துயரம் துய்க்கும் மனத்தினனாய் அர்ஜுனன் தேர்த்தட்டில் உட்கார்ந்தான்.*** ***47***

**इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे**
**श्रीकृष्णार्जुनसंवादेऽर्जुनविषादयोगो नाम**
**प्रथमोऽध्यायः ॥**

இதி ஸ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே
அர்ஜுனவிஷாதயோகோ நாம
ப்ரதமோऽத்யாய: ||

***பிரம்ம வித்தையைப் புகட்டுவதும், யோக சாஸ்திரமானதும், ஸ்ரீகிருஷ்ணார்ஜுன சம்வாதமாக வந்துள்ளதுமாகிய பகவத்கீதை என்னும் உபநிஷதத்தின்கண் அர்ஜுன விஷாத யோகம் என்ற முதல் அத்தியாயம்.***

# द्वितीयोऽध्यायः

# இரண்டாம் அத்தியாயம்

## सांख्ययोगः

## ஸாங்கிய யோகம்

सञ्जय उवाच

तं तथा कृपयाऽऽविष्टमश्रुपूर्णाकुलेक्षणम् ।
विषीदन्तमिदं वाक्यमुवाच मधुसूदनः ॥ १

ஸஞ்ஜய உவாச

தம் ததா க்ருபயாऽऽவிஷ்டமச்ருபூர்ணுகுலேக்ஷணம் ।
விஷீதந்தமிதம் வாக்யமுவாச மதுஸூதன: ॥ 1

सञ्जय उवाच ஸஞ்ஜய உவாச *ஸஞ்ஜயன் சொன்னது.*

तथा ததா *அங்ஙனம்* कृपया आविष्टम् க்ருபயா ஆவிஷ்டம் *இரக்கம் ததும்பியவனும்* अश्रुपूर्ण आकुल ईक्षणं அச்ருபூர்ண ஆகுல ஈக்ஷணம் *நீர் நிறைந்து பார்வை குறைந்த கண்களுடையவனும்* विषीदन्तं விஷீதந்தம் *துக்கப்பட்டுக் கொண்டிருக்கிறவனும்* तं தம் *அவனுக்கு (அர்ஜுனனுக்கு)* मधुसूदनः மதுஸூதன: *மதுசூதனர்* इदं वाक्यं இதம் வாக்யம் *இந்த வாக்கியத்தை* उवाच உவாச *சொன்னார்.*

ஸஞ்ஜயன் சொன்னது

***அங்ஙனம் இரக்கம் ததும்பி, கண்களில் நீர் நிறைந்து, பார்வை குறைந்து, துக்கப்பட்ட அர்ஜுனனுக்கு, மதுசூதனர் இவ்வாக்கியத்தைச் சொன்னார்.*** **1**

*தன் மனதை முற்றிலும் தன் வசமாய் வைத்திருக்கும் ஒருவன் பிறர்படும் துக்கத்தைப்* போக்க *முயலுவது*

கிருபையாகும். இங்கு அர்ஜுனனிடத்துக் கிருபைபோன்று தென்படுவது உண்மையில் கிருபையல்ல. உணர்ச்சியானது அவனது உடைமையாயிருப்பது போய், அவன் உணர்ச்சிக்கும் மனத்தளர்ச்சிக்கும் அடிமையாய் விட்டான்.

श्रीभगवानुवाच

कुतस्त्वा कश्मलमिदं विषमे समुपस्थितम् ।
अनार्यजुष्टमस्वर्ग्यमकीर्तिकरमर्जुन ॥ २

ஸ்ரீ பகவானுவாச

குதஸ்த்வா கச்மலமிதம் விஷமே ஸமுபஸ்திதம் ।
அனார்யஜுஷ்டமஸ்வர்க்யமகீர்த்திகரமர்ஜுன ॥ 2

श्री भगवान् उवाच ஸ்ரீபகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

अर्जुन அர்ஜுன *அர்ஜுனா* विषमे விஷமே *நெருக்கடியில்* कुतः குத: *எங்கிருந்து* इदं இதம் *இந்த* अनार्यजुष्टम् அனார்யஜுஷ்டம் *ஆரியனுக்கு அடாதது* अस्वर्ग्यं அஸ்வர்க்யம் *சுவர்க்கத்துக்குத் தடையாவது* अकीर्तिकरं அகீர்த்திகரம் *புகழைப் போக்குவது* कश्मलं கச்மலம் *மோஹம்* त्वा த்வா *உன்னிடத்து* समुपस्थितं ஸமுபஸ்திதம் *அடைந்தது.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***அர்ஜுனா, ஆரியனுக்கு அடாததும், சுவர்க்கத்தைத் தடுப்பதும், புகழைப் போக்குவதுமான இவ்வுள்ளச் சோர்வு இந்நெருக்கடியில் எங்கிருந்து உன்னை வந்தடைந்தது?*** **2**

இதுவரையில் பேசாதிருந்த பகவான் இப்பொழுது தான் திருவாய் மலர்ந்தருளுகிறார். ஆக, ஸ்ரீமத் பகவத்கீதையின் துவக்கம் இதுவே. எடுத்த எடுப்பில் இரண்டு சுலோகங்களில் இந்த சாஸ்திரத்தின் மூலதத்துவம் வெளியாகிறது. பகவானது போதனையின் சாரம் இவ்விரண்டு சுலோகங்களில் அடங்கப்பெற்றுள்ளது.

இதுபோன்ற சிறப்பை மேலாம் நூல்கள் அனைத்திடத்தும் காணலாம். அதாவது ஆய்ந்த அடிப்படைக் கருத்தானது துவக்கத்திலேயே தெளிவுபட வந்துவிடுகிறது.

ॐ पूर्णमदः पूर्णमिदं पूर्णात् पूर्णमुदच्यते।
पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते॥

தோற்றத்துக்கு அப்பால் இருப்பது பூரணம். தோன்றியுள்ளதும் பூரணம். பூரணத்தினின்று பூரணம் வந்த பின்பு பூரணமே எஞ்சி நிற்கிறது—என்று உபநிஷதம் துவங்குகிறது. உபநிஷதத்தின் மூலகருத்து அனைத்தும் இதில் அடங்கிவிடுகிறது. பிறகு விரிந்து வருவதெல்லாம் இதன் விளக்கமாகும். தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி, குறள், யோகசூத்திரம் முதலியவைகளிலும் இத்தகைய பாங்கைக் காண்க.

ஆரியன் என்னும் பதம் நம் சாஸ்திரங்களில் வந்தமைவது ஒருதேசம் அல்லது ஒரு ஜாதிக்கு உரியவனைக் குறிப்பதற்கன்று. பண்பட்ட மனதும் சிறந்த வாழ்க்கை முறையும் எவனிடத்துளதோ அவன் ஆரியன். இது போன்று துரை, gentleman, அந்தணன், சாஹிப் முதலிய சொற்கள் மேன்மக்களது பண்பைக் குறிப்பனவாம். அறநெறி நிலை நிற்பவன் ஆரியன் ஆகிறான். தவம்புரிந்து பெறும் பிள்ளைகள் ஆரியர் ஆகின்றனர் என்பதும், காமத்துக்கு வசப்பட்டவர் பெறும் பிள்ளைகள் ஆரியர் ஆவதில்லை என்பதும் மனு ஸ்மிருதியின் கோட்பாடாகும். மக்கள் எல்லாரையும் ஆரியர் ஆக்குவது வேதாந்தத்தின் நோக்கமாகும். ஆரியன் என்னும் சொல் ஐயன் எனத் தமிழில் திரிவுபடுகிறது. உயர்ந்தோன் என்பது அதன் பொருள். மேன்மகனாகிய அர்ஜுனன் கீழ்மகன்போன்று நடந்து கொள்வதை பகவான் நிராகரிக்கிறார்.

நெடுநேரம் எடை போட்டுக்கொண்டிருந்த தராசு ஒன்றில் தப்பு இருக்கிறது என்று காட்டிவிட்டால் அதில் எடுத்த நிறை சரியல்ல என்பது தானே விளங்கிவிடுகிறது. மனக்குழப்பம் தப்பான தராசுக்குச் சமானம். குழம்பிய மனம் உண்மையை உள்ளபடி ஓராது. அர்ஜுனனுக்கு மனம் கலங்கிவிட்டது என்கிறார் பகவான். இதுவரையில்

*அவன் பேசியதில் பொருள் ஒன்றுமில்லை என்பதற்கு அவனது மனக்கலக்கமே சான்ருகும். அதைக் கச்மலம் அல்லது குப்பை யென்று கண்ணன் ஒதுக்குகிருர். மனத்தகத்து மாசு படிந்திருப்பவன் ஆரியன் ஆகான்.*

*மனக்கிலேசம் அடைபவனுக்கு இம்மையுமில்லை, மறுமையுமில்லை. இவ்வுலக வாழ்க்கையில் பெறவேண்டியவைகளைப் பெறுபவனுக்குப் புகழ் தானே வந்தமைகிறது. புகழ்பெற வாழாதவன் இவ்வுலகுக்கு உதவாதவன் என்பதாகிறது. எளிதில் கிடைக்கின்ற இவ்வுலகுக்கு உதவாதவன் அரிதாகக்கிடைக்கின்ற அமரலோகத்தைப் பெறுவது எங்ஙனம்? நெருக்கடியில் மனக்கலக்கம் அடைபவன் ஆரியன் அல்லன். அத்தகையவனுக்கு இவ்வுலகும் இல்லை; அவ்வுலகும் இல்லை.*

**क्लैब्यं मा स्म गमः पार्थ नैतत्त्वय्युपपद्यते ।**
**क्षुद्रं हृदयदौर्बल्यं त्यक्त्वोत्तिष्ठ परन्तप ॥ ३**

க்லைப்யம் மா ஸ்ம கம: பார்த்த நைதத்த்வய்யுபபத்யதே ।
க்ஷுத்ரம் ஹ்ருதயதௌர்பல்யம் த்யக்த்வோத்திஷ்ட பரந்தப ॥ 3

पार्थ பார்த்த *பார்த்தா,* क्लैब्यं க்லைப்யம் *அலித்தன்மையை* **मास्म गमः** மாஸ்ம கம: *அடையாதே* एतत् ஏதத் *இது* **त्वयि** த்வயி *உன்னிடத்தில்* **न उपपद्यते** ந உபபத்யதே *பொருந்தாது* **परन्तप** பரந்தப *எதிரியை வாட்டுபவனே* **क्षुद्रम्** க்ஷுத்ரம் *இழிவான* **हृदयदौर्बल्यं** ஹ்ருதயதௌர்பல்யம் *உள்ளத் தளர்ச்சியை* **त्यक्त्वा** த்யக்த்வா *துறந்து விட்டு* उत्तिष्ठ உத்திஷ்ட *எழுந்திரு.*

***பார்த்தா, அலியின் இயல்பை அடையாதே. அது உனக்குப் பொருந்தாது. எதிரியை வாட்டுபவனே, இழிவான உள்ளத்தளர்வைத் துறந்து விட்டு எழுந்திராய். 3***

*ஆண்மையை இழந்து பேதைபோன்று நடந்துகொள்பவன் அலி ஆகின்ருன். அர்ஜுனன் பெற்றுள்ள பண்பும்*

*பயிற்சியும் அத்தகையவைகளல்ல. அவன் உண்மையில் எதிரிகளைப் பறந்தோடச் செய்பவன். மகாதேவனோடு போர் புரிந்த அர்ஜுனனுக்கும் மனத்தளர்ச்சிக்கும் வெகு தூரம். தாற்காலிகமாக வந்துள்ள தளர்ச்சியை இழிந்து பேசி அதை அடியோடு அப்புறப்படுத்தும்படி பகவான் தூண்டுகிறார்.*

*பிரகிருதி புருஷ தத்துவத்தில் முந்தியதைச் சார்ந்திருக்குமளவு ஒருவன் அலியாகின்றான். பிந்தியதைப் பற்றுமளவு ஆண்மை வளர்கிறது. வலிவும் ஆத்ம போதமும் ஒன்றை ஒன்று சார்ந்திருக்கின்றன. பலவீனத்தை பகவான் அடியோடு நிராகரிக்கிறார்.* नायमात्मा बलहीनेन लभ्यः இந்த ஆத்மா பலஹீனனால் அடையப்படுவதன்று - *என்னும் உபநிஷத வாக்கியம் பகவானது போதனைக்கு மூலமந்திரமாகிறது. உடல் வலிவு, உள்ளத்தின் உறுதி, ஆத்மசக்தி ஆகிய அனைத்தும் பலத்தின் வெவ்வேறு வடிவங்களாம். பலமுடையானுக்கு இவ்வுலகம் உண்டு, அவ்வுலகம் உண்டு, நெறி உண்டு, நேர்மை உண்டு, போகம் உண்டு, யோகம் உண்டு, மோக்ஷம் உண்டு, கடவுள் உண்டு, அனைத்தும் உண்டு. இதுவே தொடர்ந்து வரும் உபதேசங்களுக்குத் திறவுகோலாகும். ஆத்மபோதம் பெற்று எழுந்திருப்பவனுக்குப் புதிய பெருவாழ்வு துவங்குகிறது; பலம் மேலிடுகிறது.*

**अर्जुन उवाच**

**कथं भीष्ममहं सङ्ख्ये द्रोणं च मधुसूदन ।**
**इषुभिः प्रतियोत्स्यामि पूजार्हावरिसूदन ॥ ४**

அர்ஜுன உவாச

கதம் பீஷ்மமஹம் ஸங்க்யே த்ரோணம் ச மதுஸூதன ।
இஷுபி: ப்ரதியோத்ஸ்யாமி பூஜார்ஹாவரிஸூதன ॥ 4

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது*

अरिसूदन அரிஸூதன *பகைவரைக் கொல்பவரே* **मधुसूदन** மதுஸூதன *மது என்ற அரக்கனைக் கொன்றவரே* अहं அஹம் *நான்* **सङ्ख्ये**

ஸங்க்யே *யுத்தத்தில்* पूजार्हौ பூஜார்ஹௌ *பூஜிக்கத்தகுந்தவர்களாகிய* भीष्मं பீஷ்மம் *பீஷ்மரையும்* द्रोणं च த்ரோணம் ச *துரோணரையும்* इषुभिः இஷுபி: *பாணங்களால்* कथं கதம் *எப்படி* प्रतियोत्स्यामि ப்ரதி யோத்ஸ்யாமி *எதிர்த்துப் போர்புரிவேன்.*

அர்ஜுனன் சொன்னது

***பகைவரைத் தொலைப்பவரே, மதுவைக் கொன்றவரே, போற்றுதற்குரிய பீஷ்மரையும், துரோணரையும் நான் எங்ஙனம் போரில் எதிர்த்துப் பாணங்களால் அடிப்பேன்? 4***

*கிருஷ்ணா, உமக்கு அரிசூதனன் என்றும் மதுசூதனன் என்றும் பெயர் வந்துள்ளது பொருந்தும்; ஏனென்றால் பகைவனைக் கொல்லுவதும் அரக்கனை அழிப்பதும் முறை. மற்று பீஷ்மரையும் துரோணரையும் நான் எதிர்த்து விவாதம் செய்வதே தகாது. அத்தகையவர்களைப் போரில் எதிர்த்து வில்லெடுத்து அடிக்க எனக்குத் துணிவு எப்படி உண்டாகும்? பாட்டனாரோடு போர் புரிந்தவன் என்றும், ஆசாரியரை எதிர்த்தவன் என்றும் எனக்கு அவதூறு வந்துவிடுமல்லவா?*

**गुरूनहत्वा हि महानुभावान् श्रेयो भोक्तुं भैक्ष्यमपीह लोके ।**
**हत्वाऽर्थकामांस्तु गुरूनिहैव भुञ्जीय भोगान्रुधिरप्रदिग्धान् ॥ ५**

குரூனஹத்வா ஹி மஹாநுபாவான்
ச்ரேயோ போக்தும் பைக்ஷ்யமபீஹ லோகே ।
ஹத்வாऽர்த்தகாமாம்ஸ்து குரூனிஹைவ
புஞ்ஜீய போகான்ருதிரப்ரதிக்தான் ॥ 5

महानुभावान् மஹாநுபாவான் *மேன்மை பொருந்திய* गुरून् குரூன் *ஆசாரியர்களை* अहत्वा அஹத்வா *கொல்லாமல்* इह लोके இஹ லோகே *இவ்வுலகில்* भैक्ष्यं अपि பைக்ஷ்யம் அபி *பிக்ஷான்னம் கூட* भोक्तुं போக்தும் *உண்பது* श्रेयः हि ச்ரேய: ஹி *சிச்சயமாக நல்லது* तु து *ஆனால்* गुरून् குரூன் *பெரியவர்களை* हत्वा ஹத்வா *கொன்றால்* रुधिर-प्रदिग्धान् ருதிரப்ரதிக்தான் *ரத்தம் கலந்த* अर्थकामान् அர்த்தகாமான்

*தனசம்பத்தாகவும் காமிய வஸ்துக்களாகவும் உள்ள* भोगान् போகான் *போகவிஷயங்களை* इह एव இஹ ஏவ *இவ்வுலகிலேயே* भुञ्जीय புஞ்ஜீய *அனுபவிப்பேன்.*

**மேன்மை பொருந்திய குருக்களைக் கொல்லாமல் இவ்வுலகில் பிக்ஷை யேற்று உண்பதும் சாலச் சிறந்தது. ஆனால் ஆசாரியர்களைக் கொன்றால் ரத்தம் கலந்த பொருளையும் போகத்தையும் இம்மையிலேயே அனுபவிப்பவனாவேன். 5**

*பீஷ்மர் நைஷ்டிக பிரம்மசாரியாவார். இச்சா மிருத்யு அல்லது விரும்பியபொழுது மரணத்தை அடையும் வல்லமையுடையவர் அவர். தன்னலம் கருதாத தபோநிஷ்டையுடையவர். துரோணரோ சகல சாஸ்திரங்களையும் கற்றறிந்தவர். ஆசார சீலமுடையவர். கிருபரும் அத்தகையவரே. ஆகையால் இவர்கள் எல்லாரும் மஹானுபாவர்களாகிறார்கள். இவர்களைக் கொல்லுவதால் இவ்வுலக வாழ்க்கையே நரக வாழ்க்கையாக மாறிவிடும்.*

**न चैतद्विद्मः कतरन्नो गरीयो यद्वा जयेम यदि वा नो जयेयुः ।**
**यानेव हत्वा न जिजीविषामस्तेऽवस्थिताः प्रमुखे धार्तराष्ट्राः ॥ ६**

ந சைதத்வித்ம: கதரந்நோ கரீயோ
யத்வா ஜயேம யதி வா நோ ஜயேயு: ।
யாநேவ ஹத்வா ந ஜிஜீவிஷாம
ஸ்தேऽவஸ்திதா: ப்ரமுகே தார்தராஷ்ட்ரா: ॥ 6

नः ந: *எங்களுக்கு* कतरत् கதரத் *எது* गरीयः கரீய: *மேலானது* एतत् ஏதத் *இதை* न च विद्मः ந ச வித்ம: *நாம் அறியோம்* यद्वा जयेम யத்வா ஜயேம (*நாம்*) *ஜயிப்போமோ* यदि वा யதி வா *அல்லது* नः ந: *நம்மை* जयेयुः ஜயேயு: (*அவர்கள்*) *ஜயிப்பார்களோ* यान् एव யான் ஏவ *யாரையே* हत्वा ஹத்வா *கொன்று* न जिजीविषामः ந ஜிஜீவிஷாம: *உயிர் வாழ விரும்பமாட்டோமோ* ते धार्तराष्ट्राः தே தார்தராஷ்ட்ரா: *அந்த திருதராஷ்டிரக் கூட்டத்தார்* प्रमुखे ப்ரமுகே *எதிரில்* अवस्थिताः அவஸ்திதா: *நிற்கின்றனர்.*

*நாம் இவர்களை ஜயிப்பது அல்லது இவர்கள் நம்மை ஜயிப்பது - இதில் நமக்கு எது மேலானது என்பது விளங்கவில்லை. எவரைக் கொன்ற பின் நாம் உயிர்வாழ விரும்பமாட்டோமோ அத்தகைய திருதராஷ்டிரக் கூட்டத்தார் எதிரில் வந்து நிற்கின்றனர்.* **6**

**कार्पण्यदोषोपहतस्वभावः पृच्छामि त्वां धर्मसम्मूढचेताः ।**
**यच्छ्रेयः स्यान्निश्चितं ब्रूहि तन्मे शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम् ॥**

கார்பண்யதோஷோபஹதஸ்வபாவ:
ப்ருச்சாமி த்வாம் தர்மஸம்மூடசேதா: ।
யச்ச்ரேய: ஸ்யாந்நிஸ்சிதம் ப்ரூஹி தன்மே
சிஷ்யஸ்தேऽஹம் சாதி மாம் த்வாம் ப்ரபன்னம் ॥ 7

कार्पण्य दोष उपहतस्वभावः கார்பண்ய தோஷ உபஹதஸ்வபாவ: *கார்ப்பண்யம் என்ற தோஷத்தினால் கெட்டுப்போன சுபாவத்தையுடையவன்* धर्मसम्मूढचेताः தர்மஸம்மூடசேதா: *தர்மத்தைப்பற்றிக் குழப்பங் கொண்ட மனத்தையுடையவனாய்* त्वां த்வாம் *உம்மை* पृच्छामि ப்ருச்சாமி *கேட்கிறேன்.* मे மே *எனக்கு* यत् யத் *எது* श्रेयः ச்ரேய: *சிறந்ததாக* स्यात् ஸ்யாத் *இருக்கிறதோ* तत् தத் *அதை* निश्चितं நிஸ்சிதம் *நிச்சயமாக* ब्रूहि ப்ரூஹி *சொல்லும்* अहं அஹம் *நான்* ते தே *உம்முடைய* शिष्यः சிஷ்ய: *சிஷ்யன்* त्वां த்வாம் *உம்மை* प्रपन्नं ப்ரபன்னம் *சரணமடைகிறேன்.* मां மாம் *எனக்கு* शाधि சாதி *உபதேசித்தருளும்.*

***சிறுமை என்ற கேட்டினால் நல்லியல்பை இழந்த நான் அறநெறியை அறியப் பெறாது மயங்கி உம்மை வினவுகிறேன். எனக்குச் சிறப்பீனுவதை உறுதியாக இயம்பும்; நான் உமது சிஷ்யன், தஞ்சமடைகிறேன், உபதேசித்தருளும்.*** **7**

*மனதின்கண் அமைந்துள்ள ஏழைமையானது கார்ப்பண்யம் எனப்படுகிறது. பிறர் பார்த்து இரங்கி வருந்துதற்கேற்ற நிலையும் கார்ப்பண்யமாம். ஒரு நெருக்கடியில் மனதினுள் வருவித்துக்கொண்ட தளர்வும் துயரமும் அதன்கண்*

உண்டு. யார் ஒருவனிடத்துக் கார்ப்பண்யம் இருக்கிறதோ அவன் கிருபணன். தன்னிடத்துள்ள செல்வத்தைச் சிறிதும் செலவுசெய்ய மனம் துணியாதவனுக்கும் அப்பெயர்வந்தமைகிறது. உலகில் பிறந்துள்ள மானுடன் ஒருவன் பரம் பொருளைப்பற்றிய ஞானத்தை அடையாது போவானுகில் அவன் கிருபணன் ஆகின்ருன், என்று உபநிஷதம் கூறுகிறது. தன்னைக் கிருபணன் என்று ஈண்டு அர்ஜுனன் பகவானிடம் பகர்வது முற்றிலும் பொருத்தமானது.

மனிதனுல் தேடப்படுபவைகளில் பிரேயஸ், சிரேயஸ் என்று இரண்டு இயல்புகள் இருக்கின்றன.

अन्यच्छ्रेयोऽन्यदुतैव प्रेयस्ते उभे नानार्थे पुरुषं सिनीतः ।
तयोः श्रेय आददानस्य साधुर्भवति हीयतेऽर्थाद् य उ प्रेयो वृणीते ॥

சிரேயஸ் (சிறப்பு) வேறு, பிரேயஸ் (பொறிகளின் வாயிலாகப் பிரியத்தை உண்டுபண்ணுவது) வேறு. வெவ்வேறு இயல்புடைய அவைகள் புருஷனை வெவ்வேறு நிலைகளில் இணைக்கின்றன. சிரேயஸ்ஸைப் பின்பற்றுபவன் சான்ருேன் ஆகிருன்; பிரியமானதைப் பின்பற்றுபவன் பெருநிலையினின்று நழுவுகிருன் — இங்ஙனம் உபநிஷதம் புகட்டுகிறது.

இதுபரியந்தம் தன் வாழ்க்கையில் அர்ஜுனன் பெற்ற பேறுகளாகிய கலைஞானம், செல்வம், மனைவியர், மக்கள், ராஜ்ய உரிமை ஆகிய இவை யாவும் பிரியத்தைத் தருபவைகள். பிரேயஸ் என்று அவைகளைப் பகரவேண்டும். தாங்கவொண்ணுப் பெரு நெருக்கடியில் வந்த மனக்கிலேசத்தை மாற்ற அவைகள் சிறிதும் பயன்படா என்பதை அவன் இப்பொழுது உணர்கின்ருன். ஆகையால் சிரேயஸ் வேண்டுமென்று சிஷ்ய பாவனையை வருவித்து வணங்கிக் கேட்கிருன். அடைக்கலம் புகுகிருன். இம்மனநிலை வந்தால் தான் சிரேயஸ்ஸைப் பெறமுடியும். இதுவரையில் பகவானிடத்துத் தோழமை பூண்டு, போகப்பொருள்களைக் கேட்டபோது அவைகளை அவர் மனமுவந்து வழங்கினுர். இப்பொழுது தஞ்சமடைந்து தனது மனநிலையையும் உள்

ளபடி அர்ஜுனன் இயம்பிவிடுகிருன். நெகிழ்ந்த நெஞ்ச முடைத்திருக்கிற வேளையில் ஒருவனிடத்து அனுதாபம் காட்டவேண்டியது பெரியோர் கடமை. அனுதாபம் காட்டு வதையும் வீரம் ஊட்டுவதையும் சேர்த்துச் செய்கிருர் பக வான். சிரேயஸைப் பெறுதற்கேற்ற மனநிலை இப்பொழுது அர்ஜுனனுக்கு வந்துவிட்டது. யோகமும் ஞானமும் சிரே யஸ்ஸினுடைய வெவ்வேறு தோற்றங்கள். ஜீவன் ஒருவன் எந்த வேளையில் எதைப்பெறத் தகுதியுடையவனுயிருக்கி ருனோ அந்த வேளையில் பகவான் அதை மனமுவந்து எடுத்து அவனுக்கு வழங்குகிருர். வேண்டுவார்க்கு வேண்டியதை முறையாக வகுத்தளிக்கவல்ல வள்ளல் அவர். அத்தகைய் வரிடம் தனது குறையைக் குந்தியின் மைந்தன் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிருன்.

பகவத்கீதையைப் படித்து அதன் உட்பொருளைத் தெரிந்துகொள்ள விரும்புபவர்கள் இந்தச் சுலோகத்தின் கருத்தைத் தங்களுக்குச் சொந்தமாக்கிக் கொண்டு அதைப் பகவானிடம் பரிந்து வெளிப்படுத்த வேண்டும். ஆத்ம சாதனத்தில் நுழைபவரும் இந்தச் சுலோகத்தைப் பிரார்த் தனையாகப் பகவானிடம் சமர்ப்பிக்கலாம்.

**न हि प्रपश्यामि ममापनुद्याद्यच्छोकमुच्छोषणमिन्द्रियाणाम् ।**
**अवाप्य भूमावसपत्नमृद्धं राज्यं सुराणामपि चाधिपत्यम् ॥ ८**

ந ஹி ப்ரபச்யாமி மமாபனுத்யாத்
யச்சோகமுச்சோஷணமிந்த்ரியாணும் ।
அவாப்ய பூமாவஸபத்னம்ருத்தம்
ராஜ்யம் ஸுராணுமபி சாதிபத்யம் ॥ 8

भूमौ பூமௌ *பூமியில்* असपत्नं அஸபத்னம் *எதிர்ப்பில்லாத* ऋद्धं ருத்தம் *விருத்தியடைந்துள்ள* राज्यं च ராஜ்யம் ச *ராஜ்யத்தையும்* सुराणां अपि ஸுராணும் அபி *சுரர்களுக்கும்* आधिपत्यं ஆதிபத்யம் *அதிபதியா யிருப்பதையும்* अवाप्य அவாப்ய *அடைந்து* मम மம *என்னுடைய* इन्द्रियाणां இந்த்ரியாணும் *இந்திரியங்களுடைய* उच्छोषणं உச்சோஷணம்

*உலர்த்துகின்ற* शोकं சோகம் *சோகத்தை* अपनुद्यात् அபனுத்யாத் *போக்கடிக்கும்* (इति) यत् (இதி) யத் *என்பதை* न हि प्रपश्यामि ந ஹி ப்ரபச்யாமி *காண்கிறேனில்லை,*

***பூமியில் நிகரற்றதும் ஆக்கத்தையுடையதுமான ஆட்சியைப் பெறினும், அமரர்க்கு அதிபதியாயிருக்கப் பெறினும், என் புலன்களைப் பொசுக்குகின்ற துன்பத்தை அவை துடைக்குமென்று எனக்குத் தோன்றவில்லை. 8***

*தனக்கு ஏற்பட்ட துயரத்தைப் பார்த்தன் முதலில் கொஞ்சம் மறைத்து வைத்துப் பேசுகிறான். இம்மையிலும் மறுமையிலும் உயிர்களுக்குத் தீங்குவரும் என்று முதல் அத்தியாயத்தில் சொன்னதெல்லாம் மேற்பூச்சு. "உனக்கு இத்தகைய சோர்வு ஏற்படுவதற்குக் காரணம் யாது?" என்று பகவான் பரிந்து கேட்டவுடன், உண்மை உள்ளபடி வெளியாகிறது. மற்றவர்களிடத்துத் தனது மனத்துயரத்தை மறைத்துவைக்கும் இளம் மாது ஒருத்தி பெற்ற தாயினிடம் தயங்காது யாவையும் வெளியிடுவாள். அன்பும் அனுதாபமும் உள்ள இடத்தில் மனதை உள்ளபடி சமர்ப்பிப்பது மிக எளிதாகிறது. தாயினும் சாலப்பரிந்து கேட்பவர் ஒருவரிடம் அங்ஙனம் வாய்விட்டுப் பகர்வதால் துயரம் என்னும் மனச்சுமை குறைகிறது. ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் இடையில் உள்ள இணக்கம் மிக நெருங்கியது. தாயின் இனிமையும், தந்தையின் பராமரிப்பும், குருவின் கட்டுப்பாடும், அரசனது நேர்மையும், கடவுளது கிருபையும் ஒன்று கூடியது கிருஷ்ணனுடைய இவ்விணக்கம். ஆகையால் தங்கு தடையின்றி அர்ஜுனன் தன் மனக்கிலேசத்தை விரித்து விளக்கிவிடுகிறான்.*

**सञ्जय उवाच**

**एवमुक्त्वा हृषीकेशं गुडाकेशः परन्तपः ।**
**न योत्स्य इति गोविन्दमुक्त्वा तूष्णीं बभूव ह ॥ ९**

ஸஞ்ஜய உவாச

ஏவமுக்த்வா ஹ்ருஷீகேசம் குடாகேச: பரந்தப: ।
ந யோத்ஸ்ய இதி கோவிந்தமுக்த்வா தூஷ்ணீம் பபூவ ஹ ॥ 9

सञ्जय उवाच ஸஞ்ஜய உவாச *ஸஞ்ஜயன் சொன்னது*

परन्तपः பரந்தப: *பகைவரை வாட்டுபவனை* गुडाकेशः குடாகேச: *குடாகேசனாகிய அர்ஜுனன்* हृषीकेशं ஹ்ருஷீகேசம் *ஹ்ரிஷீகேசநுக்கு* एवं ஏவம் *இவ்விதம்* उक्त्वा உக்த்வா *இயம்பி* न योत्स्ये ந யோத்ஸ்யே *யுத்தம் செய்யேன்* इति இதி *என்று* गोविन्दं கோவிந்தம் *கோவிந்தநுக்கு* उक्त्वा உக்த்வா *பகர்ந்துவிட்டு* तूष्णीं தூஷ்ணீம் *பேசாது* बभूव ह பபூவ ஹ *இருந்தான்.*

ஸஞ்ஜயன் சொன்னது

***பகைவனைப் பொசுக்கும் குடாகேசனாகிய அர்ஜுனன் ஹ்ருஷீகேசனாகிய கோவிந்தனுக்கு இங்ஙனம் இயம்பிப் "போர் புரியேன்" என்று பேசாதிருந்து விட்டான். 9***

*இங்கு ஸஞ்ஜயர் கையாளுகிற பதங்களில் பரந்த கருத்துக்கள் அடங்கப் பெற்றிருக்கின்றன. யுத்தமும் நடைபெறலாகாது, ராஜ்யமும் தன் பிள்ளைகளுக்கே இருக்க வேண்டும், என்பது திருதராஷ்டிர மன்னரது மனோரதம். அது நிறைவேறாது என்று குறிப்பிடப்படுகிறது. தன்னளவில் அர்ஜுனன் குடாகேசன் என்ற பட்டம் பெற்றவன். அதாவது அவன் தூக்கத்தை அறவே வென்றவன். விரும்பிய வேளையில் விரும்பிய அளவுக்குத்தான் அவனுக்கு உறக்கம் வரும். தன் உடலையும் உள்ளத்தையும் நன்கு கட்டி ஆளுபவர்க்கே இது இயலும். (நெப்போலியன், சிவாஜி முதலியவர்களும் அர்ஜுனனைப் போன்று குடாகேசர்களாக இருந்தார்கள்.) அர்ஜுனன் தன்னையே கட்டி ஆண்டதுபோன்று எதிரிகளை விரட்டியோட்டவும், வென்று வசப்படுத்தவும் வல்லவனாயிருந்தான்.*

*அத்தகையவனுக்கு ஸாரதியாக வந்தமைந்தவர் ஹ்ருஷீகேசர், அதாவது இந்திரியங்களுக்கெல்லாம் இறைவ*

முயிருப்பவர். ஸ்ரீ கிருஷ்ணனிடம் அத்தகைய மகிமை யிருந்தமையால் அவர் அங்ஙனம் அழைக்கப்பட்டார். மேலும் அவர் கோவிந்தன் (கோ=உயிர்களை, விந்தன்= அறிபவன்.) ஆக, அர்ஜுனனுக்கு ஏற்பட்ட தளர்வு தாற் காலிகமானது. தானே அதைத்துடைக்க வல்லவன்; துணை புரிபவனே உலகில் ஒப்பிலான் ஆகிய கிருஷ்ணபரமாத்மா. ஆக, திருதராஷ்டிரரது எண்ணம் நிறைவேறாது என்று ஸஞ்ஜயர் குறிப்பிடுகிறார்.

**तमुवाच हृषीकेशः प्रहसन्निव भारत ।**
**सेनयोरुभयोर्मध्ये विषीदन्तमिदं वचः ॥ १०**

தமுவாச ஹ்ருஷீகேச : ப்ரஹஸன்னிவ பாரத ।
ஸேனயோருபயோர்மத்யே விஷீதந்தமிதம் வச: ॥ 10

भारत பாரத *பரதவம்சத்துதித்தவரே* हृषीकेशः ஹ்ருஷீகேச: *ஹ்ருஷீகேசர்* उभयोः सेनयोः मध्ये உபயோ: ஸேனயோ: மத்யே *இரண்டு சேனைகளுக்கும் மத்தியில்* विषीदन्तं तं விஷீதந்தம் தம் *விசனப்படுகிற அவனுக்கு (அர்ஜுனனுக்கு)* प्रहसन् इव ப்ரஹஸன் இவ *சிரிப்பவர் போல்* इदं वचः இதம் வச: *இந்த வசனத்தை* उवाच உவாச *சொன்னார்.*

***திருதராஷ்டிரா, இரண்டு சேனைகளுக்கு மிடையில் இன்னற்படுகிற அர்ஜுனனுக்கு இளமுறுவல் பூத்தவராய் ஹ்ருஷீகேசர் இம்மொழிகளை இயம்பினார். 10***

பரதவம்சத்துதித்தவரே என்று திருதராஷ்டிரர் அழைக்கப்படுகிறார். பரதனுடைய ஆட்சியில் இருந்தமையால் இந்தியாவுக்கும் பாரதவர்ஷம் என்ற பெயர் வந்தது.

பகவான் புன்னகை பூத்ததில் பரந்த கருத்து அடங்கப்பெற்றிருக்கிறது. உலகெங்கும் இரவில் இருள் சூழ்ந்து செயலற்றுக்கிடக்கிறது. பின்பு, புன்முறுவல் பூத்தாற் போன்று கீழ்வானம் வெள்ளென வெளுக்கிறது. இனி சூரியோதயமாகி உயிர்களை எழுப்பிச் செயலில் ஈடுபடுத்தப் போகிறது என்பதற்கு அது முன் அறிகுறி. அங்ஙனம்

பகவானது இளநகை இனி வருகின்ற யோகத்துக்கும் ஞானத்துக்கும் முன் அறிகுறி. அர்ஜுனன் அவரிடமிருந்து இதுபரியந்தம் பெற்றது பிரேயஸ் — பிரியத்தைத் தருவதாகிய இகலோகப்பிராப்தி. இனி பெறப்போவது சிரேயஸ். அது இருமையிலும் ஸர்வதுக்க நிவர்த்தி செய்வது. பாரமார்த்திகப் பெருநிலம் அளிப்பதும் அதுவே. அதைப் பெற்றபின் அதற்குமேல் பெறவேண்டியது ஒன்றுமில்லை. அதற்கேற்ற தருணம் அர்ஜுனனுக்கு வந்துவிட, இளநகையின் மூலம் இறைவன் அதைப்பாராட்டி, அருள்புரிய ஆரம்பிக்கிறார்.

श्री भगवानुवाच

**अशोच्यानन्वशोचस्त्वं प्रज्ञावादांश्च भाषसे ।**
**गतासूनगतासूंश्च नानुशोचन्ति पण्डिताः ॥ ११**

ஸ்ரீ பகவானுவாச

அசோச்யானன்வசோசஸ்த்வம் ப்ரக்ஞாவாதான்ஸ்ச பாஷஸே ।
கதாஸூனகதாஸூன்ச்ச நானுசோசந்தி பண்டிதா : ॥ 11

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது* त्वं த்வம் *நீ* अशोच्यान् அசோச்யான் *துக்கப்படத்தகாதவர் பொருட்டு* अन्वशोचः அன்வசோச: *துக்கப்படுகிறாய்* प्रज्ञावादान् च ப்ரக்ஞாவாதான் ச *ஞானியரது சொற்களையும்* भाषसे பாஷஸே *பேசுகிறாய்* पण्डिताः பண்டிதா: *பண்டிதர்கள்* गतासून् (गत असून्) கதாஸூன் (கத அஸூன்) *இறந்தார்* अगतासून् அகதாஸூன் *இருப்பவர்* च ச *உம்* न अनुशोचन्ति ந அனுசோசந்தி *விசனிப்பதில்லை.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***துயரத்துக்குரியர் அல்லார் பொருட்டுத் துயருறுகிறாய்; ஞானியரது நல்லுரையும் நவில்கிறாய். இறந்தார்க்கோ இருப்பார்க்கோ புலம்பார் பண்டிதர். 11***

*முதல் அத்தியாயம் முப்பத்தைந்தாவது சுலோகத்திலிருந்து நாற்பத்து நான்காவது சுலோகம் வரையில் அர்ஜு*

னன் பகர்ந்ததை பிரக்ஞாவாதம் (ஞானியரது நல்லுரை) என்று பகவான் பரிகசிக்கிறார்.

புஸ்தகங்கள் பல படித்திருப்பவனைப் பண்டிதன் என்று சொல்லுவது உலக வழக்கம். ஆனால் பண்டிதனுக்கு பகவான் தரும் லக்ஷணம் வேறு. இயற்கையின் நடைமுறையை உள்ளபடி அறிந்திருப்பவன் பண்டிதன் ஆவான். சூரியன் தோன்றுவதையும் மறைவதையும் குறித்து யாரும் வருந்தாதிருப்பதுபோன்று ஜனன மரண தத்துவத்தை அறியும் ஆத்ம ஞானி சாவுக்கு வருந்துவதில்லை. வருத்தப் படுதலில் அவனுக்கு அர்த்தமில்லை. எதைக் குறித்தும் மனம் தளராமை பண்டிதனுடைய போக்கு. அர்ஜுனனோ தனது ஞானமொழியோடு பொருந்தாத மனத்தளர்ச்சி கொள்கிறான்.

வினைப்பயனால் தமக்கு வந்து அமையப்போம் மரணத்தைக்குறித்து பீஷ்மர், துரோணர் முதலாயினோர் சிறிதும் வருந்தாதிருக்கின்றனர். ஆனால் அவர்களைக்குறித்து அர்ஜுனன் அவ்வளவு அவதிப்படுதல் விந்தையிலும் விந்தையாயிருக்கிறது.

யோகத்துக்கு முதற்படி இங்கு மறைமுகமாகப் புகட்டப்படுகிறது. ஞானிபோன்று பேசுவதும் அஞ்ஞானி போன்று விசனப்படுவதும் அர்ஜுனன்பால் உள்ள முரண்பாடாகும். அறிந்தோ அறியாமலோ பலபேர் இக்குற்றத் துக்கு ஆளாகின்றனர். அவர்கள் சொல்லுவது போன்று செய்வதில்லை. செடியின் வேரும் பூமியின் மண்ணும் ஒன்றோடொன்று பொருந்துகிற அளவு செடி உரம் பெறுகிறது. மனிதனிடத்து இத்தத்துவம் வேறு ஒரு விதத்தில் நிலை பெறுகிறது. மனம், மொழி, மெய் ஆகிய மூன்றுக்குமிடையில் யோகம் பண்ணுதல் சாதகனது முதற்கடமையாகின்றது. மனமொன்று எண்ண, மொழியொன்று பேச, இவ்விரண்டுக்கும் மாறான ஒன்றை மெய் செய்ய, மனிதனது ஆற்றல் சிதறடைகிறது. ஒருவனது கொள்கை எதுவாயி

னும் ஆகுக. அது முக்கியமானதன்று. ஆனால் அவன் சிந்திப்பதும், சொல்லுவதும், செய்வதும் பொருந்தி ஒன்று பட்டிருக்க வேண்டும். அப்பொழுதுதான் அவன் ஆத்ம சக்தியுடையவனாகிறான். உள்ளொன்று வைத்துப் புற மொன்று பேசுபவன் பேதையாகின்றான். முக்கரணங்களை யும் ஒன்றுபடுத்துபவனிடத்து ஈசனது அருள் சுரக்கிறது; அவன் பேசுவது நிறைமொழி; அவன் ஆற்றுவது செயற் கரிய செய்கையாம். இது வாழ்க்கை சம்பந்தமான ஒரு பேருண்மை.

நெஞ்சில் உள்ளதையே வாயால் சொல்லு. உனது சொல்லுக்கும் நினைவுக்கும் அத்தியந்த ஒற்றுமை இருக்கட்டும். அப்படி ஒற்றுமை ஏற்படாவிட்டால் உனக்கு யாதொரு நன்மையும் உண்டாகாது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

न त्वेवाहं जातु नासं न त्वं नेमे जनाधिपाः ।
न चैव न भविष्यामः सर्वे वयमतः परम् ॥ १२

ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜனாதிபா: ।
ந சைவ ந பவிஷ்யாம: ஸர்வே வயமத: பரம் ॥ 12

अहं அஹம் *நான்* जातु ஜாது *எப்பொழுதாவது* न तु आसं ந து ஆஸம் *இருந்ததில்லை (என்பது)* न एव ந ஏவ *இல்லவே இல்லை.* त्वं த்வம் *நீ* (न आसीः ந ஆஸீ: *இருந்ததில்லை என்பது*) न ந *இல்லை* इमे இமே *இந்த* जनाधिपाः ஜனாதிபா: *அரசர்கள்* (न आसन् ந ஆசன் *இருந்ததில்லை என்பது*) न ந *இல்லை* अतः परम् அத: பரம் *இனிமேல்* सर्वे वयं ஸர்வே வயம் *நாமெல்லோரும்* न भविष्यामः ச ந பவிஷ்யாம: ச *இருக்க மாட்டோம் என்பதும்* न एव ந ஏவ *இல்லவே இல்லை.*

***முன்பு எப்பொழுதாவது நான், நீ, இவ்வரசர்கள் ஆகியவர்களில் யாராவது இல்லாதிருந்ததில்லை. இக்காயங்கள் அழியுமிடத்தும் நாம் இல்லாமற் போகமாட்டோம்.*** **12**

தேகங்களத்தனையும் தோன்றியவாறு அழியும். எது ஓயாது தகனமாய்க் கொண்டிருக்கிறதோ அது தேகம். தேகங்களுள் குடியிருக்கும் ஆத்மா அழிவற்றது; முக்காலத்

*திலும் அது பொதுவாயுள்ளது. ஒருகாலத்தில் இருந்து இன்னொரு காலத்தில் இல்லாமற்போய்விடுவது அதற்கில்லை.*

*எப்படி அது காலத்தில் அடிபடுவதில்லை என்று வினவின், அதற்கு விடைவருகிறது :—*

**देहिनोऽस्मिन्यथा देहे कौमारं यौवनं जरा ।**
**तथा देहान्तरप्राप्तिर्धीरस्तत्र न मुह्यति ॥ १३**

தேஹிநோऽஸ்மின்யதா தேஹே கௌமாரம் யௌவனம் ஜரா ।
ததா தேஹாந்தரப்ராப்திர்தீரஸ்தத்ர ந முஹ்யதி ॥ 13

यथा யதா *எப்படி* देहिनः தேஹிந: *தேகத்தில் குடியிருக்கும் ஆத்மாவுக்கு* अस्मिन् देहे அஸ்மின் தேஹே *இத்தேகத்தில்* कौमारं கௌமாரம் *குழந்தைப் பருவம்* यौवनं யௌவனம் *யௌவனப் பருவம்* जरा ஜரா *கிழத்தனம்* तथा ததா *அப்படியே* देहान्तरप्राप्तिः தேஹாந்தரப்ராப்தி: *வேறு தேகத்தை எடுப்பதும்* तत्र தத்ர *அதைப்பற்றி* धीरः தீர: *தீரன்* न मुह्यति ந முஹ்யதி *மோஹமடைவதில்லை.*

***ஆத்மாவுக்கு இவ்வுடலில் இளமையும், யௌவனமும், மூப்பும் உண்டாவதுபோல் வேறு உடல் எடுப்பதும் அமைகிறது. தீரன் அதன் பொருட்டு மயங்கான். 13***

*ஒருவன் குழந்தையாய்க் காளையாகிப் பிறகு கிழவனாகிறான். இந்த மாறுதல்களெல்லாம் ஓரே மனிதனிடத்து உண்டாகின்றன. குழந்தையாக இருந்தவன் ஒருவன், காளையானவன் மற்றொருவன் என்று சொல்லுதல் பொருந்தாது. அங்ஙனமே ஓர் உடலைவிட்டு இன்னொரு உடலுக்குப் போகிறவனும் அதே ஆள். ஞானிக்கு இவ்வுண்மை சுவானுபவமாக விளங்குவதால் அவன் மனக்கலக்கமடைவதில்லை. பின்பு, மனங்கலங்காதிருந்து பழகுபவன் தீரன் அல்லது ஞானியாவதற்குத் தன்னை ஆயத்தப்படுத்துகிறான். மாறுபாடு யாவும் உடலினுடையது என்றும், மாறாத் தன்மை ஆத்மாவினுடையதென்றும் அறிபவன் தீரன். ஆத்மா நித்தியப்பொருள் எனினும் அதற்குக் குளிர் வெப்*

பம், இன்பதுன்பம் முதலியன இருப்பது இயல்புதானே என்ற எண்ணம் வரலாம் அதைப்பற்றிய உண்மை வருமாறு :—

मात्रास्पर्शास्तु कौन्तेय शीतोष्णसुखदुःखदाः
आगमापायिनोऽनित्यास्तांस्तितिक्षस्व भारत ॥ १४

மாத்ராஸ்பர்சாஸ்து கௌந்தேய சீதோஷ்ணஸுகது:கதா: ।
ஆகமாபாயினோऽநித்யாஸ்தாம்ஸ்திதிக்ஷஸ்வ பாரத ॥ 14

कौन्तेय கௌந்தேய *குந்தியின் புதல்வா*, मात्रास्पर्शाः மாத்ராஸ்பர்சா: *இந்திரியங்களுக்கு இந்திரியார்த்தங்களில் உள்ள இணக்கம்* तु து *நிச்சயமாக* शीतोष्णसुखदुःखदाः சீதோஷ்ண சுக துக்கதா: *சீதம் உஷ்ணம், சுகம் துக்கம் இவைகளைக் கொடுக்கின்றவைகளாகவும்* आगमापायिनः ஆகமாபாயின: *தோன்றி மறையும் தன்மையனவாயும்* अनित्याः அநித்யா: *நித்தியமல்லாதவைகளாயும்* भारत பாரத *பாரதா* तान् தான் *அவைகளை* तितिक्षस्व திதிக்ஷஸ்வ *சகித்துக்கொள்*.

***குந்தியின் மைந்தா, பொறிகள் புலன்களிடத்துப் பொருந்துதலால் குளிர், வெப்பம், இன்பம், துன்பம் முதலியன உண்டாகின்றன. தோன்றுதலும் மறைதலும் நிலையாமையும் அவைகளின் இயல்பு. பாரதா, அவைகளைப் பொறுத்துக்கொள்.14***

*கண், செவி முதலிய ஐம்பொறிகள் அதனதன் புலனாகிய வடிவம், ஒலி முதலியவைகளில் உலவுகின்றன. அதனால் உலகம் வேண்டப்படுபவை, வேண்டப்படாதவைகளாகப் புலனாகி இன்ப துன்பங்களை விளைவிக்கின்றன. இந்திரியங்களுக்கு விஷயமாகும்பொழுது தோன்றவும், விஷயமாகாதபொழுது அவைகள் மறையவும் செய்கின்றன. ஒரு வேளையில் இன்பம் தருகிற அதேபொருள் மற்றொரு வேளையில் துன்பம் தருகிறது. குளிர் வெப்பம் இதற்குச் சான்று. இன்பம் தரும் உணவு நோய்வாய்ப் பட்டிருக்கும்போது துன்பம் தருகிறது. ஆகையால் இவை யாவும் அநித்தியமானவைகள். அவைகளைப் பொறுத்துப் பழகுபவன் உறு*

தியைப் பெறுகிறான். திதிக்ஷை அல்லது பொறையைப் பழகுதல் நல்வாழ்க்கைக்கு ஓர் இன்றியமையாத சாதனமாகிறது. அத்தகையவன் இன்ப துன்பங்களுக்கு ஆளாவதில்லை; ஞானத்துக்குத் தகுதியுடையவன் ஆகிறான்.

தகுதி அவனுக்கு எப்படி வந்து அமைகிறது என்று கேட்பின், அதற்கு விடை வருகிறது:—

यं हि न व्यथयन्त्येते पुरुषं पुरुषर्षभ ।
समदुःखसुखं धीरं सोऽमृतत्वाय कल्पते ॥ १५

யம் ஹி ந வ்யதயந்த்யேதே புருஷம் புருஷர்ஷப ।
ஸமது:க ஸுகம் தீரம் ஸோऽம்ருதத்வாய கல்பதே ॥ 15

पुरुषर्षभ புருஷர்ஷப *புருஷ சிரேஷ்டனே* एते ஏதே *இவைகள் (சீதம் உஷ்ணம் முதலியவைகள்)* समदुःखसुखं ஸமது:கஸுகம் *சுகதுக்கங்களை சமமாகக்கொண்ட* धीरं தீரம் *தீரனை* यं புருஷं யம் புருஷம் *எந்தப் புருஷனை* न व्यथयन्ति ந வ்யதயந்தி *அசைக்கிறதில்லை* सः ஸ: *அவன்* हि ஹி *நிச்சயமாக* अमृतत्वाय அம்ருதத்வாய *அமிர்தத்வத்துக்கு (சாகா நிலைக்கு)* कल्पते கல்பதே *தகுதியுடையவனாகின்றான்.*

***புருஷ சிரேஷ்டனே, எவன் இவற்றால் இன்னலுறான், இன்பதுன்பங்களை ஒப்பாக உணர்கிறான், அத்தீரனே சாகா நிலைக்குத் தகுந்தவனாகிறான். 15***

*உடல் என்னும் புரியிலே வாசம்செய்பவன் புருஷன் எனப்படுகிறான். பொருள்களைப் புலன்கள் வாயிலாகச் சேர்வதால் உடலின்கண் இன்ப துன்பங்கள் தப்பாமல் வந்தமையும். அவ்வுடலைத் தான் என்று எண்ணுபவன் துன்புறுவது திண்ணம். ஆத்ம சொரூபத்திலேயே நிலைத்திருப்பவனது மனம் அசைவதில்லை. அமைதியே வடிவெடுத்தவனாக அவன் இருக்கிறான். நிலையற்ற நிகழ்ச்சிகளால் சஞ்சலப்படாதிருப்பது அவனது உள்ளத் தெளிவைக் காட்டுகிறது. ஆதலால் அவன் தீரன் அல்லது பேரறிவுடையவன் ஆகிறான். சாகாநிலையாகிய மோக்ஷத்துக்கு அவனே தகுதியுடையவன்.*

இவ்வுலக நிகழ்ச்சிகளை முறையாகப் பயன்படுத்தி நம்மைத் தீரர்களாக்குதற்கு நாம் இவ்வுலகில் வந்துள்ளோம்.

அஞ்ஞானம் அகலுகின்றவளவு துக்க நிவர்த்தியும் வந்தமைகிறது. உள்ளது எது இல்லாதது எது என்ற ஆராய்ச்சி அடுத்தபடியாக வருகிறது:—

नासतो विद्यते भावो नाभावो विद्यते सतः ।
उभयोरपि दृष्टोऽन्तस्त्वनयोस्तत्त्वदर्शिभिः ॥ १६

நாஸதோ வித்யதே பாவோ நாபாவோ வித்யதே ஸத:।
உபயோரபி த்ருஷ்டோऽந்தஸ்த்வனயோஸ்தத்வதர்சிபி: ॥ 16

असतः அஸத: *இல்லாததற்கு* भावः பாவ: *இருப்பு* न विद्यते ந வித்யதே *இல்லை* सतः अपि ஸத: அபி *இருப்பதற்கும்* अभावः அபாவ: *இல்லாமை* न विद्यते ந வித்யதே *கிடையாது* तत्त्वदर्शिभिः तु தத்வதர்சிபி: து *தத்வத்தை அறிந்தவர்களாலேயே* अनयोः उभयोः அனயோ: உபயோ: *இவ்விரண்டின்* अन्तः அந்த: *முடிவு* दृष्टः த்ருஷ்ட: *காணப்படுகிறது.*

***இல்லாததற்கு இருப்புக்கிடையாது. இருப்பது இல்லாமற்போவதுமில்லை. உண்மையறிந்தவர்க்கே இவ்விரண்டின் முடிவு விளங்கும். 16***

*தத்துவதர்சனம் என்பது உண்மையைக் காணுதல். உண்மையைக் காண்பதற்கே உயிர்கள் முயன்று வருகின்றன. தேடிய பொருளைக் கண்டெடுத்தவர்க்கு மேலும் தேடித்திரிய வேண்டிய அவசியமில்லை. உள்ளது எது என்று தேடுவது உயிர்களின் இயல்பு. இருப்பதை உரியதாக்கிக் கொள்ளச் செய்யும் முயற்சியே வாழ்க்கை என்று அழைக்கப்படுகிறது. கோடை காலத்தில் நதியில் நீர் ஒடுங்கியிருக்கும்போது நெடுந்தூரத்துக்கு நனைந்த பூமி அதில் கண்ணுக்குத் தென்படுகிறது. ஆயினும் அதைச் சாகுபடிக்கு உரியதாக்கிக்கொள்ள யாரும் முயலுவதில்லை. ஏனென்றால் மாரி காலத்தில் மீண்டும் பெருக்கெடுத்து ஓடும் பிரவாகத்துக்கு*

அது உட்படும். நாளைக்குப் பயன்படாது போகுமாதலால் இன்றே அது பயனற்றதென்று கருதப்படுகிறது.

தத்துவதர்சிகள் தேகத்தையும் அதினின்று தோன்றும் சுகதுக்கங்களையும் அங்ஙனம் கருதுகின்றனர். முன்பு ஒரு காலத்தில் நம் தேகம் இல்லை. இடையில் அது வந்துள்ளது. பின்பு அது இல்லாமற்போம். ஆகையால் இடையில் இருக்கும்பொழுதும் உண்மையில் அது இல்லாததே – அபாவமே. கனவில் வந்த செல்வம் வந்திருக்கும்பொழுதும் உண்மையல்ல.

அசத்து, அதாவது இல்லாதது. ஏனென்றால் அதனிடத்து பாவமில்லை. இருக்கிறேன் என்ற உணர்ச்சியில்லை. முன்பு இல்லாது, இடையில் வந்து இறுதியில் மறைவது விகாரப்படும் தன்மையது. ஆதலால் இருக்கும்பொழுதும் இல்லாததெனத் தள்ளத்தகுந்தது. அதனிடத்திருந்து வரும் சுக துக்கங்களையும் அப்படியே புறக்கணிக்க வேண்டியது பெரியோர் கடமை.

ஆத்மாவோ சத்து, அதாவது உள்ளது. ஏனென்றால் அதனிடத்து பாவம் உண்டு. இருக்கிறேன் என்ற உணர்ச்சி அல்லது பிரக்ஞை வடிவமானது அது. பிரக்ஞையானது காலத்தால், தேசத்தால் அல்லது அவஸ்தையால் அடிபடாதது. ஒரு விகாரத்தையும் அது எடுப்பதில்லை. மாறுபாடு என்பது ஆத்மாவுக்கு இல்லை. அது நித்தியமாய் உள்ளது. மேலும் அதன் சொரூபம் வருமாறு:—

**अविनाशि तु तद्विद्धि येन सर्वमिदं ततम् ।**
**विनाशमव्ययस्यास्य न कश्चित्कर्तुमर्हति ॥ १७**

அவிநாசி து தத்வித்தி யேன ஸர்வமிதம் ததம் ।
விநாசமவ்யயஸ்யாஸ்ய ந கஸ்சித்கர்த்துமர்ஹதி ॥ 17

**येन** யேன *எதனுல்* **इदं सर्वं** இதம் ஸர்வம் *இவ்வுலகெலாம்* **ततं** ததம் *வியாபிக்கப்பட்டிருக்கிறதோ* **तत्** தத் *அது* **अविनाशि** அவிநாசி *விஞசமடையாதது* **तु** து **विद्धि** வித்தி *என்று உறுதியாக அறிவாயாக*

कश्चित् கஸ்சித் *யாதும்* अस्य अव्ययस्य அஸ்ய அவ்யயஸ்ய *இந்த மாறாத் தன்மையுடையதற்கு* विनाशं விநாசம் *விநாசத்தை* कर्तुम् கர்த்தும் *செய்ய* न अर्हति ந அர்ஹதி *அர்ஹனல்ல.*

***உலகெலாம் பரவிய பொருள் அழிவற்றதென்று அறிக. அழியாப் பொருளை அழிக்க யாருக்கும் இயலாது.*** ***17***

*ஆகாசத்தில் அதாவது வெட்டவெளியில் திடீரென்று மேகங்கள் தோன்றுகின்றன. நீக்கமற எங்கும் பரவியுள்ள வெட்டவெளியைப் பிளவுபடுத்த அம்மேகங்களுக்கு இயலாது. பெரியதாகப் பரிணமிப்பதும் சிறியதாக ஒடுங்குவதும் மேகத்துக்கு உண்டு. ஆனால் ஆகாசத்துக்குக் கூடுதல் குறைதல் இல்லை. அங்ஙனம் சிதாகாசத்தில் அதாவது அறிவு வெளியில் ஜகத் தோன்றவும், நிலைபெற்றிருக்கவும், மறையவும் செய்கிறது. அதனால் சிதாகாசத்தில் ஒருவித மாறுதலும் உண்டாவதில்லை. அதைக் கூட்டவோ, தேய்க்கவோ, மறைக்கவோ யாருக்கும் இயலாது. சாக்ஷியாக உள்ளது அது.*

*சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்யும்போது குருவானவர் பிரம்மம், மாயை என்பன இரண்டென்பதைச் சுட்டிக்காட்டத் தமது இரண்டு விரல்களை முதலில் நீட்டினார்; பின்னர் ஒரு விரலை மடக்கிக் கொண்டு மாயை மறைந்ததும் பரப்பிரம்மத்தைத் தவிர வேறொன்றும் நிலைத்திருப்பதில்லை யென்பதைக் கற்பித்தார்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*இனி இல்லாததின் இயல்பு இயம்பப்படுகிறது:—*

**अन्तवन्त इमे देहा नित्यस्योक्ताः शरीरिणः ।**
**अनाशिनोऽप्रमेयस्य तस्माद्युध्यस्व भारत ॥ १८**

அந்தவந்த இமே தேஹா நித்யஸ்யோக்தா: சரீரிண: ।
அநாசினோऽப்ரமேயஸ்ய தஸ்மாத்யுத்யஸ்வ பாரத ॥ 18

नित्यस्य நித்யஸ்ய *நித்யத்தினுடைய* अनाशिनः அநாசின: *நாசமாகாததினுடைய* अप्रमेयस्य அப்ரமேயஸ்ய *அளவிடமுடியாததினுடைய*

शरीरिण: சரீரிண: *சரீரியினுடைய* इमे देहा: இமே தேஹா: *இந்த தேகங்கள்* अन्तवन्त: அந்தவந்த: *முடிவுடையவைகளாக* उक्ता: உக்தா: *சொல்லப்படுகின்றன* भारत பாரத *பாரதா*, तस्मात् தஸ்மாத் *ஆகையினால்* युध्यस्व யுத்யஸ்வ *யுத்தம்செய்.*

***நித்தியமாய், நாசமற்றதாய், அளப்பரியதாய் உள்ள ஆத்மாவின் இவ்வுடலங்கள் யாவும் அழியும் தன்மையனவாம். ஆதலால் பாரதா, போர் புரிக. 18***

*கடல் இருந்தபடி இருக்க அதனுள் நீர் இடம்மாறி அமைகிறது; ஆறாக ஓடுகிறது; பனிக்கட்டியாக உறைகிறது. ஆத்மாவில் அதுபோன்ற மாறுதல் இல்லை. ஆதலால்ஆத்மா நித்தியம். குட்டையில் உள்ள நீர் ஆவியாகக் கிளம்பி குட்டைக்கு நாசம் ஏற்படுகிறது. ஆத்மாவினிடத்து அத்தகைய நாசம் ஒன்றுமில்லை. மேலும் மனம் மொழிக்கு எட்டாமையினால் அது அளப்பரியதாகிறது. கடலில் ஏற்படுகிற மாறுதல் உடலிலும் உண்டாகிறது. குட்டைக்கு வருகிற நாசம் போன்று ஆக்கைக்கு மரணம், தகனம் ஆகியவைகள் வாயிலாக நாசம் வருகிறது. தேகத்தின் தன்மையை மனதைக்கொண்டும், மற்றொரு தேகத்தைக் கொண்டும், அறிவைக் கொண்டும் அளந்தெடுத்துவிடலாம். ஆத்மாவை அப்படி மதிப்பிட முடியாது.*

*பொருளைப்பற்றி வந்த மயக்கத்தால் அர்ஜுனன் போர்புரிய மாட்டேன் என்கிறான். மயக்கம் கொள்ளுதலும், போர்முனையினின்று பின்வாங்குதலும், அதாவது தன் கடமையைச் செய்யாது ஒழிதலும் ஒருவிதத்திலும் பார்த்தனுக்குப் பொருந்தாது. 'ஆதலால் பார்த்தா, போர்புரிக' என்கிறார் பகவான். 'ஆதலால் போர் புரிக' என்ற பல்லவியை இன்னும் பல தடவை கேட்போம்.*

**य एनं वेत्ति हन्तारं यश्चैनं मन्यते हतम् ।**
**उभौ तौ न विजानीतो नायं हन्ति न हन्यते ॥ १९**

ய ஏனம் வேத்தி ஹந்தாரம் யஸ்சைனம் மன்யதே ஹதம் ।
உபௌ தௌ ந விஜாநீதோ நாயம் ஹந்தி ந ஹன்யதே ॥ 19

यः ய: *யார்* एनं ஏனம் *இந்த ஆத்மாவை* हन्तारं ஹந்தாரம் *கொல்லுகிறவனென்று* वेत्ति வேத்தி *அறிகிறனே* यः च ய: ச *இன்னும் யார்* एनं ஏனம் *இந்த ஆத்மாவை* हतं ஹதம் *கொல்லப்பட்டவன் என்று* मन्यते மன்யதே *நினைக்கிறனே* उभौ तौ உபௌ தௌ *அவ்விருவரும்* न विजानीतः ந விஜாநீத: *அறிந்தவர்களல்லர்* अयं அயம் *இவ்வாத்மா* न हन्ति ந ஹந்தி *கொல்லுகிறதில்லை* न हन्यते ந ஹன்யதே *கொல்லப்படுவ*

***ஆத்மாவைக் கொலையாளி யென்றும், கொலையுண்பானென்றும் எண்ணும் இருவரும் அறியாதார். ஆத்மா கொல்லுவதுமில்லை, கொலையுண்பதுமில்லை. 19***

*செல்வத்தில் பெரும்பற்றுடைய ஒருவனது செல்வம் திடீரென்று அழிந்துபோனால், "நான் தொலைந்தேன்" என்கிறான் அவன். செல்வம் தன் சொரூபமல்ல. தன்னுடையது ஒன்று அழிய மனிதன் தானே அழிந்துபோனதாக நினைக்கிறான். தன்னுடையது என்பது மமகாரம். தடித்த மமகாரம் அகங்காரம் போன்று ஆய்விடுகிறது. தேகத்தைத் தான் என்று எண்ணுவது அகங்காரம். மாறுபடும் தன்மையது தேகம். மாறாப் பெருநிலையில் வீற்றிருப்பது ஆத்மசைதன்யம். தோன்றிய மேகம் மறையும்பொழுது ஆகாசம் எப்படி அழிவதில்லையோ, அப்படி ஆக்கை அழியும்போது ஆத்மா அழிவதில்லை.*

**न जायते म्रियते वा कदाचिन्नायं भूत्वा भविता वा न भूयः ।**
**अजो नित्यः शाश्वतोऽयं पुराणो न हन्यते हन्यमाने शरीरे ॥ २०**

ந ஜாயதே ம்ரியதே வா கதாசிந்
நாயம் பூத்வா பவிதா வா ந பூய: ।
அஜோ நித்ய: சாச்வதோऽயம் புராணோ
ந ஹன்யதே ஹன்யமானே சரீரே ॥ 20

अयं அயம் *இவ்வாத்மா* कदाचित् கதாசித் *ஒருபோதும்* न जायते ந ஜாயதே *பிறந்ததில்லை* वा வா *அல்லது* म्रियते वा ம்ரியதே வா *மரிப்பதுமில்லை* न भूत्वा ந பூத்வா *இல்லாதிருந்து* भूयः பூய: *திரும்பவும்* न भविता ந பவிதா *உண்டாவதில்லை.* (*வேறு மொழிபெயர்ப்பு* वा *அல்லது* भूत्वा *உண்டாகி* भूयः *மறுபடியும்* न भविता *இல்லாமற்போவது* न *கிடையாது*) अजः அஜ: *பிறவாதது* नित्यः நித்ய: *நித்யமானது* (*இறவாதது*) शाश्वतः சாச்வத: *சாச்வதமானது* (*தேய்வதில்லை*) पुराणः புராண: *புராணன், யாண்டும் தன்மையமானது* (*வளர்வதில்லை*) अयं அயம் *இவ்வாத்மா* शरीरे हन्यमाने சரீரே ஹன்யமானே *சரீரம் கொல்லப்பட்டாலும்* न हन्यते ந ஹன்யதே *கொல்லப்படுவதில்லை.*

***இவ்வாத்மா ஒருபோதும் பிறப்பதுமில்லை இறப்பதுமில்லை. இது இல்லாதிருந்து பிறகு பிறந்ததல்ல. (இருந்து பிறகு இறந்ததல்ல.) இது பிறவாதது, இறவாதது, தேயாதது, வளராதது. காயம் கொல்லப்படுமிடத்தும் ஆத்மா கொல்லப்படுவதில்லை.*** ***20***

*பிறத்தல், இருத்தல், வளர்தல், மாறுதல், தேய்தல், மாய்தல் ஆகிய ஆறுவித பாவவிகாரங்கள் பூதங்களாலாகிய உடலத்துக்கு உண்டு; ஆத்மாவுக்கு இல்லை.*

**वेदाऽविनाशिनं नित्यं य एनमजमव्ययम् ।**
**कथं स पुरुषः पार्थ कं घातयति हन्ति कम् ॥ २१**

வேதாऽவிநாசினம் நித்யம் ய ஏனமஜமவ்யயம் ।
கதம் ஸ புருஷ: பார்த்த கம் காதயதி ஹந்தி கம் ॥ 21

पार्थ பார்த்த *பார்த்தா* यः ய: *யார்* एनं ஏனம் *இவ்வாத்மாவை* अविनाशिनं அவிநாசினம் *நாசமற்றதாகவும்* नित्यं நித்யம் *நித்யமானதாகவும்* (*மாறுதலற்றது*) अजं அஜம் *பிறவாததாகவும்* अव्ययं அவ்யயம் *குறையாததாகவும்* वेद வேத *அறிகிறானோ* सः पुरुषः ஸ: புருஷ: *அப்புருஷன்* कथं கதம் *எப்படி* कं கம் *யாரை* हन्ति ஹந்தி *கொல்லுகிறான்* कं கம் *யாரை* घातयति காதயதி *கொல்லச் செய்கிறான்.*

***பார்த்தா, இவ்வாத்மாவை அழியாதது, மாருதது, பிறவாதது, குறையாதது என்று அறிபவன் எப்படி யாரைக்கொல்வான், யாரைக் கொல்விப்பான்? 21***

ஆத்மா செயலற்றது. ஆத்மஞானம் அடையப் பெற்றவன் அஹங்காரமற்றவனுதலால் எவ்வினைக்கும் தான் கர்த்தா என்ற உணர்ச்சி அவனுக்கு வருவதில்லை. ஒரு வினையும் ஆத்ம ஞானியைச் சாராது என்பதற்குச் சான்ருகக் கொல்லுதல் கொல்வித்தல் ஆகிய இரண்டு கொடிய வினைகள் எடுத்துக் கொள்ளப்பட்டன. எச்செயலைச் செய்தாலும், செயல் புரிந்தேன் என்ற எண்ணம் ஆத்மஞானியிடம் இல்லை. ஞான சாதனம் பழகுபவன் தனக்குற்ற கர்மத்தைச் செய்துகொண்டிருப்பதற்கிடையில் தன்னைக் கர்த்தாவாக உணரலாகாது.

ஒரு சாதுவானவர் ஜனநெருக்கமுள்ள ஒரு தெரு வழியே போய்க்கொண்டிருந்தார். அப்பொழுது தற்செயலாய் ஒரு துஷ்டனுடைய காலை அவர் மிதித்துவிட்டார். அப்பொல்லாதவனுக்குத் தாங்க முடியாத கோபம் மூண்டுவிட்டது. அப்பெரியவர்மீது சிறிதும் இரக்கம் காட்டாமல் அவரை மிகைபட அடித்துவிட்டான். சாது பிரக்ஞையற்றுத் தரையில் விழுந்தார். அதைக் கேள்விப்பட்ட சிஷ்யர்கள் ஓடிவந்து வெகுபாடுபட்டு, அவருக்குப் பணிவிடை செய்து சரீரப் பிரக்ஞை வரும்படி செய்தார்கள். அவர் கொஞ்சம் கண் திறந்து பார்த்தார். சிஷ்யர்களில் ஒருவர் அப்பெரியாரைப் பார்த்து "சுவாமி, இப்போது தங்களுக்குக் குற்றேவல் புரிவது யார் என்று தெரிகிறதா?" என்று கேட்டார். "இந்தச் சரீரத்தை அடித்த கை இப்பொழுது இதற்குப் பணிவிடை பண்ணுகிறது" என்று சாது பதில் சொன்னர். உண்மையான ஞானிக்கு மித்திரன் என்றும் சத்துருவென்றும், அடிப்பவன் என்றும் அடிபடுபவனென்றும் வித்தியாசமே கிடையாது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**वासांसि जीर्णानि यथा विहाय नवानि गृह्णाति नरोऽपराणि ।**
**तथा शरीराणि विहाय जीर्णान्यन्यानि संयाति नवानि देही ॥ २२**

வாஸாம்ஸி ஜீர்ணானி யதா விஹாய
நவானி க்ருஹ்ணாதி நரோऽபராணி ।
ததா சரீராணி விஹாய ஜீர்ணான்-
யன்யானி ஸம்யாதி நவானி தேஹீ ॥ 22

नरः நர: *நரன்* यथा யதா *எப்படி* जीर्णानि ஜீர்ணானி *பழுதுபட்ட* वासांसि வாஸாம்ஸி *வஸ்திரங்களை* विहाय விஹாய *நீத்து விட்டு* नवानि நவானி *புதிய* अपराणि அபராணி *மற்றவைகளை* गृह्णाति க்ருஹ்ணாதி *எடுத்துக் கொள்கிறானோ* तथा ததா *அப்படியே* देही தேஹீ *தேஹியானவன்* जीर्णानि ஜீர்ணானி *ஜீரணமாய்ப்போன* शरीराणि சரீராணி *சரீரங்களை* विहाय விஹாய *நீத்துவிட்டு* नवानि நவானி *புதிய* अन्यानि அன்யானி *மற்றவைகளை* संयाति ஸம்யாதி *அடைகிறான்.*

***பழுதுபட்ட துணிகளைக் களைந்துவிட்டு மனிதன் புதியவைகளைப் போட்டுக்கொள்வது போன்று ஆத்மா பழைய உடலங்களை நீத்துப் புதியன புகுகிறது.*** **22**

*பழைய துணியை எறிந்துவிட்டு மனிதன் புதியது தேடுவதில்லை. புதியது கைக்குக் கிடைத்த பின்பே பழையது புறக்கணிக்கப்படுகிறது. பாம்பு புதியசட்டையைப்பண்ணிக் கொண்டு பழையதை நீக்குகிறது. அங்ஙனம் ஆத்மா ஒரு சரீரத்தை விடுதற்கு முன்பே, தன்வினைக்கு ஏற்றாற்போன்று சூக்ஷ்மமாகப் புதியது ஒன்றைப் பண்ணிக்கொள்கிறது. அது காரண சரீரம் என்றும் சூக்ஷ்ம சரீரம் என்றும் சொல்லப் படுகிறது. மரத்தின் நுண்ணிய விதைபோன்று அது நெடு நாள் தோன்றா நிலையிலிருந்து பிறகு பிறக்கிறது. ஸ்தூல உடல் எடுப்பதை நாம் பிறப்பு என்கிறோம்.*

*பாம்பும் அதன்மேல் சட்டையும் வெவ்வேறானவை. அதுபோல ஆத்மாவும் சரீரமும் வெவ்வேறானவை.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**नैनं छिन्दन्ति शस्त्राणि नैनं दहति पावकः ।**
**न चैनं क्लेदयन्त्यापो न शोषयति मारुतः ॥ २३**

நைநம் சிந்தந்தி சஸ்த்ராணி நைநம் தஹதி பாவக: |
ந சைனம் க்லேதயந்த்யாபோ ந சோஷயதி மாருத: || 23

शस्त्राणि சஸ்த்ராணி *ஆயுதங்கள்* एनं ஏனம் *இந்த ஆத்மாவை* न छिन्दन्ति ந சிந்தந்தி *வெட்டுகிறதில்லை* पावक: பாவக: *தீ* एनं ஏனம் *இதனை* न दहति ந தஹதி *தகிக்கிறதில்லை* आप: ஆப: *ஜலம்* एनं ஏனம் *இதனை* न क्लेदयन्ति ந க்லேதயந்தி *நனைக்கிறதில்லை* मारुत: च மாருத: ச *காற்றும்* न शोषयति ந சோஷயதி *உலர்த்துகிறதில்லை.*

***ஆயுதங்கள் ஆத்மாவை வெட்டமாட்டா. தீ அதை எரிக்காது, நீர் நனைக்காது. காற்றும் அதை உலர்த்தாது.*** **23**

*ஐம்பெரும் பூதங்களில் ஆகாசம் செயலற்றது. ஆகையால் அதைப்பற்றிய பேச்சு ஈண்டு எழவில்லை. பாக்கி நான்கு பூதங்களின் செயல் ஆத்மாவினிடத்துச் செல்லா. மண்ணிலிருந்து ஆயுதம் வருகிறது. பிளவுபடாப் பொருள் ஒன்றை வெட்டுவதெங்ஙனம்? பூதாகாசத்தையே, ஏனைய நான்கு பூதங்களும் விகாரப்படுத்த முடிவதில்லை. பின்பு அதற்கு அப்பாலுள்ள சிதாகாசத்தை அவை பாழ்படுத்தா என்பது சொல்லாமலே விளங்குகிறது.*

*ஆத்மா ஒன்றினோடும் பந்தப்பட்டதன்று. இன்ப துன்பம், பாப புண்ணியம் முதலியன ஒருபோதும் ஒரு விதத்திலும் ஆத்மாவைச் சார்வதில்லை. ஆனால் அவைகள், சரீரமே தாங்களென்று கருதியிருப்போரைச் சார்கின்றன. புகையானது சுவரைக் கரியாக்குமே தவிர, அதனால் சூழப்பட்டிருக்கும் வெளியிடத்தைக் கரியாக்காது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

अच्छेद्योऽयमदाह्योऽयमक्लेद्योऽशोष्य एव च ।
नित्यः सर्वगतः स्थाणुरचलोयं सनातनः ॥ २४

அச்சேத்யோऽயமதாஹ்யோऽயமக்லேத்யோऽசோஷ்ய ஏவ ச |
நித்ய: ஸர்வகத: ஸ்தாணுரசலோயம் ஸநாதன: || 24

अयं அயம் *இவ்வாத்மா* अच्छेद्य: அச்சேத்ய: *வெட்டப்படாதவன்* अदाह्य: அதாஹ்ய: *தகனமடையாதவன்* अक्लेद्य: அக்லேத்ய: *நனையாதவன்* अशोष्य: च एव அசோஷ்ய: ச ஏவ *உலர்பவனு*

*மல்ல* अयं அயம் *இவ்வாத்மா* नित्यः நித்ய: *நித்யமானவன்* सर्वगतः ஸர்வகத: *எங்கும் நிறைந்தவன்* स्थाणुः ஸ்தாணு: *ஸ்திரமானவன்* अचलः அசல: *சலனமில்லாதவன்* सनातनः ஸநாதந: *எப்பொழுதுமிருப்பவன்.*

***இவ்வாத்மா வெட்டுண்ணுன், வேகான், நனையான், உலரான். இவன் நித்தியமாய், நிறைவாய், நிலையாய், அசைவற்றவனுய் என்றுமிருப்பவனும். 24***

*இவ்வாத்மா வெட்டப்படுகிறதில்லையாதலால் அது நித்தியமாயுள்ளது. ஓர் இடத்தில் இருந்து மற்ருேர் இடத்தில் இல்லாதது நித்தியப் பொருள் ஆகாது. ஏனென்ருல் இல்லாத இடத்துக்கு அது அநித்தியமாய்விடும். நித்தியமாதலால் அது எங்கும் நிறைபொருள் ஆகிறது. இடம் மாறுவது அசைவது எனப்படுகிறது. எங்கும் நிறை பொருளோ போவதற்குப் புதிய இடமில்லையாதலால் அது ஸ்தாணு, ஸ்திரமாய் இருப்பது. அப்படி நிலைத்திருப்பதால் அது அசலம், அசைவற்றதெனப்படுகிறது. எதற்குப் போக்கும் வரவும் இல்லையோ அது ஸநாதனம், உண்டுபண்ணப் படாதது, எப்பொழுதுமிருப்பதாகிறது.*

*ஆத்மாவானது சொல்லில் அடங்காத தொன்மையது ஆயினும் வெவ்வேறு சொற்களால் அதை விளக்குவதால் ஏதேனும் ஒருவித விளக்கம் ஒருவர் உள்ளத்தில் படியலாம். அதன் உண்மை மனதில் படிகின்றவளவு துக்க நிவ்ருத்தியாகும். யாண்டும் வேண்டப்படாத துக்கத்தை அக்ஞானத்தால் மனிதன் வருவித்துக் கொண்டு மேன்மைகளை யெல்லாம் இழக்கிருன். அது வேண்டப்படுவதல்ல என்று விளக்குதற்கே வாசுதேவர் இத்தனைவித விளக்கங்களைக் கையாளுகிருர்.*

अव्यक्तोऽयमचिन्त्योऽयमविकार्योऽयमुच्यते ।
तस्मादेवं विदित्वैनं नानुशोचितुमर्हसि ॥ २५

அவ்யக்தோऽயமசிந்த்யோऽயமவிகார்யோऽயமுச்யதே ।
தஸ்மாதேவம் விதித்வைனம் நானுசோசிதுமர்ஹஸி ॥ 25

अयं அயம் *இது (இவ்வாத்மா)* अव्यक्तः அவ்யக்த: *வியக்தமல்லாதது (இந்திரியங்களுக்குத் தோன்றாதது)* अयं அயம் *இது* अचिन्त्यः அசிந்த்ய: *சிந்திக்கமுடியாதது* अयं அயம் *இது* अविकार्यः அவிகார்ய: *விகாரமில்லாதது (மாறுபடாதது)* उच्यते உச்யதே *சொல்லப்படுகிறது* तस्मात् தஸ்மாத் *ஆகையினால்* एवं ஏவம் *இங்ஙனம்* एनं ஏனம் *இதை* विदित्वा விதித்வா *அறிந்து* अनुशोचितुं அனுசோசிதும் *துக்கிப்பதற்கு* न अर्हसि ந அர்ஹஸி *நீ அர்ஹதையுடையவனல்ல.*

***இவ்வாத்மா பொறிகளுக்குத்தென்படாதவன், சிந்தனைக்கு எட்டாதவன், மாறுபடாதவன் எனப்படுகிறான். ஆத்மாவை இங்ஙனம் அறிந்து துன்பத்தை அகற்று.*** **25**

*ஆத்மா ஓர் இந்திரியத்துக்கும் விஷயமாகாதிருப்பதால் அது அவ்யக்தம் எனப்படுகிறது. இந்திரியங்களுக்கு எட்டாப் பொருள் ஒன்று மனதிலும் படியாது. ஆதலால் அது அசிந்த்யம். மாறுபடுகின்ற காற்று, தீ, நீர், நிலம் ஆகிய நான்கு பூதங்களும் நன்கு கட்புலனுவது போன்று மாறுபடாத ஆகாசம் கட்புலனுவதில்லை. ஆகாசத்தின்கண் அவயவங்கள் இன்மையால் அது மாறுதது. சிதாகாசமாகிய ஆத்மாவுக்கும் அவயவம் இல்லையாதலால் விகாரத்தை, மாறுபடும் தன்மையைக் காணமுடியாது. இனி, அதைக் குறித்து வருந்துவது எங்ஙனம் பொருந்தும்?*

*பிரம்மம் எப்படிப்பட்டது? அது வார்த்தைகளால் விவரிக்க முடியாதது. ஸமுத்திரத்தைப் பார்த்திராத ஒருவனுக்கு அது இப்படிப்பட்டதென்று சொல்லும்படி வேறொருவனை நியமித்தால், அவன் 'அது ஒரு பெரிய நீர்ப்பரப்பு; எங்குப் பார்த்தாலும் ஜலந்தான்' என்று மட்டுமே சொல்லக்கூடும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஆத்மா நித்திய வஸ்துவல்ல என்று வைத்துக் கொண்டே விசாரித்துப் பார்க்குமிடத்து:—*

**अथ चैनं नित्यजातं नित्यं वा मन्यसे मृतम् ।**
**तथापि त्वं महाबाहो नैनं शोचितुमर्हसि ॥ २६**

அத சைனம் நித்யஜாதம் நித்யம் வா மன்யஸே ம்ருதம் ।
ததாபி த்வம் மஹாபாஹோ நைனம் சோசிதுமர்ஹஸி ॥ 26

अथ च அத ச *ஒருவேளை* एनं ஏனம் *இவ்வாத்மா* नित्यजातं நித்யஜாதம் *என்றும் பிறப்பதாகவும்* नित्यम् நித்யம் *எப்பொழுதும்* मृतं वा ம்ருதம் வா *இறப்பதாகவும்* मन्यसे மன்யஸே *நினைக்கிறாய்* तथापि ததாபி *அப்பொழுதும்* महाबाहो மஹாபாஹோ *தோள்வலிவுடையவனே* त्वं த்வம் *நீ* एनं ஏனம் *இவ்வாத்மாவைக்குறித்து* शोचितुं சோசிதும் *வருந்த* न अर्हसि ந அர்ஹஸி *தகுந்தவனாகாய்.*

***ஒருவேளை இவ்வாத்மா என்றும் பிறந்து என்றும் மடிவடைகிறானென்று எண்ணுவாயானால், அப்பொழுதும், பெருந்தோளுடையாய், அவன் பொருட்டு நீ வருந்துதல் பொருந்தாது. 26***

*நித்திய வஸ்து ஒன்றும் இல்லை என்பது லோகாயதர்களுடைய கோட்பாடு. பேச்சுக்காக பகவான் இங்கு அதை எடுத்துக் கொள்கிறார். அவர்களுடைய கொள்கை உண்மையெனின் அப்பொழுதும் வருந்துதற்கு இடமில்லை. ஒருவன் ஆஸ்திகனாக இருப்பதும் நாஸ்திகனாயிருப்பதும் அவனுடைய வாழ்க்கைக்கு முக்கியமானதன்று. கொள்கை எதுவாயினும் அவன் வருத்தப்படாதிருக்க வேண்டும். துயரம் ஒரு மனிதனை அழித்துவிடுவது போன்று வேறு எதுவும் கேடு செய்யாது.*

जातस्य हि ध्रुवो मृत्युर्ध्रुवं जन्म मृतस्य च ।
तस्मादपरिहार्येऽर्थे न त्वं शोचितुमर्हसि ॥ २७

ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யுர்த்ருவம் ஜன்ம ம்ருதஸ்ய ச ।
தஸ்மாதபரிஹார்யேऽர்த்தே ந த்வம் சோசிதுமர்ஹஸி ॥ 27

जातस्य हि ஜாதஸ்ய ஹி *பிறந்தவனுக்கோ* मृत्युः ம்ருத்யு: *மரணம்* ध्रुवं த்ருவம் *நிச்சயம்* मृतस्य च ம்ருதஸ்ய ச *இறந்தவனுக்கும்* जन्म ஜன்ம *பிறப்பு* ध्रुवं த்ருவம் *நிச்சயம்* तस्मात् தஸ்மாத் *ஆகையினால்* अपरिहार्ये अर्थे அபரிஹார்யே அர்த்தே *பரிஹாரம் செய்துகொள்ளமுடியாத விஷ*

*யத்தில்* त्वं த்வம் *நீ* शोचितुं சோசிதும் न अर्हसि ந அர்ஹஸி *அர்ஹதையில்லாதவனாகிறாய்.*

***பிறந்தவன் இறப்பதும், இறந்தவன் பிறப்பதும் உறுதியெனில் விலக்கமுடியாத விஷயத்தில் நீ வருந்துவது பொருத்தமாகாது.*** **27**

*இது இன்னும் முக்தியடையாதவர்களைக் குறித்துப் பேசும் பேச்சாகும். ஆசை இருக்கும் பரியந்தம் பிறப்பதும் இறப்பதும் இயல்பு. வினையின்படி வருகிற சாவைத் தடுக்க யாருக்கும் இயலாது.*

*நாஸ்திகரின் கோட்பாட்டின்படி வினையிருக்கும் பரியந்தம் பிறப்பு இறப்பு இருக்கிறது. வினைமுடிவது தீபத்தில் எண்ணெய் முடிவது போன்றது. எரிகின்ற தீபம் பிறகு ஒன்றுமில்லாது போய்விடுகிறது. அதே பாங்கில் வினை முடிந்ததும் மனிதன் என்னும் தோற்றம் கலைந்து போய்விடுகிறது.*

*நவீன நாஸ்திகர்களுக்கிடையில் இன்னொரு கோட்பாடு உண்டு. களிமண்ணில் வடிவம் செய்து உருமாற்றுவது போன்று பிரகிருதியில் உயிர்கள் என்ற வடிவங்கள் மாறி மாறி அமைகின்றன. அச்செயல் பிறப்பு இறப்பு என்னும் பெயர் பெறுகிறது. அதற்கு ஏன் வருந்தவேண்டும் என்பது கேள்வி.*

**अव्यक्तादीनि भूतानि व्यक्तमध्यानि भारत ।**
**अव्यक्तनिधनान्येव तत्र का परिदेवना ॥ २८**

அவ்யக்தாதீனி பூதானி வ்யக்தமத்யானி பாரத ।
அவ்யக்தநிதனன்யேவ தத்ர கா பரிதேவனு ॥ 28

भारत பாரத *பாரதா* भूतानि பூதானி *பிராணிகள்* अव्यक्तादीनि அவ்யக்தாதீனி *ஆதியில் தென்படாதவைகளாகவும்* व्यक्तमध्यानि வ்யக்தமத்யானி *மத்தியில் தென்படுபவைகளாகவும்* अव्यक्तनिधनानि एव அவ்யக்தநிதனனி ஏவ *முடிவில் காணப்படாதவைகளாகவும்* ... *ன்*

றன तत्र தத்ர அது விஷயத்தில் का கா என்ன परिदेवना பரிதேவநு துக்கம்?

***பாரதா, உயிர்கள் துவக்கத்தில் தோன்ருமலும், இடையில் தோன்றியும், இறுதியில் தோன்ருமலும் இருக்கின்றன. இதைக்குறித்து வருந்துவானேன்?*** **28**

*உற்ருர் உறவினரெனத் தோன்றும் உயிர்களெல்லாம் இடையில் வந்தவர்கள். கனவில் காணப்படுபவர் முன்பிருந்ததில்லை, பின்பு இருக்கப்போவதில்லை. இடையில் இருந்தும் உண்மையில் இல்லாதவரேயாம். பந்துக்கள் எனப்படுபவர்கள் லோகாயதர்களின் கோட்பாட்டின்படி பூதங்களின் சேர்க்கையால் காரண காரியமாக இடையில் வந்தவர்கள். கடைசியில் அவர்கள் இருக்கப்போவதில்லை. ஆகையால் இடையில் தோன்றியுள்ளவர்களுக்காக இன்னல் படுவது தகாது.*

*லோகாயதத்தின் கோட்பாடு இது ஈருக மூன்று சுலோகங்களில் முடிந்துவிடுகிறது. பழையபடி ஆத்ம தத்துவ விசாரத்துக்குப் பகவான் திரும்புகிருர்:—*

**आश्चर्यवत्पश्यति कश्चिदेनं आश्चर्यवद्वदति तथैव चान्यः ।**
**आश्चर्यवच्चैनमन्यः शृणोति श्रुत्वाप्येनं वेद न चैव कश्चित् ॥ २९**

ஆஸ்சர்யவத்பச்யதி கஸ்சிதேனம்
ஆஸ்சர்யவத்வததி ததைவ சான்ய: ।
ஆஸ்சர்யவச்சைனமன்ய: ச்ருணோதி
ச்ருத்வாப்யேனம் வேத ந சைவ கஸ்சித் ॥ 29

कश्चित् கஸ்சித் *ஒருவன்* एनं ஏனம் *இவ்வாத்மாவை* आश्चर्यवत् ஆஸ்சர்யவத் *ஆச்சரியமானது போல* पश्यति பச்யதி *காண்கிருன்* तथा एव च ததா ஏவ ச *அங்ஙனமே* अन्यः அன்ய: *இன்ெனருவன்* आश्चर्यवत् ஆஸ்சர்யவத் *ஆச்சரியம் போல* वदति வததி *பேசுகிருன்* अन्यः च அன்ய: ச *வேறு ஒருவன்* एनं ஏனம் *இவ்வாத்மாவை* आश्चर्यवत् ஆஸ்சர்யவத் *ஆச்சரியம் போல* शृणोति ச்ருணோதி *கேட்கிருன்* कश्चित् च

கஸ்சித் ச *மற்றும் ஒருவன்* श्रुत्वा अपि ச்ருத்வா அபி *கேட்டாலும்* एनम् ஏனம் *இவ்வாத்மாவை* न एव वेद ந ஏவ வேத *அறிகிறதேயில்லை.*

***இவ்வாத்மா வியப்புக்குரியதென்று விழிக்கிறுனொருவன், இது என்ன விந்தையென்று விள்ளுகிறுன் வேறு ஒருவன், ஆச்சரியம் என்று காது கொடுக்கிறுன் இன்னொருவன், மற்றொருவன் இதைக் கேட்டும் அறிந்திலன். 29***

*கட்புலனுகின்ற உலகப் பொருள்களைப் போன்றதல்ல ஆத்மா. பொறி புலன்களுக்கு அதீதத்திலுள்ளதை ஆராய்ச்சி செய்யும் வாய்ப்பே ஆயிரத்தில் ஒருவனுக்குக் கிடைப்பதரிது. ஆகையால் ஆத்ம விசாரம் செய்கின்றவர்களே ஆச்சரியத்துக்குரியவர்களாம். மனபரிபாகம் ஏற்படாமையால் அவர்களில் பெரும்பான்மையோருக்கு ஆத்ம தத்துவம் விளங்குவதில்லை. அழுக்குப்படிந்த கரடு முரடான கண்ணுடியின் வாயிலாக விளக்கு வெளிச்சம் சிதைந்து வெளிவருவது போன்று ஆத்ம சொரூபம் அவர்களுக்கு விளங்கியும் விளங்காமலும் இருக்கிறது. தியானுவஸ்தையில் அல்லது விழிப்பில் அதைக்கண்டதாக எண்ணிக்கொண்டு ஒருவன் வியப்படைகிறுன். காணுதல், கேட்டல், எண்ணுதல் ஆகிய இத்தனை விதங்களிலும் அதைப்பற்றி ஆச்சரியப்படுவது இயல்பு. எத்தனை விதங்களில் பார்த்தாலும், கேட்டாலும், எண்ணினுலும் அது தென்பட்டும் தென்படாமலும் இருக்கிறது. மனது என்னும் திரையையுடைய மனிதரில் ஆத்மாவை உள்ளபடி அறிந்தவன் யார் ?*

*வேதங்கள், தந்திரசாஸ்திரங்கள், புராணங்கள் ஆகிய உலகிலுள்ள எல்லாக்கிரந்தங்களும் வாயினின்று துப்பிய சோற்றைப் போல், எச்சிலாகிவிட்டன என்று சொல்லலாம். ஏனெனில், அவைகள் அடிக்கடி மனிதர்களுடைய வாயினுல் உச்சரிக்கப்படுகின்றன. அகண்ட ஸ்வரூபமான பிரம்மமோ அப்படி ஒருபோதும் எச்சிலானதில்லை. ஏனென்ருல், இதுவரையில் வார்த்தைகளால் அதை விவரித்துச்சொல்ல ஒருவராலும் முடியவில்லை.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

அத்தகைய ஆத்மாவைப்பற்றிய உண்மை என்ன வென்றால் :—

देही नित्यमवध्योऽयं देहे सर्वस्य भारत ।
तस्मात्सर्वाणि भूतानि न त्वं शोचितुमर्हसि ॥ ३०

தேஹீ நித்யமவத்யோऽயம் தேஹே ஸர்வஸ்ய பாரத ।
தஸ்மாத்ஸர்வாணி பூதானி ந த்வம் சோசிதுமர்ஹஸி ॥ 30

भारत பாரத *பாரதா* सर्वस्य ஸர்வஸ்ய *எல்லாருடைய* देहे தேஹே *தேகத்தில்* अयं அயம் *இந்த* देही தேஹீ *தேகி (ஆத்மா)* नित्यं நித்யம் *எப்பொழுதும்* अवध्यः அவத்ய: *வதை செய்யப்படாதது* तस्मात् தஸ்மாத் *ஆகையினால்* त्वं த்வம் *நீ* सर्वाणि भूतानि ஸர்வாணி பூதானி *எல்லா உயிர்களையும் குறித்து* शोचितुं சோசிதும் *விசனப்பட* न अर्हसि ந அர்ஹஸி *அர்ஹதையுடையவனாகாய்.*

***பாரதா, உடல்கள் அனைத்திலும் உறைகின்ற ஆத்மா என்றும் வதைக்கப்படாதவன். ஆகையால் உயிர்களின் பொருட்டு நீ வருந்துதல் வேண்டாம். 30***

*லோகாயதர்களுடைய கோட்பாடு இங்கு நிராகரிக்கப்படுகிறது. அதன்மேல் ஆத்ம தத்துவத்தைப்பற்றிய முடிவான சித்தாந்தமும் இயம்பப்படுகிறது. ஆத்ம ஞானமும் துக்க நிவ்ருத்தியும் மேன்மைக்கு இன்றியமையாதவைகள் என்பது நன்கு வற்புறுத்தப்படுகின்றன.*

*யாரோ தன்னைத் துண்டு துண்டாக வெட்ட வருவதாக ஒருவன் கனவு காண்கிறான். பயந்துபோய் உளறிக்கொண்டு அவன் எழுந்திருக்கிறான். கதவைப்பார்க்கிறான. அது உட்பக்கமாகவே தாளிடப்பட்டிருப்பதையும், உள்ளே ஒருவருமில்லை என்பதையும் தெரிந்துகொள்கிறான். என்றாலும் அவன் நெஞ்சு சற்று நேரம் வரையில் படபடவென்றடித்துக் கொண்டேயிருக்கும். இது தேகத்தின் மீது கொண்டுள்ள அபிமானத்தின் அடையாளமாம்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*பாரமார்த்திகத்தைப் பகர்ந்தான பிறகு வியவகார தசையும் இனி விளக்கப்படுகிறது:—*

स्वधर्ममपि चावेक्ष्य न विकम्पितुमर्हसि ।
धर्म्याद्धि युद्धाच्छ्रेयोऽन्यत्क्षत्रियस्य न विद्यते ॥ ३१

ஸ்வதர்மமபி சாவேக்ஷ்ய ந விகம்பிதுமர்ஹஸி ।
தர்ம்யாத்தி யுத்தாச்ச்ரேயோऽன்யத்க்ஷத்ரியஸ்ய ந வித்யதே ॥

स्वधर्मं ஸ்வதர்மம் *ஸ்வதர்மத்தை* अवेक्ष्य अपि च அவேக்ஷ்ய அபி ச *நோக்குமிடத்தும்* विकम्पितुं விகம்பிதும் *நடுங்க* न अर्हसि ந அர்ஹஸி *அர்ஹதையுடையவனாய்* हि ஹி *ஏனென்றால்* धर्म्यात् युद्धात् தர்ம்யாத் யுத்தாத் *தர்மமயமான யுத்தத்தைக் காட்டிலும்* क्षत्रियस्य க்ஷத்ரியஸ்ய *க்ஷத்திரியனுக்கு* अन्यत् அன்யத் *வேறு* श्रेयः ச்ரேய: *சிறப்பு* न विद्यते ந

***ஸ்வதர்மத்தை நோக்குமிடத்தும் நீ மனம் நடுங்கலாகாது. அறப்போரைக் காட்டிலும் வேறு சிறப்பு அரசனுக்கில்லை.*** **31**

*அரசனுக்கு உயிரிலும் பெரிதாக உள்ளது அறம். இதுபோன்ற போர்புரிவதால் அறம் வளர்க்கப்படுகிறது. போரினின்று விலகுவதால் மறம் மேலோங்குகிறது. மறம் மேலோங்க விடுபவன் அரசன் ஆகான். அறம் செய்யாது மறம் செய்யும் மனிதனே சிரேயஸைப் பெறாது இழிவை அடைவான். ஒரு மனிதனுக்கு சிரேயஸைத் தருபவைகளில் முதலானது ஸ்வதர்மம். எம்மனிதன் எச்செயலுக்கு நன்கு தகுதியுடையவனாகிறானோ அச்செயல் அவனுடைய ஸ்வதர்மமாம். கிடைப்பதற்கு அரிய ஆங்காலம் அல்லது அனுகூலமான காலத்தை ஒரு மனிதன் எப்படிப் பயன் ...ும் என்ற கேள்விக்கு இனி விடைவருகிறது:—*

यदृच्छया चोपपन्नं स्वर्गद्वारमपावृतम् ।
सुखिनः क्षत्रियाः पार्थ लभन्ते युद्धमीदृशम् ॥ ३२

யத்ருச்சயா சோபபன்னம் ஸ்வர்க்கத்வாரமபாவ்ருதம் ।
ஸுகின: க்ஷத்ரியா: பார்த்த லபந்தே யுத்தமீத்ருசம் ॥ 32

पार्थ பார்த்த *பார்த்தா* यदृच्छया யத்ருச்சயா *தற்செயலாய்* उपपन्नं உபபன்னம் *நேர்ந்துள்ள* अपावृतं स्वर्गद्वारं அபாவ்ருதம் ஸ்வர்க த்வாரம் *திறந்துள்ள சுவர்க்கவாயில்* ईदृशं ஈத்ருசம் *இது போன்ற* युद्धं யுத்தம் *யுத்தம்* सुखिनः ஸுகின: *பாக்கியவான்களாகிய* क्षत्रियाः க்ஷத்ரியா: *க்ஷத்திரியர்கள்* च ச *நிச்சயமாக* लभन्ते லபந்தே *அடைகிறார்கள்.*

***பார்த்தா, தற்செயலாய் நேர்ந்ததும் திறந்த சுவர்க்க வாயில் போன்றதுமான இந்த யுத்தத்தை பாக்கியவான்களாகிய க்ஷத்திரியர்களே அடைகிறார்கள்.*** **32**

*வாழ்க்கையில் தற்செயலாய் வந்தமையும் ஆங்காலம் ஒவ்வொரு மனிதனுக்கும் உண்டு. முறைபிறழாது ஒருவன் தன் கடமையைச் செய்துகொண்டுபோக வல்லவனாகவேண்டும். நதியில் நீரோட்டத்தை எதிர்த்து ஓடத்தைச் செலுத்துவது போன்று அது இடர் சூழ்ந்த செயலாகும். பிறகு கடல் பொங்கும் வேளையொன்று வருகிறது. அப்பொழுது நதியில் நீர் எதிர்த்து ஓடுகிறது. ஓடத்தைக் கடத்துதற்கு அது அனுகூலமாகிறது. துடுப்புப் போடாவிட்டாலும் அது குறியை நோக்கி நகர்கிறது. தொடர்ந்து காற்றும் வசதியாக வீசுகிறது. அப்பொழுது பாயை விரிப்பதுதான் பாக்கி. சிறு முயற்சியில் பெரிய காரியம் நிறைவேறுகிறது. இதுதான் தற்செயலாய் வந்தமையும் நற்காலம். அர்ஜுனனுக்கு அந்த வாய்ப்பு இப்பொழுது கிடைத்திருக்கிறது. வனவாச துக்கமும் சோதனையும் முடிவடைந்துவிட்டன. இனி, தன் கடமையைச் சிறிது முயற்சியோடு செய்தால் போதுமானது. வலியவந்து விண்ணுலகும், மண்ணுலகும், வெற்றியும் கீர்த்தியும் அமையப் போகின்றன. க்ஷத்திரிய தர்மத்தைப்பற்றிய சந்தேகமும் மனக்கிலேசமும் இவ்வேளையில் பொருந்தா.*

*இதுபோன்று ஆங்காலம் எல்லா மனிதருக்கும் எப்பொழுதாவது வந்து அமைவதுண்டு. அதைப் பயன்படுத்*

*தத் தெரிந்துகொள்பவனே இவ்வுலகில் சீரும் சிறப்பும் அடையப்பெறுகிறான்.*

*ஆங்காலத்தைப் பயன்படுத்தாது விட்டுவிட்டால் வரும் கேடு யாது என்பதற்கு விடைவருகிறது:—*

**अथ चेत्त्वमिमं धर्म्यं संग्रामं न करिष्यसि ।**
**ततः स्वधर्मं कीर्तिं च हित्वा पापमवाप्स्यसि ॥ ३३**

**அத சேத் த்வமிமம் தர்ம்யம் ஸங்க்ராமம் ந கரிஷ்யஸி ।**
**தத꞉ ஸ்வதர்மம் கீர்த்திம் ச ஹித்வா பாபமவாப்ஸ்யஸி ॥ 33**

अथ அத *ஆனால்* त्वं த்வம் *நீ* इमं धर्म्यं संग्रामं இமம் தர்ம்யம் ஸங்க்ராமம் *இந்த தர்மமயமான யுத்தத்தை* न करिष्यसि चेत् ந கரிஷ்யஸி சேத் *செய்யாமற்போவாயாகில்* ततः தத꞉ *அதனால்* स्वधर्मं कीर्तिं च ஸ்வதர்மம் கீர்த்திம் ச *ஸ்வதர்மத்தையும் கீர்த்தியையும்* हित्वा ஹித்வா *இழந்து* पापं பாபம் *பாபத்தை* अवाप्स्यसि அவாப்ஸ்யஸி *அடைவாய்*

***அறப்போர் ஆகிய இதனை ஆற்றுயேல் அதனால் நீ ஸ்வதர்மத்தையும் கீர்த்தியையும் இழந்து பாபத்தை அடைவாய். 33***

*அதர்மத்தைச் செய்பவன் யாண்டும் கேடு அடைகிறான். தன் கடமையாக வந்து அமைந்த தர்மத்தைத்தக்க தருணத்தில் செய்யாதவன் அதனினும் பெருங்கேட்டை அடைகிறான். தகாததைச் செய்வதால் வரும் கேட்டைவிடப் பெரியதாம், தகுந்ததைச் செய்யாமையால் வரும் கேடானது.*

*முறையான இகலோக வாழ்க்கையைக் கீர்த்தி பின் தொடர்வது போன்று முறைதவறிய வாழ்க்கையை அபகீர்த்தி பின் தொடர்கிறது. அது எப்படியெனில் :—*

**अकीर्तिं चापि भूतानि कथयिष्यन्ति तेऽव्ययाम् ।**
**संभावितस्य चाकीर्तिर्मरणादतिरिच्यते ॥ ३४**

அகீர்த்திஞ்சாபி பூதானி கதயிஷ்யந்தி தேऽவ்யயாம் ।
ஸம்பாவிதஸ்ய சாகீர்த்திர்மரணாததிரிச்யதே ॥ 34

अपि च அபி ச *இன்னும்* भूतानि பூதாநி *உயிர்கள்* ते தே *உன்னைப்பற்றி* अव्ययां அவ்யயாம் *யாண்டும்* अकीर्तिं அகீர்த்திம் *அபகீர்த்தியை* कथयिष्यन्ति கதயிஷ்யந்தி *பேசுவார்கள்* संभावितस्य ஸம்பாவிதஸ்ய *நன்கு போற்றப்பட்டிருப்பவனுக்கு* अकीर्तिः அகீர்த்தி: *அபகீர்த்தியானது* मरणात् மரணாத் *மரணத்தைக்காட்டிலும்* च ச *நிச்சயமாக* अतिरिच्यते அதிரிச்யதே *அதிகமாகும்.*

***மானுடர் உன்னை யாண்டும் இகழ்ந்து பேசுவார்கள். போற்றுதலுக்குரிய ஒருவன் தூற்றப்படுவது இறப்பதிலும் இழிதே. 34***

*எப்படியாவது உயிர்வாழ்ந்திருக்கவேண்டும் என்ற உணர்ச்சி விலங்கினத்தைச் சேர்ந்தது. வீரன் ஒருவனுக்கோ நன்கு உயிர் வாழவும் தெரியும், வேண்டுமிடத்து உயிர் வழங்கவும் தெரியும். அப்படி முறையாக மகிழ்ச்சியுடன் உயிரைக் கொடுப்பதால் அவன் புகழ் பரவுகிறது. எதிரி காலால் உதைக்கையில் அவன் காலைத்தொட்டு வணங்கி உயிர்ப்பிச்சை கேட்பது எவ்வளவு இழிவோ அதிலும் பன்மடங்கு புன்மையது பழிக்கு ஆளாகி உயிர்வாழ்ந்திருத்தல்.*

*உலகில் பழிப்பவர் தமது மனதுக்குத் தோன்றியதையெல்லாம் முகாமையாக வைத்துப் பழிப்பர். எப்படியெனில்:—*

भयाद्रणादुपरतं मंस्यन्ते त्वां महारथाः ।
येषां च त्वं बहुमतो भूत्वा यास्यसि लाघवम् ॥ ३५

பயாத்ரணாதுபரதம் மம்ஸ்யந்தே த்வாம் மஹாரதா: ।
யேஷாம் ச த்வம் பஹுமதோ பூத்வா யாஸ்யஸி லாகவம் ॥ 35

महारथाः ச மஹாரதா: ச *மகாரதிகர்களும்* त्वां த்வாம் *உன்னை* भयात् பயாத் *பயத்தினால்* रणात् ரணாத் *யுத்தத்தினின்று* उपरतं உபரதம் *பின்னடைந்தவன் (என்று)* मंस्यन्ते மம்ஸ்யந்தே *நினைப்பார்கள்* येषां யேஷாம் *எவர்களிடத்தில்* त्वं த்வம் *நீ* बहुमतः பஹுமத: *வெகுமதிக்கப்பட்டு* भूत्वा பூத்வா *இருந்துவிட்டு* लाघवं லாகவம் *சிறுமையை* यास्यसि யாஸ்யஸி *பெறுவாய்.*

**பயத்தால் போரினின்று நீ பின்வாங்கினு யென்று மகாரதிகர்கள் எண்ணுவார்கள். எவர் பால் நீ பெருமை பெற்றிருந்தாயோ அவர்பால் சிறுமை யுறுவாய்.** **35**

ஜன்ம சத்துருக்களாகிய துர்யோதனன் முதலாயி ஞேர் அர்ஜுனனுடைய பராக்கிரமத்தைப் பாராட்டவேண் டிய அவசியம் ஏற்பட்டிருந்தது. மகாதேவனை எதிர்த்துப் போர்புரிந்தவன் என்றும், பாசுபதாஸ்திரத்தைப் பெற்ற வன் என்றும் பார்த்தனைப் பாராட்டி வந்துள்ளார்கள். ஆனால் அவனை எப்படியாவது அழித்துவிடவேண்டும் என்ற கெட்ட எண்ணம் கொண்டவர்கள் அவர்கள். இந்த நெருக்கடியில் அர்ஜுனன் அன்பின் வழியில் பின்வாங்கி ஞன் என்று அவர்கள் பொருள்படுத்தமாட்டார்கள். அஞ் சிப் புறங்காட்டி ஓடினான் என்று இகழ்வார்கள். போற்று தல் மிக எளிதில் தூற்றுதலாக மாறிவிடும். அந்த இகழ்ச் சிக்குப் பிறகு எவ்விதத்திலும் ஈடுதேடிக்கொள்ள முடியாது. பயம் வீரனுக்கு அழகன்று. பயமுடையார் இவ்வுலகில் எதற்கும் உதவார் என்பது வெளிப்படை. அச்சத்துக்கு இடங்கொடுத்து நாளைக்கு வருந்துதற்கேற்ற ஒரு செயலை இன்று செய்வது தகாது.

எள்ளி நகையாடுதல் இன்னும் எப்படியெல்லாம் வடிவெடுக்கும் எனில் :—

**अवाच्यवादांश्च बहून्वदिष्यन्ति तवाहिताः ।**
**निन्दन्तस्तव सामर्थ्यं ततो दुःखतरं नु किम् ॥ ३६**

அவாச்யவாதாம்ஸ்ச பஹூன்வதிஷ்யந்தி தவாஹிதா: ।
நிந்தந்தஸ்தவ ஸாமர்த்யம் ததோ து:கதரம் நு கிம் ॥ 36

तव தவ *உன்னுடைய* अहिताः च அஹிதா: ச *சத்துருக்களும்* तव தவ *உன்னுடைய* सामर्थ्यं ஸாமர்த்யம் *ஸாமர்த்தியத்தை* निन्दन्तः நிந்தந்த: *நிந்திக்கிறவர்களாக* बहून् பஹூன் *பல* अवाच्यवादान् அவாச்ய வாதான் *சொல்லத்தகாத வார்த்தைகளை* वदिष्यन्ति வதிஷ்யந்தி *சொல்லு*

अपि च அபி ச *இன்னும்* भूतानि பூதானி *உயிர்கள்* ते தே *உன்னைப்பற்றி* अव्ययां அவ்யயாம் *யாண்டும்* अकीर्तिं அகீர்த்திம் *அபகீர்த்தியை* कथयिष्यन्ति கதயிஷ்யந்தி *பேசுவார்கள்* संभावितस्य ஸம்பாவிதஸ்ய *நன்கு போற்றப்பட்டிருப்பவனுக்கு* अकीर्तिः அகீர்த்தி: *அபகீர்த்தியானது* मरणात् மரணாத் *மரணத்தைக்காட்டிலும்* च ச *நிச்சயமாக* अतिरिच्यते அதிரிச்யதே *அதிகமாகும்.*

***மானுடர் உன்னை யாண்டும் இகழ்ந்து பேசுவார்கள். போற்றுதலுக்குரிய ஒருவன் தூற்றப்படுவது இறப்பதிலும் இழிதே. 34***

*எப்படியாவது உயிர்வாழ்ந்திருக்கவேண்டும் என்ற உணர்ச்சி விலங்கினத்தைச் சேர்ந்தது. வீரன் ஒருவனுக்கோ நன்கு உயிர் வாழவும் தெரியும், வேண்டுமிடத்து உயிர் வழங்கவும் தெரியும். அப்படி முறையாக மகிழ்ச்சியுடன் உயிரைக் கொடுப்பதால் அவன் புகழ் பரவுகிறது. எதிரி காலால் உதைக்கையில் அவன் காலைத்தொட்டு வணங்கி உயிர்ப்பிச்சை கேட்பது எவ்வளவு இழிவோ அதிலும் பன்மடங்கு புன்மையது பழிக்கு ஆளாகி உயிர்வாழ்ந்திருத்தல்.*

*உலகில் பழிப்பவர் தமது மனதுக்குத் தோன்றியதையெல்லாம் முகாமையாக வைத்துப் பழிப்பர். எப்படியெனில்:—*

भयाद्रणादुपरतं मंस्यन्ते त्वां महारथाः ।
येषां च त्वं बहुमतो भूत्वा यास्यसि लाघवम् ॥ ३५

பயாத்ரணாதுபரதம் மம்ஸ்யந்தே த்வாம் மஹாரதா: |
யேஷாம் ச த்வம் பஹுமதோ பூத்வா யாஸ்யஸி லாகவம் || 35

महारथाः च மஹாரதா: ச *மகாரதிகர்களும்* त्वां த்வாம் *உன்னை* भयात् பயாத் *பயத்தினால்* रणात् ரணாத் *யுத்தத்தினின்று* उपरतं உபரதம் *பின்னடைந்தவன் (என்று)* मंस्यन्ते மம்ஸ்யந்தே *நினைப்பார்கள்* येषां யேஷாம் *எவர்களிடத்தில்* त्वं த்வம் *நீ* बहुमतः பஹுமத: *வெகுமதிக்கப்பட்டு* भूत्वा பூத்வா *இருந்துவிட்டு* लाघवं லாகவம் *சிறுமையை* यास्यसि யாஸ்யஸி *பெறுவாய்.*

***பயத்தால் போரினின்று நீ பின்வாங்கினு யென்று மகாரதிகர்கள் எண்ணுவார்கள். எவர் பால் நீ பெருமை பெற்றிருந்தாயோ அவர்பால் சிறுமை யுறுவாய். 35***

*ஜன்ம சத்துருக்களாகிய துர்யோதனன் முதலாயி ஞோர் அர்ஜுனனுடைய பராக்கிரமத்தைப் பாராட்டவேண் டிய அவசியம் ஏற்பட்டிருந்தது. மகாதேவனை எதிர்த்துப் போர்புரிந்தவன் என்றும், பாசுபதாஸ்திரத்தைப் பெற்ற வன் என்றும் பார்த்தனைப் பாராட்டி வந்துள்ளார்கள். ஆனால் அவனை எப்படியாவது அழித்துவிடவேண்டும் என்ற கெட்ட எண்ணம் கொண்டவர்கள் அவர்கள். இந்த நெருக்கடியில் அர்ஜுனன் அன்பின் வழியில் பின்வாங்கி னுன் என்று அவர்கள் பொருள்படுத்தமாட்டார்கள். அஞ் சிப் புறங்காட்டி ஓடினுன் என்று இகழ்வார்கள். போற்று தல் மிக எளிதில் தூற்றுதலாக மாறிவிடும். அந்த இகழ்ச் சிக்குப் பிறகு எவ்விதத்திலும் ஈடுதேடிக்கொள்ள முடியாது. பயம் வீரனுக்கு அழகன்று. பயமுடையார் இவ்வுலகில் எதற்கும் உதவார் என்பது வெளிப்படை. அச்சத்துக்கு இடங்கொடுத்து நாளைக்கு வருந்துதற்கேற்ற ஒரு செயலை இன்று செய்வது தகாது.*

*எள்ளி நகையாடுதல் இன்னும் எப்படியெல்லாம் வடிவெடுக்கும் எனில் :—*

**अवाच्यवादांश्च बहून्वदिष्यन्ति तवाहिताः ।**
**निन्दन्तस्तव सामर्थ्यं ततो दुःखतरं नु किम् ॥ ३६**

அவாச்யவாதாம்ஸ்ச பஹூன்வதிஷ்யந்தி தவாஹிதா: ।
நிந்தந்தஸ்தவ ஸாமர்த்யம் ததோ து:கதரம் நு கிம் ॥ 36

तव தவ *உன்னுடைய* अहिताः च அஹிதா: ச *சத்துருக்களும்* तव தவ *உன்னுடைய* सामर्थ्यं ஸாமர்த்யம் *ஸாமர்த்தியத்தை* निन्दन्तः நிந்தந்த: *நிந்திக்கிறவர்களாக* बहून् பஹூன் *பல* अवाच्यवादान् அவாச்ய வாதான் *சொல்லத்தகாத வார்த்தைகளை* वदिष्यन्ति வதிஷ்யந்தி *சொல்லு*

*வார்கள்* तत: தத: *அதைக்காட்டிலும்* दु:खतरं துக்கதரம் *பெருந்துன்பம்* किं नु கிம் நு *யாது உளது?*

***உன் பகைவர்கள் உன் திறமையைப்பழித்துப் பகரவொணுச் சுடு சொற்களைச் செப்புவார்கள். அதைவிடப் பெருந்துன்பம் யாது உளது? 36***

ஒருவன் கெட்டுப் போய்விட்டால் அவனுடைய வாழ்க்கையின் காட்சி திடீரென்று மாறிவிடுகிறது. காலமெல்லாம் அர்ஜுனனைப் புகழ்ந்துகொண்டிருந்தவர்கள் இனி இகழ்ந்து பேசுதற்குக் கூசார்கள். அவன் பெற்றிருந்தது பொருள் சேர்ந்த புகழ்ச்சி. அவனைப்பற்றி நினைக்கும்பொழுதே எதிரியின் உள்ளத்தில் அச்சம் வடிவெடுக்கும். பரபரப்போடு பார்த்தன் போர்க்களத்துக்கு வந்தது பகைவர் உற்சாகத்துக்கே அணைகட்டிற்று. இனி, அவன் பின்வாங்குவாணுகில் அங்ஙனம் கட்டப்பட்ட அணை உடைக்கப்படும். முன்பு தாங்கள் புகழ்ந்து பேசியதற்கே புதிய வியாக்யானம் வந்துவிடும். மனிதனுல் கேட்டு சகிக்க முடியாத சுடு சொற்களை வேண்டியவாறெல்லாம் வழங்குவார்கள். இவ்வேளையில் யுத்தத்தினின்று விலகுவது பெருந் தவருகும். அதனுல் அர்ஜுனனுடைய ஆண்மையே அடிபட்டுப்போம். அதற்குமேல் பெருவாரியாக வரும் வசைச் சொற்கள் அவனை இடையருது துன்புறுத்திக் கொண்டிருக்கும். சிறுமையையும் துன்பத்தையும் வலிய வருவித்துக் கொள்வானேன்?

போர்புரிவது பெருங்கேடு என்று சொன்ன அர்ஜுனனுக்கு பகவான் என்ன சொல்லுகிருர் பார்ப்போம் :—

**हतो वा प्राप्स्यसि स्वर्गं जित्वा वा भोक्ष्यसे महीम् ।**
**तस्मादुत्तिष्ठ कौन्तेय युद्धाय कृतनिश्चयः ॥ ३७**

ஹதோ வா ப்ராப்ஸ்யஸி ஸ்வர்க்கம் ஜித்வா வா போக்ஷ்யஸே
தஸ்மாதுத்திஷ்ட்ட கௌந்தேய யுத்தாய க்ருதநிஸ்சய:॥ [மஹீம் ।

हत: वा ஹத: வா *கொல்லப்பட்டாலோ* स्वर्गं प्राप्स्यसि ஸ்வர்க்கம் ப்ராப்ஸ்யஸி *சுவர்க்கத்தைப்பெற்றிடுவாய்* जित्वा वा ஜித்வா வா *ஜயித்தாலோ* महीं மஹீம் *பூமியை* भोक्ष्यसे போக்ஷ்யஸே *அனுபவிப்பாய்* तस्मात् தஸ்மாத் *ஆகையினால்* कौन्तेय கௌந்தேய *குந்தியின் புதல்வா* युद्धाय யுத்தாய *யுத்தத்தின்பொருட்டு* कृतनिश्चय: க்ருதநிஸ்சய: *நிச்சயித்துக்கொண்டு* उत्तिष्ठ உத்திஷ்ட *எழுந்திரு.*

***போரில் மடிந்தால் பொன்னுலகைப்பெற்றிடுவாய், வென்றால் மண்ணுலகை ஆண்டு அனுபவிப்பாய். ஆகையால் கௌந்தேய, போரின் பொருட்டு உறுதிகொண்டு எழுந்திரு. 37***

*போர்புரியாமையினால் வரும் சீர்கேட்டையெல்லாம் மேலே சொல்லியான பிறகு, போர்புரிவதால் வரும் சீர்மை ஈண்டு இயம்பப்பட்டது. அறப்போர் இம்மையிலும் மறுமையிலும் இன்பம் தருமேயொழிய ஒருநாளும் துன்பம் தராது. அப்படி வலியக்கிடைத்த பெருவாய்ப்பை எந்தப் போர்வீரன் விட்டுவிடுவான்?*

*லௌகிகமாகப் பார்க்கிறவிடத்தும் அர்ஜுனன் துன்புறுவதும் போரினின்று பின் போவதும் பொருந்தாது என்பது பகரப்பட்டது. இனி எத்தகைய மனப்பான்மையுடன் கடமையைச் செய்தால் அது யோக சாதனமாகும் என்ற கோட்பாடு வருகிறது.*

सुखदुःखे समे कृत्वा लाभालाभौ जयाजयौ ।
ततो युद्धाय युज्यस्व नैवं पापमवाप्स्यसि ॥ ३८

ஸுகது:கே ஸமே க்ருத்வா லாபாலாபௌ ஜயாஜயௌ ।
ததோ யுத்தாய யுஜ்யஸ்வ நைவம் பாபமவாப்ஸ்யஸி ॥ 38

सुखदु:खे ஸுகது:கே *சுகதுக்கங்களை* समे कृत्वा ஸமே க்ருத்வா *சமனாகக் கருதி* लाभालाभौ லாபாலாபௌ *லாபநஷ்டங்களையும்* जयाजयौ ஜயாஜயௌ *ஜய அபஜயங்களையும்* तत: தத: *அதன் பிறகு* युद्धाय யுத்தாய *யுத்தத்தின்பொருட்டு* युज्यस्व யுஜ்யஸ்வ *ஆயத்தப்படு* एवं ஏவம் *இங்*

*நனம்* पापं பாபம் *பாபத்தை* न अवाप्स्यसि ந அவாப்ஸ்யஸி *அடைய மாட்டாய்.*

***இன்பம் துன்பம், லாபம் நஷ்டம், வெற்றி தோல்வி ஆகியவைகளைச் சமனாகக் கருதிப் போரில் முனைக. அதனால் நீ பாபம் அடையாய். 38***

*சுகத்துக்கு ஏதுவான லாபம், ஜயம் ஆகியவைகளில் விருப்பமும், துக்கத்துக்கு ஏதுவான நஷ்டம், அபஜயம் ஆகியவைகளில் வெறுப்பும் கொள்ளுதல் பாமரர் இயல்பு. தங்களைப் பண்படுத்துவோர் அங்ஙனம் விருப்பும் வெறுப்பும் கொள்ளாது, நிகழ்வன யாவையும் நடுநிலையிலிருந்து சமனாகக் கருதவேண்டும். விருப்பும் வெறுப்பும்தான் மனிதனைக் கருமத்தில் கட்டுப்படுத்துகின்றன. கருமத்தில் அல்லது கரும பலனில் பற்றில்லாது அதைச் செய்யும்பொழுது பழைய கருமம் குறைகிறது, புதியது ஒன்றும் சேர்க்கப் படுவதில்லை. இந்தமன நிலை முக்திக்கு மார்க்கமாகிறது.*

*உலகப்பற்றுடைய ஒருவன் செய்கிற அதே கர்மத்தைக் கர்மயோகியும் செய்கிறான். ஆனால் மனநிலையில் இருவருக்கும் பெரிய வித்தியாசம் இருக்கிறது. மனநிலையைக் கொண்டுதான் எது பந்தபாசம், எது பற்றற்ற நிலை என்று தெரிந்துகொள்ள முடியும்.*

**एषा तेऽभिहिता सांख्ये बुद्धिर्योगे त्विमां शृणु ।**
**बुद्ध्या युक्तो यया पार्थ कर्मबन्धं प्रहास्यसि ॥ ३९**

ஏஷா தேऽபிஹிதா ஸாங்க்யே புத்திர்யோகே த்விமாம் ச்ருணு
புத்த்யா யுக்தோ யயா பார்த்த கர்மபந்தம் ப்ரஹாஸ்யஸி ॥ 39

पार्थ பார்த்த *பார்த்தா* साङ्ख्ये ஸாங்க்யே *ஆத்மதத்துவ ஆராய்ச்சியில்* एषा ஏஷா *இந்த* बुद्धिः புத்தி: *புத்தியானது* ते தே *உனக்கு* अभिहिता அபிஹிதா *சொல்லப்பட்டது* योगे तु யோகே து *இனி யோக விஷயத்தில்* इमां இமாம் *இதை* शृणु ச்ருணு *கேள்* यया बुद्ध्या யயா புத்த்யா *அத்தகைய புத்தியோடு* युक्तः யுக்த: *கூடினவனால்* कर्मबन्धं கர்மபந்தம் *கருமபந்தத்திலிருந்து* प्रहास्यसि ப்ரஹாஸ்யஸி *விடுபடுவாய்.*

**ஆத்ம தத்துவத்தைப்பற்றிய அறிவு உனக்குப் புகட்டப்பட்டது. இனி பார்த்தா, யோகத்தைப் பற்றிக் கேள். யோகபுத்தியைப் பெறுவாயாகில் நீ கர்மபந்தத்திலிருந்து விடுபடுவாய். 39**

*ஆத்ம தத்துவம் 11-வது சுலோகத்திலிருந்து 30-வது சுலோகம் வரையில் புகட்டப்பட்டது.*

*யோகவிஷயம் 40, 41, 45–53 ஆகிய சுலோகங்களில் இனிப் புகட்டப்படும்.*

*ஆறு தர்சனங்களில் ஒன்று ஸாங்கியம் என்ற பெயர் பெறுகிறது. அது கபில முனிவர் இயற்றியது. எண்ணிக்கை என்பது ஸாங்கியம் என்ற சொல்லுக்கு அர்த்தம். பிரகிருதியும் புருஷனும் சேர்ந்து 25 தத்துவங்களாகின்றன என்பது அதன் கோட்பாடு. இங்கு பகவான் ஸாங்கியம் என்று சொல்லுவது ஆத்ம ஞானத்தைப்பற்றிய விசாரம் ஒன்றேயாம். பின்பு யோகம் என்று சொல்லப்படுவது பெரிதும் கரும யோகமாகும்.*

*ஒவ்வொரு கலைஞானத்திலும் சாஸ்திரத்திலும் தத்துவ விசாரம் (theory) என்றும் அனுஷ்டானம் (practice) என்றும் இரண்டு அம்சங்கள் இருக்கின்றன. முந்தியது புத்தியில் நன்றாகப்படும்படி செய்கிறது. பிந்தியது பழக்கத்தில் வந்து பயன்படுகிறது. சிற்பி ஒருவன் வீடுகட்டும் விஷயத்தை மனதில் தெளிவுபட ஓர்கிறான். அது தத்துவ விசாரம். பின்பு அதன்படி அதைக் கட்டிமுடிக்கிறான். அது அனுஷ்டானம். விசாரம், அனுஷ்டானம் ஆகிய இரண்டும் ஒன்றுக்கொன்று துணை புரிகின்றன. நன்கு விசாரிக்கின்றவன் முறையாக அனுஷ்டிக்கக் கூடும். திரும்பத்திரும்ப அனுஷ்டிக்கின்றவனுக்கு அதன் த்த்துவம் உள்ளத்தில் தெளிவுபடப் பதியும்.*

*இங்கு பகவான் தத்துவ விசாரத்தை ஸாங்கியம் என்றும் அதன் அனுஷ்டானத்தை யோகம் என்றும் சொல்லுகிறார். ஆக, வாழ்க்கை சம்பந்தமான உண்மை*

களை விசாரிப்பதும் அனுஷ்டிப்பதும் சேர்ந்து பெரு நன்மை விளைவிக்கும். பலபேர் விசாரித்துப் பார்க்காது வினையாற்றுகின்றனர். சிலர் கருத்தில் வாங்குவார்கள்; செயலில் கொண்டுவரமாட்டார்கள். அறிவைப் பெறுவதும் அது செயலாகப் பரிணமிப்பதும் சேர்ந்து இருக்கவேண்டும்.

கர்மயோகம் பூர்த்தியாகாவிட்டால் அது வீண் நஷ்டந்தானே என்ற சந்தேகத்துக்கு விடைவருகிறது:—

**नेहाभिक्रमनाशोऽस्ति प्रत्यवायो न विद्यते ।**
**स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात् ॥ ४०**

நேஹாபிக்ரம நாசோऽஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே ।
ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் ॥ 40

इह இஹ *இக் கரும யோகத்தில்* अभिक्रमनाशः அபிக்ரமநாச: *முயற்சி வீண்போதல்* न अस्ति ந அஸ்தி *கிடையாது* प्रत्यवायः ப்ரத்யவாய: *குற்றமாவது* न विद्यते ந வித்யதே *இல்லை* अस्य धर्मस्य அஸ்ய தர்மஸ்ய *(கருமயோகம் என்கிற) இந்த தர்மத்தின்* स्वल्पं अपि ஸ்வல்பம் அபி *சுவல்பமாகிலும்* महतः भयात् மஹத: பயாத் *பெரும் பயத்திலிருந்து* त्रायते த்ராயதே *காப்பாற்றுகிறது.*

***இதில் முயற்சி வீண்போதல் இல்லை. குற்றமொன்றும் வராது. இதைச் சிறிது பழகினும் பெரும் பயத்தினின்று இது காப்பாற்றும். 40***

வீடு கட்டுபவர் அதற்குக் கூரை போடாவிட்டால் அதுவரையில் செய்த முயற்சி வீணாய்ப் போய்விடும். பயிர்த்தொழில் செய்தவர்கள் அறுவடை செய்யாவிட்டால் பட்டபாடெல்லாம் பயன்படாமற் போய்விடும். கரும யோக அனுஷ்டானம் அத்தகையதன்று. ஒருநாள் உண்ட உணவில் அதற்கேற்ற பயன் இருப்பது போன்று அனுஷ்டானத்துக்கு ஏற்றவளவு யோகத்தில் பயன் உண்டு. மருந்து வகைகளை முறைதவறிக் கையாண்டுவிட்டால் நோயைப் போக்குதற்குப் பதிலாக உயிரைப் போக்கும் விஷமாக அவை மாறிவிடக்கூடும். அத்தகைய குற்றம் யோகத்தில் ஏதாவது

வந்துவிடுமோ என்ற சந்தேகம் வேண்டியதில்லை. அதைக் கொஞ்சம் அப்பியசித்தாலும் ஆத்ம சொரூபத்தை விளக்க வல்லது. ஆத்ம சொரூபத்தை அறிகிறவன் ஜனன மரண சம்பந்தமான பெரும்பயத்தினின்று விடுபடுகிறான்.

ஸாங்கியம், யோகம் ஆகிய இரண்டையும் முறையாகக் கையாளுபவர்களுக்கு வந்தமையும் நன்மையொன்று உண்டு. அதாவது :—

**व्यवसायात्मिका बुद्धिरेकेह कुरुनन्दन ।**
**बहुशाखा ह्यनन्ताश्च बुद्धयोऽव्यवसायिनाम् ॥ ४१**

வ்யவஸாயாத்மிகா புத்திரேகேஹ குருநந்தன ।
பஹுசாகா ஹ்யனந்தாஸ்ச புத்தயோऽவ்யவஸாயினாம் ॥ 41

कुरुनन्दन குருநந்தன *குருவம்சத்தில் பிறந்தவனே,* इह இஹ (*சிறப்பு ஈனும்*) *இந்நெறியில்* व्यवसायात्मिका வ்யவஸாயாத்மிகா *நிச்சய சொரூபமான* बुद्धिः புத்தி: *புத்தியானது* एका ஏகா *ஒன்றே* अव्यवसायिनां அவ்யவஸாயினாம் *நிச்சயபுத்தியில்லாதவர்களுடைய* बुद्धयः புத்தய: *புத்திகள்* हि ஹி *உண்மையில்* बहुशाखाः பஹுசாகா: *பலகிளைகளையுடையன* अनन्ताः च அனந்தா: ச *பலவகைப்பட்டவைகளாயுமிருக்கின்றன.*

***குருகுலத்துதித்தோய், இந்த யோகத்தில் உறுதிகொண்டவனுக்குப் புத்தி ஒன்றேயாம். உறுதி கொள்ளாதவர்களின் புத்திகள் பல கிளைகளையுடையனவும் முடிவற்றவைகளுமாம். 41***

*பல மாணாக்கர்கள் ஒரு கணக்கைப் போடும்போது தப்பான விடைகள் கணக்கற்றவைகள் வரக்கூடும். ஆனால் சரியான விடை ஒன்றுதான் உள்ளது. அங்ஙனம் காமிய கருமங்கள் செய்கின்றவர்களுக்குக் கணக்கற்ற புத்திகள். எத்தனையோ விதங்களாக எண்ணியும் செயல்புரிந்தும் அவர்கள் ஏமாற்றம் அடைகின்றனர். ஆனால் செயலெல்லாம் ஈசுவரனுக்குரியவைகள் என்றறிந்து அவனுக்கே தொண்டு புரிகின்றவனுக்கு புத்தி ஒன்றேயாம்.*

மனதை ஒருமுகப்படுத்துதல் உலக காரியத்துக்கும் பயன்படும், பாரமார்த்திகப் பெரும் பேறு பெறுதற்கும் பயன்படும். முதலில் ஒருமுகப்படுகின்றவளவு அதற்கு வல்லமை வருகிறது. விரிந்தோடும் சூரிய கிரணங்களை பூத கண்ணாடியின் வாயிலாகக் குவியச்செய்தால்.ஒளியும் வெப்பமும் அதிகரிக்கின்றன. ஒரு செத்தையில் தீ மூட்டுதலும் அப்பொழுது சாத்தியமாகிறது. அங்ஙனம் மனது குவியும் பொழுது எதை எண்ணுகிறதோ அதன் பாவனையை விரைவில் அது எடுக்கிறது. செயலும் திறம்பட்டதாகிறது.

அர்ஜுனன் துரோணாசாரியரிடத்தில் மாணாக்கனாயிருந்தபோது மரத்தின்மீது வைத்த குறியை மற்றவர்கள் அம்பால் அடிக்க இயலாதிருந்த சமயத்தில் அவன் அதை எளிதில் அடித்துவிட்டான். குவிந்த மனமே அவ்வெற்றிக்குக் காரணம்.

அமெரிக்காவில், நூலில் கட்டுண்டு ஓர் ஓடையில் தத்தளித்துக் கொண்டிருந்த முட்டையோடுகளை மாணாக்கர்கள் துப்பாக்கியால் சுட முடியவில்லை. முன்பு துப்பாக்கியைக் கையால் தொட்டிராத விவேகானந்த சுவாமிகள் அவ்வோடுகளை ஒரே தடவையில் சுட்டுவிட்டார். அதற்குக் காரணம் கேட்டபோது 'மனம் குவிதல்' என்று அவர் விடையிறுத்தார்.

...ா பௌதிக சாஸ்திரிகளில் ஒருவராகிய ஜகதீச ... என்பவர் மனிதர்களுக்குள்ள உணர்ச்சிகள் ...சடி கொடிகளுக்கும் உண்டு என்று காட்சி ...ித்துக் காட்டினார். அதையெல்லாம் தெரிந்து ...ல்லமை அவருக்கு எப்படி உண்டாயிற்று, ...பொழுது "செடியின் உண்மைகளைத் ...ளுதற்கு மனதை ஒருமுகப்படுத்தி பாவனை ...டியானேன்" என்று பதிலுரைத்தார். ஒரு ...னதுக்கு எதையும் தெரிந்து கொள்ளும் ...ாகிறது.

ஒருபுத்தி யுடைத்திருப்பது எத்தகைய மகிமையை யுண்டு பண்ணும் என்பதற்கு ஸ்ரீமதி ராதையின் பிரேம பக்தி சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும். அவளுடைய மனதும் இந்திரியங்களும் ஒரே ஒரு லட்சியத்துக்காகத்தான் வேலை செய்யும். உள்ளத்தில் எழும் எண்ணங்களெல்லாம் கிருஷ்ணனைப்பற்றியவைகள். கண்கொண்டு பார்ப்பதெல் லாம் அவனோடு சம்பந்தப்பட்டவைகள். காதால் கேட்ப தெல்லாம் அவன் பெருமைக்கு விளக்கமாகிறது. உண்ணும் உணவு அவன் ஊட்டுவதாகும். அவனது அருளே உயிர்க்கு உயிராகிறது. மற்றொரு மகிமை ஸ்ரீமதி ராதையின் ஒருமை புத்தியிலிருந்து நமக்குக் கிடைக்கிறது. குவிந்த மனமுடை யார்க்கு ஓர் இந்திரியம் செய்யும் தொழிலை மற்ற இந்திரியங் களும் செய்யக் கூடும். கிருஷ்ணனது வேணுகானம் சுரக் கிறது. அது காற்றில் மிதந்து எங்கும் பரவுகிறது. ஸ்ரீமதி ராதையின் காதில் அந்த இன்னிசை விழுகிறது. அவள் உள்ளம் அந்த ஓசைக்கு உறைவிடமாகிறது. உள்ளம், புறம் என்ற வேற்றுமை அகலுகிறது. ஓசைவடிவினனாக, நாத பிரம்மமாகக் கிருஷ்ணன்தான் யாண்டும் நிறைந்துள் ளான். அங்கு காது ஓசையைக் கேட்பதில் வியப்பொன்று மில்லை. ஓசைக்கு ஒரு வடிவம் உண்டு என்பதைக் கண் காண்கிறது; ஓசைக்கு ஒரு மணம் உண்டு என்பதை மூக்கு முகர்கிறது; ஓசைக்கு ஓர் ஊறு உண்டு என்பதை மேனி உணர்கிறது; ஓசைக்குச் சுவையொன்று உண்டு என்பதை நா நுகர்கிறது. ஓசையின் உட்பொருள் அனைத்தும் எப் பொறிக்கும் புலனாகிறது. என்னே ஒருமை புத்தியின் மகிமை! இயற்கையில் நோக்கரிய நுண் பொருளையும் நுகர்ந்தறிதற்கு ஒருமை புத்தியே உற்ற துணையாகிறது. இறைவனையே கண்டுணரவும், அவனில் கலந்திடவும் ஒருமை புத்தி ஒன்றே உதவுகிறது. ஒரு புத்தியுடையவன் மக்களுள் மேலோன். சாங்கியமும் யோகமும் சேர்ந்த விடத்துக் கூர்மையான ஒரு புத்தி உண்டாகிறது.

பல புத்தியுடையவரின் போக்கு பின்வருமாறு :—

यामिमां पुष्पितां वाचं प्रवदन्त्यविपश्चितः ।
वेदवादरताः पार्थ नान्यदस्तीतिवादिनः ॥ ४२
कामात्मानः स्वर्गपराः जन्मकर्मफलप्रदाम् ।
क्रियाविशेषबहुलां भोगैश्वर्यगतिं प्रति ॥ ४३
भोगैश्वर्यप्रसक्तानां तयापहृतचेतसाम् ।
व्यवसायात्मिका बुद्धिः समाधौ न विधीयते ॥ ४४

யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த்யவிபஸ்சித: |
வேதவாதரதா: பார்த்த நான்யதஸ்தீதிவாதின: || 42
காமாத்மான: ஸ்வர்கபரா: ஜன்மகர்மபலப்ரதாம் |
க்ரியாவிசேஷபஹுலாம் போகைச்வர்யகதிம் ப்ரதி || 43
போகைச்வர்யப்ரஸக்தானும் தயாபஹ்ருதசேதஸாம் |
வ்யவஸாயாத்மிகா புத்தி: ஸமாதௌ ந விதீயதே || 44

पार्थ பார்த்த *பார்த்தா*, अविपश्चित: அவிபஸ்சித: *அவிவேகிகள்* वेदवादरता: வேதவாதரதா: *வேதம் கர்மத்தைப்பற்றிக் கையாளுகிற பதங்களில் சொற்சுவை கண்டு ரசிக்கின்றவர்கள்* अन्यत: அன்யத: *சுவர்க்க பதவியைத்தவிர வேறு ஒன்றும்* न அस्ति ந அஸ்தி *இல்லை* इति இதி *என்று* वादिन: வாதின: *வாதிக்கிறவர்கள்* कामात्मान: காமாத்மான: *காமம் நிறைந்தவர்கள்* स्वर्गपरा: ஸ்வர்க்கபரா: *சுவர்க்க லாபத்தை முக்கியமான லக்ஷியமாய்க் கொண்டிருப்பவர்கள்* जन्म कर्म फलप्रदाम् ஜன்ம கர்ம பலப்ரதாம் *புதிய ஜன்மமாகக் கருமபலனைக் கொடுக்கிற* भोगैश्वर्यगतिं प्रति போகைச்வர்யகதிம் ப்ரதி *போகத்தையும் ஐசுவரியத்தையும் அடைதற்கு உபாயமான* क्रियाविशेष बहुलां க்ரியாவிசேஷ பகுலாம் *கர்ம விசேஷங்கள் நிறைந்ததும்* यां इमां पुष्पितां वाचं யாம் இமாம் புஷ்பிதாம் வாசம் *எந்த இப்படிப்பட்ட அலங்காரமான வார்த்தையை* प्रवदन्ति ப்ரவதந்தி *சொல்லுகிறார்கள்* तया தயா *அந்த வார்த்தையினால்* अपहृतचेतसां அபஹ்ருதசேதஸாம் *அபகரிக்கப்பட்ட மனதையுடையவர்களாய்* भोगैश्वर्यप्रसक्तानां போகைச்வர்ய ப்ரஸக்தானும் *போகத்திலும் ஐசுவரியத்திலும் பற்றுடையவர்களுக்கு* व्यवसायात्मिका बुद्धि: வ்யவஸாயாத்மிகா புத்தி: *உறுதியான புத்தி* समाधौ ஸமாதௌ *அந்தக்கரணத்திலே* न विधीयते ந விதீயதே *உண்டாவதில்லை.*

**வேதமொழியில் விருப்ப முடையவர்கள், சுவர்க்கத்தை விளைவிக்கிறகருமத்துக்கு அன்னியம் ஒன்றுமில்லை என்பவர்கள், காமம் நிறைந்தவர், சுவர்க்கமே முடிவான பேறு என்பவர்கள் - இத்தகைய அவிவேகிகளுடைய புஷ்பாலங்காரமான வசனத்தைக்கேட்டு அறிவு கலங்கப் பெறுபவர்க்கும், போக ஐசுவரியத்தில் பற்றுடையவர்க்கும் உறுதியான புத்தி உள்ளத்தில் உண்டாவதில்லை. அவர்களுடைய புஷ்பாலங்காரமான சொற்கள் போக ஐசுவரியத்தைப் பெறுதற்கான காமிய கரும விசேஷங்கள் நிறைந்தனவாயும் புதிய பிறவிகளை உண்டு பண்ணுவனவாயும் இருக்கும். 42-44**

*ஆசை என்னும் பாசத்தில் கட்டுண்டு கிடப்பவர்கள் மக்களுள் கடைத்தரமானவர்கள். இம்மையிலும் மறுமையிலும் இந்திரிய சுகங்களை நாடுதல் ஒன்றிலேயே அவர்கள் கண்ணுங் கருத்துமாயிருப்பார்கள். அவர்களது கல்வியும், கேள்வியும், சொல்வன்மையும் சிற்றின்பத்துக்கென்றே கையாளப்படுவனவாகின்றன. வேதத்தில் கருமகாண்டம் இத்தகைய புன்மையரது புல்லியல்பை நிறைவேற்றுதற்காக அமைந்தது. பல்வகைப்பட்ட இன்பங்களை நாடிப் பிறவிப் பெருங்கடலில் அழுந்திக்கிடப்பவர்க்கு மட்டும் அது பயன்படும். வேதங்கள் மிகப்பழையவை எனினும் அவை புகட்டுவதெல்லாம் சிறப்பு வாய்ந்தவைகளென்று எண்ணி ஏமாற்றமடையலாகாது. இன்பங்களைப் பெறுவது வாழ்க்கையின் லட்சியமல்ல. பரிபூரணமடைவதே முடிவான லட்சியமாகும். அதற்கு ஞானத்திலும் யோகத்திலும் உறுதியான உள்ளம் வேண்டும். வேதங்கள் புகட்டுகின்ற கருமகாண்டத்தினின்று ஒருக்காலும் உறுதியான உள்ளம், (சமாதி) உண்டாகாது.*

*கழுகு ஆகாயத்தில் உயரப் பறக்கிறது. ஆனால் கீழே எங்கு அழுகிய பிணம் கிடக்கிறது என்பதிலேயே அது கண்ணும் கருத்தும் உடையதாயிருக்கிறது. வேத சாஸ்திரங்களை எவ்வளவு கற்றிருந்*

*தாலும் காமவசப்பட்டிருக்குமளவு அந்த சாஸ்திரிகள் கழுகு போன்றவர்களேயாவர். காமமும் காசு ஆசையும் உள்ளத்தில் குடிகொண்டிருக்குமளவு ஈசுவர லாபத்தை அடைய முடியாது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*பரிபூரண நிலையை அடைவதற்கு விலக்கப்படுவது எது, வேண்டப்படுவது எது என்ற கேள்வி பிறக்கலாம். அதற்கு விடை வருகிறது :—*

**त्रैगुण्यविषया वेदा निस्त्रैगुण्यो भवार्जुन ।**
**निर्द्वन्द्वो नित्यसत्त्वस्थो निर्योगक्षेम आत्मवान् ॥ ४५**

த்ரைகுண்யவிஷயா வேதா நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுன ।
நிர்த்வந்த்வோ நித்யஸத்வஸ்தோ நிர்யோகக்ஷேம ஆத்மவான்॥

अर्जुन அர்ஜுன *அர்ஜுனா,* वेदा: வேதா: *வேதங்கள்* त्रैगुण्यविषया: த்ரைகுண்யவிஷயா: *முக்குணமயமான பிரபஞ்சத்தை விஷயமாகவுடையன* (त्वं த்வம் *நீ*) निस्त्रैगुण्य: நிஸ்த்ரைகுண்ய: *முக்குணங்களினின்று விடுபட்டவன்* निर्द्वन्द्व: நிர்த்வந்த்வ: *இருமைகளினின்று விடுபட்டவன்* नित्यसत्त्वस्थ: நித்யஸத்வஸ்த: *எப்பொழுதும் ஸத்வத்தில் (நடுநிலைமையில்) இருப்பவன்* निर्योगक्षेम: நிர்யோகக்ஷேம: *யோகக்ஷேமங்களற்றவன்* आत्मवान् ஆத்மவான் *ஆத்மசொரூபத்தில் நிலைத்தவன்* भव பவ *ஆகக்கடவாய்.*

***அர்ஜுனா, வேதங்கள் முக்குணமயமான ஸம்ஸாரத்தைப் பற்றியவைகள். நீ இருமைகளினின்று விடுபட்டு, எப்பொழுதும் நடுவு நின்று, யோக க்ஷேமங்கள் அற்று, ஆத்ம சொரூபத்தில் நிலைத்திருந்து, முக்குணங்களைக் கடந்தவனுகுக. 45***

*ஸத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணமயமாயிருப்பது பிரபஞ்சம். சுவர்க்கங்கள் அனைத்தும் இப்பிரபஞ்சத்தில் அடங்கிவிடுகின்றன. இதிலிருந்து பெறுகின்ற இன்பங்களுக்கு வழிகாட்டியாயிருக்கும் நூல்களுக்கு வேதங்கள் என்று பெயர். அவைகள் எம்மொழியில், எக்காலத்தில், யாரால் இயற்றப் பெற்றிருப்பினும் அவைகள் நிலையற்ற பிரபஞ்சத்தைப் பற்றியவைகளேயாம். முக்குணங்கள் முப்*

பாழ் என்று இயம்பப்படுகின்றன. முப்பாழுக்கு அப்பால் இருக்கின்ற பரம்பொருளை அடைந்தாகவேண்டும். யோகத்தில் நிலைபெற்றிருப்பதே அதற்கு உற்ற உபாயம். யோக சாதனமும் ஈண்டு இயம்பப்படுகிறது. லாபம் நஷ்டம், வெற்றி தோல்வி, சுகம் துக்கம் ஆகிய இவைகளுக்கு துவந்தவம் அல்லது இருமைகள் என்று பெயர். இவைகளில் கட்டுண்டு மனது ஊசலாடாது நடுவு நிலையிலேயே அமைதியுற்றிருக்கவேண்டும். அப்படிச் செய்வதே யோக சாதனமாகிறது. பிரபஞ்சப் பொருள்களைத் தேடித்திரிதலுக்கு உலக வழக்கத்தில் யோகம் என்றும், அவைகளைக் காப்பாற்றி வைப்பதற்கு க்ஷேமம் என்றும் பெயர். அப்படி யோக க்ஷேமத்திலும் மிகைபட்ட கருத்து வைக்கலாகாது. சுவாசிப்பதற்குக் காற்று தானாக வந்தமைவது போன்று சரீரம் இருக்குமளவும் அதற்குத் தேவையானவைகள் ஈசுவரானுக்கிரகத்தால் ஆத்ம சாதகன் ஒருவனுக்குத் தாமாக வந்தமையும். முறைவழுவாத இக்கோட்பாட்டில் விசுவாசம் வைக்காதவர்களே யோக க்ஷேமத்தைப்பற்றி யெண்ணி மனங்கலங்குகின்றனர். அப்படி மனங்கலங்காது யாண்டும் ஆத்ம சொரூபத்திலேயே சாதகன் திளைத்திருக்க வேண்டும். எந்த யோகிக்கு இது சாத்தியமாகிறதோ அவன் முப்பாழைக் கடக்க வல்லவனாகிறான். திரிபுரதகனம் என்பது இதுவே.

கீதா, கீதா, கீதா என்று அடுத்தடுத்து அவசரமாக உச்சரித்தால் "தாகி, தாகி" என்ற சப்தம் வருவதுபோலக் கேட்கும். (தாகி என்பது தியாகி என்பதின் சிதைவு.) உலகப் பற்றுள்ளவர்களே, துறவு கொள்ளுங்கள்; எல்லாவற்றையும் விட்டு ஈசுவரனிடம் மனதை நிலைநிறுத்துங்கள் என்று கீதையானது ஒரே வார்த்தையில் போதிக்

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

இவ்வையகத்தில் வேண்டியதை வேண்டியாங்கு வருவித்துக் கொள்ளலாம். அப்படி அவைகளைப் பெற்று இன்புற்றிராது முக்குணங்களைக் கடந்து செல்வதால் வரும் நன்மை யாது? விடை வருகிறது :—

यावानर्थ उदपाने सर्वतः संप्लुतोदके ।
तावान्सर्वेषु वेदेषु ब्राह्मणस्य विजानतः ॥ ४६

யாவானர்த்த உதபானே ஸர்வத: ஸம்ப்லுதோதகே।
தாவான்ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜானத: ॥ 46

सर्वतः ஸர்வத: *எங்கும்* संप्लुतोदके ஸம்ப்லுதோதகே *நீர்ப் பெருக்கெடுத்திருக்கையில்* उदपाने உதபானே *கிணற்றில்* यावान् யாவான் *எவ்வளவு* अर्थः அர்த்த: *பிரயோஜனமோ* तावान् தாவான் *அவ்வளவு தான்* विजानतः விஜானத: *பிரம்மத்தை அறிகிற* ब्राह्मणस्य ப்ராஹ்மணஸ்ய *பிரம்ம நிஷ்டனுக்கு* सर्वेषु ஸர்வேஷு *எல்லா* वेदेषु வேதேஷு *வேதங்களிலும் (பிரயோஜனமுள்ளது.)*

***எங்கும் நீர்ப் பெருக்கெடுத்திருக்கையில் கிணறு பயன் படுகிறவளவு, ஞானத்தையுடைய பிரம்ம நிஷ்டனுக்கு வேதங்கள் பயன்படுகின்றன. 46***

*நீர் இல்லாத இடங்களில் கிணறு நிச்சயமாகப் பயன் படுகிறது. எங்கும் தெளிநீர் மயமாயிருக்குமிடத்தில் கிணற்றைத் தேடுவார் யாருமிலர். அதுபோன்று அக்ஞானத்தில் இருக்குமளவு வேதங்களால் பயனுண்டு. அவைகள் காட்டுகின்ற நெறிகளைப் பின்பற்றி இம்மையிலும் மறுமையிலும் பலவிதமான இன்பங்களைப் பெற்று இனிது வாழ்ந்திருக்கலாம். ஆனால் பிரம்ம ஞானமோ பேரின்ப சொரூபமானது. அதன் கிரணங்களாக வந்தவைகளே ஏனைய இன்பங்கள் யாவும். கனவில் உண்ட உணவு உடலை வளர்ப்பதில்லை. நினைவில் உண்ட உணவு நினைவு, கனவு ஆகிய இரண்டிலும் உடலை வளர்க்கிறது. அப்படிப் பிரம்மஞானம் என்ற பேரானந்தத்தில் எல்லா ஆனந்தங்களும் அடங்கப் பெற்றுவிடுகின்றன.*

***அரசனுடைய காமக்கிழத்தி தெருப் பிச்சைக்காரனைக் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டாள். அதுபோல ஈசுவர சன்னிதானத்தில் பேரின்பம் அடையப்பெற்ற ஆத்மாவானது அற்பமாகிய உலக இன்பங்களில் ஆசை வைப்பதில்லை.*** — ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

கிணறுமட்டும் அமையப்பெற்றுள்ள ஊரில் இருக்கும் ஒருவன் கிணற்றுநீரை உண்டு திருப்தியடைந்தாக வேண்டும். அங்ஙனம் அக்ஞானத்தில் இருக்கும் பரியந்தம் ஒருவன் உலக இன்பங்களைத் துய்த்திருப்பதுதானே அவன் கடமை? அப்படியல்ல. ஞானத்துக்குத் தன்னைப் பக்குவப்படுத்துதற்கு வழியொன்று உண்டு. அதாவது :—

**कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन ।**
**मा कर्मफलहेतुर्भूर्मा ते सङ्गोऽस्त्वकर्मणि ॥ ४७**

கர்மண்யேவாதிகாரஸ்தே மா பலேஷு கதாசன ।
மா கர்மபலஹேதுர்ப்பூர்மா தே ஸங்கோऽஸ்த்வகர்மணி ॥ 47

कर्मणि கர்மணி *கர்மத்தில்* एव ஏவ *மட்டிலும்* ते தே *உனக்கு* अधिकारः அதிகார: (*அதிகாரமுண்டு*) *தகுதியுண்டு* कदाचन கதாசன *ஒருபொழுதும்* फलेषु பலேஷு *பலன்களில்* मा மா *இல்லை* कर्मफलहेतुः கர்மபலஹேது: *கர்மபலனை உண்டுபண்ணுபவன்* मा भूः மா பூ: *ஆகாதே* अकर्मणि அகர்மணி *கர்மம் செய்யாதிருப்பதில்* ते தே *உன்னுடைய* सङ्गः ஸங்க: *பற்றுதல்* मा अस्तु மா அஸ்து *இருக்கலாகாது.*

***வினையாற்றக் கடமைப்பட்டுள்ளாய். வினைப் பயனில் ஒருபொழுதும் உரிமை பாராட்டாதே. வினைப்பயன் விளைவிப்பவன் ஆய்விடாதே. வெறுமனே இருப்பதில் விருப்புக்கொள்ளாதே. 47***

*வாழ்க்கையில் இது ஒரு பெரிய முரண்பாடாகத் தென்படுகிறது. வினைப்பயனை விரும்பாது யாரும் வினையாற்ற முடியாது. வினைப்பயனை விரும்பாதார் வினையாற்ற வேண்டிய அவசியமில்லை. ஆனால் பகவானோ இதற்கு நேர் மாறாக உபதேசிக்கிறார். கருமம்புரியாது வெறுமனே இருக்க வேண்டாம். ஓயாது பெரு வினையாற்றிக்கொண்டிரு. வினையினின்று விளையும் பயன் யாது என்ற ஏக்கம் உனக்கு வேண்டாம். அத்தகைய பற்றற்ற பாங்கினின்றுதான் நன்மை விளையும். ஏனென்றால் கருமம் தன்னளவில் கொடியதன்று. ஆசையோடு கூடிய கருமமே கொடியது. பிறவிப்*

*பெருங்கடலில் அது மனிதனை ஆழ்த்துகிறது. சுவர்க்காதி போகங்களை விரும்பி வினையாற்றியவர்களெல்லாம் ஆசைக்கு அடிமைப்பட்டவர்களே. வினைப்பயனை விரும்பாதவர்களெல்லாம் ஆசையை வென்றவர்கள். ஆசையை வெல்லுமளவு மனிதன் சுதந்திரத்தில் நிலைபெறுகிறான். பயன் கருதாது பணிசெய்பவனுக்குச் சித்தம் தெளிவடைகிறது. ஞானத்தைப் பெற அவன் தகுதியுடையவன் ஆகிறான். ஆற்றலும் அவனுக்கு அதிகரிக்கிறது. ஆக, கருமம் நடைபெறவேண்டும், கரும பலனில் ஆசை வைக்கலாகாது.*

*படகு நீரில் இருக்கலாம். ஆனால் நீர் படகுக்குள் நுழையலாகாது. அங்ஙனம் மனிதன் உலகில் வாழலாம். ஆனால் உலக ஆசை அவன் உள்ளத்தில் புகுந்துவிடலாகாது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஆசையை வென்றவன் நிஷ்காமிய கருமம் செய்யும் விதம் வருமாறு :—*

**योगस्थः कुरु कर्माणि सङ्गं त्यक्त्वा धनञ्जय ।**
**सिद्ध्यसिद्ध्योः समो भूत्वा समत्वं योग उच्यते ॥ ४८**

யோகஸ்த: குரு கர்மாணி ஸங்கம் த்யக்த்வா தனஞ்ஜய ।
ஸித்த்யஸித்த்யோ: ஸமோ பூத்வா ஸமத்வம் யோக உச்யதே ॥

धनञ्जय தனஞ்ஜய *தனஞ்ஜயா* योगस्थः யோகஸ்த: *யோகத்தில் நிற்பவனாய்* सङ्गं ஸங்கம் *பற்றுதலை* त्यक्त्वा த்யக்த்வா *விட்டுவிட்டு* सिद्ध्यसिद्ध्योः ஸித்த்யஸித்த்யோ: *வெற்றி தோல்விகளுக்கிடையில்* समः ஸம: *சமமாக* भूत्वा பூத்வா *இருந்துகொண்டு* कर्माणि கர்மாணி *கருமங்களை* कुरु குரு *செய்* समत्वं ஸமத்வம் *நடுவுநிலை* योगः யோக: *யோகம் என்று* उच्यते உச்யதே *சொல்லப்படுகிறது.*

***தனஞ்ஜயா, யோகத்தில் நிலைபெற்று, பற்று அற்று, வெற்றி தோல்விகளைச் சமமாகக் கொண்டு, கருமம் செய். நடுவுநிலை யோகம் என்று சொல்லப்படுகிறது. 48***

*தான் செய்யும் வினையெல்லாம் ஈசுவரனுடையது என்கிற எண்ணத்தில் நிலைத்திருப்பது யோகத்தில் நிலைத்*

திருப்பதாகிறது. செயலெல்லாம் அவனுடையது என்று எண்ணுவதால் பற்றுதல் போய்விடுகிறது. ஈசுவரனுடைய வேலைக்காரனாகத் தன்னை வைத்துக்கொண்டு யோகி வினையாற்றுகிறான். பக்கத்து ஊரிலிருக்கும் ஒருவனை அழைத்து வரும்படி வேலைக்காரனை எஜமானன் ஏவுகிறான். வேலைக்காரன் அங்குச்சென்று அம்மனிதன் அவ்வூரில் அப்பொழுது இல்லையென்று அறிகிறான். அங்ஙனம் தன் யத்தனத்தில் நேர்ந்த தோல்வியை முன்னிட்டு அவன் வருந்துவதில்லை. மற்றொரு நாள் சென்று அம்மனிதனைக் காண்கிறான். அவ்வெற்றியால் தனி மகிழ்ச்சியடைவதுமில்லை. தலைவன் தூண்டுதல்படி தன் கடனாற்றுவதே அவ்வேலைக்காரனுக்குப் போதுமானது. கருமயோகியும் அவ்வாறு வெற்றி தோல்விகளை ஒப்பாய் உணர்கிறான்.

தராசுமுள் போன்று மனது நடுவு நிலையில் இருப்பதற்கு யோகம் என்று பெயர். மனது நடுவு நிலையில் உறுதி பெறுமளவு அது மேன்மை பெறுகிறது. ஓரம் சாரேல் என்பது கோட்பாடு. மனது இப்பக்கம் அப்பக்கம் சாராது இருத்தல் வேண்டும். இனியதைப் பெறுகிற வேளையில் இன்புறவும், இன்னாததைப் பெறுகிற வேளையில் துன்புறவும் செய்கிறது மனது. இவ்விரண்டும் ஓரம் சார்ந்த நிலையாகும். இன்ப துன்பமிரண்டையும் ஒரேபாங்கில் பொருள் படுத்துவது நடுவு நிலை. அதனால் மனத்தகத்துத் தெளிவும், உறுதியும் உண்டாகின்றன. தெளிந்து அசையாதிருக்கும் நீரில் பிம்பம் நன்கு புலப்படுகிறது. தெளிந்து உறுதிபெற்ற உள்ளத்தில் மெய்ப்பொருள் காட்சி நன்கு புலனாகும். அது நடுவு நிலையினின்று மனது பெறும் மேன்மையாம்.

பணக்காரன் வீட்டுப் பணிப்பெண் போன்று நீ உலகில் இரு. எஜமானுடைய செல்வத்தையும் செல்வர்களையும் தன்னுடையவைகளென்று வேலைக்காரி சொல்லிக்கொள்கிறாள். ஆனால் எப்பொழுது வேண்டுமானாலும் வேலையின்றி விலகி வெளியேக அவள் ஆயத்தமாயிருக்கிறாள். சாதகன் உலகில் அங்ஙனம் கருமம் புரிந்திருக்கவேண்டும்

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

எத்தகைய வாழ்க்கையும் மனநிலையும் ஒண்ணாது என்பது இனி இயம்பப்படுகிறது :—

दूरेण ह्यवरं कर्म बुद्धियोगाद्धनञ्जय ।
बुद्धौ शरणमन्विच्छ कृपणाः फलहेतवः ॥ ४९

தூரேண ஹ்யவரம் கர்ம புத்தியோகாத் தனஞ்ஜய ।
புத்தௌ சரணமன்விச்ச க்ருபணாः பலஹேதவः ॥ 49

धनञ्जय தனஞ்ஜய *தனஞ்ஜயா* बुद्धियोगात् புத்தியோகாத் *சமத்வ புத்தியோடுகூடிய நிஷ்காமிய கர்மத்தைக்காட்டிலும்* कर्म கர்ம *காமிய கர்மமானது* दूरेण अवरं हि தூரேண அவரம் ஹி *மிகக்கீழானதே* बुद्धौ புத்தௌ *சமபுத்தியிலே* शरणं சரணம் *தஞ்சம்* अन्विच्छ அன்விச்ச *அடைக* फलहेतवः பலஹேதவः *பலனை இச்சிக்கிறவர்கள்* कृपणाः க்ருபணாः *கீழோர்.*

***சமபுத்தியோடு செயல் புரிவதைவிட ஆசையோடு செயல் புரிவது மிகக் கீழானதே. சமபுத்தியின்கண் சரணடைக. பயன் கருதுபவர் கயவர் ஆவர்.*** ***49***

*இருப்புப்பாதை வண்டியில் பிரயாணம் செய்த ஒருவனுக்கு ஏவலாளன் ஒருவன் கூலிக்காக மூட்டை சுமந்தான். வழிப்போக்கனாக வந்த வேறு ஒரு பிரயாணி அன்பினால் தூண்டப்பெற்று சமபுத்தியுடன் மூட்டை சுமந்து அவனுக்கு உதவி புரிந்தான். இருவர் செயலும் ஒன்றேயெனினும் கூலிக்காகச் சுமந்தவன் கீழ்மகன். போதியவளவு கூலிகிடைக்கவில்லை யென்ற மனக்குறை அவனுக்கு வந்துவிடுகிறது. தன்னைக்குறித்து அவன் தானே பரிதாபப்படுவதுமுண்டு. ஆகவே அவன் கிருபணன். அர்ஜுனன் தன்னைக் கிருபணன் என்று இயம்பிக்கொண்டதை ஈண்டு ஞாபகப்படுத்திக்கொள்ளவேண்டும். இவ்வுலகில் கரும பலனை நாடும் பெரும்பான்மையோர் கூலிக்காரன்போன்று அலைந்து திரிந்து அழிகின்றனர். வேற்றுமையிருந்தும் அன்புக்காக மூட்டை சுமந்தவன் மேன்மகன். கொடையாளி*

போன்று செயல்புரிபவன் மேன்மையுறுகிறான். நீரை இறைக்க இறைக்க அது மேலும் கிணற்றில் ஊறுவது போன்று சுயநலம் கருதாத சேவையானது ஆற்றலை வளர்க்கிறது. மனதின் சமநிலைக்கு அந்த ஆற்றல் உற்ற துணையாகிறது. சமநிலையினின்று ஞான சமாதி வடிவெடுக்கிறது.

மனதின் சமநிலை இவ்வுலக வாழ்க்கைக்கு எப்படித் துணைபுரிகிறது என்னும் கேள்வி எழலாம். அதற்கு பகவான் விடையளிப்பதாவது :—

बुद्धियुक्तो जहातीह उभे सुकृतदुष्कृते ।
तस्माद्योगाय युज्यस्व योगः कर्मसु कौशलम् ॥ ५०

புத்தியுக்தோ ஜஹாதீஹ உபே ஸுக்ருத துஷ்க்ருதே ।
தஸ்மாத்யோகாய யுஜ்யஸ்வ யோக: கர்மஸு கௌசலம் ॥ 50

बुद्धियुक्तः புத்தியுக்த: *சமபுத்தியுடையவன்* इह இஹ *இம்மையில்* उभे सुकृतदुष्कृते உபே ஸுக்ருததுஷ்க்ருதே *நன்மை தீமை இரண்டையும்* जहाति ஜஹாதி *நீக்குகிறான்* तस्मात् தஸ்மாத் *ஆகையினால்* योगाय யோகாய *யோகத்தை* युज्यस्व யுஜ்யஸ்வ *சேர்வாயாக* योगः யோக: *யோகம்* कर्मसु கர்மஸு *கர்மங்களில்* कौशलं கௌசலம் *வல்லமை.*

***மனநடுவு பெற்றவன் நன்மை தீமை யிரண்டையும் இம்மையில் துறக்கிறான். ஆகையால் நீ யோகத்தைச் சார்ந்திடு. திறமையுடன் செயல்புரிதல் யோகம். 50***

*மனிதனை அக்ஞான இருளில் சேர்க்கும் இயல்புடையவைகள் இருவினையும். ஆனால் கருமயோகியை வினைகள் தளைக்கமாட்டா. அவனுக்கு சுயநல எண்ணம் சிறிதுமில்லாமையே அதற்குக்காரணம். இரண வைத்தியன் ஒருவன் நோயாளியின் உடலை அறுக்கிறான். நோயாளி உயிர் பிழைப்பதால் வைத்தியனுக்குப் புண்ணியம் இல்லை, அவன் சாவதால் இவனுக்குப் பாபம் இல்லை. நடுவு நின்று முறையாகத் தன் கடமையை அவ்வைத்தியன் புரிந்தான்.*

நோயாளியைக்கொல்லவேண்டும் என்ற கெட்ட எண்ணம் அவனுக்கு இல்லை. ஈசுவர சங்கற்பத்தை மீறி நோயாளியைக் காப்பாற்ற முடியும் என்ற அகங்காரமும் அவனிடத்தில்லை. ஆதலால் இருவினையும் அவனைச் சேர்வதில்லை.

இரண வைத்தியன் பல உடல்களை அங்ஙனம் அறுத்துச் சிகிச்சை செய்கிறான். பின்பு ஒரு நோயாளியைப் பார்த்து 'இவன் என் புதல்வன்' என்று அவன் எண்ணுவானாகில் அவனது நடுவு நிலை கலைந்துவிடுகிறது. முறையாக ரணவைத்தியம் செய்ய அவனுக்கு இயலாது போய்விடுகிறது. எல்லாக் கருமங்களுக்கும் இதுவே விதி. எல்லாத் தொழில்களிலும் மனது நடுவு நிற்பது யோகம். மனமானது நடுவு நிற்கின்றவளவு கருமம் திறம்படச் செய்யப்படுகிறது. விருப்பு அல்லது வெறுப்புக் கொள்ளுமிடத்து திறமை குறைந்து போய்விடுகிறது. யுத்தம் புரிதல் போன்ற ஒரு கோர கர்மத்தையும் நடுவு நின்று திறமையாகச் செய்து காட்டினார் பீஷ்மர். கணவனுக்குப் பணிவிடை செய்த மாது ஒருத்தி திறம்படத் தன் கடமையைச் செய்ததினால் காட்டில் தவம் புரிந்து கொக்கை எரித்த தவசியைவிட மேலானவள் ஆயினாள். பற்றற்றுத் திறம்படக் கசாப்புக் கடை வைத்திருந்த வியாதன் அதே தவசிக்கு ஞானம் புகட்டவல்ல பரிபாகம் அடைந்தான். நடுவு நிற்பதால் புதிய வினைத்தளைகள் உண்டாவதில்லை; பழைய கட்டுகள் தாமே அவிழ்கின்றன. அதனால் மன பரிபாகம் உண்டா

சிதறடையும் சிந்தையுடைய யோகி ஒருவன் மலைக்குகையில் தியானம் பழகுகிறான் என்று வைத்துக்கொள்வோம். செருப்புத் தைக்கும் சக்கிலியன் ஒருவன் கடைத்தெருவில் உட்கார்ந்து கொண்டு ஒருமை மனதாகத் தன் தொழிலைத் திறம்படச் செய்கிறான் என்றும் வைத்துக்கொள்வோம். இவ்விருவருள் மன பரிபாகத்தில் அல்லது கருமயோகத்தில் சக்கிலியனே சிறந்தவன்.

— சுவாமி விவேகானந்தர்

திறம்படச் செய்யும் வினைகளுள் தலைசிறந்த வினை யாது என்ற கேள்வி எழலாம். விடைவருகிறது :—

**कर्मजं बुद्धियुक्ताहि फलं त्यक्त्वा मनीषिणः ।**
**जन्मबन्धविनिर्मुक्ताः पदं गच्छन्त्यनामयम् ॥ ५१**

கர்மஜம் புத்தியுக்தாஹி பலம் த்யக்த்வா மனீஷிண: ।
ஜன்மபந்தவினிர்முக்தா: பதம் கச்சந்த்யனாமயம் ॥ 51

बुद्धियुक्ताः புத்தியுக்தா: *சமபுத்தியுடைய* मनीषिणः மனீஷிண: *ஞானிகள்* कर्मजं फलं கர்மஜம் பலம் *கருமத்துதித்த பலனை* त्यक्त्वा த்யக்த்வா *தியாகம் செய்து* जन्मबन्धविनिर्मुक्ताः ஜன்மபந்தவினிர்முக்தா: *பிறவித்தளையினின்று விடுபட்டு* अनामयं அனாமயம் *துன்பமற்ற* पदं பதம் *பதவியை* हि ஹி *நிச்சயமாக* गच्छन्ति கச்சந்தி *அடைகிறார்கள்.*

***நடுவு நிற்கும் ஞானிகள் வினைப்பயனை விட்டொழித்து, பிறவித்தளை நீங்கி, கேடில்லாப் பெருநிலையடைகின்றனர். 51***

*துன்பத்துக்கு ஏதுவான இவ்வுலக வாழ்க்கையைத் துன்பமற்றதாக யோகி செய்துகொள்கிறான். பிறவிக்கு வித்தாயிருப்பதை பிறப்பற்ற பெருநிலையாகவும் அவன் செய்துகொள்கிறான். கேட்டைக் கேடின்மையாகச் செய்வதே வல்லமையில் பெருவல்லமையாம். தம்மை விழுங்க வந்த விஷத்தை யெடுத்து அமிர்தமாகப் பானம் பண்ணுகிறார் சிவபெருமான். விஷ வைத்தியர்களுள் அவர் தலைசிறந்த வைத்தீசுவரன். மனிதனைக் கட்ட வந்த கருமத்தை யெடுத்துக் கருமயோகி முக்தி மார்க்கமாக மாற்றிக்கொள்கிறான். அப்படிச் செய்யும் செயலே செயற்கரிய செயலாகிறது.*

*அநித்தியத்தைக்கொண்டு நித்தியத்தை அடைக.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*பெருநிலையடைந்ததன் அறிகுறி பின்வருமாறு :—*

**यदा ते मोहकलिलं बुद्धिर्व्यतितरिष्यति ।**
**तदा गन्तासि निर्वेदं श्रोतव्यस्य श्रुतस्य च ॥ ५२**

யதா தே மோஹகலிலம் புத்திர்வ்யதிதரிஷ்யதி ।
ததா கந்தாஸி நிர்வேதம் ச்ரோதவ்யஸ்ய ச்ருதஸ்ய ச ॥ 52

यदा யதா *எப்பொழுது* ते தே *உன்னுடைய* बुद्धिः புத்தி: *புத்தியானது* मोहकलिलं மோஹகலிலம் *அவிவேகம் என்னும் தூற்றத்தை* व्यतितरिष्यति வ்யதிதரிஷ்யதி *தாண்டுமோ* तदा ததா *அப்பொழுது* श्रोतव्यस्य ச்ரோதவ்யஸ்ய *கேட்கவேண்டியதிலும்* श्रुतस्य च ச்ருதஸ்ய ச *கேட்டதிலும்* निर्वेदं நிர்வேதம் *வைராக்கியம்* गन्तासि கந்தாஸி *அடைவாய்.*

***உன் அறிவானது எப்பொழுது அவிவேகம் என்னும் அழுக்கைக் கடக்குமோ அப்பொழுது கேட்கப் போவதிலும் கேட்டதிலும் பற்றின்மையைப் பெறுவாய்.*** **52**

*ஆத்மா, அனாத்மா இவ்விரண்டுக்கும் வேற்றுமை விளங்காநிலை அவிவேகமாகும். விவேகம் உதயமானதும் உண்மை விளங்குகிறது. கனவைக் கனவு என்று தெரிந்து கொண்டவனுக்குக் கேள்விப்பட்ட கனவும், இனிக் கேட்கப்போம் கனவும் ஆகிய இரண்டும் பொருள்படாதவைகளாம். அங்ஙனம் உலக நடைமுறையின் உண்மையை அறிந்து கொண்டவனது உள்ளத்தில் அதைப்பற்றிய செய்திகள் எவ்விதமான தடுமாற்றத்தையும் உண்டுபண்ணுவதில்லை.*

*தனக்கு அத்தகைய பெருநிலை எப்பொழுது வரும் என்று ஒரு சாதகன் கேட்கலாம். அதற்கு விடை வரு*

**श्रुतिविप्रतिपन्ना ते यदा स्थास्यति निश्चला ।**
**समाधावचला बुद्धिस्तदा योगमवाप्स्यसि ॥ ५३**

ச்ருதிவிப்ரதிபன்னா தே யதா ஸ்தாஸ்யதி நிஸ்சலா ।
ஸமாதாவசலா புத்திஸ்ததா யோகமவாப்ஸ்யஸி ॥ 53

यदा யதா *எப்பொழுது* श्रुतिविप्रतिपन्ना ச்ருதிவிப்ரதிபன்னா *கேட்டுக்கலக்கமடைந்துள்ள* ते தே *உன்னுடைய* बुद्धिः புத்தி: *புத்தியானது* समाधौ ஸமாதௌ *சமாதியில், பரமாத்மாவினிடத்தில்* निश्चला நிஸ்சலா *சலிக்காததாய்* अचला அசலா *உறுதியாய்* स्थास्यति ஸ்தாஸ்

யதி *ஸ்திரமோ* तदा ததா *அப்பொழுது* योगं யோகம் *புத்தியோகத்தை, ஞானத்தை* अवाप्स्यसि அவாப்ஸ்யஸி *அடைவாய்.*

**(பல்பொருள்) கேட்டுக் கலங்கும் உன் அறிவு ஆத்மாவின்கண் என்று அசையாது உறுதி பெறுமோ, அன்று நீ யோகம் அடைவாய். 53**

*தான் அனுபவியாத ஒரு பொருளைப்பற்றிப் பிறர் சொல்லுவதை யெல்லாம் கேட்டுக் குழப்பமடைவது மனதின் இயல்பு. 'நான் உயிரோடு இருக்கிறேனா, அல்லது இறந்து ஒழிந்து போய்விட்டேனா?' என்று தன்னைப்பற்றி யாரும் பிறரிடம் கேட்பதில்லை. தான் உயிர்வாழ்வது தனக்குப் பிரத்தியக்ஷம். அதற்கு வேறு பிரமாணம் ஒன்றும் வேண்டியதில்லை. மனது ஒடுங்கி ஆத்ம சொரூபத்தில் நிலைத்திருக்குங்கால் அது சமாதி என்று சொல்லப்படுகிறது. அப்பொழுது ஆத்ம சொரூபத்தின் பெருமையை அதுவே சொல்லும். அங்நிலையில் ஆத்ம ஞானமும் யோகமும் பூர்த்தியாய்விடுகின்றன. மனிதன் அடையவேண்டிய பெரு நிலையைப் பெற்றவனாகிறான்.*

*முதலில் ஈசுவரனை நாடி, அப்பால் உலகப்பொருள்களைத் தேடு. இதற்கு மாறாகச் செய்யாதே. ஆத்ம ஞானத்தை அடைந்த பிறகு நீ உலக வாழ்க்கையில் பிரவேசித்தால் உனக்கு மனச்சஞ்சலமே இராது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஈண்டு வினா ஒன்று கேட்பதற்கு அர்ஜுனனுக்கு அவகாசம் ஏற்படுகிறது. ஆக, அவன் அதைப் பகவான் முன்னிலையில் சமர்ப்பிக்கிறான்.*

**अर्जुन उवाच**

**स्थितप्रज्ञस्य का भाषा समाधिस्थस्य केशव ।**
**स्थितधीः किं प्रभाषेत किमासीत व्रजेत किम् ॥ ५४**

அர்ஜுன உவாச

ஸ்திதப்ரக்ஞஸ்ய கா பாஷா ஸமாதிஸ்தஸ்ய கேசவ ।
ஸ்திததீ: கிம் ப்ரபாஷேத கிமாஸீத வ்ரஜேத கிம் ॥ 54

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது*

केशव கேசவ *கேசவா* समाधिस्थस्य ஸமாதிஸ்தஸ்ய *ஸமாதியி லிருக்கிற* स्थितप्रज्ञस्य ஸ்திதப்ரக்ஞஸ்ய *நிலைத்தஞானமடைந்தவனுடைய* भाषा பாஷா *இலக்ஷணம்* का கா *யாது* स्थितधीः ஸ்திததீ: *உறுதியான அறிவுடையவன்* किं கிம் *எதை* प्रभाषेत ப்ரபாஷேத *பேசுகிறன்* किं கிம் *எப்படி* आसीत ஆஸீத *அமர்கிறன்* किं கிம் *எவ்வாறு* व्रजेत வ்ரஜேத *நடக்கிறன்.*

அர்ஜுனன் சொன்னது

***கேசவா, ஸமாதியில் நிலைத்த நிறை ஞானியின் இலக்ஷணம் யாது? உறுதியான அறிவுடையவன் எதைப்பேசுகிருன், எப்படி அமர்கிருன், எவ்வாறு நடக்கிருன்? 54***

*ஸமாதி கூடியவன், பிரம்மஞானி, ஸ்திதப்பிரக்ஞன் ஆகிய இச்சொற்களெல்லாம் ஒரேகருத்தை விளக்குகின்றன. பரிபூரணமுணர்ந்த ஞானி தானே பரிபூரணமாகிருன். அத்தகையவன் சமாதியில் இருக்கும்போது அவனுடைய அந்தக்கரணம் எத்தன்மையதாகிறது? பகிர்முகமாக அவன் மனதைத் திருப்பும்போது அவனுடைய செயல்கள் எப்படிப் பட்டவைகளாயிருக்கும்?*

*இந்த அத்தியாயத்தின் இறுதி வரையில் இனி வரும் பதினெட்டு சுலோகங்களில் நிறைஞானியின் இயல் இயம் பப்படுகிறது. நல்ல எழுத்து எழுத விரும்புபவர் மாதிரி எழுத்தைத்தங்கள் முன்னிலையில் வைத்துக்கொள்கின்றனர். சிறந்த சித்திரம் வரைய விரும்பும் ஓவியக்காரன் அழகிய படம் ஒன்றைத் தன் முன்பு மாதிரியாக வைத்துக்கொள் கிருன். பரிபூரணத்தன்மையை முன்மாதிரியாக வைத்துக் கொள்ளுதல் ஒவ்வொரு துறையிலும் நிரூபிக்கப் பெறு கிறது. ஆத்மீகத்துறைக்கும் இவ்வுண்மை பொருந்தும். சான்றோர்க்கு சாத்தியமாகக்கூடிய சம்பூரணநிலை ஈண்டு சாற்றப்படுகிறது. அந்நிலையை அடைய முயல்வார் தம் சாதனத்தில் செய்யவேண்டியது யாது என்பதும் இதில்*

அடங்கப் பெறுகிறது. ஆக, இப்பெருநிலையைக் குறிக்கோளாக வைத்துக்கொண்டு இதன் பொருட்டுப் பாடுபடுதலெல்லாம் யோக சாதனங்களாகின்றன. குறியும் நெறியும் அடங்கப்பெற்ற சிறந்த பதினெட்டு சுலோகங்களும் வருமாறு :—

**श्री भगवानुवाच**

**प्रजहाति यदा कामान् सर्वान् पार्थ मनोगतान् ।**
**आत्मन्येवात्मना तुष्टः स्थितप्रज्ञस्तदोच्यते ॥ ५५**

ஸ்ரீ பகவானுவாச

ப்ரஜஹாதி யதா காமான் ஸர்வான் பார்த்த மனோகதான் ।
ஆத்மன்யேவாத்மனா துஷ்ட: ஸ்திதப்ரக்ஞஸ்ததோச்யதே ॥ 55

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

पार्थ பார்த்த *பார்த்தா* यदा யதா *எப்பொழுது* मनोगतान् மனோகதான் *மனதிலெழுகின்ற* सर्वान् कामान् ஸர்வான் காமான் *எல்லா ஆசைகளையும்* प्रजहाति ப்ரஜஹாதி *விட்டொழிக்கிறான்* आत्मनि एव ஆத்மனி ஏவ *ஆத்மாவில்மட்டும்* आत्मना ஆத்மனா *ஆத்மாவைக்கொண்டு* तुष्टः துஷ்ட: *திருப்தியடைந்தவனாகிறான்* तदा ததா *அப்பொழுது* स्थितप्रज्ञः ஸ்திதப்ரக்ஞ: *ஸ்திதப்ரக்ஞன் என்று* उच्यते உச்யதே *சொல்லப்படுகிறான்.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***பார்த்தா, மனதிலெழுகின்ற ஆசைகளையெல்லாம் அகற்றி ஆத்மாவில் ஆத்ம திருப்தி யடைந்திருப்பவன் ஸ்திதப்பிரக்ஞன் என்று சொல்லப்படுகிறான்.*** ***55***

*அர்ஜுனனுடைய கேள்வியில் முதல் பகுதிக்கு இது விடை :—*

*அக்கினி தானே உஷ்ண சொரூபம். வெப்பத்தை நாடி அது வேறு பொருளிடத்துப் போகவேண்டியதில்லை. அங்ஙனம் ஆத்மா ஆனந்த சொரூபம். தன்னிடத்துள்ள*

ஆனந்தத்தை அது பிற பொருள்கள்மீது சுமத்தி, மனதைக் கொண்டு அவைகளை நாடிச் செல்லுகிறது. அத்தகைய நாட்டத்துக்குக் காமம் என்று பெயர். நீரில் அலை உண்டாவதுபோன்று அது மனதில் வடிவெடுக்கிறது. அலைகள் வீசும்பொழுது நீரின் அடிப்பாகம் தென்படுவதில்லை. மனதில் காம அலைகள் வீசும்பொழுது அதற்கு அடிப்படையாயுள்ள ஆத்மாவின் ஆனந்த சொரூபம் சிதறடைந்தது போன்று ஆய்விடுகிறது. காம அலைகளற்று மனது தேங்கியிருக்கும்போது ஆத்மாவின் ஆனந்த சொரூபம் தனக்குத் தானே விளங்குகிறது. தான் உலகெல்லாம் தேடின இன்பம் தன்னிடத்தே இருக்கிறது என்று மனம் தெளிபவன் நிறை ஞானி.

உயிருடனிருக்கும் போதே எவனொருவன் இறந்தவன் போலாகிறானோ, அதாவது எவனுடைய ஆசாபாசங்கள் பிணத்தினிடத்திற் போன்று நசித்திருக்கின்றனவோ, அவன்தான் உண்மையான ஆத்மஞானியாவான்.
— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

மனம் தெளிந்திருத்தல் என்பதன் விளக்கம் வரு

दुःखेष्वनुद्विग्नमनाः सुखेषु विगतस्पृहः ।
वीतरागभयक्रोधः स्थितधीर्मुनिरुच्यते ॥ ५६

து:கேஷ்வனுத்விக்னமனா: ஸுகேஷு விகதஸ்ப்ருஹ: ।
வீதராகபயக்ரோத: ஸ்திததீர்முனிருச்யதே ॥ 56

दुःखेषु து:கேஷு *துக்கத்தில்* अनुद्विग्नमनाः அனுத்விக்னமனா: *அசையாதமனதையுடையவன்* सुखेषु ஸுகேஷு *சுகத்தில்* विगतस्पृहः விகதஸ்ப்ருஹ: *நாட்டமில்லாதவன்* वीतराग भयक्रोधः வீதராக பயக்ரோத: *பற்றுதல் பயம் கோபம் அற்றவன்* मुनिः முனி: *முனி என்றும்* स्थितधीः ஸ்திததீ: *உறுதியான அறிவுடையவன் என்றும்* उच्यते உச்யதே *சொல்லப்படுகிறான்.*

***துன்பத்தில் துடியாத, இன்பத்தில் நாட்டமில்லாத, பற்று, அச்சம், சினமற்ற உறுதியான உள்ளத்தையுடையவன் முனி எனப்படுகிறான். 56***

துன்பத்துக்கு ஏதுவான நிகழ்ச்சிகள் இவ்வுலகில் ...ின்றன. தெளிந்த மனமுடையவனை அவை கள் அசைத்துத் துன்பப்படுத்த மாட்டா. விறகுக் கட்டை சேரச் சேரத் தீ வளர்கிறது. திடஞானியினிடத்து ஆசை அப்படி வளர்வதில்லை. சுகத்தைத் தரும் பொருள்கள் பெருகினும் அவன் அவைகளிடத்து நாட்டம் கொள் ளான். பற்று, அச்சம், சினம் என்னும் மூன்றுவிதக் குற் றங்களினின்று நீங்கி அவனது மனம் நிறைநிலையடைகிறது. உலகப் பொருள்களிடத்துப் பற்றற்றிருக்கவேண்டும். பாம்பினிடத்தும் மரணத்தினிடத்தும் நமக்குப் பற்று இல்லை. ஆனால் அவைகளைக்குறித்து பயம் உண்டு. அது ஒண்ணாது. பற்றற்றிருப்பது போன்று பயமற்றும் இருக்க வேண்டும். பீமன் போன்றவனுக்குப் பகைவனிடத்துப் பற்றுமில்லை பயமும் இல்லை; எனினும் பெருமிதமாகக் கோபம் இருந்தது. அதுவும் தகாது. பற்றற்று, பயமற்று, சினமற்றிருக்கும் மனதே சீரிய மனதாகிறது. தெளிவடை தலும் அத்தகைய மனதுக்குச் சாத்தியமாகிறது.

மனன சீலத்தையுடையவன் முனி. அதாவது தைலதாரைபோன்று யாருடைய மனது இடையறாது ஆத்ம சொரூபத்தில் போய்க்கொண்டிருக்கிறதோ அம்மனி தன் முனியாகிறான்.

உனது காம இச்சைகளை நன்றாய் அடக்கியாளப் பிரயத்தனப் படு. அதில் ஜயமடைந்தால் சரீரத்தில் ஒருவிதமாறுபாடு உண்டாகும். அதாவது இந்திரிய சக்திகளை ஆத்ம விஷயத்தில் பிரவர்த்திப்பிக்கும் 'மேதை' என்ற ஒரு நாடி வளர்கிறது. இந்த மேதை நாடி வளர்ச்சி யடைந்த பிறகே ஆத்ம விஷயமான உயர்ந்த ஞானம் உண்டாகும்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

புறவுலகோடு முனிவன் எவ்வித ...ிணக்கம் வைக் கிறான் என்பதற்கு விடை வருகிறது :—

यः सर्वत्रानभिस्नेहस्तत्तत्प्राप्य शुभाशुभम् ।
नाभिनन्दति न द्वेष्टि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ५७

யः ஸர்வத்ராநபிஸ்நேஹஸ்தத்தத்ப்ராப்ய சுபாசுபம் ।
நாபிநந்ததி ந த்வேஷ்டி தஸ்ய பிரக்ஞா ப்ரதிஷ்டிதா ॥ 57

यः யः *யார்* सर्वत्र ஸர்வத்ர *எங்கும்* अनभिस्नेहः அனபிஸ்நேஹः *அபிமானமில்லாமல்* तत् तत् தத் தத் *அந்த அந்த* शुभाशुभं சுபாசுபம் *சுப அசுபங்களை* प्राप्य ப்ராப்ய *அடைந்து* न अभिनन्दति ந அபிநந்நதி *மகிழ்ச்சியடைவதில்லை.* न द्वेष्टि ந த்வேஷ்டி *வெறுப்படைவதில்லை* तस्य தஸ்ய *அவனுடைய* प्रज्ञा ப்ரக்ஞா *பிரக்ஞை* प्रतिष्ठिता ப்ரதிஷ்டிதா *பிரதிஷ்டை பெற்றது.*

***எவன் எங்கும் பற்றிலனாய், நலம் தருவதை அடைந்து மகிழாதும், கேடு தருவதை அடைந்து நொந்து கொள்ளாதுமிருக்கிறானோ அவன் அறிவு உறுதி பெறுகிறது.*** ***57***

*நலமும் கேடும் கலந்துள்ளது உலகம். பற்றுடையார்க்கு அது இன்ப துன்பத்தை விளைவிக்கிறது. பற்றற்ற ஞானிக்கு அதனால் இன்ப துன்பங்கள் இல்லை. ஆகையால் அவன் புகழ்வதுமில்லை, இகழ்வதுமில்லை.*

*மலையுச்சியிலிருந்து பார்ப்பவனுக்குக் கீழேயுள்ள புல்லும் மரமும் ஒரே சமதரையாகத் தென்படும். பிரம்ம சாக்ஷாத்காரம் பெற்ற பிறகு எல்லாம் ஒரேவிதமாய்த் தோன்றும். அப்போது நல்லது கெட்டது, உயர்ந்தது தாழ்ந்தது என்ற வேற்றுமையில்லை.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*எப்படிப் பேசுகிறான் என்னும் கேள்விக்கு இது விடை.*

**यदा संहरते चायं कूर्मोऽङ्गानीव सर्वशः ।**
**इन्द्रियाणीन्द्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ५८**

யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோऽங்கானீவ ஸர்வசः ।
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ்தஸ்ய ப்ரக்ஞா ப்ரதிஷ்டிதா ॥

कूर्मः கூர்மः *ஆமை* अङ्गानि इव அங்கானி இவ *அவயவங்களைச் சுருக்குவதுபோல்* यदा யதா *எப்பொழுது* च ச *இன்னும்* अयं அயம் *இந்த யோகி* इन्द्रियार्थेभ्यः இந்த்ரியார்த்தேப்யः *விஷயங்களிலிருந்து*

इन्द्रियाणि இந்த்ரியாணி *இந்திரியங்களை* सर्वशः ஸர்வச: *முழுதும்* संहरते ஸம்ஹரதே *இழுத்துக்கொள்ளுகிறானோ* तस्य தஸ்ய *அவனுடைய* प्रज्ञा ப்ரக்ஞா *பிரக்ஞை* प्रतिष्ठिता ப்ரதிஷ்டிதா *நிலைபெற்றது.*

***ஆமை தன் அவயவங்களை அடக்கிக்கொள்வது போல் பொருள்களிடத்திருந்து பொறிகளை முழுதும் உள்ளிழுக்க வல்லவனுக்கு நிறை ஞானம் நிலைபெறுகிறது.*** ***58***

*ஆபத்துக்களினின்று தன்னைக் காத்துக்கொள்ள ஆமை மிக எளிதில் உறுப்புகளை உள்ளே இழுத்துக்கொள்ளுகிறது. இந்திரியங்களை ஆளும் அறிஞன் அவைகளை அவ்வளவு எளிதில் உள்முகமாகத் திருப்புகிறான். இப்படிச் செய்வது பிரத்தியாகாரம் எனப்படும். வீட்டின் கதவுகளை அடைத்துத் தாழ் இட்டுவிட்டு வெளியுலகின் வியவகாரத்தில் தொடர்வு அற்றவனாக மனிதன் உள்ளே வீற்றிருப்பதுபோன்று ஞானி பொறிவாயிலை அடைத்துவிட்டு சமாதியில் சுகித்திருக்க வல்லவனாகிறான். அப்படி சமாதியில் திளைத்திருப்பதுதான் நிறைஞானியின் உண்மை நிலை. நிலத்தில் திண்டாடுகிற மீனை நீரில் விட்டால் அது எப்படி உணர்கிறதோ அப்படியிருக்கிறது ஞானிக்கு ஆத்ம சொரூபத்திலிருப்பது.*

*பாம்பு கொடிய விஷமுள்ள ஜந்து. யாரேனுமொருவன் அதைப் பிடிக்கப்போனால் அது அவனைக் கடிக்கிறது. ஆனால் பாம்பை எடுத்து ஆட்டும் வித்தையைக் கற்றுக்கொண்டவன், ஒரு பாம்பைப் பிடிப்பதன்றி, ஆபரணங்களைப்போல கையிலும் கழுத்திலும் அநேகம் பாம்புகளைச் சுற்றிக்கொண்டு போகவும் கூடும். அதுபோல ஆத்ம ஞானத்தைப் பெற்றவனுக்கு இந்திரிய விஷயங்களால் யாதொரு தீங்கும் உண்டாகாது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஸ்திதப்பிரக்ஞன் எங்ஙனம் அமர்கிறான் என்று அர்ஜுனன் கேட்ட கேள்விக்கு விடையாக அடுத்த மூன்று சுலோகங்கள் வருகின்றன :—*

विषया विनिवर्तन्ते निराहारस्य देहिनः ।
रसवर्जं रसोऽप्यस्य परं दृष्ट्वा निवर्तते ॥ ५९

விஷயா விநிவர்த்தந்தே நிராஹாரஸ்ய தேஹின: ।
ரஸவர்ஜம் ரஸோऽப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே ॥ 59

निराहारस्य देहिनः நிராஹாரஸ்ய தேஹின: *பொறிகளைப் புலன்களிடத்துப்போகவொட்டாது தடுப்பவனுக்கு* विषयाः விஷயா: *விஷயானுபவங்கள்* विनिवर्तन्ते விநிவர்த்தந்தே *அற்றுப்போய்விடுகின்றன.* रसवर्जं ரஸவர்ஜம் *இச்சை எஞ்சியிருக்கிறது* परं दृष्ट्वा பரம் த்ருஷ்ட்வா *பரமாத்மாவைத் தரிசித்தபின்* अस्य அஸ்ய *அவனுடைய* रसः अपि ரஸ: அபி *இச்சையும்* निवर्तते நிவர்த்ததே *அழிகிறது.*

***...யங்களைத் தடுத்து வைப்பவனுக்கு விஷயானுபவங்களில்லை; ஆசையுண்டு. பரமாத்மாவைத் தரிசித்தபின் அவனுடைய ஆசையும் அழிகிறது.*** ***59***

நோய்வாய்ப்பட்டிருப்பவனுடைய இந்திரியங்கள் இந்திரியார்த்தங்களில் செல்லத் தகுதியற்றவைகளாகின்றன. ஆயினும் சுகமடைந்தும் விஷயங்களை அனுபவிக்க வேண்டும் என்ற விருப்பம் உள்ளத்தில் குடிகொண்டிருக்கிறது. சிறைச்சாலையில் அடைபட்டிருப்பவனுக்கு இந்திரியார்த்தங்களைப் பார்க்கவும், கேட்கவும், வேறு எந்த இந்திரியத்தைக் கொண்டு நுகரவும் இயலாது. விஷயங்களையெல்லாம் விட்டு அவன் பலவந்தமாக விலக்கப்பட்டவனாகிறான். ஆனால் அவைகளை அனுபவிக்க வேண்டும் என்ற ஆசை உள்ளத்தில் உதித்துக்கொண்டிருக்கிறது. யாராலும் அதை அடக்கிவைக்க முடியாது. புலனடக்கம் முதலிய தபசுகளைச் செய்பவனது நிலைமையும் அத்தகையது. வாசனைகள் மிக சூக்ஷ்மமாக இருந்துகொண்டு கூத்தாடும். தீயிலிட்டு வறுத்த விதை முளைக்காது. அவ்வாறு வாசனை அறவே ஒழிய வேண்டும். இந்த ஆசையை பகவான் ரஸம் என்கிறார். வாசனை, ரஸம், ஆசை ஆகிய சொற்களுக்குப் பொருள்

ஒன்றேயாம். ஆசையானது திரும்பவும் முளைக்காதபடி அவிந்து பட்டுப் போகவேண்டும்.

அதை வேர் அறுப்பதற்கு வழியொன்று உண்டு. சிற்றின்பத்துக்கு ஏதுவான பொருள்களாகத் தென்படுபவைகளெல்லாம் உண்மையில் பரமாத்மாவே என்று அறிபவர்கள் அதன்கண் ஆசை அல்லது பயம் கொள்ள மாட்டார்கள். அதைப் போற்றிப் பாராட்டுவார்கள்.

*சிங்கம் போன்று பொய்க்கோலம் பூண்டு சிறுவன் ஒருவன் கர்ஜிக்கிறான். அவன் தங்கை தப்பித்துக்கொள்ள நடுங்கி ஓடுகிறாள். அவ்வேளையில் அவன் வேஷத்தைக் கலைக்கிறான். "ஓ, இது அண்ணா தானா!" என்று சிறுமி மனம் தெளிந்து அவனிடம் ஓடுகிறாள். உலகப் பொருள்களைக் கண்டு மருண்டு அல்லது ஆசை கொண்டு திரியும் உலகப் பற்றுடையவர்களது நிலைமையும் இத்தகையதே. பிரபஞ்சம் என்ற பொய்க் கோலத்தில் பரம்பொருள் தன்னை மறைத்துக்கொள்கிறது. அதை உள்ளபடி காண்பவர்க்கு அச்சமும் ஆசையும் இல்லை.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

அடங்காத இந்திரியங்கள் செய்யும் இன்னல்களாவன :—

**यततो ह्यपि कौन्तेय पुरुषस्य विपश्चितः ।**
**इन्द्रियाणि प्रमाथीनि हरन्ति प्रसभं मनः ॥ ६०**

யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபஸ்சித: ।
இந்த்ரியாணி ப்ரமாதீனி ஹரந்தி ப்ரஸபம் மன: ॥ 60

कौन्तेय கௌந்தேய *குந்தியின் மைந்தா* हि ஹி *நிச்சயமாக* यतत: யதத: *யத்தனம் செய்கிற* विपश्चित: पुरुषस्य விபஸ்சித: புருஷஸ்ய *விவேகமுள்ள புருஷனுடைய* मन: अपि மன: அபி *மனதையும்* प्रमाथीनि ப்ரமாதீனி *கொந்தளிப்புள்ள* इन्द्रियाणि இந்த்ரியாணி *இந்திரியங்கள்* प्रसभं ப்ரஸபம் *பலவந்தமாக* हरन्ति ஹரந்தி *இழுத்துச்செல்கின்றன.*

***நெறிநிற்கும் நல்லறிஞனுடைய மனதையும் கொந்தளிப்புள்ள இந்திரியங்கள் பலவந்தமாகப் பற்றி யிழுக்கின்றன.*** ***60***

*இந்திரியங்கள் பொல்லாதவைகள். தவ விரத முடையவர்களையும் அவைகள் தத்தளிக்கச் செய்கின்றன. அவைகளைப் பின்பற்றுவது காட்டுக் குதிரையின்மீது சவாரி செய்வதற்கு ஒப்பாகும். அறிஞர்களையே அவைகள் படு குழியில் வீழ்த்துபவைகள். பின்பு பாமரர்களை அவைகள் என் செய்யமாட்டா? இந்திரியங்களை வெல்லுமளவு மனிதன் மேலோன் ஆகிறான். தனி மனிதன் அல்லது ஒரு சமுதாயம் அடைந்துள்ள பண்பாட்டை ஆங்குத் தென்படும் புலனடக்கத்தைக்கொண்டு அளந்துவிடலாம். சீரிய புலனடக்கமே மேலான நாகரிகம் என்று கருதப்படுகிறது. இம்மை மறுமையாகிய இரண்டிலும் மேன்மைக்கு இந்திரிய நிக்கிரகமே உற்ற உபாயம்.*

*விஷப்பாம்புகள் நடமாடும் வீட்டில் வசிப்பவர்கள் எப்போதும் வெகு ஜாக்கிரதையாக இருப்பதைப்போல் உலகத்தில் வாழும் மக்கள் காமத்துக்கும் காசு ஆசைக்கும் உட்படாமல் எப்போதும் ஜாக்கிரதையுடன் இருக்க வேண்டும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*அவ்விந்திரியங்களை அடக்கும் வழி :—*

**तानि सर्वाणि संयम्य युक्त आसीत मत्परः ।**
**वशे हि यस्येन्द्रियाणि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ६१**

தானி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர: ।
வசே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரக்ஞா ப்ரதிஷ்டிதா ॥

युक्तः யுக்த: *மனவுறுதியுடையவன்* तानि सर्वाणि தானி ஸர்வாணி *அவைகளையெல்லாம்* संयम्य ஸம்யம்ய *அடக்கிக்கொண்டு* मत्परः மத்பர: *என்னைப் பரகதியாகக்கொண்டு* आसीत ஆஸீத *இருக்கிறான்* हि ஹி *ஏனெனில்* यस्य யஸ்ய *யாருடைய* इन्द्रियाणि இந்திரியாணி *இந்திரியங்கள்* वशे வசே *வசப்பட்டிருக்கின்றனவோ* तस्य தஸ்ய *அவனுடைய* प्रज्ञा ப்ரக்ஞா *பிரக்ஞை* प्रतिष्ठिता ப்ரதிஷ்டிதா *நிலை பெற்றது.*

***யோக நிஷ்டன் அவைகளையெல்லாம் அடக்கி என்னைப் பரகதியாகக்கொண்டிருக்கிறான்.***

*இந்திரியங்களை வசமாக்கியவனுக்கு அறிவு நிலை பெறுகிறது.* 61

மனது ஏககாலத்தில் இரண்டு பொருள்களை நினைக்க முடியாது. "நான் விஷயங்களை விட்டுவிடவேண்டும்" என்று நினைக்கும்போதும் விஷய எண்ணங்கள்தான் மனதில் குடிகொள்கின்றன. வேர் ஊன்றி மனதுக்குள் பாய்ந்து மறைமுகமாக அவைகள் வலிவு பெறுகின்றன. விஷய எண்ணங்களுக்கு மனமுவந்து அனுமதி கொடுக்கிறபொழுது அவைகள் மேலே கிளைகளாகக் கொம்புகளாகத் தளிர்க்கின்றன. வேண்டாமென்று அக்கிளைகளைக் கொய்ய முயலும்போது அவைகளின் ஆணிவேர் மனதினுள் ஆழமாகச் செல்லுகிறது. அதற்குப் பதிலாக எண்ணத்தையே மாற்றிவிடவேண்டும். இந்திரியங்களைப்பற்றிய எண்ணம் ஈசனைப்பற்றிய எண்ணமாக மாறவேண்டும். இவ்விரண்டு எண்ணங்களுள் எது வலுக்கிறதோ அது மற்றதைத் தகர்க்கிறது. தீயதைத் தகர்க்கும் தன்மை தெய்விக எண்ணத்துக்கு உண்டு.

நெருங்கிய உறவினர் ஒருவர் காலமாய்விட்டால் அவ்வேளையில் சிற்றின்பத்தைப்பற்றி நினைக்க யாருக்கும் இயலாது. ஏனென்றால் முழுமனதும் துக்கத்தில் ஈடுபட்டுவிடுகிறது. அது போன்று யாருடைய மனது முழுதும் ஈசுவரனிடம் திரும்பிவிடுகிறதோ அவனால் இந்திரிய சுகங்களை நினைக்கமுடியாது. இந்திரியங்களெல்லாம் தாமே ஓய்ந்து போய்விடுகின்றன.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

கேடு அனைத்துக்கும் முதற்காரணம் யாது? விடை வருகிறது:—

ध्यायतो विषयान्पुंसः सङ्गस्तेषूपजायते ।
सङ्गात् सञ्जायते कामः कामात्क्रोधोऽभिजायते ॥ ६२

த்யாயதோ விஷயான்பும்ஸ: ஸங்கஸ்தேஷூபஜாயதே ।
ஸங்காத் ஸஞ்ஜாயதே காம: காமாத்க்ரோதோऽபிஜாயதே ॥

विषयान् விஷயான் *இந்திரிய விஷயங்களை* ध्यायतः த்யாயத: *தியானிக்கின்ற* पुंसः பும்ஸ: *மனிதனுக்கு* तेषु தேஷு *அவைகளிடத்து*

सङ्गः ஸங்க: *பற்றுதல்* उपजायते உபஜாயதே *உண்டாகிறது* सङ्गात् ஸங்காத் *பற்றுதலிலிருந்து* कामः காம: *ஆசை* सञ्जायते ஸஞ்ஜாயதே *உண்டாகிறது* कामात् காமாத் *காமத்தினின்று* क्रोधः க்ரோத: *குரோதம்* अभिजायते அபிஜாயதே *வளர்கிறது.*

***பொருள்களை நினைப்பதால் பற்றுண்டாகிறது. பற்று ஆசையாகப் பரிணமிக்கிறது. ஆசை சினமாக வடிவெடுக்கிறது.*** 62

**क्रोधाद्भवति संमोहः संमोहात्स्मृतिविभ्रमः ।**
**स्मृतिभ्रंशाद्बुद्धिनाशो बुद्धिनाशात्प्रणश्यति ॥ ६३**

க்ரோதாத்பவதி ஸம்மோஹ: ஸம்மோஹாத்ஸ்ம்ருதிவிப்ரம: ।
ஸ்ம்ருதிப்ரம்சாத்புத்திநாசோ புத்திநாசாத்ப்ரணச்யதி ॥ 63

क्रोधात् க்ரோதாத் *குரோதத்திலிருந்து* संमोहः ஸம்மோஹ: *அவிவேகம் (மனக்குழப்பம்)* भवति பவதி *உண்டாகிறது* संमोहात् ஸம்மோஹாத் *குழப்பத்தினின்று* स्मृतिविभ्रमः ஸ்ம்ருதிவிப்ரம: *நினைவின்மை* स्मृतिभ्रंशात् ஸ்ம்ருதிப்ரம்சாத் *நினைவுநாசத்திலிருந்து* बुद्धिनाशः புத்திநாச: *புத்தி நாசம்* बुद्धिनाशात् புத்திநாசாத் *புத்தி நாசத்தினால்* प्रणश्यति ப்ரணச்யதி *அழிந்துபோகிறான்.*

***சினத்தால் மனக்குழப்பம்; குழப்பத்தால் நினைவின்மை; நினைவு நாசத்தால் புத்தி நாசம்; புத்தி நாசத்தால் ஆள் அழிகிறான்.*** 63

*இந்திரியங்களை விஷயாதிகளில் உலவவிட்டுக் கொண்டு மனிதன் ஒருவன் வீதியில் நடக்கிறான். பல வடிவங்களை அவன் பார்க்கிறான். கண்ணாடியில் பிம்பம் போன்று அவைகள் தோன்றித் தோன்றி மறைகின்றன. மனதில் ஒரு பதிவையும் அவைகள் செய்யவில்லை. அவைகளுக்கிடையில் கட்டழகுள்ள வடிவம் ஒன்று தோன்றுகிறது. அதைக் கூர்ந்து பார்க்க மனது விரும்புகிறது. திரும்பவும் பார்க்கவேண்டும் என்ற எண்ணம் வருகிறது. பன்முறை பார்க்கும் வாய்ப்பும் அமைகிறது. அதைப் பார்ப்பதில், பிறகு நினைப்பதில் மகிழ்ச்சி உண்டாகிறது. நினைந்துநினைந்து*

அவ்வழகு வடிவத்தின்கண் விருப்பம் வருகிறது. வலுத்த விருப்பம் பற்றுதல் எனப் பெயர் பெறுகிறது. பார்த்தல் என்கிற ஓர் இந்திரிய நுகர்ச்சி மற்ற இந்திரிய நுகர்ச்சிகளுக்கும் இடந்தேடப் பார்க்கிறது. அதாவது அச் சுந்தர சொரூபத்தைத் தனக்குரியதாக்கிக் கொள்ளத் தீர்மானம் வந்துவிடுகிறது. இத்தீர்மானத்துக்கு ஆசை அல்லது காமம் என்று பெயர். எரியும் தீயை விறகுக்கட்டை வளர்ப்பது போன்று எண்ணம் காமத்தை வளர்க்கிறது. இனி ஆசையை நிறைவேற்றிக் கொள்ளுவதற்கான முயற்சி எடுத்துக்கொள்ளப்படுகிறது. ஆனால் உலகம் அதற்கு இடந்தருவதில்லை. ஆசையை அவர்கள் தடைப்படுத்துகின்றனர். தடைப்பட்ட ஆசை சினமாக வடிவெடுக்கிறது. சினத்தைக் காணுமிடத்தெல்லாம் அதைத் துருவி ஆராய்ந்தால் அது தடைப்பட்ட ஆசை என்பது தெளிவாகும். சினம் பைத்தியத்துக்கு ஒப்பானது. பைத்தியம் நிலைத்துள்ளது, சினம் தாற்காலிகமாயுள்ளது. அவ்வளவு தான் வித்தியாசம். சினம் கொண்டவனுக்கும் பித்தம் பிடித்தவனுக்கும் நடைமுறை ஒன்றே. குழம்பிய மனநிலை அதன் விளைவு.

அமைதி குடிகொள்ளுங்கால் வனத்தில் உள்ள மரம் செடி கொடிகள் உள்ளபடி தென்படுகின்றன. இது இப்பெயருடையது என்கிற நினைவு இருக்கிறது. ஆனால் புயல் காற்று அடிக்குங்கால் எல்லாம் ஒரே அமளி. சினம் கொண்ட மனதிலும் ஒரே புயல்காற்று. அது சம்மோகம் என்றும், குழப்பம் என்றும் பெயர் பெறுகிறது. நன்று இது, தீது இது என்ற நினைவு அப்பொழுது இருப்பதில்லை. பண்டு, பலகால் ஆராய்ச்சியில் கண்டறிந்துள்ள நலம் கேடுகளைப் பற்றிய ஞாபகம் போய்விடுகிறது. பழைய நினைவுகளை அடிப்படையாக வைத்துக்கொண்டு மனிதன் புதிய செயல்களை நன்றென்றும் தீதென்றும் பாகுபடுத்துகிறான். எப்பொருள் எத்தன்மையது என்கிற ஞாபகம் இருந்தால்

தான் அப்பொருளின் மெய்ம்மையை புத்தியானது பாகு படுத்த வல்லதாகும். ஆக, நினைவு போய்விட்டால் விவே கம் அல்லது நல்லறிவு அழிகிறது. அறிவை இழந்தவன் தானே அழிவுபட்டவன் ஆகிறான். ஏனென்றால் நெறிவழு வுதல் மாய்தலுக்கு ஒப்பாகிறது.

அரசம் வித்து கண்ணுக்குத்தென்படாது மிக நுட்ப மானதாக ஒரு கற்கட்டிடத்தின் இடுக்கில் விழுகிறது. அது வேர் விட்டுச் செடியாகி மரமாகிக் கட்டிடத்தையேபெயர்த் துத் தள்ளுகிறது. எண்ணம் அவ்வளவு நுண்ணியதாக உள்ளத்தில் புகுந்து, பெரியதாகப் பரிணமித்து ஆளையே மாற்றிவிடவல்லதாகிறது. தன்னை மேலோனாக அல்லது கீழோனாகப் படைப்பது தன் எண்ணம். கீழான எண்ணம் செய்யும் கேட்டை இங்கு பகவான் விளக்கியுள்ளார். ஆகை யால் மனிதன் தன் எண்ணத்தைப்பற்றி எச்சரிக்கையா யிருப்பானாக.

ஒரு ஸந்யாஸி ஒரு கோவிலுக்குப் பக்கத்தில் வசித்து வந்தார். அவருடைய வாசஸ்தானத்துக்கு எதிரில் ஒரு தாஸியின் வீடு இருந்தது. அந்த வேசியின் வீட்டில், சதா சர்வ காலமும் புருஷர்கள் கூடியிருப் பதைக் கண்ட அந்த ஸந்யாஸி ஒருநாள் அவளைக் கூப்பிட்டு, "நீ ஒரு பெரும் பாவியாகிவிட்டாய். இரவும் பகலும் நீ பாவம் செய்து கொண்டே இருக்கிறாய். உன்கதி என்னவாகுமோ!" என்று கண்டித் தார். தான் செய்த பாவத் தொழிலுக்குப் பெரிதும் வருந்திய தாஸி, வெகுவாக வருத்தப்பட்டுத் தன்னை மன்னித்தருள வேண்டுமென்று உள்ளன்போடு ஈசுவரனை நோக்கிப் பிரார்த்தித்தாள். வேசைத்தனமே அவளுடைய குலத் தொழிலாகையால் வேறுவகையால் அவளுக்குக் காலக்ஷேபம் செய்யமுடியவில்லை. ஆயினும், வயிற்றுப் பிழைப்புக்காக சரீரத்தை விற்றபோதெல்லாம் அவள் உள்ளங்குழைந்து மன்னிப்பு வேண்டி ஈசுவர ஸ்துதி செய்வது வழக்கம். ஸந்யாஸியோ, தான் சொன்னதைத் தாஸி கேட்கவில்லையென்று எண்ணி, இவளுடைய ஆயுட்காலத்துக்குள் எத்தனைபேர் இவளிடம் வருகிறார்கள் என்பதைப் பார்க்கவேண்டும் என்று நிச்சயித்துக்கொண்டு, அன்று முதல் அவளைக் கவனிப்பதிலேயே கருத்தாயினர். யாரேனும் ஒருவர் அந்த வேசியின் வீட்டுக்குள் நுழைந்தால், உடனே அந்த ஸந்யாஸி ஒரு கூழாங்கல்லை எடுத்துப் போட்டு எண்ணிக்கொள்வார். இப்படிப்போட்ட கற்கள் பெரிய குவியலாகக் குவிந்தது. ஒருநாள் அந்த ஸந்யாஸி, இந்தக் கற்

குவியலைத் தாஸிக்குக் காட்டி, 'பெண்ணே! இந்த குவியலைப் பார்த் தாயா? நான் எந்தக் காரியத்தைச் செய்யவேண்டாமென்று சொன் னேனே, அந்தக்காரியத்தை நீ எத்தனை தரம் செய்திருக்கிறாய் என்பதை இந்தக் குவியலில் உள்ளகற்கள் ஒவ்வொன்றும் தெரிவிக்கும். இன்னும் சொல்லுகிறேன்; வீணாகக் கெட்டுப் போகாதே'' என்றார். தனது பாபக் குவியலைக் கண்ட தாஸிக்கு நடுக்க முண்டாயிற்று. ஆகவே அவள் கண்ணும் கண்ணீருமாய் நின்று உள்ளம் வருந்தி, "ஈசுவரா! இந்தத் தீய செய்கையை இனி நான் செய்யாவண்ணம் என் உயிரைக் கொண்டுபோகமாட்டாயா?'' என்று பிரார்த்தித்தாள். அந்தப் பிரார்த் தனையின்படியே அவள் உயிரை கடவுள் அன்றிரவே கொண்டுபோனார். ஈசுவரனுடைய இச்சையை என்னென்று சொல்வது! அதே நாளில் அந்த ஸந்யாஸியும் இறந்துபோனார். வைகுண்டத்திலிருந்து விஷ்ணு தூதர்கள் வந்து அந்த தாஸியின் உயிரைச் சுவர்க்கத்துக்குக் கொண்டு போனார்கள், எமபடர்கள் வந்து நரகத்துக்குக் கொண்டுபோவதற்காக அந்த ஸந்யாஸியின் உயிரைக் கட்டிப்பிணித்தனர். தாஸியின் நற்கதியை நோக்கிய ஸந்யாஸி, "இதுதானா ஈசுவரனுடைய நீதி? ஆயுள் முழுவதும் தவம் செய்த என்னை நரகத்துக்கும், தினந்தோறும் பாபம் செய்த தாஸியை மோக்ஷத்துக்கும் கொண்டுபோவது நியாயமா?'' என்று கூறினார். விஷ்ணு தூதர்கள் இதைக்கேட்டு, 'ஈசுவரனுடைய ஆக்ஞை எப்போதும் நியாயமானதாகவே இருக்கும். நீ எதை நினைக்கிறாயோ அதையே அனுபவிப்பாய். கௌரவத்தையும் புகழையும் பெறவேண்டி நீ வீண் படாடோபத்துடன் காலங்கழித்தாய். ஈசுவரன் உனக்கு அவற் றைக்கொடுத்தான். உனது மனம் ஒருபோதும் அந்தரங்கத்துடன் அவனை நாடினதில்லை. இந்த வேசையோ சரீரத்தால் பாபம் செய் தனள் என்றாலும் இரவும் பகலும் மனமார ஈசுவரனைத் துதித்து வந் தாள். பூலோகத்தில் உன் சரீரமும் அவள் சரீரமும் அடையும் மரியா தையைப்பார். நீ சரீரத்தால் பாபம் செய்ததில்லை. ஆகவே உனது சரீரத்தைப் புஷ்பங்களால் அலங்கரித்து ஆற்றில் இடுவதற்காக மேள தாளத்துடன் ஊர்கோலம் கொண்டு போகின்றனர். பாபம் செய்த இந்த வேசையின் உடலை இந்த க்ஷணத்தில் நாயும் நரியும் பிடுங்கித் தின்கின்றன. என்றாலும் அவள் சுத்தமான மனமுடையவளாதலால் சுவர்க்கத்திற்குப் போகிறாள். உன் மனம் எப்போதும் அவளுடைய பாபச் செயல்களைப்பற்றியே சிந்தித்திருந்தபடியால் அசுத்தமாயிற்று; ஆதலால் நீ அசுத்தாத்மாக்களிடம் போகிறாய். வாஸ்தவத்தில் நீதான் வேசையானாய். அவள் வேசையல்ல'' என்று பதில் கூறினார்கள்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

விஷயாதிகளில் உலவும் எண்ணத்தை மீட்டெடுத்து எதன்கண் நிலைநிறுத்தினால் நன்மையுண்டாகும்? விடை வருகிறது :—

रागद्वेषवियुक्तैस्तु विषयानिन्द्रियैश्चरन् ।
आत्मवश्यैर्विधेयात्मा प्रसादमधिगच्छति ॥ ६४

ராகத்வேஷவியுக்தைஸ்து விஷயானிந்த்ரியைஸ்சரன் ।
ஆத்மவச்யைர்விதேயாத்மா ப்ரஸாதமதிகச்சதி ॥ 64

तु து *ஆனால்* रागद्वेषवियुक्तैः ராகத்வேஷவியுக்தை: *ராக த்வே ஷங்களிலிருந்து விடுபட்ட* आत्मवश्यैः ஆத்மவச்யை: *ஆத்மவசப்பட் டுள்ள* इन्द्रियैः இந்திரியை: *இந்திரியங்களைக்கொண்டு* विषयान् விஷயான் *விஷயங்களில்* चरन् சரன் *சஞ்சரிக்கின்ற* विधेयात्मा விதேயாத்மா *அடங்கிய மனதையுடையவன்* प्रसादम् ப்ரஸாதம் *மனத்தெளிவை* अधिगच्छति அதிகச்சதி *அடைகிறான்.*

***விருப்பு வெறுப்பற்றனவும், ஆத்மவசப்பட் டனவும் ஆகிய இந்திரியங்களால் விஷயங்களில் உலவுகின்ற மன வேந்தன் மனத்தெளிவடைகிறான்.***

*இந்திரியங்கள் இயல்பாகப் புறவுலகில் செல்லும் பாங்குடையவைகள். புறப்பொருள்களை அனுபவிக்க வேண்டும் என்ற அவாவுடன் பொறிகள் அவைகளைத் தாவிப் பற்றுகின்றன. ஆனால் பொருள்கள் துன்பம் தரு வனவாயிருப்பின் பொறிகள் அவைகளை வெறுத்துப் பின் வா ன. இங்ஙனம் விருப்பும் வெறுப்பும் இந் யங்கள்பால் இயல்பாய் அமைந்துள்ளன. அந்த இயல்பை இன்னும் கொஞ்சம் ஆழ்ந்து ஆராயுமிடத்து மனது ஆட்டி வைக்கின்ற பிரகாரம் இந்திரியங்கள் ராக த்வேஷ வடி வெடுத்துத் தொழில் புரிகின்றன.*

*மனதை அடியோடு அடக்கி வென்றவன் மனவேந் தன். அத்தகையவனது மனம் பெரிதும் ஆத்ம சொரூபத் திலேயே திளைத்திருக்கிறது. அது வெளி விஷயங்களில் செல்லுமாயின் ஆசைப்படாது புனித இயல்போடு சஞ்சரிக் கிறது. அதனால் அதனுடைய அமைதியும் தெளிவும் அதி கரிக்கின்றன. சுத்த மனதோடு இந்திரியங்களைப் பயன் படுத்துவதே ஒருவித சமாதியாகிறது. ஸ்ரீ ராமகிருஷ்ண*

பரமஹம்ஸர் கண்கொண்டு கார்மேகத்தையும் அதன்கீழ் உலாவிய கொக்கையும் பார்த்தார். அதனால் அவருக்கு ஆனந்த சமாதி ஏற்பட்டது. அவர் சிறுவராயிருந்தபோது நாடகத்துக்கு சிவவேஷம் பூட்டினார்கள். சாம்பல் பூசுதல் முதலிய ஸ்பரிச உணர்ச்சி அவருக்கு சிவ பாவ சமாதியை உண்டுபண்ணிற்று. காதால் பகவந் நாமத்தைக்கேட்ட பொழுதெல்லாம் அவருக்கு சமாதி வந்தது. நறுமணத்தை நுகர்ந்த போதெல்லாம் ஈசுவர சிந்தனையும் சமாதியும் அவருக்கு வந்துவிடும். வாயில் வைத்து சுவைத்ததெல்லாம் அவருக்கு ஈசுவரப் பிரசாதம். ஆக, இந்திரியங்கள் ஐந்தையும் நன்கு பயன்படுத்தி அவர் ஈசுவர சந்நிதியையே சார்ந்திருந்தார். மனம் அடங்கப் பெற்றார்க்கு இந்திரியங்கள் கேடுடையவைகளல்ல என்பதற்கும், பிரசாதம் அல்லது தெளிந்த நிலையில் மனது திளைத்திருக்கும் என்பதற்கும் அவரது வாழ்க்கையே சான்றாகிறது.

ஸ்திதப்பிரக்ஞன் எப்படி நடமாடுகிறான் என்ற கேள்விக்கு இது விடை :—

**प्रसादे सर्वदुःखानां हानिरस्योपजायते ।**
**प्रसन्नचेतसो ह्याशु बुद्धिः पर्यवतिष्ठते ॥ ६५**

ப்ரஸாதே ஸர்வது:கானும் ஹானிரஸ்யோபஜாயதே ।
ப்ரஸன்னசேதஸோ ஹ்யாசு புத்தி: பர்யவதிஷ்டதே ॥ 65

प्रसादे ப்ரஸாதே (*பிரசாதத்தில்*) *மனஅமைதியில்* अस्य அஸ்ய *இவனுடைய* सर्वदुःखानां ஸர்வது:கானும் *எல்லாதுக்கங்களுக்கும்* हानिः ஹானி: *அழிவு* उपजायते உபஜாயதே *உண்டாகிறது* हि ஹி *ஏனெனில்* प्रसन्नचेतसः ப்ரஸன்னசேதஸ: *மனத்தெளிவுடையவனுக்கு* आशु ஆசு *விரைவில்* बुद्धिः புத்தி: *புத்தி* पर्यवतिष्ठते பர்யவதிஷ்டதே *உறுதிபெறு*

***மனவமைதியில் மனிதனது துன்பங்களனைத்தும் ஒழியும். ஏனெனில் மனவமைதியுடையவனுக்கு அறிவு விரைவில் ஆத்ம சொரூபத்தில் நிலைபெறுகிறது.*** **65**

பலபேர் உலகைக் கேடு மிக நிறைந்ததாக நினைக்கின்றனர். நலம், கேடு ஆகிய இரண்டும் நிறைந்தது உலகம் என்ற எண்ணம் பொதுவாக எல்லார்க்குமுண்டு. இவ்வுலகம் திருந்தியமையும்பொழுது தங்களுக்கு மனவமைதியுண்டாகும் என்று அவர்கள் எதிர்பார்க்கின்றனர். உலகில் அல்லல் நிறைந்திருப்பதும் தாங்கள் அசாந்தியில் மூழ்கியிருப்பதும் இணை பிரியாதவைகளாம். வெளியுலகில் காணும் கேடுகளெல்லாம் மனதில் இருக்கும் கேட்டின் புறத்தோற்றங்களாம். மனது திருந்தியமையுமளவு புறவுலகக் காட்சியும் திருந்தியமைகிறது.

உண்மையில் புறவுலகம் கேடுடையது அன்று; அது ஈசுவர சொரூபம். அதைக் கடவுள் சொரூபமாகக் கருதுமளவு மனது அமைதியுறுகிறது. அமைதியுற்ற உள்ளத்தில் ஆத்ம சொரூபம் தென்படுகிறது. பிறகு அம்மனதே ஆத்ம சொரூபமாய்விடுகிறது.

பாலுக்குப் பிரையூற்றின பின் அது தயிராக உறையும் வரையில் அமைதியாக ஓரிடத்திலேயே வைக்கப்படவேண்டும். இடம் மாற்றி வைத்தால் அது நல்ல தயிராகாது. அங்ஙனம் மனதை ஈசுவரனிடத்திலேயே வைக்கின்றவளவு அது அமைதி பெறுகிறது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

தன்னைத் திருத்தியமைக்காவிட்டால் ஆவதென்ன? விடை வருகிறது :—

**नास्ति बुद्धिरयुक्तस्य न चायुक्तस्य भावना ।**
**न चाभावयतः शान्तिरशान्तस्य कुतः सुखम् ॥ ६६**

நாஸ்தி புத்திரயுக்தஸ்ய ந சாயுக்தஸ்ய பாவநா ।
ந சாபாவயத: சாந்திரசாந்தஸ்ய குத: ஸுகம் ॥ 66

अयुक्तस्य அயுக்தஸ்ய *மனமடங்கப்பெறாதவனுக்கு* बुद्धिः புத்தி: *ஆத்மபோதம்* न अस्ति ந அஸ்தி *இல்லை* अयुक्तस्य அயுக்தஸ்ய *யோகியல்லாதவனுக்கு* भावना च பாவநா ச *ஆத்மபாவனையும்* न ந *இல்லை* अभावयतः च அபாவயத: ச *ஆத்மதியானமில்லாதவனுக்கு* शान्तिः சாந்தி:

*சாந்தி* न ந *இல்லை* अशान्तस्य அசாந்தஸ்ய *சாந்தியில்லாதவனுக்கு* सुखं ஸுகம் *சுகம்* कुतः குத: *ஏது.*

**மனமடங்காதவனுக்கு ஆத்ம போதமுமில்லை, ஆத்ம பாவனையுமில்லை. ஆத்ம தியானமில்லாதவனுக்கு சாந்தி கிடையாது. சாந்தியில்லாதவனுக்கு இன்பமேது? 66**

விருப்பு வெறுப்பை வென்றவனே யோகி. அத்தகையவன் யுக்தன் எனப்படுகிறான். மேலே மொழிந்த விஷயம் மீண்டுமொருமுறை எதிர்மறையாகச் சொல்லப்படுகிறது. மனமடங்கப் பெறாதவனுக்கு இம்மியளவும் இன்பமில்லை. புலன்களில் வேட்கையிருக்குமளவு துன்பப்பட்டே ஆகவேண்டும். துக்கப்பிராப்தி மட்டுமல்ல, வேறு என்னென்ன நஷ்டங்களெனின், இந்திரியங்களை வெல்லாதவனுக்கு ஆத்மாவைப்பற்றிய விவேகமில்லை. ஆகையால் ஆத்மத் தியானம் அவனால் செய்ய முடியாது. ஆத்மத் தியானம் செய்யாதவனுக்கு ஆத்ம சொரூப ஞானமில்லை. அதினின்று உண்டாகிற சாந்தியுமில்லை. இத்தனைவித நஷ்டங்கள் மனமடங்காமையால் வருகின்றன.

வேகாத மண்ணைக் கொண்டு குயவன் சட்டிகளும் பானைகளும் செய்கிறான். ஒருதரம் சுடப்பட்டுவிட்டால் அந்த மண்ணைக் கொண்டு அவனால் ஒன்றும் செய்ய முடியாது. அதுபோல, உலக இச்சைகளாகிய நெருப்பால் வெந்துபோன ஒருவனுடைய மனத்தில் உயர்ந்த மனோ பாவங்கள் உண்டாகா. அதை ஒரு அழகிய உருவமாக்கவும் முடியாது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

மனமடங்காதவனுக்கு ஞானம் ஏன் உண்டாவதில்லை? அதற்கு விடை வருகிறது :—

**इन्द्रियाणां हि चरतां यन्मनोऽनुविधीयते ।**
**तदस्य हरति प्रज्ञां वायुर्नावमिवांभसि ॥ ६७**

இந்த்ரியாணும் ஹி சரதாம் யன்மனோऽனுவிதீயதே ।
ததஸ்ய ஹரதி ப்ரக்ஞாம் வாயுர்நாவமிவாம்பஸி ॥ 67

हि ஹி *ஏனென்றால்* चरतां इन्द्रियाणां சரதாம் இந்த்ரியாணும் *சஞ்சரிக்கின்ற இந்திரியங்களை* यत् मनः யந் மன: *எந்த மனது* अनुविधीयते அனுவிதீயதே *பின்பற்றிப்போகிறதோ* तत् தந் *அது* अस्य அஸ்ய *அவனுடைய* प्रज्ञां ப்ரக்ஞாம் *பிரக்ஞையை* हरति ஹரதி *கவர்கிறது, அரிக்கிறது* अम्भसि அம்பஸி *ஜலத்தில்* नावं நாவம் *நாவாயை (கப்பலை)* वायुः इव வாயு: இவ *காற்றுப் போன்று.*

***நீர்மேல் கப்பலைக் காற்றானது கவர்வது போன்று, அலைகின்ற இந்திரியங்களைப் பின்தொடரும் மனது அவனது விவேகத்தை அரிக்கிறது.*** 67

*துடுப்பு, நங்கூரம், உள் யந்திரம், சுக்கான் முதலியவைகளால் ஆளப்பெறாத கப்பல் காற்றடிக்கும் திசையில் தள்ளுண்டு தடுமாற்றமடையும். அலைகின்ற இந்திரியங்களைப் பின்தொடரும் மனதுக்கு வரும்கேடும் அத்தகையது. புறவுலகைச் சார்தற்கென்றே இந்திரியங்கள் அமைந்தவைகள். ஒருவன் தூங்கும்பொழுது அவன் வாயில் இனிப்புப் பண்டத்தை வைத்தால், மனதின் வேகமின்றியே வாய் தானாக அப்பண்டத்தைச் சப்புகிறது; கயப்புப்பண்டத்தை வைத்தால் அதைத் துப்புகிறது. பழக்கத்தால் இவ்வியல்புகள் இந்திரியங்களுக்கு வந்துள்ளன. பண்படாத மனது இப்பொறிகள் வாயிலாகப் புறவுலகில் போமாயின் அது ஆத்ம சொரூபத்தைப் பற்றிய விவேகத்தை இழந்துவிடுகிறது.*

*இந்திரிய சுகங்கள் தினவு நோய்க்குச் சமானமானவைகள். தினவைச் சொறியச் சொறிய இன்பமாயிருக்கிறது. ஆனால் அந்நோய் அதன்மூலம் வளர்கிறது. இந்திரிய சுகத்தைப் பின்பற்றுகிறவளவு மனது தன் பெருமையை இழந்துவிடுகிறது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*அப்படியானால் அத்தகைய இந்திரியங்களை என்ன செய்யவேண்டும்?*

**तस्माद्यस्य महाबाहो निगृहीतानि सर्वशः ।**
**इन्द्रियाणीन्द्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ६८**

தஸ்மாத் யஸ்ய மஹாபாஹோ நிக்ருஹீதானி ஸர்வச: ।
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ் தஸ்ய ப்ரக்ஞா ப்ரதிஷ்டிதா ॥

महाबाहो மஹாபாஹோ *தோள்வலிவுடையவனே* तस्मात् தஸ்மாத் *ஆகையினால்* यस्य யஸ்ய *யாருடைய* इन्द्रियाणि இந்த்ரியாணி *இந்திரியங்கள்* इन्द्रियार्थेभ्यः இந்த்ரியார்த்தேப்ய: *இந்திரியார்த்தங்களிலிருந்து* सर्वशः ஸர்வச: *முற்றும்* निगृहीतानि நிக்ருஹீதானி *அடக்கப்பட்டிருக்கின்றனவோ* तस्य தஸ்ய *அவனுடைய* प्रज्ञा ப்ரக்ஞா *பிரக்ஞை* प्रतिष्ठिता ப்ரதிஷ்டிதா *பிரதிஷ்டைபெற்றது.*

***ஆகையால், ஆற்றலுடையாய்! யாருடைய பொறிகள் புலன்களினின்று பிரிக்கப்பட்டிருக்கின்றனவோ அவனது அறிவு நிலைபெற்றுள்ளது. 68***

*இந்திரியங்கள் தத்தம் தொழில் புரியாதிருக்க வேண்டும் என்பதல்ல இதன் பொருள். வஸ்துக்களை போகத்துக்குரியவைகளென்று எண்ணி அவைகள் மீது இந்திரியங்கள் உலவுதலால் கேடு விளைகிறது. நலன் தரக்கூடிய வேறு ஒரு போக்கில் இந்திரியங்களைப் பழக்கலாம். பணம் என்றால் பிணமும் வாய்திறக்கும் என்பதுபழமொழி. ஆனால் அது கெட்ட உபாதியை உண்டுபண்ணுகிறபடியால் அதைத் தொடவேமாட்டேன் என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஆழ்ந்து சங்கற்பிக்கிறார். அதன்பயனாக அவரது நாடி நரம்புகளில் பெரியதொரு மாறுதல் வந்துவிடுகிறது. தூங்கும்பொழுது ஒரு நாணயத்தால் அவரது உடலைத் தொட்டாலும் அவருக்கு சகிக்கமுடியாத வலி வந்துவிடும். கீழ்மையில் இழுக்க அவர்முன் காமக்கிழத்திகள் தோன்றியவுடனே, அம்பிகையை எண்ணி அவருக்கு சமாதி வந்துவிடுகிறது. இந்திரிய நிக்கிரகம் என்பது இந்திரியங்களைக் கீழ்மையினின்று மீட்டெடுத்து மேன்மையில் வைப்பது என்று அவரது ஜீவிதம் விளக்குகிறது. அப்படி இந்திரியங்களை நியாஸம் செய்பவர் ஞானம் பெறுகின்றனர். [நியாஸம் -sublimation-கீழ்மையை மேன்மையாக மாற்றுதல் ]*

*கண்களை மூடினாலொழிய, பழகாத குதிரைகள் ஓரடி கூட எடுத்துவைக்கா. ஆசைகளை அடக்காவிட்டால் ஈசுவரனைக் காணமுடி*

*யாது. ஆகையினால் ஞானமார்க்கத்தில் செல்பவர் தம் அடக்கப்பிரயத்தனப்படுவார். ஞானியானவன், "ஈசுவரனைக் காண வேண்டுமானால், முதலில் ஒருவன் சுத்தனாக இருக்கவேண்டும். ஆசைகளை அடக்கவேண்டும்" என்கிறான். முதலில் பொறியடக்கம்; அப்பால் ஈசுவரஞானம்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*அப்படி இந்திரியங்களின் தொழிலைத் தூயதாக மாற்றுபவன் அடையும் நன்மை யாது?*

**या निशा सर्वभूतानां तस्यां जागर्ति संयमी ।**
**यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यतो मुनेः ॥ ६९**

யா நிசா ஸர்வபூதானாம் தஸ்யாம் ஜாகர்தி ஸம்யமீ ।
யஸ்யாம் ஜாக்ரதி பூதானி ஸா நிசா பச்யதோ முனே: ॥ 69

सर्वभूतानां ஸர்வபூதானாம் *சர்வ பிராணிகளுக்கும்* या யா *எது* निशा நிசா *இராத்திரியோ* तस्यां தஸ்யாம் *அதில்* संयमी ஸம்யமீ *அடக்கம் பயின்ற யோகி* जागर्ति ஜாகர்தி *விழித்திருக்கிறான்* यस्यां யஸ்யாம் *எதில்* भूतानि பூதானி *பிராணிகள்* जाग्रति ஜாக்ரதி *விழித்திருக்கின்றனவோ* सा ஸா *அது* पश्यतः मुनेः பச்யத: முனே: *தத்துவ தரிசியாகிய முனிக்கு* निशा நிசா *இரவு.*

***உயிர்களனைத்துக்கும் எது இரவோ அதில் யோகி விழித்திருக்கிறான். உயிர்களெல்லாம் துய்த்துணரும் நிலை தத்துவ ஞானிக்கு இரவு.*** **69**

*ஸ்தூல உலகில் மக்களுக்குப் பகலாயிருக்கும் வேளையில் ஆந்தை புலி முதலியன நன்கு பார்க்கமாட்டா. ஆக, அவ்வேளை அவைகளுக்கு இரவு. அவைகளுக்குப் பகல் போன்று கண்தெரியும் வேளையோ மற்றப் பிராணிகளுக்கு இரவு. இனி இவ்வுலகில் ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொரு துறை பகல் போன்றிருக்கிறது. திருடர்களுக்கு திருட்டைப்பற்றிய விவரங்கள் பகல் போன்று விளங்கும். மற்ற இயக்கங்கள் இருள் போன்று அவர்களுக்குப் புலப்படா. சூது ஆடுபவர்க்கு அவ்வுலகு மட்டும் பகல் போன்று விளங்கும். கற்றவர்க்கு அறிஞர் கூட்டம் பகலுக்கு ஒப்*

பானது. இங்ஙனம் இவ்வுலகிலேயே ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொரு துறை பகல் போன்று விளங்கவும் ஏனைய துறைகள் இரவு போன்று விளங்காமலும் இருக்கின்றன.

இந்திரியங்களை வென்ற யோகிக்கு உலகக்காட்சிகள், உலக வியவகாரங்கள் ஆகியவைகள் இருள் போன்று மறைந்து கிடக்கின்றன. பரமாத்ம தத்துவ சம்பந்தமான யாவும் பகல் போன்று அவனுக்கு நன்கு விளங்குகின்றன. அனைத்தையும் ஈசுவர சொரூபமாகக் காண்பவனுக்கு யாண்டும் மங்களம் பொலிகிறது; வாழ்க்கை இன்பமே வடிவெடுத்ததாகிறது. இந்திரிய நுகர்ச்சியுடைய போகிக்கு உலகக் காட்சி பகல். இந்திரியங்களை அடக்கிய யோகிக்கு கடவுள் காட்சி பகல்.

*ஒருவனுக்கு ஈசுவர தரிசனம் உண்டான பிறகு, அவ்வீசுவரனே ஜீவனாகவும் ஜகத்தாகவும் ஆகிருனென்பது விளங்கும். அவனுக்குத் தனது குழந்தைகள் ஸ்ரீ கோபாலனாகத் தோன்றும். அவன் தனது தாய்தந்தையரிடம் கடவுளைக் கண்டு வழிபாடுகள் செய்வான். அந்த நரனுக்கு மனைவியிருப்பின் அவளுடன் சரீர சம்பந்தம் வைத்துக் கொள்ளமுடியாது. மனைவியும் அவனும் பிரார்த்தனையிலும் பக்தியிலுமே காலத்தைக் கழிப்பார்கள். ஈசுவரனை எல்லா ஜீவன்களிடத்திலும் கண்டு அவர்களுக்குத் தொண்டு பூண்டு, வழிபாடு செய்வார்கள்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஈசுவர காட்சி காண்பதால் வரும் நன்மை யாது?*

**आपूर्यमाणमचलप्रतिष्ठं समुद्रमापः प्रविशन्ति यद्वत् ।**
**तद्वत्कामा यं प्रविशन्ति सर्वे स शान्तिमाप्नोति न कामकामी ॥**

ஆபூர்யமாணமசலப்ரதிஷ்டம்
ஸமுத்ரமாப: ப்ரவிசந்தி யத்வத் ।
தத்வத்காமா யம் ப்ரவிசந்தி ஸர்வே
ஸ சாந்திமாப்னோதி ந காமகாமீ ॥ 70

आपूर्यमाणं ஆபூர்யமாணம் *முழுதும் நிறைந்த* अचलप्रतिष्ठं அசல ப்ரதிஷ்டம் *அசைவின்மையில் நிலைபெற்ற* समुद्रं ஸமுத்ரம் *சமுத்திரத்தை* आपः ஆப: *நீர்கள்* यद्वत् प्रविशन्ति யத்வத் ப்ரவிசந்தி *எப்படி பிரவேசிக்கின்றனவோ* तद्वत् தத்வத் *அப்படியே* सर्वे कामाः ஸர்வே

காமா: *ஸர்வ காமங்களும்* यं (मुनिं) प्रविशन्ति யம் (முனிம்) ப்ரவிசந்தி *எந்த முனியின்கண் பிரவேசிக்கின்றனவோ* स: ஸ: *அவன்* शान्ति சாந்திம் *சாந்தியை* आप्नोति ஆப்னோதி *அடைகிறான்* कामकामी காமகாமீ *விஷய ஆசையுள்ளவன்* न ந *அடைகிறதில்லை.*

***அசைவற்ற நிறை கடலில் ஆறுகள் சென்றடங்குவது போல் எம் முனிவன்பால் ஆசைகளனைத்தும் சென்றொடுங்குகின்றனவோ அவனே சாந்தியடைகிறான். ஆசையுளான் சாந்தியடையான்.*** ***70***

கடலின்கண் கூட்டுதல் குறைத்தல் முதலியன செய்தல் எவருக்கும் இயலாது. உலகிலுள்ள நதிகளெல்லாம் ஓயாது அதில் வந்து வீழ்ந்தாலும் அது மிகைப்படுவதில்லை. நதிகள் வராதொழியினும் கடல் குறைபடுதலில்லை. உள்ளே வரும் நதிகளோ உருவை இழந்துவிடுகின்றன. நாம ரூபம் அடிபட்டுப் போய்விடினும் நதி எப்பொருளாலானதோ அப்பொருளுக்கு நஷ்டமில்லை. கருவி கரணங்களை வென்ற முனிவனது மனம் கடல்போன்றது. காமத்தை உண்டு பண்ணும் பொருள்கள் ஓயாது அவனது முன்னிலைக்கு வந்துகொண்டிருக்கலாம். பொறி வாயிலாக அவன் அவைகளைப் பொருள்படுத்தவும் செய்யலாம். கடலில் நதிகள் ஒடுங்குவதுபோன்று இந்திரியார்த்தங்கள் என்னும் சித்த விருத்திகள் அவனது உள்ளத்தில் ஒடுங்கிவிடுகின்றன. மனம் ஒரு விகாரத்தையும் அடையாத பரிபூரண நிலையில் அவன் வீற்றிருக்கின்றான். அகண்டாகார விருத்தியென்று அதைப் பகர்வதுண்டு. கடல்போன்று அகண்டமாய்விடுகிறது ஞானியின் உள்ளம். கடலைக் கலக்கிச் சேறுபடுத்த யாராலும் முடியாது. முனியின் நிறைமனது கலங்கிய மனது ஆய்விடுவதில்லை. சாந்தம் அல்லது ஜீவன் முக்தி என்ற பெருநிலையும் அவனுக்கே உரியது. ஆசைவலையில் அழுந்துபவர்க்கும் அதற்கும் வெகுதூரம்.

சமுத்திரத்தின் கீழே மலைகள், குன்றுகள், பள்ளத்தாக்குகள், சமதரைகள் முதலியன இருக்கின்றன. என்றாலும் அவைகள் மேற்

*பரப்பில் காணப்படுவதில்லை. அதுபோல, ஸமாதி நிலைமையில் ஸச்சிதானந்தமாகிய பரந்த சாகரந்தான் ஒருவனுக்குத் தோன்றுகிறது. அப்போது, தான் என்ற தனித்தன்மை ஒடுங்கி மறைந்து நிற்கின்றது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*இந்நிலையை அடைதற் பொருட்டு சாதகன் என் செய்யவேண்டும்?*

**विहाय कामान् यः सर्वान् पुमांश्चरति निस्पृहः ।**
**निर्ममो निरहङ्कारः स शान्तिमधिगच्छति ॥ ७१**

விஹாய காமான் ய: ஸர்வான் புமாம்ஸ்சரதி நிஸ்ப்ருஹ: ।
நிர்மமோ நிரஹங்கார: ஸ சாந்திமதிகச்சதி ॥ 71

यः ய: *எந்த* पुमान् புமான் *புருஷன்* सर्वान् कामान् ஸர்வான் காமான் *சர்வ காமங்களையும்* विहाय விஹாய *நீத்துவிட்டு* निस्पृहः நிஸ்ப்ருஹ: *ஆசையற்று* निरहंकारः நிரஹங்கார: *அஹங்காரமின்றி* निर्ममः நிர்மம: *மமகாரமின்றி* चरति சரதி *சஞ்சரிக்கிறானோ* सः ஸ: *அவன்* शान्ति சாந்திம் *சாந்தியை* अधिगच्छति அதிகச்சதி *அடைகிறான்.*

***எப்புருஷன் ஆசைகளை அறவே அகற்றி, பற்றற்று, அஹங்கார மமகாரமின்றி நடமாடுகிறானோ அவன் சாந்தியடைகிறான். 71***

*ஆசை இருக்குமளவு மனிதனுக்கு அசாந்தி; ஆசை அறுபடுமளவு அமைதி உண்டாகிறது. நான், எனது என்னும் எண்ணம் மனிதனை கருமபந்தத்தில் தளைக்கிறது. நான் எனது என்ற மன விருத்திகளை அகங்கார மமகாரம் என்று இயம்புவதுண்டு. கடலானது அலைகளாக வடிவெடுத்துத் தன்னைச் சிறு சிறு துண்டங்களாக மேற்பரப்பில் காட்டிக்கொள்கிறது. தோற்றத்தளவில் கடல் துண்டுபட்டது. உண்மையில் அது அகண்டமானது. அகங்காரமும் மமகாரமும் சேர்ந்து மனிதனிடத்து ஜீவபோதம் என்ற அலையை உண்டுபண்ணுகின்றன. ஆசை என்னும் காற்றே அகங்காரம் மமகாரம் என்ற அலையை உண்டு பண்ணுதற்கு முதற்காரணம். ஆசை ஒழிந்தால் நான் எனது என்பன போய்விடுகின்றன. அகங்கார மமகாரம் அற்றவிடம் அகண்டாகார ஆனந்த சொரூபமே. நான்*

எனது என்னும் இப்பந்தங்களை ஒழித்து, ஈசன் பொருட்டு வாழ்தலே பெருவாழ்வாம்.

உடம்பிலிருந்து தலைவெட்டப்பட்ட பிறகு சிறிதுநேரம்வரை உயிர் இருப்பதைக் காண்பிக்க ஆட்டின் உடல் அசைந்துகொண்டிருக்கின்றது. அதுபோல பரிபூரண நிலையடைந்த ஞானியின் அகங்காரம் அழிவுண்டபோதிலும் சரீர சம்பந்தப்பட்ட அலுவல்களைக் கவனிக்க அவ்வகங்காரத்தின் சக்தி கொஞ்சம் எஞ்சியிருக்கின்றது. ஆனால் அவனைத் திரும்பவும் உலகத்தோடு இணைக்கக் கூடிய பலம் அதனிடம்

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஸ்திதப்பிரக்ஞன் எப்படி வாழ்கிறான் என்பது மீண்டும் இயம்பப்படுகிறது.

அத்தகைய வாழ்வினின்று உண்டாகும் மாண்பு வருமாறு:—

**एषा ब्राह्मी स्थितिः पार्थ नैनां प्राप्य विमुह्यति ।**
**स्थित्वाऽस्यामन्तकालेऽपि ब्रह्मनिर्वाणमृच्छति ॥ ७२**

ஏஷா ப்ராஹ்மீ ஸ்திதி: பார்த்த நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி ।
ஸ்தித்வாऽஸ்யாமந்தகாலேऽபி ப்ரஹ்மநிர்வாணம்ருச்சதி ॥ 72

पार्थ பார்த்த *பார்த்தா* एषा ஏஷா *இது* ब्राह्मी स्थितिः ப்ராஹ்மீ ஸ்திதி: *பிரம்மத்தில் நிலைபெறுவதாகிறது* एनां प्राप्य ஏநாம் ப்ராப்ய *இதை அடையப்பெற்று* न विमुह्यति ந விமுஹ்யதி *மோஹமடைகிறதில்லை* अन्तकाले अपि அந்தகாலே அபி *மரணகாலத்திலாயினும்* अस्यां அஸ்யாம் *இதில்* स्थित्वा ஸ்தித்வா *நிலைத்திருந்து* ब्रह्मनिर्वाणं ப்ரஹ்மநிர்வாணம் *பிரம்ம நிர்வாணத்தை* ऋच्छति ருச்சதி *அடைகிறான்*.

***பார்த்தா, இதுவே பிரம்ம நிலைபேறு ஆகும். இதை அடைபவனுக்கு மோகமில்லை. இறுதிக் காலத்திலாவது இதில் நிலைத்திருப்பவன் பிரம்ம நிர்வாணத்தை அடைகிறான்.*** 72

கனவில் இருக்கும்போது கனவில் காண்கிற பொருள்களுக்கு மதிப்புண்டு; ஆங்கு உண்டாகிற இன்ப துன்பங்களுக்கும் மதிப்புண்டு. அத்தகைய கனவிலும் பெருநிலையாகின்றது நனவு. நனவுக்கு வந்தவுடனே கனவைப்பற்

றிய மயக்கம் போய்விடுகிறது. கனவில் வந்த இன்ப துன்பங்களுக்குப் பிறகு மதிப்பில்லை. அங்ஙனம் கனவுக்கும் நனவுக்கும் மேற்பட்ட நிலையொன்று உண்டு. அது பிரம்ம நிர்வாணம் என்று பகரப்படுகிறது. அதை அடையப் பெற்றவனுக்குக் கனவு நனவு ஆகிய அவஸ்தைகளைப்பற்றிய மயக்கம் கிடையாது.

பிரம்மநிர்வாணம் என்பது அபரோக்ஷ அனுபூதி. மனம் மொழிக்கு எட்டாத பேரானந்தப் பெருநிலை அது. அப்பெருநிலையினின்று கீழே இறங்கி வந்தவன் ஜீவன். திரும்பவும் அப்பெருநிலையை அடையப்பெற்றவன் முக்தன். நதிகளெல்லாம் கடலைப் போய்ச்சேர்ந்து கடலில் இரண்டறக் கலத்தல் போன்று பிரம்ம நிர்வாணம் அடைதல் ஜீவர்களின் குறிக்கோளாம். சாகும் தறுவாயில் அது வந்து அமைந்துவிட்டாலும் அது முக்தியேயாம். விடுதலையென்றும் வீடுபேறு என்றும் அதைப் பகர்வதுண்டு.

*புதிதாகக் கல்யாணம் செய்துகொண்ட நங்கையொருத்திக்குக் குழந்தை பிறக்காமலிருக்கும் வரையில், அவள் எப்போதும் வீட்டு வேலைகளைக் கண்ணும் கருத்துமாகச் செய்வாள். ஆனால் அவளுக்கு ஒரு மகவு பிறந்தவுடன், அவள் சில்லறை வேலைகளைக் கவனிப்பதில்லை. தன் குழந்தையிடம் கொஞ்சிக் குலாவுவதிலேயே அவளுக்குப் பொழுது போகின்றது. அதுபோல, அக்ஞானி கண்ட வேலைகளை யெல்லாம் செய்துகொண்டிருப்பான். ஆனால் தன்னுள்ளத்திலே கடவுள் இருப்பதை உணர்ந்ததும் பழைய வேலைகளில் அவனுக்குப் பிரியமேற்படுவதில்லை. ஈசுவர ஸேவையிலேயே ஈடுபடுகிறான். வேறெதுவும் அவனுக்கு இன்பம் தருவதில்லை. ஈசுவரானுபவத்தில் உண்டாகும் ஆனந்தத்திலிருந்து அவனால் விலகியிருக்கவும் முடியாது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे साङ्ख्ययोगो नाम द्वितीयोऽध्यायः ॥**

இதி ஸ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம் யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே ஸாங்க்யயோகோ நாம த்விதீயோऽத்யாய: ॥

*எனது என்னும் இப்பந்தங்களை ஒழித்தற் பொருட்டு வாழ்தலே பெருவாழ்வாம்.*

*உடம்பிலிருந்து தலைவெட்டப்பட்ட பிறகு சிறிதுநேரம்வரை உயிர் ப்பதைக் காண்பிக்க ஆட்டின் உடல் அசைந்துகொண்டிருக்கின்றது. அதுபோல பரிபூரண நிலையடைந்த ஞானியின் அகங்காரம் அழிவுண்டபோதிலும் சரீர சம்பந்தப்பட்ட அலுவல்களைக் கவனிக்க அவ்வகங்காரத்தின் சக்தி கொஞ்சம் எஞ்சியிருக்கின்றது. ஆனால் அவனைத் திரும்பவும் உலகத்தோடு இணைக்கக் கூடிய பலம் அதனிடம்*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஸ்திதப்பிரக்ஞன் எப்படி வாழ்கிறான் என்பது மீண்*
*)யம்பப்ப(*

*அத்தகைய வாழ்வினின்று உண்டாகும் மாண்பு வருமாறு:—*

**एषा ब्राह्मी स्थितिः पार्थ नैनां प्राप्य विमुह्यति ।**
**स्थित्वाऽस्यामन्तकालेऽपि ब्रह्मनिर्वाणमृच्छति ॥ ७२**

ஏஷா ப்ராஹ்மீ ஸ்திதி: பார்த்த நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி ।
ஸ்தித்வாऽஸ்யாமந்தகாலேऽபி ப்ரஹ்மநிர்வாணம்ருச்சதி ॥ 72

पार्थ பார்த்த *பார்த்தா* एषा ஏஷா *இது* ब्राह्मी स्थितिः ப்ராஹ்மீ ஸ்திதி: *பிரம்மத்தில் நிலைபெறுவதாகிறது* एनां प्राप्य ஏனாம் ப்ராப்ய *இதை அடையப்பெற்று* न विमुह्यति ந விமுஹ்யதி *மோஹமடைகிறதில்லை* अन्तकाले अपि அந்தகாலே அபி *மரணகாலத்திலாயினும்* अस्यां அஸ்யாம் *இதில்* स्थित्वा ஸ்தித்வா *நிலைத்திருந்து* ब्रह्मनिर्वाणं ப்ரஹ்மநிர்வாணம் *பிரம்ம நிர்வாணத்தை* ऋच्छति ருச்சதி *அடைகிறான்.*

***பார்த்தா, இதுவே பிரம்ம நிலைபேறு ஆகும். இதை அடைபவனுக்கு மோகமில்லை. இறுதிக் காலத்திலாவது இதில் நிலைத்திருப்பவன் பிரம்ம நிர்வாணத்தை அடைகிறான். 72***

*கனவில் இருக்கும்போது கனவில் காண்கிற பொருள்களுக்கு மதிப்புண்டு; ஆங்கு உண்டாகிற இன்ப துன்பங்களுக்கும் மதிப்புண்டு. அத்தகைய கனவிலும் பெருநிலையாகின்றது நனவு. நனவுக்கு வந்தவுடனே கனவைப்பற்*

றிய மயக்கம் போய்விடுகிறது. கனவில் வந்த இன்ப துன்பங்களுக்குப் பிறகு மதிப்பில்லை. அங்ஙனம் கனவுக்கும் நனவுக்கும் மேற்பட்ட நிலையொன்று உண்டு. அது பிரம்ம நிர்வாணம் என்று பகரப்படுகிறது. அதை அடையப் பெற்றவனுக்குக் கனவு நனவு ஆகிய அவஸ்தைகளைப்பற்றிய மயக்கம் கிடையாது.

பிரம்மநிர்வாணம் என்பது அபரோக்ஷ அனுபூதி. மனம் மொழிக்கு எட்டாத பேரானந்தப் பெருநிலை அது. அப்பெருநிலையினின்று கீழே இறங்கி வந்தவன் ஜீவன். திரும்பவும் அப்பெருநிலையை அடையப்பெற்றவன் முக்தன். நதிகளெல்லாம் கடலைப் போய்ச்சேர்ந்து கடலில் இரண்டறக் கலத்தல் போன்று பிரம்ம நிர்வாணம் அடைதல் ஜீவர்களின் குறிக்கோளாம். சாகும் தறுவாயில் அது வந்து அமைந்துவிட்டாலும் அது முக்தியேயாம். விடுதலையென்றும் வீடுபேறு என்றும் அதைப் பகர்வதுண்டு.

புதிதாகக் கல்யாணம் செய்துகொண்ட நங்கையொருத்திக்குக் குழந்தை பிறக்காமலிருக்கும் வரையில், அவள் எப்போதும் வீட்டு வேலைகளைக் கண்ணும் கருத்துமாகச் செய்வாள். ஆனால் அவளுக்கு ஒரு மகவு பிறந்தவுடன், அவள் சில்லறை வேலைகளைக் கவனிப்பதில்லை. தன் குழந்தையிடம் கொஞ்சிக் குலாவுவதிலேயே அவளுக்குப் பொழுது போகின்றது. அதுபோல, அக்ஞானி கண்ட வேலைகளையெல்லாம் செய்துகொண்டிருப்பான். ஆனால் தன்னுள்ளத்திலே கடவுள் இருப்பதை உணர்ந்ததும் பழைய வேலைகளில் அவனுக்குப் பிரியமேற்படுவதில்லை. ஈசுவர ஸேவையிலேயே ஈடுபடுகிறான். வேறெதுவும் அவனுக்கு இன்பம் தருவதில்லை. ஈசுவரானுபவத்தில் உண்டாகும் ஆனந்தத்திலிருந்து அவனால் விலகியிருக்கவும் முடியாது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे साङ्ख्ययोगो नाम
द्वितीयोऽध्यायः ॥

இதி ஸ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே
ஸாங்க்யயோகோ நாம த்விதீயோऽத்யாய: ||

# तृतीयोऽध्यायः

# மூன்றும் அத்தியாயம்

## कर्मयोगः

## கர்மயோகம்

**अर्जुन उवाच**

**ज्यायसी चेत्कर्मणस्ते मता बुद्धिर्जनार्दन ।**
**तत्किं कर्मणि घोरे मां नियोजयसि केशव ॥ १**

அர்ஜுன உவாச
ஜ்யாயஸீ சேத்கர்மணஸ்தே மதா புத்திர்ஜனார்தன ।
தத்கிம் கர்மணி கோரே மாம் நியோஜயஸி கேசவ ॥ 1

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது*

जनार्दन ஜனார்தன *ஜனார்தனா,* केशव கேசவ *கேசவா,* कर्मणः கர்மண: *கர்மத்தைவிட* बुद्धिः புத்தி: *ஞானமானது* ज्यायसी ஜ்யாயஸீ *சிரேஷ்டமானதென்று* ते தே *உம்மால்* मता चेत् மதா சேத் *மதிக்கப் படுகிறதானால்* तत् தத் *அப்பொழுது* किं கிம் *ஏன்* घोरे कर्मणि கோரே கர்மணி *பயங்கரமான கர்மத்தில்* मां மாம் *என்னை* नियोजयसि நியோஜயஸி *தூண்டுகிறீர்.*

அர்ஜுனன் சொன்னது

***ஜனார்தனா, கர்மத்தினும் ஞானம் சிறந்ததென்பது தம் கருத்தாயின், என்னை ஏன் கேசவா, கொடுவினையில் ஈடுபடுத்துகிறீர்?***

**व्यामिश्रेणेव वाक्येन बुद्धिं मोहयसीव मे ।**
**तदेकं वद निश्चित्य येन श्रेयोऽहमाप्नुयाम् ॥ २**

வ்யாமிச்ரேணேவ வாக்யேன புத்திம் மோஹயஸீவ மே ।
ததேகம் வத நிஸ்சித்ய யேன ச்ரேயோऽஹமாப்னுயாம் ॥ 2

व्यामिश्रेण வ்யாமிச்ரேண *முரண்படுகின்ற* वाक्येन इव வாக்யேன இவ *வாக்கியங்களில் போன்று* मे மே *என்னுடைய* बुद्धिं புத்திம் *புத்தியை* मोहयसि इव மோஹயஸி இவ *மயக்குகின்றீர் போலும்* येन யேன *எதனுல்* अहं அஹம் *நான்* श्रेयः ச்ரேய: *சிறப்பை* आप्नुयां ஆப்னுயாம் *அடைவேன்* तत् एकं தத் ஏகம் *அந்த ஒன்றை* निश्चित्य நிஸ்சித்ய *நிச்சயமாக* वद வத *சொல்லும்.*

***முரண்படுவனபோன்ற மொழிகளில் என் அறிவைக் குழப்புகின்றீர் போலும். நான் நலன் பெறுதற்கான ஒன்றை உறுதியாக இயம்பும்.*** **2**

*எக்காரணத்தாலும் அர்ஜுனன் கர்மத்தைப் புறக்கணிக்கலாகாது என்று பகவான் எடுத்தோதினர். கர்மத்தில் அவனைத் தூண்டியவர் கர்மத்தைக் கர்மயோகமாக மாற்றிவிடவேண்டுமென்று மேலும் உபதேசித்தார். கர்மயோகிதான் அனைத்தையும் சாதிக்க வல்லவன் என்பது பகவானது கோட்பாடு. பின்பு ஞானமடைந்தவனது சம்பூரண நிலையை சந்தேகத்துக்கு இடமில்லாது அவர் சிலாகித்துப் பேசினர். அதனுல் அர்ஜுனனுக்கு இந்த ஐயம்வந்துவிட்டது. அவன் சொல்லுவதாவது:—"பிரபோ, தாம் உயிர்களின் அக்ஞானத்தைப் போக்குபவர்; துன்பங்கள் அனைத்தையும் துடைத்து வைப்பவரும் தாமே. அத்தகைய தாம் என்னைமட்டும் ஏன் குழப்பத்தில் ஆழ்த்திக்கெடுத்துவிடுகிறீர்? பகவானுடைய பேச்சில் முரண்பாடு இருப்பதுபோன்று என் புல்லறிவுக்குத் தென்படுகிறது. அதனுல் என்னிடத்துள்ள சிறிய அறிவு மேலும் கலங்குகிறது. என்னைக் கெடுத்துவிடுவது உமது எண்ணம் அல்ல என்று நான் உறுதியாக நினைக்கிறேன். எனக்கு சிரேயஸைப் புகட்டவேண்டுமென்று நான் பணிந்து தங்களிடத்து விண்ணப்பித்திருக்கிறேன். ஆதலால் எனக்கு*

*நலம் தரும் கோட்பாடு ஒன்றை மட்டும் நன்கு எடுத்துப் புகட்டுவீராக."*

**श्री भगवानुवाच**

**लोकेऽस्मिन्द्विविधा निष्ठा पुरा प्रोक्ता मयानघ ।**
**ज्ञानयोगेन साङ्ख्यानां कर्मयोगेन योगिनाम् ॥ ३**

ஸ்ரீ பகவானுவாச

லோகேऽஸ்மின்த்விவிதா நிஷ்டா புரா ப்ரோக்தா மயானக ।
ஞானயோகேன ஸாங்க்யானாம் கர்மயோகேன யோகினாம் ॥ 3

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

अनघ அனக *பாபமற்றவனே* अस्मिन् लोके அஸ்மின் லோகே *இவ்வுலகில்* सांख्यानां ஸாங்க்யானாம் *தத்வவிசாரம் செய்கிறவர்களுக்கு* ज्ञानयोगेन ஞானயோகேன *ஞானயோகத்தால்* योगिनां யோகினாம் (*அதை*) *அனுஷ்டிக்கிறவர்களுக்கு* कर्मयोगेन கர்மயோகேன *கர்மயோகத்தினுல்* (*ஆக*) द्विविधा த்விவிதா *இரண்டு விதமான* निष्ठा நிஷ்டா *நன்னெறிகள்* मया மயா *என்னுல்* पुरा புரா *முன்பே* प्रोक्ता ப்ரோக்தா *புகட்டப்பட்டிருக்கின்றன.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***பாபமற்றவனே, தத்வ விசாரம் செய்கிறவர்களுக்கு ஞானயோகம் என்றும், அதை அனுஷ்டிக்கிறவர்களுக்குக் கர்மயோகம் என்றும் இரண்டு நன்னெறிகள் முன்பே என்னுல் இயம்பப்பட்டிருக்கின்றன.*** **3**

*விவேகம், வைராக்கியம், துறவு முதலியவைகள் வாயிலாகத்தெளிவுபட்ட அறிவானது ஆத்ம சொரூபத்தை நேரே கிரகிக்குமானுல் அதற்கு ஞானயோகம் என்றுபெயர். கர்மானுஷ்டானத்தை முறையாகச் செய்து வருவதால் அறிவு தெளிவடைகிறது. தெளிந்த அறிவு ஆத்மசொரூபத்தை விளக்குகிறது. ஆகஞானயோகம், கர்மயோகம் ஆகிய இரண்டும் ஆத்மசொரூபத்தை விளக்குதற்கு உபாயங்களா*

*யிருப்பதால் இரண்டும் நன்னெறிகளாகின்றன. விசாரத்தில் ஈடுபடுபவரும் செயலில் ஈடுபடுபவரும் என்றென்றும் இருக்கிறார்களாதலால் ஞானமார்க்கம், கர்மமார்க்கம் ஆகிய இரண்டு நிஷ்டைகளும் தொன்றுதொட்டு உலகில் இருந்து வருகின்றன.*

*இவ்விரண்டு சாதனங்களும் எப்படி ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டவைகள் என்று கேட்குமிடத்து விடை வருகிறது :—*

**न कर्मणामनारम्भान्नैष्कर्म्यं पुरुषोऽश्नुते ।**
**न च संन्यसनादेव सिद्धिं समधिगच्छति ॥ ४**

ந கர்மணுமனரம்பாந்நைஷ்கர்ம்யம் புருஷோऽச்னுதே ।
ந ச ஸந்யஸனுதேவ ஸித்திம் ஸமதிகச்சதி ॥ 4

पुरुषः புருஷ: *புருஷன்* कर्मणां கர்மணும் *கர்மங்களின்* अनारम्भात् அனரம்பாத் *ஆரம்பிக்காமையிலிருந்து* नैष्कर्म्यं நைஷ்கர்ம்யம் *கர்மமற்ற நிலையை (ஆத்ம சொரூபத்தை)* न अश्नुते ந அச்னுதே *அடைகிறதில்லை* च ச *இன்னும்* संन्यसनात् एव ஸன்யஸனுத் ஏவ *வெறும் சன்னியாசத்தாலேயே* सिद्धिं ஸித்திம் *(சித்தியை) நிறைநிலையை* न समधिगच्छति ந ஸமதிகச்சதி *பெறுகிறதில்லை.*

***புருஷன் கருமங்களை அனுஷ்டிக்காமையினுல் கர்மாதீதத்தை அடைவதில்லை; வெறும் சந்யாசத்தால் நிறை நிலையைப் பெறுவதுமில்லை. 4***

*கல்வி வேண்டுபவர்கள் எல்லாரும் பள்ளிக்கூடத்துக்குப்போகக் கடமைப்பட்டிருக்கின்றனர். ஆனுல் பள்ளிக்கூடத்திலேயே எக்காலமும் இருப்பதல்ல மக்களின் லட்சியம். கற்கவேண்டியவைகளைக் கற்றுன பிறகு பள்ளிக்கூடத்தை விட்டு வெளியேகவேண்டும். கல்வி பூர்த்தியாகு முன்பு வெளியேகுதல் பொருந்தாது. உலக வாழ்க்கை என்கிற பள்ளிக்கூடமும் அத்தகையதே.*

*நைஷ்கர்ம்யம் என்பதற்கும் சித்தி என்பதற்கும் பொருள் ஒன்று. பழம் முற்றும் பழுத்துவிட்டால் அது*

*சித்தியாய்விட்டது எனலாம். அதற்கு முன்பு அது காய்த்து முதிர்ந்து கனிகிற செயல்களெல்லாம் அதனுடைய கர்ம மாகிறது. முற்றும் கனிந்தநிலை நைஷ்கர்ம்யம். ஆக, நைஷ் கர்ம்யமும் சித்தியும் ஒன்றே. பழுத்தபழம் மரத்தைவிட்டுப் பிரிவது அதன் சந்யாசம். பிஞ்சு அல்லது காயாக இருக் கும்பொழுது அதை மரத்தைவிட்டுப் பறித்துவிட்டால் அது சித்தியடைந்ததாகாது.*

*மனிதனுடைய வாழ்க்கை இதற்கு ஒப்பானது. ஓயாது காய் முதிர்வது போன்று கர்மத்தின் மூலம் மனிதன் முதிர்ச்சியடைகிறான். பரிபூரணம் அடைதற்கு முன்பு அவன் கர்மத்தைத் துறப்பதால் ஒரு நன்மையும் பெறுகிற தில்லை. முறையாகக் கர்மம் செய்துகொண்டு போதலே நிறைநிலை எய்தற்கு உற்ற உபாயமாகிறது.*

*நீ அணிந்துள்ள ஆடையின் ஒரு நுனியில் வேதாந்தத்தை முடிந்து வைத்துக்கொண்டு ஆழ்ந்து சாதனத்தில் ஈடுபடு. அதாவது வாழ்க்கையின் குறிக்கோள் பரம்பொருளில் லயமாவது என்பதை மனதில் வைத்துக்கொண்டு உன் கர்மத்தைச் செய்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*கனிதற்கு முன்பு காயைப் பறித்தெடுத்தால் அது சமைப்பதற்கு உதவலாம். அங்ஙனம் பலவந்தமாக ஏன் ஒருவன் கர்மத்தைத் தியாகம் செய்யலாகாது? அதற்கு விடை வருகிறது :—*

**न हि कश्चित्क्षणमपि जातु तिष्ठत्यकर्मकृत् ।**
**कार्यते ह्यवशः कर्म सर्वः प्रकृतिजैर्गुणैः ॥ ५**

ந ஹி கஸ்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத் |
கார்யதே ஹ்யவச: கர்ம ஸர்வ: ப்ரக்ருதிஜைர்குணை: || 5

जातु ஜாது *எப்பொழுதாவது* क्षणं अपि க்ஷணம் அபி *கணப் பொழுதும்* कश्चित् கஸ்சித் *யாரும்* अकर्मकृत् அகர்மக்ருத் *கர்மம் செய் யாது* न हि तिष्ठति ந ஹி திஷ்டதி *சும்மாவிருப்பதில்லை* हि ஹி *ஏனென் றால்* प्रकृतिजैः ப்ரக்ருதிஜை: *பிரகிருதியினின்று ஜனித்த* गुणैः குணை:

*துணங்களால்* सर्वः ஸர்வ: *ஒவ்வொரு உயிரும்* अवशः அவச: *தன்வய மின்றி* कर्म कार्यते கர்ம கார்யதே *கர்மம் செய்விக்கப்படுகின்றது.*

***யாரும் ஒரு கணப்பொழுதேனும் செயலாற்றாதிருப்பதில்லை. ஏனென்றால் பிரகிருதியினின்றுதித்த குணங்களால் ஒவ்வொரு உயிரும் தன் வயமின்றிக் கர்மம் செய்விக்கப்படுகின்றது.*** **5**

சத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணமயமாயிருப்பது பிரகிருதி. அது கர்ம சொரூபம். ஆதலால் அதில் கட்டுண்டு கிடப்பவர்கள் கர்மம் செய்தே ஆகவேண்டும். உண்பது, உறங்குவது, சுவாசிப்பது, ஹிருதயம் அடிப்பது ஆகிய எல்லாம் கர்மம். இயற்கையில் இயங்காதிருப்பது எது? அணுமுதல் அண்டம் வரையில் எல்லாம் அசைகின்றன. அதில் பிணிக்கப்பட்டுள்ள உயிர்க்குக் கர்மத்தை விடும் சுதந்திரம் கிடையாது.

வைத்தியசாலைக்குள் நோயாளியாகப் பதிவு செய்யப்பட்டவன் நோய் தீருமுன்பு அதைவிட்டு வெளியே போய்விட அனுமதிக்கப்படமாட்டான். நோய் நீங்கியபின் வைத்தியசாலைக்குள் அவனுக்கு வேலையில்லை. அங்ஙனம் அக்ஞானம் என்னும் நோய்க்கு உட்பட்டவர்கள் பிரகிருதி என்ற வைத்தியசாலைக்குள் இருந்தே ஆகவேண்டும். அப்பொழுது கர்மம் செய்தல் என்ற சிகிச்சைக்கு அவர்கள் உட்பட்டே ஆகவேண்டும்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

பிரகிருதியில் கட்டுண்டிருக்கும்போது கர்மத்தை விட்டுவிட முயலுதல் உண்மையில் என்னவாய் முடியுமென்று கேட்குமிடத்து அதற்கு உத்தரம் வருகிறது :—

**कर्मेन्द्रियाणि संयम्य य आस्ते मनसा स्मरन् ।**
**इन्द्रियार्थान्विमूढात्मा मिथ्याचारः स उच्यते ॥ ६**

கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மனஸா ஸ்மரன் ।
இந்த்ரியார்த்தான்விமூடாத்மா மித்யாசார: ஸ உச்யதே ॥ 6

यः ய: *யாவன்* कर्मेन्द्रियाणि கர்மேந்த்ரியாணி *கர்மேந்திரியங்களை* संयम्य ஸம்யம்ய *அடக்கி* इन्द्रियार्थान् இந்த்ரியார்த்தான் *இந்திரியார்த்தங்*

களை मनसा மனஸா மனதால் स्मरन् आस्ते ஸ்மரன் ஆஸ்தே ஸ்மரித்துக் கொண்டிருக்கிறனே सः ஸ: அவன் विमूढात्मा விமூடாத்மா மூடாத்மா मिथ्याचारः மித்யாசார: பொய்யொழுக்கமுடையவனென்று उच्यते உச்யதே சொல்லப்படுகிறன்.

**கர்மேந்திரியங்களை அடக்கி, இந்திரிய விஷயங்களை மனதால் எண்ணிக்கொண்டிருக்கும்மூடன் பொய்யொழுக்க முடையவனென்று பகரப்படுகிறன். 6**

பிரகிருதியில் ஆத்மா கட்டுண்டிருக்குமளவு மனது இருக்கிறது. ஓயாது சங்கற்பித்துக்கொண்டிருப்பது அதன் தொழில். மனது எண்ணுகிறது; அதே வேளையில் புறக்கரணங்கள் தடுக்கப்படுகின்றன. அப்படிச் செய்வது முறையன்று. உபமானத்தால் இதை விளக்குமிடத்து நீராவியந்திரத்தில் ஆவிநிறைந்திருக்கிறது. ஆவி ஒருபுறம் சக்கரத்தை உந்தித்தள்ளுகையில் மற்றொரு புறம் அதற்கு முட்டுப்போடுவது சரியல்ல. முதலில் ஆவியை அடைக்கவேண்டும். பிறகு சக்கரத்துக்கு முட்டுப்போடவேண்டும். ஆவியை அடைக்காது சக்கரத்துக்கு முட்டுப்போட்டால் யந்திரம் ஓடியும் அல்லது பழுதுபடும். மனிதன் மனதை அடக்காது வெளிக்கரணங்களை அடக்குவதால் தன் இயல்பை அவன் பிளவு படுத்துகிறன். ஆகையால் அது மித்தியாசாரம் (பொய்யொழுக்கம்) எனப்படுகிறது. எது வாழ்வைக் குலைக்கிறதோ அது பொய்யொழுக்கம் அக்ஞானத்தில் இருப்பவன் கர்மத்தைவிட்டு விடுவதாகப் பாசாங்கு செய்வது மித்தியாசாரம் ஆகிறது. அது துராசாரத்துக்கு ஒப்பானது.

*மனிதனுடைய புண்ய பாவங்கள் அவனுடைய காரியங்களைச் சார்ந்திராமல் அவனுடைய மனநிலைமையைத்தான் சார்ந்துள்ளன. இரண்டு நண்பர்கள் கூடிப்போகையில் ஸ்ரீமத் பாகவதம் வாசிக்கப் படும் இடத்தை யடைந்தனர். அவர்களில் ஒருவன், "நண்பா! இங்கே சற்றுத் தாமதித்து இந்த அருள்மொழிகளைக் கேட்கலாமே" என்றான். மற்றவன், "பாகவதத்தைக் கேட்பதினால் என்ன சுகம்? தாஸி வீட்டில்*

போய் இன்பம் நுகரலாம் வா'' என்றான். முன்னவன் இதற்கு இணங்கவில்லை. ஆதலால் அவன் பாகவதம் படிக்கப்படும் இடத்தில் உட்கார்ந்து கதை கேட்கத்தொடங்கினான். மற்றவனோ தாஸி வீட்டுக்குப் போனான். என்றாலும் அவனுக்கு அங்கு இன்பம் ஏற்படவில்லை. "அடா! என்ன செய்து விட்டேன்! ஏன் இங்கு வந்தேன்? எனது நண்பன் ஹரியின் திவ்ய சரித்திரத்தைக் கேட்டுக்கொண்டு மகிழ்ந்திருப்பான்'' என்று நினைந்துக்கொண்டு, தாஸி வீட்டிலிருந்தபோதிலும் ஹரியைப் பற்றி நினைந்திருந்தான். பாகவதத்தைக் கேட்க உட்கார்ந்தவனுக்கும் இன்பம் உண்டாகவில்லை. "என் நண்பனோடு தாஸி வீட்டுக்குப் போயிருந்தால் அவனைப்போல நானும் இன்ப நுகர்ச்சி பெற்றிருக்கலாம்,'' என்று நினைத்துக் கொண்டிருந்தான். ஆகவே, இவன் பாகவத படனம் செய்யும் இடத்தில் இருந்தபோதிலும், அதைக் கேட்காமல் தாஸி வீட்டைப்பற்றிய சிந்தனை யுள்ளவனாக இருந்தபடியால், அங்கு நேரில் போகாத போனாலும் வாஸ்தவத்தில் போவதால் பெறக்கூடிய பாபத்தை அடைந்தான். தாஸி வீட்டிற்குச் சென்றவன் பாகவத படனத்தைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தபடியால், அவனுக்கு அந்தக் கெட்ட விடத்திலுங் கூடப் புண்ணியமே லபித்தது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

यस्त्विन्द्रियाणि मनसा नियम्यारभतेऽर्जुन ।
कर्मेन्द्रियैः कर्मयोगमसक्तः स विशिष्यते ॥ ७

யஸ்த்விந்த்ரியாணி மனஸா நியம்யாரபதேऽர்ஜுன ।
கர்மேந்த்ரியை: கர்மயோகமஸக்த: ஸ விசிஷ்யதே ॥ 7

अर्जुन அர்ஜுன *அர்ஜுனா* यः ய: *யாவன்* तु து *ஆனால்* इन्द्रियाणि இந்த்ரியாணி *இந்திரியங்களை* मनसा மனஸா *மனதினால்* नियम्य நியம்ய *அடக்கி* असक्तः அஸக்த: *பற்றற்று* कर्मेन्द्रियैः கர்மேந்த்ரியை: *கர்மேந்திரியங்களைக்கொண்டு* कर्मयोगं கர்மயோகம் *கர்மயோகத்தை* आरभते ஆரபதே *ஆரம்பிக்கிறானோ* सः ஸ: *அவன்* विशिष्यते விசிஷ்யதே *சிறந்தவன்.*

***அர்ஜுனா, ஆனால் இந்திரியங்களை மனதால் அடக்கிப் பற்றற்று, கர்மேந்திரியங்களைக்கொண்டு கர்மயோகம் செய்பவன் மேலானவனே.*** 7

முன்பு கூறப்பட்ட மித்யாசாரி இந்திரியங்களை அடக்கினான்; ஆனால் மனதை அடக்க முடியவில்லை. அவனை

விட மேலானவன் ஈண்டு எடுத்துச் சொல்லப்படுகிற கர்ம யோகி. இவன் மனதை ஒழுங்குப் படுத்திக்கொண்டு இந்திரியங்களைப் பயன்படுத்துகிறான். பசித்த நாய் ஒன்று தன் முன்னே வைத்துள்ள உணவுக்காகப் பதைபதைக்கிறது. அவிழ்த்து விட்டவுடன் அது பேர் ஆர்வத்துடன் உண்கிறது. அடங்காத மனதையுடையவனுடைய நிலைமை கிட்டத்தட்ட இது போன்றது. ஆசை சர்வ காலமும் அவனது உள்ளத்தில் குடிகொள்கிறது. அறிவுடையவனோ உணவு சர்வேசுவரனுடைய ஆராதனைக்கு நைவேத்யமாகச் சமைக்கப்படுகிறது என்று அதன்கண் பற்றற்றிருக்கிறான். பிறகு உண்ணும்பொழுது பகவானது பிரசாதம் என்று அமைதியோடு, தூய உணர்ச்சியோடு அதை ஏற்கிறான். இத்தகைய மனநிலையுடன் எல்லாக் கர்மங்களையும் செய்வது மேலானது. ஞானேந்திரியங்களைக் கையாளும் வகையும் இதில் அடங்கப் பெறுகிறது. உணவை உண்பது கர்மம். அதைச் சுவைப்பது ஞானம். சுவையைத் தனக்கேற்ற இன்பம் தருவது என்று ரசிப்பது போகம். அதே சுவையை ஈசுவரப் பிரசாதமாகப் போற்றுவது யோகம். ஆக, இந்திரியங்களைப் பாழ்படுத்துவது ஒண்ணாது; அடங்கிய மனதால் அவைகளை மேம்படுத்துவது முறை.

ஒரு பொந்தில் ஒரு பாம்பு வசித்து வந்தது. அவ்வழியாக யார் சென்ற போதிலும் அவர்களை அது கடித்து வந்ததாதலால் அப்பக்கம் ஒருவரும் போவதில்லை. ஒருநாள் ஸாது ஒருவர் அவ்வழியே போகும் போது அவரைக் கடிக்கவேண்டுமென்று அப்பாம்பு அவரைப் பின் தொடர்ந்து ஓடிற்று. ஆனால் அவரைச் சமீபித்ததும் அவருடைய மஹிமையால் பாம்புக்கிருந்த மூர்க்கம் முழுவதும் போய்விட்டது. அந்த மஹான் பாம்பைப் பார்த்து "நண்பா! என்னைக் கடிக்க நினைக்கிறாயா?" என்று கேட்டார். பாம்பு வெட்கப்பட்டுப் பதில் சொல்லாமலிருந்தது. அதன்மேல் அந்த யோகி, "நண்பா, கேள். இனிமேல் ஒருவருக்கும் தீங்கு செய்யாதே," என்று சொல்லிப் போனார். அவர் சொல்லுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதாகப் பாம்பு தலையை அசைத்தது. மஹான் போனபிறகு பாம்பு தன் புற்றில் புகுந்துகொண்டு அந்த க்ஷண முதல் யாருக்கும் தீங்கு செய்ய நினைக்காமல் வாழத் தொடங்கியது. கொஞ்ச நாளில் அவ்வூர் ஜனங்கள், இந்தப் பாம்புக்கு விஷமெல்

லாம் போய்விட்டது ; இனி ஒருவரையும் கடிக்காது என்று நினைத்து அதைத் தொந்தரவு செய்ய ஆரம்பித்தனர். சிலர் அதன்மீது கற்களை எறிந்தார்கள்; வேறு சிலர் இரக்கமின்றி அதன் வாலைப்பிடித்து இழுத்தார்கள். இப்படியாக அதற்கு நேர்ந்த உபத்திரவத்துக்கு அளவேயில்லை. அதிருஷ்டவசமாய் முன் வந்துபோன ஸாது அவ்வழியாய் மறுபடியும் வந்து, உடம்பெல்லாம் புண்ணுகி மெலிந்திருக்கும் பாம்பைப் பார்த்து, அப்படியானதின் காரணத்தை அறியவேண்டி "நடந்த சங்கதி என்ன ?" என்று கேட்டார். "ஸ்வாமி, தங்கள் உபதேசப்படி நான் ஒருவருக்கும் தீங்கு செய்வதில்லை. அதன் பயன் இது. ஜனங்கள் இரக்கமில்லாமல் என்னைத் தொந்தரவு செய்கிருர்கள்," என்றது பாம்பு. யோகி இதைக் கேட்டுப் புன்சிரிப்புக் கொண்டு, "நண்பா, யாரையும் கடிக்கவேண்டாம் என்று மட்டும் உனக்குச் சொன்னேன். ஒருவரையும் பயமுறுத்த வேண்டாம் என்று நான் சொல்லவில்லையே. நீ ஒருவரையும் கடிக்க வேண்டாம். ஆனல் பிறர் உன்னிடம் வந்து தொந்தரவு செய்யாதிருக்கும்படி நீ சீறிச் சப்தமிட்டுப் பயமுறுத்தி அவர்களை உன்னருகில் வராமலிருக்கும்படி செய்து கொள்ளவேண்டும்," என்று சொன்னர். அதுபோல நீ உலகத்தில் வாழ்ந்திருக்கும் வரையில் பிறர் உன்னிடம் அச்சமும் மரியாதையும் கொள்ளும்படி நட. ஆனல், ஒருவருக்கும் தீங்கு செய்யாதே. பிறரால் உனக்குத் தீங்கு வராதபடியும் காத்துக்கொள். அதாவது மனதையும் இந்திரியங்களையும் முறையாகக் கையாளக் கற்றுக்கொள்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஆகையால் சாதனதசையில் இருக்கிற ஒவ்வொருவனும் செய்யவேண்டியது யாது எனில் :—

**नियतं कुरु कर्म त्वं कर्म ज्यायो ह्यकर्मणः ।**
**शरीरयात्रापि च ते न प्रसिद्ध्येदकर्मणः ॥ ८**

நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண: ।
சரீரயாத்ராபி ச தே ந ப்ரஸித்த்யேதகர்மண: ॥ 8

**त्वं** த்வம் *நீ* **नियतं कर्म** நியதம் கர்ம *நித்யகர்மத்தை* **कुरु** குரு *செய்* **हि** ஹி *ஏனென்றல்* **अकर्मणः** அகர்மண: *கர்மம் செய்யாததைவிட* **कर्म** கர்ம *கர்மம் செய்வது* **ज्यायः** ஜ்யாய: *சிறந்தது* **अकर्मणः** அகர்மண: *கர்மம் செய்யாதிருப்பதினல்* **ते** தே *உன்னுடைய* **शरीरयात्रा अपि च** சரீர யாத்ரா அபி ச *உடலைப் பேணுவதும்* **न प्रसिद्ध्येत्** ந ப்ரஸித்த்யேத் *சாத்தியமாகாது.*

*நித்திய கர்மத்தை நீ செய். செயலின்மை யைவிடச் செயல் சிறந்தது. செயலிலானுக்கு உடலைப் பேணுதல்கூட இயலாது. 8*

உண்பது, உறங்குவது, நீராடுவது—இவைபோன்றவைகளுக்கு நித்திய கர்மங்கள் என்று பெயர். உயிர் வாழ்க்கைக்கு இவைகள் முற்றிலும் இன்றியமையாதவைகள். நித்திய கர்மங்களைச் செய்வதால் விசேஷமான புண்ணியம் ஒன்றும் கிடையாது. ஆனால் அவைகளைச் செய்யாவிட்டால் பாபம் உண்டு. உதாரணம் ஒன்று எடுத்துக்கொள்ளுமிடத்து உணவு அருந்துதலில் புண்ணியம் ஒன்றும் கிடையாது. ஆனால் உண்ணாது பட்டினி கிடந்தால் உடல் நலிதல் என்ற பாபம் ஏற்படுகிறது. குறித்த இடத்துக்குப் பயணம் போய்ச் சேருவது போன்று, குறித்த லட்சியத்தை அடைவதற்கு சரீரவாழ்க்கை முற்றிலும் வேண்டப்படுகிறது. ஆகையால் உடலைக் காப்பாற்றி வைப்பதே ஒரு பெரும் பயணம் போவதற்கு ஒப்பாகிறது. கர்மத்தாலன்றி இது ஒன்றும் சாத்தியப்படாது. மேம்பட வாழ விரும்புபவர் ஓயாது கர்மம் செய்தே ஆகவேண்டும். நித்திய கர்மத்தைமட்டும் செய்தால் போதுமா? போதாது. ஏனென்றால் தான் அடைந்த பண்பை இருந்தபடி காப்பாற்றி வைப்பதற்குமட்டும் நித்திய கர்மம் பயன்படும். ஒரு பருவத்தில் தவழ்தல் குழந்தைக்கு நித்தியகர்மம். அவ்வளவில் நின்றுவிட்டால் அதன் வாழ்க்கையில் முன்னேற்றம் ஒன்றுமில்லை. நிற்கவும் நடக்கவும் ஓடவும் ஆகிய புதிய கர்மங்களில் குழந்தை ஈடுபட்டாகவேண்டும். அங்ஙனம் மனிதன் புதிய புதிய கர்மங்களைச் செய்வதால் தான் ஜீவிதத்தில் முன்னேற்றமடைகிறான். ஆனால் முன்னேற்றத்துக்கு ஈடாக மற்றொருபுறம் இவன் கர்ம பந்தத்தில் தளைக்கப்படுகிறான். ஆகையால் முன்னேற்றமும் வேண்டாம், கர்மபந்தமும் வேண்டாம் என்று கருதிக் கர்மத்தைச் சுருக்கிக்கொள்வார் உளர். அது தகாது.

முன்னேற்றமும் அடையலாம்; கர்மபந்தத்தில் கட்டுப்படாதும் இருக்கலாம். எப்படி எனின், பகவானே பகர்ந்தருள்கிறார் :—

**यज्ञार्थात्कर्मणोऽन्यत्र लोकोऽयं कर्मबन्धनः ।**
**तदर्थं कर्म कौन्तेय मुक्तसङ्गः समाचर ॥ ९**

யக்ஞார்த்தாத்கர்மணோऽன்யத்ர லோகோऽயம் கர்மபந்தன: ।
ததர்த்தம் கர்ம கௌந்தேய முக்தஸங்க: ஸமாசர ॥ 9

यज्ञार्थात् யக்ஞார்த்தாத் *யக்ஞத்துக்கான* कर्मण: கர்மண: *கர்மத்தினின்று* अन्यत्र அன்யத்ர *மற்ற கர்மத்தினால்* अयं लोक: அயம் லோக: *இந்த லோகம்* कर्मबन्धन: கர்மபந்தன: *கர்மபந்தத்தை அடைகிறது* कौन्तेय கௌந்தேய *குந்தியின் மகனே* तदर्थं ததர்த்தம் *அதன்பொருட்டு* मुक्तसङ्ग: முக்தஸங்க: *பற்றற்று* कर्म கர்ம *கர்மத்தை* समाचर ஸமாசர *நன்கு இயற்று.*

***யக்ஞகர்மம் தவிர மற்ற கர்மத்தால் இவ்வுலகம் கட்டுண்கிறது. குந்தியின் மைந்தா, யக்ஞத்துக்கான கர்மத்தைப் பற்றற்று நன்கியற்று.*** **9**

*கர்மத்தில் பறித்தல், பங்கிடுதல், படைத்தல் என்று மூன்று இயல்புகள் உண்டு. கடைநிலையில் உள்ள உயிர்கள் பறித்துப் புசித்து உயிர்வாழ்கின்றன. இந்நிலையில் வாழ்க்கை என்பது ஓர் ஓயாத போராட்டம். வலிவுடையது முன்னணிக்கு வருகிறது. வலிவற்றது பின்னணியில் வருந்தி வாழ்கிறது அல்லது அறவே துடைக்கப்படுகிறது. விலங்கு உலகு இக்காட்சியளிக்கிறது.*

*இடைநிலையில் பறித்தல் குறைகிறது. பங்கிடுதல் அதிகரிக்கிறது. போட்டிக்கு ஈண்டு அதிக இடமில்லை. ஓர் உயிர் மற்றோர் உயிர்க்குத் துணைபுரிந்து வாழ்கிறது. மானுட சமூக அமைப்பு இதை அடிப்படையாகக்கொண்டது.*

*தலைநிலை என்பது இதனிலும் மேலானது. தனக்கென்று தேடாது, தன்னிடத்திருப்பதைப் பிறர்க்கென்றே*

பண்புடன் படைத்துவிடுதல் இதன் கோட்பாடாகும். வகையறிந்து அன்புடன் கொடுப்பதால் கொடுப்பவனுக்கும் ஏற்பவனுக்கும் குறையொன்றும் வருவதில்லை. இறைக்க இறைக்கக் கேணிநீர் ஊறுவது போன்று, எடுத்து முறையாக வழங்க வழங்க ஆற்றலும் ஆக்கமும் உயிரின்கண் உயர்கிறது. தலைசிறந்த இச்செயலுக்கு யாகம் என்று பெயர். இது வாழ்க்கையின் மேலாம் கோட்பாடாகும். கல்வியை மற்றவர்களுக்குப் புகட்டுகிறவளவு ஒருவன் தானே கல்விமான் ஆகிறான். ஞானத்தை வழங்குபவனுக்கு ஞானம் வளர்கிறது. செல்வத்தையும் அப்படியே பொதுநன்மையின் பொருட்டு முறையாகத்தேடிப் பயன்படுத்துகிறவளவு அது வளர்கிறது. பொதுநன்மையில் தனி நன்மை அடங்கிவிடுகிறது.

தனி நலம் கருதாத புண்ணியச் செயல், தியாக புத்தியோடு செய்யும்சேவை, உலகத்தின் நன்மைக்கென்றே செய்யப்படும்செயல், ஈசுவர ஆராதனையாக ஆற்றும் வினை, பாரமார்த்திகப் பெரு நோக்கத்தோடு செய்யப்படும் கர்மம் ஆகிய இவையாவும் யக்ஞம் என்று அழைக்கப்படுகின்றன.

போர்புரிவதை ஒருவன் உலக நன்மைக்காகவென்று செய்வானாகில், பொருள் ஈட்டுவதையும் பயிர்த்தொழில் செய்வதையும் ஒருவன் பொதுநலத்துக்காகவென்ற பாங்குடன் இயற்றுவானாகில், குற்றேவல் புரிவதையும் சமூகத் தொண்டாக ஒருவன் ஆற்றுவானாகில் இவையாவும் யக்ஞமாய்விடுகின்றன. எங்கு யக்ஞம் நடைபெறுகிறதோ அங்கு தெய்வ சான்னித்தியம் இருக்கிறது. விஷ்ணுவே யக்ஞசொரூபம் என்பது மறைமொழி. இப்படி யாகமாகக் கருதிச்செய்யும் கருமங்கள் மனிதனைப் பந்தப்படுத்தமாட்டா. யாக கர்மங்களை வேண்டிய அளவு விரிக்கலாம். அதனால் யாண்டும் சிறப்பே உண்டாகிறது.

பெறுதற்கரிய இம்மானிடப் பிறவியைப் பெற்றவன் இப்பிறவியிலேயே ஈசுவரனை அறிய முயலாது போனால் வீணில் பிறந்தவனே யாவான். ஈசுவரனை அடைய முயல். — ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஒழுங்கான உலக நடைமுறைக்கு ஆதாரமாயுள்ள திட்டம் யாது என்று வினவில் :—

**सहयज्ञाः प्रजाः सृष्ट्वा पुरोवाच प्रजापतिः ।**
**अनेन प्रसविष्यध्वमेषवोऽस्त्विष्टकामधुक् ॥ १०**

ஸஹயக்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி: ।
அனேன ப்ரஸவிஷ்யத்வமேஷவோऽஸ்த்விஷ்டகாமதுக் ॥ 10

पुरा புரா *ஆதியில்* प्रजापतिः ப்ரஜாபதி: *பிரஜாபதியானவர்* सहयज्ञाः ஸஹயக்ஞா: *யக்ஞத்தோடுகூட.* प्रजाः ப்ரஜா: *பிரஜைகளை* सृष्ट्वा ஸ்ருஷ்ட்வா *சிருஷ்டித்து* अनेन அனேன *இதனால்* प्रसविष्यध्वम् ப்ரஸவிஷ்ய த்வம் *விருத்தியடையுங்கள்* एषः ஏஷ: *இது* वः வ: *உங்களுக்கு* इष्टकाम-धुक् இஷ்டகாமதுக் *காமதேனுவாக* अस्तु அஸ்து *இருக்கட்டும் என்று* उवाच உவாச *சொன்னார்.*

***சிருஷ்டித் துவக்கத்தில் பிரம்மதேவன் யக்ஞத்தோடே பிரஜைகளைப் படைத்து “இதனால் விருத்தியடையுங்கள்; இது உங்களுக்குக் காமதேனுவாகட்டும்” என்றார். 10***

உலகில் பிறப்பதும், பிறந்து உயிர்வாழ்தலும் துன்பம் என்று சிலர் கருதுகின்றனர். இன்னும் சிலர் அதை இன்பமாக எண்ணி இறுதியில் ஏமாற்றமடைந்து துன்பப்படுகின்றனர். போட்டி போடுதலை வாழ்க்கைத் திட்டமாகக் கொண்டவர்கள் ஏமாற்றமடைந்தே ஆக வேண்டும். அதற்கு விலக்கு என்பது இல்லவே இல்லை. ஒரே ஒரு வழியில்தான் அதற்கு விலக்கு உண்டு. வாழ்க்கையில் அமைந்த செயல்கள் அனைத்தையும் யாகமாகச் செய்கிறவர்களுக்குத் துவக்கத்திலும் துன்பமில்லை; இடையிலும் துன்பமில்லை; இறுதியிலும் துன்பமில்லை. “இன்பமே எந்நாளும் துன்பமில்லை” என்ற பெரும்பேறு அடையப்பெற்றவர்கள் சிருஷ்டியின் உட்கருத்தை அறிந்தவர்களாம். தங்களுக்கென்று தேடுபவர்க்குச் செல்வம் சேர்ந்து பிறகு தங்களைவிட்டுச் சென்றுவிடுகிறது. ஒன்றையும் எதிர்பாராது கொடுத்துக்

*கொண்டே இருப்பவர்க்குக் கொடைக்கு வேண்டியபொருள் தானே வந்தமைகிறது. அத்தகைய மனநிலை அக்ஷய பாத்திரமாய்விடுகிறது. ஆகையால் அதில் துன்பமில்லை. இது தான் சிருஷ்டியின் மேலாம் திட்டம். அனுஷ்டித்துப் பார்ப்பவர்களுக்கெல்லாம் இவ்வுண்மை விளங்கும். ஆக, யாகத்தை ஆதாரமாகக்கொண்டுள்ளது சிருஷ்டி. யாகம் செய்பவர்க்கு வேண்டிய பொருள்களெல்லாம் தாமாக வந்தமைகின்றன. அதாவது பொது நன்மைக்கென்றே பொருள் தேடுபவர்க்கும், பொது நன்மைக்கென்றே பொருளைப் பிறரிடமிருந்து சேகரிப்பவர்க்கும் தடையின்றிப் பொருள் வந்துகொண்டேயிருக்கும். அவர்களுடைய மனதும் விரிவடைந்த மனது ஆகிறது. மனது விரிவடைவது ஒப்பற்ற பேறு ஆகும்.*

*காமதேனு என்பது ஒருவகை தெய்விகப் பசு என்று புராணம் கூறுகிறது. அதை வைத்திருப்பவர்களுக்கு எப்பொழுதும் நிறை செல்வமும் சிறப்பும் உண்டு. அக்காமதேனு யக்ஞத்துக்குப் புறம்பானதல்ல. யக்ஞமே காமதேனு என்று உருவகப்படுத்தி இயம்பப்படுகிறது. வாழ்க்கையை யக்ஞமாக நடாத்துபவனுக்கு ஆக்கமே அதிகரிக்கிறது. யக்ஞம் சிறப்பு ஈனும், செல்வமும் ஈனும், முக்தி ஈறாக அனைத்தையும் ஈனும். இதை அறிபவரே சிருஷ்டியின் உட்கருத்தை உள்ளவாறு அறிபவர் ஆகின்றனர்.*

*இதை அறிந்தவர் இதை அனுஷ்டானத்தில் கொண்டுவருவது எப்படி? அதற்கு விடை வருகிறது :—*

**देवान्भावयतानेन ते देवा भावयन्तु वः ।**
**परस्परं भावयन्तः श्रेयः परमवाप्स्यथ ॥ ११**

தேவான்பாவயதாநேந தே தேவா பாவயந்து வ: ।
பரஸ்பரம் பாவயந்த: ச்ரேய: பரமவாப்ஸ்யத ॥ 11

**अनेन** அனேன *இந்த யக்ஞத்தால்* **देवान्** தேவான் *தேவர்களை* **भावयत** பாவயத *வளரச் செய்யுங்கள்* **ते देवाः** தே தேவா: *அந்த தேவர்*

*கள்* वः வ: *உங்களை* भावयन्तु பாவயந்து *வளர்க்கட்டும்* परस्परं भावयन्तः பரஸ்பரம் பாவயந்த: *ஒருவரையொருவர் வளர்த்து* परं பரம் *மேலான* श्रेयः ச்ரேய: *நன்மையை* अवाप्स्यथ அவாப்ஸ்யத *அடைகிறவர்களாவீர்கள்.*

***“இதனால் தேவர்களைப் பேணுங்கள், தேவர்கள் உங்களைப் பேணட்டும். பரஸ்பரம் பேணிப் பெருநன்மை யெய்துவீர். 11***

*ஆத்மப் பிரகாசம் பொருந்தியவர்கள் தேவர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். பின்பு சரீரத்திலுள்ள இந்திரியங்களுக்குத் தேவர்கள் என்ற பெயர் உண்டு. சில நாட்களாக உடலுக்கு உணவு கொடாது விட்டுவிட்டால் இந்திரியங்கள் தொழில் புரியா. கண் பூத்துப் போம், காது அடைக்கும். மறுபடியும் உணவு கொடுத்தால் இந்திரியங்கள் தத்தம் வேலைபுரியும். இந்திரியங்கள் ஒழுங்காக வேலை செய்தால் வாழ்க்கையானது செவ்வனே நடைபெறும். இப்படி உடல் வாழ்பவர் இந்திரியங்களைப் பேண, இந்திரியங்கள் அவர்களைப் பேண, பரஸ்பர உதவியால் வாழ்க்கை இனிது நடைபெறுகிறது.*

*மண்ணுலகிலும் விண்ணுலகிலும் உள்ள மேலோர்க்கு தேவர் என்று பெயர். மேதக்க செயல்களிலேயே அன்னவர் ஈடுபடுவார்கள். அவர்களது நல்வினையில் ஒத்துழைப்பது யாகமாகிறது. கைம்மாறு கருதாது சான்றோர்க்குத் துணை புரிகின்றவளவு சான்றோர் அவர்களுக்குச் சகாயம் செய்வார்கள். சமூகத்தொண்டிலேயே ஈடுபட்டிருப்பவர்களுக்குத் தேவையாயிருப்பவைகளை யெல்லாம் சமூகத்தார் எடுத்து வழங்குவதைக் கண்கூடாகக் காணலாம். ஒரு மனிதன் உலகத்தவர்க்கென்றே உயிர்வாழ்ந்திருக்கும்போது உலகம் முழுதும் அவனது நன்மையில் கருத்துடையதாகிறது. தெய்வத்தை மனிதன் யாண்டும் முழுமனதோடு ஆராதித்தால் அத்தெய்வத்தின் விபூதிகளெல்லாம் அம்மனிதனை வந்தடைகின்றன. பிறர்க்கு மனி*

தன் எதை எடுத்து வழங்குகின்றானோ அதையே இயற்கையானது எடுத்துப் பன்மடங்கு அதிகமாக அவனுக்கு வழங்குகிறது. இப்படிப் பரஸ்பரம் பேணுதல் என்ற யாகத்தால் எல்லார்க்கும் நன்மையே வந்தமைகிறது.

பிறரைப் பேணாதார் யார்? அதற்கு விடை வரு

इष्टान्भोगान्हि वो देवा दास्यन्ते यज्ञभाविताः ।
तैर्दत्तानप्रदायैभ्यो यो भुङ्क्ते स्तेन एव सः ॥ १२

இஷ்டான்போகான்ஹி வோ தேவா தாஸ்யந்தே யக்ஞபாவிதா:।
தைர்தத்தானப்ரதாயைப்யோ யோ புங்க்தே ஸ்தேன ஏவ ஸ:॥

यज्ञभाविताः யக்ஞபாவிதா: *யக்ஞத்தினால் பேணப்பெற்ற* देवाः தேவா: *தேவர்கள்* वः வ: *உங்களுக்கு* इष्टान् भोगान् இஷ்டான் போகான் *இஷ்டமான போகங்களை* दास्यन्ते தாஸ்யந்தே *தருவார்கள்* हि ஹி *அங்ஙனம்* तैः தை: *அவர்களால்* दत्तान् தத்தான் *தரப்பட்டவைகளை* एभ्यः ஏப்ய: *இந்த தேவதைகளின் பொருட்டு* अप्रदाय அப்ரதாய *அழைப்பிக்காது, அளிக்காது* यः ய: *யார்* भुङ्क्ते புங்க்தே *நுகர்கிறானோ* सः ஸ: *அவன்* स्तेनः एव ஸ்தேன: ஏவ *திருடனேயாம்.*

***"யாகத்தால் பேணப்பெற்ற தேவர்கள் உங்களுக்கு நாடிய போகங்களை நல்குவார்கள்." அங்ஙனம் அவர்களால் கொடுக்கப்பெற்று அவர்களுக்குக் கைம்மாறு அளிக்காது நுகர்பவன் திருடன். 12***

*உலகில் பிறந்தது முதல் ஒருவன் அனுபவிக்கும் நன்மைகளெல்லாம் பிறர் செய்த யாகத்தின் பயனாகும். குழந்தை பரிபாலிக்கப்படுகிறது. அது பெற்றோர் செய்த யாகத்தின் பயன். இளைஞன் கல்வி பெறுகிறான். கலாசாலை நிறுவியவர்களின் யாகபலன் அது. உண்ண உணவும், குடியிருக்க வீடும், விதவிதமான இன்ப நுகர்ச்சிகளையும், பிரயாண வசதிகளையும், இதர சுகங்களையும் மனிதன் பெறுகிறான். இவையாவும் மற்றவர் செய்த யக்ஞத்தின் பயனேயாம். இனித் தன்னுடைய வாழ்க்கை உலகுக்கு எப்படிப்*

*பயன்படுகிறது என்று மனிதன் எண்ணிப்பார்க்கவேண்டும். ஒருவனால் உலகம் எவ்வளவு நன்மையடைந்திருக்கிறதோ அவ்வளவு அரும்பெரும் செயல்கள் அவனிடத்திருந்து உருவெடுத்தவைகளாகின்றன. ஆற்றுகின்ற வினையைப் பிறர்க்குப் பயன்படும்படி விரிக்குமளவு அது வேள்வியாக வடிவெடுக்கிறது. கணக்குப் பார்க்குமிடத்து மனிதன் உலகிலிருந்து நன்மைகளைப் பெறுவதைவிட அதிகம் உலகுக்கு எடுத்து வழங்கவேண்டும். பெறுவது பெரிது, வழங்குவது சிறியதாயிருக்குமிடத்து அவன் கடன்பட்டவனாகிறான். உலகுக்கு ஒன்றையும் கொடாது உலகத்திலிருந்து எல்லாம் தனக்காகவென்று ஏற்றுக்கொள்ளுதலிலேயே கண்ணுங்கருத்துமாயிருப்பவன் திருடனாகிறான். இத்தகைய இழிநிலை அறிவுடையோர்க்கு ஒவ்வாது. அப்படியாயின் வாழ்க்கைக்குத் தக்கது எது? தகாதது எது? விடை வருகிறது :—*

यज्ञशिष्टाशिनः सन्तो मुच्यन्ते सर्वकिल्बिषैः ।
भुञ्जते ते त्वघं पापा ये पचन्त्यात्मकारणात् ॥ १३

யக்ஞசிஷ்டாசின: ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பிஷை: ।
புஞ்ஜதே தே த்வகம் பாபா யே பசந்த்யாத்மகாரணாத் ॥ 13

यज्ञशिष्टाशिनः யக்ஞசிஷ்டாசின: *யக்ஞத்தில் எஞ்சியிருப்பதை உண்கின்ற* सन्तः ஸந்த: *சான்றோர்* सर्वकिल्बिषैः ஸர்வகில்பிஷை: *சகல பாபங்களினின்றும்* मुच्यन्ते முச்யந்தே *விடுபடுகிறார்கள்* ये யே *யார்* तु து *ஆனால்* आत्मकारणात् ஆத்மகாரணாத் *தங்கள் பொருட்டு* पचन्ति பசந்தி *சமைக்கிறார்களோ* ते पापाः தே பாபா: *அப்பாபிகள்* अघं அகம் *பாபத்தை* भुञ्जते புஞ்ஜதே *புசிக்கிறார்கள்.*

***யாகத்தில் மிஞ்சியதை உண்ணும் நல்லோர் எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுகின்றனர். ஆனால் தங்கள் பொருட்டே சமைக்கும் பாபிகள் பாபத்தை உண்கின்றனர்.*** 13

கர்மம் தன்னளவில் புண்ணியமுமல்ல, பாபமுமல்ல. எண்ணத்திற்கு ஏற்றாற்போன்று அது புண்ணியம் அல்லது பாபம் ஆகிறது. தீயாரைத் தகர்த்து நல்லாரைப் பேணுதற்கென்று புரியும் வெம்போர் புண்ணியச் செயலாகும். தனது தனி நலத்தை நாடிச்செய்யும் தேவாராதனை பாபச் செயலாகும். எத்தொழிலைச் செய்தாலும் அதன்மூலம் உலக நன்மையும் இறைவனது பெருமையும் முன்னணியில் நிற்க வேண்டும். தான் தனது என்னும் செருக்குப் பின்னணிக்குப்போமளவு அது புண்ணியச்செயலாம். நித்தியகர்மத்தில் தக்கதொரு சான்று எடுத்துக்கொள்ளுமிடத்து சமைத்த உணவை மற்றவர்களுக்கு முதலில் வழங்கிவிட்டு மிஞ்சியதை உண்பவன் மேலோன். மற்றவர்களைப் பற்றிய எண்ணமில்லாது தனக்கென்றே உணவைச் சமைப்பவன் அல்லது தேடிக்கொள்பவன் கர்மபந்தத்தைப் பெருக்குகிறான். அந்த அளவில் அவன் பாபத்தைப் புசிப்பவன் ஆகிறான்.

தர்மராஜாவுடைய யாகத்தை ஒப்பற்றது என்றார்கள் ரிஷிகள் அனைவரும். மேனியில் பாதி பொன்னிறம்படைத்திருந்த கீரிப்பிள்ளையொன்று அந்த யாகசாலையில் புரண்டெழுந்து அந்த ரிஷிகளைப் பொய்யர்களென்று பகர்ந்தது. தாம் அறிந்து பொய்சொல்லவில்லை என்றார்கள் புங்கவர் எல்லாரும். பின்பு கீரிப்பிள்ளை சொல்லலாயிற்று:— பஞ்சம் ஏற்பட்ட ஒரு நாட்டில் பலபேர் பட்டினி கிடந்து மடிந்தனர். அங்கு ஒரு ஏழை பக்தர் அவரது மனைவி, பிள்ளை, மருமகள் ஆகிய நான்கு பேர் முறை வழுவா வாழ்க்கை வாழ்ந்து வந்தனர். உணவு இல்லாது பட்டினிகிடப்பது அவர்களுக்குச் சர்வசர்தாரணம். ஆனால் ஈசுவர உபாசனை என்ற அருள்விருந்து இரவும் பகலும் அவர்களுக்குப் பெருமிதமாயுண்டு. பல நாள் பட்டினிக்குப்பிறகு கொஞ்சம் கோதுமை மாவு அவர்களுக்கு வீடுதேடி வந்த பிக்ஷையாகக் கிடைத்தது. நான்கு ரொட்டிகளாக அதைச் சித்தப்படுத்தினார்கள். படைத்தவனுக்கு அவைகளை நைவேத்தியமாகப் படைத்தார்கள். பிரசாதத்தை அருந்த அமர்ந்த பொழுது அதிதி ஒருவர் வந்துவிட்டார். திரிகரண சுத்தியுடன் அவருக்கு வரவேற்பு. பக்தர் தமது ரொட்டியைப் பணிவுடன் அவர் முன் வைத்து அருந்தும்படி விண்ணப்பித்தார். அதனால் அவர் பசி அதிகரித்தது. மனைவியும், மகனும், மருமகளும் அவரவர் பாகத்தைப் பண்புடன் அவர் முன் வைத்து வணங்கினார்கள். அதிதி நான்கு ரொட்டிகளையும் அருந்தி அவர்களை ஆசீர்வதித்துச் சென்றார். நால்வரும் பட்டினி கிடந்து

பரலோகமடைந்தார்கள். ரொட்டி செய்யும்பொழுது எஞ்சி நிலத்தில் விழுந்த மாவின் மீது கீரிப்பிள்ளை படுத்துப் புரள அதன் உடலில் பாதி பொன்னிறமானது. பக்தர் ஒருநாளும் தமக்கென்று சமைக்கவில்லை. உயிர் வாழ்தல், உணவைப் பெறுதல், அதை வேண்டியவர்க்குக் கொடுத்தல், மாய்தல் ஆகிய அனைத்தும் அவருக்கு ஒரு பெரு வேள்வியாயிற்று. அதில் மிஞ்சியமாவு அவ்வளவு புனிதம் வாய்ந்தது. ஆகையால் கீரிக்குப் பொன்மேனி பாதி வந்தது. அதற்கு நிகரான யாகத்தைக் கீரி வேறு எங்கும் காணவில்லை. செயல் அனைத்தையும் ஈசுவரார்ப்பணமாகச் செய்வதே யாகம். தியாகத்தை வளர்ப்பதற்குச் செயல் புரிதல் யாகம். போகத்தை வளர்ப்பதற்குச் செயல் புரிதல் பாபம். தன் உயிரையே வழங்கும் தியாகிக்கு எக்கர்மமும் ஈசுவர வழிபாடு ஆகிறது.

யக்ஞம் செய்யாத வாழ்நாள் வீண்நாள் ஆய்விடுகிறது. இல்வாழ்வான் ஒருவன் வீண்நாள் வழியடைப்பதற்கு ஐம்பெரும் வேள்விகளை நாள்தோறும் செய்தாக வேண்டும். அவையாவன :—

1. **தேவயக்ஞம்** : கடவுள் வழிபாடு இல்லாது ஒரு நாளும் கழியலாகாது. இஷ்ட தேவதையை முறைப்படி அன்றன்று வாழ்த்தி வணங்க வேண்டும். (2) **ரிஷியக்ஞம்** : உலக நன்மையின் பொருட்டு சான்றோர் சிறந்த சாஸ்திரங்களை இயற்றி வைத்திருக்கின்றனர். அவர்களில் பலர் தங்கள் பெயரையும் வெளிக்குக் காட்டாது வைத்துச்சென்றனர். அவர்கள் அமைத்த தெய்வ நெறி நூல்களை முறையாக ஆராய்வதும் அவைகளை மற்றவர்களுக்கு எடுத்து ஓதுவதும் ஆகிய செயல்கள் அன்னவர்களைப் போற்றுதலுக்கு ஒப்பாகும். நூல்களை ஓதுதலிலேயே ஒவ்வொரு நாளும் கழிய வேண்டும். இதற்குப் பிரம்மயக்ஞம் என்றும் பெயர் உண்டு. (3) **பித்ருயக்ஞம்**: மனிதன் பெற்றுள்ள உடல் வாழ்க்கையில் தன் முன்னோர்களுக்குக் கடப்பாடு உடையவன் ஆகிறான். அவர்கள் எவ்வுலகில் எந்நிலைமையில் இருப்பினும் இன்புற்றிருப்பார்களாக என்று அவர்களைக் குறித்து நித்தமும் நல்லெண்ணம் எண்ணுதல் வேண்டும். உயிரோடிருக்கும் பெற்றோர்களுக்கு நாள்தோறும் பணிவிடை செய்வதும் பித்ருயக்ஞத்தின் பிரிவினையாகும். (4) **நரயக்ஞம்**:

மக்களது பசியைப் போக்குதல், பிணியை நீக்குதல், வாழ்க்கையைப் பண்படுத்துதல், கல்வியைப் பெருக்குதல் ஆகிய இவை யாவும் நரயக்ஞத்தில் அடங்குகின்றன. காலத்துக்கு ஏற்றாற்போன்று நரயக்ஞத்தை மாற்றியமைத்தல் வேண்டும். (5) **பூதயக்ஞம்:** ஆடுமாடு முதலிய ஜீவ ஜந்துக்கள் மக்களது வாழ்க்கைக்குப் பல விதங்களில் பயன்பட்டு வருகின்றன. அவ்வுயிர்வகைகளை மக்கள் நன்கு பேணி வருதல் பூத யக்ஞமாகும்.

இங்ஙனம் பஞ்ச மகா யக்ஞத்தில் மனிதன் உறுதியாக ஈடுபடவேண்டும். வேள்வியாக அமைத்து வினைகளை வெவ்வேறு விதமாக விரித்துக்கொண்டு போவதுதான் வாழ்க்கைக்கு உற்ற துணை. அதனால் இயற்கையின் நடைமுறை என்னும் சக்கரத்தின் பிரவிருத்தியும் நன்கு நடைபெறுகிறது. அது எப்படி எனின் :—

**अन्नाद्भवन्ति भूतानि पर्जन्यादन्नसम्भवः ।**
**यज्ञाद्भवति पर्जन्यो यज्ञः कर्मसमुद्भवः ॥ १४**

அன்னாத்பவந்தி பூதானி பர்ஜன்யாதன்னஸம்பவ: ।
யக்ஞாத்பவதி பர்ஜன்யோ யக்ஞ: கர்மஸமுத்பவ: ॥ 14

अन्नात् அன்னாத் *அன்னத்திலிருந்து* भूतानि பூதானி *உயிர்வகைகள்* भवन्ति பவந்தி *உண்டாகின்றன* पर्जन्यात् பர்ஜன்யாத் *மழையினின்று* अन्नसम्भवः அன்னஸம்பவ: *அன்னமுண்டாகிறது* यज्ञात् யக்ஞாத் *யக்ஞத்திலிருந்து* पर्जन्यः பர்ஜன்ய: *மழை* भवति பவதி *உண்டாகிறது* यज्ञः யக்ஞ: *யக்ஞம்* कर्मसमुद्भवः கர்மஸமுத்பவ: *கர்மத்திலிருந்து உண்டா*

***உணவினின்று உயிர்கள் உண்டாகின்றன. மழையினின்று உணவு உருப்படுகிறது. யக்ஞத்திலிருந்து மழை வருகிறது. யக்ஞத்துக்குப் பிறப்பிடம் கர்மம். 14***

முறைப்படி கர்மம் செய்தால் அது யக்ஞமாகிறது. அந்த யக்ஞத்தில் கர்மபலன் சூக்ஷ்ம வடிவெடுக்கிறது.

வைதிக பரிபாஷையில் அது அபூர்வம் என்று அழைக்கப் படுகிறது. இரண்டொரு உதாரணங்களால் இதை அறியலாம். கடலில் உள்ள நீர் ஆவியாக மாறுகிறது. அந்த ஆவி கண்ணுக்குத் தென்படுவதில்லை. அது அபூர்வமாகிறது. பிறகு மழையாக மாறி வீழ்கிறது. குப்பை செத்தைகளை வைத்துக் கொளுத்தினால் அவை எரிந்து கரியமிலவாயு ஆகின்றன. கரியமிலவாயு கண்ணுக்குத் தென்படாததாகிறது. அந்நிலையில் அது அபூர்வம். செடிகள் அவ்வாயுவை இலைகள் வாயிலாக உண்டு வளர்கின்றன. அதே போன்று யாகம் மந்திர சக்தி அல்லது மனோ தத்துவத்தோடு கூடியிருக்கும்போது அது அபூர்வமாகிறது. உச்சரிக்கிற வார்த்தையே மந்திர சக்தியல்ல. அந்த வார்த்தைக்கு அடிப்படையாயிருக்கும் உணர்ச்சி மந்திர சக்தியாகிறது. அறச்செயல் புரிந்து வருபவர் நல்லார் ஆகின்றனர். அவர்களே நல்லமனமுடையவர். மழைவேண்டுமென்று அவர்கள் விரும்பினால் மழை வந்துவிடும். யக்ஞத்தினின்று மழை வருகிறது என்னும் கோட்பாடு இதுவே. அறத்துப்பாலுக்கு முகப்பில் வான்சிறப்பை வள்ளுவர் வைத்ததின் உட்கருத்து இதுவே. முறையாக மழைபெய்யுமிடத்து அதினின்று உணவு உண்டாகிறது. உணவிலிருந்து உயிர்கள் தோன்றுவதும் நிலைபெற்றிருப்பதும் வெளிப்படை.

**कर्म ब्रह्मोद्भवं विद्धि ब्रह्माक्षरसमुद्भवम् ।**
**तस्मात् सर्वगतं ब्रह्म नित्यं यज्ञे प्रतिष्ठितम् ।। १५**

கர்ம ப்ரஹ்மோத்பவம் வித்தி ப்ரஹ்மாக்ஷரஸமுத்பவம் ।
தஸ்மாத் ஸர்வகதம் ப்ரஹ்ம நித்யம் யக்ஞே ப்ரதிஷ்டிதம் ॥

कर्म கர்ம *கர்மம்* ब्रह्मोद्भवं ப்ரஹ்மோத்பவம் *வேதத்திலிருந்து உண்டானது* ब्रह्म ப்ரஹ்ம *பிரம்மா அல்லது வேதம்* अक्षरसमुद्भवं அக்ஷரஸமுத்பவம் *அழிவில்லாததாகிய பரமாத்மாவிடத்திருந்து உண்டானது என்று* विद्धि வித்தி *அறிந்துகொள்* तस्मात् தஸ்மாத் *ஆகையினால்* सर्वगतं ஸர்வகதம் *எங்கும் நிறைந்துள்ள* ब्रह्म ப்ரஹ்ம *வேதம்* नित्यं நித்யம் *எப்பொழுதும்* यज्ञे யக்ஞே *யக்ஞத்தில்* प्रतिष्ठितं ப்ரதிஷ்டிதம் *நிலைபெற்றது.*

**கர்மம் வேதத்தினின்று உதித்ததென அறிக. வேதம் பரமாத்மாவினின்று வந்தது. ஆகையால் எங்கும் நிறைந்துள்ள வேதம் யாண்டும் யக்ஞத்தில் நிலைபெற்றுள்ளது. 15**

வேதம் அல்லது பிரம்மா என்பது முக்குணமயமாய், காலதேச வர்த்தமான மயமாய் உள்ள இயற்கையேயாம். தோன்றியுள்ள அனைத்தும் இயற்கையின் கூறுபாடுகளாதலால் அதை எங்கும் நிறைபொருள் எனலாம். அது வித்தியாசாகரம் அல்லது அறிவுக்கடல். அனைத்தையும் அது விளக்குவதாதலாலும் அதை எங்கும் நிறைபொருள் எனலாம்.. சர்வக்ஞனுகிய பரமாத்மாவினிடத்திருந்து இந்த வேதம் அல்லது இயற்கை உதித்துள்ளது. பிரபஞ்ச முழுவதும் கர்ம சொரூபமாக இருப்பதால் கர்மம் அந்த இயற்கையினிடத்திருந்து வந்ததாகிறது. இனி, இக்கர்மத்தைச் சிறந்த முறையில் கையாளுமிடத்து அது யக்ஞம் என்ற பெயர் பெறுகிறது. உண்ணுதல் என்கிற கர்மத்தை முறையாகச் செய்தால் அது யக்ஞமாகிறது. வாழ்க்கை என்ற கர்மத்தைப் பண்புடன் செய்தால் அது யாகமாகிறது. நாட்டிலுள்ள மக்களெல்லாம் சட்டத்திற்கு நன்கு கீழ்ப்படிந்தால் ஆட்சிமுறை சிறப்படைகிறது. அங்ஙனம் உயிர்கள் அனைத்தும் யக்ஞம் செய்தால் தொகைவினை மயமாயுள்ள இயற்கையே சிறப்புற்று விளங்குகிறது. உயிர்கள் யக்ஞத்தைப் பலன்கருதிச் செய்தால் ஆக்கத்தை அடைகின்றன. பலன் கருதாது நிஷ்காமியமாகச் செய்தால் ஆக்கத்தையும் அடைகின்றன; பெரும் பேறு ஆகிய முக்தியையும் அடைகின்றன. பலன் கருதியோ, பலன் கருதாதோ யாகம் செய்கின்றவளவு இயற்கை தெய்வ சொரூபமாகத் திகழ்கிறது. ஆகையால்தான் வேதம் யாண்டும் யக்ஞத்தில் நிலைபெற்றுள்ளது எனப்படுகிறது. பூலோகத்தைச் சுவர்க்கமாக மாற்றியமைப்பது மனிதனுக்குச் சாத்தியமாகிறது. நல்வினையை நல்லெண்ணத்துடன் ஆற்றுவதே அதற்கு உற்ற உபாயம். இது இயற்கையின் பெருந்திட்டம்.

*இதில் ஈடுபடாவிட்டால் என்ன குறை வந்துவிடும்? விடை வருகிறது:—*

एवं प्रवर्तितं चक्रं नानुवर्तयतीह यः ।
अघायुरिन्द्रियारामो मोघं पार्थ स जीवति ॥ १६

ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரம் நானுவர்தயதீஹ ய: ।
அகாயுரிந்த்ரியாராமோ மோகம் பார்த்த ஸ ஜீவதி ॥ 16

यः ய: *யார* इह இஹ *இகத்தில்* एव ஏவம் *இவ்விதம்* ப்ரவர்த்திதம் *பிரவர்த்திக்கப்பட்டுள்ள* चक्रं சக்ரம் *சக்கரத்தை* न अनुवर्तयति ந அனுவர்த்தயதி *பின்பற்றுகிறதில்லையோ* सः ஸ: *அவன்* अघायुः அகாயு: *பாப வாழ்க்கையுடையவன்* इन्द्रियारामः இந்த்ரியாராம: *இந்திரியங்களில் பொருந்தியவனாய்* पार्थ பார்த்த *பார்த்தா* मोघं மோகம் *வீணே* जीवति ஜீவதி

***இகத்தில் இங்ஙனம் இயக்கப்பெற்றுள்ள சக்கரத்தைப் பின்பற்றாதவன், ஓ பார்த்தா, பாப வாழ்க்கையுடையோனாய், புலன்களில் பொருந்தினவனாய், வீணே வாழ்கிறான். 16***

பண்டங்களைப் பண்படுத்துதற்குத் தொழிற்சாலைகள் அமைந்துள்ளன. அங்ஙனம் உயிர்களை ஓம்பி உயர்ந்தோர் ஆக்குதற்கு இயற்கைச் சக்கரம் இறைவனால் இயக்கப்பெற்றுள்ளது. பாடம் படிக்காவிட்டால் மாணாக்கன் பள்ளிக்கூடத்துக்குப் போயும் போகாதவனாகிறான். ஓர் ஊருக்குப் போனவன், போன காரியத்தைக் கவனிக்காவிட்டால் போயும் போகாதவனாகிறான். இவ்வுலகுக்குள் மக்கள் வந்துள்ளது இந்திரிய போகத்தில் உழல்தலுக்காகவல்ல. ஜகத் பிரவிருத்தி சக்கரத்தில் கலந்துகொண்டு, யாகங்கள் செய்து, இயற்கை நடைமுறையை இனியதாக்கி, தம்வாழ்க்கையைப் பண்படுத்துதற்கென்றே மக்கள் இங்கு வந்துள்ளனர். அப்பெரு நோக்கத்தைப் புறக்கணித்துவிட்டுச் சிற்றின்ப வாழ்க்கையில் புகுபவர் பிறந்தும் பிறவாதவர் ஆகின்றனர்.

முறையாகக் கர்மம் செய்தே ஆகவேண்டும் என்னும் விதிக்கு விலக்கானவர் யாருமில்லையா? விடைவருகிறது:—

**यस्त्वात्मरतिरेव स्यादात्मतृप्तश्च मानवः ।**
**आत्मन्येव च संतुष्टस्तस्य कार्यं न विद्यते ॥ १७**

யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாதாத்மத்ருப்தஸ்ச மானவ: ।
ஆத்மன்யேவ ச ஸந்துஷ்டஸ்தஸ்ய கார்யம் ந வித்யதே ॥ 17

तु து *ஆனல்* यः मानवः ய: மானவ: *எந்த மனிதன்* आत्मरतिः ஆத்மரதி: *ஆத்மாவின்கண் பிரீதியுடையவனே,* आत्मतृप्तः एव च ஆத்மத்ருப்த: ஏவ ச *ஆத்மாவில் மட்டும் திருப்தியுடையவனே* आत्मनि एव च ஆத்மனி ஏவ ச *ஆத்மாவின்கண்ணே* सन्तुष्टः ஸந்துஷ்ட: *சந்தோஷமடைந்தவனாய்* स्यात् ஸ்யாத் *இருக்கிறானே* तस्य தஸ்ய *அவனுக்கு* कार्यं கார்யம் *செய்யவேண்டிய கடமை* न विद्यते ந வித்யதே *இல்லை.*

***ஆனால் ஆத்மாவில் இன்புற்று, ஆத்மாவில் திருப்தியடைந்து, ஆத்மாவில் மகிழ்ந்திருப்பவனுக்கு வினையாற்றும் கடமையில்லை. 17.***

*பிரகிருதி கர்ம சொரூபம். ஆத்மாவிடத்து கர்மம் இல்லை. மனதோ பிரகிருதியின் கூறுபாடாகும். ஆகையால் அதனிடத்து ஓயாது கர்மம் நடந்துகொண்டிருக்கிறது. ஆயினும் அக்கர்மத்தில் ஒரு விசேஷம் உண்டு. மனது உலகப்பொருள்களை இந்திரியங்கள் வாயிலாகப் பற்றுங்கால் அதன் கர்மம் அதிகரிக்கிறது. அது ஆத்மாவைப் பற்றுங்கால் அதன் கர்மம் ஓய்கிறது. அதன் கர்மங்களில் கடைசியானது ஆத்மாவைப் பற்றுதல் என்ற கர்மம். ஆத்மாவானது ஆனந்த சொரூபம். ஆதலால் மனது ஆத்மாவைப் பற்றும்பொழுது அதற்கு நிலைத்த இன்பமும் திருப்தியும் மகிழ்வும் உண்டாகின்றன. நதியானது கடலை அடையும் பரியந்தம் ஓடுதல் என்ற கர்மம் அதற்கு இருக்கிறது. கடலை அடைந்தான பிறகு அதற்குக் கர்மம் ஒன்றுமில்லை. ஆத்மாவைச் சார்ந்து ஆத்மாவில் லயமாவது ஒப்பற்ற கர்மமா*

கிறது. எல்லா ஜீவர்களும் அறிந்தோ அறியாமலோ குறிக்கோளாகக் கொண்டிருப்பது இதுவே. ஆக, ஆத்மாவில் ஒடுங்கியிருக்கும் மனதுக்கு கர்மமில்லை.

*ஜீவாத்மா, பரமாத்மா என்ற இரண்டின் சேர்க்கையானது, ஒரு கடிகாரத்தில் மணிக்கொருதரம், மணியைக்காட்டும் முள்ளும் நிமிஷத்தைக் காட்டும் முள்ளும் சேர்வதை ஒக்கும். அவைகள் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டவை. ஒன்றன்மீது மற்றொன்று சார்ந்துள்ளது. சாதாரணமாக அவை தனித்திருப்பினும் தகுதியான சந்தர்ப்பங்கள் வாய்க்கும்போதெல்லாம் ஒன்றுசேரும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*உலகத்தவரிடமிருந்தாவது அவன் எதையும் எதிர்பார்ப்பதில்லையா? விடை வருகிறது:—*

**नैव तस्य कृतेनार्थो नाकृतेनेह कश्चन ।**
**न चास्य सर्वभूतेषु कश्चिदर्थव्यपाश्रयः ॥ १८**

நைவ தஸ்ய க்ருதேனார்த்தோ நாக்ருதேனேஹ கஸ்சன ।
ந சாஸ்ய ஸர்வபூதேஷு கஸ்சிதர்த்தவ்யபாச்ரய: ॥ 18

तस्य தஸ்ய *அவனுக்கு* इह இஹ *இகத்தில்* कृतेन க்ருதேன *கர்மம் செய்வதால்* अर्थः அர்த்த: *பிரயோஜனம்* न एव ந ஏவ *இல்லை.* अकृतेन அக்ருதேன *கர்மம் செய்யாமையினால்* कश्चन கஸ்சன *யாதொரு (நஷ்டமும்)* न ந *இல்லை* च ச *மேலும்* अस्य அஸ்ய *அவனுக்கு* सर्वभूतेषु ஸர்வபூதேஷு *எல்லா உயிர்களிடத்தும்* कश्चित् கஸ்சித் *ஏதாவது* अर्थव्यपाश्रयः அர்த்தவ்யபாச்ரய: *பிரயோஜனத்துக்காகச் சார்ந்திருத்தல்* न ந

***அவனுக்குக் கர்மம் செய்து ஒன்றைப் பெறுதலும், செய்யாது எதையாவது இழத்தலும் இல்லை. ஏதாவது பொருளை நாடி உயிர்களைச் சார்ந்திருப்பதும் அவனுக்கில்லை. 18***

*ஆத்மாவை அடைந்தவன் பூர்ணானந்தத்தைப் பெற்றவன் ஆகிறான். அதற்குமேல் அவன் பெறவேண்டியது ஒன்றுமில்லை. பெற்ற அப்பரமானந்தத்தை இழப்பதும் கிடையாது. ஆகையால் புல் முதல் பிரம்மா பரியந்தம்*

*எந்த உயிரிடத்திருந்தும் எவ்விதமான தயவையும் அந்த ஆத்மஞானி எதிர்பார்ப்பதில்லை.*

*தனக்குள் தானே பூர்ணானந்தத்தை அனுபவிப்பது ஈசுவர தரிசனத்தின் அடையாளங்களில் ஒன்றாகும். சமுத்திரத்தின் மேற்பரப்பில் அலைகள் சுருண்டோடுகின்றன. ஆனால் அதன் கீழுள்ள ஆழமான நீர்த்தொகுதியோ அசைவற்றிருக்கிறது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*இந்நிலையை அடைந்துவிட்டதாகப் பாசாங்கு செய்வதில் பயனில்லை. அதற்கென்று கர்மத்தின் வாயிலாகத் தன்னை ஆயத்தப்படுத்த வேண்டும். எப்படிக் கர்மம் செய்ய வேண்டும்? விடை வருகிறது:—*

**तस्मादसक्तः सततं कार्यं कर्म समाचर ।**
**असक्तो ह्याचरन्कर्म परमाप्नोति पूरुषः ॥ १९**

தஸ்மாதஸக்த꞉ ஸததம் கார்யம் கர்ம ஸமாசர ।
அஸக்தோ ஹ்யாசரன்கர்ம பரமாப்னோதி பூருஷ꞉ ॥ 19

तस्मात् தஸ்மாத் *ஆகையினால்* असक्तः அஸக்த꞉ *பற்றற்றவனாய்* सततं ஸததம் *எப்பொழுதும்* कार्यं கார்யம் *செய்யவேண்டிய* कर्म கர்ம *நித்ய கர்மத்தை* समाचर ஸமாசர *நன்கியற்று* हि ஹி *ஏனென்றால்* असक्तः அஸக்த꞉ *பற்றற்று* कर्म கர்ம *கர்மத்தை* आचरन् ஆசரன் *அனுஷ்டிக்கிற* पूरुषः பூருஷ꞉ *புருஷன்* परम् பரம் *பரத்தை (மேன்மையை)* आप्नोति ஆப்னோதி *அடைகிறான்.*

***ஆகையால் யாண்டும் பற்றற்றுப் பண்புடன் பெருவினையாற்றுக. ஏனென்றால் பற்றற்றுத் தொழில் புரியும் புருஷனே பெருநிலையைப் பெறுகிறான். 19***

*ஓயாது ஹிருதயம் அடித்துக்கொண்டிருப்பதால் உடல் வாழ்க்கை நன்கு நடைபெறுகிறது. ஆனால் ஹிருதயம் அடிப்பதில் மனிதன் கருத்துச் செலுத்துவதில்லை. அது போன்று பல கருமங்களைப் பற்றற்றுச் செய்யவேண்டும். பற்று நீங்குமளவு வேலைகளுக்கிடையில் விச்ராந்தி தானே*

உண்டாகிறது. ஆத்ம சொரூபத்தை அறிதலும் அத்தகைய மனதுக்கு எளிதாகிறது. வேலை செய்யாது விச்ராந்தி பெறமுடியாது. விச்ராந்தி என்பது மனவமைதி.

*உலகம், ஈசுவரன் இந்த இரண்டையும் ஒன்றுபடுத்துவது எப்படி? அதோ தச்சன் மனைவியைப் பார். அவள் எத்தனை காரியங்களில் கருத்தாயிருக்கிறாள்! உரலில் இருக்கும் அவலை ஒருகையால் கிளறிவிட்டுக்கொண்டு, மற்றொரு கையால் குழந்தையை அணைத்துப் பால் கொடுத்துக் கொண்டிருக்கிறாள். அதே சமயத்தில் அவல் வாங்க வந்த ஒருவனிடம் பேரம் பேசிக்கொண்டுமிருக்கிறாள். இப்படி அவள் பல வேலைகளைக் கவனித்தாலும் அவளுடைய மனது மட்டும், உலக்கையானது கையில் விழுந்து காயமுண்டாக்காமலிருக்க வேண்டும் என்ற ஒரு விஷயத்தில் நிலைத்திருக்கிறது. உலக வாழ்க்கையில் நீ இரு. ஆனால் ஈசுவரனை மட்டும் எப்போதும் நினைத்துக்கொண்டிரு. ஒருபோதும் அவனுடைய மார்க்கத்தை விட்டுப் புறம்பே போகாதே.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*அப்படி ஏராளமாக வியவகாரங்களைச் செய்து கொண்டிருப்பதற்கு இடையில் விச்ராந்தியடைந்தவர்கள் உண்டா? உண்டு. அவர்கள் யார் எனின்:—*

**कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादयः ।**
**लोकसंग्रहमेवापि संपश्यन्कर्तुमर्हसि ॥ २०**

கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜனகாதய: ।
லோகஸங்க்ரஹமேவாபி ஸம்பச்யன்கர்த்துமர்ஹஸி ॥ 20

जनकादयः ஜனகாதய: *ஜனகர் முதலியவர்கள்* कर्मणा एव हि கர்மணு ஏவ ஹி *கர்மத்தாலேயே* संसिद्धिं ஸம்ஸித்திம் *முக்தியை* आस्थिताः ஆஸ்திதா: *அடைந்தார்கள்* लोकसंग्रहं एव अपि லோகஸங்க்ரஹம் ஏவ அபி *உலகத்தை நல்வழியில் நடாத்துதலையாவது* संपश्यन् ஸம்பச்யன் *நன்கு மனதில் வைத்துக்கொண்டு* कर्तुम् கர்த்தும் *கர்மத்தைச்செய்ய* अर्हसि அர்ஹஸி *கடமைப்பட்டிருக்கிறாய்.*

***ஜனகர் முதலியவர்கள் கர்மத்தாலேயே முக்தியடைந்தார்கள். உலகத்தை நல்வழியில் நடாத்துதலை நன்குணர்ந்தாவது கர்மஞ் செய்யக் கடப்பாடுடைத்திரு.*** 20

*ஜனகர், அசுவபதி முதலிய ராஜரிஷிகள் ராஜ்யபரி பாலனம் என்ற நானாவிதமான கர்மங்களில் பிரவேசித்திருந் தனர். நன்கு அரசாளுதலோடு அவர்களுடைய வாழ்க்கை நின்றுவிடவில்லை. கர்ம மார்க்கத்தைக் கைப்பற்றியே அவர்கள் முக்தியடைந்தார்கள்.*

*ஞானியர்கள் கர்மத்தில் ஈடுபடுதலில் இன்னொரு சிறப்பு உண்டு. குருடன் குருடனுக்கு வழிகாட்ட முடியாது. கண்ணுடையவன்தான் கண்ணில்லாதவனைக் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு போகமுடியும். ஞானக்கண் ணுடையவர்கள் கர்மத்தைத் தவறுதலின்றிச் செய்ய வல்ல வர் ஆவர். கர்மம் செய்தே முன்னேற்றம் அடைந்தாக வேண்டிய உலக மக்களை நல்வழியில் நடாத்துதல் அவர் களுக்கு இயலும். ஆக, அப்பொறுப்பை எண்ணிப் பார்க்கு மிடத்தும் கர்மம் செய்வது அவசியமாகிறது.*

*உலகத்தைப்பற்றிய பொறுப்பு அனுவசியமாக வரு வித்துக்கொள்ளப்பட்டதல்லவா? அப்படியன்று. ஏனெ னில் :—*

**यद्यदाचरति श्रेष्ठस्तत्तदेवेतरो जनः ।**
**स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते ॥ २१**

யத்யதாசரதி ச்ரேஷ்டஸ்தத்ததேவேதரோ ஜனः ।
ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்ததனுவர்ததே ॥ 21

श्रेष्ठः ச்ரேஷ்ட: *மேலோன்* यत्‌यत्‌ யத் யத் *எதை எதை* आचरति ஆசரதி *செய்கிறானோ* इतरः जनः இதர: ஜன: *மற்ற மனிதன்* तत्‌ तत्‌ एव தத் தத் ஏவ *அதனையே (செய்கிறான்)* सः ஸ: *அம்மேலோன்* यत्‌ प्रमाणं யத் ப்ரமாணம் *எதைப் பிரமாணமாக* कुरुते குருதே *செய்கிறானோ* तत्‌ தத் *அதை* लोकः லோக: *உலகம்* अनुवर्तते அனுவர்த்ததே *அனுசரிக்*

***மேலோன் எதனைச் செய்கிறானோ மற்ற மனி தர் அதையே பின்பற்றுகின்றனர். அவன் எதைப் பிரமாணமாக்குகிறானோ அதையே உலகம் அனு சரிக்கிறது.*** 21

மனிதன் ஈசுவரானுக்கிரகத்தால் மேலோன் ஆகிறான். அப்படி மேன்மையுற்றவர்களிடத்து ஈசுவர விபூதியும் விசேஷமாக மிளிர்கிறது. உலகுக்கு மாதிரி மனிதனாக அல்லது வழிகாட்டும் ஆசாரியனாக அமைந்திருப்பவனும் அவனே. அவன் செய்வதையே முன்மாதிரியாக உலகம் ஏற்றுக்கொள்கிறது. ஆதலால் அவனுடைய பொறுப்பு மிகப் பெரியது. உடலைவிட்டு உறுப்பு ஒன்றை எப்படிப் பிரிக்க முடியாதோ அப்படியே சமூகத்தை விட்டு மனிதன் பிரிந்திருப்பவன் அல்லன். அவனுடைய எண்ணமும் செயலும் நேர்முகமாக அல்லது மறைமுகமாகச் சமூகத்தைப் பாதிக்க வல்லவைகளாம். ஆதலால்தான் அவனுடைய செயல்களெல்லாம் நல்வழியில் செல்பவர்களுக்கு எடுத்துக் காட்டாக அமைந்தாக வேண்டும். ஈசுவரன் கொடுத்துள்ள பொறுப்பைப் புறக்கணிப்பது ஈசுவரனையே புறக்கணிப்பதற்கு ஒப்பாகும்.

ஒருவன் வியாதியால் அவஸ்தைப்படும் தன் குழந்தையைக் கையில் எடுத்துக்கொண்டு ஒரு ஸாதுவிடம் மருந்துகேட்கச் சென்றான் ஸாது அவனை மறுநாள் வரும்படி சொன்னார். அப்படியே அவன் மறுநாள் வந்தபொழுது "உன் குழந்தைக்குச் சர்க்கரைப் பண்டங்களைக் கொடுக்காதே; சீக்கிரத்தில் குணமுண்டாகும்" என்றார் ஸாது. அதைக்கேட்ட மனிதன் "ஸ்வாமி! இதைத் தாங்கள் நேற்றே சொல்லியிருக்கலாமே" என்றான். "அப்பா! நான் சொல்லியிருக்கலாம். ஆனால் நேற்று என் முன்னால் சர்க்கரை வைக்கப்பட்டிருந்தது. அதை உன் குழந்தை பார்த்து, இந்த ஸாது அயோக்கியன் போலிருக்கிறது. சர்க்கரையைப் பிறர் சாப்பிடக்கூடாதென்று சொல்லுகிறான். தான்மட்டும் சாப்பிடுகிறான் என்று நினைக்கக்கூடும்" என்று ஸாது சொன்னார். உலகுக்கு வழிகாட்டுபவர்களது பொறுப்பு மிக முக்கியமானது.

— ஸ்ரீராமகிருஷ்ணர் உபதேசம்

பிறகு ஈசுவரனே எத்தகைய பொறுப்புடையவர் என்று வினவுமிடத்து அவர் விடையளிக்கிறார்:—

**न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किञ्चन ।**
**नानवाप्तमवाप्तव्यं वर्त एव च कर्मणि ॥ २२**

ந மே பார்த்தாஸ்தி கர்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சன ।
நானவாப்தமவாப்தவ்யம் வர்த ஏவ ச கர்மணி ॥ 22

पार्थ பார்த்த *பார்த்தா* मे மே *எனக்கு* कर्तव्यं கர்தவ்யம் *செய்ய வேண்டியது* न अस्ति ந அஸ்தி *ஒன்றுமில்லை* त्रिषु लोकेषु த்ரிஷு லோகேஷு *மூன்று லோகங்களிலும்* अनवाप्तं அனவாப்தம் *இன்னும் அடையாததாய்* अवाप्तव्यं அவாப்தவ்யம் *இனி அடையப்போவது* किंचन கிஞ்சன *சிறிதேனும்* न ந *இல்லை* च ச *ஆயினும்* कर्मणि एव கர்மணி ஏவ *கர்மத்திலேயே* वर्ते வர்தே *பிரவிருத்திக்கிறேன்.*

***பார்த்தா, மூவுலகிலும் எனக்குக் கடமையொன்றும் கிடையாது. அடையாத ஒன்றை இனி அடைந்தாகவேண்டும் என்பதும் இல்லவே இல்லை. ஆயினும் நான் கர்மம் செய்துகொண்டே இருக்கிறேன்.*** ***22***

*ஈசுவரனை எண்ணிப் பார்க்குமிடத்து அண்டம் முழுதும் நீக்கமற அவன் நிறைந்திருந்து அனைத்தையும் இயக்குகிறான். இன்னும் அவதாரமாக வடிவம் தாங்கியவனாக அவனைப் பார்க்குமிடத்து மகாபாரத யுத்தத்தில் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு வருகிற லாபம் நஷ்டம் ஒன்றுமில்லை. எனினும் மற்றவர்களை யெல்லாம்விட அதிகமாகக் கருமத்தில் ஈடுபட்டவர் கிருஷ்ண பகவான் ஒருவரேயாம். ஏன் அவர் அப்படிச் செய்யவேண்டுமென்று கேட்குமிடத்து :—*

**यदि ह्यहं न वर्तेयं जातु कर्मण्यतन्द्रितः ।**
**मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः ॥ २३**

யதி ஹ்யஹம் ந வர்தேயம் ஜாது கர்மண்யதந்த்ரித: ।
மம வர்த்மானுவர்தந்தே மனுஷ்யா: பார்த்த ஸர்வச: ॥ 23

पार्थ பார்த்த *பார்த்தா* अहं அஹம் *நான்* जातु ஜாது *எப்பொழுதும்* अतन्द्रितः அதந்த்ரித: *சோர்வின்றி* कर्मणि கர்மணி *கர்மத்தில்* न वर्तेयं यदि ந வர்த்தேயம் யதி *ஈடுபடாவிடில்* हि ஹி *நிச்சயமாக* मनुष्याः மனுஷ்யா: *மனிதர்கள்* मम மம *என்னுடைய* वर्त्म வர்த்ம *வழியை* सर्वशः ஸர்வச: *யாண்டும்* अनुवर्तन्ते அனுவர்தந்தே *பின்பற்றுவார்கள்.*

***அர்ஜுனா, நான் அயர்வின்றி எப்பொழுதும் கர்மத்தில் ஈடுபடாவிடில், மனிதர்கள் என் வழியையே யாண்டும் பின்பற்றுவர். 23***

*நன்மை கடைப்பிடித்தல், ஓயாது உழைத்தல் முதலியவைகளில் பெரியாரைப் பின்பற்றுதல் உலகில் மிகக் குறைவு. சோம்பித்திரிதல், முயற்சி குன்றுதல் முதலியன மேலோரிடத்தும் இருக்கின்றனவென்று சாக்குச்சொல்லி வாழாதொழிதல் பெரும்பாலோரது போக்காகும். நரோத்தமனாகிய பகவான் வீணே செயலற்றிருப்பதில்லை. மற்றவர்க்கு எடுத்துக்காட்டாக அவர் ஓயாது உழைக்கிறார். பின்பு வினை வழுவுவதில் வரும் கேடு யாது? பகவான் பதில் அளிக்கிறார் :—*

**उत्सीदेयुरिमे लोका न कुर्यां कर्म चेदहम् ।**
**सङ्करस्य च कर्ता स्यामुपहन्यामिमाः प्रजाः ॥ २४**

உத்ஸீதேயுரிமே லோகா ந குர்யாம் கர்ம சேதஹம் ।
ஸங்கரஸ்ய ச கர்த்தா ஸ்யாமுபஹன்யாமிமா: ப்ரஜா: ॥ 24

अहं அஹம் *நான்* कर्म கர்ம *கர்மத்தை* न कुर्यां चेत् ந குர்யாம் சேத் *செய்யாவிட்டால்* इमे लोकाः இமே லோகா: *இந்த உலகங்கள்* उत्सीदेयुः உத்ஸீதேயு: *அழிந்துபோம்* संकरस्य च ஸங்கரஸ்ய ச *ஜாதிக் கலப்புக்கும்* कर्ता கர்த்தா *கர்த்தாவாய்* स्यां ஸ்யாம் *ஆவேன்* इमाः प्रजाः இமா: ப்ரஜா: *இந்த பிரஜைகளை* उपहन्याम् உபஹன்யாம் *கெடுத்தவன் ஆவேன்.*

***நான் கர்மம் செய்யாவிட்டால் இவ்வுலகங்கள் அழிந்துபோம். ஜாதிக் கலப்புக்கும் நானே கர்த்தாவாய் மக்களைக் கெடுத்தவன் ஆவேன். 24***

*விதைகளுக்கிடையில் அதிகம் வித்தியாசம் தெரிவதில்லை. அப்படி வித்தியாசம் தெரிந்தாலும் அவைகளின் வலிவும் வனப்பும் முளைத்து வளர்தல் என்னும் வினையால் தான் தெரியும்.*

*தொழில் புரியாதிருப்பது உயிர் வாழாதிருப்பதற்கு ஒப்பாகிறது. செயல் புரியாதவர்களுக்கும் செத்தவர்களுக்கும் இடையில் உள்ள வித்தியாசம் மிகக் குறைவு. செத்தவர்களுடைய உடல் கண்ணுக்குத் தென்படுவதில்லை. செயல் புரியாதிருப்பவர்களுடைய உடல் கண்ணுக்குத் தென்படுகிறது. செயல் ஒன்றும் அதனிடத்திருந்து உதிப்பதில்லை. உலகுக்குச் சுமையாக அது வளர்கிறது. உடலை வளர்ப்பது கீழோர் மேலோர் ஆகிய எல்லார்க்கும் பொதுவானது. வெறுமனே உடலை வளர்த்துக்கொண்டிருப்பவர்களுக்கிடையில் தக்கார் தகவிலர் என்னும் வேற்றுமையைக் காணமுடியாது. அது ஜாதிக்கலப்புக்கு ஒப்பாகும். முறையாகத் தத்தம் தொழில் புரியும்பொழுது அதன்மூலம் அவரவர் மேன்மை மிளிரும். ஒவ்வொருவனுடைய வகுப்பு அல்லது ஜாதியும் அவன் புரியும் கர்மத்தினின்று விளங்கிவிடும். ஆக, வினையாற்றுவிடின் வாழ்வு குன்றுகிறது; மேன்மையும் மறைகிறது. பகவான் பிரகிருதிகளைச் செயலில் தூண்டாவிடில் இத்தகைய சீர்கேடுகள் வந்தமையும்.*

*வினையாற்றுதலில் விவேகிகளுக்கும் மற்றவர்களுக்கும் உள்ள வேற்றுமை வருமாறு :—*

**सक्ताः कर्मण्यविद्वांसो यथा कुर्वन्ति भारत ।**
**कुर्याद्विद्वांस्तथासक्तश्चिकीर्षुर्लोकसंग्रहम् ॥ २५**

ஸக்தா: கர்மண்யவித்வாம்ஸோ யதா குர்வந்தி பாரத ।
குர்யாத்வித்வாம்ஸ்ததாஸக்தஸ்சிகீர்ஷுர்லோகஸங்க்ரஹம் ॥25

भारत பாரத *பாரதா* कर्मणि கர்மணி *கர்மத்தில்* सक्ताः ஸக்தா: *பற்றுள்ளவர்களாய்* अविद्वांसः அவித்வாம்ஸ: *அஞ்ஞானிகள்* यथा யதா *எப்படி* कुर्वन्ति குர்வந்தி *கர்மம் செய்கிறார்களோ* तथा ததா *அப்படி* विद्वान् வித்வான் *ஞானி* असक्तः அஸக்த: *பற்று இல்லாதவனாய்* लोकसंग्रहं லோகஸங்க்ரஹம் *உலகத்தை நல்வழியில் நடாத்த* चिकीर्षुः சிகீர்ஷு: *விருப்பமுள்ளவனாய்* कुर्यात् குர்யாத் *கர்மம் செய்யவேண்டும்.*

***பார்த்தா, பற்றுள்ளவராய்ப் பாமரர் கர்மம் செய்வதுபோல் பண்டிதர் பற்றில்லாராய்ப் பாரினில் பெருநெறி புகட்டுதற் பொருட்டுக் கர்மம் செய்ய வேண்டும். 25***

*வினைப்பயனை அனுபவிக்கவேண்டும் என்ற ஆசை யானது பாமரரைக் கர்மத்தில் தூண்டுகிறது. ஞானிக்கோ ஆசையொன்றும் கிடையாது. ஆயினும் அவன் ஓயாது வினையாற்றவேண்டும். சான்றோரைப் பின்பற்றி உலகம் நல்வழிக்கு வருதல் அதனால் வினையும் சீரிய பயனாகும்.*

*சொல்லாலும் செயலாலும் ஞானி எதைச் செய்ய லாகாது எனின் :—*

**न बुद्धिभेदं जनयेदज्ञानां कर्मसङ्गिनाम् ।**
**जोषयेत्सर्वकर्माणि विद्वान्युक्तः समाचरन् ॥ २६**

ந புத்திபேதம் ஜனயேதக்ஞானாம் கர்மஸங்கினாம் ।
ஜோஷயேத்ஸர்வகர்மாணி வித்வான்யுக்த: ஸமாசரன் ॥ 26

विद्वान् வித்வான் *ஞானியானவன்* अज्ञानां அக்ஞானாம் *அக்ஞானிகளான* कर्मसङ्गिनां கர்மஸங்கினாம் *கர்மத்தில் பற்றுள்ளவர்களுக்கு* बुद्धिभेदं புத்திபேதம் *புத்திபேதத்தை* न जनयेत् ந ஜனயேத் *உண்டு பண்ணலாகாது* युक्तः யுக்த: *யோகமுயற்சியுடையவன்* सर्वकर्माणि ஸர்வகர்மாணி *எல்லாக் கர்மங்களையும்* समाचरन् ஸமாசரன் *நன்கு ஆற்றிக்கொண்டு* जोषयेत् ஜோஷயேத் (*மற்றவர்களையும்*) *ஈடுபடுத்தல் வேண்டும்.*

***ஞானியானவன் கர்மப்பற்றுள்ள அக்ஞானிகளிடத்து மனக்கலக்கத்தையுண்டுபண்ணலாகாது. எல்லாக் கர்மங்களிலும் தானே ஈடுபட்டுக்கொண்டு மற்றவர்களையும் ஈடுபடுத்தவேண்டும். 26***

*தேகம் எடுத்தவன் ஒருவன் கர்மம் செய்யாது வீணில் வாழ்வதைவிட மேலானது பற்றுடன் கர்மம் செய்வது. பெரும்பான்மையோர் பற்றுடையவராயிருத்தலால் தான் கர்மம் செய்ய வல்லவராயிருக்கின்றனர். பற்றற்றுக்*

*கர்மம் செய்தற்கு மிக மிகச் சிலருக்கே சாத்தியப்படும். பற்றற்றுக் கர்மம் செய்பவர் இகம் பரம் ஆகிய இரண்டையும் பெறுகின்றனர். எல்லாரும் இகபரமிரண்டையும் பெறுக, என்னும் நல்லெண்ணத்துடன் அனைவர்க்கும் நிஷ்காமிய கர்மம் புகட்டினால் அதனால் நன்மையைவிடக் கேடே அதிகம் விளையும். நிஷ்காமிய கருமத்தின் தத்துவத்தை அறியாமையே புத்திபேதமாகும். பண்டிதரைப் போன்று பாசாங்கு செய்து கர்மத்தைக் கடைப்பிடியாது அவர்கள் இம்மையையே இழந்துவிடுவார்கள். இம்மை ஒன்றையாவது பெறுதற்கு அவர்கள் பற்றுடன் கர்மம் செய்துகொண்டிருக்கட்டும். ஞானியர்கள் தீவிரமாகக் கர்மத்தில் ஈடுபடுதல் மற்றவர்களுக்கு இகலோகத்துக்கு முன்மாதிரியாக வந்தமைதற் பொருட்டேயாம்.*

*பாமரர் பூணும் பற்றுக்குப் பிறப்பிடம் யாது எனின் :—*

**प्रकृतेः क्रियमाणानि गुणैः कर्माणि सर्वशः ।**
**अहङ्कारविमूढात्मा कर्ताहमिति मन्यते ॥ २७**

ப்ரக்ருதே: க்ரியமாணானி குணை: கர்மாணி ஸர்வச: |
அஹங்காரவிமூடாத்மா கர்த்தாஹமிதி மன்யதே || 27

प्रकृतेः ப்ரக்ருதே: *பிரகிருதியின்* गुणैः குணை: *குணங்களால்* सर्वशः ஸர்வச: *யாண்டும்* कर्माणि கர்மாணி *கர்மங்கள்* क्रियमाणानि க்ரியமாணானி *செய்யப்படுகின்றன* अहंकारविमूढात्मा அஹங்காரவிமூடாத்மா *அகங்காரத்தால் மோஹமடைந்தவன்* अहं कर्ता इति அஹம் கர்த்தா இதி *நான் கர்த்தா என்று* मन्यते மன்யதே *நினைக்கிறான்.*

***பிரகிருதியின் குணங்களால் யாண்டும் கர்மங்கள் செய்யப்படுகின்றன. அகங்காரத்தால் மோகமடைந்தவன் 'நான் கர்த்தா' என்று நினைக்கிறான்.***

*சத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களால் ஆகிய பிரகிருதி அல்லது இயற்கை கர்ம சொரூபமானது. பிரகிருதி வேறு, ஆத்மா வேறு என்று அறியாதவன் அக்ஞானி.*

*தனக்குப் புறம்பான ஒன்றைத் தன் மயமாகக் கருதுதல் அகங்காரம். பிரகிருதியை ஆத்மாவென்று அகங்கரித்து, கர்மம் செய்யாத ஆத்மா கர்மம் செய்வதாக எண்ணி அவன் மயங்குகிறான். எதிரில் நிற்கும் ஒரு ரயில் வண்டித் தொடரைப் பார்த்துக்கொண்டிருப்பவன், அவ்வண்டி ஓட ஆரம்பித்ததும் தானிருக்கும் ரயில் வண்டியே ஓடுவதாக மயங்குதலை ஒத்தது இது.*

*பின்பு ஞானியோவெனின்,*

**तत्त्ववित्तु महाबाहो गुणकर्मविभागयोः ।**
**गुणा गुणेषु वर्तन्त इति मत्वा न सज्जते ॥ २८**

தத்த்வவித்து மஹாபாஹோ குணகர்மவிபாகயோ: ।
குணா குணேஷு வர்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே ॥ 28

तु து *ஆனால்* महाबाहो மஹாபாஹோ *பெருந்தோளுடையவனே* गुणकर्मविभागयोः குணகர்மவிபாகயோ: *குணம் கர்மம் இவைகளின் பிரிவுகளைப்பற்றிய* तत्त्ववित् தத்த்வவித் *தத்துவ ஞானி* गुणाः குணா: *இந்திரியங்களாகிய குணங்கள்* गुणेषु குணேஷு *விஷயங்களாகிய குணங்களில்* वर्तन्ते வர்தந்தே *பிரவர்த்திக்கின்றன* इति मत्वा இதி மத்வா *இங்ஙனம் அறிந்து* न सज्जते ந ஸஜ்ஜதே *பற்றுவைப்பதில்லை.*

***ஆனால், பெருந்தோளுடையாய், குணகர்மத்தின் தத்துவ ஞானியோ, குணங்கள் குணங்களில் பிரவர்த்திக்கின்றனவென்று அறிந்து பற்றுவைப்பதில்லை.*** ***28***

*மேகம் மேகத்தின்மீது மோதினாலும் ஆகாசம் செயலற்றிருக்கிறது. இந்திரியங்களாக வடிவெடுத்துள்ள குணங்கள் விஷயங்களாக வடிவெடுத்துள்ள குணங்களில் பிரவர்த்திக்கின்றன. சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். ஒளி வீசுவது அக்னி தத்துவத்தின் குணம். ஒளியைக் காணும் பாங்கு கண்ணில் அமைந்திருக்கிறது. அக்னியின் குணம் கண்ணாக வடிவெடுத்து அக்னியின் குணமாகிய வெளியுலக ஒளியை நுகர்கிறது. பஞ்சேந்திரியங்களுக்கும் இக்*

கோட்பாடு பொருந்தும். ஆத்ம சைதன்யத்தை இவை வந்து தொடுவதில்லை. இவ்வுண்மையை அனுபவத்தில் கண்டுகொண்டவனுக்குப் பற்று உண்டாவதில்லை.

இனி,

प्रकृतेर्गुणसंमूढाः सज्जन्ते गुणकर्मसु ।
तानकृत्स्नविदो मन्दान्कृत्स्नविन्न विचालयेत् ॥ २९

ப்ரக்ருதேர்குணஸம்மூடா: ஸஜ்ஜந்தே குணகர்மஸு ।
தானக்ருத்ஸ்னவிதோ மந்தான்க்ருத்ஸ்னவின்ன விசாலயேத் ॥

प्रकृतेः ப்ரக்ருதே: *பிரகிருதியினுடைய* गुणसंमूढाः குணஸம்மூடா: *குணங்களால் மோஹமடைந்தவர்கள்* गुणकर्मसु குணகர்மஸு *குணங்களின் தொழில்களில்* सज्जन्ते ஸஜ்ஜந்தே *பற்றுவைக்கிறார்களோ* तान् தான் *அந்த* अकृत्स्नविदः அக்ருத்ஸ்னவித: *நல்லறிவில்லாத* मन्दान् மந்தான் *மந்தபுத்தியினரை* कृत्स्नवित् க்ருத்ஸ்னவித் *தெளிந்த அறிவுடையோர்* न विचालयेत् ந விசாலயேத் *கலங்கும்படிச் செய்யலாகாது.*

***பிரகிருதியின் குணங்களால் மோகமடைந்து குணங்களின் தொழில்களில் பற்று வைக்கின்ற மந்தபுத்தியினரைத் தெளிந்த அறிவுடையோர் கலங்கும்படி செய்யலாகாது.*** 29

*பிஞ்சு ஒன்றில் மேல் தோலுக்கும் சுளைக்கும் வித்தியாசம் தெரிவதில்லை. முதிர்ந்து பழுத்த பின்பே அது விளங்குகிறது. அங்ஙனம் அறிவு தெளிவடையாதவர்களுக்குப் பிரகிருதியின் இயல்பு கர்மம் என்பதும், ஆத்மாவுக்குக் கர்மம் இல்லையென்பதும் தெரியாது. ஆதலால் அவர்கள் கர்ம பந்தத்தில் இருந்தே ஆகவேண்டும். ஆத்ம அநாத்ம விசாரம் வெறும் குழப்பத்தைத்தான் அவர்கள் உள்ளத்தில் உண்டுபண்ணும். அவர்கள் பற்றுடன் கர்மம் செய்துகொண்டிருப்பதில் தோஷமில்லை. தம் இயல்புக்கு ஏற்றபடி கர்மம் செய்யும்படி அவர்களை உற்சாகப்படுத்தி விட்டுவிட்டு, அறிவுடையோர் செய்யவேண்டியது யாது எனில்:—*

मयि सर्वाणि कर्माणि संन्यस्याध्यात्मचेतसा ।
निराशीर्निर्ममो भूत्वा युध्यस्व विगतज्वरः ॥ ३०

மயி ஸர்வாணி கர்மாணி ஸம்ன்யஸ்யாத்யாத்மசேதஸா ।
நிராசீர்நிர்மமோ பூத்வா யுத்யஸ்வ விகதஜ்வர: ॥ 30

सर्वाणि कर्माणि ஸர்வாணி கர்மாணி *எல்லாக் கர்மங்களையும்* मयि மயி *என்னிடத்து* संन्यस्य ஸம்ன்யஸ்ய *அர்ப்பித்து* अध्यात्मचेतसा அத்யாத்மசேதஸா *ஆத்மாவில் வைத்த சித்தத்தோடு* निराशीः நிராசீ: *ஆசையில்லாதவனாய்* निर्ममः भूत्वा நிர்மம: பூத்வா *மமகாரம் இல்லாதவனாய்* विगतज्वरः விகதஜ்வர: *மனக்கொதிப்பற்றவனாய்* युध्यस्व யுத்யஸ்வ *யுத்தம் செய்.*

***கர்மமெல்லாம் எனக்கர்ப்பித்து, சித்தத்தைச் சைதன்யத்தில் வைத்து, ஆசையையும் மமகாரத்தையும் அகற்றி, மனக்கொதிப்பின்றிப் போர்புரிவாயாக. 30***

*எல்லாம் ஈசன் செயல், எல்லாம் அவன் உடைமை, நான் அவனது தொண்டன் என்கின்ற எண்ணம் வரும்பொழுது மனக்கொதிப்பு போய்விடுகிறது; கடமையே நன்கு ஆற்றப்படு*

*இரண்டு வேளைகளில் ஈசுவரன் புன்னகை புரிகின்றான். முதலாவது, ஒருவன் கொடும்நோயால் வருந்திச் சாகும் தறுவாயில் இருக்கும்போது, வைத்தியன் உள்ளே வந்து நோயாளியின் தாயைப் பார்த்து, "பயப்பட வேண்டாம்; உன் மகனுடைய உயிரைக் காப்பாற்ற நான் இருக்கிறேன்" என்று சொல்லும்போது. இரண்டாவது இரண்டு சகோதரர்கள் தங்களுடைய நிலத்தைப் பங்கிட்டுக்கொள்ள அளவுகோலைக் கையில் எடுத்துக்கொண்டு கோடு கிழித்து, "அந்தப் பக்கம் உன்னுடையது, இந்தப்பக்கம் என்னுடையது" என்று சொல்லும்போது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*அனைத்துக்கும் தலைவன் ஈசுவரன் என்பதை அறியாவிட்டாலும் :—*

ये मे मतमिदं नित्यमनुतिष्ठन्ति मानवाः ।
श्रद्धावन्तोऽनसूयन्तो मुच्यन्ते तेऽपि कर्मभिः ॥ ३१

யே மே மதமிதம் நித்யமனுதிஷ்டந்தி மானவா: ।
ச்ரத்தாவந்தோऽனஸூயந்தோ முச்யந்தே தேऽபி கர்மபி: ॥ 31

ये मानवाः யே மானவா: *எம்மனிதர்கள்* मे மே *என்னுடைய* इदं मतं இதம் மதம் *இந்த மதத்தை* श्रद्धावन्तः ச்ரத்தாவந்த: *சிரத்தையுடையவர்களாய்* अनसूयन्तः அனஸூயந்த: *பொறாமைப்படாது* नित्यं நித்யம் *எப்பொழுதும்* अनुतिष्ठन्ति அனுதிஷ்டந்தி *பின்பற்றுகிறார்களோ* ते अपि தே அபி *அவர்கள்கூட* कर्मभिः கர்மபி: *கர்மங்களிலிருந்து* मुच्यन्ते முச்யந்தே *விடுபடுகிறார்கள்.*

**எனது இக்கோட்பாட்டை எம்மனிதர் சிரத்தையுடனும், பொறாமைப்படாதும் பின்பற்றுகிறார்களோ அவர்கள்கூட வினையினின்று விடுபடுகிறார்கள். 31**

ஓர் ஊருக்குச் செல்லுதற்கு வழி இன்னதென்று ஒரு மனிதன் யூகத்தாலும் தெரிந்துகொள்ள இயலாதவனாயிருக்கிறான். ஆனால் அவன் அவ்வூருக்குச் செல்பவர்கள் சொல்லில் விசுவாசம் வைத்து அவர்களைப் பின்பற்றுகிறான். அப்படிச் செய்வதால் அவன் அவ்வூரை நிச்சயமாகப் போய்ச் சேருவான். ஆத்ம சாதன சம்பந்தமான விஷயங்கள் ஒரு மந்த அதிகாரிக்கு நன்கு விளங்காவிட்டாலும் சான்றோர் சொல்லும் நெறியில் சிரத்தை வைத்துத் தானும் அவ்வழியில் செல்லுவானாகில் வினைத் தளைகளிலிருந்து அவன் விடுபடுவான்.

சிரத்தை என்பது சிறந்ததோர் மனநிலை. எடுத்துக் கொண்ட கருமத்திலேயே கண்ணாயிருத்தல், பணிந்திருத்தல், எல்லார்க்கும் வணக்கம் காட்டுதல், விசுவாசம் பூணுதல் இவை யாவும் சிரத்தையில் அடங்குகின்றன. குருவை வணங்குதல் அவரிடத்து சிரத்தை காட்டுவதாகும். பகவத்கீதையினிடத்துச் சிரத்தைகொள்ளுதல் என்பது அதில் அறிவுக்கு எட்டுகிற பகுதிகளைப் பாராட்டுதலும், எட்டாத பகுதிகள்கூட தனக்கு நன்மை பயப்பனவென்று விசுவாசம் வைத்தலுமாம். சிரத்தையோடு வறியோர்க்கு தானம்

கொடுத்தல்வேண்டும். கொடுக்கிற பொருளை அம்மனிதர் ஏற்றுக் கொள்ளவேண்டுமென்றும், அப்பொருள் அவர்களுக்குப் பயன்பட வேண்டுமென்றும் அடக்க ஒடுக்கத்தோடு வழங்கவேண்டுமென்பது அதன் பொருள்.

தன்னால் அடைய முடியாத நல்லது ஒன்றை மற்றவர்கள் அடைந்தால் அதைக் கண்டு சகியாத மன நிலைக்குப் பொறாமை என்று பெயர். ஒரு மனிதனுடைய மேன்மைகளையெல்லாம் பொறாமையானது தேய்த்துவிடுகிறது. மற்றவர்களது முன்னேற்றத்தைக் கண்டு மகிழ்கின்றவளவு ஒரு மனிதன் தானே முன்னேற்றமடைகிறான்.

தப்பு வழியையும் மூடபக்தியையும்பற்றிப் பலர் பேசிக் கொண்டு வித்யா கர்வமடைகின்றனர். ஆனால் உண்மையான பக்தன் தனக்கு ஈசுவரன் எப்போதும் உதவிபுரிவதைக் காண்பான். அவன் சிலகாலம் வரையில் தப்பு வழியில் போயிருந்தாலும் பாதகமில்லை. அவனுக்கு என்ன வேண்டுமென்பதை ஈசுவரன் அறிகிறான். கடைசியில் அவ்வீசுவரன் பக்தனுடைய இஷ்டபூர்த்தியையும் செய்து வைக்கிறான்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

சிரத்தையோடு நன்னெறியைப் பின்பற்றுதலுக்குப் பதிலாக :—

**ये त्वेतदभ्यसूयन्तो नानुतिष्ठन्ति मे मतम् ।**
**सर्वज्ञानविमूढांस्तान्विद्धि नष्टानचेतसः ॥ ३२**

யே த்வேததப்யஸூயந்தோ நானுதிஷ்டந்தி மே மதம் ।
ஸர்வஞானவிமூடான்ஸ்தான்வித்தி நஷ்டானசேதஸ: ॥ 32

तु து *மற்று* ये யே *எவர்* मे மே *என்னுடைய* एतत् मतं ஏதத் மதம் *இந்தக் கொள்கையை* अभ्यसूयन्तः அப்யஸூயந்த: *இகழ்பவர்களாய்* न अनुतिष्ठन्ति ந அனுதிஷ்டந்தி *அனுசரித்து நடக்கிறதில்லையோ* सर्वज्ञानविमूढान् ஸர்வஞானவிமூடான் *எல்லாஞானத்திலும் மூடர்களாய்* अचेतसः அசேதஸ: *விவேகமில்லாதவர்களாய்* तान् தான் *அவர்களை* नष्टान् நஷ்டான் *கெட்டுப்போனவர்களென்று* विद्धि வித்தி *அறிக.*

***எனது இக்கொள்கையை மற்று யார் இகழ்ந்து பின்பற்றுவதில்லையோ, எவ்வித ஞான***

**மும் விவேகமும் இல்லாத அம்மூடர்களைக் கெட்டுப் போனவர்களென்றறிக. 32**

தீயில் கையை வைத்தால் அது சுடும். அதே அக்னியை வேறுவிதத்தில் பயன்படுத்தினால் அதைக் கொண்டு சமைக்கலாம். இதைத் தெரிந்துகொள்ளாதவர் கள் நஷ்டத்தையடைகிறார்கள். அங்ஙனமே ஆத்ம தத்து வங்களை அறிந்து அவைகளுக்கேற்றபடி வாழ்க்கை வாழாத வர்கள் நஷ்டத்தையும் கேட்டையும் அடைகிறார்கள்.

*பூனையானது தனது குட்டிகளைப் பற்களால் பிடிக்கும்போது அக்குட்டிகளுக்குத் தீங்குண்டாவதில்லை. ஆனால் அது ஓர் எலியை அப்படிப் பிடிக்குமானால் அவ்வெலி உடனே இறக்கின்றது. இதைப் போலவே மாயையானது மற்றவர்களை வருத்துவதாயினும் பக்தனை ஒருபோதும் துன்புறுத்தாது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஞானிகள் அக்ஞானிகள் ஆகிய எல்லோரையும் பற்றிய ஒரு பேருண்மை யாதெனின் :—

**सदृशं चेष्टते स्वस्याः प्रकृतेर्ज्ञानवानपि ।**
**प्रकृतिं यान्ति भूतानि निग्रहः किं करिष्यति ॥ ३३**

ஸத்ருசம் சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருதேர்ஞானவானபி |
ப்ரக்ருதிம் யாந்தி பூதானி நிக்ரஹ: கிம் கரிஷ்யதி || 33

ज्ञानवान् अपि ஞானவான் அபி *ஞானியுங்கூட* स्वस्याः ஸ்வஸ்யா: *தன்னுடைய* प्रकृतेः ப்ரக்ருதே: *பிரகிருதிக்கு* सदृशं ஸத்ருசம் *தக்கபடி* चेष्टते சேஷ்டதே *நடக்கிறான்* भूतानि பூதானி *உயிர்கள்* प्रकृतिं ப்ரக்ருதிம் *இயல்பை* यान्ति யாந்தி *பின்பற்றுகின்றன* निग्रहः நிக்ரஹ: *தடையானது* किं கிம் *என்ன* करिष्यति கரிஷ்யதி *செய்யும்.*

**ஞானியும் தன் இயல்புக்கு ஏற்றபடி நடக்கிறான். உயிர்கள் அவ்வவைகளின் இயல்பைப் பின் பற்றுகின்றன. தடைசெய்வதால் ஆவதென்ன? 33**

செடிகள் தத்தம் இயல்புக்கேற்றாற்போன்று ஓங்கி அல்லது படர்ந்து வளர்கின்றன. அவைகள் இனிப்பதும் கசப்பதும் அவ்வவைகளின் இயல்பின்படியே. அவை

களின் இயல்பைத் தடுப்பது வளர்ச்சியையே தடுப்பதற்கு ஒப்பாகும். இயல்புக்கு ஒப்ப ஓங்கி வளரும்படி செய்தலே சாலச்சிறந்த முறையாகும். மனிதர்களுக்கிடையில் ஞானியர்களே வெவ்வேறு இயல்புடையவர்களாயிருக்கின்றனர். ஒருவர் அந்தர்முக திருஷ்டியிலேயே ஆழ்ந்து செல்லுகிறார். மற்றொருவர் பகிர்முக திருஷ்டியில் அனைத்தையும் கடவுள் மயமாக இந்திரியங்களைக்கொண்டு பொருள்படுத்துகிறார். ஒருவர் பக்தியில் பிரியமுடையவர். வேறு ஒருவர் விசாரத்தில் விச்ராந்தி பெறுகிறார். இப்படி இயல்புகளுக்கேற்றபடி நெறிகள் மாறினும் அடையும் குறி ஒன்றே. ஆக, அவரவர் இயல்பின்படியே ஞானியர்கள் முன்னேற்றமடைந்து வருகின்றனர்.

பிரகிருதியில் கட்டுண்டு கிடக்கும் பாமரர் பல ஜன்மாந்தரங்களின் வாசனையின் வசப்பட்டவர்கள். அவர்கள் இயல்பைத் தடுப்பது வளர்ச்சியைக் கெடுப்பதற்கு ஒப்பாகும். அப்படி வளர்ச்சியை வீணாக்காது இயல்புக்கு ஏற்றபடியே வினையாற்றி முன்னேற்றமடைய அவர்களைத் தூண்டவேண்டும்.

கடவுளைப்பற்றிச் சிந்திக்கத் தம்மால் சிறிதும் இயலவில்லையென்று ஒரு அறிஞர் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் முறையிட்டார். தாம் முன்னேற்ற மடைதற்கு உபாயம் ஏதாவது உண்டா என்று கேட்டார். அம்மனிதருக்கு விருப்பமானவர் யார் என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் கேட்டார். தாம் யாரையும் நேசிப்பதில்லை யென்றும் ஓர் ஆட்டுக்குட்டியை மட்டும் அன்புடன் பாராட்டி வந்ததாக அவர் விடை கொடுத்தார். அப்படியானால் அந்த ஆட்டுக்குட்டியைக் கடவுளாகக் கருதி அதன்மீது தியானத்தைச் செலுத்தும்படி ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொன்னார். அங்ஙனம் செய்த அம்மனிதர் முன்னேற்றமடைந்தார்.

ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வோர் இயல்பு உண்டு. அதைப் பின்பற்றுவதே அவனுடைய போக்கு என்றால் சுயப்பிரயத்தனம் அல்லது புருஷாகாரத்துக்கு இடமில்லை. இன்னதைச் செய், இன்னதைச் செய்யாதே என்று சாஸ்திரம் ஆணையிடுதலிலும் அர்த்தமில்லை. இத்தகைய ஆட்

சேபம் ஈண்டு இயல்பாக எழலாம். அதற்கு விடை வரு

इन्द्रियस्येन्द्रियस्यार्थे रागद्वेषौ व्यवस्थितौ ।
तयोर्न वशमागच्छेत्तौ ह्यस्य परिपन्थिनौ ॥ ३४

இந்த்ரியஸ்யேந்த்ரியஸ்யார்த்தே ராகத்வேஷௌ
வ்யவஸ்திதௌ ।
தயோர்ந வசமாகச்சேத்தௌ ஹ்யஸ்ய பரிபந்தினௌ ॥ 34

इन्द्रियस्य இந்த்ரியஸ்ய *இந்திரியங்களுக்கு* इन्द्रियस्य अर्थे இந்த்ரியஸ்ய அர்த்தே *விஷயங்களில்* रागद्वेषौ ராகத்வேஷௌ *விருப்பு வெறுப்புக்கள்* व्यवस्थितौ வ்யவஸ்திதௌ *அமைந்திருக்கின்றன* तयोः தயோ: *அவைகளினுடைய* वशं வசம் *வசத்தை* न आगच्छेत् ந ஆகச்சேத் *அடையக்கூடாது* तौ தௌ *அவ்விரண்டும்* हि ஹி *நிச்சயமாக* अस्य அஸ்ய *அவனுடைய* परिपन्थिनौ பரிபந்தினௌ *சத்துருக்கள்.*

***இந்திரியங்களுக்கு விஷயங்களில் விருப்பு வெறுப்பு உண்டு. அவைகளுக்கு வசப்படலாகாது. அவைகளே அவனுக்குச் சத்துருக்கள். 34***

*இத்தனைவித இயற்கை பேதம் உயிர்வகைகளுக்கிடையில் இருப்பதற்கு மூல காரணம் ஈண்டு இயம்பப்படுகிறது. மூன்று குணங்களின் தாரதம்மியத்தால் பிரபஞ்சம் முழுதும் உண்டாயின. அதேபோன்று ஐந்து இந்திரியங்கள் விஷயங்களில் செல்லுதற்கிடையில் உண்டாகும் விருப்பு வெறுப்பின் தாரதம்மியத்தால் உயிர்களின் இயல்புகள் கணக்கற்றனவாய்ப் பிரிகின்றன. மல்லிகைப் பூவின் மணத்தை உதாரணமாக எடுத்துக்கொள்வோம். அதை வெறுப்பவர் பலர். அதன் பெருமித மணத்தால் ஒருவர்க்குத் தலைவலி. சிற்றின்ப நுகர்ச்சியை ஞாபகமூட்டுவதால் இன்னொருவர்க்கு அது பிடிப்பதில்லை. சிறுமிகள் அதன் பொருட்டுக் காசை விரயம் செய்வதால் வேறு ஒருவருக்கு அதன்மீது வெறுப்பு. இனி அதை விரும்புபவர்க்கிடையில், நறுமணத்தை முன்னிட்டும், இன்ப நுகர்ச்சியை முன்னிட்*

டும், அம்பிகையின் ஆராதனையை முன்னிட்டும் அதைப் போற்றுவார் பலர் உளர். இப்படியே எல்லா இந்திரியங்கள் வாயிலாகவும் எல்லாப் பொருள்களிடத்தும் வெவ்வேறு படித்தரங்களில் விருப்பு வெறுப்பு வளர்க்கப்படுகின்றன. விருப்பு வெறுப்பின்
னது

[illegible]இனி சுயப் பிரயத்தனத்துக்கும் சாஸ்திரத்துக்கும் [illegible]டம் [illegible]ந்த விருப்பு வெறுப்பை மாற்றி யமைப்பதில்தான் [illegible] விருப்பு வெறுப்பையும் ஒரு மனிதன் ஒரு நொடிப்பொழுதில் அடியோடு மாற்றிவிட முடியாது. விஷயங்களில் கொண்டுள்ள விருப்பு வெறுப்பை மீட்டெடுத்து சர்வேசுவரனிடம் வைத்துவிட்டால் அவைகள் சத்துரு ஆகமாட்டா.

*காமம் குரோதம் முதலிய சத்துருக்களை எப்போது நாசம் செய்ய முடியும் என்று கேட்டதற்கு பரமஹம்ஸர் சொன்னதாவது:- இவ்வித ஆசாபாசங்கள் உலகத்தையும் உலக விஷயங்களையும் பற்றியனவாக இருக்கிறவரையில் சத்துருக்களாகத்தான் இருக்கும். அவைகள் ஈசுவர விஷயமாக மாறினால் மனிதனுக்கு நற்றுணைகளாகும் ஏனெனில் அவைகள் அவனை ஈசுவரனிடம் அழைத்துச் செல்கின்றன. உலகவிஷயங்களிலுள்ள ஆசையைக் கடவுளிடத்து ஆசையாக மாற்றவேண்டும். மக்களிடத்து உண்டாகும் கோபத்தை, கடவுள் தரிசனம் கிட்டவில்லையேயென்று அவரிடம் காட்டவேண்டும். இம்மாதிரி எல்லா ஆசாபாசங்களையும் மாற்றுக. அவைகளை அழிக்க முடியாது, ஆனால் நல்வழியில் திருப்ப முடியும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

விருப்பு வெறுப்பு வாழ்க்கையை இன்னும் எப்படிக் குலைத்துவிடுகிறது எனின் :—

**श्रेयान् स्वधर्मो विगुणः परधर्मात्स्वनुष्ठितात् ।**
**स्वधर्मे निधनं श्रेयः परधर्मो भयावहः ॥ ३५**

ச்ரேயான் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத்ஸ்வனுஷ்டிதாத் ।
ஸ்வதர்மே நிதனம் ச்ரேய: பரதர்மோ பயாவஹ: ॥ 35

स्वनुष्ठितात् ஸ்வனுஷ்டிதாத் *நன்கு அனுஷ்டிக்கப்பட்ட* परधर्मात् பரதர்மாத் *பிறருடைய தர்மத்தைக்காட்டிலும்* विगुणः விகுண: *குண*

*மில்லாத* स्वधर्मः ஸ்வதர்ம: *தன்னுடைய தர்மமானது* श्रेयान् ச்ரேயான் *சிறந்தது* स्वधर्मे ஸ்வதர்மே *தன்னுடைய தர்மத்தில்* निधनं நிதனம் *மரணம்* श्रेयः ச்ரேய: *சிறந்தது* परधर्मः பரதர்ம: *பிறருடைய தர்மமானது* भयावहः பயாவஹ: *பயத்தோடு கூடியது.*

***நன்கியற்றப்படும் பரதர்மத்தைவிட குண மில்லாத் தன் தர்மம் மேலானது. ஸ்வதர்மத்தில் இறப்பது மேல். பிறர் தர்மம் பயம் தருவதாம். 35***

*இன்பம் தருவதில் விருப்பும், துன்பம் தருவதில் வெறுப்பும் கொள்ளுதல் மனிதனது இயல்பு. அர்ஜுனன் இளமையிலிருந்து பெற்ற பயிற்சி போர்புரிதற்கானது. அப்பயிற்சியில் அவன் பெருமகிழ்ச்சியும் பெறலானுன். அதுவே அவனது ஸ்வதர்மம். இப்பொழுது அறப்போர் தொடுத்தவிடத்து அது பாட்டனுரையும் ஆசாரியரையும் கொல்லுதல் என்ற துன்பத்தைத் தருமாதலால் ஸ்வதர்மத் தில் அவன் வெறுப்புக்கொள்ளலானுன். காட்டில் போய் நிஷ்டைபுரிதல், ஐயமேற்றுண்ணல் என்ற பரதர்மத்தில் பிரவேசிக்கப் பார்த்தான். வெறுப்பினுல் அல்லது அச்சத் தினுல் ஒருவன் தன் தொழிலை விட்டுவிடுவானுனுல் அதனுல் ஒரு நன்மையும் வந்தமையாது. இனிய வாழ்க்கை கிட்டு மென்ற விருப்பத்தால் பரதர்மத்தில் பிரவேசிப்பதும் ஒண் ணுது. மனதைப் பக்குவப்படுத்துதலே வாழ்க்கையின் உத்தேசம். விருப்பு வெறுப்பின் வசப்பட்டுத் தொழிலை மாற்றுவது பண்படாத மனதின் போக்காகும். உயிரையே வழங்கவேண்டிவரினும் தன் கடமையினின்று பிறழாதிருத் தல் பக்குவமான வீரனது செயலாகும். பயப்படுவது சாதற்கு ஒப்பாகிறது. பயந்து தொழிலை மாற்றுபவன் ஓயாது செத்துக்கொண்டே இருக்கிறுன். அத்தகையவன் அழியாப் பெருநிலையைப் பெறுதல் எங்ஙனம்?*

*பன்னிரண்டு வருஷங்களாக மழை பெய்யாது போனுலும் பரம் பரைக் குடியானவன் நிலத்தைச் சாகுபடி செய்யாமல் தவிர்ந்திருப்ப தில்லை. ஆனுல் கிருஷித்தொழிலைப் புதிதாகக் கைக்கொண்ட வாணி பனை அதைரியப்படுத்துதற்கு ஓரே வருஷம் மழையில்லாவிட்டாலும்*

*போதும். ஆயுளளவும் பக்தி செய்தும் ஈசுவர தரிசனத்தைப் பெரு திருந்தாலும், உண்மையான பக்தி உள்ளவனுக்கு ஒருபோதும் மனத் தளர்ச்சி உண்டாவதில்லை.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*கேடுகளுக்கெல்லாம் மூலகாரணம் யாது என்று அத்-2 சுலோ-62 லும், அத்-3 சுலோ-34 லும் பகவான் குறிப்பாகச் சொல்லியிருந்தும் வெளிப்படையாக விடை வாங்கவேண்டுமென்ற எண்ணத்துடன் அர்ஜுனன் இக் கேள்வியைக் கேட்கிறான் :—*

**अर्जुन उवाच**

**अथ केन प्रयुक्तोऽयं पापं चरति पूरुषः ।**
**अनिच्छन्नपि वार्ष्णेय बलादिव नियोजितः ३६**

அர்ஜுன உவாச

அத கேன ப்ரயுக்தோऽயம் பாபம் சரதி பூருஷ: ।
அனிச்சன்னபி வார்ஷ்ணேய பலாதிவ நியோஜித: ॥ 36

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது*

वार्ष्णेय வார்ஷ்ணேய *விருஷ்ணி வம்சத்துதித்தவரே* अथ அத *அப்படியானால்* अयं पूरुषः அயம் பூருஷ: *இந்தப் புருஷன்* अनिच्छन् अपि அனிச்சன் அபி *இச்சையில்லாதிருந்தாலும்* बलात् பலாத் *பலாத்காரமாய்* नियोजितः इव நியோஜித: இவ *ஏவப்பட்டவனைப்போல* केन கேன *எதனால்* प्रयुक्तः ப்ரயுக்த: *தூண்டப்பட்டவனாக* पापं பாபம் *பாபத்தை* चरति சரதி *செய்கிறான்.*

அர்ஜுனன் சொன்னது

***விருஷ்ணி குலத்தோய், இப்புருஷன் இச்சிக் காதிருந்தும் பலவந்தமாய் ஏவப்பட்டவனாய் எதனால் தள்ளுண்டு பாபம் செய்கிறான்?*** **36**

**श्री भगवानुवाच**

**काम एष क्रोध एष रजोगुणसमुद्भवः ।**
**महाशनो महापाप्मा विद्धयेनमिह वैरिणम् ॥ ३७**

ஸ்ரீ பகவானுவாச

காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுணஸமுத்பவ: |
மஹாசனோ மஹாபாப்மா வித்த்யேனமிஹ வைரிணம் || 37

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

रजोगुणसमुद्भव: ரஜோகுணஸமுத்பவ: *ரஜோகுணத்துதித்த* महाशन: மஹாசன: *எதையும் உண்ணவல்லது* महापाप्मा மஹாபாப்மா *பெரும் பாபமுடையது* एष: ஏஷ: *இது* काम: காம: *காமம்* एष: ஏஷ: *இது* क्रोध: க்ரோத: *குரோதம்* इह இஹ *இங்கே* एनं ஏனம் *இதை* वैरिणं வைரிணம் *விரோதி என்று* विद्धि வித்தி *அறிக.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***ரஜோ குணத்துதித்த இக்காமம்தான், இக்குரோதம்தான், எதையும் உண்ணவல்லது; பெரும் பாபமுடையது; ஈண்டு இதை எதிரியென அறிக 37***

*உலகத்தவர் எல்லார்க்கும் பரமசத்துருவாயிருப்பது ஆசை. இந்த ஆசைக்குத் தடையுண்டாகும்பொழுது அது கோபமாக வடிவெடுக்கிறது. ஆகையால் காமத்தையும் குரோதத்தையும் ஒன்றாகப் பகவான் பகருகிறார். இது ரஜோகுணத்திலிருந்து உதிக்கிறது. மேலும் ரஜோகுண வளர்ச்சியையும் உண்டு பண்ணுகிறது. நெருப்புக்கு எவ்வளவு விறகு கொடுத்தாலும் அதைப் பொசுக்கிவிட்டு மேலும் விறகை வேண்டி நிற்கிறது. அங்ஙனமே காமத்துக்கு விஷயங்களை ஊட்ட ஊட்ட அது உண்டு வளர்கிறது. விஷயம் என்னும் உணவை வேண்டியவாறு அது உண்ணவல்லது. ஆசை பெருகப் பெருக பாவமும் பெருகுகிறது. மனிதனுக்குவரும் கேடுகளெல்லாம் ஆசையிலிருந்து வந்தவைகள். ஆகையால் இது இவ்வுலக வாழ்க்கையில் எல்லார்க்கும் பகையாம்.*

*காமத்தையும், காசு ஆசையையும் பூர்த்தி செய்து கொள்வதில் அநேகந்தரம் அவமான மடைந்தாலும், உலகப்பற்றுள்ளவர்கள் அவைகளை வெறுத்து ஈசுவரனைத் தியானம் செய்யச் சக்தியற்றவர்களாக இருக்கின்றனர்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஆசை எப்போக்கில் பகை என்பது இனி விளக்கப் படுகிறது :—

**धूमेनाव्रियते वह्निर्यथादर्शो मलेन च ।**
**यथोल्बेनावृतो गर्भस्तथा तेनेदमावृतम् ॥ ३८**

தூமேனாவ்ரியதே வஹ்னிர்யதாதர்சோ மலேன ச ।
யதோல்பேனாவ்ருதோ கர்பஸ்ததா தேனேதமாவ்ருதம் ॥ 38

यथा யதா *எப்படி* वह्निः வஹ்னி: *நெருப்பானது* धूमेन தூமேன *புகையினால்* आव्रियते ஆவ்ரியதே *மூடப்பட்டிருக்கிறதோ* आदर्शः ஆதர்ச: *கண்ணாடி* मलेन च மலேன ச *அழுக்கினாலும்* यथा யதா *எப்படி* गर्भः கர்ப: *கர்ப்பத்தில் இருக்கும் சிசுவானது* उल्बेन உல்பேன *கர்ப்பப்பையினால்* आवृतः ஆவ்ருத: *மூடப்பட்டிருக்கிறதோ* तथा ததா *அப்படியே* तेन தேன *அதனால் (ஆசையினால்)* इदं இதம் *இந்த ஞானம்* आवृतं ஆவ்ருதம் *மூடப்பட்டிருக்கிறது.*

***நெருப்பானது புகையினாலும், கண்ணாடி அழுக்கினாலும், சிசு கருப்பையினாலும் மூடப்பட்டிருப்பது போன்று ஞானம் ஆசையினால் மூடப்பட்டிருக்கிறது. 38***

*ஆசை என்னும் திரையினால் ஆத்மசொரூபம் மூடப் பெற்றிருக்கிறது. மூன்று குணங்களை ஆதாரமாகக்கொண்டு ஆசையும் மூன்று படித்தரங்களில் இருக்கிறது. தீயைப் புகைமூடிக்கொண்டிருப்பது முதல் உபமானமாக எடுத்துக் கொள்ளப்படுகிறது. சத்வ குணத்தோடு கூடிய ஆசை இத்தகையது. புகைந்துகொண்டிருக்கிற தீயின்மீது சிறிது காற்று அடித்தால் அது பற்றி எரிகிறது ; புகையும் மறைகிறது. தீயின் சுடர் நன்கு தென்படும். அங்ஙனம் சிறிது விவேகம் என்னும் காற்று வீசினால் சாத்வீக ஆசை என்னும் புகை பறந்தோடிவிடும். ஆத்ம சொரூபம் உள்ளபடி ஒளிரும். இரண்டாவது ஆசை ரஜோ குணமயமானது. கண்ணாடியின்மீது படிந்துள்ள அழுக்கைப் போக்குதற்குக் கொஞ்சம் சிரமம் எடுத்துக்கொள்ளவேண்டும். ரஜோ*

குணத்தோடு கூடிய ஆசையைச் சிறிது முயற்சி செய்தே போக்கமுடியும். மூன்றாவது ஆசையோ தமோகுணமயமானது. காலக்கிரமத்தில்தான் தக்க வாழ்க்கையின்மூலம் சிசுவைக்கருப்பையிலிருந்து விடுவிக்கமுடியும். அங்ஙனம் தமோகுணத்தில் உதித்த ஆசையைப் போக்கக் காலமும் ஆயத்தமும் தேவை.

*மேகம் சூரியனை மறைப்பதுபோல் மாயையும் ஈசுவரனை மறைக்கிறது. மேகம் அப்பால் அகன்று போனதும் சூரியன் காணப்படுகிறது. அதுபோல மாயை அகன்றதும் ஈசுவரன் கண்ணுக்குத் தென்படுவார்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

மேல் சுலோகத்தில் இயம்பப்பட்ட ஆசையானது இன்னும் தெளிவுபட இங்கு விளக்கப்படுகிறது :—

**आवृतं ज्ञानमेतेन ज्ञानिनो नित्यवैरिणा ।**
**कामरूपेण कौन्तेय दुष्पूरेणानलेन च ॥ ३९**

ஆவ்ருதம் ஞானமேதேன ஞானினோ நித்யவைரிணா ।
காமரூபேண கௌந்தேய துஷ்பூரேணானலேன ச ॥ 39

कौन्तेय கௌந்தேய *குந்தியின் மைந்தா* ज्ञानिनः ஞானின: *ஞானியின்* नित्यवैरिणा நித்யவைரிணா *நித்திய சத்துருவினால்* कामरूपेण च காமரூபேண ச *வேண்டிய வடிவெடுப்பதும்* दुष्पूरेण துஷ்பூரேண *நிரப்ப முடியாததும்* अनलेन அனலேன *போதும் எனாததுமாகிய* एतेन ஏதேன *இந்த ஆசையினால்* ज्ञानं ஞானம் *ஞானமானது* आवृतं ஆவ்ருதம் *மூடப்பட்டிருக்கிறது.*

***குந்தியின் மைந்தா, ஞானியின் நித்திய சத்துருவும், காமவடிவெடுத்ததும், நிரப்பமுடியாததும், போதும் எனாததும் ஆகிய இந்த ஆசையினால் ஞானம் மூடப்பட்டிருக்கிறது.*** **39**

உலகம் முழுதுக்குமே பகையாகிய ஆசையை அக்ஞானியானவன் அதன் வசப்பட்டிருக்கும்பொழுது நலம் செய்யும் நண்பனாக நினைக்கிறான். பிறகு அதனால் விளையும் கேடு வலுத்துவிடும்பொழுதே அதை ஹிதசத்துரு என்று

அறிகிறான். ஆயினும் இந்த அனுபவம் நிலைத்திருப்பதில்லை. திரும்பவும் அவன் ஆசையின் வசப்படுகிறான். ஆனால் ஞானியின் நிலை அத்தகையதன்று. ஆசையின் வசப்பட்டிருக்கும் பொழுதும் வசப்படாதிருக்கும்பொழுதும் அதைப் பகையென்று அவன் நன்கு உணர்கிறான். ஆகையால் ஆசை அவனுக்கு மட்டும் நித்திய சத்துருவாகிறது. என்றென்றும் அது அவனுக்கு எதிரி. ஆசையின் வடிவு ஒன்று இரண்டு அல்ல. விரும்பியவாறெல்லாம் அது வடிவெடுக்கிறது. ஓரே நாளில் ஒரு மனிதனது ஆசை எத்தனை விதமான வடிவெடுக்கிறது என்பதை அவன் கொஞ்சம் ஆராய்ந்து பார்த்தால் தெரியும். ஆதலால் அது காமரூபம் என்று அழைக்கப்படுகிறது. ஓட்டைச் சட்டியில் நீர் வார்த்து நிரப்ப முடியாது. ஆசையையும் நிரப்பி ஒரு முடிவுக்குக் கொண்டுவர முடியாது. விஷய சுகத்தைப் போதும் என்று ஆசையானது ஒரு பொழுதும் பகர்வதில்லை.

தராசுத் தட்டில் எந்தப்பக்கம் கனமாக இருக்கிறதோ அந்தப் பக்கத்தில் தராசு முள்ளானது மையத்தைவிட்டுச் சாய்ந்து விலகியிருக்கும். அதுபோல, பெண்ணாசை பொன்னாசைகளால் கனத்தமனம் ஈசுவரனைவிட்டு விலகித் தடுமாறுகிறது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஆசைக்கு இருப்பிடம் எது? விடை வருகிறது :—

**इन्द्रियाणि मनोबुद्धिरस्याधिष्ठानमुच्यते ।**
**एतैर्विमोहयत्येष ज्ञानमावृत्य देहिनम् ॥ ४०**

இந்த்ரியாணி மனோபுத்திரஸ்யாதிஷ்டானமுச்யதே ।
ஏதைர்விமோஹயத்யேஷ ஞானமாவ்ருத்ய தேஹினம் ॥ 40

**इन्द्रियाणि** இந்த்ரியாணி *இந்திரியங்கள்* **मनः** மன: *மனது* **बुद्धिः** புத்தி: *புத்தி* **अस्य** அஸ்ய *அதனுடைய* **अधिष्ठानं** அதிஷ்டானம் *இருப்பிடம்* **उच्यते** உச்யதே *சொல்லப்படுகிறது* **एषः** ஏஷ: *இது* **एतैः** ஏதை: *இவைகளால்* **ज्ञानं** ஞானம் *ஞானத்தை* **आवृत्य** ஆவ்ருத்ய *மறைத்து* **देहिनं** தேஹினம் *தேஹியை* **विमोहयति** விமோஹயதி *மயக்குகிறது.*

***இந்திரியங்களும், மனதும், புத்தியும் அதற்கு இருப்பிடம் என்று சொல்லப்படுகிறது. இவைகளால் இது ஞானத்தை மறைத்து மனிதனை மயக்குகிறது. 40***

*எதிரி எந்தக் கோட்டையில் எப்படி வாசம் செய்கிறான் என்பது தெரிந்தால் பின்பு அவனை எதிர்ப்பது எளிதாகிறது. ஆசை என்னும் எதிரி மனிதனது மனக்கோட்டையில் வசிக்கிறான். இந்திரியங்களையும், மனதையும், புத்தியையும் தன் கருவிகளாக அவன் கைப்பற்றிக் கொண்டான். கண்கொண்டு பார்ப்பதெல்லாம் காமத்தை வளர்ப்பதற்கேயாம். அப்படியே காது முதலிய மற்ற இந்திரியங்களும் காமத்தைப் பெருக்குதற்கே தொழில் புரிகின்றன. மனதில் உதிக்கும் உணர்ச்சிகளும், சங்கற்பங்களும் காமத்துக்கு உட்பட்டவைகளாகவே எப்பொழுதும் இருந்து வருகின்றன. அறிவைக்கொண்டு தீர்மானிப்பது, நூல்கள் பல கற்பது, வாதாடுவது இவை யாவும் ஆசையை நிறைவேற்றிக் கொள்ளுதற்கென்றே நடைபெறுகின்றன. ஆத்மாவுக்கு அடிமை பூண அமைந்துள்ள கருவி கரணங்கள் ஆசைக்கு அடிமைகளாயின; அந்தோ!*

*தீயவழியில் செல்லும் மனம் நீசர்கள் மத்தியில் வசிக்கும் பிராம்மணனையும் பெரிய நகரத்தின் அசுசியான இடத்தில் குடியிருக்கும் கனவானையும் ஒக்கும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*இந்த ஆசையை வெல்லுதல் எங்ஙனம்? விடை வருகிறது :—*

तस्मात्त्वमिन्द्रियाण्यादौ नियम्य भरतर्षभ ।
पाप्मानं प्रजहि ह्येनं ज्ञानविज्ञाननाशनम् ॥ ४१

தஸ்மாத்த்வமிந்த்ரியாண்யாதௌ நியம்ய பரதர்ஷப ।
பாப்மானம் ப்ரஜஹி ஹ்யேனம் ஞானவிக்ஞானநாசனம் ॥ 41

भरतर्षभ பரதர்ஷப *பரதவம்சத்துக் காளையே* तस्मात् தஸ்மாத் *ஆகையினால்* त्वं த்வம் *நீ* आदौ ஆதௌ *ஆதியில்* इन्द्रियाणि இந்த்ரியாணி

*இந்திரியங்களை* नियम्य நியம்ய *அடக்கி* ज्ञानविज्ञान नाशनं ஞான விக்ஞான நாசனம் *ஞானத்தையும் விக்ஞானத்தையும் அழிக்கின்ற* पाप्मानं பாப்மானம் *பாபவடிவமுள்ள* एनं ஏனம் *இந்த ஆசையை* हि ஹி *உறுதிப்பாடுடன்* प्रजहि ப்ரஜஹி *ஒழித்துவிடு.*

***ஆகையால் பரதவீரா, நீ முதலில் இந்திரியங்களை அடக்கி ஞான விக்ஞானத்தை அழிக்கின்ற பாபவடிவாம் ஆசையை அறவே ஒழித்துவிடு. 41***

*முதலில் இந்திரியங்களை முற்றுகைபோட்டுக் கைப்பற்றிக் கொண்டால் எதிரியாகிய ஆசைக்கு இருப்பிடம் இல்லாது போய்விடுகிறது. அதில் எதிரியின் பலம் பெரிதும் குறைகிறது. பிறகு அதை வெல்லுதலும் எளிதாகிறது. நூலறிவு ஞானமென்றும், சுவானுபவம் விக்ஞானமென்றும் சொல்லப்படுகின்றன. இவ்விரண்டையும் தொலைக்கவல்லது ஆசை. ஆத்ம சொரூபத்தை மறைப்பதால் அது பாப சொரூபமானது. அத்தகைய ஆசையை வெல்லுதல் வீரனது செயல்.*

*மாயை என்பது என்ன? ஆத்மீய அபிவிருத்திக்கு இடையூறாக இருக்கும் காமந்தான் மாயை.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*சாதகன் எந்த இடத்தில் நின்றுகொண்டு ஆசையை முற்றுகை போடவேண்டும் என்ற கேள்வி எழலாம். அதற்கு விடை வருகிறது:—*

**इन्द्रियाणि पराण्याहुरिन्द्रियेभ्यः परं मनः ।**
**मनसस्तु परा बुद्धिर्यो बुद्धेः परतस्तु सः ॥ ४२**

இந்த்ரியாணி பராண்யாஹு"ரிந்த்ரியேப்ய: பரம் மன: ।
மனஸஸ்து பரா புத்திர்யோ புத்தே: பரதஸ்து ஸ: ॥ 42

इन्द्रियाणि இந்த்ரியாணி *இந்திரியங்கள்* पराणि பராணி *மேலானவைகள் என்று* आहु: ஆஹு": *சொல்லுகிறார்கள்* इन्द्रियेभ्य: இந்த்ரியேப்ய: *இந்திரியங்களைவிட* मन: மன: *மனது* परं பரம் *மேலானது* मनस: மனஸ: *மனதைவிட* तु து *ஆனால்* बुद्धि: புத்தி: *புத்தியானது* परा பரா

*உயர்ந்தது* து *ஆனால்* ய: ய: *யார்* புத்தே: புத்தே: *புத்தியைவிட* பரத: பரத: *மேலானவன்* ஸ: ஸ: *அவன்* (*ஆத்மா*).

***இந்திரியங்கள் (உடலினும்) பெரிதாம். அவற்றிலும் மேலானது மனம். புத்தியோ மனதை விடப் பெரியது. புத்திக்கும் உயர்ந்தது ஆத்மா. 42***

சூக்ஷ்மமானது ஸ்தூலத்தைவிட யாண்டும் மேலானது. பொறிகள் ஐந்து உள. பருத்த உடலைவிடப் பொறிகள் மேலானவை. ஏனென்றால் உடலைவிடப் பரந்த போக்கில் அவைகள் செயல் புரிகின்றன. மனதோ இந்திரியங்களைவிட சூக்ஷ்மமானது. அது உணரவல்லது; சங்கல்ப விகல்ப மயமானது. மனதின் தொழிலாகிய எண்ணத்துக்கு இந்திரியங்களின் தொழிலைவிட அதிக வியாபகமுண்டு. அதனினும் பெரியது புத்தி. மனது சந்தேகம் கொள்கிறது; மற்று புத்தி நிச்சயிக்கிறது. ஆகையால் அது பெரியது. புத்திக்கும் எட்டாதது தேகி அல்லது ஆத்மா. ஆசையானது மனம் முதலியவைகளைப் பற்றிக்கொண்டு ஆத்மசொரூபத்தை மறைக்கிறது.

பழம் ஒன்றின் மேல்தோலினின்று உட்பகுதிக்குப் போகப் போக அது சுளையின் பாங்கைப் பெறுகிறது. அங்ஙனம் தேகம், இந்திரியங்கள், மனது, புத்தி ஆகியவைகளுள் பிந்தியவைகள் படிப்படியாக உள்ளிருக்கும் ஆத்ம சொரூபத்தை அடைகின்றன. நுண்ணியதைப் பற்றுமளவு ஆசையும் வலிவுபெறுகிறது. இந்திரியங்களைப் பற்றும் ஆசை உடல் ஆசையை வெல்லுகிறது. தூசி நிறைந்த காற்றும் மின்னலும் இடியும் வரும்போது உடலில் தூசி படிவதில் தடையில்லை. ஆனால் கண்ணும் காதும் காப்பாற்றப்படுகின்றன. நோய்வாய்ப்பட்ட கண்ணை நீக்காவிட்டால் அது மூளையைத் தாக்கி, பைத்தியம் பிடிக்கும் என்ற பிரச்னை ஏற்படுகிறது. அப்பொழுது நல்ல மனதின் பொருட்டுக் கண் என்ற இந்திரியம் பறிகொடுக்கப்படுகிறது. அறிவை வளர்ப்பதற்காக எத்தனை துன்பங்களையும் சகிக்கும்

தன்மை மனிதனுக்கு வருகிறது. ஏனென்றால் புத்தியைப் பற்றியுள்ள ஆசையானது மனதைப் பற்றியுள்ள ஆசையை அகற்றுகிறது. இங்ஙனம் நுண்ணியதற்குப் போகப் போக ஆசையின் வலிவும் அதிகரித்துக்கொண்டே போகிறது.

புத்தியைப் பற்றியுள்ள ஆசையும் பந்தத்துக்கு ஏதுவானது. அதை அறுப்பது எங்ஙனம்? விடை வருகிறது:-

**एवं बुद्धेः परं बुद्ध्वा संस्तभ्यात्मानमात्मना ।**
**जहि शत्रुं महाबाहो कामरूपं दुरासदम् ॥ ४३**

ஏவம் புத்தே: பரம் புத்த்வா ஸம்ஸ்தப்யாத்மானமாத்மனு ।
ஜஹி சத்ரும் மஹாபாஹோ காமரூபம் துராஸதம் ॥ 43

महाबाहो மஹாபாஹோ *பெரிய கைகளையுடையவனே* एवं ஏவம் *இங்ஙனம்* बुद्धेः புத்தே: *புத்தியைவிட* परं பரம் *மேலான ஆத்மாவை* बुद्ध्वा புத்த்வா *அறிந்து* आत्मना ஆத்மனு *ஆத்மாவினுல்* आत्मानं ஆத்மானம் *ஆத்மாவை* संस्तभ्य ஸம்ஸ்தப்ய *அடக்கி* कामरूपं காமரூபம் *காமரூபமான* दुरासदं துராஸதம் *வெல்லுதற்கு அரிய* शत्रुं சத்ரும் *சத்துருவை* जहि ஜஹி *அழித்துவிடு*.

***மகாபாகுவே, இங்ஙனம் புத்தியிலும் மேலான ஆத்மாவால் ஆத்மாவை அடக்கி, வெல்லமுடியாததும் ஆசை வடிவுடையதுமாகிய சத்துருவை அழித்துவிடு.*** **43**

ஆசையானது இந்திரியங்களையும் மனதையும் புத்தியையும் பற்றி நிற்கும்பொழுது ஜீவபோதம் தடிக்கிறது. அதனுல் மனிதனுக்குத் துன்பமே அதிகரிக்கிறது. இந்திரியங்கள், மனது, புத்தி இவை யாவும் பரமாத்மாவைச் சார்ந்து அருள்தாகம் பெருக்கெடுக்கும்பொழுது விஷய ஆசை அடிபடுகிறது; ஜீவபோதம் தேய்கிறது; பரபோதம் வளர்கிறது; பேரானந்தம் ஊற்றெடுக்கிறது.

கண்டுபிடிக்கப்பட்டதும் திருடன் ஓடிப்போய் விடுகிறுன். அதுபோல மாயையின் சுபாவம் இன்னதென்று நீ ஆராய்ந்து கண்டுபிடித்துவிட்டால் அது உன்னிடமிருந்து ஓடிப்போய்விடும்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे कर्मयोगो नाम
तृतीयोऽध्यायः ॥

இதி ஸ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே
கர்மயோகோ நாம த்ருதீயோऽத்யாய: ||

*பிரம்ம வித்தையைப் புகட்டுவதும், யோக சாஸ்திரமானதும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமாக வந்துள்ளதுமாகிய பகவத்கீதை என்னும் உபநிஷத்தின்கண் கர்மயோகம் என்ற மூன்றும் அத்தியாயம்.*

---

# चतुर्थोऽध्यायः

## நான்காம் அத்தியாயம்

### ज्ञानकर्मसंन्यासयोगः

### ஞானகர்மஸந்யாஸ யோகம்

श्री भगवानुवाच

**इमं विवस्वते योगं प्रोक्तवानहमव्ययम् ।**
**विवस्वान्मनवे प्राह मनुरिक्ष्वाकवेऽब्रवीत् ॥ १**

ஸ்ரீ பகவானுவாச

இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவானஹமவ்யயம் ।
விவஸ்வான்மனவே ப்ராஹ மனுரிக்ஷ்வாகவேऽப்ரவீத் ॥ 1

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

अहं அஹம் *நான்* विवस्वते விவஸ்வதே *விவஸ்வானுக்கு* इमं இமம் *இந்த* अव्ययं அவ்யயம் *அழிவில்லாத* योगं யோகம் *யோகத்தை* प्रोक्तवान् ப்ரோக்தவான் *பகர்ந்தேன்* विवस्वान् விவஸ்வான் *விவஸ்வான்* मनवे மனவே *மனுவுக்கு* प्राह ப்ராஹ *மொழிந்தான்* मनुः மனு: *மனு வானவன்* इक्ष्वाकवे இக்ஷ்வாகவே *இக்ஷ்வாகுவுக்கு* अब्रवीत् அப்ரவீத் *உரைத்தான்.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***அழிவற்ற இந்த யோகத்தை நான் விவஸ்வானுக்குப் பகர்ந்தேன். விவஸ்வான் மனுவுக்கு மொழிந்தான். மனு இக்ஷ்வாகுவுக்கு உரைத்தான்.***

*இந்த யோகத்தால் அடையப்படுவது அழிவற்ற வீடுபேறு ஆதலால் அதற்குச் சாதனமாயிருக்கும் யோகமே அழிவற்றது. எனப்படுகிறது. முக்தியடைதற்கு மனிதன்*

எடுத்துக்கொள்ளும் முயற்சி சர்வகாலமும் நிலவுலகில் இருக்கும். அதற்கு ஏதுவாயுள்ள இந்த யோகத்தின் அனுஷ்டானமும் என்றென்றும் நிலைத்திருக்கும். விவஸ்வான் என்பது சூரியனுடைய பெயர். மனு என்பவர் ஸ்மிருதியை இயற்றியவர். அவர் தம் புதல்வனும் சூரிய குலத்து முதல் அரசனுமாகிய இக்ஷ்வாகுவுக்கு அதைப் புகட்டினார். அதை அனுஷ்டிப்பவர்களுக்கு இகபரமிரண்டையும் பெறுதற்கான வலிவு வந்தமைகிறது. உலகத்தைக் காக்கும் பொறுப்புடையவர்களுக்கு அத்தகைய பலம் இன்றியமையாதது.

**एवं परम्पराप्राप्तमिमं राजर्षयो विदुः ।**
**स कालेनेह महता योगो नष्टः परंतप ॥ २**

ஏவம் பரம்பராப்ராப்தமிமம் ராஜர்ஷயோ விதுः ।
ஸ காலேனேஹ மஹதா யோகோ நஷ்டः பரந்தப ॥ 2

परन्तप பரந்தப *எதிரிகளை வாட்டுபவனே* एवं ஏவம் *இவ்விதம்* परम्पराप्राप्तं பரம்பராப்ராப்தம் *பரம்பரையாக வந்த* इमं இமம் *இந்த யோகத்தை* राजर्षयः ராஜர்ஷயः *ராஜரிஷிகள்* विदुः விதுः *அறிந்திருந்தார்கள்* इह இஹ *இவ்வுலகில்* सः योगः ஸः யோகः *அந்த யோகமானது* महता कालेन மஹதா காலேன *நெடுங்காலமாய்விட்டதினால்* नष्टः நஷ்டः *நஷ்டமாய்விட்டது.*

**இவ்வாறு பரம்பரையாக வந்துள்ள இந்த யோகத்தை ராஜரிஷிகள் அறிந்திருந்தார்கள். பரந்தப, காலக்கிரமத்தில் அந்த யோகம் இவ்வுலகில் நஷ்டமாய்விட்டது. 2**

வழிமுறை வழிமுறையாக அரசர்கள் இந்த யோகத்தைக் கடைப்பிடித்து அதன்படி சிறப்படைந்து வந்தார்கள். நாளடைவில் தக்கார் குறைந்து, தகவிலர் மலிந்துவர யோகமும் பழுதுபட்டுப் போயிற்று.

நல்ல மனிதர் இல்லாத காலத்தில் நல்ல திட்டம் எதுவும் தலையெடுக்காது என்பது வெளியாயிற்று. நிழல்

*மனிதனைத் தொடர்ந்து வருவதுபோன்று நல்லாரைத் தொடர்ந்தே நல்ல திட்டம் வருகிறது. அதை பகவான் இங்ஙனம் நிரூபிக்கிறார்:—*

स एवायं मया तेऽद्य योगः प्रोक्तः पुरातनः ।
भक्तोऽसि मे सखा चेति रहस्यं ह्येतदुत्तमम् ॥ ३

ஸ ஏவாயம் மயா தேऽத்ய யோக: ப்ரோக்த: புராதன: ।
பக்தோऽஸி மே ஸகா சேதி ரஹஸ்யம் ஹ்யேதது‌த்தமம் ॥ 3

मे மே *என்னுடைய* भक्तः பக்த: *பக்தனாகவும்* सखा च ஸகா ச *தோழனாகவும்* असि அஸி *இருக்கிறாய்* इति இதி *என* अयं पुरातनः அயம் புராதன: *இந்தப் பழைய* स एव योगः ஸ ஏவ யோக: *அதே யோகமானது* अद्य அத்ய *இன்று* मया மயா *என்னால்* ते தே *உனக்கு* प्रोक्तः ப்ரோக்த: *சொல்லப்பட்டது* हि ஹி *ஏனென்றால்* एतत् ஏதத் *இது* उत्तमं உத்தமம் *மேலானது* रहस्यं ரஹஸ்யம் *ரகஸ்யமானது.*

***என் பக்தனாகவும் தோழனாகவும் இருக்கிறாயாதலால், இப்பழைய அதே யோகமானது இன்று என்னால் உனக்கு இயம்பப்பட்டது. இது மேலான மறையாம்.*** **3**

*இரஹஸ்யம் அல்லது மறை என்பது மற்றவர்களுக்குத் தெரியாது ஒளித்து வைப்பதாம். பலர் சுயநலம் கருதியே அதை வேறு யாருக்கும் தெரியாது மூடி வைக்கின்றனர். மனிதனை மேலோன் ஆக்குகின்ற இந்த யோகமானது அப்படி சுயநலம் கருதி மறைத்து வைக்கப்படுவதன்று. தகுதியில்லார்க்கு இது என்றைக்கும் மறைபொருள். ஏற்கனவே இயம்பியபடி காலாந்தரத்தில் இது மறைதற்குக் காரணம் இதைக் கையாளவல்ல மேன்மக்கள் இல்லாது போய்விடுவதேயாம். "இன்று அதைப் பெறவல்லவனாய் நீ வந்துள்ளாய்; அந்த யோகமும் உன் பொருட்டு வெளிப்படுவதாயிற்று" என்பது பகவானது கருத்து. ஒரு மனிதன் எதற்குத் தகுதியுடையவனாகத் தன்னைச் செய்து*

*கொள்கிருனே அதனை இயற்கை வலியக்கொண்டுவந்து அவனுக்குத் தக்கதருணத்தில் கொடுத்துவிடுகிறது.*

*இங்கு அர்ஜுனனுக்கு இயல்பாக ஒரு சந்தேகம் வருகிறது:—*

**अर्जुन उवाच**

**अपरं भवतो जन्म परं जन्म विवस्वतः ।**
**कथमेतद्विजानीयां त्वमादौ प्रोक्तवानिति ॥ ४**

அர்ஜுன உவாச

அபரம் பவதோ ஜன்ம பரம் ஜன்ம விவஸ்வத: ।
கதமேதத்விஜானீயாம் த்வமாதௌ ப்ரோக்தவானிதி ॥ 4

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது*

भवतः பவத: *உம்முடைய* जन्म ஜன்ம *பிறப்பு* अपरं அபரம் *பிந்தியது* विवस्वतः விவஸ்வத: *விவஸ்வானுடைய* जन्म ஜன்ம *பிறப்பு* परं பரம் *முந்தியது* त्वं த்வம் *தாம்* आदौ ஆதௌ *ஆதியில்* प्रोक्तवान् इति एतत् ப்ரோக்தவான் இதி ஏதத் *பகர்ந்தீர் என்பதை* कथं கதம் *எப்படி* विजानीयाम् விஜானீயாம் *அறிவேன்.*

அர்ஜுனன் சொன்னது

***உமது பிறப்புப்பிந்தியது; விவஸ்வானுடைய பிறப்பு முந்தியது. தாம் அன்று அவருக்குப் பகர்ந்தீர் என்பதை நான் அறிவது எங்ஙனம்?*** **4**

*இக்காலத்தில் வசுதேவருக்குப் புதல்வராகப் பிறந்தவர் நீர். விவஸ்வானே இச் சிருஷ்டித் துவக்கத்தில் தோன்றியவர். பல்காலம் முன் இருந்தவர்க்குப் பல்காலம் பின்வந்தவர் புகட்டுதல் எப்படிச் சாத்தியமாகும் என்பது கேள்வி.*

**श्री भगवानुवाच**

**बहूनि मे व्यतीतानि जन्मानि तव चार्जुन ।**
**तान्यहं वेद सर्वाणि न त्वं वेत्थ परंतप ॥ ५**

ஸ்ரீ பகவானுவாச

பஹூனி மே வ்யதீதானி ஜன்மானி தவ சார்ஜுன ।
தான்யஹம் வேத ஸர்வாணி ந த்வம் வேத்த பரந்தப ॥ 5

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

अर्जुन அர்ஜுன *அர்ஜுனா* मे மே *எனக்கும்* तव च தவ ச *உனக்கும்* बहूनि பஹூனி *பல* जन्मानि ஜன்மானி *ஜன்மங்கள்* व्यतीतानि வ்யதீதானி *கடந்து போயின* अहं அஹம் *நான்* तानि सर्वाणि தானி ஸர்வாணி *அவைகள் எல்லாவற்றையும்* वेद வேத *அறிகிறேன்* परन्तप பரந்தப *எதிரிகளை வாட்டுபவனே* त्वं த்வம் *நீ* न वेत्थ ந வேத்த *அறியமாட்டாய்.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***எனக்கும் உனக்கும் அர்ஜுனா, பிறவிகள் பல கழிந்து போயின. பரந்தபா, அவற்றையெல்லாம் நான் அறிகிறேன்; நீ அறியமாட்டாய். 5***

*அர்ஜுனனோ கர்ம பந்தத்துக்கு உட்பட்ட ஜீவன். ஆகையால் பழைய பிறவிகளைப்பற்றிய ஞாபகம் இல்லை. கிருஷ்ணன் அவதார புருஷன். ஈசுவரனே ஒரு வடிவத்தின் மூலம் தன்னை விளக்குவது அவதாரமாகும். அவர் நித்திய சுத்தனாக, முக்தனாக, பூரண ஞானமுடையவராக இருக்கிறார். ஆகையால் தாம் முன்பு எடுத்த எல்லா ஜன்மங்களும் அவருக்குத் தெரியும். வேறு ஒரு வடிவந்தாங்கியிருந்து விவஸ்வானுக்கு அன்று புகட்டினார். இன்று இவ்வடிவெடுத்து அர்ஜுனனுக்குப் புகட்டுகிறார்.*

*உலகில் தோன்றிய அவதாரங்களெல்லாம் ஒரே ஈசுவரனே. அவன் பிரம்மமாகிய சமுத்திரத்தில் அமிழ்ந்து ஓரிடத்தில் கிளம்பும் போது கிருஷ்ணன் எனவும், இன்னொருதரம் மூழ்கி வேறிடத்தில் கிளம்பும்போது கிறிஸ்து எனவும் அழைக்கப்படுகிறான்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஜீவர்கள் வினையில் கட்டுண்டு பிறவி எடுக்கவேண்டிய அவசியம் அவர்களுக்கு ஏற்படுகிறது. பகவானோ நித்திய முக்தன். தர்மம் அதர்மம் ஆகிய வினையேதும் அவ*

*ரிடத்து இல்லை. பின்பு அவர் பிறவி எடுப்பது எப்படி? விடை வருகிறது :—*

अजोऽपि सन्नव्ययात्मा भूतानामीश्वरोऽपि सन् ।
प्रकृतिं स्वामधिष्ठाय संभवाम्यात्ममायया ॥ ६

அஜோऽபி ஸன்னவ்யயாத்மா பூதானாமீச்வரோऽபி ஸன் ।
ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா ॥ 6

अजः अपि सन् அஜ: அபி ஸன் *பிறப்பு அற்றவனாய் இருப்பினும்* अव्ययात्मा அவ்யயாத்மா *அழியாத ஞான சக்தியுடையவனாய் இருப்பினும்* भूतानां பூதானாம் *உயிர்களுக்கு* ईश्वरः अपि सन् ஈச்வர: அபி ஸன் *ஈசுவரனாய் இருப்பினும்* स्वां प्रकृतिं ஸ்வாம் ப்ரக்ருதிம் *என் பிரகிருதியை* अधिष्ठाय அதிஷ்டாய *வசப்படுத்திக் கொண்டு* आत्ममायया ஆத்மமாயயா *என் மாயையினால்* सम्भवामि ஸம்பவாமி *அவதரிக்கிறேன்.*

***நான் பிறப்பற்றவன், அழிவற்றவன், உயிர்களுக் கெல்லாம் ஈசன் எனினும் என் பிரகிருதியை வசப்படுத்தி ஆத்ம மாயையினால் அவதரிக்கிறேன்.***

*ஜீவர்கள் பிரகிருதியில் கட்டுண்டு பிறக்கிறார்கள். ஈசுவரனுக்கு அடிமைத்தொழில் புரிகிறது பிரகிருதி. பிறவாத அவன் பிறப்பவனாகவும், வளர்பவனாகவும் தன்னைக் காட்டிக்கொள்ளுதல் தனக்கு அடிமைப்பட்டுள்ள மாயா சக்தியின் வல்லமையாலேயாம். அதனால் தனக்கு இல்லாத கர்மத்தை இருப்பதுபோன்று அவன் காட்டுகிறான். அந்தக் கர்மமானது வெறும் குருட்டு வாய்ப்பாக அமைந்தது அல்ல. ஜன சமூகத்தின் தொகைவினை முழுதும் அவதார புருஷனது ஜீவிதத்தில் விளங்குகிறது. அவர் செய்யும் ஒவ்வொரு செயலிலும் சிறந்த கருத்து ஒன்று அடங்கப் பெற்றிருக்கும். மானுடர் முன்னேற்றம் அடைவதற்கான மார்க்கத்தையும் அவதார புருஷர் விளையாட்டுப் போன்று வினையாற்றிக் காட்டுகிறார். ஆக, தமக்கென்ற வினையில்லை. மக்கள் உய்வதற்கான நெறி அவதார புருஷரது வாழ்வில்*

*உண்டு. இயற்கையில் ஒவ்வொன்றும் தோன்றுதற்கேற்ற காலமுண்டு. அவதார புருஷர் ஒருவர் தோன்றுதற்கு ஏற்ற காலம் உளதா? விடை வருகிறது:—*

**यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत ।**
**अभ्युत्थानमधर्मस्य तदात्मानं सृजाम्यहम् ॥ ७**

யதா யதா ஹி தர்மஸ்ய க்லானிர்பவதி பாரத ।
அப்யுத்தானமதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம் ॥ 7

भारत பாரத *பரத வம்சத்தில் பிறந்தவனே* यदा यदा யதா யதா *எப்பொழுதெல்லாம்* धर्मस्य தர்மஸ்ய *தர்மத்திற்கு* ग्लानिः க்லானி: *தலைவு* अधर्मस्य அதர்மஸ்ய *அதர்மத்துக்கு* अभ्युत्थानं அப்யுத்தானம் *எழுச்சி* भवति பவதி *உண்டாகிறதோ* तदा हि ததா ஹி *அப்பொழுதெல்லாம்* अहं அஹம் *நான்* आत्मानं ஆத்மானம் *என்னை* सृजामि ஸ்ருஜாமி *சிருஷ்டித்துக் கொள்கிறேன்.*

***பாரதா, எப்பொழுதெல்லாம் அறம் அழிந்து போய் மறம் மேலெழுகிறதோ, அப்பொழுதெல்லாம் என்னை நான் பிறப்பித்துக்கொள்கிறேன். 7***

*சமூக முன்னேற்றத்திற்குத் துணைபுரியும் கர்மங்கள் தர்மங்களாகின்றன; தடையாயிருப்பவைகள் அதர்மங்களாகின்றன. அதர்மம் தலையெடுத்துப் பெருங் குழப்பங்களை உண்டுபண்ணும் நெருக்கடிகளிலெல்லாம் அவர் அவதரித்து வரவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. அப்படி அவதரித்து வந்து அவர் என்ன செய்கிறார்?*

**परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम् ।**
**धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे ॥ ८**

பரித்ராணாய ஸாதூனாம் வினாசாய ச துஷ்க்ருதாம் ।
தர்மஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே ॥ 8

साधूनां ஸாதூனாம் *சத் ஜனங்களுடைய* परित्राणाय பரித்ராணாய *பாதுகாப்புக்காகவும்* दुष्कृतां துஷ்க்ருதாம் *துஷ்டர்களுடைய* विनाशाय च வினாசாய ச *நாசத்திற்காகவும்* धर्म संस्थापनार्थाय தர்ம ஸம்ஸ்தாபனார்த்தாய

*தர்மத்தை நன்கு ஸ்தாபனம் பண்ணுதற்காகவும்* யுகே யுகே யுகே யுகே *யுகந்தோறும்* संभवामि ஸம்பவாமி *தோன்றுகிறேன்.*

***நல்லாரைக்காப்பதற்கும், கெட்டவரைக் கரந் தொடுக்குதற்கும், தர்மத்தை நிலைநாட்டுதற்கும் யுகந்தோறும் நான் அவதரிக்கிறேன்.*** **8**

*களை யெடுத்தலும் நல்ல செடிகளுக்கு உரம் போடுதலும் சேர்ந்து அமைவது சிறந்த கிருஷியாகும். உலகில் கெட்டவர்களுடைய கூட்டம் பெருகிவிட்டால் அவர்களுக்கிடையில் தர்மம் தலையெடுக்காது. ஆகையால் யுத்தம், கொள்ளை நோய், பஞ்சம் இவைகள் வாயிலாக பகவான் அவர்களுக்குத் துன்பத்தையூட்டுகிறார். துன்பம் ஒன்றே மக்களைச் சீர்திருத்துதற்கு உற்ற உபாயம். மரணத்தின் வாயிலாக அவர்களில் பெரும்பான்மையோர் மறைந்திருப்பதும் அவசியமாகிறது.*

*மூன்று குணங்களில் ரஜோகுணமும், தமோகுணமும் அதிகரிக்கப் பெறுபவர்கள் அதர்மத்தில் ஈடுபடுகிறார்கள். அவர்களுடைய தொகையைக் குறைத்து, சத்வ குணத்தில் இருப்பவர்களை ஓம்புதலால் மூன்று குணங்களுக்கிடையில் தாரதம்மியம் ஓரளவில் சமப்பட்டுவிடுகிறது. இதைத்தான் அவதார புருஷர் செய்துவைக்கிறார்.*

*அவதார புருஷர் ஈசுவரனால் அனுப்பப்படும் மனுஷ்ய தூதர் ஆவர். அவர் ஒரு பெரிய சக்கரவர்த்தியின் பிரதிநிதி போன்றவர். நெடுந்தூரத்துக்கு அப்பாலுள்ள பிரதேசத்தில் கலகம் நிகழும்போது அதை அடக்குவதற்கு அரசன் தனது பிரதிநிதியை அனுப்புவதுபோல் உலகத்தில் எங்கேயாவது தர்மம் மலினமடையும்போது அங்கு தர்மத்தைப் பாதுகாத்து அபிவிருத்திக்குக் கொண்டுவருவதற்காக ஈசுவரன் தனது அவதார புருஷனை அனுப்புகிறான்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*மண்ணுலகில் கடவுளால் காப்பாற்றப்படுவது ஒன்றுதானா நல்லார் அடையும் பயன்? காக்கப்படுவதிலும் மேலான பயன் ஒன்றுண்டு. அதாவது :—*

जन्म कर्म च मे दिव्यमेवं यो वेत्ति तत्त्वतः ।
त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मामेति सोऽर्जुन ॥ ९

ஜன்ம கர்ம ச மே திவ்யமேவம் யோ வேத்தி தத்வத: ।
த்யக்த்வா தேஹம் புனர்ஜன்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுன ॥

अर्जुन அர்ஜுன *அர்ஜுனா* यः ய: *யார்* मे மே *என்னுடைய* एवं ஏவம் *இங்ஙனம்* दिव्यं திவ்யம் *திவ்யமான* जन्म कर्म च ஜன்ம கர்ம ச *ஜன்மத்தையும் கர்மத்தையும்* तत्त्वत: தத்வத: *உள்ளபடி* वेत्ति வேத்தி *அறிகிறானோ* सः ஸ: *அவன்* देहं தேஹம் *தேகத்தை* त्यक्त्वा த்யக்த்வா *விட்டு* पुनः புன: *மறுபடியும்* जन्म ஜன்ம *ஜன்மத்தை* न एति ந ஏதி *அடைகிறதில்லை* मां மாம் *என்னை* एति ஏதி *அடைகிறான்.*

***அர்ஜுனா, இங்ஙனம் எனது திவ்வியப் பிறப்பையும் செயலையும் உள்ளபடி அறிபவன் உடலை நீத்து மறு பிறப்பெய்துவதில்லை; என்னையே அடைகிறான்.*** **9**

*பிறவாத பரம்பொருள் பிறப்பவன்போன்று தனது மாயாசக்தியால் காட்டிக்கொள்கிறான். அங்ஙனமே கர்மத்துக்கு அதீதமானவன் சத்கர்மங்கள் யாவையும் செய்து வருபவனாகத் தென்படுகிறான். இவ்வுண்மையை உள்ளபடி சுவானுபவத்தில் அறிபவர்கள் தாங்களும் அங்ஙனம் உலகில் வாழ்ந்து பிறவிப் பெருங்கடலை நீந்த வல்லவராகின்றனர்.*

*ஒரு தத்துவத்தை விசாரித்து அறிந்துகொள்ளுதல் மிகக் கஷ்டமானது. ஆனால் அதே தத்துவத்தை அவதார புருஷர் ஒருவர் தமது ஜீவிதத்தின்மூலம் விளக்குகிறார். மேலும் அவர் அருளுக்கு உறைவிடமாகிறார். அவரை நேரில் காண இயலாதவரும் அவரைப்பற்றி நினைக்க நினைக்க அவரது சொரூபத்தை அறிகிற பரிபாகம் அடை*

*இராமபிரான், ஸீதாதேவி, கிருஷ்ணன், ராதை இவர்கள் சரித்திர பூர்வமானவர்களல்லரென்றும் சும்மா உருவகப்படுத்திக் கூறப்பட்*

டவர்களே யென்றும், சாஸ்திரங்கள் வெறும் அத்யாத்மிக அர்த்தங்களை மட்டும் உடையனவென்றும் நினைக்காதே. அவர்கள் உன்னைப்போலவே ஊனும் உதிரமும் பெற்ற சரீரத்தையுடையவர்களாக இருந்தனர். ஆனால் அவர்கள் தெய்வீகம் வாய்ந்தவர்களாதலால் அவர்களுடைய வாழ்க்கைகளைச் சரித்திரபூர்வமாகவும் ஆத்மீய உண்மைகளை விளக்குவனவாகவும் கொள்ளலாம். ஸமுத்திரமும் அதன் அலைகளும் போல பிரம்மமும் அவதாரங்களுமாகும்.

திவ்விய குணங்களுடனும் திவ்விய சக்திகளுடனும் அவதார புருஷர்கள் மண்ணுலகில் அவதரிக்கிறார்கள். அவர்கள் தாழ்ந்ததிலிருந்து மிக உயர்ந்த எந்தச் சமாதிநிலையிலும் எளிதில் புகுவார்கள்; திரும்புவார்கள். அரசன் அரண்மனையில் அன்னியர் ஒரு குறிப்பிட்ட எல்லை வரைக்குந்தான் போகமுடியும். அரசனுடைய குழந்தையோ வீட்டில் எந்த மூலைக்கும் போய்வரலாம்.

அவதார புருஷர்களை அறிந்துகொள்வது அரிதானகாரியமாகும். எல்லையற்ற அகண்ட வஸ்து எல்லைக்குட்பட்ட கண்டத்துள் அடங்கியிருப்பதற்கு ஒப்பாகும் அவர்களது வாழ்க்கை.

ஸ்ரீராமபிரான் இவ்வுலகில் அவதரித்தபோது ஏழு ரிஷிகள் மாத்திரமே அவர் ஈசுவராவதார மென்பதைத் தெரிந்துகொண்டிருந்தனர். எனவே இவ்வுலகில் எப்போது ஈசுவரன் வந்தபோதிலும் சரியே சிலர் மட்டுமே அவனுடைய தெய்விக சுபாவத்தைத் தெரிந்து கொள்வர்.

ஈசுவரன் அனந்தன்; ஸர்வ சக்திமான். அவன் அருள் மயமான தனது தெய்விக சக்தியை மானிட சரீரத்தில் தோற்றுவித்து, நம்மிடையே ஓர் அவதார புருஷனைத் தோன்றத்திருவுளங் கொள்ளலாம். ஈசுவராவதாரத்தினின்றும் அருள் வெள்ளம் பெருகிப் பக்தர்களை இன்புறுத்துகிறது. வார்த்தைகளால் இவ்விஷயத்தை விளக்கமுடியாது. ஞானக்கண்ணால்தான் இந்த உண்மையைப் பார்த்துத்தெரிந்துகொள்ள வேண்டும். இதை நம்பவேண்டுமானால், ஈசுவரனை நேரில் காண வேண்டும்.

ஆயினும் உவமை மூலமாக இவ்விஷயத்தை ஒருவாறு தெரிந்து கொள்ளலாம். ஒருவன் ஒரு பசுவின் கொம்பு, கால், வால், மடி இவைகளில் ஒன்றைத் தொடுவதாக வைத்துக்கொள்வோம். இப்படித்தொடுவது அந்தப் பசுவைத் தொடுவதாகாதா? மானிடர்களான நமக்குப் பசுவினிடத்து முக்கியமானது அதன் மடியிலிருந்து வரும் பாலே. திவ்விய பிரேமையாகிற பாலானது நமக்கு ஈசுவராவதாரத்தினிடமிருந்து பெருகுகின்றது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

என்செய்து ஞானியர் ஈசுவரனைத் தெரிந்துகொள்ள வல்லவர்களானார்கள்? விடை வருகிறது:—

वीतरागभयक्रोधा मन्मया मामुपाश्रिताः ।
बहवो ज्ञानतपसा पूता मद्भावमागताः ॥ १०

வீதராகபயக்ரோதா மன்மயா மாமுபாச்ரிதா: ।
பஹவோ ஞானதபஸா பூதா மத்பாவமாகதா: ॥ 10

वीतरागभयक्रोधा: வீதராகபயக்ரோதா: *ஆசை, அச்சம், க்ரோதம் நீங்கினவர்களாய்* मन्मया: மன்மயா: *என்மயமானவர்களாய்* मां மாம் *என்னை* उपाश्रिता: உபாச்ரிதா: *அடைக்கலம் புகுந்தவர்களாய்* ज्ञानतपसा ஞானதபஸா *ஞானதபசினாலே* पूता: பூதா: *புனிதர்களாய்* बहव: பஹவ: *பலர்* मद्भावं மத்பாவம் *என் இயல்பை* आगता: ஆகதா: *அடைந்தார்கள்.*

***ஆசை, அச்சம், சினம் நீங்கினவர்களாய், என்மயமாய், என்னை அடைக்கலம் புகுந்து, ஞான தபசால் புனிதர்களாய்ப் பலர் என் இயல்பை எய்தினர். 10***

*சேற்று நீரிலுள்ள அழுக்கை நீக்கினால் அது நல்ல நீரோடு கலப்பதற்குத் தகுதியுடையதாகிறது. மனதிலுள்ள ஆசை, அச்சம், சினம் என்ற அழுக்குகளை நீக்கினால் அது ஈசுவர மயமாய்விடுகிறது. பிறகு ஈசுவரனுடைய மகிமையை அறிய அது வல்லதாகிறது. அவன் பெருமையை அறிந்த பின் அவனிடத்து அடைக்கலம் புகுதல் எளிதாகிறது. தீயோடு தொடர்வு வைக்கின்ற இரும்பு தானே தீ மயமாகிறது. சர்வேசுவரனிடத்து ஐக்கிய புத்தி வலுக்க வலுக்க ஜீவனுக்குப் பரபோதம் மேலிடுகிறது. ஆகையால் இந்த ஞானத்துக்கு நிகரான தபசு இல்லை. ஜீவபோதம் அறவே நீங்கிப் பரபோதம் நிலைத்துவிடுவதால் இது மனிதனைப் பரிசுத்தவான் ஆக்கிவிடுகிறது. இங்ஙனம் முக்தியடைவது இன்று ஏற்பட்டதன்று; தொன்று தொட்டு இது உலகில் நிலைத்துள்ளது*

*ஈசுவரனிடம் வித்தை, அவித்தை என்ற இரண்டும் உள்ளன. வித்யாமாயையானது மனிதனை ஈசுவரனிடம் சேர்க்கும். அவித்யா மாயையோ அவனை ஈசுவரனிடமிருந்து புறம்பே போகச் செய்யும். ஞானம், பக்தி, வைராக்கியம், பூததயை இவையெல்லாம் வித்யாமாயை யின் தோற்றங்களாம். இவைகளின் உதவியைக்கொண்டுதான் ஒருவன் ஈசுவரனை அடையமுடியும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஈசுவரன் ஏன் எல்லார்க்கும் முக்தி யளிப்பதில்லை? விடை வருகிறது :—*

**ये यथा मां प्रपद्यन्ते तांस्तथैव भजाम्यहम् ।**
**मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः ॥ ११**

யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ பஜாம்யஹம் ।
மம வர்த்மானுவர்த்தந்தே மனுஷ்யா: பார்த்த ஸர்வச: ‖ 11

ये யே *யார்* यथा யதா *எப்படி* मां மாம் *என்னை* प्रपद्यन्ते ப்ரபத்யந்தே *வழிபடுகிறார்களோ* तान् தான் *அவர்களுக்கு* अहं அஹம் *நான்* तथा एव ததா ஏவ *அப்படியே* भजामि பஜாமி *அளிக்கிறேன்* पार्थ பார்த்த *பார்த்தா* मनुष्याः மனுஷ்யா: *மனிதர்கள்* सर्वशः ஸர்வச: *எவ்வாற்றாலும்* मम மம *என்னுடைய* वर्त्म வர்த்ம *மார்க்கத்தை* अनुवर्तन्ते அனுவர்த்தந்தே *அனுசரிக்கிறார்கள்.*

***யார் என்னை எப்படிவழிபடுகிறாரோ அவர்க்கு நான் அப்படியே அருள்புரிகிறேன். பார்த்தா, மக்கள் யாண்டும் என் வழியையே பின்பற்றுகின்றனர். 11***

*முக்தியை நாடுபவர்களுக்கு பகவான் முக்தியைக் கொடுக்கிறார். புக்தியை (போகத்தை) நாடுபவர்களுக்கு பகவான் போகத்தைக் கொடுக்கிறார். போகப் பொருள்களாய் பரிணமித்திருப்பதும் பகவானே யாதலால் போகத்தை நாடுபவர்களும் தம் அறிவுக்கு எட்டியபடி பகவானையே நாடுகிறார்கள். இயற்கையோடு வைத்துள்ள வெவ்வேறு விதமான இணக்கத்துக்கு ஏற்றாற்போன்று பல விதமான அனுபவங்கள் வாயிலாக எல்லா உயிர்களும் இறை*

வனையே இறுதியாக வந்துடைவதால் மார்க்கங்கள் யாவும் அவனை நோக்கிச் செல்பவைகளாகின்றன. ஈசுவரன் கற்பக விருக்ஷம் போன்றவன். கற்பக விருக்ஷத்தின் அடியில் இருந்துகொண்டு யார் எதை விரும்புகிறார்களோ அதை அடைகின்றனர்.

ஈசுவரனையே அடைய விரும்பாது சிறிய பொருள்களைப் பெற மக்கள் ஆசைப்படுவது ஏன்?

**काङ्क्षन्तः कर्मणां सिद्धिं यजन्त इह देवताः ।**
**क्षिप्रं हि मानुषे लोके सिद्धिर्भवति कर्मजा ॥ १२**

காங்க்ஷந்த: கர்மணாம் ஸித்திம் யஜந்த இஹ தேவதா: ।
க்ஷிப்ரம் ஹி மானுஷே லோகே ஸித்திர்பவதி கர்மஜா ॥ 12

कर्मणां கர்மணாம் *கர்மங்களுடைய* सिद्धिं ஸித்திம் *பலனை* काङ्क्षन्तः காங்க்ஷந்த: *விரும்புகின்றவர்கள்* इह இஹ *இம்மையில்* देवताः தேவதா: *தேவதைகளை* यजन्ते யஜந்தே *போற்றுகிறார்கள்* हि ஹி *ஏனென்றால்* मानुषेलोके மானுஷேலோகே *மனுஷ்யலோகத்தில்* क्षिप्रं க்ஷிப்ரம் *விரைவில்* कर्मजा सिद्धिः கர்மஜா ஸித்தி: *கர்மபலனானது* भवति பவதி *உண்டா*

***வினைப் பயனை விரும்புபவர்கள் இம்மையில் தேவதைகளைத் தொழுகின்றனர். ஏனென்றால் வையகத்தில் வினைப்பயன் விரைவில் உண்டாகிறது.***

ஆத்ம ஞானத்தைவிட மிக எளிதில் அடையப் பெறுவது கர்மபலன். இம்மை என்றும் மனுஷ்யலோகம் என்றும் சொல்லப்படுவது இந்திரியங்களுக்குப் புலனாகும் இவ்வுலகம். அறிவிலிகள் எது விரைவில் அகப்படுகிறதோ அதில் பற்று வைத்து அதையே நாடுகின்றனர். ஓர் அரசனோடு இணக்கம் வைப்பது அரிது எனினும் அவ்விணக்கம் எல்லா நன்மையையும் மேன்மையையும் பயக்கும். அரசனுடைய சிப்பந்திகளில் கீழ்நிலையில் இருப்பவர்களிடம் விரைவில் நட்புக் கொள்ளலாம். ஆயினும் அவர்களிடமிருந்து அடையும் நன்மை மிகவும் அற்பமானதேயாம். சர்வேச

வரனை ஆராதிப்பவர்கட்கு பக்தி, ஞானம், முக்தி முதலியன வரும். சிறு தெய்வங்களை வணங்குபவர்க்கு அதற்கேற்ற கர்மபலன் கிடைக்கிறது. மக்களுக்கிடையில் மனபரிபாகம் வேறுபடுகிறது. அதற்கு ஏற்ப அவர்கள் நாடுகின்ற நலனும் வெவ்வேறு வகைப்பட்டது.

அப்படியாயின் அவர்களது வகைகளை அறிவது எங்ஙனம்? விடை வருகிறது :—

**चातुर्वर्ण्यं मया सृष्टं गुणकर्मविभागशः ।**
**तस्य कर्तारमपि मां विद्ध्यकर्तारमव्ययम् ॥ १३**

சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் குணகர்மவிபாகச: ।
தஸ்ய கர்த்தாரமபி மாம் வித்த்யகர்த்தாரமவ்யயம் ॥ 13

मया மயா *என்னால்* गुणकर्मविभागशः குணகர்மவிபாகச: *குணத்தினதும் கர்மத்தினதும் வேறுபாட்டிற்கு ஏற்றவாறு* चातुर्वर्ण्यम् சாதுர்வர்ண்யம் *நான்கு வர்ணங்கள்* सृष्टं ஸ்ருஷ்டம் *சிருஷ்டிக்கப்பட்டன* तस्य தஸ்ய *அதற்கு* कर्तारं अपि கர்த்தாரம் அபி *கர்த்தா எனினும்* मां மாம் *என்னை* अव्ययं அவ்யயம் *நிர்விகாரியாகவும்* अकर्तारं அகர்த்தாரம் *கர்த்தாவல்லாதவனெனவும்* विद्धि வித்தி *அறிக.*

***குணத்துக்கும் கர்மத்துக்கும் ஏற்ப நான்கு வருணங்களை நான் படைத்தேன். அதற்குக்கர்த்தா எனினும் என்னை அவிகாரி யென்றும் அகர்த்தா வென்றும் அறிக. 13***

*குணபேதத்தால் சிருஷ்டி ஏற்படுகிறது. சத்வகுணம் நிறைந்திருக்கும் ஜீவன் பிராம்மணன். சத்வகுணமும் சிறிது ரஜோகுணமும் கூடியிருப்பவன் க்ஷத்திரியன். ரஜோகுணம் பெரும்பகுதியும் சிறிது சத்துவம் தமசு ஆகியவை கூடியிருப்பவன் வைசியன். தமோகுணம் பெரிதும் சிறிது ரஜோகுணமும் சேர்ந்திருப்பவன் சூத்திரன். சத்வத்தின் வருணம் வெண்மை. ரஜோகுணம் சிவப்பானது. தமோகுணம் கருப்பு. பிராம்மணனுடைய நிறம் வெண்மை. க்ஷத்திரியன் செந்தாமரை போன்றவன். வைசியனுக்கு நிறம் மஞ்சள்.*

சூத்திரன் கறுத்திருக்கிறான். இந்நிறங்கள் ஸ்தூல சரீரத்தில் தென்படுபவைகளல்ல. ஸ்தூல உடலில் ஐரோப்பியர் வெள்ளையர்; ஆனால் அவர்கள் எல்லோரும் பிராம்மண இயல்புடையர் அல்லர். அமெரிக்க இந்தியர் சிவப்பு நிறம்; ஆயினும் அவர்கள் எல்லார்க்கும் க்ஷத்திரிய இயல்பு இல்லை. மங்கோலியர் மஞ்சள் நிறம். இராமன், கிருஷ்ணன்போன்ற இந்தியர் கருப்பு நிறம். ஆக, ஸ்தூல சரீரத்தின் நிறம் மனிதனது இயல்பை விளக்காது.

பின்பு நான்கு வருணத்தார் நிறம் அந்தக்கரணம் அல்லது மனதை ஒட்டியதாகும். உலகத்தவர் பழக்க வழக்கத்தில் கொண்டுள்ள நான்கு வர்ணங்கள் பிறப்பை ஒட்டியனவாகும். சமூக அமைப்பில் ஒழுங்குப்பாடு இருக்கும் போது அவை தத்துவ அமைப்போடு ஒருவாறு ஒத்திருக்கும். இன்றைக்கு சமூகத்தில் உள்ள நிலைமையில் பிறப்பை அனுசரித்து வர்ணத்தை நிர்ணயிப்பது சிறிதும் பொருந்தாது. அத்யாத்ம வித்தைக்கு ஏற்ப நான்கு வருணங்கள் மன பரிபாகத்தை ஒட்டியனவாம். அதன்படி நான்கு சகோதரர்களுக்கிடையில் மனபரிபாகத்துக்கு ஏற்ப ஒருவன் பிராம்மணனாகவும், இன்னொருவன் க்ஷத்திரியனாகவும், மற்றொருவன் வைசியனாகவும், வேறு ஒருவன் சூத்திரனாகவும் இருக்க முடியும். வர்ணத்தில் மேல்நோக்கிப் போகப்போக பர வித்தையில் ஈடுபடுதல் அதிகரிக்கிறது. வர்ணத்தில் கீழே போகப் போக கர்ம பலனில் பற்று அதிகரிக்கிறது. பழுத்த பழத்தில் தோல், சதை, விதை முதலியன பாகுபாடு அடைகின்றன. பிஞ்சில் எல்லாம் ஒரே பாங்கில் இருக்கின்றன. வர்ணத்தில் மேலோனுக்கு ஆத்ம தத்துவம், பிரகிருதி தத்துவம் முதலியன விளங்குகின்றன. பரிபாகம் அடையாத கீழ் வர்ணத்தவனுக்குப் பரவித்தை விளங்காது. (நான்கு வர்ணத்தின் கர்மங்கள் 18 வது அத்தியாயம் 42, 43, 44வது சுலோகங்களில் விளக்கப்படுகின்றன.)

இயற்கையில் முக்குணத்தாலாகிய எல்லாப் பொருள்களிடத்தும் உயிர்களிடத்தும் நான்கு வர்ணங்கள் உண்டு.

*வாழ்க்கை முறையில் ஒரு வர்ணம் மற்றொரு வர்ணமாகப் பரிணமிப்பதும் சர்வசாதாரணம்.*

*சமூகத்தார் தங்களுக்கு ஏற்படுத்திக்கொள்ளும் வர்ண தர்மம் பாரமார்த்திக உண்மைக்கு ஒத்ததாயிருக்குமானால் அச்சமூகம் முன்னேற்றமடைகிறது. பாரமார்த்திக உண்மையினின்று அது பிறழுகின்றவளவு சமூகமும் சீர்கேடு அடையும். அப்போதைக்கப்போது தோன்றும் அவதார புருஷர்கள் வர்ண தர்மத்தை ஒழுங்குப்படுத்தி வைக்கின்றனர்.*

*பகவான் உலகத்தைச் சிருஷ்டித்த போதிலும் அவர் கர்த்தா அல்ல என்பதன் உட்பொருள் 9வது அத்தியாயம் 5 – 10 சுலோகங்களில் விளக்கப்படுகிறது.*

*பகவான் பிரகிருதியிலுள்ள கர்மங்களுக்கெல்லாம் கர்த்தா அல்லவாதலால் :—*

**न मां कर्माणि लिम्पन्ति न मे कर्मफले स्पृहा ।**
**इति मां योऽभिजानाति कर्मभिर्न स बध्यते ॥ १४**

ந மாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்மபலே ஸ்ப்ருஹா ।
இதி மாம் யோऽபிஜானாதி கர்மபிர்ந ஸ பத்யதே ॥ 14

कर्माणि கர்மாணி *கர்மங்கள்* मां மாம் *என்னை* न लिम्पन्ति ந லிம்பந்தி *தொடுவதில்லை* मे மே *எனக்கு* कर्मफले கர்மபலே *கர்ம பலத்தில்* स्पृहा ஸ்ப்ருஹா *ஆசை* न ந *இல்லை* इति இதி *இப்படி* यः ய: *யார்* मां மாம் *என்னை* अभिजानाति அபிஜாநாதி *அறிகிறானோ* सः ஸ: *அவன்* कर्मभिः கர்மபி: *கர்மங்களினால்* न बध्यते ந பத்யதே *பந்திக்கப்படுவதில்லை.*

***கர்மங்கள் என்னைத் தீண்டா; எனக்குக் கர்ம பலனில் ஆசையில்லை. இங்ஙனம் என்னை அறிபவன் கர்மங்களில் கட்டுண்ணான். 14***

*அகங்காரம் உடையவர்களிடத்துக் கர்மம் மனோ விகாரத்தை உண்டுபண்ணுகிறது. பகவானிடத்தோ அகங்காரம் சிறிதேனும் இல்லை. ஆகையால் கர்மங்களால்*

*தீண்டப் பெறுதவராக அவர் இருக்கிறார். அடையாத ஒன்றை அடைய விரும்புதல் ஆசையாகும். பகவானே பரி பூரணர். அனைத்தையும் தம்மகத்து அடக்கிக்கொண்டு அவைகளுக்கு அப்பாலும் அவர் இருக்கிறார். ஆதலால் அவர் ஆசைப்படுதற்கு ஒன்றுமில்லை. பகவானது சொரூபத்தை அறிபவர் தாமும் அகங்காரமற்று ஆசையற்றிருப் பார்கள். எக்கருமமும் அவர்களைக் கட்டுப்படுத்தமாட்டாது. மேன்மையை அறிந்ததன் அறிகுறி தாமும் மேன்மையில் நிலைபெற்றிருத்தலாம்.*

*பரமாத்மா நிர்விகாரி என்று அறிந்தவர்கள் தம் கர்மத்தையே ஒழித்துவிட்டார்களா? அதைப்பற்றி பகவான் பகர்வதாவது:—*

**एवं ज्ञात्वा कृतं कर्म पूर्वैरपि मुमुक्षुभिः ।**
**कुरु कर्मैव तस्मात्त्वं पूर्वैः पूर्वतरं कृतम् ॥ १५**

ஏவம் ஞாத்வா க்ருதம் கர்ம பூர்வைரபி முமுக்ஷுபி: ।
குரு கர்மைவ தஸ்மாத்த்வம் பூர்வை: பூர்வதரம் க்ருதம் ॥ 15

एवं ஏவம் *இங்ஙனம்* ज्ञात्वा ஞாத்வா *அறிந்து* पूर्वैः मुमुक्षुभिः अपि பூர்வை: முமுக்ஷுபி: அபி *முன்னுள்ள முமுக்ஷுக்களாலும்* कर्म कृतं கர்ம க்ருதம் *கர்மம் செய்யப்பட்டது* तस्मात् தஸ்மாத் *ஆகையினால்* त्वं த்வம் *நீ* पूर्वैः பூர்வை: *முன்னோர்களால்* पूर्वतरं பூர்வதரம் *முன்னாளில்* कृतं க்ருதம் *செய்யப்பட்ட* कर्म एव கர்ம ஏவ *கர்மத்தையே* कुरु குரு *செய்.*

***முன்னுள்ள முமுக்ஷுக்களும் இங்ஙனமறிந்து கர்மஞ்செய்தனர். ஆகையால் நீயும் முன்னாளில் முன்னோர்செய்தபடி வினையாற்றுவாயாக. 15***

*விவேகமுடைய தேகியானவன் அகங்காரத்தையும் ஆசையையும் விட்டுவிடுகிறானே யொழிய கர்மத்தையே விட்டுவிடுவதில்லை. முக்தியை நாடியவர்கள் எல்லோரும் தொன்றுதொட்டு இம்முறையைத்தான் கையாண்டார்*

கள். அர்ஜுனனுக்காகவென்று இது வந்த ஏற்பாடு அல்ல.

அப்படியானால் அர்ஜுனனுக்கு இதைப்பற்றி மனக்குழப்பம் ஏன் உண்டாயிற்று? அதில் ஆச்சரியம் இல்லை.

ஏனென்றால்:—

किं कर्म किमकर्मेति कवयोऽप्यत्र मोहिताः ।
तत्ते कर्म प्रवक्ष्यामि यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥ १६

கிம் கர்ம கிமகர்மேதி கவயோऽப்யத்ர மோஹிதா: ।
தத்தே கர்ம ப்ரவக்ஷ்யாமி யஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽசுபாத் ॥

कर्म கர்ம *கர்மம்* किं கிம் *யாது* अकर्म அகர்ம *அகர்மம்* किं கிம் *யாது* इति இதி *என்னும்* अत्र அத்ர *இது விஷயத்தில்* कवयः अपि கவய: அபி *ஞானிகள் கூட* मोहिताः மோஹிதா: *மோஹமடைகிறார்கள்* यत् யத் *எதை* ज्ञात्वा ஞாத்வா *அறிந்து* अशुभात् அசுபாத் *அசுபத்திலிருந்து* मोक्ष्यसे மோக்ஷ்யஸே *விடுபடுகிறாயோ* तत् தத் *அதை* कर्म கர்ம *கர்மத்தை* ते தே *உனக்கு* प्रवक्ष्यामि ப்ரவக்ஷ்யாமி *பகர்வேன்.*

***கர்மம் எது, அகர்மம் எது என்பதில் ஞானிகளே தடுமாற்ற மடைகின்றனர். எதைக் கர்மமென்று அறிந்து கேட்டினின்று விடுபடுவாயோ அதை உனக்குப் பகர்வேன். 16***

*அசுபங்களிலெல்லாம் மிகப் பெரியது பிறவிப் பிணி என்பது. தொலையாத இத்தொல்லையைத் தொலைப்பதற்கு வினையின் கூறு முழுதும் விளக்கப்பெறல் வேண்டும். உடலைக்கொண்டு ஓயாது வேலைவாங்குவதுதானே கர்மம் என்று அவசரப்பட்டு முடிவுகட்டிவிட வேண்டாம்.*

कर्मणो ह्यपि बोद्धव्यं बोद्धव्यं च विकर्मणः ।
अकर्मणश्च बोद्धव्यं गहना कर्मणो गतिः ॥ १७

கர்மணோ ஹ்யபி போத்தவ்யம் போத்தவ்யம் ச விகர்மண: ।
அகர்மணஸ்ச போத்தவ்யம் கஹனா கர்மணோ கதி: ॥ 17

हि ஹி *ஏனென்றால்* कर्मण: अपि கர்மண: அபி *கர்மத்தைப்பற்றியும்* बोद्धव्यं போத்தவ்யம் *தெரிந்து கொள்ளவேண்டும்* विकर्मण: च விகர்மண: ச *விலக்கப்பட்ட கர்மத்தைப்பற்றியும்* बोद्धव्यं போத்தவ்யம் *தெரிந்துகொள்ளவேண்டும்* अकर्मण: च அகர்மண: ச *அகர்மத்தைப் பற்றியும்* बोद्धव्यं போத்தவ்யம் *தெரிந்துகொள்ளவேண்டும்* कर्मण: கர்மண: *கர்மத்தின்* गति: கதி: *போக்கானது* गहना கஹநா *அறிதற்கரியது.*

***கர்மத்தின் போக்கைத் தெரியவேண்டும். விலக்கப்பட்ட கர்மம் எவை என்பது தெரியவேண்டும். கர்மத்தைக் கடந்த நிலையையும் தெரியவேண்டும். கர்மத்தின் போக்கு அறிதற்கரியது.*** ***17***

*இன்னதைச் செய் என்று சாஸ்திரம் விதித்துள்ளது கர்மம். இன்னதைச் செய்யாதே என்று சாஸ்திரம் விலக்கியிருப்பது விகர்மம். (விகர்மம் இங்கு இந்த அத்தியாயத்தில் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளப்படுவதில்லை. அது 16வது 17வது அத்தியாயங்களில் ஆராயப்படுகிறது.)*

*கர்மம் அகர்மம் ஆகிய இரண்டின் இயல்புகளாவன:-*

**कर्मण्यकर्म यः पश्येदकर्मणि च कर्म यः ।**
**स बुद्धिमान्मनुष्येषु स युक्तः कृत्स्नकर्मकृत् ॥ १८ ॥**

கர்மண்யகர்ம ய: பச்யேதகர்மணி ச கர்ம ய: ।
ஸ புத்திமான்மனுஷ்யேஷு ஸ யுக்த: க்ருத்ஸ்னகர்மக்ருத் ॥

य: ய: *யார்* कर्मणि கர்மணி *கர்மத்தில்* अकर्म அகர்ம *அகர்மத்தை* पश्येत् பச்யேத் *பார்க்கிறானோ* य: ய: *யார்* अकर्मणि च அகர்மணி ச *அகர்மத்திலும்* कर्म கர்ம *கர்மத்தை* (पश्येत् பச்யேத் *பார்க்கிறானோ*) स: ஸ: *அவன்* मनुष्येषु மனுஷ்யேஷு *மனிதர்களுள்* बुद्धिमान् புத்திமான் *புத்திமான்* स: ஸ: *அவன்* युक्त: யுக்த: *யோகி* कृत्स्नकर्मकृत् க்ருத்ஸ்னகர்மக்ருத் *எல்லாக் கர்மங்களையும் செய்தவன்.*

***கர்மத்தில் அகர்மத்தையும், அகர்மத்தில் கர்மத்தையும் காண்போன் மக்களுள் மேதாவி; அவனே யோகி; அவனே எல்லாம் செய்து முடித்தவன்.*** ***18***

1. கர்மம் பிரகிருதியின் இயல்பாகும்; அகர்மம் ஆத்ம சொரூபம். அவிவேகிகள் இரண்டுக்குமிடையில் வித்தியாசம் தெரியாது குழப்பமடைகின்றனர். ரயில் வண்டி ஓடுகிறது. அதில் ஊர்ந்து செல்லும் பிரயாணி யொருவன் நிலத்தில் நிற்கும் மரங்கள் தன்னை எதிர்த்து ஓடுவதாக எண்ணுகிறான். செயல் இல்லாத ஒன்றில் ஓடுதல் என்னும் செயல் காணப்படுகிறது. இங்கு அஞ்ஞானத்தால் அகர்மத்தில் கர்மம் காணப்படுகிறது. கடலில் தூரத்தில் ஓடும் கப்பல் கரையிலிருந்து பார்ப்பவனுக்கு அசையாது நிற்பது போன்று தென்படுகிறது. வானத்தில் சஞ்சரிக்கும் சந்திரனும் அப்படியே காட்சிகொடுக்கிறது. ஈண்டு அக்ஞானத்தால் கர்மம் அகர்மமாக விளங்குகிறது. ஆக, இயற்கையில் எப்பொழுதுமே கர்மம் கர்மமாகவும், அகர்மம் அகர்மமாகவும் பொருள்படுகின்றன என்று சொல்லமுடியாது. மயக்கத்தால் ஒன்றின் இயல்பு மற்றொன்றின்மீது சுமத்தப்படுகிறது. அக்ஞானியானவன் தேகத்தைத் தான் என்று வைத்துக்கொள்கிறான். "நான் இப்பொழுது வேலை செய்கிறேன்," "நான் இப்பொழுது இளைப்பாறுகிறேன்" என்று பிரகிருதியின் செயலை ஆத்மாவின் மீது ஆரோபித்து விடுகிறான். இத்தகையவன் ஒரு செயலும் புரியாது சும்மா உட்கார்ந்திருந்தாலும் அகங்காரமும் கர்த்ருத்வமும் அவனிடம் இருக்குமளவு அவன் கர்மம் செய்பவனேயாகிறான். இந்த அக்ஞான நிலை அகர்மத்தில் கர்மம் என்பதாகும். ஆத்ம சொரூபத்தை அறிந்த ஞானிக்கு அகங்காரமில்லை. அவனது உடல் ஓயாது வேலை செய்தாலும் ஆத்மா சாக்ஷியாயிருக்கிறது. ஒரு கர்மத்தோடும் அது சம்பந்தப்பட்டதல்ல. ரயில் வண்டியில் தூங்கிக்கொண்டு போனவன் நடந்தவனுமல்ல, தூக்கங்கெட்டவனுமல்ல. உடல் செய்யும் கர்மமெல்லாம் ஆத்மாவைச் சேர்வதில்லை. கர்மத்தில் அகர்மம் என்ற பெருநிலையாகும் இது. ஞானியர்க்கும் நல்ல விவேகமுடையவர்க்குமே இது சாத்தியம்.

ஸ்ரீ சங்கர பாஷ்யத்தின் சாரம்

2. கர்மம் = சரீரம் முதலானவைகளைக் கொண்டு நடைபெறும் தொழில் யாவும். அகர்மம் = ஞானம்.

ஒரு மனிதன் முறையாக உணவைச் சமைத்துக் கொண்டே வருகிறான். சமைத்தல் என்னும் கர்மம் அவனிடம் நடைபெறுகிறது. அது நாளடைவில் நன்றாய்ச் சமைத்தல் என்ற ஞானத்தில் கொண்டு சேர்க்கிறது. ஆக, கர்மத்தில் அகர்மத்தைக் காணுதல் என்பது செவ்வையாகக் கர்மம் செய்பவர்க்கு ஞானம் உண்டாகிறது என்பது அனுபவ பூர்வமாகக் காணப்படுகிறது. சமைத்தலைப் பற்றிய ஞானம் வந்த பிறகு அச்சமையல் தொழில் இன்னும் திறமையுடன் செய்யப்படுகிறது. இஃது அகர்மத்தில் கர்மத்தைக் காணுதல் எனப்பொருள்படுகிறது. இங்ஙனம் கர்மம் ஞான வளர்ச்சிக்குத் துணைபுரிகிறது; ஞானவளர்ச்சி திறமையுடன் தொழில்புரிதலைத் தோற்றுவிக்கிறது.

நல்வாழ்க்கை என்னும் கர்மம் ஆத்ம ஞானத்தை உண்டுபண்ணுகிறது. ஆத்ம ஞானம் அடைந்தவர் வாழ்க்கையை மிக மேலானதாகச் செப்பனிட்டு வாழ்கின்றனர்.

ஸ்ரீ ராமானுஜாசாரியர் பாஷ்யத்தைத் தழுவியது.

3. கர்மம் = ஜீவர்களால் செய்யப்படும் தொழில். அகர்மம் = (அ = விஷ்ணு) விஷ்ணுவின் கர்மம்.

ஜீவன் செய்கிற கர்மங்களுக்குத் தானே கர்த்தாவென்று எண்ணுகிறான். உண்மையில் அந்த கர்மங்கள் யாவும் விஷ்ணுவினுடையவைகளேயாம். தான் கர்த்தா என்ற எண்ணத்தையும் அகங்காரத்தையும் அகற்றி, தன் மூலம் நடைபெறுகிற கர்மங்களெல்லாம் பகவானுடையவைகள் என்ற எண்ணத்தில் நிலைத்திருப்பவன் கர்மத்தில் அகர்மத்தைக் காண்பவனாகிறான். சொப்பனத்தில் ஒரு ஜீவன் செய்யும் கர்மத்துக்கு அவன் கர்த்தாவல்ல. அங்கு நடைபெறுகிற கர்மங்களும் உண்மையில் விஷ்ணுவினுடையவைகளாம். சொப்பனத்தில்தான் கர்த்தா அல்லாத நிலையில் ஜீவன் அகர்மத்தில் இருக்கிறான். அப்பொழுதும்

விஷ்ணுவினுடைய கர்மம் நடைபெறுகிறதென்று உணர்பவன் அகர்மத்தில் கர்மத்தைக் காண்கிறான். மனிதன் தன்னுடைய கர்மம் என்று எண்ணிச் செய்வதும், அகங்காரமில்லாது செய்வதும் ஆகிய எல்லாக் கர்மங்களும் உண்மையில் விஷ்ணுவினுடைய கர்மங்களாகின்றன. இதை அறிந்துகொள்பவனே புத்திமான்.

ஸ்ரீ மத்வாசாரியர் பாஷ்யத்தை ஒட்டியது.

4. ஜீவனை பந்தப்படுத்துவது கர்மத்தின் இயல்பு. அகங்கார மமகாரமற்றுக் கர்மத்தை ஈசுவரார்ப்பணமாகச் செய்தால் அத்தகைய கர்மம் மனிதனை பந்தப்படுத்துவதில்லை. நிஷ்காமியமாகச் செய்யும் கர்மம் பழைய பந்தங்களையும் நீக்குகிறது. ஆக, கர்மத்தில் அகர்மத்தைக் காணுதல் என்பது பந்தத்தை உண்டுபண்ணுகிற கர்மத்தைக் கட்டவிழ்க்கும் கர்மமாக மாற்றுதல் என்று பொருள்படுகிறது.

சோம்பலால் அல்லது அறிவின்மையினால் ஒருவன் நல்வினையொன்றும் செய்யாதிருப்பானாகில் அதனால்அவனுக்குக் கேடுவிளைகிறது. கர்மபந்தமும் அவனுக்கு அதிகரிக்கிறது. நல்வினையை செய்யாதொழித்தல் அகர்மமாகிறது. அதனால் விளையும் கேடு கர்மமெனப்படுகிறது. இங்ஙனம் அகர்மத்தில் கர்மத்தைக் காணுதல் விவேகியினுடைய செயலாகிறது.

ஸ்ரீதரர் பாஷ்யத்தின் கருத்து.

5. சந்தடி நிறைந்துள்ள சமூகவாழ்க்கை, நிசப்தமான ஏகாந்தவாழ்க்கை ஆகிய இரண்டிலும் மனது பண்பட்டிருக்கவேண்டும்.

கர்மத்தில் அகர்மம்=யுத்தம் புரிதலும், அதற்கு ஒப்பானதுமாகிய பல்வேறு அலுவல்களுக்கிடையே மனது ஓரே சாந்த சொரூபமாயிருத்தலாம். அகர்மத்தில் கர்மம்=வெளிப்பார்வைக்கு வினையாற்றுதல் என்பது ஒன்றுமில்லாமல் ஏகாந்தமாக ஒரு குகையில் அமர்ந்திருக்கையில் மனது

தைலதாரை போன்று இடையறுது ஈசுவரனை நாடிச் செல்லுதல் என்ற சிறந்த கர்மத்தைச் செய்கிறது.

ஒரு சார்பாகப் பண்பட்ட மனது அரைகுறையானது. சிலர் ஏகாந்த வாசத்தில் நன்கு பயிற்சியடைந்திருக்கின்றனர். அத்தகையவர் சமூகக் குழப்பத்துக்கிடையில் வந்தால் தடுமாற்றமடைகின்றனர். இன்னும் சிலர் சர்வகாலமும் ஜனக் கூட்டத்துக்கிடையில் வாழ்ந்து வருகின்றனர். சிறிது நேரமாவது தனியாயிருக்க இவர்களுக்கு இயலுவதில்லை. இவர்களை ஏகாந்த வாசத்தில் வைத்தால் விரைவில் பைத்தியம் பிடித்துவிடும். தனியாக வசித்திருக்க மட்டும் தெரிந்து கொண்டவர், சமூகத்தைச் சார்ந்திருத்தலை மாத்திரம் தெரிந்துகொண்டவர், ஆகிய இவ்விருதிறத்தாரும் அரைகுறையான பயிற்சி பெற்றவர்களே. ஏகாந்தத்தில் ஈசுவர சிந்தனை என்ற சிறந்த செயல் நடைபெறுகிறது. சமூகச் சந்தடிக்கிடையில் சாந்தமே சித்தமிசை குடிகொள்கிறது. இப்படி இருவித இயல்பிலும் பயிற்சி பெற்றவரே நிறை மனிதர் ஆகின்றனர்.

சுவாமி விவேகானந்தர் கருத்து.

6. ஸ்ரீ கிருஷ்ணனும் அர்ஜுனனும் அமர்க்களத்துக்கு வருகிறார்கள். பகவான் தேர் ஓட்டுகிறார். பார்த்தன் போருக்கு ஆயத்தமாக வருகிறான். யாரை எதிர்த்து எத்தகைய போர் புரிந்தாகவேண்டும் என்ற எதார்த்தம் இப்பொழுதுதான் அர்ஜுனனுக்கு திடீரென்று விளங்குகிறது. எட்ட எறிகிறான் அம்பையும் வில்லையும். “வேண்டாம் இவ்வெம்போர்” என்று விளம்புகிறான். செயலற்று சும்மா உட்கார்ந்து விடுகிறான்.

ஒன்றோடொன்று ஒவ்வாத இரண்டு விதக் காட்சிகளை இப்பொழுது பகவானும் பார்த்தனும் தருகிறார்கள். கர்மத்தில் அகர்மத்துக்கு விளக்கமாக வந்தமைகிறது பகவானது பெற்றி. தேர்கட்வும் கடமை அவருடையது. அதில் பூட்டியுள்ள வேகம் வாய்ந்த வெண்குதிரை நான்கை

யும் இடது கையில் அவர் கெட்டியாகக் கயிற்றால் பிடித்துக்கொண்டிருக்கிறார். கீதோபதேசம் செய்வதன் புறச் சின்னமாக வலது கையில் அவர் சின்முத்திரை தாங்கியிருக்கிறார். கைகள் இரண்டும் இப்படிச் செயலில் ஈடுபட்டிருக்கையில் முகவிலாசம் மற்றொரு காட்சி தருகிறது. அங்குச் சாந்தி தவழ்கிறது. மனம் மலைபோன்று அசையாதிருக்கிறது என்று அது விளக்குகிறது. கர்மம் பிரகிருதியோடு சேர்ந்தது, புருஷன் கர்மம் செய்வதில்லை என்ற பேருண்மையை ஸ்ரீ கிருஷ்ணன் என்று பெயர் பூண்டுள்ள மூர்த்தியானவர் விளக்குகிறார். விரைந்து வினையாற்றுதற்கிடையில் விச்ராந்தி—கர்மத்தில் அகர்மம் என்ற கோட்பாட்டுக்கு அவரே சான்றாகின்றார்.

இனி, அர்ஜுனன் அம்பையும் வில்லையும் எறிந்து விட்டுச் செயலற்றிருப்பவனாகத் தென்படுகிறான். பெயரளவில் வினையைத் துறந்துவிட்டான். அவனுக்கு மனதுக்குள் ஒரே குழப்பம். அச்சம் ஒருபுறம் அவனை அல்லற்படுத்துகிறது. மற்றொருபுறம் துன்பம் தேகத்தைத் துளைக்கிறது. அகத்தின் நிலைகுலைவு அவன் முகத்தில் மிளிர்கிறது. கர்மத்தைத் துறந்தவனாகத் தென்படுபவன் கர்மத்தில் காய்கிறான். அவனது நிலை அகர்மத்தில் கர்மமாகும்.

உலக வாழ்க்கையை யோகி ஒருவன் எங்ஙனம் நடாத்த வேண்டும் என்று யோகேசுவரனாகிற கிருஷ்ணன் தாமே நடாத்திக் காட்டுகிறார். முறை தெரியாது மனிதன் ஏமாற்றம் அடைந்துவிடலாகாது என்பதற்கு அர்ஜுனனுடைய கீழ்நிலையே எடுத்துக்காட்டாகும். எல்லா பாஷ்யங்களினுடைய உட்கருத்தும் இவ்விருவர் தரும் காட்சியில் அடங்கப் பெற்றிருக்கின்றன. இவைகளைத் துருவி ஆராய்பவன் புத்திமானாகிறான்; அவன் சிறந்த யோகியாவான். முக்தி ஈறாக இகபர மிரண்டையும் பெறவல்லவனும் அவனே.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் வெளித்தோற்றத்தில் அகர்மத்தில் இருந்தார். உள்ளே கடவுள் நாட்டம் என்ற பெரிய

கர்மம் நடைபெற்றது. விவேகானந்தர் லோகஹிதம் என்ற பெரிய கர்மத்துக்கிடையில் உள்ளே ஆத்ம சொரூபம் என்ற அகர்மத்தில் நிலைத்திருந்தார்.

தூணைப் பிடித்துக்கொண்டிருக்கும் பையன், கீழே விழுந்து விடுவோம் என்ற பயம் கொஞ்சமுமில்லாமல், கன வேகத்துடன் அதைச் சுற்றிச் சுற்றி வருகிறான். அதுபோலவே, ஈசுவரனிடம் மனத்தைத் திடமாக நிறுத்திவிட்டு, நீ உனது காரியங்களைச்செய். அப்போது உனக்கு அபாயங்களே நேரமாட்டா.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**यस्य सर्वे समारम्भाः कामसङ्कल्पवर्जिताः ।**
**ज्ञानाग्निदग्धकर्माणं तमाहुः पण्डितं बुधाः ॥ १९**

யஸ்ய ஸர்வே ஸமாரம்பா: காமஸங்கல்பவர்ஜிதா: ।
ஞானாக்னிதக்தகர்மாணம் தமாஹு: பண்டிதம் புதா: ॥ 19

यस्य யஸ்ய *யாருடைய* सर्वे ஸர்வே *சகல* समारम्भाः ஸமாரம்பா: *கர்மங்களும்* कामसङ्कल्पवर्जिताः காமஸங்கல்பவர்ஜிதா: *காமமும் சங்கற்பமும் அற்றிருக்கிறதோ* ज्ञानाग्निदग्धकर्माणं ஞானாக்னிதக்தகர்மாணம் *ஞானத் தீயால் எரிக்கப்பட்ட கர்மத்தையுடைய* तं தம் *அவனை* पण्डितं பண்டிதம் *பண்டிதன் என்று* बुधाः புதா: *ஞானிகள்* आहुः ஆஹு: *சொல்லுகிறார்கள்.*

***எவனது கர்மங்கள் எல்லாம் ஆசையும் சங்கற்பமும் அற்றனவோ, எவனது கர்மங்கள் ஞானத் தீயால் எரிக்கப்பட்டனவோ, அவனைப் பண்டிதன் என்று ஞானிகள் பகர்கிறார்கள். 19***

கயிறு ஒன்று கட்டுதற்கு உதவுகிறது. அக்கயிறு வெந்து பஸ்மமானபிறகு பழைய வடிவத்தை உடைத்திருக்கிறது. எனினும் அது கட்டுதற்கு உதவாது. கர்மமானது ஆசையினால் தூண்டப் பெற்றதாயிருக்கும்பொழுதும், அது சங்கற்பத்தில் தோய்ந்திருக்கும்பொழுதும் மனிதனைப் பிணிக்க வல்லதாகிறது. சர்வேசுவரனது அருளால் வந்த கர்மங்கள் சர்வேசுவரன் என்ற அக்கினியில் ஆகுதியாக அர்ப்பிக்கப்பட்டுள்ளன என்ற எண்ணத்துடன் கர்

மம் செய்கிறவனுக்கு அகங்காரம் இல்லை; தான் கர்த்தா என்ற எண்ணமும் இல்லை; ஆகையால் அவன் ஓயாது வினையாற்றினாலும் வினை என்னும் தளையில் பிணிக்கப்பட்டவன் அல்லன். அவனைப் பேரறிஞன் என்று ஞானிகள் பகர்கின்றனர். கர்மத்துக்கிடையில் அகர்மம் அவன்பால் எங்ஙனம் திகழ்கிறது எனின் :—

**त्यक्त्वा कर्मफलासङ्गं नित्यतृप्तो निराश्रयः ।**
**कर्मण्यभिप्रवृत्तोऽपि नैव किञ्चित्करोति सः ॥ २०**

த்யக்த்வா கர்மபலாஸங்கம் நித்யத்ருப்தோ நிராச்ரய: ।
கர்மண்யபிப்ரவ்ருத்தோऽபி நைவ கிஞ்சித்கரோதி ஸ: ॥ 20

कर्मफलासङ्गं கர்மபலாஸங்கம் *வினைப்பயனில் ஆசையை* त्यक्त्वा த்யக்த்வா *துறந்து* नित्यतृप्तः நித்யத்ருப்த: *எப்பொழுதும் திருப்தியுடையவன்* निराश्रयः நிராச்ரய: *எதையும் சாராதவனாய்* कर्मणि கர்மணி *கர்மத்தில்* अभिप्रवृत्तः अपि அபிப்ரவ்ருத்த: அபி *பிரவிருத்தித்திருந்தபோதிலும்* सः ஸ: *அவன்* किञ्चित् एव கிஞ்சித் ஏவ *எதையாயினும்* न करोति ந கரோதி *செய்தவன் அல்லன்.*

***வினைப்பயனில் பற்றற்றவனாய், நித்திய திருப்தனாய், எதையும் சாராதவனாய் இருப்பவன் கர்மத்தில் ஈடுபட்டாலும் அவன் கர்மம் செய்தவன் அல்லன். 20***

*அகர்மம் எது என்பதைப் புறத்தேதென்படும் செயலற்ற காட்சி விளக்காது. அகத்தில் உள்ள மனநிலை ஒன்றே அகர்மத்துக்கு விளக்கமாகும். தபால்காரன் ஒருவன் பணம் கொண்டுவந்து செலுத்தி ஒருவரை மகிழ்வூட்டுகிறான். நற்செய்தி அடங்கப்பெற்ற கடிதம் கொடுத்து இன்பம் விளைவிக்கிறான். மற்றொருவர்க்கு இழவு செய்திகொண்ட கடிதம் கொடுத்துத் துன்பம் விளைவிக்கிறான். இப்படி இன்ப துன்பங்களை வழங்கும் வினைகளில் அவன் பற்றுடையவன் அல்லன். இங்ஙனம் யோகி ஒருவன் தன் அலுவல்களெல்லாம் சர்வேசுவரனது ஆராதனையென்று கருதி, ஆசையைத்*

துறந்து அவைகளை நன்கு செய்துமுடிக்கிறான். பற்று இன்மையினால் அவன் நித்திய திருப்தனாகிறான். கர்ம பலனில் ஆசையில்லாது தன் கடமையைச் செய்பவர்க்கு அரசன் முதல் ஆண்டிவரையில் யாரையும் சார்ந்திருக்கவேண்டிய அவசியமில்லை. இத்தகைய மனநிலையுடையவன் கர்மத்துக் கிடையில் அகர்மத்தில் நிலைத்திருப்பவன் ஆகிறான்.

ஆத்ம ஞானத்துக்கு ஞான சாதனைகள் மிகவும் அவசியம். ஆனால் விசுவாசம் பூரணமாக இருந்தால், கொஞ்ச அப்பியாசமே போதுமானதாக இருக்கும்.

ஒரு சமயத்தில் வியாஸர் யமுனை நதியைக் கடந்துபோக இருந்தார். அதே தருணத்தில் கோபிகாஸ்திரீகளும் அங்கு வந்தனர். ஆனால் ஓடக்காரன் ஒருவனுமில்லை. ஆதலால் அவர்கள் வியாஸரை நோக்கி "சுவாமீ! இப்போது என்னசெய்கிறது?" என்று கேட்டனர். அதற்கு வியாஸர் "விசாரப்படவேண்டாம். நான் உங்களை அக்கரைக்கு அழைத்துச் செல்கின்றேன். ஆனால், எனக்குப் பசியாக இருக்கிறது. உங்களிடம் ஏதாவது தின்பண்டம் இருக்கிறதா?" என்றார். கோபிகா ஸ்திரீகள், தாங்கள் வைத்திருந்த பால், ஏடு, வெண்ணெய் எல்லாவற்றையும் கொடுக்க, வியாஸர் அவைகளை வாங்கிப் புசித்தார். பிறகு கோபிகள், "ஆற்றைக் கடப்பது எப்படி?" என்று கேட்க, வியாஸர் ஆற்றங் கரையில் நின்றுகொண்டு, "யமுனா தேவி! நான் இன்று உபவாஸமிருப்பது மெய்யானால் நீ எங்களுக்கு வழிவிடவேண்டும்; நாங்கள் ஆற்றைக்கடந்து அக்கரை போய்ச் சேருகிறோம்" என்று பிரார்த்தித்தார். அப்படிப் பிரார்த்தித்தவுடன் யமுனை நதியின் ஜலத்தில் ஒரு பிளவு உண்டாகியது; தரை தெரிந்தது. கோபிகளுக்கு அதியாச்சரியமுண்டாயிற்று. அவர்கள் கொடுத்த பால் முதலியவற்றை வியாஸர் வாங்கிப் புசித்திருக்க அவர் "இன்று உபவாஸமிருப்பது மெய்யானால்" என எப்படிச் சொல்லக்கூடும் என்று அவர்கள் நினைத்தனர். அந்தப் பண்டங்களைப் புசித்தது அந்தர்யாமியான ஈசுவரனே தவிர வியாஸரல்லர். இந்த விஷயத்தில் வியாஸருக்கு இருந்த விசுவாசத்தின் பலத்தினால் அவர் அப்படிச் சபதம் பண்ணினார் என்பதைக் கோபிகா ஸ்திரீகள் தெரிந்துகொள்ளவில்லை.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

யோகியின் மனநிலை மேலும் விளக்கப்படுகிறது :—

**निराशीर्यतचित्तात्मा त्यक्तसर्वपरिग्रहः ।**
**शारीरं केवलं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम् ॥ २१**

நிராசீர்யதசித்தாத்மா த்யக்தஸர்வபரிக்ரஹ: ।
சாரீரம் கேவலம் கர்ம குர்வன்னுப்னோதி கில்பிஷம் ॥ 21

निराशीः நிராசீ: *ஆசையற்றவன்* यतचित्तात्मा யதசித்தாத்மா *மனதையும் உடலையும் அடக்கினவன்* त्यक्त सर्वपरिग्रहः த்யக்த ஸர்வ பரிக்ரஹ: *பொருள்களை யெல்லாம் துறந்தவன்* केवलं शारीरं कर्म கேவலம் சாரீரம் கர்ம *வெறும் உடலை மட்டும் கொண்டு வினையை* कुर्वन् குர்வன் *செய்கிறவன்* किल्बिषं கில்பிஷம் *பாபத்தை* न आप्नोति ந ஆப்னோதி *அடைகிறதில்லை.*

***ஆசையற்றவன், மனதையும் உடலையும் அடக்கினவன், உடைமைகளைத் துறந்தவன், வெறும் உடலால் வினையாற்றுபவன் பாபத்தை அடைவதில்லை.*** **21**

ஆத்ம வளர்ச்சிக்குத் தடையாக பந்தத்தை உண்டு பண்ணும் கர்மம் பாபமெனப்படுகிறது. எந்த யோகிக்குப் பாபமில்லை? ஆசையை அறவே அகற்றியவனுக்குப் பாபமில்லை. ஆசை என்னும் வேகம் கெடுமிடத்து அந்தக்கரணம், பாகியகரணம், உடல் ஆகிய யாவும் ஒழுங்காகி விடுகின்றன. காற்றை எம்மனிதனும் தனக்காகவென்று அலாதியாக எடுத்து வைத்துக்கொள்வதில்லை. அங்ஙனம் யோகி எப்பொருளையும் தனக்காகவென்று அலாதியாகத் தேடியோ அல்லது தானமாக வாங்கியோ வைத்துக்கொள்வதில்லை. ஒரு பொருளுக்கும் உரிமை பாராட்டாதிருப்பது அபரிக்கிரஹம் எனப்படும். உடலுக்கு வலிவு இருக்குமளவு அதைக்கொண்டு உழைக்கலாம். வேண்டியவளவு ஓய்வு எடுத்துக்கொள்ளலாம். உழைப்புக்கென்றே ஏற்பட்ட உடல் வீணாய்க்கிடந்து கெட்டுப்போய்விடலாகாது. தேகம் தொழில் புரிகையில் மனத்துக்கண் "நான் கர்த்தா" என்ற விகாரம் ஒன்றும் ஏற்பட்டுவிடலாகாது. ஸ்ரீ கிருஷ்ண பகவானும் மற்ற அவதார புருஷர்களும் உடல் தாங்கியிருந்தபாங்கே இதற்குச் சான்றாகும்.

*பொருளினிடத்து உரிமை பாராட்டாதவனுக்கு உடல் வாழ்க்கை எங்ஙனம் நடைபெறும் என்ற கேள்வி பிறக்கலாம். அதற்கு விடை வருகிறது :—*

**यदृच्छालाभसंतुष्टो द्वन्द्वातीतो विमत्सरः ।**
**समः सिद्धावसिद्धौ च कृत्वापि न निबध्यते ॥ २२**

யத்ருச்சாலாப ஸந்துஷ்டோ த்வந்த்வாதீதோ விமத்ஸர: ।
ஸம: ஸித்தாவஸித்தௌ ச க்ருத்வாபி ந நிபத்யதே ॥ 22

यदृच्छा लाभ सन्तुष्टः யத்ருச்சா லாப ஸந்துஷ்ட: *தற்செயலாய்க் கிடைப்பதில் திருப்தியடைபவன்* द्वन्द्वातीतः த்வந்த்வாதீத: *இருமைகளைக் கடந்தவன்* विमत्सरः விமத்ஸர: *பொறாமையில்லாதவன்* सिद्धौ असिद्धौ च ஸித்தௌ அஸித்தௌ ச *வெற்றியிலும் தோல்வியிலும்* समः ஸம: *மனதை நடுவு வைத்தவன்* कृत्वा अपि க்ருத்வா அபி *கர்மம் செய்தாலும்* न निबध्यते ந நிபத்யதே *பந்தப்படுவதில்லை.*

***தற்செயலாய்க் கிடைப்பதில் திருப்தியடைபவன், இருமைகளைக் கடந்தவன், பொறாமையில்லாதவன், வெற்றியிலும் தோல்வியிலும் நடுவு நிற்பவன் கர்மம் செய்தாலும் கட்டுப்படுவதில்லை. 22***

*தான் முயற்சியெடுத்துக்கொண்டாலொழியத் தனக்குப் பொருள்வந்து கைகூடாது என்று எண்ணுபவன் தன் கர்மத்துக்குக் கர்த்தாவாகிறான். இவ்வெண்ணம் அக்ஞானத்தினின்று உதிப்பதாகும். தனது உடலின் தேவைகளைப் பற்றி எண்ணுதிருக்குமளவு ஒருவன் ஆத்ம சாதனத்துக்குத் தகுதியுடையவனாகிறான். அவன் தேவைகளைக் கவனித்துக்கொள்வது ஈசுவரனுடைய பொறுப்பாகிறது. ஈசுவரப்பிரீதியாக எது வந்து அமைகிறதோ அதைக் கொண்டு சாதகன் திருப்தியடைகிறான். குளிர் வெப்பம், வெற்றி தோல்வி இவைபோன்ற இருமைகளில் எது வந்து வாய்த்தாலும் அது ஈசுவரப் பிரசாதம் என்றே சாதகன் நினைக்கிறான். அந்நினைவால் அவன் இருமைகளை வென்றவனாகிறான். மற்றவர்களுக்குக் கிடைக்கும் லாபம் லௌகி*

கன் ஒருவன் உள்ளத்தில் பொறுமைக்கு இடம் கொடுக்கிறது. சாதகன் ஒருவனே அதுவும் இறைவனது ஆணையென்று கருதி மகிழ்வடைகிறான். ஈசுவர கிருபையால் எல்லாம் நடைபெறுகிறது என்று அவன் முயற்சியற்றிருப்பதில்லை. தான் செய்யவேண்டிய முயற்சிகளையெல்லாம் செய்துகொண்டேயிருக்கிறான். அம்முயற்சியால் வரும் வெற்றியும் தோல்வியும் தனதல்லவென்று அவன் நடுவு நிற்கிறான். இத்தகைய பான்மையுடையவனுக்குக் கர்ம பந்தம் ஒன்றும் கிடையாது.

गतसङ्गस्य मुक्तस्य ज्ञानावस्थितचेतसः ।
यज्ञायाचरतः कर्म समग्रं प्रविलीयते ॥ २३

கதஸங்கஸ்ய முக்தஸ்ய ஞானாவஸ்திதசேதஸ: |
யக்ஞாயாசரத: கர்ம ஸமக்ரம் ப்ரவிலீயதே || 23

गतसङ्गस्य கதஸங்கஸ்ய *பற்றில்லாதவனுடைய* मुक्तस्य முக்தஸ்ய *முக்தியடைந்தவனுடைய* ज्ञानावस्थितचेतसः ஞானாவஸ்தித சேதஸ: *ஞானத்திலே உறுதிபெற்ற மனத்தை உடையவனுடைய* यज्ञाय आचरतः யக்ஞாய ஆசரத: *யக்ஞத்தின் பொருட்டு கர்மம் செய்பவனுடைய* समग्रं कर्म ஸமக்ரம் கர்ம *எல்லாக் கர்மமும்* प्रविलीयते ப்ரவிலீயதே *கரைந்துபோகிறது.*

**பற்றிலனாய், முக்தனாய், ஞானத்தில் மனதை உறுதிப்படுத்தினவனாய், கடமையை யக்ஞமாகச் செய்பவனுடைய கர்மம் முழுதும் கரைந்து போகிறது. 23**

பந்தமும் முக்தியும் மனதைப் பொறுத்தனவாம். பகவத் பிரீதியின் பொருட்டுக் கர்மம் செய்பவன் யாகம் செய்தவனாகிறான். மனப்பற்று நீங்கிய பின் எவ்வளவு கர்மம் செய்தாலும் கேடு ஒன்றும் உண்டாவதில்லை. கடலுக்குள்ளே கொட்டிய உப்புப்போன்று கர்மம் பந்தத்தை உண்டுபண்ணாது கரைந்து போகிறது.

முதலில் உள்ளங்கைகளில் எண்ணெயைத் தடவிக்கொண்டு பலாப்பழத்தை அறுத்துச்சுளைகளை எடுப்பாயானால் பிசின் உன்கையில்

*ஒட்டிக்கொண்டு தொந்தரை செய்யாது. அதுபோல, முதலில் பரமாத்மாவைப் பற்றிய ஞானத்தால் உனக்குப் பாதுகாப்பை யுண்டாக்கிக் கொண்டு செல்வம் முதலான உலகப் பொருள்களினிடையே நீ வசித்தால், அவைகளில் நீ எவ்வழியிலும் வசப்படமாட்டாய்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**ब्रह्मार्पणं ब्रह्महविर्ब्रह्माग्नौ ब्रह्मणा हुतम् ।**
**ब्रह्मैव तेन गन्तव्यं ब्रह्मकर्मसमाधिना ॥ २४**

ப்ரஹ்மார்ப்பணம் ப்ரஹ்மஹவிர்
　ப்ரஹ்மாக்னௌ ப்ரஹ்மணு ஹுதம் ।
ப்ரஹ்மைவ தேன கந்தவ்யம்
　ப்ரஹ்ம கர்ம ஸமாதிஞ ॥ 24

अर्पणं அர்ப்பணம் *அர்ப்பணம் செய்தல்* ब्रह्म ப்ரஹ்ம *பிரம்மம்* हविः ஹவி: *நெய் முதலிய ஹவிஸ்* ब्रह्म ப்ரஹ்ம *பிரம்மம்* ब्रह्माग्नौ ப்ரஹ்மாக்னௌ *பிரம்மமாகிய அக்கினியில்* ब्रह्मणा ப்ரஹ்மணு *பிரம்மத்தால்* हुतं ஹுதம் *கொடுக்கப்படுகிறது* ब्रह्मकर्मसमाधिना ப்ரஹ்மகர்மஸமாதிஞ *பிரம்மமாகிய கர்மத்தில் மனங்குவிந்துள்ள* तेन தேன *அவனுல்* ब्रह्म एव ப்ரஹ்ம ஏவ *பிரம்மமே* गन्तव्यं கந்தவ்யம் *அடையப்படுகிறது.*

***அர்ப்பணம் செய்தல் பிரம்மம்; நெய் முதலிய ஹவிஸும் பிரம்மம்; பிரம்மமாகிய அக்னியில் பிரம்மத்தால் கொடுக்கப்படுகிறது. பிரம்மமாகிய கர்மத்தில் மனங்குவிந்துள்ளவனுல் பிரம்மமே அடையப்படுகிறது.*** **24**

*தன்னைக் கர்த்தாவாக அஹங்கரித்து யாகம் செய்பவனுக்கு பேதபுத்தியிருக்கிறது. யாகம் செய்கிற தன்னை எஜமானனென்றும், யாகத்துக்குரிய தீ யென்றும், திரவியம் என்றும், அதை ஏற்றுக்கொள்ளும் தேவதையென்றும் வேற்றுமை பாராட்டுகிறுன். ஆனுல் ஞானயக்ஞத்தில் நிலைபெற்றிருப்பவனுக்கு தான், தீ, திரவியம், தேவதை, யாகம் ஆகிய அனைத்தும் பிரம்ம சொரூபமேயாம்.*

*ஆகாரத்தை ஏற்றுக்கொள்ளுதல் ஞானிக்கு இன்றியமையாத நித்திய கர்மமாகிறது. அந்த நித்திய கர்மத்*

தையே அவன் ஞான யக்ஞமாகக் கருதுகிறான். உண்ணும் உணவு பிரம்மம், உண்ணுதல் என்ற செயலும் பிரம்மம்; உண்கிறவனும் பிரம்மம்; அதைச் செமிக்கும் உதிரக் கனலும் பிரம்மம். இங்ஙனம் பிரம்ம நிஷ்டையில் நிலைநின்று ஒருவன் பிரம்மத்தை அடைகிறான்.

**दैवमेवापरे यज्ञं योगिनः पर्युपासते ।**
**ब्रह्माग्नावपरे यज्ञं यज्ञेनैवोपजुह्वति ॥ २५**

தைவமேவாபரே யக்ஞம் யோகின: பர்யுபாஸதே ।
ப்ரஹ்மாக்னாவபரே யக்ஞம் யக்ஞேனைவோபஜுஹ்வதி ॥ 25

अपरे योगिनः அபரே யோகின: *மற்ற யோகிகள்* दैवं एव தைவம் ஏவ *தேவதைகளுக்கே* यज्ञं யக்ஞம் *யக்ஞத்தை* पर्युपासते பர்யுபாஸதே *செய்கிறார்கள்* अपरे அபரே *இன்னும் சிலர்* ब्रह्माग्नौ ப்ரஹ்மாக்னௌ *பிரம்மமாகிய அக்கினியில்* यज्ञेन एव யக்ஞேன ஏவ *ஆத்மாவினாலேயே* यज्ञं யக்ஞம் *ஆத்மாவை* उपजुह्वति உபஜுஹ்வதி *யாகம்செய்கிறார்கள்.*

***சில யோகிகள் தேவதைகளுக்கு யாகம் செய்கிறார்கள். இன்னும் சிலர் பிரம்மமாகிய அக்னியில் ஆத்மாவைக் கொண்டு ஆத்மாவை ஹோமம் செய்கின்றனர். 25***

*தேவதைகளை ஈசுவரனுடைய அம்சமாகக் கருதி அவர்களுக்கு யாகம் செய்வது சிலருக்கு சாதனமாகிறது. ஆத்மாவுக்கு அமைந்துள்ள பெயர்களில் யக்ஞம் என்பதும் ஒன்று. ஆக, யக்ஞத்தினால் யக்ஞத்துக்கு ஆகுதி கொடுப்பது என்பது ஆத்மாவினால் ஆத்மாவுக்கு ஹோமம் செய்தல் என்று பொருள்படுகிறது. நதி கடலில் கலந்து தன் தனி வியக்தியை இழந்து விடுகிறது. அங்ஙனம் உபாதியோடு கூடிய ஜீவாத்மாவானது அகண்ட சச்சிதானந்தமாகிய பரமாத்மாவின்கண் ஆஹுதியாகச் சமர்ப்பிக்கப்படுகிறது. அப்பொழுது ஜீவபோதம் அகன்றுபோய் பரபோதம் எஞ்சுகிறது. இதுவே ஞானிகள் செய்யும் ஞான யக்ஞமாகிறது.*

श्रोत्रादीनीन्द्रियाण्यन्ये संयमाग्निषु जुह्वति ।
शब्दादीन्विषयानन्य इन्द्रियाग्निषु जुह्वति ॥ २६

ச்ரோத்ராதீனீந்த்ரியாண்யன்யே ஸம்யமாக்னிஷு ஜுஹ்வதி ।
சப்தாதீன்விஷயானன்ய இந்த்ரியாக்னிஷு ஜுஹ்வதி ॥ 26

अन्ये அன்யே *மற்றவர்கள்* संयमाग्निषु ஸம்யமாக்னிஷு *சம்யமம் (அடக்குதல்) என்ற அக்னியில்* श्रोत्रादीनि ச்ரோத்ராதீனி *செவி முதலிய* इन्द्रियाणि இந்த்ரியாணி *இந்திரியங்களை* जुह्वति ஜுஹ்வதி *ஹோமம் செய்கிறார்கள்* अन्ये அன்யே *மற்றும் சிலர்* शब्दादीन् சப்தாதீன் *சப்தம் முதலிய* विषयान् விஷயான் *விஷயங்களை* इन्द्रियाग्निषु இந்த்ரியாக்னிஷு *இந்திரியங்கள் என்ற அக்னியில்* जुह्वति ஜுஹ்வதி *ஹோமம் செய்கிறார்கள்.*

***அடக்குதல் என்ற அக்கினியில் சிலர் செவி முதலிய இந்திரியங்களை ஹோமம் செய்கிறார்கள். மற்றும் சிலர் சப்தம் முதலிய விஷயங்களை இந்திரியங்கள் என்ற அக்கினியில் ஹோமம் செய்கிறார்கள். 26***

*சம்யமம் செய்தல் என்பது அடக்குதல் என்று பொருள்படுகிறது. இந்திரியங்கள் விஷயாதிகளில் செல்லாது அடக்குதல் ஒருவித யாகம். இந்திரியங்கள் விஷயங்களில் பொருந்தும்படி செய்தல் மற்றொருவித யாகம். இதில் முரண்பாடு ஒன்றுமில்லை.*

*இந்திரியங்கள் இந்திரியார்த்தங்களிலே பற்றுதலோடு செல்லுதல் அவைகளின் இயல்பு. பொறிவாயில் ஐந்தும் அவிந்து வேலைக்கு உதவாதவைகள்போல் அடங்கிவிடுங்கால் அவைகள் முறையாக சம்யமம் செய்யப்பட்டவைகளாகின்றன. இதனால் மனது ஞானத்துக்குத் தகுதியுடையதாகிறது. ஆக, இது ஒருவித யாகமாகிறது.*

*ஒவ்வொரு இந்திரியமும் ஈசுவர சம்பந்தமான விஷயத்தையே பொருள்படுத்துமாயின் அந்த இந்திரியத்தால் கேடு ஒன்றும் உண்டாவதில்லை. கண்கொண்டு பார்ப்ப*

தெல்லாம் கடவுள் சம்பந்தமானவைகள் ; காதால் கேட்ப தெல்லாம் கடவுளைப்பற்றிய சொற்களேயாம். இங்ஙனம் ஐந்து இந்திரியங்களையும் தெய்விக விஷயங்களிலேயே பிரவிருத்திக்கும்படி செய்வதால் மனது தெளிவடைகிறது. அது ஞானத்துக்குத் தகுதியுடையதாகிறது.

அடங்காத இந்திரியங்கள் இந்திரியார்த்தங்களை போகத்துக்குரியவைகளாகப் பொருள் படுத்துகின்றன. கட்டுக்கு அடங்கிய இந்திரியங்களோ இந்திரியார்த்தங்களில் செல்லுவதில்லை. அல்லது அவைகள்பாற் சென்றால் அவை களையெல்லாம் போக வஸ்துக்களென்று பொருள்படுத் தாது ஈசுவரமயமாகப் பொருள்படுத்துவனவாகின்றன. ஆக, இரண்டு விதத்திலும் ஞானயக்ஞம் கைகூடுகிறது.

**सर्वाणीन्द्रियकर्माणि प्राणकर्माणि चापरे ।**
**आत्मसंयमयोगाग्नौ जुह्वति ज्ञानदीपिते ॥ २७**

ஸர்வாணீந்த்ரியகர்மாணி ப்ராணகர்மாணி சாபரே ।
ஆத்மஸம்யமயோகாக்னௌ ஜுஹ்வதி ஞானதீபிதே ॥ 27

अपरे அபரே *மற்றவர்கள்* ज्ञानदीपिते ஞானதீபிதே *ஞான ஒளி விடுகின்ற* आत्मसंयमयोगाग्नौ ஆத்ம ஸம்யம யோகாக்னௌ *மனதை ஆத்மாவின்கண் அடக்குதல் என்ற யோகத்தீயில்* सर्वाणि ஸர்வாணி *எல்லாவிதமான* इन्द्रियकर्माणि இந்த்ரியகர்மாணி *இந்திரியகர்மங்களை யும்* प्राणकर्माणि च ப்ராணகர்மாணி ச *பிராண கர்மங்களையும்* जुह्वति ஜுஹ்வதி *ஆகுதியாகக்கொடுக்கிறார்கள்.*

***இன்னும் சிலர் இந்திரிய கர்மங்களையும், பிராண கர்மங்களையும், மனதை ஆத்மாவின்கண் அடக்குதல் என்ற ஞான ஒளி வீசும் யோகத்தீயில் ஆகுதியாகக் கொடுக்கின்றனர். 27***

எண்ணெய்வார்க்குமிடத்துத் திபம் பிரகாசிக்கிறது. அங்ஙனம் விவேகம் உதயமாகுமிடத்து ஞானதீபம் பிரகா சிக்கிறது. மனது வெளி விஷயங்களுக்கு உரியதல்ல, ஆத்மாவுக்கே உரியது என்ற எண்ணம் வலுக்குமிடத்து

அதுவே விவேகமாகும். அக்னியில் நெய்யை ஆகுதியாகப் போடுங்கால் அந்த நெய்யே அக்னியாக மாறுகிறது. மனதை ஆத்ம ஞானம் என்ற அக்னியில் சமர்ப்பித்தால் அப்படி மனதுக்கும் ஆத்மாவுக்கும் ஏற்படும் யோகம் சுடர் விட்டெரியும் தீ போன்றதாகும். மனது ஆத்ம சொரூபத்தில் ஒடுங்கவே இந்திரிய கர்மங்களும் பிராண கர்மங்களும் கொடிய செயலற்று ஆத்ம சொரூபமாய்விடுகின்றன. கீழான இயல்பை மேலான இயல்பாக மாற்றிவிடுவது இவர்கள் செய்யும் யாகமாகும். பிராண கர்மம் என்பது உடல் முழுதும் வியாபித்துள்ள உயிர்ச் சக்தியாம்.

**द्रव्ययज्ञास्तपोयज्ञा योगयज्ञास्तथापरे ।**
**स्वाध्यायज्ञानयज्ञाश्च यतयः संशितव्रताः ॥ २८**

த்ரவ்யயக்ஞாஸ்தபோயக்ஞா யோகயக்ஞாஸ்ததாபரே ।
ஸ்வாத்யாயஞானயக்ஞாஸ்ச யதய: ஸம்சிதவ்ரதா: ॥ 28

तथा ததா *அப்படியே* अपरे அபரே *சிலர்* द्रव्ययज्ञाः த்ரவ்ய யக்ஞா: *திரவிய யக்ஞம் செய்பவர்கள்* तपोयज्ञाः தபோயக்ஞா: *தபசை யாகமாகச் செய்பவர்கள்* योगयज्ञाः யோகயக்ஞா: *யோகத்தை யாகமாகச் செய்பவர்கள்* संशितव्रताः ஸம்சிதவ்ரதா: *கடுமையான விரதத்தையுடையவர்கள்* यतयः யதய: *தன்னடக்கமுடையவர்கள்* स्वाध्यायज्ञानयज्ञाः ஸ்வாத்யாய ஞானயக்ஞா: *சாஸ்திரம் கற்றல், ஞானம் பெறுதல் ஆகியவைகளை யாகமாகவுடையவர்கள்* च ச *உம்.*

***திரவிய யக்ஞம், தபோயக்ஞம், யோகயக்ஞம் செய்வர் சிலர். தன்னடக்கமும் உறுதியானவிரதமும் உடைய மற்றவர் கற்றல், அறிதல் ஆகியவைகளை யாகமாகச் செய்வர்.*** ***28***

நல்வழியில் பொருளை ஈட்டுதல், அதைப் பொது நன்மைக்கென்று பயன் படுத்துதல் ஆகியசெயல்கள் திரவிய யக்ஞமாகும். இரும்பை உருக்கிப் புதுப்பிப்பது போன்று மனதை தெய்வப் பெற்றியில் இளக்கித் தெய்வத்தன்மை வாய்ந்ததாகச் செய்வது தபசு. இப்படித் தவம்புரிதலையே

*யாகமாகச் செய்வர் சிலர். அஷ்டாங்க யோகத்தை அனுஷ்டிப்பது இன்னும் சிலர்க்கு யாகமாகிறது. தன்னடக்கம் பயிலுகிறவளவு ஒரு சாதகனுக்கு சாஸ்திர ஆராய்ச்சி பயன் படும். அத்துடன் நல்வாழ்க்கையைப் பற்றிய உறுதி யான விரதத்தைக் கையாளுதல் வேண்டும். ஆன்றோர் இயற்றிய நூல்களைக் கற்பதையும், அவைகளினின்று தான் பெற்ற அறிவை மற்றவர்களுக்கு வழங்குதலையும் யாக மாகச்செய்பவனுக்கு சாஸ்திர ஞானமும் அனுபவ ஞான மும் வளர்கின்றன. மற்றவர்களுக்கு ஒருவன் எதை எடுத்து வழங்குகின்றானோ அதுவே அவனிடத்து இன்னும் அதிகமாக வளர்கிறது. இதுதான் யாகத்தைப் பற்றிய உண்மை.*

**अपाने जुह्वति प्राणं प्राणेऽपानं तथापरे ।**
**प्राणापानगती रुद्ध्वा प्राणायामपरायणाः ॥ २९**

அபானே ஜுஹ்வதி ப்ராணம் ப்ராணேऽபானம் ததாபரே ।
ப்ராணாபானகதீ ருத்த்வா ப்ராணாயாமபராயணா: ॥ 29

तथा ததா *அப்படியே* अपरे அபரே *மற்றவர்கள்* अपाने அபானே *அபான வாயுவில்* प्राणं ப்ராணம் *பிராண வாயுவை* प्राणे ப்ராணே *பிராண வாயுவில்* अपानं அபானம் *அபான வாயுவை* जुह्वति ஜுஹ்வதி *ஹோமம் செய்கிறார்கள்* प्राणापानगती ப்ராணாபானகதீ *பிராண அபான வாயுக்களின் போக்கை* रुद्ध्वा ருத்த்வா *தடுத்து* प्राणायामपरायणाः ப்ராணாயாமபராயணா: *பிராணாயாமம் செய்வதில் கருத்துடையவர்களா யிருக்கிறார்கள்.*

***அபான வாயுவில் பிராணனையும், பிராண வாயுவில் அபானனையும் ஆகுதி செய்யும் சிலர் பிராண அபான வாயுக்களின் போக்கைத் தடுத்துப் பிராணாயாமத்தில் ஈடுபடுகின்றனர்.*** **29**

*மனதுக்கும் வாயுவுக்கும் நெருங்கிய தொடர்வு உண்டு. மனம் ஒடுங்குமிடத்து வாயு ஒடுங்கும்; வாயு ஒடுங்குமிடத்து மனம் ஒடுங்கும். மனதில் உண்டாகும்*

பயம், காமம், குரோதம் ஆகிய கெட்ட விகாரங்களுக்கு ஏற்றபடி சுவாசப் போக்குவரவு தடுமாற்ற மடைகிறது. அமைதி, அன்பு, மகிழ்வு ஆகிய நல்ல விருத்திகள் சித்தத்தில் உண்டானால் அவ்வேளைகளில் சுவாசத்தின் போக்கு வரவு ஒழுங்காக நடைபெறுகிறது. இனி, சுவாசத்தின் போக்கு வரவை ஒழுங்குப்படுத்தினால் அதற்கு ஏற்றபடி மனது தெளிவடைகிறது. இத் தத்துவத்தை அறிந்து கையாளு பவர் பிராணாயாமத்தில் ஈடுபடுபவர் ஆகின்றனர்.

வாய் வழியாக சுவாசிக்கலாகாது ; நாசித்துவாரங் களிலேயே சுவாசித்தல் வேண்டும். நாசியில் உட்கொள் ளும் வாயுவுக்கு அபானன் என்று பெயர். நாசியில் வெளிப்படுத்தும் வாயுவுக்குப் பிராணன் என்று பெயர். அபானனை உள்ளுக்கு இழுப்பதைப் 'பூரகம்' என்று சொல்லுவார்கள். பிராணனை வெளியில் விடுவது 'ரேசகம்' என்பர். பூரகம் அல்லது ரேசகம் செய்தான பிறகு வாயுவை உள்ளே அல்லது வெளியில் அடக்குதல் 'கும்பகம்' எனப் படும். இந்த முறையை முரட்டுத்தனமாக உபயோகிப்பவர் நாடி நரம்புகளின் வலிவை இழந்து, மண்டையிடி முதலிய நோய்களுக்கு ஆளாகிறார்கள்.

பிரசாந்தமான மனதையுடைய யோகி சிரமப்படாது அளவெடுத்தாற்போன்று ஆழ்ந்து சுவாசிக்கவேண்டும். கும்பகம் பெரிதும் எல்லார்க்கும் பொருந்தாது. பிராணன், அபானன் ஆகிய இரண்டையும் ஒன்றில் ஒன்றை ஆகுதி செய்வது போன்று (அதாவது கொழுந்துவிட்டு எரியும் தீயில் நெய்யை இலேசாகச் சொரிவது போன்று) சுவாசிப் பது சிறந்த பிராணாயாமம் ஆகிறது.

நன்றாக நடப்பவன் கால்களைப்பற்றிய உணர்ச்சியில் லாது நடப்பது போன்று, நன்றாகப் பிராணாயாமம் செய் பவன் சுவாசத்தைப் பற்றிய உணர்ச்சியில்லாது ஒழுங் காகச் சுவாசிக்கிறான். அவனே பிராணாயாமத்தில் முறை யாக ஈடுபட்டவன் ஆகிறான். மனது தெளிவு அடையு

*மளவு பிராணுயாமம் இயல்பாக நடைபெறுகிறது.*

अपरे नियताहाराः प्राणान्प्राणेषु जुह्वति ।
सर्वेऽप्येते यज्ञविदो यज्ञक्षपितकल्मषाः ॥ ३०

அபரே நியதாஹாரா: ப்ராணுன்ப்ராணேஷு ஜுஹ்வதி ।
ஸர்வேऽப்யேதே யக்ஞவிதோ யக்ஞக்ஷபிதகல்மஷா: ॥ 30

अपरे அபரே *சிலர்* नियताहाराः நியதாஹாரா: *முறையாக உண்பவர்களாய்* प्राणान् ப்ராணுன் *பிராணன்களின் செயல்களை* प्राणेषु ப்ராணேஷு *பிராணன்களில்* जुह्वति ஜுஹ்வதி *ஆகுதியாகக் கொடுக்கிறார்கள்* यज्ञविदः யக்ஞவித: *யக்ஞத்தை அறிந்த* एते सर्वे अपि ஏதே ஸர்வே அபி *இவர்கள் எல்லோரும்* यज्ञ क्षपित कल्मषाः யக்ஞ க்ஷபித கல்மஷா: *யக்ஞங்களால் பாபம் நீங்கப்பெற்றவர்களாகிறார்கள்.*

***முறையாக உண்பவர் சிலர் பிராணனில் பிராணனைப் படைக்கின்றனர். யாகத்தை அறிந்த இவர்கள் எல்லோரும் யாகத்தால் பாபத்தைப் போக்கியவர்களாம்.*** ***30***

*யோகி ஒருவனுக்கு உண்டி சுருங்கில் உபாயம் பலவுள. உண்பதின் மூலம் உயிரை உயிருக்கு அவன் ஆகுதியாகக்கொடுக்கிறுன். இரத்தம் குறைந்துள்ள ஒரு சரீரத்துக்கு மற்றொரு சரீரத்திலிருந்து இரத்தம் எடுத்து அப்போதைக்கப்போதே செலுத்திஞல் வலிவும் ஊக்கமும் உண்டாகிறது. இது நவீன மருத்துவம் கையாளும் ஒரு சிறந்த முறையாகிறது உண்மையில் இயற்கையெங்கும் உயிரைக் கொண்டே உயிர் வளர்கிறது. உயிர் அனைத்தையும் ஒரு பேருயிராகக் கருதி அதன்பொருட்டு அளவு எடுத்தாற்போன்று உணவைக் கொடுக்கவும் வாங்கவும் செய்பவன் பிராணனில் பிராணனைச் சொரிகிறுன். உயிர் வாழ்க்கையே அவனுக்கு ஒரு யாகமாகிறது.*

*இதுபரியந்தம் (25வது சுலோகத்திலிருந்து 29வது சுலோகம் வரையில்) விதவிதமான யாகங்கள் விளக்கப்பட்டன. மக்களுள் இயல்பு வேறுபாடு ஏராளமாயுண்டு. அவ*

ரவர் இயல்புக் கேற்றவாறு வெவ்வேறு யாகங்களைச்செய்ய மக்கள் கடமைப்பட்டிருக்கின்றனர். உலகபந்தம் என்னும் பாபத்தினின்று விடுபடுதற்கு யாகம் செய்தல் ஒன்றே உற்ற உபாயம்.

அது எப்படி எனில் :—

**यज्ञशिष्टामृतभुजो यान्ति ब्रह्म सनातनम् ।**
**नायं लोकोऽस्त्ययज्ञस्य कुतोऽन्यः कुरुसत्तम ॥ ३१**

யக்ஞசிஷ்டாம்ருதபுஜோ யாந்தி ப்ரஹ்ம ஸநாதனம் ।
நாயம் லோகோऽஸ்த்யயக்ஞஸ்ய குதோऽன்ய: குருஸத்தம ॥ 31

कुरुसत्तम குருஸத்தம *குருவம்ச சிரேஷ்டனே* यज्ञशिष्टामृतभुजः யக்ஞசிஷ்டாம்ருதபுஜ: *யக்ஞத்தில் எஞ்சியிருக்கும் அமிர்தத்தைப் புசிப்பவர்கள்* सनातनं ब्रह्म ஸநாதனம் ப்ரஹ்ம *நித்தியப்பொருளாகிய பிரம்மத்தை* यान्ति யாந்தி *அடைகிறார்கள்* अयज्ञस्य அயக்ஞஸ்ய *யக்ஞம் செய்யாதவனுக்கு* अयं लोकः அயம் லோக: *இவ்வுலகம்* न अस्ति ந அஸ்தி *இல்லை* अन्यः அன்ய: *மற்றது* कुतः குத: *ஏது ?*

***குருகுல சிரேஷ்டா, யக்ஞத்தெஞ்சும் அமுதுண்போர் அழியாப் பொருளாகிய பிரம்மத்தையடைகிறார்கள். யக்ஞம் செய்யாதவர்க்கு இவ்வுலகே இல்லையென்றால் அவ்வுலகேது ? 31***

*மனிதன் எத்தொழிலைச் செய்தாலும் அதனால் உலகம் எல்லா நன்மைகளையும் அடையவேண்டும். தன்னலம் பின்னணிக்குத் தள்ளப்படுமளவு அவன் அருந்துவது அமிர்தம். தான், தனது என்ற ஜீவபோதத்தைத் துறப்பதே இயற்கையின்மேலாம் திட்டம். ஜீவபோதத்தை அடியோடு யாகம் செய்தவனுக்குப் பரபோதம் ஒன்றுதான் எஞ்சி நிற்கிறது. ஆக, தன்னையே ஆகுதியாகக்கொடுத்தவன் அடைவது சநாதன பிரம்மம். பெறுமவற்றுள் பிரம்மத்துக்கு நிகரானது ஒன்றுமில்லை. பெறுதற்கரிய பிரம்மமே யாகத்தின்மூலம் அடையப்பெறுகிறது என்றால் அதற்குக்*

கிழாகிய எதையும் யாகத்தால் பெறலாம் என்பது சொல்லாமலே விளங்குகிறது.

மிக எளிதில் அடையப்பெறுவது இவ்வுலகம். இதைவிட எளிதானது ஒன்றுமில்லை. ஆனால் இவ்வுலகில் ஒருவன் ஒரு பிராப்தியையும் அடையப்பெறாது, பிறர்க்கு அடிமைப்பட்டு, பிறரால் அவமதிக்கப்பட்டு வாழ்வானாகில் அவன் சுயநலத்தில் ஊறியவனாம். ஒருவனிடத்து சுயநலம் வலுக்கிறவளவு அவன் யாகத்தைப் புறக்கணித்தவனாகிறான். சில நாடுகள், சில சமூகங்கள், சில மனிதர்கள் க்ஷீணதசையடைவதற்குக் காரணம் சுயநலப்பற்றாகும். சுயநலம் கோலுபவன் இவ்வுலகத்தில் ஒரு மேன்மையையும் அடையப்பெறாது மக்களால் புறக்கணிக்கப்படுகிறான். இனி, அவன் சுவர்க்கம் முதலிய இதைவிட மேலான உலகத்தைப் பெறுவது எங்ஙனம்? ஆக வாழ்க்கையின் தத்துவம் யாது?

एवं बहुविधा यज्ञा वितता ब्रह्मणो मुखे ।
कर्मजान्विद्धि तान्सर्वानेवं ज्ञात्वा विमोक्ष्यसे ॥ ३२

ஏவம் பஹுவிதா யக்ஞா விததா ப்ரஹ்மணோ முகே ।
கர்மஜான்வித்தி தான்ஸர்வானேவம் ஞாத்வா
விமோக்ஷ்யஸே ॥ 32

ब्रह्मणः मुखे ப்ரஹ்மண: முகே *வேதத்தின்கண்* एवं ஏவம் *இப்படிப்பட்ட* बहुविधाः यज्ञाः பஹுவிதா: யக்ஞா: *பலவிதங்களான யாகங்கள்* वितताः விததா: *விவரிக்கப்பட்டிருக்கின்றன.* तान् सर्वान् தான் ஸர்வான் *அவையாவும்* कर्मजान् கர்மஜான் *கர்மத்தில் ஜனித்தவைகளென்று* विद्धि வித்தி *அறிக* एवं ज्ञात्वा ஏவம் ஞாத்வா *இங்ஙனம் அறிந்து* विमोक्ष्यसे விமோக்ஷ்யஸே *மோக்ஷமடைவாய்.*

***இப்படி வேதத்தில் பலவித யாகங்கள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. அவையாவும் கர்மத்தில் உண்டானவைகளென்று அறிந்து விடுதலையடைவாயாக.*** **32**

*பிரம்மா, வேதம், இயற்கை இவையாவும் ஒரே பொருளைக்குறிக்கும் சொற்கள். இயற்கையின் நடைமுறையை அறிபவன் வேதத்தை அறிபவன் ஆகிறான். இயற்கை கர்ம சொரூபமானது. அந்தக் கர்மத்துக்கும் அடிப்படையான திட்டம் ஒன்று உண்டு. அதாவது கர்மத்தை யாகமாக மாற்றுபவர் எல்லாரும் இயற்கை அல்லது வேதத்தின் திட்டத்தைத் தெரிந்து கொண்டவர் ஆகின்றனர். இயற்கையில் நடைபெறுகிற எல்லாக் கர்மங்களையும் யாகமாக மாற்றலாம். கர்மம் மனிதனை பந்தப்படுத்தும் தன்மையது. அதே கர்மத்தை யாகமாகச் செய்தால் அது விடுதலையை உண்டுபண்ணுகிறது.*

*விடுதலை எங்ஙனம் வந்து அமைகிறது? விடை வருகிறது :—*

**श्रेयान्द्रव्यमयाद्यज्ञाज्ज्ञानयज्ञः परंतप ।**
**सर्वं कर्माखिलं पार्थ ज्ञाने परिसमाप्यते ॥ ३३**

ச்ரேயான்த்ரவ்யமயாத்யக்ஞாஜ்ஞானயக்ஞ: பரந்தப ।
ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஞானே பரிஸமாப்யதே ॥ 33

परन्तप பரந்தப *எதிரிகளை வாட்டுபவனே* द्रव्यमयात् यज्ञात् த்ரவ்யமயாத் யக்ஞாத் *திரவியமயமான யாகத்தைவிட* ज्ञानयज्ञः ஞானயக்ஞ: *ஞானயக்ஞமானது* श्रेयान् ச்ரேயான் *மேலானது* पार्थ பார்த்த *பார்த்தா* सर्वम् अखिलं कर्म ஸர்வம் அகிலம் கர்ம *கர்மம் எல்லாம்* ज्ञाने ஞானே *ஞானத்தில்* परिसमाप्यते பரிஸமாப்யதே *முற்றுப் பெறுகிறது.*

***பரந்தபா, பொருளைக்கொண்டு செய்யும் யக்ஞத்தைவிட ஞானயக்ஞம் மேலானது. பார்த்தா, கர்மம் முழுதும் ஞானத்தில் முற்றுப்பெறுகிறது. 33***

*மனிதன் அறிவைப் பெறுதற்கு உயிர் வாழ்ந்திருக்கிறான். பொருளைப் பெருக்குவதால் கவலை அதிகம் உண்டாகிறது. ஓரளவுக்குமேல் திரவியம் ஒருவனுக்குப் பயன்படாது. ஞானம் பெருகுகின்றவளவு சாந்தியும் மோக்ஷமும் கைகூடும். திரவிய விருத்தி ஜட புத்தியை உண்டுபண்*

ணுகிறது. ஞான வளர்ச்சி ஆத்ம சைதன்யமாகிறது. திரவியம் பிரகிருதியில் கட்டுப்படுத்துகிறது. ஞானமோ ஆத்மாவானது கர்மத்தில் கட்டுப்படாத சாக்ஷி என்ற பேருண்மையை விளக்குகிறது. ஆகையால்தான் யக்ஞமெல்லாம் விரைவில் ஞான யக்ஞமாக வடிவெடுக்கவேண்டும். தேவாராதனையில் ஒருவன் ஒரு மணங்கு கற்பூரத்தை எரித்து அதைப் பெரியபூஜையென்று எண்ணுகிறான். மற்றொருவன் கற்பூரம் எரிந்தால் எஞ்சியிருப்பது ஒன்றுமில்லை; அங்ஙனம் கர்மம் ஞானமாய்விடுங்கால் ஜீவ போதத்தில் எஞ்சியிருப்பது ஒன்றுமில்லை என்று அறிகிறான். முந்தையது திரவிய யக்ஞம்; பிந்தியது ஞான யக்ஞம். சாதகனுக்கு சிரேயஸைத் தருவது ஞானயக்ஞம்.

*பணம் எவனுக்கு அடிமையோ அவன்தான் வாஸ்தவமான மனிதன். பணத்தை எப்படி உபயோகிக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளாதவர்கள் மனிதர்கள் என்ற பெயருக்கு அருகரல்லர்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஞானத்தைப் பெறுதற்கு இன்னும் எத்தகைய மனப்பான்மை வேண்டும்? விடை வருகிறது :—

**तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया ।**
**उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्वदर्शिनः ॥ ३४**

தத்வித்தி ப்ரணிபாதேன பரிப்ரச்னேன ஸேவயா ।
உபதேக்ஷ்யந்தி தே ஞானம் ஞானினஸ்தத்வதர்சின: ॥ 34

प्रणिपातेन ப்ரணிபாதேன *நமஸ்கரித்தும்* परिप्रश्नेन பரிப்ரச்னேன *கேட்டும்* सेवया ஸேவயா *பணிவிடைசெய்தும்* तत् தத் *அந்த ஞானத்தை* विद्धि வித்தி *அறிந்துகொள்* तत्त्वदर्शिनः தத்வதர்சின: *தத்துவத்தை யறிந்த* ज्ञानिनः ஞானின: *ஞானிகள்* ते தே *உனக்கு* ज्ञानं ஞானம் *ஞானத்தை* उपदेक्ष्यन्ति உபதேக்ஷ்யந்தி *உபதேசிப்பார்கள்.*

***பணிந்தும், கேட்டும், பணிவிடை செய்தும் நீ அதை அறிக. உண்மையை யுணர்ந்த ஞானிகள் உனக்கு அந்த ஞானத்தை உபதேசிப்பார்கள். 34***

பண்டம் மாற்றுவது போன்று ஞானத்தைப் பெற முடியாது. அதற்கேற்ற சீரிய இணக்கத்தை சிஷ்யன் குருவோடு வைத்துக்கொள்ளவேண்டும். வீழ்ந்து சாஷ்டாங்கமாக நமஸ்கரிப்பதன்மூலம் சிஷ்யன் தன்னைக் குருவிடம் ஒப்படைக்கிறுன். பந்தம் மோக்ஷம், ஆத்மா அநாத்மா ஆகியவைகளைப்பற்றி முறையாகக் கேள்விகள் கேட்பதால் தனது மனபரிபாகத்தைத் தெரிவிக்கிறுன். குற்றேவல் புரிவதால் குருவுடைய உடல் வாழ்க்கை என்ற யக்ஞத்தில் சிஷ்யன் தன்னை ஆகுதியாகச் சமர்ப்பித்துவிடுகிறுன். இங்ஙனம் முறையாக மெய், மொழி, மனம் ஆகிய முக்கரணங்களும் ஆசாரியனுக்கென்றே அர்ப்பிக்கப்படுகின்றன.

அத்தகையவனிடத்து குரு கருணைகூர்ந்து ஆத்ம ஞானத்தை உபதேசிக்கிறுர். வெறும் வாசாஞானி குருவாக முடியாது. எரியும் விறகுக் கட்டைதான் மற்றொரு விறகில் தீ மூட்டும். அங்ஙனம் யாரிடத்து பிரம்மஞானம் பூர்த்தியாயிருக்கிறதோ அவரே சிஷ்யனுக்கும் பிரம்ம ஞானத்தைப் புகட்டவல்லவராவார். பூரணஞானமும் கருணையும் யாரிடத்து நிறைந்திருக்கிறதோ அவர் குரு ஸ்தானத்துக்குத் தகுதியுடையவர் ஆவார்.

தனது குருவைக் கேவலம் மனுஷ்யனுகக் கருதுபவனுக்குப் பிரார்த்தனையாலும் பக்தியாலும் என்ன பலனுண்டாகக் கூடும்? நமது குருவைக் கேவலம் மனுஷ்யரெனக் கருதக்கூடாது. ஈசுவரனைக் காண்பதற்கு முன்னுல், அத்திவ்விய தரிசனத்தின் முதல் அங்கமாகக் குருவைத்தான் சிஷ்யன் காண்கிறுன். பிறகு அந்தக் குருவே ஈசுவரனுகமாறி ஈசுவர சொரூபத்தைக் காட்டுகிறுர். அப்பால் ஈசுவரனும் குருவும் ஒருவரேயென்று சிஷ்யன் தெரிந்துகொள்கிறுன். அவன் விரும்பும் வரங்களையெல்லாம் திவ்விய குரு அருளுவார். இம்மட்டோ! அவனை பிரம்ம நிர்வாணமாகிய பரமானந்த சுகத்துக்கும் அழைத்துச் செல்வார். அன்றி, பக்தன் ஈசுவரன் என்ற சம்பந்தமுள்ள துவைத நிலைமையில் அவன் இருக்க வேண்டினும் அங்ஙனமே இருக்கலாம். சிஷ்யன் எதைக் கேட்டாலும் குரு அதை நிச்சயமாகத் தருகிறுர்.

மனுஷ்ய குருவானவர் மஹா மந்திரத்தை உனது காதில் மட்டும் உபதேசிக்கிறுர். தெய்வ குருவோ, ஆத்மாவுக்குள் சைதந்யத்தைச் செலுத்துகிறுர்.

*ஈசுவரனுடைய ரகஸியங்களை அறிய வேண்டுமென்ற தீவிர புத்தி உனக்கு இருக்குமானால், அவ்வீசுவரனே ஸத்குரு ஒருவரை உன்னிடம் அனுப்புவார். பக்தனே, குருவைத் தேடவேண்டிய விஷயத்தில் உனக்குக் கவலையே வேண்டாம்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*குருவும் சிஷ்யனும் மேலோராய் அமையுமிடத்து :—*

**यज्ज्ञात्वा न पुनर्मोहमेवं यास्यसि पाण्डव ।**
**येन भूतान्यशेषेण द्रक्ष्यस्यात्मन्यथो मयि ।। ३५**

யஜ்ஞாத்வா ந புனர்மோஹமேவம் யாஸ்யஸி பாண்டவ ।
யேன பூதான்யசேஷேண த்ரக்ஷ்யஸ்யாத்மன்யதோ மயி ॥ 35

पाण्डव பாண்டவ *பாண்டவா* यत् யத் *எதை* ज्ञात्वा ஞாத்வா *அறிந்து* पुनः புன: *மறுபடியும்* एवं ஏவம் *இப்படி* मोहं மோஹம் *மோஹத்தை* न यास्यसि ந யாஸ்யஸி *அடையமாட்டாய்* येन யேன *எதனால்* अशेषेण அசேஷேண *பாக்கியில்லாமல்* भूतानि பூதானி *உயிர்களை* आत्मनि ஆத்மனி *உன்னிடத்திலும்* अथो அதோ *அப்படியே* मयि மயி *என்னிடத்திலும்* द्रक्ष्यसि த்ரக்ஷ்யஸி *பார்ப்பாய்.*

***பாண்டவா, அந்த ஞானத்தைப் பெற்றபின் நீ இப்படி மயக்கமடைய மாட்டாய். அந்த ஞானத்தால் எல்லா உயிர்களையும் உன்னிடத்தும் என்னிடத்தும் காண்பாய். 35***

*பொருள்களை உள்ளபடி காணாதிருப்பது மயக்கம். மெய்ஞானம் உதயமாகுமிடத்து எல்லாப் பொருள்களும், உயிர்களும் ஒரே பரம்பொருளிடத்து ஒன்றித்திருப்பது பிரத்தியக்ஷமாகும்.*

*ஒன்றென உணர்வது ஞானம்; பலவாகக் காண்பது அக்ஞானம்.*

— ஸ்ரீராமகிருஷ்ணர் உபதேசம்

*ஞானத்தீயில் பாபச் செயல்களெல்லாம் வெந்து போய்விடுகின்றன. எப்படியெனின் :—*

**अपि चेदसि पापेभ्यः सर्वेभ्यः पापकृत्तमः ।**
**सर्वं ज्ञानप्लवेनैव वृजिनं संतरिष्यसि ।। ३६**

அபி சேதஸி பாபேப்ய: ஸர்வேப்ய: பாபக்ருத்தம: ।
ஸர்வம் ஞானப்லவேனைவ வ்ருஜினம் ஸந்தரிஷ்யஸி ॥ 36

सर्वेभ्यः पापेभ्यः ஸர்வேப்ய: பாபேப்ய: *எல்லாப் பாபிகளிலும்* पापकृत्तमः अपि चेत् असि பாபக்ருத்தம: அபி சேத் அஸி *அதிக பாபம் செய்தவனாயிருந்தாலும்* सर्वम् वृजिनं ஸர்வம் வ்ருஜினம் *எல்லாப் பாபங்களையும்* ज्ञानप्लवेन एव ஞானப்லவேன ஏவ *ஞானத்தெப்பத்தாலேயே* सन्तरिष्यसि ஸந்தரிஷ்யஸி *கடப்பாய்.*

***பாபிகளிலெல்லாம் நீ பெரும் பாபியாயிருப்பினும் பாபங்களை யெல்லாம் ஞானத் தெப்பத்தால் நீ கடந்து செல்வாய். 36***

*பாபம் என்னும் சொல்லில் புண்ணியமும் அடங்கியிருக்கிறது. ஏனென்றால் ஒரே செயல் பயன் படுத்துதற்கு ஏற்றவாறு புண்ணியமாகவோ பாபமாகவோ காட்சி கொடுக்கிறது. ஞானமில்லாதவர்கள் கர்மத்தை முறை தவறிச் செய்து அதைப் பாபமாக்கிவிடுகின்றனர். ஞானமுடையவர் அதே கர்மத்தை முறையாகச் செய்து அதைப் புண்ணியமாக மாற்றுவதுமல்லாது கர்ம பந்தத்திலிருந்தும் விடுபடுகின்றனர்.*

*ஞானம் பாபத்தை எப்படிப் போக்குகிறது? அது ஒரு உபமானத்தால் விளக்கப்படுகிறது :—*

**यथैधांसि समिद्धोऽग्निर्भस्मसात्कुरुतेऽर्जुन ।
ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा ॥ ३७**

யதைதாம்ஸி ஸமித்தோக்னிர்பஸ்மஸாத்குருதேऽர்ஜுன ।
ஞானாக்னி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத்குருதே ததா ॥ 37

अर्जुन அர்ஜுன *அர்ஜுனா* समिद्धः अग्निः ஸமித்த: அக்னி: *சுடர்விட்டு எரியும் தீயானது* एधांसि ஏதாம்ஸி *விறகுகளை* यथा யதா *எப்படி* भस्मसात् कुरुते பஸ்மஸாத் குருதே *சாம்பலாக்குகிறதோ* तथा ததா *அப்படியே* ज्ञानाग्निः ஞானாக்னி: *ஞானாக்னியானது* सर्वकर्माणि ஸர்வகர்மாணி *எல்லாக் கர்மங்களையும்* भस्मसात् कुरुते பஸ்மஸாத் குருதே *சாம்பலாகச் செய்கிறது.*

***சுடர்விட்டெரியும் தீயானது விறகுகளைச் சாம்பலாக்குவது போன்று, அர்ஜுன, ஞானக்கனல் கர்மங்களையெல்லாம் சாம்பலாக்கிவிடுகிறது. 37***

*பிராரப்த கர்மத்தைத் தவிர மற்ற கர்மங்களெல்லாம் வெந்து போகின்றன. வெந்துபோன விதை பழைய வடிவத்தோடு இருப்பினும் அதை விதைத்தால் செடியாக முளைக்காது. அங்ஙனம் ஞானத் தீயானது கர்மங்களை அவித்துவிடுகிறது. பிராரப்த கர்மம் மட்டும் வேலை செய்யும் எனினும் அதற்கு வேகம் கிடையாது. சொப்பனத்தில் பயந்து எழுந்த ஒருவனுக்கு ஹிருதயம் துடிதுடிக்கிறது. எனினும் விழித்துக்கொண்ட பிறகு அதில் கேடு ஒன்றுமில்லை. அங்ஙனம் பிராரப்த கர்மமும் ஞானியை ஒன்றும் செய்யாது.*

*ஞானம் இவ்வளவு சிறப்பு வாய்ந்ததனால் :—*

**न हि ज्ञानेन सदृशं पवित्रमिह विद्यते ।**
**तत्स्वयं योगसंसिद्धः कालेनात्मनि विन्दति ॥ ३८**

ந ஹி ஞானேன ஸத்ருசம் பவித்ரமிஹ வித்யதே ।
தத்ஸ்வயம் யோகஸம்ஸித்த: காலேனாத்மனி விந்ததி ॥ 38

इह இஹ *இவ்வுலகில்* ज्ञानेन सदृशं ஞானேன ஸத்ருசம் *ஞானத்துக்குச் சமானமாய்* पवित्रं பவித்ரம் *பரிசுத்தம் செய்யக்கூடியது* न हि विद्यते ந ஹி வித்யதே *இல்லவே இல்லை* कालेन காலேன *காலக்கிரமத்தில்* योगसंसिद्धः யோகஸம்ஸித்த: *யோகசித்தியடைந்தவன்* आत्मनि ஆத்மனி *தன் உள்ளத்தில்* स्वयं ஸ்வயம் *தானே* तत् विन्दति தத் *அந்த ஞானத்தை அ!*

***தூய்மைதரும் பாங்குடையது ஞானத்துக்கு ஒப்பானது இவ்வுலகில் எதுவுமில்லை. யோகசித்தன் நாளடைவில் தன்னகத்தே இந்த ஞானத்தைப் பெறுகிறான். 38***

*கனவில் ஒருவன் அடியுண்கிறான்; குத்துப்படுகிறான்; பெருந்துன்பத்துக்கு ஆளாகிறான். அப்படி அவன் வருந்து*

கையில் தூக்கத்தினின்று அவனைத் தட்டியெழுப்பினால் ஜாக்கிரதாவஸ்தைக்கு வருகிறான். தன்னைப்பற்றிய உண்மை ஞானம் ஓரளவு ஜாக்கிரதாவஸ்தையில் வருகிறது. தன்னை யாரும் துன்புறுத்தவில்லை யென்றும், தான் உண்மையில் வருந்தவில்லை யென்றும் ஜாக்கிரதாவஸ்தையில் உறுதிப் படுத்துகிறான். அந்த அளவில் விழிப்பானது அஞ்ஞான மலத்தினின்று அவனைத் தூயவனாக்கியது. இங்ஙனம் மனித னுக்குத் தன் சொரூப ஞானம் உதயமாகுங்கால் ஜனன மரணம் என்ற அஞ்ஞான அழுக்கினின்று நித்திய சுத்தனாக மாற்றப் பெறுகிறான். ஆகையால்தான் பரிசுத்தப்படுத்து பவைகளுள் ஞானத்துக்கு நிகரானது ஒன்றுமில்லை. முறை யாகக் கர்மயோகம் செய்பவன் வாழ்க்கையையே ஞான யக்ஞமாகச் செய்துவிடுகிறான். அதனால் நாளடைவில் மன பரிபாகம் அடைந்து ஞானத்தை நிச்சயமாகப் பெறுகிறான்.

கர்ப்பவாசம் செய்யும் சிசு பத்து மாசத்தில் பிறக் கிறது. அதுபோன்று காலக்கிரமத்தில் என்பதற்கு வரை யறையுண்டா? அதற்கு விடை வருகிறது

**श्रद्धावाँल्लभते ज्ञानं तत्परः संयतेन्द्रियः ।**
**ज्ञानं लब्ध्वा परां शान्तिमचिरेणाधिगच्छति ॥ ३९**

ச்ரத்தாவான்லபதே ஞானம் தத்பர: ஸம்யதேந்த்ரிய: ।
ஞானம் லப்த்வா பராம் சாந்திமசிரேணாதிகச்சதி ॥ 39

श्रद्धावान् ச்ரத்தாவான் *சிரத்தையுள்ளவன்* तत्परः தத்பர: *ஞானத் திலேயே கண்ணுங்கருத்துமாய் இருப்பவன்* संयतेन्द्रियः ஸம்யதேந்த்ரிய: *இந்திரியங்களையடக்கியவன்* ज्ञानं लभते ஞானம் லபதே *ஞானத்தைப் பெறுகிறான்* ज्ञानं लब्ध्वा ஞானம் லப்த்வா *ஞானத்தை அடைந்து* अचिरेण அசிரேண *அதிவிரைவில்* परां शान्तिं பராம் சாந்திம் *மேலான சாந் தியை* अधिगच्छति அதிகச்சதி *அடைகிறான்.*

***சிரத்தையுடையவன், பரத்தைச் சார்ந்திருப் பவன், புலன்களை வென்றவன் ஞானத்தைப் பெறு***

*கிருன்; ஞானத்தைப்பெற்று விரைவில் மேலாம் சாந்தியடைகிருன்.* **39**

குருவை வணங்குதல், கேட்டல், பணிவிடை செய்தல் ஆகிய இவை யாவும் சில சமயங்களில் வெளிவேஷமாய்ப் போய்விடலாம். ஆனால் எவ்விடத்தில் உண்மையான சிரத்தையும், ஞான முயற்சியும், புலனடக்கமும் மேலோங்கியிருக்கின்றனவோ அங்கு ஞான வளர்ச்சி உருவெடுப்பது உறுதி. சிரத்தை முதலியவைகளின் தீவிரத்திற்கு ஏற்றவாறு ஞானம் விரைவில் வந்தமையலாம்; பல ஜன்மங்களில் அது கைகூடலாம்; ஒரே ஜன்மத்தில் வந்தமையலாம்; சில வருஷங்களில் சித்தியாகலாம்; ஒரு வருஷம், ஒரு கணப்பொழுது – இப்படித் தீவிரத்துக்கு ஏற்றவாறு காலம் குறுகுகிறது. ஞானத்தை அடைபவன் எல்லாம் ஈசுவரனிடத்து அடங்கப் பெற்றிருப்பதாகக் காண்பது மட்டுமல்ல, ஞானத்துக்கு ஏற்ற சாந்தியை அல்லது முக்தியையும் அக்கணமே பெறுகிருன்.

சம்சயம் வாழ்க்கைக்குச் சத்துருவாகிறது. அது எப்படி எனின் ?

**अज्ञश्चाश्रद्दधानश्च संशयात्मा विनश्यति ।**
**नायं लोकोऽस्ति न परो न सुखं संशयात्मनः ॥ ४०**

அக்ஞஸ்சாச்ரத்ததானஸ்ச ஸம்சயாத்மா விநச்யதி ।
நாயம் லோகோ஽ஸ்தி ந பரோ ந ஸுகம் ஸம்சயாத்மன: ॥ 40

अज्ञः அக்ஞ: *அக்ஞானி* अश्रद्दधानः அச்ரத்ததான: *சிரத்தையில்லாதவன்* संशयात्मा ஸம்சயாத்மா *சந்தேகப்படுபவன்* विनश्यति விநச்யதி *நாசமடைகிறன்* संशयात्मनः ஸம்சயாத்மன: *சந்தேகப்படுபவனுக்கு* अयं लोकः அயம் லோக: *இந்த உலகம்* न अस्ति ந அஸ்தி *இல்லை* न च परः ந ச பர: *பரலோகமும் இல்லை* न च सुखं ந ச ஸுகம் *சுகமுமில்லை.*

***அறிவிலி, சிரத்தையில்லாதவன், ஐயமுறுபவன், அழிவடைகிருன். ஐயமுறுபவனுக்கு இவ்வுலகும் இல்லை, அவ்வுலகும் இன்பமும் இல்லை. 40***

ஆத்ம சொரூபத்தை அறியாதவன் அறிவிலி அல்லது அக்ஞானியாவான். தன் மீதும், குரு மீதும், சாஸ்திரத்திடத்தும் நம்பிக்கை வைக்காதவன் சிரத்தையில்லாதவனுகிறான். உலகத்தில் எல்லாரிடத்தும் சந்தேகம் கொள்ளும் இயல்புடையவர் சிலர் இருக்கின்றனர். அத்தகையவர் ஐயமே வடிவெடுத்தவர் ஆவர். யார் எதைச் சொன்னுலும், செய்தாலும் அதெல்லாம் தமக்குக் கேடு விளைவிக்கும் என்றே அன்னவர் கருதுகின்றனர். இம்மைக்குத் தகுதியுடையவனே மறுமைக்கும் தகுதியுடையவன் ஆகிறான். உலகத்தவரை நம்புகிறவளவு உலகத்தவர் ஒரு மனிதனுக்கு உரியவர் ஆகின்றனர். பரஸ்பர நம்பிக்கையிலும் உதவியிலுந்தான் உலக வாழ்க்கையில் சுகம் உண்டு. ஒருவரையும் நம்பாது உலகத்தவருக்கு வேற்ருயிருப்பதே பெரிய வேதனையாகிறது. இத்தகைய பான்மையுடையவனுக்கு ஆத்ம ஞானம் கைகூடாது; வாழ்க்கைக்கும் அவன் தகுதியற்றவனுவான்.

நம்பிக்கையில் குழந்தையைப் போல ஆனுலொழிய ஈசுவரனைக் காண்பது துர்லபம். யாரேனும் ஒருவனைச் சுட்டிக்காட்டி, 'அவன் உன் சகோதரன்' என்று தாயார் ஒரு குழந்தையிடம் சொன்னுல் அக்குழந்தை அவன் சொல்வதை உண்மையெனவே நம்பும். இப்படிப்பட்ட குழந்தைபோன்ற விசுவாசம் எவனிடமிருக்கிறதோ அவனிடந்தான் ஈசுவரனுக்குத் தயை பிறக்கிறது. எல்லாவற்றிலும் கணக்குப் பார்க்கும் சுபாவத்துடனிருந்தால் ஈசுவரனைக் காணவே முடியாது.

ஐயத்தை அகற்றுதற்கு உற்ற உபாயம்:—

योगसन्यस्तकर्माणं ज्ञानसञ्छिन्नसंशयम् ।
आत्मवन्तं न कर्माणि निबध्नन्ति धनञ्जय ॥ ४१

யோகஸந்யஸ்தகர்மாணம் ஞானஸம்சின்னஸம்சயம் ।
ஆத்மவந்தம் ந கர்மாணி நிபத்னந்தி தனஞ்ஜய ॥ 41

धनञ्जय தனஞ்ஜய *தனஞ்ஜயா* योगसंन्यस्तकर्माणं யோகஸன்யஸ்த கர்மாணம் *யோகத்தினுல் கர்மங்களை விட்டவனையும்* ज्ञानसंछिन्न संशयं ஞானஸம்சின்ன ஸம்சயம் *ஞானத்தால் சம்சயம் நீங்கினவனையும்*

आत्मवन्तं ஆத்மவந்தம் *ஆத்ம சொரூபத்தில் நிலைத்திருப்பவனை* कर्माणि கர்மாணி *கர்மங்கள்* न நிबध्नन्ति ந நிபத்னந்தி *தளைப்பதில்லை.*

***யோகத்தால் கர்மத்தை விட்டு, ஞானத்தால் சம்சயத்தை அகற்றி, ஆத்ம சொரூபத்தில் நிலைத் திருப்பவனைக் கர்மங்கள் தளைக்கமாட்டா, தனஞ் ஜயா.*** **41**

*மீன் சேற்றுக்குள் புதைந்திருந்தும் சேற்றின் அழுக்கு அதன்மீது படிவதில்லை. ஓயாது கர்மம் செய்தும் அதில் கட்டுப்படாதவன் யோகி. உலகத்தைப் பற்றிய உண்மையை உள்ளபடி அறியுமளவு அதன்மீது சந்தேகம் நீங்கி சிரத்தை யதிகரிக்கிறது. அது பூரண ஞானமாகப் பரிணமிக்குமிடத்து எல்லாம் ஒரு பொருளின் பல்வேறு தோற்றம் என்ற ஐக்கிய புத்தி உண்டாகிறது. ஐயம் கொள்ளுதற்குப் பின்பு இடமில்லை. அனைத்திடத்தும் பூரண விசுவாசம் மேலிடும். ஆத்மபோதம் அடையப் பெற்ற நிறை மனிதன் ஆகிறான் அவன். நிறைகுடம் நீர் தளும்புதலில்லை. நிறை மனிதன் கர்மத்தில் தளையுறுவது மில்லை; கர்மத்தை நிறுத்திவிடுவதுமில்லை.*

**तस्मादज्ञानसंभूतं हृत्स्थं ज्ञानासिनात्मनः ।**
**छित्त्वैनं संशयं योगमातिष्ठोत्तिष्ठ भारत ॥ ४२**

தஸ்மாதக்ஞானஸம்பூதம் ஹ்ருத்ஸ்தம் ஞானாஸினாத்மன: ।
சித்த்வைனம் ஸம்சயம் யோகமாதிஷ்டோத்திஷ்ட பாரத ॥ 42

तस्मात् தஸ்மாத் *ஆகையினால்* अज्ञानसंभूतं அக்ஞானஸம்பூதம் *அக்ஞானத்தில் உண்டான* हृत्स्थं ஹ்ருத்ஸ்தம் *ஹிருதயத்தில் இருக்கிற* आत्मनः ஆத்மன: *ஆத்மாவைப் பற்றிய* एनं संशयं ஏனம் ஸம்சயம் *இந்த சந்தேகத்தை* ज्ञानासिना ஞானாஸினா *ஞான வாளினால்* छित्त्वा சித்வா *வெட்டி* योगं யோகம் *யோகத்தை* आतिष्ठ ஆதிஷ்ட *கையாளுக* भारत பாரத *பாரதா* उत्तिष्ठ உத்திஷ்ட *எழுந்திரு.*

***ஆகையால் அக்ஞானத்துதித்து உள்ளத்தி லுள்ள ஆத்மாவைப்பற்றிய ஐயத்தை ஞான***

***வாளால் வெட்டி, யோகத்தைக் கைக்கொண்டு பாரதா, எழுந்திரு*** **42**

*எல்லாக் கேடுகளையும் உண்டுபண்ணுவது சந்தேகம். அது அக்ஞானத்தில் பிறந்து அந்தக்கரணத்தில் குடியிருக்கிறது. வெளிச்சம் வந்தால் இருள் தானே மறைவதுபோன்று ஆத்ம ஞானம் ஒன்றே ஐயத்தை அகற்றுதற்கு உற்ற உபாயம்.*

*கேடு, தாபம், தவறு இவைகளை ஒழிக்க வல்லது ஞானம். சூரியோதயத்தில் வெளிச்சமும் வருகிறது; விழிப்பும் வருகிறது; தொடர்ந்து வினையாற்றுதலும் வருகிறது. அங்ஙனம் ஆத்மஞானத்தில் ஆத்ம போதமும், வினையாற்றும் வல்லமையும் சேர்ந்து வருகின்றன. ஆத்மபோதம் என்னும் விழிப்பைத் தருவதுதான் ஜீவன் ஒருவனுக்குச் செய்யும் சேவைகளில் தலைசிறந்ததாகிறது. விழித்துக் கொண்ட மனிதன் வாழ்க்கையில் தன் வல்லமையைக் காட்டுவான்.*

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे ज्ञानकर्म संन्यासयोगो नाम
चतुर्थोऽध्यायः ॥

இதி ஶ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஶ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே
ஞானகர்ம ஸந்யாஸ யோகோ நாம
சதுர்த்தோऽத்யாய: ॥

***பிரம்ம வித்தையைப் புகட்டுவதும், யோக சாஸ்திரமானதும், ஶ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமாக வந்துள்ளதுமாகிய பகவத்கீதை என்னும் உபநிஷத்தின்கண் ஞானகர்ம ஸந்யாஸ யோகம் என்ற நான்காம் அத்தியாயம்.***

# पञ्चमोऽध्यायः

## ஐந்தாம் அத்தியாயம்

## संन्यासयोगः

### ஸந்யாஸ யோகம்

अर्जुन उवाच

**संन्यासं कर्मणां कृष्ण पुनर्योगं च शंससि ।
यच्छ्रेय एतयोरेकं तन्मे ब्रूहि सुनिश्चितम् ॥ १**

அர்ஜுன உவாச

ஸந்யாஸம் கர்மணும் க்ருஷ்ண புனர்யோகம் ச சம்ஸஸி ।
யச்ச்ரேய ஏதயோரேகம் தன்மே ப்ரூஹி ஸுநிஸ்சிதம் ॥ 1

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது*

कृष्ण க்ருஷ்ண *கிருஷ்ணு* कर्मणां கர்மணும் *கர்மங்களை* संन्यासं ஸந்யாஸம் *விட்டுவிடுதலையும்* पुनः புன: *மறுபடியும்* योगं च யோகம் ச *கையாளுதலையும்* शंससि சம்ஸஸி *சொல்லுகிறீர்* एतयोः ஏதயோ: *இவ்விரண்டினுள்* यत् யத் *எது* श्रेयः ச்ரேய: *சிறந்ததோ* सुनिश्चितं ஸுநிஸ்சிதம் *நிச்சயிக்கப்பட்டுள்ள* तत् एकं தத் ஏகம் *அவ்வொன்றை* मे மே *எனக்கு* ब्रूहि ப்ரூஹி *சொல்லும்.*

அர்ஜுனன் சொன்னது

***கிருஷ்ணு, கர்மத்தைத் துறக்கவும், பின்பு அதைக் கையாளவும் சொல்லுகிறீர். இவ்விரண்டினுள் சிறந்ததெதுவென்று நிச்சயிக்கப்பட்டதை எனக்கியம்பும்.*** **1**

நான்காவது அத்தியாயம் 18, 19, 21, 22, 24, 32, 33, 37, 41 சுலோகங்களில் கர்ம ஸந்யாஸத்தை வற்புறுத்

தினர். பிறகு அதே அத்தியாயத்தின் கடைசி சுலோகத்தில் கர்ம யோகத்தைக் கடைப்பிடிக்க வேண்டுமென்றார். முரண்படுகிற இவ்விரண்டையும் ஏககாலத்தில் மனிதன் கையாள முடியாது. ஆக, அர்ஜுனன் உள்ளத்தில் இந்த ஐயம் எழுந்தது.

**श्री भगवानुवाच**

**संन्यासः कर्मयोगश्च निःश्रेयसकरावुभौ ।**
**तयोस्तु कर्मसंन्यासात्कर्मयोगो विशिष्यते ॥ २**

ஸ்ரீ பகவானுவாச

ஸந்யாஸ: கர்மயோகஸ்ச நி:ச்ரேயஸகராவுபௌ ।
தயோஸ்து கர்மஸந்யாஸாத்கர்மயோகோ விசிஷ்யதே ॥ 2

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

संन्यासः ஸன்யாஸ: *கர்மத்தை விடுதலும்* कर्मयोगः च கர்ம யோக: ச *கர்மத்தை அனுஷ்டித்தலும்* उभौ உபௌ *இரண்டும்* निःश्रेयसकरौ நி:ச்ரேயஸகரௌ *சிறப்பீனுபவைகள்* तु து *எனினும்* तयोः தயோ: *அவ்விரண்டினுள்* कर्मसंन्यासात् கர்மஸன்யாஸாத் *கர்ம ஸந்யாஸத்தைவிட* कर्मयोगः கர்ம யோக: *கர்மயோகம்* विशिष्यते விசிஷ்யதே *விசேஷமானது.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***கர்ம ஸந்யாஸம், கர்மயோகம் ஆகிய இரண்டும் சிறப்பைத்தரும் எனினும், கர்ம ஸந்யாஸத்தை விடக் கர்மயோகம் மேலானது.*** **2**

*சிரேயஸ் அல்லது சிறப்பு என்பது முக்தி. ஜீவன் அடைபவைகளுள் தலைசிறந்ததாகிய முக்தியானது கர்ம ஸந்யாஸத்தால் அடையப்படும். அதே முக்தி கர்மயோகத்தாலும் அடையப்படும். ஹிமாசலத்தில் பத்ரிகாச்ரமத்துக்கு ஆகாய விமானத்தில் செல்லலாம், நடந்தும் போகலாம். இரண்டு விதத்திலும் அந்த க்ஷேத்திரம் அடையப்பெறுகிறது. ஆனால் நடந்து செல்பவருக்கு உண்டாகும் உடல் பயிற்சியும், மக்கள் இணக்கமும், இதர இயற்கை*

ஞானமும் விமானத்தில் பறந்து செல்பவர்க்கு உண்டா காது. நடந்து செல்லுதற்கு ஒப்பானது கர்மயோகம். பல விதங்களில் அது ஜீவனைப் பண்படுத்துகிறது. தேகம் எடுத்தவர் கர்மயோகம் செய்வதே சிறந்தது. ஸந்யாஸமோ சாந்தியையும் ஞானத்தையும் தருகிறது. கர்மயோகம் சாந்தியையும் ஞானத்தையும் எப்படித் தரும் என்று எண்ணலாம். அதற்கு விளக்கம் வருகிறது :—

ज्ञेयः स नित्यसंन्यासी यो न द्वेष्टि न काङ्क्षति ।
निर्द्वन्द्वो हि महाबाहो सुखं बन्धात्प्रमुच्यते ॥ ३

ஜ்ஞேய: ஸ நித்யஸந்யாஸீ யோ ந த்வேஷ்டி ந காங்க்ஷதி ।
நிர்த்வந்த்வோ ஹி மஹாபாஹோ ஸுகம் பந்தாத்ப்ரமுச்யதே ॥

महाबाहो மஹாபாஹோ *பெருந்தோளுடையவனே* यः ய: *யார்* न द्वेष्टि ந த்வேஷ்டி *துவேஷிக்கிறதில்லையோ* न काङ्क्षति ந காங்க்ஷதி *விரும்புகிறதில்லையோ* सः ஸ: *அவன்* नित्य संन्यासी நித்ய ஸந்யாஸீ *நித்திய ஸந்யாஸியென்று* ज्ञेयः ஜ்ஞேய: *அறியத்தக்கவன்* हि ஹி *ஏனென்றால்* निर्द्वन्द्वः நிர்த்வந்த்வ: *இருமைகளற்றவன்* बन्धात् பந்தாத் *பந்தத்திலிருந்து* सुखं ஸுகம் *எளிதில்* प्रमुच्यते ப்ரமுச்யதே *விடுபடுகிறான்.*

***பெருந்தோளுடையாய், வெறுப்பும் விருப்பும் இல்லாதவன் நித்திய ஸந்யாஸி எனப்படுகிறான். ஏனெனில் இருமைகளற்றவன் எளிதில் பந்தத்திலிருந்து விடுபடுகிறான்.*** **3**

மனிதனைக் கட்டுப்படுத்துவது கர்மமல்ல. கஷ்டப்பட்டு வேலை செய்வதை ஒருவன் வெறுப்பானாகில், அல்லது வேலைசெய்யாது சோம்பித்திரிவதை ஒருவன் விரும்புவானாகில், அவன் இன்ப துன்பம் முதலிய இருமைகளில் கட்டுண்டவனாகிறான். எத்தனையோ அலுவல்களை ஆற்றுதற்கிடையில் யோகி ஒருவன் விருப்பு வெறுப்பற்றிருப்பானாகில் அவன் சித்தத்தில் ஒரு விருத்தியும்உண்டாவதில்லை. மனதை எதுவும் தளைப்பதில்லை. ஆகையால் கர்மம் செய்தும் செய்யாதவனாகிறான். அந்த அளவில் அவன் நித்திய ஸந்யா

ஸியே. ஸந்யாஸ ஆச்ரமம் எடுத்துக்கொண்டதன் வெளி யறிகுறிகள் அவனிடத்து இருக்கவேண்டும் என்பதில்லை. மனமே பந்தம் அல்லது மோக்ஷத்துக்கு ஏதுவாகிறது.

**साङ्ख्ययोगौ पृथग्बालाः प्रवदन्ति न पण्डिताः ।**
**एकमप्यास्थितः सम्यगुभयोर्विन्दते फलम् ॥ ४**

ஸாங்க்யயோகௌ ப்ருதக்பாலா: ப்ரவதந்தி ந பண்டிதா: ।
ஏகமப்யாஸ்தித: ஸம்யகுபயோர்விந்ததே பலம் ॥ 4

बाला: பாலா: *குழந்தைகள்* साङ्ख्ययोगौ ஸாங்க்யயோகௌ *சாங்க்யம், யோகம் இவைகளை* पृथक् ப்ருதக் *வெவ்வேறு ஆனவை களென்று* प्रवदन्ति ப்ரவதந்தி *பேசுகிறார்கள்* पण्डिता: न பண்டிதா: ந *பண்டிதர்கள் அப்படிப் பேசுவதில்லை* एकं अपि ஏகம் அபி *ஒன்றை யாவது* सम्यक् ஸம்யக் *செவ்வையாய்* आस्थित: ஆஸ்தித: *அனுஷ்டித்த வன்* उभयो: உபயோ: *இரண்டினுடைய* फलं பலம் *பலனை* विन्दते விந்ததே *பெறுகிறான்.*

***சாங்க்யமும் யோகமும் வெவ்வேறென்று பாலர் பகர்வர்; பண்டிதர் அங்ஙனம் பேசார். இவற்றுள் ஒன்றை உறுதியாய் அனுஷ்டிப்பவன் இரண்டின் பலனையும் பெறுகிறான். 4***

*கர்ம ஸந்யாஸம் ஈண்டு சாங்க்யம் எனப்படுகிறது. சாஸ்திரத்தின் உட்கருத்தை அறியாத அவிவேகிகள் பாலர் களாகக் கருதப்படுகிறார்கள். ஒன்றை அனுஷ்டித்து இரண் டின் பலனைப் பெறுவது எங்ஙனம் என்ற கேள்வி பிறக்க லாம். அதற்கு விடை வருகிறது :—*

**यत्साङ्ख्यैः प्राप्यते स्थानं तद्योगैरपि गम्यते ।**
**एकं साङ्ख्यं च योगं च यः पश्यति स पश्यति ॥ ५**

யத்ஸாங்க்யை: ப்ராப்யதே ஸ்தானம் தத்யோகைரபி கம்யதே ।
ஏகம் ஸாங்க்யம் ச யோகம் ச ய: பச்யதி ஸ பச்யதி ॥ 5

साङ्ख्यै: ஸாங்க்யை: *சாங்க்யர்களால்* यत् स्थानं யத் ஸ்தானம் *எந்த ஸ்தானம்* प्राप्यते ப்ராப்யதே *அடையப்படுகிறதோ* योगै: अपि

யோகை: அபி *யோகியர்களாலும்* तत् தத் *அது* गम्यते கம்யதே *அடையப்படுகிறது* यः ய: *யார்* साङ्ख्यं च ஸாங்க்யம் ச *சாங்க்யத்தையும்* योगं च யோகம் ச *யோகத்தையும்* एकं पश्यति ஏகம் பச்யதி *ஒன்றாகப் பார்க்கிறானோ* सः पश्यति ஸ: பச்யதி *அவன் (உண்மையைக்) காண்*

***சாங்க்யர் அடையும் பேற்றை யோகியரும் அடைகின்றனர். சாங்க்யத்தையும் யோகத்தையும் ஒன்றாகக் காண்போன் உண்மை காண்கின்றான். 5***

*அறிவைக் கையாண்டு இயற்கையின் இயல்பு எத்தகையது என்று எண்ணிப் பார்ப்பது சாங்க்யம். ஞான மார்க்கம் என்பதுவும் இதுவே. அப்படி விசாரித்துப் பார்க்குமிடத்து பிரகிருதியில் பற்று வைப்பதே துன்பமனைத்துக்கும் முதற் காரணம் என்பது விளங்கும். பிரகிருதியினின்று விலகியிருத்தலே முக்தியாகிறது. இனி, யோகம் என்பது கர்மத்தின் மூலம் பிரகிருதியோடு தொடர்வு வைத்தலாகும். பற்றில்லாது கர்மம் செய்பவனுக்குப் பிரகிருதியானது தாய் போன்று துணைபுரிகிறது; ஆற்றலும் அறிவும் ஆனந்தமும் பெருகும்படிச் செய்கிறது. பிரகிருதியில் கட்டுப்படாதிருப்பதே அதன்கண் புனிதம் காண்பதற்கு உற்ற உபாயம். அதில் கட்டுப்படாமையினால் முக்தியின் மேன்மையெல்லாம் யோகிக்கு வந்தமைகிறது. இங்ஙனம் சாங்க்யமும் யோகமும் ஒன்றாகின்றன. இரண்டும் ஒன்று என்று அறிந்தவன் உண்மையை அறிந்தவனாகிறான்.*

*இவ்விரண்டு மார்க்கங்களுள் பொதுவாக எல்லா சாதகர்களுக்கும் நன்கு பயன்படுவது எது? அடுத்த சுலோகம்*

**संन्यासस्तु महाबाहो दुःखमाप्तुमयोगतः ।**
**योगयुक्तो मुनिर्ब्रह्म नचिरेणाधिगच्छति ॥ ६**

ஸந்யாஸஸ்து மஹாபாஹோ து:கமாப்துமயோகத: ।
யோகயுக்தோ முனிர்ப்ரஹ்ம நசிரேணாதிகச்சதி ॥ 6

महाबाहो மஹாபாஹோ *தோள்வலிவுடையோனே* अयोगत: அயோகத: *யோகம் செய்யாது* संन्यास: ஸந்யாஸ: *ஸந்யாஸத்தை* आप्तुं ஆப்தும் *அடைவது* दु:खं து:கம் *அரிது* तु து *ஆனால்* योगयुक्त: யோகயுக்த: (*கர்ம*) *யோகம் செய்கிற* मुनि: முனி: *முனிவன்* न चिरेण ந சிரேண *விரைவில்* ब्रह्म ப்ரஹ்ம *பிரம்மத்தை* अधिगच्छति அதிகச்சதி *அடைகிறான்.*

***பெருந்தோளாய், கர்மயோகம் செய்யாது கர்ம ஸந்யாஸம் பெறுதல் எளிதன்று. கர்ம யோகம் செய்யும் முனிவனே விரைவில் பிரம்மத்தை அடைகிறான்.*** **6**

*காய் ஒன்று மரத்தில் முறையாக ஒட்டியிருந்தால் மரத்திலிருந்து பெறவேண்டிய சாரத்தையும் வலிவையும் பெற்றுப் பின் தானே மரத்தைவிட்டுப் பிரிந்து பழமாக விழுகிறது. யோகி ஒருவன் முறையாகக் கர்மயோகம் செய்வதால் பிரகிருதியினின்று பெறவேண்டிய அனுபவங்களைப் பெற்று, அந்த ஞான முதிர்ச்சியால் பிரம்ம நிஷ்டனாகிறான். இதுவே முறையான கர்ம ஸந்யாஸமாகிறது. ஆக, எல்லாரும் கர்மயோகத்தைக் கையாளுதல் வேண்டும்.*

*கர்மயோகம் சாதகனை எப்படிப் பண்படுத்துகிறது? பகவான் பகர்கிறார் :—*

योगयुक्तो विशुद्धात्मा विजितात्मा जितेन्द्रियः ।
सर्वभूतात्मभूतात्मा कुर्वन्नपि न लिप्यते ॥ ७

யோகயுக்தோ விசுத்தாத்மா விஜிதாத்மா ஜிதேந்த்ரிய: ।
ஸர்வபூதாத்மபூதாத்மா குர்வன்னபி ந லிப்யதே ॥ 7

योगयुक्त: யோகயுக்த: *கர்மயோகத்தைக் கடைப்பிடிப்பவன்* विशुद्धात्मा விசுத்தாத்மா *தூயமனதையுடையவன்* विजितात्मा விஜிதாத்மா *உடலைவென்றவன்* जितेन्द्रिय: ஜிதேந்த்ரிய: *இந்திரியங்களை ஜயித்தவன்* सर्वभूतात्मभूतात्मा ஸர்வபூதாத்மபூதாத்மா *எல்லா ஜீவர்களின் ஆத்மாவைத் தன் ஆத்மாவாகக் காண்பவன்* कुर्वन् अपि குர்வன் அபி *கர்மம் செய்யினும்* न लिप्यते ந லிப்யதே *அதில் ஒட்டுவதில்லை.*

**கர்மயோக நிஷ்டன், மனந்தெளிந்தவன், உடலை வென்றவன், இந்திரியங்களை அடக்கியவன், தனதாத்மாவே உயிரனைத்துக்கும் ஆத்மாவெனக் காண்கிறவன் கர்மம் செய்யினும் கட்டுண்பதில்லை.** 7

ஜீவர்களெல்லாம் கர்மத்தில் ஈடுபடுகின்றவளவு அதில் கட்டுண்டு கீழ்மையடைகின்றனர். ஆனால் கர்மயோகி கர்மம் செய்கின்றவளவு அதினின்று விடுதலையடைகின்றான். நிஷ்காமியமாகக் கர்மம் செய்யப்படுவதால் நிராசை மனத்தெளிவை உண்டுபண்ணுகிறது. ஆசை அகலுகின்றவளவு உடலும் இந்திரியங்களும் வசப்படுகின்றன. நிராசை நாளடைவில் ஞானமாக வடிவெடுக்கிறது. எல்லா உயிர்க்கும் அந்தர்யாமியாயிருப்பவர் பரமாத்மா ஒருவரே என்ற அனுபவம் அத்தகைய ஞானத்தின் பயனும். இங்ஙனம் கர்ம பந்தத்தை நீக்குவதால் கர்மயோகமே கர்ம ஸந்யாஸமாகப்

ஒருவனுக்கு எவ்வளவு காலம் திவ்யசக்ஷுஸ் உண்டாகவில்லையோ, எவ்வளவு காலம் பொற்குளிகையால் பித்தளை பொன்னாக மாறவில்லையோ அவ்வளவு காலம் வரையில் "நான்தான் கர்த்தா" என்ற மதிமயக்கம் இருக்கும்; அது வரையில் "இந்த நற்காரியத்தை நான் செய்தேன். அந்தக் கெட்ட காரியத்தை நான் செய்தேன்" என்ற வித்தியாச மனோபாவம் இருந்துதீரும். இந்த வேறுபாடுற்ற மனோபாவந்தான் சம்ஸாரம் நீடித்திருப்பதற்குக் காரணமாகிய மாயை. நல்வழியில் செலுத்துவதும், ஸத்வகுணம் மேலோங்கி நிற்பதுமாகிய வித்யாமாயையில் சரணம் புகுந்தாலோ ஒருவன் ஈசுவரனை அடைவான். ஈசுவரனை நேரில் கண்டு அவனுடைய ஸ்வரூபத்தை அறிபவன் தான் உண்மையான முக்தன்; மாயையாகிய ஸமுத்திரத்தைத் தாண்டுபவன். ஈசுவரனே கர்த்தா, தான் அல்லன் என்று உணர்பவன் சரீரத்தோடிருப்பினும் அவன் முக்தனே.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

கர்ம பந்தத்தினின்று விடுபட்டதன் அறிகுறிகளாவன :—

नैव किञ्चित्करोमीति युक्तो मन्येत तत्त्ववित् ।
पश्यञ्शृण्वन्स्पृशञ्जिघ्रन्नश्नन्गच्छन्स्वपञ्श्वसन् ॥ ८

प्रलपन्विसृजन्गृह्णन्नुन्मिषन्निमिषन्नपि ।
इन्द्रियाणीन्द्रियार्थेषु वर्तन्त इति धारयन् ॥ ९

நைவ கிஞ்சித்கரோமீதி யுக்தோ மன்யேத தத்வவித் ।
பச்யஞ் ச்ருண்வன் ஸ்ப்ருசஞ் ஜிக்ரன்னச்னன் கச்சன்ஸ்வ
[பஞ் ச்வஸன் ॥ 8
ப்ரலபன் விஸ்ருஜன் க்ருஹ்ணன்னுன்மிஷந் நிமிஷன்னபி ।
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேஷு வர்த்தந்த இதி தாரயன் ॥ 9

युक्तः யுக்த: *ஆத்மசொரூபத்தில் நிலைத்துள்ள* तत्त्ववित् தத்வவித் *தத்வஞானி* पश्यन् பச்யன் *பார்க்கினும்* शृण्वन् ச்ருண்வன் *கேட்கினும்* स्पृशन् ஸ்ப்ருசன் *தீண்டினும்* जिघ्रन् ஜிக்ரன் *மோப்பினும்* अश्नन् அச்னன் *அருந்தினும்* गच्छन् கச்சன் *நடக்கினும்* स्वपन् ஸ்வபன் *உறங்கினும்* श्वसन् ச்வஸன் *சுவாசிக்கினும்* प्रलपन् ப்ரலபன் *பேசினும்* विसृजन् விஸ்ருஜன் *கழிக்கினும்* गृह्णन् க்ருஹ்ணன் *பிடிக்கினும்* उन्मिषन् உன்மிஷன் *கண்விழிக்கினும்* निमिषन् நிமிஷன் *கண்மூடினும்* अपि அபி *கூட* इन्द्रियाणि இந்த்ரியாணி *இந்திரியங்கள்* इन्द्रियार्थेषु இந்த்ரியார்த்தேஷு *இந்திரியார்த்தங்களில்* वर्तन्ते इति வர்த்தந்தே இதி *இயங்குகின்றனவென்று* धारयन् தாரயன் *உறுதிப்படுத்திக்கொண்டு* किञ्चित् एव கிஞ்சித் ஏவ *ஒன்றையும்* न करोमि ந கரோமி *நான் செய்கிறேனில்லை* इति मन्येत இதி மன்யேத *இப்படி நினைப்பான்.*

***தத்துவம் தெரிந்தயோகி பார்க்கினும், கேட்கினும், தீண்டினும், மோப்பினும், அருந்தினும், நடக்கினும், உறங்கினும், சுவாசிக்கினும், பேசினும், கழிக்கினும், பிடிக்கினும், கண் திறக்கினும், கண் மூடினும் பொறிகள் புலன்களில் போகின்றனவென்று உறுதிகொண்டு, "நான் ஒன்றையும் செய்கிறேனில்லை" என்று நினைப்பான். 8-9***

*வாழ்க்கை சம்பந்தமான செயல்கள் யாவும் சரீரத்தில் நடைபெறுகின்றன, ஆத்மாவுக்கோ செயலில்லை என்ற உண்மையைத் தெரிந்து அதில் நிலைத்திருப்பவனுக்கு 'நான் கர்த்தா' என்ற எண்ணமில்லை. வண்டியில் ஊர்ந்து செல்*

லுபவன் தானே நடப்பவன் அல்ல. வண்டியின் செயலைத் தன் செயலாய் அகங்கரிக்கும்பொழுது ‘ நான் போகிறேன் ’ என்கிறான். தூக்கத்தில் பேசிய பேச்சுக்கு ஒருவன் கர்த்தா வல்ல. ஏதோ ஒன்றை ஆழ்ந்து எண்ணிக்கொண்டு ஆகாரம் புசித்தவனுக்கு என்ன பதார்த்தங்களை உண்டான் என்பது தெரியாது. அங்ஙனம் ஆத்ம சொரூபத்தில் திளைத்திருப்ப வனுக்கு ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள், பிராணன் ஆகிய இவைகளின் செயல்கள் தன்னுடையவைகளாகத் தென்படா.

*“தாஸனான நான்” என்ற மனோபாவத்தைக் கொண்டவரு டைய உணர்ச்சியும் ஊக்கமும் எப்படிப்பட்டவை?*

அந்த மனோபாவம் வாஸ்தவமும் தீவிரமுமானதானால், அவனி டம் உணர்ச்சியும் ஊக்கமும் வெளித்தோற்றத்தினளவாகவே இருக் கும். ஈசுவரப் பிராப்தியான பிறகு ஒருவனிடம் “தாஸ” அகங்காரமா வது “பக்த” அகங்காரமாவது இருக்குமானாலும் அவன் ஒருவருக்கும் கெடுதி செய்யமாட்டான். அகங்காரத்தின் விஷம் முழுவதும் மறைந்து போகிறது. சுவர்ண குளிகையின் ஸ்பரிசத்தால் முழுவதும் பொன்னாக மாறிவிடுகிற கத்தியானது பழைய உருவத்தைப் பெற்றிருந்தாலும் பிறரைத் துன்புறுத்தக்கூடிய தன்மை அதற்கில்லை.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

கர்மத்துக்கும் அவனுக்கும் உள்ள சம்பந்தம் எத் தகையது ? விடைவருகிறது :—

**ब्रह्मण्याधाय कर्माणि सङ्गं त्यक्त्वा करोति यः ।**
**लिप्यते न स पापेन पद्मपत्रमिवाम्भसा ॥ १०**

ப்ரஹ்மண்யாதாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா கரோதி ய: ।
லிப்யதே ந ஸ பாபேன பத்மபத்ரமிவாம்பஸா ॥ 10

य: ய: *யார்* ब्रह्मणि ப்ரஹ்மணி *பிரம்மத்தில்* आधाय ஆதாய *அடைக்கலம் புகுந்தவனாய்* सङ्गं त्यक्त्वा ஸங்கம் த்யக்த்வா *பற்றுதலைத் துறந்து* कर्माणि करोति கர்மாணி கரோதி *கர்மங்களைச் செய்கிறானோ* स: ஸ: *அவன்* अम्भसा அம்பஸா *நீரினால்* पद्मपत्रं इव பத்மபத்ரம் இவ *தாமரை இலைபோன்று* पापेन பாபேன *பாபத்தால்* न लिप्यते ந லிப்யதே *பந்தப் படுவதில்லை.*

***பிரம்மத்தைச் சார்ந்து பற்றுதலைத் துறந்து கர்மங்களைச் செய்கிறவன், நீரில் தாமரையிலை போன்று பாபத்தில் பந்தப்படுவதில்லை. 10***

*தாமரையானது தண்ணீரிலே தோன்றி தண்ணீரிலே வளர்ந்து தண்ணீரிலே நிலைபெற்றிருக்கிறது. தண்ணீர் இல்லாவிட்டால் அது தானே பட்டுப்போம். தண்ணீரில் தொடர்ந்திருப்பினும் தாமரையிலை அதில் நனைவதில்லை. அங்ஙனம் மனிதன் கர்மத்திலே பிறந்து, கர்மத்திலே வளர்ந்து, கர்மத்திலே நிலைபெற்றிருக்கிறான். எனினும் தன் பேரியல்பாகிய பிரம்மத்தைச் சார்ந்திருக்கும் யோகி கர்மத்தில் கட்டுப்படுவதில்லை.*

*யோகிக்குக் கர்மம் எப்படிப் பயன்படுகிறது?*

**कायेन मनसा बुद्ध्या केवलैरिन्द्रियैरपि ।**
**योगिनः कर्म कुर्वन्ति सङ्गं त्यक्त्वात्मशुद्धये ॥ ११**

காயேன மனஸா புத்த்யா கேவலைரிந்த்ரியைரபி ।
யோகின: கர்ம குர்வந்தி ஸங்கம் த்யக்த்வாத்மசுத்தயே ॥ 11

योगिनः யோகின: *யோகிகள்* सङ्गं त्यक्त्वा ஸங்கம் த்யக்த்வா *பற்றைத் துறந்து* आत्मशुद्धये ஆத்மசுத்தயே *சித்த சுத்திக்காக* केवलैः கேவலை: *வெறும்* कायेन காயேன *காயத்தால்* मनसा மனஸா *மனதால்* बुद्ध्या புத்த்யா *புத்தியினால்* इन्द्रियैः अपि இந்த்ரியை: அபி *இந்திரியங்களாலும்* कर्म कुर्वन्ति கர்ம குர்வந்தி *கர்மம் செய்கிறார்கள்.*

***யோகிகள் பற்றைத்துறந்து சித்த சுத்திக்காக வெறும்காயத்தாலும், மனதாலும், புத்தியினாலும், இந்திரியங்களாலுமே கர்மம் செய்கிறார்கள். 11***

*அகங்காரமும் சுயநலமும் யோகியினுடைய உள்ளத்திலிருந்து அடிபட்டுப் போய்விடுகின்றன. அப்பொழுது அகக்கரணங்களும் புறக்கரணங்களும் வெறுமனே வேலை செய்கின்றன. உள்ளிருந்து ஆசை என்னும் வேகம் ஒன்றும் அவைகளுக்கு வருவதில்லை. நீராவி, பெட்ரோல் எண்ணெய், மின்சக்தி முதலியன யந்திரங்களுக்கு விசையாகின்றன.*

விசையை அடைந்த பின்பும் யந்திரம் சிறிது ஓடுவது போன்று கரணங்கள் ஆசை என்ற விசையில்லாது வேலை செய்கின்றன. அதனால் சித்தம் தெளிவடைகிறது. கர்மத்தினின்று யோகி அடையப்பெறும் நன்மை இதுவே.

மேலும் :—

युक्तः कर्मफलं त्यक्त्वा शान्तिमाप्नोति नैष्ठिकीम् ।
अयुक्तः कामकारेण फले सक्तो निबध्यते ॥ १२

யுக்த: கர்மபலம் த்யக்த்வா சாந்திமாப்னோதி நைஷ்டிகீம் ।
அயுக்த: காமகாரேண பலே ஸக்தோ நிபத்யதே ॥ 12

युक्तः யுக்த: *யோகி* कर्मफलं त्यक्त्वा கர்மபலம் த்யக்த்வா *கர்ம பலப்பற்றற்று* नैष्ठिकीं நைஷ்டிகீம் *நிஷ்டையினின்று வருகிற* शान्ति சாந்திம் *சாந்தியை* आप्नोति ஆப்னோதி *அடைகிறான்* अयुक्तः அயுக்த: *கர்ம யோகம் செய்யாதவன்* कामकारेण காமகாரேண *கர்மத்தால் தூண்டப் பெற்று* फले सक्तः பலே ஸக்த: *பலத்தில் பற்றுடையவனாகி* निबध्यते நிபத்யதே (*கர்மத்தில்*) *தளைக்கப்படுகிறான்.*

***யோகி வினைப்பயனில் பற்றற்று, நிஷ்டையினின்று உதிக்கும் சாந்தியை அடைகிறான். யோகம் செய்யாதவன் ஆசை வசப்பட்டு, பயனில் பற்று வைத்து பந்தப்படுகிறான்.*** ***12***

*வினையாற்றுதல் யோகிக்கும் யோகியல்லாதவனுக்கும் பொதுவானது. தன்மூலம் நடைபெறுகிற செயலெல்லாம் ஈசன் செயல் என்ற நினைவு யோகிக்கு நிஷ்டையாகிறது. அதில் அவன் உறுதிப்பாடு அடையுமளவு கவலையில்லை; சாந்தி நிலவுகிறது; சித்தசுத்தி வலுக்கிறது; ஞானம் உதயமாகிறது. யோகியல்லாதவன் ஆசையின் வசப்பட்டுத் தன் செயலைத் தனக்காகவென்று புரிகிறான். அது அவனைத் தளைக்கின்ற வல்வினையாக வடிவெடுத்து வேதனைப்படுத்து*

*ஈசுவர கிருத்தியம் தன்மூலம் நடைபெறுகிறது என்ற நிஷ்டையில் நிலைத்திருப்பவனது பான்மை எத்தகையது? விடை வருகிறது :—*

**सर्वकर्माणि मनसा संन्यस्यास्ते सुखं वशी ।**
**नवद्वारे पुरे देही नैव कुर्वन्न कारयन् ॥ १३**

ஸர்வகர்மாணி மனஸா ஸந்யஸ்யாஸ்தே ஸுகம் வசீ ।
நவத்வாரே புரே தேஹீ நைவ குர்வன்ன காரயன் ॥ 13

वशी देही வசீ தேஹீ *இந்திரியங்களை வசப்படுத்திய தேகியானவன்* सर्वकर्माणि ஸர்வகர்மாணி *எல்லாக் கர்மங்களையும்* मनसा संन्यस्य மனஸா ஸந்யஸ்ய *விவேகத்தால் விலக்கிவிட்டு* न एव कुर्वन् ந ஏவ குர்வன் *ஒன்றும் செய்யாதவனாக* न कारयन् ந காரயன் *ஒன்றையும் செய்விக்காதவனாக* नवद्वारे पुरे நவத்வாரே புரே *ஒன்பது துவாரங்களையுடைய தேகத்தில்* सुखं आस्ते ஸுகம் ஆஸ்தே *சுகமாக வீற்றிருக்கிறான்.*

***தன்னை வசப்படுத்திய தேகியானவன் கர்மங்களை யெல்லாம் விவேகத்தால் விலக்கிவிட்டு ஒன்றும் செய்யாதும் செய்விக்காதும் நவவாயில் நகரில் இன்புற்றிருக்கிறான்.*** ***13***

*மனப்பான்மைக்கு ஏற்றபடி கர்மங்கள் வெவ்வேறு வடிவெடுக்கின்றன. அவைகளுள் முக்கியமானது* **நித்திய கர்மம்.** *எதைச் செய்தால் புண்ணியமில்லையோ ஆனால் செய்யாவிட்டால் பாபமேற்படுமோ அது நித்திய கர்மம். உண்பது, உறங்குவது, நீராடுவது, வழிபடுவது முதலியன நித்திய கர்மங்களாம்.* **நைமித்திக கர்மம்** *என்பது சிவராத்திரி, ஏகாதசி, கிரகணவேளை போன்ற விசேஷ காலங்களில் செய்யப்படும் கர்மங்களாம். மூன்றாவதாக வருவது* **காமிய கர்மம்.** *குறித்த பலனுக்காக இது செய்யப்படுவதாகும். ஆனால் இதைச் செய்யாது விட்டுவிடுவதால் கேடு ஒன்றுமில்லை. செய்யத்தகாதது என்று அடியோடு விலக்கப்பட்ட கர்மம் எதுவோ அது* **நிஷித்த கர்மம்.** *யோகிக்கு ஆசையும் அகங்காரமும் இல்லாததினால் இந்த நான்குவித கர்மங்களில் எக்கர்மமும் அவனை வந்து சார்வதில்லை. அதாவது தன்னைக் கர்த்தாவென்று நினைப்பதில்லை.*

ஒன்பது வாசல்களையுடைய உடல் ஓர் ஊராகக் கருதப்படுகிறது. அரசன் போன்று ஆத்மா அதில் கர்மம் ஒன்றும் செய்யாது சும்மாவிருக்கிறது. அதனுடைய மந்திரி பிரதானிகளாகிய அகங்காரம், மனம், புத்தி, பிராணன், இந்திரியங்கள் முதலியன தொழில் புரிகின்றன. பிராரப்த கர்மம் முடிவடையும் வரையில் இங்ஙனம் செயல்கள் நடைபெறுகின்றன. செயலுக்கு நான் கர்த்தா என்ற எண்ணம் யோகியினிடத்து இல்லை.

எல்லாம் ஈசன்செயல் என்று உறுதிகொண்டு யோகி கர்த்ருத்வத்தை ஒழிக்கின்றான். அப்படியானால் சர்வேசுவரனே தொழில் புரிகின்றாரா? விடை வருகிறது :—

न कर्तृत्वं न कर्माणि लोकस्य सृजति प्रभुः ।
न कर्मफलसंयोगं स्वभावस्तु प्रवर्तते ॥ १४

ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு: ।
ந கர்மபலஸம்யோகம் ஸ்வபாவஸ்து ப்ரவர்த்ததே ॥ 14

प्रभुः ப்ரபு: *பரமாத்மா* लोकस्य லோகஸ்ய *உலகத்துக்கு* न कर्तृत्वं ந கர்த்ருத்வம் *கர்த்ருத்வத்தை உண்டுபண்ணுவதில்லை* न कर्माणि ந கர்மாணி *கர்மங்களை உண்டுபண்ணுவதில்லை* कर्मफलसंयोगं கர்மபலஸம்யோகம் *கர்மபலனோடு சேர்த்து வைத்தலையும்* न सृजति ந ஸ்ருஜதி *உண்டுபண்ணுவதில்லை* स्वभावः तु ஸ்வபாவ: து *ஸ்வபாவந்தான்* प्रवर्तते ப்ரவர்த்ததே *பிரவிருத்திக்கின்றது.*

**வினைத்தலைமை, வினை, வினைப்பயனைப் பெறுதல் ஆகியவைகளை இறைவன் உலகுக்கு உண்டுபண்ணவில்லை. இயற்கையே இங்ஙனம் செய்கிறது.**

கர்த்ருத்வம் என்பது வினைத்தலைமை அல்லது செயலுக்கெல்லாம் தானே தலைவன் என்ற உணர்ச்சியாம். ஸ்வபாவம் என்பது இயற்கை அல்லது பிரகிருதியின் மற்றொரு பெயர். பிரகிருதியின் செயல் ஆத்மாவின் செயல்போன்று தென்படுவது அக்ஞானத்தால். ஆகையால் அக்ஞானத்தில் இருக்கும் ஜீவாத்மா தன்னைக் கர்த்தாவென்று எண்ணு

*கர்மத்தைத் தன்னுடையது என்று எண்ணுகிற வனுக்குக் கர்ம பலனைச் சார்தலும் உண்டாகிறது. இவையாவும் உண்மையில் பிரகிருதியின் செயல்களேயொ ழிய ஆத்மாவின் செயல்களல்ல. அது மேலும் விளக்கப் பெறுகிறது :—*

**नादत्ते कस्यचित्पापं न चैव सुकृतं विभुः ।**
**अज्ञानेनावृतं ज्ञानं तेन मुह्यन्ति जन्तवः ॥ १५**

நாதத்தே கஸ்யசித்பாபம் ந சைவ ஸுக்ருதம் விபு: ।
அக்ஞானேனாவ்ருதம் ஞானம் தேன முஹ்யந்தி ஜந்தவ: ॥

विभुः விபு: *எங்கும் நிறைந்துள்ள ஆத்மா* कस्यचित् கஸ்யசித் *ஒருவனுடைய* पापं பாபம் *பாபத்தை* न आदत्ते ந ஆதத்தே *வாங்கிக் கொள்கிறதில்லை* सुकृतं एव च न ஸுக்ருதம் ஏவ ச ந *புண்ணியத்தை யும் வாங்கிக்கொள்கிறதில்லை* अज्ञानेन அக்ஞானேன *அக்ஞானத்தினால்* ज्ञानं ஞானம் *ஞானமானது* आवृतं ஆவ்ருதம் *மூடப்பட்டிருக்கிறது* तेन தேன *அதனால்* जन्तवः ஜந்தவ: *ஜந்துக்கள்* मुह्यन्ति முஹ்யந்தி *மோஹ மடைகின்றன.*

***யாருடைய பாப புண்ணியத்தையும் பர மாத்மா பொருள்படுத்துவதில்லை. ஞானம் அக்ஞா னத்தால் மூடப்பட்டிருக்கிறது. ஆதலால் உயிர்கள் மயக்கமடைகின்றன.*** **15**

*எங்கும் நிறைந்துள்ள ஆகாசத்தின்மீது ஏனைய நான்கு பூதங்களும் நிலைபெற்றிருக்கின்றன. மண்ணில், நீரில், காற்றில் காணும் கேடுகளெல்லாம் ஆகாசத்தை ஒன்றும் செய்வதில்லை. அவைகளில் உள்ள நன்மைகள் ஆகாசத்தை அலங்கரிப்பதில்லை. அங்ஙனம் பிரகிருதியின் கண் உள்ள நன்மை தீமைகளைப் பரமாத்மா ஏற்றுக்கொள் ளுதலுமில்லை, பொருட்படுத்துதலுமில்லை. ஸ்படிகத்துக் குப் பக்கத்திலுள்ள புஷ்பத்தின் நிறத்தை, ஸ்படிகம் ஏற் பதுபோன்று தென்படுகிறது. உண்மையில் நிறம் ஒன்றை யும் அது ஏற்றுக்கொள்வதில்லை. அங்ஙனம் ஆத்மாவானது*

பிரகிருதியின் இயல்பை ஏற்றுக் கொண்டது போன்று காட்சி கொடுக்கிறது. அத்தகைய அக்ஞானத்தினால் ஜீவர்கள் ஏமாற்றமடைகின்றனர்.

ஈசுவரனுக்கும் ஜகத்துக்கும் உள்ள தொடர்பு இந்த இரண்டு சுலோகங்களில் நன்கு விளக்கப்படுகிறது. சர்வேசுவரன் ஆனந்தசொரூபி; பரிபூரணன். காரணகாரியத்தில் அவன் சம்பந்தப்பட்டவன் என்பது அவனது சொரூபத்துக்குச் சிறிதேனும்பொருந்தாது. அவனுடைய சன்னிதான விசேஷத்தால் பிரகிருதிக்கு சர்வ சக்தியும் வந்துவிடுகிறது. பிரகிருதியோடு தன்னை இணைத்துக்கொள்கையில் ஜீவன் பந்தத்துக்கு ஆளாகிறான். பிரகிருதியினின்று தன்னை விலக்கிக்கொள்கையில் அவன் விடுதலையடைகிறான். வேதாந்த சாரம் முழுதும் இக்கோட்பாட்டில் அடங்கியிருக்கிறது.

வெளிச்சத்தைத் தருவது தீபத்தின் சுபாவம். அதன் உதவியால் சிலர் சமையல் செய்கின்றனர். சிலர் பொய்ப்பத்திரம் தயார்படுத்துகின்றனர்; வேறு சிலர் பாகவத படனம் பண்ணுகின்றனர். அதுபோல ஈசுவரனுடைய நாமத்தின் உதவியால் சிலர் மோக்ஷமடையப் பார்க்கின்றனர்; வேறு சிலர் தங்கள் தீய எண்ணங்களைச் சாதித்துக்கொள்ள முயலுகின்றனர். என்றாலும் பகவந்நாமம் ஒருபோதும் அசுத்தமடையாமல் எப்போதும் தூயதாகவே இருக்கிறது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

சர்வேசுவரன் ஜீவர்களுடைய பாப புண்ணியங்களைக் கணக்கில் எடுத்துக்கொள்வதில்லையென்றால் ஜீவர்கள் பாபத்தை நீக்கிப் புண்ணியத்தைச் செய்யவேண்டுமென்று வற்புறுத்துதல் எதற்காக? விடை வருகிறது :—

ज्ञानेन तु तदज्ञानं येषां नाशितमात्मनः ।
तेषामादित्यवज्ज्ञानं प्रकाशयति तत्परम् ॥ १६

ஞானேன து ததக்ஞானம் யேஷாம் நாசிதமாத்மன: ।
தேஷாமாதித்யவஜ்ஞானம் ப்ரகாசயதி தத்பரம் ॥ 16

तु து *ஆனால்* आत्मनः ஆத்மன: *ஆத்மாவைப்பற்றிய* ज्ञानेन ஞானேன *ஞானத்தால்* येषां யேஷாம் *யாருடைய* तत् अज्ञानं தத் அக்

ஞானம் *அந்த அக்ஞானம்* नाशितं நாசிதம் *நாசமாக்கப்படுகிறதோ* तेषां தேஷாம் *அவர்களுக்கு* तत् ज्ञानं தத் ஞானம் *அந்த ஞானம்* आदित्यवत् ஆதித்யவத் *சூரியன் போன்று* परं பரம் *பரம்பொருளை* प्रकाशयति ப்ரகாசயதி *பிரகாசிக்கச்செய்கிறது.*

***யாருடைய அக்ஞானம் ஆத்ம ஞானத்தால் அழிக்கப்படுகிறதோ, அவர்களுக்கு அந்த ஞானம் சூரியனைப் போன்றதாய்ப் பரம்பொருளை விளக்குகிறது.*** ***16***

*சூரியன் உதிக்கும்பொழுது இருள் தானே மறைந்து போகிறது. ஞானம் உதிக்கும்போது அக்ஞானமும் அப்படியே அழிந்துபோகிறது. சூரியன் பிரபஞ்சப் பொருள்களை உள்ளபடி காட்டுவது போன்று ஆத்ம ஞானம் பரப்பிரம்மத்தை நேராக விளக்குகிறது. ஆத்மஞானமும் பிரம்ம ஞானமும் ஒன்றே.*

*பரப்பிரம்மத்தை சாக்ஷாத்கரிக்க ஆரம்பித்த சாதகர்கள் அதைச் சாரும் விதம் சாற்றப்படுகிறது :—*

**तद्बुद्धयस्तदात्मानस्तन्निष्ठास्तत्परायणाः ।**
**गच्छन्त्यपुनरावृत्तिं ज्ञाननिर्धूतकल्मषाः ॥ १७**

**தத்புத்தயஸ்ததாத்மானஸ்தந்நிஷ்டாஸ்தத்பராயணா: ।**
**கச்சந்த்யபுனராவ்ருத்திம் ஞானநிர்தூதகல்மஷா: ॥ 17**

**तद्बुद्धयः** தத்புத்தய: *அதிலேயே புத்தியை வைப்பவர்கள்* **तदात्मानः** ததாத்மான: *அதையே தங்கள் ஆத்ம சொரூபமாகக்கொண்டவர்கள்* तन्निष्ठाः தன்னிஷ்டா: *அதிலேயே உறுதியாயிருப்பவர்கள்* तत्परायणाः தத்பராயணா: *அதையே புகலிடமாகக்கொண்டவர்கள்* ज्ञान - निर्धूत - कल्मषाः ஞான - நிர்தூத - கல்மஷா: *ஞானத்தால் பாபங்களைப் போக்கடித்துக்கொண்டவர்கள்* अपुनरावृत्तिं அபுனராவ்ருத்திம் *திரும்பவும் பிறவாமையை* गच्छन्ति கச்சந்தி *அடைகிறார்கள்.*

***பிரம்மத்தில் புத்தியை வைப்பவர், அதுவே தாமாயிருப்பவர், அதிலேயே உறுதியாயிருப்பவர்,***

***அதையே புகலிடமாக்குபவர், ஞானத்தால் பாபங்களைப் போக்கடிப்பவர், பின்பு பிறப்பதில்லை. 17***

சூரியன் எங்குச் சென்று தேடினாலும் இருளைக் காணாது. அங்ஙனம் பிரம்ம ஞானத்தை அடைபவன் உள்ளும் புறமும் எங்கும் பிரம்ம சொரூபத்தையே காண்கின்றான். அவன் பெற்றுள்ளது பிரம்ம சாக்ஷாத்காரம். ஆகையால் அவன் பிரம்மஞானி ஆய்விடுகின்றான். அவன் தானே பிரம்ம சொரூபம் ஆய்விடுகிறான். திரும்பவும் பிறப்பெடுப்பதென்பது அவனுக்கில்லை. அவன் முக்தியடைகிறான்.

*யுக்தியினால் பெறப்படும் ஞானம் ஒருவகையானது என்பதையும், தியானத்தினால் வரும் ஞானம் முற்றிலும் வேறான தென்பதையும், ஈசுவர தரிசனத்தால் அதைவிட முற்றிலும் மேலான ஞானம் உதயமாகிற தென்பதையும் நான் தெரிந்துகொண்டிருக்கிறேன்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*முக்தியடைந்ததன் அறிகுறியை இவ்வுலகில் உடலோடு கூடியிருக்கும்போதே தெரிந்துகொள்ளுதல் எப்படி?*

**विद्याविनयसंपन्ने ब्राह्मणे गवि हस्तिनि ।**
**शुनि चैव श्वपाके च पण्डिताः समदर्शिनः ॥ १८**

வித்யாவினயஸம்பன்னே ப்ராஹ்மணே கவி ஹஸ்தினி ।
சுனி சைவ ச்வபாகே ச பண்டிதா: ஸமதர்சின: ॥ 18

पण्डिताः பண்டிதா: *பண்டிதர்கள்* विद्याविनयसंपन्ने வித்யாவினய ஸம்பன்னே *கல்வியும் பணிவும் பொருந்திய* ब्राह्मणे ப்ராஹ்மணே *பிராம்மணனிடத்திலும்* गवि கவி *பசுவினிடத்தும்* हस्तिनि ஹஸ்தினி *யானையினிடத்திலும்* शुनि च சுனி ச *நாயினிடத்திலும்* श्वपाके च ச்வபாகே ச *நாயைச் சமைத்து உண்கிற சண்டாளனிடத்திலும்* समदर्शिनः एव ஸமதர்சின: ஏவ *சமதிருஷ்டி உடையவராகவே இருக்கிறார்கள்.*

***கல்வியடக்கமுடைய பிராம்மணனிடத்தும், பசுவினிடத்தும், யானையினிடத்தும், நாயினிடத்தும், நாயைத் தின்னும் கீழோனிடத்தும் ஞானிகள் சமதிருஷ்டியே வைக்கின்றனர். 18***

சூரிய வெளிச்சம் எல்லாப் பொருள்கள் மீதும் சமமாகவே படுகிறது. இது கங்கை, இது சாக்கடையென்று சூரியன் பேதம் பாராட்டுவதில்லை. அங்ஙனம் பிரம்மஞானி பிரம்மத்தையே யாண்டும் காண்கிறான். வெறும் புஸ்தகங்கள் பல படித்தவன் பண்டிதன் அல்லன்; பிரம்ம சாக்ஷாத்காரம் பண்ணினவனே பண்டிதன். உலகத்தவர் காட்சியில் கல்வியடக்கமுடைய பிராம்மணன் மக்களுள் சிறந்தவன்; நாயையுண்பவன் கடைப்பட்டவன். மிருகங்களுள் பரிசுத்தமானது பசு; அதிசயிக்கத் தக்கது யானை; அருகில் வரத் தகுதியற்றது நாய். அக்ஞானிக்கு வேற்றுமையை உண்டு பண்ணும் இந்த உயிர் வகைகளை யெல்லாம் ஞானி பிரம்ம சொரூபமாகவே காண்கிறான். ஆக, அவனுக்கு வேற்றுமை யில்லை.

பேத புத்தியைத் தருவது அக்ஞானம்; ஐக்கிய புத்தியைத் தருவது ஞானம்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

இவ்வுலகில் இருப்பவர் இத்தகைய சமநிலையை அடைய முடியுமா? விடை வருகிறது :—

**इहैव तैर्जितः सर्गो येषां साम्ये स्थितं मनः ।**
**निर्दोषं हि समं ब्रह्म तस्माद्ब्रह्मणि ते स्थिताः ॥ १९**

இஹைவ தைர்ஜித: ஸர்கோ யேஷாம் ஸாம்யே ஸ்திதம் மன: ।
நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம தஸ்மாத்ப்ரஹ்மணி தே ஸ்திதா:

येषां யேஷாம் *யாருடைய* मनः மன: *மனமானது* साम्ये ஸாம்யே *சமநிலையில்* स्थितं ஸ்திதம் *உறுதியாயிருக்கிறதோ* तैः தை: *அவர்களால்* इह एव இஹ ஏவ *இம்மையிலேயே* सर्गः ஸர்க: *பிறப்பு இறப்பு* जितः ஜித: *ஜயிக்கப்பட்டது* हि ஹி *உண்மையில்* ब्रह्म ப்ரஹ்ம *பிரம்மம்* समं ஸமம் *ஸமமானது* निर्दोषं நிர்தோஷம் *தோஷமற்றது* तस्मात् தஸ்மாத் *ஆகையினால்* ते தே *அவர்கள்* ब्रह्मणि ப்ரஹ்மணி *பிரம்மத்தில்* स्थिताः ஸ்திதா: *நிலைத்திருக்கிறார்கள்.*

**மனதை ஸமநிலையில் உறுதிப்படுத்தியவர்களால் இம்மையிலேயே இயற்கை வெல்லப்படு**

*கிறது. பிரம்மம் ஸமநிலையுடையது, தோஷமற்றது. ஆகையால் அவர்கள் பிரம்மத்தில் நிலைத்திருக்கிறார்கள். 19*

கண்ணாடி கரடுமுரடாயிருந்தால் அதன் மூலம் காணப்படும் பொருள்களெல்லாம் பின்னப்பட்டுத் தெரியும். கண்ணாடி ஸமமாயிருந்தால் அதன் மூலம் பொருள்களை உள்ளபடி காணலாம். காண்போன் காணப்படு பொருளுக்கிடையில் தூய கண்ணாடியிருந்தால் மெய்க்காட்சிக்கு அது தடையல்ல. மனது விருத்தி என்னும் வேகத்தோடு கூடியிருந்தால் பிறப்பு இறப்புக்கு ஏதுவான பிரபஞ்சத்தை அது காண்கிறது. மனம் ஸமநிலையில் உறுதியாயிருந்தால் பொருளை அது உள்ளபடி காண்கிறது. மெய்ப்பொருளுக்கு பிரம்மம் என்பது மற்றொரு பெயர். அதன்கண் அசைவொன்றும் இன்மையால் அது யாண்டும் ஸமமாயுள்ளது. சுத்த சைதன்யம் விகாரப்படுவதில்லை. கூடுதல், குறைதல், மாறுதல் என்பன அதனிடத்தில்லை. ஆகையால் அது தோஷமற்றது ; கேடில்லாதது அது ஒன்றே. ஸமநிலையில் நிலைத்திருப்பவர் அதன் காட்சி கண்டு அதனிடத்தே நிலைத்திருப்பவர் ஆகின்றனர். கேடின்மை பிரம்ம வித்துக்களிடத்தும் வந்துவிடுகிறது.

*மாயையும் பிரம்மமும் முறையே ஓடும் பாம்பையும் சலனமற்றுக் கிடக்கும் பாம்பையும் ஒக்கும். கிரியா சக்தி மாயையாகும்; நிஷ்கிரியா சக்தி பிரம்மம்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

இவர்களிடத்துக் கேடின்மையை எப்படித் தெரிந்து கொள்வது? விடை வருகிறது :—

**न प्रहृष्येत्प्रियं प्राप्य नोद्विजेत्प्राप्य चाप्रियम् ।**
**स्थिरबुद्धिरसंमूढो ब्रह्मविद्ब्रह्मणि स्थितः ॥ २०**

ந ப்ரஹ்ருஷ்யேத்ப்ரியம் ப்ராப்ய நோத்விஜேத்ப்ராப்ய சாப்ரியம் ।
ஸ்திரபுத்திரஸம்மூடோ ப்ரஹ்மவித்ப்ரஹ்மணி ஸ்தித: ॥ 20

ब्रह्मवित् ப்ரஹ்மவித் *பிரம்மத்தை அறிந்தவன்* ब्रह्मणि स्थितः ப்ரஹ்மணி ஸ்திதः *பிரம்மத்தில் நிலைபெற்றவன்* स्थिरबुद्धिः ஸ்திரபுத்திः *உறுதியான அறிவையுடையவன்* असंमूढः அஸம்மூடः *மனக்குழப்பம் அடையாதவன்* प्रियं प्राप्य ப்ரியம் ப்ராப்ய *பிரியமானதை அடைந்து* न प्रहृष्येत् ந ப்ரஹ்ருஷ்யேத் *மகிழ்வடைவதில்லை* अप्रियं च प्राप्य அப்ரியம் ச ப்ராப்ய *பிரியமற்றதை அடைந்து* न उद्विजेत् ந உத்விஜேத் *துன்பமடைவதில்லை.*

***பிரம்மத்தை அறிந்தவன், பிரம்மத்தில் நிலைபெற்றவன், உறுதியான அறிவையுடையவன், மனக்குழப்பமடையாதவன் பிரியமானதைப்பெற்று இன்பமடைவதுமில்லை; பிரியமல்லாததைப் பெற்றுத் துன்பமடைவதுமில்லை.*** ***20***

*விருப்பு வெறுப்பு, இன்ப துன்பம் இவை யாவும் உடல் கூற்றோடு சம்பந்தப்பட்டவைகள். தேகத்தைத் தானென்று எண்ணுபவன் மனக் குழப்பமடைந்தவன். பிரம்ம திருஷ்டியிலேயே இருப்பவனுக்கு இத்தகைய சித்த விருத்திகள் உண்டாவதில்லை.*

*காமமும் காசு ஆசையும் மனதை விட்டகலும் போது ஆத்மாவினிடம் வேறு என்ன தங்கியிருக்கும்? பிரம்மானந்தமே அங்குக் குடிகொண்டிருக்கும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*பிரம்ம சொரூபத்தில் நிலை பெற்றிருப்பதால் :—*

**बाह्यस्पर्शेष्वसक्तात्मा विन्दत्यात्मनि यत्सुखम् ।**
**स ब्रह्मयोगयुक्तात्मा सुखमक्षयमश्नुते ॥ २१**

பாஹ்யஸ்பர்சேஷ்வஸக்தாத்மா விந்தத்யாத்மனி யத்ஸுகம் ।
ஸ ப்ரஹ்மயோகயுக்தாத்மா ஸுகமக்ஷயமச்னுதே ॥ 21

बाह्यस्पर्शेषु பாஹ்யஸ்பர்சேஷு *வெளிவிஷயங்களில்* असक्त-आत्मा அஸக்த ஆத்மா *மனப்பற்று இல்லாதவன்* आत्मनि ஆத்மனி *ஆத்மாவில்* यत् सुखं யத் ஸுகம் *அந்த சுகத்தை* विन्दति விந்ததி *அடைகிறான்* सः ஸः *அவன்* ब्रह्मयोग-युक्तात्मा ப்ரஹ்மயோக-யுக்தாத்மா *பிரம்ம*

*சமாதியில் நிலைத்த மனதையுடையவன்* अक्षयं அக்ஷயம் *அழியாத* सुखं ஸுகம் *சுகத்தை* अश्नुते அச்னுதே *அடைகிறான்.*

**புறப்பொருள்களில் மனம் பற்றாதவன் ஆத்மாவில் இன்பம் எய்துகிறான். பிரம்ம சமாதியில் மனதையுடைய அம்மனிதன் அழியாத சுகத்தையடைகிறான். 21**

புறத்தில் பொறிகள் வாயிலாக வரும் போக சுகம் நிலையாதவைகள். அவைகள் சிற்றின்பம் எனப்படுகின்றன. ...ல் சுத்தியடைந்த அந்தக்கரணம் ஆத்மானந்தத்தை ... அது தேயாது தெளிவடைகிறபடியால் அதற்குப் பேரின்பம் என்று பெயர்.

சிலர் ஏற்கனவே விழித்துக் கொண்டிருக்கின்றார்கள். அவர்களை அறிந்து கொள்ளுவதற்கு அவர்களிடம் சில அடையாளங்கள் இருக்கக் காண்போம். சக்ரவாகம் என்னும் பக்ஷி எப்போதும் ஆகாயத்தில் பறந்துகொண்டே இருக்கும். ஏழு சமுத்திரங்களிலும் தண்ணீர் இருக்கின்றது. கங்கை, யமுனை முதலிய அநேக ஆறுகளிலும் தண்ணீர் நிறைந்துள்ளது. என்றாலும் அப்பறவை மழை நீரையன்றி இவையொன்றினின்றும் தண்ணீர் அருந்தாது. எவ்வளவுதான் தாகத்தால் தொண்டை வறண்டு போயினும் மழைநீரைத் தவிர்த்து வேறு எந்த நீரையும் அது அருந்தவே அருந்தாது. அதேபோல இவர்களும் கடவுளைப்பற்றியும், கடவுள் சம்பந்தப்பட்டவற்றைப் பற்றியுமன்றி வேறு எந்த விஷயங்களைப் பற்றியும் கேட்கவும் பேசவும் மாட்டார்கள்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

முந்தியது சிற்றின்பம் என்று ஏன் சொல்லப்படுகிறது? விளக்கம் வருகிறது:—

ये हि संस्पर्शजा भोगा दुःखयोनय एव ते ।
आद्यन्तवन्तः कौन्तेय न तेषु रमते बुधः ॥ २२

யே ஹி ஸம்ஸ்பர்சஜா போகா து:கயோனய ஏவ தே।
ஆத்யந்தவந்த: கௌந்தேய ந தேஷு ரமதே புத: ॥ 22

कौन्तेय கௌந்தேய *குந்தியின் மைந்தா* ये யே *எவை* हि ஹி *உண்மையில்* संस्पर्शजाः ஸம்ஸ்பர்சஜா: *இந்திரிய விஷயங்களில் தோன்றிய* भोगाः போகா: *போகங்களோ* ते தே *அவைகள்* दुःखयोनयः

एव துःகயோனய: ஏவ *துக்கத்துக்கே காரணமானவைகள்* आदि अन्त वन्त: ஆதி அந்த வந்த: *ஆதியும் அந்தமும் உடையவைகள்* बुध: புத: *ஞானி* तेषु தேஷு *அவைகளில்* न रमते ந ரமதே *இன்புறுகிறதில்லை.*

***இந்திரிய விஷயங்களில் தோன்றிய போகங்களே துன்பத்துக்கு ஏதுவானவைகளாம். குந்தியின் மகனே, ஆதியந்தமுடைய அவைகளில் ஞானி இன்பமுறுவதில்லை.*** **22**

*எல்லா துக்கத்துக்கும் காரணம் விஷய சுகத்தை நாடுவதாலேயாம். இந்திரியங்கள் இந்திரியார்த்தங்களில் தொடர்பு வைக்கும்பொழுது சுகம் ஆரம்பிக்கிறது. அர்த்தங்களை விட்டு அவைகள் விலகும்போது துக்கமாகப் பரிணமிக்கிறது. இடையில் மின்னல் போன்று சிறிது இன்பம் தென்பட்டதுதான் மிச்சம். அறிவு இல்லாத விலங்குகளும் மாக்களும் அவைகளை நாடிச் செல்லுகின்றன. விவேகமுடையவன் அவைகளை விலக்கி வைத்துவிடுகிறான்.*

*பாம்பைக் கண்டதும் "மானஸ தேவி! வாலைக்காட்டித் தலையை மறைத்துக்கொண்டு ஒதுங்கிப் போ" என்று ஜனங்கள் சொல்லுவது வழக்கம். அதுபோல இந்திரிய சுகங்களைத் தூண்டும் விஷயங்களினின்றும் விலகியிருப்பது நல்லது. அவைகளில் அழுந்தி வருந்துவதனால் உண்டாகும் அனுபவத்தைக்காட்டிலும், அவைகளுடைய ஸஹவாஸமே இல்லாது செய்துகொள்வது வெகு மேலானது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஆசையைப் போக்க எத்தகைய பிரயத்தனம் எடுத்துக் கொள்ளவேண்டும்?*

**शक्नोतीहैव यः सोढुं प्राक्शरीरविमोक्षणात् ।**
**कामक्रोधोद्भवं वेगं स युक्तः स सुखी नरः ॥ २३**

சக்னோதீஹைவ ய: ஸோடும் ப்ராக்சரீரவிமோக்ஷணாத் ।
காமக்ரோதோத்பவம் வேகம் ஸ யுக்த: ஸ ஸுகீ நர: ॥ 23

य: ய: *யார்* शरीर विमोक्षणात् சரீர விமோக்ஷணாத் *சரீரத்தைவிடுதற்கு* प्राक् ப்ராக் *முன்பு* काम क्रोध उद्भवं காம க்ரோத உத்பவம் *காமம், குரோதம் இவைகளில் உண்டாகும்* वेगं வேகம் *வேகத்தை*

इह एव இஹ ஏவ *இம்மையிலேயே* सोढुं ஸோடும் *சகிப்பதற்கு* शक्नोति *வல்லவனே* सः ஸ: *அவன்* युक्तः யுக்த: *யோகி* सः ஸ: *அவன்* सुखी नरः ஸுகீ நர: *ஆனந்தத்தையுடைய மனிதன்.*

***இம்மையில் சரீரத்தை விடுதற்கு முன்பு காமம் குரோதம் இவைகளின் வேகத்தைப் பொறுக்கவல்லவனே யோகி; அவனே இன்பம் துய்ப்பவன்.*** 23

*மனிதன் உடலில் உயிர்வாழுமளவு காமம் அல்லது குரோதம் தலையெடுப்பது திண்ணம். சாகும் தறுவாயிலும் இவைகள் தோன்ற வல்லவைகள். இன்பம் தரும் பொருள்களை இந்திரியங்களால் நுகர்வதால், கேட்பதால் அல்லது எண்ணுவதால் காமம் தலையெடுக்கிறது. குரோதம் அல்லது சினம் என்பது துன்பம் தரும் பொருள்களை இந்திரியங்களால் நுகர்வதால், கேட்பதால் அல்லது சிந்திப்பதால் தோன்றுகிறது. காமம் உள்ளத்தில் தடிக்கும்போது அது புறத்தில் முகமலர்ச்சியாகவும் மயிர்க்கூச்சாகவும் வடிவெடுக்கிறது. சினம் சிந்தையில் சீறியெழும்போது உடல் வியர்த்து நடுங்குகிறது, உதடு கடியுண்கிறது, கண் சிவக்கிறது. விருப்பு வெறுப்பின் விசையை அடக்குபவனே யோகி. அவனுக்குத் தன்னகத்துள்ள இன்பம் தானே உதயமாகிறது.*

*காமமும் காசு ஆசையும் உலகமுழுவதையும் பாபத்தில் அமிழ்த்திவிட்டன. ஸ்திரீகளை லோகமாதாவின் தோற்றங்களென்று கருதுவாயானால், உனக்கு அவர்களால் துன்பமுண்டாகாது.*

*ஆசை நசிக்காதிருக்கும் வரையில் ஈசனைக் காணமுடியாது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*எத்தகைய யோகி பிரம்மத்தில் நிலைத்திருந்து பிரம்மத்தை அடைகிறான்? பகவான் பதில் சொல்லுகிறார் :—*

**योऽन्तः सुखोऽन्तरारामस्तथान्तर्ज्योतिरेव यः ।**
**स योगी ब्रह्मनिर्वाणं ब्रह्मभूतोऽधिगच्छति ॥ २४**

யோऽந்த: ஸுகோऽந்தராராமஸ்ததாந்தர்ஜ்யோதிரேவ ய: |
ஸ யோகீ ப்ரஹ்மநிர்வாணம் ப்ரஹ்மபூதோऽதிகச்சதி || 24

यः ய: *யார்* अन्तःसुखः அந்த: ஸுக: *ஆத்மாவில் சுகிக்கிறனே* अन्तः आरामः அந்த: ஆராம: *ஆத்மாவில் விளையாடுகிறனே* तथा ததா *மேலும்* यः ய: *யார்* अन्तःज्योतिः அந்த: ஜ்யோதி: *உள்ளொளி காண் கிறனே* सः योगी एव ஸ: யோகீ ஏவ *அந்த யோகியே* ब्रह्म भूतः ப்ரஹ்ம பூத: *பிரம்ம சொரூபமாகி* ब्रह्म निर्वाणं ப்ரஹ்ம நிர்வாணம் *பிரம்ம நிர் வாணத்தை* अधिगच्छति அதிகச்சதி *அடைகிறன்.*

***ஆத்மாவில் இன்பம் துய்த்து, ஆத்மாவில் கிரீடித்து, இன்னும் ஆத்மாவில் உள்ளொளி காணும் யோகி தானே பிரம்மமாகி பிரம்ம நிர் வாணத்தையடைகிறன். 24***

*விஷயங்களில் சுகம் காணுது சுகத்துக்கு யதாஸ்தான மாகிய ஆத்மாவின்கண் அது காணப்பெறுகிறது. விளையாடி மகிழ்வூட்டும் பொருள் வெளியுலகில் இல்லாது ஆத்மாவின் கண்ணே அமைகிறது. ஞான வெளிச்சத்தை நாடி இந்திரி யங்கள் வாயிலாக வெளியுலகில் செல்லாது ஆத்மா தன்னி டத்தே அதை அடைகிறது. சுருங்கச் சொல்லின் தான் நாடும் அனைத்தும் தன்னிடத்தே இருப்பதை சுவானுபவத் தில் காணும் யோகி தானே பிரம்ம சொரூபமாகி பிரம்ம நிர் வாணம் அல்லது முக்தியடைகிறன்.*

*உலகப்பற்று அதிகமுள்ள மனிதனுக்கு ஞானம் உதிக்காது. எவ்வளவுக்கு உலகப்பற்று குறைந்து இருக்கிறதோ அதற்கேற்றபடி ஞானமும் வளர ஆரம்பிக்கும்.*

ஷ்ணர் உபதேசம்

*மேலும் :—*

**लभन्ते ब्रह्मनिर्वाणमृषयः क्षीणकल्मषाः ।**
**छिन्नद्वैधा यतात्मानः सर्वभूतहिते रताः ॥ २५**

லபந்தே ப்ரஹ்மநிர்வாணம்ருஷய: க்ஷீணகல்மஷா: ।
சின்னத்வைதா யதாத்மான: ஸர்வபூதஹிதே ரதா: ॥ 25

क्षीणकल्मषाः க்ஷீணகல்மஷா: *பாபங்களைப் போக்கிக்கொண்ட வர்கள்* छिन्नद्वैधाः சின்னத்வைதா: *சந்தேகங்களை அகற்றியவர்கள்* यतात्मानः யதாத்மான: *இந்திரியங்களை அடக்கியவர்கள்* सर्वभूत हिते ஸர்வபூத

ஹிதே *எல்லா உயிர்களின் நன்மையில்* रताः ரதா: *மகிழ்ச்சியடை கிறவர்கள்* ऋषयः ருஷய: *ரிஷிகள்* ब्रह्मनिर्वाणं ப்ரஹ்மநிர்வாணம் *பிரம்ம நிர்வாணத்தை* लभन्ते லபந்தே *அடைகிறார்கள்.*

***தீவினை களைந்து, ஐயம் அகற்றி, இந்திரியங்களை அடக்கி, எல்லா உயிர்களின் நன்மையில் மகிழ்வுறும் ரிஷிகள் பிரம்ம நிர்வாணம் அடைகிறார்கள்.*** **25**

*ரிஷிகள் என்பவர்கள் தத்வதர்சனம் அடையப் பெற்றவர்கள். பற்றற்ற வாழ்க்கையால் அவர்களுக்குப் பூரண ஞானம் வருகிறது. பற்று இல்லை யெனினும் எல்லா உயிரும் இன்புற்றிருப்பதற்கான உபாயங்களை யெல்லாம் அவர்கள் கையாளுகிறார்கள். மனமும் இந்திரியங்களும் அடங்கப்பெற்றமையினால் அவர்கள் அங்ஙனம் செயலில் ஈடு படுபவர்கள் அல்லர்; முற்றிலும் தன்னடக்கமே வடிவெடுத் தவர்கள். ஆக, அவர்களுக்குப் பாபம் ஒன்றும் வந்தமைவ தில்லை. பிரம்ம நிர்வாணம் அல்லது பேரானந்தப் பிராப் திக்கு அவர்கள் தகுதியுடையவர்கள் ஆகின்றனர்.*

*மேலும் அவர்களது மகிமை யாதெனின் :—*

**कामक्रोधवियुक्तानां यतीनां यतचेतसाम् ।**
**अभितो ब्रह्मनिर्वाणं वर्तते विदितात्मनाम् ॥ २६**

காமக்ரோதவியுக்தானும் யதீனும் யதசேதஸாம் ।
அபிதோ ப்ரஹ்மநிர்வாணம் வர்த்ததே விதிதாத்மனும் ॥ 26

काम क्रोध वियुक्तानां காம க்ரோத வியுக்தானும் *ஆசை, சினம் இவைகளினின்று விடுபட்டவர்கள்* यत चेतसां யத சேதஸாம் *மனம் அடங்கியவர்கள்* विदित आत्मनां விதித ஆத்மனும் *ஆத்மாவை அறிந்தவர்கள்* यतीनां யதீனும் *ஸந்யாஸிகளுக்கு* अभितः அபித: *இம்மையிலும் மறுமையிலும்* ब्रह्मनिर्वाणं ப்ரஹ்மநிர்வாணம் *மோக்ஷம்* वर्तते வர்த்ததே *இருக்கிறது.*

***விருப்பு வெறுப்பினின்று விடுபட்டு, மனதை யடக்கி, ஆத்மஞானம் அடையப்பெற்ற ஸந்யாஸி களுக்கு யாண்டும் மோக்ஷமுளது.*** **26**

*யாண்டும் மோக்ஷமுளது என்பதன் பொருள் இங்கு இவ்வுடலத்தோடு இருக்கும்பொழுது அத்தகைய பரிபாக முடைய துறவிகள் ஜீவன்முக்தர்களாக விருக்கிறார்கள். இவ்வுடலத்தை விடும்பொழுது அவர்கள் விதேகமுக்தர் களாகிறார்கள். ஆக, எங்கும் எப்பொழுதும் அவர்கள் முக் தர்களே.*

*முக்தியின் பொருட்டு மனதை ஒருமுகப்படுத்தியாக வேண்டும். அதன் விவரம் வருகிறது :—*

**स्पर्शान्कृत्वा बहिर्बाह्यांश्चक्षुश्चैवान्तरे भ्रुवोः ।**
**प्राणापानौ समौ कृत्वा नासाभ्यन्तरचारिणौ ॥ २७**
**यतेन्द्रियमनोबुद्धिर्मुनिर्मोक्षपरायणः ।**
**विगतेच्छाभयक्रोधो यः सदा मुक्त एव सः ॥ २८**

ஸ்பர்சான்க்ருத்வா பஹிர்பாஹ்யாம்ஸ்
சக்ஷுஸ்சைவாந்தரே ப்ருவோ: ।
ப்ராணாபானௌ ஸமௌ க்ருத்வா
நாஸாப்யந்தரசாரிணௌ ॥ 27
யதேந்த்ரியமனோபுத்திர்முனிர்மோக்ஷபராயண: ।
விகதேச்சாபயக்ரோதோ ய: ஸதா முக்த ஏவ ஸ: ॥ 28

बाह्यान् स्पर्शान् பாஹ்யான் ஸ்பர்சான் *வெளி விஷயங்களை* बहिः कृत्वा பஹி: க்ருத்வா *வெளியில் நிறுத்தி* चक्षुः च சக்ஷு: ச *கண்களை* भ्रुवोः ப்ருவோ: *இரு புருவங்களுக்கும்* अन्तरे एव அந்தரே ஏவ *இடையிலே (ஸ்தாபித்து)* नासा अभ्यन्तर चारिणौ நாஸா அப்யந்தர சாரிணௌ *நாசியின் வழியாகச் சஞ்சரிக்கிற* प्राण अपानौ ப்ராண அபானௌ *பிராண அபான வாயுக்களை* समौ कृत्वा ஸமௌ க்ருத்வா *சமப்படுத்தி* यत इन्द्रिय मन बुद्धिः யத இந்த்ரிய மன புத்தி: *இந்திரியம், மனம், புத்தி இவைகளையடக்கி* मोक्ष परायणः மோக்ஷ பராயண: *முக்தியைக் குறிக்கோளாகக்கொண்டு* विगत इच्छा भय क्रोधः விகத இச்சா பய க்ரோத: *இச்சை, பயம், குரோதம் இவைகளைவிட்டு* यः ய: *யார்* मुनिः முனி: *மனனசீலனாய் இருக்கிறானோ* सः ஸ: *அவன்* सदा ஸதா *எப்பொழுதும்* मुक्तः एव முக்த: ஏவ *முக்தனேயாவான்.*

**வெளி விஷயங்களை வெளியே வைத்து, கண்களைப் புருவங்களுக்கிடையில் நிறுத்தி, மூக்கில் இயங்கும் பிராண, அபான வாயுக்களைச் சமப்படுத்தி, இந்திரியம், மனம், புத்தி இவைகளை யடக்கி, மோக்ஷத்தை நாடி, ஆசை அச்சம் சினம் இவைகளை விட்டு முனியாயிருப்பவன் முக்தனே. 27-28**

ஓசை முதலிய வெளி விஷயங்களை எண்ணாது விட்டு விடும்பொழுது அவைகள் புறத்தே வைக்கப்படுவனவாகின்றன. தியானத்தில் கண்கள் பாதி மூடப்பெற்றிருக்கும் போது அவைகள் அசைவதில்லை. புருவங்களுக்கிடையில் குவிவன போன்று அவைகள் தென்படும். நாசியில் புறத்தே விடும் மூச்சுக்குப் பிராணன் என்றும், உள்ளே இழுக்கும் காற்றுக்கு அபானன் என்றும் பெயர். இங்ஙனம் பிராணுயாமத்தின் மூலம் சுவாசத்தின் போக்கு வரவு ஒழுங்குப்படுத்தப்படுகிறது. மனதின் அமைதிக்கும் பிராண அபானனின் ஒழுங்கு முறைக்கும் நெருங்கிய தொடர்வுண்டு. வாயு ஒடுங்குமிடத்து மனம் ஒடுங்குகிறது; மனம் ஒடுங்குமிடத்து வாயு ஒடுங்குகிறது.

ஆசை, அச்சம், சினம் குடி கொள்ளுமிடத்து மனம் தத்தளிக்கிறது. அசையும் நீரில் நிழல் அல்லது பிரதிபிம்பம் நன்கு தென்படாது. அசையும் மனதில் ஆத்ம சொரூபமும் தென்படாது. மனதுக்குத் தேக்கம் முதலில் உண்டாக வேண்டும். தியானம் அதைத் தொடர்ந்து கைகூடும்.

யாருடைய மனது தைல தாரைபோன்று ஈசுவரனை நோக்கிச் செல்லுகிறதோ அம்மனிதன் முனி, அல்லது மனன சீலத்தையுடையவன். ஆத்ம சாக்ஷாத்காரம் பண்ணிக்கொண்டிருக்குமளவு ஒருவன் முக்தனுகிறுன்.

பின்வரும் அத்தியாயம் முழுதும் இந்த இரண்டு சுலோகங்களுக்கு விளக்கமாகும்.

ஈசுவரனிடத்து மனதைத் திருப்புகிற முனி ஈசுவரனை எங்ஙனம் கருதவேண்டும்? விடை வருகிறது :—

भोक्तारं यज्ञतपसां सर्वलोकमहेश्वरम् ।
सुहृदं सर्वभूतानां ज्ञात्वा मां शान्तिमृच्छति ॥ २९

போக்தாரம் யக்ஞதபஸாம் ஸர்வலோகமஹேச்வரம் ।
ஸுஹ்ருதம் ஸர்வபூதானும் ஞாத்வா மாம் சாந்திம்ருச்சதி ॥ 29

यज्ञ तपसां யக்ஞ தபஸாம் *யக்ஞம், தபசு இவைகளை* भोक्तारं போக்தாரம் *அனுபவிப்பவன் என்றும்* सर्वलोक महेश्वरं ஸர்வலோக மஹேச்வரம் *எல்லா லோகங்களுக்கும் ஈசுவரன் என்றும்* सर्व भूतानां ஸர்வ பூதானும் *எல்லா உயிர்களினுடைய* सुहृदं ஸுஹ்ருதம் *நண்பன் என்றும்* मां மாம் *என்னை* ज्ञात्वा ஞாத்வா *அறிந்து* शान्ति சாந்திம் *சாந்தியை* ऋच्छति ருச்சதி *அடைகிறன்.*

***யக்ஞம், தபசு இவைகளை அனுபவிப்பவனும், உலகனைத்துக்கும் ஈசனும், உயிர்களுக்கெல்லாம் நண்பனும் நான் என்று அறிபவன் சாந்தியடைகிறுன். 29***

*யாகம், தபசு இவைகளைச் செய்விக்கும் கர்த்தாவாயிருப்பவரும், இவைகள் வாயிலாக அடையப்பெறும் தேவதையாயிருப்பவரும் நாராயணனே. உலகம் முழுதையும் அவர் ஆளுகிருர். அப்படிச் செய்வதால் அவரிடத்து அன்பு இல்லாது போய்விடவில்லை. கைம்மாறு கருதாது எல்லா உயிர்களுக்கும் நன்மையே செய்கிருர் அவர். எல்லாருடைய உள்ளத்திலும் மனசாக்ஷியாக வீற்றிருந்து அவரவர் கர்மத்துக்கு ஏற்ற பலனை அவர் எடுத்து வழங்குகிருர். செயலுக்குத் தலைவனயிருப்பது போன்று அறிவுக்கும் அறிவாய் இலங்குகின்ருர் அவர். இவ்வுண்மையை அறிகின்றவர்களுக்கு மனச்சஞ்சலம் இல்லை. சாந்தி தானே வந்தமையும்.*

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे संन्यासयोगो नाम पञ्चमोऽध्यायः ॥

***ஐந்தாம் அத்தியாயம் முடிவு.***

---

# षष्ठोऽध्यायः

# ஆறும் அத்தியாயம்

## ध्यानयोगः

## தியானயோகம்

श्री भगवानुवाच

अनाश्रितः कर्मफलं कार्यं कर्म करोति यः ।
स संन्यासी च योगी च न निरग्निर्न चाक्रियः ॥ १

ஸ்ரீ பகவானுவாச

அனாச்ரித: கர்மபலம் கார்யம் கர்ம கரோதி ய: ।
ஸ ஸந்யாஸீ ச யோகீ ச ந நிரக்னிர்ன சாக்ரிய: ॥ 1

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது* यः ய: *யார்* कर्मफलं கர்மபலம் *கர்மபலனை* अनाश्रितः அனாச்ரித: *அபேக்ஷிக்காது* कार्यं कर्म கார்யம் கர்ம *செய்யவேண்டிய கர்மத்தை* करोति கரோதி *செய்கிறனே* सः ஸ: *அவன்* संन्यासी च योगी च ஸந்யாஸீ ச யோகீ ச *ஸந்யாஸியும் யோகியும் (ஆகிறன்)* न निरग्निः ந நிரக்னி: *அக்னியில்லாதவன் அல்லன்* न च अक्रियः ந ச அக்ரிய: *கர்மம் செய்யாதவனும் அல்லன்.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***கர்ம பலனைச் சாராது செய்யவேண்டிய கர்மத்தைச் செய்பவனே ஸந்யாஸி, அவனே யோகி; அக்னிஹோத்ரம் செய்யாதவனும் கர்மம் செய்யாதவனும் ஸந்யாஸி யாகான். 1***

*உலக வழக்கத்தில் ஸந்யாஸி என்பதற்குத் தப்பான ஒரு பொருள் உண்டு. அதாவது அவன் ஒரு கடமையையும்*

ஏற்றுக் கொள்ளலாகாது. அக்னிஹோத்ரம் என்றால் யாகம் செய்வது என்று பொருள். ஸங்யாஸி யாகம் செய்யாது, ஒரு பொறுப்பையும் ஏற்றுக்கொள்ளாது செயலற்று இருக்கவேண்டுமாம். அர்ஜுனன் யுத்தம் செய்யமாட்டேன் என்று இயம்பி பிக்ஷான்னம் அருந்தி உயிர் வாழ்வது நலம் என்று கருதியதே இக்கொள்கைக்குச் சான்றாகும். பின்பு பகவானுடைய கோட்பாடு அதுவன்று. பகவானுடைய கோட்பாடே உண்மையான வேதாந்தமாகும். தேகம் எடுத்தவர் யாரும் கர்மத்தை விட்டுவிடலாகாது. அவரவர் கடமையை நன்கு செய்துகொண்டிருக்கவேண்டும். ஆனால் கர்ம பலனை யார் பொருட்படுத்துவதில்லையோ, தனது நித்திய கர்மத்தை நிஷ்காமியமாக யார் செய்கிறானோ அவன் ஸங்யாஸி. அவனே யோகியும் ஆகிறான். கர்ம பலத்தில் ஆசை அறவே அகன்று விடுவதால் அவன் ஸங்யாஸி. பின்பு கர்மம் ஓயாது அவன் மூலம் நடைபெறுவதால் அவன் யோகி. அப்படியானால் ஸங்யாஸத்துக்கும் யோகத்துக்கும் உள்ள தொடர்வு யாது? விடை வருகிறது :—

**यं संन्यासमिति प्राहुर्योगं तं विद्धि पाण्डव ।**
**न ह्यसंन्यस्तसङ्कल्पो योगी भवति कश्चन ॥ २**

யம் ஸங்யாஸமிதி ப்ராஹுர்யோகம் தம் வித்தி பாண்டவ ।
ந ஹ்யஸங்யஸ்தஸங்கல்போ யோகீ பவதி கஸ்சன ॥ 2

पाण्डव பாண்டவ *பாண்டவா* यं யம் *எதை* संन्यासं इति ஸங்யாஸம் இதி *ஸங்யாஸம் என்று* प्राहुः ப்ராஹு: *சொல்லுகிறார்களோ* तं தம் *அதை* योगं யோகம் *யோகம் என்று* विद्धि வித்தி *அறிக* हि ஹி *ஏனென்றால்* असंन्यस्त सङ्कल्पः அஸன்யஸ்த ஸங்கல்ப: *சங்கல்பத்தைத் துறவாத* कश्चन கஸ்சன *யாரும்* योगी न भवति யோகீ ந பவதி *யோகியாவதி*

***பாண்டவா, எதை ஸங்யாஸம் என்கிறார்களோ, அதையே யோகம் என்று அறிக. ஏனென்***

**ருல் சங்கற்பத்தைத் துறவாதவன் யோகியாவ தில்லை.** 2

கர்ம பலனைப்பற்றி மனதில் உண்டாகும் கற்பனு சக்திக்கே சங்கற்பம் என்று பெயர். இனி கிடைக்கப்போம் பலனைப்பற்றி மனது முற்கூறியே திட்டம் போடுகிறது. ஒருபோக்கில் ஏராளமாக மனோராஜ்யம் செய்துவிட்டுப் பின்பு அதை அடியோடு துடைத்துவிடுகிறது. திரும்பவும் இன்னொரு போக்கில் அது எண்ணுகிறது. ஒவ்வொரு திட்டத்திலும் கிடைக்கப்போம் பலனைப்பற்றிய எண்ணத் துக்கு ஒரு முடிவில்லை. இங்ஙனம் ஆசையின் வேகத்தால் அனந்தங்கோடி எண்ணங்கள் உதிப்பதே சங்கற்பம் எனப் படும். இதனால் மனம் சலனமடைகிறது. மனச்சலிப்பு (மன அலேச்சல்) இருக்குமளவு ஒருவன் யோகியாக முடியாது. ஆக, ஸந்யாஸத்தால் சங்கற்பம் துறக்கப்படுகிறது. சங்கற் பத்தைத் துறப்பதால் யோகம் உறுதி பெறுகிறது. மனது உறுதி பெற்றவனே நன்கு கர்மம் செய்யவும், தியானம் செய்யவும் முடியும். இங்ஙனம் கர்மபல ஸந்யாஸமும் கர்ம யோகமும் ஒன்றாய்விடுகின்றன.

சங்கற்ப ஸந்யாஸத்தால் யோகம் உறுதிபெறும் விதம் அடுத்த சுலோகத்தில் விளக்கப்படுகிறது :—

**आरुरुक्षोर्मुनेर्योगं कर्मकारणमुच्यते ।**
**योगारूढस्य तस्यैव शमः कारणमुच्यते ॥ ३**

ஆருருக்ஷோர்முனேர்யோகம் கர்ம காரணமுச்யதே ।
யோகாரூடஸ்ய தஸ்யைவ சம: காரணமுச்யதே ॥ 3

योगं யோகம் *தியானயோகத்தை* आरुरुक्षोः ஆருருக்ஷோ: *அடைய விரும்புகிற* मुनेः முனே: *முனிவனுக்கு* कर्म கர்ம *கர்மம்* कारणं उच्यते காரணம் உச்யதே *சாதனம் என்று சொல்லப்படுகிறது* योग आरूढस्य யோக ஆரூடஸ்ய *தியானயோகத்தை அடைந்த* तस्य एव தஸ்ய ஏவ *அவனுக்கே* शमः சம: *செயலின்மை* कारणं उच्यते காரணம் உச்யதே *சாதனம் என்று சொல்லப்படுகிறது.*

**தியான யோகத்தில் முன்னேற விரும்புகிற முனிவனுக்குக் கர்மம் உபாயமாகிறது. தியான சித்தியடைந்தவனுக்கோ செயலற்றிருப்பது உபாய மாகிறது. 3**

தியானம் செய்வதில் விருப்பம் கொண்டிருக்குமளவு ஒருவன் முனியாகிறான். ஆயினும் மனம் குவிந்து தியானம் அமைவதில்லை. அத்தகைய யோகி நிஷ்காமிய கர்மத்தை ஊக்கத்துடன் செய்யவேண்டும். காமிய கர்மத்தை ஊக்கத் துடனும் ஓயாதும் செய்பவனுக்கு நன்றாக உறக்கம் பிடிக் கிறது. நிஷ்காமிய கருமத்தை அதே ஊக்கத்துடன் செய்ப வனுக்கு தியானம் கூடுகிறது. அதனால் மனம் தெளிவடை கிறது. தெளிந்த மனதில் தியான சித்தி தானாக அமைகிறது. சமம் என்பது செயலை ஒழுங்குப்படுத்திய நடுநிலை. ஆத்மா செயலைக் கடந்திருப்பது போன்றதல்ல இது. பம்பரம் நடு நிலையில் நின்று வேகமாகச் சுழலும்போது அதனிடத்து ஒரு செயலும் வெளிக்குத் தென்படுவதில்லை. ஓய்ந்து நிற் பது போன்று அது காட்சி கொடுக்கிறது ஒழுங்கான இயக் கம் என்பது அதுவே. அகர்மம் போன்று தென்படுகிற கர்மம் அது. தியானம் நன்கு கூடி வரும்பொழுது யோகி யானவன் கர்மத்தை யெல்லாம் ஒழித்துவிட்டவனாகக் காட்சி கொடுக்கிறான். தியானத்தில் நிலைபெற்றிருத்தல் என்ற ஒப்பற்ற சூக்ஷ்ம கர்மம் ஆங்கு நிகழ்கிறது. கர்ம சொரூபமான மனதின் தெளிந்த கர்மம் அது. அகர்மம் என்றே அதைச் சொல்லலாம். விகல்பம் ஒன்றும் ஆங்கில்லா மையால் ஆத்ம சொரூபத்தை அது விளக்க வல்லது.

மனத்தெளிவு என்பதும் சித்த சுத்தி என்பதும் ஒன்றே. இதுவே ஒரு மனிதனுக்கு ஒப்பற்ற செல்வமா கிறது. இதினின்று ஒற்றுமை, சமத்துவம், உண்மை, ஒழுக் கம், உறுதி, அஹிம்சை, நேர்மை, கர்மங்களினின்று விலகு தல் ஆகியவைகள் முறையாக வந்தமைகின்றன. மனம், மொழி, மெய்களால் எல்லா உயிர்களுக்கும் நன்மையே செய்தல் ஒழுக்கம் எனப்படும்.

*யோகாரூடன் அல்லது யோகத்தை அடைந்தவனாக ஒரு மனிதன் எப்பொழுது கருதப்படுகிறான்? விடை வருகிறது:—*

**यदा हि नेन्द्रियार्थेषु न कर्मस्वनुषज्जते ।**
**सर्वसङ्कल्पसंन्यासी योगारूढस्तदोच्यते ॥ ४**

யதா ஹி நேந்த்ரியார்த்தேஷு ந கர்மஸ்வனுஷஜ்ஜதே ।
ஸர்வஸங்கல்பஸந்யாஸீ யோகாரூடஸ்ததோச்யதே ‖ 4

यदा யதா *எப்பொழுது* इन्द्रियार्थेषु இந்த்ரியார்த்தேஷு *இந்திரிய விஷயங்களில்* न अनुषज्जते ந அனுஷஜ்ஜதே *இச்சை வைக்கிறதில்லையோ* न कर्मसु ந கர்மஸு *வினையாற்றுதலில் விருப்பம் வைக்கிறதில்லையோ* सर्व सङ्कल्प संन्यासी ஸர்வ ஸங்கல்ப ஸன்யாஸீ *எல்லா எண்ணங்களையும் விட்டுவிடுகிறவன்* तदा हि ததா ஹி *அப்பொழுதுதான்* योगारूढः யோகாரூட: *யோகாரூடன் என்று* उच्यते உச்யதே *சொல்லப்படுகிறான்.*

***எப்பொழுது ஒருவன் விஷயங்களில் பற்றற்றுக் கருமத்தில் கருத்து வைக்காது எண்ணங்களை விட்டொழிக்கிறானோ, அப்பொழுதுதான் அவன் யோகாரூடன் எனப்படுகிறான். 4***

*யோகத்தில் நிலைபெற்றவன் யோகாரூடன் எனப்படுகிறான். தியானம் முதிர்ந்து சமாதியாகும்போது அவனுக்கு வெளியுலகோடு ஒருவிதத் தொடர்வும் இல்லாது போய் விடுகிறது. சப்தம், ஸ்பர்சம் முதலிய இந்திரியார்த்தங்களில் அவனது மனது ஓட்டுகிறதில்லை. நித்திய நைமித்திக கர்மங்களெல்லாம் உறக்கத்தில் ஒடுங்குவது போன்று சமாதியில் நின்றுவிடுகின்றன. பிறகு சங்கற்பங்களெல்லாம் அற்றுப்போகுமிடத்து ஓய்ந்த கடல்போன்று, எண்ணம் என்ற அலையற்றிருக்கிறது மனது. இவ்வுலகத்தை அல்லது மறுவுலகத்தைப் பற்றிய விசாரம் சிறிதளவும் அதனிடத்தில்லை.*

*" சங்கற்பத்தினின்றே ஆசையும் செயலும் வடி வெடுக்கின்றன."—மனு II-2.*

*" ஆசையே, உனக்குப் பிறப்பிடம் எது என்பதை நான் அறிகிறேன். சங்கற்பத்திலிருந்து நீ உதித்துள்ளாய். உன்னை நான் சங்கற்பிக்காமல் விட்டுவிடுகிறேன். நீ நிர் மூலமாய்ப் போய்விடுவாய்."—சாந்திபர்வம் 177–25.*

*பிராணன் போனால் இந்திரியங்கள் ஒடுங்குவது போன்று சங்கற்பம் போனால் ஆசையும் கர்மமும் அடிபட் டுப்போய்விடுகின்றன. இங்ஙனம் ஒருவன் யோகாரூடன் ஆகும்போது சம்சார துக்கங்களினின்று விடுபட்டு ஆத்மா வைக்கொண்டு ஆத்மாவை உன்னதத்துக்குக் கொண்டுவரு கிறான்.*

*ஆசைகளாகிய பெருங்காற்றினால் சித்தமாகிய ஆகாசம் அலைக்கழிக்கப்படும் வரையில், ஈசுவரனாகிய ஒளியை அங்குக்காண இயலாது. ஈசுவரனுடன் ஐக்கியமாகி சாந்தமாக இருக்கும் மனத்தில் தான் அந்தத் திவ்விய தரிசனம் தோன்றும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஆகையால் சாதகன் என் செய்யவேண்டும் ?*

**उद्धरेदात्मनात्मानं नात्मानमवसादयेत् ।**
**आत्मैव ह्यात्मनो बन्धुरात्मैव रिपुरात्मनः ॥ ५**

உத்தரேதாத்மனாத்மானம் நாத்மானமவஸாதயேத் ।
ஆத்மைவ ஹ்யாத்மனோ பந்துராத்மைவ ரிபுராத்மன: ॥ 5

आत्मना ஆத்மனா *ஆத்மாவைக்கொண்டு* आत्मानं ஆத்மானம் *ஆத்மாவை* उद्धरेत् உத்தரேத் *உத்தாரணம் செய்க* आत्मानं ஆத்மானம் *ஆத்மாவை* न अवसादयेत् ந அவஸாதயேத் *கீழ்மைப்படுத்தலாகாது* हि ஹி *ஏனென்றால்* आत्मा एव ஆத்மா ஏவ *ஆத்மாவே* आत्मनः ஆத்மன: *ஆத்மாவுக்கு* बन्धुः பந்து: *நண்பன்* आत्मा एव ஆத்மா ஏவ *ஆத்மாவே* आत्मनः ஆத்மன: *ஆத்மாவுக்கு* रिपुः ரிபு: *பகை.*

***தன்னைத் தன்னாலே உயர்த்திக்கொள்க. தன்னை இழிவுறுத்தலாகாது. ஏனென்றால் தானே தனக்கு நண்பன்; தானே தனக்குப் பகை.*** **5**

*பிறப்பு இறப்பு என்னும் பெருங்கடலில் மூழ்கிப் போகாது தன்னைத்தானே மேல்நிலைக்குக் கொண்டுவர வேண்டும். மனிதன் அடைந்துள்ள சிறுமைக்கும் பெருமைக்கும் தானே பொறுப்பாளன். வேறு யாரும் அதற்குப் பொறுப்பாளர் அல்லர். பகைவன் தன்னைக் கெடுத்துவிட்டான் என்று ஒருவன் குறை கூறுவது உண்டு. அப்படிக் கெடுப்பது ஒரு நாளும் பகைவன் அல்லன். பகைவனாகத் தோன்றுபவனையே தனது சாதனத்துக்குற்ற துணையாக யோகி ஒருவன் எடுத்துக்கொள்ளமுடியும். அறியாமையினால் அல்லது சரியான வாழ்க்கை வாழாமையினால் மனிதன் தன்னையே கெடுத்துக்கொள்கிறான். அப்படித் தன்னையே கெடுப்பதால் தனக்குத்தானே பகைவன் ஆகிறான். நல்வாழ்க்கை வாழ்ந்து தன்னை எடுப்பவன் தனக்கே தோழனாகிறான். தனக்குத் தன்னிலும் மிக்கதொரு நண்பனோ பகைவனோ எவ்வுலகிலும் இல்லை என்பதை அறிபவன் வாழ்க்கையைப் பற்றிய ஒரு பேருண்மையை அறிபவன் ஆகிறான். பகையை யாரும் வேண்டுவதில்லை; தோழமையையே வேண்டுகின்றனர். அப்படியாயின் தனக்குத் தானே பகைவனாகாது தோழனாவது எங்ஙனம்? விடை வருகிறது:*

**बन्धुरात्मात्मनस्तस्य येनात्मैवात्मना जितः ।**
**अनात्मनस्तु शत्रुत्वे वर्तेतात्मैव शत्रुवत् ॥ ६**

பந்துராத்மாத்மனஸ்தஸ்ய யேனாத்மைவாத்மனா ஜித: ।
அனாத்மனஸ்து சத்ருத்வே வர்த்தேதாத்மைவ சத்ருவத் ॥ 6

**येन आत्मना** யேன ஆத்மனா *எந்த ஆத்மாவினால்* **आत्मा** ஆத்மா *ஆத்மாவானது* **जितः** ஜித: *ஜயிக்கப்பட்டிருக்கிறதோ* **तस्य** தஸ்ய *அவனுடைய* **आत्मा एव** ஆத்மா ஏவ *ஆத்மாவே* **आत्मनः** ஆத்மன: *ஆத்மாவுக்கு* **बन्धुः** பந்து: *பந்து ஆகிறான்* **तु** து *ஆனால்* **अनात्मनः** அனாத்மன: *ஆத்மாவை ஜயிக்காதவனுக்கோ* **आत्मा एव** ஆத்மா ஏவ *ஆத்மாவே* **शत्रुवत्** சத்ருவத் *சத்துருவைப் போல* **शत्रुत्वे** சத்ருத்வே *பகைமையில்* **वर्तेत** வர்த்ததே *இருக்கும்.*

**தன்னைத்தான் வென்றவனுக்குத் தானே உறவினன். ஆனால் தன்னை வெல்லாத ஆத்மா தனக்கே பகைவன் போலப் பகைமை சூழும். 6**

யோகத்தில் நிலைபெறாத மனிதனிடத்து இரண்டு இயல்புகள் உண்டு. ஒன்று கட்டில் அடங்காத சிற்றியல்பு. மற்றொன்று தெய்வப் பெற்றியுள்ள பேரியல்பு. இவைகளுள் சிற்றியல்பு தலையெடுக்கும்போது பேரியல்பு தோல்வியடைகிறது. பேரியல்பு வலுக்குமிடத்துச் சிற்றியல்பு நசித்துவிடுகிறது. தேகம், இந்திரியங்கள், மனம், புத்தி ஆகியவைகள் கட்டில் அடங்கியிருக்கும்பொழுது பேரியல்பு தலையெடுக்கிறது. அந்நிலையில் மனிதன் தன்னைத்தான் வென்றவனாகிறான். கீழான இயல்புக்கு அவன் இடங்கொடுக்குங்கால் தன்னையே அவன் அடியோடு கெடுத்துவிடுகிறான். புறத்தில் உள்ள பகைவன் ஏதோ சில வேளைகளில்தான் தாக்குகிறான். அப்படியிருந்தும் அவனால் துன்பமடையாத மனநிலையை யோகியொருவன் பெற்றுவிடலாம். அகத்திலுள்ள பகையோ அல்லும் பகலும் அவனை அலக்கழிக்கிறது. தோழன் போன்றிருந்து பெருந்தீங்கை அது விளைவிக்கிறது. ஆகவே தான் அடையும் துக்கத்துக்கெல்லாம் தானே முதற்காரணம். யோகி ஒருவனே தனக்குத்தான் உறவினன் ஆகின்றான். மற்றெல்லோரும் ஆசை என்ற ஹித சத்துருவின் வசப்பட்டுத் தங்களுக்குத் தாங்களே பகைவர் ஆய்விடுகின்றனர்.

பந்தம் மனத்தை யொட்டியது; முக்தியும் அவ்வாறே. "நான் ஒரு முக்தாத்மா, நான் ஈசுவரனுடைய புத்திரன்; என்னை யாரால் பந்தப்படுத்த முடியும்?" என்று நீ சொல்வாயானால் நீ முக்தனாக ஆவது நிச்சயம். பாம்பினால் கடிக்கப்பட்டவன் "விஷமில்லை, விஷமில்லை" என்று முழு நம்பிக்கையுடனும் மனோதிடத்துடனும், சொல்லக்கூடுமானால் அவனுக்கு விஷ உபத்திரவமே இராது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

தனக்குத் தானே நண்பன ஆனவன அடையும் நலங்களில் சிறந்தது யாது? விடை வருகிறது :-

**जितात्मनः प्रशान्तस्य परमात्मा समाहितः**
**शीतोष्णसुखदुःखेषु तथा मानापमानयोः ॥ ७**

ஜிதாத்மன: ப்ரசாந்தஸ்ய பரமாத்மா ஸமாஹித: |
சீதோஷ்ணஸுகது:கேஷு ததா மானபமானயோ: || 7

जितात्मनः ஜிதாத்மன: *தன்னை வென்றவனுக்கு* प्रशान्तस्य ப்ரசாந்தஸ்ய *மனந்தெளிந்தவனுக்கு* शीत उष्ण सुख दुःखेषु சீத உஷ்ண ஸுக துக்கேஷு *சீதம், உஷ்ணம், சுகம், துக்கங்களில்* तथा ததா *அப்படியே* मान अपमानयोः மான அபமானயோ: *மான அவமானங்களிலும்* परमात्मा பரமாத்மா *பரமாத்ம சொரூபமானது* समाहितः ஸமாஹித: *சாக்ஷாத்கரிக்கப்படுகிறது.*

***தன்னை வென்று மனந்தெளிந்தவனுக்குக் குளிர் வெப்பங்களிலும், இன்ப துன்பங்களிலும், அங்ஙனமே புகழ்ச்சி யிகழ்ச்சிகளிலும், பரமாத்ம தர்சனம் நிலைத்திருக்கும்.*** 7

*புறத்தில் பூதங்களிடத்திலிருந்தும், உயிர்களிடத்திலிருந்தும் வரும் நன்மை தீமைகள் அவனை அசைக்கமாட்டா. தன்னை வென்றவனுக்கு வெளியுலகம் சுற்றமும் அன்று; பகையுமன்று. கீழான ஆசைகளை அடக்கித்தன்னை வெல்லுபவனுக்கு மனம் தெளிகிறது. தூய கண்ணுடியில் போன்று தெளிந்த மனதில் பரமாத்மாவின் சொரூபம் பிரகாசிக்கிறது. உலக நிகழ்ச்சி எதுவும் அக்காட்சியை மறைப்பதில்லை. நலங்கள் அனைத்திலும் தலை சிறந்ததாகிய பரமாத்ம தரிசனமே தன்னை வென்றவனுக்கு வாய்க்கிறது. மற்ற நலங்களெல்லாம் எளிதில் அந்த யோகசித்தனுக்கு அமைகின்றன. மனிதன் பெறவேண்டிய சிரேயஸ் என்பதும் இதுவே.*

*விஷய சுகங்களில் சிறிதும் சம்பந்தப்படாத மனம் ஈசுவரனிடம் சென்று அவனிடம் ஒற்றுமைப்படுகிறது. இப்படித்தான் பந்தத்தினின்று ஆத்மாக்கள் முக்தியடைகின்றன. ஈசுவரனிடம் போகும் பாதைக்கு எதிராகச் செல்லும் ஆத்மா பந்தப்படுவதாகும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*யோகியின் மாருத மனநிலை மேலும் விளக்கப்படுகிறது :—*

**ज्ञानविज्ञानतृप्तात्मा कूटस्थो विजितेन्द्रियः ।**
**युक्त इत्युच्यते योगी समलोष्टाश्मकाञ्चनः ॥ ८**

ஞானவிக்ஞானத்ருப்தாத்மா கூடஸ்தோ விஜிதேந்த்ரிய: ।
யுக்த இத்யுச்யதே யோகீ ஸமலோஷ்டாச்மகாஞ்சன: ॥ 8

ज्ञान विज्ञान तृप्तात्मा ஞான விக்ஞான த்ருப்தாத்மா *ஞான விக்ஞானத்தில் திருப்தியடைந்தவன்* कूटस्थः கூடஸ்த: *அசையாதவன்* विजित इन्द्रियः விஜித இந்த்ரிய: *இந்திரியங்களை ஜயித்தவன்* सम लोष्ट अश्म काञ्चनः ஸம லோஷ்ட அச்ம காஞ்சன: *மண், கல், பொன் இவைகளைச் சமமாகப் பார்ப்பவன்* योगी யோகீ *யோகியானவன்* युक्तः इति யுக்த: இதி *யோகத்தில் உறுதி பெற்றவன் என்று* उच्यते உச்யதே *சொல்லப்படுகிறான்.*

***ஞான விக்ஞானத்தில் திருப்தியடைந்த, மனம் சலியாத, புலன்களை வென்ற, மண் கல் பொன்னைச் சமமாகக் கருதுகின்ற யோகியானவன் சமாதியில் உறுதிபெற்றவன் எனப்படுகிறான். 8***

*சாஸ்திர ஆராய்ச்சியால் வரும் அறிவு ஞானம் எனப்படுகிறது. அது சுவானுபவமாக முதிருமிடத்து அதற்கு விக்ஞானம் என்று பெயர். மற்றவைகளெல்லாம் மாறும் போது எது ஆகாசம் போன்று மாருதிருக்கிறதோ அது கூடஸ்தன் எனப்படுகிறது. இந்திரியார்த்தங்களின் போக்கு வரவுகளில் தட்டுப்படாது தன்மயமாயிருக்கும் மனபரிபாகம் அடையப்பெற்றவன் கூடஸ்தன் எனப்படுகிறான். முதற்காரணமாகிய மனது ஒடுங்கியிருக்குமிடத்து இந்திரியங்களுக்கு வேகம் வருவதில்லை. ஆகையால் மனம் அடங்கிய யோகி இந்திரியங்களை நன்கு வென்றவனாகிறான். பாலர்களால் பெரிதும் மதிப்பிடப்படுகின்ற மணற்சோறு, கோலி, பொம்மை, பம்பரம் முதலியவைகளை முதியோர் பற்று வைக்காது சம திருஷ்டியோடு காண்கின்றனர். பற்றுடைய*

உலகத்தவர் வெவ்வேறு படித்தரங்களில் வைத்து மதிப்பிடு கின்ற மண், கல், பொன் ஆகியவைகளைப் பற்றற்ற யோகி பஞ்ச பூதங்களால் ஆகியவைகளென்று சமதிருஷ்டியோடு காண்கிறான். பரதிருஷ்டி ஒன்றுதான் அவனுக்குளது.

உலகப்பற்றுள்ளவர்கள் உபயோகமற்ற பொருள்களைத் தேடு கின்றவராவர். உலகப் பற்றற்ற சுத்தாத்மாக்கள் ஈசுவரனை விசுவா சித்து அவனையே சதா சர்வ காலமும் சிந்தித்திருப்பார்கள்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

உயிரற்ற பொருள்களை அங்ஙனம் பொருள் படுத்து பவர் இனி உயிர்களை எங்ஙனம் பொருள் படுத்துகின்றனர்? விடை வருகிறது :—

सुहृन्मित्रार्युदासीनमध्यस्थद्वेष्यबन्धुषु ।
साधुष्वपि च पापेषु समबुद्धिर्विशिष्यते ॥ ९

ஸுஹ்ருன்மித்ரார்யுதாஸீனமத்யஸ்தத்வேஷ்யபந்துஷு ।
ஸாதுஷ்வபி ச பாபேஷு ஸமபுத்திர்விசிஷ்யதே ॥ 9

सुहृत् ஸுஹ்ருத் *நலம் கருதுபவர்* मित्र மித்ர *நண்பர்* अरि அரி *பகைவர்* उदासीन உதாஸீன *பொதுவாயிருப்பவர்* मध्यस्थ மத்யஸ்த *நடுவர்* द्वेष्य த்வேஷ்ய *வெறுப்புக்குரியவர்* बन्धुषु பந்துஷு *சுற்றத்தாரிடத்தும்* साधुषु अपि ஸாதுஷு அபி *சாதுக்களிடத்தும்* पापेषु च பாபேஷு ச *பாபிகளிடத்தும்* सम बुद्धिः ஸம புத்தி: *சமபுத்தியுடையவன்* विशिष्यते விசிஷ்யதே *சிறந்தவனாகிறான்.*

***நல்லெண்ணமுடையவர், நண்பர், பகைவர், உதாசீனர், மத்யஸ்தர், வெறுப்பவர், சுற்றத்தார், சத்புருஷர், பாபிகள் ஆகியவர்களிடத்து ஒரே மன முடையவன் மேலோன். 9***

நல்ல மனமுடையவரே நல்ல எண்ணமுடையவர் ஆகின்றனர். பிரதி பலனை எதிர்பாராது அன்னவர் பிறர்க்கு நன்மை செய்கின்றனர். நல்லெண்ணமும் நற்செயலும் வடி வெடுத்துத் தோழனுக்காகத் தொண்டு புரிய ஆயத்தமா யிருப்பவர் நண்பர் ஆவர். பகைவர் அதற்கு நேர் மாறாகக்

கேடு செய்கின்றனர். உதாசீனரோ நலம் கேடு ஒன்றும் செய்யாது வெறுமனே ஒதுங்கிப் பொதுவாயிருக்கின்றனர். மத்யஸ்தர் இருதரத்தாருக்கும் நடுவு நின்று ஒற்றுமை பண்ணி வைக்க முயலுகின்றனர். வெறுப்பவரோ தங்களை நேசித்து நலம் புரிபவருக்கும் கேடே நினைக்கின்றனர். கெட்டெண்ணம் எண்ணுவதே அவர்களது இயல்பு. இரத்தத் தொடர்வுடையவர் சுற்றத்தார் ஆகின்றனர். பாரமார்த்திக விஷயத்தில் ஈடுபடுபவர் சத்புருஷர்களாகின்றனர். அதற்குத் தடையாகத் தீங்கு விளைவிக்கும் செயலில் இறங்குபவர்கள் பாபிகள். இத்தனைவித வேறுபாடுடைய மனிதர்களிடத்து சாதாரண மனிதன் ஒருவனுக்கு வேறுபாடான மனப்பான்மை வருவது உலக இயல்பு. ஆனால் யோகியோ எல்லாரிடத்தும் ஒரே நல்ல மனமுடையவனாகிறான். ஆகையால் அவன் சிறந்தவன்.

நாடகத்தில் நடிப்பவருள் ஒருவன் இராமனாக நடித்தான் என்று அவனை விரும்பவும், இராவணனாக நடித்தான் என்று மற்றொருவனை வெறுக்கவும் செய்வதில்லை, நாடகத்தைப் பார்த்து ரசிப்பவர். யோகியோ உலக நடைமுறையனைத்தையும் நாடகமாகப் பார்க்கிறான். சர்வேசுவரனே இத்தனை பாத்திரங்களாகி விளையாடுகிறான் என்பது அவனுக்குத் தேற்றம். ஆகையால் எல்லாரிடத்தும் ஒரே மனமுடையவனாகிறான் யோகியானவன்.

ஒருவன் பூமியிலிருக்கையில் புல்லையும் வானுற ஓங்கி வளர்ந்த தேவதாரு மரத்தையும் கண்டு, "இந்த மரம் இவ்வளவு பெரியது, புல் எவ்வளவு சிறியது" என்கிறான். ஆனால் அவன் ஒரு மலைமீதேறி உச்சியிலிருந்து கீழே நோக்கும்போது, பெரிய தேவதாரு மரமும் சிறிய புல்லும் ஒருங்கே உருத்தெரியாத பச்சைப்படலமாகத் தோன்றுவதைக் காண்பான். அதுபோல உலகப் பற்றுள்ளவர்களுடைய பார்வைக்கு ஒருவன் அரசனென்றும், மற்றொருவன் தெருப்பெருக்கும் தோட்டியென்றும், ஒருவன் தகப்பன் என்றும், மற்றொருவன் மகனென்றும் இம்மாதிரியான ஸ்தானபேதங்களும், அந்தஸ்து வித்தியாசங்களும் தோன்றும். ஆனால் தெய்வ தரிசனம் பெற்ற பிற்பாடு எல்லாம் ஒரே தோற்றம். அப்போது நல்லவர் கெட்டவர், உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற வித்தியாசங்களே இருப்பதில்லை. — **ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்**

*இத்தகைய சமதிருஷ்டி வருதற்கு எத்தகைய யோக சாதனம் செய்ய வேண்டும்? விடை வருகிறது :—*

**योगी युञ्जीत सततमात्मानं रहसि स्थितः ।**
**एकाकी यतचित्तात्मा निराशीरपरिग्रहः ॥ १०**

யோகீ யுஞ்ஜீத ஸததமாத்மானம் ரஹஸி ஸ்தித: ।
ஏகாகீ யதசித்தாத்மா நிராசீரபரிக்ரஹ: ॥ 10

योगी யோகீ *யோகியானவன்* रहसि ரஹஸி *ஒருவருக்கும் தெரியாதவனாக* एकाकी ஏகாகீ *தன்னந்தனியனாக* स्थित: ஸ்தித: *இருந்து கொண்டு* यत चित्त आत्मा யத சித்த ஆத்மா *அந்தக்கரணத்தையும் தேகத்தையும் அடக்கியவனாய்* निराशीः நிராசீ: *ஆசையற்றவனாய்* अपरिग्रहः அபரிக்ரஹ: *பொருள்படையாதவனாய்* सततं ஸததம் *எப்பொழுதும்* आत्मानं ஆத்மானம் *மனதை* युञ्जीत யுஞ்ஜீத *ஒடுக்க வேண்டும்.*

***யோகி யாருக்கும் தென்படாது தனியனாய் இருந்து கொண்டு, உள்ளத்தையும் உடலையும் அடக்கி, ஆசையகற்றி, உடைமைப் பொருள் இலனாய், யாண்டும் மனதை ஒடுக்கவேண்டும். 10***

*உள்ளத்தை உள்ளபடி அறிதற்கு ஏகாந்த வாசம் இன்றியமையாதது. ஓர் அறைக்குள் யோகியானவன் தன்னை அடைத்துக் கொள்வானாகில் மற்றவர்க்குத் தென்படாதிருக்கிறான். ஆனால் அவன் அறையில் இருப்பது மற்றவர்க்குத் தெரியும். மற்றவர் தன்னைச் சூழ்ந்திருப்பது யோகிக்குத் தெரியும். ஆக, அது தனியனாய் இருக்கிற ஏகாந்த வாசமல்ல. யோக சாதகன் எங்கே இருக்கிறான் என்பது வேறு யாருக்கும் தெரியலாகாது. கடவுளைத் தவிர தனக்குத் துணையாக வேறு யாரும் இல்லையென்று யோகியுணரவேண்டும். இதற்காகத்தான் அவன் இரகசியனாகவும் தனியனாகவும் இருக்கவேண்டும் என்றியம்பப்படுகிறது. உண்ணாவிரதம் இருக்கும்பொழுதுதான் உணவைப் பற்றிய எண்ணம் அதிகம் வரும். அங்ஙனம் ஏகாந்த வாசத்தில்தான் அடங்காத மனது அதிகம் கூத்தாடும். அப்படி*

மனதை அலைந்து திரியவிடலாகாது. எதன்கண் அதற்கு ஆசையோ அதனிடத்து மனது ஓடும். வழிபடு தெய்வத்தைத் தவிர வேறு ஒரு பொருளிடத்தும் மனது செல்லாதிருப்பது நிராசையாகும். மோட்டார் வண்டியை ஒருவன் ஓட்டத் தெரிந்துகொண்டால்மட்டும் போதாது. அதன் வேகத்தை அதிகப்படுத்தவும் குறைக்கவும், வேண்டுமென்கிற பொழுது அவ்வண்டியை நிறுத்தவும் தெரிந்துகொள்ள வேண்டும். வண்டியை நிறுத்தத் தெரியாதவனை நம்பி அவ்வண்டியில் பயணம் போவது ஆபத்து. மோட்டார் வண்டியை நிறுத்தத் தெரியாத வண்டிக்காரன் போன்று பலபேர் உடல்வாழ்வு என்னும் வண்டியை நிறுத்தத் தெரியாதவர்களாயிருக்கின்றனர். உடல் வாழ்க்கைக்குத் தாங்கள் தலைவர்களாயிருப்பதுபோய் அதற்கு அவர்கள் அடிமைகளாயிருக்கின்றனர். தலைவன் ஆவதற்கு உபாயம் ஒன்று உண்டு. உடலைக்கொண்டு முறையாக வேலைசெய்யத் தெரிந்திருப்பது போன்று அதற்கு ஒரு வேலையும் கொடாது அமைதியுற்றிருக்கும்படி அதை அடக்கி வைக்கவும் தெரிந்திருப்பவனே யோகி. அவனது ஆணைக்குட்பட்டு அது உழைக்கிறது அல்லது உபரதி பெறுகிறது. உபரதி பெற்றிருப்பதற்கு உபாயமாவது தியானம். தேக ஸம்ரக்ஷணைக்காகவென்று யோகி வைத்திருக்கும் உடை, உணவுப்பொருள் முதலியன பரிக்கிரஹம் அல்லது உடைமைப் பொருள் எனப்படும். அவைகளை அதிகப்படுத்துகின்றவளவு யோகம் தடைப்படும். அப்பொருள்களைக் காப்பாற்றுவதைப்பற்றிய எண்ணம் தியான வேளையில் வரும். அவைகளுக்காக உழைப்பதும் பின்பு அதிகரிக்கும். தேவைகளைக் குறைத்தால் உடல் அடக்கம் உண்டாகும். ஆகவே பொருளை மிகவும் குறைத்துக்கொள்ள வேண்டும். அவைகளை உடைத்திருத்தல் என்ற உணர்ச்சி சிறிதேனும் இருக்கலாகாது. அப்பொழுதுயோகி அபரிக்கிரகத்தில் (பொருள் படையாமையில்) நிலைபெற்றவனாகிறான். இங்ஙனம் அகப்பற்று புறப்பற்று நீங்கிய மனது குவியவல்லதாகிறது.

*இருவித யோகிகள் இருக்கிறார்கள் - ஒருவர் மறைந்து எவரது கண்ணுக்கும் தெரியாது தமது யோக சாதனங்களைச் செய்கிறார்; மற்றவர் யோகியின் சின்னங்களாகிய தண்டம், கமண்டலம் ஆகியவைகளைத் தாங்கிச் சமய சம்பந்தமாகப் பலரோடும் பேசுகின்றார்.*

*மனிதர் பார்க்காமற்போனாலும், ஈசுவரன் பார்க்கிறான் என்று நம்பி, தனியாகவிருக்கும்போது எவனொருவன் ஒரு பாபத்தையும் செய்வதில்லையோ அவன்தான் வாஸ்தவமான தர்மவானாவான். மனிதர் கண்ணுக்குப் புலப்படாமலிருந்தாலும் ஈசுவர திருஷ்டிக்குட்படுவோம் என்ற பயத்தினால் எவனொருவன் காட்டில் தனியாக இருக்கும்போதும் ஒரு கட்டழகியின் வலைக்குள் படாமலும், காம எண்ணத்தால் அவளைக் கண்ணெடுத்துப் பாராமலும் இருக்கிறானோ அவன்தான் வாஸ்தவமான யோகி. ஒருவருமில்லாது தனித்துள்ள ஒரு வீட்டில் காணப்படும் பொன் முடிப்பை எவனொருவன் எடுத்துக்கொண்டுபோக இச்சைப்படமாட்டானோ அவனே தர்மவான். ஊரார் வசை மொழிக்குப் பயந்து வெளி வேஷத்துக்காக எவனொருவன் தர்மத்தை அனுஷ்டிக்கிறானோ அவனைத் தர்மவான் என்று சொல்லக்கூடாது. மௌனமாயும் மறைவாயும் அனுஷ்டிக்கும் தர்மமே வாஸ்தவமான தர்மம்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஏகாந்தத்தில் எத்தகைய ஆசனம் அமைத்துக் கொள்ளவேண்டும்?*

**शुचौ देशे प्रतिष्ठाप्य स्थिरमासनमात्मनः ।**
**नात्युच्छ्रितं नातिनीचं चैलाजिनकुशोत्तरम् ॥ ११**

சுசௌ தேசே ப்ரதிஷ்டாப்ய ஸ்திரமாஸனமாத்மன: ।
நாத்யுச்ச்ரிதம் நாதிநீசம் சைலாஜினகுசோத்தரம் ॥ 11

शुचौ देशे சுசௌ தேசே *சுத்தமான இடத்தில்* स्थिरं ஸ்திரம் *ஸ்திரமானதும்* न अति उच्छ्रितं ந அதி உச்ச்ரிதம் *அதிக உயரமில்லாததும்* न अति नीचं ந அதி நீசம் *அதிகம் தாழ்ந்ததுமில்லாததும்* चैल अजिन कुश उत्तरं சைல அஜின குச உத்தரம் *சீலை, தோல், தர்ப்பை இவைகளை மேலேயுடையதும்* आसनं ஆஸனம் *ஆஸனத்தை* आत्मनः ஆத்மன: *தனக்காகவென்று* प्रतिष्ठाप्य பிரதிஷ்டாப்ய *பிரதிஷ்டை செய்துகொண்டு*

***சுத்தமான இடத்தில் உறுதியானதும், அதிக உயரமில்லாததும், மிகத் தாழ்வில்லாததும், துணி,***

**மான்தோல், தர்ப்பை இவைகளையுடையதுமாகிய ஆஸனத்தை நன்கமைத்துக் கொண்டு; 11**

தூயதும் மனதுக்கினியதுமான இடத்திலேதான் யோகி வாசம் செய்யவேண்டும். தூய வாசஸ்தானம் மனதைத் தூயதாக்குதற்குத் துணைபுரிகிறது. இயற்கையழகு இன்னொருவிதத்தில் அதைப் பண்படுத்துகிறது. சூழ்நிலைக்கும் மனதுக்கும் நெருங்கிய தொடர்வுண்டு. கந்தைத் துணி கட்டியிருப்பவனது உள்ளத்தில் கீழ்மை உணர்ச்சி உதயமாகிறது. அசுசியான இடத்தில் வசிப்பவனுக்கு மனத்தகத்தும் மாசு படிகிறது. மேலான எண்ணங்களை ஊட்டவல்ல சூழ்நிலையே யோகிக்கு உகந்த இருப்பிடமாகும். மரத்தில் கட்டித் தொங்கும் ஊஞ்சல் உறுதியானதல்ல; அதுஅசையும் தன்மையுடையது. புற்குவியல், அடுக்கி வைக்கப்பட்ட மரக்கட்டை, குவிக்கப்பட்ட கூழாங்கற்கள் இவைகளாலும் ஸ்திரமான ஆசனம் அமையாது. இயற்கையாக அமைந்த பாறை, கட்டுவிக்கப்பட்ட மேடை இவைகளே சிறந்தவைகளாம். பூமி மட்டத்துக்கு மேல் ஆஸனம் அதிக உயரமாய்ப் போனால் உட்காருதற்கு அச்சத்தை உண்டுபண்ணும்; மயங்கி அல்லது தூங்கிவிழுந்தால் காயமாகும். ஆக, பூமி மட்டத்துக்கு இரண்டு அடிக்குமேல் போகலாகாது. பூமி மட்டத்தில் இருந்தால் புழு பூச்சிகள் வரும். அதனால் இடைஞ்சல் ஏற்படும். பூமிமட்டத்துக்குக் கீழே போனால் ஆரோக்கியத்துக்குக் கேடு வரும். ஆகையால் ஆசனம் மிகத்தணிந்திருக்கலாகாது. மேடையின்மீது தர்ப்பாஸனம், அதன்மேல் மான்தோல் அல்லது புலித்தோல், அதன் மேல் துணிவிரிக்கப்பட்டிருத்தல் வேண்டும். அது மிக மிருதுவாயும் இராது; மிகக்கடினமாயும் இராது. இந்நிபந்தனைகளுக்கு உட்பட்ட ஆஸனம் சாதனத்துக்குத் தகுதியுடையதாகும். மிக மிருதுவான ஆஸனம் நிமிர்ந்து உட்காருதற்கு உதவாது. சுக ஜீவனத்தைப்பற்றிய எண்ணத்தை அது ஊட்டுவதாகும். கடினமான ஆஸனமோ உடலை உறுத்தி வலியை உண்டுபண்ணும். ஆக, அது உதவாது. இரண்டுக்கும் இடை நிலையில் இருப்பது தகுந்தது.

அத்தகைய ஆஸனத்தமர்ந்து யோகி என்செய்ய வேண்டும்? பகவான் பதில் அளிக்கிறார் :—

तत्रैकाग्रं मनः कृत्वा यतचित्तेन्द्रियक्रियः ।
उपविश्यासने युञ्ज्याद्योगमात्मविशुद्धये ॥ १२

தத்ரைகாக்ரம் மன: க்ருத்வா யதசித்தேந்த்ரியக்ரிய: ।
உபவிச்யாஸனே யுஞ்ஜ்யாத்யோகமாத்மவிசுத்தயே ॥ 12

तत्र தத்ர *அங்கு* आसने ஆஸனே *ஆஸனத்தில்* उपविश्य உபவிச்ய *அமர்ந்து* मनः மன: *மனதை* एकाग्रं कृत्वा ஏகாக்ரம் க்ருத்வா *ஒருமைப்படுத்தி* यत चित्त इन्द्रिय क्रियः யத சித்த இந்த்ரிய க்ரிய: *மனம் இந்திரியம் இவைகளின் செயல்களையடக்கி* आत्म विशुद्धये ஆத்ம விசுத்தயே *அந்தக்கரண சுத்தியின்பொருட்டு* योगं युञ्ज्यात् யோகம் யுஞ்ஜ்யாத் *யோகம் பயில வேண்டும்.*

***ஆங்கு ஆஸனத்தமர்ந்து, மனதை ஒருமுகப் படுத்தி, மனம் இந்திரியங்கள் இவைகளின் செயலை யடக்கி, சித்த சுத்தியின் பொருட்டு யோகம்பயிலுக.***

*இந்திரியங்கள் வாயிலாக மனது வெளி விஷயங்களில் செல்லுகிறவளவு அது தன் பரிசுத்தத்தை இழக்கிறது. சேற்றில் புரண்டோடும் பிரவாஹம்போன்று அது தன் நீர்மையைப் பறிகொடுக்கிறது. கருவி கரணங்களை மீட்டெடுத்து ஆத்ம சொரூபத்தில் வைக்கின்றவளவு சித்தம் சுத்தியடைகிறது. ஆத்மாவைச் சார்ந்திருப்பது அதன் எதார்த்த நிலை; கலப்பற்ற பாங்கு. வெளி விஷயாதிகளைச் சார்ந்திருப்பது மாசுபடிந்த நிலை. மாசு படிந்திருக்குமளவு அதன் பேராற்றல் குன்றிவிடுகிறது. தூயதாகுமளவு அதன் அருள் சக்தி வ...*

ஆரம்பத்தில் ஒருவன் தன்னந்தனியனாக உட்கார்ந்துகொண்டு மனதை ஒருமுகப்படுத்த, அதாவது ஏகாக்ரசித்தத்தையடைய முயல வேண்டும். இல்லாவிட்டால் மனம் பற்பல விஷயங்களில் ஓடிச் சஞ்சலத்துக்குள்ளாகும். பாலையும் ஜலத்தையும் ஒன்றாக்கி வைத்தால் இரண்டும் நன்றாகக்கலந்து விடுவது நிச்சயம். ஆனால், பாலைக்கடைந்து வெண்ணெயை எடுத்து ஜலத்தில் போட்டுவைத்தால் அவ்வெண்ணெய்

*ஜலத்துடன் கலக்காமல் அதன் மேலே மிதக்கும். அதுபோல இடைவிடாத பழக்கத்தால் ஒருவனுக்கு ஏகாக்கிர சித்தம் நிலைக்குமானால், அவன் எங்கிருந்த போதிலும் சரியே, அவனுடைய மனம் சுற்றிலுமுள்ள பொருள்களின்மீது செல்லாமல் ஈசுவரனிடத்திலேயே செல்லும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*மனவொடுக்கத்துக்கு உடலைப்பற்றிய நியமனம் உண்டா? உண்டு. அது வருமாறு:—*

**समं कायशिरोग्रीवं धारयन्नचलं स्थिरः ।**
**संप्रेक्ष्य नासिकाग्रं स्वं दिशश्चानवलोकयन् ॥ १३**

ஸமம் காயசிரோக்ரீவம் தாரயன்னசலம் ஸ்திர: ।
ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரம் ஸ்வம் திசஸ்சானவலோகயன் ॥ 13

काय शिर ग्रीवं காய சிர க்ரீவம் *தேகம், தலை, கழுத்து இவைகளை* समं ஸமம் *நேராகவும்* अचलं அசலம் *அசையாமலும்* धारयन् தாரயன் *வைத்துக்கொண்டு* स्थिरः ஸ்திர: *உறுதியாய் இருந்துகொண்டு* स्वं ஸ்வம் *தன்னுடைய* नासिकाग्रं நாஸிகாக்ரம் *மூக்கு நுனியை* संप्रेक्ष्य ஸம்ப்ரேக்ஷ்ய *பார்த்துக்கொண்டு* दिशः च திச: ச *திசைகளையோ* अनवलोकयन् அனவலோகயன் *பாராது*

***தேகம், தலை, கழுத்து இவைகளை நேராக அசையாது வைத்துக் கொண்டு உறுதியாயிருந்து தன் மூக்கு நுனியைப் பார்ப்பவன் போன்று திசைகளைப் பாராதிருத்தல் வேண்டும். 13***

*உடல் கழுத்து தலை ஆகியவைகள் நேராயிருக்கும் போது மேருதண்டம் அல்லது முதுகின் முள்ளந்தண்டு நேராய்விடுகிறது. அப்பொழுது சுவாசம் ஒழுங்காகப் போகவும் வரவும் செய்யும். சிறந்த எண்ணங்கள் மனதில் உண்டாவதற்கு அத்தகைய உடல் நிலை முற்றிலும் வேண்டப்படுகிறது. யோகி ஆஸனத்தமரும்போது மேருமலை போன்று அசையாது உறுதியாயிருக்கவேண்டும். அதனால் உடலைப்பற்றிய உணர்ச்சி தானே அகன்றுபோம். அவயவங்களைத் துன்புறுத்துகிற பாங்கில் அமரலாகாது. சுகமாக*

இருக்கும் பாங்கில் அமர்ந்திருக்கவேண்டும். மனது ஒடுங்குகிறவளவு கண்விழிகளும் அசைவற்றவைகளாகின்றன. ஓயாது இங்கும் அங்கும் பார்க்கும் இயல்பும் தானே குறைந்துவிடுகிறது. இனி தியானத்தமரும்பொழுது கண்கள் மூக்கு நுனியைப் பார்ப்பவைகள்போல் தென்படுகின்றன. உண்மையில் மூக்கைப்பார்த்தால் மூக்கைப்பற்றிய ஞாபகம்தான் மனதில் வரும். அந்தக்கரணம் ஆத்மசொரூபத்தில் திளைத்திருக்கிற வேளையில் உடலைப்பற்றிய எண்ணம் உண்டாகாது. மனதில் அந்நிலை வரும்பொழுது கண்கள் மூக்கு நுனியைப் பார்ப்பவைகள்போல் தென்படும்.

*தன்முட்டையின்மீது உட்கார்ந்து அடைகாக்கும் குருவி புறப்பொருள் ஒன்றையும் பாராது வெறுமனே விழித்துட்கார்ந்திருக்கிறது. யோகியினுடைய கண்ணும் அத்தகையதாய்விடுகிறது.*

*தியானத்தில் தீவிரமான ஏகாக்ரம் உண்டாகிறது; அப்போது வேறொன்றும் கண்ணுக்குப்புலப்படாது; காதுகளிலும் சப்தம் விழாது; ஸ்பரிச உணர்ச்சியும் அகன்றொழிகிறது. அப்போது பாம்பு ஒன்று சரீரத்தின்மீது ஊர்ந்துபோனாலும் ஒன்றும் தெரிவதில்லை. தியானிப்பவர்க்கும் பாம்பைப்பற்றிய உணர்ச்சியிருப்பதில்லை; பாம்புக்கும் அம்மனிதனைப்பற்றிய உணர்ச்சி கிடையாது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*இனி உள்ளத்தை எப்படி ஒழுங்குபடுத்துவது?*

**प्रशान्तात्मा विगतभीर्ब्रह्मचारिव्रते स्थितः ।**
**मनः संयम्य मच्चित्तो युक्त आसीत मत्परः ॥ १४**

ப்ரசாந்தாத்மா விகதபீர்ப்ரஹ்மசாரிவ்ரதே ஸ்திதః ।
மனః ஸம்யம்ய மச்சித்தோ யுக்த ஆஸீத மத்பரः ॥ 14

प्रशान्तात्मा ப்ரசாந்தாத்மா *அமைதியான உள்ளத்தையுடையவன்* विगतभीः விகதபீः *பயம் நீங்கியவன்* ब्रह्मचारिव्रते ப்ரஹ்மசாரிவ்ரதே *பிரம்மசாரிவிரதத்தில்* स्थितः ஸ்திதः *நிலைபெற்றவன்* मनः மனः *மனதை* संयम्य ஸம்யம்ய *அடக்கி* मच्चित्तः மச்சித்தः *சித்தத்தை என்பால்வைத்தவன்* मत्परः மத்பரः *என்னையே குறிக்கோளாகக்கொண்டவன்* **युक्तः**

யுக்த: யோகமுயற்சியுடையவனாகவும் ஆஸீத ஆஸித அமர்ந்திருக்க வேண்டும்.

**உள்ளம் அமைதிபெற்று, அச்சத்தையகற்றி, பிரம்மசரிய விரதம் காத்து, மனதையடக்கி, சித்தத்தை என்பால் இசைத்து, என்னைக் குறியாகக் கொண்டு, யோகத்தில் அமர்ந்திருக்கவேண்டும். 14**

தேங்கிய தடாகம் போன்று மனது தெளிவும் அமைதியும் அடையப்பெறுமிடத்து அது பிரசாந்தாத்மா எனப்படுகிறது. அந்த அமைதியில் வீரமும் சேர்ந்திருக்கிறபடியால் அச்சத்துக்கு ஆங்கு இடமில்லை. சிற்றின்ப போகம் எதிலும் ஈடுபடாதிருப்பது பிரம்மசரிய விரதம். குருவுக்கும் உலகுக்கும் சேவை புரிவதன் மூலம் மனதினின்று காம எண்ணங்கள் அடியோடு அகற்றப்படுகின்றன. அதன் பிறகு மனதை அடக்குதல் எளிதாகிறது. அடங்கியமனதில் ஈசுவரனைப்பற்றிய எண்ணமே குடிகொண்டுவிடுமானால் கீழான எண்ணங்கள் அங்குத்தலையெடுக்கமாட்டா. ஈசுவரன் ஒருவனே ஒப்பற்ற பொருள் என்றும், அவனை அடைதலே வாழ்வின் முடிவான நோக்கம் என்றும் கருதியிருப்பவன் நல்ல யோகியாகிறான்.

ஒருவன் பன்னிரண்டு வருஷங்கள் வழுவாத பிரம்மசரிய விரதம் அனுசரித்தால் அவனிடம் மேதாநாடி தோன்றுகிறது. அதாவது எதையும் அறிந்துகொள்ளும் சக்தி மலர்கிறது. வெகுசூக்ஷ்மமான விஷயங்களையும் அவன் சுலபமாக அறிந்துகொள்வான். அவ்வித அறிவால் ஒருவன் ஈசுவர தரிசனத்தையும் அடையக்கூடும். இவ்விதம் பரிசுத்தமடைந்த தெளிந்த அறிவுள்ளவர்களாலேயே கடவுளையடைய முடியும்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

யோகத்தினின்று விளையும் ஆக்கம் இனி விளக்கப்படுகிறது :—

**युञ्जन्नेवं सदात्मानं योगी नियतमानसः ।**
**शान्तिं निर्वाणपरमां मत्संस्थामधिगच्छति ॥ १५**

யுஞ்ஜன்னேவம் ஸதாத்மானம் யோகீ நியதமானஸ: |
சாந்திம் நிர்வாணபரமாம் மத்ஸம்ஸ்தாமதிகச்சதி || 15

एवं ஏவம் *இவ்விதம்* सदा ஸதா *எப்பொழுதும்* आत्मानं ஆத்மானம் *மனதை* युञ्जन् யுஞ்ஜன் *தியானத்தில் நிறுத்தி* नियत मानसः நியத மானஸ: *உள்ளத்தையடக்கிய* योगी யோகீ *யோகியானவன்* मत्संस्थां மத்ஸம்ஸ்தாம் *என்னிடத்துள்ள* निर्वाण परमां நிர்வாண பரமாம் *மோக்ஷத்திலே முற்றுப்பெறுகிற* शान्तिं சாந்திம் *சாந்தியை* अधिगच्छति அதிகச்சதி *அடைகிறான்.*

***இங்ஙனம் யாண்டும் மனதை தியானத்தில் நிறுத்தி உள்ளத்தை அடக்கிய யோகி, என்னிடத்துள்ள, முக்தியிலே முற்றுப்பெறுகிற சாந்தி யெய்துகிறான்.*** **15**

*புசித்தவனுக்குப் பசி யடங்குகிறது. மேலே சொல்லியபடி யோக சாதனம் செய்து மனது அடங்கப் பெற்றவனுக்கு இயல்பாக சாந்தி உதயமாகிறது. அக்னியில் சூடு இருப்பது போன்று ஸர்வேசுவரனிடத்து சாந்தி நிலவுகிறது. அதை அடையுமளவு ஒருவன் முக்த புருஷனாகிறான். இறைவனை அடைதல், சாந்தி பெறுதல், முக்தி சேர்தல் இவையாவும் ஒன்றாம். இதுவே யோகத்தின் பயனாகிறது.*

*பட்டணத்துக்குப் புதிதாக வருபவன் ராத்திரிவேளையில் தங்குதற்கு வசதியான விடுதியொன்றை முதலில் தேடி அதில் தன் சாமான்களை வைக்கவேண்டும். பிறகு அவன் ஊர் சுற்றி வேடிக்கை பார்க்கலாம். இல்லாவிட்டால் இருளில் இடம் தேடுவதில் சிரமப்படுவான். அது போல இவ்வுலகுக்குப் புதிதாக வருபவனும் ஈசுவரனாகிய நித்திய விடுதியைத்தேடிவைத்துவிட்டு, பயமின்றி இவ்வுலகில் திரிந்து, தான் செய்ய வேண்டிய காரியங்களை யெல்லாம் செய்யலாம். இல்லாவிட்டால் மரணமாகிய பயங்கரமான அந்தகாரம் வரும்போது மிகுந்த துயரங்களை அவன் அனுபவிக்க நேரும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*வாழ்க்கையில் யோகி எத்தகைய நியமனங்களுக்கு உட்பட்டு நடக்க வேண்டும்? விடை வருகிறது :—*

नात्यश्नतस्तु योगोऽस्ति न चैकान्तमनश्नतः ।
न चाति स्वप्नशीलस्य जाग्रतो नैव चार्जुन ॥ १६

நாத்யச்னதஸ்து யோகோऽஸ்தி ந சைகாந்தமனச்னத: ।
ந சாதி ஸ்வப்னசீலஸ்ய ஜாக்ரதோ நைவ சார்ஜுன ॥ 16

अर्जुन அர்ஜுன *அர்ஜுனா* अत्यश्नतः அத்யச்னத: *மிகைபட உண்பவனுக்கு* तु து *ஆனால்* योगः न अस्ति யோக: ந அஸ்தி *யோகம் கூடுவதில்லை* एकान्तं ஏகாந்தம் *ஒன்றுமே* अनश्नतः च அனச்னத: ச *உண்ணாதவனுக்கும்* न ந *இல்லை* अति स्वप्न शीलस्य அதி ஸ்வப்ன சீலஸ்ய *மிகைபட உறங்குபவனுக்கும்* जाग्रतः एव च ஜாக்ரத: ஏவ ச *அதிகமாக விழித்திருப்பவனுக்கும்* न ந *இல்லை.*

***அர்ஜுனா, அளவுகடந்துண்பவனுக்கு யோகமில்லை. அறவே உண்ணாதவனுக்கும் அஃதில்லை. மிகைபட உறங்குபவனுக்கும், மிகைபட விழித்திருப்பவனுக்கும் யோகம் இல்லை. 16***

*வீணையின் தந்தியை அளவுக்கு மீறி இறுக்கினால் அது உடைந்துபோம்; மிக இளக்கினால் அதில் ஓசை வராது. உடல் வீணை போன்றது. உணவு உறக்கம் இவைகளில் மிகைபடுதலும் குறைபடுதலும் கூடாது. அந்தந்த சரீரத்துக்கு ஏற்ற உணவு எது, அளவு எது என்பதை அவரவரே தீர்மானம் செய்ய வேண்டும். மிகைபட உண்பதால் சோம்பல் வருகிறது. குறைபட உண்பதால் மெலிவு ஏற்படுகிறது. அரை வயிறு உணவு, கால் வயிறு நீர், கால் வயிறு காற்றோட்டத்துக்கு இடம், இப்படி அமைப்பது சிறந்தது. உறக்கம் உடலைப் புதுப்பித்துத் தெளிவுபடுத்துகிறது. ஆனால் மிகைபட்ட அல்லது குறைபட்ட உறக்கம் தமோ குணத்தை வளர்க்கிறது. அதனால் தியானம் தடைப்படுகிறது.*

*பகற்பொழுதில் திருப்தியாகப் போஜனம் செய்.*
*வில் உட்கொள்ளும் உணவு குறைவாயும் இலேசாயுமிருக்கட்டும்.*

*சரீரத்துக்கு உஷ்ணத்தையும் மனதுக்குச் சஞ்சலத்தையும் எந்த உணவு கொடுக்காதோ அந்த உணவைத்தான் சாதகன் உட்கொள்ள வேண்டும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*யோக சித்தி கைகூடும் முறை வருமாறு :—*

**युक्ताहारविहारस्य युक्तचेष्टस्य कर्मसु ।**
**युक्तस्वप्नावबोधस्य योगो भवति दुःखहा ॥ १७**

யுக்தாஹாரவிஹாரஸ்ய யுக்தசேஷ்டஸ்ய கர்மஸு।
யுக்தஸ்வப்னவபோதஸ்ய யோகோ பவதி து:கஹா ॥ 17

युक्त आहार विहारस्य யுக்த ஆஹார விஹாரஸ்ய *உண்பதிலும் உடற்பயிற்சியிலும் அளவுடன் இருப்பவனுக்கு* कर्मसु கர்மஸு *தன் கடமைகளைச் செய்வதில்* युक्त चेष्टस्य யுக்த சேஷ்டஸ்ய *அளவுடன் ஈடுபடுபவனுக்கு* युक्त स्वप्न अवबोधस्य யுக்த ஸ்வப்ன அவபோதஸ்ய *உறங்குவதையும் விழித்திருப்பதையும் அளவுடன் செய்பவனுக்கு* योगः யோக: *யோகமானது* दुःखहा து:கஹா *துக்கத்தைப்போக்குவது* भवति பவதி *ஆகிறது.*

***மிதமாய் உண்டு உடற்பயிற்சி செய்பவனுக்கு, அளவுடன் கர்மங்களைச்செய்து உறக்கத்திலும் விழிப்பிலும் முறைமை வகிப்பவனுக்கு, யோகம் துன்பத்தைத் துடைப்பதாகிறது. 17***

*உடற்பயிற்சி யோகிக்கு முற்றிலும் தேவையானது. ஆனால் அதை அளவுடன் செய்யவேண்டும். குறித்த வேளையில் குறித்த காரியங்களை அளவெடுத்துச் செய்ய வேண்டும். சந்திர சூரியன் செயல்களெல்லாம் ஒழுங்காக நடைபெறுவது போன்று யோகியின் வாழ்க்கைமுறையும் பெருந்திட்டத்துக்கு உட்பட்டிருக்கிறது. அதனால்தான் தியானம் செய்வது எளிதாகிறது. நெறியான வாழ்க்கையுடைய யோகிக்கு உடல் உணர்ச்சியே இல்லாது போய்விடுகிறது. துக்கம் துடைக்கப்படுவதும் அதனாலேயாம். யோகி தியானத்தில் முன்னேற்றம் அடைந்திருக்கிறான் என்று*

*உறுதி கூறுவது எப்பொழுது? உத்தரம் உரைக்கப் பட*

**यदा विनियतं चित्तमात्मन्येवावतिष्ठते ।**
**निःस्पृहः सर्वकामेभ्यो युक्त इत्युच्यते तदा ॥ १८**

யதா விநியதம் சித்தமாத்மன்யேவாவதிஷ்டதே ।
நி:ஸ்ப்ருஹ: ஸர்வகாமேப்யோ யுக்த இத்யுச்யதே ததா ॥ 18

यदा யதா *எப்பொழுது* विनियतं चित्तं விநியதம் சித்தம் *நன்றாக அடக்கப்பட்ட சித்தம்* आत्मनि एव ஆத்மனி ஏவ *ஆத்மாவிலேயே* अवतिष्ठते அவதிஷ்டதே *நிற்கின்றதோ* तदा ததா *அப்பொழுது* सर्व कामेभ्यः ஸர்வ காமேப்ய: *எல்லா காமங்களினின்றும்* निःस्पृहः நி:ஸ்ப்ருஹ: *ஆசை நீங்கினவனாய்* युक्तः इति யுக்த: இதி *யோகி என்று* उच्यते உச்யதே *சொல்லப்படுகிறான்.*

***ம் நாட்டத்தை யகற்றி, நன்கு அடக்கப்பட்ட மனது ஆத்மாவிலேயே நிற்கின்றபொழுது, ஒருவன் யோகத்தில் உறுதிபெற்றவன் எனப்படுகிறான். 18***

*காற்று அடிக்கும்போது கடல் கொந்தளிப்பால் நிலை குலைந்ததாகிறது. காமம் என்னும் காற்று வீசும்போது சித்தமும் நடுநிலையினின்று புரண்டுபோய் விடுகிறது. சித்தத்தில் எண்ணங்கள் உதிக்குமளவு அது தன் அமைதியை இழக்கிறது. மனம் தேங்கித் தூயதாயிருக்குமிடத்து யோகம் வலுக்கிறது. அசையாத மனதை யுடையவன் யோகத்தில் மிக மேலேறியவன்.*

*கிழிந்த மூட்டையிலிருந்து சிதறி நாலாபக்கங்களிலும் ஓடிய கடுகைப் பொறுக்கி யெடுப்பது சிரம சாத்தியம். அதுபோல, பல திசைகளிலும் ஓடி உலக விஷயங்கள் பலவற்றிலும் உழலும் மனதைக் குவியச் செய்வது எளிதன்று. மனம் குவிந்து ஒருமைப்படுவதே தியானம்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஒருமைப்பட்ட மனது எத்தகையது என்பது விளக் கப்படுகிறது :—*

यथा दीपो निवातस्थो नेङ्गते सोपमा स्मृता ।
योगिनो यतचित्तस्य युञ्जतो योगमात्मनः ॥ १९

யதா தீபோ நிவாதஸ்தோ நேங்கதே ஸோபமா ஸ்ம்ருதா ।
யோகிநோ யதசித்தஸ்ய யுஞ்ஜதோ யோகமாத்மன: ॥ 19

निवातस्थः நிவாதஸ்த: *காற்றில்லாத இடத்தில் வைக்கப்பட்ட* दीपः தீப: *தீபமானது* यथा யதா *எப்படி* न इङ्गते ந இங்கதே *அசைகிற தில்லையோ* आत्मनः योगं ஆத்மன: யோகம் *ஆத்ம தியானத்தை* युञ्जतः யுஞ்ஜத: *பழகுகின்ற* योगिनः யோகின: *யோகியின்* यतचित्तस्य யதசித்தஸ்ய *அடங்கிய மனதுக்கு* सा उपमा ஸா உபமா *அந்த உபமானம்* स्मृता ஸ்ம்ருதா *நினைக்கப்படுகிறது.*

***ஆத்ம தியானம் பழகுகிற யோகியின் அடங்கிய மனதுக்கு, காற்றில்லா விடத்தில் வைத்த தீபம் அசையாதிருப்பது உபமானமாகக் கருதப்படுகிறது.***

*தியானத்தில் அமர்ந்திருப்பவன் தானே ஜோதி சொரூபம் என்றும், சுத்த சைதன்யம் என்றும் பாவித்தல் வேண்டும். காற்று இல்லாத இடத்தில் ஏற்றிவைத்த தீபம் தனது நிலை பிறழாது வரைந்த சித்திரம்போன்று இருக்கிறது. ஆசை என்ற காற்று அடியாதிருக்கும்போது யோகியின் சித்தமும் அங்ஙனம் அசைவற்றிருக்கிறது.*

*"தியானத்தில் முதிர்ந்தவனுக்கு முக்தி வெகு சமீபம்" என்பது ஒரு பழமொழி. தியானத்தில் ஒரு மனிதனுக்கு எப்போது முதிர்ச்சி உண்டாகிறது தெரியுமா? அவன் தியானத்துக்கு உட்கார்ந்தவுடன் திவ்யதேஜஸ் அவனைச் சுற்றிக்கொள்கிறது. அவனுடைய ஆத்மா ஈசுவரனுடன் கலந்துகொள்கிறது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*யோக முதிர்ச்சியால் வரும் வேறு பல அனுபவங்களும் இருக்கின்றன. அவைகளாவன :—*

यत्रोपरमते चित्तं निरुद्धं योगसेवया ।
यत्र चैवात्मनात्मानं पश्यन्नात्मनि तुष्यति ॥ २०

யத்ரோபரமதே சித்தம் நிருத்தம் யோகஸேவயா ।
யத்ர சைவாத்மனாத்மானம் பச்யன்னாத்மனி துஷ்யதி ॥ 20

यत्र யத்ர *எப்பொழுது* योगसेवया யோகஸேவயா *யோகானுஷ்டானத்தால்* निरुद्धं நிருத்தம் *நன்கு அடக்கப்பட்ட* चित्तं சித்தம் *மனமானது* उपरमते உபரமதே *அமைதி பெறுகிறதோ* यत्र च யத்ர ச *மேலும் எப்பொழுது* आत्मना ஆத்மனா *தூய மனதால்* आत्मानं ஆத்மானம் *ஆத்மாவை* पश्यन् பச்யன் *பார்த்து* आत्मनि एव ஆத்மனி ஏவ *ஆத்மாவினிடத்தே* तुष्यति துஷ்யதி *சந்தோஷிக்கிறானோ*

***யோகப் பயிற்சியால் எப்பொழுது சித்தம் நன்கடங்கி அமைதி பெறுகிறதோ, மேலும் எப்பொழுது ஆத்மாவால் ஆத்மாவைக்கண்டு ஆத்மாவில் மகிழ்வுறுகிறானோ : 20***

*மனம் அடங்கி அமைதி பெறுகிறவிடத்து ஆனந்தம் மிளிர்கிறது என்பதற்கு சுழுத்தியவஸ்தையே சான்று. ஆனால் சுழுத்தியில் ஆத்ம தரிசனம் மிகக்குறைவு. யோக சாதனத்தால் சித்த சுத்தி யடையுங்கால், தெளிவடைந்த மனதால் ஆத்ம சொரூபம் நன்கு அறியப்படுகிறது. ஆத்ம ஞானமே ஆத்ம திருப்தியாகிறது.*

*இன்னும் என்ன அடையப்பெறுகிறது ?*

**सुखमात्यन्तिकं यत्तद्बुद्धिग्राह्यमतीन्द्रियम् ।**
**वेत्ति यत्र न चैवायं स्थितश्चलति तत्त्वतः ॥ २१**

ஸுகமாத்யந்திகம் யத்தத்புத்திக்ராஹ்யமதீந்த்ரியம் ।
வேத்தி யத்ர ந சைவாயம் ஸ்திதஸ்சலதி தத்த்வதः ॥ 21

बुद्धिग्राह्यं புத்திக்ராஹ்யம் *புத்தியினால் கிரகிக்கப்படுவது* अतीन्द्रियं அதீந்த்ரியம் *இந்திரியங்களுக்கு அப்பாற்பட்டது* आत्यन्तिकं ஆத்யந்திகம் *முடிவில்லாதது* यत् யத் *எதுவோ* तत् सुखं தத் ஸுகம் *அந்த சுகத்தை* अयं அயம் *இந்த யோகி* वेत्ति வேத்தி *அறிகிறான்* यत्र च யத்ர ச *இன்னும் எங்கு* स्थितः ஸ்திதः *நிலைத்தவனாய்* तत्त्वतः தத்த்வதः *ஆத்ம சொரூபத்தினின்று* न एव चलति ந ஏவ சலதி *அசைவதே இல்லை.*

***இந்திரியங்களுக்கு எட்டாததும், புத்தியினுல் கிரகிக்கப்படுவதும், முடிவில்லாததுமாகிய எந்த சுகத்தை யோகி அறிகிருனே, எதில் நிலைத்தபின் ஆத்ம சொரூபத்தினின்று அவன் அசைவதில்லை யோ : 21***

*சுகம் வெளியுலகில் இல்லை; ஆத்ம சொரூபத்தி லேயே இருக்கிறது. உள்ளே இருப்பதை உணர இந்திரி யங்களுக்கு இயலுவதில்லை. தெளிவடைந்த புத்தியே அதைத் தெரிந்துகொள்கிறது. அது ஆத்ம சுகமாதலால் அது முடிவில்லாதது. ஆத்ம சொரூபத்திலே நிலைபெற்ற யோகி நீருக்குள்ளே திரும்பிவந்த மீன் போன்றவன். மீன் நீரினின்று நிலம் போகவிரும்புவதில்லை. தெவிட்டாத ஆத்மானந்தத்தை அனுபவிப்பவன் தெவிட்டுகிற விஷய ஆனந்தத்துக்குப் போவதில்லை.*

*உண்மையான சமாதி யடையும்போது ஒருவன் தன் இயல்பான சச்சிதானந்த சாகரத்தில் ஆழ மூழ்குகிருன். அவன் கருவி கரணங்கள் ஒடுங்குகின்றன.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः ।**
**यस्मिन्स्थितो न दुःखेन गुरुणापि विचाल्यते ॥ २२**

யம் லப்த்வா சாபரம் லாபம் மன்யதே நாதிகம் தத: ।
யஸ்மின்ஸ்திதோ ந து:கேன குருணுபி விசால்யதே ॥ 22

यं च யம் ச *எதை* लब्ध्वा லப்த்வா *அடைந்து* ततः தத: *அதைக் காட்டிலும்* अधिकं அதிகம் *அதிகமான* अपरं लाभं அபரம் லாபம் *வேறு லாபத்தை* न मन्यते ந மன்யதே *மனதில் வைப்பதில்லை* यस्मिन् யஸ்மின் *எதில்* स्थितः ஸ்தித: *நிலைத்திருந்து* गुरुणा குருணு *மிகப்பெரிய* दुःखेन अपि துக்கேன அபி *துக்கத்தாலும்* न विचाल्यते ந விசால்யதே *அசைக்கப் படுவதில்லை.*

***எதை அடைந்து அதிலும் மிக்கதொரு வேறு லாபத்தை நினைப்பதில்லையோ, எதில் நிலைத்திருந்து பெருந்துக்கத்தாலும் அசைக்கப்படுவதில்லையோ :***

*அடையப்பெருத உலகப் பொருள் ஒன்று பெரிய தாகத் தோன்றுகிறது. அடைந்தவுடனே அது சிறியதாய் விடுகிறது. பிறகு அதனினும் பெரியதொன்ருக வேறு ஒரு பொருள் தோன்றுகிறது. இப்படி இவ்வுலகம் தருகிற நிலையற்ற இன்பம் ஒரு பொருளிலிருந்து மாறி இன்னொரு பொருளுக்குப் போய்க்கொண்டே யிருக்கிறது. பிரபஞ்சத் துக்கு அப்பால் உள்ள பரப்பிரம்மத்தை அடைந்தான பிறகு அதற்கு ஒப்பானது ஒன்றும் தென்படுவதில்லை. இனி அதற்குமிக்கதொரு பொருள்தோன்றுவது எங்ஙனம்? கடலை அடைந்த மீன் அதிலும் பெரியது எதைப் பெற முடியும்? அகண்ட சச்சிதானந்தத்தைப் பெற்ற பிறகு அதற்குமேல் பெறுதற்கு ஒன்றுமில்லை. துக்கமெல்லாம் உடல் சம்பந்தமானவைகள். பிரம்மானந்தத்தில் திளைத் திருப்பவர்களுக்கு தேகவுணர்ச்சி வருவதில்லை. நிழல் போன்று தேகம் யோகியைச் சார்ந்திருக்கிறது. நிழலை வெட்டுவதால் மனிதனுக்குத் துன்பம் வருவதில்லை. தேகத் தைச் சிதைப்பதால் ஆத்மஞானிக்குத் துன்பம் வருவ*

*சரீரத்தில் அனுபவிக்கும் துன்பங்களும் இன்பங்களும் எப்படிப் பட்டவையாயினும் உண்மையான பக்தனுக்கு ஞானம், பக்தி இவை களின் மஹிமையும் சக்தியும் ஒருபோதும் குறைவதில்லை. பாண்ட வர்கள் அனுபவித்த கஷ்டங்கள் எவ்வளவு கொடியனவாக இருந்தன! என்றாலும் ஒரு நிமிஷங்கூட அவர்களுடைய ஞான ஒளி மங்கின*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**तं विद्याद्दुःखसंयोगवियोगं योगसंज्ञितम् ।**
**स निश्चयेन योक्तव्यो योगोऽनिर्विण्णचेतसा ॥ २३**

**தம் வித்யாத்து:கஸம்யோகவியோகம் யோகஸம்ஞிதம் ।**
**ஸ நிஸ்சயேன யோக்தவ்யோ யோகோऽநிர்விண்ணசேதஸா ॥**

तं தம் *அதை* दुःख संयोग वियोगं து:க ஸம்யோக வியோகம் *துக்கத்தின் சேர்க்கையிலிருந்து பிரிதல்* योग संज्ञितं யோக ஸம்ஞிதம் *யோகம் என்று சொல்லப்பட்டதாக* विद्यात् வித்யாத் *தெரிந்துகொள்ள*

*வேண்டியது* अनिर्विण्णचेतसा அநிர்விண்ணசேதஸா *கலங்காத நெஞ்சத்துடன்* सः योगः ஸ: யோக: *அந்த யோகம்* निश्चयेन நிஸ்சயேன *நிச்சயமாய்* योक्तव्यः யோக்தவ்ய: *பயிலவேண்டியது.*

***துக்கத்தின் சேர்க்கையிலிருந்து பிரிந்துகொள்தலே யோகம் எனப்படுவதாகத் தெரிந்துகொள்க. தளரா நெஞ்சத்துடன் உறுதியாகத் தொடர்ந்து அந்த யோகத்தைப் பயிலுக. 23***

*மனிதன் உண்மையில் சுக சொரூபி. அறியாமையினால் தன்னைத் துக்கத்தோடு இணைத்துக்கொண்டிருக்கிறான். வருவிக்கப்பட்ட துக்கத்தை விலக்கிவிட்டால் தனது எதார்த்த நிலை விளங்குகிறது. சொப்பனத்தில் வருந்துகின்ற ஒருவனை எழுப்பி ஜாக்கிரதாவஸ்தையோடு யோகம் பண்ணிவைப்பது போன்றது இது. யோகம் என்றால் இணைத்தல் அல்லது சேர்த்துவைத்தல் என்று பொருள். எக்காரணத்தை முன்னிட்டாவது விசனப்படுபவன் யோகத்துக்குத் தகுதியுடையவன் ஆகான். அகமகிழ்வுடனும் குன்றாத ஊக்கத்துடனும் யோகசாதனம் செய்பவர்க்கே அது கைகூடும். ஏனென்றால் தனது நிஜசொரூபத்தையணுகுதற்கு அத்தகைய மனபரிபாகம் முற்றிலும் அவசியமானது.*

பாத்திரத்தின் அடியில் நெருப்பு எரிந்துகொண்டிருக்கும் வரையில், அதிலுள்ள பால் கொதித்துப் பொங்கும். நெருப்பை எடுத்துவிட்டாலோ, பொங்குதல் நின்றுவிடும். அதுபோல ஸாதன மார்க்கத்தில் இருக்கும் வரையில்தான் புதிய ஸாதகனது மனம் குதூஹலத்தால் பொங்கும்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*யோகசாதனத்தில் இன்னும் சில அம்சங்கள் இருக் அவையாவன :—*

**सङ्कल्पप्रभवान्कामांस्त्यक्त्वा सर्वानशेषतः ।**
**मनसैवेन्द्रियग्रामं विनियम्य समन्ततः ॥ २४**

**ஸங்கல்பப்ரபவான்காமாம்ஸ்த்யக்த்வா ஸர்வானசேஷத:**
**மனஸைவேந்த்ரியக்ராமம் வினியம்ய ஸமந்தத: ॥ 24**

संकल्प प्रभवान् ஸங்கல்ப ப்ரபவான் *சங்கல்பத்திலிருந்து பிறந்த* सर्वान् कामान् ஸர்வான் காமான் *எல்லா ஆசைகளையும்* अशेषतः அசேஷத: *பாக்கியில்லாமல்* त्यक्त्वा த்யக்த்வா *தியாகம் செய்து* मनसा एव மனஸா ஏவ *மனதாலேயே* समन्ततः ஸமந்தத: *எல்லாப்பக்கங்களி னின்றும்* इन्द्रियग्रामं இந்த்ரியக்ராமம் *இந்திரியக்கூட்டத்தை* विनियम्य வினியம்ய *நன்கு அடக்கிக்கொண்டு*

***சங்கற்பத்தில் பிறந்த ஆசைகள் அனைத்தை யும் மிச்சமறத் துறந்துவிட்டு, உள்ளத்தால் எல் லாப் பக்கங்களினின்றும் இந்திரியக் கூட்டத்தை நன்கு அடக்கிக்கொண்டு ;*** **24**

*சங்கல்பம் என்பது மனதில் வரும் எண்ணம். அது விதைபோன்றது. ஆசையோ செடிபோன்றது. விறகுக் கட்டைகளுக்கிடையிலுள்ள சிறு தீ, பிறகு பெருந்தீயாகப் பரிணமிப்பது போன்று மனதில் ஆசை கொஞ்சம் மிச்ச மிருந்தால் அது நாளடைவில் சாதகனுக்கும் தெரியாது பேராசையாகத் தடித்துவிடும். ஆசைக்குச் சிறிதும் இடம் தரலாகாது. விவேகம் வைராக்கியத்தோடு கூடிய மனதால் இந்திரியங்களை அறவே அடக்குதல் வேண்டும்.*

*புகை சூழ்ந்த அறையில் எவ்வளவு ஜாக்கிரதையுடன் நீ இருந் தாலும் உனது சரீரத்தில் கொஞ்சமாவது கரியேறத்தான் செய்யும். அதுபோல, ஒருவன் எவ்வளவு சாமர்த்தியமாயும் ஜாக்கிரதையாயும் இருந்தாலும் இந்திரிய விஷயங்களுக்கிடையில் வாசம் செய்வதால் அவனுக்குக் காம இச்சை கொஞ்சமாவது உண்டாவது நிச்சயம்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**शनैः शनैरुपरमेद्बुद्ध्या धृतिगृहीतया ।**
**आत्मसंस्थं मनः कृत्वा न किञ्चिदपि चिन्तयेत् ॥ २५**

சனை: சனைருபரமேத்புத்த்யா த்ருதிக்ருஹீதயா ।
ஆத்மஸம்ஸ்தம் மன: க்ருத்வா ந கிஞ்சிதபி சிந்தயேத் ॥ 25

धृति गृहीतया த்ருதி க்ருஹீதயா *தைரியத்தோடு கூடிய* बुद्ध्या புத்த்யா *புத்தியினால்* मनः மன: *மனதை* आत्मसंस्थं कृत्वा ஆத்மஸம்ஸ்தம் க்ருத்வா *ஆத்மாவில் நிற்பதாகச்செய்து* शनैः शनैः சனை: சனை: *சிறிது*

*சிறிதாக* उपरमेत् உபரமேத் *அமைதி பெறவேண்டும்* किञ्चित् अपि கிஞ்சித் அபி *ஒன்றையும்* न चिन्तयेत् ந சிந்தயேத் *சிந்திக்கலாகாது.*

***உறுதியான அறிவினாலும் ஆத்மாவின்கண் நிலை நாட்டப்பெற்ற மனதாலும் சிறிது சிறிதாக அமைதிபெறுக. வேறு ஒன்றையும் நினையாதிருந்திடுக.*** **25**

த்ருதி அல்லது தைரியம் என்பது நெறியான வாழ்க்கையினின்று வரும் வல்லமை. ஊசிப்புல் ஊசியை விடக் கூர்மையாயிருக்கும். ஆனால் குத்தித் தைப்பதற்கு அது உதவாது. விஷய வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள சிலருக்கு நுண்ணறிவு உண்டு. தங்களுடைய புத்திக்கூர்மையினால் நித்திய அநித்திய வஸ்து விவேகம் மிகச் சாமர்த்தியமாகச் செய்வார்கள். ஆனால் ஆசையை அடக்கும் வல்லமை அவர்களுக்கில்லை. மனவலிவும் தைரியபுத்தியும் படைத்தவர்க்கே அது சாத்தியம். மனம் ஆத்மாவில் நிலைபெறுகிற வளவு அது விஷயங்களில் போகாது. விஷய போகங்களை எண்ணலாகாது; ஈசுவர சிந்தனையே மெள்ள மெள்ள வலுக்கவேண்டும.

மனம்தான் எல்லாம். அது தனது சுயேச்சையை இழக்குமானால் நீயும் உனது சுயேச்சையை இழப்பாய். மனம் சுயேச்சையோடு இருக்குமானால் நீயும் சுயேச்சையோடு இருப்பாய். மனதை, வண்ணனிடமிருந்து வந்த வெளுப்பு வஸ்திரத்தைப் போல, எந்தச் சாயத்திலும் தோய்த்தெடுக்கலாம். ஆங்கில பாஷையைப் படித்தால் உனது சம்பாஷணையில், நீ தடுக்க முயன்றாலும் ஆங்கிலச் சொற்கள் கலந்து விடும். சம்ஸ்கிருதம் படித்த பண்டிதன் நிச்சயமாய் சுலோகங்களை மேற்கோளாக எடுத்துக்காட்டுவான். கெட்டவர்களோடு சகவாசம் செய்தால் மனமும் வாக்கும் கெட்டுப்போம். பக்தர்களின் மத்தியிலிருந்தால் மனம் ஈசுவரனைப் பற்றிச் சிந்திப்பது நிச்சயம். சகவாசத்துக்கும் செய்கைக்கும் தக்கபடி மனத்தின் சுபாவம் மாறுபடும்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

சிறிது சிறிதாகப் பழகவேண்டும் என்று பகவான் சொல்லியிருப்பதால் சாதகன் ஒருவன் தீவிரமான முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை; பல பிறவிகளுக்குப்

பிறகு யோகானுபூதி வந்தமைந்தால் போதும் என்று எண்ணி முயற்சியைக் குறைக்கலாம். அத்தகைய சந்தேகம் வாராதிருத்தற் பொருட்டு அதன் உட்கருத்தை பகவான் மேலும் விளக்குகிறார் :—

**यतो यतो निश्चरति मनश्चञ्चलमस्थिरम् ।**
**ततस्ततो नियम्यैतदात्मन्येव वशं नयेत् ॥ २६**

யதோ யதோ நிஸ்சரதி மனஸ்சஞ்சலமஸ்திரம் ।
ததஸ்ததோ நியம்யைததாத்மன்யேவ வசம் நயேத் ॥ 26

चञ्चलं சஞ்சலம் *சஞ்சலமானதும்* अस्थिरं அஸ்திரம் *ஸ்திரமில்லாததும் ஆகிய* मनः மன: *மனமானது* यतः यतः யத: யத: *எக்காரணங்களைக்கொண்டு* निश्चरति நிஸ்சரதி *அலைகின்றதோ* ततः ततः தத: தத: *அது அதினின்று* एतत् ஏதத் *இந்த மனதை* नियम्य நியம்ய *அடக்கி* आत्मनि एव वशं ஆத்மனி ஏவ வசம் *ஆத்மாவின் வசத்திலேயே* नयेत् நயேத் *கொண்டு வருக.*

***அலைவதும் நிலையற்றதுமாகிய மனது எக்காரணத்தால் எதன் எதன்கண் திரிகிறதோ அதன் அதனிடத்திலிருந்து மீட்டுவித்து ஆத்மாவின் வசத்துக்குக்கொண்டு வருக.*** **26**

*ஓடும் தன்மையுடைய மனது ஒரு பொருளிடத்திருந்து விலக்கியெடுக்கப்பட்டவுடன் மற்றொரு பொருளிடத்து அது பாய்கிறது. அப்படிப் பாய்தற்குத் தக்க காரணத்தையும் அந்த மனதே கண்டுபிடிக்கிறது. அரசாங்கம் உண்டுபண்ணும் சட்டத்துக்கு உட்பட்டவர்கள் போன்று பாசாங்கு செய்துகொண்டே தங்கள் சுயநலத்துக்காக அதை மீறி நடக்கும் குணக்கேடர் பலர் உளர். அவர்கள் செய்யும் ஒவ்வொரு புதிய அடாதசெயலையும் சட்டத்துக்கு உட்படுத்தப் புதிய சட்டங்கள் அமைப்பது அவசியமாகிறது. விஷயங்களில் செல்லும் மனது செய்கிற தொழிலும் அத்தகையது. அப்போதைக்கப்போது அதற்கு விவேகத்தை ஊட்டுதல் அவசியம். இச்செயலைத்தான் சிறிது*

*சிறிதாக வசப்படுத்துவது என்று பகவான் பகர்கிறார். ஆத்மாவில் வந்து மனது உறுதிபெறும் வரையில் அதனோடு ஓயாது போராடியாகவேண்டும்.*

*இச்சையானது கடுகளவு இருந்தாலும் ஈசுவரனைக் காணமுடியாது. ஆதலால் உன்னிடத்துள்ள குற்றமற்ற சிறிய இச்சைகளைத் திருப்தி செய்துகொண்டு, விஷயாதிகளிலுள்ள பெரிய இச்சைகளை விவேகத்தாலும் விசாரத்தாலும் ஒழித்துவிடு.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஆசைகளை அடக்கியபின் ஆவதென்ன?*

**प्रशान्तमनसं ह्येनं योगिनं सुखमुत्तमम् ।**
**उपैति शान्तरजसं ब्रह्मभूतमकल्मषम् ॥ २७**

**ப்ரசாந்தமனஸம் ஹ்யேனம் யோகினம் ஸுகமுத்தமம் ।**
**உபைதி சாந்தரஜஸம் ப்ரஹ்மபூதமகல்மஷம் ॥ 27**

प्रशान्त मनसं ப்ரசாந்த மனஸம் *மிகச்சாந்தமான மனதையுடையவன்* शान्तरजसं சாந்தரஜஸம் *ரஜோகுணத்தின் வேகம் தணிந்தவன்* अकल्मषं அகல்மஷம் *பாபம் அற்றவன்* ब्रह्मभूतम् ப்ரஹ்மபூதம் *தானே பிரம்மமானவன்* एनं ஏனம் *இப்படிப்பட்ட* योगिनं हि யோகினம் ஹி *யோகியைத்தான்* उत्तमं सुखं உத்தமம் சுகம் *உத்தமமான சுகம்* उपैति உபைதி *வந்தடைகிறது.*

***மிகச் சாந்தமான மனதையுடைய, ரஜோ குணத்தின் வேகம் தணிந்த, பாபமற்ற, தானே பிரம்மமான யோகிக்கே பேரின்பம் அடுத்திடுகிறது. 27***

*துன்பத்துக்கு ஏதுவான பற்றுதல்களை ரஜோகுணம் உண்டுபண்ணுகிறது. அதன் வேகம் தணியும்பொழுது மனதில் பிரசாந்தம் — இனிமையோடு கூடிய அமைதி — தானாக வந்தமைகிறது. அப்பொழுது யோகி ஜீவன் முக்தனாகிறான். எல்லாம் பிரம்மம் என்று அறிகிறவன் தானே பிரம்மமாகிறான். தானே பிரம்மமானவனுக்கு இருள்சேர் இருவினையும் சேர்வதில்லை. வினையே பாபம் எனப்படுகிறது. தர்மம் அதர்மமாகிய கர்மத்தில் கட்டுப்படாதவனுக்குப்*

பாபமில்லை. பின்பு சித் சுகமே யாண்டும் அவனை அடுத்திருக்கும்.

*தனது வேலைக்காரன் வீட்டுக்கு அதிதியாகப் போவதற்கு முன்னால், அவ்வேலைக்காரன் தன்னைத் தகுந்த மரியாதையுடன் வரவேற்று உபசரிக்க வேண்டியதற்காக அரசன் ஒருவன் தன்னுடைய பண்டக சாலையிலிருந்தே வேண்டிய ஆசனங்கள், ஆபரணங்கள், ஆகாராதிகள் இவைகளை அவ்வேலைக்காரனுக்கு அனுப்புகிறான். அதுபோல ஈசுவரன் பக்தனிடம் செல்லுமுன்னால், ப்ரேமை, பக்தி, சிரத்தை ஆகிய இவைகளை அந்த பக்தனுடைய ஆர்வமுற்ற ஹிருதயத்தில் புகும்படி அனுப்பியருள்கிறான்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**युञ्जन्नेवं सदात्मानं योगी विगतकल्मषः ।**
**सुखेन ब्रह्मसंस्पर्शमत्यन्तं सुखमश्नुते ॥ २८**

யுஞ்ஜன்னேவம் ஸதாத்மானம் யோகீ விகதகல்மஷ: ।
ஸுகேன ப்ரஹ்மஸம்ஸ்பர்சமத்யந்தம் ஸுகமச்னுதே ॥ 28

एवं ஏவம் *இவ்விதம்* सदा ஸதா *எப்பொழுதும்* आत्मानं युञ्जन् ஆத்மானம் யுஞ்ஜன் *மனதை ஆத்மாவில் நிலைக்கச்செய்து* विगत कल्मषः விகத கல்மஷ: *பாபம் நீங்கப்பெற்ற* योगी யோகீ *யோகியானவன்* सुखेन ஸுகேன *எளிதில்* ब्रह्म संस्पर्शं ப்ரஹ்ம ஸம்ஸ்பர்சம் *பிரம்மஞானத்தில் பிறந்த* अत्यन्तं सुखं அத்யந்தம் ஸுகம் *அத்யந்த சுகத்தை* अश्नुते அச்னுதே *அடைகிறான்.*

***இங்ஙனம் மனதை ஆத்மாவில் சதா நிலைக்கச் செய்து பாபம் நீங்கப்பெற்ற யோகியானவன் பிரம்ம ஞானத்தில் பிறக்கும் பேரானந்தத்தை எளிதில் எய்துகிறான். 28***

*பிரம்ம ஸம்ஸ்பர்சம், பிர்ம்மத்தைத் தொட்டுணர்வதால் வரும் பேரானந்தம் என்பது மூலம். ஸ்பர்சமணி என்று ஒரு கல் இருப்பதாகவும், அதைக்கொண்டு எதைத் தொட்டாலும் அது பொன்னாய்விடும் என்றும் ஓர் ஐதிகம் உண்டு. பொன் ஆவது என்பதன் பொருள் கீழானது மிக மேலானதாகும் என்பதாம். பிரம்மம்தான் அந்த ஸ்பர்சமணி. அது எளிதில் அகப்படுவது அன்று. ஆயினும் அத*

ஞேடு இணக்கம் வைத்துக் கொள்பவர்களெல்லாம் அதன் சொரூபத்தைப் பெற்று விடுகிறார்கள். அதன் அலகிலா ஆனந்தமும் அவர்களுக்குரியதாகிறது.

*ஜலத்தில் அமிழ்த்தி வைத்த பாத்திரத்தின் உள்ளேயும் வெளியிலும் ஜலம் நிரம்பியிருக்கும். அதுபோல ஈசுவரனிடம் ஆழ்ந்துள்ள ஆத்மாவானது உள்ளும் புறமும் ஸர்வ வியாபகமான சைதன்யத்தைத் தான் காணும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*தன்னகத்து ஆத்ம சொரூபத்தை அறிந்து அனுபவித்தவனுக்கு உலகக் காட்சியில் ஏதேனும் மாறுதல் ஏற்படுகிறதா? அதற்கு விடை வருகிறது :—*

**सर्वभूतस्थमात्मानं सर्वभूतानि चात्मनि ।**
**ईक्षते योगयुक्तात्मा सर्वत्र समदर्शनः ॥ २९**

ஸர்வபூதஸ்தமாத்மானம் ஸர்வபூதானி சாத்மனி ।
ஈக்ஷதே யோகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சன: ॥ 29

योगयुक्तात्मा யோகயுக்தாத்மா *யோகத்தில் உறுதிபெற்றவன்* सर्वत्र ஸர்வத்ர *எல்லாப்பொருள்களிடத்தும்* समदर्शनः ஸமதர்சன: *சமதிருஷ்டியுடையவன்* आत्मानं ஆத்மானம் *தன்னை* सर्वभूतस्थं ஸர்வபூதஸ்தம் *எல்லா உயிர்களிடத்து இருப்பதாகவும்* सर्वभूतानि च ஸர்வபூதானி ச *எல்லா உயிர்களையும்* आत्मनि ஆத்மனி *தன்னிடத்தும்* ईक्षते ஈக்ஷதே *காண்கிறான்.*

***யோகத்தில் உறுதிபெற்று எங்கும் சமதிருஷ்டியுடையவன் தன்னை எல்லா உயிர்களிடத்தும், எல்லா உயிர்களைத் தன்னிடத்தும் இருப்பதாகக் காண்கிறான். 29***

*யோகத்தில் முதிர்ச்சியடைந்து வருபவனுக்கு இது உயர்ந்தது, இது தாழ்ந்தது என்ற வேற்றுமை யெண்ணம் போய்விடுகிறது. சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மா முதல் சிருஷ்டிப் பொருள்களில் மிகச்சிறியதாகிய புல் பரியந்தம் எல்லாவற்றையும் சிறந்த பான்மையுடன் கருதுதல் அவனுக்கு இயல்பாய்விடுகிறது. பிறகு தன்னுயிர் போன்று*

மன்னுயிரையும், மன்னுயிர் போன்று தன்னுயிரையும் பாராட்டுபவன் ஆகிறான். அதற்குமேல் தன் உடல் முழுவதையும் தன் சொரூபமாகக் கருதுவதுபோன்று, பிரம்மா முதல் புல் வரையில் எல்லா உயிர்களையும் தன் சொரூபமாகவும், தன்னை எல்லா உயிர்களின் சொரூபமாகவும் உணரும் தன்மை வந்து விடுகிறது.

நான் தனிப்பட்ட ஜீவன் என்று கூறுவது கங்கைப் பிரவாகத்துக்குள் ஒரு சிறு பாகத்தை அணையிட்டுக் கட்டி அவ்வணைக்குள்ளிருக்கும் நீரைத் தன்னுடைய கங்கை என்று கூறுவதற்கொப்பாகும்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஜீவர்கள் அனைவரும் ஒன்றுபட்டவர்கள் என்றால் இனி அவர்களுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள தொடர்வு யாது? விடை வருகிறது:—

**यो मां पश्यति सर्वत्र सर्वं च मयि पश्यति ।**
**तस्याहं न प्रणश्यामि स च मे न प्रणश्यति ॥ ३०**

யோ மாம் பச்யதி ஸர்வத்ர ஸர்வம் ச மயி பச்யதி ।
தஸ்யாஹம் ந ப்ரணச்யாமி ஸ ச மே ந ப்ரணச்யதி ॥ 30

यः ய: *யார்* मां மாம் *என்னை* सर्वत्र ஸர்வத்ர *எல்லாவற்றினிடத்தும்* पश्यति பச்யதி *பார்க்கிறானோ* मयि च மயி ச *என்னிடத்தும்* सर्वं ஸர்வம் *எல்லாவற்றையும்* पश्यति பச்யதி *பார்க்கிறானோ* तस्य தஸ்ய *அவனுக்கு* अहं அஹம் *நான்* न प्रणश्यामि ந ப்ரணச்யாமி *மறைவதில்லை* सः च ஸ: ச *அவனும்* मे மே *எனக்கு* न प्रणश्यति ந ப்ரணச்யதி *மறைவதில்லை.*

***யார் என்னை எல்லாவற்றிலும், எல்லாவற்றை என்னிடத்திலும் காண்கிறானோ அவன் காட்சியினின்று நான் மறைவதில்லை; அவனும் என் காட்சியினின்று மறைவதில்லை. 30***

உயிர்கள் அனைத்துக்குமிடையில் ஒற்றுமை கண்டான பிறகு அவைகள் எப்பொருளால் ஆக்கப்பெற்றவைகள் என்ற அறிவு வருகிறது. பொன் ஆபரணங்கள் எல்

லாம் பொன்னால் ஆக்கப்பட்டவை போன்று உயிர்கள் அனைத்தும் பரமாத்மாவினிடத்திருந்து வந்தவை என்ற ஞானம் உதிக்கிறது. நகை பொன்மயமாயிருப்பது போன்று பரமாத்மாவை அறிபவன் தானே பரமாத்மாவின் சொரூப மாயிருக்கிறான். அவன் எந்த இடத்தில் இருப்பினும், எத் தகைய மன நிலையையுடையவனாயிருப்பினும், கால வேறு பாடு எதுவாயினும், பரமாத்மாவைப்பற்றிய ஞானம் அவனை விட்டகலுவதில்லை.

*ஒரே வஸ்துவான சர்க்கரையினால் பக்ஷி போலவும், மிருகம் போலவும் வேறு வேறு உருவங்களைக் கொண்ட மிட்டாய் செய்யக் கூடும். அதுபோல ஆனந்த சொரூபியாகிய ஒரே கடவுள் பலவித நாம ரூபங்களால் பலவித கால தேசங்களில் ஆராதிக்கப்படுகிறான்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஞானம் தடைப்படுவதில்லை யாதலால் பரமாத்மா வுக்கும் யோகிக்கும் உள்ள தொடர்வு தெளிவுறுத்தப்படு கிறது.

सर्वभूतस्थितं यो मां भजत्येकत्वमास्थितः ।
सर्वथा वर्तमानोऽपि स योगी मयि वर्तते ॥ ३१

ஸர்வபூதஸ்திதம் யோ மாம் பஜத்யேகத்வமாஸ்த்தித: ।
ஸர்வதா வர்த்தமானோऽபி ஸ யோகீ மயி வர்ததே ॥ 31

यः ய: *யார்* सर्वभूतस्थितं ஸர்வபூதஸ்திதம் *எல்லா உயிர்களிலு மிருக்கிற* मां மாம் *என்னை* एकत्वं ஏகத்வம் *பிரம்மம் ஒன்றே என்கிற எண்ணத்தில்* आस्थितः ஆஸ்தித: *நிலைத்திருந்து* भजति பஜதி *பஜிக்கிறானோ* स योगी ஸ யோகீ *அந்த யோகியானவன்* सर्वथा ஸர்வதா *எல்லா அவஸ்தைகளிலும்* वर्तमानः अपि வர்தமான: அபி *ஈடுபடினும்* मयि वर्तते மயி வர்ததே *என்னிடத்தில் இருக்கிறான்.*

***உள்ளது ஒன்றே என்று உறுதிகொண்டு, எல்லா உயிர்களிலுமிருக்கிற என்னைப் போற்றும் யோகி எப்பாங்கில் இருப்பினும் என்னிடத்து இருப் பவன் ஆகிறான்.*** **31**

*சிறைச்சாலையிலிருந்து விடுபட்ட ஒருவன் ஒரு அறைக்குள்ளே தன்னை மூடிவைத்துக் கொண்டாலும், கை கால்களைத் தளைத்துக்கொண்டாலும் தான் பந்தப்பட்டவன் அல்லன் என்று ஐயம் திரிவு அற உணர்கிறான். பிரம்மம் ஒன்றே இத்தனைக்கும் மூலப்பொருள் என்று அறிந்தவன் பிரம்மத்தையே யாண்டும் காண்கிறான். பிரம்ம பாவனையில் அவன் நிலைத்திருப்பதால் அவன் கொள்ளுகிற இணக்கமெல்லாம் இறை வணக்கமாகிறது. ஸர்வதா என்பதன் பொருள் தியானாவஸ்தை, வியவகாரம், விச்ராந்தி ஆகிய எல்லா வேளைகளிலும் நிலைகளிலும் என்பதாகிறது. ஸஹஜ நிஷ்டை என்பது இதுவே. நீரில் இருப்பவன் நனைவதும், நெருப்பின் அருகில் இருப்பவன் வெப்பம் பெறுவதும் இயல்பு. பிரம்ம சந்நிதியில் இருப்பவன் தானே பிரம்ம சொரூபம் ஆகிறான். ஜீவன் முக்தன் நிலை இதுவே.*

*வாஸ்தவமான ஞானம் உண்டானவன் ஈசுவரன் வெகுதூரத்திலிருப்பதாகக் காண்பதில்லை. 'அவன்' என்று எட்ட இருப்பதுபோல் இல்லாமல் 'இது' என்று இங்கே அவனுடைய உள்ளத்திலேயே இருப்பதாக அவன் உணர்கிறான். ஈசுவரன் எல்லாரிடத்திலும் இருக்கிறான். ஆகவே தேடுபவர்களுடைய காட்சிக்கு அவர்களிடமே அவ்வீசுவரன் தென்படுகிறான்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*அந்த யோகியிடத்து மேலும் அமையும் பெருமை யாவது :—*

**आत्मौपम्येन सर्वत्र समं पश्यति योऽर्जुन ।**
**सुखं वा यदि वा दुःखं स योगी परमो मतः ॥ ३२**

ஆத்மௌபம்யேன ஸர்வத்ர ஸமம் பச்யதி யோऽர்ஜுன ।
ஸுகம் வா யதி வா து:கம் ஸ யோகீ பரமோ மத: ॥ 32

अर्जुन அர்ஜுன *அர்ஜுனா* यः ய: *யார்* सर्वत्र ஸர்வத்ர *எங்கும்* आत्मौपम्येन ஆத்மௌபம்யேன *தன்னை உபமானமாகக்கொண்டு* यदि वा सुखं யதி வா ஸுகம் *சுகத்தையும்* वा दुःखं வா து:கம் *துக்கத்தையும்* समं ஸமம் *சமமாக* पश्यति பச்யதி *பார்க்கிறானோ* सः योगी ஸ: யோகீ

*அந்த யோகி* परमः பரமः *மேலானவன் என்று* मतः மதः *கருதப்படு கிறான்.*

***அர்ஜுனா, தன்னையே உவமையாகக்கொண்டு இன்பத்தையும் துன்பத்தையும் எங்கும் ஒப்பக் காண்பவன் பரமயோகியெனக் கருதப்படுகிறான். 32***

*தன் உடலில் உள்ள உறுப்புகளுக்கிடையில் மனிதன் உயர்வு தாழ்வு பாராட்டுவதில்லை. அவயவத்துக்கு உண்டாகும் இன்பமும் துன்பமும் தன்னுடையது. ஏனென்றால் அவயவங்கள் வேறு தான் வேறு அல்ல. தானே அவயவங்கள், அவயவங்களே தான். இந்த ஞானம் சாதாரண ஜீவனுக்கு உறுதியாயிருப்பது போன்று சிறந்த யோகிக்கு தானே உலகம், உலகமே தான் என்ற அனுபவம் அசையாதது. தானும் உலகும் பரம்பொருளுக்கு அவயவங்கள் போன்றவை. தனக்குத் துன்பம் வாராது தடுப்பது போன்று உலகுக்குத் தன்னால் துன்பம் வாராது தடுக்கிறான். தனக்கு இன்பத்தை வளர்ப்பது போன்று உலகுக்கு இன்பத்தை நல்குகிறான். இத்தகைய ஐக்கிய உணர்வால் அவன் பரம யோகியாகிறான்.*

*ஒரு கிராமத்தில் ஒரு மடம் இருந்தது. அம்மடத்திலிருந்த சந்யாஸிகள் தினந்தோறும் பிக்ஷா பாத்திரத்தை எடுத்துக் கொண்டு வெளியே பிக்ஷைக்காகப் போவதுண்டு. ஒரு நாள் ஒரு சந்யாஸி அப்படிப் போகும்போது, ஏழைக்குடியானவன் ஒருவனை ஒரு மிராசுதாரன் கடுமையாக அடிப்பதைக் கண்டார். தயாளுவாகிய அந்தச் சாது, குடியானவனை அடிப்பதை நிறுத்த வேண்டுமென்று மிராசுதாரனைக் கேட்டுக்கொண்டார். கோபத்தால் தன்னை மறந்த மிராசுதாரன் உடனே, சாதுவின்மேல் பாய்ந்து அவரையும் அடி அடியென்று அடித்து விட்டான். அதனால் அவர் பிரக்ஞையற்றுத் தரையில் விழுந்துவிட்டார். இவருடைய நிலைமையைக் கண்ட மனிதன் ஒருவன் மடத்துக்கு ஓடிப் போய் நடந்த சங்கதிகளைச் சொன்னான். அங்கிருந்த மற்ற சந்யாஸிகள் உடனே அவர் விழுந்து கிடக்குமிடத்துக்கு ஓடிவந்து, அவரைத் தூக்கியெடுத்து மடத்துக்குக் கொண்டு போயினர்; என்றாலும் அவருக்கு நெடுநேரம் வரையிலும் பிரக்ஞை வரவில்லை. ஆதலால் மற்றைய சாதுக்கள் கவலையும் துக்கமுங்கொண்டு, அவருக்குக் காற்று வரும்படி விசிறி, முகத்தைக் குளிர்ந்த ஜலத்தால் துடைத்து, வாயில் பாலை*

வார்த்து, பிரக்ஞை வருவதற்கான சைத்யோபசாரங்களைச் செய்து கொண்டிருந்தனர். கொஞ்சம் கொஞ்சமாக அவருக்குத் தம் நினைவு வரத் தலைப்பட்டது. அவர் கண்ணைத் திறந்து மற்றைய சந்யாஸிகளைப் பார்த்ததும், அவர்களில் ஒருவர் அவருக்குத் தம் சகாக்களை அறிந்துகொள்ளக் கூடிய நல்ல ஞாபகம் வந்துவிட்டதா என்று தெரிந்துகொள்ளவேண்டி, "சுவாமீ, இப்போது தங்களுக்குப் பால் வார்த்துக்கொண்டிருப்பது யார் என்று தெரிகின்றதா?" என்று கேட்டார். அதற்கு அந்த சாது, "தம்பி, எவன் என்னை அடித்தானோ அவனேதான் இப்போது பால் " என்று பதில் சொன்னார்.

ஈசுவர சைதன்யத்தை அடைந்து நன்மை தீமை, பாப யம் இவைகளைக் கடந்து நின்றாலொழிய இப்படிப்பட்ட ஆத்ம சொரூபம் ஸித்தியாகாது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

யோகம் இங்ஙனம் விளக்கப்படும்போது அர்ஜுனனுக்கு ஓர் ஐயப்பாடு உண்டாயிற்று. அதாவது :—

**अर्जुन उवाच**

**योऽयं योगस्त्वया प्रोक्तः साम्येन मधुसूदन ।**
**एतस्याहं न पश्यामि चञ्चलत्वात्स्थितिं स्थिराम् ॥ ३३**

அர்ஜுன உவாச

யோऽயம் யோகஸ்த்வயா ப்ரோக்த: ஸாம்யேன மதுஸூதன ।
ஏதஸ்யாஹம் ந பச்யாமி சஞ்சலத்வாத்ஸ்திதிம் ஸ்திராம் ॥ 33

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது*

मधुसूदन மதுஸூதன *ஓ மதுசூதனா* साम्येन ஸாம்யேன *சமமாகப் பார்த்தல் என்ற* यः अयं योगः ய: அயம் யோக: *யாதொரு இந்த யோகம்* त्वया த்வயா *உம்மால்* प्रोक्तः ப்ரோக்த: *பகரப்பட்டதோ* एतस्य ஏதஸ்ய *இதனுடைய* स्थिरां ஸ்திராம் *ஸ்திரமான* स्थितिं ஸ்திதிம் *இருப்பை* चञ्चलत्वात् சஞ்சலத்வாத் *சஞ்சலத்தினால்* अहं அஹம் *நான்* न पश्यामि ந பச்யாமி *பார்க்கிறேனில்லை.*

அர்ஜுனன் சொன்னது

***மதுசூதனா, 'சமமாகப்பார்த்தல்' என்று தாம் புகட்டிய இந்த யோகமானது உறுதியாக நிலைத்***

***திருக்கு மென்று அலைகின்ற என் மனதுக்குத் தோன்றவில்லை. 33***

*சமமாகப் பார்த்தல் என்பது விக்ஷேபங்கள் அற்று மனம் ஒடுங்கியிருத்தலாம். விதவிதமான எண்ணங்கள் விக்ஷேபங்கள் என்று இயம்பப்படுகின்றன. அலையில்லாத கடல் போன்ற தேங்கிய நிலை விக்ஷேபங்கள் அற்ற மனநிலையாகிறது.*

चञ्चलं हि मनः कृष्ण प्रमाथि बलवद्दृढम् ।
तस्याहं निग्रहं मन्ये वायोरिव सुदुष्करम् ॥ ३४

சஞ்சலம் ஹி மன: க்ருஷ்ண ப்ரமாதி பலவத்த்ருடம் ।
தஸ்யாஹம் நிக்ரஹம் மன்யே வாயோரிவ ஸுதுஷ்கரம் ॥ 34

कृष्ण க்ருஷ்ண *ஓ கிருஷ்ணா* हि ஹி *நிச்சயமாக* मनः மன: *மனமானது* चञ्चलं சஞ்சலம் *அலையும் தன்மையது* प्रमाथि ப்ரமாதி *உட்கலக்கமுடையது* बलवत् பலவத் *பலமுடையது* दृढं த்ருடம் *அடங்காதது* अहं அஹம் *நான்* तस्य தஸ்ய *அதனுடைய* निग्रहं நிக்ரஹம் *அடக்குதலை* वायोः इव வாயோ: இவ *காற்றைப்போன்று* सुदुष्करं ஸுதுஷ்கரம் *இயலாதது என்று* मन्ये மன்யே *நினைக்கிறேன்.*

***கிருஷ்ணா, மனம் அலையும் தன்மையது, திகைக்கச் செய்வது, வலிவுடையது, திடமுடையது. அதை அடக்குவது காற்றை அடக்குவது போன்று இயலாதது என்று நினைக்கிறேன். 34***

*இக் கேள்வியில் மனதின் இயல்பு முழுதும் அடங்கி விடுகிறது. ஓயாது அலைந்து திரிவதால் மனது '**சஞ்சல**' முடையது. மான் போன்று அது அலைகிறது எனலாம். மான் யாருக்கும் துன்பம் தருவதில்லை. மனது அத்தகையதன்று. புலி போன்று அது உயிர்களைத் துன்புறுத்திக் கொண்டே இருக்கிறது. அவைகள் அத்துஷ்ட ஜந்துவால் கலக்கமடைகின்றன. மனதும் அப்படி மனிதனைக் கலக்கிக் கொண்டிருக்கிறது. ஆதலால் அது '**பிரமாதி**' எனப்படுகிறது. துன்புறுத்தும் கொசு ஒன்றுக்குப் பலமில்லை. ஆனால்*

புலிக்குப் பலமுண்டு. மனதும் அப்படிப் பலம் மிக உடையது. எனவே அது '**பலவத்**' எனப்படுகிறது. புலியைப் பட்டினி போட்டு அதன் பலத்தைக் குறைத்துவிடலாம். இரத்தத்தை உறிஞ்சும் அட்டை ஒன்றைப் பட்டினி போட்டால் அதன் தோல் அதிக வலிவுடையதாகிறது. அதைக் கிள்ளித் துண்டிக்க முடியாது. மனதும் அத்தகைய அட்டை போன்றது. அது விரும்புவதைக் கொடாவிட்டால் இன்னும் பன்மடங்கு அது திடமுடையதாகிறது. ஆகையால் அது '**திருடம்**' என்று இயம்பப்படுகிறது. காற்றைப் போன்று அது கட்டில் அடங்காதது என்று இயம்பப்படுகிறது. நவீன மனிதன் ஒரு விதத்தில் காற்றைப்பிடித்து அடைத்து வைக்கக் கற்றிருக்கிறான். ஆனால் மனதைக் கட்டுவது மாந்தருக்குச் சாத்தியமன்று.

இனி, இத்தகைய மனதைக் கிருஷ்ணன்தான் ஒழுங்குப்படுத்தவேண்டும். ஏனென்றால் அவன் பெயரே அவனது வல்லமையைக் குறிக்கிறது. 'கிருஷ்' என்பதற்குச் சுரண்டுதல் என்று பொருள். அதைப் பகுதியாகக்கொண்டு பிறந்தது 'கிருஷ்ணன்' என்ற சொல். கிருஷ்ணன் பக்தர்களுடைய பாபத்தைச் சுரண்டிப் போக்க வல்லவன்.

இதற்கு பகவானது விடை வருகிறது :—

**श्री भगवानुवाच**

**असंशयं महाबाहो मनो दुर्निग्रहं चलम् ।**
**अभ्यासेन तु कौन्तेय वैराग्येण च गृह्यते ॥ ३५**

ஸ்ரீ பகவானுவாச

அஸம்சயம் மஹாபாஹோ மனோ துர்நிக்ரஹம் சலம் ।
அப்யாஸேன து கௌந்தேய வைராக்யேண ச க்ருஹ்யதே ॥ 35

श्री भगवान् उवाच ஸ்ரீபகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

महाबाहो மஹாபாஹோ *நீண்ட கைகளையுடையவனே* मनः மன: *மனமானது* दुर्निग्रहं துர்நிக்ரஹம் *அடக்க முடியாதது* चलं சலம் *அலைந்து திரிவது* असंशयं அஸம்சயம் *இதில் சந்தேகமில்லை* तु து *ஆனால்*

कौन्तेय கௌந்தேய *குந்தியின் மைந்தா* अभ्यासेन அப்யாஸேன *அப்பி யாசத்தாலும்* वैराग्येण च வைராக்யேண ச *வைராக்கியத்தாலும்* गृह्यते க்ருஹ்யதே *அடக்கப்படுகிறது.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***தடந்தோளாய்! மனம் கட்டுப்படாதது, அலையும் தன்மையது என்பதில் ஐயமில்லை. எனினும், குந்தியின் மைந்தா, அப்பியாசத்தாலும் வைராக்கியத்தாலும் அதை அடக்கலாம்.*** **35**

*அப்பியாசம் என்பது பழக்கம். பழக்கத்தால் தன்னை எப்படி வேண்டுமானாலும் திருத்தி யமைத்துக் கொள்ளலாம். அவரவர் பெற்றுள்ள பான்மை பழக்கத்தைப் பொறுத்தது. இடையறாப் பழக்கத்தால் எப்பான்மையை வேண்டுமானாலும் பெறலாம். நாடிய லட்சியத்தினிடத்து, அல்லது வழிபடு தெய்வத்தினிடத்து மனதை அடிக்கடி திருப்புவது அப்பியாசமாகும். ஈசுவரதியானத்தை முறையாகச் செய்வது அப்பியாசம். எண்ணம் இறைவனைப்பற்றியதாகுமளவு மனது வெளி விஷயங்களில் செல்லாது ஒருமுகப்படும்.*

*வைராக்கியம் என்பது ராகமின்மை. புலன்களில் பற்றில்லாதிருப்பது வைராக்கியம். மனம் அடங்காது ஓடுதற்குக் காரணம் யாது என்று விசாரித்துப் பார்த்தால் அது எப்பொழுதாவது எதனிடத்தாவது பற்றுவைத்திருந்தால் அப்பொருளையே அது நாடியலைகிறது என்பது விளங்கும். இந்திரிய விஷயங்களிலுள்ள கேடுகளை மனதுக்கு ஞாபகமூட்டி அதை அவைகளிடத்திருந்து மீட்டெடுப்பது வைராக்கியமாம்.*

*நீந்தக் கற்றுக்கொள்ள விரும்புகிறவன் அதைத் தொடர்ந்து அப்பியசிக்கவேண்டும். ஒரே ஒரு நாள் அப்பியசித்தவுடன் கடலில் நீந்துவதற்கு ஒருவனும் துணியமாட்டான். அதுபோல பிரம்மமாகிய கடலில் நீந்தப் பிரியப்பட்டால் முதலில் அநேகம் தரம் பயன்படாத பிரயத்தனங்கள் செய்துதீரவேண்டும். அப்போதுதான் அங்கு நீந்தக் கூடிய சக்தி உனக்கு உண்டாகும்.*

*விஷமுள்ள ஒருவகைச் சிலந்திப் பூச்சியிருக்கிறது. அதனால் உண்டாகும் கடி எந்த மருந்தினாலும் எளிதில் குணமடைவதில்லை. மஞ்சள் வேரினால் கடியின்மீது குழையடித்த பிறகுதான் எந்தமருந்தும் குணங்கொடுக்க ஆரம்பிக்கும். அதுபோலக் காமமும் காசு ஆசையுமாகிய சிலந்திப்பூச்சி ஒருவனைக் கடித்துவிட்டால் வைராக்கியமென்னும் மனோசக்தி அவனிடம் முதன்முதலில் உதிக்கவேண்டும். அப்பால்தான் அவன் ஆத்ம சாதனத்துக்கு அருகனாவான்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*யோகத்தை அடைபவர் யார், அடையாதவர் யார், எனின் :—*

असंयतात्मना योगो दुष्प्राप इति मे मतिः ।
वश्यात्मना तु यतता शक्योऽवाप्तुमुपायतः ॥ ३६

அஸம்யதாத்மனா யோகோ துஷ்ப்ராப இதி மே மதி: ।
வச்யாத்மனா து யததா சக்யோऽவாப்துமுபாயத: ‖ 36

असंयत आत्मना அஸம்யத ஆத்மனா *மனதை அடக்க முடியாதவனால்* योग: யோக: *யோகமானது* दुष्प्राप: துஷ்ப்ராப: *அடையமுடியாதது* इति இதி *என்பது* मे मति: மே மதி: *என்னுடைய கருத்து* तु து *ஆனால்* वश्यात्मना வச்யாத்மனா *மனதை அடக்கியவனால்* उपायत: உபாயத: *உபாயத்தால்* यतता யததா *முயற்சி செய்கிறவனால்* अवाप्तुं அவாப்தும் *அடைய* शक्य: சக்ய: *இயலும்.*

***மனதை அடக்காதவன் யோகம் அடையான் என்பது என் கருத்து. மனதை அடக்கி உபாயத்தால் முயல்பவனுக்கே அதை அடைய இயலும்.***

*சித்த விருத்திகளைத் தடுத்தவன் மனதை அடக்கியவன் ஆகிறான். உபாயத்தால் முயலுதல் என்பது அப்பியாசத்தையும் வைராக்கியத்தையும் முறையாக அனுஷ்டித்தல் என்பதாம்.*

*" என் குழந்தைகளே, நான் அக்காலங்களில் தியானம் செய்வதற்கு முன்னால் என் மனத்திலுள்ள கெட்ட எண்ணங்கள், ஆசைகள் முதலான சகல கல்மஷங்களையும் அலம்பிச் சுத்தப்படுத்திவிட்டதாக பாவனை செய்துகொண்டு அதன்பிறகு பகவானை அவ்விடத்தில் எழுந்தருளப் பண்ணுவேன். நீங்களும் அவ்வாறு செய்யுங்கள் " என்று*

*ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமது சாதன நாட்களைப்பற்றி சிஷ்யர்களிடம் கூறுவார்.*

*யோகத்தைப் பூர்த்தி பண்ணாதவனைப்பற்றி இப்பொழுது அர்ஜுனனுக்கு ஒரு சந்தேகம் வருகிறது. அதாவது :—*

**अर्जुन उवाच**

**अयतिः श्रद्धयोपेतो योगाच्चलितमानसः ।**
**अप्राप्य योगसंसिद्धिं कां गतिं कृष्ण गच्छति ॥ ३७**

அர்ஜுன உவாச

அயதி: ச்ரத்தயோபேதோ யோகாச்சலிதமானஸ: ।
அப்ராப்ய யோகஸம்ஸித்திம் காம் கதிம் க்ருஷ்ண கச்சதி ॥

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது*

कृष्ण க்ருஷ்ண *கிருஷ்ணா* श्रद्धया ச்ரத்தயா *சிரத்தையோடு* उपेतः உபேத: *கூடினவனாய்* अयतिः அயதி: *அற்ப முயற்சியுடையவனாய்* योगात् யோகாத் *யோகத்தினின்று* चलितमानसः சலிதமானஸ: *தவறிய மனதையுடையவன்* योग संसिद्धिं யோக ஸம்ஸித்திம் *யோகம் நிறைவேறுவதை* अप्राप्य அப்ராப்ய *அடையாது* कां गतिं காம் கதிம் *என்ன கதியை* गच्छति கச்சதி *அடைகிறான்.*

அர்ஜுனன் சொன்னது

***சிரத்தையுடையோனாயினும் முயற்சிக் குறைவால் யோகத்தினின்று மனம் வழுவியவன், யோகம் நிறைவேறாது என்ன கதியை யடைகிறான், கிருஷ்ணா?*** **37**

*யோகம் நன்மை பயக்கும் என்ற நம்பிக்கையிருக்கிறது. ஆனால் மனதில் உறுதியில்லை. அதனால் பூரணத்தை அவன் அடையவில்லை. அப்படி யோகத்தில் தோல்வி யடைந்து உயிர் துறப்பவன் கதி என்னவாகும்?*

**कच्चिन्नोभयविभ्रष्टश्छिन्नाभ्रमिव नश्यति ।**
**अप्रतिष्ठो महाबाहो विमूढो ब्रह्मणः पथि ॥ ३८**

கச்சின்னோபயவிப்ரஷ்டஸ்சின்னாப்ரமிவ நச்யதி ।
அப்ரதிஷ்டோ மஹாபாஹோ விமூடோ ப்ரஹ்மண: பதி ॥ 38

महाबाहो மஹாபாஹோ *தோள்வலிவுடையவனே* ब्रह्मणः ப்ரஹ்மண: *பிரம்மத்தினுடைய* पथि பதி *பாதையில்* विमूढः விமூட: *மோஹமடைந்தவன்* अप्रतिष्ठः அப்ரதிஷ்ட: *ஆதாரமின்றி* उभयविभ्रष्टः உபயவிப்ரஷ்ட: *இரண்டினின்றும் வழுவியவன்* छिन्न अभ्रं इव சின்ன அப்ரம் இவ *சிதறடைந்த மேகம்போல* नश्यति कच्चित् न நச்யதி கச்சித் ந *அழிந்துபோகிறனல்லவா?*

***பெருந்தோளாய், பிரம்ம மார்க்கத்தில் மோகமடைந்தவன் பற்றுக்கோடின்றி, இரண்டினின்றும் வழுவி, சிதறடைந்த மேகம்போல் அழிந்து போகிறனல்லவா? 38***

*சிதறடைந்த மேகம் மண்ணுலகில் மழையாய்ப் பெய்வதில்லை; விண்ணுலகில் உருத்தெரியாது மறைந்து போகிறது. யோகப்பிரஷ்டன் இக பரம் ஆகிய இரண்டினின்றும் வழுவியவன் ஆகிறன். கர்மபலத்தில் பற்று வைக்காமையால் சுகபோகத்தை பூவுலகிலும் வானுலகிலும் அவன் அனுபவிப்பதில்லை. பிரம்ம மார்க்கத்தில் மனத்தெளிவு அடையாமையால் அவன் பிரம்மஞானியாகவில்லை. ஆக புக்தி, முக்தி (போகம், யோகம்) ஆகிய இரண்டையும் இழந்தவன் ஆகிறன். இதைவிடப் பரிதாபகரமான நிலை மனிதனுக்கு யாது உளது?*

एतन्मे संशयं कृष्ण छेत्तुमर्हस्यशेषतः ।
त्वदन्यः संशयस्यास्य छेत्ता न ह्युपपद्यते ॥ ३९

ஏதன்மே ஸம்சயம் க்ருஷ்ண சேத்துமர்ஹஸ்யசேஷத: ।
த்வதன்ய: ஸம்சயஸ்யாஸ்ய சேத்தா ந ஹ்யுபபத்யதே ॥ 39

कृष्ण க்ருஷ்ண *கிருஷ்ணா* मे மே *என்னுடைய* एतत् ஏதத *இந்த* संशयं ஸம்சயம் *சந்தேகத்தை* अशेषतः அசேஷத: *மிச்சமில்லாமல்* छेत्तुं சேத்தும் *அறுக்க* अर्हसि அர்ஹஸி *தகுந்தவர் ஆவீர்* त्वत् अन्यः த்வத் அன்ய: *உம்மைவிட வேறு ஒருவர்* अस्य அஸ்ய *இந்த* संशयस्य ஸம்

சயஸ்ய *சந்தேகத்தை* छेत्ता சேத்தா *சிதைப்பவர்* न हि उपपद्यते ந ஹி உபபத்யதே *இல்லவே இல்லை.*

***கிருஷ்ணா, எனது இந்த ஐயத்தை அறவே அறுக்கத் தகுந்தவர் நீரே. உம்மையன்றி இச் சந்தேகத்தைச் சிதைப்பவர் எவருமிலர். 39***

தேவர்கள் ரிஷிகள் ஆகிய மேலோர் யாரும் இச்சந்தேகத்தை நீக்குதலில் உமக்கு நிகராகமாட்டார்கள். ஏனென்றால் நீர் சர்வக்ஞனை ஈசுவரன்.

*யாருக்கு யார் குரு? ஈசுவரன் ஒருவனே ஜகத்குருவும் வழிகாட்டியுமாவான்.*

*அவதாரபுருஷரால் ஆகாத காரியம் ஒன்றுமேயில்லை. ஜீவனையும் ஆத்மாவையும் பற்றின சூக்ஷ்மமான பிரச்னைகளையெல்லாம் அவர் வெகு சுலபமாகத் தீர்த்துவிடுகிறார். அவருடைய போதனைகளை ஒரு சிறு குழந்தைகூடத் தெரிந்துகொள்ளும். அவர் கற்பகோடி காலங்களாகச் சேர்ந்துள்ள அக்ஞானத்தை அகற்றும் ஒளியையுடைய திவ்விய ஞானசூரியன் ஆவார்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**श्री भगवानुवाच**

**पार्थ नैवेह नामुत्र विनाशस्तस्य विद्यते ।**
**न हि कल्याणकृत्कश्चिद्दुर्गतिं तात गच्छति ॥ ४०**

ஸ்ரீ பகவானுவாச

பார்த்த நைவேஹ நாமுத்ர விநாசஸ்தஸ்ய வித்யதே ।
ந ஹி கல்யாணக்ருத்கஸ்சித்துர்கதிம் தாத கச்சதி ॥ 40

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

पार्थ பார்த்த *பிருதாவின் மைந்தா* तस्य தஸ்ய *அவனுடைய* विनाशः விநாச: *அழிவானது* इह இஹ *இம்மையிலும்* न ந *இல்லை* अमुत्र அமுத்ர *மறுமையிலும்* न एव विद्यते ந ஏவ வித்யதே *இல்லவே இல்லை* तात தாத *மைந்தா* हि ஹி *நிச்சயமாக* कल्याणकृत् கல்யாணக்ருத் *சுபகாரியம் செய்யும்* कश्चित् கஸ்சித் *யாரும்* दुर्गतिं துர்கதிம் *துர்க்கதியை (கீழ்மையை)* न गच्छति ந கச்சதி *அடைகிறதில்லை.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***பார்த்தா, அவனுக்கு இம்மையிலோ மறுமையிலோ அழிவென்பதில்லை. நலஞ்செய்வோன் எவனும் நலிவுறுதல் இல்லையப்பா.* 40**

*தாத என்றால் தகப்பன். தந்தையே பிள்ளையாகப் பரிணமிப்பதால் பிள்ளையை அப்பா என்று அழைப்பது வழக்கம். தகப்பனுக்குப் பிள்ளைபோன்றவன் குருவுக்கு சிஷ்யன். ஆகையால் குரு சிஷ்யனை மைந்தா என்றோ அப்பா என்றோ அழைப்பது முறை. ஈண்டு பகவானது கிருபை சுரப்பதற்கு இச்சொல் சான்றாகிறது.*

*இவ்வுலகம் நலத்தை அடிப்படையாகக் கொண்டதா அல்லது கேட்டை அடிப்படையாகக் கொண்டதா என்று யார்வேண்டுமானாலும் ஆராய்ந்து பார்க்கலாம். கடவுளே இவ்வுலகம் அனைத்தும் ஆனார். கடவுளே நலமுடையான்; கேடு இலான். நலத்தினின்று வருவது நலம். இவ்வுலகில் நன்மை செய்வோன் எவனும் கேடு அடைவதே யில்லையென்பது பகவானுடைய உறுதிமொழி. பாண்டவர் உட்பட எல்லா பக்தர்களது வாழ்க்கையே இக்கோட்பாட்டுக்குச் சான்றாகும். யோகத்தில் வழுவிய ஒருவன் தான் அதுபரியந்தம் அடைந்த நிலையைவிடக் கீழான நிலைக்கு எவ்வுலகிலும் போவதில்லை. அது எப்படியென்று பகவான் மேலும் விளக்குகிறார்.*

*ஒரு மனிதனுடைய எண்ணத்துக்கும் நோக்கத்துக்கும் தக்கபடி அவனுக்குச் சன்மானம் கிடைக்கிறது. ஈசுவரன் பக்தர்கள் விரும்புவனவற்றை யெல்லாம் கொடுக்கும் கற்பக விருக்ஷம் போன்றவன்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**प्राप्य पुण्यकृतां लोकानुषित्वा शाश्वतीः समाः ।
शुचीनां श्रीमतां गेहे योगभ्रष्टोऽभिजायते ॥ ४१**

ப்ராப்ய புண்யக்ருதாம் லோகானுஷித்வா சாச்வதீ: ஸமா: ।
சுசீனாம் ஸ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோऽபிஜாயதே ॥ 41

योगभ्रष्टः யோகப்ரஷ்ட: *யோகத்தினின்று வழுவியவன்* पुण्यकृतां புண்யக்ருதாம் *புண்ணியம் செய்தவர்களுடைய* लोकान् லோகான் *உலகங்களை* प्राप्य ப்ராப்ய *அடைந்து* शाश्वतीः சாச்வதீ: *நீடித்த* समाः ஸமா: *வருஷங்கள்* उषित्वा உஷித்வா *வசித்திருந்து* शुचीनां சுசீனும் *சதாசாரமுடையவர்களுடைய (நன்னெறியாளர்களுடைய)* श्रीमतां ஸ்ரீமதாம் *செல்வம் நிறைந்தவர்களுடைய* गेहे கேஹே *வீட்டில்* अभिजायते அபிஜாயதே *பிறக்கிறன்.*

***யோகப்பிரஷ்டன் புண்ணியம் செய்தவர் உலகங்களை யடைந்து, அங்கு நெடிது வாழ்ந்திருந்து, செல்வம் நிறைந்த புனிதவான் இல்லத்தில் பிறக்கிறுன். 41***

*போகமும் யோகமும் ஒன்றோடொன்று பொருந்தாது. போகத்தில் ஆசைகொண்டவன் யோகத்திலிருந்து தவறியவன் ஆகிறுன். தான் விரும்பின சுகபோகங்களை அவன் சுவர்க்கத்துக்குச் சென்று நெடுங்காலம் அனுபவிக்கிறுன். இப் பூலோகத்தில் பிறக்கும் பொழுதும் ஆக்கம் நிறைந்த வாழ்க்கைக்கு ஏற்ற செல்வர்கள் வீட்டில் பிறக்கிறுன். செல்வமுடையவர்களுள் தூயவாழ்க்கை வாழ்பவர் மிகச்சிலர். அத்தகைய நல்லொழுக்கமுடைய ஐசுவரியவான்கள் வீட்டிலேயே யோகப்பிரஷ்டன் பிறக்கிறுன். ஏனென்றுல் யோகியின் இயல்பு எப்பொழுதும் தூயதானது. ஒவ்வொரு ஜீவனும் அதனதன் தன்மைக்கும் வினைக்கும் ஏற்ற இடத்தில் பிறப்பெடுப்பது இயல்பு.*

*மற்றொரு பாங்குடைய யோகப்பிரஷ்டன் இருக்கிறுன். இனி அவன் வரலாறு விளக்கப்படுகிறது :—*

**अथवा योगिनामेव कुले भवति धीमताम् ।**
**एतद्धि दुर्लभतरं लोके जन्म यदीदृशम् ॥ ४२**

அதவா யோகினுமேவ குலே பவதி தீமதாம் ।
ஏதத்தி துர்லபதரம் லோகே ஜன்ம யதீத்ருசம் ॥ 42

अथवा அதவா *அல்லது* धीमतां தீமதாம் *ஞானிகளுடைய* योगिनां யோகினாம் *யோகிகளுடைய* कुले एव குலே ஏவ *குலத்திலேயே* भवति பவதி *பிறக்கிறான்* ईदृशं ஈத்ருசம் *இதுபோன்ற* जन्म ஜன்ம *ஜன்மம்* यत् யத் *எதுவோ* एतत् ஏதத் *இது* हि ஹி *நிச்சயமாக* लोके லோகே *உலகத்தில்* दुर्लभतरं துர்லபதரம் *பெறுதற்கரிது.*

***அல்லது அறிவாளர்களாகிய யோகிகள் குலத்திலேயே (யோகப்பிரஷ்டன்) பிறக்கிறான். இதுபோன்ற பிறவி இவ்வுலகில் பெறுதற்கரிது. 42***

*முற்பிறப்பில் யோகம் நிறைவேறப் பெறாத ஒருவன் அதை நிறைவேற்றிக் கொள்ளுதற்காகப் பொருள் உடையார் வீட்டில் பிறப்பதைவிட அருள் உடையார் வீட்டில் பிறப்பது சாலச்சிறந்தது. அதற்குக் காரணம் மேலும் விளக்கப்படுகிறது :—*

तत्र तं बुद्धिसंयोगं लभते पौर्वदेहिकम् ।
यतते च ततो भूयः संसिद्धौ कुरुनन्दन ॥ ४३

தத்ர தம் புத்திஸம்யோகம் லபதே பௌர்வதேஹிகம் ।
யததே ச ததோ பூய: ஸம்ஸித்தௌ குருநந்தன ॥ 43

कुरुनन्दन குருநந்தன *குருவம்சத்தில் பிறந்தவனே* तत्र தத்ர *அப்பிறப்பில்* पौर्वदेहिकं பௌர்வதேஹிகம் *பூர்வதேகத்தில் உண்டான* तं தம் *அந்த* बुद्धि संयोगं புத்தி ஸம்யோகம் *பர தத்துவத்தைப்பற்றிய அறிவோடு சேர்க்கையை* लभते லபதே *அடைகிறான்* च ச *மேலும்* ततः தத: *அதைக்காட்டிலும்* भूयः பூய: *அதிகமாக* संसिद्धौ ஸம்ஸித்தௌ *பரிபூரணத்தை அடைதற்பொருட்டு* यतते யததே *பிரயத்தனம் செய்கிறான்.*

***குருநந்தனா, இதில் முற்பிறப்பின் யோக சாதன அறிவைத் திரும்பவும் பெறுகிறான்; மோக்ஷத்தின் பொருட்டு மேலும் அதிகமாக அவன் முயலுகிறான். 43***

*பொருளானது மனிதனைப் போகத்தில் ஈடுபடுத்தி யோகத்தைத் தாற்காலிகமாக மறைத்து வைத்துவிடு*

கிறது. ஆசைகள் நிறைவேறியபின் யோகத்தைப்பற்றிய ஞாபகம் வருகிறது. அதைவிட மேலானது பிறந்தது முதல் தனியாக யோகத்திலே முயலுதல். முற்பிறப்பில் செய்த சாதனங்கள் சம்ஸ்காரமாக மனதில் புதைந்து மறைந்து கிடக்கின்றன. யோகிகள் குலத்தில் பிறந்து அவர்கள் செய்யும் சாதனங்களைப் பார்க்கும்போது பால யோகிக்குத் தன் பூர்வ ஜன்ம சாதனங்கள், பழைய பாடம் ஞாபகத்துக்கு வருவதுபோன்று மனதில் உதிக்கும். இடம், பொருள், ஏவல் இவைகளின் சகாயத்தால் முற்பிறப்பில் செய்த சாதனங்களைவிட இன்னும் தீவிரமாக அவன் இப் பிறப்பில் செய்கிறான். மீன் நீரை நாடுவது போன்று அவன் முக்தியை நாடுவது இயல்பா

சுவாமி விவேகானந்தரும் ஸ்ரீராமகிருஷ்ண பரம ஹம்ஸரும் யோகாரூடர்கள். பிறவியிலிருந்தே பரிபூரணத் தன்மை அவர்களிடம் பொலிந்து கொண்டிருந்தது. அவர் களுடைய வாழ்க்கையே வேதாந்தத்துக்கு விளக்கமாகும். சுவாமி விவேகானந்தர் செல்வம் நிறைந்த நல்லோர்க்குப் பிள்ளையாகப் பிறந்து பூவுலக சம்பத்துக்களில் வாழ்ந் திருந்து யோகத்துக்கு வருகிறார். ஸ்ரீ ராமகிருஷ்ண பரம ஹம்ஸரோ யோகியர் குலத்தில் பிறந்து மேலும் யோக சாதனத்தில் ஈடுபடுகிறார். கீதா சாஸ்திரப் பிரகாரம் இருவர் பிறப்புகளும் மேலானவை. ஆனால் சுவாமி விவேகானந்தர் பிறப்பைவிட ஸ்ரீராமகிருஷ்ணர் பிறப்பு பெறுதற்கு அரிதாம்.

**पूर्वाभ्यासेन तेनैव ह्रियते ह्यवशोऽपि सः ।**
**जिज्ञासुरपि योगस्य शब्दब्रह्मातिवर्तते ॥ ४४**

பூர்வாப்யாஸேன தேனைவ ஹ்ரியதே ஹ்யவசோऽபி ஸ: ।
ஜிக்ஞாஸுரபி யோகஸ்ய சப்தப்ரஹ்மாதிவர்த்ததே ॥ 44

स: ஸ: *அவன்* अवश: अपि அவச: அபி *முயற்சி செய்யாவிட்டாலும்* तेन தேன *அந்த* पूर्वाभ्यासेन एव பூர்வாப்யாஸேன ஏவ *பூர்வ*

*ஜன்ம அப்பியாசத்தாலேயே* ह्रियते ஹ்ரியதே *யோக சாதனத்தில் இழுக்கப்படுகிறான்* योगस्य யோகஸ்ய *யோகத்தின்* जिज्ञासुः अपि ஜிக்ஞாஸு: அபி *ஆராய்ச்சியாளன்கூட* शब्दब्रह्म சப்த ப்ரஹ்ம *வேதத்தை (வேதம் சொல்லும் கர்மபலனை)* अतिवर्तते அதிவர்த்ததே *கடந்தவனாகிறான்.*

***தன் முயற்சியின்றிப் பூர்வ ஜன்ம அப்பியாச வேகத்தால் அவன் யோக சாதனத்தில் இழுக்கப்படுகிறான். வெறும் யோக ஆராய்ச்சியாளன்கூட வேதத்தைக்கடப்பவன் ஆகிறான்.*** ***44***

*திரள் திரளாக ஜனங்கள் தேவாலயத்துக்குள் நுழையும்போது அக்கூட்டத்தில் கலந்துகொள்பவன் சுயப் பிரயத்தனமின்றி ஆலயத்துக்குள் இழுத்துச் செல்லப் படுவான். அங்ஙனம் முற்பிறப்பில் செய்த யோகாப்பியாசம் வலிவுடைய சம்ஸ்காரங்களாக மனதில் புதைந்திருந்து இப்பிறப்பில் யோகப்பிரஷ்டனைப் பரிபூரண நிலையின்கண் இழுத்துச் செல்கிறது. புதிதாகச் செய்த அதர்மம் சிறிதுகாலத்துக்கு அவனது சாதனத்தைத் தடைப்படுத்தினும், அதர்மத்தின் வலிவு குறைந்தவுடன் யோக சாதன சம்ஸ்காரம் அவனைச் சமாதி நிலைக்குக்கொண்டு சேர்க்கும்.*

*இரண்டு போர் வீரர்கள் எதிரியின் கையில அகப்பட்டுக்கொண்டார்கள். அவர்களில் ஒருவன் தன் தாய் நாட்டை மறந்துவிட்டு அடிமையாய் எதிரிகளுக்குக் குற்றேவல் செய்வதிலேயே கண்ணுங் கருத்துமாயிருக்கிறான். மற்றவன் எதிரிகளைவிட்டுத்தப்பித்துக்கொண்டு தன்தேசம் போவது எப்படி என்று எண்ணிப் பார்க்கிறான். அங்ஙனம் எண்ணுபவன் அடிமையைவிட மேலானவன். இனி முயற்சி பண்ணுபவன் அவனிலும் மேலானவன். வேதம் ஓதுபவர், வேதம் புகட்டுகிற கர்மகாண்டத்தில் ஈடுபடுபவர் முக்குணமயமான இயற்கைக்கு அடிமைகளாய் முடிவில்லாத பிறவிப் பிணியில் வருந்துவர். அவர்களைவிட மேலோர் யோக ஜிக்ஞாசு அல்லது யோக ஆராய்ச்சி செய்*

பவர். ஏனென்றால் இவர்களுக்கு விரைவில் விமோசனம் கிடைக்கும். யோகத்தில் பன்முறை முயன்று தவறிப் போன யோகப்பிரஷ்டர்கள் யோக ஜிக்ஞாசுகளிலும் மேலோர். ஏனென்றால் முயற்சியுடைய இவர்கள் இன்னும் விரைவில் யோகாரூடர்கள் அல்லது முக்தர்கள் ஆய் விடுவார்கள்.

கர்மகாண்டத்தில் உழல்பவனைவிட யோகசாதனம் செய்பவனது வாழ்க்கை எவ்விதத்தில் சிறந்தது? விடை வருகிறது:—

प्रयत्नाद्यतमानस्तु योगी संशुद्धकिल्बिषः ।
अनेकजन्मसंसिद्धस्ततो याति परां गतिम् ॥ ४५

ப்ரயத்நாத்யதமானஸ்து யோகீ ஸம்சுத்தகில்பிஷ: ।
அனேகஜன்மஸம்ஸித்தஸ்ததோ யாதி பராம் கதிம் ॥ 45

तु து ஆனால் प्रयत्नात् ப்ரயத்நாத் *பிரயத்தனத்தோடு* यतमानः யதமான: *முயற்சி செய்கிற* योगी யோகீ *யோகியானவன்* संशुद्धकिल्बिषः ஸம்சுத்த கில்பிஷ: *பாபங்களினின்று பரிசுத்தப்படுத்தப்பட்டவனாய்* अनेक जन्म संसिद्धः அனேக ஜன்ம ஸம்ஸித்த: *அனேக ஜன்மங்களில் பரிபக்குவத்தை அடைந்தவனாய்* ततः தத: *அதன் பிறகு* परां गतिं பராம் கதிம் *மோக்ஷத்தை* याति யாதி *அடைகிறான்.*

**பெரும் முயற்சியுடைய யோகி பாபங்களற்றுப் புனிதவானாய், பல பிறவிகளில் பக்குவமடைந்து, பரகதியைப் பெறுகிறான். 45**

கல்வியும் செல்வமும் இரண்டொரு நாளில் சேகரிக்கப்படுபவைகளல்ல. அவைகளின் பொருட்டு இடையறா முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். கல்வி கற்கும் பொழுதே ஒருவன் கற்றவனாகக் கருதப்படுகிறான். செல்வம் சேர்ந்துகொண்டிருக்கும்போதும் ஒருவன் தனவான் எனப் படுகிறான். யோகம் தருகிற மோக்ஷமோ ஒப்பற்றது; நித்தியமானது. இனி அதன் பொருட்டு அனேக ஜன்மங்களில் முயலவேண்டும் என்றால் அதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

அங்ஙனம் முயலுகிற மனிதன் யோகி எனப்படுகிறான். இப்படி யோகி தன்னை நெடிது பண்படுத்தி முக்தியடை

*புதிதாகப் பிறந்த கன்றுக்குட்டி நிற்கக் கற்றுக்கொள்ளுவதற்கு முன்னால், தட்டித் தள்ளாடிப் பல தடவை கீழே விழுகின்றது. அது போல ஸாதனமார்க்கத்தில் கடைசியாக ஜயம்பெறுவதற்கு முன்னால் அனேகம் தவறுகள் அடிக்கடி நேரிடும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*அப்படியானால் பெருநிலை யடைதற்கு யோகத்தைப் புறக்கணித்துவிட்டு வேறு ஏதாவது உபாயத்தைக் கையாள லாகாதா? விடை வருகிறது :—*

**तपस्विभ्योऽधिको योगी ज्ञानिभ्योऽपि मतोऽधिकः ।**
**कर्मिभ्यश्चाधिको योगी तस्माद्योगी भवार्जुन ॥ ४६**

தபஸ்விப்யோऽதிகோ யோகீ ஞானிப்யோऽபி மதோऽதிக: ।
கர்மிப்யஸ்சாதிகோ யோகீ தஸ்மாத்யோகீ பவார்ஜுன ॥ 46

योगी யோகீ *யோகியானவன்* तपस्विभ्यः தபஸ்விப்ய: *தவசிகளைக்காட்டிலும்* अधिकः அதிக: *மேலானவன்* ज्ञानिभ्यः अपि ஞானிப்ய: அபி *கல்விஞானமுடையவர்களைக்காட்டிலும்* अधिकः அதிக: *மேலானவன்* कर्मिभ्यः च கர்மிப்ய: ச *காமிய கர்மம் செய்பவர்களைக்காட்டிலும்* योगी யோகீ *யோகியானவன்* अधिकः मतः அதிக: மத: *மேலானவனாக எண்ணப்படுகிறான்* तस्मात् தஸ்மாத் *ஆகையினால்* अर्जुन அர்ஜுன *அர்ஜுனா* योगी भव யோகீ பவ *யோகியாவாயாக.*

***தவசிகளைவிட யோகி மேலானவன்; கல்வி ஞானமுடையவர்களைவிட மேலானவனாக அவன் கருதப்படுகிறான். கர்மிகளையும்விட அவன் சிறந்தவன். ஆகையால் அர்ஜுனா, யோகியாவாயாக. 46***

*வெறும் சாஸ்திர ஞானம் உடைத்திருப்பவனைவிட அதில் பகர்ந்துள்ளபடி யோகம் பயிலுவதனால் யோகி சிறந்தவனாகிறான். காமிய தபசு, காமிய கருமம் இவைகளை நெடுநாளாக வருந்திச் செய்து, இம்மையிலும் மறுமையிலும் மாந்தர் சுகபோகம் பெற முயலுகின்றார்கள். சாந்தி*

ராயணம் முதலிய தபசு புரிகின்றவர்களும், அக்னிஹோத்திரம் முதலிய கர்மம் செய்கிறவர்களும் அதற்குச் சான்ருவார்கள். அவர்கள் அப்படி வருந்தியடையும் சுவர்க்க பதவியும் பூலோக பதவியும் யோகப்பிரஷ்டனுக்குத் தற்செயலாய் வந்தமைகின்றன. அதற்குக் காரணமுண்டு. நிராசையில் நிலைத்திருப்பவன் யோகி. ஆசையில்லாத மனதுக்குப் பேராற்றல் தானே உண்டாகிறது. பேராற்றல் படைத்துவரும் அவனுக்கு இன்னும் பரிபூரணம் அடையுமுன்பு ஆசை இடையில் தோன்றுமாகில் அவன் யோகப்பிரஷ்டன் ஆய்விடுகிருன். சுத்தியடைந்த அவனது சித்தத்தில் உதிக்கும் இச்சை உடனே நிறைவேறப் பெறுகிறது. யோக சாதனத்தால் மனது எவ்வளவுக்கெவ்வளவு தூயதாகிறதோ அவ்வளவுக்கவ்வளவு ...ல் உதிக்கும் ஆசையானது விரைவில் நிறைவேறி... இது வாழ்க்கை சம்பந்தமான ஒரு பேருண்மையாகும். ஆகையால்தான் புண்ணிய கர்மம் செய்பவர்கள் அடையும் லோகமாகிய சுவர்க்கமும் பூலோகத்தில் பெருவாழ்வும் யோகிக்கு விளையாட்டாக வந்தமைகின்றன. யோகாரூடனுக்கு ஒப்பற்ற பிரம்மஞானம் உண்டாகிறது. யோகப்பிரஷ்டனுக்கோ இகபரமிரண்டிலும் பெரும் பதவியும் போகமும் எளிதில் கிட்டுகின்றன.

ராஜகுமாரன் ஒருவன் அரசனுகாவிட்டாலும் மற்ற உத்தியோகத்தை நாடுபவர்களையெல்லாம்விடமேலானவன். அதேபாங்கில் யோகப்பிரஷ்டனுக்கு இம்மையிலும் மறுமையிலும் பெரும்பேறு கிட்டுகிறது.

ஆக, யோகத்தில் முயலுதல் ஒன்றே வாழ்க்கையின் பெரு லட்சியமாகிறது.

சாஸ்திர ஞானத்தால் மட்டும் என்ன பயன்? பண்டிதர்களுக்கு கிரந்தங்களிலும் சுலோகங்களிலும் நல்ல பரிச்சயமிருக்கலாம். ஆனல் அவைகளைத் திருப்பித் திருப்பிச் சொல்வதில் பிரயோஜனமென்ன? கிரந்தங்களில் சொல்லியவற்றையெல்லாம் அனுபவத்துக்குக்கொண்டுவரவேண்டும். ஒருவனுக்கு உலகப்பற்றுள்ள வரையில்,

அதாவது காமமும் காசாசையும் இருக்கும் வரையில், கேவலம் படிப்பு மட்டும் ஞானத்தையாவது மோக்ஷத்தையாவது தராது.

லௌகிகன் ஒருவன் ஒரு ஞானியைப்போலவே மேலான அறிவையும் புத்திவன்மையையும் பெற்றிருக்கலாம். அவன் ஒரு யோகியைப்போல மிகவும் பரிசிரமப்படலாம்; அல்லது சந்நியாசியைப் போல அதிகத் தியாகம் செய்யக்கூடியவனுயும் இருக்கலாம். என்ருலும் அவனுடைய முயற்சிகளெல்லாம் பயனற்றவையே. ஏனெனில் அவனுடைய சக்திகள் வேறு மார்க்கத்தில் செலுத்தப்படுகின்றன. மேற்கூறியவைகளையெல்லாம் அவன் ஈசுவரனுக்காக அல்லாமல், கௌரவம், அந்தஸ்து, செல்வம் இவைகளைப் பெறுவதற்காகவே செய்கிருன்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

இனி யோகிகளுள் சிறந்தவன் யார் எனின் அதற்கு விடை வருகிறது :—

**योगिनामपि सर्वेषां मद्गतेनान्तरात्मना ।**
**श्रद्धावान्भजते यो मां स मे युक्ततमो मतः ॥ ४७**

யோகினுமபி ஸர்வேஷாம் மத்கதேனுந்தராத்மஞ ।
ச்ரத்தாவான்பஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத: ॥ 47

य: ய: *யார்* श्रद्धावान् ச்ரத்தாவான் *சிரத்தையுள்ளவனுய்* मद्गतेन மத்கதேன *என்னிடம் செலுத்தப்பட்ட* अन्तरात्मना அந்தராத்மஞ *அந்தக்கரணத்தோடு* मां மாம் *என்னை* भजते பஜதே *பஜிக்கிறனே* स: ஸ: *அவன்* सर्वेषां योगिनाम् अपि ஸர்வேஷாம் யோகினும் அபி *எல்லா யோகிகளுக்கிடையிலும்* युक्ततम: யுக்ததம: *மேலானவன் என* मे மே *என்னுல்* मत: மத: *கருதப்படுகிறன்.*

***யார் சிரத்தையுடன் சித்தத்தை என்பால் வைத்து என்னைப் பஜிக்கிருனே, அவன் யோகிகள் எல்லாருள்ளும் மிக மேலானவன் என்பது என் கருத்து.*** ***47***

*தியான யோகிகள் எல்லோரும் மேலோரே. அவர்கள் எதைத் தியானிக்கிருர்களோ அதுவாகிருர்கள். சுத்தியடைந்து ஒருமுகப்பட்ட மனது தியானிக்கப்பட்ட லட்சியத்தை விரைவில் எடுக்கிறது. கீழான லட்சியங்களைத்*

தியானிக்கின்ற யோகிகளைவிட மனதை முற்றும் சர்வேசுவரன்பால் செலுத்தி அவனையே சிரத்தையுடன் தியானிக்கின்ற யோகிகள் மிக மேலானவர்கள். ஏனென்றால் அத்தகைய தியானத்தால் அவர்கள் சர்வேசுவரனையே அடைகிறார்கள். அதற்குமேல் அவர்களால் அடையப்படுவது

நித்தியமாயுள்ள ஞானத்தையும் ஆனந்தத்தையும் பற்றித்தியானம் செய்; அப்போது உனக்கு ஆனந்தம் உண்டாகும். ஆனந்தமோ எப்பொழுதும் சாசுவதமானது; ஆனால் அக்ஞானத்தினால் அது மூடுபட்டு மறைந்துள்ளது. விஷய சுகங்களில் உனது ஆசை குறையுமளவு ஈசுவரனிடம் உனக்குப் பிரேமை அதிகமாகும்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

இதுவரையில் ஆறு அத்தியாயங்களில் ஜீவதத்துவம் விளக்கப்பெற்றது. ஜீவன் எவ்வளவு மேலோன் ஆகக் கூடும் என்பதும் காட்டப்பட்டது. மேன்மையுற்ற ஜீவன் பரமாத்மாவிடம் பக்தி பண்ணுதற்கு நிகரான செயல் வேறொன்றுமில்லை. இனி வரும் ஆறு அத்தியாயங்களில் பரமாத்ம சொரூபம் விளக்கப்பெறுகிறது. பக்தியும் படிப்படியாக வளர்க்கப்படுகிறது. ஆறாவது அத்தியாயத்தின் கடைசி சுலோகமாகிய இது கடந்த ஆறு அத்தியாயங்களில் உள்ள விஷயத்துக்கும் வரப்போகும் ஆறு அத்தியாயங்களில் உள்ள விஷயத்துக்கும் இணைப்பை உண்டுபண்ணுகிறது. இளைஞன் வாலிபன் ஆவது போன்று ஒரு யோகம் மற்றொன்றாகப் பரிணமிப்பதும் இதில் அடங்கியுள்ளது. கர்மயோகம் தியானயோகமாக வடிவெடுத்தது. இனி அது பக்தியோகமாக மாறப்போகிறது.

**इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे ध्यानयोगो नाम षष्ठोऽध्यायः ॥**

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம் யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே த்யானயோகோ நாம ஷஷ்டோऽத்யாய: ॥

# सप्तमोऽध्यायः

## ஏழாம் அத்தியாயம்

## ज्ञानविज्ञानयोगः

### ஞானவிக்ஞான யோகம்

**श्री भगवानुवाच**

**मय्यासक्तमनाः पार्थ योगं युञ्जन्मदाश्रयः ।**
**असंशयं समग्रं मां यथा ज्ञास्यसि तच्छृणु ॥ १**

ஸ்ரீ பகவானுவாச

மய்யாஸக்தமனாः பார்த்த யோகம் யுஞ்ஜன்மதாச்ரயः ।
அஸம்சயம் ஸமக்ரம் மாம் யதா ஞாஸ்யஸி தச்ச்ருணு ॥ 1

**श्री भगवान् उवाच** ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

**पार्थ** பார்த்த *பார்த்தா* **मयि आसक्तमनाः** மயி ஆஸக்தமனாः *என்பால் இசைந்த மனத்தினனாய்* **मद् आश्रयः** மத் ஆச்ரயः *என்னை அடைக்கலமாய்ப்பற்றினவனாய்* **योगं युञ्जन्** யோகம் யுஞ்ஜன் *யோகம் பயின்று* **मां समग्रं** மாம் ஸமக்ரம் *என்னை முற்றும்* **असंशयं** அஸம்சயம் *சம்சயமில்லாது* **यथा ज्ञास्यसि** யதா ஞாஸ்யஸி *எப்படி அறிவாயோ* **तत् शृणु** தத் ச்ருணு *அதைக்கேள்.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***பார்த்தா, என்பால் இசைந்த மனத்தினனாய், என்னிடத்து அடைக்கலம் புகுந்தவனாய், ஐயமற என்னை முற்றும் அறிவது எங்ஙனமென்று சொல்லக்கேளாய்.*** 1

**மத்ஆச்ரய:** *என்பது கர்மபலன், கீர்த்தி முதலியவைகளில் பற்றுவைக்காது இறைவனையே நாடியிருத்தல் எனப் பொருள்படுகிறது.*

**ஸமக்ரம்** *என்றால் விபூதி, பலம், சக்தி, ஐசுவரியம் ஆகிய குண சம்பன்னனுயிருக்கிற ஈசுவரன் என்பதாகிறது.*

*ஒரு அரசாங்கத்தின் அமைப்பு முழுவதையும் தெரிந்துகொள்ளுகிற அளவு நாம் அதைப் பாராட்டு கிறோம். அங்ஙனம் நம் அறிவுக்கு எட்டுகிற அளவு இறைவனை நாம் தெரிந்துகொண்டால் அவன்பால் பக்தி நமக்கு அதிகரிக்கிறது.*

**ज्ञानं तेऽहं सविज्ञानमिदं वक्ष्याम्यशेषतः ।**
**यज्ज्ञात्वा नेह भूयोऽन्यज्ज्ञातव्यमवशिष्यते ॥ २**

ஞானம் தேऽஹம் ஸவிக்ஞானமிதம் வக்ஷ்யாம்யசேஷத: ।
யஜ்ஞாத்வா நேஹ பூயோऽந்யஜ்ஞாதவ்யமவசிஷ்யதே ॥ 2

अहं அஹம் *நான்* ते தே *உனக்கு* सविज्ञानं ஸவிக்ஞானம் *விக்ஞானத்தோடுகூடிய* इदं ज्ञानं இதம் ஞானம் *இந்த ஞானத்தை* अशेषतः அசேஷத: *மிச்சமில்லாமல்* वक्ष्यामि வக்ஷ்யாமி *சொல்லுகிறேன்* यत् யத் *எதை (இதை)* ज्ञात्वा ஞாத்வா *அறிந்து* इह இஹ *இங்கு* भूयः பூய: *மேலும்* अन्यत् ज्ञातव्यं அன்யத் ஞாதவ்யம் *அறிய வேண்டிய வேறு எதும்* न अवशिष्यते ந அவசிஷ்யதே *பாக்கியில்லை.*

***விக்ஞானத்தோடு கூடிய இந்த ஞானத்தை மிச்சமில்லாமல் நான் உனக்குச் சொல்லுகிறேன். இதை அறிந்தபின் மேலும் நீ அறியவேண்டியது எதுவும் பாக்கியில்லை.*** 2

**ஞானம்** *என்பது சிந்தனைக்குரிய அறிவு;* **விக்ஞான**மோ *அநுஷ்டானத்துக்கு உரிய அறிவு. ஞானம் விக்ஞானமாக மாறவேண்டும். சுவானுபவத்தில் பிரம்ம சாக்ஷாத்காரம் பண்ணினவனுக்கு, அதாவது ... யைப் பெற்றவனுக்கு வாழ்க்கையின் ... த்துவம் முழுதும் விளங்கி விடுகிறது. அவன் மேலும் க... க்கொள்ளவேண்டியது ஒன்றுமில்லை.*

**मनुष्याणां सहस्रेषु कश्चिद्यतति ।**
**यततामपि सिद्धानां कश्चिन्मां वे**

மனுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஸ்சித்யததி ஸித்தயே ।
யததாமபி ஸித்தானாம் கஸ்சின்மாம் வேத்தி தத்வத: ॥ 3

मनुष्याणां மனுஷ்யாணாம் *மனிதர்களுடைய* सहस्रेषु ஸஹஸ்ரேஷு *ஆயிரக்கணக்கானவர்களுள்* कश्चित् கஸ்சித் *யாரோ ஒருவன்* सिद्धये ஸித்தயே *மனபரிபாகத்தின் பொருட்டு* यतति யததி *முயலுகிறான்* यततां सिद्धानां अपि யததாம் ஸித்தானாம் அபி *முயலுகின்ற நல்லியல்புடையார்களுள்ளேயும்* कश्चित् கஸ்சித் *யாரோ ஒருவன்* मां तत्त्वत: वेत्ति மாம் தத்வத: வேத்தி *என்னை உள்ளபடி அறிகிறான்.*

***ஆயிரக்கணக்கான மனிதர்களுள் யாரோ ஒருவன் மனநிறைவின்பொருட்டு முயலுகிறான். முயலுகின்ற பெருவாய்ப்புள்ளோர்களுள்ளும் யாரோ ஒருவன் என்னை உள்ளபடி அறிகிறான். 3***

*सिद्धि சித்தி என்னும் பதம் பேறு அடைதல், வெற்றி, இலக்கையடித்தல், நோயைப் போக்குதல், நிலைநாட்டுதல், சித்தாந்தப்படுத்துதல், அன்னம் முதலியன சமைத்தல், முதிர்தல், தகுதியுடையதாக்குதல், பேரின்பம், பரிபாகம், முக்தி, மனதின் அஷ்டசித்தி அல்லது எட்டுவித வலிவுகள் ஆக இத்தனை விதங்களாகப் பொருள்படுகிறது. இங்கு இச்சொல் நல்வினையின் காரியமாக, ஞானத்துக்காக மனது அடையும் பரிபாகத்தைக் குறிக்கிறது.*

*ஞானத்தைப் பெறுதல் மிக அரிது என்பது இதன் கருத்து. மரம் ஒன்றில் ஆயிரக்கணக்கான விதைகள் உண்டா அவைகளில் பெரும்பகுதி வேறு உயிர்களுக்கு உணவுப் பொருள்களாய்ப் போய்விடுகின்றன. விதைக்கப்பட்டவைகளுள் தரிசு நிலத்திலோ, பாறையிலோ வீழ்ந்தவைகள் சரியாக முளைத்து வளர்வதில்லை. நல்ல விருக்ஷமாவது ஒன்றிரண்டே. பெறுதற்கரிய மானுடப் பிறவி ஈசுவர லாபத்துக்கென்று அமைந்தது ஆயினும், அதுதான் வாழ்க்கையின் குறிக்கோள் என்று அறிந்துகொள்பவரோ மிகச் சிலர். பின்பு அனுகூலமான சூழ்நிலை, முறையான முயற்சி ஆகியவைகள் வாயிலாகக் கடைத்தேறுவாரைக்*

*காண்பது அரிதிலும் அரிது. லட்சியம் எவ்வளவுக்கெவ்வளவு பெரியதோ அதை அடைதல் அவ்வளவுக்கவ்வளவு துர்லபம்.*

*காசியில் மாதா அன்னபூரணியின் கோயிலுக்குள் நுழைந்தவர்கள் பிரசாதம் பெருது வெளியில் வரமுடியாது. சிலருக்கு உடனே பிரசாதம் கிடைக்கிறது. சிலர் காத்திருந்து பெறுகின்றனர். நெடுநேரம் காத்திருந்து பெறுபவர்களும் உண்டு. ஆனால் யாருக்காவது பிரசாதம் இல்லை என்பது கிடையாது. அங்ஙனம் பிறப்பெடுப்பவர்கள் எல்லார்க்கும் முக்தியுண்டு. சிலர் இப்பிறப்பிலேயே முக்தியடைகின்றனர். சிலர் இன்னும் இரண்டு மூன்று பிறவிகளில் முக்தியடைகின்றனர். வேறு சிலர் கணக்கற்ற பிறவிகள் எடுத்த பின்பு முக்திக்குரியவர் ஆகின்றனர். ஆனால் எல்லார்க்கும் முன்னது பின்னது ஆக முக்தியுண்டு.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஈசனை உள்ளபடி அறிதற்கு அவனுடைய ஸ்தூல சொரூபத்தை முதலில் அறிய முயலுதல் நன்று. அதைப் பற்றிய விளக்கம் வருகிறது :—*

**भूमिरापोऽनलो वायुः खं मनो बुद्धिरेव च ।**
**अहङ्कार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा ॥ ४**

பூமிராபோऽனலோ வாயு: கம் மனோ புத்திரேவ ச ।
அஹங்கார இதீயம் மே பின்னா ப்ரக்ருதிரஷ்டதா ॥ 4

**भूमिः** பூமி: *மண்* **आपः** ஆப: *நீர்* **अनलः** அனல: *தீ* **वायुः** வாயு: *காற்று* **खं** கம் *வானம்* **मनः** மன: *மனம்* **बुद्धिः** புத்தி: *புத்தி* **अहंकारः च** அஹங்கார: ச *அகங்காரமும்* **इति** இதி *இப்படி* **इयं** இயம் *இந்த* **मे** மே *என்னுடைய* **प्रकृतिः** ப்ரக்ருதி: *பிரகிருதி* **अष्टधा** அஷ்டதா *எட்டு விதமாக* **भिन्ना** பின்னா *பின்னப்பட்டிருக்கிறது.*

***மண், நீர், தீ, காற்று, வானம், மனம், புத்தி, அஹங்காரம் இப்படி எட்டுவிதமாக என் பிரகிருதி பிரிவுபட்டிருக்கிறது.*** 4

*மூல வஸ்துக்களைப் பாகுபடுத்துதலில் நவீன ரசாயன சாஸ்திரத்துக்கும் இந்திய தத்துவ தர்சனத்துக்கும் ஒரு வேற்றுமையுண்டு. ரசாயன சாஸ்திரப் பிரகாரம் எப்*

பொருளை அதனினும் வேறான ஒரு பொருளாகப் பிரிக்கமுடியாதோ அது மூலவஸ்து (Element). நீர் மூலவஸ்து அன்று; அது ஒரு கூட்டுப்பொருளாய் இருக்கிறது. ஜல வாயுவும் பிராணவாயுவும் சேர்ந்து நீர் ஆகிறது. ஆனால் ஜலவாயு ஒரு முதற்பொருள்; பிராணவாயுவும் ஒரு முதற் பொருள் அல்லது மூலவஸ்து. வேறு எதினின்றும் இவை கள் ஆனவைகள் அல்ல. அப்படி நொண்ணூறுக்குக் குறையாமல் மூலவஸ்துக்கள் இருக்கின்றன. அவைகளின் கூட்டாக உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களும் ஆயிருக்கின்றன. ரசாயன சாஸ்திரப்படி மண் – கூட்டுப் பொருள்; நீர் – கூட்டுப்பொருள்; தீ — பொருள் அல்ல ஆனால் சக்தி (not matter but energy) காற்று — கூட்டுப் பொருள்; வானம்—எங்கும் எதிலும் வியாபித்து உள்ள மூலவஸ்து – (Ether).

இந்திய தத்துவ தர்சனத்தின்படி பொறி ஐந்தின்வாயி லாக உலகம் பொருள் படுத்தப்படுகிறது. பஞ்சேந்திரியங் களாலன்றி ஜகத் புலனாகாது.

சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்(று) ஐந்தின்
வகை தெரிவான் கட்டே உலகு

காது கேட்கிறது. ஓசைக்கு ஏதுவாயிருப்பது ஆகாசம் (வானம்). தேகம் ஸ்பர்சிக்கிறது. ஊறுதற்கு ஏதுவா யிருப்பது வாயு (காற்று). கண் வடிவத்தைப் பார்க்கிறது. ஒளிக்கு ஏதுவாயிருப்பது அக்னி (தீ அல்லது தேஜஸ்). நா சுவைக்கிறது. சுவை அல்லது ரஸத்துக்கு மூல காரணம் அப்பு (நீர்). மூக்கு நாற்றத்தை முகர்கிறது. கந்தத்துக்குக் காரணம் பிருத்வி (மண்). ஆக, உலகாக அறிதற்கு மூல வஸ்துக்கள் (Elements) பூதங்கள் ஐந்தாம்.

இவ்வைந்து பூதங்களும் சூக்ஷ்மம், ஸ்தூலம் என்று இரண்டு நிலைகளில் இருக்கின்றன. சூக்ஷ்ம பூதங்கள் ஸ்தூல பூதங்களாக வடிவெடுப்பதற்கு ஒரு கணக்குக் கிரமம் இருக் கிறது.

ஆகாசம் வாயு

$\frac{1}{2}+\frac{1}{8}+\frac{1}{8}+\frac{1}{8}+\frac{1}{8}$ ; $\frac{1}{2}+\frac{1}{8}+\frac{1}{8}+\frac{1}{8}+\frac{1}{8}$ ; $\frac{1}{2}+\frac{1}{8}+\frac{1}{8}+\frac{1}{8}+\frac{1}{8}$ ;

அப்பு பிருத்வி

$\frac{1}{2}+\frac{1}{8}+\frac{1}{8}+\frac{1}{8}+\frac{1}{8}$ ; $\frac{1}{2}+\frac{1}{8}+\frac{1}{8}+\frac{1}{8}+\frac{1}{8}$

சூக்ஷ்ம பூதம் 'வான்றும் இரண்டு சமபாகங்களாகப் பாதி தன்னுடைய ஸ்தூல அமைப்புக்கு மற்ற பாதி நான்கு அரைக்கால் ஆகி, ஏனைய நான்கு பூதங்களுக்குச் சமனாகப் பங்கிட்டுக் கொடுக்கப்படுகிறது.

ஸ்தூல ஆகாசம் 1 = $\frac{1}{2}$ சூக்ஷ்ம ஆகாசம்
$\frac{1}{8}$ வாயு
$\frac{1}{8}$ அக்னி
$\frac{1}{8}$ அப்பு
$\frac{1}{8}$ பிருத்வி

இங்ஙனம் சூக்ஷ்ம பூதங்கள் ஐந்தும் ஸ்தூல பூதங்களாக மாறுதற்குப் பஞ்சீகரணம் என்று பெயர்.

உணரும் தன்மை மனதுக்குண்டு. நல்லது கெட்டது என்று புத்தி பாகுபடுத்துகிறது. தன்னைக் கர்த்தாவென்று கருதுவது அஹங்காரம். அஹங்காரம் இல்லாது கர்மம் ஒன்றும் நடைபெறாது. மண்ணுக்குள் மண்ணோடு மண்ணாக விதையானது புதைந்து கிடப்பதுபோன்று வாசனாசொரூபமாக அஹங்காரம் முதலிய அந்தக்கரணங்கள் மூலபிரகிருதியில் புதைந்திருக்கின்றன. தக்க வேளையில் எண்ணமாகவும் செயலாகவும் வடிவெடுக்க வல்ல இயல்புக்கு வாசனையென்று பெயர். இந்த எட்டுவித பிரகிருதியையே இருபத்திநான்கு தத்துவங்களாக விரித்துச் சொல்வது வழக்கத்தில் உண்டு.

**अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम् ।**
**जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत् ॥ ५**

அபரேயமிதஸ்த்வன்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம் ।
ஜீவபூதாம் மஹாபாஹோ யயேதம் தார்யதே ஜகத் ॥ 5

तु து *ஆனால்* इयं இயம் *இது* अपरा அபரா *கீழான பிரகிருதி* इतः இத: *இதினின்று* अन्यां அன்யாம் *வேறானதும்* जीवभूतां ஜீவபூதாம் *உயிர் ஆவதுமாகிய* मे परां प्रकृतिं மே பராம் ப்ரக்ருதிம் *என்னுடைய மேலான பிரகிருதியை* विद्धि வித்தி *அறிவாயாக* महाबाहो மஹாபாஹோ *தோள்வலியோய்* इदं जगत् இதம் ஜகத் *இந்த ஜகத்தானது* यया யயா *இதனால்* धार्यते தார்யதே *தாங்கப்படுகிறது.*

***இதுவோ என்னுடைய கீழான பிரகிருதி. இதினின்று வேறானதும், உயிர் ஆவதும் ஆகிய என்னுடைய மேலான பிரகிருதியை அறிவாயாக. தோள்வலியோய், இந்த ஜகத்தானது இதனால் தாங்கப்படுகிறது.*** **5**

*பஞ்ச பூதங்களும் அந்தக்கரணங்களும் சேர்ந்து ஆயிருப்பது கீழான பிரகிருதி. ஜீவபோதம் பெற்றிருப்பது மேலான பிரகிருதி. ஓர் உபமானத்தைக்கொண்டு இதை அறியலாம். தீ எரிகிறது. அதிலிருந்து புகை வருகிறது. அது தீயின் கீழானபிரகிருதி. பொறி பறக்கிறது. பொறியோ தீயின் மேலாம் பிரகிருதி. தீயின் சொரூபம் பொறியில் இருக்கிறது. தீயின் செயல் புகையில் தோன்றுகிறது. புகையானது தீயினுடைய தடஸ்தலக்ஷணம். பொறி அதனுடைய சொரூப லக்ஷணம். பொறியை அறிவது தீயை அறிவதற்குச் சமானம். சுத்த சைதன்யமாகிய பரமாத்மாவின் இயல்பு சித் ஆபாசனாகிய ஜீவனிடத்து ஏகதேசம் இருக்கிறது. இனித் தீப்பொறியானது தீயை விட்டுச் சற்றுப் பிரிந்திருக்கிறது. ஜீவனோ பரமாத்மாவை விட்டுப் பிரியவில்லை. கடலில் அலைபோன்று பரமாத்மாவி லேயே அது ஓர் உபாதியுடன் கூடியிருக்கிறது.*

*ஜீவபிரகிருதி அல்லது க்ஷேத்ரக்ஞன் ஜடப்பிரகிருதியைத் தனது உடலாக அமைத்துக்கொண்டு அதைத் தாங்கியுள்ளது. ஆகாசம் என்ற பூதம் எப்படி மற்ற நான்கு பூதங்களுக்கும் ஆதாரமாக இருக்கிறதோ அங்ஙனம் ஜீவ ஆத்ம சைதன்யம் ஜடப் பிரகிருதிக்கு இருப்பிடமாயிருக்கிறது.*

एतद्योनीनि भूतानि सर्वाणीत्युपधारय ।
अहं कृत्स्नस्य जगतः प्रभवः प्रलयस्तथा ॥ ६

ஏதத்யோனீனி பூதானி ஸர்வாணீத்யுபதாரய ।
அஹம் க்ருத்ஸ்னஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரலயஸ்ததா ॥ 6

सर्वाणि भूतानि ஸர்வாணி பூதானி *எல்லா உயிர்களும்* एतद्योनीनि ஏதத்யோனீனி *இந்த இரண்டு பிரகிருதிகளைப் பிறப்பிடமாகக் கொண்டவைகள்* इति उपधारय இதி உபதாரய *என்று அறிந்துகொள்* अहं அஹம் *நான்* कृत्स्नस्य जगतः க்ருத்ஸ்னஸ்ய ஜகத: *ஜகத் முழுவதினுடைய* प्रभवः ப்ரபவ: *தோற்றத்துக்குக் காரணம்* तथा ததா *அப்படியே* प्रलयः ப்ரலய: *ஒடுக்கத்துக்குக் காரணம்.*

***உயிரனைத்தும் இவ்விரண்டு பிரகிருதிகளினின்று உண்டானவை என்று அறிவாயாக. நான் ஜகத்து முழுதினுடைய தோற்றத்துக்கும் ஒடுக்கத்துக்கும் காரணம்.*** **6**

*உடலும் உயிரும் சேர்ந்து வாழ்வாகப் பரிணமிக்கிறது. உயிரற்ற உடல் பிரேதமாய்விடும். உடலற்ற உயிர் செயல் புரியச் சக்தியற்றதாய்விடும். உயிரும் மெய்யும் (க்ஷேத்ரக்ஞனும் க்ஷேத்ரமும்) சேர்ந்தால் ஜீவிதம் சாத்தியமாகிறது. தோற்றத்துக்கு வந்துள்ள உலகெங்கும் இவ்விரண்டு பிரகிருதிகளுடைய கூட்டுறவைக் காண்கிறோம். மேகமானது ஆகாசத்தில் தோன்றி, ஆகாசத்தில் நிலைத்திருந்து, பிறகு ஆகாசத்திலேயே ஒடுங்குகிறது. அங்ஙனம் ஈசுவரன் ஜகத்துக்கும் ஜீவர்களுக்கும் பிறப்பிடமாகிறான்; அவைகள் ஒடுங்குவதும் அவனிடத்தேயாம்.*

*மாயையைக் காணவேண்டுமென்ற அபிப்பிராயங்கொண்ட நான், ஒருநாள் ஒரு காட்சியைக் கண்டேன். ஒரு சிறிய நீர்த்துளி கொஞ்சம் கொஞ்சமாகப் பரிணமித்து ஒரு சிறு பெண்ணாயிற்று. அப்பெண் ஒரு ஸ்த்ரீயாகி ஒரு குழந்தையைப் பெற்றாள்; பெற்றதும் அவள் அக்குழந்தையை எடுத்துவாயில்போட்டு விழுங்கிவிட்டாள். இவ்விதம், அவளுக்குப் பிறந்த எல்லாக் குழந்தைகளையும் அவள் விழுங்கினாள். அப்போது அவள் மாயை யென்பதை நானறிந்தேன்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*எனவே :—*

**मत्तः परतरं नान्यत्किञ्चिदस्ति धनञ्जय ।**
**मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव ॥ ७**

மத்த: பரதரம் நான்யத்கிஞ்சிதஸ்தி தனஞ்ஜய ।
மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணு இவ ॥ 7

धनञ्जय தனஞ்ஜய *தனஞ்ஜயனே* मत्तः மத்த: *என்னைக்காட்டிலும்* परतरं பரதரம் *மேலானது* अन्यत् किञ्चित् न अस्ति அன்யத் கிஞ்சித் ந அஸ்தி *வேறு ஒன்றும் இல்லை* सूत्रे ஸூத்ரே *நூலிலே* मणिगणाः इव மணிகணு: இவ *மணிக் கோர்வைபோல்* इदं सर्वं இதம் ஸர்வம் *இவை யாவும்* मयि மயி *என்னிடத்து* प्रोतं ப்ரோதம் *கோர்க்கப்பட்டிருக்கின்றன.*

***தனஞ்ஜயா, எனக்கு மேலானது வேறு எதுவும் இல்லை. நூலிலே மணிகள் போன்று இவை யாவும் என்மீது கோர்க்கப்பட்டிருக்கின்றன.*** 7

*உலகு அனைத்தினுடைய உற்பத்தி, ஒடுக்கத்துக்கு ஈசனே முதற்காரணம். அவனுக்கு அன்னியமானது அதன் நடைமுறையில் தலையிட வல்லது ஒன்றுமில்லை. ஜகத்தைத் தோற்றுவிப்பதும் துடைப்பதும் அவன் செயல் என்று முன் சுலோகத்தில் சொல்லப்பட்டது. அது நிலை பெற்றிருப்பதும் அவனாலேயாம். ஸூத்ரம் என்பது நூல். நூலிலே விதவிதமான முத்து, மணி, ரத்னம் முதலியவைகளைக் கோர்த்து வைப்பது போன்று அண்டங்களனைத்தும் சர்வேசுவரன் என்னும் ஸூத்ரத்தில் கோர்த்து வைக்கப் பட்டிருக்கின்றன. ஆகவே, அவனுக்கு ஸூத்ராத்மன் என்ற பெயர் வந்துள்ளது. இணைக்கப் பெற்றுள்ள மணிகளும், முத்துக்களும், ரத்னங்களும் வெவ்வேறு பாங்குடையவைகளாயிருக்கலாம். பின்பு அவைகளை இணைக்கும் நூலோ ஒரேபாங்குடையது. அது போன்று எண்ணிறந்த குணபேதங்களையுடைய உயிர்களையும் ஜடப்பொருள்களையும் தாங்கி நிற்கும் ஆத்ம சைதன்யம் ஒன்றே.*

*சச்சிதானந்த பிரம்மம் இப்படிப்பட்டது என்று ஒருவராலும் அறிய முடியாது. அதனால்தான் இறைவன் பாதி புருஷனாகவும் பாதி பெண்ணாகவும் அர்த்தநாரீசுவரவடிவம் எடுத்தான். பிரகிருதியும் புருஷனும் தானே என்பதைக் காட்டவே அவ்வித வடிவம் தாங்கினான். அதே சச்சிதானந்தக் கடவுள் இன்னும் சிறிது கீழ்நிலைக்குவந்து பல புருஷர்களாகவும் பல பிரகிருதிகளாகவும் விளங்குகின்றான்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*அவன் உலகனைத்தும் ஆனதை நாம் அறிவது எங்ஙனம்? விடை வருகிறது :—*

**रसोऽहमप्सु कौन्तेय प्रभास्मि शशिसूर्ययोः ।**
**प्रणवः सर्ववेदेषु शब्दः खे पौरुषं नृषु ॥ ८**

ரஸோ஽ஹமப்ஸு கௌந்தேய ப்ரபாஸ்மி சசிஸூர்யயோ: ।
ப்ரணவ: ஸர்வவேதேஷு சப்த: கே பௌருஷம் ந்ருஷு ॥ 8

कौन्तेय கௌந்தேய *குந்தியின் மைந்தா* अहं அஹம் *நான்* अप्सु அப்ஸு *நீர்களில்* रसः ரஸ: *சுவை* शशि सूर्ययोः சசி ஸூர்யயோ: *சந்திர சூரியர்களில்* प्रभा ப்ரபா *ஜோதி* सर्ववेदेषु ஸர்வவேதேஷு *எல்லா வேதங்களில்* प्रणवः ப்ரணவ: *ஓங்காரம்* खे கே *வானத்தில்* शब्दः சப்த: *ஒலி* नृषु ந்ருஷு *மனிதர்களிடத்து* पौरुषं பௌருஷம் *ஆண்மை* अस्मि அஸ்மி *இருக்கிறேன்.*

***குந்தியின் மைந்தா, நான் நீரில் சுவையாகவும், சந்திரசூரியர்களிடத்து ஜோதியாகவும், எல்லா வேதங்களிலும் ஓங்காரமாகவும், வானில் ஓசையாகவும், மக்களிடத்து ஆண்மையாகவும் இருக்கிறேன்.***

*சர்க்கரையில் செய்த பண்டங்கள் எத்தனை விதங்களாயிருந்தாலும் அவை யாவும் தித்திக்கும் தன்மையுடையவைகளாம். பரம்பொருளினின்று உண்டாயிருக்கும் பிரபஞ்சம் முழுதிலும் பரம்பொருளின் மகிமை தோன்றுகிறது. இயற்கையில் மிளிரும் ஈசனது மகிமையை விசாரித்து அறிதல் வேண்டும். அத்தகைய ஞானம் விக்ஞானமாக வடிவெடுப்பதும் அவசியமாகிறது. சுத்த ஜலத்துக்கு சுவை கிடையாது. ஆனால் ஜலத்தின் துணையில்லாவிட்டால்*

எது கல், எது கற்கண்டு, எது படிகாரம் என்று தெரிந்து கொள்ளமுடியாது. பண்டங்களைக் கரைத்து அதனதன் சுவையை வெளிப்படுத்துவது நீர். பஞ்ச பூதங்களில் ஒன்றாகிய நீரினுள் ஆத்மாவின் சொரூபம் சுவை என்னும் வடிவெடுத்திருக்கிறது என்று உணரவேண்டும். வடிவத்தைக் காட்டவல்லது ஒளி அல்லது வெளிச்சம். நமக்குத் தெரிந்துள்ள பொருள்களுள் வெளிச்சத்தை எங்கும் வியாபகமாக வழங்கவல்லவை சூரியனும் சந்திரனுமாம். வடிவங்களின் அழகை விளக்கவும், அறிவைப் பெருக்கவும், சந்திர சூரியர்களுடைய பிரபை எவ்வளவு பயன்படுகின்றதென்று ஓர்ந்து பார்ப்பவர்களுக்கு விளங்கும்.

ஞானமானது சரியான பாங்கில் ஓங்கும் பொழுது அது விக்ஞானமாகிறது. ஞான வளர்ச்சிக்கு ஐந்து பூதங்களும் துணைபுரிகின்றன. ஆகாசம் என்னும் பூதத்தின் தன்மாத்திரை சப்தம். ஓசைக்கு முதற்காரணம் ஆகாசம். அல்லது வான் ஒலி என்பது இன்றைக்கு எல்லாரும் அறிந்துள்ள விஷயம். ஒலியானது பேச்சுக்குரியதாய் மாறும்பொழுது அது பாஷையாகின்றது. பிரணவம் அல்லது ஓங்காரம் மொழிகளுக்கு பீஜம் போன்றது. எல்லா வேதங்களிலும் பீஜ மந்திரமாயிருப்பது ஓங்காரம். சப்தப் பிரம்மம் என்று அது அழைக்கப்படுகிறது. அது எத்தனை பதங்களாக வடிவெடுத்து அவைகளின் அர்த்தத்தை இயற்கையின் வாயிலாகப் புகட்டிக் கொண்டிருக்கிறது என்பதை ஆராய்ந்து பார்ப்பவர்களுக்கு அதைப்பற்றிய உண்மை விளங்கும். ஓசையின் துணையில்லாவிட்டால் இத்தனை சாஸ்திரங்களும் ஞானங்களும் மறைந்துபோம். பரம்பொருளே நாத வடிவெடுத்துத் தன்னை ஓயாது விளக்கிக் கொண்டிருக்கிறது. ஓசை அல்லது மந்திரத்தைச் சரியாக அறிதலும் அவ் ஓசையின் பொருளாகிய பரத்தை அறிதலும் ஒன்றே.

வெறும் மனித வடிவை எடுத்திருப்பதாலேயே ஒருவனுக்குச் சிறப்பு வந்துவிடாது. அவன் செய்கின்ற

ஒவ்வொரு செயலிலும் ஆண்மை திகழவேண்டும். செயற்கரிய செயல் ஒருவனைச் சான்றோனாக்குகிறது. மனிதனிடத்திருந்து கிளம்பும் சீரிய செயலெல்லாம் உண்மையில்தெய்வ சம்பத்துக்களாம். சீரிய செயலைப் போற்றுவது ஈசுவர ஆராதனையாகும்.

**पुण्यो गन्धः पृथिव्यां च तेजश्चास्मि विभावसौ ।**
**जीवनं सर्वभूतेषु तपश्चास्मि तपस्विषु ॥ ९**

புண்யோ கந்த: ப்ருதிவ்யாம் ச தேஜஸ்சாஸ்மி விபாவஸௌ ।
ஜீவனம் ஸர்வ பூதேஷு தபஸ்சாஸ்மி தபஸ்விஷு ॥ 9

पृथिव्यां ப்ருதிவ்யாம் *மண்ணில்* पुण्यः गन्धः புண்ய: கந்த: *புண்ணிய கந்தம்* च ச *உம்* विभावसौ விபாவஸௌ *தீயில்* तेजः தேஜ: *சுடர்* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* सर्व भूतेषु ஸர்வ பூதேஷு *எல்லா உயிர்களிலும்* जीवनं ஜீவனம் *உயிர்ப்பு* च ச *உம்* तपस्विषु தபஸ்விஷு *தபஸ்விகளுக்குள்* तपः தப: *தபஸாக* अस्मि அஸ்மி *இருக்கிறேன்.*

**மண்ணில் நறுமணமாகவும், தீயில் சுடராகவும் நான் இருக்கிறேன். எல்லா உயிர்களுள் உயிர்ப்பாகவும், தபஸ்விகளுள் தபஸாகவும் இருப்பது நான். 9**

பிருதிவி அல்லது மண்ணில் எல்லாவித மணமாகவும் இருப்பது தெய்வம். அவைகளுள் நறுமணம் அல்லது சுகந்தத்தை ஈண்டு எடுத்துச் சொல்லுதலில் பொருள் உண்டு. தெய்வப் பெற்றியை நறுமணம் ஞாபகமூட்டுவது போன்று துர்நாற்றம் ஊட்டாது. எது தெய்வசொரூபத்தை எளிதில் விளக்குகிறதோ அது தெள்ளியெடுத்து ஓதப்படுகிறது. சாதகன் ஒருவனுக்கு சாம்பராணியினின்று வரும் நறுமணம் தெய்வஞாபகத்தை ஊட்டுவதுபோன்று, ஏனைய கந்தங்கள் ஊட்டமாட்டா. சூரியனுடைய பிரபை எளிய பாங்கில் அக்கினியிடத்திருக்கிறது. ஆத்ம பிரகாசத்தின் பௌதிகத்தோற்றம் தீ என்றுணர்வது ஆத்ம உபாசனைக்கு உற்ற உபாயமாம். அழியும் பாங்குடைய பூத உடலுக்குள்

அழியாத ஆத்மா இயங்கிக்கொண்டிருப்பதால் உயிர் வாழ்தல் என்னும் நிகழ்ச்சி நடைபெறுகிறது. உயிர்கள் ஜீவித்திருத்தல் அல்லது வாழ்தலுக்கு இயற்கையில் முடிவில்லை. என்றென்றும் உயிர்வாழ்க்கையானது நடைபெற்றுக்கொண்டே இருக்கிறது. ஆதலால் இயற்கையின் வாயிலாக அழியாத ஆத்மாவின் சத்சொரூபம் விளங்குகிறது. உயிர்வாழ்வது வேறு, வாழ்வை மேலானதாக மாற்றுவது வேறு. உருக்கி இரும்பை எஃகு ஆக்குகிறோம். தெய்விக உணர்ச்சியைக்கொண்டு வாழ்வை உருக்கி மேலான வாழ்வாக மாற்றுமிடத்து அது தபஸ் என்னும் பெயர் பெறுகிறது. எங்கே தபசு ஓங்குகிறதோ அங்கு தெய்வ சான்னித்தியம் திகழ்கிறது. கடவுளையே கோரதபஸ்வி என்று அழைக்கிறோம்.

बीजं मां सर्वभूतानां विद्धि पार्थ सनातनम् ।
बुद्धिर्बुद्धिमतामस्मि तेजस्तेजस्विनामहम् ॥ १०

பீஜம் மாம் ஸர்வபூதானும் வித்தி பார்த்த ஸனுதனம் ।
புத்திர்புத்திமதாமஸ்மி தேஜஸ்தேஜஸ்விஞமஹம் ॥ 10

पार्थ பார்த்த *பார்த்தா* मां மாம் *என்னை* सर्वभूतानां ஸர்வபூதாஞம் *எல்லா உயிர்களினுடைய* सनातनं बीजं ஸனுதனம் பீஜம் *நிலைபேறுடைய வித்து என்று* विद्धि வித்தி *அறிக* बुद्धिमतां புத்திமதாம் *அறிவாளர்களுடைய* बुद्धिः புத்தி: *அறிவாக* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* तेजस्विनां தேஜஸ்விஞம் *தேஜஸ்விகளுடைய* तेजः தேஜ: *தேஜஸ் ஆக* अहं अस्मि அஹம் அஸ்மி *நான் இருக்கிறேன்.*

***பார்த்தா, எல்லா உயிர்களின் நிலைபேறுடைய வித்து என்று என்னை அறிக. அறிவாளர்களுடைய அறிவாகவும், தேஜஸ்விகளுடைய தேஜஸ் ஆகவும் நான் இருக்கிறேன்.*** ***10***

ஸநாதனம் பீஜம் என்பது நிலைபேறுடைய வித்து எனப் பொருள்படுகிறது. கடல் நீர் ஆவியாக மாறி, பிறகு கார்மேகம் என்ற பெயர் பெறுகிறது. அது மழையாகப்

பொழிந்துவிட்டாலும் திரும்பவும் கார்மேகத்துக்கு நிலைபேருன வித்தாகக் கடல் இருக்கிறது. அங்ஙனம் பிரபஞ்சத்தில் விதவிதமான உயிர் வகைகளுக்கு ஸநாதன பீஜமாக ஈசுவரன் இருக்கிருன். அறிவானது தெளிந்த நிலைக்கு வருமளவு அது ஆத்ம சொரூபத்தைக் கிரகிக்க வல்லதாகிறது. ஆத்ம சொரூபத்தை அறிவதும் ஆத்ம சொரூபமாவதும் ஒன்றே. ஆக, புத்திமான்களிடத்துள்ள புத்தி போற்றுதற்குரியது. நல்ல தேகத்தினின்று கிளம்பும் ஒளி, வீரியம், பேராற்றல், கூர்மை ஆகியவைகளுக்கு தேஜஸ் (तेजस्) என்று பெயர். தூயவாழ்வினின்று தோன்றும் திட்பமும் தேஜஸ் என்று அழைக்கப்படுகிறது. இறைவனுடைய பேராற்றல் மக்களிடத்து தேஜஸ் ஆகத் துலங்குகிறது. தேஜஸை வளர்ப்பது தெய்வ வணக்கமாகும்.

**बलं बलवतामस्मि कामरागविवर्जितम् ।**
**धर्माविरुद्धो भूतेषु कामोऽस्मि भरतर्षभ ॥ ११**

பலம் பலவதாமஸ்மி காமராகவிவர்ஜிதம் ।
தர்மாவிருத்தோ பூதேஷு காமோऽஸ்மி பரதர்ஷப ॥ 11

भरतर्षभ பரதர்ஷப *பரதத் தலைவா* बलवतां பலவதாம் *பலவான்களுடைய* काम राग विवर्जितं காம ராக விவர்ஜிதம் *காமமும் ராகமும் நீங்கப்பெற்ற* बलं பலம் *சாமர்த்தியம்* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* भूतेषु பூதேஷு *உயிர்களிடத்து* धर्म अविरुद्धः தர்ம அவிருத்த: *தர்மத்துக்கு முரண்படாத* कामः காம: *காமம்* अस्मि அஸ்மி *ஆகிறேன்.*

***பரதத்தலைவா, பலவான்களிடத்துக் காமமும் ராகமும் நீங்கப்பெற்ற சாமர்த்தியமாக நான் இருக்கிறேன். உயிர்களிடத்து தர்மத்துக்கு முரண்படாத காமமாக இருக்கிறேன். 11***

காமம் என்பது புலப்படாத பொருள்களைப் பெற விரும்புதலாம். பின்பு புலப்படுகின்ற பொருள்களைப்பெற விரும்புதல் ராகம். பலத்தை உடைத்திருப்பவன் அதை நலத்துக்கென்றே பயன்படுத்தவேண்டும். ஆசைகளை

நிறைவேற்றுதற்காகக்கையாளும் சாமர்த்தியம் புனிதத்தை இழந்து விடுகிறது. நிராசையில் நிலைநின்று கையாளுகிற திறமையிலோ தெய்வ சான்னித்தியம் தோன்றுகிறது. அதனால் பலமும் பெருகிக்கொண்டே போகிறது.

இனிக் காமம் அல்லது ஆசை தன்னளவில் கேடுடையதன்று. பசித்திருக்கும்பொழுது உணவை உண்ண ஆசைப்படுகிறோம். இக்காமம் தர்மத்துக்கு உடன்பாடானது. நமது முன்னேற்றத்துக்குத் தூண்டுகோலாயிருக்கும் காமங்களெல்லாம் வேண்டப்படுபவைகளாம். ஆக, அறநெறி ஆமோதிக்கும் காமம், கடவுளிடத்துக் கொண்டுள்ள அருள் தாகம் முதலியன கடவுள் சொரூபமாகும். அம்பிகைக்கு சிவகாமி என்பது ஒரு பெயர்.

*தியானத்தில் ஆழ்ந்திருக்கும்போது ஏன் மனம் சலிக்கின்றது? ஈயானது மிட்டாய்க் கடையில் வைக்கப்பட்டிருக்கும் பக்ஷணங்களின் மீது சிலவேளைகளில் உட்காருகிறது. ஆனால் அவ்வழியே மலத்தைக் கூடையில் எடுத்துக்கொண்டு ஒரு தோட்டி போவானானால் அந்த ஈ உடனே பக்ஷணத்தை விட்டுவிட்டு அம்மலத்தின்மேல் போய் உட்காருகிறது. தேனீயோ தேனைக் கிரகிக்கும் பொருட்டு மலர்ந்த புஷ்பங்களில் உட்காருமே தவிர அருவருக்கத்தக்க பதார்த்தங்களை ஒருபோதும் அணுகுவதில்லை. உலகப்பற்றுள்ளவர்கள் முன்னேசொன்ன ஈக்குச் சமானம். ஏதோ சில வேளைகளில் ஈசுவரப் பிரேமையாகிய இன்பத்தை ஒரு சிறிது அனுபவித்தாலும், பழைய வாசனையால், அவர்கள் சிற்றின்ப சுகமாகிய மலக்குழியைத் தேடிப்போய் விழுகின்றனர். பரமஹம்ஸர்களான மஹான்களோவெனில் சதாசர்வகாலமும் பகவத் பிரேமையிலேயே ஆழ்ந்திருக்கின்றனர்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**ये चैव सात्त्विकाभावा राजसास्तामसाश्च ये ।**
**मत्त एवेति तान्विद्धि न त्वहं तेषु ते मयि ॥ १२**

யே சைவ ஸாத்விகாபாவா ராஜஸாஸ்தாமஸாஸ்ச யே ।
மத்த ஏவேதி தான்வித்தி ந த்வஹம் தேஷு தே மயி ॥ 12

ये च एव யே ச ஏவ *இன்னும் எல்லா* सात्विका: भावा: ஸாத்விகா: பாவா: *சத்துவகுண வஸ்துக்கள்* राजसा: तामसा: च ये ராஜஸா:

தாமஸா: ச யே ரஜோ குணத்திலும் தமோ குணத்திலும் என்ன வஸ்துக்கள் ஆயிருக்கின்றனவோ தாந் தான் அவையாவும் மத்த: ஏவ மத்த: ஏவ என்னிடத்தே தோன்றியவைகள் இதி இதி என்று வித்தி வித்தி அறிக து து ஆனால் அஹம் அஹம் நான் தேஷு தேஷு அவைகளில் ந ந இல்லை தே தே அவைகள் மயி மயி என்னிடத்து (உள).

***சத்வ ரஜஸ் தமோ குணங்களில் உண்டான பொருள்களெல்லாம் என்னிடத்துத் தோன்றியவைகளே என்று அறிக. ஆயினும் நான் அவைகளைச் சாரவில்லை; அவைகள் என்னைச்சார்ந்திருக்கின்றன.***

முக்குணத்தாலாகிய உலகெலாம் அவனிடத்திருந்து வந்தவைகள். பால் தயிராகப் பரிணமிப்பதுபோன்று அவன் உலகமாக மாறிவிடவில்லை. கயிறு பாம்பாகத்தென்படுவது போன்று தனது மாயாசக்தியால் அவன் உலகமாகத் தோன்றுகிறான். மூலவஸ்துவாகிய கயிறு மோக வஸ்துவாகிய பாம்பை அதிஷ்டானமாகக் கொள்ளவில்லை. வெறும் தோற்றமாகிய பாம்போ மூலப்பொருளாகிய கயிற்றை அதிஷ்டானமாக அல்லது நிலைக்களமாகக்கொண்டுள்ளது. அதாவது பாம்பு கயிற்றின்மீது ஆரோபிக்கப்பட்டுள்ளது. அவ்வாறே முக்குணமயமாகிய உலகம் பரமாத்மாவை அதிஷ்டானமாகக் கொண்டுள்ளது. பரமாத்மா முக்குணப் பொருள்களை அதிஷ்டானமாகக் கொண்டிருப்பவன் அல்லன். தன்னுடைய மாயாசக்தியால் அவன் ஜகத்தாகத் தோன்றுகிறான். "நான் அவைகளைச் சாரவில்லை; அவைகள் என்னைச் சார்ந்திருக்கின்றன" என்பதன் பொருள் இதுவே.

ஆரோபிக்கப்பட்டுள்ள ஜகத் ஒடுங்கிடவும், அதிஷ்டானமாயிருக்கிற பரமாத்ம தரிசனம் பெறுதலே ஜீவனுடைய லட்சியம். [அத்தியாயம் இரண்டு சுலோகம் 45; அத்தியாயம் ஒன்பது சுலோகங்கள் 4, 5 ஆகியவைகளைப் பார்க்கவும் ]

தொங்கும் விளக்கின் முப்பட்டைக் கண்ணுடிகளை இரவும் பகலும் ஒரு சாது நோக்கிப் புன்முறுவல் பூப்பது வழக்கம். காரண

மென்னவெனில், அந்த ஸ்படிக மூலமாய் சிவப்பு, மஞ்சள், நீலம் முதலிய பல வர்ணங்களை அவர் கண்டார். இவ்வித வர்ணங்கள் உண்மையானவையல்ல என்பதை அவர் தெரிந்துகொண்டதும் உலக மும் அம்மாதிரியே உண்மையல்லவென்று அறிந்தார்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**त्रिभिर्गुणमयैर्भावैरेभिः सर्वमिदं जगत् ।**
**मोहितं नाभिजानाति मामेभ्यः परमव्ययम् ॥ १३**

த்ரிபிர்குணமயைர்பாவைரேபி: ஸர்வமிதம் ஜகத் ।
மோஹிதம் நாபிஜாநாதி மாமேப்ய: பரமவ்யயம் ॥ 13

एभिः त्रिभिः गुणमयैः ஏபி: த்ரிபி: குணமயை: *இந்த மூவித குணங்களாலாகிய* भावैः பாவை: *வஸ்துக்களினால்* मोहितं इदं सर्वं जगत् மோஹிதம் இதம் ஸர்வம் ஜகத் *இவ்வுலகமெல்லாம் மயங்கிப்போய்* एभ्यः ஏப்ய: *இவைகளினின்று* परं अव्ययं मां பரம் அவ்யயம் மாம் *மேலாகிய அழியாத என்னை* न अभिजानाति ந அபிஜாநாதி *அறிகிற தில்லை.*

***இம் முக்குணங்களாலாகிய வஸ்துக்களினால் இவ்வுலகமெல்லாம் மயங்கிப்போய், இவைகளுக்கு மேலாகிய அழியாத என்னை அறிகிறதில்லை. 13***

*பரம் என்பது இந்திரியங்களுக்கு எட்டாதது. அவ்ய யம் என்றால் நிர்விகாரம் அல்லது மாறாத்தன்மைவாய்ந்தது.*

*சினிமாப் படக்காட்சியைக் காண்பதில் கண்ணும் கருத்துமாயிருப்பவர்கள் அத்தோற்றத்துக்கு அடிப்படை யாயிருக்கும் திரையைப்பற்றி நினைப்பதில்லை. குணபேதத் தால் உண்டான விருப்பு வெறுப்பு ஆகியவைகளின் வசப் பட்டிருப்பவர் உலகப் பொருள்களை வெவ்வேறு மனப் பான்மையுடன் பார்க்கிறார்கள். அப்பொருள்களில் தடைப் படாது எங்கும் வியாபகமாயுள்ள ஆகாசத்தை யாரும் அறி கிறதில்லை. குணபேதத்தால் வேறுபடும் சேதன அசேதனப் பொருள்களுக்கிடையில் நிறைபொருளாய், பேரறிவாய் எங்கும் வியாபித்து, அனைத்தையும் தன்னகத்து அடக்கி*

யிருக்கும் சித்சொரூபத்தை முக்குணத்தில் வசப்பட்டவர் யாரும் அறிகிறதில்லே.

மனித ரூபமாக விளையாடுபவன் ஈசுவரனே. அவன் ஒரு செப்படி வித்தைக்காரன் போலாவான். ஜீவன், ஜகத் என்ற மாயைத் தோற்றமெல்லாம் அவனுடைய பெரிய வித்தைகள். செப்படி வித்தைக்காரன் மட்டுமே உண்மை. வித்தைகள் எல்லாம் மாயை.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ம்மயக்கத்தினின்று தெளிதல் எப்படி? உபாயம் யம்பப்ப

**दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया ।**
**मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते ॥ १४**

தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா ।
மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே ॥ 14

हि ஹி *உண்மையில்* एषा ஏஷா *இந்த* गुणमयी குணமயீ *குணங்களால் ஆகிய* मम மம *என்னுடைய* दैवी माया தைவீ மாயா *தேவ மாயை* दुरत्यया துரத்யயா *தாண்ட முடியாதது* ये யே *யார்* माम् एव மாம் ஏவ *என்னையே* प्रपद्यन्ते ப்ரபத்யந்தே *சரணடைகின்றனரோ* ते தே *அவர்கள்* एतां मायां ஏதாம் மாயாம் *இந்த மாயையை* तरन्ति தரந்தி *தாண்டுகின்றனர்.*

***குணங்களால் ஆகிய என்னுடைய இந்த தேவ மாயையானது உண்மையில் தாண்ட முடியாதது; யார் என்னையே சரணடைகின்றார்களோ அவர்கள் இந்த மாயையைத் தாண்டுகின்றனர். 14***

தேவமாயை என்பது ஈசுவரனிடத்திருந்து உண்டான மாயாசக்தி. அது அவனுக்கு சரீரம்போன்று அமைந்திருக்கிறது.

விஷ்ணுவுக்கு महामायः மகாமாய: என்பது ஒரு பெயர். மாயையைக் கையாளுதலில் மிகப்பெரியவன் என்பது இதன் பொருள். அவன் தன் சொரூபத்தை மாயையைக் கொண்டு மறைத்து வைத்திருக்கிருன். ஆனல் அவனிடத்து

அடைக்கலம் புகுகின்றவர்களுக்கு அவன் தன்னைக்காட்டித் தருகிறான். அவனுடைய மெய்க்காட்சி கிட்டும்பொழுது மாயையின் பொய்க்காட்சி மறைகிறது. கயிற்றைக் காணுமிடத்துப் பாம்பின் காட்சி மறைவது போன்றது இது.

*திவ்விய மாதாவை நம்மால் ஏன் காணமுடியவில்லை? அவள் திரைக்குப் பின்னால் இருந்து எல்லாக் காரியங்களையும் நடத்தி, பிறர் கண்ணிற்படாமல் தான்மட்டும் எல்லாவற்றையும் பார்க்கும் உயர்குலத்துதித்த ஸ்திரீ போன்றவளாவாள். அவளுடைய உண்மையான பக்தர்கள் மட்டும், மாயையாகிய திரையைத் தாண்டி, சமீபத்தில் சென்று, அவளைத் தரிசிக்கின்றனர்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*அவனைச் சரண்புகாதவர் யார்?*

**न मां दुष्कृतिनो मूढाः प्रपद्यन्ते नराधमाः ।**
**माययापहृतज्ञाना आसुरं भावमाश्रिताः ॥ १५**

ந மாம் துஷ்க்ருதினோ மூடா: ப்ரபத்யந்தே நராதமா: ।
மாயயாபஹ்ருதஞானா ஆஸுரம் பாவமாச்ரிதா: ॥ 15

दुष्कृतिनः துஷ்க்ருதின: *பாபச் செயலையுடையவர்கள்* मूढाः மூடா: *மூடர்கள்* नर अधमाः நர அதமா: *கடைடிக்களானவர்கள்* मायया अपहृत ज्ञानाः மாயயா அபஹ்ருத ஞானா: *மாயையினால் ஞானம் அபகரிக்கப்பட்டவர்கள்* आसुरं भावं ஆஸுரம் பாவம் *அசுரர் இயல்பை* आश्रिताः ஆச்ரிதா: *பற்றி நிற்போர்* मां மாம் *என்னை* न प्रपद्यन्ते ந ப்ரபத்யந்தே *போற்றுகின்றதில்லை.*

***பாபச் செயலையுடையவர், மூடர், மக்களுள் கடைத்தரமானவர், மாயையினால் ஞானம் அபகரிக்கப்பட்டவர், அசுர இயல்பைப்பற்றி நிற்பவர்—இத் தகையவர்கள் என்னைப் போற்றுகின்றதில்லை. 15***

*பிறரைத் துன்புறுத்துதல், பொய் பேசுதல் முதலியவைகளை இயல்பாகக் கொண்டிருப்பவர்கள் அசுரர். அவர்களுடைய இயல்பு அசுரபாவம் எனப்படுகிறது. [அத்தியாயம் 16, சுலோகம் 4-ல் இந்த இயல்பு மீண்டும் விளக்கப் படுகிறது] பரமேசுவரன் அல்லது நாராயணனைப் போற்று*

*அசுரர் சிறிதும் அறியார். தங்களுடைய கொடூரம் தலையெடுக்கச் செய்வதே அவர்களுடைய தொழில்.*

*தெய்வத் தன்மையை மறைத்து, அசுரத்தன்மையை ஓங்குவிப்பது எதுவோ அது பாபச்செயல். அது அசுரர்களை முதலில் மூடர்களாக்குகிறது. கடவுளின் மகிமையைப் பற்றிய விவேகம் இல்லாதவர்கள் மூடர். ஒருவனுடைய விவேகம் அழிந்தால் பின்பு அவன் தானே அழிந்துபட்டுப் போவது திண்ணம். மூடர் பின்பு நராதமர் அல்லது மக்களுள் கடைப்பட்டவர் ஆகின்றனர். ஏனென்றால், ஏதாவது ஒரு நலத்தையாவது கடைப்பிடித்து அவர்கள் முன்னேற்றமடைய முடியாது. மேலும் அவர்களது ஞானம் மாயையினால் அபகரிக்கப்பட்டு விடுகிறது. ஈசுவரனது சொரூபமயமாகப் பிரபஞ்சம் அனைத்துமிருக்க அவ்வுண்மை அவர்களுக்குச் சிறிதும் புலப்படுவதில்லை. எனவே கடவுள் சம்பந்தமான அனைத்தையும் வெறுக்கின்ற கயவர் ஆகிவிடுகின்றனர் அன்னவர்.*

*நுண்மையான தானியத்தைத் தள்ளிவிட்டு, பருமனான குப்பை முதலியவைகளைத் தங்கச் செய்வது சல்லடையின் இயல்பு. அதுபோல, நன்மையை விட்டுவிட்டுத் தீமையை மட்டும் கைக்கொள்வது தீயோருடைய குணம்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*பின்பு இறைவனைப் போற்றுபவர் யார்?*

**चतुर्विधा भजन्ते मां जनाः सुकृतिनोऽर्जुन ।**
**आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ ॥ १६**

சதுர்விதா பஜந்தே மாம் ஜனா: ஸுக்ருதினோऽர்ஜுன ।
ஆர்த்தோ ஜிக்ஞாஸுரர்த்தார்த்தீ ஞானீ ச பரதர்ஷப ॥ 16

भरतर्षभ अर्जुन பரதர்ஷப அர்ஜுன *பரதகுலப் பெருமகனாகிய அர்ஜுனா* आर्तः ஆர்த்த: *துன்புற்றவன்* जिज्ञासुः ஜிக்ஞாஸு: *ஞான வேட்கையுடையவன்* अर्थार्थी அர்த்தார்த்தீ *பொருளின்பம் தேடுபவன்* ज्ञानी ஞானீ *ஞானி* च ச *ஆக* चतुर्विधाः சதுர்விதா: *நான்கு*

மான सुकृतिनः ஸுக்ருதின: அறச் செயலாளர்கள் जनाः ஜநா: மக்கள் मां भजन्ते மாம் பஜந்தே என்னைப் போற்றுகின்றார்கள்.

*பரதகுலப்பெருமகனாகிய அர்ஜுனா, துன்புற்றவன், ஞானவேட்கை யுடையவன், பொருளின்பம் தேடுபவன், ஞானி ஆக நான்கு விதமான அறச் செயலாளர்கள் என்னைப்போற்றுகின்றனர்.* **16**

துன்பத்தைத் தவிர்க்க எந்த உயிருக்கும் இயலாது. தேகம் எடுத்தவனை அது ஏதேனும் ஒரு விதத்தில் வந்து தாக்குகிறது. நோய்க்கு மருந்தை நாடுவது போன்று துன்பத்தைத் துடைப்பதற்கு தெய்வத்தின் துணையை நாடுவது நல்லோரது இயல்பு. திரௌபதிக்குத் துன்பம் வந்தபோது கண்ணனுடைய உதவியை அவள் நாடியது இதற்குச் சான்றாகும். திருநாவுக்கரசு சுவாமிகளது செயலும் அத்தகையது. பரம்பொருளைப் பற்றிய உண்மையை அறிய விரும்புபவன் ஜிக்ஞாசு அல்லது ஞானவேட்கையுடையவன் எனப்படுகிறான். சைவ சமய குரவர் நால்வருள் மாணிக்க வாசகர் ஒரு நல்ல ஜிக்ஞாசு ஆவார். விவேகானந்த சுவாமிகள் பரமஹம்ஸரால் ஆட்கொள்ளப்படுதற்கு முன்பு சிறந்ததொரு ஜிக்ஞாசுவாக விளங்கினார். மெய்ப்பொருளை அறியவேண்டும் என்ற ஞான வேட்கை மனிதனுக்கு எளிதில் உண்டாவதில்லை. அர்த்தார்த்தி என்பவன் செல்வத்தின் மீது ஆசை வைப்பவன். இம்மையில் போகத்தைத் தேடிக் கொடுப்பது திரவியம். அது தமக்கு வேண்டுமென்று கடவுளிடத்து விண்ணப்பிப்பவரும் பக்தர் ஆகின்றனர். சைவசமயக் குரவருள் சுந்தரர் இக்கூட்டத்தவர்க்கு நல்ல சான்றாவார். சுகப் பிரம்மம், திருஞான சம்பந்தர் முதலாயினோர் பிறவியிலிருந்தே ஞானிகள். பரம்பொருளின் சொரூபத்தை அவர்கள் சாக்ஷாத்கரித்தவர்கள். அதன் பலனாக அவர்கள் சதா பரம்பொருளையே போற்றினார்கள். அப்படி அவனைப் போற்றுதலைவிடச் சிறந்த செயலை ஞானியர் அறிந்திலர். இந்த நான்கு தரத்தாரது மனப்

பான்மைகள் நல்வினையினின்று வந்தவைகளாம். ஆகவே அவர்கள் ஸுக்ருதின: (அறச் செயலாளர்) என அழைக்கப் படுகின்றனர்.

பகவானை முதலாக வைத்துக்கொண்டு புருஷார்த்தங்களைத் தேடுபவர் புண்ணியசாலிகள்.

ஒன்று என்னும் இலக்கத்தோடு பூச்சியங்களைச் (சுழிகளைச்) சேர்த்தால் அவைகளுக்கு மதிப்பு உண்டு. ஒன்றைவிட்டுப் பிரித்தால் அவைகள் வெறும் பூச்சியங்களே. கடவுள் ஒன்று என்னும் இலக்கமாவார். உலகப்பொருள்களெல்லாம் அவரோடு சேர்க்கப்பட்ட பூச்சியங்கள். தம்மளவில் அவைகளுக்கு மதிப்பில்லை.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

இந்த நான்கு வகையினரில் சிறந்தவர் யார்?

**तेषां ज्ञानी नित्ययुक्त एकभक्तिर्विशिष्यते ।**
**प्रियो हि ज्ञानिनोऽत्यर्थमहं स च मम प्रियः ॥ १७**

தேஷாம் ஞானீ நித்யயுக்த ஏகபக்திர்விசிஷ்யதே ।
ப்ரியோ ஹி ஞானிநோऽத்யர்த்தமஹம் ஸ ச மம ப்ரிய: ॥ 17

तेषां தேஷாம் *அவர்களுள்* नित्ययुक्तः நித்யயுக்த: *இடையறாது யோகம் பூண்டு* एकभक्तिः ஏகபக்தி: *மாறாத பக்தி பண்ணும்* ज्ञानी विशिष्यते ஞானீ விசிஷ்யதே *ஞானி மேலானவன்* हि ஹி *ஏனென்றால்* अहं அஹம் *நான்* ज्ञानिनः ஞானின: *ஞானிக்கு* अत्यर्थं प्रियः அத்யர்த்தம் ப்ரிய: *மிகப் பிரியமானவன்* सः च ஸ: ச *அவனும்* मम प्रियः மம ப்ரிய: *எனக்குப் பிரியமானவன்.*

***அவர்களுள் இடையறு யோகம் பூண்டு மாறாத பக்தி பண்ணும் ஞானி மேலானவன்; ஏனென்றால் நான் ஞானிக்கு மிகப் பிரியமானவன்; அவனும் எனக்குப் பிரியமானவன்.*** **17**

மஹாவிஷ்ணுவுக்கு சிஷ்டேஷ்ட: அறிஞர்களால் விரும்பப்படுபவன், என்று ஒரு பெயர் உண்டு. பக்தியின் மிகுதியால் பக்தனுக்கு இந்த ஞானம் வருகிறது.

போற்றுதற்கு உரிய பொருள் பரமாத்மா ஒருவரே என்று ஞானி அறிகிறபடியால் அவரிடத்து மாறாத பக்தி

உண்டாகிறது. தன்னைத்தான் விரும்புவது உயிர்களின் இயல்பு. பின்பு, தன் உயிர்க்கு உயிர் இறைவன் என்பதை சுவானுபவத்தில் அறிபவன் ஞானி. ஆகையால் அவன் இறைவனிடத்து அத்தகைய உறவு பூணுகிறான்.

பகவத்தரிசனம் பெற்ற பிறகு ஒருவன் தானே தெய்வப்பெற்றி யுடையவனாக மாறிவிடுகிறான்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

மற்ற மூவர் புறக்கணிக்கப்படவில்லை. ஏனென்றால்:-

**उदाराः सर्व एवैते ज्ञानीत्वात्मैव मे मतम् ।**
**आस्थितः स हि युक्तात्मा मामेवानुत्तमां गतिम् ॥ १८**

உதாரா: ஸர்வ ஏவைதே ஞானீத்வாத்மைவ மே மதம் ।
ஆஸ்தித: ஸ ஹி யுக்தாத்மா மாமேவானுத்தமாம் கதிம் ॥ 18

एते सर्वे ஏதே ஸர்வே *இவர்கள் எல்லாரும்* उदाराः एव உதாரா: ஏவ *நல்லார்களே* तु து *ஆயினும்* ज्ञानी ஞானீ *ஞானி* आत्मा एव ஆத்மா ஏவ *என் ஆத்ம சொருபமே என்பது* मे मतं மே மதம் *என் கருத்து* हि ஹி *ஏனென்றால்* युक्तात्मा सः யுக்தாத்மா ஸ: *யோகத்தில் நிலைத்திருப் பவனாகிய அவன்* अनुत्तमां गतिं அனுத்தமாம் கதிம் *மிக உத்தமமான கதியான* मां एव மாம் ஏவ *என்னையே* आस्थितः ஆஸ்தித: *கடைப்பிடித் திருக்கிறான்.*

***இவர்கள் எல்லோரும் நல்லார்களே. ஆயினும் ஞானி என் ஆத்ம சொருபமே என்பது என் கருத்து. ஏனென்றால் யோகத்தில் நிலைத்திருப்பவனாகிய அவன் மிக உத்தமமான கதியாகிய என்னையே கடைப்பிடித்திருக்கிறான்.*** ***18***

பக்தர்கள் எல்லாரும் பகவானுக்குப் பிரியர்களே. ஆனால் அனன்ய பக்தி பண்ணும் ஞானி பகவத் சொரூபத்தை அடைந்திருப்பதால் அவன் அவர்களுள் விசேஷமானவன்.

பகவானுக்கு माधवः (மாதவ:) என்பது ஒரு பெயர். मा (மா) ஞானத்தினுடைய धवः (தவ:) தலைவன் என்று அது

பொருள்படுகிறது. ஞானத்துக்கு அவன் நிலைக்களம். ஆதலால் ஞானிகளை அவனுடைய ஆத்ம சொரூபம் என்பது பொருந்துகிறது. தீயில் வைக்கப்பட்ட விறகுக்கட்டை தானே தீயாய்விடுகிறது. கடவுளிடத்துப் பக்திபண்ணுபவன் தானே அவர் மயமாய் விடுகிறான்.

முழுமனதுடன் தொண்டுபுரியும் வேலைக்காரனிடத்து எஜமானனுக்கு அதிகப்பிரியம் ஏற்படுகிறது. அவனுடைய தூய பாங்கையும் திறமையையும் கண்டு திருப்தியடைந்து தம்முடைய ஸ்தானத்திலேயே வேலைக்காரனை வைக்கவும் அவர் செய்வார். பகவானும் தம் பக்தனிடத்து இங்ஙனம் செய்கிறார்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஞானி மேலும் சிறப்பிக்கப்படுகிறான்:—

**बहूनां जन्मनामन्ते ज्ञानवान्मां प्रपद्यते ।**
**वासुदेवः सर्वमिति स महात्मा सुदुर्लभः ॥ १९**

பஹூநாம் ஜன்மநாமந்தே ஞானவான்மாம் ப்ரபத்யதே ।
வாஸுதேவ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: ॥ 19

बहूनां जन्मनां अन्ते பஹூநாம் ஜன்மநாம் அந்தே *பல பிறவிகளின் இறுதியில்* ज्ञानवान् ஞானவான் *ஞானி* सर्वं वासुदेवः इति ஸர்வம் வாஸுதேவ: இதி *யாவும் வாசுதேவசொரூபம் என்று* मां மாம் *என்னை* प्रपद्यते ப்ரபத்யதே *வணங்கி வந்தடைகிறான்* सः महात्मा ஸ: மஹாத்மா *அத்தகைய மஹாத்மா* सुदुर्लभः ஸுதுர்லப: *மிக துர்லபம்.*

***பல பிறவிகளுக்குப் பிறகே "யாவும் வாசுதேவ சொரூபம்" என்று ஞானி என்னை வணங்கி வந்தடைகிறான். அத்தகைய மஹாத்மா கிடைத்தற்கரியவன்.*** ***19***

'வாசுதேவ' என்றால் பிரத்தியகாத்மன், எதிலும் ஊடுருவி நிலைத்திருப்பவன் எனப் பொருள்படுகிறது. सर्वं (ஸர்வம்) யாவும் என்பது சரம், அசரம், மேன்மக்கள், கீழ் மக்கள், நல்லார், பொல்லார் ஆகிய யாவும் எனப் பொருள்

ஞானிக்கு நித்திய வஸ்து எது என்பது மனதில் தெளிவடைந்த பிறகும் அது சுவானுபவம் ஆதற்குப் பல பிறவிகள் பிடிக்கின்றன. காண்கின்ற அனைத்தும் பரமாத்ம சொரூபமாகத் தென்படும்போது ஞானம் பூர்த்தியாய் விடுகிறது. இத்தகைய பிரம்மஞானி நடமாடும் தேவதையாகிறான். இம் மகோன்னத நிலையை அடைந்த மனிதன் உலகில் அரிதிலும் அரிதாவான். இந்த அத்தியாயத்தின் மூன்றாவது சுலோகம் இதைக் குறிப்பிடுகிறது.

வேதாந்தத்தை அனுஷ்டானத்தில் கொண்டுவர முயலும் நல்ல ஆத்ம சாதகர்கள் உலகத்தில் உள்ள மக்கள் எல்லாரையும் கடவுள் சொரூபமாகக் கருதி யொழுகுகிறார்கள். அதனால் தாங்கள் ஞானமடைவதுமன்றி சமூகத்திலுள்ள பல கேடுகளைக் களைதற்கு அவர்களுடைய மனப்பான்மை மறைமுகமாக ஊக்கங்கொடுக்கிறது.

பேத புத்தியைத் தருவது அக்ஞானம்; ஐக்கிய புத்தியைத் தருவது ஞானம்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஞானமும் பக்தியும் இல்லாதவர்கள்:—

**कामैस्तैस्तैर्हृतज्ञानाः प्रपद्यन्तेऽन्यदेवताः ।**
**तं तं नियममास्थाय प्रकृत्या नियताः स्वया ॥ २०**

**காமைஸ்தைஸ்தைர்ஹ்ருதஞானா: ப்ரபத்யந்தேऽன்யதேவதா: ।**
**தம் தம் நியமமாஸ்தாய ப்ரக்ருத்யா நியதா: ஸ்வயா ॥ 20**

तैः तैः தை: தை: *அந்தந்த* कामैः காமை: *காமங்களால்* हृतज्ञानाः ஹ்ருதஞானா: *ஞானம் அபகரிக்கப்பட்டவர்கள்* तं तं नियमं आस्थाय தம் தம் நியமம் ஆஸ்தாய *அந்தந்த நியமத்தைக் கையாண்டு* स्वया प्रकृत्या ஸ்வயா ப்ரக்ருத்யா *தங்களுடைய இயல்பினால்* नियताः நியதா: *தூண்டப்பட்டு* अन्यदेवताः அன்யதேவதா: *அன்னிய தேவதைகளை* प्रपद्यन्ते ப்ரபத்யந்தே *போற்றுகின்றனர்.*

***பற்பல ஆசைகளால் அறிவை இழந்தவர்கள் அவரவர் இயற்கையால் தூண்டப்பட்டு, அதற்***

***கேற்ற நியமத்தைக் கையாண்டு, பிற தெய்வங்களைப் போற்றுகின்றனர். 20***

*பிற தெய்வங்கள் என்பவை, யாவுமாகிய சர்வேசுவரனுக்கு அன்னியமானவைகளல்ல. அவனுடைய சிறு அம்சங்களே அன்னிய தேவதைகள் எனப்படுகின்றன. ஓர் அரசாங்கத்திலுள்ள சிறு உத்தியோகஸ்தர்கள் அரசனுக்கு அடிமைப்பட்டவர்களே. அரசனுடைய நட்பைப் பெற்றால் சிப்பந்திகள் அனைவரும் நமக்கு உரியவர் ஆகிவிடுகின்றனர். ஆனால் அரசனது நட்பைப் பெறுதற்கு நாம் தகுந்தவர் ஆகவேண்டும். அதில் சிரமம் அதிகம். சிறு உத்தியோகஸ்தர் நட்பைப் பெறுவது எளிது. அவர்களைக் கொண்டு ஆகவேண்டிய காரியங்களை முடித்துக்கொள்ளுதலும் எளிது. அதேபோன்று இறைவனுடைய அம்சங்களாகிய சிறு தெய்வங்களை வணங்கி, சிறிய பலனை அடைவது எளிது. லட்சியம் ஒன்று எவ்வளவுக்கெவ்வளவு பெரியதோ அவ்வளவுக்கவ்வளவு அதை அடைதலும் அரிது. ஆசை மிகுந்திருப்பவர் சிறிய பொருளை நாடுகின்றனர். குறைபொருளை நிறைபொருளாய் எண்ணும்படி ஏவுவது ஆசை. மனபரிபாகத்துக்கு ஏற்றபடி ஆசையும் வெவ்வேறு வடிவெடுக்கிறது. அதை நிறைவேற்றுதற்கான உபாயங்களும் பலவாகின்றன.*

*தாழ்ந்த சுபாவமுள்ளவர்கள்தான் வியாதிகளைக் குணமாக்கல், வியாஜ்யங்களை வெல்லல், நீர் மேல் நடத்தல் முதலிய சித்திகளை நாடி ஓடுவார்கள். உண்மையான பக்தர்களோவெனில் ஈசுவரனுடைய பாதார விந்தங்களைத் தவிர வேறெதையும் நாடுவதில்லை.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*இத்தகைய காமிகளுள்:—*

**यो यो यां यां तनुं भक्तः श्रद्धयार्चितुमिच्छति ।**
**तस्य तस्याचलां श्रद्धां तामेव विदधाम्यहम् ॥ २१**

யோ யோ யாம் யாம் தனும் பக்த: ச்ரத்தயார்ச்சிதுமிச்சதி ।
தஸ்ய தஸ்யாசலாம் ச்ரத்தாம் தாமேவ விததாம்யஹம் ॥ 21

यः यः ய: ய: *எந்த எந்த* भक्तः பக்த: *பக்தன்* यां यां யாம் யாம் *எந்தெந்த* तनुं தனும் *தேவ வடிவத்தை* श्रद्धया ச்ரத்தயா *சிரத்தையோடு* अर्चितुं அர்ச்சிதும் *அர்ச்சிக்க* इच्छति இச்சதி *இச்சிக்கிறானோ* तस्य तस्य தஸ்ய தஸ்ய *அவ்வவனுடைய* ताम् एव श्रद्धां தாம் ஏவ ச்ரத்தாம் *அதே சிரத்தையை* अहं अचलां विदधामि அஹம் அசலாம் விததாமி *நான் அசையாததாகச் செய்கிறேன்.*

***எந்தெந்த பக்தன் எந்தெந்த தேவ வடிவத்தை சிரத்தையோடு அர்ச்சிக்க இச்சிக்கிறானோ அவ்வவனுடைய அந்த சிரத்தையை அசையாததாக நான் செய்கிறேன். 21***

*மனிதனுக்குத் தேவையாயிருப்பது கடவுள் பக்தி. தெய்வத்துக்கு அவன் எத்தகைய வடிவத்தைக் கற்பித்துக் கொண்டாலும் அது கடவுளுக்குச் சம்மதம். யானை, குதிரை, பசு வடிவம் பெற்றுள்ள மிட்டாய்களில் ஒவ்வொரு குழந்தைக்கும் விருப்பமான வடிவத்தோடு கூடியதைக் கடைக்காரன் அதற்குக் கொடுக்கிறான். பகவானும் அதேபாங்கில் பக்தனுக்கு உற்சாகம் ஊட்டுகிறார். சிறு தெய்வ வணக்கத்தையும் பாங்குடன் செய்தால் அது முடிவில் ஈசுவர ஆராதனையாகத் திருந்தி யமைந்துவிடும். பக்தனுடைய பக்தியைப் பெருக்குவது பகவானுடைய கருணையாகும்.*

*அத். 4. சுலோகம் 11, அத். 9. சுலோகம் 23 ஆகியவைகளை ஒப்பிட்டுப் பார்க்கவும்.*

स तया श्रद्धया युक्तस्तस्याराधनमीहते ।
लभते च ततः कामान्मयैव विहितान्हि तान् ॥ २२

ஸ தயா ச்ரத்தயா யுக்தஸ்தஸ்யாராதனமீஹதே ।
லபதே ச தத: காமான்மயைவ விஹிதான்ஹி தான் ॥ 22

सः ஸ: *அந்த பக்தன்* तया श्रद्धया युक्तः தயா ச்ரத்தயா யுக்த: *அந்த சிரத்தையோடு கூடினவனாய்* तस्य आराधनं ईहते தஸ்ய ஆராதனம் ஈஹதே *அந்த தேவதையின் ஆராதனையைச் செய்கிறான்* च ततः ச தத: *அத்தேவதையினின்றும்* मया एव विहितान् மயா ஏவ விஹிதான்

*என்னுலே வகுக்கப்பட்ட* तान् कामान् தான் காமான் *அந்த ஆசைகளை* हि ஹி *நிச்சயமாக* लभते லபதே *அடைகிறன்.*

***சிரத்தையோடு கூடியவனுகிய அவன் அத் தேவதையை ஆராதித்து அதினின்று தான் ஆசைப் பட்டவைகளை அடையப் பெறுகிருன்; ஆயினும் அவ்வாசைப் பொருள்களை உண்மையில் வகுத்து வழங்குபவன் நானே.*** 22

*கேணி, குளம், குட்டை மூலம் மக்களுக்குப் பயன் படுவது மழை நீரே. சர்வேசுவரனுடைய அருளும் அத்த கையது.*

*சிற்றுயிர்களுக்கு வேண்டத்தக்கதை அறிபவன் சர்வேசுவரன். அவர்கள் வணங்கும் தேவதைகள் வாயி லாக இறைவனே வேண்டத்தக்கவைகளை அவர்களுக்கு வழங்குகிருன்.*

*வீட்டுக் கூரையின் மீது பசு, புலி, சிங்கம் முதலியமிருகங்களின் வாய்போன்ற குழாய்கள் வைத்திருக்கின்றனர். அவ்வாய்களினின்று விழுகின்ற மழை நீர் உண்மையில் மனிதனுடைய தாகத்தை அடக்குதற் காக வானத்தினின்று பொழிந்ததாம். அவ்வாறே மேன்மக்கள் வாயி னின்று வரும் சொற்கள் பல தடவைகளில் சர்வேசுவரனிடத்திருந்து வருபவைகளாம்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*அவர்கள் வேண்டுவது நிலையாப் பொருள்களாத லால் :—*

अन्तवत्तु फलं तेषां तद्भवत्यल्पमेधसाम् ।
देवान्देवयजो यान्ति मद्भक्ता यान्ति मामपि ॥ २३

அந்தவத்து பலம் தேஷாம் தத்பவத்யல்பமேதஸாம் ।
தேவான்தேவயஜோ யாந்தி மத்பக்தா யாந்தி மாமபி ॥ 23

तु து *ஆனல்* अल्पमेधसां तेषां அல்பமேதஸாம் தேஷாம் *அற்ப புத்திமான்களாகிய அவர்களுடைய* तत् फलं தத் பலம் *அப் பயன்* अन्तवत् भवति அந்தவத் பவதி *முடிவுடையதாகிறது* देवयजः தேவயஜ: *தேவர்களை வணங்குபவர்கள்* देवान् यान्ति தேவான் யாந்தி

*தேவர்களை அடைகின்றனர்* मद्भक्ता: மத்பக்தா: *என் அடியார்கள்* मां अपि यान्ति மாம் அபி யாந்தி *என்னையே அடைகின்றனர்.*

***ஆனால் அற்ப அறிவாளர்களாகிய அவர்கள் அடையும் பயன் முடிவுடையதாகிறது. தேவர்களை வணங்குபவர் தேவர்களை அடைகின்றனர். என் அடியார்கள் என்னையே அடைகின்றனர்.*** 23

*நிலைத்த இன்பம், நிலையற்ற இன்பம் இவ்விரண்டுக்கும் வித்தியாசம் தெரியாதவர்கள் அற்ப அறிவாளர்களாம். காட்டுக்குச் செல்லும் விறகுத்தலையர் எல்லாரும் எடுத்துக் கொள்ளும் முயற்சி ஒரேவிதமானது. ஆனால் எல்லைப் புறத்தில் சிறு விறகு எடுப்பவன் அடையும் பயன் அற்பமானது. உட்புறத்தில் இருக்கும் விலை மிகுந்த மரம் எடுப்பவன் எய்தும் பயன் பெரியது. அதுபோன்று தேவதைகளை வணங்குவதிலும் சர்வேசுவரனை வணங்குவதிலும் முயற்சியொன்று; பலன் வேறுபட்டது. அதே முயற்சியால் அந்தமில்லா ஆனந்தத்தைப் பெறுதற்குப் பதிலாக அற்ப சுகத்தைப் பெறுபவர் சிற்றறிவாளர் ஆகின்றனர்.*

*முழுமுதற் பொருளை எல்லாரும் ஏன் வணங்குவதில்லை? விடை வருகிறது :—*

**अव्यक्तं व्यक्तिमापन्नं मन्यन्ते मामबुद्धयः ।**
**परं भावमजानन्तो ममाव्ययमनुत्तमम् ॥ २४**

அவ்யக்தம் வ்யக்திமாபன்னம் மன்யந்தே மாமபுத்தய: ।
பரம் பாவமஜானந்தோ மமாவ்யயமனுத்தமம் ॥ 24

मम மம *என்னுடைய* अव्ययं அவ்யயம் *அழிவற்ற* अनुत्तमं அனுத்தமம் *ஒப்பற்ற* परं भावं பரம் பாவம் *பர சொரூபத்தை* अजानन्तः अबुद्धयः அஜானந்த: அபுத்தய: *அறியாத அறிவிலிகள்* अव्यक्तं मां அவ்யக்தம் மாம் *தோன்றாத என்னை* व्यक्तिं आपन्नं வ்யக்திம் ஆபன்னம் *புலன்களுக்குத் தென்படும் இயல்பை அடைந்ததாக* मन्यन्ते மன்யந்தே *எண்ணுகின்றனர்.*

**என்னுடைய அழிவற்ற, ஒப்பற்ற பர சொருபத்தை அறியாத அறிவிலிகள், புலன்களுக்கு எட்டாத என்னைப் புலன்களுக்குத் தென்படும் இயல்பை அடைந்தவனாக எண்ணுகின்றனர். 24**

ஜீவர்கள் வினையின் வசப்பட்டு உடல் எடுப்பது போன்று அவதார புருஷர் உடல் எடுப்பதில்லை. ஜன்னலில் கட்டுண்டது போன்று வானம் தென்படுகிறது. ஆனால் உண்மையில் அது எதிலும் கட்டுப்படவில்லை. அவதார புருஷர் உடல் எடுத்தும் அதில் கட்டுப்படாதவர். பெருங் கொடையாளி ஒருவன் விளையாட்டுக்காகக் கந்தைத் துணி யணிந்திருக்கலாம். அணிந்திருக்கும் துணியைப் பார்த்து அவ்வள்ளலின் பரந்த பாங்கைப் பாமரன் ஒருவன் புறக் கணித்து விடலாம். கொடையாளியிடமிருந்து பெறவேண் டிய பயனையும் பெறாது போய்விடலாம். அதனால் கொடை யாளிக்கு நஷ்டமில்லை. அழியும் பாங்குடைய உடலை எடுத் திருக்கிற வேளையிலும் அவதார புருஷர் பரமாத்ம சொரு பமேயாவர். இவ்வுண்மையை அறியாத மானுடர் பரமாத் மாவின் உபாசனைக்குத் தகுதியற்றவர்களாகின்றனர்.

அவர்களுடைய அக்ஞானத்துக்குக் காரணம்:—

**नाहं प्रकाशः सर्वस्य योगमायासमावृतः ।**
**मूढोऽयं नाभिजानाति लोको मामजमव्ययम् ॥ २५**

நாஹம் ப்ரகாச: ஸர்வஸ்ய யோகமாயாஸமாவ்ருத: ।
மூடோऽயம் நாபிஜானாதி லோகோ மாமஜமவ்யயம் ॥ 25

योग माया समावृतः யோக மாயா ஸமாவ்ருத: *யோக மாயை யினால் நன்கு மூடப்பட்டுள்ள* अहं அஹம் *நான்* सर्वस्य ஸர்வஸ்ய *எல்லார்க்கும்* न प्रकाशः ந ப்ரகாச: *பிரகாசிப்பதில்லை* मूढः अयं लोकः மூட: அயம் லோக: *இந்த மூட உலகம்* अजं अव्ययं मां அஜம் அவ்யயம் மாம் *பிறவாத அழியாத என்னை* न अभिजानाति ந அபிஜானாதி *அறிகிறதில்லை.*

**யோக மாயையினால் நன்கு மூடப்பட்டுள்ள நான் எல்லாருடைய அறிவுக்கும் எட்டுகிறதில்லை.**

***பிறவாத அழியாத என்னை இந்த மூட உலகம் அறிகிறதில்லை.*** **25**

*தன்னுடைய ஜால வித்தையினால் மாயாவி ஒருவன் மற்றவர்களுடைய மதி மயங்கும்படி செய்கிறான். அது விஷயத்தில் அவர்கள் மூடர்கள் ஆய்விடுகின்றனர். ஆனால் அந்த மாயாவியின் சொந்தக்காரர்கள் உள்ளத்தில் அதனால் எந்தவிதமான குழப்பமும் உண்டாவதில்லை. தான் எடுத்துக்கொண்ட விளையாட்டு (யோக மாயை) எத்தகையது என்பது மாயாவிக்கு நன்கு தெரியும்.*

*எதனாலும் மறைக்கப்படாத சூரியன் மேகத்தால் மறைக்கப்பட்டது போன்று இருக்கிறது. தன்னை மறைப்பது போன்று தென்படும் மேகத்தின் இருப்பிடத்தையே விளக்கவல்லது சூரியன். அதன் பிரகாசத்தாலன்றி மேகத்தைக் காணமுடியாது. முக்குணத்தாலாகிய பிரகிருதி சர்வேசுவரனுடைய யோக மாயை. அவனை விட்டு மாயை பிரிந்திருக்க முடியாததாலால் அதற்கு யோகம் என்ற அடைமொழி வழங்கப்படுகிறது. சூரியப் பிரகாசத்தால் உண்டாகிற மேகம் சூரியனை மறைப்பதுபோன்று ஈசனுடைய யோகமாயை அவனுடைய அகண்ட சச்சிதானந்த சொரூபத்தை மறைத்துக்கொண்டிருக்கிறது. ஆதலால் அறிவிலிகளுக்கு அவன் ஒரு சாதாரண ஜீவன்போன்று தென்படுகிறான். ஈசுவரனுடைய லீலா விசித்திரம் அவ் ஈசுவரனுக்கும் அவனுடைய பக்தர்களுக்கும் நன்கு விளங்குகிறது. மேலும் தன்னுடைய யோக மாயையினால் ஈசுவரன் ஒருவிதக் கேடும் அடைவதில்லை. மயக்கம் முழுதும் மற்றவர்களைச் சார்ந்தது. இறைவனே சர்வக்ஞன். ஆக :—*

**वेदाहं समतीतानि वर्तमानानि चाऽर्जुन ।**
**भविष्याणि च भूतानि मां तु वेद न कश्चन ॥ २६**

வேதாஹம் ஸமதீதானி வர்த்தமானானி சாऽர்ஜுன ।
பவிஷ்யாணி ச பூதானி மாம் து வேத ந கஸ்சன ॥ 26

अर्जुन அர்ஜுன *அர்ஜுனா* समतीतानि ஸமதீதானி *சென்றனவும்* वर्तमानानि च வர்த்தமானானி ச *இருப்பனவும்* भविष्याणि च பவிஷ்யாணி ச *வருவனவும் ஆகிய* भूतानि பூதானி *உயிர்களை* अहं वेद அஹம் வேத *நான் அறிவேன்* तु து *ஆனால்* मां மாம் *என்னை* कश्चन கஸ்சன *யாரும்* न वेद ந வேத *அறியார்*.

***அர்ஜுனா, சென்றனவும் இருப்பனவும் வருவனவும் ஆகிய உயிர்களையெல்லாம் நான் அறிவேன். ஆனால் என்னை யாரும் அறியார்.*** **26**

*பகவான் மாயைக்கு அதிபதி. மாயை முற்றும் அவர் வசத்தில் இருக்கிறது. உயிர்களின் தோற்றம், இருப்பு, ஒடுக்கம் ஆகியவைகள் மாயையின் காரியம். காலமும் மாயையின் சொரூபம். ஆகையினால் சர்வக்ஞனாகிய அவர் இவை யாவையும் அறிகிறார். கடந்துபோன உயிர்கள், இப்பொழுது இருப்பவை, இனி வருபவையாகிய அனைத்தையும் அவர் அறிகிறார். ஜீவர்களோ தங்களையே தெரிந்து கொள்ளவில்லை; இனி சர்வேசுவரனை எப்படித் தெரியப் போகிறார்கள்! பக்தர்கள் இக்கோட்பாட்டுக்கு விலக்காகின்றனர். பகவானை உபாசித்து அவனை அவர்கள் சரணடைகின்றனர். ஆகையால் அவர்கள் ஓரளவு ஈசனை அறிகிறார்கள். அவனைப்பற்றிய அறிவில்லாத மற்றவர்கள் அவனை உபாசிப்பதில்லை.*

*ஜலம் கலந்த பாலிலிருந்து ஜலம் வேறு பால் வேறாகப் பிரிக்கக் கூடிய அன்னப்பறவை, பாலைமட்டும் குடித்து நீரைத் தள்ளிவிடுகிறது. ஆனால் மற்றப்பறவைகளுக்கு இப்படிச் செய்யச் சக்தியில்லை. ஈசுவரன் மாயையோடு இரண்டறக்கலந்திருக்கின்றார். சாதாரண மனுஷ்யர்களுக்கு மாயையினின்றும் தனித்து அவரைக் காணச் சக்தியில்லை. பரமஹம்ஸர்கள் மட்டுமே மாயையை அகற்றிவிட்டுச் சுத்தாத்மாவான ஈசுவரனைப் பற்றிக்கொள்ளச் சக்தியுள்ளவர்களாக இருப்பார்கள்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*அவர்களது அக்ஞானத்துக்கும் பக்தியின்மைக்கும் காரணம்:—*

**इच्छाद्वेषसमुत्थेन द्वन्द्वमोहेन भारत ।**
**सर्वभूतानि संमोहं सर्गे यान्ति परंतप ॥ २७**

இச்சாத்வேஷஸமுத்தேன த்வந்த்வ மோஹேன பாரத ।
ஸர்வபூதானி ஸம்மோஹம் ஸர்கே யாந்தி பரந்தப ॥ 27

परन्तप भारत பரந்தப பாரத *பகைவரை வாட்டுகின்ற பாரதா* इच्छा द्वेष समुत्थेन இச்சா த்வேஷ ஸமுத்தேன *விருப்பு வெறுப்பினின்று உண்டாகும்* द्वन्द्वमोहेन த்வந்த்வமோஹேன *துவந்துவ மோகத்தால்* सर्वभूतानि ஸர்வபூதானி *எல்லா உயிர்களும்* सर्गे ஸர்கே *பிறக்கும் பொழுதே* संमोहं यान्ति ஸம்மோஹம் யாந்தி *குழப்பமடைகின்றன.*

***பகைவரை வாட்டுகின்ற பாரதா, விருப்பு வெறுப்பினின்று உண்டாகும் துவந்துவ மோகத்தால் பிறக்கும் பொழுதே எல்லா உயிர்களும் குழப்பமடைகின்றன.*** ***27***

*துவந்துவ மோகம் என்பது இருமை மயக்கம். நன்மை தீமை என்று இரண்டு இயல்புகள் இணைபிரியாது வாழ்க்கையில் அமைந்திருக்கின்றன. இன்பத்தைத் தருவது நன்மையென்றும் துன்பத்தைத் தருவது தீமையென்றும் கருதப்படுகின்றன. நன்மையை விரும்புவது மனதில் ஒருவித மயக்கத்தை உண்டுபண்ணுகிறது. தீமையை வெறுப்பது மற்றொருவித மயக்கத்தை உண்டுபண்ணுகிறது. விருப்பு வெறுப்பு என்னும் இரண்டு இயல்புகளும் மனிதனுக்கு நலம் செய்பவைகள்போன்று தோன்றி கேடு செய்து விடுகின்றன. ஆக, அவைகளை ஹிதசத்ருக்கள் என்பது பொருந்தும். விருப்பு வெறுப்பு என்னும் விலங்கத்துக்கு உட்பட்டவர் உலக இயல்போடு கூடிய அறிவையே உள்ளபடி பெறுகிறதில்லை. ஓரம்சார்தல் என்ற குற்றத்துக்கு ஆளாகின்றனர். பின்பு விருப்பு வெறுப்பு நீங்கப் பெற்று நடுவு நின்றார்க்கன்றி பரஞானம் (கடவுளைப்பற்றிய உணர்வு) உதிப்பதில்லை.*

*விருப்பு வெறுப்பு என்ற பகைவர்களை வாட்டி வெல்ல ஒவ்வொரு ஜீவனும் கடமைப்பட்டிருக்கிறான்.*

*துவந்துவங்களை வென்றவர் என் செய்கின்றனர்?*

येषां त्वन्तगतं पापं जनानां पुण्यकर्मणाम् ।
ते द्वन्द्वमोहनिर्मुक्ता भजन्ते मां दृढव्रताः ॥ २८

யேஷாம் த்வந்தகதம் பாபம் ஜநாநாம் புண்யகர்மணாம் ।
தே த்வந்த்வமோஹநிர்முக்தா பஜந்தே மாம் த்ருடவ்ரதா: ॥

तु து *ஆனால்* पुण्यकर्मणां येषां जनानां புண்யகர்மணாம் யேஷாம் ஜநாநாம் *புண்ணிய கர்மங்களையுடைய எந்த ஜனங்களுக்கு* पापं अन्तगतं பாபம் அந்தகதம் *பாபம் முடிவடைகிறதோ* द्वन्द्वमोहनिर्मुक्ताः ते த்வந்த்வ மோஹ நிர்முக்தா: தே *துவந்துவ மோஹத்திலிருந்து விடுதலையடைந்த அவர்கள்* दृढव्रताः த்ருடவ்ரதா: *உறுதியான விரதமுடையவர்களாய்* मां भजन्ते மாம் பஜந்தே *என்னைப் பஜிக்கின்றனர்.*

***ஆனால் புண்ணிய கருமங்களையுடைய எந்த ஜனங்களுக்குப் பாபம் முடிவடைகிறதோ துவந்துவ மோகத்திலிருந்து விடுதலையடைந்த அவர்கள் உறுதியான விரதமுடையவர்களாய் என்னை வழி படுகின்றனர். 28***

*சுயநலத்தை அகற்றும் செயல்களெல்லாம் புண்ணிய கருமங்களாகின்றன. நெடுநாள் நிஷ்காமிய கருமம் புரிந்து, மனதைத் தூயதாக்கியவர்களே உறுதியான உள்ளத்தோடு இறைவனை வணங்குகின்றனர்.*

*வெற்றி தோல்வி, லாபம் நஷ்டம் ஆகியவைகளுக்கிடையில் மாறாத பக்தி பூண்டொழுகுபவர் திட விரத முடையவர் ஆகின்றனர்.*

*துருப்பிடித்த இரும்பு காந்தத்தின் கவர்ச்சிக்கு உட்படுவதில்லை. துரு நீங்கப்பெற்றதும் அது காந்தத்தால் இழுக்கப்படுகிறது. விருப்பு வெறுப்பு என்னும் துருப்பிடித்த உள்ளத்தில் பக்தி பெருக்கெடுப்பதில்லை. சுத்த மனதின்கண் பக்தி விரைவில் தோன்றுகிறது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஈசுவரனை உபாசிப்பவர் அறிவது யாது ?*

जरामरणमोक्षाय मामाश्रित्य यतन्ति ये ।
ते ब्रह्म तद्विदुः कृत्स्नमध्यात्मं कर्म चाखिलम् ॥ २९

ஜராமரணமோக்ஷாய மாமாச்ரித்ய யதந்தி யே ।
தே ப்ரஹ்ம தத்விது: க்ருத்ஸ்ன மத்யாத்மம் கர்ம சாகிலம் ॥ 29

जरा मरण मोक्षाय ஜராமரண மோக்ஷாய *மூப்பினின்றும் மரணத்தினின்றும் விடுபடுதற்கு* मां आश्रित्य மாம் ஆச்ரித்ய *என்னை வழிபட்டு* ये यतन्ति யே யதந்தி *யார் முயற்சி செய்கின்றனரோ* ते தே *அவர்கள்* तत् ब्रह्म தத் ப்ரஹ்ம *அந்த பிரம்மத்தையும்* कृत्स्नं अध्यात्मं க்ருத்ஸ்னம் அத்யாத்மம் *அத்யாத்மம் முழுவதையும்* अखिलं कर्म च அகிலம் கர்ம ச *கர்மம் அனைத்தையும்* विदुः விது: *அறிகின்றனர்.*

***மூப்பினின்றும் மரணத்தினின்றும் விடுபடுதற்கு என்னை வழிபட்டு முயற்சி செய்கின்றவர்கள் அந்த பிரம்மத்தையும், அத்யாத்மம் முழுவதையும், கர்மம் அனைத்தையும் அறிகின்றனர்.*** 29

துவந்துவமோகம் அல்லது இருமை மயக்கத்தில் இருப்பவர்களுக்கும் வாழ்வைப்பற்றி ஆராய்தற்குப் பெரியதொரு தூண்டுகோல் உண்டு. அவர்கள் கடவுளை அறியாதிருந்தாலும் கடவுளை நம்பாதிருந்தாலும் மக்களது வாழ்வில் உண்டாகும் மாறுதல்களை அறிந்தாகவேண்டும். மூப்பு, மரணம் ஆகிய இரண்டு மாறுதல்களும் மனிதனால் வேண்டப்படாதவைகள். வலிவிழந்து அழிந்துபட்டுப் போவதுதானா வாழ்வின் முடிவு? அரும் பெரும் செயல்களைச் செய்துவிட்டு ஏமாற்றம் அடைந்தவனாக மனிதன் இவ்வுலகைவிட்டு ஏகுதலில் பயன் யாது உளது? இப்படியெல்லாம் விசாரித்து ஜீவிதத்தின் தத்துவத்தை உள்ளபடி அறிதற்கு மரணம் துணைபுரிகிறது. ஆக, முறையாக மூப்பையும் மரணத்தையும் ஆராய்ச்சி செய்பவர் உண்மையை அறிகின்றனர். பிரம்மத்தைப்பற்றியும், தங்களது ஆத்ம சொரூபத்தைப்பற்றியும், கர்மத்தின் முடிவான இயல்பைப்பற்றியும் அன்னவர் அறிந்தாகவேண்டும்.

*வில்வப் பழத்தில் ஓடு, விதைகள், சதை இவைகள் எல்லாம் இருக்கின்றன. இவைகளில் எது ஒன்று மாத்திரம் வில்வப் பழத்தைக் குறிக்கும்? 'ஓடு பழமல்ல; அது முக்கியமன்று' என்று ஒருவன் தள்ளிவிடுகிறான்; பிறகு விதைகளையும் அப்படியே அகற்றிவிடுகிறான்.*

*கடைசியில் சதையைத் தனியாக எடுத்து அதுதான் வில்வப்பழமென்று கருதுகின்றான். சிறிது சிந்தித்த பிறகு அவன் தெளிவு கொள்கிறான். சதை, விதை, ஓடு இம்மூன்றும் சேர்ந்ததே முழுப்பழம் என்று அறிய வருகிறான். அதே போல ஒருவன் குணங்குறியற்ற நிராகாரக் கடவுளை சாக்ஷாத்கரித்த பிறகு நித்தியமாகிய அதே ப்ரபிரம்மம் லீலாரூபமாய் இந்த உலகமாகவும் பரிணமித்திருக்கிறது என்று அறிய வருகிறான்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**साधिभूताधिदैवं मां साधियज्ञं च ये विदुः ।**
**प्रयाणकालेऽपि च मां ते विदुर्युक्तचेतसः ॥ ३०**

ஸாதிபூதாதிதைவம் மாம் ஸாதியக்ஞம் ச யே விது: ।
ப்ரயாணகாலேऽபி ச மாம் தே விதுர்யுக்தசேதஸ: ॥ 30

य: ய: *யார்* मां மாம் *என்னை* साधिभूतं साधिदैवं साधियज्ञं च ஸாதிபூதம் ஸாதிதைவம் ஸாதியக்ஞம் ச *அதிபூதம், அதிதெய்வம், அதியக்ஞத்துடன் கூடினவனாகவும்* विदु: விது: *அறிகிறார்களோ* युक्तचेतस: ते யுக்தசேதஸ: தே *யோகத்தில் நிலைநின்ற மனதையுடைய அவர்கள்* प्रयाणकाले अपि च ப்ரயாணகாலே அபி ச *சாகும் தறுவாயிலும்* मां विदु: மாம் விது: *என்னை அறிகின்றனர்.*

***யார் என்னை அதிபூதத்துடனும், அதிதெய்வத்துடனும், அதியக்ஞத்துடனும் கூடினவனாக அறிகிறார்களோ, யோகத்திலே நிலைநின்ற மனதையுடைய அவர்கள், சாகும் தறுவாயிலும் என்னை அறிகின்றனர். 30***

*அதிபூதம், அதிதெய்வம், அதியக்ஞம் ஆகியவைகளைப்பற்றிய விளக்கம் அடுத்த அத்தியாயத்தில் வருகிறது. மரணகாலத்தில் மனக்குழப்பமடைவது மாந்தரது இயல்பு. ஆனால் யோகிக்கு இத்தகைய குழப்பம் வருவதில்லை. இயற்கையையும் அதன்பால் பொலிகிற மேன்மையையும், அதில் நிகழும் மேலாம் செயல்களையும் முறையாக அறிபவர்க்கு தெய்வபக்தி இன்னும் அதிகரிக்கும். பக்தியும் ஞானமும் அதிகரிப்பதை மரணகாலம் விளக்கிவிடும். அவ்வேளையில் பகவானுடைய சொரூப ஞானம் இன்னும் அதிகரிக்கிறது.*

**इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे ज्ञानविज्ञानयोगो नाम सप्तमोऽध्यायः ॥**

# अष्टमोऽध्यायः

# எட்டாம் அத்தியாயம்

## अक्षरब्रह्मयोगः

## அக்ஷரப்ரஹ்ம யோகம்

अर्जुन उवाच

**किं तद्ब्रह्म किमध्यात्मं किं कर्म पुरुषोत्तम ।**
**अधिभूतं च किं प्रोक्तमधिदैवं किमुच्यते ॥ १**

அர்ஜுன உவாச

கிம் தத்ப்ரஹ்ம கிமத்யாத்மம் கிம் கர்ம புருஷோத்தம ।
அதிபூதம் ச கிம் ப்ரோக்தமதிதைவம் கிமுச்யதே ॥ 1

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது*

पुरुषोत्तम புருஷோத்தம *ஓ புருஷோத்தமா* तत् ब्रह्म தத் ப்ரஹ்ம *அந்த பிரம்மம்* किं கிம் *யாது* अध्यात्मं किं அத்யாத்மம் கிம் *அத்யாத்மம் எது* कर्म किं கர்ம கிம் *கர்மம் என்பது யாது* अधिभूतं அதிபூதம் *அதிபூதம் என்று* किं प्रोक्तं கிம் ப்ரோக்தம் *எது சொல்லப்படுகிறது* अधिदैवं அதிதைவம் *அதிதெய்வம் (என்று)* च ச *மேலும்* किं उच्यते கிம் உச்யதே *எது சொல்லப்படுகிறது.*

அர்ஜுனன் சொன்னது

**ஓ புருஷோத்தமா, அந்த பிரம்மம் யாது, அத்யாத்மம் எது, கர்மம் என்பது யாது, அதிபூதம் என்று சொல்லப்படுவது எது, மேலும் அதிதெய்வம் என்று எது அழைக்கப்படுகிறது?**

**अधियज्ञः कथं कोऽत्र देहेऽस्मिन्मधुसूदन ।**
**प्रयाणकाले च कथं ज्ञेयोऽसि नियतात्मभिः ॥ २**

அதியக்ஞ: கதம் கோऽத்ர தேஹேऽஸ்மின்மதுசூதன ।
ப்ரயாணகாலே ச கதம் ஞேயோऽஸி நியதாத்மபி: ॥ 2

मधुसूदन மதுஸூதன *மது என்ற அரக்கனை அழித்தவனே* अत्र அத்ர *இங்கே* अस्मिन् देहे அஸ்மின் தேஹே *இந்த தேகத்தில்* कः க: *யார்* कथं கதம் *எப்படி* अधियज्ञः அதியக்ஞ: *அதியக்ஞனாக (இருக்கிறார்)* प्रयाणकाले च ப்ரயாணகாலே ச *மரணகாலத்திலும்* नियत आत्मभिः நியத ஆத்மபி: *தன்னடக்கம் பழகியவர்களால்* कथं கதம் *எங்ஙனம்* ज्ञेयः असि ஞேய: அஸி *அறியப்படுபவர் ஆகின்றீர்?*

***மதுசூதனா, இந்த தேகத்தில் அதியக்ஞன் என்பவர் யார்? அவர் எப்படி இருக்கிறார்? தன்னடக்கம் பழகியவர்களால் மரண காலத்திலும் நீர் எங்ஙனம் அறியப்படுபவர் ஆகின்றீர்? 2***

இவ்விரண்டு சுலோகங்களில் அடங்கிய ஏழும் *அறியத் தகுந்த பொருள்கள் ஆகின்றன. முன் அத்தியாயத்தின் இறுதியில் வந்த சுலோகங்கள் இரண்டும் இக் கேள்விகளுக்கு இடந்தருகின்றன. ஆகவே, அர்ஜுனன் அவைகளைக் கேட்கின்றான்.*

**श्री भगवानुवाच**

**अक्षरं ब्रह्म परमं स्वभावोऽध्यात्ममुच्यते ।**
**भूतभावोद्भवकरो विसर्गः कर्मसंज्ञितः ॥ ३**

ஸ்ரீ பகவானுவாச

அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ஸ்வபாவோऽத்யாத்மமுச்யதே ।
பூதபாவோத்பவகரோ விஸர்க: கர்மஸம்ஞித: ॥ 3

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

अक्षरं அக்ஷரம் *அழிவற்றதாயும்* परमं பரமம் *மேலானதாயுமிருப்பது* ब्रह्म ப்ரஹ்ம *பிரம்மம்* स्वभावः ஸ்வபாவ: *ஸ்வபாவம்* अध्यात्मं उच्यते அத்யாத்மம் உச்யதே *அத்யாத்மம் என்று சொல்லப்படுகிறது* भूत भाव उद्भवकरः பூத பாவ உத்பவகர: *உயிர்களை உண்டுபண்ணி நிலைத்திருக்கச் செய்தலாகிய* विसर्गः விஸர்க: *வேள்வியில் படைப்பது* कर्म संज्ञितः கர்ம ஸம்ஞித: *கர்மமெனப்படுகிறது.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***அழிவற்றதாயும் மேலானதாயுமிருப்பது பிரம்மம். அதன் ஸ்வபாவம் அத்யாத்மம் என்று சொல்லப்படுகிறது. உயிர்களை உண்டுபண்ணி, நிலைத்திருக்கச்செய்தலாகிய வேள்வி கர்மமெனப்படுகிறது. 3***

*பிரம்மம் என்பது முழுமுதற்பொருள். அது எக்காலத்திலும் உள்ளது; எங்குமிருப்பது; எக்காரணத்தைக் கொண்டும் அதனிடத்து மாறுதல் உண்டாவதுகிடையாது. ஆக, அது காலதேச நிமித்தத்தில் அடிபடாதது. எனவே, அதற்கு அக்ஷரம் என்ற பெயர் வந்தது. இந்திரியங்களுக்கு அது எட்டாதது. ஆதலால், அது பரமம் என்றும் பகரப்படுகிறது. அண்டங்கள் அனைத்துக்கும் பரபிரம்மம் இருப்பிடமாகிறது.*

*ஒரு மனிதன் கோபிக்கும் தன்மையுடையவனாயிருக்கிறான். அது அவனுடைய ஸ்வபாவம் என்கிறோம். மற்றொருவன் யாண்டும் நேசிக்கும் தன்மையுடையவனாயிருக்கிறான். அப்படி இருப்பது அவனுடைய ஸ்வபாவம். அதேபாங்கில் பரபிரம்மத்தினுடைய சுபாவம் (ஸ்வபாவம்) உண்டு. எண்ணிறந்த ஜீவாத்மாக்களாகத் தன்னைத் தோற்றுவித்துக்கொள்வது பரபிரம்மத்தின் ஸ்வபாவமாகும். அந்த ஸ்வபாவமே அத்யாத்மன் என்று அழைக்கப்படுகிறது. ஒவ்வொரு தேகத்தினுள்ளும் 'நான்' என்னும் சொல்லுக்கு இலக்காக அது இருக்கிறது. அலைகள் கடலில் ஒடுங்குவது போன்று இந்த ஜீவர்கள் அனைத்தும் பரபிரம்மத்தில் ஒன்றாய்விடும் தன்மையனவாம்.*

*இயற்கையின் நடைமுறை அனைத்துக்கும் கர்மம் என்பது பொதுப் பெயர். மனிதனுடைய தோற்றத்துக்கும் முன்னேற்றத்துக்கும் முதற் காரணமாயிருக்கும் கர்மமே இங்கு கர்மம் என்று சிறப்பித்துக் கூறப்படுகிறது. அது ஆக்கத்துக்கு ஏதுவாயுள்ள நற்செயலாம். ஒவ்வொரு படித்தரத்திலும் மனிதனை மேலோன் ஆக்குவது எதுவோ,*

அது கர்மம். ஆறு சாஸ்திரங்களில் ஒன்றாகிய பூர்வ மீமாம்ஸம் 'கர்மத்துக்கு உயர்ந்ததுஒன்றுமில்லை' என்கிறது. கர்மத்தின்மூலம் எதையும் பெறலாம் என்பது அதன் கோட்பாடு.

अधिभूतं क्षरो भावः पुरुषश्चाधिदैवतम् ।
अधियज्ञोऽहमेवात्र देहे देहभृतां वर ॥ ४

அதிபூதம் க்ஷரோ பாவ: புருஷஸ்சாதிதைவதம் ।
அதியக்ஞோऽஹமேவாத்ர தேஹே தேஹப்ருதாம் வர ॥ 4

देहभृतां वर தேஹ ப்ருதாம் வர *உடல் எடுத்தவர்களுள் உயர்ந்தவனே* क्षरः भावः க்ஷர: பாவ: *அழியும் பொருள்* अधिभूतं அதி பூதம் *அதிபூதம் என்று சொல்லப்படுகிறது* पुरुषः अधिदैवतं புருஷ: அதிதைவதம் *புருஷன் அதிதெய்வம் எனப்படுகிறான்* च अत्र देहे ச அத்ர தேஹே *இனி ஈண்டு தேகத்தினுள்* अहं एव அஹம் ஏவ *நானே* अधियज्ञः அதியக்ஞ: *அதியக்ஞமாகிறேன்.*

***உடல் எடுத்தவர்களுள் உயர்ந்தவனே, அழியும் பொருள் அதிபூதம் என்று சொல்லப்படுகிறது. புருஷன் அதிதெய்வம் எனப்படுகிறான். இனி நானே ஈண்டு தேகத்தினுள் அதியக்ஞமாகிறேன்.*** 4

**அதிபூதம்** :-*தேகம் முதலிய அழியும் தன்மையுடையவைகள் இப்பெயர் பெறுகின்றன. சைதன்யத்துக்கு அன்னியமானவைகள் எனினும், இவைகள் சைதன்யத்தைச் சார்ந்திருக்கின்றன. பிராணிகள் உயிர்பெற்றிருப்பதற்கு பூதங்கள் இன்றியமையாதவைகளாம்.*

**புருஷன்** :-*புரியிலே சயனிப்பவன்புருஷன். அகிலாண்டத்தையும் தன் இருப்பிடமாகக் கொண்டு, அதில் நீக்கமற நிறைந்திருக்கிறவன் புருஷன்.*

**அதிதெய்வம்** :-*ஹிரண்யகர்பன், எல்லார்க்கும் முதலிலே உடலை எடுத்தவன், சுவயம்பூ அல்லது பிரம்மதேவனை இப்பதம் குறிக்கிறது. ஒவ்வொரு ஜீவனுக்கும்*

ஒரு வியக்தி இருப்பதுபோன்று, ஜீவத் தொகுதிக்கு உள்ள வியக்தியே பிரம்மா ஆகிறது.

**அதியக்ஞம்** :-ஜீவன் தன்னை அடியோடு இறைவனிடத்து ஆஹுதியாகக் கொடுத்துவிடும் பொழுது யக்ஞம் உச்ச ஸ்தானம் பெறுகிறது. தன்னைக் கொடுத்துவிடுங்கால் ஜீவபோதம் அழிகிறது; பரபோதம் தோன்றுகிறது. ஆக, அதியக்ஞம் நடைபெறுகிற இடத்தில் பரமாத்மாவின் சான்னித்தியம் காணப்பெறுகிறது. முதிர்ந்த சாதகர்களிடத்தும் ஸித்த புருஷர்களிடத்தும் ஈசுவர சான்னித்தியம் தென்படுவதுபோன்று வேறு எங்கும் காணமுடியாது. மானிட சரீரம் எடுத்ததன் முடிவான பலனும் இதுவே. தன்னை இறைவனுக்குக் கொடுப்பவனே உடல் எடுத்தவர்களுள் உயர்ந்தவன்.

எவனுடைய உடலும் உள்ளமும் பூரணமாக ஈசுவரனுக்கே அர்ப்பணம் செய்யப்பட்டிருக்கின்றனவோ அவன்தான் உண்மையான ஸாது. உண்மையான ஸாது, ஸதா ஸர்வகாலமும் ஈசுவரனைப்பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பான். அவ்வீசுவரன் எல்லா ஜீவர்களிடத்தும் இருக்கிறான் என்பதை அவன் அறிந்துகொண்டு எல்லோருக்கும் தொண்டு செய்வான். இவைகள்தான் உண்மையான ஸாதுவின் முக்கிய அடையாளங்கள்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

अन्तकाले च मामेव स्मरन्मुक्त्वा कलेवरम् ।
यः प्रयाति स मद्भावं याति नास्त्यत्र संशयः ॥ ५

அந்தகாலே ச மாமேவ ஸ்மரன்முக்த்வா கலேவரம் ।
ய: ப்ரயாதி ஸ மத்பாவம் யாதி நாஸ்த்யத்ர ஸம்சய: ॥ 5

अन्तकाले च அந்தகாலே ச *மரண காலத்திலும்* मां एव स्मरन् மாம் ஏவ ஸ்மரன் *என்னையே நினைந்து கொண்டு* कलेवरं கலேவரம் *உடலை* मुक्त्वा முக்த்வா *நீத்து* यः प्रयाति ய: ப்ரயாதி *யார் போகிறானோ* सः ஸ: *அவன்* मद्भावं மத்பாவம் *என் சொரூபத்தை* याति யாதி *அடைகிறான்* अत्र संशयः न अस्ति அத்ர ஸம்சய: ந அஸ்தி *இதில் சந்தேகமில்லை.*

***மரண காலத்திலும் என்னையே நினைந்து கொண்டு உடலைத்துறந்து, யார்போகிறானோ அவன் என்சொரூபத்தை அடைகிறான். இதில் ஐயமில்லை. 5***

*என் சொரூபம் என்பது முழுமுதற்பொருளாகிய விஷ்ணு அல்லது பரத்தினைக் குறிக்கிறது.*

*உடலை உகுக்கும் பொழுது ஜீவன் பரத்தினைப் பாவிக்க வல்லவனாயின், அவன் மீண்டும் பிறவாது பரத்தினைச் சார்ந்து விடுகிறான். இது விதேகமுக்தி எனப்படும். இவ்விதிக்கு விலக்கு இல்லை. ஆகவே இதைப்பற்றி ஐயம் கொள்ளவேண்டிய அவசியமில்லை.*

*இறைவனை நினையாது வேறு எண்ணத்தோடு உயிர் விடுகின்றவர்களது நிலை என்னாகிறது என்னும் கேள்வி பிறக்குமிடத்து :—*

**यं यं वापि स्मरन्भावं त्यजत्यन्ते कलेवरम् ।**
**तं तमेवैति कौन्तेय सदा तद्भावभावितः ॥ ६**

யம் யம் வாபி ஸ்மரன்பாவம் த்யஜத்யந்தே கலேவரம் ।
தம் தமேவைதி கௌந்தேய ஸதா தத்பாவபாவித: ॥ 6

कौन्तेय கௌந்தேய *குந்தியின் புதல்வா* अन्ते அந்தே *அந்திய காலத்தில்* यं यं वा अपि யம் யம் வா அபி *எந்த எந்த* भावं பாவம் *பொருளை* स्मरन् ஸ்மரன் *எண்ணிக்கொண்டு* कलेवरं கலேவரம் *உடலை* त्यजति த்யஜதி *துறக்கிறான்* सदा ஸதா *எப்பொழுதும்* तद्भाव भावित: தத் பாவ பாவித: *அப்பொருளைப் பாவிப்பவனாய்* तं तं एव தம் தம் ஏவ *அப்பொருளையே* एति ஏதி *எய்துகிறான்.*

***குந்தியின் புதல்வா, இறுதிக் காலத்தில் எப்பொருளை எண்ணிக்கொண்டு ஒருவன் உடலை உகுக்கிறானோ, எப்பொழுதும் அப்பொருளைப்பாவிப்பவனாகிய அவன் அதையே அடைகின்றான். 6***

*சொப்பனத்தில் தோன்றுகிற வடிவம் தன் மனதால் சிருஷ்டிக்கப்பட்டது. விலக்கமுடியாது தன் முன்னிலையில் அது நிற்பது போன்று சாகும்தறுவாயில் ஓர் எண்ணம்*

மனதில் தோன்றுகிறது. வாழ்நாளில் எது ஆழ்ந்து நெடிது எண்ணப்பட்டதோ அதுதான் அப்பொழுது முன்னணியில் வந்து நிற்கிறது. மேலும் வரும் பிறப்பானது அந்த எண்ணத்தின் ஸ்தூல அமைப்பாம். ஆக, இனி வரும் ஜன்மத்தை விரும்பியபடி மாற்றலாம்.

இம்மையிலும் மறுமையிலும் நலம் நாடும் ஒருவன் இடையறாது செய்யவேண்டியது யாது எனின் :—

**तस्मात्सर्वेषु कालेषु मामनुस्मर युध्य च ।**
**मय्यर्पितमनोबुद्धिर्मामेवैष्यस्यसंशयः ॥ ७**

தஸ்மாத்ஸர்வேஷு காலேஷு மாமனுஸ்மர யுத்ய ச ।
மய்யர்பித மனோபுத்திர்மாமேவைஷ்யஸ்யஸம்சய: ॥ 7

तस्मात् தஸ்மாத் *ஆகையினால்* सर्वेषु कालेषु ஸர்வேஷு காலேஷு *சர்வ காலமும்* मां अनुस्मर மாம் அனுஸ்மர *என்னை நினை* युध्य च யுத்ய ச *யுத்தமும் செய்* मयि अर्पित मनः बुद्धिः மயி அர்ப்பித மன: புத்தி: *மனம் புத்தியை என்னிடத்து அர்ப்பணம்செய்வதால்* असंशयः அஸம்சய: *சந்தேகமின்றி* मां एव एष्यसि மாம் ஏவ ஏஷ்யஸி *என்னையே அடைவாய்.*

***ஆகையால் சர்வகாலமும் என்னை நினைந்து கொண்டே போர்புரி; மனம் புத்தியை என்னிடத்து அர்ப்பணம் செய்வதால் சந்தேகமின்றி என்னையே அடைவாய்.*** 7

*'போர் புரி' என்கிறார் பகவான். அர்ஜுனனுடைய ஸ்வதர்மத்தை உதாரணமாக எடுத்துக்கொண்டு எல்லாரும் அவரவர் கடமைகளைச் செய்யவேண்டும் என்பதாகிறது.*

*இறைவனை உபாசிக்கின்றவர்கள் பலர் உலகக் கடமைகளைப் புறக்கணிக்கின்றனர். உலக வியவகாரங்களைச் செய்கின்றவர்கள் அனேகர் கடவுளை மறக்கவும் செய்கின்றனர். ஈசுவர சிந்தனையும் தொழில் புரிதலும் ஒன்றோடொன்று ஒவ்வாது என்பது அவர்கள் எண்ணம். ஆனால் காயத்தால் கடமைகளைச் செய்துகொண்டிருக்*

*கையில் கருத்தைக்கடவுளிடம் செலுத்தவேண்டும் என்பது கண்ணனது கோட்பாடு. இத்தகைய பயிற்சி இகபர மிரண்டுக்கும் சாதனமாகிறது.*

*தெருப்பாடகன் ஒரு கையால் சுருதி மீட்டிக்கொண்டும், மற்றொரு கையால் ஒருவகை மேளத்தைத் தட்டிக்கொண்டும், அதே சமயத்தில் பாடிக்கொண்டுமிருக்கிறான். அதைப்போல, உலக பந்தத்துக்குட்பட்ட மனிதன் தனக்கேற்பட்ட காரியங்களைக் கைகளால் செய்து கொண்டிருக்கையிலும், பகவந் நாமத்தை முழுமனதோடும் சொல்லி, அவனது குணானுபவம் பண்ணுவதை மறக்கக்கூடாது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*பரத்தினைச் சாரும் வழி :—*

**अभ्यासयोगयुक्तेन चेतसा नान्यगामिना ।**
**परमं पुरुषं दिव्यं याति पार्थानुचिन्तयन् ॥ ८**

அப்யாஸயோகயுக்தேன சேதஸா நான்யகாமினா ।
பரமம் புருஷம் திவ்யம் யாதி பார்த்தானுசிந்தயன் ॥ 8

पार्थ பார்த்த *பார்த்தா* न अन्यगामिना ந அன்யகாமினா *வேறு விஷயங்களில் செல்லாத* अभ्यास योग युक्तेन அப்யாஸ யோக யுக்தேன *அப்பியாசம் என்னும் யோகத்தோடு கூடிய* चेतसा சேதஸா *சித்தத்தால்* दिव्यं திவ்யம் *தேஜோமயமான* परमं पुरुषं பரமம் புருஷம் *பரம புருஷனை* अनुचिन्तयन् அனுசிந்தயன் *சிந்தனை செய்கிறவன்* याति யாதி *அடைகிறான்.*

***பார்த்தா, வேறு விஷயங்களில் செல்லாது அப்பியாசம் என்னும் யோகத்தோடு கூடிய சித்தத்தால் தேஜோமயமான பரமபுருஷனைச் சிந்திக்கிறவன் அப் புருஷனை அடைகிறான். 8***

*உபாசனா மூர்த்தியைப் பற்றிய தியானத்தை வாழ் நாள் முழுதும் விடாது திரும்பத் திரும்பச் செய்துகொண்டிருப்பது அப்பியாச யோகமாகிறது. சூரியனைப்போன்று சுயம்பிரகாசமுடையவன் தேஜோமயமான புருஷனாகிறான். அவன் புரி என்னும் தேகத்தின்கண் எழுந்தருளியிருக்*

கிருன் என்பது இயம்பப்பட்டது. நாள்தோறும் அவனை ஒழுங்காக நினைக்க நினைக்க உடல் ஞாபகம் குறைந்து போகிறது. பழுத்த பழம் மேல் தோலினின்று பிரிவது போன்று ஆத்ம போதமானது தேக உணர்ச்சியைக் கடந்து விடுகிறது. அத்தகைய பரிபாகம் அடைந்த யோகியை மரண காலம் நன்கு விளக்கிவிடுகிறது.

எப்படி எனின் :—

**कविं पुराणमनुशासितारमणोरणीयांसमनुस्मरेद्यः ।**
**सर्वस्य धातारमचिन्त्यरूपमादित्यवर्णं तमसः परस्तात् ॥ ९**
**प्रयाणकाले मनसाचलेन भक्त्या युक्तो योगबलेन चैव ।**
**भ्रुवोर्मध्ये प्राणमावेश्य सम्यक् स तं परं पुरुषमुपैति दिव्यम् ॥ १०**

கவிம் புராணமனுசாஸிதார
மணோரணீயாம்ஸ மனுஸ்மரேத்ய: ।
ஸர்வஸ்ய தாதாரமசிந்த்யரூப
மாதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் ॥ 9
ப்ரயாணகாலே மனஸாசலேன
பக்த்யாயுக்தோ யோகபலேன சைவ ।
ப்ருவோர்மத்யே ப்ராணமாவேச்ய ஸம்யக்
ஸ தம் பரம் புருஷமுபைதி திவ்யம் ॥ 10

कविं கவிம் *முற்றும் உணர்ந்தவனை* पुराणं புராணம் *தொல்லோனை* अनुशासितारं அனுசாஸிதாரம் *அனைத்தையும் ஆளுபவனை* अणोः अणीयांसं அணோ: அணீயாம்ஸம் *அணுவினும் நுண்மையனை* सर्वस्य धातारं ஸர்வஸ்ய தாதாரம் *அனைத்தையும் தாங்குபவனை* अचिन्त्य रूपं அசிந்த்ய ரூபம் *சிந்தனைக் கெட்டாத வடிவுடையோனை* आदित्य वर्णम् ஆதித்ய வர்ணம் *கதிரவனைப் போன்று ஒளிர்பவனை* तमसः परस्तात् தமஸ: பரஸ்தாத் *இருளுக்கு அப்பாற்பட்டவனை* प्रयाणकाले ப்ரயாண காலே *மரண காலத்தில்* भक्त्या युक्तः பக்த்யா யுக்த: *பக்தியோடும்* अचलेन मनसा அசலேன மனஸா *உறுதியான மனதோடும்* योगबलेन च एव யோகபலேன ச ஏவ *யோக பலத்தோடும்* भ्रुवोः मध्ये ப்ருவோ: மத்யே *புருவத்தின் மத்தியில்* प्राणं ப்ராணம் *பிராணனை* सम्यक् ஸம்யக் *அடி*

*யோடு* आवेश्य *ஆவேச்ய வைத்து* यः *ய: யார்* अनुस्मरेत् *அனுஸ்மரேத் நினைக்கிறானோ* सः *ஸ: அவன்* तं परं दिव्यं पुरुषं *தம் பரம் திவ்யம் புருஷம் அந்த திவ்ய பரமபுருஷனை* उपैति *உபைதி அடைகிறான்.*

***முற்றும் உணர்ந்தவனை, தொல்லோனை, அனைத்தையும் ஆளுபவனை, அணுவுக்கும் நுண்மையனை, அனைத்தையும் தாங்குபவனை, சிந்தனைக்கு எட்டாத வடிவுடையோனை, கதிரவனைப்போன்று ஒளிர்பவனை, அக்ஞான இருளுக்கு அப்பாற்பட்டவனை, பக்தியோடும் உறுதியான மனதோடும் யோகபலத்தோடும் புருவத்தின் மத்தியில் பிராணன் முழுதையும் வைத்து மரண காலத்தில் யார் நினைக்கிறானோ, அவன் அத்திவ்விய பரமபுருஷனை அடைகிறான்.*** ***9-10***

*இத்தகைய உயர் நிலையில் மனதையும் பிராணனையும் வைத்து, உடலை உகுப்பவனுக்கு பரம்பொருளோடு ஒன்றித்தல் அல்லது பிரம்மநிர்வாணம் அடைதல் சாத்தியப்படுகிறது. அதற்காக அப்பியாச யோகம் உறுதியாதற்கு நாள்தோறும் சிந்தையில் வைக்கவேண்டிய இஷ்ட மூர்த்தியின் அஷ்ட குணங்கள் ஈண்டு வர்ணிக்கப்படுகின்றன. அவையாவன :—*

1. **கவி**—*சர்வக்ஞன், அனைத்தையும் அறிபவன், எவ்விடத்தும் எவ்வுயிர்க்கும் அறிவுக்கு அறிவாய், நுண்ணுணர்வாய் இருப்பதை உன்னிப் பார்க்க.* 2. **புராணன்**—*பழையவன்; பரமாத்மாவுக்கு முன்னவன் யாருமில்லை.* 3. **அனுசாஸிதாரம்**-*உலக நடைமுறை என்ன போக்கில் இருக்க வேண்டுமென்று ஆணையிடுபவன்.* 4. **அணோரணீயாம்ஸம்**—*சூக்ஷ்மத்தில் மிக சூக்ஷ்மம், நுணுக்கரிய நுண்மையன்.* 5. **ஸர்வஸ்ய தாதாரம்**—*தோன்றிய யாவுக்கும் இருப்பிடமாயிருப்பவன். கானல் நீருக்குக் கானல் இருப்பிடமாவது போன்று, அவனிடத்துத் தோன்றிய உலகுக்கு அவனே இருப்பிடமாகிறான்.* 6. **அசிந்த்யரூபம்**—*சித்தியடையாதசித்*

தத்தால் அவனது வடிவம் கிரகிக்கப்படாதது. 7. **ஆதித்ய வர்ணம்**—சூரியனுடைய நிறம் என்றும் மாறாதது. சூரியன் உதிப்பதுமில்லை ; அஸ்தமனம் ஆவதுமில்லை. அதுபோன்று பரமாத்மா சைதன்ய வடிவினன். அவனுடைய சைதன் யத்தில் மாறுதல் ஒன்றும் ஏற்படுவதில்லை. 8. **தமஸ: பரஸ்தாத்**—மேகம் சூரியனை ஒருநாளும் கெடுத்துவிடுவதில்லை. அவ்வாறே அக்ஞான இருள் ஆத்ம சைதன்யத்தைப் பாதிப்பதில்லை.

அசல மனசு, பக்தி, யோகபலம் — இம் மூன்றும் நெருங்கிய தொடர்வுடையவைகள். எக்காரணத்தை முன் னிட்டும் தளர்வடையாத மனது அசலத்தில் பிரதிஷ்டை பெற்றதாகிறது. தூய அன்பே வடிவெடுத்துள்ள மனது பக்தியில் நிலைபெற்றதாகிறது. யோக சாதனங்களை முறை யாகவும் தீவிரமாகவும் அனுஷ்டிக்கின்றவர்களுக்கு இவை அமைவதால் யோக பலம் என்று இவை பெயர் பெறு கின்றன. ஆத்மசாதனங்களெல்லாம் ஒருவனை பலவான் ஆக்குகின்றன.

வலிவுடையவனாக ஆதலே வாழ்க்கையில் முன் னேற்றம் அடைந்துவருதற்கு அறிகுறியாகும். உடல் வலிவு பெற்றுக்கொண்டு வர வர, ஒருவன் வளர்ச்சியடைகிறான். மனவலிவும் வளர்ச்சியைக் குறிக்கிறது. அறிவின் வலிவு அதிலும் மேலானது. யானைப்பாகன் யானையை அடக்கி யாளுதலை அதற்குச் சான்றாக எடுத்துக்கொள்ளலாம். சமுதாயத்தில் அறிவுடையோர் மற்றவர்களைத் தங்கள் காரியத்துக்குப் பயன்படுத்துவதை எக்காலத்திலும் எவ்வி டத்திலும் காணலாம். ஆத்ம பலத்தில் ஏனைய பலங்களெல் லாம் அடங்கிவிடுகின்றன. ஆத்ம பலம் அடையப்பெற்ற வன் மரணத்துக்கு அஞ்சுவதில்லை. மரணத்தை வென்று, அதற்கு அஞ்சாதவீரன் அஞ்சுதற்கு உரியது வேறு எதுவும் எவ்வுலகிலும் இல்லை. எதற்கும் அஞ்சாத பலவான் ஆவதே கீதையின் குறிக்கோள் என்பது இரண்டாவது அத்தியாயத்தின் துவக்கத்திலேயே விளக்கப்பட்டுள்ளது.

புருவங்களுக்கு மத்தியில் பிராணனை வைத்தல்: *விஷய வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள அக்ஞானி ஒருவனுக்கு அந்திய காலத்தில் பிராணன் நவத்துவாரங்களில் கூட்டைவிட்டுப் போகிறது. ஞானிக்கோ அது புருவத்தின் மத்தியில் நின்று, உச்சந்தலையில் பிரம்மரந்தரத்தின் வாயிலாக வெளியேகுகிறது.*

**यदक्षरं वेदविदो वदन्ति विशन्ति यद्यतयो वीतरागाः ।**
**यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति तत्ते पदं संग्रहेण प्रवक्ष्ये ॥ ११**

யதக்ஷரம் வேதவிதோ வதந்தி
விசந்தி யத்யதயோ வீதராகா: ।
யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி
தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவக்ஷ்யே ॥ 11

वेदविद: வேதவித: *வேதத்தை அறிந்தவர்கள்* यत् अक्षरं वदन्ति யத் அக்ஷரம் வதந்தி *எதை அழிவற்றது என்கின்றனர்* वीत रागा: வீத ராகா: *பற்று நீங்கிய* यतय: யதய: *யதிகள் (சன்னியாசிகள்)* यत् विशन्ति யத் விசந்தி *எதனுள் புகுகின்றனர்* यत् इच्छन्त: யத் இச்சந்த: *எதை விரும்பி* ब्रह्मचर्यम् चरन्ति ப்ரஹ்மசர்யம் சரந்தி *பிரம்மசரியத்தைக் கடைப்பிடிக்கின்றனரோ* तत् पदं தத் பதம் *அந்த நிலையை* ते தே *உனக்கு* संग्रहेण ஸங்க்ரஹேண *சுருக்கமாக* प्रवक्ष्ये ப்ரவக்ஷ்யே *சொல்லுகிறேன்.*

***வேதத்தை அறிந்தவர்கள் எதை அழிவற்றது என்கின்றனர், பற்று நீங்கிய துறவிகள் எதனுள் புகுகின்றனர், எதை விரும்பி அவர்கள் பிரம்மசரியத்தைக் கடைப்பிடிக்கின்றனர், அந்த நிலையை உனக்குச் சுருக்கமாகச் சொல்லுகிறேன். 11***

*இயற்கை என்கிற வேதத்தை முறையாக ஆராய்ந்து பார்த்தாலும் சரி; தத்துவ தரிசனம் அடையப்பெற்ற ஆன்றோர்கள் திருவாய் மலர்ந்தருளிய வேத சாஸ்திரங்களை ஆராய்ந்து பார்த்தாலும் சரி; அவைகள் வாயிலாக உண்மையொன்று நமக்குவிளங்கும். அழியும் பாங்குடைய*

*இப்பிரபஞ்சத்தினுள்ளும், இதற்கு ஆதாரமாகவும் பொருளொன்று உள்ளது. அது குணம் குறியற்ற நிர்குணப் பிரம்மம். அக்ஷரம் அல்லது அழிவற்றது எனப்படுவதும் அதுவே. நிராசையில் நிலைநின்று, பிரம்மசரிய விரதத்தை முறையாக அனுஷ்டிக்கின்றவர்களே சன்னியாசிகள் ஆகின்றனர்.*

*பாதரசம் பூசிய கண்ணாடியில் முகம் நன்றாகப் பிரதிபிம்பிப்பது போன்று பிரம்மசரியத்தை நன்றாக அனுஷ்டிக்கின்றவர் உள்ளத்தில் அந்த பிரம்மத்தைப்பற்றிய ஞானம் உண்டாகிறது. நைஷ்டிக பிரம்மசாரிகளிடத்து மேதா என்னும் நாடி உண்டாகிறது அது பேரறிவையும் பிரம்ம ஞானத்தையும் வளர்க்க வல்லது.*

*ஆத்மசாதகன் ஒருவன் காமங்கொண்டவனைப் பெண்களின் படத்தையும் கண்ணெடுத்துப் பார்க்கலாகாது*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**सर्वद्वाराणि संयम्य मनो हृदि निरुध्य च ।**
**मूर्ध्न्याधायात्मनः प्राणमास्थितो योगधारणाम् ॥ १२**
**ओमित्येकाक्षरं ब्रह्म व्याहरन्मामनुस्मरन् ।**
**यः प्रयाति त्यजन्देहं स याति परमां गतिम् ॥ १३**

ஸர்வத்வாராணி ஸம்யம்ய மனோ ஹ்ருதி நிருத்ய ச ।
மூர்த்ன்யாதாயாத்மன: ப்ராணமாஸ்திதோ யோகதாரணும் ॥ 12
ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரன் மாமனுஸ்மரன் ।
ய: ப்ரயாதி த்யஜன் தேஹம் ஸ யாதி பரமாம் கதிம் ॥ 13

सर्वद्वाराणि ஸர்வத்வாராணி *இந்திரியத்துவாரங்கள் எல்லாவற்றையும்* संयम्य ஸம்யம்ய *அடக்கி* मनः हृदि निरुध्य மன: ஹ்ருதி நிருத்ய *மனதை ஹிருதயத்தில் நிறுத்தி* आत्मनः प्राणं ஆத்மன: ப்ராணம் *தன் பிராணனை* मूर्ध्नि आधाय மூர்த்னி ஆதாய *உச்சந்தலையில் வைத்து* योगधारणां யோகதாரணும் *யோக தாரணையில்* आस्थितः ஆஸ்தித: *நிலைபெற்று* ओं इति एकाक्षरं ஓம் இதி ஏகாக்ஷரம் *ஓம் என்கிற ஏகாக்ஷரமாகிய* ब्रह्म ப்ரஹ்ம *பிரம்மத்தை* व्याहरन् வ்யாஹரன் *உச்சரித்துக்*

கொண்டு मां अनुस्मरन् மாம் அநுஸ்மரன் என்னை ஸ்மரித்துக்கொண்டு देहं त्यजन् தேஹம் த்யஜன் உடலை நீத்து यः प्रयाति ய: ப்ரயாதி யார் போகிறானோ सः परमां गतिं याति ஸ பரமாம் கதிம் யாதி அவன் பரம கதியைப் பெறுகிறான்.

***பொறிவாயில் யாவையும் அடக்கி, மனதை ஹிருதயத்தில் நிறுத்தி, தன் பிராணனை உச்சந்தலையில் வைத்து, யோகதாரணையில் நிலைத்திருந்து, 'ஓம்' என்கிற ஏகாக்ஷரமாகிய பிரம்ம மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, என்னை ஸ்மரித்துக்கொண்டு, யார் உடலை நீத்துப் போகிறானோ அவன் பரமகதியைப் பெறுகிறான். 12-13***

யோகி ஒருவனுக்கு உடல் வாழ்க்கை முற்றுப் பெறுகிற நிலை இதுவாம். நதியானது கடலினுள் நுழைவதுபோன்று யோகியினுடைய ஜீவபோதம் பரபோதமாக மாறிவிடுகிறது. அதாவது உடல் வாழ்க்கையோடு சம்பந்தப்பட்ட உணர்ச்சியானது எல்லை கடந்த பேருணர்ச்சியாக விரிவடைந்துவிடுகிறது. அப்பொழுது பொறிவாயில்களாகிய கண், செவி, மூக்கு முதலியவைகளைப் பற்றிய உணர்ச்சி யோகிக்கு இல்லை. உடல் வாழ்க்கை நிகழ்ந்துகொண்டிருந்தபோதும் அவைகள் முரட்டுத்தனமாய் வெளியுலகில் சஞ்சரிக்கவில்லை. தூங்கப்போவதுபோன்று இப்பொழுது அவைகள் தாமாக ஒடுங்கிவிடுகின்றன. அந்திவேளை வரும்போது, தான் வாசம்செய்யும் மரத்துக்குப் பறவையானது பறந்து வருவதுபோன்று, யோகியின் மனது மரணகாலத்தில் ஹிருதயத்தில் அடங்குகிறது. (யோகியர் அல்லாதவர்களுடைய உள்ளம் உலகப் பொருள்களில் பற்றுவைத்துப் பரிந்து திரிகிறது.) உடலெங்கும் சீதம் பரவுகிறது. அதாவது பிராணன் ஒவ்வொரு அவயவத்தையும் விட்டு விலகுகிறது. பிரயாணி ஒருவன் வண்டி நிலயத்துக்கு வந்துசேருவது போன்று பிராணன் யோகியின் உச்சந்தலைக்கு வருகிறது. ஆதலால் உச்சந்தலையில் மட்டும்

நெடுநேரம் கருகருப்பு மிஞ்சியிருக்கும். (யோகியல்லாதவர்க்குப் பிராணன் வாயில் அல்லது மூக்கில் போவது வழக்கம்.) ஈசுவர சிந்தனை வலுத்து ஈசுவரசொரூபத்தில் மனது ஒன்றித்துவிடுவது யோகதாரணையாகும். அப்பொழுது ஓம் என்ற ஓசையொன்றே ஒலித்துக்கொண்டிருக்கிறது. ஓம் என்னும் ஓசையின் வடிவினுகிய பரமாத்மாவின் திவ்விய சொரூபம், அலகில்லா ஜோதி, பேரின்பம், சித் அம்பலம் — இந்நிலையை யோகி அடைந்துவிடுகிறான். மற்றவர்களது உடல் போன்று யோகியின் உடலும் பிணமாய் ஒதுக்கப்படுகிறது. வீடுபேறு அடைந்தது யோகியின் சிறப்பு.

*ஜீவனானது இவ்வுலகத்தைவிட்டுப் போகும் தருணத்தில் கடைசியாக எதைப்பற்றி நினைத்துக் கொண்டிருக்குமோ அதற்குரிய உடலில் மறுபடியும் வந்துபிறக்கின்றது ஆதலால் பக்தி சாதனை மிகவும் அவசியமெனத் தோன்றுகிறது. இடையருத அனுஷ்டானத்தினுல் உலகப் பொருள்களைப் பற்றிய எண்ணம் மனத்தில் உண்டாகாமற்போவதால் ஈசுவரனைப் பற்றிய சிந்தனையே ஆத்மாவினிடம் குடிகொள்ளும். சாகும்தறுவாயிலும் கூட அந்தச் சிந்தனை நீங்குவதில்லை.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

சாகும்பொழுது தானுக அந்த நிலை வந்துவிடுமா? இல்லை. உலகில் வாழ்ந்திருக்கும்போது சாதகன் அதற்குத் தன்னை ஆயத்தப்படுத்தவேண்டும்.

எப்படி மனதை லயப்படுத்துவது எனின் :—

**अनन्यचेताः सततं यो मां स्मरति नित्यशः ।**
**तस्याहं सुलभः पार्थ नित्ययुक्तस्य योगिनः ॥ १४**

அனன்யசேதா: ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச: ।
தஸ்யாஹம் ஸுலப: பார்த்த நித்யயுக்தஸ்ய யோகின: ॥ 14

पार्थ பார்த்த *பார்த்தா* अनन्यचेताः அனன்யசேதா: *வேறு எண்ணமின்றி* यः ய: *யார்* माम् மாம் *என்னை* नित्यशः நித்யச: *நெடிது* सततं ஸததம் *இடையறாது* स्मरति ஸ்மரதி *ஸ்மரிக்கிறான்* तस्य नित्ययुक्तस्य योगिनः தஸ்ய நித்யயுக்தஸ்ய யோகின: *அந்த ஒருநிலைப்பட்ட யோகிக்கு* अहं அஹம் *நான்* सुलभः ஸுலப: *எளிதில் அகப்படுவேன்.*

**பார்த்தா, வேறு எண்ணமின்றி யார் என்னை நெடிது இடையறாது ஸ்மரிக்கிறானோ, அந்த ஒரு நிலைப்பட்ட யோகிக்கு நான் எளிதில் அகப்படுகிறேன். 14**

*அவன் அடியார்க்கு எளியவன். நாம் முழுமனதை அவனிடத்துத் திருப்பாமையால் அவனை அடைகிறதில்லை.*

*பொருள் உடையவர்க்கே மேலும் பொருள்சேருவது போன்று அருள் உடையவர்க்கே மேலும் அருள் வளர்ந்து கொண்டு போகிறது.*

*பகவானை நோக்கி நாம் ஒரு அடி வைத்தால் அவன் நம்மை நோக்கிப் பத்து அடி வருகிறான்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम् ।
नाप्नुवन्ति महात्मानः संसिद्धिं परमां गताः ॥ १५

மாமுபேத்ய புனர்ஜன்ம து: காலயமசாச்வதம் ।
நாப்னுவந்தி மஹாத்மான: ஸம்ஸித்திம் பரமாம் கதா: ॥ 15

परमां संसिद्धिं பரமாம் ஸம்ஸித்திம் *பரம பக்குவத்தை* गताः கதா: *அடைந்த* महात्मानः மஹாத்மான: *மஹாத்மாக்கள்* मां उपेत्य மாம் உபேத்ய *என்னை அடைந்து* दुःखालयं து:காலயம் *துன்பத்துக்கு இருப்பிடம்* अशाश्वतं அசாச்வதம் *நிலையற்றது* पुनर्जन्म (पुनः + जन्म) புனர்ஜன்ம *மறுபிறப்பை* न आप्नुवन्ति ந ஆப்னுவந்தி *அடைகிறதில்லை.*

**பரம பக்குவப்பட்ட மகாத்மாக்கள் என்னை அடைந்து, துன்பத்துக்கு இருப்பிடமும் நிலையற்றதுமாகிய மறுபிறப்பை எடுப்பதில்லை. 15**

*மனிதன் தன்னை எதற்குத் தகுதியுடையவனாக்குகின்றானோ அதைத்தான் அவன் பெறுகின்றான். பகவானைப் பெறத்தகுந்தவனுக்கு பகவான் தன்னைக் கொடுத்துவிடுகிறான். பகவானை அடைந்தவனுக்கோ பிறவிப்பிணியில்லை. இறைவனை அடைந்தவர் “ இன்பமே எந்நாளும் துன்பமில்லை ” என்கின்றனர். பிறப்பு எப்பொழுதும் மாறுபடும்*

*தன்மையுடையது. பிறவி எது, பிறவாமை எது என்று கேட்குமிடத்து :—*

**आब्रह्मभुवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन ।**
**मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते ॥ १६**

ஆப்ரஹ்மபுவனால்லோகா: புனராவர்திநோऽர்ஜுன ।
மாமுபேத்ய து கௌந்தேய புனர்ஜன்ம ந வித்யதே ॥ 16

अर्जुन அர்ஜுன *அர்ஜுனா* आब्रह्मभुवनात् ஆப்ரஹ்மபுவனாத் *பிரம்ம லோகம் வரை* लोकाः லோகா: *உலகங்கள்* पुनरावर्तिनः (पुनः + आवर्तिनः) புனராவர்த்தின: *மறுபிறப்புடையவைகள்* तु து *ஆனால்* कौन्तेय கௌந்தேய *குந்தியின் புதல்வா* मां மாம் *என்னை* उपेत्य உபேத்ய *அடைந்தால்* पुनर्जन्म புனர்ஜன்ம *மறு பிறப்பு* न विद्यते ந வித்யதே *இல்லை.*

***அர்ஜுனா, பிரம்மலோகம் வரையில் உள்ள உலகங்களுக்கு மறுபிறப்புண்டு; குந்தியின் மைந்தா, மற்று என்னை அடைந்தவனுக்கு மறுபிறப்பில்லை.*** **16**

*உலகம் என்பது இங்கு ஆகுபெயர். பிரம்மலோகப் பரியந்தம் எல்லா உலகங்களுக்கும் தோற்றமும் மறைவும் இருக்கின்றன. ஆதலால் அந்த உலகங்களில் உள்ள ஜீவர்களும் பிறக்கவும் இறக்கவும் செய்கின்றனர். அத்தகைய உலகங்களில் அடையும் பேறுக்கு பதவி முக்தி என்று பெயர். சாலோக்யம், சாமீப்யம், சாரூப்யம் என்று அப்பதவி பலதரப்படுகிறது. இப்பதவிகள் காலத்துக்கு உட்பட்டவைகள். ஆனால் கிரமமுக்தியில் போகின்றவர்கள் வழிப் போக்கர்களாகப் பிரம்மலோகத்தில் தங்குகின்றனர். அவர்கள் மண்ணுலகுக்குத் திரும்பி வருவதில்லை. ஆங்கு அவர்கள் மேலும் பரிபக்குவம் அடைந்து பரத்தினை அடைகின்றனர். ஆனால் இவ்வுலகிலிருந்தே நேர் பரத்தினை அடைகின்றவர்கள் விதேகமுக்தி என்னும் பேரின்பவீடு அடைகின்றனர்.*

*வேகவைத்த நெல்லை பூமியில் விதைத்தால் அது மறுபடியும் பயிராக முளைக்காது. அதுபோல சித்தனான பிறகு ஒருவன் இறப்பானால் அவன் மறு ஜென்மம் அடைவதில்லை.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*பிரம்மாவின் நாள் :—*

**सहस्रयुगपर्यन्तमहर्यद्ब्रह्मणो विदुः ।**
**रात्रिं युगसहस्रान्तां तेऽहोरात्रविदो जनाः ॥ १७**

ஸஹஸ்ரயுகபர்யந்த மஹர்யத்ப்ரஹ்மணோ விது: ।
ராத்ரிம் யுக ஸஹஸ்ராந்தாம் தேऽஹோராத்ரவிதோ ஜநா: ॥ 17

सहस्रयुगपर्यन्तं ஸஹஸ்ரயுகபர்யந்தம் *ஆயிரம் யுகங்களை முடிவாயுடையது* ब्रह्मण: ப்ரஹ்மண: *பிரம்மாவினுடைய* यत् யத் *எது* अह: அஹ: *பகல்* युगसहस्रान्तां யுகஸஹஸ்ராந்தாம் *ஆயிரம் யுகங்களை முடிவாயுடையது* रात्रिं ராத்ரிம் *இரவை* विदु: விது: *அறிகிற* ते जना: தே ஜநா: *அம்மனிதர்கள்* अहोरात्रविद: அஹோராத்ரவித: *பகலையும் இரவையும் அறிந்தவர்கள்.*

***ஆயிரம் யுகம் பிரம்மாவுக்கு ஒரு பகல் என்றும், ஆயிரம் யுகம் அவருக்கு ஓர் இரவு என்றும் அறிபவர் இராப்பகலின் தத்துவத்தை அறிபவர் ஆகின்றனர்.*** ***17***

*ஒருவாரம் என்பதில் ஏழு நாள் அடங்கியிருப்பது போன்று, ஒரு யுகத்தில் கிருத, திரேதா, துவாபர, கலி ஆகிய நான்கு யுகங்களும் அடங்கியிருக்கின்றன. இப்படி ஆயிரம் சதுர்யுகம் சேர்ந்தது பிரம்மாவின் ஒரு பகல்; இன்னும் ஓர் ஆயிரம் சதுர்யுகம் சேர்ந்தது ஓர் இரவு. இப்படி ஒரு பகலும் இரவும் சேர்ந்தது பிரம்மாவுக்கு ஒரு நாள். 365 நாள் சேர்ந்தது ஒரு வருஷம். நூறு வருஷம் அவருடைய பூரண ஆயுள்.*

*இங்ஙனம் காலமானது காலாதீதத்தில் புரண்டோடுகிறது. காலம் எல்லையில் அடங்காதது என்பதும், இடம் அல்லது வெட்டவெளி எல்லையில் அடங்காதது என்பதும்*

நவீன வானசாஸ்திரம் கற்பவர்களுக்கு நன்கு விளங்கும். நமக்குத்தென்படும் இந்த அண்டம் எவ்வளவு பெரியது என்று அறியுமளவு நமது மனம் அகண்டாகார விருத்தி பெறும். நாம் பற்றுவைத்துள்ள இச்சிறு உடலும் உலகும் மிக அற்பமானவை என்பது அப்பொழுது விளங்கும்.

अव्यक्ताद्व्यक्तयः सर्वाः प्रभवन्त्यहरागमे ।
रात्र्यागमे प्रलीयन्ते तत्रैवाव्यक्तसंज्ञके ॥ १८

அவ்யக்தாத்வ்யக்தய: ஸர்வா: ப்ரபவந்த்யஹராகமே ।
ராத்ர்யாகமே ப்ரலீயந்தே தத்ரைவாவ்யக்த ஸம்ஜ்ஞகே ॥ 18

अहः आगमे அஹ: ஆகமே *பகல் வரும் பொழுது* अव्यक्तात् அவ்யக்தாத் *தோன்றா நிலையிலிருந்து* सर्वाः व्यक्तयः ஸர்வா: வ்யக்தய: *எல்லா தோற்றங்களும்* प्रभवन्ति ப்ரபவந்தி *வெளிப்படுகின்றன* रात्रि आगमे ராத்ரி ஆகமே *இரவு வரும் பொழுது* अव्यक्तसंज्ञके அவ்யக்தஸம்ஜ்ஞகே *ஒடுங்கியது என்று சொல்லப்படுகிற* तत्र एव தத்ர ஏவ *அதனுள்ளேயே* प्रलीयन्ते ப்ரலீயந்தே *மறைகின்றன.*

***(பிரம்மாவின்) பகல் வரும்பொழுது தோன்றா நிலையிலிருந்து தோற்றங்கள் யாவும் வெளிப்படுகின்றன. இரவு வரும்பொழுது ஒடுக்கம் என்பதனுள் அவைகள் மறைகின்றன. 18***

ஒவ்வொரு ஜீவனும் உறங்கப்போகும்பொழுது அவனது உலகம் அவனது உள்ளத்தில் ஒடுங்குகிறது; விழித்து எழுங்கால் அவனது உலகமும் விரிகிறது. அதே போன்று பிரம்மாவின் உறக்க விழிப்பில் அகிலாண்டங்களும் மறைபவும் தோன்றவும் செய்கின்றன. இத்தோற்றமும் ஒடுக்கமும் சிருஷ்டி சம்ஹாரம் எனவும் பெயர்பெறுகின்றன. ஒரு பிரம்மாவுக்கு இங்ஙனம் ஆயுள் முடியும் போது அவர் கிரமமுக்தியடைகிறார்.

ஜீவன் ஒருவன் ஜீவபோதத்தில் இருந்துகொண்டே அடையும் பதவிகளில் தலையாயது பிரகிருதிலயம் என்பது. ஒரு பிரம்மா முக்தியடைந்த பிறகு பிரகிருதிலயத்தின்

மூலம் அவருக்கு அடுத்தபடி அப்பதவிக்குத் தகுதியாயிருப்பவர் அந்த ஸ்தானத்துக்கு அவரைப் பின்பற்றுகிறார்.

**भूतग्रामः स एवायं भूत्वा भूत्वा प्रलीयते ।**
**रात्र्यागमेऽवशः पार्थ प्रभवत्यहरागमे ॥ १९**

பூதக்ராம: ஸ ஏவாயம் பூத்வா பூத்வா ப்ரலீயதே ।
ராத்ர்யாகமேऽவச: பார்த்த ப்ரபவத்யஹராகமே ॥ 19

पार्थ பார்த்த *பார்த்தா* स एव अयं ஸ ஏவ அயம் *அதே இந்த* भूतग्रामः பூதக்ராம: *உயிர்த்தொகை* भूत्वा भूत्वा பூத்வா பூத்வா *பிறந்து பிறந்து* रात्रि आगमे ராத்ரி ஆகமே *இரவு வரும் பொழுது* प्रलीयते ப்ரலீயதே *ஒடுங்குகிறது* अहः आगमे அஹ: ஆகமே *பகல் வரும்பொழுது* अवशः அவச: *தன்வசமின்றி* प्रभवति ப்ரபவதி *வெளிப்படுகிறது.*

***அர்ஜுனா, அதே இந்த உயிர்த்தொகை பிறந்து பிறந்து இரவுவரும்பொழுது தன்வசமின்றி ஒடுங்குகிறது; பகல் வரும்பொழுது வெளிப்படு 19***

*கரும வசப்பட்டிருப்பதால் உயிர் வகைகளுக்குத் தன்வசம் என்பது இல்லை. கரும வசத்தால் அவைகள் கற்பாந்தரத்தில் மறையவும் கற்பாரம்பத்தில் தோன்றவும் செய்கின்றன. பல கற்பங்களுக்குப் பிறகும் அவரவர் கர்மமே அவரவரைத் தொடர்ந்து வருகிறது.*

**परस्तस्मात्तु भावोऽन्योऽव्यक्तोऽव्यक्तात्सनातनः ।**
**यः स सर्वेषु भूतेषु नश्यत्सु न विनश्यति ॥ २०**

பரஸ்தஸ்மாத்து பாவோऽன்யோऽவ்யக்தோऽவ்யக்தாத் ஸநா- [தன:
ய: ஸ ஸர்வேஷு பூதேஷு நச்யத்ஸு ந விநச்யதி ॥ 20

तु து *ஆனால்* तस्मात् अव्यक्तात् தஸ்மாத் அவ்யக்தாத் *அந்த அவ்யக்தத்தைக் காட்டிலும்* परः பர: *மேலான* अन्यः அன்ய: *வேறு* अव्यक्तः அவ்யக்த: *அவ்யக்தமாய்* सनातनः ஸனாதன: *ஸனாதனமாய்* यः ய: *எது* भावः பாவ: *உளதோ* सः ஸ: *அது* सर्वेषु भूतेषु ஸர்வேஷு

பூதேஷு எல்லா உயிர்களும் नश्यत्सु நச்யந்ஸு அழியுங்கால் न विनश्यति ந வினச்யதி அழிகிறதில்லை.

**ஆனால் அந்த அவ்யக்தத்தைக் காட்டிலும் மேலான, நிலைத்துள்ள அவ்யக்தமொன்று உளது. உயிர்களெல்லாம் அழியும்பொழுதும் அது அழிகிறதில்லை.** *20*

*பிரம்மா உட்பட தோன்றியுள்ள அனைத்தும் தோன்றாநிலைக்குப் போகும்பொழுது அவ்யக்தம் என்று பெயர் பெறுகிறது. நீரானது ஆவியாகும்பொழுது கட்புலனாவதில்லை. அங்ஙனம் பிரம்மாவின் சிருஷ்டி மறையும்பொழுது புலன்களுக்குத் தென்படுவதில்லை; அவித்தையில் மறைந்து கிடக்கின்றது. மற்றொரு அவ்யக்தம் இதற்கு அன்னியமாக, பரமாக, ஸநாதனமாக இருக்கிறது. அது இந்திரியங்களுக்கு எப்பொழுதுமே எட்டுவதில்லை. வந்துள்ள உயிர்களுக்குப் போக்கு இருக்கிறது. அது போக்கும் வரவும் இல்லாதது. என்றென்றைக்கும் அது தன்மயமாயிருக்கிறது.*

*அதன் சொரூபம் எத்தகையது என்று மேலும் ஆராயுமிடத்து:—*

**अव्यक्तोऽक्षर इत्युक्तस्तमाहुः परमां गतिम् ।**
**यं प्राप्य न निवर्तन्ते तद्धाम परमं मम ॥ २१**

அவ்யக்தோऽக்ஷர இத்யுக்தஸ்தமாஹு: பரமாம் கதிம் ।
யம் ப்ராப்ய ந நிவர்தந்தே தத்தாம பரமம் மம ‖ 21

अव्यक्तः அவ்யக்த: *அவ்யக்தம்* अक्षरः அக்ஷர: *அக்ஷரம்* इति उक्तः இதி உக்த: *என்று சொல்லப்படுகிற* तम् தம் *அதை* परमां गतिं பரமாம் கதிம் *பரமகதி என்று* आहुः ஆஹு: *சொல்லுவர்* यम् யம் *எதை* प्राप्य ப்ராப்ய *அடைந்து* न निवर्तन्ते ந நிவர்தந்தே *திரும்பி வருவதில்லையோ* तत् தத் *அது* मम மம *என்னுடைய* परमं धाम பரமம் தாம *பரமபதம்.*

**அவ்யக்தம், அக்ஷரம் என்று சொல்லப்படுவதைப் பரமகதி என்று சொல்லுவர். எதை அடைந்து**

**(உயிர்கள்) திரும்பி வருவதில்லையோ, அது என்னுடைய பரமபதம். 21**

*அவ்யக்தம் என்பது இந்திரியங்களுக்கு எட்டாதது. அக்ஷரம் என்றால் பழுதுபடாதது.*

*பரப்பிரம்மம் எப்பொழுதுமே இந்திரியங்களுக்கு எட்டாததாகவும் பழுதுபடாததாகவும் இருக்கிறது. தோன்றா நிலையிலுள்ள பிரகிருதியும் அவ்யக்தம் என்று சொல்லப்படுகிறது. பரப்பிரம்மமும் அவ்யக்தமென்று சொல்லப்படுகிறது. ஆனால் இரண்டுக்குமுள்ள பொருள் வேற்றுமையைக் கருத்தில் வைக்கவேண்டும். பிரகிருதி க்ஷரம் அல்லது அழியும் தன்மையது. பிரம்மமோ அக்ஷரம். பிரகிருதியில் ஒடுங்குபவைகள் திரும்பவும் தோன்றுகின்றன. பிரம்மத்தில் ஒடுங்குபவைகள் தோற்றத்துக்குத் திரும்பி வருவதில்லை. பிரம்மத்துக்கு ஒப்பானது வேறு எதுவும் இல்லையாதலால், அது பரமபதம் எனப்படுகிறது.*

*அதை அடையும் வழி:—*

पुरुषः स परः पार्थ भक्त्या लभ्यस्त्वनन्यया ।
यस्यान्तःस्थानि भूतानि येन सर्वमिदं ततम् ॥ २२

புருஷ: ஸ பர: பார்த்த பக்த்யா லப்யஸ்த்வனன்யயா ।
யஸ்யாந்த: ஸ்தானி பூதானி யேன ஸர்வமிதம் ததம் ॥ 22

पार्थ பார்த்த *அர்ஜுனா* भूतानि பூதானி *உயிர்கள்* यस्य अन्तःस्थानि யஸ்ய அந்த: ஸ்தானி *எவனுள் இருக்கின்றனவோ* येन யேன *எவனால்* इदं सर्वं இதம் ஸர்வம் *இவை யாவும்* ततं து ததம் து *வியாபிக்கப்பட்டும் இருக்கின்றனவோ* सः परः पुरुषः ஸ: பர: புருஷ: *அந்தப் பரம புருஷன்* अनन्यया भक्त्या அனன்யயா பக்த்யா *அனன்ய பக்தியால்* लभ्यः லப்ய: *அடையப்படுகிறான்.*

**அர்ஜுனா, உயிர்கள் எவனுள் இருக்கின்றனவோ, எவனால் இவை யாவும் வியாபிக்கப்பட்டும் இருக்கின்றனவோ, அந்தப் பரம புருஷன் அனன்ய பக்தியால் அடையப்படுகிறான். 22**

*அனன்ய பக்தி என்பது வேறு ஒன்றையும் நினையாது அவனிடத்திலேயே செலுத்தும் பக்தி. இதை ஆத்ம சொரூபானுசந்தானம் என்பர். கடலுக்குள் மலைகள் இருக்கின்றன. ஆனால் அம்மலைகளுள் கடல் ஊடுருவிப் பாய்ந்து வியாபகமாயில்லை. ஸ்தூல வஸ்துவுக்கு வியாபகமும், தன்னகத்து அனைத்தையும் அடக்கும் வல்லமையும் இல்லை. ஆகாசத்தில் ஏனைய பூதங்களெல்லாம் அடங்கியிருக்கின்றன. மண், புனல், தீ, காற்று ஆகிய பூதங்களில் ஆகாசமானது நீக்கமற எங்கும் நிறைந்து இருக்கிறது. அங்ஙனமே சிதாகாசமாகிய பரம்பொருளில் சரம், அசரம் அனைத்தும் அடங்கியிருக்கின்றன. மேலும் அந்த சிதாகாசம் ஒன்றே எல்லாப் பொருள்களுள்ளும் பிரிவற நிறைந்திருக்கின்றது.*

*கடவுள் எல்லாரிடத்திலும் இருக்கிறார்; ஆனால் எல்லாரும் கடவுளிடத்து இல்லை.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**यत्र काले त्वनावृत्तिमावृत्तिं चैव योगिनः ।**
**प्रयाता यान्ति तं कालं वक्ष्यामि भरतर्षभ ॥ २३**

யத்ர காலே த்வனாவ்ருத்திமாவ்ருத்திம் சைவ யோகின: ।
ப்ரயாதா யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி பரதர்ஷப ॥ 23

भरतर्षभ பரதர்ஷப *பரதகுலப் பெருமகனே* यत्र काले तु யத்ர காலே து *எக்காலத்தில்* प्रयाताः योगिनः ப்ரயாதா: யோகின: *இறக்கின்ற யோகிகள்* अनावृत्तिं அனாவ்ருத்திம் *திரும்பி வாராமையையும்* आवृत्तिं च एव ஆவ்ருத்திம் ச ஏவ *திரும்பி வருதலையும்* यान्ति யாந்தி *அடைகின்றார்களோ* तं कालं தம் காலம் *அந்தக் காலத்தை* वक्ष्यामि வக்ஷ்யாமி *சொல்லுகிறேன்.*

***பரதகுலப் பெருமகனே, எக்காலத்தில் உடலை விட்டுப் போகின்ற யோகிகள் முக்தியடைகின்றனரோ, எக்காலத்தில் போகின்றவர்கள் பிறக்கின்றனரோ, அக்காலத்தைச் சொல்லுகிறேன். 23***

**अग्निर्ज्योतिरहः शुक्लः षण्मासा उत्तरायणम् ।**
**तत्र प्रयाता गच्छन्ति ब्रह्म ब्रह्मविदो जनाः ॥ २४**

அக்னிர் ஜ்யோதிரஹ: சுக்ல: ஷண்மாஸா உத்தராயணம் |
தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்மவிதோ ஜனா: || 24

अग्निः அக்னி: *தீ* ज्योतिः ஜ்யோதி: *ஒளி* अहः அஹ: *பகல்* शुक्लः சுக்ல: *சுக்லபக்ஷம்* षण्मासाः ஷண்மாஸா: *ஆறு மாதம்* उत्तरायणं உத்தராயணம் *உத்தராயணம்* तत्र தத்ர *அதில்* प्रयाताः ப்ரயாதா: *போன* ब्रह्मविदः जनाः ப்ரஹ்மவித: ஜனா: *பிரம்ம ஞானிகளாகிய ஜனங்கள்* ब्रह्म ப்ரஹ்ம *பிரம்மத்தை* गच्छन्ति கச்சந்தி *அடைகிறார்கள்.*

***தீ, ஒளி, பகல், சுக்கிலபக்ஷம், உத்தராயணத்தின் ஆறு மாதங்கள் - இவைகளில் உடலை நீத்துப் போகின்ற பிரம்மஞானிகள் பிரம்மத்தை அடைகிறார்கள். 24***

धूमो रात्रिस्तथा कृष्णः षण्मासा दक्षिणायनम् ।
तत्र चान्द्रमसं ज्योतिर्योगी प्राप्य निवर्तते ॥ २५

தூமோ ராத்ரிஸ்ததா க்ருஷ்ண: ஷண்மாஸா தக்ஷிணாயனம் |
தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிர் யோகீ ப்ராப்ய நிவர்ததே || 25

धूमः தூம: *புகை* रात्रिः ராத்ரி: *இரவு* तथा ததா *அங்ஙனமே* कृष्णः க்ருஷ்ண: *கிருஷ்ண பக்ஷம்* षण्मासाः दक्षिणायनं ஷண்மாஸா: தக்ஷிணாயனம் *தக்ஷிணாயனத்தின் ஆறு மாதங்கள்* तत्र தத்ர *அதில்* योगी யோகீ *யோகியானவன்* चान्द्रमसं ज्योतिः சாந்த்ரமஸம் ஜ்யோதி: *சந்திரனது ஒளியை* प्राप्य ப்ராப்ய *அடைந்து* निवर्तते நிவர்ததே *திரும்பிவ.*

***புகை, இரவு, கிருஷ்ணபக்ஷம், தக்ஷிணாயனத்தின் ஆறு மாதங்கள் - இவைகளில் போகின்றயோகி, சந்திரனது ஒளியைப் பெற்றிருந்து மறுபிறவியடைகிறான். 25***

शुक्लकृष्णे गती ह्येते जगतः शाश्वते मते ।
एकया यात्यनावृत्तिमन्ययावर्तते पुनः ॥ २६

சுக்லக்ருஷ்ணே கதீ ஹ்யேதே ஜகத: சாச்வதே மதே |
ஏகயா யாத்யனாவ்ருத்திமன்யயாவர்ததே புன: || 26

हि ஹி *நிச்சயமாக* जगतः ஜகத: *ஜகத்தினுடைய* शुक्लकृष्णे एते गती சுக்லக்ருஷ்ணே ஏதே கதீ *ஒளியும் இருளும் ஆகிய வழிகள்* शाश्वते मते சாச்வதே மதே *சாச்வதமானவைகளென்று கருதப்படுகின்றன* एकया ஏகயா *ஒன்றினால்* अनावृत्तिं அநாவ்ருத்திம் *பிறவாமையை* याति யாதி *அடைகிறான்* अन्यया அன்யயா *மற்றென்றினால்* पुनः புன: *திரும்பவும்* आवर्तते ஆவர்த்ததே *பிறக்கிறான்.*

***ஒளியும் இருளும் ஆகிய இவ்விரண்டுவழிகள் இயற்கையில் என்றென்றும் உள்ளவை என்று எண்ணப்படுகின்றன. ஒன்று பிறவாமைக்குப் போவது; மற்றொன்று பிறப்பைத் தருவது.*** **26**

24, 25, 26 இம்மூன்று சுலோகங்களின் உட்கருத்து சிந்தனைக்குரியது. மரணத்தின் வாயிலாக மறுபிறப்புக்குப் போம் ஜீவர்கள் தேவயானம், பித்ருயானம் என்னும் இரண்டு மார்க்கங்களில் செல்லுகின்றன. அவைகளை முறையே ஜோதிர் மார்க்கமென்றும் தூம மார்க்கமென்றும் பகர்வதுண்டு. முந்தையது ஒளி நிறைந்தது; பிந்தையது இருள் சூழ்ந்தது. ஒன்று படிப்படியாக ஜீவனை உயர் நிலைக்கு எடுத்துச் செல்லவல்லது மற்றது மனிதனை நெடுங் காலம் இடைநிலையிலும் கடைநிலையிலும் வைத்துவிடுகிறது. இனி, இவ்விரண்டு மார்க்கங்களுக்கு இந்தச் சுலோகங்களில் வந்துள்ள பதங்களுக்கு வாச்சியார்த்தம் (literal meaning) எடுத்துக்கொண்டால் குறைபாடுகள் பல தென்படும். எப்படியென்று ஆராய்ந்து பார்ப்போம். அக்னி, ஜோதி நிறைந்த சூழ்நிலையில் மரணமடைபவன் மேன்மையடைகிறான். புகையில் மூடுபட்டு மறைபவன் கீழ்மையடைகிறான். ஒருவன் உயிர் துறக்கும்போது வீட்டில் கொழுந்து விட்டு எரியும் அக்னியும் மின்விளக்கு ஜோதியும் நிறைந்திருக்கும்படி சுலபத்தில் செய்துவிடலாம். ஆனால் அதை முன்னிட்டு மறுபிறப்பில் மேன்மை வந்தமைகிறது என்பது யுக்திக்கும் அனுபவத்துக்கும் சிறிதும் பொருந்தாது. அடுத்த படியாகப் பகலில் சாகின்றவனுக்கு ஜோதிர்மார்க்கமென்

றும் இரவில் சாகின்றவனுக்கு தூமமார்க்கமென்றும் சொல்லப்படுகிறது. இன்றைக்கு ஆகாய விமானத்தின் துணைகொண்டு என்றென்றும் சூரியன் தென்படுகிற இடங்களில் சென்று வசிக்கலாம். பின்பு அதை முன்னிட்டு மேலாம் பிறவி வருகிறது என்பது பொருந்தாது. வளர்பிறையில் வரும் சுக்லபக்ஷம் மேன்மைக்குரியது; தேய்பிறையில் வரும் கிருஷ்ண பக்ஷம் கீழ்மைக்குரியது. இந்த ஒரு சூழ்நிலையை வெல்ல நவீனத்தில் அமைந்துள்ள உபாயம் எதுவும் உதவாது. இனி, உத்தராயணம் சூரிய வெளிச்சம் நிறைந்தது. தக்ஷிணாயனம் இருள் நிறைந்தது. ஆனால் ஆகாய விமானத்தின் துணைகொண்டு மனிதன் தக்ஷிணாயன காலத்தில் ஆஸ்திரேலியாவுக்கும் தென் அமெரிக்காவுக்கும் போய்விடுவானானால், அதே தக்ஷிணாயனம் அவனுக்குப் புண்ணிய காலம் ஆய்விடும். ஏனென்றால் சூரிய வெளிச்சம் அப்பொழுது ஆங்கு அதிகமாக இருக்கிறது. ஆக, மனிதன் அடையும் மேன்மையும் கீழ்மையும் மரணத்தின்போது அவனுக்கு அமையும் காலத்தையும், இடத்தையும், சூழ்நிலையையும் முன்னிட்டு அல்ல என்பது வெளியாகிறது.

வெளிச்சத்துக்கு அறிகுறியாகும் காலம், இடம்; இருளுக்கு அறிகுறியாகும் காலம், இடம்; ஆக இருவகையாக அவை பிரிக்கப்பட்டிருக்கின்றன. இவ்விரண்டும் ஆத்ம தத்துவத்துக்கு ரூபகமாக அமைந்தவையாகும். படிப்படியாக மேல்நிலைக்குப் போகும் ஜீவன் ஆத்மப்பிரகாசம் அடைகிறது. முன்னேற்றமடையாது இருந்தபடி இருக்கும் ஜீவனும் படிப்படியாகக் கீழ்நிலைக்குப்போகும் ஜீவனும் அக்ஞான இருளில் மறைபவையாகின்றன. வாழ்நாளில் ஒரு ஜீவன் அடைந்துள்ள மேன்மை அல்லது கீழ்மையை அவனது மரணம் விளக்கும். அணையும்போது தீபம் அதிகம் சுடர்விடுவதுண்டு. நல்லார் அங்ஙனம் உடல் நீக்கும்போது பிரக்ஞை தெளிவடைவதுண்டு. பிரக்ஞையின் தெளிவுக்கு ஏற்றவாறு அதை அக்னி, ஜோதி, பகல், சுக்ல பக்ஷம், உத்தராயணம் என்று இயற்கையோடு ஒப்பிட்டு

வகைப்படுத்தினார்கள். அதேபோங்கில் பிரக்ஞையின் மறை வுக்கு ஏற்றபடி புகை, இரவு, கிருஷ்ணபக்ஷம், தக்ஷிணாயனம் என்று வகைப்படுத்தினார்கள். பல ஜன்மாந்தரங்களில் மேலும் மேலும் ஆத்ம ஞானப் பிரகாசம் அடைபவர் மேலோர், மற்றவர்கள் கீழோர் என்பது இதன் கோட்பா டாகும்.

नैते सृती पार्थ जानन् योगी मुह्यति कश्चन ।
तस्मात्सर्वेषु कालेषु योगयुक्तो भवार्जुन ॥ २७

நைதே ஸ்ருதீ பார்த்த ஜானன் யோகீ முஹ்யதி கஸ்சன ।
தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு யோகயுக்தோ பவார்ஜுன ॥ 27

पार्थ பார்த்த *பார்த்த* एते सृती ஏதே ஸ்ருதீ *இவ்விரண்டு வழி களையும்* जानन् ஜானன் *அறிகிற* कश्चन கஸ்சன *எந்த* योगी யோகீ *யோகியும்* न मुह्यति ந முஹ்யதி *மோகத்தையடைகிறதில்லை* तस्मात् தஸ் மாத் *ஆகையினால்* अर्जुन அர்ஜுன *அர்ஜுனா* सर्वेषु कालेषु ஸர்வேஷு காலேஷு *எப்பொழுதும்* योगयुक्तः யோகயுக்த: *யோகத்தில் நிலைத்த வனாக* भव பவ *இரு*.

***இவ்விரண்டு வழிகளையும் அறிகிற எந்த யோகியும் மோகத்தை யடைகிறதில்லை. ஆகையால் அர்ஜுனா, எப்பொழுதும் யோகத்தில் நிலைத்தவனா யிரு.*** **27**

*குறிப்பிட்ட வேளைகளில் மட்டும் யோக சாதனம் பயிலுதல் என்பதின்றி, எத்தொழிலைச் செய்தாலும், யாத வஸ்தைப்பட்டாலும் அவைகளுக்கெல்லாம் இடையில் யோகபரனாய், ஸகஜ நிஷ்டையில் இருப்பவன் மேலேசொல் லிய இரண்டு வழிகளில் சுக்ல கதி அல்லது ஜோதிர் மார்க் கத்தில் செல்பவனாகின்றான்.*

*கப்பல் எத்திசையில் போய்க்கொண்டிருந்தாலும் அதில் உள்ள திசைகாட்டி முள் வடதுருவத்தையே நோக்கி நிற்கிறது. அங்ஙனம் மனிதன் எதைச் செய்துகொண்டிருந்தாலும் அவனது மனது யாண்டும் சர்வேசுவரனிடத்தே நிலைத்திருக்கட்டும்.*

— **ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்**

वेदेषु यज्ञेषु तपःसु चैव दानेषु यत्पुण्यफलं प्रदिष्टम् ।
अत्येति तत्सर्वमिदं विदित्वा योगी परं स्थानमुपैति चाद्यम् ॥ २८

யக்ஞேஷு தப:ஸு சைவ
தானேஷு யத்புண்யபலம் ப்ரதிஷ்டம் ।
அத்யேதி தத்ஸர்வமிதம் விதித்வா
யோகீ பரம் ஸ்தானமுபைதி சாத்யம் ॥ 28

वेदेषु வேதேஷு *வேதங்களை அத்யயனம் பண்ணுவதிலும* यज्ञेषु யக்ஞேஷு *யாகங்களைச் செய்வதிலும்* तपःसु தப:ஸு *தவம் செய்வதிலும்* दानेषु च தானேஷு ச *தானங்களைக் கொடுப்பதிலும்* एव ஏவ *கூட* यत् யத் *எந்த* पुण्यफलं புண்யபலம் *புண்ய பலனானது* प्रदिष्टम् ப்ரதிஷ்டம் *சொல்லப்பட்டிருக்கிறதோ* इदम् இதம் *இதை* विदित्वा விதித்வா *அறிந்து* योगी யோகீ *யோகியானவன்* तत् सर्वं தத் ஸர்வம் *அதையெல்லாம்* अत्येति அத்யேதி *கடந்து செல்லுகிறன்* आद्यं परं स्थानं ஆத்யம் பரம் ஸ்தானம் *ஆதியாகிய பர நிலையை* उपैति உபைதி *அடைகிறன்.*

***இதை அறியும் யோகியானவன் வேதம், வேள்வி, தவம், தானம் ஆகியவைகளின் நற்பலனைக் கடந்து ஆதியாம் பரநிலையை அடைகிருன். 28***

*இந்த அத்யாயத்தின் ஆரம்பத்தில் அர்ஜுனன் கேட்ட ஏழு கேள்விகளுக்கும் விடைகளாக வந்த இதை அறிபவன் அக்ஷர பிரம்மத்தை அறிபவன் ஆகிருன். முறையாக வேதங்களை ஓதி, யாகங்களைச் செய்து, தவம் புரிந்து, தானத்தை வழங்குவதினின்று விளையும் புண்ணிய கரும பலனாகிய சுவர்க்காதி பதவிகளைப் பெறுவதைவிட மேலானதாகிய பிரம்ம சாக்ஷாத்காரம் அந்த யோகிக்கு ஏற்படுகிறது.*

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे अक्षरब्रह्मयोगो नाम
अष्टमोऽध्यायः ॥

# नवमोऽध्यायः

## ஒன்பதாம் அத்தியாயம்

## राजविद्याराजगुह्ययोगः

### ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்

श्री भगवानुवाच

इदं तु ते गुह्यतमं प्रवक्ष्याम्यनसूयवे ।
ज्ञानं विज्ञानसहितं यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥ १

ஸ்ரீ பகவானுவாச

இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யனஸூயவே ।
ஞானம் விக்ஞானஸஹிதம் யஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽசுபாத் ॥

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

अनसूयवे அனஸூயவே *பொறாமைப்படாத* ते तु தே து *உனக்கே* इदं இதம் *இந்த* गुह्यतमं குஹ்யதமம் *ஆழ்ந்த* विज्ञानसहितं விக்ஞானஸஹிதம் *அனுபூதியோடு கூடிய* ज्ञानं ஞானம் *ஞானத்தை* प्रवक्ष्यामि ப்ரவக்ஷ்யாமி *நன்குரைக்கிறேன்* यत् யத் *எதை* ज्ञात्वा ஞாத்வா *அறிந்து* अशुभात् அசுபாத் *அசுபத்திலிருந்து* मोक्ष्यसे மோக்ஷ்யஸே *விடு படுவாய்.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***எதை அறிந்து அசுபத்திலிருந்து விடுபடுவாயோ அனுபவத்தோடு கூடிய அந்த ஆழ்ந்த ஞானத்தைப் பொறாமைப்படாத உனக்கு நன்கு எடுத்து உரைக்கிறேன்.*** 1

*அசுபம் என்பது பிரபஞ்ச வாழ்க்கையிலிருந்து வருகிற கேடு. அக்ஞானமே அசுபம் அனைத்துக்கும் காரண*

*மாகும். வெறும் வாசாஞானமல்லாது சுவானுபவத்தோடு கூடிய ஞானமே கேடுகளை யெல்லாம் நீக்கவல்லது.*

*அசூயை அல்லது பொறாமை என்பது மற்றவர் அடையும் மேன்மையைக்கண்டு சகிக்கமுடியாதிருப்பதாம். ஆனால் மற்றவரை மகிழ்வோடு மேன்மைபடுத்துகிற அளவு, மற்றவர் முன்னேற்றத்தில் முயற்சிகொள்ளுமளவு ஒருவன் தானும் மேன்மையடைகிறான். பொறாமையானது மனத்தகத்துப் பெரு நோயாயமைந்து மனிதனது சிறப்பை யெல்லாம் அழித்துவிடுகிறது. இம்மையிலும் மறுமையிலும் முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டையாயிருப்பது பொறாமை. அர்ஜுனன் பொறாமை யென்னும் நோய்க்கு இடங்கொடாத நல்ல மனமுடையவனாதலால் அவன் ஞான விக்ஞானத்துக்குத் தகுதியுடையவனாகிறான்.*

*அந்த ஞானத்தின் சிறப்பு வருமாறு :—*

**राजविद्या राजगुह्यं पवित्रमिदमुत्तमम् ।**
**प्रत्यक्षावगमं धर्म्यं सुसुखं कर्तुमव्ययम् ॥ २**

ராஜவித்யா ராஜகுஹ்யம் பவித்ரமிதமுத்தமம் ।
ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம் கர்த்துமவ்யயம் ॥ 2

इदं இதம் *இந்த ஞானம்* राजविद्या ராஜவித்யா *ராஜ வித்தை* राजगुह्यं ராஜகுஹ்யம் *மறைபொருளுள் மேலானது* उत्तमं पवित्रं உத்தமம் பவித்ரம் *தூய்மை தருதலில் தலை சிறந்தது* प्रत्यक्ष अवगमं ப்ரத்யக்ஷ அவகமம் *கண்கூடாக உணர்தற்குரியது* धर्म्यं தர்ம்யம் *தர்மத்தோடு கூடியது* कर्तुं கர்த்தும் *செய்தற்கு* सुसुखं ஸுஸுகம் *மிக எளியது* अव्ययं அவ்யயம் *அழிவற்றது.*

***இந்த ஞானம் வித்தைகளுள் வேந்து ; மறைபொருளுள் மேலானது ; தூய்மை தருதலில் தலைசிறந்தது ; தர்மத்தோடு கூடியது ; செய்தற்கு மிக எளியது ; அழிவற்றது.*** **2**

*யோகங்களுள் சிறந்தது ராஜயோகம் என்று பெயர் பெறுகிறது. அங்ஙனம் வித்தைகளுள் பிரம்ம வித்தைக்கு*

ராஜவித்தை என்ற பெயர் வருகிறது. ராஜ மார்க்கத்தில் (பொது வழியில்) எல்லார்க்கும் செல்ல உரிமையிருப்பது போன்று பிரம்ம ஞானத்துக்கு ஜீவர்கள் எல்லார்க்கும் உரிமையுண்டு. ஆனால் பொறாமை முதலிய தோஷங்களி னின்று மனபரிபாகம் அடையாதவர்களுக்கு இது ராஜ குஹ்யம், அதாவது ராஜ ரகசியம் அல்லது மிக மறை பொருள் ஆய்விடுகிறது. நீர் உடலைத் தூயதாக்குவது போன்று பிரம்மஞானம் மனிதனைத் தூயவனாக்குகிறது. பிரம்மஞானி பிரம்மமே ஆய்விடுகிறபடியால், தூய்மை தருதலில் இது தலைசிறந்தது (உத்தமம் பவித்ரம்) ஆகிறது.

துக்கத்துக்கு ஏதுவான கனவு ஒன்றை ஒருமனிதன் காண்கிறான். அங்ஙனம் கனவு கண்டு கொண்டிருக்கும் போது, அவனது துக்கத்துக்கு நிவர்த்தி கிடையாது. ஆனால் விழிப்பு என்னும் ஞானம் உதயமானால் கனவில் தோன்றிய துன்பமெல்லாம் அடிபட்டுப் போய்விடுகிறது. பிரம்ம ஞானம் என்னும் விழிப்பு மனிதனுக்கு உண்டானால் பிறவிப் பெருங்கடலில் அவனுக்கு உண்டாகும் துன்பத்தை யெல்லாம் அது துடைத்து விடுகிறது. இந்த ஞானத்துக்கு ஒப்ப மனிதன் வாழ்வானாகில், அவனுடைய செயலெல் லாம் தர்ம மயமாகிறது. நிலத்தில் துள்ளும் மீன் சேற்றி னுள்ளும் நீரினுள்ளும் செல்வது எளிதாவது போன்று, தர்மத்தைக் கடைப்பிடித்து ஞானத்தை அடைபவனுக்குத் தன் சொரூபமாகிய பேரானந்தம் கிட்டுகிறது. ஆக, அது (கர்த்தும் ஸுஸுகம்) செய்தற்கு மிக எளியதாகிறது. எளி தில் அகப்பட்டது எளிதில் போய்விடுமோ என்ற ஐயம் வரலாம். ஆனால் மனிதன் அடைந்த பிரம்ம ஞானம் (அவ்யயம்) அழிவற்றது; காலத்தையும் கடந்த பெரு நிலையாம் அது.

யாருக்கு அது கிட்டுவதில்லை எனின் :—

**अश्रद्दधानाः पुरुषा धर्मस्यास्य परंतप ।**
**अप्राप्य मां निवर्तन्ते मृत्युसंसारवर्त्मनि ॥ ३**

அச்ரத்ததாநா: புருஷா தர்மஸ்யாஸ்ய பரந்தப ।
அப்ராப்ய மாம் நிவர்த்தந்தே ம்ருத்யுஸம்ஸாரவர்த்மனி ॥ 3

परन्तप பரந்தப *சத்துருக்களை வாட்டுபவனே* अस्य धर्मस्य அஸ்ய தர்மஸ்ய *இந்த தர்மத்தில்* अश्रद्दधानाः அச்ரத்ததாநா: *சிரத்தை யில்லாத* पुरुषाः புருஷா: *மனிதர்கள்* मां மாம் *என்னை* अप्राप्य அப்ராப்ய *அடையாது* मृत्यु संसार वर्त्मनि ம்ருத்யு ஸம்ஸார வர்த்மனி *மரண ஸம்ஸார மார்க்கத்தில்* निवर्तन्ते நிவர்த்தந்தே *திரும்பி வருகின்றனர்.*

***எதிரிகளை எரிப்பவனே, இத்தர்மத்தில் சிரத்தையில்லாதவர்கள் என்னை யடையாது மரண சம்சார மார்க்கத்தில் உழல்கின்றனர். 3***

*நிலத்திலே துள்ளி வீழ்ந்து வருந்துகின்ற மீனானது அருகில் நீர் இருக்கிறது என்பதை அறிந்துகொள்ளாவிட்டால், அந்நீருக்குள்ளே அது திரும்பித் துள்ளிக் குதிக்காவிட்டால் அது படும் துயரத்துக்கு முடிவில்லை. சர்வ துக்க நிவர்த்தி செய்வது பரஞானம். அதற்கு ஏதுவான நெறியைச் சிரத்தையுடன் பின்பற்றுதல் வேண்டும். அப்படிப் பின்பற்றாதவர்கள் பிறவிப்பிணியில் வருந்தியாகவேண்டும்.*

**मया ततमिदं सर्वं जगदव्यक्तमूर्तिना ।
मत्स्थानि सर्वभूतानि न चाहं तेष्ववस्थितः ॥ ४**

மயா ததமிதம் ஸர்வம் ஜகதவ்யக்தமூர்த்தினா ।
மத்ஸ்தானி ஸர்வபூதானி ந சாஹம் தேஷ்வவஸ்தித: ॥ 4

अव्यक्तमूर्तिना அவ்யக்தமூர்த்தினா *இந்திரியங்களுக்குப் புலப்படாத வடிவினனாகிய* मया மயா *என்னால்* इदं सर्वं जगत् இதம் ஸர்வம் ஜகத் *இவ்வுலகம் யாவும்* ततं ததம் *வியாபிக்கப்பட்டிருக்கிறது* सर्व भूतानि ஸர்வ பூதானி *உயிரனைத்தும்* मत्स्थानि மத்ஸ்தானி *என்னிடத்திலிருக்கின்றன* अहं च அஹம் ச *நானோ* तेषु தேஷு *அவைகளிடத்து* न अवस्थितः ந அவஸ்தித: *இருக்கிறதில்லை.*

***அவ்யக்த மூர்த்தியாகிய என்னால் ஜகத் யாவும் வியாபிக்கப்பட்டிருக்கிறது. பூதங்கள் என்***

**னிடத்திருக்கின்றன. ஆனால் நான் அவைகளிடத்தில்லை.** 4

*கடலில் அலைகளெல்லாம் அடங்கப்பெற்றிருப்பது போன்று பிரம்மா முதல் புல்பூண்டீறாக உள்ள பூதங்களெல்லாம் பரமாத்மாவில் அடங்கியிருக்கின்றன. பாத்திரத்தில் நீர் இருப்பதுபோன்று பரமாத்மா உயிர்களிடத்து அடங்கப்பெறுதவர். ஆகாசம் போன்று அனைத்திடத்தும் ஊடுருவி அவர் நீக்கமற எங்கும் நிறைந்திருக்கிறார்.*

न च मत्स्थानि भूतानि पश्य मे योगमैश्वरम् ।
भूतभृन्न च भूतस्थो ममात्मा भूतभावनः ॥ ५

ந ச மத்ஸ்தானி பூதானி பச்ய மே யோகமைச்வரம் ।
பூதப்ருன்ன ச பூதஸ்தோ மமாத்மா பூதபாவன: ॥ 5

भूतानि பூதானி *பூதங்கள்* न च मत्स्थानि ந ச மத்ஸ்தானி *என்னிடத்து நிற்பவைகளல்ல* मे மே *என்னுடைய* ऐश्वरं योगं ஐச்வரம் யோகம் *ஈசுவர யோகத்தின் சிறப்பை* पश्य பச்ய *பார்* मम आत्मा மம ஆத்மா *என் ஆத்மா* भूतभृत् பூதப்ருத் *பூதங்களைத் தாங்குகிறது* भूतभावनः பூதபாவன: *பூதங்களை யுண்டுபண்ணுகிறது* च ச *ஆனால்* न भूतस्थः ந பூதஸ்த: *பூதங்களிடத்து இல்லை.*

**பூதங்கள் (உண்மையில்) என்னிடத்து நிற்பவைகளல்ல. என்னுடைய ஈசுவர யோக மகிமையைப்பார்! பூதகணங்களை ஆக்கவும் காக்கவும் செய்கிற என் சொரூபம் அவைகளிடத்து இல்லை.** 5

*அத்தியாயம் ஏழு, சுலோகம் பன்னிரண்டுக்குத் தந்துள்ள விளக்கத்தைப் பார்க்கவும்.*

*பிரம்மம் அசங்கனுதலால் ஒன்றிலும் பற்றுவைப்பதில்லை.*

यथाकाशस्थितो नित्यं वायुः सर्वत्रगो महान् ।
तथा सर्वाणि भूतानि मत्स्थानीत्युपधारय ॥ ६

யதாகாசஸ்திதோ நித்யம் வாயு: ஸர்வத்ரகோ மஹான் ।
ததா ஸர்வாணி பூதானி மத்ஸ்தானீத்யுபதாரய ॥ 6

महान् वायुः மஹான் வாயு: *பெருங்காற்று* नित्यं நித்யம் *எப்பொழுதும்* सर्वत्रगः ஸர்வத்ரக: *எங்கும் செல்லுகிற* यथा யதா *எப்படி* आकाशस्थितः ஆகாசஸ்தித: *ஆகாசத்தில் நிலைத்திருக்கிறதோ* तथा ததா *அப்படியே* सर्वाणि भूतानि ஸர்வாணி பூதானி *எல்லாப் பூதங்களும்* मत्स्थानि மத்ஸ்தானி *என்னிடத்திருக்கின்றன* इति இதி *என்று* उपधारय உபதாரய *தெரிந்துகொள்.*

***எப்பொழுதும் எங்கும் சஞ்சரிக்கின்ற பெருங் காற்று வானத்தில் நிலைபெற்றிருப்பது போன்று பூதங்களெல்லாம் என்னிடத்திருக்கின்றனவென்று தெரிந்துகொள். 6***

*வாயு முதலிய நான்கு பூதங்கள் ஆகாசத்தில் நிலைத்திருந்தாலும் அதில் அவைகள் ஒட்டுவதும் இல்லை, ஒரு மாறுதலையும் உண்டுபண்ணுவதும் இல்லை. அங்ஙனம் பிரம்மத்தின் மாயாகாரியங்களெல்லாம் பிரம்மத்தில் நிலைத்திருந்தும் அதன்கண் ஒருவிகாரத்தையும் உண்டுபண்ணுவதில்லை. ஆகாச தத்துவத்தைத் தெரிந்துகொள்ளுதல் பிரம்ம தத்துவத்தைத் தெரிந்துகொள்ளப் பெரிதும் பயன்படுகிறது.*

*காற்று நல்ல வாசனையையும் கெட்ட வாசனையையும் கொண்டு வீசுமாயினும் அவைகளால் விகாரப்படுவதில்லை. பரம்பொருளும் அந்தக் காற்றைப் போன்றது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

सर्वभूतानि कौन्तेय प्रकृतिं यान्ति मामिकाम् ।
कल्पक्षये पुनस्तानि कल्पादौ विसृजाम्यहम् ॥ ७

ஸர்வபூதானி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம் ।
கல்பக்ஷயே புனஸ்தானி கல்பாதௌ விஸ்ருஜாம்யஹம் ॥ 7

कौन्तेय கௌந்தேய *குந்தியின் புதல்வா* सर्वभूतानि ஸர்வபூதானி *எல்லாப் பூதங்களும்* कल्पक्षये கல்பக்ஷயே *கற்ப முடிவில்* मामिकां மாமிகாம் *என்னுடைய* प्रकृतिं ப்ரக்ருதிம் *பிரகிருதியை* यान्ति யாந்தி *அடைகின்றன* पुनः புன: *மறுபடியும்* कल्पादौ கல்பாதௌ *கற்பத் துவக்கத்*

*தில்* तानि தானி *அவைகளை* अहं அஹம் *நான்* विसृजामि விஸ்ருஜாமி *தோற்றுவிக்கிறேன்.*

***குந்தியின் புதல்வா, பூதங்களெல்லாம் கற்ப முடிவில் என்னுடைய பிரகிருதியை அடைகின்றன. மறுபடியும் கற்பத் துவக்கத்தில் அவைகளை நான் தோற்றுவிக்கிறேன். 7***

*பிரம்மாவுக்கு இரவு வரும்பொழுது பிரளயம் அல்லது கற்பத்தின் முடிவு ஏற்படுகிறது. அவருக்குப்பகல் ஆரம்பிக்கும் பொழுது சிருஷ்டி அல்லது கற்பத் துவக்கம் ஏற்படுகிறது. பிரகிருதி என்பது முக்குணமயமான அபர பிரகிருதியாம்.*

प्रकृतिं स्वामवष्टभ्य विसृजामि पुनः पुनः ।
भूतग्राममिमं कृत्स्नमवशं प्रकृतेर्वशात् ॥ ८

ப்ரக்ருதிம் ஸ்வாமவஷ்டப்ய விஸ்ருஜாமி புன: புன: ।
பூதக்ராமமிமம் க்ருத்ஸ்னமவசம் ப்ரக்ருதேர்வசாத் ॥ 8

स्वाम् ஸ்வாம் *என்னுடைய* प्रकृतिं ப்ரக்ருதிம் *பிரகிருதியை* अवष्टभ्य அவஷ்டப்ய *அருளுடையதாகச் செய்து* अवशं அவசம் *தன்வசமில்லாது* प्रकृतेः वशात् ப்ரக்ருதே: வசாத் *பிரகிருதியினுடைய வசத்திலிருக்கின்ற* इमम् कृत्स्नं भूतग्रामं இமம் க்ருத்ஸ்னம் பூதக்ராமம் *இந்த முழு உயிர்வகைகளையும்* पुनः पुनः புன: புன: *திரும்பத் திரும்ப* विसृजामि விஸ்ருஜாமி *படைக்கிறேன்.*

***என் பிரகிருதியை அருளுடையதாகச்செய்து சுதந்திரமில்லாது அப்பிரகிருதியின் வசமாயிருக்கும் இவ்வுயிர்த்திரள் யாவற்றையும் திரும்பத் திரும்ப நான் தோற்றுவிக்கிறேன். 8***

अवष्टभ्य *என்பது உயிர்ப்பித்து அல்லது அருளுடையதாகச் செய்து என்று பொருள்படுகிறது. பூமியைச் சாரமுடையதாகச் செய்கிறான் கிருஷிகன். தூங்கினவன் விழித்தெழுந்து, தன் உடலில் ஒவ்வொரு உறுப்பையும் முறுக்கி உறுதியாக்குகிறான். மாணாக்கனது உள்ளத்தினின்று கல்வி*

*கிளம்பும்படி ஆசிரியன் துணைபுரிகின்றான். இச் செயல்கள் யாவும் 'அவஷ்டம்பனம்' என்னும் சொல்லுக்குப்பொருளாகின்றன. இங்ஙனம் ஈசுவரனுடைய முன்னிலையில் பிரகிருதியாகிய தாய்க்கு வல்லமை அல்லது அருள் சுரக்கிறது. அவ் அருளைக்கொண்டு அவள் உலகனைத்தையும் இயக்குகின்றாள். அது ஈசன் செயல் எனப்படுகின்றது. ஆனால் அதைப்பற்றிய உண்மை என்னவெனின்:—*

**न च मां तानि कर्माणि निबध्नन्ति धनञ्जय ।**
**उदासीनवदासीनमसक्तं तेषु कर्मसु ॥ ९**

ந ச மாம் தானி கர்மாணி நிபத்னந்தி தனஞ்ஜய ।
உதாஸீனவதாஸீனமஸக்தம் தேஷு கர்மஸு ॥ 9

धनञ्जय தனஞ்ஜய *தனஞ்ஜயா* तेषु कर्मसु தேஷு கர்மஸு *அந்தக் கருமங்களில்* असक्तम् அஸக்தம் *பற்றற்றவனை* उदासीनवत् உதாஸீனவத் *உதாஸீனனைப் போன்று* आसीनं ஆஸீனம் *உட்கார்ந்திருப்பவனை* च ச *உம்* मां மாம் *என்னை* तानि कर्माणि தானி கர்மாணி *அக்கருமங்கள்* न निबध्नन्ति ந நிபத்னந்தி *பந்தப்படுத்துவதில்லை.*

***தனஞ்ஜயா, அக் கருமங்களில் பற்றற்றவனும் உதாஸீனனைப் போன்று உட்கார்ந்திருப்பவனும் ஆகிய என்னை அவைகள் தளைக்கமாட்டா. 9***

*ஜகத் சிருஷ்டியில் நாலுவகைக் கருமங்களும் அடங்கியிருக்கின்றன. அவைகளில் பற்று விட்டவரே உதாஸீனர் ஆகின்றார். ஈசுவரன் அந் நிலையில் நிலைத்திருப்பதால் அவருடைய பிரகிருதி செய்யும் இத்தனைவிதக் கருமங்களும் அவரைக் கட்டுப்படுத்துவதில்லை.*

*தான் கர்த்தாவென்று ஈசுவரன் அஹங்கரிக்காதிருப்பதுபோன்று சாதகன் புரியும் வெவ்வேறு கருமங்களுக்கிடையே தான் கர்த்தாவென்ற உணர்ச்சி நீங்கப்பெற்று, நடுநிலையில் இருப்பானாகில் இருள் சேர் இருவினையும் அவனை வந்து சாரா.*

*"நான்" என்பது இறந்தால் துன்பமெல்லாம் தொலையும். ஈசுவர கிருபையால் "என் செயலாலாவது யாதொன்றுமில்லை", என்னும் கொள்கை மனத்தில் ஸ்திரமாக நிலைக்குமானால், மனிதனுக்கு இந்த ஜன்மத்திலேயே முக்தியுண்டாகும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

मयाध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् ।
हेतुनानेन कौन्तेय जगद्विपरिवर्तते ॥ १०

மயாத்யக்ஷேண ப்ரக்ருதி: ஸூயதே ஸசராசரம் ।
ஹேதுனானேன கௌந்தேய ஜகத்விபரிவர்த்ததே ॥ 10

कौन्तेय கௌந்தேய *குந்தி மகனே* मया மயா *என்னால்* अध्यक्षेण அத்யக்ஷேண *கண்காணிக்கப்பெற்று* प्रकृतिः ப்ரக்ருதி: *பிரகிருதியானது* सचराचरं (स चर अचरं) ஸசராசரம் (ஸ சர அசரம்) *ஸ்தாவர ஜங்கமமாய் உள்ள ஜகத்தை* सूयते ஸூயதே *சிருஷ்டிக்கிறது* अनेन हेतुना அனேன ஹேதுனா *இதன் காரணத்தால்* जगत् ஜகத் *ஜகத்தானது* विपरिवर्तते விபரிவர்த்ததே *சுழல்கிறது.*

***குந்தியின் மகனே, என்னால் கண்காணிக்கப் பெற்று, பிரகிருதியானது ஸ்தாவர, ஜங்கம உலகத்தைச் சிருஷ்டிக்கிறது. இதன் காரணத்தால் ஜகத்தானது சுழல்கிறது. 10***

*7 முதல் 10 வரை நான்கு சுலோகங்களில் உலக நடைமுறைக்கும் தமக்கும் உள்ள தொடர்வு எத்தகையது என்பதை பகவான் நன்கு விளக்குகிறார். அதற்கு அருந்ததி நியாயம் கையாளப்படுகிறது. அதாவது ஒரு மரம், அதில் ஒரு கிளை, அதற்குப்பின் வானத்தில் ஒரு பெரியமீன், அதற்குப்பக்கத்தில் உள்ள சிறு மீன்கள், அவைகளுக்கிடையில் நுண்ணியதாகத் தென்படுவது அருந்ததி நக்ஷத்திரம். இங்ஙனம் தெரிந்த பருப்பொருளிலிருந்து தெரியாத நுண்பொருளுக்குப் போதல் அருந்ததி நியாயமாகும். 7-வது சுலோகத்தில் நான் சிருஷ்டிக்கிறேன் என்கிறார்; 8-வது சுலோகத்தில் பிரகிருதியைக் கொண்டு அக்காரியத்தைச் செய்வதாகச் சொல்லுகிறார்; 9-வது சுலோகத்தில் நடுவு*

நிலை வகிக்கின்ற தம்மை பிரகிருதியின் அச்செயல் தளைப்ப தில்லை என்கிறார்; 10-வது சுலோகத்தில் தாம் சாக்ஷியாய் வீற்றிருந்து கண்காணிக்கையில், தமது சன்னிதான விசேஷத்தால் பிரகிருதிக்கு ஜகத் காரியங்களைச் செய்யும் வல்லமை வந்து விடுகிறது என்கிறார். சூரியனுடைய முன்னிலையில் சூரிய கிரணங்களால் பொருள்கள் பரிணமிப்பது போன்று, ஈசுவரனுடைய முன்னிலையில் அவனுடைய மாயா சக்தியால் உலகனைத்தும் தாமுளவாகின்றன.

அத்யக்ஷன் என்பது சபாபதி அல்லது கண்காணிப்பவன் என்று பொருள்படுகிறது. உலக நடைமுறைக்கு இறைவன் சபாபதியாகின்றான். அரசன் சிங்காசனத்தில் வீற்றிருக்கையில் சிப்பந்திகள் தம் தொழில்களைப் புரிவது போன்று பரமாத்மாவின் முன்னிலையில் பிரகிருதி அண்டங்களை இயக்கவல்ல உயிரையும் அருளையும் பெற்றுத்தொழில் புரிகிறது.

अवजानन्ति मां मूढा मानुषीं तनुमाश्रितम् ।
परं भावमजानन्तो मम भूतमहेश्वरम् ॥ ११

அவஜானந்தி மாம் மூடா மானுஷீம் தனுமாச்ரிதம் ।
பரம் பாவமஜானந்தோ மம பூதமஹேச்வரம் ॥ 11

भूतमहेश्वरं பூதமஹேச்வரம் *பூதமகேச்வரனை* मम परं भावं மம பரம்பாவம் *என்னுடைய பரம இயல்பை* अजानन्तः அஜானந்த: *அறியாத* मूढाः மூடா: *மூடர்கள்* मानुषीं तनुं आश्रितम् மானுஷீம் தனும் ஆச்ரிதம் *மானுட உடலை எடுத்துள்ள* माम् மாம் *என்னை* अवजानन्ति அவஜானந்தி *அவமதிக்கிறார்கள்.*

***என்னுடைய பர சொரூபத்தையும், நான் உயிர்களுக்கெல்லாம் ஈசனுயிருப்பதையும் அறியாத மூடர்கள், ஒரு மானுட வடிவம் எடுத்தவன் என்றெண்ணி என்னை அவமதிக்கின்றனர். 11***

கருமத்தில் கட்டுப்படாதவன் வடிவத்திலும் கட்டுப்படுவதில்லை. ஜடாகாசத்தையே எப்பொருளும் சிதைப்ப

*தில்லை. பின்பு சிதாகாசம் வடிவத்தில் சிறைப்படுகிறது என்பது பொருந்தாது. அது நித்திய – சுத்த – புத்த – முக்த – ஸ்வபாவமுடையது. எல்லார்க்கும் பொதுவாக அந்தர்யாமியாயிருக்கின்ற பரமாத்மா உடலில் எங்ஙனம்வாழவேண்டும் என்பதை மக்களுக்குக் காட்டுதற்பொருட்டே ஓர் அவதார புருஷராக தேகத்தைத் தரிக்கிறார். இதை அறியாதவர் அவரை*

*யானைக்கு வெளியே தோன்றும் தந்தமும் உள்ளே இருக்கும் பற்களுமாக இரண்டுவகைப் பற்களிருக்கின்றன. அவ்வாறு ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா போன்ற அவதார புருஷர்கள் சாதாரணமான வெளித் தோற்றம் உள்ளவர்களாய், எல்லோருடைய பார்வைக்கும் மனுஷ்ய ரீதியை உடையவர்களாகப் புலப்படுகின்றனர். ஆயினும், அவர்கள் கர்மவசத்துக்கு வெகுதூரம் அப்பாற்பட்டவர்களாகிப் பரமசாந்தியில் நிலைத்திருக்கின்றனர்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*அவதார புருஷர்களை அவமதிக்கின்றவர்களது இயல்பு எத்தகையது எனின் :—*

**मोघाशा मोघकर्माणो मोघज्ञाना विचेतसः ।**
**राक्षसीमासुरीं चैव प्रकृतिं मोहिनीं श्रिताः ॥ १२**

மோகாசா மோககர்மாணோ மோகஞானா விசேதஸ: ।
ராக்ஷஸீமாஸுரீம் சைவ ப்ரக்ருதிம் மோஹினீம் ச்ரிதா: ॥ 12

मोघाशा: மோகாசா: *வீண் ஆசையுடையவர்கள்* मोघकर्माण: மோககர்மாண: *பயன்படாக் கர்மம் செய்பவர்கள்* मोघज्ञाना: மோகஞானா: *கோணலறிவுடையவர்* विचेतस: விசேதஸ: *விவேகமில்லாதவர்* मोहिनीं மோஹினீம் *மயலூட்டுகிற* राक्षसीं च आसुरीं प्रकृतिं ராக்ஷஸீம் ச ஆஸுரீம் ப்ரக்ருதிம் *ராக்ஷஸ ஆசுர இயல்பை* श्रिता: ச்ரிதா: *அடைகின்றனர்.*

***வீண் ஆசையுடையவர்கள், பயன்படாச் செயலாளர்கள், கோணலறிவுடையவர்கள், விவேகமில்லாதவர்கள் மயல் ஊட்டுகிற ராக்ஷச ஆசுர இயல்பை அடைகின்றனர்.*** *12*

*பொய்யுடலை மெய்யென்று நம்பி, அதன் மூலம் போகம் துய்த்தலே குறிக்கோள் என்ற மயக்கம் மோகம் मोह ஆகிறது. பின்பு அதன் பொருட்டுக்கொள்ளும் ஆசையும், செய்யும் வினையும், வளர்க்கும் அறிவும்,கையாளும்யுக்தியும் ஆத்ம லாபத்துக்கு உதவாதவைகளாய்விடுகின்றன. இத்தகைய கீழான இயல்புடையவர்களுள் ரஜோகுணத்தோடு கூடியவர் ராக்ஷசர்; தமோகுணத்தோடு கூடியவர் அசுரர் ஆவர்.*

*மற்று, பக்திமான்களுடைய போக்கு பின்வருமாறு :—*

**महात्मानस्तु मां पार्थ दैवीं प्रकृतिमाश्रिताः ।**
**भजन्त्यनन्यमनसो ज्ञात्वा भूतादिमव्ययम् ॥ १३**

மஹாத்மானஸ்து மாம் பார்த்த தைவீம் ப்ரக்ருதிமாச்ரிதா: ।
பஜந்த்யனன்யமனஸோ ஞாத்வா பூதாதிமவ்யயம் ॥ 13

पार्थ பார்த்த *பார்த்தா* तु து *ஆனால்* महात्मान: மஹாத்மான: *மகாத்மாக்கள்* दैवीं प्रकृतिं தைவீம் ப்ரக்ருதிம் *தெய்வீக இயல்பை* आश्रिता: ஆச்ரிதா: *அடைந்தவர்களாய்* अनन्यमनस: அனன்யமனஸ: *வேறு எதிலும் பற்று வைக்காதவராய்* भूतादिं பூதாதிம் *உயிர்களுக்குப் பிறப்பிடமும்* अव्ययं அவ்யயம் *அழியாதவனும்* मां மாம் *என்னை* ज्ञात्वा ஞாத்வா *அறிந்து* भजन्ति பஜந்தி *வழிபடுகிறார்கள்.*

***பார்த்தா, ஆனால் மகாத்மாக்கள் தெய்வீக இயல்பை அடைந்தவர்களாய், உயிர்களுக்குப் பிறப்பிடமும் அழியாதவனும் நான் என்று அறிந்து, வேறு எதிலும் பற்று வைக்காது என்னை வழிபடுகின்றனர். 13***

*தெய்வீக இயல்பு சத்துவ குணத்தினின்று வருகிறது. ஜீவர்களெல்லாம் பகவானிடத்திருந்து தோன்றியவர்கள். இப்பேருண்மையை உணர்ந்து திரும்பி அவனைச் சென்று அடைய விரும்புபவர்கள் மகாத்மாக்கள் ஆகின்றனர். கரணங்களை அடக்குதல், அவனுடைய உயிர்களிடத்து அன்*

*பாயிருத்தல், அவனை அடைதற்கு சிரத்தை காட்டுதல் முதலிய நல்லியல்புகள் அத்தகைய மேலோர்க்கு எளிதில் வந்து அமைகின்றன.*

*எப்படியெல்லாம் வழிபடுகின்றனர் என்னும் வினா எழுமிடத்து :—*

**सततं कीर्तयन्तो मां यतन्तश्च दृढव्रताः ।**
**नमस्यन्तश्च मां भक्त्या नित्ययुक्ता उपासते ॥ १४**

ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதன்தஸ்ச த்ருடவ்ரதா:
நமஸ்யன்தஸ்ச மாம் பக்த்யா நித்யயுக்தா உபாஸதே ॥ 14

सततम् ஸததம் *எப்பொழுதும்* मां மாம் *என்னை* कीर्तयन्तः கீர்த்தயந்த: *புகழ்பவராய்* दृढव्रताः த்ருடவ்ரதா: *உறுதியான விரதத்தோடு* यतन्तः च யதந்த: ச *முயல்பவராயும்* भक्त्या பக்த்யா *பக்தியுடன்* नमस्यन्तः च நமஸ்யந்த: ச *நமஸ்கரிப்பவர்களாயும்* नित्य युक्ताः நித்ய யுக்தா: *நித்திய யோகிகள்* मां उपासते மாம் உபாஸதே *என்னை உபாஸிக்கின்றார்கள்.*

***எப்பொழுதும் என்னைப் புகழ்பவராயும், உறுதியான விரதத்தோடு முயல்பவராயும் பக்தியுடன் நமஸ்கரிப்பவர்களாயும் நித்திய யோகிகள் என்னை உபாஸிக்கின்றார்கள். 14***

*மனது எதைப் புகழ்கிறதோ அதன் மயமாகிறது; எத்துறையில் முயல்கிறதோ அத்துறையில் மேன்மையடைகிறது; எதை விரும்பி வணங்குகிறதோ அதன் இயல்பை அடைகிறது. இத்தனை விதங்களில் பக்தர் தமது மனதை பகவானிடம் செலுத்துகிறபடியால் அவர்கள் நித்திய யோகியராகிறார்கள். பகவானுக்கு அருகில் வீற்றிருப்பவரும் ஆகின்றார்கள்.*

**ज्ञानयज्ञेन चाप्यन्ये यजन्तो मामुपासते ।**
**एकत्वेन पृथक्त्वेन बहुधा विश्वतोमुखम् ॥ १५**

ஞானயக்ஞேன சாப்யன்யே யஜந்தோ மாமுபாஸதே ।
ஏகத்வேன ப்ருதக்த்வேன பஹுதா விச்வதோமுகம் ॥ 15

अन्ये अपि च அன்யே அபி ச *ஏனையவர்களும்* ज्ञानयज्ञेन ஞானயக்ஞேன *ஞான யக்ஞத்தால்* यजन्तः யஜந்த: *வேட்பவர்களாய்* मां उपासते மாம் உபாஸதே *என்னை உபாசிக்கின்றனர்* एकत्वेन ஏகத்வேன *ஒன்றாய்* पृथक्त्वेन ப்ருதக்த்வேன *வேறாய்* विश्वतोमुखं விச்வதோமுகம் *பலவாய்* बहुधा பஹுதா *இத்தனை விதங்களில்.*

***ஞானயக்ஞத்தால் வேட்பவர்களாகிய ஏனையவர்களும் என்னை ஒன்றாய், வேறாய், பலவாய் — இத்தனை விதங்களில் உபாஸிக்கின்றனர்.*** **15**

ज्ञानयज्ञेन (ஞானயக்ஞேன) – *பரம்பொருளை உள்ளபடி அறிகிறவர்கள் தங்களைப் பரம்பொருளுக்குக் கொடுத்து விடுகிறார்கள். ஆகையால் அது ஞான யக்ஞமாகின்றது.*

एकत्वेन (ஏகத்வேன) – *ஒன்றாய் என்னும் அத்வைத பாவனை. பரமாத்மா ஒன்றுதான் உள்ளது என்ற எண்ணம்.*

पृथक्त्वेन (ப்ருதக்த்வேன)–*வேறாய் இருக்கும் துவைதபாவனை. ஆண்டவன் அடிமைக்குப் புறம்பானவன் என்ற எண்ணம்.*

विश्वतोमुखं (விச்வதோமுகம்)-*பலவாய் உள்ள எல்லா அங்கங்களும் ஒரு புருஷனைச் சார்ந்தவைகள். இது விசிஷ்டாத்வைத பாவனை. ஒருவனே இத்தனையும் ஆனான் என்ற எண்ணம் இப்பாவனையில் உண்டு. ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள இணக்கத்தை துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் ஆகிய மூன்று நிலைகளில் எதில் வைத்துச் சாதனம் செய்தாலும் அது ஞானயக்ஞம் ஆகிறது.*

*இத்தனைவித உபாசனைகள் எப்படி ஒரே பொருளைச் சார்வதாகும் என்ற ஐயம் எழலாம். அதற்கு இறைவன் விடையளிக்கிறார் :—*

**अहं क्रतुरहं यज्ञः स्वधाहमहमौषधम् ।**
**मन्त्रोऽहमहमेवाज्यमहमग्निरहं हुतम् ॥ १६**

அஹம் க்ரதுரஹம் யக்ஞ: ஸ்வதாஹமஹமௌஷதம் ।
மந்த்ரோऽஹமஹமேவாஜ்யமஹமக்னிரஹம் ஹுதம் ॥ 16

अहं क्रतुः அஹம் க்ரது: *நான் கிரது* अहं यज्ञः அஹம் யக்ஞ: *யக்ஞம் நானே* अहं स्वधा அஹம் ஸ்வதா *ஸ்வதா நான்* अहं औषधं அஹம் ஔஷதம் *ஔஷதம் நான்* अहं मन्त्रः அஹம் மந்த்ர: *மந்திரம் நான்* अहं आज्यं அஹம் ஆஜ்யம் *ஆஜ்யம் நான்* अहं एव अग्निः அஹம் ஏவ அக்னி: *நானே அக்கினி* अहं हुतम् அஹம் ஹுதம் *வேட்டல் நானே.*

***நானே கிரது என்ற வைதிக கர்மம்; யக்ஞம் நானே; ஸ்வதாவாவது நான்; ஔஷதம் நான்; மந்திரமாவது நான்; ஹோமம் செய்யப்படும் நெய்யும் நான்; அக்கினியாவது நான்; வேட்டல் நானே. 16***

*கிரது என்பது வேதத்தில் விதிக்கப்பட்டுள்ள ஒரு வகைக் கர்மத்தின் பெயர். யக்ஞமாவது ஸ்மிருதியில் விதிக்கப்பட்டுள்ள கர்மம். பித்ருக்களுக்குப் படைக்கப்படும் உணவுக்கு ஸ்வதா என்று பெயர். எது மருந்தாகவும் உணவாகவும் பயன்படுகிறதோ அது ஔஷதம். என்ன எண்ணத்துடன் கொடுக்கப்படுகிறதோ அவ்வெண்ணமே மந்தரம். ஹோமத்தில் சொரியப்படும் நெய்க்கு ஆஜ்யம் என்று பெயர். இங்கு ஹோமாக்கினியே அக்னி என்று குறிப்பிடப்படுகிறது. வேள்விவேட்டல் என்னும் வினையானது ஹுதம் என்று சொல்லப்படுகிறது.*

*நான்காவது அத்தியாயம் இருபத்து நான்காவது லோகத்தில் செய்கிற வினையெல்லாவற்றையும் பிரம்ம சொரூபமாகக் கருதுபவனை வினை தளைப்பதில்லையென்பது சொல்லப்பட்டது. இங்கு பொருள்களெல்லாம் பாரமார்த்திக திருஷ்டியில் பிரம்ம சொரூபம் ஆகின்றனவென்பது சொல்லப்படுகிறது. பொருள்களையெல்லாம் அவன் சொரூபமாகக் காண்பது பாரமார்த்திக திருஷ்டியைப் பெறுதற்கு உபாயமாகிறது.*

पिताहमस्य जगतो माता धाता पितामहः ।

பிதாஹமஸ்ய ஜகதோ மாதா தாதா பிதாமஹ: ।
வேத்யம் பவித்ரமோங்கார ருக்ஸாம யஜுரேவ ச ॥ 17

अहं एव அஹம் ஏவ *நானே* अस्य जगतः அஸ்ய ஜகத: *இந்த ஜகத்தின்* पिता माता பிதா மாதா *தந்தை தாய்* धाता தாதா *கர்ம பலனைக் கொடுப்பவன்* पितामहः பிதாமஹ: *பாட்டனார்* वेद्यं வேத்யம் *அறியத் தக்கவன்* पवित्रं பவித்ரம் *தூய்மை செய்பவன்* ओंकारः ஓங்கார: *ஓங்காரம்* ऋक् साम यजुः च ருக் ஸாம யஜு: ச *ரிக் சாமம் யஜுர் வேதமும்.*

***இந்த ஜகத்தின் தந்தை, தாய், பாட்டனாரான வனும், கர்மபலனைக் கொடுப்பவனும், அறியத்தக்க வனும், தூய்மை செய்பவனும், ஓங்காரம், ரிக் சாமம்யஜுர் வேதங்கள் ஆகின்றவனும் நானே. 17***

*உலகனைத்துக்கும் ஈசுவரன் முதற்காரணமாயிருப்பதால் அவன் தந்தை, தாய், பாட்டனார் ஆகின்றான். அவரவர் செய்கின்ற வினைக்கேற்றவாறு கர்ம பலனைக் கொடுப்பவன் (धाता) தாதா, யாரை அறிந்தால் வாழ்க்கையின் மர்மம் முழுதும் விளங்குகிறதோ அவன் அறியத்தக்கவன், ஈசுவரன்.*

*தம்மை வந்து சாரும் பொருள்களைத் தூயதாக்கும் இயல்பு மண், நீர், தீ, காற்று முதலியவைகளுக்கு உண்டு. அங்ஙனம் பூதங்களால் புனிதமடைந்த பொருள்கள் திரும்பவும் மலினமடையக் கூடும். பகவானை அணுக அணுக உயிர்கள் பெருநிலையைப் பெறுகின்றன. அந்த அளவில் அவைகள் புனிதப்படுகின்றன. இக்காரணத்தை முன்னிட்டே பக்தர்களுக்கு பகவானுடைய நாமம் "குலம் தரும்" என்று கருதப்படுகிறது. பகவானை அடைவதால் வரும் புனிதம் என்றும் மாறாதது.*

*அதர்வண வேதம் மிகப் பிற்காலத்தில் உண்டானதால் அது ஈண்டு பகரப்படவில்லை. இயற்கையினுடைய தோற்றம், இருப்பு, ஒடுக்கம் ஆகியவைகளை ரிக், சாமம், ... விளக்குகின்றன. இந்த வேதங் ...யைக்கொண்டு*

अहं क्रतुरहं
मन्त्रोऽहमहमेवाज्यमहमग्निरहं हुतम् ॥ १६

தோன்றியவைகள். ஓசையனைத்தும் ஓங்காரத்தில் அடங்கி விடுகின்றன. ஓம் என்பது எல்லா மந்திரங்களுக்கும் மூல மந்திரமாகும். அது அ-உ-ம் ஆகிய மூன்று ஓசைகளின் வடிவம் கொண்டது. அ என்னும் எழுத்து தோற்றத்தை யும் உ என்பது இருப்பையும் ம் ஒடுக்கத்தையும் குறிக்

பகவான், பாகவதம், பக்தர்கள் இவை யாவும் ஒன்றேயாம்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**गतिर्भर्ता प्रभुः साक्षी निवासः शरणं सुहृत् ।**
**प्रभवः प्रलयः स्थानं निधानं बीजमव्ययम् ॥ १८**

கதிர்பர்தா ப்ரபு: ஸாக்ஷீ நிவாஸ: சரணம் ஸுஹ்ருத் ।
ப்ரபவ: ப்ரளய: ஸ்தானம் நிதானம் பீஜமவ்யயம் ॥ 18

गतिः கதி: *புகலிடம்* भर्ता பர்தா *வளர்ப்பவன்* प्रभुः ப்ரபு: *உடையவன்* साक्षी ஸாக்ஷீ *சான்று* निवासः நிவாஸ: *இருப்பிடம்* शरणं சரணம் *அடைக்கலம்* सुहृत् ஸுஹ்ருத் *தோழன்* प्रभवः ப்ரபவ: *பிறப்பிடம்* प्रलयः ப்ரளய: *ஒடுங்குமிடம்* स्थानं ஸ்தானம் *தங்குமிடம்* निधानं நிதானம் *களஞ்சியம்* अव्ययं बीजम् அவ்யயம் பீஜம் *அழியாத வித்து.*

***புகலிடம், வளர்ப்பவன், உடையவன், சான்று, இருப்பிடம், அடைக்கலம், தோழன், பிறப்பிடம், ஒடுங்குமிடம், தங்குமிடம், களஞ்சியம், அழியாத 18***

செய்த கர்மத்துக்கு ஏற்றவாறு அடையுமிடம் அல்லது புகலிடம் கதி (गति) எனப்படுகிறது. கர்மம் ஓய்ந்தவிடத்து பகவானைத் தவிர "புகலிடம் பிறிதொன்றில்லை". உண்டி முதலியன கொடுத்து வளர்ப்பவன் (भर्ता) பர்தா. ப்ரபு (प्रभु) என்பதற்கு சுவாமி, தலைவன், இறைவன், உடையவன் என்று பொருள். உயிர் வகைகள் தத்தம் கடமைகளை முறையாகச் செய்ததற்கும் செய்யாததற்கும் சாக்ஷி (साक्षी) அல்லது சான்ருக உள்ளார் பகவான். நிவாஸ: (निवासः) என்ருல் உயிர்கள்வசிக்குமிடம், இருப்பிடம் என்றுபொருள்

படுகிறது. (शरणं) சரணம், தன்னைத் தஞ்சமடைந்தவர்களது துக்கத்தைத் துடைப்பவன் அல்லது அடைக்கலம் என்பதாம். (सुहृत) ஸுஹ்ருத் என்பதற்குக்கைம்மாறு கருதாது நன்மை செய்பவன், தோழன் என்று பொருள். நிதானமாவது (निधानं) எதிர்காலத்தில் உயிர்வகைகள் அனுபவிப்பதற்குச் சேகரித்து வைத்துள்ள களஞ்சியம். பூமியில் நட்ட வித்து அழிந்து செடியாக மாறுகிறது. ஆனால் பிரம்மம் என்கிற வித்து ஒருவிதமான மாறுதலையும் அடையாது இருந்துகொண்டு ஜீவ ஜகத் வகைகளைத் தன்னிடத்திருந்து தோன்ற இடங்கொடுக்கிறது.

**तपाम्यहमहं वर्षं निगृह्णाम्युत्सृजामि च ।**
**अमृतं चैव मृत्युश्च सदसच्चाहमर्जुन ॥ १९**

தபாம்யஹமஹம் வர்ஷம் நிக்ருஹ்ணாம்யுத்ஸ்ருஜாமி ச ।
அம்ருதம் சைவ ம்ருத்யுஸ்ச ஸதஸச்சாஹமர்ஜுன ॥ 19

अर्जुन அர்ஜுன *அர்ஜுனா* अहं அஹம் *நான்* तपामि தபாமி *வெப்பந்தருகிறேன்* अहं அஹம் *நான்* वर्षं வர்ஷம் *மழையை* उत्सृजामि உத்ஸ்ருஜாமி *பெய்விக்கிறேன்* निगृह्णामि च நிக்ருஹ்ணாமி ச *தடுக்கிறேன்* अमृतं च அம்ருதம் ச *சாகாமையும்* मृत्युः च ம்ருத்யு: ச *சாவும்* सत् च असत् ஸத் ச அஸத் *ஸத்தும் அஸத்தும்* अहं एव அஹம் ஏவ *நானே.*

***அர்ஜுனா, நான் வெப்பந் தருகிறேன், மழையைப் பெய்விக்கவும் தடுக்கவும் செய்கிறேன்; சாகாமையும் சாவும், ஸத்தும் அஸத்தும் நானே. 19***

*சூரியனைக்கொண்டு பகவான் வெப்பத்தை யுண்டு பண்ணுகிறார்; சூரிய கிரணத்தால் மழை பெய்யவும் நிற்கவும் செய்கிறார். அவரவர் கர்மபலத்துக்கு ஏற்றாற்போன்று தேவர்கள் சாகாமையையும் நரர் சாவையும் பெறுகின்றனர். சாகாமை சாவு ஆகிய இரண்டும் சில வேளைகளில் விருப்பையும் வேறு சில வேளைகளில் வெறுப்பையும் தருகின்றன. ஆக, ஜீவனை ஞானத்துக்குப் பக்குவப்படுத்துதற்கு தேவர்களுடைய சாகாமையும் நரர்களுடைய சாவும் மாறி மாறிப் பயன்படுகின்றன.*

*கர்மம் காரியப்படுவதால் உயிர்களிடத்து ஏற்படும் தோற்றம் ஸத்தென்று ஈண்டு இயம்பப்படுகிறது; தோன்றா நிலையே அஸத்தாகிறது. ஆக, அஸத்து என்பது சூன்யமல்ல.*

*காமிய கருமத்தின் பலன்:—*

**त्रैविद्या मां सोमपाः पूतपापा यज्ञैरिष्ट्वा स्वर्गतिं प्रार्थयन्ते ।**
**ते पुण्यमासाद्य सुरेन्द्रलोकमश्नन्ति दिव्यान्दिवि देवभोगान् ॥ २०**

த்ரைவித்யா மாம் ஸோமபா: பூதபாபா
யக்ஞைரிஷ்ட்வா ஸ்வர்கதிம் ப்ரார்த்தயந்தே ।
தே புண்யமாஸாத்ய ஸுரேந்த்ரலோக
மச்னந்தி திவ்யான் திவி தேவபோகான் ॥ 20

त्रैविद्याः த்ரைவித்யா: *மூன்று வேதங்களை யறிந்தவர்* यज्ञैः யக்ஞை: *யாகங்களால்* मां மாம் *என்னை* इष्ट्वा இஷ்ட்வா *பூஜித்து* सोमपाः ஸோமபா: *சோமபானம் செய்தவர்கள்* पूतपापाः பூதபாபா: *பாபத்தினின்று விடுபட்டவர்கள்* स्वर्गतिं ஸ்வர்கதிம் *வானுலக ஏகுதலை* प्रार्थयन्ते ப்ரார்த்தயந்தே *வேண்டுகின்றனர்* ते தே *அவர்கள்* पुण्यं सुरेन्द्र-लोकं புண்யம் ஸுரேந்த்ரலோகம் *புண்ணியமான தேவேந்திர லோகத்தை* आसाद्य ஆஸாத்ய *அடைந்து* दिवि திவி *சுவர்க்கத்தில்* दिव्यान् देवभोगान् திவ்யான் தேவபோகான் *திவ்வியமான தேவபோகங்களை* अश्नन्ति அச்னந்தி *அனுபவிக்கிறார்கள்.*

***மூன்று வேதங்களை யறிந்தவர்கள் யாகங்களால் என்னைப் பூஜித்து, சோமபானம் செய்து பாபத்தினின்று விடுபட்டவர்களாகி, வானுலகு ஏகுதலை வேண்டுகின்றனர். அவர்கள் புண்ணியமான தேவேந்திர லோகத்தை யடைந்து சுவர்க்கத்தில் திவ்வியமான தேவபோகங்களை யனுபவிக்கின்றனர்.***

*ரிக், சாம, யஜுர் ஆகிய மூன்று வேதங்களில் சொல்லியுள்ள கர்மகாண்டத்தைப் பின்பற்றுபவர்கள் அடையும் மறுமைப் பயன்களில் மிகப்பெரியது இதுவாம். இந்திர பதவியே அவைகளுள் தலையாயது. காமிய கர்மி ஒருவன்*

*நூறு யாகங்கள் செய்தால் அவனுக்கு இந்திரபதவி கிட்டு*

**ते तं भुक्त्वा स्वर्गलोकं विशालं क्षीणे पुण्ये मर्त्यलोकं विशन्ति ।**
**एवं त्रयीधर्ममनुप्रपन्ना गतागतं कामकामा लभन्ते ॥ २१**

தே தம் புக்த்வா ஸ்வர்க்கலோகம் விசாலம்
க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி ।
ஏவம் த்ரயீதர்மமனுப்ரபன்னு
கதாகதம் காமகாமா லபந்தே ॥ 21

ते தே *அவர்கள்* तं विशालं स्वर्गलोकं தம் விசாலம் ஸ்வர்க்க லோகம் *அந்த விசாலமான சுவர்க்க லோகத்தை* भुक्त्वा புக்த்வா *அனுபவித்து* पुण्ये क्षीणे புண்யே க்ஷீணே *புண்ணியம் க்ஷீணமான பின்பு* मर्त्यलोकं மர்த்யலோகம் *மனுஷ்ய லோகத்தை* विशन्ति விசந்தி *புகுகிறார்கள்* एवं ஏவம் *இங்ஙனம்* त्रयीधर्मं த்ரயீதர்மம் *மூன்று வேதோக்த தர்மத்தை* अनुप्रपन्नाः அனுப்ரபன்னு: *பின்பற்றுபவர்கள்* कामकामाः காமகாமா: *இன்பப் பித்தர்களாய்* गतागतं (गत आगतं) கதாகதம் *போவதையும் வருவதையும்* लभन्ते லபந்தே *அடைகிறார்கள்.*

***அவர்கள் அந்த அகன்ற வானுலகை அனுபவித்து, புண்ணியம் தேய்ந்த பின்பு மண்ணுலகில் புகுகிறார்கள். இங்ஙனம் மூன்று வேத நெறிகளைப் பின்பற்றும் போகப்பித்தர்கள் பிறப்பு இறப்பு எய்துகின்றனர். 21***

*பொருள் உள்ள அளவு மண்ணுலகில் மதிப்பு இருப்பது போன்று புண்ணியம் உள்ள அளவு விண்ணுலகில் மதிப்பு உண்டு. அது அழிந்ததும் அங்கு அவர்களுக்கு இடமில்லை. புதிய புண்ணியத்தைத் தேட கர்மபூமிக்கு அவர்கள் வருகிறார்கள். சுதந்திரமற்று இன்ப நுகர்ச்சிக்காக அவர்கள் எங்கும் உழன்றாகவேண்டும்.*

*ஆசையை வென்று பக்தி பூண்டுள்ளவர்களோ வெனின்:—*

अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते ।
तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ॥ २२

அனன்யாஸ்சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே ।
தேஷாம் நித்யாபியுக்தானாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம் ॥ 22

अनन्याः அனன்யா: *அன்னியரல்லாராய்* माम् மாம் *என்னை* चिन्तयन्तः சிந்தயந்த: *சிந்தித்துக்கொண்டு* ये जनाः யே ஜநா: *எந்த ஜனங்கள்* पर्युपासते (परि-उपासते) பர்யுபாஸதே *எங்கும் உபாசிக்கிறார்களோ* नित्याभियुक्तानां (नित्य अभियुक्तानां) நித்யாபியுக்தானாம் *நித்ய யோகிகளுடைய* तेषां தேஷாம் *அவர்களுடைய* योगक्षेमं யோகக்ஷேமம் *யோக க்ஷேமத்தை* अहं அஹம் *நான்* वहामि வஹாமி *வழங்குகிறேன்.*

***அன்னியரல்லாராய் என்னையே நினைந்து யாண்டும் என்னையே உபாசிக்கும் நித்திய யோகிகளுடைய யோக க்ஷேமத்தை நான் வழங்குகிறேன்.*** **22**

*அனன்யம் என்றால் பரமாத்மா தங்களுக்கு அன்னியமானவர் அல்லர் என்று எண்ணுதல் அல்லது அவரைத் தவிர வேறு எதையும் எண்ணாதிருத்தல். யோகம் என்பது வேண்டியதைப் பெறுதல். பின்பு பெற்றதை வைத்துக் காப்பாற்றுதல் க்ஷேமமாகும்.*

*கர்ப்பத்திலிருக்கும் சிசு தாய்க்கு அன்னியமானதல்ல; ஆதலால் அதன் போஷணை முழுதும் தாயினிடத்திருந்தே இயல்பாக வருகிறது. பிறந்த பின்பும் தாயைத் தஞ்சமடைந்திருக்குமளவு அவள் உணவைத் தேடிவந்து ஊட்டுகிறாள். அனன்னிய பக்தியில் ஈடுபடுவோர் அடையும்பேறு யாண்டும் அதைவிடப் பெரியது.*

*பொருளைத் தேடுபவர்க்குப் பொருள் அமையவும் பிறகு அழியவும் செய்கிறது. இறைவனது அருள் ஒன்றையே நாடுபவர்க்கு அழியாத அவனது அருள் சுரக்கிறது. மேலும் உடல் வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருளின் யோக க்ஷேமமும் இறைவனாலேயே அளிக்கப்படுகிறது.*

பக்தர்மீது பித்தம் கொண்டுள்ள பகவான் தாயினும் சாலப் பரிந்து அவர்களைப் பராமரித்து வருவதாக வாக்குக் கொடுக்கிறான். அனன்னிய பக்திபண்ணுபவர்களுடைய பெருவாழ்க்கையே பகவானது பிரமாணிக்கத்துக்குப் பரம சான்றாகிறது. பக்தியின் பெருக்கால் தங்கள் உயிரையே அவர்கள் பொருள்படுத்துவதில்லை. ஆகையால் அவர்களைக் காப்பாற்றும் பொறுப்பு பகவானுடையதாகிறது.

பக்தன் பகவானைநோக்கி ஓர் அடிவைத்தால் பகவான் பக்தனை நோக்கிப் பத்து அடி வருகிறான்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

மற்ற தேவதைகளை வணங்குதல் ஈசுவர ஆராதனையாகாதோ வெனின் :—

येऽप्यन्यदेवता भक्ता यजन्ते श्रद्धयाऽन्विताः ।
तेऽपि मामेव कौन्तेय यजन्त्यविधिपूर्वकम् ॥ २३

யேऽப்யன்யதேவதா பக்தா யஜந்தே ச்ரத்தயாऽன்விதா: ।
தேऽபி மாமேவ கௌந்தேய யஜந்த்யவிதிபூர்வகம் ॥ 23

कौन्तेय கௌந்தேய *குந்தியின் மைந்தா* श्रद्धया अन्विताः ச்ரத்தயா அன்விதா: *சிரத்தையோடு கூடிய* ये भक्ताः யே பக்தா: *எந்த பக்தர்கள்* अन्य देवताः अपि அன்ய தேவதா: அபி *மற்ற தேவதைகளையும்* यजन्ते யஜந்தே *வணங்குகின்றார்களோ* ते अपि தே அபி *அவர்களும்* अविधि पूर्वकम् அவிதி பூர்வகம் *விதி வழுவியவர்களாய்* मां एव மாம் ஏவ *என்னையே* यजन्ति யஜந்தி *வணங்குகிறார்கள்.*

***சிரத்தையோடு கூடிய பக்தர்கள் மற்ற தேவதைகளை வணங்குங்கால், விதி வழுவியவர்களாய் என்னையே வணங்குகின்றார்கள். 23***

சிரத்தையோடு கூடியிருத்தல் என்பது ஆஸ்திக்ய புத்தியுடைத்திருத்தல் அல்லது தெய்வம் துணைபுரியும் என்ற நம்பிக்கையுடனிருத்தலாம். அக்ஞானத்தால் விதி வழுவிச்செய்யும் செயல் அவிதிபூர்வகம் எனப்படுகிறது.

ஓர் அரசாங்கத்தை நிர்வகிக்கும் உத்தியோகஸ்தர்கள் தங்கள் ஆதிக்கத்தையெல்லாம் அரசனிடமிருந்து பெறு

*கிறார்கள். விண்ணப்பதார் ஒருவன் தன் காரியம் நிறைவேறுதற்கு உத்தியோகஸ்தருடைய தயவைப் பெற்று அதினின்று தனக்குக் காரியசித்தி ஏற்பட்டதென்று எண்ணுவானாகில் அவ்வெண்ணம் அரசனது ஆட்சிக்கிரமத்தைப்பற்றிய அக்ஞானத்தினின்று உதித்ததாகும். அரசனுடைய ஆட்சி முறையே காரியசித்திக்கு அடிப்படையான காரணமாகும்.*

*காரியசித்தி, புக்தி, முக்தி ஆகிய யாவும் முழுமுதற் பொருளாகிய சர்வேசுவரனிடத்திருந்து வருபவைகள் என்ற உண்மையை அறியாது, சிறு தேவதைகள் ஈசனுக்குப் புறம்பானவைகள் என்றெண்ணி, அச்சிறு தேவதைகளிடத்து வரம்வேண்டுபவர் விதிவழுவி விண்ணப்பித்தவர் ஆகின்றனர்.*

*ஏன் அதை முறை வழுவிய விண்ணப்பம் என்று சொல்லவேண்டும்? விடை வருகிறது :—*

**अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च ।**
**न तु मामभिजानन्ति तत्त्वेनातश्च्यवन्ति ते ॥ २४**

அஹம் ஹி ஸர்வயக்ஞானாம் போக்தா ச ப்ரபுரேவ ச ।
ந து மாமபிஜானந்தி தத்த்வேனாதஸ்ச்யவந்தி தே ॥ 24

हि ஹி *நிச்சயமாக* अहं एव அஹம் ஏவ *நானே* सर्वयज्ञानां ஸர்வயக்ஞானாம் *எல்லா யாகங்களினுடைய* भोक्ता च प्रभुः च போக்தா ச ப்ரபு: ச *போக்தாவாகவும் பிரபுவாகவும் இருக்கிறேன்* तु து *ஆனால்* ते தே *அவர்கள்* मां மாம் *என்னை* तत्त्वेन தத்த்வேன *உள்ளபடி* न अभिजानन्ति ந அபிஜானந்தி *அறிகிறார்களில்லை* अतः அத: *ஆகையினால்* च्यवन्ति ச்யவந்தி *வழுவுகிறார்கள்.*

***நானே சகல யாகங்களுக்கும் போக்தாவாகவும் பிரபுவாகவும் இருக்கிறேன். ஆனால் பல தேவதைகளை வணங்குபவர் என்னை உள்ளபடி அறிகிறார்களில்லை. ஆகையால் அவர்கள் வழுவிப் பிறவியில் வீழ்கின்றனர்.*** **24**

*போக்தா என்பது உண்பவன் என்று பொருள்படுகிறது. தலைவன் அல்லது சொந்தக்காரன் பிரபு எனப்படுகிறான்.*

*சிறு உத்தியோகஸ்தர்களிடமிருந்து சிறு நன்மையைத் தாற்காலிகமாகப் பெற்றுப் பிறகு அதை இழந்துவிடுவது போன்று சிறு தேவதைகளை வணங்கி, அத்தேவலோகங்களை அடையப்பெற்றுக் காலாவதியில் பிறப்புலகுக்குத் திரும்புகிறார்கள். ஆதலால் சிறு தேவதைகளை வணங்குதல் விதிவழுவிய விண்ணப்பமாகும்.*

*இனி "நானே ஈண்டு தேகத்தினுள் அதியக்ஞமாகிறேன்" என்று பகவான் 8 வது அத்தியாயம் நான்காவது சுலோகத்தில் சொல்லுவதைக் கவனிக்க.*

*ஒவ்வொருவரும் அடையும் நிலையைப்பற்றிய உண்மையாவது :—*

**यान्ति देवव्रता देवान्पितॄन्यान्ति पितृव्रताः ।**
**भूतानि यान्ति भूतेज्या यान्ति मद्याजिनोऽपि माम् ॥ २५**

யாந்தி தேவவ்ரதா தேவான் பித்ரூன் யாந்தி பித்ருவ்ரதா: ।
பூதானி யாந்தி பூதேஜ்யா யாந்தி மத்யாஜினோऽபி மாம் ॥ 25

देवव्रताः தேவவ்ரதா: *தேவர்களைத் தொழுபவர்* देवान् தேவான் *தேவர்களை* यान्ति யாந்தி *அடைகின்றனர்* पितृव्रताः பித்ருவ்ரதா: *பிதிர்க்களைப் போற்றுபவர்* पितॄन् यान्ति பித்ரூன் யாந்தி *பிதிர்க்களைப் பெறுகின்றனர்* भूतेज्याः பூதேஜ்யா: *பூதங்களை வணங்குபவர்* भूतानि यान्ति பூதானி யாந்தி *பூதங்களைப் போய்ச் சேருகின்றனர்* मद्याजिनः மத்யாஜின: *என்னைப் பூஜிக்கின்றவர்கள்* माम् अपि यान्ति மாம் அபி யாந்தி *என்னையே எய்துவார்.*

***தேவர்களைத் தொழுபவர் தேவர்களை அடைகின்றனர்; பிதிர்க்களைப்போற்றுபவர் பிதிர்க்களைப் பெறுகின்றனர்; பூதங்களை வணங்குபவர் பூதங்களைப் போய்ச் சேருகின்றனர்; என்னைப் பூஜிக்கிறவர்கள் என்னையே எய்துவார்கள்.*** **25**

மனிதனிலும் மேம்பட்டவர், ஆனால் தேவர்களுக்குக் கீழோர் பூதங்கள் எனப்படுகின்றனர். இங்கு 'என்னை' என்பது பரமாத்மாவைக் குறிக்கிறது.

தன்னிலும் மிக்காரை அணுகி, அவர்களுக்கு ஒப்பாகவேண்டுமென்று முயலுவது உபாசனையாம். வழிபாடு என்பதும் அதுவே. சிறு செல்வம் உடையவன் பெருஞ் செல்வம் படைக்க முயலுகிறான். சிற்றறிவுடையோன் பேரறிஞனாதற்குப் பாடுபடுகிறான். ஆற்றலில் தாழ்ந்தவன் மேலோனாக விரும்புகிறான். இங்ஙனம் பெருநிலையடையப் பாடுபடுதலே உபாசனையாகிறது. மனது ஆழ்ந்து எதை எண்ணுகிறதோ அதன் தன்மையைப் பெறுகிறது. உபாசகனுக்கு உபாசனா மூர்த்தியின் விபூதி அல்லது மகிமையெல்லாம் வந்தமைகிறது. உயரத்தில் இருக்கிற நீர்ப்பாண்டத்தோடு இணைத்துள்ள குழாயிலும் நீர் உயர ஏறுகிறது. சீரிய பொருளைச் சிந்திக்கிற மனது சீரியதாகிறது; தாழ்ந்ததை நினைப்பது தாழ்ந்ததாகிறது. ஆகையால்தான் தேவதைகளை உபாசிப்பவன் தேவதைகளை அடைகிறான். பிதிர்க்களை வணங்குபவன் பிதிர்க்களைச் சேருகிறான். பூத பிசாசுகளைப் போற்றுபவன் தானே பிசாசு ஆகிறான். ஈசுவரனை உபாசிப்பவன் ஈசுவரனை அடைகிறான்.

ஒரு சாயக்காரன் வஸ்திரத்துக்குச் சாயமேற்றுவதில் ஒரு அலாதி முறையைக் கைப்பற்றி வந்தான். "உன் வஸ்திரத்துக்கு எந்த நிறம்வேண்டும்?" என்று அவன் ஒருவனைக் கேட்பான். "சிவப்பு வர்ணம்" என்று விடை வந்தால் சாயக்காரன் தனது தொட்டியில் அவ் வஸ்திரத்தைத் தோய்த்து எடுத்து "இதோ உன் வஸ்திரத்துக்குச் சிவப்புச் சாயம் போட்டாயிற்று" என்று கொடுப்பான். மஞ்சள் சாயம் வேண்டுமென்று இன்னொருவன் கேட்பான். அதேதொட்டியில் சாயக்காரன் அவனுடைய வஸ்திரத்தையும் தோய்ப்பான்; வெளியில் எடுக்கும்போது அது மஞ்சள் நிறமாகவிருக்கும். நீலம், ஊதா, பச்சை முதலிய எந்த நிறம் வேண்டியிருந்தாலும் சரியே, ஒரே தொட்டியில்தான் சாயக்காரன் வேஷ்டியை நனைப்பான். வேண்டப்பட்ட சாயம் வஸ்திரத்தில் ஏற்றப்பட்டிருக்கும். இதையெல்லாம் கவனித்துக்கொண்டிருந்த ஒருவன் சாயக்காரனிடம் வந்து, "நண்பா, எனக்குத் தகுந்தது எது என்று நீயே தீர்மானம் செய்து அந்தச்சாயத்

தில் தோய்" என்று சாயக்காரனிடத்தில் பொறுப்பை ஒப்படைத்து விட்டான்.

நமது மனம் வஸ்திரம்போன்றது. ஈசுவரனே சாயக்காரனாகவும் அவனுடைய சாயத்தொட்டியாகவும் இருக்கிறான். அவனிடம் கேட்கிற மனநிலை நமக்குக் கிடைக்கிறது. ஒன்றும் கேளாது நம்மை அவனிடம் கொடுத்துவிடுவது நலம். அப்பொழுது அவன் தன்னை நமக்குக் கொடுக்கிறான்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

சிறு உத்தியோகஸ்தர் முன்னிலைக்கு யாரும் எளிதில் செல்லலாம். ஆனால் அரசன் முன்னிலைக்குச்செல்ல எல்லார்க்கும் தகுதியில்லை. சிறுதேவதைகளை எளிதில் வசப்படுத்தலாம். சர்வேசுவரனைத் திருப்திப்படுத்துவது அவ்வளவு எளிதன்று என்று ஒருவர் கருதலாம். அதற்குப் பகவானது விடை வருகிறது:—

**पत्रं पुष्पं फलं तोयं यो मे भक्त्या प्रयच्छति ।**
**तदहं भक्त्युपहृतमश्नामि प्रयतात्मनः ॥ २६**

பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி ।
ததஹம் பக்த்யுபஹ்ருதமச்னமி ப்ரயதாத்மன: ॥ 26

यः ய: *யார்* मे மே *எனக்கு* भक्त्या பக்த்யா *பக்தியோடு* पत्रं பத்ரம் *இலை* पुष्पं புஷ்பம் *மலர்* फलं பலம் *கனி* तोयं தோயம் *நீர்* प्रयच्छति ப்ரயச்சதி *அளிக்கிறன்* अहं அஹம் *நான்* प्रयतात्मनः (प्रयत+आत्मनः) ப்ரயதாத்மன: *தூய மனத்தானுடைய* भक्त्युपहृतम् (भक्ति+उपहृतम्) तत् பக்த்யுபஹ்ருதம் தத் *அன்பளிப்பாகிய அதை* अश्नामि அச்னமி *அருந்துகிறேன்.*

***யார் எனக்கு இலை, மலர், கனி அல்லது நீரை பக்தியோடுபடைக்கிறானோ, அத்தூய மனத்தானது அன்பளிப்பை நான் (இன்புடன்) அருந்துகிறேன்.***

ஒரு பொருளின் விலை மதிப்புக்கு ஏற்றபடி அதைப் பெரிய சம்மானமாகக் கருதுதல் உலகத்தவர் இயல்பு இந்திராதி தேவர்களது போக்கும் அத்தகையதே. ஆனால் லக்ஷ்மி தேவியையே பணிப்பெண்ணாகவுடைய பகவானுடைய

பண்பு வேறானது. ஜகத்துக்கெல்லாம் நாதன் எனினும் தன்னில் தானே திருப்தியடைந்திருப்பவன் அவன். எப்பொருளைக்கொண்டும் அவனைப் பெற முடியாது. நல்ல மனமுடையாரது பக்தி வலையொன்றில் மட்டும் அவன் படுகிறான். பக்திக்கு அறிகுறியாக இயற்கையில் எளிதில் அகப்படுகின்ற கனி, மலர், இலை, நீர் ஆகிய எதைப் படைத்தாலும் அவன் மகிழ்வோடு வாங்கிக்கொள்கிறான். விதுரர் வார்த்த கஞ்சியை அமிழ்தெனப் பாராட்டி அவர் அருந்தினார். சுதாமா என்று அழைக்கப்பட்ட குசேலர் கொண்டு வந்த அவலை அவர் வலியப் பிடுங்கி வாயில் போட்டுக்கொண்டார். சபரி கொடுத்த உலர்ந்த காய்கனிகள் இராமனுக்கு ஏற்புடையனவாயின. கண்ணப்பரது உமிழ் நீரும் அவன் மென்ற மாமிசமும் சிவனாருக்கு ஒப்பற்ற நைவேத்தியமாயின. பக்தியானது பகவானுக்கு அவ்வளவு பெரியது.

பக்தியையே பகவான் பெரிதும் பாராட்டுகிறபடியால் :—

**यत्करोषि यदश्नासि यज्जुहोषि ददासि यत् ।**
**यत्तपस्यसि कौन्तेय तत्कुरुष्व मदर्पणम् ॥ २७**

யத்கரோஷி யதச்ஞஸி யஜ்ஜுஹோஷி ததாஸி யத் ।
யத்தபஸ்யஸி கௌந்தேய தத்குருஷ்வ மதர்பணம் ॥ 27

कौन्तेय கௌந்தேய *குந்தியின் புதல்வா* यत् करोषि யத் கரோஷி *எதைச் செய்யினும்* यत् अश्नासि யத் அச்ஞஸி *எதைப் புசிக்கினும்* यत् जुहोषि யத் ஜுஹோஷி *எதை ஹோமம் பண்ணினும்* यत् ददासि யத் ததாஸி *எதை ஈந்திடினும்* यत् तपस्यसि யத் தபஸ்யஸி *எத் தவத்தைச் செய்தாலும்* तत् தத் *அதை* मदर्पणं மதர்பணம் *எனக்கு அர்ப்பணமாக* कुरुष्व குருஷ்வ *செய்.*

***குந்தியின் புதல்வா, நீ எதைச் செய்தாலும், யாது புசித்தாலும், ஏது ஹோமம் பண்ணினாலும், எதை ஐயமிட்டாலும், எத்தவத்தைப் புரிந்தாலும் அதை எனக்கு அர்ப்பணமாகச் செய்.*** **27**

வாழ்க்கையில் வந்தமையும் நிகழ்ச்சிகளையெல்லாம்

**यत्करोमि यदश्नामि यज्जुहोमि ददामि यत् ।**
**यत्तपस्यामि भगवन् तत्करोमि त्वदर्पणं ॥**

யத்கரோமி யதச்ஞமி யஜ்ஜுஹோமி ததாமி யத் ।
யத்தபஸ்யாமி பகவன் தத்கரோமி த்வதர்ப்பணம் ॥

என்று இவ்வாறு ஈசுவரனுக்கு அர்ப்பணம் பண்ணத் தெரிந்துகொண்டால் இது ஈசுவர ஆராதனை, இது லௌகிகம் என்கிற வேறுபாடு இல்லாது போய்விடுகிறது. வாழ்க்கையே ஓர் இடையருத ஆராதனையாகிறது. செய்வது தீவினையாயிருந்தாலும் அது இறைவனது கைங்கரியம் என்கிற எண்ணம் வலுக்க வலுக்க தீவினை யொழிந்து நல்வினை நிலைபெறுகிறது. பஞ்சமகாபாதகங்களில் ஈடுபட்டிருந்த கிரீஷ் சந்திர கோஷர் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரால் ஆட்கொள்ளப்பட்டார். அவர் செய்துவந்த பாபச் செயல்களையெல்லாம் விட்டுவிடும்படி ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்லவில்லை. ஞாபகம் வரும்பொழுதெல்லாம் அம்மனிதரது செயல்களைத் தமக்கு அர்ப்பணம் பண்ணவேண்டும் என்று மட்டும் அவர் கேட்டுக்கொண்டார். தம் வினைகளை இறைவனுக்கு அர்ப்பணம் பண்ண ஆரம்பித்ததும் தீவினை யொழிந்து, நல்வினை தலையெடுக்க ஆரம்பித்தது. ஆக, எதைச் செய்தாலும் அதைக் கடவுள் பொருட்டுச் செய்பவர்க்குத் தீவினை விரைவில் போம்.

உணவில் வைத்துள்ள பற்று போகப்பிரியத்துக்கு அறிகுறியாகும். தீனியில் வைத்துள்ள நாவாசையை அடக்காதவன் மற்ற ஆசைகளை அடக்க முடியாது. உண்பதையே கடவுள் ஆராதனையாகச் செய்து பழகப் பழக போகமானது யோகமாக மாறிவிடுகிறது.

எதைத் தானமாகக் கொடுக்கிருயோ, அதையும் ஈசுவரார்ப்பணமாகச் செய். ஈயாத லோபியைவிட மேலானவன் ஐயமிடுபவன். ஈதல் அறம் எனப்படுகிறது. அப்படிக் கொடுக்கிறவன் தன்னைப் பெரியவனுகக் கருதுவானுனல்

அஹங்காரத் தடிப்பால் அவன் சிறியவனுகிறான். தானம் செய்வதை நாராயண சேவையாகக் கருதுமிடத்து அஹங்காரம் தேய்கிறது. கடவுளுக்குப் பூஜை செய்யும் பாவனையே தானம் செய்வதிலும் வந்தமையவேண்டும்.

தவம் புரிதலைத் தன் சித்தியின் பொருட்டு ஒருவன் செய்யக்கூடும். அது காமிய தபசு ஆகிறது. அதனால் ஜீவபோதம் வளர்கிறது. "தவசிகளுக்கிடையில் நான் தபசாயிருக்கிறேன்" என்று பகவான் பகருகிருர். (அத். 7 சுலோகம் 9) ஆகையால் தபசு என்னும் தெய்வ சம்பத்து அவரிடத்திருந்து வந்தது. அதனால் அவரது பெருமையே நிலைபெறுக, என்றெண்ணித் தவம் புரிதல் சாலச் சிறந்தது.

இங்ஙனம் வாழ்க்கையில் வந்து அமைந்துள்ள செயல்களெல்லாம் ஈசுவர ஆராதனையாகின்றன. அதனால் ஜீவபோதம் குறைகிறது; பரபோதம் மேலிடுகிறது. எல்லாம் அவன் உடைமையே; எல்லாம் அவன் செயலே என்ற திருக்காட்சி அமையப் பெறுகிறது.

> "தாயே நான் ஒரு யந்திரம், நீ யந்திரீ; நான் ஒரு அறை, நீ அதில் குடியிருப்பவள்; நான் உறை, நீ அதனுள் போடப்படும் வாள்; நான் ரதம், நீ சாரதி; நீ ஆட்டிவைக்கிறபடி நான் ஆடுகிறேன். நீ பேசுவிக்கிறபடி நான் பேசுகிறேன். என்செயல் என்பதெல்லாம் என் உள்ளிருக்கும் உன் செயலே. நான் அல்லேன், நான் அல்லேன்; எல்லாம் நீதான்."
>
> — ஸ்ரீ ராமகிருஷ்ணர் பிரார்த்தனை

எல்லாம் ஈசுவரனுக்கு அர்ப்பணம் பண்ணுவதால் ஜீவன் அடையும் நன்மை வருமாறு:—

**शुभाशुभफलैरेवं मोक्ष्यसे कर्मबन्धनैः ।**
**संन्यासयोगयुक्तात्मा विमुक्तो मामुपैष्यसि ॥ २८**

சுபாசுபபலைரேவம் மோக்ஷ்யஸே கர்மபந்தனை: ।
ஸந்யாஸயோகயுக்தாத்மா விமுக்தோ மாமுபைஷ்யஸி ॥ 28

एवं ஏவம் *இங்ஙனம்* शुभ-अशुभ-फलैः कर्म बन्धनैः சுப அசுப பலை: கர்மபந்தனை: *சுப அசுப பலன்களைத் தருகின்ற கருமபந்தனங்களி*

னின்று मोक्ष्यसे மோக்ஷ்யஸே விடுபடுவாய் संन्यासयोगयुक्तात्मा ஸந்யாஸ யோகயுக்தாத்மா ஸந்நியாசயோகத்தில் உள்ளத்தை உறுதியாக வைத்த வனாய் विमुक्तः விமுக்த: வினையினின்று விடுபட்டு मां उपैष्यसि மாம் உபைஷ்யஸி என்னை அடைவாய்.

**இங்ஙனம் நன்மை தீமைகளைப் பயக்கின்ற வினைத்தளைகளினின்று விடுபடுவாய். சந்நியாச யோகத்தில் உள்ளத்தை உறுதியாக வைத்தவனாய், வினையினின்று விடுபட்டு என்னை அடைவாய். 28**

இப்படி ஈசுவரனுக்கு சமர்ப்பிப்பதன் மூலம் வினைத் தளைகள் போம். நன்மை பயப்பனவும் தீமை பயப்பனவும் ஆகிய வினைகளெல்லாம் பிறவிக்கு வித்தாகின்றன. பிறவி என்னும் இருளில் சேர்க்கின்ற இருவினைகளையும் ஈசுவரார்ப் பணம் என்னும் தீயில் போட்டுவிட்டால், அவைகள் வெந்த விதைபோன்று ஆய்விடுகின்றன. வெந்த விதை முளைக் காது. ஈசுவரனுக்கு அர்ப்பணம் பண்ணின கருமம் பிற வியை உண்டுபண்ணாது.

கருமத்தை விடுதல், கருமத்தைச் செய்தல் ஆகிய இரண்டுக்கும் இடையில் உள்ளமுரண்பாடு இங்கு சந்நியாச யோகத்தில் சமரசம் பெறுகிறது. மனிதன் தனக்கென்று ஒன்றும் செய்யாது எல்லாம் ஈசுவரார்ப்பணமாகச் செய்கிற படியால் அது சந்நியாசமாகிறது. பகவான் பொருட்டு முறையாகவும் ஊக்கத்துடனும் கருமம் நடைபெற்றுக் கொண்டிருக்கிறபடியால் அது யோகமாகிறது. அத்தகைய யோகிக்கு கருமசொரூபமாயுள்ள வாழ்க்கையில் குறை யொன்றுமில்லை. ஜீவன்முக்தனாக யோகி உடலில் வாழ் கின்றான். உடலை உகுத்ததும் அவன் விதேக முக்தனாகிறான்.

இவ்வுலகில் இருக்கையில் நீ என்ன செய்யவேண்டும்? எல்லா வற்றையும் ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்துவிடு. நீயும் அவனைச் சரணமடை. அப்பால் உனக்குத் துன்பமே இராது. சீக்கிரத்தில் ஈசுவர சன்னிதானத்தை அடைவாய். — ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

தம்மைத் தொடர்ந்திருப்பாருக்குத் துணைபுரிதலும் மற்றவர்களிடத்துப் பாராமுகமாயிருப்பதும் உலகத்தவர்

*இயல்பு. பகவானும் அதைத்தானே செய்கிறார். அவருக்கும் விருப்பு வெறுப்பு உண்டு என்ற ஐயம் எழலாம். அதற்கு விடை வருகிறது :—*

**समोऽहं सर्वभूतेषु न मे द्वेष्योऽस्ति न प्रियः ।**
**ये भजन्ति तु मां भक्त्या मयि ते तेषु चाप्यहम् ॥ २९**

ஸமோऽஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோऽஸ்தி ந ப்ரிய: ।
யே பஜந்தி து மாம் பக்த்யா மயி தே தேஷு சாப்யஹம் ॥ 29

अहं அஹம் *நான்* सर्वभूतेषु ஸர்வபூதேஷு *எல்லா உயிர்களிடத்தும்* समः ஸம: *சமமாயிருக்கிறேன்* मे மே *எனக்கு* न द्वेष्यः न प्रियः अस्ति ந த்வேஷ்ய: ந ப்ரிய: அஸ்தி *பகைவனுமில்லை நண்பனுமில்லை* ये யே *யார்* तु து *ஆனால்* मां மாம் *என்னை* भक्त्या பக்த்யா *பக்தியோடு* भजन्ति பஜந்தி *பஜிக்கிறார்களோ* ते தே *அவர்கள்* मयि மயி *என்னிடத்து* च ச *உம்* अहं अपि அஹம் அபி *நானும்* तेषु தேஷு *அவர்களிடத்து.*

***நான் எல்லா உயிர்களிடத்தும் சமமாயிருக்கிறேன். எனக்குப் பகைவனுமில்லை; நண்பனுமில்லை. ஆனால் என்னைப் பக்தியோடு பஜிக்கிறவர்கள் என்பால் உளர். நானும் அவர்கள்பால் உளேன். 29***

*நல்லது கெட்டது என்று வேற்றுமை பாராட்டாது எல்லாப்பொருள்கள் மீதும் சூரியவெளிச்சம் சமனாகப் படிகிறது. அவ்வெளிச்சத்தைப் பயன்படுத்திக்கொள்ளுதல் அந்தந்தப் பொருள்களின் இயல்பைப் பொறுத்ததாகும். கருமணல், வெண்மணல், கண்ணாடி ஆகிய இவை யாவும் ஒரு பொருளின் வெவ்வேறு தோற்றங்கள். சூரிய வெளிச்சம் இவைகளின் மீது ஒரே விதமாகப் படிகிறது. ஆனால் சூரியனுடைய சான்னியத்தித்தைக் கண்ணாடியில் காண்பதுபோன்று வெண்மணலில் காணமுடியாது; வெண் மணலில் காண்பதுபோன்று கருமணலில் காணமுடியாது. ஈசுவர சான்னித்தியம் ஓரளவு அதுபோன்றது. சூரியன்*

மனனுக்கு வெகு தூரத்தில் இருக்கிருன். ஆனால் ஈசுவரன் ஜீவனுக்குப் புறம்பாயில்லை. தீப்பற்றி எரியும் தன்மை மரமெங்கும் வியாபகமாயிருக்கிறது. பச்சை மரத்திலும் அவ்வியல்பு மறைந்துளது. அது உலரவேண்டும். பிறகு தொடர்ந்து உராய்தலால் அல்லது தீயோடு தொடர்வு வைப்பதால் மரக்கட்டை பற்றி எரிகிறது. அவ்வேளையில் விறகுக்கட்டை வேறு, தீ வேறு அல்ல. விறகே தீ; தீயே விறகு.

நீக்கமற எங்கும் நிறைந்துள்ள இறைவன் இமைப் பொழுதும் நீங்காது நெஞ்சத்தில் குடிகொண்டிருக்கிருன். உள்ளத்தைத் தூயதாக்காதவர்களுக்கு அவ்வுண்மை விளங்குவதில்லை. அனன்ய பக்தியால் மனதைப் பண்படுத்தியவர்களுக்கு அது விளங்குகிறது. யாண்டும் பகவானுடைய முன்னிலையிலேயே அத்தகைய பக்தர்கள் வாசம் செய்கிருர்கள். கண்ணுடியில் சூரியன் போன்றும், உலர்ந்த விறகுக் கட்டையில் தீப்போன்றும் கருவி கரணங்கள் ஓய்ந்த தொண்டர்களிடத்துப் பகவான் வீற்றிருக்கிருன்.

எல்லா மனிதர்களிடத்திலும் ஈசுவரன் இருக்கிருன். ஆனால் ஈசுவரனிடத்தில் எல்லா மனிதர்களும் இல்லை. இதுதான் அவர்கள் துன்பப்படுவதற்குக் காரணம்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

பக்தியின் சிறப்பு எத்தகையது என்பது விளக்கப் படுகிறது :—

अपि चेत्सुदुराचारो भजते मामनन्यभाक् ।
साधुरेव स मन्तव्यः सम्यग्व्यवसितो हि सः ३०

அபி சேத்ஸுதுராசாரோ பஜதே மாமனன்யபாக் ।
ஸாதுரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக்வ்யவஸிதோ ஹி ஸ: ॥ 30

सुदुराचारः अपि ஸுதுராசார: அபி *அதி துராசாரனும் கூட* अनन्यभाक् அனன்யபாக் *வேறு ஒன்றையும் எண்ணுது* मां भजते चेत् மாம் பஜதே சேத் *என்னை பஜிப்பானுனல்* सः ஸ: *அவன்* साधुः एव मन्तव्यः ஸாது: ஏவ மந்தவ்ய: *சாது என்றே கருதப்படவேண்டும்* हि ஹி

*ஏனென்றால் सः ஸ: அவன் सम्यक् நன்கு व्यवसितः தீர்மானித்தவன்.*

***கேடு மிக உடையோனும் வேறு ஒன்றையும் எண்ணாது என்னைப் பஜிப்பானானால், அவன் சாது என்றே கருதப்பட வேண்டும். ஏனென்றால் அவன் நன்கு தீர்மானித்தவன் ஆகிறான். 30***

*தர்மத்தை முறையாகச் செய்கின்றவர்களும் இந்திரிய நிக்கிரகம் நன்குசெய்கிறவர்களும் சதாசாரம் உடையவர்கள் ஆகின்றனர். கொலை, களவு முதலிய பாபச்செயலைச் செய்கின்றவர்களும் மனம் அடங்காது இந்திரியங்கள் வழியாக விஷயங்களில் மூழ்குபவரும் துராசாரம் உடையவர் ஆகின்றனர். அன்னவர் மேலும் மேலும் அதோகதியை அடைகின்றனர். அத்தகைய கீழ்மக்களும் விரைவில் மேன்மக்கள் ஆதற்கு வழியுண்டு. எண்ணமே பெருமைக்கும் சிறுமைக்கும் முதற்காரணம். இடையறாது இறைவனிடத்து பக்தி பண்ணவேண்டும் என்ற எண்ணம் வலுக்கும்போது முன்பு பாபச் செயல்களைப் பற்றியும் கீழான விஷய போகங்களைப் பற்றியும் எண்ணிய எண்ணங்கள் அடிபடுகின்றன. பகவானைப்பற்றிய நல்லெண்ணம் ஒன்றே பாக்கியிருக்கிறது. சுடர் வெளிச்சமுள்ள வீட்டுக்குள் திருடன் நுழையான். அதுபோன்று பகவத் சிந்தனையுள்ள மனதில் துராசாரத்துக்கு ஏதுவான எண்ணங்களுக்கு இடமில்லை. நற்செயலுக்கும் நல்லியல்புக்கும் வித்தாவது நல்லெண்ணம். ஆக, இடையறாது இறைவனை பஜிக்கத் தீர்மானம் செய்கிறவளவில் கேடுடைய ஒருவன் சாதுவாகிறான். சிறப்பு அனைத்தும் அதினின்று வருமாதலால் அவன் நன்கு தீர்மானித்தவன் ஆகிறான்.*

*எல்லாவற்றையும் பரித்தியாகம் செய்துவிட்டு, ஈசுவரனுடைய பாதாரவிந்தங்களில் சேரவேண்டுமென்று செய்யும் உபதேசங்களை உலகப்பற்றுள்ளவர்கள் கேட்கமாட்டார்கள். இப்படிப்பட்டவர்களை எப்படி நல்வழிக்குக் கொண்டுவரலாமென்பதை நன்றாக ஆலோசனை செய்து தெளிந்த கௌரங்க சுவாமியும் நித்தியானந்த சுவாமியும்,*

"ஜனங்களே! வாருங்கள்; பகவந் நாமத்தை வாய்விட்டுப் பாடினால் உங்களுக்கு நல்லுணவும் நாரியர் போகமும் கிடைக்கும்" என்று ஆசைகாட்டி அழைத்தனர். அனேகர் அவ்வுணவையும் போகத்தையும் அடையலாம் என்ற நோக்கத்தோடு பகவந் நாமத்தைச் சொல்ல ஓடி வந்து அவர்களைத் திரளாகச் சூழ்ந்துகொண்டனர். ஆகவே அவர்கள் எல்லோரும் வலைக்குள் அகப்பட்டுவிட்டனர். பகவந் நாமமாகிய அமிர்தத்தின் இன்பத்தைச் சிறிது சிறிதாகச் சுவைத்ததும் அவர்கள் நித்தியானந்த சுவாமி சொன்ன வார்த்தைகளின் உட்கருத்தை யறிந்து கொண்டனர். ஈசுவரனிடம் பூரண பக்தி செய்வதாலுண்டாகும் ஆனந்த பாஷ்பந்தான் நல்லுணவு; பக்தி பரவசமானவன் தன்னை யறியாமல் இள நங்கையாகிய தரையைத் தழுவிப் புரளுவதுதான் நாரியர் போகம்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

எத்தனை பிறவிக்குப் பிறகு அவன் சாது ஆகிறான் என்ற கேள்வி எழலாம். அதற்கு விடை வருகிறது :—

क्षिप्रं भवति धर्मात्मा शश्वच्छान्तिं निगच्छति ।
कौन्तेय प्रतिजानीहि न मे भक्तः प्रणश्यति ॥ ३१

க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா சச்வச்சாந்திம் நிகச்சதி ।
கௌந்தேய ப்ரதிஜானீஹி ந மே பக்த: ப்ரணச்யதி ॥ 31

क्षिप्रं க்ஷிப்ரம் *விரைவில்* धर्म आत्मा भवति தர்ம ஆத்மா பவதி *தர்மாத்மா ஆகிறான்* शश्वत् சச்வத் *நித்திய* शान्तिं சாந்திம் *சாந்தியை* निगच्छति நிகச்சதி *அடைகிறான்* कौन्तेय கௌந்தேய *குந்தியின் புதல்வா* मे மே *என்னுடைய* भक्तः பக்த: *பக்தன்* न प्रणश्यति ந ப்ரணச்யதி *நாசமடைவதில்லை (என்று)* प्रतिजानीहि ப்ரதிஜானீஹி *அறிவுறுத்து.*

***விரைவில் அவன் அறவான் ஆகிறான்; நித்திய சாந்தியையும் அடைகிறான். குந்தியின் புதல்வா, என் பக்தன் நாசமடைவதில்லை யென்று நன்கு அறிவுறுத்துக. 31***

*வால்மீகி, கண்ணப்பர் முதலாயினோர் முதலில் துராசாரமுடையவர்களா யிருந்தார்கள். ஏனென்றால் மேலோர்களால் ஆமோதிக்கப்படாத வாழ்க்கை முறை அவர்களிடத்திருந்தது. பகவத் பக்தியில் அவர்கள் மனது திரும்பியது. அதே பிறவியில் அதிவிரைவில் அவர்களது*

*வாழ்க்கை மாறியது. அறச்செயலுக்கு அவர்கள் இருப்பிட மானார்கள். முன்பு அறிந்திராத நித்திய சாந்தியும் அவர் களுக்கு உண்டாயிற்று. கேடு அனைத்தும் நீங்கப்பெற்று, நலம் அனைத்தும் அடையப்பெற்றார்கள்.*

*கண்ணனிடத்து மாறாத பக்தி பூண்டு வாழ்ந்த வர்கள் பாண்டவர்கள். அவர்கள் ராஜ்யத்தை இழந் தார்கள்; ஆபத்துக்கள் பல நேர்ந்தன; கஷ்டத்துக்கு மேல் கஷ்டம் வந்தது; வனவாசத்தில் படாத பாடு பட்டனர். ஆனால் பக்தியை மட்டும் அவர்கள் கைவிடவில்லை. கிருஷ் ணனைச் சார்ந்து இருந்தது ஒன்றே அவர்களுக்கு எல்லா வல்லமையையும் ஊட்டியது. நித்திய வாழ்க்கையை அவர் களே பெற்றனர். பிரஹ்லாதன், அப்பர் முதலாயினோர் வாழ்க்கையும் இதற்குச் சான்றாகும். பக்தர்களுக்கு அழி வில்லை என்பதைப் பக்தர்களுடைய வாழ்க்கையே விளம் பரம் செய்கிறது.*

*கடைத்தரமான பாபிகளும் கடைத்தேற முடியும் என்று சொல்லியான பிறகு இடைத்தரமானவர்களைப் பற் றிய பேச்சு வருகிறது. அதாவது:—*

**मां हि पार्थ व्यपाश्रित्य येऽपि स्युः पापयोनयः ।**
**स्त्रियो वैश्यास्तथा शूद्रास्तेऽपि यान्ति परां गतिम् ॥ ३२**

மாம் ஹி பார்த்த வ்யபாச்ரித்ய யே஽பி ஸ்யு: பாபயோனய: ।
ஸ்த்ரியோ வைச்யாஸ்ததா சூத்ராஸ்தே஽பி யாந்தி பராம் கதிம் ॥

पार्थ பார்த்த *பார்த்த* ये யே *யார்* अपि அபி *இன்னும்* पापयोनयः स्युः பாபயோனய: ஸ்யு: *கீழான பிறவியர்களாயிருக்கின்ற* स्त्रियः ஸ்த்ரிய: *பெண்பாலர்* वैश्याः வைச்யா: *வைசியர்கள்* तथा ததா *அங்ஙனமே* शूद्राः சூத்ரா: *சூத்திரர்கள்* ते अपि தே அபி *அவர்கள் கூட* मां மாம் *என்னை* व्यपाश्रित्य வ்யபாச்ரித்ய *சார்ந்திருந்து* परां गतिं பராம் கதிம் *பரகதியை* हि ஹி *நிச்சயமாக* यान्ति யாந்தி *அடைகிறார்கள்.*

***பார்த்தா, கீழான பிறவியர்களாகிய பெண் பாலர், வைசியர், சூத்திரர் ஆகியவரும் என்னைச் சார்ந்திருந்து நிச்சயமாகப் பரகதி யடைகின்றனர்.***

மன பரிபாகத்துக்கு ஏற்றாற்போல பிறவி மேலானது அல்லது கீழானது ஆகிறது. ஈண்டு இயம்பப்பட்ட மூவரும் கீழான பிறவியரே. எக்குலத்தில் பிறந்தவராயினும், இயல்பாக மாதர் உறுதியான உள்ளம் உடையவர் அல்லர். பேதைமையே பெண்டிரது இயல்பு. திண்மை வாய்ந்திருக்கும் தையலர் மிகக் குறைவு. அத்தகைய சிறுபான்மையர் விதிக்கு விலக்கானவர் என்றே சொல்லலாம். ஆக, பொதுவாகப் பெண்மக்களைக் கீழான பிறவியர் என்பது இயற்கைக்கு ஒத்ததொரு சொல்லாகும்.

இவ்வுலக வாழ்க்கைக்குப் பயன்படுகிற பொருளைச் சேகரிப்பதிலேயே மனதை வைப்பவர்கள் வைசியர்கள். அருளை நாடாது, பொருளை நாடுதலே அவர்களது போக்கு. ஜடப் பொருளை எண்ணுகின்றவளவு ஜடபுத்தியே அவர்களிடத்து வலுக்கிறது. அத்தகைய பிரவிருத்தியை யுடையவர்களெல்லாம் கீழான பிறவியை யுடையவர்களாகக் கருதப்படுகின்றனர்.

அதிலும் கீழ்ப்பட்டவர் சூத்திரர். ஏனென்றால் பிறரிடத்து அடிமைத்தொழில் செய்தல் ஒன்றுதான் அவர்களுக்கு இயலும். ஜீவனோபாயத்தின் பொருட்டுத் தம் வாழ்க்கையை யார் பிறரிடத்து ஒப்படைக்கின்றனரோ அவரே சூத்திரர். இவ்வுலகம் ஒன்றை மட்டும் அறிந்து, அதைச் சார்ந்திருக்கும் அன்னவர் இறைவனைச் சார்கிறதில்லை.

அழுக்குப்படிந்த உடல் நீராடுவதால் சுத்தியடைகிறது. பரமனைப் பக்தியுடன் போற்றுவதால் சித்தமலம் அகலுகிறது; மனம் குவிகிறது; பரபோதம் ஓங்குகிறது; பரகதியும் கைகூடுகிறது.

பிறவி ஒருநாளும் பக்திக்கு இடைஞ்சல் அல்ல. கடலை அடையும் நதிகளெல்லாம் கடல் மயம் ஆகின்றன. புண்ணிய நதி, சாக்கடை ஆகிய அனைத்தும் கடலில் ஒரே பதவியைப் பெறுகின்றன. அங்ஙனம் கடவுளைக் கருதும்

மனிதர்களெல்லாம் கடவுள் மயம் ஆகின்றனர். செயலில் அல்லது பிறவியில் இழிந்தோரும் பக்தியால் மேலோர் ஆகின்றனர். கடவுளின் அருள் அவர்களை மேலோர் ஆக்குகிறது. கடவுளை அடையத் தகாதார் என்பார் எவருமில்லை.

புயற்காற்று அடிக்கும்போது அரசமரம் இன்னது, ஆலமரம் இன்னது என்று வித்தியாசம் கண்டுபிடிக்க முடியாது. அதுபோல பக்தி என்னும் புயற்காற்று ஒருவனுக்குள் அடிக்கும்போது அவனிடம் ஜாதிபேதம் இருக்கமுடியாது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

இனிப் பாரமார்த்திகத்துக்கென்றே பிறந்து வாழ்ந்திருப்பவர் நிலை யாது?

किं पुनर्ब्राह्मणाः पुण्या भक्ता राजर्षयस्तथा ।
अनित्यमसुखं लोकमिमं प्राप्य भजस्व माम् ॥ ३३

கிம் புனர்ப்ராஹ்மணா: புண்யா பக்தா ராஜர்ஷயஸ்ததா ।
அநித்யமஸுகம் லோகமிமம் ப்ராப்ய பஜஸ்வ மாம் ॥ 33

पुण्याः புண்யா: *புண்ணியவான்களும்* भक्ताः பக்தா: *பக்தர்களுமாகிய* ब्राह्मणाः ப்ராஹ்மணா: *பிராமணர்களும்* तथा ததா *அப்படியே* राजर्षयः ராஜர்ஷய: *ராஜ ரிஷிகளும்* किं पुनः கிம் புன: *இன்னும் எவ்வளவு எளிதில் பெறமாட்டார்கள்* अनित्यं அநித்யம் *நித்யமில்லாததும்* असुखं அஸுகம் *சுகமில்லாததும்* इमं இமம் *இந்த* लोकं லோகம் *லோகத்தை* प्राप्य ப்ராப்ய *பெற்ற நீ* मां மாம் *என்னை* भजस्व பஜஸ்வ *பஜிப்பாயாக.*

***புண்ணியவான்களும் பக்தர்களுமாகிய பிராமணர்களையும் அவ்வாறே ராஜ ரிஷிகளையும் பற்றிப் பின்பு பேசுவானேன்? நிலையற்றதும் சுகமற்றதுமாகிய இவ்வுலகைப் பெற்ற நீ என்னை பஜிப்பாயாக.*** ***33***

மேலே சொன்ன பாபயோனிகளுக்கு எதிரிடையாக இங்குப் புண்ணியவான்கள் பகரப்படுகின்றனர். அவை கீழான பிறவிகளாவது போன்று, இவை மேலான பிறவிகளாகின்றன. ஏனென்றால் பிரம்மரிஷிகளும் ராஜரிஷிகளும்

சர்வேசுவரனிடத்து அனன்னிய பக்தி பண்ணுவதையே லட்சியமாகக் கொண்டிருக்கின்றனர். அறம் வளர்ப்பவர் அந்தணர் ஆகின்றனர். அறம் வழங்குபவர் அரசர் ஆகின்றனர்.

கேணியில் நீர் ஊறவும் வேண்டும்; உண்ணுதற்கு அதை உலகுக்கு எடுத்து வழங்கவும் வேண்டும். மரம் காய்த்துப் பழுக்கவும் வேண்டும்; அதை உலகுக்கு உணவாகக் கொடுக்கவும் வேண்டும். திரவியத்தை மணலுக்கு ஒப்பாகத் தள்ளிவிட்டுத் தவத்தையே தனமாகத்தேடுபவர், ஈசுவர சேவையிலேயே கண்ணுங் கருத்துமாயிருப்பவர், ஈசுவர பக்திக்குப் புறம்பாகிய எதற்கும் சிந்தையில் இடங்கொடாதவர் அந்தணர் ஆகின்றனர். அவர்களது நல்வாழ்க்கையால் அறம் வளர்கிறது. உயிர்களை அல்லும் பகலும் அறநெறியில் ஓம்புதலே அரசர் செயல். அதுவும் சிறந்த ஈசுவர சேவையாகின்றது. ஆக, கடவுள் வழிபாட்டுக்கென்றே பிறந்து வாழ்ந்திருப்பவர் கடவுளை யடைதற்குச் சந்தேகம் யாதுளது?

கீழான மனதையுடையவர் நிலையற்ற உலகத்தை நிலைபெற்ற உலகம் என்று எண்ணி, அதில் பற்று வைக்கின்றனர். இயற்கையில் எவ்வுயிரை அல்லது எப்பொருளைப் பார்த்தாலும் அது அழியும் தன்மையுடையது என்ற உண்மையையே அது ஓயாது புகட்டிக்கொண்டிருக்கிறது. வளரும் வாலிபன் மரணத்தை நோக்கி வேகமாய் ஓடிக்கொண்டிருக்கிறான் அல்லவா? நேற்றுப் பச்சிலையாயிருந்தது இன்று உதிர் சருகு ஆய்விட்டது. அணு முதல் அண்டம் வரையில் எல்லாம் அடிபட்டுக்கொண்டிருக்கின்றன. அவைகளிடத்து அமையும் மாறுதலே இன்பத்தைத் துன்பமாகச் சமைக்கிறது.

இன்று பிள்ளை பிறந்தான் என்ற பூரிப்பு, நாளை அவன் இறந்தான் என்ற வாட்டமாகிறது. வெற்றி என்ற மகிழ்ச்சி தோல்வி என்ற துன்பமாக மாறுகிறது. தவளை

யின் பின்னங்காலைப் பாம்பு பிடித்துக்கொண்டது; அதை விழுங்கவும் ஆரம்பித்துவிட்டது. அதற்கிடையில் தன் னெதிரே வந்த பூச்சியொன்றைத் தவளை பிடித்துத் தின்று திருப்தியடைகிறது. இங்ஙனம் மனிதனை நமன் பற்றிக் கொண்டான்; காலத்தைக்கொண்டு அளந்து விழுங்கவும் ஆரம்பித்துவிட்டான். அதைப் பொருட்படுத்தாது உலகம் தருகிற இன்பத்தை நுகர்ந்து அவன் இறுமாந்திருக்கிறான். அறிவுடையோனுக்கு இது பொருந்தாது. அநித்தியமும் அசுகமுமான இவ்வுலகைப் பெற்றதனால் ஆயபயன் ஒன்றே உளது. அது யாது எனின் இதைப் பொருட்படுத்தாது சர் வேசுவரனைப் பஜித்தலேயாம். அதுவே செயற்கரிய செய் கையாகும்.

எந்த வழியாக நமக்கு ஈசுவர தரிசனம் கிடைக்கும்?

உருகிய உள்ளத்துடன் அவனுக்காக உன்னால் கதறியழ முடியுமா? மனைவி, மக்கள், பொன், பொருள் இவைகளுக்காக மக்கள் குடம் குடமாகக் கண்ணீர் உகுக்கிறார்கள்; ஆனால் அவன் வேண்டும் என்று அழுபவர் யார்? குழந்தை விளையாட்டுப் பொருள்களோடு ஈடு பட்டிருக்கும் வரையில் தாய் தன் சமையல் வேலைகளையும் இதர அலு வல்களையும் கவனிக்கிறாள். விளையாட்டுக் கருவிகள் பசியை நீக்குகின்ற தில்லை. எனவே குழந்தை அவைகளை வீசி எறிந்துவிட்டுத் தாயை வேண்டிக் கோவென்று கத்தி அழுகின்றது. உடனே தாய் என்ன வேலை செய்துகொண்டிருந்தாலும், சாதம் பாதி வடித்துக்கொண்டிருந் தாலும்கூட, எல்லாவற்றையும் அப்படியே விட்டுவிட்டு ஓடிவந்து குழந் தையை எடுத்துத் தன் மார்போடு அணைத்துக்கொள்கின்றாள்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

அவனைப் போற்றும் விதம் வருமாறு:—

मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।
मामेवैष्यसि युक्त्वैवमात्मानं मत्परायणः ॥ ३४

மன்மனா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு ।
மாமேவைஷ்யஸி யுக்த்வைவமாத்மானம் மத்பராயண: ॥ 34

मन्मनाः மன்மனா: மனதை என்னிடத்து வைத்தவனாய் मद्भक्तः மத்பக்த: என்னிடத்து பக்தியுடையவனாய் मद्याजी மத்யாஜீ என் பொருட்டு யாகம் செய்பவனாய் भव பவ ஆவாயாக मां नमस्कुरु மாம்

நமஸ்குரு *என்னை நமஸ்கரி* एव ஏவம் *இங்ஙனம்* मत्परायणः மத்பராயண: *என்னைப் பரகதியாகக்கொண்டு* आत्मानं ஆத்மானம் *உள்ளத்தை* युक्त्वा யுக்த்வா *உறுதிப்படுத்திக் கொண்டு* मां एव மாம் ஏவ *என்னையே* एष्यसि ஏஷ்யஸி *அடைவாய்.*

***மனதை என்னிடத்து வைத்து, என்பால் பக்தி பண்ணி, எனக்கு யாகம் செய்து, என்னை வணங்கு. என்னைக் குறியாகக் கொண்டு உள்ளத்தை உறுதிப் படுத்தி என்னையே அடைவாய். 34***

*மனது முழுதும் ஈசுவர எண்ணத்தால் நிறையப் பெறவேண்டும். ஒருவனை வெறுத்தால் அல்லது ஒருவனுக்கு அஞ்சினால் மனதுமுழுதும் அவனைப்பற்றிய எண்ணமுடையதாகிறது. அப்படிச் செய்யாது பக்தியோடு கூடிய பேரன்பு ததும்பிய எண்ணமாயிருக்கவேண்டும். சிறுவன் ஒருவனுக்குத் தன் தாயினிடத்து அத்தகைய நிறைமனதும் பேரன்பும் உண்டாகின்றன. ஆனால் அவனுக்கு ஆகவேண்டிய காரியங்களையெல்லாம் தாய் செய்துமுடிக்க வேண்டும் என்று அச்சிறுவன் எதிர்பார்க்கிறான். அர்ஜுனா, நீ அப்படிச் செய்யாதே. என்னிடத்து பக்தி பண்ணுவதோடு சேர்த்து எனக்கு யாகம் செய். அதாவது நீ வாங்கிப் பிழைப்பவனாக உலகத்தில் வாழாது பெருங்கொடையாளியாயிரு. அப்படி எங்கு யாருக்கு எதைக்கொடுத்தாலும் அதை என்னுடைய ஆராதனையாகக்கருது. 'நான் கொடையாளி' என்ற கர்வம் வாராதிருத்தற் பொருட்டு, உன் கொடையை ஏற்றுக் கொள்பவர்களையெல்லாம் என் சொரூபமாகக் கருதி நமஸ்காரம் செய்*

*பகவானை அடைதல் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு பக்தியும் பூஜையும் சேவையும் சர்வகாலமும் செய்துவரவேண்டும். அதனால் உள்ளம் யோகத்தில் உறுதியடைகிறது. துரு நீங்கப்பெற்ற இரும்பு காந்தத்தினிடத்தில் சேர்வதுபோன்று பக்தியில் பண்பட்ட மனது பகவானிடம் சேர்கிறது.*

**ஒன்பதாம் அத்தியாயம் முடிவு.**

# दशमोऽध्यायः

## பத்தாம் அத்தியாயம்

## विभूतियोगः

### விபூதி யோகம்

**श्री भगवानुवाच**

**भूय एव महाबाहो शृणु मे परमं वचः ।**
**यत्तेऽहं प्रीयमाणाय वक्ष्यामि हितकाम्यया ॥ १**

ஸ்ரீ பகவானுவாச

பூய ஏவ மஹாபாஹோ ச்ருணு மே பரமம் வச: ।
யத்தேऽஹம் ப்ரீயமாணய வக்ஷ்யாமி ஹிதகாம்யயா ॥ 1

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

महाबाहो மஹாபாஹோ *பெருந்தோளுடையாய்* भूय एव பூய ஏவ *மீண்டும்* मे மே *என்னுடைய* परमं वचः பரமம் வச: *மேலாம் மொழியை* शृणु ச்ருணு *கேளாய்* यत् யத் *எதை* प्रीयमाणाय ப்ரியமாணய *(கேள்வியில்) உள்ளத்து உவகையுடைய* ते தே *உனக்கு* अहं அஹம் *நான்* हितकाम्यया ஹிதகாம்யயா *நலம் கருதி* वक्ष्यामि வக்ஷ்யாமி *விளம்புவேன்.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***பாகுபலசாலீ, மேலாம் என் மொழியை மீண்டும் கேளாய். கேள்வியில் உவகையுடைய உனது நலம் கருதி அதை நான் நவிலுகிறேன். 1***

பகவத் விபூதியைக் கேட்பதில் அர்ஜுனன் கொண்டுள்ள பிரியத்தை பகவான் பெரிதும் பாராட்டுகிறார். கேள்வியில் முயற்சியுடையார்க்கு எடுத்துச் சொல்லுதலிலும் சொல்லுபவர்க்கு ஊக்கம் பிறக்கும். அதை இங்குக்

காண்கிறோம். "आश्चर्यो वक्ता कुशलोऽस्य लब्धा புகட்டுபவர் அதிசயிக்கத்தகுந்த மேலானவர்; அதைக் கேட்கப்பெறும் சிஷ்யன் கெட்டிக்காரன்" என்ற வேதாந்த வாக்கியம் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுனனாகிய இவ்விருவர் மூலம் நிரூபிக்கப்படுகிறது. அமிர்தபானம் பண்ணுவதுபோன்று அர்ஜுனன் அவரது அருள்மொழியைக் கேட்கின்றான்.

ஏழாவது அத்தியாயத்திலும் ஒன்பதாவது அத்தியாயத்திலும் பகரப்பட்ட பொருள் இங்கு மீண்டும் விளக்கப்படுகிறது. உருக்கிய பொன்னைத் திரும்பவும் உருக்கினால் அது மாசு நீங்கி ஒளிவீசும். அவ்வாறே பகவத் விபூதியை ஆராய ஆராய உபாசனை வலுக்கிறது; பக்தி பெருகுகிறது; தியானம் தெளிவுபடுகிறது. பரமவஸ்துவைப்பற்றிய மெய்ம்மொழியாதலால், அச்சொல்லும் பரம வசனமெனப்படுகிறது. விளை நிலத்தின் நலம்கோலும் வேளாளன் அதைப் பண்படுத்துகிறான். அங்ஙனமே பார்த்தனது ஹிதத்தில் காமுற்ற கிருஷ்ணபகவான் பரமவசனத்தைப் பகர்கிறார்.

அப்படி ஒரு மனிதனோடு பேசிக்கொண்டிருப்பதனால் காலதேச வர்த்தமானத்தில் கட்டுப்பட்டவர் போன்று தென்படுகிற இறைவனது உண்மை இயல்பு இத்தகையது என்பதை அவரே ஈண்டு இயம்புகிறார் :—

न मे विदुः सुरगणाः प्रभवं न महर्षयः ।
अहमादिर्हि देवानां महर्षीणां च सर्वशः ॥ २

ந மே விது: ஸுரகணா: ப்ரபவம் ந மஹர்ஷய: ।
அஹமாதிர்ஹி தேவானாம் மஹர்ஷீணாம் ச ஸர்வச: ॥ 2

मे மே *என்னுடைய* प्रभवं ப்ரபவம் *உற்பத்தியை* सुरगणाः ஸுரகணா: *தேவர் கூட்டங்கள்* न विदुः ந விது: *அறியார்* न महर्षयः ந மஹர்ஷய: *மஹரிஷிகள் அறியார்* हि ஹி *ஏனென்றால்* अहं அஹம் *நான்* देवानां महर्षीणां च தேவானாம் மஹர்ஷீணாம் ச *தேவர்களுக்கும் மஹரிஷிகளுக்கும்* सर्वशः ஸர்வச: *எவ்வகையிலும்* आदिः ஆதி: *முதற் காரணம்.*

**வானவர் கூட்டங்களும் மாமுனிவரும் என் உற்பத்தியை உணரார். ஏனென்றால் வானவர்க்கும் மாமுனிவர்க்கும் முற்றிலும் முதற்காரணம் நானே.**

பிள்ளையின் பிறப்பு முதலியவைகளைப் பிதா அறிகிறார். ஆனால் பிதாவின் பிறப்பு, பால்யம் முதலியவைகளைப் புத்திரன் ஒருநாளும் அறியான். பரம புருஷனிடத்திருந்து பிரம்மா முதலிய தேவர்களும் பிருகு முதலிய ரிஷிகளும் தோன்றினார்கள். சூரியனிடத்திருந்து கிளம்பிய கிரணம் சூரியனை முற்றும் அளந்து அறிய இயலாதது போன்று தங்களுக்கு முதற்காரணமாயுள்ள பரம புருஷனுக்கு உற்பத்தி காண தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் இயலாது.

உண்மையில் அவனுக்கு உற்பத்தி இல்லவே இல்லை. பிறவாத அவன் பிறப்பவன் போன்று அவதாரங்களில் காட்டுகிறான். அப்படி மனித வடிவெடுத்திருக்கையிலும் அவனது மகிமையை முழுதும் யார் அறிவார்? பிரபவம் என்பதற்கு மகிமை என்று ஒரு பொருள் உண்டு. அனைத்துக்கும் முதற்காரணனாகிய அவன் பெருமையை அவன் தான் உணர்வான்.

பிரம்மமாகிற சமுத்திரத்திலிருந்து வீசும் காற்று, அது மோதும் ஒவ்வொரு ஹிருதயத்தையும் விகஸிக்கச் செய்கின்றது. ஸனகர், ஸனந்தனர் முதலிய பூர்வ ரிஷிகள் இந்தக் காற்றினால் பக்குவமாயினர். ஈசுவர ப்ரேமையால் பைத்தியங்கொண்ட நாரதர் கொஞ்ச தூரத்திலிருந்து அந்த ஸமுத்திரத்தைத் தரிசித்தனர் போலும்! அது காரணமாக அவர் தம்மையே மறந்து சதா சர்வகாலமும் ஸ்ரீ ஹரியின் புகழைப் பாடிக்கொண்டு, பித்தரைப்போல உலக்மெங்கும் திரிகின்றார். பிறவித் துறவியான சுகதேவர், அந்த மஹாஸமுத்திர ஜலத்தை மூன்று தரம் கையினால் தொட்ட மாத்திரத்தில் பரிபூரண ஆனந்தத்தினால் குழந்தையைப்போல் அங்கு மிங்கும் ஓடியாடிக் கொண்டிருக்கிறார். லோக குருவாகிய மஹாதேவர், அந்த ஸமுத்திர ஜலத்தில் மூன்று கை அள்ளிக்குடித்ததனால், திவ்வியானந்தப் பித்தேறி, பிணம்போல அசைவற்றுக்கிடக்கிறார். இந்த மகா சமுத்திரத்தின் ஆழத்தையோ அல்லது அபூர்வ சக்தியையோ எவரால் கண்டு பிடிக்கமுடியும்?

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

அவனைப்பற்றி ஒன்றுமே தெரிந்துகொள்ள முடியாதோ என்ற கேள்விக்கு விடை வருகிறது :—

**यो मामजमनादिं च वेत्ति लोकमहेश्वरम् ।**
**असंमूढः स मर्त्येषु सर्वपापैः प्रमुच्यते ॥ ३**

யோ மாமஜமனாதிம் ச வேத்தி லோகமஹேச்வரம் ।
அஸம்மூட: ஸ மர்த்யேஷு ஸர்வபாபை: ப்ரமுச்யதே ॥ 3

यः ய: *யார்* मां மாம் *என்னை* अनादिं அனாதிம் *ஆதி இல்லாதவன் என்றும்* अजं அஜம் *ஜனிக்காதவன் என்றும்* लोकमहेश्वरं च லோகமஹேச்வரம் ச *உலகனைத்துக்கும் தலைவன் என்றும்* वेत्ति வேத்தி *அறிகிறானோ* सः ஸ: *அவன்* मर्त्येषु மர்த்யேஷு *மானுடர்களுள்* असंमूढः அஸம்மூட: *மயக்கமில்லாதவன்* सर्वपापैः ஸர்வபாபை: *பாபங்களனைத்தினின்றும்* प्रमुच्यते ப்ரமுச்யதே *விடுபடுகிறான்.*

***ஆதி இல்லாதவன் என்றும், பிறவாதவன் என்றும், உலகுக்குத் தலைவன் என்றும் என்னை அறிகிறவன் மானுடருள் மயக்கமில்லாதவன். அவன் பாபங்களனைத்தினின்றும் விடுபடுகிறான். 3***

*இயற்கையில் காணப்படும் பொருள்களெல்லாம் ஒன்றிலிருந்து ஒன்று தோன்றியவைகள். மரத்திலிருந்து விதை உண்டாகிறது. பிறகு விதையிலிருந்து மரம் உண்டாகிறது. இவ்வாறு காரண காரியமயமாக அவைகளிடத்துப் பெருந்தொடர்வு உண்டு. இக் கோட்பாட்டின்படி பரமாத்மாவினிடத்திருந்து தேவர்களும் ரிஷிகளும் உண்டானார்களானால், அப் பரமாத்மா யாரிடத்திருந்து உண்டானார் என்ற கேள்வி பிறக்கக்கூடும். இதற்கு விடையாக அவர் தம்மை அனாதி என்று சொல்லுகிறார் அவருக்குத்துவக்கம் கிடையாது. ஆகையால் அவர் (अजः) பிறவாதவர் ஆகிறார். கானலில் நீர் தோன்றுவது போன்றும், சூரியனிடத்திருந்து கிரணங்கள் வருவது போன்றும், கடலிலிருந்து ஆவியாக நீர் வருவது போன்றும் சர்வேசுவரனிடத்திருந்து சரம் அசரம் ஆகிய அனைத்தும் தோன்றுகின்றன. அதனால்*

அவரிடத்து ஒரு குறையும் ஏற்படுவதில்லை. யாண்டும் நிறைபொருளாகவே இருக்கிறார். அவருடைய முன்னிலையில் இந்த உலகங்களின் நடைமுறை கோணலின்றிக் காரியப்படுகிறது. அணுவும் அவரது ஆணையை மீறி நடப்பதில்லை. ஆதலால் அவர் லோக மகேசுவரன் என்று அழைக்கப்படுகிறார்.

மடியும் தன்மையுடைய மக்களுக்கு மடியாப்பொருளைப்பற்றிய உண்மை தெரிவதில்லை. பக்தி சாதனத்தால் சித்த சுத்தி அடையப் பெறுபவர் சர்வேசுவரனது விபூதியைச் சிறிது அறிகின்றனர். அழியும் பொருள்களுக்கு ஆதாரமாயுள்ள அழியாப் பொருள் அவர் என்பது ஓரளவு விளங்குகிறது. அகண்டாகாரத்தில் விரிந்தோடுகிற வெட்ட வெளியை ஒரு சிறு துவாரத்தின் வாயிலாகப் பார்ப்பது போன்றது அது. சுவானுபூதியில் அவரது விபூதியை அறிபவனுக்கு மயக்கம் ஏற்படுவதில்லை. சர்வேசுவரனுக்குப் புறம்பாக உலகத்தையும் வாழ்க்கையையும் பொருள் படுத்துவதே பாபம். மயக்கத்திலிருந்து தெளிவடைந்து ஈசுவர காட்சியைக் காண்பவன் பாபத்திலிருந்து விடுபடுகிறான்.

மேலே மொழிந்தது அவருடைய அபிராகிருத விபூதியாம். அதாவது இயற்கைக்கு அப்பாற்பட்டது. பிரகிருதியோடு சேர்ந்த விபூதிகளும் பல உண்டு. அவையாவன:—

**बुद्धिर्ज्ञानमसंमोहः क्षमा सत्यं दमः शमः ।**
**सुखं दुःखं भवोऽभावो भयं चाभयमेव च ॥ ४**

**अहिंसा समता तुष्टिस्तपो दानं यशोऽयशः ।**
**भवन्ति भावा भूतानां मत्त एव पृथग्विधाः ॥ ५**

புத்திர்ஞானமஸம்மோஹ: க்ஷமா ஸத்யம் தம: சம:
ஸுகம் து:கம் பவோऽபாவோ பயம் சாபயமேவ ச ‖ 4

அஹிம்ஸா ஸமதா துஷ்டிஸ்தபோ தானம் யசோऽயச: ।
பவந்தி பாவா பூதானாம் மத்த ஏவ ப்ருதக்விதா: ‖ 5

बुद्धिः புத்தி: *புத்தி* ज्ञानं ஞானம் *ஞானம்* असंमोहः அஸம் மோஹ: *மோஹமின்மை* क्षमा க்ஷமா *பொறுமை* सत्यं ஸத்யம் *சத்தியம்* दमः தம: *புறக்கரணங்களை அடக்குதல்* शमः சம: *உள்ளத்தை அடக்குதல்* सुखं ஸுகம் *சுகம்* दुःखं து:கம் *துக்கம்* भवः பவ: *பிறப்பு* अभावः அபாவ: *அழிதல்* भयं பயம் *பயம்* अभयं एव च அபயம் ஏவ ச *அபயமும்* अहिंसा அஹிம்ஸா *அஹிம்சை* समता ஸமதா *மனதின் நடுநிலை* तुष्टिः துஷ்டி: *திருப்தி* तपः தப: *தபசு* दानं தானம் *தானம்* यशः யச: *கீர்த்தி* अयशः அயச: *அபகீர்த்தி* पृथग्विधाः ப்ருதக்விதா: *பலவிதங்களான* भावाः பாவா: *தன்மைகள்* भूतानां பூதானாம் *உயிர்களுக்கு* मत्तः एव மத்த: ஏவ *என்னிடத்திருந்தே* भवन्ति பவந்தி *உண்டாகின்றன.*

**புத்தி, ஞானம், மயக்கமின்மை, பொறுமை, சத்தியம், அடக்கம், அமைதி, இன்பம், துன்பம், பிறப்பு, இறப்பு, அஞ்சுதல், அஞ்சாமை, அஹிம்சை, மனநடுவு, திருப்தி, தபசு, தானம், புகழ்ச்சி, இகழ்ச்சி ஆகிய பலவிதப் பாங்குகள் உயிர்களுக்கு என்னிடத்திருந்தே உண்டாகின்றன. 4-5**

**புத்தி** – *நுண்ணறிவு அல்லது ஆழ்ந்த கருத்துக்களை வாங்கவல்ல அந்தக்கரணம்.* **ஞானம்** – *ஆத்மாவை அறிய வல்ல இயல்பு.* **அசம்மோஹம்** – *எந்த நெருக்கடியிலும் மனக் குழப்பம் ஏற்படாமை.* **க்ஷமை** – *பொறுமை அல்லது பிறரால் தாக்கப்படும்போதும் மனம் நோகாதிருத்தல்.* **சத்தியம்** – *வாய்மை அல்லது கேட்டும் அனுபவித்தும் அறிந்தவைகளை அப்படியே பிறர்க்கெடுத்துப் பகர்தல்.* **தமம்** – *புறக் கரணங்களாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகியவைகளை அடக்குதல்.* **சமம்** – *அந்தக்கரணங்களாகிய மனம், புத்தி, அஹங்காரம் ஆகியவைகளின்கண் அமைதி யேற்படுதல்.* **சுகம்** – *இன்பம் அல்லது ஆஹ்லாதம்.* **துக்கம்** – *துன்பம் அல்லது சந்தாபம்.* **அஹிம்சை** – *ஓருயிர்க்கும் இன்னா செய்யாமை.* **சமதா** – *விருப்பு வெறுப்புகளை விளைவிக்கும் செயல்களுக் கிடையில் மனது நடுநிலை பிறழாதிருத்தல்.* **துஷ்டி** – *திருப்தி, சந்தோஷம் அல்லது போதுமென்ற மன*

நிலே. **தபசு** – இந்திரியங்களை ஒடுக்குதல், அல்லது உடலை அடக்கியாளுதல். **தானம்** – தனக்குப் பயன்படும் பொருள்களை மற்றவர்களுக்கும் உவந்தளித்தல். **யச:** – தர்மம் செய்வதால் வரும் புகழ்ச்சி. **அயச:** – அதர்மம் செய்வதால் வரும் இகழ்ச்சி.

*மின்சாரத்தை ஒரு அடுப்பு, ஒரு தணுப்பைத் தரும் கருவி, ஒரு விசிறி, ஒரு விளக்கு, ஒரு யந்திரம் ஆகிய இவைகளுள் அதனதன் அமைப்புக்கு ஏற்றவாறு பயன்படுத்துவதுபோன்று, ஜீவர்கள் இவ்வித விபூதிகளை ஈசுவரனிடத்திருந்து அவரவர் வினைக்கேற்றபடி வாங்கிக் கொள்கின்றனர்.*

*ஈசுவரனுடைய விபூதிகளை ஏராளமாக ஏற்றவர்கள் யார் எனின் :—*

**महर्षयः सप्त पूर्वे चत्वारो मनवस्तथा ।**
**मद्भावा मानसा जाता येषां लोक इमाः प्रजाः ॥ ६**

மஹர்ஷய: ஸப்த பூர்வே சத்வாரோ மனவஸ்ததா ।
மத்பாவா மானஸா ஜாதா யேஷாம் லோக இமா: ப்ரஜா: ॥ 6

सप्त ஸப்த *ஏழு* महर्षयः மஹர்ஷய: *மஹரிஷிகள்* तथा ததா *அப்படியே* पूर्वे பூர்வே *பூர்வீகர்களான* चत्वारः சத்வார: *நான்கு* मनवः மனவ: *மனுக்களும்* मद्भावाः மத்பாவா: *என்னுடைய பிரபாவத்தை யுடையவர்களாய்* मानसाः जाताः மானஸா: ஜாதா: *என்னுடைய சங்கற்பத்தில் பிறந்தார்கள்* लोके லோகே *இவ்வுலகில்* येषाम् யேஷாம் *அவர்களிடத்திருந்து* इमाः प्रजाः இமா: ப்ரஜா: *இவ்வுயிர்கள் உண்டாயின.*

***மகரிஷிகள் எழுவரும், முன்னை மனுக்கள் நால்வரும் என் பிரபாவத்தோடு என் மனதில் உதித்தார்கள். உலகில் உயிர்கள் யாவும் அவர்களிடத்திருந்து வந்தவைகள்.*** **6**

*ஏழு மகரிஷிகளின் பெயர்கள் – பிருகு, மரீசி, அத்ரி, புலகர், அங்கிரஸ், கிரது, புலஸ்தியர். நான்கு மனுக்களின் பெயர்கள் – சுவாரோசிஷர், சுவாயம்புவர், ரைவதர், உத்தமர்.*

*ஈசுவரனுடைய மனதிலிருந்து அவனுடைய மானச புத்திரர்களாக ஏழு மஹரிஷிகளும் பதினான்கு மனுக்களில் முக்கியமானவர்கள் நால்வரும் உண்டானார்கள். தங்களுடைய மனதை அவர்கள் எப்பொழுதும் சர்வேசுவரனிடத்தே வைத்திருந்தபடியால் ஈசுவர பிரபாவம் அவர்களுக்கு உண்டாயிற்று. மனது எதை உபாசிக்கிறதோ அதன் தன்மைகளை எடுத்துக்கொள்ள வல்லது ஆகையால் தான் அது ஈசுவரனிடத்தே வைக்கப்படவேண்டும்.*

*ஈசுவரனிடத்திருந்து உதித்த ஞானத்தைக்கொண்டு ஏழு ரிஷிகள் உலகில் ஞானத்தைப் பரப்பி வந்தார்கள். அவனிடத்திருந்து வந்த ஐசுவரியத்தைக்கொண்டு நான்கு மனுக்கள் உலகையெல்லாம் ஆண்டுவந்தார்கள். இன்னும் அந்த ஏழு ரிஷிகள் உயிர்வகைகள் அனைத்தையும் சிருஷ்டித்தார்கள். மனுக்களோ அவைகளைப் பரிபாலித்தார்கள். இங்ஙனம் சிருஷ்டிக் கிரமம் நடைபெறுகிறது. ஏழு பிறப்பு என்பது ஏழுபடித்தரங்களாயுள்ள ஞான பூமிகளாம். சராசரங்களாகிய உயிர்வகைகள் அனைத்தும் ஏழு ஞான பூமிகளில் அடங்கப்பெறுகின்றன. அவைகளின் உருவகமாயிருப்பவர்கள் ஏழு ரிஷிகள். ஆக, எல்லா உயிர்களுக்கும் மூலமாக இந்த ரிஷிகள் அமைகிறார்கள்.*

*ஈசுவரனுடைய இத்தகைய வல்லமையைத்தெரிந்து கொள்பவனுக்கு உண்டாவது யாது? விடை வருகிறது:—*

**एतां विभूतिं योगं च मम यो वेत्ति तत्त्वतः ।**
**सोऽविकम्पेन योगेन युज्यते नात्र संशयः ॥ ७**

ஏதாம் விபூதிம் யோகம் ச மம யோ வேத்தி தத்வத: ।
ஸோऽவிகம்பேன யோகேன யுஜ்யதே நாத்ர ஸம்சய: ॥ 7

**यः** ய: *யார்* **मम** மம *என்னுடைய* **एतां विभूतिम्** ஏதாம் விபூதிம் *இந்த விபூதிகளையும்* **योगं च** யோகம் ச *யோகத்தையும்* **तत्त्वतः** தத்வத: *உள்ளபடி* **वेत्ति** வேத்தி *அறிகிறனோ* **सः** ஸ: *அவன்* **अविकम्पेन योगेन** அவிகம்பேன யோகேன *அசையாத யோகத்தில்* **युज्यते** யுஜ்யதே

*இணைக்கப்படுகிறான்* अत्र அத்ர *இதில்* न संशयः ந ஸம்சய: *சந்தேக மில்லை.*

***எனது விபூதிகளையும் யோகத்தையும் உள்ள படி அறிகிறவன் அசையாத யோகத்தைச் சார்ந்திடுவான். இதில் சந்தேகமில்லை.*** **7**

பகவானே இத்தனை விதமான விரிவுகளை அடைய வல்லவனாதலால் அவை யாவும் அவனுடைய விபூதிகளாகின்றன. இத்தனையுமாய் விரிந்தபின் அவன் அவைகளோடு எத்தகைய இணக்கம் வைத்திருக்கிறான் என்பதை ஆராயுங்கால் அவனுடைய யோகம் அறியப்படுகிறது. தீயின் தன்மையை உள்ளபடி அறிகிறவர்கள் அதில் கையை வைத்துக் காந்திப்போக விடமாட்டார்கள். ஆனால் அதைச் சமைப்பதற்கென்று நன்கு பயன்படுத்துவார்கள். ஈசுவரனுடைய விபூதிகளையும் யோகத்தையும் உள்ளபடி பேரறிவு கொண்டு அறிகிறவர்கள் அவனிடத்துத் தளராத இணக்கம் அல்லது அசையாத யோகம் வைப்பார்கள்.

எண்ணெய் இல்லாதுபோனால் விளக்கு எரியாது. அதுபோல ஈசுவரனில்லாமற் போனால் மனிதன் ஜீவித்திருக்கமுடியாது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

அசையாத யோகம் என்றால் என்ன ? விடை வருகிறது :—

**अहं सर्वस्य प्रभवो मत्तः सर्वं प्रवर्तते ।**
**इति मत्वा भजन्ते मां बुधा भावसमन्विताः ॥ ८**

அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே ।
இதி மத்வா பஜந்தே மாம் புதா பாவஸமன்விதா: ‖ 8

अहं அஹம் *நான்* सर्वस्य ஸர்வஸ்ய *எல்லாவற்றினுடைய* प्रभवः ப்ரபவ: *உற்பத்தி ஸ்தானம்* मत्तः மத்த: *என்னிடத்திருந்து* सर्वं ஸர்வம் *யாவும்* प्रवर्तते ப்ரவர்த்ததே *பிரவிருத்திக்கிறது* इति இதி *இப்படி* मत्वा மத்வா *அறிந்து* बुधाः புதா: *அறிஞர்கள்* भावसमन्विताः பாவஸமன்விதா: *அன்பு உணர்வோடு கூடி* मां மாம் *என்னை* भजन्ते பஜந்தே *பஜிக்கிறார்கள்.*

***நான் அனைத்திற்கும் பிறப்பிடம். யாவும் என்னிடத்திருந்தே விரிகின்றன. இதை அறியும் ஞானிகள் என்னை அன்புடன் வழுத்துகின்றனர். 8***

*செடிகளின் வளர்ச்சிக்கு முதற்காரணம் பூமி என்று அறியும் கிருஷிகர் அந்தப் பூமியைப் பண்படுத்துதலிலேயே கண்ணுங் கருத்துமாயிருக்கின்றனர். உலகு அனைத்துக்கும் முதற்காரணம் கடவுள் என்றும், கடவுளிடத்து மனதைத் திருப்புகிறவர்களுக்கே தெய்வப்பெற்றி யாவும் வந்தமைகின்றது என்றும் அறியும் சான்றோர் அன்புடன் தங்கள் மனதைக் கடவுளிடத்துத் திருப்புகிறார்கள். ஏது நிகழ்ந்திடினும் அவர்கள் மனது கடவுளைவிட்டு மாறுவதில்லை. செடி பூமியைப் பற்றிக்கொண்டிருப்பது போன்று அவர்களது இயல்பு முழுதும் ஈசனையே பற்றிக்கொண்டிருக்கிறது. அப்படி அவனைப் பற்றுமளவு யோகம் அசைவற்றதாகிறது.*

*வாழ்க்கையில் மனிதன் கொண்டுள்ள வெவ்வேறு பாங்குகளுக்கு ஈசுவர உபாசனையில் இடமில்லையா ? விடை வருகிறது :—*

**मच्चित्ता मद्गतप्राणा बोधयन्तः परस्परम् ।**
**कथयन्तश्च मां नित्यं तुष्यन्ति च रमन्ति च ॥ ९**

மச்சித்தா மத்கதப்ராணா போதயந்த: பரஸ்பரம் ।
கதயந்தஸ்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச ॥ 9

**मच्चित्ता:** மச்சித்தா: *என்மீது சித்தம் வைத்தவர்கள்* **मद्गत प्राणा:** மத்கத ப்ராணா: *உயிரை என்பால் செலுத்தியவர்கள்* **मां** மாம் *என்னை* **परस्परं** பரஸ்பரம் *ஒருவர்க்கொருவர்* **बोधयन्त:** போதயந்த: *விளக்கிக் கொள்பவர்கள்* **नित्यं** நித்யம் *எப்பொழுதும்* **कथयन्त: च** கதயந்த: ச *கீர்த்தனம் செய்கிறவர்களாயும்* **तुष्यन्ति** துஷ்யந்தி *திருப்தியடைகிறவர்களாயும்* **रमन्ति च** ரமந்தி ச *ஆனந்தமடைபவர்களாயுமாகிறார்கள்.*

***சித்தத்தை என்பால் வைத்து, உயிரை எனக்குரியதாக்கி, ஒருவர்க்கொருவர் என்னை விளக்கிக்***

**கொண்டும், யாண்டும் என்னைப் புகழ்ந்து பேசியும், மன நிறைவடைந்தும் மகிழ்வடைந்து மிருக்கின் றனர். 9**

விரும்பிய பொருளில் மனதை வைப்பது மிக எளிது. தாய் தந்தையர்களிடத்திருந்து தங்களுக்கு எல்லாம் வந்தமைந்தனவென்று அறியும் குழந்தைகள் முழுமனதை யும் அவர்களிடத்தே திருப்புகின்றனர். தனக்குத் தோற்ற மும் இருப்பிடமும் பகவான் என்பதை அறிகிற பக்தன் தன்னுடைய உள்ளத்தை இறைவன்பால் வைக்கிறான். தான் வளர்ந்தபின் பெற்றோரைப் பேண பிள்ளை ஒருவன் தன் உயிரையே கொடுக்கிறான். உயிரினும் மிக்கதொன்று யாருக்குமில்லை. பக்தன் அதைப் பகவானுக்குக் கொடுக் கிறான். காதலன் காதலிக்கு உயிர் கொடுப்பதுபோன்றது அல்ல பக்தன் செயல். காதலில் தனி நலமும் தனியுரிமை யும் இருக்கிறது. பக்தியில் மற்றவர்கள் எல்லாரும் சேர வேண்டுமென்று தான் பகவானைக் கண்டவாறு மற்றவர் களுக்கு பக்தன் விளக்குகிறான். மற்றவர் புகட்டுவதையும் தெவிட்டாது சுவைக்கிறான். அதைப் பலதடவை சொல்லு தலிலும் கேட்பதிலும் மகிழ்வு வருகிறது. ஆனால் சிற்றின் பம்போன்று அது முடிவில் மனக்கிலேசத்தையோ, குறை யையோ உண்டுபண்ணுவதில்லை. பக்தியினால் என்றைக் கும் நிறை மனது அமையப் பெறுகின்றது. அந்த நிறைவில் ஆனந்தமும் ஓயாது ஊற்றெடுக்கிறது.

வெறுங் கண்ணாடியில் யாதொரு உருவமும் பதிவதில்லை. ஆனால் தகுந்த ரசாயனப் பொருளை அக்கண்ணாடியின்மேல் பூசிய பிறகு, படங் களை எழுதலாம். அதுபோல பக்தியாகிய ரசாயனப் பொருளை ஹிருத யத்தின்மீது தடவினால், அங்கு ஈசுவரனுடைய ரூபத்தைப் பதியச் செய்யலாம்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

இங்ஙனம் பக்தி பண்ணுகிறவர்களிடத்து பகவான் எப்படி நடந்துகொள்ளுகிறார்? விடை வருகிறது :—

तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम् ।
ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते ॥ १०

தேஷாம் ஸததயுக்தானும் பஜதாம் ப்ரீதிபூர்வகம் ।
ததாமி புத்தியோகம் தம் யேன மாமுபயாந்தி தே ॥ 10

सततयुक्तानां ஸததயுக்தானும் *எப்பொழுதும் யோகம் பயிலுபவர்களுக்கு* प्रीतिपूर्वकम् भजताम् ப்ரீதிபூர்வகம் பஜதாம் *அன்பு நிறைவோடு பஜிக்கிறவர்களுக்கு* तेषाम् தேஷாம் *அவர்களுக்கு* तं தம் *அந்த* बुद्धियोगं புத்தியோகம் *புத்தி யோகத்தை* ददामि ததாமி *தருகிறேன்* येन யேன *அதனுல்* ते தே *அவர்கள்* मां மாம் *என்னை* उपयान्ति உபயாந்தி *வந்தடைகிறார்கள்.*

***என்றும் யோக முயற்சியோடு அன்புடன் என்னை வழுத்துபவர்களுக்கு புத்தியோகம் வழங்குகிறேன். அதனுல் அவர்கள் என்னை அடைகிறார்கள்.***

*சர்க்கரையை நாவில் வைத்தால் அது தித்திக்கிறது என்பது தெரிகிறது. பிறகு அந்தச் சர்க்கரையை என்னென்ன வகைப் பட்சணங்களாகச் செய்தால் அதன் சுவையை நன்கு ரசிக்கலாம் என்று அறிவது சர்க்கரையைப் பற்றிய புத்தியோகமாகிறது. உள்ளன்போடும் உறுதியாகவும் யோகத்தில் நுழைபவர்க்கு இறைவனது மகிமை கொஞ்சம் விளங்குகிறது. அது யோகத்துக்கு இன்னும் தூண்டுகோலாகிறது. பகவான் தந்துகொண்டே வருகிற புத்தியோகத்தால் அவருடைய சொரூபம் மேலும் மேலும் அறியப்படுகிறது. அவருடைய சொரூபத்தைத் தொடர்ந்து அறியுமளவு பக்தன் இன்னும் அதிகமாகப் பகவானைச் சார்ந்து நிற்கிறுன். இங்ஙனம் புத்தியோகத்தின் மூலம் பக்தி வளர்கிறது.*

*ஒரு சிறு துவாரத்தின் வழியாக ஓர் இருட்டறைக்குள் ஒரு கிரணம் வெளிச்சம் வருகிறது. அவ்வறைக்குள்ளிருப்பவனுக்கு வெளிச்சத்தைப் பற்றியிருக்கும் அபிப்பிராயமானது அந்தக் கிரணத்தின் அளவுக்குத் தகுந்தபடிதானிருக்கும். கதவுகளிலும் ஜன்னல்களிலும் துவாரங்கள் அதிகமாக இருந்தால் இன்னும் அதிகமான வெளிச்சத்தையும்*

*அக்கதவுகளையும் சாளரங்களையும் நன்றாகத் திறந்துவிட்டால் வெளிச்ச மயமாக இருப்பதையும் அவன் காண்பான். ஆனால் வெளியிடத்தில் நிற்பவனோ வெளிச்சத்திலேயே இருக்கிறான். அதுபோல பக்தர்களுடைய சுபாவத்துக்கும் சக்திக்கும் தக்கபடி ஈசுவரன் தன்னைத் தோற்றுவிக்கின்றான்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*பகவான் கொடுக்கிற பக்தியோகத்தால் பக்தன் அடையும் நன்மை யாது? விடை வருகிறது :—*

तेषामेवानुकम्पार्थमहमज्ञानजं तमः ।
नाशयाम्यात्मभावस्थो ज्ञानदीपेन भास्वता ॥ ११

தேஷாமேவானுகம்பார்த்த மஹமக்ஞானஜம் தம: ।
நாசயாம்யாத்மபாவஸ்தோ ஞானதீபேன பாஸ்வதா ॥ 11

तेषां தேஷாம் *அவர்களுக்கு* अनुकम्पार्थम् एव அனுகம்பார்த்தம் ஏவ *கருணையினாலேயே* अहं அஹம் *நான்* आत्मभावस्थः ஆத்மபாவஸ்த: *அவர்கள் உள்ளத்தில் வீற்றிருந்து* भास्वता பாஸ்வதா *பிரகாசிக்கின்ற* ज्ञानदीपेन ஞானதீபேன *ஞான தீபத்தினால்* अज्ञानजं அஞ்ஞானஜம் *அக்ஞானத்திலிருந்து பிறந்த* तमः தம: *இருளை* नाशयामि நாசயாமி *நாசம் செய்கிறேன்.*

***நான் அவர்களுக்கு அருளால் இரங்கி, அந்தக்கரணத்தில் வீற்றிருந்து, மெய்ஞானச் சுடர் விளக்கால் அக்ஞானத் துதித்த ஆரிருளை அகற்றி விடுகிறேன்.*** ***11***

*அன்பர்களது உள்ளத்தில் நீங்காது குடியிருந்து, அவர்கள் நன்மையடைய வேண்டும் என்று கருதுவது கடவுளின் கருணையாகும். அவர் ஏற்றிவைக்கும் ஞான தீபத்தின் தத்துவங்களாவன:- விவேகம் அந்த விளக்கின் உருவமாகிறது. பக்தியினின்று வரும் மனத் திருப்தியே அதற்கு எண்ணெய். விஷக் காற்றில் விளக்கு எரியாது. ஆழ்ந்த ஈசுவரத் தியானமே இவ்விளக்கை எரிப்பதற்கான தூய காற்று ஆகிறது. தடைப்படாத பிரம்மசரிய விரதத்தால் வளரும் பிரக்ஞை இதற்குத் திரியாகிறது. ஓய்வடைந்த*

அந்தக்கரணமே இதற்கு அகலாக அமைகிறது. பெருங் காற்று வீசி தீபத்தை அணைத்து விடலாகாது. விருப்பு வெறுப்பற்ற தெளிந்த மனது அதற்கேற்ற வீடாக அமைகிறது. தங்கு தடையற்ற ஒருமுகப்பட்ட தியானத்தினின்று உதிக்கும் நிறை காட்சியே இத்தீபத்தின் ஒளிப்பிழம்பாகும். இதுவே பக்தனது உள்ளத்தில் ஏற்றி வைக்கப்பட்டிருக்கும் ஞான தீபமாகும். இதனால் அவன் கடவுள் காட்சியை உள்ளபடி அடையப் பெறுகிறான்.

*தாணுக்காரன் தனது விளக்கின் வெளிச்சம் எவர்மீது படும்படி திருப்புகிறானோ அவரைப் பார்க்கக்கூடும். ஆனால் அந்த விளக்கைத் தன்மீது திருப்பாதிருக்கும் வரையில் அவனை ஒருவராலும் பார்க்க முடியாது. அதுபோல ஈசுவரன் எல்லோரையும் பார்க்கிறான். ஆனால் தனது கிருபை மூலமாக அவன் தன்னைத் தோற்றுவிக்கும் வரையில் ஒருவராலும் அவனைக் காணமுடியாது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஈசுவர விபூதியைப்பற்றியும் ஐசுவரியத்தைப் பற்றியும் தான் கேட்டறிந்து கொண்டதன் கருத்தை இப்பொழுது அர்ஜுனன் சொல்லுகிறான் :—*

अर्जुन उवाच

परं ब्रह्म परं धाम पवित्रं परमं भवान् ।
पुरुषं शाश्वतं दिव्यमादिदेवमजं विभुम् ॥ १२
आहुस्त्वामृषयः सर्वे देवर्षिर्नारदस्तथा ।
असितो देवलो व्यासः स्वयं चैव ब्रवीषि मे ॥ १३

அர்ஜுன உவாச

பரம் ப்ரஹ்ம பரம் தாம பவித்ரம் பரமம் பவான் ।
புருஷம் சாச்வதம் திவ்யமாதிதேவமஜம் விபும் ॥ 12
ஆஹுஸ்த்வாம்ருஷய: ஸர்வே தேவர்ஷிர்நாரதஸ்ததா ।
அஸிதோ தேவலோ வ்யாஸ: ஸ்வயம் சைவ ப்ரவீஷி மே ॥ 13

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது.*

भवान् பவான் *தாங்கள்* परं பரம் *மேலாம்* ब्रह्म ப்ரஹ்ம *பிரம்மம்*

परं பரம் *மேலான* धाम தாம *இருப்பிடம்* परमं பரமம் *மேலான* पवित्रं பவித்ரம் *பரிசுத்தமுள்ளவர்* सर्वे ஸர்வே *எல்லா* ऋषयः ருஷய: *ரிஷிகள்* देवर्षिः தேவர்ஷி: *தேவரிஷியாகிய* नारदः நாரத: *நாரதர்* तथा ததா *அப்படியே* असितः அஸித: *அஸிதர்* देवलः தேவல: *தேவலர்* व्यासः வ்யாஸ: *வியாஸர்* त्वां த்வாம் *உம்மை* शाश्वतं ஸாச்வதம் *நித்தியமானவர் என்றும்* दिव्यं पुरुषं திவ்யம் புருஷம் *திவ்வியமான புருஷர் என்றும்* आदिदेवं ஆதிதேவம் *ஆதிதேவர் என்றும்* अजं அஜம் *பிறவாதவர் என்றும்* विभुं விபும் *எங்கும் வியாபித்தவர் என்றும்* आहुः ஆஹு: *சொல்லுகிறார்கள்* स्वयं च एव ஸ்வயம் ச ஏவ *தாங்களுமே* मे மே *எனக்கு* ब्रवीषि ப்ரவீஷி *சொல்லுகிறீர்.*

அர்ஜுனன் சொன்னது

***மேலாம் பிரம்மம், உயர்ந்த இருப்பிடம், ஒப்பற்ற புனிதம் தாம் ஆவீர். எல்லா ரிஷிகளும், தேவரிஷி நாரதரும், அப்படியே அஸிதர், தேவலர், வியாசர் ஆகியவரும் உம்மை நித்யமானவன், திவ்ய புருஷன், ஆதிதேவன், பிறவாதவன், எங்கும் நிறைபொருள் என்று இயம்புகின்றனர்; தாமும் அப்படியே பகர்கின்றீர். 12-13***

**பரபிரம்மம்** – *நிர்க்குண நிருபாதிக பிரம்மம்.*

**அபரபிரம்மம்** – *சகுண சோபாதிக பிரம்மம் அல்லது ஈசுவரன்.*

**பரம் தாமம்** – *சினிமாப் படம் முழுதுக்கும் திரை இருப்பிடமாவது போன்று சராசரம் அனைத்துக்கும் பிரம்மம் முடிவான இருப்பிடமாகிறது. அனைத்தையும் விளக்க வல்ல பரஞ்ஜோதியும் அதுவே.*

**ஆதி தேவன்** – *மற்ற தேவர்களெல்லாம் ஏன்று தற்கு முன்பே இருந்தவன்.*

**பரமம் பவித்ரம்** – *நீர், நிலம், தீ முதலியவைகள் தாற்காலிகமாகப் பொருள்களைத் தூயதாக்க வல்லவைகள். பரபிரம்மத்தைச் சாருமளவு ஜீவர்கள் பிரம்ம சொரூபமாகி*

அந்தக்கரணமே இதற்கு அகலாக அமைகிறது. பெருங் காற்று வீசி தீபத்தை அணைத்துவிடலாகாது. விருப்பு வெறுப்பற்ற தெளிந்த மனது அதற்கேற்ற வீடாக அமைகிறது. தங்கு தடையற்ற ஒருமுகப்பட்ட தியானத்தினின்று உதிக்கும் நிறை காட்சியே இத்தீபத்தின் ஒளிப்பிழம்பாகும். இதுவே பக்தனது உள்ளத்தில் ஏற்றி வைக்கப்பட்டிருக்கும் ஞான தீபமாகும். இதனால் அவன் கடவுள் காட்சியை உள்ளபடி அடையப் பெறுகிறான்.

*தாணுக்காரன் தனது விளக்கின் வெளிச்சம் எவர்மீது படும்படி திருப்புகிறானோ அவரைப் பார்க்கக்கூடும். ஆனால் அந்த விளக்கைத் தன்மீது திருப்பாதிருக்கும் வரையில் அவனை ஒருவராலும் பார்க்க முடியாது. அதுபோல ஈசுவரன் எல்லோரையும் பார்க்கிறான். ஆனால் தனது கிருபை மூலமாக அவன் தன்னைத் தோற்றுவிக்கும் வரையில் ஒருவராலும் அவனைக் காணமுடியாது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஈசுவர விபூதியைப்பற்றியும் ஐசுவரியத்தைப் பற்றியும் தான் கேட்டறிந்து கொண்டதன் கருத்தை இப்பொழுது அர்ஜுனன் சொல்லுகிறான் :—*

**अर्जुन उवाच**

**परं ब्रह्म परं धाम पवित्रं परमं भवान् ।**
**पुरुषं शाश्वतं दिव्यमादिदेवमजं विभुम् ॥ १२**
**आहुस्त्वामृषयः सर्वे देवर्षिर्नारदस्तथा ।**
**असितो देवलो व्यासः स्वयं चैव ब्रवीषि मे ॥ १३**

அர்ஜுன உவாச

பரம் ப்ரஹ்ம பரம் தாம பவித்ரம் பரமம் பவான் ।
புருஷம் சாச்வதம் திவ்யமாதிதேவமஜம் விபும் ॥ 12
ஆஹுஸ்த்வாம்ருஷய: ஸர்வே தேவர்ஷிர்நாரதஸ்ததா ।
அஸிதோ தேவலோ வ்யாஸ: ஸ்வயம் சைவ ப்ரவீஷி மே ॥ 13

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது.*
भवान् பவான் *தாங்கள்* परं பரம் *மேலாம்* ब्रह्म ப்ரஹ்ம *பிரம்மம்*

परं பரம் *மேலான* धाम தாம *இருப்பிடம்* परमं பரமம் *மேலான* पवित्रं பவித்ரம் *பரிசுத்தமுள்ள பொருள்* सर्वे ஸர்வே *எல்லா* ऋषयः ருஷய: *ரிஷிகள்* देवर्षिः தேவர்ஷி: *தேவரிஷியாகிய* नारदः நாரத: *நாரதர்* तथा ததா *அப்படியே* असितः அஸித: *அஸிதர்* देवलः தேவல: *தேவலர்* व्यासः வ்யாஸ: *வியாஸர்* त्वां த்வாம் *உம்மை* शाश्वतं சாச்வதம் *நித்தியமான வர் என்றும்* दिव्यं पुरुषं திவ்யம் புருஷம் *திவ்வியமான புருஷர் என்றும்* आदिदेवं ஆதிதேவம் *ஆதிதேவர் என்றும்* अजं அஜம் *பிறவாதவர் என்றும்* विभुं விபும் *எங்கும் வியாபித்தவர் என்றும்* आहुः ஆஹு: *சொல்லு கிறார்கள்* स्वयं च एव ஸ்வயம் ச ஏவ *தாங்களுமே* मे மே *எனக்கு* ब्रवीषि

அர்ஜுனன் சொன்னது

***மேலாம் பிரம்மம், உயர்ந்த இருப்பிடம், ஒப் பற்ற புனிதம் தாம் ஆவீர். எல்லா ரிஷிகளும், தேவ ரிஷி நாரதரும், அப்படியே அஸிதர், தேவலர், வியாசர் ஆகியவரும் உம்மை நித்யமானவன், திவ்ய புருஷன், ஆதிதேவன், பிறவாதவன், எங்கும் நிறைபொருள் என்று இயம்புகின்றனர்; தாமும் அப்படியே பகர்கின்றீர். 12-13***

**பரபிரம்மம்** – *நிர்க்குண நிருபாதிக பிரம்மம்.*

**அபரபிரம்மம்** – *சகுண சோபாதிக பிரம்மம் அல்லது ஈசுவரன்.*

**பரம் தாமம்** – *சினிமாப் படம் முழுதுக்கும் திரை இருப்பிடமாவது போன்று சராசரம் அனைத்துக்கும் பிரம் மம் முடிவான இருப்பிடமாகிறது. அனைத்தையும் விளக்க வல்ல பரஞ்ஜோதியும் அதுவே.*

**ஆதி தேவன்** – *மற்ற தேவர்களெல்லாம் தோன்று தற்கு முன்பே இருந்தவன்.*

**பரமம் பவித்ரம்** – *நீர், நிலம், தீ முதலியவைகள் தாற் காலிகமாகப் பொருள்களைத் தூயதாக்க வல்லவைகள். பர பிரம்மத்தைச் சாருமளவு ஜீவர்கள் பிரம்ம சொரூபமாகி*

*ரூர்கள். அவர்களது குற்றமெல்லாம் அகலுகிறது. ஆகையால் ஜீவர்களைப் புனிதமாக்குபவைகளில் பரபிரம்மம் தலையாயது.*

ரிஷி — *மனதையும் இந்திரியங்களையும் அடக்கிப் பரதத்துவத்தை சுவானுபவத்தில் கண்டறிந்தவர். தேவ ரிஷிகளில் சிறந்தவர் நாரதர்.*

**सर्वमेतदृतं मन्ये यन्मां वदसि केशव ।**
**न हि ते भगवन्व्यक्तिं विदुर्देवा न दानवाः ॥ १४**

ஸர்வமேதத்ருதம் மன்யே யன்மாம் வதஸி கேசவ ।
ந ஹி தே பகவன் வ்யக்திம் விதுர்தேவா ந தானவா: ॥ 14

केशव கேசவ *கேசவா* मां மாம் *எனக்கு* यत् யத் *எதை* वदसि வதஸி *சொல்லுகிறீரோ* एतत् ஏதத் *அது* सर्वं ஸர்வம் *யாவும்* ऋतं ருதம் *உண்மை என்று* मन्ये மன்யே *கருதுகிறேன்* हि ஹி *நிச்சயமாக* भगवन् பகவன் *பகவானே* ते தே *உம்முடைய* व्यक्तिं வ்யக்திம் *ஆவிர்பாவத்தை* देवाः न विदुः தேவா: ந விது: *தேவர்கள் அறிகிறதில்லை* न दानवाः ந தானவா: *அஸுரர்களும் அறிவதில்லை*

***கேசவா, நீர் எனக்கு ஓதுவது யாவும் உண்மையென்றெண்ணுகிறேன். பகவானே, உமது தோற்றத்தைத் தேவர்களும் அறியார், தானவர்களும் அறியார்.*** **14**

*யாரிடத்தில் பலம், தர்மம், ஐசுவரியம், வீரியம், வைராக்கியம், தேஜஸ் ஆகிய இவைகள் ஆறும் நிறைந்திருக்கின்றனவோ அவர் பகவான். பகவான் என்பதற்கு ஷட்குண சம்பன்னன் என்னும் பொருள் உண்டு. இந்த ஆறுவித குணங்களை ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், வீரியம், ஸ்ரீ, கீர்த்தி என்று பொருள்படுத்துவதும் உண்டு. ஜீவர்களுடைய முக்கால நிலையை அறியும் வல்லமை அவருக்குண்டு. பகவானுடைய வியக்தி யென்பது அவருடைய பிரபாவம் அல்லது தோற்றம். அவர் அவதரிப்பதன் உட்கருத்து தேவர்களுக்கே விளங்குவதில்லை; இனி, தானவர்கள்*

அல்லது அசுரர்கள் எப்படி அறியப்போகிறார்கள் ! நல்லோரைக் காப்பதற்கும் கெட்டவர்களை அழிப்பதற்கும் அவர் அவதரிக்கிறார் என்பது ஓரளவு சில பக்தர்களுக்குப் புலப்படுகிறது.

சூரியன் பூமியைக் காட்டிலும் பன்மடங்கு பெரியதாயினும், வெகு தூரத்துக்கப்பாலிருப்பதால் ஒரு சிறிய தட்டை போலக் காணப்படுகிறது. அதுபோலவே, ஈசுவரன் அளவற்ற மகத்துவமுடையவனாயிருந்தும், நமக்கும் அவனுக்குமிடையே யுள்ள தூரத்தினால் நாம் அவனுடைய உண்மையான மகத்துவத்தை அறியச் சக்தியற்றவர்களாக இருக்கிறோம்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

எல்லாவற்றிற்கும் அவனே மூலகாரணமாதலால்:—

**स्वयमेवात्मनात्मानं वेत्थ त्वं पुरुषोत्तम ।**
**भूतभावन भूतेश देवदेव जगत्पते ॥ १५**

ஸ்வயமேவாத்மனாத்மானம் வேத்த த்வம் புருஷோத்தம ।
பூதபாவன பூதேச தேவதேவ ஜகத்பதே ॥ 15

पुरुषोत्तम புருஷோத்தம *புருஷோத்தமா* भूतभावन பூதபாவன *உயிர்களை உண்டுபண்ணியவரே* भूत ईश பூத ஈச *உயிர்களுக்கு இறைவ* देवदेव தேவ தேவ *தேவர்களுக்கு தேவனே* जगत्पते ஜகத்பதே *உலகை ஆளுபவரே* त्वं த்வம் *நீர்* आत्मना ஆத்மனா *தம்மால்* आत्मानं ஆத்மானம் *தம்மை* स्वयं एव ஸ்வயம் ஏவ *தாமே* वेत्थ வேத்த *அறியவல்லீர்.*

***புருஷோத்தமா, உயிர்களைப் படைத்தவா, உயிர்களுக்கு இறைவா, தேவ தேவா, அண்ட நாயகனே, உம்மை உம்மால் நீரே உள்ளபடி அறிவீர். 15***

*புருஷர்களில் இவர் ஒருவரே அழிவற்றவர், ஒப்பற்றவர்; ஆதலால் இவர் புருஷோத்தமர். உயிர்களுக்கெல்லாம் இவர் முதற் காரணமாதலால் இவர் பூதபாவனன். படைத்தபின் அவைகளுக்குத் தலைவராயிருக்கிறார்; ஆதலால் அவர் பூதேசன். பின்பு அவைகளையெல்லாம் ஆளுகிறபடியால் அவர் ஜகத்பதி. தமது முழு மகிமையை அவர் தாமே அறிந்துகொள்கிறார்: அனந்த கல்யாண குணங்களை*

யுடைய அப்புருஷோத்தமனை மற்றவர்கள் உள்ளபடி அறிந்துகொள்ள இயலாதவர்கள்.

*வைரம் ஒன்றை ஒருவன் கடைத் தெருவுக்கு விற்பனைக்கு எடுத்துச் சென்றான். அது என்ன விலை பெறும் என்று அவன் ஒரு கத்தரிக்காய்க் கடையில் கேட்டான். கத்தரிக்காய்க் கடைக்காரன் அதற்கு ஒரு கூடை கத்தரிக்காய் கொடுக்கலாம் என்றான். அரிசிக் கடைக்காரன் அந்த வைரத்துக்கு ஒரு மூட்டை அரிசி கொடுக்கலாம் என்றான். இப்படி ஒவ்வொருவனும் தன் அறிவுக்கு எட்டியபடி அதை மதிப்பிட்டான். பிறகு ஒரு வைர வியாபாரி அது பத்து லட்சம் ரூபாய் பெறும் என்று மதிப்பிட்டான். இப்படி பிரம்மத்தையும் அவரவர் அறிவுக்கு எட்டியபடி மதிப்பிடுகிறார்கள். பிரம்மமே பிரம்மத்தை முழுதும் அறியும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**वक्तुमर्हस्यशेषेण दिव्या ह्यात्मविभूतयः ।**
**याभिर्विभूतिभिर्लोकानिमांस्त्वं व्याप्य तिष्ठसि ॥ १६**

வக்துமர்ஹஸ்யசேஷேண திவ்யா ஹ்யாத்மவிபூதய: ।
யாபிர்விபூதிபிர்லோகானிமாம்ஸ்த்வம் வ்யாப்ய திஷ்டஸி ॥ 16

याभिः विभूतिभिः யாபி: விபூதிபி: *எந்த விபூதிகளினால்* त्वं த்வம் *நீர்* इमान् लोकान् இமான் லோகான் *இந்த உலகங்களை* व्याप्य வ்யாப்ய *வியாபித்து* तिष्ठसि திஷ்டஸி *இருக்கிறீரோ* दिव्याः திவ்யா: *தெய்வப் பெற்றியுடைய* आत्मविभूतयः ஆத்மவிபூதய: *ஆத்ம விபூதிகளை* अशेषेण हि அசேஷேண ஹி *பாக்கியில்லாமலேயே* वक्तुं வக்தும் *வர்ணிப்பதற்கு* अर्हसि அர்ஹஸி *கடமைப்பட்டிருக்கிறீர்.*

***எந்த விபூதிகளைக்கொண்டு இவ்வுலகங்களை நிரப்பியுள்ளீரோ, மேலாம் அவ்விபூதிகளை மிச்சமின்றி நீரே வர்ணித்தருள்க. 16***

*சங்கீதத்தின் மகிமையை சங்கீத வித்வானே நன்கு விளக்க வல்லவன். யானையின் பலத்தை யானையே தன் செயலால் விளக்க வல்லது. அரசனுடைய ஐசுவரியத்தை அரசனே நன்கு எடுத்துச் சொல்ல வல்லவன். அங்ஙனம் ஈசுவர விபூதிகளை ஈசுவர அவதாரமே நன்கு விளக்க வல்லவராகிறார்.*

*ஈசுவரன் தனது கிருபையாலேயே தன்னைத்தோற்றுவிக்கிறுன். அவன் ஞான சூரியன். அவனுடைய ஒற்றைக் கிரணமே இவ்வுலகம் முழுமைக்கும் அறிவைக் கொடுத்துள்ளது. அதனுல்தான் நாம் ஒருவரை ஒருவர் தெரிந்துகொள்ளவும் பலவிதமான ஞானங்களைப் பெறவும் வல்லவர்களாய் இருக்கிறேம். அவன் தனது ஒளியைத் தனது திரு முகத்திலே திருப்பிக்கொண்டால் மட்டுந்தான் நம்மால் அவனைக்காண முடியும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*கேசவரே, தாம் எனக்குச் செய்யக்கடவதாவது :—*

**कथं विद्यामहं योगिंस्त्वां सदा परिचिन्तयन् ।**
**केषु केषु च भावेषु चिन्त्योऽसि भगवन्मया ॥ १७**

கதம் வித்யாமஹம் யோகிம்ஸ்த்வாம் ஸதா பரிசிந்தயன் ।
கேஷு கேஷு ச பாவேஷு சிந்த்யோऽஸி பகவன்மயா ॥ 17

योगिन् யோகின் *யோகியே* सदा ஸதா *எப்பொழுதும்* परिचिन्तयन् பரிசிந்தயன் *சிந்தித்துக் கொண்டு* कथं கதம் *எப்படி* त्वां த்வாம் *உன்னை* अहं அஹம் *நான்* विद्यां வித்யாம் *அறிவேன்* भगवन् பகவன் *பகவானே* मया மயா *என்னுல்* केषु केषु च கேஷு கேஷு ச *என்ன என்ன* भावेषु பாவேஷு *பாவங்களில்* चिन्त्य: சிந்த்ய: *சிந்திக்கத்தக்கவராக* असि அஸி *இருக்கின்றீர்.*

***யோகி, யாண்டும் உம்மையே சிந்தித்து நான் உம்மை அறிவது எப்படி? பகவானே, என்னென்ன பாங்குகளில் நீர் என்னுல் சிந்திக்கத் தக்கவர்? 17***

*என் மனம் வெளி விஷயங்களில் போய்க்கொண்டிருந்தாலும் அவ்விஷயங்களை நான் எங்ஙனம் பொருள்படுத்திஞல் என் எண்ணம் உம்மைப்பற்றியதாய்விடும்? தாய் ஒருத்திக்குத் தன் குழந்தைகளின் விளையாட்டுக் கருவிகளைப் பார்த்தாலும் குழந்தையின் ஞாபகம் வந்துவிடுகிறது. எனக்கு அப்படி உலகினை இந்திரியங்கள் மூலமாகப் பார்ப்பதற்கிடையில் உம்மைப்பற்றிய சிந்தனையே வருதற்கு ஏதேனும் உபாயம் உண்டா?*

*விளையாட்டுப் பழமும் விளையாட்டு யானையும் வாஸ்தவமான பழத்தையும் யானையையும் நினைப்பூட்டுவதைப்போல, ஆராதிக்கப்படும்*

விக்கிரகங்கள் நித்தியனும் அரூபியுமான ஈசுவரனை நினைப்பூட்டு கின்றன.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**विस्तरेणात्मनो योगं विभूतिं च जनार्दन ।**
**भूयः कथय तृप्तिर्हि शृण्वतो नास्ति मेऽमृतम् ॥ १८**

விஸ்தரேணாத்மனோ யோகம் விபூதிம் ச ஜனார்தன ।
பூய: கதய த்ருப்திர்ஹி ச்ருண்வதோ நாஸ்தி மேऽம்ருதம் ॥ 18

जनार्दन ஜனார்தன *ஜனார்தனா* आत्मनः ஆத்மன: *உம்முடைய* योगं யோகம் *யோகத்தையும்* विभूतिं च விபூதிம் ச *விபூதியையும்* भूयः பூய: *மறுபடியும்* विस्तरेण விஸ்தரேண *விஸ்தாரமாக* कथय கதய *சொல்லுக* हि ஹி *ஏனென்றால்* अमृतं அம்ருதம் *மொழியமுதை* शृण्वतः मे ச்ருண்வத: மே *கேட்கின்ற எனக்கு* तृप्तिः த்ருப்தி: *திருப்தி* न अस्ति ந அஸ்தி *இல்லை.*

***ஜனார்தனா, உமது யோகத்தையும் விபூதியையும் மீண்டும் விரித்து விளக்குவீராக. ஏனென்றால், உமது அமுத மொழி எனக்குத் தெவிட்டவில்லை. 18***

*புக்தி, முக்தி ஆகிய இரண்டின் பொருட்டு ஜனங்களால் ஆராதிக்கப்படுபவர் ஜனார்தனர். இங்கு யோகம் என்பது அனைத்தையும் அறியும் தன்மை, ஆளும் தன்மை ஆகிய இரண்டு இயல்பையும் குறிக்கிறது. எந்தெந்தவஸ்துவின் மூலம் அவன் உபாஸிப்பதற்குத் தகுந்தவனோ, அவையெல்லாம் அவனுடைய விபூதிகளாம். உலகப்பொருள்களெல்லாம் தெவிட்டும் தன்மை யுடையவைகள். பகவத் விஷயம் ஒன்றுதான் தெவிட்டாதது. நிலத்திலிருந்து சேறு, சேற்றினின்று சிறு பாண்ட நீர், அதினின்று பெரு நீர்நிலை இவைகளுக்குப்போகப்போக மீன் ஒன்று தன் இயல்பையே இன்னும் உறுதியாகப் பெறுகிறது. அங்ஙனம் ஜீவன் ஈசுவரனுடைய விபூதிகளில் சிந்தையைச் செலுத்துமளவு தன் பேரியல்பையே பெறுகிறான். அதில் போதுமென்ற மனநிலை வருவதில்லை.*

*ஈசுவரனுக்கும் மனிதனுக்கும் உள்ள சம்பந்தம் காந்தத்துக்கும் இரும்புக்குமுள்ள சம்பந்தத்தைப் போன்றது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

श्री भगवानुवाच

**हन्त ते कथयिष्यामि दिव्या ह्यात्मविभूतयः ।**
**प्राधान्यतः कुरुश्रेष्ठ नास्त्यन्तो विस्तरस्य मे ॥ १९**

ஸ்ரீ பகவானுவாச

ஹந்த தே கதயிஷ்யாமி திவ்யா ஹ்யாத்மவிபூதய: ।
ப்ராதான்யத: குருச்ரேஷ்ட நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே ॥

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

हन्त ஹந்த *நல்லது* कुरुश्रेष्ठ குருச்ரேஷ்ட *குருகுல சிரேஷ்டனே* दिव्याः திவ்யா: *தெய்வத்தன்மையுடைய* आत्मविभूतयः ஆத்ம விபூதய: *என் விபூதிகளை* प्राधान्यतः ப்ராதான்யத: *பிரதானப்படி* ते தே *உனக்கு* कथयिष्यामि கதயிஷ்யாமி *சொல்லுகிறேன்* हि ஹி *ஏனென்றால்* मे மே *என்னுடைய* विस्तरस्य விஸ்தரஸ்ய *விபூதியின் விஸ்தரிப்புக்கு* अन्तः அந்த: *முடிவு* न அस्ति ந அஸ்தி *இல்லை.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***நல்லது, குருகுலப் பேராளா, என் மேலாம் மஹிமைகளில் முக்கியமானவைகளை உனக்கு மொழிகிறேன். ஏனெனில், என் விபூதியின் விஸ்தரிப்புக்கு முடிவில்லை.*** **19**

*இயற்கையின் சிறப்பு அனைத்தும் ஈசுவரவிபூதிகளே. அவைகளைச் சொல்லில் அடக்குவது ஈசுவரனுக்கே இயலாது. ஆங்காங்கு முக்கியமான சிலவற்றை மட்டும் எடுத்து மொழிய முடியும். அவைகளினின்று மற்றவைகளை யூகித்து அறிந்துகொள்ளலாம்.*

*கிரந்தங்களைப் படித்துவிட்டு மட்டும் ஈசுவரனை விவரிக்கமுயலுவது தேசப் படத்தில் மட்டும் காசியைப் பார்த்துவிட்டு, அந்நகரைப் பற்றி இன்னொருவனுக்கு விவரிக்க முயல்வதை ஒக்கும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

உலகைப்பற்றி முடிவான உண்மையை முதலிலேயே தெரிந்துகொள். அதாவது :—

अहमात्मा गुडाकेश सर्वभूताशयस्थितः ।
अहमादिश्च मध्यं च भूतानामन्त एव च ॥ २०

அஹமாத்மா குடாகேச ஸர்வபூதாசயஸ்திதः ।
அஹமாதிஸ்ச மத்யம் ச பூதானாமந்த ஏவ ச ॥ 20

गुडाकेश குடாகேச *துடாகேச* सर्वभूत आशयस्थितः ஸர்வபூத ஆசயஸ்திதः *எல்லாப் பிராணிகளின் ஹிருதயத்தில் இருக்கிற* आत्मा ஆத்மா *பரமாத்மா* अहं அஹம் *நான்* च ச *மேலும்* भूतानां பூதானாம் *உயிர்களுக்கு* आदिः ஆதிः *ஆதியும்* मध्यं च மத்யம் ச *நடுவும்* अन्तः च அந்தः ச *முடிவும்* अहं एव அஹம் ஏவ *நானே.*

***விழிப்புடையோய், எல்லா உயிர்களின் உள்ளத்து உறையும் ஆத்மா நானே. உயிர்களின் ஆதியும் இடையும் இறுதியும் நானே. 20***

*குடாகேசன் என்றால் தூக்கத்தை வென்றவன் அல்லது அடர்ந்த கூந்தலையுடையவன் என்று பொருள். தூக்கத்தை வென்று, ஆன்ம போதத்தில் விழிப்பு அடையப்பெறுபவர்க்கே பரமாத்மாவின் வியாபகம் விளங்கும். உயிர்கள் தோன்றுவதும் நிலைபெற்றிருப்பதும் ஒடுங்குவதும் பரமாத்மாவினிடத்திலேயாம்.*

*ஏகமாய் இருக்கும் என் தாய் பராசக்தி பல்வேறு தோற்றத்துடன் விளங்குகிறாள். அளவில்லாத சக்தியுடைய அவள் ஜீவனாகவும் ஜகத்தாகவும் பேதப்பட்டு, சரீரம் புத்தி சன்மார்க்கம் ஆத்மார்த்தம் முதலிய வேறுபட்ட சக்திகளை யுடையவளாய்க் காணப்படுகிறாள். சக்தி, வேதாந்தத்தில் கூறப்படும் பிரம்மமே தவிர வேறல்ல. கட்புலனாகாத பிரம்மத்தின் பிரத்யக்ஷ ஸ்வரூபமே அவள்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

आदित्यानामहं विष्णुर्ज्योतिषां रविरंशुमान् ।
मरीचिर्मरुतामस्मि नक्षत्राणामहं शशी ॥ २१

ஆதித்யானுமஹம் விஷ்ணுர்ஜ்யோதிஷாம் ரவிரம்சுமான் ।
மரீசிர்மருதாமஸ்மி நக்ஷத்ராணுமஹம் சசீ ॥ 21

अहं அஹம் *நான்* आदित्यानां ஆதித்யானும் *ஆதித்யர்களுள்* विष्णुः விஷ்ணு: *விஷ்ணு* ज्योतिषां ஜ்யோதிஷாம் *ஒளிர்பவைகளுள்* अंशुमान् அம்சுமான் *கதிர்களையுடைய* रविः ரவி: *சூரியன்* मरुतां மருதாம் *மருத்துக்களுக்கிடையில்* मरीचिः மரீசி: *மரீசியாக* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* नक्षत्राणां நக்ஷத்ராணும் *நக்ஷத்திரங்களுள்* अहं அஹம் *நான்* शशी சசீ *சந்திரன்.*

***ஆதித்தியர்களுள் நான் விஷ்ணு; ஒளிர்பவைகளுள் கதிர் நிறைந்த ஞாயிறு நான்; மருத்துக்களுள் மரீசி; நக்ஷத்திரங்களுள் சந்திரன். 21***

*விளைபொருள்கள் யாவும் ஒரு பூமியைச் சேர்ந்தவைகள் எனினும், அவைகளுள் மிக முக்கியமானவைகளையே பொருட்காட்சிகளில் வைத்துக் காட்டுவது வழக்கம். அனைத்தும் பகவானுடைய விபூதி எனினும், எவை விசேஷமாக பகவானை ஞாபகமூட்ட அல்லது மனதைக் கவரவல்லவைகளாக இருக்கின்றனவோ அவைகளைத் தனியாகப் பொறுக்கி யெடுத்துத் தம் சொரூபம் என்று பகவான் சொல்லுகிறார்.*

*பன்னிரண்டு மாதத்துக்குப் பன்னிரண்டு ஆதித்தியர்கள் இருக்கிறார்கள். ஒருவரே பன்னிரண்டு பெயர் பெற்றுப் பன்னிரண்டு விதமாகத் தொழில் புரிகிறார். அவர்களின் வரிசைக்கிரமம் :— சித்திரைக்கு அம்சு, வைகாசிக்கு தாதா, ஆனிக்கு இந்திரன், ஆடிக்கு அரியமா, ஆவணிக்கு விவசுவான், புரட்டாசிக்கு பகன், ஐப்பசிக்கு பர்ஜந்நியன், கார்த்திகைக்குத் துவஷ்டா, மார்கழிக்கு மித்திரன், தைக்கு விஷ்ணு, மாசிக்கு வருணன், பங்குனிக்கு பூஷா என்று அமைந்துள்ளது. இத்தகைய பன்னிரண்டு ஆதித்தியர்களுள் தை மாதத்தில் உத்தராயண புண்ணிய காலத்தையுண்டுபண்ணி, பனியைக் குறைத்து, வெப்பத்தை*

அளவுபட வளர்க்கும் விஷ்ணு ஆகிய ஆதித்தியன் எல்லா ராலும் பெரிதும் விரும்பப்படுகிறான்.

விஷ்ணு சஹஸ்ர நாமம் 258 வது பெயர் நகர்வதால் அவர் விஷ்ணு என்று அழைக்கப்படுகிறார். விஷ்ணுவே சூரியன் ஆனதாக ஐதிகம் உண்டு.

நாற்பத்தொன்பது மருத் தேவதைகளுள் (வாயு தேவதைகளுள்) மரீசி என்பவன் பகவான். காற்றுவீசுவது உலக நடைமுறைக்குப் பெரிதும் பயன்படுகிறது. அவை களுள் மிக முக்கியமானது ஈண்டு அவர் சொரூபமாக எடுத்துக்கொள்ளப்படுகிறது.

பகலில் ஒளிர்பவைகளுள் சிறந்தது சூரியன். இரவில் ஒளிர்பவைகளுள் சிறந்தது சந்திரன். அது உண்மையில் நக்ஷத்திரம் அல்லவெனினும் நாம் அடையும் பயனை முன்னிட்டு அது முன்னணியில் வைக்கப்படுகிறது. ஆக, அவ்விரண்டும் பகவத் சொரூபமாகக் கருதப்படுபவைகளாம்.

वेदानां सामवेदोऽस्मि देवानामस्मि वासवः ।
इन्द्रियाणां मनश्चास्मि भूतानामस्मि चेतना ॥ २२

வேதானாம் ஸாமவேதோऽஸ்மி தேவானாமஸ்மி வாஸவ: ।
இந்த்ரியாணாம் மனஸ்சாஸ்மி பூதானாமஸ்மி சேதனா ॥ 22

वेदानां வேதானாம் *வேதங்களுள்* सामवेदः ஸாமவேத: *ஸாமவேதமாக* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* देवानां தேவானாம் *தேவர்களுள்* वासवः வாஸவ: *இந்திரனாக* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* इन्द्रियाणां இந்த்ரியாணாம் *இந்திரியங்களுள்* मनः च மன: ச *மனதாக* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* भूतानां பூதானாம் *பிராணிகளில்* चेतना சேதனா *உணர்ச்சி அல்லது புத்தி விருத்தியாக* अस्मि அஸ்மி *இருக்கிறேன்.*

***வேதங்களுள் நான் ஸாமவேதம்; தேவர்களுள் இந்திரன்; இந்திரியங்களுள் மனதும், உயிர்களில் உணர்வும் நானே.*** **22**

மஹா விஷ்ணுவுக்கே 'ஸாமக' அதாவது ஸாம வேதம் ஓதுபவர் என்ற பெயர், விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் அமைந்துள்ளது.

*இசையோடு கூடியிருப்பதால் ஸாமவேதம் பொருள் விளங்காதவர்களுக்கும் உள்ளத்தைக் கவர வல்லதாகிறது. ஈசுவர எண்ணத்தை விரைவில் கொண்டுவர வல்லதாகை யால், அது முதன்மைவகிப்பதாகச் சொல்லப்படுகிறது.*

*தேவர்களுக்குத் தலைவனாயிருப்பதால் இந்திரனிடம் ஈசுவர சம்பத்து அதிகமாகவிருக்கிறது. நூறு யாகங்களைச் செய்தவன் தேவேந்திரன் ஆகிறான் என்பது அவனது மேன் மையை விளக்குகிறது.*

*மனம் இல்லாவிட்டால் மற்ற இந்திரியங்கள் தொழில் புரிந்தாலும் கோள் இல் பொறியாகின்றன. மனம் எங்கேயோ போய்விடும்பொழுது காதால் கேட்டா லும் கண்ணால் பார்த்தாலும் ஒன்றும் பொருள்படுவதில்லை. அதன் உதவியின்றி ஓர் இந்திரியமும் உதவாது. உயிரற்ற தற்கும் உயிருடையதற்கும் வித்தியாசம் உணர்வில் அல்லது அறிவில் இருக்கிறது. சேதனம் அல்லது அறிவு அதிகரிக்கு மளவு உயிர் மேலானதாகிறது. இறுதியில் தூய அறிவே தெய்வமாகிறது. செல்வத்தின் மூலம் செல்வனைத்தெரிந்து கொள்ளுதல்போன்று, இந்த விபூதிகள் மூலம் இறைவனைத் தெரிகிறோம்.*

**रुद्राणां शङ्करश्चास्मि वित्तेशो यक्षरक्षसाम् ।**
**वसूनां पावकश्चास्मि मेरुः शिखरिणामहम् ॥ २३**

ருத்ராணாம் சங்கரஸ்சாஸ்மி வித்தேசோ யக்ஷரக்ஷஸாம் ।
வஸூனாம் பாவகஸ்சாஸ்மி மேரு: சிகரிணாமஹம் ॥ 23

रुद्राणां च ருத்ராணாம் ச *ருத்திரர்களுள்* शंकर: சங்கர: *சங்கரனாக* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* यक्षरक्षसां யக்ஷரக்ஷஸாம் *யக்ஷ ரக்ஷஸர்களில்* वित्त ईश: வித்த ஈச: *செல்வபதியாகவும் (குபேரனாக)* वसूनां வஸூனாம் *வசுக்களுள்* पावक: च பாவக: ச *அக்னியாகவும்* शिखरिणां சிகரிணாம் *சிகர முள்ள மலைகளில்* मेरु: மேரு: *மேரு மலையாகவும்* अहं அஹம் *நான்* अस्मि அஸ்மி *இருக்கிறேன்.*

***ருத்திரர்களுள் சங்கரனாகவும், யக்ஷரக்ஷஸர் களுள் குபேரனாகவும், வஸுக்களுள் அக்னியாக***

**வும், மலைகளுள் மேரு மலையாகவும் நான் இருக்கிறேன்.** 23

ருத்திரர்கள் பதினொரு பேர் இருக்கிறார்கள். அவர்களின்பெயர் புராணங்களில் பல இடங்களில் பலவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அஜைகபதன், அஹிர்புத்னியன், வீரபத்ரன், கிரீசன், சங்கரன், அபராஜிதன், ஹரன், அங்காரகன், பிநாகன், பகன், சம்பு என்பன அவர்களின் வெவ்வேறு பெயர்களாம். இவர்கள் எல்லோரும் சிவனுடைய அம்சங்களாகின்றனர். ருத்திரன் என்பதன் பொருள் ரோதனம் உண்டுபண்ணுபவன், அழச்செய்பவன் என்பதாம். ராவணன் என்னும் சொல்லுக்கும் அதே பொருள். ஆனால் இவ் இருவர் உண்டுபண்ணும் அழுகையில் வரும் பயன் வெவ்வேறானவைகள். கொலை களவு செய்பவன் மக்களுக்கு நஷ்டத்தை உண்டுபண்ணி அழச் செய்கிறான். ராவணன் அங்ஙனம் உயிர்களுக்குக் கேடு உண்டுபண்ணி, மக்களை அழச் செய்கிறான். ரண வைத்தியனோ உடலை அறுத்து அழச் செய்கிறான் எனினும் அதனால் உயிர்கள் பிணி நீங்கப்பெறுகின்றன. ருத்திரன் மக்களை அழச்செய்வதன் மூலம் அவர்களைப் பண்படுத்தி மேலோராக மாற்றுகிறான். சங்கரன் என்றால் மங்களத்தைச் செய்பவன் என்று பொருள். ருத்திரர்களுள் நான் சங்கரனாக இருக்கிறேன் என்பதன் கருத்து துன்பத்தின் மூலம் மக்களைப் பண்படுத்துபவன் என்பதாம். இடையறாது ஈசன் இச் செயலைச் செய்துவருவது வெளிப்படை.

யக்ஷஸர்கள் ரக்ஷஸர்கள் ஆகிய இருவரும் தேவ கணத்தைச் சேர்ந்தவர்கள். விரைந்தோடிப் பொருள் தேடும் தன்மையுடையவர்கள் யக்ஷஸர்கள். பொருளைக் காக்கும் இயல்புடையவர்கள் ரக்ஷஸர்கள். இவ்விருதரத்தாரும் குபேரனுடைய சேனைகளாகின்றனர். செல்வம் யாரிடம் சேருகிறதோ அவன் குபேரனாகிறான். எங்கு உழைப்பும் சேமிப்பும் இருக்கின்றனவோ அங்குச் செல்வம்

பெருகுகிறது. செல்வம் ஐசுவரியம் அல்லது வல்லமையைத் தருகிறபடியால் அது ஈசுவர ஸம்பத்து எனப்படுகிறது.

வஸுக்கள் எட்டுப்பேர். நிலம், நீர், தீ, காற்று, வெளி, சந்திரன், சூரியன், நக்ஷத்திரம் ஆகிய இவை யெட்டும் ரூபகப்படுத்தி வஸுக்கள் என்று இயம்பப்படு கின்றன. அக்கினி வெவ்வேறு வடிவெடுத்து உயிர்களை ஓம்புவதால் வஸுக்களுள் நான் அக்கினிஎன்கிறார் பகவான்.

சிகரத்தையுடைய மலைகளுள் பொன் மலையாகிய மேருவானது சந்திர சூரியன் ஆகிய அனைத்துக்கும் நடு நாயகமானது. அத்யாத்மிகத்தில் பிரம்மதண்டம் அல்லது சுஷும்ணைநாடி ரூபகப்படுத்தி மேருமலை யெனப்படுகிறது. பொன்னின் ஒளியானது சைதன்யத்தோடு கூடிய சுஷும் ணைக்குத் தக்க சான்றாகிறது. தேவர்களெல்லாம் மேரு வைச் சார்ந்திருப்பது போன்று சரீரத்தில் இந்திரியங்கள், பிராணன் யாவும் சுஷும்ணை நாடியைச்சார்ந்திருக்கின்றன. ஆதலால் இயற்கையின் அமைப்பிலும் மானுட உடல் அமைப்பிலும் மேருமலை முக்கியமான இடம் பெற்றிருக் கிறது.

**पुरोधसां च मुख्यं मां विद्धि पार्थ बृहस्पतिम् ।**
**सेनानीनामहं स्कन्दः सरसामस्मि सागरः ॥ २४**

புரோதஸாம் ச முக்யம் மாம் வித்தி பார்த்த ப்ருஹஸ்பதிம் ।
ஸேனானீனாமஹம் ஸ்கந்த: ஸரஸாமஸ்மி ஸாகர: ॥ 24

पार्थ பார்த்த *குந்தி புத்திரா* मां மாம் *என்னை* पुरोधसां புரோ தஸாம் *புரோகிதர்களுள்* मुख्यं बृहस्पतिं முக்யம் ப்ருஹஸ்பதிம் *முக்கிய மானவரான பிரஹஸ்பதி* च ச *என்று* विद्धि வித்தி *அறிந்துகொள்* अहं அஹம் *நான்* सेनानीनां ஸேனானீனாம் *ஸேனாபதிகளுள்* स्कन्दः ஸ்கந்த: *ஸ்கந்தனாகவும்* सरसां ஸரஸாம் *நீர்நிலைகளுக்குள்* सागरः ஸாகர: *சமுத்திர மாகவும்* अस्मि அஸ்மி *இருக்கிறேன்.*

***பார்த்தா, புரோகிதர்களுள் முக்கியமான பிர ஹஸ்பதி நான் என்று அறிக. சேனைத்தலைவர்களுள்***

***நான் முருகக்கடவுள்; நீர் நிலைகளுள் நான் கடல்.*** **24**

நல்வழியில் நடப்பவர்கள் தேவர். அவர்களுக்குத் தலைவன் இந்திரன். இந்திரனுக்கே வழிகாட்டியாக பிரஹஸ்பதியிருப்பதால் அவர் புரோகிதர்களுள் முக்கியமானவராகிறார். வியாழபகவான் என்றும் அவரை இயம்புகிறோம். ஈசுவர விபூதியைச் சிறப்பாக அத்தகையவரிடத்துக் காண்பது எளிது. படை ஒன்றின் வெற்றியானது சேனாபதியின் வல்லமையைப் பொருத்ததாகும். தக்கசெயலைத் திறமையுடன் காலத்தில் செய்தலே வல்லமையாம். சிவனது குமாரர்களுள் கணபதி அறிவு சொரூபம்; சுப்ரமண்யர் அல்லது முருகக் கடவுள் ஆற்றலே வடிவெடுத்தவர். ஸ்கந்தன் என்னும் சொல் துள்ளிக் குதிப்பவன் எனப் பொருள்படுகிறது. அறிவும் ஆற்றலும் உடையவரே இறைவனை யடைவர். ஆற்றல் வடிவினன் ஆகிய கந்தன் என்று கிருஷ்ணன் தன்னைப்பகர்வது பொருந்தும். இயற்கையாக அமைந்த நீர் நிலைகளில் தெய்வப் பெற்றியுண்டு. அவைகளில் பெரியது கடல். அதில் மகிமை காண்பவர் கடவுள் சான்னித்தியத்தை உணர்கின்றனர்.

**महर्षीणां भृगुरहं गिरामस्म्येकमक्षरम् ।**
**यज्ञानां जपयज्ञोऽस्मि स्थावराणां हिमालयः ॥ २५**

மஹர்ஷீணாம் ப்ருகுரஹம் கிராமஸ்ம்யேகமக்ஷரம் ।
யக்ஞானாம் ஜபயக்ஞோ஽ஸ்மி ஸ்தாவராணாம் ஹிமாலய: ॥ 25

**अहं** அஹம் *நான்* **महर्षीणां** மஹர்ஷீணாம் *மஹரிஷிகளுக்குள்* **भृगुः** ப்ருகு: *பிருகு மஹரிஷியாகவும்* **गिरां** கிராம் *பதங்களுள்* **एकं अक्षरं** ஏகம் அக்ஷரம் *ஓரெழுத்தாகிய பிரணவமாக* **अस्मि** அஸ்மி *இருக்கிறேன்* **यज्ञानां** யக்ஞானாம் *யக்ஞங்களுள்* **जपयज्ञः** ஜபயக்ஞ: *ஜபயக்ஞமாக* **स्थावराणां** ஸ்தாவராணாம் *ஸ்தாவரங்களுள்* **हिमालयः** ஹிமாலய: *ஹிமாலயமாக* **अस्मि** அஸ்மி *இருக்கிறேன்.*

***மஹரிஷிகளுள் நான் பிருகு; வாக்குகளுள் ஓரெழுத்தாகிய பிரணவம் நான். யக்ஞங்களுள்***

*நான் ஜபயக்ஞம்; ஸ்தாவரங்களுள் நான் ஹிமாலயம்.* 25

பிரம்மாவின் மானஸ புத்திரர்களில் தவத்தில் சிறந்தவர் பிருகு. ஆதலால் அவரிடத்து ஈசுவர விபூதி ஓங்கப் பெற்றிருப்பது இயல்பு. எழுத்துக்கள் சேர்ந்து சொல் ஆகிறது. பிரணவம் என்னும் ஏகாக்ஷர பதத்துக்கு அர்த்தம் பிரம்மம். அது அனைத்தும் அடங்கப்பெற்றது. அந்த ஏகாக்ஷரத்தையே நாத பிரம்மம் என்கிறோம். ஆக, அதற்கு ஒப்பான சொல் இல்லை. எனவே, அது ஈசுவர சொரூபம். ஜீவன் தன்னைப் பரமாத்மாவுக்குக் கொடுத்து விடுகிற கர்மம் எதுவோ அது யக்ஞம். அத்தகைய யக்ஞங்கள் எல்லாவற்றிலும் மிக எளிதில் செய்யக்கூடியது ஈசுவர நாம ஜபமாகிய யக்ஞம். எல்லாரும் எப்பொழுது வேண்டுமானாலும் அதைச் செய்யலாம். மற்ற யக்ஞங்களி லெல்லாம் நன்மை, தீமை இரண்டும் ஓரளவில் கலந்திருக் கின்றன. ஜப யக்ஞத்திலோ கேடு எதற்கும் இடமில்லை. ஈசுவர எண்ணத்தில் ஜீவன் தன்னை இழந்து விடுதல் என்ற நன்மையானது நன்கு அமையப்பெறுகிறது. ஆக, யக்ஞங் களுள் ஈசன் தானே ஜபயக்ஞமாக இருப்பது மிகப் பொருத் தமானது. ஸ்தாவரம் என்பது நிலைத்திணை. பூமியில் முளைத்து, அவ்விடத்திலேயே உயிரோடிருப்பது எதுவோ அது ஸ்தாவரம். மலைக்கு உயிருண்டு என்பது அறிஞர் கொள்கை. ஆக, பூமியில் முளைத்து உயிரோடிருப்பவை களில் மிகப்பெரியது ஹிமாலயம் என்பது தேற்றம். ஹிமா லயத்தைக் காண்பது இறைவனைக் காண்பதற்கு ஒப்பாகும். மலையில் ஈசுவர மஹிமை காணவிரும்புபவர் ஹிமாலயம் காண்க.

**अश्वत्थः सर्ववृक्षाणां देवर्षीणां च नारदः ।**
**गन्धर्वाणां चित्ररथः सिद्धानां कपिलो मुनिः ॥ २६**

அச்வத்த: ஸர்வவ்ருக்ஷாணாம் தேவர்ஷீணாம் ச நாரத: ।
கந்தர்வாணாம் சித்ரரத: ஸித்தானாம் கபிலோ முனி: ॥ 26

सर्ववृक्षाणां ஸர்வவ்ருக்ஷாணும் *மரங்கள் எல்லாவற்* अश्वत्थः அச்வத்த: *அச்வத்தம்* देवर्षीणां च தேவர்ஷீணும் ச *தேவரிஷி களுக்குள்* नारदः நாரத: *நாரதர்* गन्धर्वाणां கந்தர்வாணும் *கந்தர்வர்களுள்* चित्ररथः சித்ரரத: *சித்ரரதர்* सिद्धानां ஸித்தாணும் *ஸித்தர்களுள்* कपिलः मुनिः கபில: முனி: *கபில முனிவராகவும் இருக்கிறேன்.*

***மரங்கள் எல்லாவற்றினுள் நான் அரசமரம்; தேவரிஷிகளுள் நான் நாரதர்; கந்தர்வர்களுள் சித்திரரதர்; சித்தர்களுள் நான் கபிலமுனி.*** **26**

*அரச மரம், அதன் இலை, காய், பூ முதலியன ஒன்றுக்கும் உதவா வெனினும், தொன்றுதொட்டு ஆத்ம சாதனங்கள் யாவும் அரச மரத்தோடு இணைக்கப்பட்டுள்ளன. அதைக் காணுந்தோறும் வேறு ஞாபகம் இல்லாது ஈசுவர சிந்தனையே தோன்றும். ஆதலால் பகவான் அம்மரத்தைத் தமது விசேஷ விபூதி என்கிறார்.*

*தேவர்கள் நரர்களிலும் மிக்கார். ஆனால் தேவர்கள் எல்லாரும் ரிஷிகள் ஆகார். அவர்களில் தத்துவ தர்சனம் அடையப் பெற்றவர்களே ரிஷிகள். தேவரிஷிகளுள் நாரதர் மிக முக்கியமானவர். ஏனென்றால் அவர் பக்தர் கூட்டத்தில் தலைசிறந்து விளங்குகிறார். மேலும் அவர் கிளப்பும் கலகங்களெல்லாம் இறுதியில் மங்களத்தையே உண்டு பண்ணவல்லவைகள். நோய் தோன்றி, உடலை நலப்படுத்துவதுபோன்று அவர் கலகங்களெல்லாம் நன்மை பயப்பனவாம்.*

*கந்தர்வர்கள் தேவகணத்தில் ஒரு பிரிவினர். சோம பானத்தைப் பாதுகாப்பது, அவர்களுடைய முக்கிய வேலை. வைத்தியத்தில் அவர்கள் வல்லவர்கள்; இசை ஞானத்தில் அலாதித் தேர்ச்சியுடையவர்கள். காமத்தில் அவர்கள் பெரிதும் ஈடுபட்டவர்கள். ஆதலால் விவாகத்துக்கு அவர்களுடைய துணை நாடப்படுகிறது. சூதாட்டத்தில் கந்தர்வர்கள் நிபுணர். சூதாடுபவர் அவர்களின் உதவியை நாடுகின்றனர். வேதம் அவர்களால் விளக்கப்பட்டது. ரிஷிக*

ளுக்கு ஆசாரியர்களாக இவர்கள் அமைவதுண்டு. இவர்களுக்கு அரசன் சித்ரரதன். ஆதலால் பகவான் தம்மைக் கந்தர்வர்களுள் சித்ரரதன் என்பது பொருத்தம்.

பிறவியிலேயே விசேஷமான தர்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம் ஆகியவைகளை யுடையவர்கள் சித்தர்கள் எனப்படுகின்றனர். மனன சீலத்தை யுடையவர் அல்லது ஜப யக்ஞத்தில் உறுதிபெற்றவர் முனி எனப்படுகின்றார். ஆறு தர்சனங்களில் ஒன்றாகிய சாங்கிய தர்சனத்தை விளக்கியவர் கபிலர். இவர் மஹா விஷ்ணுவின் அவதாரங்களில் ஒருவர் எனப்படுகிறார். நித்திய சித்தராய் இவர் இருப்பதால் பகவான் தம்மைச் சித்தர் கணத்தில் கபில முனி என்கிறார்.

**उच्चैःश्रवसमश्वानां विद्धि माममृतोद्भवम् ।**
**ऐरावतं गजेन्द्राणां नराणां च नराधिपम् ॥ २७**

உச்சை: ச்ரவஸமச்வாநாம் வித்தி மாமம்ருதோத்பவம் ।
ஐராவதம் கஜேந்த்ராணாம் நராணாம் ச நராதிபம் ॥ 27

अश्वानां அச்வாநாம் *குதிரைகளுக்கிடையில்* अमृत उद्भवं அம்ருத உத்பவம் *அமிர்தத்தோடு உண்டான* उच्चैःश्रवसं உச்சை:ச்ரவஸம் *உச்சைசிரவஸ் என்னும் குதிரை* गजेन्द्राणां கஜேந்த்ராணாம் *அரச யானைகளுக்குள்* ऐरावतं ஐராவதம் *ஐராவதம் என்கின்ற யானை* नराणां நராணாம் *நரர்களுக்குள்* नर अधिपं च நர அதிபம் ச *அரசனாகவும்* मां மாம் *என்னை* विद्धि வித்தி *அறிந்துகொள்.*

***குதிரைகளுள் அமிர்தத்துடன் உண்டான உச்சைசிரவஸ் என்றும், யானைகளுள் ஐராவதம் என்றும், மக்களுள் வேந்தன் என்றும் என்னை அறிக.*** ***27***

இன்பம் என்னும் அமிர்தத்துக்காக வாழ்க்கை என்னும் பாற்கடலை நல்லாரும் பொல்லாரும் கடைந்தார்கள். அமிர்தத்துடன் வாழ்க்கைக்கு இன்றியமையாத பல திரவியங்கள் உண்டாயின. அவைகளுள் இந்திரன் ஏற்றுக்

*கொண்ட உச்சைசிரவஸ் என்கிற அழகிய குதிரையும், ஐராவதம் என்கிற வெள்ளை யானையும் அடங்கப் பெறுகின்றன. இராவதியின் குழந்தை ஐராவதம் என்பது ஐதிகம்.*

*மக்களைக் காக்கவும் ஆளவும் வல்லவன் அரசன். பிறப்பு உரிமையினால் அரசனாக உபசரிக்கப்பட்டு, வெறுமனே சிம்மாசனத்து வீற்றிருப்பவன் அரசன் ஆகான். இறைமை யாரிடத்துஇருக்கிறதோ அவன் வேந்தன். ஆகையால்தான் ராஜா விஷ்ணுவினுடைய அம்சம் என்ற கொள்கை எழலாயிற்று. சிறந்த பரி, கரி, நரன் ஆகியவர்களிடத்துத் தெய்வப்பெற்றி பொலிவதைப் பகவான் இங்கு ஞாபகமூட்டுகிறார்.*

**आयुधानामहं वज्रं धेनूनामस्मि कामधुक् ।**
**प्रजनश्चास्मि कन्दर्पः सर्पाणामस्मि वासुकिः ॥ २८**

ஆயுதானாமஹம் வஜ்ரம் தேனூனாமஸ்மி காமதுக் ।
ப்ரஜனஸ்சாஸ்மி கந்தர்ப: ஸர்ப்பாணாமஸ்மி வாஸுகி: ॥ 28

आयुधानां ஆயுதானாம் *ஆயுதங்களுள்* अहं அஹம் *நான்* वज्रं வஜ்ரம் *வஜ்ராயுதம்* धेनूनां தேனூனாம் *பசுக்களுக்குள்* कामधुक् காமதுக் *காமதேனுவாக* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* प्रजनः ப்ரஜன: *பிரஜைகளைப் பிறப்பிக்கிற* कन्दर्पः च கந்தர்ப: ச *மன்மதனாகவும்* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* सर्पाणां ஸர்ப்பாணாம் *ஸர்ப்பங்களுள்* वासुकिः வாஸுகி: *வாஸுகியாக* अस्मि அஸ்மி *இருக்கிறேன்.*

***ஆயுதங்களில் நான் வஜ்ராயுதம்; பசுக்களுள் காமதேனு; பிறப்பிப்பவர்களிடத்து நான் மன்மதன்; பாம்புகளுள் நான் வாஸுகியாக இருக்கிறேன். 28***

*விஷ்ணுவினுடைய ஆயுதங்களாகிய கதை, சக்கரம் ஆகியவைகளை பகவான் இங்குக் குறிப்பிடவில்லை. ஏனென்றால் அவைகள் உண்டு பண்ணப்பட்டவைகளல்ல. ஈசுவர சொரூப லக்ஷணத்தில் அவைகள் நித்தியமாய், உருவகமாக அடங்கப் பெற்றவைகள். உண்டு பண்ணப்பட்ட ஆயுதங்*

களில் இந்திரன் கையாளும் வஜ்ராயுதம் தலைசிறந்தது. விருத்திராசுரனைக் கொல்லுதற்கென்றே இது ஆயத்தப் படுத்தப்பட்டது. ததீசி (दधीचि) என்ற முனிவரது எலும் பினின்று அது உண்டாக்கப்பட்டது. அந்த மஹரிஷியின் நைஷ்டிக பிரம்மசரியமும், தபோவலிவும், அவர் பெற்ற ஈசுவரப் பிரசாதமும் சேர்ந்து அவரது எலும்புக்கே அலாதி சக்தியை உண்டுபண்ணின. அசுரரை அடக்குதல் என்ற தேவ காரியத்துக்கு ஆயுதமாக அவரது எலும்பு வேண்டி யிருக்கிறது என்று விண்ணவர் விண்ணப்பித்தவுடனே, ததீசி மனமுவந்து தேகத்தியாகம் செய்தார். பிறகு அவரது எலும்பினின்று வஜ்ராயுதம் செய்யப்பட்டது. மனிதன் தூய வாழ்க்கை வாழ்ந்து, அதை உலக நன்மைக்காக ஒப் படைக்க வேண்டும் என்ற சிறந்த லட்சியத்தின் சின்னமாக வஜ்ராயுதம் அமைந்துள்ளது. மக்கள் இதை வாழ்க்கைக் குக் குறிக்கோளாக வைப்பது அவசியம்.

பாற்கடலில் அமிர்தம் கடைந்தபொழுது உண்டான திரவியங்களில் ஒன்று காமதேனு. வேண்டிய பொருள்களை யெல்லாம் வேண்டியவாறு அது வழங்க வல்லது. வசிஷ்ட மஹரிஷி ஆச்ரமத்தில் அது நிறைந்த செல்வத்தைக் கொடுத்துக்கொண்டிருந்தது. நல்ல மனதுடன் முறையாக உழைத்தலே காமதேனுவாகிறது என்று கீதை மூன்றாம் அத்தியாயம் பத்தாவது சுலோகத்தில் விளக்கப்பட்டது. நல்ல மனமும் பேருழைப்புமே ஈசுவர விபூதியாகின்றன.

பிரஜா விருத்தி சம்பந்தமான ஆசை மன்மதன் அல்லது கந்தர்ப்பன் என்று உருவகப்படுத்திய பெயர் பெறுகிறது. இந்த ஆசையின் வலிவால்தான் உயிர்கள் விரிவடைந்து வருகின்றன. ஜகத் சிருஷ்டிக்கே மூலகாரண மாயிருப்பது இந்த இச்சா சக்தியாம். கடவுள் காதல் சொரூபம் என்பது உண்மை.

சர்ப்பம் விஷமுடையது; ஒற்றைத் தலையோடு இருப் பது. எல்லாத் தெய்வங்களோடும் பாம்பு ஏதேனும் ஒரு

விதத்தில் இணைக்கப்பட்டுள்ளது. கடவுளின் சக்திக்கு இது ஒரு சின்னம். மனிதனிடத்துள்ள சக்தியும் குண்டலினி என்னும் சர்ப்ப வடிவெடுத்திருக்கிறது. சக்தியினின்று இன்ப துன்பம் இரண்டும் தோன்றுகின்றன. துன்பத்தைக் குறிப்பது விஷம். துன்பம் எல்லார்க்கும் பொதுவானது. ஆகையால் அது ஒற்றைத் தலை யுடையது. கடல் கடைதற்கு வாசுகி என்ற விஷப் பாம்பு பயன்பட்டது. சக்தியைப் பயன்படுத்தி சிரமப்பட்டால்தான் உயிர்வாழ முடியும். பிறகு, அவ் உயிர்வாழ்க்கையிலிருந்து மரணம் என்னும் விஷமும் வருகிறது. ஈசுவர சிருஷ்டியில் கேட்டுக்கும் இடமுண்டு. நலம், கேடு ஆகிய இரண்டும் கலந்தது உலகம்.

**अनन्तश्चास्मि नागानां वरुणो यादसामहम् ।**
**पितॄणामर्यमा चास्मि यमः संयमतामहम् ॥ २९**

அனந்தஸ்சாஸ்மி நாகாநும் வருணோ யாதஸாமஹம் ।
பித்ருணுமர்யமா சாஸ்மி யம: ஸம்யமதாமஹம் ॥ 29

नागानां நாகாநும் *நாகங்களுக்குள்* अनन्तः च அனந்த: ச *அனந்தனக* अस्मि அஸ்மி *நான் இருக்கிறேன்* यादसां யாதஸாம் *ஜலதேவதைகளுக்குள்* अहं அஹம் *நான்* वरुणः வருண: *வருணன்* पितॄणां பித்ருணும் *பித்ருக்களுக்கிடையில்* अर्यमा च அர்யமா ச *அரியமாவாகவும்* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* संयमतां ஸம்யமதாம் *அடக்கியாளுபவர்களுள்* अहं அஹம் *நான்* यमः யம: *யமன்*.

***நாகங்களுள் நான் அனந்தன்; ஜலதேவதைகளுள் வருணன்; பித்ருக்களுள் அரியமான்; அடக்கியாள்பவர்களுள் நான் யமன் ஆவேன். 29***

விஷமில்லாததும் பல தலைகளை யுடையதும் நாகம். அவைகளுள் நாக ராஜாவாயிருப்பது அனந்தன். அது மகா விஷ்ணுவுக்குச் சயனம். ஐந்து தலையோடிருப்பது, மாயா சக்தி முழுதும் பஞ்சபூத சொரூபம் என்பதை விளக்கும். ஐந்து தலை நாகம் ஹரிக்குச் சயனமாய் அமைந்திருப்பது போன்று அவர் தலைக்குமேல் குடையாகவும் அமைந்திருக்

கிறது. சிலந்திப்பூச்சி தன் உடலினின்று வந்த வலையிலேயே வசிப்பதுபோன்று, தன்னிடத்திருந்து உண்டான பிரகிருதியிலேயே பகவான் வீற்றிருக்கிறான் என்பதை சயனம் விளக்குகிறது. நாகமே குடையாயமைவது, வழிபாடு எப்பொழுதும் பிரகிருதிக்கு உட்பட்டது என்பதை விளக்குகிறது. பகவானுக்கு அனந்தன் சேஷம் ஆதலால் அதை அவருடைய விபூதி என்பது தகும்.

வேதங்களில் சிறப்பித்துச்சொல்லப்பட்டுள்ளதேவர்களில் ஒருவன் வருணன். அவனுக்கு விண்ணுலகம், மண்ணுலகம் இரண்டிலும் ஆதிக்கம் உண்டு. அறிவில் சிறந்தவன் அவன். நாளடைவில் அவன் ஜலதேவதைகளோடு இணைக்கப்பட்டு, அவர்களுக்கு அரசனாகிறான். சிந்துபதி அல்லது கடல் வேந்தன் என்ற பட்டமும் அவனுக்கு அளிக்கப்படுகிறது. மேற்குத் திசைக்குத் திக்பாலனாக அமைந்திருப்பவனும் வருணன். ஜலதேவதைகளுக்குள் அவனே அரசனாயிருப்பதால், அவன்பால் ஈசுவர விபூதி விளங்குதல் இயல்பு.

மரணத்தின் வாயிலாகப் பித்ரு லோகத்துக்குச் சென்ற முன்னோர்களுள் முதலானவன் அரியமான். ஆதலால் அவன் பித்ருக்களுக்கெல்லாம் தலைமை வகிக்கிறான். பித்ருக்களை வணங்குபவர்களெல்லாம் அவனையும் வணங்குவதுண்டு. ஆதலால் பித்ருக்களுள் தான் அரியமான் என்று கிருஷ்ணன் சொல்லுவது பொருத்தம்.

தன்னையடக்கி ஆளுதற்கு யமம் என்று பெயர். அடக்கம் அமையாதவிடத்து அது தண்டனையாகிறது. மனிதன் தன் வாழ்க்கையிலேயே இவ்வுண்மையைக் காணலாம். துக்கமாகத் தனக்கு வந்து அமையும் தண்டனைக்கெல்லாம் காரணம் தான் அடக்கம் பழகாமையேயாம். அஷ்டாங்க யோகத்தில் யமம் முதல் அங்கமாகிறது. ஏனென்றால் அடக்கமில்லாது யோகமில்லை.

மனிதர்களுள் யுதிஷ்டிரன் தர்மராஜா என்று அழைக்கப்படுகிறான். தேவர்களுள் யமன் தர்மராஜா

என்று அழைக்கப்படுகிறான். தர்மம் என்றாலும் யமனையே குறிக்கிறது. அவனது ஆட்சிச் செங்கோல் வளையாது நடை பெறுகிறது. யமபுரம் என்பது அவன் இருப்பிடம். மரணத்திற்குப் பிறகு ஜீவன் அவனுடைய முன்னிலைக்குப் போகிறது. அங்கு சித்திரகுப்தன் என்பவன் அந்த ஜீவனுடைய பாப புண்ணியங்களின் கணக்கை வாசிக்கிறான். அவனது கணக்குப் புஸ்தகத்திற்கு அக்ரசந்தானம் என்று பெயர். பிறகு, வினைக்கேற்ற தீர்ப்பை யமன் சொல்லுகிறான். அதன்படி சுவர்க்கம், நரகம் முதலியன வந்தமைகின்றன. யமன் தென் திசைக்கு இறைவன். தர்மம் இம்மியளவும் பிசகாது நடைபெறுவதால், அடக்கியாள்பவர்களில் தான் யமன் என்று பகவான் சொல்லுவது பொருத்தமானது.

**प्रह्लादश्चास्मि दैत्यानां कालः कलयतामहम् ।**
**मृगाणां च मृगेन्द्रोऽहं वैनतेयश्च पक्षिणाम् ॥ ३०**

ப்ரஹ்லாதஸ்சாஸ்மி தைத்யாநாம் கால: கலயதாமஹம் ।
ம்ருகாணாம் ச ம்ருகேந்த்ரோऽஹம் வைனதேயஸ்ச பக்ஷிணாம் ॥

दैत्यानां च தைத்யாநாம் ச *தைத்தியர்களுக்குள்* प्रह्लादः ப்ரஹ்லாத: *பிரஹ்லாதனாக* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* कलयतां கலயதாம் *கணக்கிடுபவர்களுள்* अहं அஹம் *நான்* कालः கால: *காலனாக இருக்கிறேன்* मृगाणां ம்ருகாணாம் *மிருகங்களுக்குள்* अहं அஹம் *நான்* मृगेन्द्रः च ம்ருகேந்த்ர: ச *மிருகேந்திரனாகவும்* पक्षिणां பக்ஷிணாம் *பக்ஷிகளுக்குள்* वैनतेयः च வைனதேய: ச *விநதாவின் புத்திரனாகிய கருடனாகவும் (இருக்கிறேன்.)*

***தைத்தியர்களுள் நான் பிரஹ்லாதன், கணிப்பவர்களுள் காலன், விலங்குகளுள் சிம்மம், பறவைகளுள் கருடன் ஆகவும் நான் இருக்கிறேன். 30***

திதி என்பவள் தக்ஷப்பிரஜாபதியின் புதல்வி. காச்யபருக்கு அவள் மனைவியானாள். அவளுடைய மக்களுக்குத் தைத்தியர்கள் என்று பெயர். அவர்கள் அனைவரும் தேவர்

களுக்குப் பகைவர்கள். அவர்களுள் ஹிரண்யகசிபுவின் மகன் பிரஹ்லாதன். அவனது பக்தி உலகுக்கோர் எடுத்துக் காட்டாகும். கீழ் மக்கள் கூட்டத்திலும் மேலோர் தோன்றுவதுண்டு. அத்தகைய மேலோனாகிய பிரஹ்லாதனைத் தம் சொரூபம் என்கிறார் பகவான். அண்டங்களும் அவைகளில் உள்ள அனைத்தும் தோன்றி, நிலைத்திருந்து, மறைவதைக் காலம் முறையாக அளந்துகொண்டே இருக்கிறது. ஆதலால் எண்ணிக்கை எடுப்பவர்களில் காலம் முதன்மை பெறுகிறது. அத்தகைய காலமாய் இருப்பது தாமே என்று பகவான் பகர்கிறார். விலங்குகளுள் வேந்தனாயிருப்பது சிம்மம். அது அம்பிகைக்கு வாஹனம். ஈசுவர விபூதிக்கு அது இருப்பிடமாவது வெளிப்படை. விஷ்ணுவின் வாஹனமாகிய கருடன் விஷ்ணுவை ஞாபகமூட்டுவதால், பறவைகளுள் அது சிறப்பித்துச் சொல்லப்படுகிறது. ஈசுவர சொரூபத்தை ஞாபகமூட்டுபவைகளெல்லாம் ஈசுவர விபூதி அமையப்பெற்றுள்ளன.

पवनः पवतामस्मि रामः शस्त्रभृतामहम् ।
झषाणां मकरश्चास्मि स्रोतसामस्मि जाह्नवी ॥ ३१

பவன: பவதாமஸ்மி ராம: சஸ்த்ரப்ருதாமஹம் ।
ஜஷாணாம் மகரஸ்சாஸ்மி ஸ்ரோதஸாமஸ்மி ஜாஹ்னவீ ॥ 31

पवतां பவதாம் *தூய்மைப்படுத்துபவைகளுள்* पवनः பவன: *காற்றாக* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* शस्त्र भृतां சஸ்த்ர ப்ருதாம் *ஆயுதம் தரித்தவர்களுள்* अहं அஹம் *நான்* रामः ராம: *தசரத ராமன்* झषाणां ஜஷாணாம் *மீன்களுள்* मकरः च மகர: ச *மகர மீனாகவும்* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* स्रोतसां ஸ்ரோதஸாம் *நதிகளுள்* जाह्नवी ஜாஹ்னவீ *கங்கையாக* अस्मि அஸ்மி *இருக்கிறேன்.*

***தூய்மைப் படுத்துபவைகளுள் காற்றாகவும், ஆயுதம் பிடித்தவர்களுள் ராமனாகவும், மீன்களுள் மகரமாகவும், நதிகளுள் கங்கையாகவும் நான் இருக்கிறேன். 31***

நிலம், நீர், தீ, காற்று ஆகிய நான்கும் தூய்மைப் படுத்தும் தன்மையுடையவைகள். அவைகளுள் காற்று எங்கும் நிறைந்திருந்து, எப்பொழுதும் பொருள்களைத் தூய்மைப்படுத்திக்கொண்டு வருகிறது. நிலம், நீர், தீ ஆகிய வைகளையும் தூய்மைப்படுத்த வல்லது காற்றே. அது தீயை எரியும்படிச் செய்கிறது. நீரை ஆவியாக மாற்றி, மழைநீராகப்பண்ணுகிறது. பூமி, பிணம் முதலியவை களில் உள்ள துர்நாற்றத்தை அது அகற்றுகிறது. ஆகை யால் காற்றைப் பகவானோடு ஒப்பிடுவது பொருந்தும்.

ஆயுதம் பிடித்தவனுக்கு ஆற்றல் அதிகம். அதை முறையோடு கையாளுபவன் மேலோன். ஸ்ரீ ராமன் எங்கும் சஸ்திரத்தைச் சரியாகவே கையாண்டான். அவன் ஆயுதத்தை ஓரிடத்திலாவது துர்ப்பிரயோகம் பண்ணியது கிடையாது. தர்மத்தை ஸ்தாபனம் பண்ணுதற்கே அது கையாளப்பட்டது. நல்வழியில் ஆயுதப் பிரயோகம் பண்ணுதலிலும் பராக்கிரமம் வேண்டும். பராக்கிரமத்தில் ராமனுக்கு ஒப்பான ஒரு வீரனைக் காண்பது அரிது. அவனது வில்லும் அம்பும் கெட்டவர்க்குத் துன்பத்தைக் கொடுத்து, நல்லார்க்கு இன்பத்தை வளர்த்தன. ஆகை யால் படை பிடித்தவர்களுள், தான் ராமன் என்று கிருஷ் ணன் சொல்லுகிறான்.

நீரில் வாழ்பவைகளுள் மகரம் வலிவு மிகப் படைத் தது. சுறு என்பது அதற்கு மற்றொரு பெயர். ஆற்றல் மிகுதியால் அது இறைவனோடு ஒப்பிடப்படுகிறது.

கங்கைக்கு ஜாஹ்னவீ என்பது ஒரு பெயர். ஜன்னு மஹரிஷியின் புத்திரி என்று அது பொருள்படுகிறது. பகீர தனது வேண்டுதலுக்கு இரங்கி, ஆகாச கங்கை பூலோக கங்கையாகவந்தது. தவத்தில் இருந்தபொழுது தம்மீது நதிமோதுவதைக்கண்டு கோபித்து, ஜன்னு முனிவர் அதை எடுத்து விழுங்கிவிட்டார். பிறகு, பகீரதனது வேண்டு தலுக்கு இணங்கித் தம் காதுவழியாகக் கங்கையை வெளி

யில் விட்டார். ஆகையால் அந்நதிக்கு ஜாஹ்னவீ என்ற பெயர் வந்தது. நதிகளுள் இது புனிதமே வடிவெடுத்தது. இது முற்றிலும் பிரம்ம சொரூபம் என்பது ஆன்றோர் கொள்கை.

सर्गाणामादिरन्तश्च मध्यं चैवाहमर्जुन ।
अध्यात्मविद्या विद्यानां वादः प्रवदतामहम् ॥ ३२

ஸர்காணுமாதிரந்தஸ்ச மத்யம் சைவாஹமர்ஜுன ।
அத்யாத்மவித்யா வித்யாநாம் வாத: ப்ரவததாமஹம் ॥ 32

अर्जुन அர்ஜுன *ஓ அர்ஜுன* सर्गाणां ஸர்காணும் *சிருஷ்டிப் பொருள்களுக்கு* आदिः ஆதி: *துவக்கமும்* अन्तः च அந்த: ச *முடிவும்* मध्यं च மத்யம் ச *இடையும்* अहं एव அஹம் ஏவ *நானே* विद्यानां வித்யாநாம் *வித்தைகளுக்குள்* अध्यात्म विद्या அத்யாத்ம வித்யா *ஆத்ம வித்தை* प्रवदतां ப்ரவததாம் *தர்க்கிப்பவர்களுடைய* वादः வாத: *வாதமாக* अहं அஹம் *நான் (இருக்கிறேன்).*

***அர்ஜுன, சிருஷ்டிப் பொருள்களுக்கு நான் ஆதி, நடு, அந்தமாகிறேன். வித்தைகளுள் நான் ஆத்ம வித்தை. தர்க்கிப்பவர்கள்பால் நான் வாதமாகிறேன். 32***

இந்த அத்தியாயம் 20-வது சுலோகத்தில் சொல்லியபடி இறைவன் உயிர்களுக்குத் தோற்றம், இருப்பு, ஒடுக்கமாவது போன்று, பஞ்ச பூதங்களுக்கும் பிறப்பிடம், இருப்பிடம், ஒடுங்குமிடமாகிறான். ஆபரணத்தை யுண்டுபண்ணும் போதும், அது ஆபரணமாக நிலைத்திருக்கும் போதும், அதை அழிக்கும்போதும் அது பொன்னேயாம். அங்ஙனம் உலகமாகப் பரிணமிக்கும்போதும் மூல வஸ்துவாகிய பரம்பொருள் அத்தனைக்கும் ஆதாரமாயிருக்கிறது. ஆத்ம வித்தை என்பது பிரம்ம வித்தை. பிரம்மத்தை யறிந்தால் அக்ஞானம் அறவே அகலுகிறது; பிறவிப் பிணி போகிறது. ஆக, அவனே ஆத்ம வித்தையா யிருக்கிறான். வாதிப்பது அல்லது முறையாகப் பேசுவது உண்மையை அறிதற்கு உற்ற உபாயமாகிறது. வாதம், ஜல்பம், விதண்டை என்று

அது மூவகைப்படுகிறது. விருப்பு, வெறுப்பு இன்றி உண்மையை அறியவேண்டும் என்ற ஓர் எண்ணத்துடன் முறையாகப் பேசுவது வாதம். இதில் வெற்றி தோல்வியைப் பற்றிக் கேள்வியில்லை. உண்மையை அறியவேண்டும் என்பதே இதன் நோக்கமாகும். ஒவ்வொருவனும் தன் கொள்கையையே நிலைநாட்டப் பார்ப்பது ஜல்பம். சாஸ்திரப் பிரமாணம், யுக்தி இவைகளைக் கையாண்டு, எதிரியை வாயடக்குவது இதன் நோக்கம். விதண்டத்தில் தன் கொள்கையை ஸ்தாபிப்பதுமில்லை, எதிரியின் கொள்கையை ஏற்றுக்கொள்ளுதலுமில்லை. எதிரியையும் அவனது கொள்கையையும் ஏளனம் பண்ணுவதே அதன் நோக்கமாகும். உண்மையாராய்ச்சிக்கு வாதம் ஒன்றே துணை புரிவதால் தர்க்கத்தில் தாம் வாதமாக இருப்பதாக பகவான் பகர்கிறார்.

மூலமாகிய ஒன்றைத் தெரிந்துகொள்; பிறகு உனக்கு எல்லாம் தெரியவரும். ஒன்று என்ற இலக்கத்தின் பின் பூஜ்யங்களைச் சேர்த்தால், அது நூறாகவும் ஆயிரமாகவும் ஆகின்றது. ஆனால் அந்த ஒன்று என்னும் இலக்கத்தை அழித்துவிட்டால் மிகுந்திருப்பனவற்றுக்கு மதிப்பு இல்லை. ஒன்றினால்தான் பலவற்றுக்கு யோக்கியதை யுண்டாகிறது. முதலில் ஒன்று; பின்னர் பல. முதலில் ஈசுவரன், பின்னர் ஜீவனும் உலகமும்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஒன்றை அறிவது ஆத்மவித்தை அல்லதுபரவித்தை. பூஜ்யங்களை அறிவது அபர வித்தை.

**अक्षराणामकारोऽस्मि द्वन्द्वः सामासिकस्य च ।**
**अहमेवाक्षयः कालः धाताहं विश्वतोमुखः ॥ ३३**

அக்ஷராணுமகாரோऽஸ்மி த்வந்த்வ: ஸாமாஸிகஸ்ய ச ।
அஹமேவாக்ஷய: கால: தாதாஹம் விச்வதோமுக: ‖ 33

अक्षराणां அக்ஷராணும் *அக்ஷரங்களுள்* अकारः அகார: *அகாரமாக* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* सामासिकस्य ஸாமாஸிகஸ்ய *ஸமாஸங்களுள் அதாவது கூட்டுச் சொற்களுள்* द्वन्द्वः च த்வந்த்வ: ச *த்வந்த்வ ஸமாஸமாகவும்* अहं एव அஹம் ஏவ *நானே* अक्षयः कालः அக்ஷய: கால: *முடி*

*வில்லாத காலமாக இருக்கிறேன்* அஹ்ம் அஹம் *நான்* விஶ்வதோமுக: விச்வதோமுக: *எங்கும் முகமுள்ளவனாகிய* धाता தாதா *கர்மபலனை வகுத்தளிப்பவனாகிறேன்.*

***எழுத்துக்களுள் நான் அகரம்; கூட்டுச்சொற்களுள் இரு சொற்கூட்டு. ஓயாத காலம் நானே. எங்கும் பரந்திருந்து, வினைப் பயனை வழங்குபவன் நானே.*** **33**

நாத பிரம்மமே அகரமாகத் துவங்குகிறது. பிறகு அது வெவ்வேறு விதங்களாகப் பரிணமித்து மற்ற எழுத்துக்களாகின்றது. " அகர முதல வெழுத்தெல்லாம் " என்பது வள்ளுவர் வாக்கு.

சமஸ்கிருதச் சொற்கள் கூட்டுச்சொற்களாக அமைதற்குச் சிலமுறைகள் இருக்கின்றன. அவைகளுள் இரண்டு சொற்கள்சேர்ந்து கூட்டுச்சொல் ஆனபிறகு இரண்டும் சம அந்தஸ்து வகிப்பது எதுவோ, அது துவந்துவ ஸமாஸம் அல்லது இருசொற் கூட்டு. ராமன் + கிருஷ்ணன் = ராம கிருஷ்ணன் என்பது இதற்கு உதாரணம்.

ஒரு க்ஷணம், ஒரு மணி, ஒருநாள், ஒருகற்பம் என்று பார்க்குமிடத்து, காலத்துக்கு உற்பத்தியும் நாசமும் உண்டு. ஆனால் அதற்கு முன்னும்பின்னும் அதை அளந்துகொண்டு போனால், காலம் அகண்டாகாரத்தில் விரிந்தோடும். ஆக, அது அழிவற்றதாகிறது. ஆகையால் சர்வேசுவரனே மகா காலன் எனப்படுகிறான்.

அவன் ஒருவனே பல்கோடி உருவங்களாகப் பரிணமித்து, ஒவ்வொரு வடிவத்தின் மூலம் ஒருவிதக் கர்ம பலனை அனுபவித்து வருகிறான். அவன் எங்கும் நிறைந்திருந்து, எண்ணரிய முகங்களை உடைத்திருந்து, வினைப் பயனை வழங்கிவருதல் இயற்கையில் நாம் யாண்டும் காணும் காட்சியாகும்.

**मृत्युः सर्वहरश्चाहं उद्भवश्च भविष्यताम् ।**
**कीर्तिः श्रीर्वाक्च नारीणां स्मृतिर्मेधा धृतिः क्षमा ॥ ३४**

ம்ருத்யு: ஸர்வஹரஸ்சாஹம் உத்பவஸ்ச பவிஷ்யதாம் ।
கீர்த்தி: ஸ்ரீர்வாக்ச நாரீணும் ஸ்ம்ருதிர்மேதா த்ருதி: க்ஷமா ॥ 34

अहं அஹம் *நான்* सर्वहर: ஸர்வஹர: *எல்லாவற்றையும் கறக்கின்ற* मृत्यु: च ம்ருத்யு: ச *மரணமாயும்* भविष्यतां பவிஷ்யதாம் *செல்வர்களுடைய* उद्भव: च உத்பவ: ச *வளர் செல்வமாகவும்* नारीणां நாரீணும் *பெண்மைகளுள்* कीर्ति: கீர்த்தி: *புகழ்* श्री: ச்ரீ: *ஆக்கம் (திரு)* वाक् வாக் *சொல்* स्मृति: ஸ்ம்ருதி: *நினைவு* मेधा மேதா *அறிவு* धृति: த்ருதி: *துணிவு* क्षमा க்ஷமா *பொறை.*

***அனைத்தையும் அழிக்கும் மரணம் நான். செல்வர்களின் வளர் செல்வம் நான். பெண்மைகளுள் நான் புகழ், திரு, சொல், நினைவு, அறிவு, திண்மை, பொறையாக இருக்கிறேன். 34***

*தோன்றிய யாவும் அழிவது திண்ணம். அவைகளைத் தோற்றுவிப்பது போன்று, ஈசன் சம்ஹாரமும் செய்கிறுன். ஆகையால் அவன் அனைத்தையும் துடைக்கும் தெய்வமாகிறுன். பிறப்பையும் இறப்பையும் ஒன்ருகக் கருதுபவர் அவனை அறிய வல்லவர் ஆவர். திருமகள் இருக்குமிடத்தில் செல்வம் வளர்கிறது. திருமகளும் திருமாலும் ஒன்றே. ஆக, எங்குச் செல்வமோ, ஆங்கு அவனே இருக்கிறுன். அம்பிகையின் பிரபையில் மற்றும் சில அம்சங்கள் ஈண்டு இயம்பப்பெறுகின்றன. நல்வாழ்க்கை நிலைத்திருக்குமிடத்து கீர்த்தி தானே வந்தமைகிறது. வடிவம் பொருத்தமாக அமைந்தால், அது அழகு எனப்படுகிறது. ஓசையில் அழகு பொலிந்தால் அது இசை எனப்படுகிறது. அசைதலில் பொலியும் அழகுக்கு நாட்டியம் என்ற பெயர் வருகிறது. கடவுளே அழகன். ஆக, எதன்கண் திருவானது திகழ்கிறதோ அது தெய்வம். உள்ளத்தில் உள்ள கருத்து சொல்லாகப் பரிணமிக்கிறது. சொல்லில் முறைமையும் மகிமையும் இருக்குமாகில் அது ஈசுவர விபூதியே. சக்தி சொல்வன்மையாகப் பரிணமிக்கும் போது அவள் வாணி என்ற பெயர் பெறுகிருள். முன்பு*

ஞாபகத்துக்குக் கொண்டுவருவது நினைவு அல்லது ஸ்மிருதி எனப்படுகிறது. நினைவு நெடிது தெளிந்திருப்பது சக்தியின் பிரபாவமாகும். சாஸ்திரங்களின் உட்கருத்தை உள்ளபடி உள்ளுதல் மேதை அல்லது அறிவு என்று பெயர் பெறுகிறது. உடலும் இந்திரியங்களும் துன்பங்களுக்கிடையிலும் தடுமாற்றமடையாமல் இருக்குமாகில் அது திருதி அல்லது திண்மையாகிறது. உண்ணும்பொழுது அல்லது பேசும்பொழுது பல்லானது தவறி உதட்டைக்கடித்துவிடுமாகில் அதற்காக யாரும் பல்லை நொந்து கொள்ளுவதில்லை. அங்கு மனிதன் பொறையே வடிவெடுத்தவனாகிறான். ஒவ்வொருவனும் தான் செய்த குற்றத்தைத் தானே மன்னித்துக்கொள்ளுகிறான். அங்ஙனம் பிறர் செய்த குற்றத்தையும் கேட்டையும் பொறுத்துக்கொள்ளுதலே க்ஷமை அல்லது பொறையாகிறது. இம்மேலாம் தன்மைகளே சிறந்த பெண்மைகளாகின்றன.

மாயைதான் பிரம்மத்தைத் தோற்றுவிக்கின்றது. மாயையில்லாவிட்டால் பிரம்மத்தை யாரால் அறிந்துகொள்ள முடியும்? ஈசுவரனுடைய சக்தியை அறிந்துகொள்ளாமல் போனால் அவனை அறியவே முடியாது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**बृहत्साम तथा साम्नां गायत्री छन्दसामहम् ।**
**मासानां मार्गशीर्षोऽहं ऋतूनां कुसुमाकरः ।। ३५**

ப்ருஹத்ஸாம ததா ஸாம்னும் காயத்ரீ சந்தஸாமஹம் ।
மாஸானும் மார்கசீர்ஷோऽஹம் ருதூனும் குஸுமாகர: ॥ 35

अहं அஹம் *நான்* तथा ததா *அப்படியே* साम्नां ஸாம்னும் *ஸாமங்களில்* बृहत्साम ப்ருஹத்ஸாம *பிருஹத்ஸாமமும்* छन्दसां சந்தஸாம் *சந்தஸ்களில்* गायत्री காயத்ரீ *காயத்திரியாகவும்* अहं அஹம் *நான்* मासानां மாஸானும் *மாஸங்களுள்* मार्गशीर्षः மார்கசீர்ஷ: *மார்கழி மாஸமும்* ऋतूनां ருதூனும் *ருதுக்களுள்* कुसुम आकरः குஸும ஆகர: *புஷ்பங்களையுண்டுபண்ணும் காலமாக -வஸந்த காலமாக-* (இருக்கிறேன்).

**மேலும் நான் ஸாம கானங்களில் பிருஹத் ஸாமம்; சந்தங்களில் காயத்திரீ; மாஸங்களில் மார் கழி. பருவங்களில் வஸந்த காலம் நான். 35**

இசை நிறைந்தது ஸாம வேதம். சங்கரனும் நாரா யணனும் ஸாம கானப் பிரியர்கள். ஸாமகானம் செய்து சிவனை இராவணன் மகிழ்வித்தான். அத்தகைய ஸாம வேதத்தில் பிருஹத் ஸாமம் என்பது மிகச் சிறந்தது. இசை யும் நுண்பொருளும் சேர்ந்து அதை அங்ஙனம் பெரியு தாக்கின. சந்தம் என்பது செய்யுள் அமைப்பு அல்லது யாப்பிலக்கணம். வேதத்தில் அமைந்துள்ள பலவிதமான செய்யுள் வண்ணங்களில் காயத்திரீ என்பது மிக முக்கிய மானது. பல தெய்வங்களைப்பற்றிய புகழும், வணக்கமும், வேண்டுதலும் காயத்திரீ சந்த வடிவமாக அமைந்திருக்கின் றன. ருத்திர காயத்திரீ, தேவி காயத்திரீ, சூரிய காயத்திரீ, பரமஹம்ஸ காயத்திரீ இவை போன்றவைகளை மாதிரியாக எடுத்துக் கொள்ளலாம். செய்யுள் அமைப்பையும் கருத்து விசேஷத்தையும் முன்னிட்டுத் தாம் சந்தங்களுள் காயத் திரீ என்கின்றார் பகவான். பெரும்பான்மையோர் ஜபித்தும் தியானித்தும் வரும் சூரிய காயத்திரியை ஆராய்வோம்.

ॐ तत् सवितुर्वरेण्यं
भर्गो देवस्य धीमहि ।
धियो यो नः प्रचोदयात् ॥

यः ய: *யார்* नः ந: *நம்முடைய* धियः திய: *அறிவை* प्रचोदयात् ப்ரசோதயாத் *தூண்டுகிறாரோ* तत् தத் *அந்த* देवस्य தேவஸ்ய *சுடரு டைய* सवितुः ஸவிது: *கடவுளின்* वरेण्यं வரேண்யம் *மேலான* भर्गः பர்க: *ஒளியை* धीमहि தீமஹி *தியானிப்போமாக.*

யார் நம் அறிவைத் தூண்டுகிறாரோ அந்தச் சுடர்க் கடவுளின் மேலான ஒளியைத் தியானிப்போமாக.

நம் நாடெங்கும் நாள்தோறும் பல்லாயிரக் கணக் கான மக்கள் இக்காயத்திரியை ஓதவும், ஜபம் செய்யவும், தியானிக்கவும் செய்கின்றனர்.

மார்கழி மாதத்தில் ஒரு மகிமையுண்டு. சூரியோதயத்துக்குச் சற்று முன்புள்ள நேரம் பிரம்ம முகூர்த்தம் எனப்படுகிறது. ஆத்ம சாதனத்துக்கு அது சிறந்த வேளையாகும். மனிதர்களுடைய ஒரு வருஷம் தேவர்களுக்கு ஒரு நாள் ஆகிறது. தை மாதமாகிய உத்தராயண புண்ணிய காலம் அவர்களுக்கு சூரியோதயம். அதிலிருந்து உத்தராயணம் ஆறு மாதம் அவர்களுக்குப் பகல். ஆடியிலிருந்து மார்கழி வரையில் தக்ஷிணாயணம் அவர்களுக்கு இரவு. அதில் மார்கழி மாதம் விடியற்காலம் தேவர்களது நாளில் பிரம்ம முகூர்த்தமாகிறது. அப்பொழுது செய்யும் தேவாராதனை, வந்தனை வழிபாடு முதலியன மனதை நன்கு பண்படுத்த வல்லவைகளாம். இங்ஙனம் மார்கழி மாதம் புலனடக்கம், கடவுள் வழிபாடு ஆகியவைகளோடு முழுதும் இணைக்கப்பட்டிருக்கிறபடியால், மாதங்களுள் தாம் மார்கழி மாதம் என்கிறார் பகவான்.

ஹேம ருது அல்லது பனி காலத்தில் மரங்களெல்லாம் பட்டுப்போய் விடுகின்றன. வசந்த ருதுவில் அவைகள் திரும்பவும் தளிர்த்துப் புத்துயிர் பெறுகின்றன. அசேதனம் போன்று இருக்கும் ஸ்தாவரம், ஜங்கமம் ஆகியவைகள் வசந்த ருதுவில் சேதனம் பெறுகின்றன. அந்த இளவேனிற்காலம் மனிதனிடத்தும் புதியதொரு சக்தியையும் ஊக்கத்தையும் உண்டுபண்ணுகிறது. ஆதலால் இறைவன் தம்மைப் பருவங்களில் இளவேனிற் பருவம் (வஸந்த காலம்) என்கிறார்.

द्यूतं छलयतामस्मि तेजस्तेजस्विनामहम् ।
जयोऽस्मि व्यवसायोऽस्मि सत्त्वं सत्त्ववतामहम् ॥ ३६

த்யூதம் சலயதாமஸ்மி தேஜஸ்தேஜஸ்விநாமஹம் ।
ஜயோऽஸ்மி வ்யவஸாயோऽஸ்மி ஸத்வம் ஸத்வவதாமஹம் ॥

अहं அஹம் *நான்* छलयतां சலயதாம் *வஞ்சகர்களுடைய* द्यूतं த்யூதம் *சூதாட்டமாகவும்* तेजस्विनां தேஜஸ்விநாம் *தேஜஸ்விகளுடைய*

तेज: தேஜ: *தேஜஸாகவும்* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* अहं அஹம் *நான்* जय: ஜய: *வெற்றியாக* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* व्यवसाय: வ்யவஸாய: *முயற்சியாகவும்* सत्त्ववतां ஸத்வவதாம் *சாத்விகர்களுடைய* सत्त्वं ஸத்வம் *சத்துவ குணமாகவும்* अस्मि அஸ்மி *இருக்கிறேன்.*

***வஞ்சகர்களுடைய சூதாட்டம் நான்; தேஜஸ் விகளுடைய தேஜஸ் நான். வெற்றியாகவும், முயற்சியாகவும், சாத்விகர்களுடைய சத்துவகுணமாகவும் நான் இருக்கிறேன். 36***

ஏமாற்றுவது யாருக்கும் பொருந்தாத காரியம். திருடுவது, பொய்ப் பத்திரம் தயாரிப்பது, விலையை மிகை பட உயர்த்தி விற்பது, போலிப் பொருள்களை நல்ல பொருள்களென்று சொல்லி விற்பது இவை யாவும் வஞ்சகமாகும். சூதாட்டத்தை அத்தகைய ஏமாற்றங்களோடு சேர்க்கலாம். ஆனால் ஒவ்வொரு அரசாங்கமும் சில சூதாட்டங்களைச் சட்ட பூர்வமாக அங்கீகரிக்கிறது. குதிரைச் சவாரியின் மீது பந்தயம் கூறுவது சிலர்க்கு உடன்பாடு. சூதாட்டமாக சீட்டாடுவது மற்றொரு சாரார்க்கு சம்மதமானது. பாண்டவர், கௌரவர்க்குப் பகடைகள் மூலம் சூதாடுவது சட்ட பூர்வமானது எனத் தோன்றிற்று. வெளிப்படையாக மற்ற வஞ்சகங்களைச் செய்ய முடியாது. சூதாடுவது ஒன்று மட்டும் பெரிய சபை நடுவே வெளிப்படையாகச் செய்யப் படுகிறது. அதனால் வரும் லாப நஷ்டங்களுக்கும், சுக துக்கங்களுக்கும் மக்கள் கட்டுப்பட்டவர்கள் ஆகிறார்கள். வஞ்சகச் செயல்கள் யாவுமே கேடுடையவைகள். அவைகளுள் சூதாட்டம் ஒன்று மட்டும் ஓரளவு விதிக்கு உட்பட்டதாயிருக்கிறது. அதற்கு அறிவுத் திறமை வேண்டும். அறிவு தெய்வத்திடமிருந்து வருகிறது. பொய்ப்பத்திரம் தயாரிப்பவர்களுக்கு தீப வெளிச்சம் பயன்படுவதுபோன்று சூதாடுபவர்களுடைய அறிவுத் திறனும் தெய்வத்திடமிருந்தே வருகிறது. ஆதலால் வஞ்சகர்களுள் தாம் சூதாட்டமாக இருப்பதாக பகவான் சொல்லுகிறார். அதனால்

சூதாட்டம் ஆதரிக்கப்படுகிறது என்று பொருள் படுத்தலாகாது.

தேஜஸ் என்பது ஒளி என்று பொருள்படுகிறது. ஆரோக்கியம், இந்திரிய நிக்கிரகம், பிரம்மசரியம் முதலியவைகளினின்று உண்டாகும் அழகும், மனத் தெளிவும், செயலாற்றும் வன்மையும் சேர்ந்து தேஜஸ் ஆகின்றன. கீழ்மையை அகற்றி, மேன்மையை நிலைநாட்டுதல் வெற்றியாகும். அது அரசர்கள், ஆசாரிய புருஷர்கள், மதஸ்தாபகர்கள் ஆகிய இவர்களுடைய செயலாம். பண்பும் பயனுமுடைய தொழிலைத் தளராமனதுடன் புரிதல் வியவசாயமாகும். முயற்சி திருவினையாக்கும். முயற்சியே மனிதனை ஈசுவர முன்னிலைக்கு எடுத்துச் செல்ல வல்லது. மூன்று குணங்களும் பிரகிருதி சொரூபம் எனினும், அவைகளுள் சத்வகுணம் சாதகனை இறைவனது சன்னிதிக்கு அழைத்துச்செல்ல வல்லது.

**वृष्णीनां वासुदेवोऽस्मि पाण्डवानां धनञ्जयः ।**
**मुनीनामप्यहं व्यासः कवीनामुशना कविः ॥ ३७**

வ்ருஷ்ணீனாம் வாஸுதேவோऽஸ்மி பாண்டவானாம் தனஞ்ஜய: ।
முனீனாமப்யஹம் வ்யாஸ: கவீனாமுசனா கவி: ॥ 37

अहं அஹம் *நான்* वृष्णीनां வ்ருஷ்ணீனாம் *விருஷ்ணிகளுக்குள்* वासुदेवः வாஸுதேவ: *வாசுதேவனாகவும்* पाण्डवानां பாண்டவானாம் *பாண்டவர்களுக்குள்* धनञ्जयः தனஞ்ஜய: *தனஞ்ஜயனாக* मुनीनां अपि முனீனாம் அபி *முனிவர்களுள்* व्यासः வ்யாஸ: *வியாசராக* कवीनां கவீனாம் *கவிகளுக்குள்* उशना कविः உசனா கவி: *சுக்கிரன் என்கிற கவியாகவும்* अस्मि அஸ்மி *இருக்கிறேன்.*

***விருஷ்ணிகளுள் நான் வாசுதேவன்; பாண்டவர்களுள் தனஞ்ஜயன்; முனிகளுள் வியாசர்; கவிகளுள் நான் சுக்கிரன். 37***

யாதவர்கள் எல்லாரும் விருஷ்ணியின் வம்சத்தில் வந்தவர்கள். ஆதலால் அவர்களுக்கு விருஷ்ணிகள் என்று ஒரு பெயர் உண்டு. கிருஷ்ணன் வசுதேவருடைய புதல்வர்.

எனவே அவர்க்கு வாசுதேவன் என்ற பெயர் வந்துள்ளது. யாதவர் கூட்டத்தில் இவரே எல்லார்க்கும் மிக்கார் என்பது வெளிப்படை. தனஞ்ஜயன் என்பது அர்ஜுனனுக்கு ஏற்பட்ட மற்றொரு பெயர். ஆங்காங்குப் புதைந்து, பயன் படாது கிடந்த செல்வங்களை யெல்லாம் அந்தந்த அரசர்களிடத்திருந்து வென்று வந்து, நல்வழியில் பயன்படுத்திய படியால் தனஞ்ஜயன் என்ற பெயர் அர்ஜுனனுக்கு வந்தது. பாண்டவர்களுள் பகவான் தம்மை தர்மராஜா என்று சொல்லாது, தனஞ்ஜயன் என்று சொன்னது அர்ஜுனனுக்குத் தன் யதார்த்த சொரூபத்தைப் புகட்டுதற் பொருட்டேயாம். மேலும் கிருஷ்ணனும் அர்ஜுனனும் யாண்டும் இணைபிரியாது இருந்துவருவது ஈண்டு நினைவூட்டப்படுகிறது. பகவானே எல்லா ஜீவர்களாகவும் பரிணமித்திருக்கிறார். அர்ஜுனன் தனக்குத் தனி வியக்தி யிருக்கிறதென்றுவது, தன் வெற்றிக்கெல்லாம் தானே முதற் காரணம் என்றுவது எண்ணிவிடலாகாது. ஆகையால் நேரே அர்ஜுனனுடன் பேசும்போது அவனுக்கும் முதற் காரணம் பகவான் என்பதை நினைவூட்டுகிறார். ஒவ்வொரு ஜீவனும் தனக்கு முதற்காரணம் கடவுள் என்று அறிந்து, அதன்படி நடந்துகொண்டால் அந்த ஜீவன் சிறப்பு எய்துவான்.

அந்தர்முக திருஷ்டியில் மனதை முழுதும் செலுத்தி, மெய்ப்பொருளை முற்றும் அறிந்துகொள்ள வல்லவர் ஒருவர்க்கு முனி என்று பெயர். அத்தகைய பூரண ஞானிகளுள் பிரதானமானவர் வியாசர். அவருக்கு வேத வியாசர் என்றும், பாதராயணர் என்றும், துவைபாயனர் என்றும் வேறு பெயர்கள் உண்டு. அவரது கரு நிறத்தை முன்னிட்டு கிருஷ்ண துவைபாயனர் என்றும் அவர் அழைக்கப்படுவதுண்டு. பராசரருக்கும் சத்தியவதிக்கும் பிள்ளையாகப் பிறந்தவர் அவர். வேதங்களையெல்லாம் தொகுத்தவர்; வேதாந்த சூத்திரங்களை வகுத்தவர்; மகாபாரதத்தையும் புராணங்களையும் எழுதியவர் அவர். இவர் சுகருக்கு தந்தை

யாவார். இவரை மகாவிஷ்ணுவின் அம்சம் என்பதில் வியப்பொன்றுமில்லை.

வெளியுலகத்தைப் பற்றிய பரந்த அறிவுடையவர் கவி என்று அழைக்கப்பட்டது பழைய வழக்கம். நாளடைவில் புலவர்களுக்குக் கவி என்ற பெயர் வந்தது. உசனு என்பது சுக்கிரருக்கு மற்றொரு பெயர். செத்தவர்களைப் பிழைப்பிக்கும் வல்லமை இவருக்கு இருந்தது. இவர் தந்த பயிற்சியால் அசுரர்களுக்கு ஆற்றல் மிக உண்டாயிற்று.

दण्डो दमयतामस्मि नीतिरस्मि जिगीषताम् ।
मौनं चैवास्मि गुह्यानां ज्ञानं ज्ञानवतामहम् ॥ ३८

தண்டோ தமயதாமஸ்மி நீதிரஸ்மி ஜிகீஷதாம் ।
மௌனம் சைவாஸ்மி குஹ்யாநாம் ஞானம் ஞானவதாமஹம் ॥

दमयतां தமயதாம் *தண்டிப்பவர்களுள்* अहं அஹம் *நான்* दण्ड: தண்ட: *செங்கோலாக* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* जिगीषतां ஜிகீஷதாம் *ஜெயத்தை நாடுபவர்களுள்* नीति: நீதி: *நீதியாக* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* गुह्यानां குஹ்யாநாம் *ரகசியங்களுள்* मौनं च மௌனம் ச *மௌனமாகவும்* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* ज्ञानवतां ஞானவதாம் *ஞானிகளுடைய* ज्ञानं एव ஞானம் ஏவ *ஞானமாகவும் இருக்கிறேன்.*

***தண்டிப்பவர்கள்பால் நான் செங்கோல்; வெற்றி வேண்டுபவரிடத்து நான் நீதி; ரகசியங்களுள் நான் மௌனம்; ஞானிகளுடைய ஞானமும் நானே.*** ***38***

*தண்டனையை மிகைப்படுத்தாமலும் குறைக்காமலும் அளந்து வழங்குதல் அரசன் கடமை. முறையான தண்டனைக்கு அறிகுறியாயிருப்பது செங்கோல். குற்றத்துக்கு ஏற்ற தண்டனை விதிக்கப்படும் பொழுது குற்றவாளியானவன் யார்மீதும் குறை கூறாது தண்டனையை ஏற்றுக் கொள்கிறான். அத்தகைய தண்டனையே அவனைச் சீர் திருத்துகிறது. அது பாமரர்க்கிடையில் பெரிய சீர்திருத்தம் செய்கிறபடியால், அதை இறைவனிடத்துள்ள இறைமை*

எனலாம். இனி, இயற்கையானது நோய் முதலியவைகளை விளைவிப்பது தவறுதலான வாழ்க்கைக்காக விதிக்கப்பட்ட தண்டனை என்பது பொருந்தும். யமதர்மராஜாவாகப் பகவான் இருப்பது போன்று, தண்டனையை விதிப்பவரிடத்தில் செங்கோல் சொரூபமாகவும் அவர் இருக்கிறார்.

நேர்மையான முறையில் எடுத்துக்கொள்ளும் முயற்சி நீதி எனப்படுகிறது. அரசனுக்கு சாமம், தானம், பேதம், தண்டம் இந் நான்கும் நீதிக்குட்பட்டவைகளாகும் முறை வழுவிய முயற்சி வெற்றியைக் கொடுத்தாலும், அது நிலைத்த வெற்றியாகாது. கையாளும் முறை நேர்மையானதாயிருக்குமாகில், அதினின்று விளையும் வெற்றியும் நிலைத்ததாகும்.

பிறரிடத்தில் பகரப்படாதது இரகசியம். வாய்பேசாதிருக்கும்போது ஒன்றும் பகரப்படுவதில்லை. ஆகையால் மௌனம் இரகசியத்தை நன்கு காக்கின்றது. சப்தம் செய்யாதிருப்பது மௌனம். எது அசைகின்றதோ அது சப்தம் செய்கிறது. பிரகிருதி முழுதும் அசைகிறது. ஆக, பிரகிருதியின்கண் மௌனம் இல்லை. மனது அடங்க அடங்க, அது மௌனத்தில் நிலைபெறுகிறது. முற்றிலும் மனது அடங்கி ஒடுங்கினால் ஆத்ம சொரூபம் மட்டும் எஞ்சியிருக்கும். ஆத்மா அசையாதது. ஆதலால் அதில் சப்தமில்லை. ஆத்மாவே மௌன சொரூபம். இந்த ஆத்மாவை இன்னதென்று வாய்விட்டுப் பேசி விளக்கமுடியாது. ஆகையால் இரகசியங்களுள் முடிவானது மௌனம் அல்லது ஆத்ம சொரூபம்.

ஞானி, ஞானம், ஞேயம் (அறிபவன், அறிவு, அறியப்படுபொருள்) என மூன்றாகப் பிரிகிறவிடத்துப் பிரபஞ்சமுண்டு. மூன்றும் ஒன்றாகுமிடத்து அது பரம் பொருள். அவைகளுள் முதலில் ஞானம், ஞானியாகிய இரண்டையும் ஒன்றாக்கும் வழியைப் பகவான் சொல்லுகிறார். பிறகு மூன்றும் ஒன்றாவது எளிது. அக்னியில் உஷ்ணம் போன்று அறிஞர் இடத்து அறிவாயிருப்பது பகவான். அறிவுக்கு

*அன்னியராய் அறிஞர் இல்லை. ஈசுவரனே ஜீவர்களிடத்து ஞான சொரூபமாயிருக்கிறார் என்பது பொருள்.*

**यच्चापि सर्वभूतानां बीजं तदहमर्जुन ।**
**न तदस्ति विना यत्स्यान् मया भूतं चराचरम् ॥ ३९**

யச்சாபி ஸர்வபூதானாம் பீஜம் ததஹமர்ஜுன ।
ந ததஸ்தி விநா யத்ஸ்யான் மயா பூதம் சராசரம் ॥ 39

अर्जुन அர்ஜுன *அர்ஜுனா* यत् च யத் ச *இன்னும் எது* सर्वभूतानां ஸர்வ பூதானாம் *எல்லா உயிர்களுக்கும்* बीजं பீஜம் *வித்து ஆகிறதோ* तत् अपि தத் அபி *அதுவும்* अहं அஹம் *நான்* मया विना மயா விநா *என்னையன்றி* यत् யத் *எது* स्यात् ஸ்யாத் *இருக்கிறதோ* तत् தத் *அந்த* चर अचरं சர அசரம் *இயங்குவது, இயங்காததுமான* भूतं பூதம் *வஸ்து* न अस्ति ந அஸ்தி *இல்லை.*

***அர்ஜுனா, எல்லா உயிர்களுக்கும் வித்து எதுவோ, அது நான். என்னையன்றி ஜங்கம ஸ்தாவரங்களில் வாழ்வது ஒன்றுமில்லை.*** **39**

மேலே சொன்னவைகளை யெல்லாம் தொகுத்து *ஆராயுமிடத்து ஈசுவரன் ஒருவனே உலகு அனைத்துக்கும் மூதற்காரணம். இயங்குவன, இயங்காதனவாகிய அனைத்தும் அவனிடத்திருந்தே வந்தவைகள்.*

*அப்படியானால் பகவானுடைய முழுமையும் அவர் சொல்லிவிட்டாரா? அதற்கு விடை வருகிறது:—*

**नान्तोऽस्ति मम दिव्यानां विभूतीनां परंतप ।**
**एष तूद्देशतः प्रोक्तो विभूतेर्विस्तरो मया ॥ ४०**

நாந்தோऽஸ்தி மம திவ்யானாம் விபூதீனாம் பரந்தப ।
ஏஷ தூத்தேசத: ப்ரோக்தோ விபூதேர்விஸ்தரோ மயா ॥ 40

परन्तप பரந்தப *எதிரிகளை வாட்டுபவனே* मम மம *என்னுடைய* दिव्यानां विभूतीनां திவ்யானாம் விபூதீனாம் *திவ்வியமான விபூதிகளுக்கு* अन्तः அந்த: *முடிவு* न अस्ति ந அஸ்தி *இல்லை* विभूतेः விபூதே: *விபூதிகளுடைய* एषः तु ஏஷ: து *இவ்வளவுதான்* विस्तरः விஸ்தர: *விஸ்*

*த்ரிப்யு* मया மயா *என்றால்* उद्देशतः உத்தேசத: *ஏகதேசம்* प्रोक्तः ப்ரோக்த: *சொல்லப்பட்டது.*

***எதிரியை வாட்டுபவனே, என் திவ்விய விபூதிகளுக்கு முடிவில்லை. என் விபூதி விரிவுகளில் ஒரு சிறிது என்றால் இயம்பப்பட்டது. 40***

*கோழி ஒன்று தன் குஞ்சுக்கு உணவு தேடும் விதத்தைச் சிறிது காட்டித்தருகிறது. அவ்வழியைப் பின்பற்றிப் பின்பு தனக்குத் தேவையாயுள்ள உணவை யெல்லாம் அக் குஞ்சே தேடிக்கொள்கிறது. அங்ஙனம் ஈசுவர மஹிமையைக் காண்பதற்கான வழியைப் பகவான் புகட்டியருள்கிறார். அதன்படி அனுஷ்டிக்கும் சாதகன் தன் அறிவுக்கு எட்டியவளவு ஈசுவரனை அறிகிறான்.*

*ஈசுவரனை யாரால் முற்றிலும் அறிய முடியும்? அந்தப் பாக்கியம் நமக்கு இல்லை. நாம் அவனைப் பூரணமாக அறிய வேண்டுமென்பது மில்லை. அவனைக்கண்டு, அவன் ஒருவனே உண்மைப் பொருள் என்று உணர்ந்தால் போதுமானது. ஒருவன் புண்ணிய நதியாகிய கங்கைக்கு வருவதாக வைத்துக்கொள்வோம். அதைக் கங்கோத்திரியிலிருந்து கங்கா சாகரம் வரையில் தர்சிக்கவும் ஸ்பர்சிக்கவும் வேண்டியதில்லை. ஓர் இடத்தில் அதைத் தொட்டு நீராடினாலே அவன் கிருதார்த்தனாகிறான்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஈசுவரனுடைய மகிமையைச் சிறிதாவது சுவானுபவத்தில் அறிந்து கொண்டவன் பிறகு உலகை எங்ஙனம் பொருள்படுத்துகிறான்? விடை பகவானுடைய வாக்கிலிருந்தே வருகிறது :—*

**यद्यद्विभूतिमत्सत्त्वं श्रीमदूर्जितमेव वा ।**
**तत्तदेवावगच्छ त्वं मम तेजोंशसंभवम् ॥ ४१**

யத்யத்விபூதிமத்ஸத்வம் ஸ்ரீமதூர்ஜிதமேவ வா ।
தத்ததேவாவகச்ச த்வம் மம தேஜோம்சஸம்பவம் ॥ 41

विभूतिमत् விபூதிமத் *விபூதியோடு கூடிய* श्रीमत् ஸ்ரீமத் *திருநிறைந்ததாக* ऊर्जितं एव वा ஊர்ஜிதம் ஏவ வா *பலமுடையதாகவும்* यत् यत् யத் யத் *எந்த எந்த* सत्त्वं ஸத்வம் *பொருள்* तत् तत् एव தத் தத் ஏவ

*அது அது எல்லாம்* मम மம *என்னுடைய* तेजः अंश सम्भवम् தேஜ: அம்ச ஸம்பவம் *தேஜஸின் ஒரு பகுதியில் உண்டானது என்று* त्वं த்வம் *நீ* अवगच्छ அவகச்ச *அறிக.*

***மஹிமையும் அழகும் வலிவும் உடையது எது எதுவோ அதெல்லாம் என் பிரபையின் ஒரு பகுதியில் உண்டானது என்று அறிக.*** **41**

*சூரிய கிரணம் எங்கும் வியாபித்து, எல்லாப் பொருள்களையும் விளக்குகிறது. ஈசுவரனே எல்லாப்பொருளுமாய் அதனதன் வாயிலாகத் தன் பெருமையையும், சிறப்பையும், அழகையும், வல்லமையையும் விளக்குகிறான். ஏதேனும் ஒரு பொருள் அல்லது உயிர் ஏதேனும் ஒரு விதத்தில் மனதைக் கவர வல்லதாயின், அத்தகைய மாண்பு ஈசுவரனுடையதே என்றும், அது அவ் வடிவத்தின் வாயிலாக மிளிர்கிறது என்றும் அறிந்துகொள்க.*

*பகவானது சாகார நிலை அதாவது ரூபத்தோடு கூடிய நிலை யென்றால் என்ன என்பது உனக்குத் தெரியுமா? நீர்ப்பரப்பின்மேல் தோன்றும் குமிழிகள் போன்றது அந்நிலை சிதாகாசத்தில் பலவித ரூபங்கள் எழுவதை உண்மையாகக் காணலாம். பகவத் அவதாரமும் அவ்வித ரூபங்களில் ஒன்று.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*அப்படியாயின் அகிலாண்டங்களிலுமுள்ள உருவத் தொகுதிதானே கடவுள்? இக் கேள்விக்கு விடை வருகிறது:—*

**अथवा बहुनैतेन किं ज्ञातेन तवार्जुन ।**
**विष्टभ्याहमिदं कृत्स्नं एकांशेन स्थितो जगत् ॥ ४२**

அதவா பஹுனைதேன கிம் ஞாதேன தவார்ஜுன ।
விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்னம் ஏகாம்சேன ஸ்திதோ ஜகத் ॥

अर्जुन அர்ஜுன *அர்ஜுனா* अथवा அதவா *அல்லது* ज्ञातेन ஞாதேன *அறியப்பட்ட* एतेन ஏதேன *இந்த* बहुना பஹுனா *பலவற்றால்* तव தவ *உனக்கு* किं கிம் *ஆவதென்ன* अहं அஹம் *நான்* इदं இதம் *இந்த* कृत्स्नं க்ருத்ஸ்னம் *முழு* जगत् ஜகத் *ஜகத்தை* एकांशेन ஏகாம்சேன

*ஓர் அம்சத்தால்* விஷ்டப்ய *தாங்கிக்கொண்டு* ஸ்தித: *இருக்கிறேன்.*

***அர்ஜுனா, இதைப் பலவிதமாகப் பகுத்தறிவதால் உனக்கு ஆவதென்ன? எனது ஓர் அம்சத்தால் உலகு அனைத்தையும் தாங்கியிருக்கிறேன். 42***

வல்லவன் ஒருவனை ஒரு கோணிப்பையில் கட்டி ஓடவிட்டால் அவன் தனது முழு ஆற்றலையும் அப்பொழுது காட்டமுடியாது. பல வடிவங்கள் வாயிலாகப் பகவான் தமது மகிமையை விளக்குகிறார் எனினும், அவ் விளக்கம் அரை குறையானதே. இனி அலையாகப் பரிணமித்திருப்பது சமுத்திரத்தின் ஒரு சிறு பகுதியே. அங்ஙனம் அகிலாண்டமாய்ப் பரிணமித்திருப்பது ஈசுவரனுடைய ஒரு சிறு கலை மட்டுமே. அவனுடைய சொரூபத்தின் பெரும் பகுதி தோற்றத்துக்கு அப்பால் பரம்பொருளாய் உள்ளது.

கடவுள் உருவமற்றவரும், உருவமுள்ளவரும் ஆவார். உருவம் அருவம் இவ்விரண்டையும் கடந்தவரும் ஆகிறார். அவர் எப்படிப் பட்டவர் என்பதை அவரேதான் முற்றிலும் அறிவார்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे विभूतियोगो नाम दशमोऽध्यायः ॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே
விபூதியோகோ நாம தசமோऽத்யாய: ॥

***பிரம்ம வித்தையைப் புகட்டுவதும், யோக சாஸ்திரமானதும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமாக வந்துள்ளதுமாகிய பகவத்கீதை என்னும் உபநிஷத்தின்கண் விபூதியோகம் என்ற பத்தாம் அத்தியாயம்.***

# एकादशोऽध्यायः

## பதினோராவது அத்தியாயம்

### विश्वरूपदर्शनयोगः

### விச்வரூபதர்சன யோகம்

अर्जुन उवाच

मदनुग्रहाय परमं गुह्यमध्यात्मसंज्ञितम् ।
यत्त्वयोक्तं वचस्तेन मोहोऽयं विगतो मम ॥ १

அர்ஜுன உவாச

மதனுக்ரஹாய பரமம் குஹ்யமத்யாத்மஸம்ஞிதம் ।
யத்வயோக்தம் வசஸ்தேன மோஹோऽயம் விகதோ மம ॥ 1

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது*

मत् अनुग्रहाय மத் அனுக்ரஹாய *என்னை அனுக்கிரகித்தற் பொருட்டு* परमं பரமம் *புருஷார்த்தங்களில் மேலானதும்* गुह्यं குஹ்யம் *ரகசியமானதும்* अध्यात्म संज्ञितं அத்யாத்ம ஸம்ஞிதம் *ஆத்ம அநாத்ம விவேகத்தை உண்டுபண்ணுவது என்று சொல்லப்பட்டது* यत् யத் *எந்த* वचः வச: *வாக்கியம்* त्वया த்வயா *உம்மால்* उक्तं உக்தம் *சொல்லப்பட்டது* तेन தேன *அதனால்* मम மம *என்னுடைய* अयं அயம் *இந்த* मोहः மோஹ: *மோஹமானது* विगतः விகத: *போய்விட்டது.*

அர்ஜுனன் சொன்னது

***என்னைக் காத்தருளுதற்கு உம்மால் உரைக்கப்பட்ட மேலானதும் மறைபொருளுமாகிய ஆத்ம தத்துவத்தைப் பற்றிய மொழியால் என் மயக்கம் ஒழிந்தது.*** 1

*தம்முடைய ஒரு சிறு அம்சம் இவ்வுலகனைத்தும் ஆனது என்றும், தாம் அகிலாண்டத்தையும் தாங்கிக்*

கொண்டு அதற்கப்பாலும் இருப்பதாகப் பகவான் சொன்னார். அதைக்கேட்ட அர்ஜுனன் தான் அந்த சொரூபத்தை நேரே சாக்ஷாத்கரிக்க வேண்டுமென்ற விருப்பம் கொண்டான்.

அவன் பகர்ந்ததின் உட் கருத்தாவது :—

"என்னைப் பற்றியும், உலகைப் பற்றியும், உலகுக்கும் எனக்கும் உள்ள தொடர்பைப்பற்றியும், என் கடமையைப்பற்றியும் நான் இது பரியந்தம் கொண்டிருந்த எண்ணங்களெல்லாம் வெறும் மயக்கமேயாம். தாம் உபதேசித்தருளிய பரதத்துவ போதத்தால் அந்த மோஹம் அகன்று போய்விட்டது."

மேலும் :—

**भवाप्ययौ हि भूतानां श्रुतौ विस्तरशो मया ।**
**त्वत्तः कमलपत्राक्ष माहात्म्यमपि चाव्ययम् ॥ २**

பவாப்யயௌ ஹி பூதானாம் ச்ருதௌ விஸ்தரசோ மயா।
த்வத்த: கமலபத்ராக்ஷ மாஹாத்ம்யமபி சாவ்யயம் ॥ 2

कमल पत्र अक्ष கமல பத்ர அக்ஷ *தாமரையிதழ்க் கண்ணா* त्वत्तः த்வத்த: *உம்மிடத்திருந்து* भूतानां பூதானும் *பிராணிகளினுடைய* भव अप्ययौ பவ அப்யயௌ *பிறப்பு இறப்பு* मया மயா *என்னால்* विस्तरशः हि விஸ்தரச: ஹி *விஸ்தாரமாகவே* श्रुतौ ச்ருதௌ *கேட்கப்பட்டன* अव्ययं அவ்யயம் *முடிவற்ற* माहात्म्यं अपि च மாஹாத்ம்யம் அபி ச *மஹிமையும்கூட.*

***கமலக்கண்ணா, உயிர்களின் பிறப்பு, இறப்பு விரிவாக உம்மிடம் என்னால் கேட்கப்பட்டன; உமது முடிவற்ற மஹிமையும் கேட்கப்பட்டது. 2***

பகவான் சுருக்கமாகச் சொன்னேன் என்றதை அர்ஜுனன் விரிவாகச் சொல்லப்பட்டது என்று ஏற்றுக்கொள்கிறான். இருவர் கருத்தும் அவரவர் நிலைமையில் உண்மையே.

அனைத்துக்கும் அவர் முதற்காரணமாயிருக்கிறார். ஆனால் அவர் ஒன்றிலும் கட்டுப்படுவதில்லை. நடைமுறை யாவைத்துக்கும் விளக்கம் அவரிடத்திருந்து பெறலாம். இத்தனையும் உண்டுபண்ணியும் அவரிடத்துத் தேய்வு ஒன்றுமில்லை. இவை யாவும் அவருடைய மஹிமையாம்.

एवमेतद्यथात्थ त्वमात्मानं परमेश्वर ।
द्रष्टुमिच्छामि ते रूपमैश्वरं पुरुषोत्तम ॥ ३

ஏவமேதத்யதாத்த த்வமாத்மானம் பரமேச்வர ।
த்ரஷ்டுமிச்சாமி தே ரூபமைச்வரம் புருஷோத்தம ॥ 3

परमेश्वर பரமேச்வர *பரமேசுவரா* यथा யதா *எவ்விதம்* त्वं த்வம் *நாம்* आत्मानं ஆத்மானம் *தம்மைப்பற்றி* आत्थ ஆத்த *இயம்பினீரோ* तत् एवं ஏதத் ஏவம் *அது அப்படியே உள்ளது* पुरुषोत्तम புருஷோத்தம *புருஷோத்தமரே* ते தே *உம்முடைய* ऐश्वरं रूपं ஐச்வரம் ரூபம் *ஈசுவர ரூபத்தை* द्रष्टुं த்ரஷ்டும் *பார்க்க* इच्छामि இச்சாமி *இச்சிக்கிறேன்.*

***பரமேசுவரா, தாம் தம்மைப்பற்றிப்பகர்ந்தது முற்றும் முறையே. (இனி) புருஷோத்தமா, உமது ஈசுவர வடிவத்தைக் காண விரும்புகிறேன். 3***

*எங்கும் நிறைந்துள்ள விஷ்ணுவாகிய அவரிடம் ஞானம், ஐசுவரியம், பலம், சக்தி, வீரியம், தேஜஸ் ஆகிய ஆறு குணங்கள் நிறைந்திருக்கின்றன. பகவான் என்னும் சொல்லுக்கு ஷட்குண சம்பன்னன் என்று பொருள். ஆறு வித தெய்வ சம்பத்துக்கள் அவரிடம் இருக்கின்றன. அத்தனை மஹிமைகளோடு கூடிய அவரைக்காண அர்ஜுனன் விரும்பியது இயல்பே.*

मन्यसे यदि तच्छक्यं मया द्रष्टुमिति प्रभो ।
योगेश्वर ततो मे त्वं दर्शयात्मानमव्ययम् ॥ ४

மன்யஸே யதி தச்சக்யம் மயா த்ரஷ்டுமிதி ப்ரபோ ।
யோகேச்வர ததோ மே த்வம் தர்சயாத்மானமவ்யயம் ॥ 4

प्रभो ப்ரபோ *பிரபுவே* तत् தத் *அது* मया மயா *என்னால்* द्रष्टुम् த்ரஷ்டும் *பார்ப்பதற்கு* शक्यं इति சக்யம் இதி *சாத்தியம் என்று* मन्यसे மன்யஸே यदि யதி *கருதுவீர்களானால்* ततः ததஃ *அப்பொழுது* योगेश्वर யோகேச்வர *யோகேசுவரரே* त्वं த்வம் *தாம்* मे மே *எனக்கு* अव्ययं அவ்யயம் *அழிவில்லாத* आत्मानं ஆத்மானம் *உம்மை* दर्शय தர்சய *காண்பிப்பீராக.*

***இறைவா, அதைப் பார்க்க எனக்கு இயலும் என்று எண்ணுவீராயின், யோகேசுவரா, உம் அழிவற்ற உருவத்தைக் காட்டியருள்க.***

*யோகத்துக்கும் யோகிகளுக்கும் தலைவன் யோகேசுவரன். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் அருளல் ஆகிய பஞ்ச கிருத்தியங்கட்கும் தலைவன் இறைவன். காட்சியளித்தல் அல்லது அருளல் வேண்டுமென்று அர்ஜுனன் விண்ணப்பிக்கிறான். ஈசுவரனது விசுவரூபத்தைக் காணவேண்டுமென்பது அவன் விருப்பம். தர்சனம் கொடுத்தருள யோகேசுவரனுக்கு இயலும்.*

*தன்னுடைய தீர்மானத்துக்கு முக்கிய ஸ்தானம் தராது, ஈசுவரனுடைய அனுக்கிரகத்துக்கு முதன்மை கொடுப்பது பக்தனுடைய இயல்பு. மனிதன் எதற்குத் தகுதியுடையவன் அல்லது தகுதியற்றவன் என்று தான் அறிந்து கொள்வதைவிடப் பகவானே அதை உள்ளபடி அறிகிறார்.*

*இங்ஙனம் அர்ஜுனனால் விண்ணப்பிக்கப் பெற்றதும் :—*

**श्री भगवानुवाच**

**पश्य मे पार्थ रूपाणि शतशोऽथ सहस्रशः ।**
**नानाविधानि दिव्यानि नानावर्णाकृतीनि च ॥ ५**

ஸ்ரீ பகவானுவாச

பச்ய மே பார்த்த ரூபாணி சதசோऽத ஸஹஸ்ரசஃ ।
நானாவிதானி திவ்யானி நானாவர்ணாக்ருதீனி ச ॥ 5

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

ஆ पार्थ பார்த்த *பார்த்தா* मे மே *என்னுடைய* दिव्यानि திவ்யானி *தெய்வத்தன்மை வாய்ந்தவைகளும்* नानाविधानि நாநாவிதானி *அநேக விதங்களானவைகளும்* नानावर्ण आकृतीनि च நாநாவர்ண ஆக்ருதீனி ச *பல நிறங்களும் வடிவங்களும் உடையனவும்* शतशः சதச: *நூற்றுக் கணக்கிலும்* अथ அத *பின்னும்* सहस्रशः ஸஹஸ்ரச: *ஆயிரக்கணக்கிலும்* रूपाणि ரூபாணி *ரூபங்களை* पश्य பச்ய *பார்.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***பலவகைப்பட்ட, பல நிறங்களும் வடிவங்களும் உடைய எனது தெய்விக உருவங்களை நூறு நூறாய், ஆயிரம் ஆயிரமாய், இனிப் பார், பார்த்தா.***

*தெய்வத்தோடு சம்பந்தப் படாதவைகள்போல் தென்படுபவைகள் உண்மையில் தெய்வப் பெற்றியுடைத் திருக்கின்றன. ஆகையால் அவைகள் திவ்யமானவைகள் எனப்படுகின்றன. வடிவத்திலும் நிறத்திலும் தன்மையிலும் வேறுபட்டு, எண்ணிக்கையில் அடங்காதிருப்பவைகளெல்லாம் ஒரு பொருளின் எண்ணிறந்த தோற்றங்கள் என்பது இனி விளங்கும்.*

*ஒவ்வொரு வஸ்துவும் நாராயணன்; மனிதன் நாராயணன்; ஜீவப்பிராணி நாராயணன்; ரிஷியும் நாராயணன்; போக்கிரியும் நாராயணனே. உலகில் உள்ளனவெல்லாம் நாராயணனே. நாராயணன் பலவிதமான திருவிளையாடல்களைச் செய்தருள்கின்றான். எல்லாப் பொருள்களும் அவனுடைய பல்வேறு உருவங்களாகவும் அவனது பிரபாவத்தின் தோற்றங்களாகவும் இருக்கின்றன.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*அர்ஜுனன் விசுவ ரூபத்தைப் பார்க்கத் தகுதியுடையவன் என்பது 'பார்' என்று பகவான் பகர்வதிலிருந்து விளங்குகிறது.*

**पश्यादित्यान्वसून्रुद्रानश्विनौ मरुतस्तथा ।**
**बहून्यदृष्टपूर्वाणि पश्याश्चर्याणि भारत ॥ ६**

பச்யாதித்யான் வஸூன் ருத்ரானச்விநௌ மருதஸ்ததா
பஹூன்யத்ருஷ்டபூர்வாணி பச்யாஸ்சர்யாணி பாரத ॥ 6

भारत பாரத *பரதவம்சத்துதித்தவனே* आदित्यान् ஆதித்யான் (*பன்னிரண்டு*) *ஆதித்தியர்களையும்* वसून् வஸூன் (*எட்டு*) *வஸு*க்களையும் रुद्रान् ருத்ரான் (*பதினொரு*) *ருத்திரர்களையும்* अश्विनौ அச்விநௌ (*இரண்டு*) *அச்வினிகளையும்* तथा ததா *அப்படியே* मरुतः மருத: (*நாற்பத்தொன்பது*) *மருத்துக்களையும்* पश्य பச்ய *பார்* बहूनि பஹூனி *அநேகமான* अदृष्टपूर्वाणि அத்ருஷ்ட பூர்வாணி *முன்பு கண்டிராத* आश्चर्याणि ஆஸ்சர்யாணி *ஆச்சரியங்களை* पश्य பச்ய *பார்.*

***ஆதித்தியர்களையும், வஸுக்களையும், ருத்திரர்களையும், அச்வினிகளையும் அங்ஙனமே மருத்துக்களையும் பார்த்தா, பார். முன்பு காணாத அதிசயங்கள் பலவற்றைப் பார்.***

*நீ இதுவரையில் கண்டிருந்தது மிக மிகக் குறைந்தது. மேலும் காணக்கிடப்பது கணக்கில் அடங்காதது என்பதை நீ இப்பொழுது உணர்வாய்.*

*அதுமட்டுமல்ல :—*

**इहैकस्थं जगत्कृत्स्नं पश्याद्य सचराचरम् ।**
**मम देहे गुडाकेश यच्चान्यद्द्रष्टुमिच्छसि ॥ ७**

இஹைகஸ்தம் ஜகத்க்ருத்ஸ்னம் பச்யாத்ய ஸசராசரம் ।
மம தேஹே குடாகேச யச்சான்யத்த்ரஷ்டுமிச்சஸி ॥ 7

गुडाका ईश குடாகா ஈச *தூக்கத்தை வென்றவனே* (*அர்ஜுனா*) मम மம *என்னுடைய* इह இஹ *இந்த* देहे தேஹே *தேகத்தில்* एकस्थं ஏகஸ்தம் *அவயவங்களாய் ஒன்று சேர்ந்திருக்கின்ற* सचर अचरं ஸசர அசரம் *ஜங்கம ஸ்தாவரங்களோடு கூடிய* जगत् ஜகத் *ஜகத்* कृत्स्नं க்ருத்ஸ்னம் *முழுவதையும்* अन्यत् च அன்யத் ச *வேறு இன்னும்* यत् யத் *எதை* द्रष्टुं த்ரஷ்டும் *பார்க்க* इच्छसि இச்சஸி *இச்சிக்கிறேயோ* अद्य அத்ய *இப்பொழுது* पश्य பச்ய *பார்.*

***அர்ஜுனா, எனது இவ்வுடலிலே ஒன்று சேர்ந்துள்ள ஜங்கம ஸ்தாவரங்களாகிய ஜகத் முழுதை***

**யும், மேலும் பார்க்க விரும்பும் வேறு எதையும் இப்பொழுது காண். 7**

பாண்டவர்கள் கௌரவர்களை ஜயிப்பதா, அல்லது கௌரவர்கள் பாண்டவர்களை ஜயிப்பதா? இதில் எது சிதம் என்று தனக்குத் தெரியவில்லையென்று அர்ஜுனன் ரண்டாம் அத்தியாயம் ஆறுவது சுலோகத்தில் சொன்ருன். அதுபோன்ற மர்மங்களைத் தெரிந்துகொள்ள விருப்ப ிருந்தாலும் அவைகளைத் தெரிந்துகொள்க. விசுவ ரூப தர்சனத்தில் அண்டங்களின் அமைப்பும், நடைமுறையும் மற்றும் யாவும் உள்ளபடி விளங்கிவிடும்.

ஆனால் அக்காட்சி ஊனக் கண்ணால் காணக்கூடியதா? இதற்கு விடை வருகிறது :—

न तु मां शक्यसे द्रष्टुमनेनैव स्वचक्षुषा ।
दिव्यं ददामि ते चक्षुः पश्य मे योगमैश्वरम् ॥ ८

ந து மாம் சக்யஸே த்ரஷ்டுமனேனைவ ஸ்வசக்ஷுஷா ।
திவ்யம் ததாமி தே சக்ஷு: பச்ய மே யோகமைச்வரம் ॥ 8

तु து *ஆனால்* अनेन அனேன *இந்த* स्व चक्षुषा एव ஸ்வ சக்ஷுஷா ஏவ *உன் கண்ணினாலேயே* मां மாம் *என்னை* द्रष्टुं த்ரஷ்டும் *பார்க்க* शक्यसे ந சக்யஸே *உனக்கு இயலாது* ते தே *உனக்கு* दिव्यं திவ்யம் *தெய்விகமான* चक्षुः சக்ஷு: *கண்ணை* ददामि ததாமி *தருகிறேன்* मे மே *என்னுடைய* ऐश्वरं योगं ஐச்வரம் யோகம் *ஈசுவர யோகத்தை* पश्य பச்ய *பார்.*

***ஆனால் உனது இந்த ஊனக்கண்ணால் என்னை நீ காண இயலாது. உனக்கு ஞானக்கண் கொடுக்கிறேன். எனது ஈசுவர யோகத்தைப்பார். 8***

*பிராகிருத கண்கொண்டு பிரகிருதியைத்தான் காண முடியும். அதிலேயும் தூரத்தில் இருப்பதைப் பார்க்க தூர திருஷ்டிக் கண்ணாடியின் உதவி வேண்டும். நுண்பொருளைப் பூத கண்ணாடியின் துணைகொண்டே காணலாம். அங்ஙனம் ஈசுவரனது விசுவரூபத்தைக் காண்பதற்கு ஞானக் கண்*

தேவை. நெறியான வாழ்க்கை யுடையவர்க்கு அது இறைவனது அருளால் உண்டாகிறது. பஞ்சேந்திரியங்களின் துணையின்றியே ஞானக் கண்ணானது அவ் இந்திரியங்களின் தொழில்களைச் செய்கிறது. அதற்குமேல் ஈசுவர மகிமையை வேண்டியவாறு தெரிந்துகொள்ளவும் ஞானக் கண்ணுக்கு இயலும். தெளிந்த மனமே ஞானக்கண்ணாக மாறுகிறது.

பக்தியைக் கண்களில் இட்டும் மைக்கு ஒப்பிட்டிருக்கின்றனர். ஸ்ரீமதி ராதை ஒரு சமயம் "ஸகிகாள், நான் எனது கிருஷ்ணனை எல்லாவிடங்களிலும் காண்கிறேன்" என்றாள். அதற்குக் கோபஸ்திரீகள், "தோழீ, நீ பக்தியாகிய அஞ்சனத்தைக் கண்களில் இட்டுக்கொண்டிருக்கிறாய். ஆதலால்தான் அப்படித் தெரிகின்றது" என்றார்கள்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

நெல்லுக்கு இறைத்த நீர் புல்லுக்கும் பாசிவது போன்று அந்த விசுவரூபக் காட்சியை ஸஞ்ஜயனும் வியாச பகவானும் அதே சமயத்தில் காண்கிறார்கள். தான் கண்டபடி ஸஞ்ஜயன் அதைத் திருதராஷ்டிரருக்கு விளக்குகிறான் :—

सञ्जय उवाच

**एवमुक्त्वा ततो राजन्महायोगेश्वरो हरिः ।**
**दर्शयामास पार्थाय परमं रूपमैश्वरम् ॥ ९**

ஸஞ்ஜய உவாச

ஏவமுக்த்வா ததோ ராஜன்மஹாயோகேச்வரோ ஹரி: ।
தர்சயாமாஸ பார்த்தாய பரமம் ரூபமைச்வரம் ॥ 9

सञ्जय उवाच ஸஞ்ஜய உவாச *ஸஞ்ஜயன் சொன்னது*

राजन् ராஜன் *திருதராஷ்டிர மகாராஜாவே* महायोगेश्वरः மஹாயோகேச்வர: *மஹாயோகேசுவரனாகிய* हरिः ஹரி: *ஹரியானவர்* एवं ஏவம் *இங்ஙனம்* उक्त्वा உக்த்வா *உரைத்துக்கொண்டு* ततः தத: *பிறகு* पार्थाय பார்த்தாய *பார்த்தனுக்கு* परमं பரமம் *மேலான* ऐश्वरं रूपं ஐச்வரம் ரூபம் *ஈசுவர ரூபத்தை* दर्शयामास தர்சயாமாஸ *காண்பித்தார்.*

ஸஞ்ஜயன் சொன்னது

**வேந்தே, யோகத்துக்குப் பேரிறைவனாகிய ஹரியானவர் இங்ஙனம் உரைத்தபின்பு பார்த்தனுக்குத் தம் மேலாம் ஈசுவர வடிவத்தைக் காட்டியருளினார். 9**

अनेकवक्त्रनयनमनेकाद्भुतदर्शनम् ।
अनेकदिव्याभरणम् दिव्यानेकोद्यतायुधम् ॥ १०

அநேக வக்த்ரநயனமநேகாத்புத தர்சனம் ।
அநேக திவ்யாபரணம் திவ்யாநேகோத்யதாயுதம் ॥ 10

अनेक वक्त्र नयनं அநேக வக்த்ர நயனம் *அநேக முகங்கள், கண்கள் உடையது* अनेक अद्भुत दर्शनं அநேக அத்புத தர்சனம் *பல அதிசயக் காட்சிகளையுடையது* अनेक दिव्य आभरणं அநேக திவ்ய ஆபரணம் *அநேக திவ்வியமான ஆபரணங்களையுடையது* दिव्य अनेक उद्यत आयुधं திவ்ய அநேக உத்யத ஆயுதம் *திவ்வியமான அநேக ஏந்திய ஆயுதங்களையுடையது.*

***அவ்வடிவம் அநேக முகங்கள், கண்கள் உடையது; பல அதிசயக் காட்சிகள் கொண்டது; தெய்விக ஆபரணங்கள் பல அணிந்தது; தெய்விக ஆயுதங்கள் அநேகம் ஏந்தியது. 10***

*உலகெலாம் அவன் சொரூபமாதலால் அவனுக்கு முகங்களும் கண்களும் கணக்கில் அடங்காதவைகள். மனிதனது சிற்றறிவுக்கு எட்டாத அரும் பெரும் செயல்கள் அவனால் நடைபெறுகின்றனவாதலால் அவனிடத்து அற்புத தர்சனங்கள் நிறைந்துள்ளன. அழகுக்குப் பிறப்பிடம் அவன். பிரகிருதியிலும் அதற்கப்பாலும் உள்ள சௌந்தரியம் யாவும் அவனுடையவைகள். அதை முன்னிட்டு அவன் தெய்விக ஆபரணங்களை அணிந்தவன் எனப்படுகிறான். தேவகாரியம் எவ்விதத்திலும் நடைபெற்றுவிடுகிறது. யாரும் அதற்கு இடைஞ்சல் செய்து*

*விடமுடியாது. அவன் ஏந்தியிருக்கும் திவ்விய ஆயுதங்கள் பல அப்பெருமையை விளக்குகின்றன.*

**दिव्यमाल्याम्बरधरं दिव्यगन्धानुलेपनम् ।**
**सर्वाश्चर्यमयं देवं अनन्तं विश्वतो मुखम् ॥ ११**

திவ்யமால்யாம்பரதரம் திவ்யகந்தானுலேபனம் ।
ஸர்வாஸ்சர்யமயம் தேவம் அனந்தம் விச்வதோ முகம் ॥ 11

दिव्य माल्य अम्बर धरं திவ்ய மால்ய அம்பர தரம் *திவ்வியமான மாலைகளும் ஆடைகளும் அணிந்தது* दिव्य गन्ध अनुलेपनं திவ்ய கந்த அனுலேபனம் *திவ்வியமான வாசனைத்திரவியங்கள் பூசப்பெற்றது* सर्व आश्चर्यमयं ஸர்வ ஆஸ்சர்யமயம் *அத்தியந்த ஆச்சரியமானது* देवं தேவம் *பிரகாசிப்பது* अनन्तं அனந்தம் *முடிவற்றது* विश्वतोमुखं விச்வதோ முகம் *எங்கும் முகமுடையது.*

***திவ்யமான மாலைகளும் ஆடைகளும் அணிந்தது; திவ்விய கந்தம் பூசியது; பெரும் வியப்பூட்டுவது; பிரகாசிப்பது; முடிவற்றது; எங்கும் முகமுடையது. 11***

*இயற்கையை உடலாய் ஏற்றுக்கொண்டு அதனுள் இறைவன் உயிராய் ஒளிருமிடத்து இவ் வருணனைகளெல்லாம் ஊனக்கண்ணால் காண்பவர்களுக்கே பொருத்தமுடையவைகளாகின்றன. ஞானக் கண்கொண்டு காணுமிடத்து தெய்வப் பெற்றியே யாண்டும் பொலியும்.*

**दिवि सूर्यसहस्रस्य भवेद्युगपदुत्थिता ।**
**यदि भाः सदृशी सा स्याद्भासस्तस्य महात्मनः ॥ १२**

திவி ஸூர்ய ஸஹஸ்ரஸ்ய பவேத்யுகபதுத்திதா ।
யதி பா: ஸத்ருசீ ஸா ஸ்யாத்பாஸஸ்தஸ்ய மஹாத்மன: ॥ 12

दिवि திவி *ஆகாசத்தில்* सूर्य सहस्रस्य ஸூர்ய ஸஹஸ்ரஸ்ய *ஆயிரம் சூரியர்களுடைய* भाः பா: *ஒளியானது* युगपत् யுகபத் *ஒரே காலத்தில்* उत्थिता भवेत् यदि உத்திதா பவேத் யதி *உதித்திருக்குமானால்* सा ஸா *அது* तस्य महात्मनः தஸ்ய மஹாத்மன: *அந்த மஹாத்மாவினுடைய* भासः பாஸ: *ஒளிக்கு* सदृशी स्यात् ஸத்ருசீ ஸ்யாத் *சமானமாக இருக்கும்.*

***வானத்தில் ஆயிரம் சூரியர்களுடைய ஒளி யானது ஒருமிக்க உதித்திருக்குமானால் அது அம் மஹாத்மாவின் ஒளிக்கு ஒப்பாகும். 12***

*. தெரிந்த ஒன்றை உபமானமாகக் கொண்டுதான் தெரியாத ஒன்றை ஏகதேசம் அறிந்துகொள்ளலாம் காணாதவர்க்கு அவனது காந்தி ஒன்றும் விளங்காது. உண் மையில் அவன் அவனுக்கே ஒப்பாவான். ஒருமிக்க உதய மான ஆயிரம் ஞாயிறுகளோடு ஒப்பிடுவதே அவன் ஒப்பில்லான் என்பதை விளக்குகிறது. ஆதலால் அவன் ஒருவனே மஹாத்மா என்னும் சொல்லுக்கு இலக்காகிறான்*

**तत्रैकस्थं जगत्कृत्स्नं प्रविभक्तमनेकधा ।**
**अपश्यद्देवदेवस्य शरीरे पाण्डवस्तदा ॥ १३**

தத்ரைகஸ்தம் ஜகத்க்ருத்ஸ்னம் ப்ரவிபக்தமனேகதா !
அபச்யத்தேவதேவஸ்ய சரீரே பாண்டவஸ்ததா || 13

तदा ததா *அப்பொழுது* पाण्डवः பாண்டவ: *பாண்டவன்* तत्र தத்ர *அந்த* देवदेवस्य தேவதேவஸ்ய *தேவர்களுக்கு தேவனுடைய* शरीरे சரீரே *சரீரத்தில்* अनेकधा प्रविभक्तं அனேகதா ப்ரவிபக்தம் *பலவிதமாய்ப் பிரிந்துள்ள* कृत्स्नं जगत् க்ருத்ஸ்னம் ஜகத் *ஜகத் முழுவதையும்* एकस्थं ஏகஸ்தம் *ஒன்று சேர்ந்திருப்பதை* अपश्यत् அபச்யத் *பார்த்தான்.*

***அப்பொழுது பலவாய்ப் பிரிந்துள்ள உலகம் யாவும் தேவ தேவனுடைய தேகத்தில் ஒன்றுகூடி யிருப்பதைப் பாண்டவன் பார்த்தான். 13***

*வேற்றுமையில் ஒற்றுமை இயற்கையின் அமைப்பு. வானவர், மக்கள், விலங்கு, பறவை, நிலைத்திணை ஆகிய எண்ணிறந்த இனங்களாக உயிர்கள் வடிவெடுக்கின்றன. இவையாவும் சேதனத்தின் தோற்றங்கள். மண் உலகு, கீழ் உலகு, மேல் உலகு ஆகிய இவையாவும் போகத்துக் குரிய இடங்களாகின்றன. போகப் பொருள்கள் பல இவ்வுலகெங்கும் நிறைந்திருக்கின்றன. இவை யாவும்*

*உயிர்க்குயிராய், அறிவுக்கறிவாய் உள்ள இறைவனில் அடங்கியிருப்பது ஒற்றுமையைக் காட்டுகிறது.*

**ततः स विस्मयाविष्टो हृष्टरोमा धनञ्जयः ।**
**प्रणम्य शिरसा देवं कृताञ्जलिरभाषत ॥ १४**

ததஃ ஸ விஸ்மயாவிஷ்டோ ஹ்ருஷ்டரோமா தனஞ்ஜயஃ ।
ப்ரணம்ய சிரஸா தேவம் க்ருதாஞ்ஜலிரபாஷத ॥ 14

ततः ததஃ *பிறகு* सः ஸஃ *அவன்* धनञ्जयः தனஞ்ஜயஃ *தனஞ்ஜயன்* विस्मय आविष्टः விஸ்மய ஆவிஷ்டஃ *வியப்படைந்தவனாய்* हृष्ट रोमा ஹ்ருஷ்ட ரோமா *மயிர்க் கூச்சலுடையவனாய்* देवं தேவம் *தேவனை* शिरसा சிரஸா *தலையால்* प्रणम्य ப்ரணம்ய *வணங்கி* कृत अञ्जलिः க்ருத அஞ்ஜலிஃ *கூப்பிய கைகளுடன்* अभाषत அபாஷத *பேசினான்.*

***பின்பு தனஞ்ஜயன் வியப்படைந்து, உரோமம் சிலிர்த்து, தேவனைத் தலையால் வணங்கிக் கைகூப்பிக் கூறுவானாயினான். 14***

*தேவதர்சனம் மனதின்கண் பெரிய மாறுதலை உண்டுபண்ணுகிறது. அது அகத்தும் புறத்தும் சில அறிகுறிகளுடன் பரிணமிக்கிறது. வியப்படைதல் உள்ளத்தின் இயல்பு. உரோமம் சிலிர்த்தல், தலை வணங்குதல், கை கூப்புதல் முதலியன உடலின்கண் தோன்றும் பரவசச் செயல்களாம். இனி, மன நிறைவு நிறைமொழியாய்ப் பொங்கி வழிகிறது. அது வருமாறு :—*

**अर्जुन उवाच**

**पश्यामि देवांस्तव देव देहे सर्वांस्तथा भूतविशेषसङ्घान् ।**
**ब्रह्माणमीशं कमलासनस्थमृषींश्च सर्वानुरगांश्च दिव्यान् ॥ १५**

அர்ஜுன உவாச

பச்யாமி தேவான்ஸ்தவ தேவ தேஹே
ஸர்வான்ஸ்ததா பூதவிசேஷ ஸங்கான் ।
ப்ரஹ்மாண மீசம் கமலாஸனஸ்த்தம்
ருஷீன்ஸ்ச ஸர்வானுரகான்ஸ்ச திவ்யான் ॥ 15

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது*

देव தேவ *ஓ தேவ* तव தவ *உம்முடைய* देहे தேஹே *தேகத்தில்* सर्वान् देवान् ஸர்வான் தேவான் *ஸமஸ்த தேவர்களையும்* तथा ததா *அப்படியே* भूत विशेष सङ्घान् பூத விசேஷ ஸங்கான் *பலப்பல பூதத் தொகுதிகளையும்* कमल आसनस्थं ईशं ब्रह्माणं கமல ஆஸனஸ்தம் ஈசம் ப்ரஹ்மாணம் *கமல ஆசனத்திலிருக்கிற இறைவன் ஆகிய பிரம்மாவையும்* सर्वान् ऋषीन् च ஸர்வான் ருஷீன் ச *ஸகல ரிஷிகளையும்* दिव्यान् उरगान् च திவ்யான் உரகான் ச *திவ்வியமான ஸர்ப்பங்களையும்* पश्यामि பச்யாமி *பார்க்கிறேன்.*

அர்ஜுனன் சொன்னது

***தேவா, உமது உடலில் தேவர்களெல்லாரையும், உயிர்த் தொகுதிகள் அனைத்தையும், தாமரை மலர்மிசை அமர்ந்துள்ள இறைவன் பிரம்மாவையும், எல்லா ரிஷிகளையும், தேவஸர்ப்பங்களையும் காண்கிறேன்.*** ***15***

*உயிர்களுக்கெல்லாம் தலைவனாயிருப்பதால் நான்முக பிரம்மா ஈசன் என்று அழைக்கப்படுகிறார். அவர் மஹா விஷ்ணுவின் உந்திக் கமலத்தில் வீற்றிருப்பவர். சரம் அசரம் ஆகிய உயிர்த் தொகுதிகள் யாவும் விசுவ ரூபத்தில் அடங்கப் பெற்றிருக்கின்றன. வசிஷ்டர் முதலிய ரிஷிகளும் வாஸுகி முதலிய ஸர்ப்பங்களும் அங்குத் தென்படுகின்றன.*

**अनेक बाहूदरवक्त्रनेत्रं पश्यामि त्वां सर्वतोऽनन्तरूपम् ।**
**नान्तं न मध्यं न पुनस्तवादिं पश्यामि विश्वेश्वर विश्वरूप ॥ १६**

அனேக பாஹூதரவக்த்ர நேத்ரம்
பச்யாமி த்வாம் ஸர்வதோऽனந்த ரூபம் ।
நாந்தம் ந மத்யம் ந புனஸ்தவாதிம்
பச்யாமி விச்வேச்வர விச்வரூப ॥ 16

विश्व ईश्वर விச்வ ஈச்வர *விசுவநாதா* विश्व रूप விச்வ ரூப *அகிலாண்ட வடிவினனே* अनेक बाहु उदर वक्त्र नेत्रं அனேக பாஹு உதர வக்த்ர நேத்ரம் *அநேகங்களான கைகள், வயிறுகள், முகங்கள்,*

*கண்கள் உடைய* अनन्त रूपं அனந்த ரூபம் *அநேக ரூபங்களையுடைய தும்* त्वां த்வாம் *உன்னை* सर्वतः ஸர்வத: *எங்கும்* पश्यामि பச்யாமி *பார்க்கிறேன்* पुनः புன: *மேலும்* तव தவ *உம்முடைய* न अन्तं ந அந்தம் *முடிவையாவது* न मध्यं ந மத்யம் *மத்தியையாவது* न आदिं पश्यामि ந ஆதிம் பச்யாமி *ஆதியையாவது காண்கிறேனில்லை.*

***உலகவடிவுடைய உலகநாயகா, எண்ணிறந்த கைகள், வயிறுகள், முகங்கள், கண்கள் உடைய உமது அலகில்லா உருவத்தை எங்கும் பார்க்கிறேன். மேலும் உமது முடிவையோ இடையையோ துவக்கத்தையோ காண்கிறேனில்லை. 16***

*தோன்றிய யாவும் அவனேயாகி அவைகளுக்கு அப்பாலும் அவனே இருக்கிறான் என்பது பொருள்.*

**किरीटिनं गदिनं चक्रिणं च तेजोराशिं सर्वतोदीप्तिमन्तम् ।**
**पश्यामि त्वां दुर्निरीक्ष्यं समन्ताद्दीप्तानलार्कद्युतिमप्रमेयम् ॥ १७**

கிரீடினம் கதினம் சக்ரிணம் ச
தேஜோ ராசிம் ஸர்வதோ தீப்திமந்தம் ।
பச்யாமி த்வாம் துர்நிரீக்ஷ்யம் ஸமந்தாத்-
தீப்தானலார்கத்யுதி மப்ரமேயம் ॥ 17

किरीटिनं கிரீடினம் *கிரீடமுடையவரை* गदिनं கதினம் *கதையையுடையவரை* चक्रिणं சக்ரிணம் *சக்கரத்தையுடையவரை* च ச *உம்* सर्वतः ஸர்வத: *எங்கும்* दीप्तिमन्तं தீப்திமந்தம் *பிரகாசிக்கும்* तेजोराशिं தேஜோராசிம் *ஒளிப்பிழம்பை* दुर्निरीक्ष्यं துர்நிரீக்ஷ்யம் *கண் கொண்டு பார்க்கமுடியாதவரை* दीप्त अनल अर्क द्युतिं தீப்த அனல அர்க த்யுதிம் *கொளுத்துகின்ற தீயும் சூரியனும் போன்றவரை* अप्रमेयं அப்ரமேயம் *அளவிடமுடியாதவரை* त्वां த்வாம் *உம்மை* समन्तात् ஸமந்தாத் *எங்கும்* पश्यामि பச்யாமி *பார்க்கிறேன்.*

***கிரீடம் தரித்து, கதை தாங்கி, சக்கரம் ஏந்தியவராய், எங்கும் வீசும் ஒளிப்பிழம்பாய், காண்பதற்கரியவராய், சுடும் சூரியாக்கினி போன்றவராய், அளப்பரியவராய் உள்ள உம்மை நான் எங்கும் காண்கிறேன். 17***

சொப்பனத்தில் காணும் ஜோதி ஊனக் கண்ணுக்குத் தட்டுப்படுதல் இல்லையெனினும் அதில் கண் கூசுவது போன்றிருக்கிறது. அதிலும் பரந்த பாங்கில் ஞானக்கண்ணுக்கும் கூசுதல் உண்டாகிறது. அவ்வொளி உள்ளத்தை உறுதிப்படுத்தும் தன்மையது. ஞானக்கண் மற்ற இந்திரியங்களைவிடப் பன்மடங்கு தெளிவுடையது எனினும், அதைக்கொண்டும் விசுவ ரூபத்தை முழுதும் அளந்துவிட முடியாது. ஆகையால் அது அப்பிரமேயம் எனப்படுகிறது.

சத்வ குணத்தின் நிறம் தூவெண்மை. ஆத்ம பிரகாசம் அதன்கண் தோயுமிடத்து அது சுடர்விட்டெரியும் சூரியாக்கினி போன்று மிளிர்வது இயல்பு.

இத்தகைய காட்சியை அடையப்பெற்ற அர்ஜுனன் சித்தாந்தப் படுத்துவது யாது என்றால்:—

**त्वमक्षरं परमं वेदितव्यं त्वमस्य विश्वस्य परं निधानम् ।**
**त्वमव्ययः शाश्वतधर्मगोप्ता सनातनस्त्वं पुरुषो मतो मे ।। १८**

த்வமக்ஷரம் பரமம் வேதிதவ்யம்
த்வமஸ்ய விச்வஸ்ய பரம் நிதானம் ।
த்வமவ்யய: சாச்வததர்மகோப்தா
ஸநாதனஸ்த்வம் புருஷோ மதோ மே ॥ 18

त्वं த்வம் *தாம்* अक्षरं அக்ஷரம் *அழியாப்பொருள்* परमं பரமம் *பரம்பொருள்* वेदितव्यं வேதிதவ்யம் *அறியவேண்டிய பொருள்* त्वं த்வம் *தாம்* अस्य विश्वस्य அஸ்ய விச்வஸ்ய *இந்தப் பிரபஞ்சத்துக்கு* परं निधानं பரம் நிதானம் *மேலான இருப்பிடம்* त्वं த்வம் *தாம்* अव्ययः அவ்யய: *மாறாதவர்* शाश्वत धर्म गोप्ता சாச்வத தர்ம கோப்தா *சாசுவதமான தர்ம ரக்ஷகர்* त्वं த்வம் *தாம்* सनातनः ஸநாதன: *எப்பொழுதுமிருப்பவர்* पुरुषः புருஷ: *பரமாத்மா என்று* मे मतः மே மத: *என்னால் அறியப்படுகிறீர்.*

***தாம் அழியாத பரம்பொருள், அறியத்தகுந்தவர், இவ்வுலகுக்கு ஒப்பற்ற உறைவிடம் நீர்; மாறாதவர், ஸநாதன தர்ம ரக்ஷகர், என்றென்றுமுள்ள பரமாத்மா தாம் என என்னால் அறியப்படுகிறீர். 18***

*பகவானை அறிந்தவன் பரத்துக்கு உரியவன் ஆகின்றான். ஆதலால் பகவான் ஒருவரே சாதகன் ஒருவனால் அறியத்தகுந்தவர். சஞ்சரிக்கும் மேகத்துக்குச் சலனமற்ற ஆகாசம் இருப்பிடமாவது போன்று உலகம் யாவுக்கும் இருப்பிடம் பரமாத்மா. உலகம் அழியும் பொழுதும் அவர் மாறுதிருக்கிறார். அவருடைய சந்நிதான விசேஷத்தால் தர்மம் — இயற்கையின் நடைமுறை—கோணுது நிற்கிறது. இவை யாவும் இப்பொழுது அர்ஜுனனுக்குப் பிரத்தியக்ஷமாகின்றன.*

*மேலும் அவன் அறிவதாவது :—*

**अनादिमध्यान्तमनन्तवीर्यमनन्तबाहुं शशिसूर्यनेत्रम् ।**
**पश्यामि त्वां दीप्तहुताशवक्त्रं स्वतेजसा विश्वमिदं तपन्तम् ॥ १९**

அனாதி மத்யாந்த மனந்த வீர்ய
மனந்தபாஹும் சசி ஸூர்ய நேத்ரம் |
பச்யாமி த்வாம் தீப்தஹுதாச வக்த்ரம்
ஸ்வதேஜஸா விச்வமிதம் தபந்தம் || 19

अनादि मध्य अन्तं அனாதி மத்ய அந்தம் *ஆதி நடு அந்தம் இல்லாதவர்* अनन्त वीर्यं அனந்த வீர்யம் *முடிவில்லாத சக்திமான்* अनन्त बाहुं அனந்த பாஹும் *எண்ணிறந்த கைகளையுடையவர்* शशि सूर्य नेत्रं சசி ஸூர்ய நேத்ரம் *சந்திர சூரியர்களைக் கண்களாகவுடையவர்* दीप्त हुताश वक्त्रं தீப்த ஹுதாச வக்த்ரம் *ஜ்வலிக்கின்ற அக்னியை முகமாகவுடையவர்* स्व तेजसा ஸ்வ தேஜஸா *தமது தேஜஸினால்* इदं विश्वं இதம் விச்வம் *இந்தப் பிரபஞ்சத்தை* तपन्तं தபந்தம் *எரிக்கின்ற* त्वां த்வாம் *உம்மை* पश्यामि பச்யாமி *பார்க்கிறேன்.*

***ஆதி நடு அந்தம் இல்லாதவரும், முடிவில்லாத சக்தியையுடையவரும், எண்ணிறந்த கைகளையுடையவரும், சந்திர சூரியர்களைக் கண்களாகவுடையவரும், வெந்தழல் வாய் படைத்தவரும், தமது தேஜஸினால் உலகம் யாவையும் எரிக்கின்றவரும் ஆகிய உம்மைக் காண்கிறேன். 19***

*கால தேச வர்த்தமானத்தில் கட்டுப்படாமையினுல் அவருக்கு ஆதி நடு அந்தமில்லை. உலகத்தைப் படைத்துக் காத்துத் துடைப்பது அவருக்கு விளையாட்டாக நடைபெறுவதாதலால் அவர் அனந்த வீரியமுடையவர். உலகத்திலுள்ள கைகளையெல்லாம் கொண்டு அவர் தமது காரியத்தைச் செய்துமுடிப்பதால் அவர் கணக்கற்ற கைகளையுடையவர் என்று சொல்லப்படுகிறுர். இந்திரியங்களுக்குப் பிரகாசத்தைக் கொடுப்பது ஆத்மா. சந்திரன், சூரியன், அக்கினி ஆகியவைகள் பெற்றுள்ள ஒளி பரமாத்மாவினிடத்திருந்து பிரதிபலிக்கின்ற ஒளிகளாம். அகிலாண்டத்திலும் ஆத்மபிரகாசம் ஜ்வலிப்பதால் உபசாரமாக ஞாயிறு திங்கள் கண்களென்றும், தீ வாயென்றும் வர்ணிக்கப்படுகின்றன. விறகுக் கட்டையில் தீ வியக்தமாவது போன்று விசுவத்தின் வாயிலாகப் பரம்பொருள் வியக்தமாகிறது.*

**द्यावापृथिव्योरिदमन्तरं हि व्याप्तं त्वयैकेन दिशश्च सर्वाः ।**
**दृष्ट्वाद्भुतं रूपमुग्रं तवेदं लोकत्रयं प्रव्यथितं महात्मन् ॥ २०**

த்யாவா ப்ருதிவ்யோரிதமந்தரம் ஹி
வ்யாப்தம் த்வயைகேன திசஸ்ச ஸர்வா: ।
த்ருஷ்ட்வாத்புதம் ரூபமுக்ரம் தவேதம்
லோகத்ரயம் ப்ரவ்யதிதம் மஹாத்மன் ॥ 20

महात्मन् மஹாத்மன் *மஹாத்மாவே* द्यावा पृथिव्योः த்யாவா ப்ருதிவ்யோ: *விண்ணுலகு மண்ணுலகினுடைய* इदं अन्तरं இதம் அந்தரம் *இந்த இடைவெளி* त्वया एकेन हि த்வயா ஏகேன ஹி *உம் ஒருவராலேயே* व्याप्तं வ்யாப்தம் *நிறையப் பெற்றிருக்கிறது* सर्वाः दिशः च ஸர்வா: திச: ச *எல்லா திசைகளும் (அப்படியே)* तव अद्भुतं தவ அத்புதம் *உம்முடைய அற்புதமான* इदं उग्रं रूपं இதம் உக்ரம் ரூபம் *இந்த உக்கிரமான ரூபத்தை* दृष्ट्वा த்ருஷ்ட்வா *பார்த்து* लोक त्रयं லோக த்ரயம் *மூவுலகும்* प्रव्यथितं ப்ரவ்யதிதம் *நடுங்குகிறது.*

***மஹாத்மாவே, விண் மண் உலகின் இடைவெளியும் மற்ற திசைகள் யாவும் உம்மாலே நிரம்***

**பப் பெற்றிருக்கின்றன. உமது அற்புதமான இந்த உக்கிர வடிவத்தைக்கண்டு மூவுலகும் நடு நடுங்குகிறது.** **20**

*இறைவன் நீக்கமற எங்கும் நிறைந்துள்ளான் என்பது இப்பொழுது அர்ஜுனனுக்கு பிரத்யக்ஷமாக விளங்குகிறது. இனிமையும் பயங்கரமும் ஆகிய இரண்டும் இறைவன்பால் உள. அவைகளுள் ஈண்டு பயங்கரக் காட்சியைப் பார்த்தன் பார்க்கிறான். அவனது மனப்பான்மையே அதற்குக் காரணம். பயங்கரமான யுத்தக்காட்சி தன்னுடைய சிருஷ்டி யென்று முதலில் எண்ணினான். உலகைத் திருத்தியமைக்கத் தெய்வமே அத்தகைய உக்கிர வடிவெடுக்கவல்லதென்று இப்பொழுது உணர்கிறான்.*

*வெற்றி யாருடையது என்ற ஐயம் அர்ஜுனனுக்கு இருந்தது. (அத். 2-சு. 6) அதை அகற்றுதற்கான காட்சியைப் பகவான் தருகிறார். பாண்டவர்களுக்கே வெற்றி என்பது விளங்குகிறது. அதைக் காணலுற்ற குந்திமைந்தன் கூறுகிறான் :—*

**अमी हि त्वां सुरसङ्घा विशन्ति केचिद्भीताः प्राञ्जलयो गृणन्ति ।**
**स्वस्तीत्युक्त्वा महर्षिसिद्धसङ्घाः स्तुवन्ति त्वां स्तुतिभिः पुष्कलाभिः ॥**

அமீ ஹி த்வாம் ஸுரஸங்கா விசந்தி
கேசித்பீதா: ப்ராஞ்ஜலயோ க்ருணந்தி ।
ஸ்வஸ்தீத்யுக்த்வா மஹர்ஷிஸித்தஸங்கா:
ஸ்துவந்தி த்வாம் ஸ்துதிபி: புஷ்கலாபி: ॥ 21

अमी அமீ *இந்த* सुर सङ्घाः ஸுர ஸங்கா: *தேவ கூட்டங்கள்* त्वां हि த்வாம் ஹி *உம்மிடத்தே* विशन्ति விசந்தி *பிரவேசிக்கிறார்கள்* केचित् கேசித் *சிலர்* भीताः பீதா: *பயந்தவர்களாய்* प्राञ्जलयः ப்ராஞ்ஜலய: *கைகூப்பியவர்களாய்* गृणन्ति க்ருணந்தி *புகழ்கிறார்கள்* महर्षि सिद्ध सङ्घाः மஹர்ஷி ஸித்த ஸங்கா: *மஹரிஷிகள் சித்தர்கள் திரளாம்* स्वस्ति इति उक्त्वा ஸ்வஸ்தி இதி உக்த்வா *வாழ்க என்று உரைத்து* पुष्कलाभिः புஷ்கலாபி: *பூரணமான* स्तुतिभिः ஸ்துதிபி: *ஸ்துதிகளால்* त्वां த்வாம் *தம்மை* स्तुवन्ति ஸ்துவந்தி *போற்றுகிறார்கள்.*

***இவ்வானவர் எல்லாம் உன்னிடம் புகுகின் றனர். சிலர் அஞ்சிக் கைகூப்பி நின்னைப் புகழ்கின் றனர். மஹரிஷி சித்தர் குழாம் வாழ்கவென்று நிறைபுகழ் புரிந்து நின்னைப் போற்றுகின்றனர். 21***

நர வடிவெடுத்து வந்துள்ள வசுக்கள் முதலிய தேவ கணங்கள் தங்கள் பூலோக லீலையை முடித்துக்கொண்டு பகவானிடத்து ஒடுங்குகின்றனர். பூ பாரம் ஒழிகிறது என்பதைத் தெரிந்தும் தெரியாமலும் அவர்கள் மௌன மாக மறைகிறார்கள். பகவானுடைய உக்கிர விளையாட்டை ஒருவாறு அறிந்துகொண்ட சிலர் சிரசின்மீது கைகூப்பி நடுங்கி வணங்குகின்றனர். அச்சத்தால் நிறைமொழி யொன்றும் இயம்ப அவர்களுக்கு இயலவில்லை. உலகுக்குக் கேடுகள் பல வரப்போகின்றனவென்று குறிப்பால் அறிந்த நாரதர் போன்ற மகரிஷிகளும் கபிலர் போன்ற சித்தர் களும் சம்பூரண ஸ்தோத்திரங்களால், சொற்சுவையும் பொருட் சுவையும் நிறைந்த புகழ்களால் "உலகுக்கு மங்களம் உண்டாகட்டும்" என்று போற்றினார்கள். "உடலில் உள்ள கேடுகளை நீக்குதற்பொருட்டு நோய்வரு வதுபோன்று உலகில் உள்ள கேடுகளை நீக்குதற்பொருட்டு இறைவன் இத்தகைய ஸம்ஹாரச் செயலைச் செய்க. அதினின்று நன்மை விளைக" என்ற கருத்தடங்கிய பாசு ரங்களைப் பேரறிஞர் பாடலுற்றார்கள். இறைவனது ஆணையால் நடைபெறும் உலகச் செயல்களில் பொருள் படாதவை ஒன்றுமில்லையென்பது பேரறிஞருக்கு விளங்கு கிறது.

**रुद्रादित्या वसवो ये च साध्या विश्वेऽश्विनौ मरुतश्चोष्मपाश्च ।**
**गन्धर्वयक्षासुरसिद्धसङ्घा वीक्षन्ते त्वां विस्मिताश्चैव सर्वे ॥ २२**

ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்யா
விச்வேऽச்விநௌ மருதஸ்சோஷ்மபாஸ்ச ।
கந்தர்வயக்ஷாஸுரஸித்தஸங்கா
வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாஸ்சைவ ஸர்வே ॥ 22

रुद्र आदित्याः ருத்ர ஆதித்யா: *ருத்திரர்கள், ஆதித்தியர்கள்* वसवः வஸவ: *வசுக்கள்* ये யே *யார்* साध्याः च ஸாத்யா: ச *சாத்தியர்களும்* विश्वे விச்வே *விசுவே தேவர்களும்* अश्विनौ அச்விநௌ *அச்வினிகள் இருவரும்* मरुतः च மருத: ச *மருத்துக்களும்* ऊष्मपाः ஊஷ்மபா: *ஊஷ்மபர் என்கிற பித்ரு தேவதைகளும்* गन्धर्व यक्ष असुर सिद्ध सङ्घाः கந்தர்வ யக்ஷ அஸுர ஸித்த ஸங்கா: *கந்தர்வர்கள், யக்ஷர், அசுரர், சித்தர்கள் கூட்டம்* सर्वे एव ஸர்வே ஏவ *எல்லாருமே* विस्मिताः விஸ்மிதா: *வியப்படைந்து* त्वां च த்வாம் ச *உம்மையே* वीक्षन्ते வீக்ஷந்தே *பார்க்கிறார்கள்.*

***உருத்திரர், ஆதித்தியர், வசுக்கள், சாத்தியர், விசுவேதேவர், அசுவினிதேவர், மருத்துக்கள், ஊஷ்மபர், கந்தர்வர், யக்ஷர், அசுரர், சித்தர் இவர்கள் கூட்டம் வியப்படைந்து உம்மையே பார்க்கிறார்கள்.***

*ஊஷ்மபர் என்பது உஷ்ணமாயிருப்பதைப் பானம் செய்பவர்கள் என்று பொருள். பித்ரு தேவர்கள் அங்ஙனம் அருந்துதலில் மகிழ்ச்சி யடைந்தார்கள். இத்தகைய தேவ கணங்களும் பகவானுடைய விசுவ ரூபத்தை முழுதும் தெரிந்துகொள்ள இயலாதவர்களா யிருக்கிறார்கள். தங்கள் அறிவுக்கு எட்டியவளவு அந்த ரூபத்தைக் கண்டு வியந்து நிற்கிறார்கள்.*

**रूपं महत्ते बहुवक्त्रनेत्रं महाबाहो बहुबाहूरुपादम् ।**
**बहूदरं बहुदंष्ट्राकरालं दृष्ट्वा लोकाः प्रव्यथितास्तथाहम् ॥ २३**

ரூபம் மஹத்தே பஹுவக்த்ர நேத்ரம்
மஹாபாஹோ பஹுபாஹூருபாதம் ।
பஹூதரம் பஹுதன்ஷ்ட்ராகராலம்
த்ருஷ்ட்வா லோகா: ப்ரவ்யதிதாஸ்ததாஹம் ॥ 23

महाबाहो மஹாபாஹோ *பெரிய தோள்களையுடையவரே* बहु वक्त्र नेत्रं பஹு வக்த்ர நேத்ரம் *பல முகங்களையும் கண்களையும் உடைய* बहु बाहु ऊरु पादं பஹு பாஹு ஊரு பாதம் *பல கைகள், துடைகள், பாதங்கள் உடைய* बहु उदरं பஹு உதரம் *பல வயிறுகளையுடைய*

बहु दंष्ट्रा करालं பஹு- தம்ஷ்ட்ரா கராலம் *பல வளைந்த பற்களால் பய முறுத்துகிற* ते தே *உம்முடைய* महत् மஹத் *பெரிய* रूपं ரூபம் *வடிவத்தை* दृष्ट्वा த்ருஷ்ட்வா *பார்த்து* लोकाः லோகா: *உலகங்கள்* प्रव्यथिताः ப்ரவ்யதிதா: *நடுங்குகின்றன* अहं அஹம் *நான்* तथा ததா *அப்படியே.*

***நெடுந்தோளாய், பல முகங்கள், கண்கள், பல கைகள், துடைகள், பாதங்கள், பல வயிறுகள், பயமுறுத்தும் பல வளைந்த பற்கள் உடைய உமது பேருருவைக் கண்டு உலகங்கள் நடுங்குகின்றன; யானும் அப்படியே.*** **23**

*தன் மனநிலையையே ஒருவன் உலகின்கண் காண்கிறான். பகவானது விசுவரூபத்தையும் அவரது பயங்கரச் செயலையும் முன்பு அர்ஜுனன் கண்டு அறிந்தவன் அல்லன். அதை அவன் இப்பொழுது முதன் முதல் கண்டு கலங்குகிறான். உலகிலுள்ள மற்ற உயிர்களும் கலங்குவதாக அவன் காட்சியில் படுகிறது. அவனது நிலையில் இருக்கிறவர்களுக்கெல்லாம் கலக்கமேயாம். ஏன் அவனுக்கு அச்சம் ஏற்பட்டதெனின் அதற்குவிடை அவனது வாயினின்று வருகிறது:—*

**नभःस्पृशं दीप्तमनेकवर्णं व्यात्ताननं दीप्तविशालनेत्रम् ।**
**दृष्ट्वा हि त्वां प्रव्यथितान्तरात्मा धृतिं न विन्दामि शमं च विष्णो ॥**

நப: ஸ்ப்ருசம் தீப்தமனேக வர்ணம்
வ்யாத்தானனம் தீப்தவிசால நேத்ரம் ।
த்ருஷ்ட்வா ஹி த்வாம் ப்ரவ்யதிதாந்தராத்மா
த்ருதிம் ந விந்தாமி சமம் ச விஷ்ணோ ॥ 24

विष्णो விஷ்ணோ *விஷ்ணுவே* नभःस्पृशं நப: ஸ்ப்ருசம் *வான் அளாவும்* दीप्तं தீப்தம் *ஜ்வலிக்கிற* अनेकवर्णं அனேக வர்ணம் *பலநிறங்களையுடைய* व्यात्त आननं வ்யாத்த ஆனனம் *திறந்த வாய்களையுடைய* दीप्त विशाल नेत्रं தீப்த விசால நேத்ரம் *ஜ்வலிக்கின்ற விசாலமான கண்களையுடைய* त्वां த்வாம் *உம்மை* दृष्ट्वा हि த்ருஷ்ட்வா ஹி *பார்த்ததும்* प्रव्यथित अन्तरात्मा ப்ரவ்யதித அந்தராத்மா *மனம் நடுங்கினவனாய்*

धृतिं த்ருதிம் *தைரியத்தையும்* शमं च சமம் ச *மனவமைதியையும்* न विन्दामि ந விந்தாமி *காண்கிறேனில்லை.*

**விஷ்ணுவே, வான் அளாவிப் பல நிறங்களுடன் பிரகாசிக்கின்ற, திறந்த வாய்களையுடைய, கனல் வீசும் விசாலக் கண்களையுடைய, உம்மைக் கண்டு கலங்கிய நான் தைரியத்தையும் அமைதியையும் காண்கிறேனில்லை.** 24

*காணாத ஒன்றைக் காணுமிடத்து ஒருவனுக்குக் கலக்கம் உண்டாவது இயல்பு. கோர சொரூபத்தை சாந்த சொரூபத்தோடு சேர்த்துணரும் பரியந்தம் மனக்கலக்கத்தை மாற்றலரிது.*

*அம் மனக்கலக்கத்தால் மேலும் விளைந்தது யாது? விடை வருகிறது :—*

**दंष्ट्राकरालानि च ते मुखानि दृष्ट्वैव कालानलसन्निभानि ।**
**दिशो न जाने न लभे च शर्म प्रसीद देवेश जगन्निवास ॥ २५**

தன்ஷ்ட்ராகராலானி ச தே முகானி
த்ருஷ்ட்வைவ காலானல ஸன்னிபானி ।
திசோ ந ஜானே ந லபே ச சா்ம
ப்ரஸீத தேவேச ஜகந்நிவாஸ ॥ 25

देवेश தேவேச *தேவர்களுக்கு ஈசா* दंष्ट्रा करालानि தன்ஷ்ட்ரா கராலானி *பயமுறுத்துகிற கோரப்பற்களுடைய* काल अनल सन्निभानि च கால அனல ஸன்னிபானி ச *பிரளயகால அக்கினிக்கு ஒப்பானவும்* ते தே *உம்முடைய* मुखानि முகானி *முகங்களை* दृष्ट्वा एव த்ருஷ்ட்வா ஏவ *பார்த்த மாத்திரத்திலேயே* दिशः திச: *திசைகளை* न जाने ந ஜானே *அறிகிறேனில்லை* शर्म சா்ம *அமைதி* न च लभे ந ச லபே *அடைகிறேனில்லை* जगन्निवास ஜகந்நிவாஸ *ஜகத்துக்கு ஆதாரமாயிருப்பவரே* प्रसीद ப்ரஸீத *அருள் புரிக.*

**தேவர் தலைவா, அச்சமூட்டும் கோரப் பற்களுடன் ஊழித் தீக்கு ஒப்பான உமது முகங்களைக்**

*கண்டதும் எனக்குத் திசைகள் தெரியவில்லை; அமைதியும் அடைந்திலேன். வையகத்துக்கு வைப்பிடமே, அருள் புரிக.* 25

ஒரு சூரியனை அல்லது சந்திரனை இலக்காக வைத்துக்கொண்டு திசைகள் அறியப்படுகின்றன. பார்க்குமிடமெங்கும் பரஞ்சோதியாயிருப்பதால் திக்குகள் தென்படாமற் போய்விட்டன. ஊழித்தீயானது பொருள்களையெல்லாம் விழுங்குவதுபோன்று உமது அலகில்லா ஜோதி திசைகளை விழுங்கிவிட்டது. மீண்டும் அமைதியடைதற்பொருட்டு சாந்த சொரூபத்தைக் காட்டியருள்வீராக.

**अमी च त्वां धृतराष्ट्रस्य पुत्राः सर्वे सहैवावनिपालसङ्घैः ।**
**भीष्मो द्रोणः सूतपुत्रस्तथासौ सहास्मदीयैरपि योधमुख्यैः ॥ २६**
**वक्त्राणि ते त्वरमाणा विशन्ति दंष्ट्राकरालानि भयानकानि ।**
**केचिद्विलग्ना दशनान्तरेषु संदृश्यन्ते चूर्णितैरुत्तमाङ्गैः ॥ २७**

அமீ ச த்வாம் த்ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா:
ஸர்வே ஸஹைவாவனிபாலஸங்கை: ।
பீஷ்மோ த்ரோண: ஸூதபுத்ரஸ்ததாஸௌ
ஸஹாஸ்மதீயைரபி யோதமுக்யை: ॥ 26
வக்த்ராணி தே த்வரமாணா விசந்தி
தன்ஷ்ட்ராகராலானி பயானகானி ।
கேசித்விலக்னா தசனாந்தரேஷு
ஸந்த்ருச்யந்தே சூர்ணிதைருத்தமாங்கை: ॥ 27

अवनिपाल सङ्घैः सह एव அவனிபால ஸங்கை: ஸஹ ஏவ *பார் ஆளும் வேந்தர் கூட்டத்துடனே* अमी च அமீ ச *இதோ இந்த* धृतराष्ट्रस्य த்ருதராஷ்ட்ரஸ்ய *திருதராஷ்டிரனுடைய* सर्वे पुत्राः ஸர்வே புத்ரா: *எல்லா புத்திரர்களும்* तथा ததா *அப்படியே* भीष्मः பீஷ்ம: *பீஷ்மர்* द्रोणः த்ரோண: *துரோணர்* असौ सूतपुत्रः அஸௌ ஸூதபுத்ர: *இந்த சூத புத்திரன் (கர்ணன்)* अस्मदीयैः अपि அஸ்மதீயை: அபி *நம்மவர்களிலும்* योधमुख्यैः सह யோதமுக்யை: ஸஹ *முக்கியமான யுத்த வீரர்களுடன்*

त्वरमाणाः த்வரமாணு: *பரபரப்புடன்* ते தே *உம்முடைய* दंष्ट्रा करालानि தன்ஷ்ட்ரா கராலானி *கோரப்பற்களுடைய* भयानकानि பயானகானி *பயங்கரமான* वक्त्राणि வக்த்ராணி *வாய்களுள்* त्वां த்வாம் *உம்மிடத்து* विशन्ति விசந்தி *பிரவேசிக்கிறுர்கள்* केचित् கேசித் *சிலர்* चूर्णितैः उत्तम अङ्गैः சூர்ணிதை: உத்தம அங்கை: *பொடி செய்யப்பட்ட தலைகளோடு* दशन अन्तरेषु தசன அந்தரேஷு *பல்லிடுக்குகளில்* विलग्नाः விலக்ஞு: *அகப்பட்டு* संदृश्यन्ते ஸந்த்ருச்யந்தே *காணப்படுகிறுர்கள்.*

***திருதராஷ்டிர புத்திரர் எல்லாரும் பார் ஆளும் வேந்தர் கூட்டத்துடனும், பீஷ்மர், துரோணர், சூத புத்திரனுடனும், நம் பக்கத்து முக்கியமான வீரர்களுடனும் பயங்கரமான கோரப்பற்களுடைய உமது வாய்களுள் பரபரப்புடன் பிரவேசிக்கிருர்கள். சிலர் பொடிபட்ட தலைகளோடு உமது பல்லிடுக்குகளில் அகப்பட்டவர்களாகக் காணப்படுகிருர்கள். 26-27***

*சூதபுத்திரன் என்ருல் தேர் ஓட்டியின் மகன் என்று பொருள். இங்கு இச்சொல் கர்ணனைக் குறிக்கிறது.*

*அர்ஜுனனுக்கும் கர்ணனுக்கும் பெரும்பகை. அத்தகைய பகைவனே அழிவதை முற்கூட்டி அர்ஜுனன் அறிகிருன். அதற்குமேல் பகைவர் எல்லாரும் அழிவதையும் அவன் அறிகிருன். தன் பக்கத்திலும் பெரிய வீரர்கள் பலர் மடிவது திண்ணம். போரின்போக்கு பொதுப்பட பூபாரத்தைக் குறைப்பதாயிருக்கிறது. யாருக்காவது தனி நன்மை வந்தமையும் அறிகுறிகள் தென்படவில்லை.*

**यथा नदीनां बहवोऽम्बुवेगाः समुद्रमेवाभिमुखाद्रवन्ति ।**
**तथा तवामी नरलोकवीरा विशन्ति वक्त्राण्यभिविज्वलन्ति ॥ २८**

யதா நதீனும் பஹவோऽம்புவேகா:
ஸமுத்ரமேவாபிமுகாத்ரவந்தி ।
ததா தவாமீ நரலோக வீரா
விசந்தி வக்த்ராண்யபிவிஜ்வலந்தி ॥ 28

यथा யதா *எப்படி* नदीनां நதீனும் *நதிகளுடைய* बहवः பஹவ: *பல* अम्बु वेगाः அம்பு வேகா: *விசையுள்ள நீர்ப்பெருக்குகள்* समुद्रं एव अभिमुखाः ஸமுத்ரம் ஏவ அபிமுகா: *சமுத்திரத்தையே நோக்கி* द्रवन्ति த்ரவந்தி *பாய்கின்றன* तथा ததா *அப்படி* अमी அமீ *இந்த* नरलोक वीराः நரலோக வீரா: *நரலோக வீரர்கள்* अभिविज्वलन्ति அபிவிஜ்வலந்தி *எங்கும் ஜ்வலிக்கின்ற* तव தவ *உம்முடைய* वक्त्राणि வக்த்ராணி *வாய்களுள்* विशन्ति விசந்தி *பிரவேசிக்கிறார்கள்.*

***பெருக்கெடுத்து விரைந்தோடும் நதிகள் பல கடலையே நோக்கிப் பாய்வதுபோன்று, யாண்டும் வெந்தழல் வீசும் உமது வாய்களுள் இவ்வையக வீரர்கள் புகுகின்றனர். 28***

*மலையினின்று வெளிவந்ததும் நதிகள் கடலைநோக்கி ஓடியாகவேண்டும். அதைத் தவிர அவைகளுக்குப் புகலிடம் வேறு எதுவுமில்லை. இந்த மண்ணுலக வீரர்கள் என்னென்னவோ மனக்கோட்டை கட்டுகின்றனர். ஆனால் அவர்களெல்லாம் உமது விராட் வடிவத்தில் மறைவது திண்ணம். அவர்கள் இன்னும் உண்மையை அறியவில்லையெனினும் நீர் அவர்களை எடுத்து விழுங்க ஆரம்பித்துவிட்டீர்.*

**यथा प्रदीप्तं ज्वलनं पतङ्गा विशन्ति नाशाय समृद्धवेगाः ।**
**तथैव नाशाय विशन्ति लोकास्तवापि वक्त्राणि समृद्धवेगाः ॥ २९**

யதா ப்ரதீப்தம் ஜ்வலனம் பதங்கா
விசந்தி நாசாய ஸம்ருத்தவேகா: |
ததைவ நாசாய விசந்தி லோகாஸ்-
தவாபி வக்த்ராணி ஸம்ருத்தவேகா: ‖ 29

यथा யதா *எப்படி* पतङ्गाः பதங்கா: *விட்டிற் பூச்சிகள்* समृद्ध वेगाः ஸம்ருத்த வேகா: *அதிவிரைவில்* नाशाय நாசாய *நாசமடைதற் பொருட்டு* प्रदीप्तं ज्वलनं ப்ரதீப்தம் ஜ்வலனம் *சுடர்விட்டு எரியும் தீயில்* विशन्ति விசந்தி *பாய்கின்றன* तथा ததா *அப்படியே* लोकाः अपि லோகா: அபி *உலக மக்களும்* नाशाय एव நாசாய ஏவ *நாசமடைதற்கே* तव தவ

*உம்முடைய* वक्त्राणि வக்த்ராணி *வாய்களில்* विशन्ति விசந்தி *நுழை நூகள.*

***நாசமடைதற்கு விட்டிற்பூச்சிகள் வெந்தழலில் விரைந்து வீழ்வது போன்று, நானிலத்து மாந்தரும் நாசமடைதற்கே நும் வாய்களுள் நுழைகின்றனர்.*** **29**

*சமுத்திரத்தில் சங்கமமான நதிகள் தமது நாமரூபங்களை இழந்துவிடுகின்றன. ஆயினும் நதியின் நீருக்கு அழிவில்லை. தீயில் வீழும் விட்டில் பூச்சிகள் உடலையே இழக்கின்றன. போர்முனையில் கூடிய வீரர்கள் தங்கள் சுபாவத்தால் தூண்டப்பெற்று, அறிவை இழந்து உடலையும் இழக்க முந்துகின்றனர். அவர்களை அழித்துப் புதிய வடிவில் அமைப்பதன் மூலம் அவர்களைத் திருத்துதற்குப் பகவான் துணைபுரிகிறார்.*

**लेलिह्यसे ग्रसमानः समन्ताल्लोकान्समग्रान्वदनैर्ज्वलद्भिः ।**
**तेजोभिरापूर्य जगत्समग्रं भासस्तवोग्राः प्रतपन्ति विष्णो ॥ ३०**

லேலிஹ்யஸே க்ரஸமான: ஸமந்தால்
லோகான் ஸமக்ரான் வதனைர் ஜ்வலத்பி: ।
தேஜோபிராபூர்ய ஜகத்ஸமக்ரம்
பாஸஸ்தவோக்ரா: ப்ரதபந்தி விஷ்ணோ ॥ 30

ज्वलद्भिः वदनैः ஜ்வலத்பி: வதனை: *ஜ்வலிக்கின்ற வாய்களினால்* समग्रान् लोकान् ஸமக்ரான் லோகான் *எல்லா உலகங்களையும்* ग्रसमानः க்ரஸமான: *விழுங்கி* समन्तात् ஸமந்தாத் *எப்பக்கத்திலும்* लेलिह्यसे லேலிஹ்யஸே *நக்கி ருசிபார்க்கிறீர்* विष्णो விஷ்ணோ *விஷ்ணுவே* तव தவ *உம்முடைய* उग्राः भासाः உக்ரா: பாஸா: *தீவிரமான ஒளிகள்* तेजोभिः தேஜோபி: *தேஜஸ்களினால்* समग्रं जगत् ஸமக்ரம் ஜகத் *முழு உலகையும்* आपूर्य ஆபூர்ய *நிரப்பிக்கொண்டு* प्रतपन्ति ப்ரதபந்தி *எரிக்கின்றன.*

***வெங்கதிர் வாய்களால் உலகனைத்தையும் விழுங்கி யாண்டும் நக்கி ருசி பார்க்கிறீர். விஷ்***

**ணுவே உமது கொடுஞ் சுடர்கள் வையக முழுவதையும் கதிர்களால் நிரப்பிச் சுடுகின்றன. 30**

*எங்கும் வியாபித்திருப்பவர் விஷ்ணு. அவர் மங்கள சொரூபமாக எங்கும் வியாபித்திருப்பதுபோன்று ஊழித்தீயாக உக்கிர சொரூபம் எடுத்து வியாபகமாவதும் உண்டு. உலகைச் சீர்படுத்தவேண்டிய நெருக்கடியில் அவர் அங்ஙனம் செய்கிறார். ஆனால் அவர் போக்கை அறியாத அர்ஜுனன் விண்ணப்பித்ததாவது*

**आख्याहि मे को भवानुग्ररूपो नमोऽस्तु ते देववर प्रसीद ।**
**विज्ञातुमिच्छामि भवन्तमाद्यं न हि प्रजानामि तव प्रवृत्तिम् ॥ ३१**

ஆக்யாஹி மே கோ பவானுக்ரரூபோ
நமோऽஸ்து தே தேவவர ப்ரஸீத ।
விக்ஞாதுமிச்சாமி பவந்தமாத்யம்
ந ஹி ப்ரஜாநாமி தவ ப்ரவ்ருத்திம் ॥ 31

**उग्ररूप:** உக்ரரூப: *பயங்கர மூர்த்தியாகிய* **भवान्** பவான் *தாங்கள்* **क:** க: *யார்* **मे** மே *எனக்கு* **आख्याहि** ஆக்யாஹி *இயம்பும்* **ते** தே *உமக்கு* **नम:** நம: *வணக்கம்* **अस्तु** அஸ்து *இருக்கட்டும்* **देववर** தேவவர *தேவர்க்குத் தலைவா* **प्रसीद** ப்ரஸீத *அருள்புரிக* **आद्यं** ஆத்யம் *முதல்வன்* **भवन्तं** பவந்தம் *தம்மை* **विज्ञातुं** விக்ஞாதும் *அறிந்துகொள்ள* **इच्छामि** இச்சாமி *இச்சிக்கிறேன்* **हि** ஹி *ஏனென்றால்* **तव** தவ *உம்முடைய* **प्रवृत्तिं** ப்ரவ்ருத்திம் *செயலை* **न** **प्रजानामि** ந ப்ரஜாநாமி *அறிகிறேனில்லை.*

**பயங்கர மூர்த்தியாகிய தாம் யார் என்று எனக்கு இயம்பும். உம்மை வணங்குகிறேன்; தேவர் தலைவா, அருள் புரிக. முதல்வனாகிய தம்மை அறிந்துகொள்ள விரும்புகிறேன். ஏனென்றால் உம் செயல் எனக்கு விளங்கவில்லை. 31**

*அழகுத்தெய்வம் மனதைக் கவர்கிறது. அக்கவர்ச்சியே வணக்கமென்று சொல்லப்படுகிறது. பின்பு பயங்கர போக்கில் உள்ளத்தைக் கவர்கிறது.*

*அச்சமூட்டுகிற உக்கிர மூர்த்தியின் அருள்பிரசாதத்தை எப்படியாவது பெறவேண்டுமென்று மனது நடுநடுங்கி விண்ணப்பிக்கிறது. அப்படி அச்சமூட்டும் தெய்வத்தின் அருளாலேயே அச்சம் வெல்லப்படுகிறது. பயங்கர மூர்த்தியோடு அங்ஙனம் பயந்து செய்யும் இணக்கமும் வணக்கமெனக் கருதப்படுகிறது. ஜீவர்களின் இயல்பு உக்கிரமூர்த்தியை விரும்பி வணங்குவது அல்ல என்பதை ஈண்டு அர்ஜுனனது செயல் விளக்குகிறது. தேவர்கள் உட்பட அகிலத்துக்கும் முழுமுதற் பொருள் ஈசன் என்பது அர்ஜுனனுக்குப் பிரத்தியக்ஷம். ஆனால் அதனாலேயே அவன் அவரை முழுதும் அறிந்துகொண்டவன் அல்லன். ஒரு மனிதனும் அவனது செயலும் தொடர்ந்து சம்பந்தப்பட்டவைகள். செயலைக்கொண்டு மனிதனை அறியலாம். செயலைக்கொண்டு கடவுளையும் ஒருவாறு அறியலாம். அர்ஜுனன் விரும்புவதும் அதுவே. பகவானது கிருத்தியங்களைக்கொண்டு பகவானது மகிமைகளை அறிய அவன் அவாவுறுகின்றான். அவ்விருப்பத்தை அவன் அஞ்சி வெளியிடுவானாயினன். அதற்கு பகவானது விடையும் வருகிறது:—*

**श्री भगवानुवाच**

**कालोऽस्मि लोकक्षयकृत्प्रवृद्धो लोकान् समाहर्तुमिह प्रवृत्तः ।**
**ऋतेऽपि त्वां न भविष्यन्ति सर्वे येऽवस्थिताः प्रत्यनीकेषु योधाः ॥ ३२**

ஸ்ரீ பகவானுவாச

காலோऽஸ்மி லோகக்ஷயக்ருத் ப்ரவ்ருத்தோ
லோகான் ஸமாஹர்த்துமிஹ ப்ரவ்ருத்த: ।
ருதேऽபி த்வாம் ந பவிஷ்யந்தி ஸர்வே
யேऽவஸ்திதா: ப்ரத்யனீகேஷு யோதா: ॥ 32

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

लोक क्षय कृत् லோக க்ஷய க்ருத் *உலகங்களை அழிக்கின்ற* प्रवृद्धः कालः ப்ரவ்ருத்த: கால: *பெருவல்லமையுடைய காலமாக* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* लोकान् லோகான் *லோகங்களை* समाहर्तुं ஸமாஹர்த்

*ஸம்ஹாரம் செய்ய* इह *இஹ இங்கே* प्रवृत्तः *ப்ரவ்ருத்த: தலைப் பட்டிருக்கிறேன்* त्वां *த்வாம் நீ* ऋते अपि *ருதே அபி இல்லாமலும்* प्रत्यनीकेषु *ப்ரத்யனீகேஷு எதிர்த்துள்ள சேனைகளில்* ये योधाः *யே யோதா: எந்தப் போர் வீரர்கள்* अवस्थिताः *அவஸ்திதா: அணி வகுத்து நிற்கின்றார்களோ* सर्वे *ஸர்வே அவர்கள் எல்லாரும்* न भविष्यन्ति *ந பவிஷ்யந்தி வாழமாட்டார்கள்.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***உலகங்களை அழிக்கவல்ல காலம் நான். உலகங்களைச் சங்கரிக்கத் தலைப்பட்டிருக்கிறேன். நீ போரில் இல்லாமலும், எதிர்த்துள்ள சேனைகளில் அணிவகுத்து நிற்கும் போர் வீரர்கள் எல்லாரும் வாழமாட்டார்கள்.*** **32**

"நீ யார்?" என்ற கேள்விக்கு "நான் வல்லமை வாய்ந்த காலம்" என்று பகவான் விடை விடுக்கிறார். பகவானுக்கு அமைந்த பல விளக்கங்களுள் அவர் மஹா காலம் என்பதும் ஒன்று. காலம் முன்னும் பின்னும் அகண்டாகாரத்தில் விரிந்தோடுகிறது. செயல்களுக்கு இடையில் உள்ள இடையீடாக அது நமக்குத் தோன்றுகிறது. பிறகு செயல்களுக்கே அது அளவையாகிறது. பாக்கி நான்கு பூதங்களையும் ஆகாசம் தன்பால் அடக்கி வைத்திருப்பது போன்று காலமானது செயல்கள் யாவையும் தன்பால் அடக்கி வைத்திருக்கிறது. ஆதலால் அது எல்லாம் வல்லது. மலையுச்சிக்குப் போகப் போக சமவெளியில் உள்ள மேடு பள்ளங்களெல்லாம் ஒரே வெளியாய்த் தென்படுகின்றன. காலத்தை அகண்டாகாரக் காட்சியில் காணுமிடத்து அண்டங்களின் கிருத்தியங்களெல்லாம் அதில் வீழ்ந்து மறைகின்றன. நிகழ்கின்ற அனைத்தையும் என்றென்றும் அளந்து கொண்டிருக்கின்ற காலமே பகவத் சொரூபமாகிறது.

"உம் செயல் யாது?" என்ற கேள்விக்கு உலகங்களையும் உலக மக்களையும் எடுத்து விழுங்குவது தம் பிரவிருத்தி என்று பகவான் சொல்லுகிறார். தோன்றியவை

களை சிறிது சிறிதாக அவர் சதா விழுங்கிக்கொண்டிருப்பது போன்று பெருவாரியாக சில வேளைகளில் விழுங்கவேண்டிய அவசியம் வருகிறது.

மகாபாரத யுத்தம் அத்தகையதொன்று. சிறிது சிறிதாக அழிவதை இயற்கையின் போக்கு என்கிறோம். பெருமிதமாக அழிவது யாருடைய செயல், ஏன் அப்படி நடைபெறுகிறது என்று வியப்படைகிறோம். அவை யாவும் ஈசன் செயல். எந்த வேளையில் உலகை எப்படி அழிக்கவேண்டுமோ அப்படி அவர் அழிக்கிறார். சிறியது பெரியது எல்லாம் அவர் செயல் என்று அறிபவன் அவரை உண்மையில் போற்றுகிறான். பின்பு, பயங்கரமான எச்செயலைக் கண்டும் அவன் நடுங்குவது இல்லை.

பீஷ்மர், துரோணர், கர்ணன் முதலிய போர் வீரர்கள் அழிவது திண்ணம் என்று அர்ஜுனனுக்கு இப்பொழுது காட்டப்படுகிறது. பாட்டனாரையும் ஆசாரியரையும் கொல்லுதல் தகுமோ என்று தயங்கிய தனஞ்ஜயனுக்கு அச்செயல் தன்னுடையதல்ல என்ற தேற்றம் இப்பொழுது பகவானால் ஏற்படுகிறது. கர்ணன் மடிவதும் தன்னைப் பொறுத்ததன்று என்று அர்ஜுனன் அறிவிக்கப்படுகிறான்.

அர்ஜுனன் யுத்தத்தில் இறங்காவிட்டாலும் அவர்கள் அழியப்போகிறார்கள். அப்படியானால் அர்ஜுனன் யுத்தத்தில் தலையிடுவானேன்? இக்கேள்விக்கு விடை வருகிறது :—

**तस्मात्त्वमुत्तिष्ठ यशो लभस्व जित्वा शत्रून् भुङ्क्ष्व राज्यं समृद्धम्**
**मयैवैते निहताः पूर्वमेव निमित्तमात्रं भव सव्यसाचिन् ॥ ३३**

தஸ்மாத் த்வமுத்திஷ்ட யசோ லபஸ்வ
ஜித்வா சத்ருன் புங்க்ஷ்வ ராஜ்யம் ஸம்ருத்தம் ।
மயைவைதே நிஹதா: பூர்வமேவ
நிமித்தமாத்ரம் பவ ஸவ்யஸாசின் ॥ 33

तस्मात् தஸ்மாத் *ஆகையினல்* त्वं த்வம் *நீ* उत्तिष्ठ உத்திஷ்ட *எழுந்திரு* यशः யச: *கீர்த்தியை* लभस्व லபஸ்வ *அடைக* शत्रून् சத்ருன் *சத்துருக்களை* जित्वा ஜித்வா *ஜயித்து* समृद्धम् ஸம்ருத்தம் *செல்வம் நிறைந்த* राज्यं ராஜ்யம் *ராஜ்யத்தை* भुङ्क्ष्व புங்க்ஷ்வ *அனுபவி* मया एव மயா ஏவ *என்னுலேயே* एते ஏதே *இவர்கள்* पूर्वं एव பூர்வம் ஏவ *முன்பே* निहताः நிஹதா: *கொல்லப்பட்டிருக்கிறர்கள்* सव्यसाचिन् ஸவ்ய ஸாசின் *இடது கையால் அம்பு எய்பவனே* निमित्तमात्रं நிமித்தமாத்ரம் *நிமித்த காரணமாக மாத்திரம்* भव பவ *இருப்பாயாக.*

***ஆகையால் நீ எழுந்திரு; புகழைப் பெறு; எதிரிகளை வென்று செல்வம் நிறைந்த ராஜ்யத்தை அனுபவி; இவர்கள் ஏற்கனவே என்னுல் கொல் லப்பட்டிருக்கிருர்கள். இடது கையாலும் அம்பு எய்யும் வீரா, நீ நிமித்தமாக மாத்திரம் இரு. 33***

*ஜீவர்கள் செயல் புரிதலை அல்லது புரியாதிருத்தலை முன்னிட்டு பகவானுடைய காரியம் எவ்விதத்திலும் மாறுதல் அடையாது. அவனது திட்டத்தில் யாண்டும் ஒழுங்கும் உறுதியும் உண்டு. அதில் கலந்துகொள்ளுகிறவளவு ஜீவனுக்கு எல்லா நன்மையும் உண்டு. அதன் பொருட்டு அவன் எழுந்திருப்பது அவனது முதற் கடமையாகும். ஆத்ம போதம் பெற்று எழுந்திருக்கிறவளவு அவன் செயலுக்குத் தகுதியுடையவனுகிருன். நற்செயல் புகழைத் தருகிறது. நன்மைக்கு இடைஞ்சலாயிருப்பவனே பகைவன். அவனை வெல்லுவது நன்மைக்காகப் பாடுபடுவதாகும். தான் மட்டும் நன்மை செய்தால் போதாது. நன்மைக்கு இடையூறு உண்டுபண்ணுபவனை எதிர்ப்பது ராஜதர்மம். தர்மத்தை நன்கு கடைப்பிடிப்பவர்க்கு இம்மையுமுண்டு, மறுமையுமுண்டு, முக்தியுமுண்டு. அதில் முதலாவது இகலோக வாழ்க்கையில் சிறப்பு. ஆக, செல்வம் நிறைந்த ராஜ்யத்தோடு கூடிய இகலோக வாழ்க்கை வாய்ப்பது தர்மத்தின் பலனும். அது படிப்படியாக முக்திக்கும் எடுத்துச் செல்லவல்லது.*

*அதர்மத்தில் மூழ்கிய எதிரிகளை மாய்க்க பகவான் திட்டம் போட்டாய்விட்டது. அர்ஜுனன் அதிக சிரமம் எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை. ஒப்புக்குப் போர்புரிந்தாலும் போதுமானது. ஆயினும் அவனைப்பற்றிய உண்மையென்ன? இடது கையாலும் நன்கு அம்பு எய்ய அவன் வல்லவன். துணிந்து சண்டைசெய்வானுனால் யாரையும் எதிர்க்க வல்லவன். அத்தகையவன் இந்தச் சிறந்த சந்தர்ப்பத்தைக் கைவிடலாகாது. தேவர்களையும் வெல்லவல்ல துரோணர், பீஷ்மர் முதலியவர்களை வென்றான் என்ற கீர்த்தி பகவான் கையில் கருவியாயிருப்பதால் எளிதில் வந்துவிடும். தக்க வேளையில் தக்க கடமையைச் செய்கின்றவனுக்கு எல்லா மேன்மைகளும் எளிதில் வந்தமைகின்றன.*

*தான் கண்டகாட்சி மனோகற்பிதமோ என்ற ஐயமும் யாரெல்லாம் மடியப்போகின்றார்கள் என்ற ஐயமும் அர்ஜுனனுக்கு வரலாம். அவைகளை நீக்குதற்கு பகவான் மேலும் பகர்கிறார்:—*

**द्रोणं च भीष्मं च जयद्रथं च कर्णं तथान्यानपि योधवीरान् ।**
**मया हतांस्त्वं जहि मा व्यथिष्ठा युध्यस्व जेतासि रणे सपत्नान् ॥ ३४**

த்ரோணம் ச பீஷ்மம் ச ஜ்யத்ரதம் ச
கர்ணம் ததான்யானபி யோத வீரான் ।
மயா ஹதான் ஸ்த்வம் ஜஹி மா வ்யதிஷ்டா
யுத்யஸ்வ ஜேதாஸி ரணே ஸபத்னன் ॥ 34

मया மயா *என்னால்* हतान् ஹதான் *கொல்லப்பட்டிருக்கிற* द्रोणं த்ரோணம் *துரோணரையும்* भीष्मं பீஷ்மம் *பீஷ்மரையும்* जयद्रथं च ஜயத்ரதம் ச *ஜயத்ரதனையும்* कर्णं கர்ணம் *கர்ணனையும்* तथा ததா *அப்படியே* अन्यान् அன்யான் *மற்ற* योधवीरान् अपि யோதவீரான் அபி *யுத்த வீரர்களையும்* त्वं த்வம் *நீ* जहि ஜஹி *கொல்* मा व्यथिष्ठा மா வ்யதிஷ்ட்டா *அஞ்சி வருந்தாதே* रणे ரணே *யுத்தத்தில்* सपत्नान् ஸபத்னன் *எதிரிகளை* जेतासि ஜேதாஸி *ஜயிப்பாய்* युध्यस्व யுத்யஸ்வ *போர்புரி.*

***என்னால் கொலையுண்ட துரோணரையும், பீஷ்மரையும், ஜயத்ரதனையும், கர்ணனையும் அங்ஙனம்***

***மற்றப் போர் வீரர்களையும் நீ (என் கருவியா யிருந்து) கொல். அஞ்சி வருந்தாதே; போரில் பகைவரை வெல்லுவாய்; போர் புரி. 34***

துரோணரையும் பீஷ்மரையும் கொல்லுவது தர்மத்துக்கு முரண்பட்டதல்ல என்பது ஏற்கனவே புகட்டப் பட்டது. இனி, அவர்களைக் கொல்லமுடியுமா என்ற ஐயம் எழுகிறது. ஏனென்றால் துரோணர் தெய்விக அஸ்திர சஸ்திரங்களை யுடையவர்; மேலும் குரு. பீஷ்மருக்கோ அவர் விரும்பினுலொழிய மரணம் வராது. இதுவரையில் அவரை யாரும் வென்றது கிடையாது. ஜயத்ரதனுடைய தலையை யார் பூமியில் வீழ்த்துகிருனே அவனுடைய தலை வெடித்துப் பூமியில் விழும்படி ஜயத்ரதனுடைய தந்தை கடுந்தவம் புரிகிருர். ஆக, அதுவும் கஷ்டத்துக்கு ஏதுவான யுத்தம். இனிக் கர்ணன் விஷயமும் அப்படியே இருக்கிறது. அவன் இந்திரனிடத்திருந்து "சக்தி" என்னும் ஆயுதத்தைப் பெற்றிருக்கிறுன். கர்ணன் அதை யார்மீது பிரயோகித்தாலும் அது வீண்போகாது. அர்ஜுனனைக் கொல்லுதற்கென்றே அவன் அதை ஆயத்தப்படுத்தி வைத்திருக்கிறுன். இந்த நெருக்கடிகளை நினைத்து அர்ஜுனன் அஞ்சி வருந்துவது இயல்பு.

ஆனுல் பகவானே அவர்களைத் துடைக்கத் திருவுளங் கொண்டுவிட்டார். அவர்களுடையவல்லமையை ஏற்கனவே கறந்துவிட்டார். சித்திரத்தில் வரைந்த சிங்கங்களைத் துடைப்பதுபோன்று அவர்களை ஒடுக்குவது எளிதாகும். வேடன் கையில் உள்ள அம்புபோன்று பகவானுடைய திட்டத்துக்குக் கருவியாயிருப்பது அர்ஜுனன் கடமை யாகும். ஆனுல் வெல்ல முடியாதவர்களை அவன்தான் வென்றுன் என்ற கீர்த்தி அவனுக்கு வரும். இக்கருத்துக்களை பகவான் பார்த்தனுக்குத் தெளிவுறுத்துகிருர்.

இதைக்கேட்ட அர்ஜுனன் என்ன செய்தான்? அது ஸஞ்ஜயரால் விளக்கப்படுகிறது:—

सञ्जय उवाच

एतच्छ्रुत्वा वचनं केशवस्य कृताञ्जलिर्वेपमानः किरीटी ।
नमस्कृत्वा भूय एवाह कृष्णं सगद्गदं भीतभीतः प्रणम्य ॥ ३५

ஸஞ்ஜய உவாச

ஏதச்ச்ருத்வா வசனம் கேசவஸ்ய
க்ருதாஞ்ஜலிர் வேபமான: கிரீடீ ।
நமஸ்க்ருத்வா பூய ஏவாஹ க்ருஷ்ணம்
ஸகத்கதம் பீதபீத: ப்ரணம்ய ॥ 35

सञ्जय उवाच ஸஞ்ஜய உவாச *ஸஞ்ஜயன் சொன்னது*

केशवस्य கேசவஸ்ய *கேசவருடைய* एतत् वचनं ஏதத் வசனம் *இந்த வசனத்தை* श्रुत्वा ச்ருத்வா *கேட்டு* वेपमानः किरीटी வேபமான: கிரீடீ *நடுங்குகிற கிரீடதாரி* कृताञ्जलिः க்ருதாஞ்ஜலி: *கைகூப்பியவனாய்* नमस्कृत्वा நமஸ்க்ருத்வா *நமஸ்காரம் செய்து* भीतभीतः பீத பீத: *அஞ்சினவனாய்* प्रणम्य ப்ரணம்ய *நன்கு வணங்கி* भूयः एव பூய: ஏவ *திரும்பவும்* सगद्गदं ஸகத்கதம் *வாய்தளறி* कृष्णं க்ருஷ்ணம் *கிருஷ்ணனிடம்* आह ஆஹ *இயம்பினான்.*

ஸஞ்ஜயன் சொன்னது

***கேசவருடைய இம்மொழி கேட்டுக் கிரீடியானவன் நடுங்கிக் கைகூப்பி நமஸ்கரித்து அஞ்சி நன்குவணங்கி, மீண்டும் கிருஷ்ணனிடம் நாக்குளறி நவிலலுற்றான். 35***

*கிரீடம் தரித்துள்ள கோமகன் யாருக்கும் தலை வணங்கலாகாது. அச்சம் தவிர்ப்பது அவனது தர்மம். பிறர் வணங்க அவ்வணக்கத்தை ஏற்றுக்கொள்ளுதல் அரசனுக்கு முறை. திட்பத்துடன் உறுதிமொழி கூறுதல் அவனது இயல்பு. இங்கு ஈசுவரனது முன்னிலையில் அம் முறைமைகளெல்லாம் பறந்தோடிவிட்டன. கடவுள் முன்னிலையில் குறுகுதல் உயிர்களது முடிவான செயல் என்பது வெளியாகிறது.*

*அப்படிக் குறுகிய அர்ஜுனன் யாது மொழிந்தான்? விடை வருகிறது :—*

अर्जुन उवाच

स्थाने हृषीकेश तव प्रकीर्त्या जगत्प्रहृष्यत्यनुरज्यते च ।
रक्षांसि भीतानि दिशो द्रवन्ति सर्वे नमस्यन्ति च सिद्धसङ्घाः ॥

அர்ஜுன உவாச

ஸ்தானே ஹ்ருஷீகேச தவ ப்ரகீர்த்யா
ஜகத்ப்ரஹ்ருஷ்யத்யனுரஜ்யதே ச ।
ரக்ஷாம்ஸி பீதானி திசோ த்ரவந்தி
ஸர்வே நமஸ்யந்தி ச ஸித்தஸங்கா: ॥ 36

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது*

हृषीकेश ஹ்ருஷீகேச *ஹிரிஷீகேசா* तव தவ *தம்முடைய* प्रकीर्त्या ப்ரகீர்த்யா *புகழ்ச்சியில்* जगत् ஜகத் *ஜகத்தானது* प्रहृष्यति ப்ரஹ்ருஷ்யதி *மகிழ்ச்சியடைகிறது* अनुरज्यते च அனுரஜ்யதே ச *ஆனந்தமடைகிறது* रक्षांसि ரக்ஷாம்ஸி *ராக்ஷசர்கள்* भीतानि பீதானி *பீதியடைந்தவர்களாய்* दिशः திச: *திசைகளில்* द्रवन्ति த்ரவந்தி *ஓடுகிறார்கள்* सिद्धसङ्घाः ஸித்தஸங்கா: *சித்தர்கள்* सर्वे ஸர்வே *எல்லாரும்* नमस्यन्ति च நமஸ்யந்தி ச *நமஸ்கரிப்பதும்* स्थाने ஸ்தானே *உமது ஸ்தானத்துக்கு ஏற்றது.*

அர்ஜுனன் சொன்னது

***ஹிரிஷீகேசா உமது புகழில் உலகம் இன்புற்று மகிழ்கிறது; ராக்ஷசர்கள் அஞ்சி நாலாபக்கமும் ஓடுகிறார்கள்; சித்தர் கணம் எல்லாரும் உம்மை வணங்குகிறார்கள்; இவை யாவும் பொருத்தமானவைகளேயாம்.*** **36**

*முன்பு காணாத மோட்டார் வண்டி முதலியவற்றை நாட்டுப்புறத்தார் பார்த்தால் உடனே அச்சம் கொள்ளுதல் இயல்பு. காணாத அற்புதச்செயலை முதன்முதல் கண்டதும் அதனிடத்துப் பீதிகொள்ளுதல் அறிவிலிகளின் இயல்பு. ராக்ஷசர்கள் இறைவனைப் பற்றிய ஞானமில்லாதவர்கள்; அகங்கரித்து அடாத செயலில் ஈடுபடுபவர்கள். அத்தகை*

யவர் இறைவனது உலக நடைமுறையைத் தொகுத்துக் காணுமிடத்து நடுங்கி நாலாபக்கமும் ஓடுவார்கள். மோட்டார் வண்டி ஒன்றன் அமைப்பையும் பயனையும் அறியுமளவு மக்கள் அதை மெச்சுவார்கள். அங்ஙனம் பகவானது மகிமைகளைத் தெரிந்துகொள்ளுமளவு பக்தர்கள் அவனைப் போற்றிப் புகழ்வார்கள். அப்படிச் செய்வதில் அவர்களுக்குப் பெருமகிழ்வு உண்டாகிறது.. இனி, மோட்டார் வண்டியைப் பயன்படுத்துபவர்கள் ஒரு சிறு கூட்டத்தார். பகவானை வணங்கி அவனிடத்து யோகம் செய்து அவனுக்கு உரியவர் ஆகின்றவர்கள் சித்தர்கள். அங்ஙனம் எல்லா நிறைநிலையும் அவர்கள் எய்துகின்றனர். உலகை அறிகின்றவளவு ஒருவன் உலகைப் பயன் படுத்துகிறான். பகவானை அறிகின்றவளவு ஒருவன் பண்பும் பயனும் அடைகிறான். இது அர்ஜுனனுக்கு அனுபவபூர்வமாக இப்பொழுது விளங்குகிறது. ஆக, ராக்ஷசர் முதல் சித்தர் ஈறாக அவரவர் அறிவுக்கு எட்டியவாறு கடவுளோடு இணக்கம் வைப்பது யுக்தமானதே என்று பார்த்தன் பகர்கிறான்.

*தெய்விகம் வாய்ந்த ரிஷிகள் ஈசுவரனுடைய நெருங்கிய உறவினரைப் போன்றவர்கள். அவர்கள் அவனுடைய நண்பர்கள் போலவும், ஸகாக்கள் போலவும், உறவினர்கள் போலவும் இருக்கின்றனர். சாதாரண மனிதர்கள் எல்லோரும் எட்டிய உறவினர் போன்றவர்கள். அவர்கள் கேவலம் ஈசுவர சிருஷ்டிகள் மாத்திரமே.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

कस्माच्च ते न नमेरन्महात्मन् गरीयसे ब्रह्मणोऽप्यादिकर्त्रे ।
अनन्त देवेश जगन्निवास त्वमक्षरं सदसत्तत्परं यत् ॥ ३७

கஸ்மாச்ச தே ந நமேரன் மஹாத்மன்
கரீயஸே ப்ரஹ்மணோऽப்யாதி கர்த்ரே ।
அனந்த தேவேச ஜகந்நிவாஸ
த்வமக்ஷரம் ஸதஸத்தத்பரம் யத் ॥ 37

महात्मन् மஹாத்மன் *மஹாத்மாவே* अनन्त அனந்த *அந்தமில்லாதவர்* देवेश தேவேச *தேவர்களுக்கெல்லாம் ஈசர்* जगन्निवास

ஜகந்நிவாஸ *ஜகத்துக்கு இருப்பிடமானவர்* ब्रह्मण: अपि ப்ரஹ்மண: அபி *பிரம்மாவுக்கும்* गरीयसे கரீயஸே *பெரியவர்* आदिकर्त्रे च ஆதிகர்த்ரே ச *முதற்காரணமானவரும் ஆகிய* ते தே *உமக்கு* कस्मात् கஸ்மாத் *ஏன்* न नमेरन् ந நமேரன் *நமஸ்காரம் செய்யமாட்டார்கள்* सत् ஸத் *தோன்றியுள்ளதும்* असत् அஸத் *தோன்றாததும்* परं பரம் (*இவ்விரண்டிற்கும்*) *அப்பாற்பட்டது* यत् யத் *எதுவோ* तत् अक्षरं च தத் அக்ஷரம் ச *அந்த அழியாப்பொருளும்* त्वं த்வம் *நீரே.*

***மஹாத்மாவே, அந்தமில்லாதவரே, தேவேசா, ஜகந்நிவாசா, பிரம்மாவுக்கும் பெரியவரே, முதற் காரணமே உம்மை ஏன் அவர்கள் நமஸ்கரிக்க மாட்டார்கள்? தோன்றியதும் தோன்றாததும் அவ் விரண்டுக்கும் அப்பாற்பட்டதும் அழியாப்பொரு ளும் நீரே.*** 37

பகவானைப் போற்றி வணங்கும் எண்ணம் இயல் பாகவே சித்தர்களது உள்ளத்தில் எழுகின்றது. ஏனென் றால் அவர் எல்லார்க்கும் பெரியவர், மஹாத்மா. காலதேச நிமித்தத்தில் கட்டுப்படாதவராதலால் அவர் அனந்தர். தேவர்களுக்கெல்லாம் அவரே அதிபதி. ஜகத்துக்கு இருப் பிடமாக அவர் இருக்கிறார். உலகைப்படைத்த ஹிரண்ய கர்பன் அல்லது நான்முக பிரம்மாவுக்கும் அவர் முதற் காரணம். உலகாகத் தோன்றியுள்ளது ஸத்; தோன்றாத மூலப்பிரகிருதி அஸத் எனப்படுகிறது. தோன்றிய உலகம் அதனிடத்திருந்து வருவதால் அது சிறிதும் தேய்வடைவ தில்லை. ஆகையால் அது அக்ஷரம். ஸத் அஸத் இரண் டையும் அது கடந்திருப்பதால் அது பரம். பகவான் இத்தனையுமாயிருப்பதால் அவரை வாழ்த்தி வணங்காது வேறு என்ன செய்யமுடியும்? பெரியதைப் போற்றுவ தால் ஒருவன் பெரியவனாகிறான்.

**त्वमादिदेवः पुरुषः पुराणस्त्वमस्य विश्वस्य परं निधानम् ।**
**वेत्तासि वेद्यं च परं च धाम त्वया ततं विश्वमनन्तरूप ॥ ३८**

த்வமாதிதேவ: புருஷ: புராணஸ்த்வமஸ்ய
விச்வஸ்ய பரம் நிதானம் ।
வேத்தாஸி வேத்யம் ச பரம் ச தாம
த்வயா ததம் விச்வமனந்த ரூப ॥ 38

अनन्तरूप அனந்தரூப *எண்ணிறந்த வடிவங்களையுடையோனே* त्वं த்வம் *தாம்* आदिदेवः ஆதிதேவ: *முதற்கடவுள்* पुराणः पुरुषः புராண: புருஷ: *பழைய புருஷன்* त्वं த்வம் *தாம்* अस्य विश्वस्य அஸ்ய விச்வஸ்ய *இந்தப் பிரபஞ்சத்திற்கு* परं निधानं பரம் நிதானம் *மேலான இருப்பிடம்* वेत्ता च வேத்தா ச *அறிபவனும்* वेद्यं च வேத்யம் ச *அறியப்படுபொருளும்* परं धाम பரம் தாம *பெரு நிலம்* असि அஸி *இருக்கிறீர்* त्वया த்வயா *உம்மால்* विश्वं விச்வம் *உலகம் யாவும்* ततं ததம் *வியாபிக்கப்பட்டது.*

***எண்ணில்லா வடிவங்களை யுடையோனே, முதற்பொருளே ! தொல்லோனும் இவ்வுலகுக்கு மேலான இருப்பிடமும் தாமே யாவீர். அறிபவரும், அறியப்படுபொருளும், அருட்பெருநிலமும் ஆவீர். உம்மால் உலகம் யாவும் நிறைந்துள்ளது. 38***

*யாவும் அவரிடத்திருந்து உதயமாவதால் அவர் ஆதிதேவன். புரியிலே அவர் வாசம்செய்வதால் அவர் புருஷன். அவருக்கு மூத்தவர் ஒருவருமில்லை. ஆகையால் அவர் புராணன் அல்லது தொல்லோன். மஹாபிரளயத்தில் அனைத்துக்கும் அவர் ஒடுங்குமிடமாதலால் அவர் நிதானமாகிறார்.*

*அறியும் தன்மை அவரிடத்திருந்து வருகிறது. ஆதலால் அவர் வேத்தா. அறியப்படு பொருளெல்லாம் அவரிடத்திருந்து வந்தனவாதலால் அவர் வேத்யம். கடலில் அலை தோன்றி, கடலில் நிலைபெற்றிருந்து கடலில் அது ஒடுங்குவது போன்று உலகம் அவரிடத்துத் தோன்றி, இருந்து, மறைகிறது. ஆதலால் அவர் யாண்டும் அதற்குப் பெருநிலம் அல்லது பரம்தாமம் ஆகிறார். அதுவே மஹாபுடைய பரமபதம் எனப்படுவது.*

*அவர் இன்னும் என்னவாகிறார் எனில் :—*

**वायुर्यमोऽग्निर्वरुणः शशाङ्कः प्रजापतिस्त्वं प्रपितामहश्च ।**
**नमो नमस्तेऽस्तु सहस्रकृत्वः पुनश्च भूयोऽपि नमो नमस्ते ॥ ३९**

வாயுர்யமோऽக்னிர்வருண: சசாங்க:
ப்ரஜாபதிஸ்த்வம் ப்ரபிதாமஹஸ்ச ।
நமோ நமஸ்தேऽஸ்து ஸஹஸ்ரக்ருத்வ:
புனஸ்ச பூயோऽபி நமோ நமஸ்தே ॥ 39

त्वं த்வம் *தாங்கள்* वायुः வாயு: *வாயு* यमः யம: *யமன்* अग्निः அக்னி: *அக்னி* वरुणः வருண: *வருணன்* शशाङ्कः சசாங்க: *சந்திரன்* प्रजापतिः ப்ரஜாபதி: *பிரஜாபதி* (*லோகபிதா*) प्रपितामहः च ப்ரபிதாமஹ: ச *முப்பாட்டனார்* ते தே *உமக்கு* नमः नमः நம: நம: *திரும்பத் திரும்ப நமஸ்காரம்* अस्तु அஸ்து *இருக்கட்டும்* सहस्रकृत्वः ஸஹஸ்ரக்ருத்வ: *ஆயிரந்தடவை* पुनः च புன: ச *இன்னும்* भूयः अपि பூய: அபி *அதற்கு மேலும்* ते தே *உமக்கு* नमः नमः நம: நம: *நமஸ்காரங்கள்.*

***வாயு, யமன், அக்கினி, வருணன், சந்திரன், பிரஜாபதி, முப்பாட்டனார் ஆகிய எல்லாம் ஆனவர் நீர். உமக்குப் பன்முறை நமஸ்காரம். ஆயிரம் தடவையும் அதற்கு மேலும் நமஸ்காரம்.*** **39**

*காச்யபர் முதலிய லோகபிதாக்களுக்கு பிரஜாபதி என்று பெயர். பிரம்மா உலகுக்குப் பாட்டனார் ஆகிறார். அவருக்குத் தந்தை விஷ்ணு. ஆகையால் முப்பாட்டனார் என்பது பகவானையே குறிக்கிறது. நமஸ்கரிப்பதற்கு முடிவின்மையானது பக்திப்பெருக்கை விளக்குகிறது.*

**नमः पुरस्तादथ पृष्ठतस्ते नमोऽस्तु ते सर्वत एव सर्व ।**
**अनन्तवीर्यामितविक्रमस्त्वं सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः ॥ ४०**

நம: புரஸ்தாதத ப்ருஷ்டதஸ்தே
நமோऽஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ ।
அனந்த வீர்யாமித விக்ரமஸ்த்வம்
ஸர்வம் ஸமாப்னோஷி ததோऽஸி ஸர்வ: ॥ 40

सर्व ஸர்வ *எல்லாமானவரே* ते தே *உமக்கு* पुरस्तात् புரஸ்தாத் *முன்னும்* अथ அத *அப்படியே* पृष्ठतः ப்ருஷ்டத: *பின்னும்* नमः நம: *நமஸ்காரம்* ते தே *உமக்கு* सर्वत एव ஸர்வத ஏவ *எல்லாப் பக்கத்திலும்* नमः நம: *நமஸ்காரம்* अस्तु அஸ்து *இருக்கட்டும்* अनन्तवीर्य அனந்த வீர்ய *அளவில்லாத வீரியத்தையும்* अमित विक्रमः அமிதவிக்ரம: *பரந்த பராக்கிரமத்தையும் உடைய* त्वं த்வம் *தாம்* सर्वं ஸர்வம் *அனைத்தையும்* समाप्नोषि ஸமாப்னோஷி *நன்கு வியாபித்திருக்கிறீர்* ततः தத: *அதனால்* सर्वः असि ஸர்வ: அஸி *யாவுமாயிருக்கிறீர்.*

***எல்லாமானவரே, உமக்கு முன்புறத்திலும் பின்புறத்திலும் நமஸ்காரம்; எல்லாப் பக்கங்களிலும் உமக்கு நமஸ்காரம். அளவற்ற வீரியத்தையும் எண்ணிறந்த பராக்கிரமத்தையும் உடைய நீர் அனைத்திலும் நன்கு வியாபித்திருக்கிறீர். ஆதலால் நீரே யாவுமாயிருக்கிறீர். 40***

எங்குத் திரும்பிப் பார்த்தாலும் எல்லாம் இறைவனுடைய சொரூபம். ஆகையால் நாலா பக்கங்களிலும் அவனுக்கு நமஸ்காரம் செய்வது பொருத்தமாகும். வீரியம் என்பது வல்லமை. அளவற்ற வல்லமையை ஒருவன் உடைத்திருந்தும் அதைக் கையாளாது விட்டுவிடலாம். அதனால் அது வீணாகப் போய்விடுகிறது. பகவான் அத்தகையவரல்ல. தமது முடிவற்ற வல்லமையை எண்ணிறந்த விதங்களில் அவர் செயலுக்குக் கொண்டுவருகிறார். இந்த ஜகத் நடைமுறையே அதற்குச் சான்று. ஆதலால் அவர் பரந்த பராக்கிரமத்தை யுடையவர் எனப்படுகிறார். பழம் என்று சொல்லுமிடத்து அதன் சதை, மேல் தோல், கொட்டை எல்லாம் அதில் அடங்கப் பெறுகின்றன. அங்ஙனம் பகவான் என்று சொல்லுமிடத்து ஜகத் ஜீவகோடியனைத்தும் அவரிடத்து அடங்கப்பெறுகின்றன. அவரைப் போற்றுதலில் எல்லாம் போற்றப்படுகின்றன; எல்லாவற்றையும் போற்றுதலில் அவர் போற்றப்படுகிறார்.

பகவானைப்பற்றிய உண்மையை அறிந்த அர்ஜுன னுக்கு மனப்பான்மை மாறுகிறதா? விடை வருகிறது:—

**सखेति मत्वा प्रसभं यदुक्तं हे कृष्ण हे यादव हे सखेति ।**
**अजानता महिमानं तवेदं मया प्रमादात् प्रणयेन वापि ॥ ४१**
**यच्चावहासार्थमसत्कृतोऽसि विहारशय्यासनभोजनेषु ।**
**एकोऽथवाप्यच्युत तत्समक्षं तत्क्षामये त्वामहमप्रमेयम् ॥ ४२**

ஸகேதி மத்வா ப்ரஸபம் யதுக்தம்
ஹே க்ருஷ்ண ஹே யாதவ ஹே ஸகேதி ।
அஜானதா மஹிமானம் தவேதம்
மயா ப்ரமாதாத் ப்ரணயேன வாபி ॥ 41
யச்சாவஹாஸார்த்தமஸத்க்ருதோऽஸி
விஹாரசய்யாஸன போஜனேஷு ।
ஏகோऽதவாப்யச்யுத தத்ஸமக்ஷம்
தத்க்ஷாமயே த்வாமஹமப்ரமேயம் ॥ 42

तव தவ *உம்முடைய* इदं महिमानं இதம் மஹிமானம் *இந்த மஹிமையை* अजानता मया அஜானதா மயா *அறியாத என்னால்* प्रमादात् ப்ரமாதாத் *கவனமின்மையினால்* प्रणयेन वा अपि ப்ரணயேன வா அபி *பிரியத்தினாலாவது* सखा इति ஸகா இதி *தோழன் என்று* मत्वा மத்வா *மதித்து* हे कृष्ण ஹே க்ருஷ்ண *ஏ கிருஷ்ணா* हे यादव ஹே யாதவ *ஏ யாதவா* हे सखे ஹே ஸகே *ஏ தோழா* इति இதி *என்று* प्रसभं ப்ரஸபம் *பணிவின்றி* यत् उक्तं யத் உக்தம் *எது சொல்லப்பட்டதோ* अच्युत அச்யுத *ஓ அச்யுதா* विहार शय्या आसन भोजनेषु விஹார சய்யா ஆஸன போஜனேஷு *விளையாட்டு, படுக்கை, அமர்ந்திருத்தல், உணவருந்துதல் இவைகளுக்கிடையில்* एकः ஏக: *தனித்திருந்தபொழுது* अथवा அதவா *அல்லது* तत्समक्षं अपि தத்ஸமக்ஷம் அபி *பிறர் பார்வையில் இருந்தபொழுது* अवहासार्थं அவஹாஸார்த்தம் *பரிஹாஸத்திற்காக* यत् யத் *எங்ஙனம்* असत्कृतः असि அஸத்க்ருத: அஸி *அவமதிக்கப்பட்டிருக்கிறீரோ* तत् தத் *அதை* अहं அஹம் *நான்* अप्रमेयं त्वां அப்ரமேயம் த்வாம் *அளப்பதற்கரிய உம்மை* क्षामये க்ஷாமயே *மன்னிப்புக்கேட்டுக்கொள்கிறேன்.*

***உமது இப்பெருமையை யறியாது, கவன மின்றி அன்பால் தோழன் என்று கருதி, ஏ கிருஷ்ணு, ஏ யாதவா, ஏ கூட்டாளி, என்று பணி வின்றி எது பகரப்பட்டதோ, அச்யுதா! விளையாடிய போதும், படுத்திருந்த பொழுதும், அமர்ந்திருந்த பொழுதும், உணவருந்துகையிலும், தனித்தோ பிறர் பார்வையிலோ இருந்தபொழுதும், ஏளனமாக எங்ஙனம் அவமதிக்கப்பட்டீரோ, அதையெல்லாம், அளப்பிலோய்! மன்னித்தருள்க. 41–42***

*பகவானைப்பற்றிய மெய்யறிவு வந்ததும் அர்ஜுன னுடைய மனப்பான்மை அடியோடு மாறிவிட்டது. கிருஷ்ணனுகத் தோன்றிய தோற்றம் ஒன்று மட்டுமல்ல. இவ்வுலகில் உள்ள தோற்றங்கள் யாவும் ஈசனுடையவை களே. அறியாமையினுல் நாம் அவைகளை அலட்சியப் படுத்துகிறோம். அவைகளைப் பாராட்டுமளவு நமக்கு நல்லறிவு வருகிறது. நல்லறிவுக்கு மற்றோர் அறிகுறியுண்டு. நம் அறிவு எவ்வளவு தெளிந்தது எனினும் நம் அறிவால் அவனை முழுதும் அளந்துவிட முடியாது. வணக்கம் நிறைந்த இணக்கம் இறைவனிடத்தும் இறைவனது சிருஷ்டியின் கண்ணும் வைக்கக் கற்றுக்கொள்ளுதல் வேண்டும். இதுவே தெளிவுபட்ட மனமாறுதலாகும்.*

*அர்ஜுனன் கிருஷ்ணனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டதற்குக் காரணம் யாது? விடை வருகிறது :—*

**पितासि लोकस्य चराचरस्य त्वमस्य पूज्यश्च गुरुर्गरीयान् ।**
**न त्वत्समोऽस्त्यभ्यधिकः कुतोऽन्यो लोकत्रयेऽप्यप्रतिमप्रभाव ॥ ४३**

பிதாஸி லோகஸ்ய சராசரஸ்ய
த்வமஸ்ய பூஜ்யஸ்ச குருர்கரீயான் ।
ந த்வத்ஸமோऽஸ்த்யப்யதிக: குதோऽன்யோ
லோகத்ரயேऽப்யப்ரதிமப்ரபாவ ॥ 43

**अप्रतिम प्रभाव** அப்ரதிம ப்ரபாவ *ஒப்பற்ற பெருமையுடைய வரே* **त्वं** த்வம் *தாம்* **अस्य चर अचरस्य लोकस्य** அஸ்ய சர அசரஸ்ய

லோகஸ்ய *இந்த சரம் அசரமாகிய லோகத்தினுடைய* पिता असि பிதா அஸி *தந்தையாகிறீர்* पूज्यः च பூஜ்ய: ச *போற்றுதற்குரியவரும்* गुरुः गरीयान् குரு: கரீயான் *பெரியவர்க்குப் பெரியவர் ஆகிறீர்* लोकत्रये अपि லோகத்ரயே அபி *மூவுலகிலும்* त्वत्समः த்வத்ஸம: *உமக்குச் சமமானவர்* न अस्ति ந அஸ்தி *இல்லை* अभ्यधिकः அப்யதிக: *உம்மிலும் மேலானவர்* अन्यः அன்ய: *வேறு ஒருவர்* कुतः குத: *ஏது*.

***ஒப்பற்ற பெருமையுடையவரே, தாம் இந்தச் சராசர லோகத்துக்குத் தந்தை; போற்றுதற்குரியவரும் குருவுக்கு குருவும் ஆகிறீர். மூவுலகிலும் உமக்கு ஒப்பானவர் இல்லை. உம்மிலும் மிக்கார் ஏது? 43***

*சிருஷ்டி முழுதுக்கும் ஈசுவரன் முதற்காரணமாதலால் அவர் நகர்வன நிலைத்திருப்பன அனைத்துக்கும் பிதா என்று அழைக்கப்படுகிறார். அத்துடன் பெருமையனைத்தும் அமையப் பெற்றிருப்பதால் அவர் எல்லாராலும் போற்றுதற்கு உரியவராயிருக்கிறார். ஈசன் எல்லார்க்கும் பெரியவர். அவருக்கு ஒப்பானவரே இல்லையென்றால் உயர்ந்தவரைக் காண்பது எங்ஙனம்? ஆக, உலக நடைமுறைக்கு அதிபதியாக இருக்கும் ஈசுவரன் ஒருவரே எனலாம். ஒருவருக்கு மேற்பட்ட ஈசுவரர்கள் இருப்பார்களானால் உலக நடைமுறையில் ஒழுங்கின்மை வந்துவிடும். ஒருவர் சிருஷ்டிக்க எண்ணுகையில் மற்றொருவர் ஸம்ஹாரம் செய்ய நினைப்பாரானால் ஒரு செயல் மற்றொரு செயலோடு முரண்பட்டுக் குழப்பம் வந்துவிடும். ஒழுங்கான உலக நடைமுறைக்குத் தலைவனாக ஈசன் ஒருவரே இருக்கிறார். அவர் எல்லார்க்கும் பெரியவர்.*

*அவருக்கு மிக்கார் யாருமில்லாததால் மனிதன் என் செய்யவேண்டும்?*

**तस्मात्प्रणम्य प्रणिधाय कायं प्रसादये त्वामहमीशमीड्यम् ।**
**पितेव पुत्रस्य सखेव सख्युः प्रियः प्रियायार्हसि देव सोढुम् ॥ ४४**

தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணிதாய காயம்
ப்ரஸாதயே த்வாமஹமீசமீட்யம் ।
பிதேவ புத்ரஸ்ய ஸகேவ ஸக்யு:
ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தேவ ஸோடும் ॥ 44

देव தேவ *தேவா* तस्मात् தஸ்மாத் *ஆகையினால்* अहं அஹம் *நான்* कायं காயம் *காயத்தால்* प्रणिधाय ப்ரணிதாய *கீழே வீழ்ந்து* प्रणम्य ப்ரணம்ய *வணங்கி* ईड्यं ஈசம் ईशं ஈட்யம் *போற்றத்தக்க ஈசனை* त्वां த்வாம் *உம்மை* प्रसादये ப்ரஸாதயே *அருள்புரியவேண்டுகிறேன்* पुत्रस्य புத்ரஸ்ய *புத்திரனுக்கு* पिता इव பிதா இவ *பிதாபோன்றும்* सख्युः ஸக்யு: *தோழனுக்கு* सखा इव ஸகா இவ *தோழன் போன்றும்* प्रियायाः ப்ரியாயா: *காதலிக்கு* प्रियः ப்ரிய: *காதலன் போன்றும்* सोढुं ஸோடும் *பொறுத்துக்கொள்ள* अर्हसि அர்ஹஸி *அருகராயிருக்கிறீர்.*

***ஆதலால், தேவா, நான் காயத்தால் வீழ்ந்து வணங்கிப் போற்றத்தக்க ஈசனாகிய உமது அருளை வேண்டுகிறேன். மைந்தனுக்குத் தந்தைபோன்றும், தோழனுக்குத் தோழன் போன்றும், காதலிக்குக் காதலன் போன்றும் பொறுத்தருளக்கடவீர். 44***

*பகவானது மஹிமையை அறியும்போது அவன் போற்றுதற்குரிய பொருள் என்பது புலப்படுகிறது. ஆதலால் அர்ஜுனன் காயத்தால் வீழ்ந்து வணங்குகிறான். போற்றுதற்கு உரிய பொருள் அவன் என்று அறிவதால் பக்தனுக்கும் பகவானுக்கும் உள்ள இணக்கம் தடைப்படுவதில்லை. அது படிப்படியாக நெருங்கி ஐக்கியத்தை உண்டு பண்ணுகிறது. தந்தைக்கும் மகனுக்கும் பிரிக்கமுடியாத தொடர்வுண்டு. ஆனால் பயபக்தியால் பிள்ளை பிதாவிடத்துச் சமஉரிமை கொண்டாட இயலாது போய்விடலாம். தொடர்வு இருப்பது மட்டும் அல்ல; உயர்வு தாழ்வு பாராட்டாத தோழமையும் உண்டு என்பது அடுத்தபடியாகச் சொல்லப்படுகிறது. அத் தோழமையில் இனிமையும் உண்டு என்று காதல் நிலையில் வைத்து அது மேலும் விளக்கப்படுகிறது. அத்தகைய பேரிணக்கத்தில் குற்றங்*

காணாது குணமே காணும் பண்பு நன்கு அமையப்பெறுகிறது.

*பராபக்தியில் பக்தன் ஈசுவரனைத் தனக்கு அத்யந்தம் நெருங்கிய அன்பனாகக் கருதுகிறான். அது கிருஷ்ணபரமாத்மாவிடம் கோபஸ்திரீகளுக்கு இருந்த பக்திபோன்றது. அவர்கள் அவரை எப்போதும் கோபிகாநாதன் என்று கருதி யழைத்தனரே தவிர ஜகந்நாதன் என்று கருதி அழைத்ததில்லை.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*அர்ஜுனன் எத்தகைய வடிவத்தைத் தொடர்ந்து காண விரும்பினான் என்பது மேலும் அவனது வாயினின்று வெளியாகிறது :—*

**अदृष्टपूर्वं हृषितोऽस्मि दृष्ट्वा भयेन च प्रव्यथितं मनो मे ।**
**तदेव मे दर्शय देव रूपं प्रसीद देवेश जगन्निवास ॥ ४५**

அத்ருஷ்டபூர்வம் ஹ்ருஷிதோऽஸ்மி த்ருஷ்ட்வா
பயேன ச ப்ரவ்யதிதம் மனோ மே ।
ததேவ மே தர்சய தேவ ரூபம்
ப்ரஸீத தேவேச ஜகந்நிவாஸ ॥ 45

देव தேவ *தேவா* अदृष्टपूर्वं அத்ருஷ்டபூர்வம் *முன்பு பார்க்காததை* दृष्ट्वा த்ருஷ்ட்வா *பார்த்து* हृषितः अस्मि ஹ்ருஷித: அஸ்மி *மகிழ்ந்தவனாய் இருக்கிறேன்* भयेन பயேன *பயத்தால்* मे मनः மே மன: *என்னுடைய மனது* प्रव्यथितं च ப்ரவ்யதிதம் ச *நடுங்கிக்கொண்டிருக்கிறது* तत् रूपं एव தத் ரூபம் ஏவ *அந்த ரூபத்தையே* मे மே *எனக்கு* दर्शय தர்சய *காட்டுக* देवेश தேவேச *தேவர் தலைவா* जगन्निवास ஜகந்நிவாஸ *ஜகத்துக்கெல்லாம் இருப்பிடமானவரே* प्रसीद ப்ரஸீத *அருள் புரிக.*

***தேவா, முன்பு காணாததைக்கண்டு மகிழ்ந்தவனாயிருக்கிறேன்; மேலும் மனது அச்சத்தால் நடுங்குகிறது. முன்னைய இனிய வடிவத்தையே எனக்குக் காட்டுக. தேவேசா, ஜகந்நிவாஸா, அருள் புரிக. 45***

*விசுவரூபத்தைக் காட்டியருள வேண்டுமென்று அர்ஜுனன் பிரார்த்தித்தான். அதற்கு இரங்கிய பகவான்*

யுத்த நெருக்கடிக்குப் பொருத்தமாயிருந்த ஸம்ஹார சொரூபத்தை விசேஷமாகக் காட்டியருளினார். அதனால் அர்ஜுனனுக்கு யுத்தத்தைப்பற்றிய மயக்கம் ஒழிந்தது. எனினும் எப்பொழுதும் அதிலேயே திளைத்திருக்கத் தனஞ்ஜயனுக்குப் பிடிக்கவில்லை. கொந்தளிப்புள்ள கடலில் மீன் மருளுவது போன்று அவன் மயங்கினான். யாண்டும் இன்பம் தருகிற சாந்த சொரூபத்தைக் காணவேண்டுமென்று விண்ணப்பித்தான். உக்கிரரூபம் எடுப்பதும் பகவானது லீலை என்பதைத் தெரிந்துகொண்டால் போதுமானது. அக்காட்சியிலேயே நிலைபெற்றிருக்க பக்தன் விரும்புவதில்லை.

சிங்கம்போலப் பொய்க்கோலம் பூண்டுகொண்ட ஹரி, பார்க்க வெகு பயங்கரமாகத்தான் இருக்கிறான். அவன் தன் தங்கை விளையாடுமிடத்துக்குச் சென்று பயங்கரமாகக் கூச்சலிடுகிறான். அதைக்கேட்டு நடுநடுங்கிய அவள், இந்தக் குரூரப் பிராணியிடமிருந்து தப்பித்துக் கொள்ள வேண்டுமேயென்று துக்கத்தோடு உரக்கக் கூச்சலிட்டு அழுகிறாள். ஆனால் ஹரி தன் வேஷத்தைக் கலைத்துவிட்டதும், பயந்து போயிருந்த சிறுமி தனது பிரிய சகோதரனைக் கண்டு, "ஓ, அண்ணா தானா இது" என்று சொல்லிக்கொண்டு அவனிடம் ஓடுகிறாள். மாயையாகிற கோலத்தில் பிரம்மம் தன்னை மறைத்துக்கொள்கிறது. அப்பொழுது அது இரக்கமற்ற மூர்த்தியாகவும் தோன்றுகிறது. மாயையை அகற்றிவிட்டால் பிரம்மம் அன்புருவான அந்தர்யாமியாகவே தோன்றும்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

தான் விரும்பும் வடிவம் இன்னதென்று இனி அர்ஜுனன் தெளிவுபடுத்துகிறான்:—

**किरीटिनं गदिनं चक्रहस्तमिच्छामि त्वां द्रष्टुमहं तथैव ।**
**तेनैव रूपेण चतुर्भुजेन सहस्रबाहो भव विश्वमूर्ते ॥ ४६**

கிரீடினம் கதினம் சக்ரஹஸ்த
மிச்சாமி த்வாம் த்ரஷ்டுமஹம் ததைவ ।
தேனைவ ரூபேண சதுர்ப்புஜேன
ஸஹஸ்ரபாஹோ பவ விச்வமூர்த்தே ॥ 46

अहं அஹம் *நான்* त्वां த்வாம் *உம்மை* तथा एव ததா ஏவ *முன் போலவே* किरीटिनं கிரீடினம் *கிரீடம் தரித்தவரை* गदिनं கதினம்

*கதையை ஏந்தினவரை* चक्रहस्तं சக்ர ஹஸ்தம் *கையில் சக்கரத்தை யுடையவரை* द्रष्टुं த்ரஷ்டும் *தரிசிக்க* इच्छामि இச்சாமி *இச்சிக்கிறேன்* सहस्रबाहो ஸஹஸ்ரபாஹோ *ஆயிரம் கைகளையுடையவரே* विश्वमूर्ते விச்வமூர்த்தே *விசுவரூபத்தையுடையவரே* तेन தேன *அந்த* चतुर्भुजेन रूपेण एव சதுர்புஜேன ரூபேண ஏவ *நான்கு கைகளையுடைய ரூபத்தோடேயே* भव பவ *இருப்பீராக.*

***முன்போலவே கிரீடமும் கதையும் கையில் சக்கரமும் உடையவராய் உம்மைக் காண விரும்புகிறேன். ஆயிரம் கைகளையுடைய விசுவமூர்த்தியே, நான்கு கைகளுடைய அந்த வடிவத்தில் மட்டும் இருப்பீராக.*** **46**

*இரண்டு கைகளை யுடைத்திருப்பவர் மக்கள். நான்கு கரங்கள் கடவுள்பால் வைத்து அறிவது அவருடைய அமானுஷிய சக்திக்கு அறிகுறியாகும். கெட்டிக்காரன் ஒருவன் பல கைகளையுடையவனாகக் கருதப்படுகிறான். இனிக் கடவுள் விசுவ வடிவத்துடன் இருப்பவர்: ஆதலால் கைகளெல்லாம் அவருடையவைகளேயாம். ஒரு தொழிற்சாலையில் இருப்பவர்கள் அத்தனைபேரும் தொழில் புரிகிறார்கள்; எனினும் தொழில் வல்லமையைக் காட்டுதற்கு அதில் திறமை வாய்ந்த ஒருவனது வேலைப்பாடு மற்றவர்களுக்குக் காண்பிக்கப்படுகிறது. கிருஷ்ணனது மானுட வடிவத்தின் மூலம் தெய்வச்செயல் யாவும் அறியப்படுகின்றன. ஆதலால்தான் எப்பொழுதும் கண்டுவந்த மானுட வடிவத்தையே மீண்டும் காட்டும்படி குந்தியின் மகன் வேண்டுகிறான்.*

*சில வேளைகளில் சிலருக்குத் தன் வடிவத்தை நான்கு கரங்களுடன் கிருஷ்ணன் காட்சி கொடுத்ததாகப் பாகவத புராணம் கூறுகிறது.*

*தமது காட்சியை பகவான் மாற்றியருள்கிறார். மேலும் அர்ஜுனனுக்கு ஆறுதல் அளிக்கின்றார் :—*

श्री भगवानुवाच

**मया प्रसन्नेन तवार्जुनेदं रूपं परं दर्शितमात्मयोगात् ।**
**तेजोमयं विश्वमनन्तमाद्यं यन्मे त्वदन्येन न दृष्टपूर्वम् ॥ ४७**

ஸ்ரீ பகவானுவாச

மயா ப்ரஸன்னேன தவார்ஜுனேதம்
ரூபம் பரம் தர்சிதமாத்மயோகாத் ।
தேஜோமயம் விச்வமனந்தமாத்யம்
யன்மே த்வதன்யேன ந த்ருஷ்ட பூர்வம் ‖ 47

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது* अर्जुन அர்ஜுன *அர்ஜுனா* प्रसन्नेन मया ப்ரஸன்னேன மயா *அருள்கனிந்த என்னால்* आत्मयोगात् ஆத்ம யோகாத் *எனது யோக சக்தியால்* तव தவ *உனக்கு* इदं இதம் *இந்த* तेजोमयं தேஜோமயம் *ஒளி நிறைந்ததும்* अनन्तं அனந்தம் *முடிவில்லாததும்* आद्यं ஆத்யம் *முழு முதலானதும்* मे மே *என்னுடைய* परं பரம் *மேலான* विश्वं रूपं விச்வம் ரூபம் *விச்வ ரூபம்* दर्शितं தர்சிதம் *காண்பிக்கப்பட்டது* यत् யத் *எது* त्वत् अन्येन த்வத் அன்யேன *உன்னைத்தவிர அன்னியரால்* न दृष्ट पूर्वं ந த்ருஷ்டபூர்வம் *முன்பு காணப்படவில்லை.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***அர்ஜுனா, அருள் நிறைந்த என்னால் யோக வலிவைக்கொண்டு இந்த ஒளி நிறைந்ததும், முடிவில்லாததும், முழு முதலானதும் ஆகிய எனது மேலாம் விசுவரூபம் உனக்குக் காண்பிக்கப்பட்டது. உன்னைத் தவிர வேறு யாரும் இதை முன்பு கண்டதில்லை.*** ***47***

*ஈசுவர சாக்ஷாத்காரம் பண்ணினது அர்ஜுனனுடைய தனியுரிமையென்று பொருள்படுத்தலாகாது. மெய்ப்பொருள் காட்சிக்குத் தனியுரிமையிருக்குமானால் அது எல்லார்க்கும் பொது, எங்கும் வியாபகம், எல்லார்க்கும் அந்தராத்மா என்ற பேருண்மை அடிபட்டுப்போம். அதனுடைய பரிபூரணத்துக்குக் குறையும் வந்துவிடும். கருத்து யாது எனின் சகுணப் பிரம்மம், நிர்க்குணபிரம்மம் — அதன் இத்தனைவித படித்தரங்கள் ஆகிய இவை யாவையும் தொகுத்து ஒருங்கே காட்சி காண்பவர் மிகச்*

சிலர். அர்ஜுனனைத் தவிர வேறு யாரும் காணவில்லை என்பது அதன் சிறப்பைக் குறிக்கிறது.

न वेदयज्ञाध्ययनैर्न दानैर्न च क्रियाभिर्न तपोभिरुग्रैः ।
एवं रूपः शक्य अहं नृलोके द्रष्टुं त्वदन्येन कुरुप्रवीर ॥ ४८

ந வேத யக்ஞாத்யயனைர் ந தானைர்
ந ச க்ரியாபிர் ந தபோபிருக்ரை: ।
ஏவம் ரூப: சக்ய அஹம் ந்ருலோகே
த்ரஷ்டும் த்வதன்யேன குருப்ரவீர ॥ 48

कुरु प्रवीर குருப்ரவீர *குருகுலத்துப் பெருவீரா* न वेद यज्ञ अध्ययनैः ந வேத யக்ஞ அத்யயனை: *வேதம் ஓதி யக்ஞத்தை அறிவதால் அல்ல* न दानैः ந தானை: *தானங்களாலும் அல்ல* न च क्रियाभिः ந ச கிரியாபி *கிரியைகளாலும் அல்ல* न उग्रैः तपोभिः ந உக்ரை: தபோபி: *உக்கிரமான தவங்களாலும் அல்ல* एवं रूपः ஏவம் ரூப: *இத்தகைய விசுவரூபத்தில்* अहं அஹம் *நான்* त्वत् अन्येन த்வத் அன்யேன *உன்னைத்தவிர வேறு எவராலும்* नृलोके ந்ருலோகே *மனுஷ்யலோகத்தில்* द्रष्टुं த்ரஷ்டும் *காண* शक्यः சக்ய: *சாத்தியம்.*

***குருகுலப் பெருவீரா, மனுஷ்ய லோகத்தில் உன்னைத் தவிர வேறுயாராலும், வேதம் ஓதி அறிவதாலும், யக்ஞத்தாலும், தானங்களாலும், கிரியைகளாலும், உக்கிர தவங்களாலும், நான் இவ்வடிவத்துடன் காணக்கூடியவன் அல்லன். 48***

வேதத்தை அத்யயனம் செய்வது என்பதைச் சிலர் அர்த்தம் தெரியாது ஓதுதல் என்று பொருள்படுத்துகின்றனர். அது வெறும் ஞாபகசக்தியையும் மனப்பாடம் பண்ணும் திறமையையும் உண்டுபண்ணுகிறது. அதற்குமேல் அதை அர்த்தம் பண்ணவும் அதில் சொல்லியுள்ள யாகங்களைச்செய்யவும் கற்றுக்கொள்ளவேண்டும். அப்படி நான்கு வேதங்களை அறிந்து எல்லா யாகங்களையும் அனுஷ்டிக்கத் தெரிந்துகொண்டால் வேதாத்தியயனம் பூர்த்தியாகிறது. தனக்குப்பயன்படும் பொன் பசு முதலியவைகளைப்பிறர்க்கு

வழங்குவது தானமாகும். பலவந்தத்தால் பொருளை ஏராளமாகச் சிரமப்பட்டுச் சேகரித்து அபிஷேகம் அலங்காரம் முதலியவைகளில் பெருமிதமாகச் செலவிடுவது கர்மமாகும். சாந்திராயண விரதம் போன்றவைகள் உக்கிர தபசு ஆகின்றன. இந்த விரதத்தை அனுஷ்டிக்கின்றவர்கள் பௌர்ணமி யன்று பதினைந்து கவளம் அன்னம் உண்கின்றனர். பிறகு நாள் ஒரு கவளம் கிருஷ்ணபக்ஷத்தில் குறைத்துக்கொண்டு வந்து அமாவாசை யன்று ஒரு கவளம் உண்கின்றனர். திரும்பவும் சுக்லபக்ஷத்தில் நாள் ஒரு கவளம் அதிகப்படுத்திக்கொண்டு போகின்றனர். இவ்விரதத்தால் பெரிதும் சித்த சுத்தி உண்டாகிறது.

விலைகொடுத்து ஒரு பொருளை வாங்குவதுபோன்று இத்தகைய யக்ஞ, தான, தபக்கர்மங்களால் ஈசுவரப் பிராப்தியடைந்து விடலாம் என்பதில்லை. அவனை அடைதற்கு அவன் அருளையே நாடி நிற்கவேண்டும். அவனை அடைந்தவர்களும் அவனை முழுதும் அறிந்துகொண்டவர்கள் அல்லர்.

கொஞ்சம் சாராயத்தைக் குடித்ததும் சிலர்க்குப் போதையுண்டாகிறது. இன்னும் சிலர்க்குப் போதையுண்டாக இரண்டு மூன்று புட்டிகள் வேண்டியிருக்கிறது. ஆயினும் இருவகையினரும் அடையும் ஆனந்தம் ஒன்றுதான். அதுபோல, ஈசுவர மகிமையில் திவலையளவைக் கண்டதும் சிலருக்கு ஆனந்தம் உண்டாகிறது. வேறு சிலருக்கு ஈசுவர ஸந்நிதானத்தில் நேருக்கு நேராக வந்த பிறகுதான் ஆனந்தமுண்டாகிறது. ஆயினும் இருவரடையும் ஆனந்தமும் ஒன்றே.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**मा ते व्यथा मा च विमूढभावो दृष्ट्वा रूपं घोरमीदृङ्ममेदम् ।**
**व्यपेतभीः प्रीतमनाः पुनस्त्वं तदेव मे रूपमिदं प्रपश्य ॥ ४९**

மா தே வ்யதா மா ச விமூட பாவோ
த்ருஷ்ட்வா ரூபம் கோரமீத்ருங்மமேதம் ।
வ்யபேதபீ: ப்ரீதமனா: புனஸ்த்வம்
ததேவ மே ரூபமிதம் ப்ரபச்ய ॥ 49

ईदृक् ஈத்ருக் *இப்படிப்பட்ட* मम மம *என்னுடைய* इदं घोरं रूपं இதம் கோரம் ரூபம் *இந்த கோர ரூபத்தை* दृष्ट्वा த்ருஷ்ட்வா *பார்த்து* ते தே *உனக்கு* व्यथा मा வ்யதா மா *பயம் வேண்டாம்* विमूढ भावः च मा விமூட பாவ: ச மா *மயங்கிய மனநிலையும் வேண்டாம்* व्यपेत भीः வ்யபேத பீ: *பயம் நீங்கினவனாய்* प्रीतमनाः च ப்ரீதமனா: ச *மனமகிழ்ச்சியுடையவனும்* पुनः புன: *மறுபடியும்* त्वं த்வம் *நீ* मे மே *என்னுடைய* तत् इदं தத் இதம் *அதே இந்த* रूपं एव ரூபம் ஏவ *ரூபத்தையே* प्रपश्य ப்ரபச்ய *நன்கு பார்ப்பாயாக.*

***இப்படிப்பட்ட எனது கோர ரூபத்தைக்கண்டு உனக்குக் கலக்கமும் மயங்கிய மனநிலையும் வேண்டாம். அச்சம் நீங்கி, மகிழ்ந்த மனதுடன் திரும்பவும் எனதுபழைய வடிவத்தைப் பார்ப்பாயாக. 49***

*கொந்தளிப்புள்ள கடல் தேங்கியிருக்கும்போது மனமகிழ்வுண்டாவது போன்று ஸம்ஹாரமூர்த்தியின் காட்சி சாந்தமூர்த்தியின் காட்சியாக மாறுகையில் அதைப் பார்க்கும் ஜீவனுக்கு மனவமைதி யேற்படுவது இயல்பு.*

सञ्जय उवाच

इत्यर्जुनं वासुदेवस्तथोक्त्वा स्वकं रूपं दर्शयामास भूयः ।
आश्वासयामास च भीतमेनं भूत्वा पुनः सौम्यवपुर्महात्मा ॥ ५०

ஸஞ்ஜய உவாச

இத்யர்ஜுனம் வாஸுதேவஸ்ததோக்த்வா
ஸ்வகம் ரூபம் தர்சயாமாஸ பூய: ।
ஆச்வாஸயாமாஸ ச பீதமேனம்
பூத்வா புன: ஸௌம்ய வபுர் மஹாத்மா ॥ 50

सञ्जय उवाच ஸஞ்ஜய உவாச *ஸஞ்ஜயன் சொன்னது*

वासुदेवः வாஸுதேவ: *வாசுதேவனானவர்* अर्जुनं அர்ஜுனம் *அர்ஜுனனுக்கு* इति இதி *இப்படி* उक्त्वा உக்த்வா *சொல்லி* भूयः பூய: *மறுபடியும்* तथा ததா *அவ்வாறு* स्वकं रूपं ஸ்வகம் ரூபம் *சொந்த வடிவத்தை* दर्शयामास தர்சயாமாஸ *காண்பித்தார்* महात्मा மஹாத்மா *மஹாத்மாவானவர்* सौम्य वपुः भूत्वा ஸௌம்ய வபு: பூத்வா *இனிய வடிவம்*

*எடுத்து* पुनः புன: *மறுபடியும்* भीतं एनं பீதம் ஏனம் *பயந்தவனை* आश्वासयामास च ஆச்வாஸயாமாஸ ச *தேற்றினார்.*

ஸஞ்ஜயன் சொன்னது

***வாசுதேவர் இங்ஙனம் அர்ஜுனனுக்கியம்பிப் பின்பு தமது சொந்த வடிவத்தை அப்படியே காண்பித்தார். மஹாத்மாவானவர் இனிய வடிவெடுத்து அஞ்சினவனைத் திரும்பவும் தேற்றினார். 50***

*வசுதேவர் வீட்டில் எப்படிப் பிறந்தாரோ அப்படிப் பட்ட வடிவத்தை இப்பொழுது காட்டியருளினார். உயிர்களுக்குப் பாடம் புகட்டுதற்கு வேண்டியவளவே அவர் அச்சமூட்டுகிறார். பின்பு இனிய வடிவங்காட்டி அவர்களை மகிழ்விக்கிறார். அவர் இத்தகைய தன்மை யுடையவரா யிருப்பதால் அவர் மஹாத்மாவாகிறார்.*

**अर्जुन उवाच**

**दृष्ट्वेदं मानुषं रूपं तव सौम्यं जनार्दन ।**
**इदानीमस्मि संवृत्तः सचेताः प्रकृतिं गतः ॥ ५१**

அர்ஜுன உவாச

த்ருஷ்ட்வேதம் மானுஷம் ரூபம் தவ ஸௌம்யம் ஜனார்தன ।
இதானீமஸ்மி ஸம்வ்ருத்த: ஸசேதா: ப்ரக்ருதிம் கத: ॥ 51

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது*

जनार्दन ஜனார்தன *ஜனார்தன* तव தவ *உம்முடைய* इदं இதம் *இந்த* सौम्यं मानुषं रूपं ஸௌம்யம் மானுஷம் ரூபம் *இனிய மானுட வடிவத்தை* दृष्ट्वा த்ருஷ்ட்வா *பார்த்து* इदानीं இதானீம் *இப்பொழுது* अहं அஹம் *நான்* सचेताः संवृत्तः ஸசேதா: ஸம்வ்ருத்த: *மனத்தெளிவைப் பெற்றவனாய்* प्रकृतिं गतः ப்ரக்ருதிம் கத: *என் இயல்பை அடைந்தவனாய்* अस्मि அஸ்மி *இருக்கிறேன்.*

அர்ஜுனன் சொன்னது

***ஜனார்தனா, உமது இந்த இனிய மானுட வடிவங்கண்டு இப்பொழுது நான் மனம் தெளிந்து என் இயல்பை அடைந்தவனாய் இருக்கிறேன். 51***

*எல்லாம் ஈசன் வடிவெனினும் சிங்கத்தின் வடிவெடுத்துள்ள ஈசனிடத்திருந்து சிறிது எட்ட நிற்க ஜீவன் விரும்புகிறான். அவனிடத்து ஜீவபோதம் இருக்குமளவு இத்தகைய மனப்பான்மையும் இருக்கும்.*

**श्री भगवानुवाच**

**सुदुर्दर्शमिदं रूपं दृष्टवानसि यन्मम ।
देवा अप्यस्य रूपस्य नित्यं दर्शनकाङ्क्षिणः ॥ ५२**

ஸ்ரீ பகவானுவாச

ஸுதுர்தர்சமிதம் ரூபம் த்ருஷ்டவானஸி யன்மம ।
தேவா அப்யஸ்ய ரூபஸ்ய நித்யம் தர்சன காங்க்ஷிண: ॥ 52

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

**मम** மம *என்னுடைய* **इदं** இதம் *இந்த* **सुदुर्दर्शं** ஸுதுர்தர்சம் *தர்சிப்பதற்கு அரிய* **यत् रूपं** யத் ரூபம் *எந்த ரூபத்தை* **दृष्टवान् असि** த்ருஷ்டவான் அஸி *பார்த்திருக்கிறாய்* **अस्य रूपस्य** அஸ்ய ரூபஸ்ய *அந்த ரூபத்தை* **देवाः अपि** தேவா: அபி *தேவர்களும்* **नित्यं** நித்யம் *எப்பொழுதும்* **दर्शन कांक्षिणः** தர்சன காங்க்ஷிண: *தர்சிக்க இச்சிக்கிறார்கள்.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***தரிசிப்பதற்கரிய எனது இந்த ரூபத்தை நீ தரிசித்திருக்கிறாய். இந்த ரூபத்தைத் தரிசிக்கத் தேவர்களும் எப்பொழுதும் இச்சிக்கிறார்கள். 52***

*தேவர்கள் இச்சித்துக் கொண்டிருக்கிறார்களாதலால் அவர்கள் இன்னும் இறைவனை முழுதும் கண்டதில்லை. ஒரு நதியில் நீராடப் போகின்றவன் அதை ஓர் இடத்தில் ஸ்பரிசித்து மூழ்கி நீராடினால் அந்நதியைக் கண்டவன் ஆகிறான். ஆனால் அது உற்பத்தியாகுமிடத்திலிருந்து சமுத்திரத்தில் சங்கமமாகும் பரியந்தம் அதைப் பார்த்தவர்கள் மிக மிகச் சிலர். அங்ஙனம் அர்ஜுனன் இறைவனைக் கண்டதுபோன்று அவரைப் பெரிதும் அறிந்தவர்கள் மிகச் சிலரே யாவர்.*

*கடவுளைக் காண்பதற்கு சாதகர்கள் கையாண்ட உபாயங்கள் எவை? விடை வருகிறது :—*

**नाहं वेदैर्न तपसा न दानेन न चेज्यया ।**
**शक्य एवंविधो द्रष्टुं दृष्टवानसि मां यथा ॥ ५३**

நாஹம் வேதைர்ந தபஸா ந தானேன ந சேஜ்யயா ।
சக்ய ஏவம் விதோ த்ரஷ்டும் த்ருஷ்டவானஸி மாம் யதா ॥ 53

मां மாம் *என்னை* यथा யதா *எவ்வாறு* दृष्टवान् असि த்ருஷ்டவான் அஸி *பார்த்திருக்கிறேயோ* एवं विधः ஏவம் வித: *அவ்வாறு* अहं அஹம் *நான்* वेदैः வேதை: *வேதங்களால்* द्रष्टुं த்ரஷ்டும் *காண்பதற்கு* न शक्यः ந சக்ய: *இயலாது* तपसा न தபஸா ந *தபசால் அல்ல* दानेन न தானேன ந *தானங்களால் அல்ல* इज्यया च न இஜ்யயா ச ந *யாகத்தாலும் அல்ல.*

***நீ என்னை எவ்வாறு தரிசித்தாயோ அவ்வாறு நான் வேதங்களாலும் தவத்தாலும் தானத்தாலும் யாகத்தாலும் தரிசிக்க இயலாதவன். 53***

*பொற்காசு ஒன்றை இழந்தவன் அதன்மீது நின்று கொண்டே அதை எவ்வளவு தேடினாலும் அதை அடைய மாட்டான். வேதம் வேள்வி தானம் தபசு முதலியன மனிதனைப் பண்படுத்துதற்குப் பயன்படலாம். ஆனால் கடவுளைக் காண இவை யாவும் உதவமாட்டா.*

*கடவுளைக் காண வேறு என் செய்வது? விடை*

**भक्त्या त्वनन्यया शक्य अहमेवं विधोऽर्जुन ।**
**ज्ञातुं द्रष्टुं च तत्त्वेन प्रवेष्टुं च परंतप ॥ ५४**

பக்த்யா த்வனன்யயா சக்ய அஹமேவம் விதோऽர்ஜுன ।
ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேன ப்ரவேஷ்டும் ச பரந்தப ॥ 54

परन्तप பரந்தப *எதிரிகளை வாட்டுபவனே* अर्जुन அர்ஜுன *அர்ஜுனா* तु து *ஆனால்* अनन्यया भक्त्या அனன்யயா பக்த்யா *அனன்ய பக்தியால்* एवं विधः ஏவம் வித: *இவ்விதம்* अहं அஹம் *நான்* तत्त्वेन தத்வேன *உள்ளபடி* ज्ञातुं ஞாதும் *அறிந்துகொள்ளுதற்கும்* द्रष्टुं च த்ரஷ்டும்

ச காண்பதற்கும் प्रवेष्टुं च ப்ரவேஷ்டும் ச அடைதற்கும் शक्यः சக்ய: கூடியவன்.

**எதிரிகளை வாட்டவல்ல அர்ஜுனு, மாறுத பக்தியாலேயே இவ்விதம் என்னை உள்ளபடி உணரவும் காணவும் அடையவும் கூடும். 54**

அனன்யபக்தி— கடவுளைத்தவிர வேறு ஒன்றையும் நாடாத பக்தி. அது கடவுளுக்குப் புறம்பாக எதையும் பொருள்படுத்துவதில்லை. எல்லாம் அவன் மயம், எல்லாம் அவன் செயல் என்ற மனநிலை அனன்ய பக்தியினின்று வருகிறது.

ஒரு ராஜ மாளிகையில் சிப்பந்திகள் நடந்துகொள்ளும் முறையினின்று அரசன் அதில் வீற்றிருக்கின்ருன் என்று யூகித்து உணரலாம். அந்த உணர்ச்சி மட்டும் போதாது. அரசனைக் கண்கூடாகக் காண்பது அதிலும் மேல். இனி, அவனைக் காண்பதிலும் பெரிய நிலையொன்று உண்டு. அரசனேடு ஒட்டி உறவாடுதலே சாலச் சிறந்தது. அங்ஙனம் அனன்ய பக்தியால் ஒருவன் கடவுளின் சாந்நித்தியத்தை முதலில் உணர்கிருன். அதன்மேல் தர்சனம் உண்டாகிறது. பிறகு தானே அதில் ஒடுங்குகிருன். இத்தனையும் செய்யவல்லது பக்தி.

பலர் பாலைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிருர்கள். அவர்களில் சிலர் பாலைப் பார்த்திருக்கிருர்கள். ஆனுல் பாலைப் பருகினவர்கள் அதிலும் சிலரே.

ஊனக் கண்கொண்டு கடவுளைக் காணமுடியுமா என்ற பேச்செழுந்தது. இல்லை; ஊனக் கண்களால் காணமுடியாது. பக்தி பண்ணும்போது அன்புமயமானசரீரம் ஒன்று நமக்குள் உண்டாகிறது. அச்சரீரத்துக்கு அன்புமயமான கண்களும் காதுகளும் உண்டு. அவற்ருல் நீ இறைவனைக் காணவும் கேட்கவும் முடியும்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

பக்தியைப் பெருக்கி இறைவனை அடைதற்கு என் செய்யவேண்டும்? விடை வருகிறது :—

मत्कर्मकृन्मत्परमो मद्भक्तः सङ्गवर्जितः ।
निर्वैरः सर्वभूतेषु यः स मामेति पाण्डव ॥ ५५

மத்கர்மக்ருன் மத்பரமோ மத்பக்த: ஸங்கவர்ஜித: ।
நிர்வைர: ஸர்வபூதேஷு ய: ஸ மாமேதி பாண்டவ ॥ 55

पाण्डव பாண்டவ *பாண்டவா* मत्कर्मकृत् மத்கர்மக்ருத் *எனக்காகக் கர்மம் செய்கிறவன்* मत्परमः மத்பரம: *என்னைக் குறியாகக்கொள்கிறவன்* मद्भक्तः மத்பக்த: *என்னிடத்து பக்தி பண்ணுபவன்* सङ्ग वर्जितः ஸங்க வர்ஜித: *பற்றில்லாதவன்* सर्व भूतेषु ஸர்வ பூதேஷு *எல்லா உயிர்களிடத்தும்* निर्वैरः च நிர்வைர: ச *வெறுப்பற்றவனும்* यः ய: *எவனோ* सः ஸ: *அவன்* मां மாம் *என்னை* एति ஏதி *அடைகிறான்.*

***பாண்டவா, எனக்காகக் கர்மம் செய்கிறவனும், என்னைக் குறியாகக் கொள்கிறவனும், என்னிடத்து பக்தி பண்ணுபவனும், பற்றற்றவனும், எல்லா உயிர்களிடத்தும் வெறுப்பற்றவனும் எவனோ அவன் என்னை அடைகிறான்.*** **55**

*எல்லா ஜீவர்களும் கர்ம சொரூபம். ஒருவன் எத்தகையவன் என்பதை அவன் செய்யும் கர்மம் விளக்குகிறது. மக்களுள் கடவுளுக்கென்றே கர்மம் செய்பவன் சிறந்தவன்.*

*அரசாங்கத்துக்கென்றே கர்மம் செய்கிறவர்கள் உளர். அதன் மூலம் தங்களைப் பெருமைப் படுத்திக்கொள்வது அவர்களிற் சிலரது குறிக்கோள். ஆனால் பக்தனோ கடவுளை அடைதலையே ஒப்பற்ற குறிக்கோளாகக் கொள்கிறான்.*

*ஆயுளெல்லாம் ஒருவன் சிறைவாசம் செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. அதில் விருப்பமில்லாது அவன் அவ் வாழ்வை நடத்துகிறான். ஆனால் கடவுள் வழிபாடு அத்தகையதன்று. நாள்தோறும் புதிய இனிமை அதினின்று பிறக்கிறது. இறைவன்பால் அளவில்லா அன்பு ஊற்றெடுக்கிறது.*

*இறைவனிடம் அன்பு அதிகரிக்கின்றவளவு உலகப் பொருள்களிடத்துப் பற்று அகன்றுவிடுகிறது. ஓர் உயிர் மற்றோர் உயிரை வெறுப்பதற்குக் காரணம் தான் அடைய விரும்பும் பொருளை மற்றொருவன் கைக்கொள்ள முயலுவதால் வருகிறது. பக்தனுக்கோ ஒரு பொருளிலும் பற்றில்லையாதலால் அதை முன்னிட்டு யாரையும் வெறுக்கவேண்டிய அவசியமில்லை. மனிதன் எதன்பால் தன்னை ஒப்படைக்கின்றானோ அதை அவன் அடைகிறான். கடவுள்பால் தன்னை ஒப்படைப்பவன் கடவுளை அடைகின்றான்.*

*ஈசுவரனிடம் நமக்கு எவ்வளவு தீவிரமான பக்தி இருக்க வேண்டுமென்பதை நீ அறிவாயா? தனது கணவனிடம் ஒரு கற்புடைய ஸ்திரீக்கு இருக்கும் அன்பு, தான் புதைத்து வைத்த பணத்தினிடம் ஒரு லோபிக்கு இருக்கும் ஆசை, உலகப் பொருள்களைப் பெறவேண்டுமென்று பற்றுள்ளவர்கள் கொள்ளும் ஆவல், இந்த மூன்றும் ஒன்று கூடினாற்போன்ற தீவிர பக்தியானது ஈசுவரனைக்காணவேண்டியதற்காக உன் மனத்தில் உதிக்குமானால் அப்போது அவனை நீ நிச்சயமாக அடைவாய்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे विश्वरूपदर्शनयोगो नाम
एकादशोऽध्यायः ॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே
விச்வரூபதர்சனயோகோ நாம
ஏகாதசோऽத்யாய: ||

***பிரம்ம வித்தையைப் புகட்டுவதும், யோக சாஸ்திரமானதும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமாக வந்துள்ளதுமாகிய பகவத்கீதை என்னும் உபநிஷத்தின்கண் விச்வரூபதர்சன யோகம் என்ற பதினொன்றாம் அத்தியாயம்.***

---

# द्वादशोऽध्यायः

# பன்னிரண்டாம் அத்தியாயம்

## भक्तियोगः

## பக்தி யோகம்

अर्जुन उवाच

**एवं सततयुक्ता ये भक्तास्त्वां पर्युपासते ।**
**ये चाप्यक्षरमव्यक्तं तेषां के योगवित्तमाः ॥ १**

அர்ஜுன உவாச

ஏவம் ஸததயுக்தா யே பக்தாஸ்த்வாம் பர்யுபாஸதே ।
யே சாப்யக்ஷரமவ்யக்தம் தேஷாம் கே யோகவித்தமா: ॥ 1

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது*

एवं ஏவம் *இவ்வாறு* सततयुक्ताः ஸதத யுக்தா: *எப்பொழுதும் யோகத்தில் நிலைத்திருப்பவர்* ये भक्ताः யே பக்தா: *எந்த பக்தர்கள்* त्वां த்வாம் *உம்மை* पर्युपासते பர்யுபாஸதே *உபாசிக்கிறார்களோ* ये च अपि யே ச அபி *இன்னும் யார்* अव्यक्तं அவ்யக்தம் *நிர்க்குணம்* अक्षरं அக்ஷரம் *பிரம்மத்தை* तेषां தேஷாம் *அவர்களுள்* के கே *யார்* योगवित्तमाः யோகவித்தமா: *யோகத்தை நன்கு அறிந்தவர்கள்.*

அர்ஜுனன் சொன்னது

***இவ்வாறு யாண்டும் யோகத்தில் உறுதிப்பாடுடன் உம்மை உபாசிக்கும் பக்தர்கள், மற்று நிர்க்குண பிரம்மத்தை உபாசிப்பவர்கள் ஆகிய இவர்களுள் யோகத்தை நன்கு அறிந்தவர்கள் யார்? 1***

*முன் அத்தியாயத்தின் கடைசி சுலோகத்தில் சொல்லியபடி சகுண பிரம்ம உபாசனை செய்வது சிறந்ததா அல்*

லது நிருபாதி, நிர்விஷய, நிர்க்குண பிரம்ம உபாசனை செய்வது சிறந்ததா என்பது கேள்வி.

श्री भगवानुवाच

मय्यावेश्य मनो ये मां नित्ययुक्ता उपासते ।
श्रद्धया परयोपेतास्ते मे युक्ततमा मताः ॥ २

ஸ்ரீ பகவானுவாச

மய்யாவேச்ய மனோ யே மாம் நித்யயுக்தா உபாஸதே ।
ச்ரத்தயா பரயோபேதாஸ்தே மே யுக்ததமா மதா: ॥ 2

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

मयि மயி *என்னிடத்து* मनः आवेश्य மன: ஆவேச்ய *மனதை வைத்து* नित्य युक्ताः நித்ய யுக்தா: *யோகத்தில் நிலைத்தவராய்* परया श्रद्धया பரயா ச்ரத்தயா *மேலான சிரத்தையுடன்* उपेताः உபேதா: *கூடினவராய்* ये யே *யார்* मां மாம் *என்னை* उपासते உபாஸதே *உபாசிக்கிறார்களோ* ते தே *அவர்கள்* युक्ततमाः யுக்ததமா: *யோகத்தில் மேம்பட்டவர்கள் என்று* मे मताः மே மதா: *என்னால் கருதப்படுகிறார்கள்.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***என்னிடத்து மனதை வைத்து யோகத்தில் நிலைத்தவராய், பெருஞ் சிரத்தை யுடையவராய் யார் என்னை உபாசிக்கிறார்களோ அவர்கள் யோகத்தில் மேம்பட்டவர்கள் என்பது என் கருத்து.*** 2

*பகவான் விசுவரூபத்தை யுடையவர், பரமேசுவரன்; அவர் சகுண பிரம்மம். உலகுக்கு அந்தர்யாமியாயிருந்து அதை ஆளுகிறார். யோகிகளுக்கெல்லாம் அவரே மேலான ஈசுவரன். சர்வக்ஞன் என்று அவரைத்தான் சொல்ல வேண்டும். முழுமனதையும் ஒழுங்குப்படுத்தி அவர்மீது செலுத்துகிறவர்கள் பக்தர்கள். அவர்களுக்கு விருப்பு, வெறுப்பு, மனக்கிலேசம் முதலியன கிடையா. இரவும் பகலும் இறைவனைப் பற்றிய சிந்தனை யொன்றே அவர்களின் உள்ளத்தில் குடிகொள்கிறது. அவர்கள் உயிர் வாழ்ந்திருப்*

*பதும் இறைவன் பொருட்டேயாம். ஆதலால் அவர்கள் சிறந்த யோகிகள் ஆகிறார்கள்.*

*கடவுளை அரூபியெனத் தியானிப்பது முற்றிலும் சரியானதே. ஆனால் அதுதான் உண்மை, மற்றக் கொள்கைகளெல்லாம் பொய் என்று எண்ணிவிடாதே. அவனை "ரூபி" எனத்தியானிப்பதும் சரியானதே. ஆனால் அவனை நீ காணும் வரையில் உனது பிரத்தியேகமான கொள்கையைக் கைவிடாதே. அப்பால் எல்லாம் தெளிவாகும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*மற்று நிர்க்குண நிராகார பிரம்மத்தை உபாசிப்பவர்கள் சிறந்த யோகிகள் ஆகமாட்டார்களா? அதற்கு விடை வருகிறது:—*

**ये त्वक्षरमनिर्देश्यमव्यक्तं पर्युपासते ।**
**सर्वत्रगमचिन्त्यं च कूटस्थमचलं ध्रुवं ॥ ३**
**सन्नियम्येन्द्रियग्रामं सर्वत्र समबुद्धयः ।**
**ते प्राप्नुवन्ति मामेव सर्वभूतहिते रताः ॥ ४**

யே த்வக்ஷரமநிர்தேச்யமவ்யக்தம் பர்யுபாஸதே ।
ஸர்வத்ரகமசிந்த்யம் ச கூடஸ்தமசலம் த்ருவம் ॥ 3
ஸன்னியம்யேந்த்ரியக்ராமம் ஸர்வத்ர ஸமபுத்தய: ।
தே ப்ராப்னுவந்தி மாமேவ ஸர்வபூதஹிதே ரதா: ॥ 4

तु து *ஆனால்* ये யே *யார்* सर्वत्र ஸர்வத்ர *எங்கும்* समबुद्धयः ஸமபுத்தய: *சமபுத்தியுள்ளவர்களாய்* इन्द्रियग्रामम् இந்த்ரியக்ராமம் *இந்திரியக்கூட்டத்தை* संनियम्य ஸன்னியம்ய *நன்கு அடக்கி* अनिर्देश्यं அநிர்தேச்யம் *சொல்லால் விளக்கமுடியாததும்* अव्यक्तं அவ்யக்தம் *தோற்றத்துக்கு அப்பாற்பட்டதும்* सर्वत्रगं ஸர்வத்ரகம் *எங்கும் வியாபித்ததும்* अचिन्त्यं அசிந்த்யம் *சிந்தைக்கெட்டாததும்* कूटस्थं கூடஸ்தம் *மாறாததும்* अचलं அசலம் *நகராததும்* ध्रुवं த்ருவம் *நிலைத்ததும்* अक्षरं அக்ஷரம் *அழியாததும்* (*ஆகிய பிரம்மத்தை*) पर्युपासते பர்யுபாஸதே *நன்கு உபாசிப்பவர்கள்* सर्व भूत हिते रताः ஸர்வ பூத ஹிதே ரதா: *எல்லா உயிர்களின் நன்மையில் ஈடுபட்டுள்ளவர்கள்* ते தே *அவர்கள்* मां एव மாம் ஏவ *என்னையே* प्राप्नुवन्ति ப்ராப்னுவந்தி *வந்தடைகிறார்கள்.*

**ஆனால் யார் எங்கும் ஸமபுத்தி யுள்ளவர்களாய், இந்திரியக் கூட்டத்தை நன்கு அடக்கி, சொல்லுக்கடங்காததும், கட்புலனாகாததும், மனதுக் கெட்டாததும், எங்கும் நிறைந்ததும், மாறாததும், நகராததும், நிலைத்ததும், அழியாததும் ஆகிய பிரம்மத்தை நன்கு உபாசிக்கிறார்களோ, எல்லா உயிர்களின் நன்மையில் ஈடுபட்டுள்ள அவர்கள் என்னையே வந்தடைகிறார்கள். 3-4**

நிர்க்குண பிரம்மம் எத்தகையது என்பது விளக்கப்படுகிறது. அது அநிர்தேச்யம் – உலகப் பொருள் எதனோடும் சீர்தூக்க இடந்தருகிறதில்லை யாதலால் அது எத்தகையது என்று சொல்லால் விளக்க முடியாது. உலகமோ தோன்றவும் மறையவும் செய்கிறது. தோன்றிய பொழுது வியக்தமாகவும் மறைந்தபொழுது அவ்யக்தமாகவும் உலகம் இருக்கிறது. ஆனால் பரபிரம்மத்தின்கண் இத்தகைய விகாரம் ஒன்றும் கிடையாது. அதீதத்தில் அது இருந்தபடி இருக்கிறது. ஆதலால் அது அவ்யக்தம். கடலின் கீழ் உள்ள பனிக்கட்டி தோன்றாது இருந்தபடி இருப்பது போன்றதா பிரம்மம் என்ற கேள்வி எழலாம். அப்படியல்ல, இது ஸர்வத்ரகம் – அங்கு இங்கு என்று சொல்ல இடந்தராது நீக்கமற எங்கும் நிறைபொருள். இடமே அதனுள் ஒடுங்கியது எனலாம். சொப்பனத்தில் பார்த்த ஒரு பெரிய இடம் மனதில் ஒடுங்குகிறது. அதே மனதானது நன்மை தீமை, இன்ப துன்பம் ஆகியவைகளை எண்ணவும் உணரவும் செய்கிறது. ஆனால் அம்மனது பிரம்மத்தை உணரவல்லதல்ல. பிரம்மம் அசிந்த்யம் – சிந்தனைக் கெட்டாதது. கூட (கூட) என்றசொல் மாறுபடும் தன்மையுடையது என்றுபொருள்படுகிறது. பிரபஞ்சம்மாறுபட்டுக்கொண்டே இருக்கிறது. மாறுபடும் பிரபஞ்சத்துக்கு பிரம்மம் இருப்பிடமாகிறது. நிலையற்றதை இது நிலைத்திருந்து தாங்குவதால் இதற்கு கூடஸ்தன் என்று பெயர். ஓயாது மாறு

படுகிற மேகத்தைத் தூக்கிக்கொண்டு காற்று நகர்ந்தோடு கிறது. சலிப்பது காற்றின் இயல்பு. பிரம்மத்திலோ சல னம் இல்லை. அது அசலம் — நகராதது. இனி, ஆகாசம் அசைவதில்லை இருந்தபடி தோன்றுகிறது. பிரளயத்தில் இருந்தபடி அழிகிறது. பிரம்மம் அத்தகையதோ ? அல்ல, அது த்ருவம் – நிலைபேறு உடையது. சுத்த சைதன்யமாகிய அது கால தேச வர்த்தமானத்தால் அடிபடாதிருப்பதால் அது அக்ஷரம், அதாவது அழியாதது.

இனி, நிர்க்குண பிரம்ம உபாஸனைக்குத் தகுதியுடை யவர் யார் எனின், அவர்களிடத்து சமபுத்தி யிருக்க வேண்டும். இன்பம் தருபவைகள், துன்பம் தருபவைகள் ஆகிய இரண்டையும் ஒரே பான்மையுடன் கருதுதல் சம புத்தியாகும். இந்திரியக் கூட்டங்களை யெல்லாம் யார் நன்கு கட்டியாளுகிறார்களோ அவர்களுக்கே மனதின் நடுநிலை வந்தமைகிறது. மனதின் நடுநிலை என்பது உலகுக்குப் பயன்படாது பிணம்போன்று போய்விடுவது என்பதல்ல. எல்லா உயிர்களையும் பிரம்ம சொரூபமாகக் கண்டு அவர் களுக்குச் சேவை செய்யவேண்டும். அவர்களின் நன்மை யில் நாட்டம் வைத்திருப்பதற்கு சேவை செய்வதே அறி குறியாகும். ஒரு சிலர் பிரம்ம சொரூபத்தில் லயித்துக் கர்ம மற்றிருப்பார்கள். அங்ஙனம் ஜீவர்களை யெல்லாம் பிரம்ம சொரூபமாகக் காண்பதும் அந்த ஜீவர்களுக்கு பரம நன்மையை விளைவிக்கிறது. தைலதாரை போன்று இடை யறாது மனது **பிரம்ம** சொரூபத்தில் போவது உபாஸனை யாகும்.

மணியை அடிக்கும்போது, அடுத்தடுத்து வரும் அதன் ஒவ் வொரு ஓசையும் தனித்தனி உருவத்தை யுடையது போலத் தோன்றும்; ஆனால் அடிப்பதை நிறுத்தினால் சிறிது நேரம் வரையில் கேட்டுக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்தொழியும். தெளிவற்ற சப்தமோ உருவமில்லாதது போலத் தோன்றுகிறது. மணியின் ஓசையைப் போலக் கடவுள் உருவமுள்ளவனையும் உருவமில்லாதவனையு மிருக்கிறான்.

— **ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்**

*இரண்டு உபாஸனையும் ஒன்று எனில் எதை வேண்டுமானாலும் ஒருவன் உபாஸிக்கலாமா? உபாஸிக்கலாகாது. ஏனென்றால்:—*

क्लेशोऽधिकतरस्तेषामव्यक्तासक्तचेतसाम् ।
अव्यक्ता हि गतिर्दुःखं देहवद्भिरवाप्यते ॥ ५

க்லேசோऽதிகதரஸ்தேஷாமவ்யக்தாஸக்தசேதஸாம் ।
அவ்யக்தா ஹி கதிர்துக்கம் தேஹவத்பிரவாப்யதே ॥ 5

अव्यक्त आसक्त चेतसां அவ்யக்த ஆஸக்த சேதஸாம் *நிர்க்குண பிரம்மத்தில் சித்தத்தை வைத்த* तेषां தேஷாம் *அவர்களுக்கு* क्लेश: க்லேச: *பிரயாசை* अधिकतर: அதிகதர: *மிக அதிகமானது* हि ஹி *ஏனென்றால்* देहवद्भि: தேஹவத்பி: *தேகாபிமானமுடையவர்களால்* अव्यक्ता गति: அவ்யக்தா கதி: *நிர்க்குண பிரம்ம நிஷ்டை* दु:खं துக்கம் *கஷ்டப்பட்டு* अवाप्यते அவாப்யதே *அடையப்படுகிறது.*

***நிர்க்குண பிரம்மத்தில் சித்தம் வைப்பவர்க்குப் பிரயாசை மிக அதிகம். ஏனென்றால் உடலுணர்ச்சியுடையார்க்கு நிர்க்குண பிரம்ம நிஷ்டையடைதல் அரிதாம்.*** 5

*இருதர உபாஸகர்களும் அடையும் குறி ஒன்றே. ஆனால் தேகாபிமானம் உடைய ஒருவனுக்கு நிர்க்குண பிரம்ம உபாஸனையைவிட சகுண பிரம்ம உபாஸனை எளிது நிர்க்குண பிரம்ம உபாஸகன் துவக்கத்திலேயே உடல் பற்றை அறவே நீக்க வேண்டும். பிஞ்சாகிக் காயாகிக் கனியாகின்றவிடத்து மேலோடு பழத்தினின்று தானாகப் பிரிந்து விடுகிறது. அங்ஙனம் ஞான முதிர்ச்சி யடைபவனுக்கு தேகாபிமானம் போய்விடுகிறது. தேகப்பற்றுடையவனுக்கு எளிதாயிருப்பது சகுண பிரம்ம உபாஸனை. அதில் துவக்கி மேல்நோக்கிப் போகின்றவனுக்கு சாதனத்தில் அதிக சிரமம் ஏற்படுவதில்லை.*

*ஞானயோகி 'நானே' பிரம்மம் என்கிறான். ஆனால் சரீரத்தை ஆத்மன் என்று கருதும் வரையில் அவ்வித பாவனை கெடுதியை உண்டு*

*பண்ணும். அவனை அத்யாத்மிக வாழ்க்கையில் முன்னேறச் செய்யாமல் நாசப்படுத்திவிடும். அவன் மற்றவர்களை ஏமாற்றுகிறதோடு தன்னையும் ஏமாற்றிக்கொள்கின்றான்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*இனி, ஈசுவர உபாஸனை எப்படிச் செய்யவேண்டும்? விடை வருகிறது :—*

**ये तु सर्वाणि कर्माणि मयि संन्यस्य मत्पराः ।**
**अनन्येनैव योगेन मां ध्यायन्त उपासते ॥ ६**
**तेषामहं समुद्धर्ता मृत्युसंसारसागरात् ।**
**भवामि नचिरात्पार्थ मय्यावेशितचेतसां ॥ ७**

யே து ஸர்வாணி கர்மாணி மயி ஸன்யஸ்ய மத்பரா: ।
அனன்யேனைவ யோகேன மாம் த்யாயந்த உபாஸதே ॥ 6
தேஷாமஹம் ஸமுத்தர்த்தா ம்ருத்யுஸம்ஸாரஸாகராத் ।
பவாமி நசிராத்பார்த்த மய்யாவேசிதசேதஸாம் ॥ 7

ये யே *யார்* तु து *ஆனால்* सर्वाणि कर्माणि ஸர்வாணி கர்மாணி *சர்வ கர்மங்களையும்* मयि மயி *என்னிடத்து* संन्यस्य ஸன்யஸ்ய *அர்ப்பித்து* मत्पराः மத்பரா: *என்னையே மேலாம் கதியாகக்கொண்டு* अनन्येन योगेन அனன்யேன யோகேன *அன்னியது எதையும் அணுகாத யோகத்தால்* मां एव மாம் ஏவ *என்னையே* ध्यायन्तः த்யாயந்த: *தியானிக்கிறவர்களாய்* उपासते உபாஸதே *உபாசிக்கிறார்களோ* पार्थ பார்த்த *பார்த்தா* अहं அஹம் *நான்* मयि மயி *என்னிடத்து* आवेशित चेतसां ஆவேசித சேதஸாம் *செலுத்திய மனதையுடைய* तेषां தேஷாம் *அவர்களுடைய* मृत्यु संसार सागरात् ம்ருத்யு ஸம்ஸார ஸாகராத் *மரணத்தோடு கூடிய சம்சார சாகரத்தினின்று* नचिरात् நசிராத் *விரைவில்* समुद्धर्ता ஸமுத்தர்த்தா *கரையேற்றுபவனாக* भवामि பவாமி *ஆகிறேன்.*

***ஆனால் யார் வினையனைத்தையும் எனக்கு அர்ப்பித்து, என்னையே பரகதியாகக்கொண்டு, சிதைவுறு யோகத்தால் என்னைத் தியானித்து வணங்குகிறார்களோ, சித்தத்தை என்பால் வைத்த அவர்களை, பார்த்தா, நான் மரண ஸம்ஸார ஸாகரத்தினின்று விரைவில் கரையேற்றுகிறேன். 6–7***

விசுவ ரூபத்தையுடைய ஈசுவரனைத் தவிர வேறு ஒன்றையும் பற்றுக்கோடாகக் கொள்ளாது அவனையே சார்ந்து யார் அவனுக்கென்றே பணி செய்யும் பான்மை யுடையவர்களா யிருக்கிறார்களோ அவர்கள் பிறப்பு இறப்பு மயமாயுள்ள சம்சாரப் பெருங்கடலினின்று விரைவில் கரை யேற்றப்படுகிறார்கள்.

ஈசுவரானுபவத்துக்கும் அடையாளங்கள் உள்ளன. பக்தி எவனிடம் பொங்கித் ததும்புகின்றதோ அவனுக்கு வெகு சீக்கிரத்தில் ஈசுவர தரிசனம் கிடைக்குமென்று தெரிந்துகொள்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

அதற்காக ஜீவன் செய்ய வேண்டியதென்ன? விடை வருகிறது :—

**मय्येव मन आधत्स्व मयि बुद्धिं निवेशय ।**
**निवसिष्यसि मय्येव अत ऊर्ध्वं न संशयः ॥ ८**

மய்யேவ மன ஆதத்ஸ்வ மயி புத்திம் நிவேசய ।
நிவஸிஷ்யஸி மய்யேவ அத ஊர்த்வம் ந ஸம்சய: ॥ 8

**मयि एव** மயி ஏவ *என்னிடத்தே* **मनः** மன: *மனதை* **आधत्स्व** ஆதத்ஸ்வ *நிறுத்திவை* **मयि** மயி *என்னிடத்து* **बुद्धिं** புத்திம் *புத்தியை* **निवेशय** நிவேசய *செலுத்து* **अतः ऊर्ध्वं** அத: ஊர்த்வம் *இனி* **मयि एव** மயி ஏவ *என்னிடத்தே* **निवसिष्यसि** நிவஸிஷ்யஸி *வசிப்பாய்* **न संशयः** ந ஸம்சய: *சந்தேகமில்லை.*

***என்னிடத்தே மனதை வைத்து என்னிடத்து புத்தியைச் செலுத்துக. பின்பு என்னிடத்தே வசிப் பாய் என்பதில் சந்தேகமில்லை. 8***

உணர்ச்சி மயமாயிருப்பது மனது. தீர்மானிக்கும் தன்மையது புத்தி. இவ்விரண்டும் அந்தக்கரணத்தின் பிரிவுகள். ஒருவனது உடல் எங்கே இருக்கிறது என்பதி லிருந்து அவனது வாஸ ஸ்தானத்தை அறிய வொண்ணாது. உள்ளம் எங்கிருக்கிறதோ மனிதன் அக்கணமே அங்கிருக் கிறான். இப் பூவுலகிலேயே சிலர் நரக வாசம் செய்கின்

றனர்; வேறு சிலர் விண்ணுலகு நண்ணியவர் போன்று இன்பமடைகின்றனர். இங்கு இருந்தபடியே சித்தத்தைச் சிவத்தின்பால் வைத்து அவனது சந்நிதி சேருவார் உளர். அகம் எப்படியோ புறம் அப்படி. உள்ளத்தை இறைவனிடம் வைத்தது முதற்கொண்டு ஒருவன் இறைவனிடத்தே வசிக்கிறான் என்பதற்கு அவனது மனநிலையே சான்று. ஆதலால் அதைப்பற்றி ஐயமில்லை என்கிறார் பகவான்.

உலகத்தில் மனிதன் பிறக்கும்போது, வித்தியாகுணம் அவித்யா குணம் என்ற இரண்டு குணங்களுடன் பிறக்கிறான். வித்தியாகுணம் முக்தியை அடையச் செய்யும். அவித்யா குணமோ மனிதனை உலகப் பற்றுக்குள்ளாக்கும். பிறக்கும்போது இவ்விரு குணங்களும் தராசின் தட்டுகளைப் போலச் சரிசமமாக விருக்கும். சீக்கிரத்தில் உலக இன்பங்கள் ஒரு தட்டிலும் ஆத்ம விஷயங்கள் மற்றொரு தட்டிலும் ஏற்றப்படுகின்றன. மனம் உலக சுகங்களை விரும்புமானால் அவை வைக்கப்பட்டிருக்கும் தட்டு கனத்துக் கீழே செல்லும். அவ்வாறன்றி ஆத்ம விஷயத்தை மனம் பற்றுமானால் அவ்வாத்ம விஷயங்களடங்கிய தட்டு ஈசுவரனை நோக்கித்தாழும்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

உள்ளத்தை உறுதியாக இறைவன்பால் வைக்க இயலாதவர் என் செய்வது? விடை வருகிறது:—

अथ चित्तं समाधातुं न शक्नोषि मयि स्थिरम् ।
अभ्यासयोगेन ततो मामिच्छाप्तुं धनञ्जय ॥ ९

அத சித்தம் ஸமாதாதும் ந சக்னோஷி மயி ஸ்திரம் ।
அப்யாஸயோகேன ததோ மாமிச்சாப்தும் தனஞ்ஜய ॥ 9

धनञ्जय தனஞ்ஜய *தனஞ்ஜயா* अथ அத *இனி* मयि மயி *என்னிடத்து* चित्तं சித்தம் *சித்தத்தை* स्थिरं ஸ்திரம் *உறுதியாக* समाधातुं ஸமாதாதும் *நிறுத்துதற்கு* न शक्नोषि ந சக்னோஷி *இயலாவிட்டால்* ततः ததः *அப்பொழுது* अभ्यास योगेन அப்யாச யோகேன *அப்பியாச யோகத்தால்* मां மாம் *என்னை* आप्तुं ஆப்தும் *அடைய* इच्छ இச்ச *கொள்.*

***தனஞ்ஜயா, இனிச் சித்தத்தை என்பால் உறுதியாகவைக்க இயலாவிடின் அப்பியாச யோகத்தால் என்னை அடைய விரும்பு.*** 9

மனது உறுதியாக இறைவன்பால் நிலைத்து நின்று விடுமானால் அது முதிர்ந்த பக்தியாகிறது. அப்படியல்லாது அது விஷயாதிகளில் சலித்து ஓடும் தன்மையதானால் பழக்கத்தால் அதை ஒழுங்குப்படுத்தவேண்டும். விஷயங்களிலிருந்து அதை மீட்டெடுத்து பகவானிடம் வைப்பதற்கு அப்பியாச யோகம் என்று பெயர். நல்லியல்பு, கெட்ட இயல்பு இரண்டுக்கும் அப்பியாசமே காரணமாகிறது. பழக்கத்தால் ஆகாததை ஆகும்படிச் செய்யலாம்.

*ஒரு மனிதன் ஒரு நாயை வெகு பிரியமாக வளர்த்து வந்தான். அவன் அதனோடு கொஞ்சுவான்; விளையாடுவான்; அதைக் கைகளில் தூக்கிக்கொண்டு போவான்; அதை முத்தமிடுவான். இந்த முட்டாள் தனத்தைக் கவனித்த ஓர் அறிஞர் நாயுடன் அப்படிப் பழகலாகாது என்றார். நாயின் சொந்தக்காரன் அதைக் கேட்டதும் நாயைத் தூர எறிந்துவிட்டான். இனி அதனோடு கொஞ்சிக் குலாவுவதில்லை என்றும் தீர்மானித்தான். தன் எஜமானனது மாறிய மனதை நாய் அறியவில்லை. அது அடிக்கடி அவனிடம் ஓடி வந்து குலாவத் தலைப்பட்டது. நன்றாய்ப் பலதடவை அடிபட்ட பிறகுதான் அது தன் எஜமானனைத் தொந்தரவு செய்வதை விட்டது. உனது நிலைமையும் அப்படிப்பட்டதே. உன் மனதில் இதுவரையில் வைத்துப் போற்றிவந்த ஆசை என்னும் நாயை நீ விடவேண்டுமென்றாலும் அது உன்னை எளிதில் விடாது. இருந்தாலும் பாதகமில்லை. அந்த நாயோடு இனிமேல் கொஞ்சிக் குலாவாது, உன்னிடம் அது குலாவ வரும்போதெல்லாம் அதை நன்றாய் அடி. காலக்கிரமத்தில் அதனுடைய தொந்தரைகள் உனக்கு முற்றிலும் இல்லாமலே அகன்றொழியும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

மனது அப்பியாசம் என்ற கட்டுக்கு அடங்குவது இல்லவே இல்லை. அப்பொழுது என் செய்வது? விடை வருகிறது :—

**अभ्यासेऽप्यसमर्थोऽसि मत्कर्मपरमो भव ।**
**मदर्थमपि कर्माणि कुर्वन्सिद्धिमवाप्स्यसि ॥ १०**

அப்யாஸேऽப்யஸமர்த்தோऽஸி மத்கர்மபரமோ பவ ।
மதர்த்தமபி கர்மாணி குர்வன் ஸித்திமவாப்ஸ்யஸி ॥ 10

अभ्यासे अपि அப்யாஸே அபி *அப்யாசத்திலும்* असमर्थः असि அஸமர்த்த: அஸி *அஸமர்த்தனாயிருப்பாயாகில்* मत्कर्म परमः மத்கர்ம பரம:

*என்பொருட்டுக் கர்மம் செய்பவனாய்* भव பவ *இரு* मदर्थं மதர்த்தம் *என் பொருட்டு* कर्माणि கர்மாணி *கர்மங்களை* कुर्वन् अपि குர்வன் அபி *செய்வதாலும்* सिद्धिं ஸித்திம் *சித்தியை* अवाप्स्यसि அவாப்ஸ்யஸி *அடைவாய்.*

***அப்பியாசத்தில் உனக்கு வல்லமை யில்லையாயின் என்பொருட்டுக் கர்மம் செய்வதைக் குறிக்கோளாகக் கொள். எனக்காகக் கர்மம் செய்வதாலும் நீ சித்தியடைவாய். 10***

அப்பியாசம் செய்ய மனது ஒருப்படாதவிடத்து அது நெடுநாளாக வழக்கமாகச் செய்துவந்த வினையில் ஈடுபடுகிறது. பற்றுதலால் வந்த வினையைத் தனக்கென்று செய்யாது ஈசுவரனுக்காக வென்று செய்யுங்கால் சாதகன் இறைவன் கையில் கருவிபோல் ஆகிறான். கருவிக்குத் தனிச் சுதந்திரம் கிடையாது. சாதகன் தன்னைக் கருவியாக எண்ணி வினையாற்றுவதால் சித்தசுத்தி உண்டாகி ஞானத்தைப்பெற்றுப் பக்குவமடைகிறான். இறைவனுக்குக் கைங்கரியம் செய்வதால் தற்போதம் போய் பரபோதம் வருகிறது.

*எல்லாம் ஈசுவரனுடைய ஆக்ஞையால் நடக்கின்றனவென்றும், தான் ஈசுவரன் கையிலகப்பட்ட கருவியென்றும் எவனுடைய மனதில் பதிகின்றதோ அவன் ஜீவன் முக்தனாவான். ஈசுவரா, உனது காரியத்தை நீயே செய்தருள்கிறாய். ஆனால் "நான் செய்கிறேன்" என்று ஜனங்கள் சொல்கின்றனர்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

கர்மத்தைத் தனக்காகவென்றே செய்யும் தன்மையுடையவனுக்குக் கர்மபந்தம் ஒழிய வழியில்லையா? விடை வருகிறது :—

**अथैतदप्यशक्तोऽसि कर्तुं मद्योगमाश्रितः ।**
**सर्वकर्मफलत्यागं ततः कुरु यतात्मवान् ॥ ११**

அதைததப்யசக்தோऽஸி கர்த்தும் மத்யோகமாச்ரித: ।
ஸர்வகர்மபலத்யாகம் தத: குரு யதாத்மவான் ॥ 11

अथ एतत् अपि कर्तुं அத ஏதந் அபி கர்த்தும் *பின்பு இதைச் செய்தற்கும்* अशक्तः असि அசக்த: அஸி *சக்தியற்றவனுயிருப்பாயாகில்* ततः தத: *பிறகு* मद्योगं மத்யோகம் *என்னிடத்து சரண்புகுதல்* आश्रितः ஆச்ரித: *பொருந்தினவனுய்* यत आत्मवान् யத ஆத்மவான் *தன்னடக்கம் பயிலுபவனுய்* सर्व कर्म फलत्यागं ஸர்வ கர்ம பல த்யாகம் *ஸர்வ கர்ம பலத்தியாகம்* कुरु குரு *செய்.*

***இனி, இதைச் செய்தற்கும் இயலாதெனின், என்னிடம் அடைக்கலம் புகுதலில் பொருந்தினவனுய், தன்னடக்கம் பயின்று கர்மபலன் முழுதையும் எனக்கு அர்ப்பணம் செய். 11***

*முழு மனதை இறைவனுக்கென்றே ஒப்படைத்து விடுவது சிறந்தது. அதில் சாதனம் பூர்த்தியடைகிறது. அப்பெரு நிலையில் நிலைத்திருக்க இயலாதவர்கள் பழக்கத்தால் மனதை இறைவன்பால் திருப்பவேண்டும். மனம் வெளி உலக பிரவிருத்தியில் நாடும் தன்மையதானுல் அப்பியாசம் செய்வதும் கடினமாகும். அப்பொழுது பகவானுக்கென்றே பணிவிடை செய்வது சிலாக்கியம். கர்மத்தில் வைத்த பற்றுதலாலும், தன் கர்மத்துக்குத் தானே கர்த்தாவென்று எண்ணுவதாலும் கர்மபலத் தியாகம் உண்டாவதில்லை. பெரும்பற்றுடையவன் குறிப்பிட்ட சில வேளையிலாவது தன் கர்மமெல்லாம் ஈசனுடைய கர்மம் என்று தனக்கு ஞாபக மூட்டி வருவானுகில் அந்த எண்ணம் நாளடைவில் அவனைப் பக்குவப்படுத்தும்.*

*உன்னுல் கர்மம் செய்யாமல் இருக்கமுடியாது. ஸ்வபாவம் ஒவ்வொருவனையும் கர்மம் செய்யும்படி ஏவுகின்றது. ஆகையால் கர்மங்கள் செய்யப்படும் வகையிலே செய்யப்படட்டும். கர்மம் பற்றுதலின்றிச் செய்யப்படுமானுல் அது பகவானிடம் கொண்டுபோய்ச் சேர்க்கும். இகபரங்களில் உண்டாகும் பாவ புண்ணியங்களில் வெறுப்பு விருப்புக்கொள்ளாமல் செய்யப்படும் கர்மம் பற்றுதலற்றதாகும். இவ்வித மனுேபாவத்துடன் செய்யப்படும் கர்மம் முடிவில் கடவுளிடம் கொண்டுபோகும் மார்க்கமாக அமைகிறது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

பக்குவமடைதலின் அறிகுறி யாது? அதன் விளக்கம் வருகிறது :—

**श्रेयो हि ज्ञानमभ्यासात् ज्ञानाद्ध्यानं विशिष्यते ।**
**ध्यानात्कर्मफलत्यागस्त्यागाच्छान्तिरनन्तरम् ॥ १२**

ச்ரேயோ ஹி ஞானமப்யாஸாத் ஞாநாத்த்யானம் விசிஷ்யதே।
த்யாநாத் கர்மபலத்யாகஸ்த்யாகாச் சாந்திரனந்தரம் ॥ 12

अभ्यासात् அப்யாஸாத் *அப்பியாசத்தைக்காட்டிலும்* ज्ञानं ஞானம் *ஞானம்* श्रेय: हि ச்ரேய: ஹி *சிறந்ததே* ज्ञानात् ஞாநாத் *ஞானத்தைக்காட்டிலும்* ध्यानं த்யானம் *தியானம்* विशिष्यते விசிஷ்யதே *விசேஷமானது* ध्यानात् த்யாநாத் *தியானத்தைக்காட்டிலும்* कर्म फलत्याग: கர்மபலத்யாக: *கர்மபலத்தியாகம்* त्यागात् த்யாகாத் *தியாகத்தினின்று* अनन्तरं அனந்தரம் *விரைவில்* शान्ति: சாந்தி: *சாந்தி (உண்டாகிறது)*.

***அப்பியாசத்தைவிட ஞானம் சிறந்தது. ஞானத்திலும் தியானம் மேலானது. தியானத்தைக் காட்டிலும் கர்மபலத் தியாகம் உயர்ந்தது. தியாகத்தினின்று விரைவில் சாந்தி வருகிறது. 12***

*ஒருவன் ஆலயத்தை வலம் வந்து சர்வ திக்கிலும் திரும்பி நமஸ்காரம் செய்கிறான். தான் ஏன் அப்படிச் செய்ய வேண்டுமென்று அவனுக்குத் தெரியாது. எல்லாரும் செய்வதைப் பார்த்துக் குருட்டுப்போக்காக அவனும் அப் பழக்கத்தில் ஈடுபடுகிறான். கடவுள் எங்கும் நிறைந்தவர் என்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளுதற்கே அத்தகைய வழிபாடு ஏற்பட்டுள்ளது என்பது அவனுக்குத் தெரியாது. விவேகமில்லாத அந்த அப்பியாசத்தைக் காட்டிலும் கடவுள் எங்கும் நிறைபொருள் என்ற வாசா ஞானம் சிறந்தது. அந்த வாசா ஞானத்தோடு நின்று விடுவதைவிட, சாதகன் காண்கின்ற அனைத்தும் அவன் மயம் என்று தியானிப்பது மேலானது. அனைத்தையும் கடவுள் மயமாகத் தியானித்து அவைகளைத் தன் காரியத்துக்குப் பயன்படுத்திக்கொள்ளவேண்டும் என்று எண்ணலாகாது. தான்*

வாழ்ந்திருப்பது கடவுளுக்காகவென்று கருதித் தனது கர்மத்தின் பயன் முழுதையும் அவனுக்கு அர்ப்பணம் பண்ண வேண்டும். தான் செய்கின்ற கர்மம் தனக்காகவல்ல, கடவுளுக்காகவே செய்யப்படுகிறது என்ற நினைவு தோன்றுகிற அதே வேளையில் சாந்தியும் வருகிறது. தனக்கென்று தொழில் புரிபவன் அசாந்தியடைகிறான். இறைவனுக்கென்று தொழில் புரிபவன் இன்பமடைகிறான்.

ஒரு பருந்து அலகில் ஒரு மீனைக் கௌவிக்கொண்டிருந்தது. அதைப் பிடுங்குதற்காகச் சிலகாக்கைகளும் பருந்துகளும் அப்பருந்தைப் பின்தொடர்ந்து கொத்தி ஆரவாரித்தன. அது எத்திக்கில் சென்றாலும் காகங்களும் பருந்துகளும் கூடவே பறந்து சென்றன. தொந்தரவைப் பொறுக்கமாட்டாமல் அப்பருந்து மீனை அப்பால் போட்டுவிட்டது. உடனே அதை வேறொரு பருந்து கௌவிக்கொள்ள, காகங்களும் மற்றப் பருந்துகளும் இந்தப் புதிய பருந்தைத் தொந்தரவு செய்யத் தொடங்கின. ஆனால் உபத்திரவத்தினின்று தப்பித்த முதல் பருந்து சாந்தமாய் ஒரு மரக்கிளையில் உட்கார்ந்திருந்தது. இப்படி சாந்தமாக விருக்கும் பக்ஷியைப் பார்த்து வணங்கி, ஓர் அவதூதர், "பருந்தே, நீ எனக்கு குரு. உலகப்பற்றுக்களாகிய சுமையை மனிதன் கீழேபோடாத வரையில் அவனால் உலக சஞ்சலங்களினின்றும் தப்பித்துக்கொள்ள முடியாது. அவனுக்கு சமாதானம் ஏற்படாது. இதை நீ எனக்குக் கற்பித்தாய்" என்றார்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

எத்தகையவன் கடவுளுக்கு உவந்த பக்தனாகிறான்? விடை வருகிறது :—

अद्वेष्टा सर्वभूतानां मैत्रः करुण एव च ।
निर्ममो निरहङ्कारः समदुःखसुखः क्षमी ॥ १३
संतुष्टः सततं योगी यतात्मा दृढनिश्चयः ।
मय्यर्पितमनोबुद्धिर्यो मद्भक्तः स मे प्रियः ॥ १४

அத்வேஷ்டா ஸர்வபூதானாம் மைத்ர: கருண ஏவ ச ।
நிர்மமோ நிரஹங்கார: ஸம து:கஸுக: க்ஷமீ ॥ 13
ஸந்துஷ்ட: ஸததம் யோகீ யதாத்மா த்ருடநிஸ்சய: ।
மய்யர்பிதமனோபுத்திர்யோ மத்பக்த: ஸ மே ப்ரிய: ॥ 14

सर्व भूतानां ஸர்வ பூதாஞம் *எல்லா உயிர்களுக்கும்* अद्वेष्टा அத்வேஷ்டா *துவேஷமில்லாதவனாய்* मैत्रः மைத்ர: *மித்திரனாய்* करुणः एव च கருண: ஏவ ச *கருணையே உடையவனாய்* निर्ममः நிர்மம: *மமகாரம் அற்றவனாய்* निरहङ्कारः நிரஹங்கார: *அஹங்காரமில்லாதவனாய்* सम दुःख सुखः ஸம து:க ஸுக: *துக்க சுகத்தை ஸமமாகக் கருதுபவனாய்* क्षमी க்ஷமீ *பொறுமையுடையவனாய்* सततं सन्तुष्टः ஸததம் ஸந்துஷ்ட: *எப்போதும் சந்தோஷமுடையவனாய்* योगी யோகீ *யோகியாய்* यतात्मा யதாத்மா *தன்னடக்க முடையவனாய்* दृढनिश्चयः த்ருடநிஸ்சய: *திட நிச்சயமுள்ளவனாய்* मयि மயி *என்னிடத்து* अर्पित मनः बुद्धिः அர்பித மன: புத்தி: *மனம் புத்தி இவைகளை சமர்ப்பித்தவனாய்* यः ய: *யார்* मद्भक्तः மத்பக்த: *என் பக்தனோ* सः ஸ: *அவன்* मे மே *எனக்கு* प्रियः ப்ரிய: *பிரியமானவன்.*

***உயிர் அனைத்திடத்தும் வெறுப்பின்றி, நட்பும் கருணையும் உடையவனாய், மமகாரம் அகங்காரம் அற்று, இன்ப துன்பங்களைச் சமமாய்க் கருதி, பொறுமைபடைத்து, எப்பொழுதும்சந்தோஷமாயிருப்பவன், யோகியாய், தன்னடக்க முடையவனாய், திட நிச்சயமுள்ளவனாய், என்னிடத்துமனம் புத்தியை சமர்ப்பித்தவனாய் யார் என் பக்தனாகிறானோ அவன் எனக்குப் பிரியமானவன். 13-14***

*வெறுப்பு வேற்றுமையை வளர்க்கிறது; உடலெங்கும் விஷத்தை உண்டுபண்ணுகிறது. ஆதலால் வெறுப்பு நல்வாழ்க்கைக்கு ஒவ்வாது. வெறுப்பு அற்றிருந்தால் போதாது. ஜடப்பொருள்கள் வெறுப்பதில்லை. உயிர் வாழ்பவன் எல்லா உயிர்களிடத்தும் நட்புக்கொள்ளவேண்டும். "அன்பின் வழியது உயிர்நிலை; அஃது இலார்க்கு என்பு தோல் போர்த்த உடம்பு." ஆக, நட்பே உயிர்களை இணைக்கின்றது. பிறரைத் தன் காரியத்துக்குப் பயன்படுத்திக் கொள்ளுதற்கு ஒருவன் உறவாடலாம். அது பொருந்தாது. தன் வாழ்க்கை பிறருக்குப்பயன்படும்படி செய்யவேண்டும். அப்பொழுதே அது கருணை எனப் பெயர் பெறுகிறது. பிற*

ரிடத்துக் கருணை காட்டுவதால் தன் பொருளுக்கே நஷ்டம் வரலாம். அதைப் பொருள்படுத்தாத நிலை மமகாரம் அற்ற நிலையாம். எனது என்ற எண்ணம் ஒழிந்துபட்டுப் போகிறது. உடல் அபிமானம் அஹங்காரம் என்று சொல்லப்படுகிறது. கருணையின் மேலீட்டால் பக்தன் ஒருவனுக்கு அஹங்காரம் அறவே அகன்றுவிடுகிறது. தன் பொருள், தன் உடல் வாழ்க்கை இவைகளை மதியாமையினால் ஒருவனுக்கு இன்பமே வந்தமையலாம், அல்லது துன்பமே வந்தமையலாம். அவைகளை இன்ப துன்பமாக அவன் பாகுபடுத்துவதில்லை. தனக்குற்ற துன்பத்தைச் சகித்துக் கொண்டு துன்பம் செய்தவனிடத்துப் பொறுமை பூணலாம். பக்தன் ஒருவன் அப்படிப் பொறுமை கொள்வதில்லை. தன்னைத்தானே மன்னிப்பதுபோன்று மற்றவர்களையும் மன்னிக்கிறான். துன்பத்தைச் சகித்தல் ஒருவித எதிர்மறை நிலையாகிறது. பக்தனோ "இன்பமே எந்நாளும் துன்பமில்லை" என்ற கோட்பாட்டின்படி சந்தோஷமுடையவனாயிருக்கிறான். வாழ்க்கையில் அடக்கமும் ஒழுங்குப்பாடும் நன்கு அமைந்திருப்பதால் அவன் யோகியாகிறான். பாரமார்த்திக விஷயத்தில் அவனுக்குச் சந்தேகம் கிடையவே கிடையாது. அதைப்பற்றி அவனுக்கு உறுதியான நிச்சயபுத்தி யிருக்கிறது. யோகத்தால் தான் பெற்ற தெள்ளிய மனதையும் புத்தியையும் அவன் கடவுளுக்கென்றே ஒப்படைக்கிறான். இங்ஙனம் பகவானிடத்து பக்தி பண்ணுபவனே அவனுக்கு முற்றும் உவந்த தோழனாகிறான்.

மனிதன் சமர்ப்பிக்கும் சொத்துக்களையெல்லாம் ஈசுவரன் மதிக்கிறானா? இல்லவே இல்லை. பக்தியையும் பிரேமையையும் எவனொருவன் ஸமர்ப்பிக்கிறானோ அவனுக்கு மட்டுந்தான் ஈசுவரனுடைய கிருபை உண்டாகும். தன் பொருட்டு உண்டாகும் பக்திப் பிரேமைகளையும் விவேக வைராக்கியங்களையுமே ஈசுவரன் சிலாகித்துக் கொண்டாடுகிறான்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

இன்னும் யார் அவனுக்கு உவந்தவர்கள்? விடை வருகிறது:

यस्मान्नोद्विजते लोको लोकान्नोद्विजते च यः ।
हर्षामर्षभयोद्वेगैर्मुक्तो यः स च मे प्रियः ॥ १५

யஸ்மான்னோத்விஜதே லோகோ லோகான்னோத்விஜதே ச ய: ।
ஹர்ஷாமர்ஷ பயோத்வேகைர் முக்தோ ய: ஸ ச மே ப்ரிய: ॥ 15

यस्मात् யஸ்மாத் *யாரிடமிருந்து* लोकः லோக: *உலகமானது* न उद्विजते ந உத்விஜதே *துன்பப்படுவதில்லையோ* यः ய: *யார்* च ச *மேலும்* लोकात् லோகாத் *உலகத்தினின்று* न उद्विजते ந உத்விஜதே *இடர்ப்படுவதில்லையோ* यः च ய: ச *இன்னும் யார்* हर्ष अमर्ष भय उद्वेगैः ஹர்ஷ அமர்ஷ பய உத்வேகை: *களிப்பு, கோபம், அச்சம், மனக்கலக்கம் இவைகளினின்று* मुक्तः முக்த: *விடுபட்டவனே* सः ஸ: *அவன்* मे மே *எனக்கு* प्रियः ப்ரிய: *பிரியமானவன்.*

***யாரிடமிருந்து உலகுக்கு இடர் இல்லையோ, யார் உலகத்தினின்று இடர்ப்படுவதில்லையோ, இன்னும் யார் களிப்பு, கோபம், அச்சம், கலக்கம் இவைகளினின்று விடுபட்டவனே அவன் எனக்கு உவந்தவன். 15***

*பக்தன் ஒருவனுடைய வாழ்க்கை உலகுக்கு ஒரு நாளும் இன்னல் விளைவிப்பதில்லை. இன்னல்போன்று தோன்றும் சில செயல்கள் உண்மையில் ஹிதமாகவே முடியும். ஆசிரியர் மாணாக்கனைக் கண்டிப்பது, மருத்துவர் ரணவைத்தியத்தில் நோயாளிக்குத் துன்பம் விளைவிப்பது, அறப்போரில் வீரன் எதிரியைத் தாக்குவது இவையாவும் வெளித்தோற்றத்திற்கு இடர்போன்று இருப்பினும் உண்மையில் உலகுக்குச் செய்த நன்மைகளாகும். இனித்தனது உடல் வாழ்க்கையில் தனக்கு என்னதான் கேடுவந்தாலும் அதனால் அவன் கிலேசமடைவதில்லை. துன்பப்படாத உயர்ந்த மன நிலையையுடைய ஒருவனைப் புற உலகம் எவ்விதத்திலும் வருத்தப்படுத்த முடியாது. அப்பர், பிரஹ்லாதன் போன்றவர்கள் இதற்குச் சான்றாகிறார்கள்.*

*எத்தகைய பயிற்சியால் இத்தகைய மனநிலை வருகிறது என்ற கேள்வி எழலாம். அதற்கு விடை இதே*

சுலோகத்தில் வருகிறது. இன்பந்தரும் பொருள்களைப் பெற்று ஒருவன் களிப்புறலாகாது. களிப்புக்கு வசப்படும் மனது துன்பத்துக்கும் வசப்படக்கூடியது என்பதாகிறது. உறுதியான மனதே இன்ப துன்பம் இரண்டையும் சமனுகப் பாராட்டுகிறது. அமர்ஷம் என்பது சினம். ஒருவனுக்குக் கோபம் வருகின்றவளவு மனவலிவு குறைகின்றது. வலிவுடைய மரம் காற்றில் அசைவதில்லை. வலிவில்லாத கொடி காற்றில் அசைகிறது. கோபத்துக்கு உட்படாத மனது வலிவுபெற்று இன்பதுன்பங்களை நிகராகக் கருதுகிறது. பயம் மரணத்துக்கு ஒப்பானது. அஞ்சும்போதெல்லாம் ஒருவன் அழிந்துபட்டுப்போகிறுன். அஞ்சாதிருப்பவனே உயிர்வாழ்கிறுன். அச்சம் கலக்கத்தை உண்டுபண்ணுகிறது. கலங்கிய நீரில் பிம்பம் தெரிவதில்லை. தெளிந்த நீரில் பிம்பம் தெரிகிறது. அங்ஙனம் கலங்கிய மனதில் ஆத்ம சொரூபம் விளங்குவதில்லை. கலங்கா நெஞ்சம் படைத்தவனே இறைவனைக் காண்கிறுன். இறைவனைக் கண்டதும் அவனுக்கு உவந்த ப[illegible]ன்.

*பிறருடைய குணதோஷங்களைப் பற்றிப் பேசுவதில் காலத்தைச் செலவிடுபவன் தன் காலத்தை வீணிலே கழிப்பவனுகிறுன். ஏனெனில் அப்படிச் செலவிடப்பட்ட காலம் தன்னையாவது ஈசுவரனையாவது பற்றிச் சிந்திக்கப்படாமல் பிறரைப்பற்றி யாதொரு பிரயோசனமுமில்லாமல் சிந்திக்கப்பட்ட காலமாகிறது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**अनपेक्षः शुचिर्दक्ष उदासीनो गतव्यथः ।**
**सर्वारम्भपरित्यागी यो मद्भक्तः स मे प्रियः ॥ १६**

அனபேக்ஷ: சுசிர்தக்ஷ உதாஸீனே கதவ்யத: ।
ஸர்வாரம்பபரித்யாகீ யோ மத்பக்த: ஸ மே ப்ரிய: ॥ 16

अनपेक्षः அனபேக்ஷ: *வேண்டுதலில்லாதவன்* शुचिः சுசி: *சுத்தமானவன்* दक्षः தக்ஷ: *திறமை வாய்ந்தவன்* उदासीनः உதாஸீன: *ஓரம் சாராதவன்* गतव्यथः கதவ்யத: *மனத்துயரமற்றவன்* सर्व आरम्भ परित्यागी ஸர்வ ஆரம்ப பரித்யாகீ *எல்லாக் காரிய கருமங்களையும் துறந்தவன்*

य: ய: *யார்* मद्भक्त: மத்பக்த: *என் பக்தன்* स: ஸ: *அவன்* मे மே *எனக்கு* प्रिय: ப்ரிய: *பிரியமானவன்.*

***வேண்டுதலிலனாய்த் தூயவனாய்த் திறமையுடையவனாய் ஓரம் சாராதவனாய்த் துயரமற்றவனாய்க் காமிய கர்மங்களைத் துறந்தவனாய் என்னிடத்து பக்தி பண்ணுபவன் எனக்கினியவன் ஆகிறான்*** **16**

*இந்திரியங்கள் வாயிலாக வரும் இன்பங்களில் ஆசையற்றவன் அனபேக்ஷனாகிறான். அங்ஙனம் ஆசைகளையகற்றுமளவு அவன் (சுசி:) தூயவனாகிறான். மனம் மொழி மெய் மூன்றும் மாசற்றிருப்பது தூய்மை. அதனால் செயலில் சாமர்த்திய முண்டாகிறது. எதிர்பாராது ஒரு கணப்பொழுதில் வந்தமையும் கருமத்தை உள்ளபடி அறிந்துகொள்ளவும் அதற்கேற்ப நடந்துகொள்ளவும் அவனுக்கு இயலுகிறது. அதை முன்னிட்டே அவனை தக்ஷ: என்று அழைக்கவேண்டும். செயலாற்றும் வல்லமையைத் தனக்கு ஒத்தவர்களுக்கு ஒருவிதமாகச் செய்தலும் ஒவ்வாதவர்களுக்கு வேறு விதமாகச் செய்தலும் அவனிடத்தில்லை. நிறைகோல் போன்று ஓரம் சாராது எல்லார்க்கும் பொதுவாக நடந்துகொள்வதனால் அவன் உதாஸீனன் ஆகிறான். அப்படி நேர்மையாக நடந்துகொள்பவனுக்கு மனத்துயரம் ஒருநாளும் உண்டாவதில்லை. அவனுக்குக் கவலை கிடையாது எனினும் கர்மபலனில் பற்று வைத்திருக்கலாம் என்று நினைத்தல் கூடும். ஆனால் உண்மையில் அவன் பற்று அற்றவன். தனக்கென்று கருமம் செய்வதையெல்லாம் அவன் அறவே துறந்தவன் ஆகிறான். இறைவனிடத்திருந்து அவன் எதையும் எதிர்பார்ப்பதில்லை யாதலால் அவன் உண்மையான பக்தனாகிறான். யினாலே அவன் பகவானுக்கு மிக இனியவன் ஆகிறான்.*

*தன் மனதை ஏமாற்றாத ஒருவனே பகவானது சந்நிதானத்தை அடையப் பெறுவான். அதாவது கள்ளங் கபடமற்ற தன்மையும் உண்மையான அன்பும் பரமனை அடைய உற்ற பாதைகளாகும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**यो न हृष्यति न द्वेष्टि न शोचति न काङ्क्षति ।**
**शुभाशुभपरित्यागी भक्तिमान्यः स मे प्रियः ॥ १७**

யோ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி ந சோசதி ந காங்க்ஷதி ।
சுபாசுபபரித்யாகீ பக்திமான் ய: ஸ மே ப்ரிய: ॥ 17

यः ய: *யார்* न हृष्यति ந ஹ்ருஷ்யதி *மகிழ்வடைவதில்லை* न द्वेष्टि ந த்வேஷ்டி *துவேஷிப்பதில்லை* न शोचति ந சோசதி *துயரப்படுவதில்லை* न काङ्क्षति ந காங்க்ஷதி *ஆசைப்படுவதில்லை* शुभ अशुभ परित्यागी சுப அசுப பரித்யாகீ *நலன் கேடுகளைவிட்டவன்* यः ய: *யார்* भक्तिमान् பக்திமான் *பக்திமான்* सः ஸ: *அவன்* मे மே *எனக்கு* प्रियः ப்ரிய: *பிரியமானவன்.*

***மகிழ்தலும் வெறுத்தலும் துன்புறுதலும் அவாவுறுதலுமின்றி, நன்மை தீமைகளைத் துறந்த பக்தனே எனக்குப் பிரியமானவன். 17***

*இன்ப மூட்டுகிற பொருளைப் பெற்றால் உலக மக்கள் மகிழ்கின்றனர். பக்தனுக்கோ அத்தகைய பொருள் வருவதால் மகிழ்ச்சி உண்டாவதில்லை. வேண்டாதவை வந்து வாய்க்குமிடத்து அவர்கள் வெறுக்கின்றனர். பக்தனுக்கு அது கிடையாது. விரும்பிய பொருள் கிடைக்கவில்லை அல்லது கைவிட்டுப் போய்விட்டது என்ற துன்பம் அவனுக்கில்லை. கடவுள் பக்தியிலேயே அவனுக்குத் திருப்தி யுண்டாகிறபடியால் ஆசைப்படவேண்டிய அவசியம் பக்தனுக்கில்லை. அன்புருவாய் இருக்கும் குழந்தைக்குப் பாபபுண்ணியம் இரண்டும் தெரியாது. பக்தியின் மேலீட்டால் பக்தனும் நன்மை தீமை யிரண்டையும் மறந்துவிடுகிறான். இத்தகைய பாங்குள்ளவனே பகவானுக்கு உவந்த பக்தனாகிறான்.*

*விருப்பு, வெறுப்பு, அச்சம் இவைகள் குடிகொண்டிருக்குமிடத்துக்கு ஈசுவரன் வருவதில்லை.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**समः शत्रौ च मित्रे च तथा मानापमानयोः ।**
**शीतोष्णसुखदुःखेषु समः सङ्गविवर्जितः ॥ १८**

तुल्यनिन्दास्तुतिर्मौनी संतुष्टो येन केनचित् ।
अनिकेतः स्थिरमतिर्भक्तिमान्मे प्रियो नरः ॥ १९

ஸம: சத்ரௌ ச மித்ரே ச ததா மானாபமானயோ: ।
சீதோஷ்ணஸுகது:கேஷு ஸம: ஸங்கவிவர்ஜித: ॥ 18

துல்யநிந்தாஸ்துதிர்மௌனீ ஸந்துஷ்டோ யேன கேனசித் ।
அநிகேத: ஸ்திரமதிர்பக்திமான் மே ப்ரியோ நர: ॥ 19

शत्रौ मित्रे च சத்ரௌ மித்ரே ச *சத்துரு மித்துருவிடத்தும்* तथा ததா *அப்படியே* मान अपमानयोः च மான அபமானயோ: ச *மான அவமானத்திலும்* समः ஸம: *ஸமமாயிருப்பவன்* शीत उष्ण सुख दुःखेषु சீத உஷ்ண ஸுக து:கேஷு *சீதம், உஷ்ணம், சுகம், துக்கத்திலும்* समः ஸம: *ஸமமாயிருப்பவன்* सङ्ग विवर्जितः ஸங்க விவர்ஜித: *பற்றற்றவன்* तुल्य निन्दा स्तुतिः துல்ய நிந்தா ஸ்துதி: *நிந்தை ஸ்துதியை நிகராக்கி* मौनी மௌனீ *மௌனி* येनकेनचित् யேனகேனசித் *எதைக்கொண்டாவது* सन्तुष्टः ஸந்துஷ்ட: *திருப்தியடைபவன்* अनिकेतः அநிகேத: *இருப்பிடம் இல்லாதவன்* स्थिर मतिः ஸ்திரமதி: *ஸ்திரபுத்தியுள்ளவன்* भक्तिमान् नरः பக்திமான் நர: *பக்திமானாகிய நரன்* मे மே *எனக்கு* प्रियः ப்ரிய: *பிரியமானவன்.*

***பகையையும் நட்பையும், அங்ஙனம் மானத்தையும் அவமானத்தையும் நிகராக்கிக் குளிர் வெப்பம், இன்ப துன்பம் இவைகளை ஒப்பாக்கிப் பற்றற்றவன், இகழ்ச்சியையும் புகழ்ச்சியையும் ஒன்றாகக் கருதும் மௌனி, கிடைத்ததில் திருப்தியடைபவன், இருக்க இடம் தேடாதவன், உறுதியான உள்ளமுடையவன் - பக்திமானாகிய அம்மனிதன் எனக்கு உவந்தவன்.*** ***18 – 19***

*எல்லாரும் ஈசனுடைய குழந்தைகள். ஈசனுடைய வடிவங்களைப் பகையென்றும் நட்பென்றும் பிரிப்பது பொருந்தாது. புதிதாக ஏற்படும் களவுக் காதலர் அவமானத்துக்கு அஞ்சுகின்றனர்; மானத்தைக் காப்பாற்ற முயலுகின்றனர். முதிர்ந்த காதல் அதையொன்றையும் பொருள்*

படுத்துவதில்லை. முதிர்ந்த பக்தியின் போக்கும் அத்தகையது. உடலில் அபிமானம் உடையவனுக்குக் குளிர் உண்டு, வெப்பம் உண்டு; அவைகளின் காரியமாக வரும் இன்ப துன்பம் முதலியனவுண்டு. உழைப்பாளி உடலைப் பொருள் படுத்தாது உழைப்பிலேயே கண்ணும் கருத்துமாயிருப்பது போன்று பக்தன் பகவத் சேவையிலேயே கண்ணுங் கருத்துமாயிருக்கிறான். வெயில், மழை, உணவு, ஓய்வு இவைகளைப் பற்றி அதிகம் நினைக்க அவனுக்கு நேரமில்லை. உடல் அபிமானம் நீங்குமளவு அவன் இயல்பாகவே பற்றற்றவன் ஆகிறான். நடு வீதியில் நின்றுகொண்டு அழுகின்ற ஆள் ஒருவனைப்பார்த்து உலகம் இகழ்கிறது. அவன் உற்றானை இழந்த துயரத்தால் அழுவானாயின் உலகத்தவர் இகழ்ச்சியைப் பொருள்படுத்தான். பக்தன் கடவுளைக்காண விரும்பி அழுகிறான். அவனைப் பித்தன் என்று உலகம் இகழ்தலைப் பற்றி அவனுக்குக் கவலையில்லை. மேடையில் நன்றாகப்பாடும் ஒருவனை உலகம் புகழ்கிறது. அது பாடகனுக்கு உற்சாக மூட்டுகிறது. பக்தனோ பரம்பொருளைப்போற்றிப்பாடுகிறான். பரம்பொருளின் பெருமையே அவனைப் பாடச்செய்கிறது. உலகத்தவர் புகழ்ச்சியில் அவனுக்குப்பொருள் ஒன்றுமில்லை. இறைவனது புகழைத்தவிர வேறு எதையும் அவன் பேசா திருப்பதால் அவன் மௌனியாகிறான். சொந்த ஊருக்கு மகிழ்வுடன் திரும்பிப் போகிறவனுக்கு வழிப்பயணத்தில் வசதிகள் அதிகம் அமையாவிட்டால் அவன் அவைகளைக் குறித்து மனக்கிலேசமடைவதில்லை. ஊருக்குப் போகும் உற்சாகம் முன்னணியில் நிற்கிறது. பக்தனோ தனது தாய் தந்தையாகிய தெய்வத்தைக் குறித்துப் பயணம் போகிறான். உலகவாழ்க்கை என்ற வழியில் கிடைக்கின்ற எதைக் கொண்டும் அவன் திருப்தியடைகிறான். நன்றே வரினும் தீதே வரினும் அவனுக்குத் தொல்லையொன்றுமில்லை. மேலும் தனக்கென்று வசிக்குமிட மொன்றை அவன் உரிமைப்படுத்துவதும் கிடையாது. அகப்பட்ட வளையில் ஸர்ப்பம் சிறிது காலம் சுருண்டிருப்பது போன்று

*தற்செயலாய் நேர்ந்த இடத்தைப் பக்தன் தங்குமிடமாக்குகிறான். ரயில்வண்டியில் எவ்விடத்தில் இருக்க இடம் கிடைத்தாலும் பிரயாணிக்கு ஒன்றே. பக்தனது நிலையும் அத்தகையதே. மாறுபடுகிற உலகில் மாறுபடாத கடவுள் நாட்டத்திலேயே பக்தன் கண்ணுங் கருத்துமாயிருப்பதால் அவன் ஸ்திர புத்தியுள்ளவனாகிறான். நாட்டமெல்லாம் கடவுளிடத்திலேயே இருப்பதால் அவனே பக்தனாகிறான். ஆக, அவன் கடவுளுக்கு இனியவன் ஆவது இயல்பு.*

*உலகத்தைப்பற்றிய எண்ணங்களும் கவலைகளும் உன் மனத்தைச் சஞ்சலப்படுத்தும்படி செய்துகொள்ளாதே. செய்யவேண்டிய காரியங்கள் ஒவ்வொன்றையும் அதனதன் காலத்தில் செய். ஆயினும் உன் மனம் எப்போதும் ஈசுவரனிடம் நிலைத்திருக்கட்டும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**ये तु धर्म्यामृतमिदं यथोक्तं पर्युपासते ।**
**श्रद्दधाना मत्परमा भक्तास्तेऽतीव मे प्रियाः ॥ २०**

யே து தர்ம்யாம்ருதமிதம் யதோக்தம் பர்யுபாஸதே ।
ச்ரத்ததாநா மத்பரமா பக்தாஸ்தேऽதீவ மே ப்ரியா: ॥ 20

तु து *நிச்சயமாக* ये भक्ताः யே பக்தா: *எந்த பக்தர்கள்* श्रद्दधानाः ச்ரத்ததாநா: *சிரத்தையோடு கூடியவர்களாய்* मत्परमाः மத்பரமா: *என்னையே குறிக்கோளாகக்கொண்டு* यथा उक्तं யதா உக்தம் *ஈண்டு உரைத்தபடி* इदं இதம் *இந்த* धर्म्यं अमृतं தர்ம்ய அம்ருதம் *அமிர்தம் போன்ற தர்மத்தை* पर्युपासते பர்யுபாஸதே *நன்கு அனுஷ்டிக்கிறார்களோ* ते தே *அவர்கள்* मे மே *எனக்கு* अतीव प्रियाः அதீவ ப்ரியா: *அத்யந்த பிரியமானவர்கள்.*

***சிரத்தையுடைய எவ் அன்பர் என்னையே கதியாகக் கொண்டு அமிர்தம்போன்ற இத்தர்மத்தை ஈண்டுரைத்தபடி கடைப்பிடிக்கிறார்களோ அவர்களே எனக்கு மிகவுமினியவர். 20***

*எல்லாவிதமான சாதனங்களுக்கும் சிரத்தை இன்றியமையாததாதலால் அது ஈண்டு பக்தியோடு இணைத்து இயம்பப்படுகிறது. பகவானைக் கதியாகக்கொள்வது பக்த*

னுடைய இயல்பு. அதனால் அவன் செயலற்றவன் ஆய்விடு கிறனல்லன். தர்மத்தை உறுதியாக அனுஷ்டிக்கிறன். அருளோடு முக்தி என்னும் பெருநிலம் தர்மத்தினின்று வருவதால் தர்மமே அமிர்தத்துக்கு (மூவா மருந்துக்கு) ஒப்பாகிறது. தர்மத்தைக் கையாளுபவர் யாரும் அழிந்து பட்டுப் போகமாட்டார்கள். அன்பும் அறநெறியும் யாரி டத்திருக்கிறதோ அவன் இறைவனுக்கு உவந்தவன் ஆகி ருன்.

*பக்தியில் 'வைதிக பக்தி' என்பது ஒன்று. அதாவது சாஸ்திரங் கள் விதிக்கிறபடி பக்தி பண்ணுதலாம். பகவந் நாமத்தைப் பல தடவை உச்சாரணம் பண்ணுதல், உபவாசமிருத்தல், தீர்த்த யாத்திரை போதல், வேண்டிய ஸாமக்கிரியைகளைக்கொண்டு பூஜை பண்ணுதல் முதலியன வைதிக பக்தியில் சேர்ந்தவை. இப்படி நெடுங்காலம் பக்தி செய்தால் ஈசுவர பக்தியில் இன்னும் உயர்ந்த நிலைமையான 'ராக பக்தி'யைப் பெறக்கூடும். எல்லாவற்றிற்கும் பிரேமைதான் முக்கியம். உலகப் பற்று முற்றிலும் அகலவேண்டும். முழுமனதும் ஈசுவரனிடம் பொருந்த வேண்டும். அப்போதுதான் அவனை அடைய முடியும். ராக பக்தி யில்லாமல் அவனை அடையமுடியாது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे भक्तियोगो नाम
द्वादशोऽध्यायः ॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே
பக்தியோகோ நாம த்வாதசோऽத்யாய: ॥

**பிரம்ம வித்தையைப் புகட்டுவதும், யோக சாஸ்திரமானதும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாத மாக வந்துள்ளதுமாகிய பகவத்கீதை என்னும் உபநிஷதத்தின்கண் பக்தியோகம் என்ற பன்னி ரண்டாம் அத்தியாயம்.**

---

# त्रयोदशोऽध्यायः

# பதின்மூன்றாம் அத்தியாயம்

## क्षेत्रक्षेत्रज्ञविभागयोगः

## க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகம்

अर्जुन उवाच

प्रकृतिं पुरुषं चैव क्षेत्रं क्षेत्रज्ञमेव च ।
एतद्वेदितुमिच्छामि ज्ञानं ज्ञेयं च केशव ॥

அர்ஜுன உவாச

ப்ரக்ருதிம் புருஷம் சைவ க்ஷேத்ரம் க்ஷேத்ரக்ஞமேவ ச
ஏதத்வேதிதுமிச்சாமி ஞானம் ஞேயம் ச கேசவ ॥

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது*

केशव கேசவ *கேசவா* प्रकृतिं ப்ரக்ருதிம் *பிரகிருதியையும்* पुरुषं च एव புருஷம் ச ஏவ *புருஷனையும்* क्षेत्रं क्षेत्रज्ञं च एव க்ஷேத்ரம் க்ஷேத்ரக்ஞம் ச ஏவ *க்ஷேத்திரத்தையும், க்ஷேத்திரக்ஞனையும்* ज्ञानं ज्ञेयं च ஞானம் ஞேயம் ச *ஞானத்தையும் அறியவேண்டியதையும்* एतत् ஏதத் *இவைகளை* वेदितुं வேதிதும் *தெரிந்துகொள்ள* इच्छामि இச்சாமி *இச்சிக்கிறேன்.*

அர்ஜுனன் சொன்னது

***பிரகிருதி புருஷன், க்ஷேத்திரம் க்ஷேத்திரக்ஞன், ஞானம் ஞேயம் ஆகிய இவைகளை அறிந்துகொள்ள கேசவா, நான் விரும்புகிறேன்.***

(பல பதிப்புகளில் இச்சுலோகம் காணப்படுவதில்லை.)

श्री भगवानुवाच

इदं शरीरं कौन्तेय क्षेत्रमित्यभिधीयते ।
एतद्यो वेत्ति तं प्राहुः क्षेत्रज्ञ इति तद्विदः ॥ १

ஸ்ரீ பகவானுவாச

இதம் சரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபிதீயதே ।
ஏதத்யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரக்ஞ இதி தத்வித: ॥ 1

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

कौन्तेय கௌந்தேய *குந்தியின் மைந்தா* इदं இதம் *இந்த* शरीरं சரீரம் *சரீரம்* क्षेत्रं इति க்ஷேத்ரம் இதி *க்ஷேத்திரம் என்று* अभिधीयते அபிதீயதே *இயம்பப்படுகிறது* यः ய: *யார்* एतत् ஏதத் *இதை* वेत्ति வேத்தி *அறிகிறனோ* तं தம் *அவனை* क्षेत्रज्ञः इति க்ஷேத்ரக்ஞ: இதி *க்ஷேத்திரக்ஞன் என்று* तद्विदः தத்வித: *அதையறிந்தவர்கள்* प्राहुः ப்ராஹு: *பகர்கிறார்கள்.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***குந்தி புத்திரா, இவ்வுடலம் க்ஷேத்திரம் எனப் படுகிறது. இதை அறிகிறவனை க்ஷேத்திரக்ஞன் என்று ஞானிகள் பகர்கிறார்கள். 1***

*எது கெட்டுப்போகாது காப்பாற்றப்படுகிறதோ அது க்ஷேத்திரம். உடலானது அங்ஙனம் காப்பாற்றப்படு கிறது. இனி, க்ஷேத்திரம் என்பதற்கு மற்றொரு பொருள் வயல். வேலை செய்வதற்கு ஏற்றவளவு அது விளைவு தரக் கூடியது. நல்லது கெட்டது ஆகிய இரண்டும் பூமியில் விளையும். நமது தேகம் க்ஷேத்திரம் எனப்படுகிறது. இதில் அவரவர் கர்மபலனை அனுபவிக்கின்றனர். ஆக, ஜீவனுக்கு தர்ம க்ஷேத்திரமாவது அவனது உடல். உள்ளே இருந்து உடலை அறிகிற பொருள் எதுவோ அது க்ஷேத்திரக்ஞன்.*

*மானிட சரீரம் ஒரு பானையைப்போன்றுள்ளது. மனம், புத்தி, இந்திரியங்கள் அப்பானையில் போடப்பட்ட ஜலம், உருளைக்கிழங்கு, அரிசி இவைகளுக்குச் சமானம். இவையெல்லாம் அடங்கிய பானை யொன்றை அடுப்பின்மீது வைத்தால், அடுப்பின் நெருப்பு அவைகளை வேகச் செய்யும். அவைகளை ஒருவன் தொட்டால் அவனது விரல் களைச் சுட்டுவிடும்; என்றாலும் அவ்வுஷ்ணம் வாஸ்தவத்தில் பானையி னுடையதன்று. ஜலம், அரிசி, உருளைக்கிழங்கு இவைகளினுடையது மன்று. அதுபோலவே, மனிதனிடம் உள்ள பிரம்மத்தின் சக்தியால் தான் அவனுடைய மனம், புத்தி, இந்திரியங்கள் எல்லாம் தத்தம் வேலைகளைச் செய்கின்றன.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

அண்டத்திலுள்ள க்ஷேத்திரக்ஞர்களுக்கிடையில் தொடர்வு ஏதேனுமுண்டா? விடைவருகிறது:—

**क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत ।**
**क्षेत्रक्षेत्रज्ञयोर्ज्ञानं यत्तज्ज्ञानं मतं मम ॥ २**

க்ஷேத்ரக்ஞம் சாபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத ।
க்ஷேத்ரக்ஷேத்ரக்ஞயோர்ஞானம் யத்தத் ஞானம் மதம் மம ॥ 2

भारत பாரத *பரததுலத்துதித்தவனே* सर्व क्षेत्रेषु ஸர்வ க்ஷேத்ரேஷு *எல்லா க்ஷேத்திரங்களிலும்* माम् மாம் *என்னை* क्षेत्रज्ञं च अपि க்ஷேத்ரக்ஞம் ச அபி *க்ஷேத்ரக்ஞனுகவே* विद्धि வித்தி *அறிந்துகொள்க* क्षेत्र क्षेत्रज्ञयोः க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞயோ: *க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞனைப்பற்றிய* ज्ञानं यत् तत् ஞானம் யத் தத் *ஞானம் எதுவோ அது* ज्ञानं ஞானம் *ஞானம் (என்பது)* मम मतं மம மதம் *என்னுடைய மதம்.*

***அர்ஜுனா, க்ஷேத்திரங்களனைத்திலும் என்னை க்ஷேத்திரக்ஞன் என்றறிக. க்ஷேத்திரம் க்ஷேத்திரக்ஞனைப் பற்றிய அறிவே ஞானம் என்பது என் கொள்கை.*** **2**

*க்ஷேத்ரம் என்பது பிரகிருதி; க்ஷேத்ரக்ஞன் என்பது புருஷன். பிரகிருதியின் சேர்க்கையால் அதன் கூறுபாடுகளைப் புருஷன் தன்னுடையது என்று கருதுகிற பொழுது அவன் ஜீவாத்மாவாகிறான். ஸ்படிகத்துக்குப் பக்கத்தில் வைத்த புஷ்பத்தின் நிறத்தை ஸ்படிகத்தினுடையது என்று எண்ணுவது போன்றது அது. பிரகிருதி பேதம் அனந்தம். ஆதலால் ஜீவாத்மாக்களும் அனந்தம்.*

*பிரகிருதியின் சேர்க்கையால் உபாதியோடு கூடியதாகத் தென்படுகிற ஆத்மா உண்மையில் பிரகிருதியின் தன்மையை வாங்கிக்கொள்கிறதில்லை; வாங்கிக்கொண்டது போன்று தென்படுகிறது. பிரகிருதியை உடைத்திருந்தும் அதில் கட்டுப்படாது இருக்கிற ஆத்மாவுக்கு ஈசுவரனென்று பெயர். அவர் ஒருவரே இத்தனை ஜீவர்களுக்கும் அந்தர்யாமியாயிருக்கிறார். அவருக்கு அன்னியமாக இந்த ஜீவர்*

களும் ஜகத்தும் இல்லை. ஆகையால் அவர் எல்லா க்ஷேத்திரங்களுக்கும் க்ஷேத்திரக்ஞனாக இருக்கிறார்.

இனி, ஞானம் என்பது க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞன்- பிரகிருதி, புருஷன் – ஆகிய இரண்டு தத்துவங்களையும் முறையாக அறிவதேயாம். க்ஷேத்திரத்தைப்பற்றிய வித்தை அபரவித்தை யென்றும், க்ஷேத்திரக்ஞனைப்பற்றிய வித்தை பர வித்தை யென்றும் பகரப்படுகின்றன. வேதங்கள், வியாகரணம், கலைஞானங்கள், பூத பௌதிக சாஸ்திரங்கள் இவை யாவும் அபரவித்தை. பிரம்மஞானம் பர வித்தை. அபரவித்தையில் துவக்கிப் பரவித்தையில் ஆராய்ச்சி முற்றுப்பெறுவதே ஞானமாகும். தனியாக க்ஷேத்திரத்தை ஆராய்ந்து அதை மட்டும் கையாளுவது உலோகாயதம். அதை க்ஷேத்திரக்ஞனோடு இணைத்து ஆராய்வது சிறந்ததும் பாராட்டத்தக்கதுமாகிய அபரவித்தையாம்.

ஒரு புராண வரலாறு இக்கோட்பாட்டை நன்கு விளக்குகிறது. கார்த்திகேயனும் கணபதியும் பரமசிவனுக்குப் பிள்ளைகள். உள்ளதை எல்லாம் துருவி ஆராய்ந்துவிட்டு முதலில் வருபவனுக்குக் கனியொன்று தருவதாகக் கடவுள் தம் பிள்ளைகளுக்கு எடுத்துச் சொன்னார். குமரக் கடவுள் உலகம் யாவையும் அளந்தறிய விரைந்து ஓடிவிட்டார். நடக்கமுடியாத கணபதியோ கடவுளையே சுற்றிவந்து கனியைக்கேட்டார். அதற்குள் சுப்ரமண்யமும் உலகம் யாவையும் அறிந்துவிட்டுக் கடவுள் அருகில் வந்துவிட்டார். இருவரும் வல்லவர் ஆயினர். கணபதி அறிந்தது க்ஷேத்ரக்ஞனாகிய ஈசுவரனை. சுப்ரமண்யம் அறிந்தது க்ஷேத்திரமாகிய பிரபஞ்சம் முழுதையும். இவ்விருவர் ஆராய்ச்சியின் தொகுதியே முழுஞானமாகிறது.

இக்காலத்து அறிஞர் கையாளுகிற பௌதிக ஆராய்ச்சி (Scientific enquiry) க்ஷேத்திரத்தைப்பற்றிய ஞானத்துக்குப் பெருந்துணையாகும். சுப்ரமண்யக்கடவுள்

உலகெல்லாம் ஆராய்ந்துவிட்டுப் பரமனுடைய சந்நிதி வந்தது போன்று இக்காலத்திய பௌதிக ஆராய்ச்சியும் பரமனுடைய அடியை நோக்கிப் போவதன் அறிகுறிகள் தென்படுகின்றன. கடவுளுக்கு அன்னியமாக உலகம் இல்லை, கடவுளோடு இணைத்தே உலகத்தை அறிந்துகொள்ளும் போது அது மெய்ஞானமாகிறது.

*பணத்தை வைத்திருப்பதாலேயே ஒருவன் பணக்காரனாகிவிட மாட்டான். பணக்காரனுடைய வீட்டிற்கு அடையாளம் வீட்டின் ஒவ்வொரு அறையிலும் விளக்குகள் எரிவதாகும் ஏழைக்கு எண்ணெய் கிடைக்காதாகையால் அத்தனை விளக்குகளை ஏற்றமாட்டான்.*

*பகவானது ஆலயமாகிய இச்சரீரத்தை அந்தகாரத்தில் வைத்திருக்கப்படாது. அதில் ஞான விளக்கு ஏற்றப்படவேண்டும். உன் ஹிருதயமாகிய அறையில் ஞானவிளக்கை ஏற்றித் தெய்வத்தின் திவ்விய முகத்தைக் காண்பாய். ஒவ்வொருவரும் ஞானத்தை அடைய முடியும். நான் என்கிற குறுகிய ஆன்மா என்றும், விசாலமான பரமான்மாவென்றும் இரண்டுவகையுண்டு. ஒவ்வொரு சிறு ஆன்மாவும் அதாவது ஜீவான்மாவும் பரமான்மாவோடு சம்பந்தப்பட்டது. ஒவ்வொரு வீட்டிலும் மின்சாரசக்தி இருக்கிறது இந்த மின்சாரம் கம்பெனியிலிருந்து ஒவ்வொரு வீட்டுக்கும் செலுத்தப்படுகிறது. தகுந்த அதிகாரிகளிடம் மனுச் செய்யவேண்டியதுதான். அப்போது உன்வீட்டில் மின்சார விளக்கைப் பெறுவாய். பர ஞானம் உனது உடல் வாழ்க்கையையும், உன்னையும், உனது தெய்வத்தையும் விளக்கும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**तत्क्षेत्रं यच्च यादृक्च यद्विकारि यतश्च यत् ।**
**स च यो यत्प्रभावश्च तत्समासेन मे शृणु ॥ ३**

தத்க்ஷேத்ரம் யச்ச யாத்ருக்ச யத்விகாரி யதஸ்ச யத் ।
ஸ ச யோ யத்ப்ரபாவஸ்ச தத்ஸமாஸேன மே ச்ருணு ॥ 3

तत् क्षेत्रं தத் க்ஷேத்ரம் *அந்த க்ஷேத்திரம்* यत् च யத் ச *யாது என்றும்* यादृक् च யாத்ருக் ச *எத்தன்மைகளையுடையதென்றும்* यत् विकारि யத் விகாரி *என்ன விரிவுகளையுடையதென்றும்* यतः च यत् யத: ச யத் *எதிலிருந்து எது உண்டாகிறதென்றும்* सः च यः ஸ: ச ய: *அந்த க்ஷேத்திரக்ஞன் யார் என்றும்* यत्प्रभावः च யத்ப்ரபாவ: ச *என்ன மஹிமையுடையவன் என்றும்* तत् தத் *அதை* समासेन ஸமாஸேன *சுருக்கமாக* मे மே *என்னிடமிருந்து* शृणु ச்ருணு *கேள்.*

**அந்த க்ஷேத்திரம் யாது, எத்தன்மைகளையுடையது, என்ன பிரிவுகளையுடையது, எதினின்று உண்டானது; அந்த க்ஷேத்திரக்ஞன் யார், அவன் மகிமை யாது- இவைகளைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன் கேள். 3**

வேத வேதாந்தம் புகட்டுவதெல்லாம் இவ்விரண்டு தத்துவங்களையே யாம். இவ்விரண்டின் நிலைகளை விளக்குதற்கென்று அமைந்தவைகளெல்லாம் கலைகளாகின்றன.

அது எப்படி யென்று அடுத்த சுலோகத்தில் பகவான் விளக்குகிறார்:—

ऋषिभिर्बहुधा गीतं छन्दोभिर्विविधैः पृथक् ।
ब्रह्मसूत्रपदैश्चैव हेतुमद्भिर्विनिश्चितैः ॥ ४

ருஷிபிர் பஹுதா கீதம் சந்தோபிர்விவிதை: ப்ருதக் ।
ப்ரஹ்மஸூத்ரபதைஸ்சைவ ஹேதுமத்பிர்விநிஸ்சிதை: ॥ 4

ऋषिभिः ருஷிபி: *ரிஷிகளால்* विविधैः छन्दोभिः விவிதை: சந்தோபி: *விதவிதமான சந்தஸ்களால்* पृथक् ப்ருதக் *பாங்காக* बहुधा பஹுதா *பலவகைகளில்* गीतं கீதம் *பாடப்பெற்றிருக்கிறது* विनिश्चितैः விநிஸ்சிதை: *நிச்சய புத்தியைத்தருகிற* हेतुमद्भिः ஹேதுமத்பி: *யுக்தியோடுகூடிய* ब्रह्मसूत्रपदैः एव च ப்ரஹ்மஸூத்ரபதை: ஏவ ச *பிரம்மத்தைக்குறிக்கிற பதங்களாலும் (பாடப்பெற்றிருக்கிறது)*

**(இவ்வுண்மை) ரிஷிகளால் விதவிதமான சந்தஸ்களில் பாங்காகப் பலவகைகளில் பாடப்பெற்றிருக்கிறது. யுக்தியால் நிச்சய புத்தியைத் தந்து, பிரம்மத்தைக் குறிக்கிற பதங்களாலும் (பாடப்பெற்றிருக்கிறது). 4**

முடிந்த நிலையை விளக்குதற்குக் கலையைக் கவிகள் நன்கு கையாண்டிருக்கிறார்கள். மெய்ப்பொருள் எக்காலத்துக்கும் உண்மையாதலால் அது நிலையெனப்படுகிறது. தெளிவற்ற சொற்களைக்கொண்டு விளக்கினாலும் மெய்ப்பொருளுக்குள்ள மதிப்பு குறைவதில்லை. ஆனால் ரிஷி

களோ அதை விளக்குதற்கு இயல் இசை இரண்டையும் நன்கு பயன்படுத்தியிருக்கிறார்கள். இயல் என்பது தெளிந்த மொழி. உலகில் உள்ள எம்மொழியும் தெளிந்ததாகுங்கால் அது உள்ளத்தைக் கவரவல்லது. இசை அல்லது பாட்டுக்கு மற்றொரு வன்மையுண்டு. எல்லா உயிர்களையும் அது வசப்படுத்த வல்லது. துஷ்ட ஜந்துக்களும் இசைக்கு இணங்கி நல்லியல்பு பெறுகின்றன. உணர்ச்சியைக் கிளப்பவும் அதைச் செப்பனிடவும் வல்லது கீதம். இனிமையும் ஆனந்தமும் அதனால் வளர்க்கப்படுகின்றன. ஆக, மெய்ப்பொருள் விளக்கத்தில் ரிஷிகள் இயல் இசை ஆகிய இரண்டையும் நன்கு கையாளுதல் மூலம் அதில் விருப்பத்தையும் ஆர்வத்தையும் வளர்த்துள்ளார்கள்.

தனியாக உணர்ச்சியை மட்டும் வளர்த்தால் போதாது. பகுத்தறிவைக்கொண்டும் மெய்ப்பொருளை ஆராய்தல் வேண்டும். யுக்திக்கு ஒத்திருப்பது உண்மை. ஆகையால் யுக்தி அல்லது பகுத்தறிவை முறையாகக் கையாளுமளவு உண்மை நிரூபிக்கப்படுகிறது.

ஆக, வேத வேதாந்தத்தை நிறுவிய மேலோர் மக்களிடத்து உணர்ச்சி, அறிவு ஆகிய இரண்டையும் நன்கு வளர்த்தல் பொருட்டு இயல், இசை, யுக்தி இவைகளைச் செவ்வையாகக் கையாண்டிருக்கிறார்கள்.

யுக்திக்கு ஒவ்வாத உணர்ச்சியோ பாங்கற்ற மனக் குழைவு ஆகும். பக்தியின் பெயரால் சிலர் வெறும் மனக் கசிவு உடையவர்களாய் விடுகிறார்கள். திண்மை அல்லது உறுதிப்பாட்டை அவர்கள்பால் காணமுடியாது. மற்று வெறும் விசாரத்தில் ஈடுபடுகிறவர்களது நுண்ணறிவு உலர்ந்த அறிவாய்ப் போய்விடுகிறது. எண்ணெயில்லா யந்திரம் போன்றது அவர்களுடைய வாழ்க்கை. அறிவு பெருகியிருந்தாலும், நெஞ்சத்தில் ஈரமின்மை பாராட்டத் தக்கதன்று. நிறை மனிதன் என்பவன் நெஞ்சக்குழைவும் அறிவு வளர்ச்சியும் ஒருங்கே அமையப் பெற்றவனும்.

அதாவது ஒவ்வொருவரிடத்தும் அன்பும் அறிவும் சேர்ந் திருக்கவேண்டும்.

*நாரத மஹரிஷியிடத்திருந்தது போன்று ஞான மிச்ரபக்தி, அதாவது ஞானத்தோடு கலந்துள்ள பக்தி சாதகர்களுக்கு முற்றிலும் வேண்டப்படுகிறது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**महाभूतान्यहङ्कारो बुद्धिरव्यक्तमेव च ।**
**इन्द्रियाणि दशैकं च पञ्च चेन्द्रियगोचराः ॥ ५**
**इच्छा द्वेषः सुखं दुःखं सङ्घातश्चेतना धृतिः ।**
**एतत्क्षेत्रं समासेन सविकारमुदाहृतम् ॥ ६**

மஹாபூதான்யஹங்காரோ புத்திரவ்யக்தமேவ ச ।
இந்த்ரியாணி தசைகம் ச பஞ்ச சேந்த்ரியகோசரா: ॥ 5
இச்சா த்வேஷ: ஸுகம் து:கம் ஸங்காதஸ்சேதனா த்ருதி: ।
ஏதத்க்ஷேத்ரம் ஸமாஸேன ஸவிகாரமுதாஹ்ருதம் ॥ 6

महाभूतानि மஹாபூதானி *மஹா பூதங்கள்* अहङ्कारः அஹங்கார: *அஹங்காரம்* बुद्धिः புத்தி: *புத்தி* अव्यक्तं एव च அவ்யக்தம் ஏவ ச *மூலப் பிரகிருதியும்* इन्द्रियाणि दश இந்த்ரியாணி தச *இந்திரியங்கள் பத்து* एकं च ஏகம் ச *மற்றும் ஒன்று (மனது)* पञ्च इन्द्रियगोचराः च பஞ்ச இந்த்ரிய கோசரா: ச *இந்திரிய விஷயங்கள் ஐந்தும்* इच्छा இச்சா *இச்சை* द्वेषः த்வேஷ: *துவேஷம்* सुखं ஸுகம் *சுகம்* दुःखं து:கம் *துக்கம்* सङ्घातः ஸங் காத: *உடலின் கூட்டுப்பொருள்கள்* चेतना சேதனா *அறிவு* धृतिः த்ருதி: *மனவுறுதி* एतत् ஏதத் *இது* सविकारं क्षेत्रं ஸவிகாரம் க்ஷேத்ரம் *வேறு பாடுகளோடு கூடின க்ஷேத்திரம்* समासेन ஸமாஸேன *சுருக்கமாக* उदाहृतं உதாஹ்ருதம் *உரைக்கப்பட்டது.*

***மகாபூதங்கள், அகங்காரம், புத்தி, மூலப்பிர கிருதி, இந்திரியங்கள் பத்து, மனம் ஒன்று, இந்திரி யார்த்தங்கள் ஐந்து, விருப்பு, வெறுப்பு, இன்பம், துன்பம், உடலமைப்பு, உணர்வு, உறுதி — இங்ஙனம் க்ஷேத்திரமும் அதன் தோற்றங்களும் சுருக்கமாகச் சொல்லப்பட்டன.*** **5-6**

ஆகாசம், வாயு, அக்கினி, அப்பு, பிருத்துவி ஆகிய ஐந்து பூதங்களும் சூக்ஷ்மமாக எங்கும் நிறைந்திருக்கிறபடியால் அவைகள் மஹாபூதங்கள் என்று சொல்லப்படு

அஹங்காரம் – இது மஹாபூதங்களுக்குக் காரணமாகிறது. பூதங்கள் மூலமாக இருக்கிறேன் என்ற உணர்ச்சி அஹங்காரம் என்ற பெயர் பெறுகிறது.

புத்தி – இது நிச்சயவடிவு அல்லது தீர்மானம் செய்யும் தன்மையது. மஹத் என்ற பெயரும் இதற்கு வழங்கப்படுகிறது. இது அஹங்காரத்துக்குக் காரணமாயுள்ளது.

அவ்யக்தம் என்பது மூல பிரகிருதி என்று பொருள் படுகிறது. தோன்றா நிலையில் இருப்பதால் இதன்கண் விகாரம் அல்லது வேறுபாட்டைக் காணமுடியாது. இது புத்திக்குக் காரணமாகும். இவையாவும் ஈசுவர சக்தி.

"தெய்வீகம் பொருந்திய என் மாயை கடத்தற்கு அரிது" என்று ஏழாவது அத்தியாயம் பதினான்காம் சுலோகத்தில் பகவான் பகர்கிறார். இவைகளைத் தம்முடைய எட்டுவிதப் பிரகிருதி என்றும் பகவான் ஏழாவது அத்தியாயம் நான்காவது சுலோகத்தில் சொல்லுகிறார்.

பத்து இந்திரியங்கள் – கண் முதலிய ஞானேந்திரியங்கள் ஐந்தும், கை முதலிய கர்மேந்திரியங்கள் ஐந்தும் சேர்ந்தவைகள்.

மனம் – இது சங்கல்ப விகல்ப மயமானது. எண்ணமும் ஐயமும் இதைச் சேர்ந்தவைகள். மனமானது பத்து இந்திரியங்களுக்கும் பொதுவானது. பத்துத் தலைகளையுடைய ராவணன் பத்து இந்திரியங்களுடைய மனதின் புறத்தோற்றமாக வந்தவன்.

இந்திரியார்த்தங்கள் – சப்த, ஸ்பர்ச, ரூப, ரச, கந்த–வடிவங்களாயுள்ள ஐந்து இந்திரியங்களின் விஷயங்களாம்.

இவைகளையெல்லாம் தொகுத்து இருபத்துநான்கு தத்துவங்கள் என்று சொல்லுகிறது சாங்கிய தர்சனம்.

இச்சை, துவேஷம் முதலியன ஆத்மாவின் குணங்களென்று வைசேஷிகர் சொல்லுவார்கள். ஆனால் இவை யாவும் அறியப்படும் தன்மையுடையனவாதலாலும், இவைகள் மூலமாக க்ஷேத்திரத்தைப்பற்றிய போதமே வளர்க்கப்படுகிறதாதலாலும், இவைகளை பகவான் க்ஷேத்திரம் என்று பகர்கின்றார்.

இச்சை என்பது விருப்பு. இன்பம் கொடுக்கும் ஒரு பொருளைத் திரும்பவும் பெற எண்ணங்கொள்வது இச்சை. இது அந்தக்கரணத்தின் தர்மமாகும்.

துவேஷம் என்றால் வெறுப்பு. துன்பம் கொடுக்கும் ஒரு பொருளை அல்லது அவ்வினத்தைச் சேர்ந்த ஒன்றைக் காணுமிடத்து அதை விலக்க நினைப்பது வெறுப்பு.

ஸுகம் இன்பமென்று பொருள்படுகிறது. அனுகூலமாகத் தோன்றி அமைதி தந்து ஸத்வகுணத்தை வளர்ப்பது எதுவோ அது ஸுகம். காணப்படு பொருளாதலால் இது க்ஷேத்திரம் என்று அழைக்கப்படுகிறது.

துக்கம் அல்லது துன்பம் பிரதிகூலமாகத் தோன்றி அமைதியின்மையை வளர்க்கிறது.

ஸங்காதம் என்பது உடலமைப்பு. உடலையும் இந்திரியங்களையும் ஒன்றாகப் பொருத்தி வைப்பதற்கு சங்காதம் என்று பெயர். பல பாகங்கள் ஒன்றாகப் பொருத்தப்பெற்று ஒரு யந்திரம் ஆகிறது. அங்ஙனம் வெவ்வேறு அங்கங்கள், அவயவங்கள், இந்திரியங்கள் முறையாக அமையப்பெற்று உடல் அல்லது க்ஷேத்திரம் உருவெடுக்கிறது.

சேதனம் என்னும் சொல்லுக்குப் பொருள் உணர்வு. தீயோடு தொடர்வுள்ள இரும்பு தீயை விளக்குவது போன்று, இந்திரியங்கள் ஆத்ம சைதன்யத்தை உணர்வாக

விளக்குகின்றன. இந்திரியங்கள் வாயிலாக சேதனம் அறியப்படுகிறது. அது தேகாத்ம புத்தியை வளர்க்கிறது. ஆகவே அது க்ஷேத்திரம் என்று சொல்லப்படுகிறது.

திருதி என்றால் உறுதி. உடலும் இந்திரியங்களும் சோர்வையடையும் தன்மையுடையவைகள். அவைகளைத் தளரவொட்டாது பொருத்தமாகத் தாங்கிப் பிடிப்பது எதுவோ அது திருதி. இதன் வலிவால் உடல் வாழ்க்கை நெடிது நிலைபெறுகிறது. காணப்படுபொருள் ஆதலால் இதுவும் க்ஷேத்திரத்தோடு சேர்க்கப்படுகிறது. இச்சை முதல் திருதி பரியந்தம் இவை யாவும் அந்தக்கரணத்தின் விகாரங்களாம்.

க்ஷேத்திரம் என்று உடலை முதல் சுலோகத்தில் சொல்லியதின் முழு விளக்கம் இந்த இரண்டு சுலோகங்களில் வந்துவிட்டது.

இந்தச் சரீரம் உபயோகமற்றதும் அழிந்துபோகக்கூடியதுமானால் ஆத்ம சாதகர்கள் ஏன் இதை ஜாக்கிரதையுடன் காப்பாற்றுகிறார்கள்? உள்ளே ஒன்றுமிராத வெறும் பெட்டியை ஒருவரும் ஜாக்கிரதையாகப் பாதுகாப்பதில்லை. விலையுயர்ந்த நகைகளும், பணமும், பொருள்களும் உள்ள பெட்டியை எல்லாரும் பத்திரமாகக் காப்பாற்றுகிறார்கள். அதுபோல, பக்தர்கள் ஈசுவரன் வாசம் செய்கிற இந்தச் சரீரத்தைக் கவலையுடன் காப்பாற்றுகிறார்கள். இதைப் பராமுகமாக விட்டுவிட மாட்டார்கள். நமது சரீரங்களெல்லாம் ஈசுவரனாகிய பொக்கிஷம் நிறைந்த பெட்டிகளாகும்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஸாதகன் எத்தகைய பாங்குடன் இருந்தால் க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞனை அறிகிற ஞானம் வருகிறது? இதற்கு விடை வருகிறது:—

**अमानित्वमदम्भित्वमहिंसा क्षान्तिरार्जवम् ।**
**आचार्योपासनं शौचं स्थैर्यमात्मविनिग्रहः ॥ ७**

அமானித்வமதம்பித்வமஹிம்ஸா க்ஷாந்திரார்ஜவம் ।
ஆசார்யோபாஸனம் சௌசம் ஸ்தைர்யமாத்மவிநிக்ரஹ: ॥ 7

अमानित्वं அமானித்வம் *தற்பெருமையின்மை* अदम्भित्वं அதம்பித்வம் *தருக்கின்மை* अहिंसा அஹிம்ஸா *அஹிம்சை* क्षान्तिः க்ஷாந்தி: *பொறுமை* आर्जवं ஆர்ஜவம் *நேர்மை* आचार्य उपासनं ஆசார்ய உபாஸனம் *குருசேவை* शौचं சௌசம் *தூய்மை* स्थैर्यं ஸ்தைர்யம் *ஸாதனத்தில் விடாமுயற்சி* आत्मविनिग्रहः ஆத்மவினிக்ரஹ: *தன்னடக்கம்;*

**தற்பெருமையின்மை, தருக்கின்மை, அஹிம்சை, பொறுமை, நேர்மை, குருசேவை, தூய்மை, விடாமுயற்சி, தன்னடக்கம்;** 7

க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞனைப்பற்றிய ஞானம் வெறும் ஏட்டுக் கல்வியால் வருவதன்று. வாழ்க்கையின் மூலம் தன்னைப் பண்படுத்துவதாலேயே ஞானம் வளர்கிறது. மற்றவர்களைவிட மேலோனாகத் தன்னை நினைத்துக் கொள்ளாதிருத்தல் அமானித்வம் என்னும் பெயர் பெறுகிறது. தற்பெருமை ஜீவபோதத்தை வளர்க்கிறது. தற்பெருமையின்மை பரபோதத்தை வளர்க்கிறது. அடுத்த படியாகத் தன் செயலைச் சிலாகித்துப் பேசலாகாது. ஏனென்றால் செயலெல்லாம் உண்மையில் ஈசனுடையவைகள். அவைகளைத் தனது என்று தருக்கிப்பதால் அக்ஞானமே வளர்கிறது. உயிர்களுக்கு ஹிம்சை செய்யும் எண்ணம் அவைகளை ஈசுவரனுக்குப் புறம்பாகக் கருதுவதால் வருகிறது. அவைகளுக்குத் தீங்கு செய்யாதிருப்பதால் ஞானம் வளர்கிறது. இனி, மற்ற உயிர்களிடத்திருந்து தனக்குத் துன்பம் வரும்பொழுது அதைப் பொறுத்திருத்தல் வேண்டும். ஓர் உதாரணத்தால் இதை விளக்குவோம். பேசும்பொழுது தன் பல் தன் உதட்டைக் கடித்துவிடுகிறது என்று வைத்துக்கொள்வோம். அதனால் பல்லைப் பகைப்பதில்லை. ஏனென்றால் பல்லும் உதடும் தன் சொரூபம். உயிர்கள் தனக்குச் செய்யும் துன்பங்களைப் பொறுத்திருக்குமளவு அவைகளைத் தன்மயமாயுணரும் தன்மை வருகிறது. ஆர்ஜவம் அல்லது நேர்மையென்பது உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாமையாகும்.

*எண்ணியபடியே இயம்புவது கள்ளங்கபடமற்ற மனதுக்கே இயலும். அது ஞான வளர்ச்சிக்கு முற்றிலும் இன்றியமையாதது. ஆசாரியருக்குப் பணிவிடை செய்வதால் தன்னை ஆசாரியருக்கு உரியவனுகச் சாதகன் செய்துகொள்கிறுன். மனிதன் யாருக்குப் பணிவிடை செய்கின்றுனே, யாரை உபாசிக்கின்றுனே அவருடைய பான்மையெல்லாம் தனக்கே வந்தமைகின்றன. ஆதலால் குரு சேவை முற்றிலும் வேண்டப்படுகிறது உடலையும் உள்ளத்தையும் தூயதாக வைத்துக்கொள்ளுதல் சௌசம் எனப்படுகிறது. நீராடுதல் போன்ற செயலால் உடல் தூயதாகிறது. இந்திரியார்த்தங்களிலுள்ள கேடுகளை ஓர்ந்து அவைகள்பால் பற்று வைக்காதிருப்பது உள்ளத்தின் தூய்மையாகும். ஆத்ம சாதனம் எத்தனை காலம் நடைபெறுவதாயிருந்தாலும் அதனுல் மனத்தளர்ச்சியுண்டாகாது. இடைவிடா முயற்சியிருக்குமாணுல் அது ஸ்தைர்யம் எனப்படுகிறது. உடலும் இந்திரியங்களும் வெளியுலகில் விஷயாதிகளில் செல்லும் தன்மையுடையவைகள். அவைகளை அப்படிச் செல்லவொட்டாது தடுத்து சன்மார்க்கத்தில் ஈடுபடும்படி செய்வது தன்னடக்கமாகும்.*

**इन्द्रियार्थेषु वैराग्यमनहङ्कार एव च ।**
**जन्ममृत्युजराव्याधिदुःखदोषानुदर्शनम् ॥ ८**

இந்த்ரியார்த்தேஷு² வைராக்யமனஹங்கார ஏவ ச ।
ஜன்ம ம்ருத்யு ஜரா வ்யாதி து:க தோஷானுதர்சனம் ॥ 8

इन्द्रिय अर्थेषु இந்த்ரிய அர்த்தேஷு² *இந்திரிய போகவிஷயங்களில்* वैराग्यं வைராக்யம் *விருப்பமின்மை* अनहङ्कारः एव च அனஹங்கார: ஏவ ச *அஹங்காரமின்மை* जन्म मृत्यु जरा व्याधि दुःख दोष अनुदर्शनं ஜன்ம ம்ருத்யு ஜரா வ்யாதி து:க தோஷ அனுதர்சனம் *ஜன்மம், மரணம், வயோதிகம், வியாதி, துக்கம் இவைகளின் கேடுகளை எண்ணிப்பார்த்தல்;*

***விஷயங்களில் விருப்பின்மை, அஹங்காரமின்மை, பிறப்பு இறப்பு மூப்பு பிணி துயரம் ஆகியவைகளில் கேடு காணுதல்;*** 8

ஐந்து இந்திரியங்களுக்கு சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என ஐந்து விஷயங்களிருக்கின்றன. தூண்டிலில் உள்ளதைச் சுவைக்க முயன்று மீன் மாய்கிறது. தீயின் ஒளியை விரும்பி விட்டில் பூச்சி வதையுண்கிறது. ஊறு அல்லது ஸ்பரிசத்தை நாடிக் காட்டானை பழகிய பெண் யானையின் மூலம் மக்களிடம் பிடிபடுகிறது. ஓசையைக் கேட்டு மூச்சடக்கி மானானது வேடர் வசப்படுகிறது. நாற்றத்தை நாடி மலரில் வண்டு மாட்டிக்கொள்கிறது. இனி, இந்திரிய போக விஷயங்கள் ஐந்திலுமே ஈடுபடும் மனிதன் கதி என்னாவது? இதை எண்ணிப்பார்த்து அவைகளிடத்துப் பற்று வைக்காதிருக்க வேண்டும்.

சரீரத்தை தான் என்று அபிமானிப்பது அஹங்காரம். அப்படி அபிமானம் கொள்ளாதிருப்பது அஹங்காரமின்மையாகும்.

நன்றாக விசாரித்துப் பார்க்குமிடத்து பிறப்பு முதலிய யாவும் துன்பத்தை உண்டுபண்ணுபவைகளாயிருக்கின்றன. அப்படி வரும் துன்பங்களைத் தானே உண்டுபண்ணியிருக்கலாம்; அல்லது இயற்கையில் அவை வந்து அமைந்திருக்கலாம்; அல்லது தெய்வாதீனமாக அவைகள் ஏற்பட்டிருக்கலாம். இப்படி விசாரிப்பதால் விஷயங்களில் விரக்தி வருகிறது. மனது அந்தர்முகமாக ஆத்மாவிடம் திரும்புகிறது. அங்ஙனம் ஞானத்துக்கு அது தகுதியுடையதாகிறது.

இந்திரிய விஷயங்களின்மீதுள்ள பற்று எவ்வளவுக்குக் குறைந்து வருமோ அவ்வளவுக்குக் கடவுளிடத்து பக்தி அதிகரித்து வரும்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

असक्तिरनभिष्वङ्गः पुत्रदारगृहादिषु ।
नित्यं च समचित्तत्वमिष्टानिष्टोपपत्तिषु ॥ ९

அஸக்திரனபிஷ்வங்க: புத்ரதாரக்ருஹாதிஷு 1
நித்யம் ச ஸமசித்தத்வமிஷ்டானிஷ்டோபபத்திஷு ‖ 9

असक्तिः அஸக்தி: *பற்றின்மை* पुत्र दार गृहादिषु புத்ர தார க்ருஹாதிஷு *புத்திரன், தாரம் வீடு இவைகளிடத்து* अनभिष्वङ्गः அனபிஷ்வங்க: *அபிமானமின்மை* इष्ट अनिष्ट उपपत्तिषु இஷ்ட அனிஷ்ட உபபத்திஷு *வேண்டுவன வேண்டாதவை விளைந்தகாலே* नित्यं நித்யம் *எப்பொழுதும்* समचित्तत्वं ஸமசித்தத்வம் *மனம் நடுநிற்பது;*

***பற்றின்மை, மகன் மனைவி வீட்டைத் தனதென்று அபிமானியாதிருத்தல், வேண்டுவன வேண்டாதவை விளையுமிடத்து மனம் யாண்டும் நடு நிற்பது;*** **9**

*பொருள்களை அனுபவிக்கவேண்டும் என்ற எண்ணமில்லாமலிருந்தாலும் அவைகளிடத்துப் பற்றுதல் வந்துவிடலாம். அப்படிப் பற்றுவர இடந்தரலாகாது. மனைவி, மக்கள், வீட்டினிடத்து வைக்கும் அளவுக்கு மிஞ்சிய பற்றுதலால் தன்னை அவர்கள் மயமாய் உணரும் தன்மை வந்துவிடுகிறது. உற்றாருக்கு வந்தநோய் தனக்கே வந்ததாகவும், உற்றார் மடியத் தானே செத்துப்போனதாகவும் உணர்தல் அபிமானத்தால் வருகிறது. அதற்குப் பதிலாகத் தன்னையும் மற்ற எல்லா உயிர்களையும் இறைவனது குழந்தைகளாகக் கருதவேண்டும். உலக நிகழ்ச்சிகளில் வேண்டப்படுவனவாகவும், வேண்டப் படாதவைகளாகவும் பிரிவுபடுவது பற்றுடையார்க்கேயாம். மற்று மனதை நடுநிலையில் வைப்போர்க்கு நலம் கேடு இரண்டும் ஓரேபாங்குடன் புலனாகும். இத்தகைய மனநிலையினின்றே ஞானம் உதிக்கிறது.*

*தன் உறவினர் ஒருவர்மேல் அபரிமிதமான பாசம் வைத்திருந்தால் பகவானிடம் மனம் குவியப் பெறாத ஒரு பக்தரிடம் பகவான், அவர் நேசிக்கும் உறவினரைக் கடவுள் சொரூபமாகப் பாவித்து அன்பு வைக்கும்படி உபதேசித்தார். இவ்விஷயமாக உபதேசிக்கும்போது பகவான் கூறினதாவது :— ' உன் ஆசைக்குப் பாத்திரமானவரிடம் உன் இஷ்ட தெய்வத்தைக் காண்பாயாகில், சுலபமாக மனம் பகவானை நாடிச் செல்வதை உணர்வாய்.'*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**मयि चानन्ययोगेन भक्तिरव्यभिचारिणी ।**
**विविक्तदेशसेवित्वमरतिर्जनसंसदि ॥ १०**

மயி சானன்யயோகேன பக்திரவ்யபிசாரிணீ ।
விவிக்ததேசஸேவித்வமரதிர்ஜனஸம்ஸதி ॥ 10

मयि च மயி ச *என்னிடத்தும்* अनन्य योगेन அனன்ய யோகேன *வேறு எதையும் எண்ணாத யோகத்தால்* अव्यभिचारिणी भक्तिः அவ்யபிசாரிணீ பக்தி: *பிறழாத பக்தி* विविक्त देश सेवित्वं விவிக்த தேச ஸேவித்வம் *தனியிடத்தை நாடுதல்* जनसंसदि ஜனஸம்ஸதி *ஜனக்கூட்டத்தில்* अरतिः அரதி: *விருப்பமின்மை;*

***வேறு எதையும் எண்ணாத யோகத்தால் என்னிடம் பிறழாத பக்தி பண்ணுதல், தனியிடத்தை நாடுதல், ஜனக்கூட்டத்தில் விருப்பமின்மை ;*** **10**

*பகவானுக்கு ஒப்பான பொருள் வேறு ஒன்றுமில்லையென்று உறுதிகொண்டு முழுமனதையும் அவனிடத்தே திருப்பிவிடவேண்டும். தன் மனதை பக்தன் பங்குபோடுவதில்லை. அது முழுவதையும் இறைவனுக்கென்றே கொடுத்துவிடுகிறான்.*

*துஷ்ட ஜந்துக்களால் இடைஞ்சல் உண்டாகாததும், ஆரோக்கியமானதும், இயற்கை வனப்பு வாய்ந்ததும், தூயதும், மனதுக்கு இனியதுமான இடத்தில் வசிப்பது ஆத்மசாதனத்துக்குப் பொருத்தமானது. நல்லாரோடு கூடியிருத்தல், பிறகு அவர்களிடத்திருந்தும் பிரிந்து தனித்திருத்தல் தவத்துக்கும் ஞான வளர்ச்சிக்கும் துணை புரிகிறது.*

*தீபத்தைக்கண்டதும் பூச்சி இருட்டிலிருந்து ஓடிவருகின்றது. சர்க்கரைப் பாகிலேயே எறும்பு பிராணனை விடுமன்றி அதினின்றும் திரும்பிப் போகிறதில்லை அதுபோல பக்தனும் ஈசுவரனையே எப்போதும் பற்றி நிற்பானுகையால் மற்றப் பொருள்களையெல்லாம் கைவிட்டு விடுகிறான்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

अध्यात्मज्ञाननित्यत्वं तत्त्वज्ञानार्थदर्शनम् ।
एतज्ज्ञानमिति प्रोक्तमज्ञानं यदतोऽन्यथा ॥ ११

அத்யாத்மஞானநித்யத்வம் தத்வஞானார்த்ததர்சனம் ।
ஏதஜ் ஞானமிதி ப்ரோக்தமக்ஞானம் யததோऽன்யதா ॥ 11

अध्यात्म ज्ञान नित्यत्वं அத்யாத்ம ஞான நித்யத்வம் *ஆத்மஞான நிலைபேறு* तत्त्व ज्ञान अर्थ दर्शनं தத்வ ஞான அர்த்த தர்சனம் *தத்துவ ஞானத்தின் பயனை ஆராய்தல்* एतत् ஏதத் *இவையாவும்* ज्ञानं இதி ஞானம் इति இதி *ஞானம் என்று* प्रोक्तं ப்ரோக்தம் *பகரப்படுகிறது* यत् யத் *எது* अतः अन्यथा அத: அன்யதா *இதற்கு அன்னியமானதோ* (तत्) अज्ञानं தத் அஞ்ஞானம் (*அது*) *அஞ்ஞானம்.*

***ஆத்ம ஞானத்தில் நிலைபேறு, உண்மைப் பொருள் ஆராய்ச்சி - இவை யாவும் ஞானமாம்; இவற்றிற்கு அன்னியமானவை அஞ்ஞானம். 11***

*ஏழாவது சுலோகத்தில் அமானித்வம் — தற்பெருமை யின்மை — என்பதில் துவக்கி இந்த சுலோகத்தில் தத்துவ ஞானார்த்த தர்சனம் என்பது முடிய இவை யாவும் ஞானம் எனப்படுகின்றன. இத்தகைய மனநிலைகள் ஞான வளர்ச்சிக்குக் காரணமாயிருப்பதால் அம்மனநிலைகளே ஞானமாகக் கருதப்படுகின்றன. அவைகளுக்கு எதிரிடை யான மனநிலைகளாகிய தற்பெருமை, தருக்கு, ஹிம்சை, பொறாமை, மனக்கோணல், குருபராமுகம், மாசு, தளர்ச்சி, அடங்காமை, ஆசை, அஹங்காரம், கேடறியாமை, பற்று, உற்றாரைச் சார்தல், ஓரம் சார்தல், காமியபக்தி, சகவாச தோஷம், ஆத்மஞான விசாரமின்மை - ஆகிய இவையாவும் அஞ்ஞானத்தை வளர்க்கின்றன.*

*ஈசுவரன் எங்கும் நிறைந்திருப்பவரானால் நம்மால் ஏன் அவரைப் பார்க்கமுடியவில்லை ? பாசியும் நாணலும் மிகுந்திருக்கும் குளத்தின்கரையில் நின்றுகொண்டால் அக்குளத்தில் ஜலமே இல்லையென்று தான் நீ சொல்வாய். ஜலத்தைக் காணவேண்டுமானால் குளத்தின் மேற்பரப்பிலிருந்து பாசியை அகற்றவேண்டும். மாயையாகிற திரையால் மூடப்பட்ட கண்களையுடைய நீ ஈசுவரனைக் காணமுடியவில்லை யென்று குறை கூறுகிறாய். அவரைக்காணவேண்டுமானால் உனது கண்களினின்றும் மாயையாகிய திரையை அகற்று.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஞானத்தால் வரும்பயன்யாது? விடை வருகிறது :—*

**ज्ञेयं यत्तत्प्रवक्ष्यामि यज्ज्ञात्वाऽमृतमश्नुते ।**
**अनादिमत्परं ब्रह्म न सत्तन्नासदुच्यते ॥ १२**

ஞேயம் யத்தத்ப்ரவக்ஷ்யாமி யஜ்ஞாத்வாऽம்ருதமச்னுதே ।
அனுதிமத்பரம் ப்ரஹ்ம ந ஸத்தன்னஸதுச்யதே ॥ 12

यत् யத் *எது* ज्ञेयं ஞேயம் *அறியத்தக்கது* यत् யத் *எதை* ज्ञात्वा ஞாத்வா *அறிந்து* अमृतं அம்ருதம் *சாகாத்தன்மையை* अश्नुते அச்னுதே *அடைகிறனே* तत् தத் *அதை* प्रवक्ष्यामि ப்ரவக்ஷ்யாமி *பகர்கிறேன்* तत् தத் *அது* अनादिमत् அனுதிமத் *ஆதியில்லாதது* परं பரம் *மேலானது* ब्रह्म ப்ரஹ்ம *பிரம்மம்* न सत् उच्यते ந ஸத் உச்யதே *ஸத் என்று சொல்லப் படுவதில்லை* न असत् ந அஸத் *அஸத் என்றும் சொல்லப்படுவதில்லை.*

***அறியத்தக்கது எது, எதை அறிந்து ஒருவன் சாகாத்தன்மை யெய்துகிருன், அதைப் பகர்கிறேன். அது ஆதியில்லாத பரப்பிரம்மம்; உளது, இலது என வொண்ணுதது. 12***

*ஒன்பதாவது அத்தியாயம் பத்தொன்பதாவது சுலோகத்தில் பகவான் தம்மை (मृत्युः ம்ருத்யு:) சாவு என்றும் (अमृतं அம்ருதம்) சாகாமை யென்றும் சொன்ஞர். மேலும் தம்மை (सत् ஸத்) உளதென்றும் (असत् அஸத்) இலதென்றும் சொன்ஞர். ஸகுணப் பிரம்மம் பிரபஞ்ச சொரூபமாக இருக்கும்போது எல்லா முரண்பாடுகளும் அவரிடத்துச் சந்திக்கின்றன. வியவகாரிக நிலையில் வைத்து விரைவில் மறையும் மக்களை சாகின்றவர்கள் என்றும், நெடிது நிலைத்திருக்கும் தேவர்களை சாகாதவர்கள் என்றும் சொல்லப்பட்டது. அங்ஙனமே குணத்தோடு சம்பந்தப் பட்டுத் தோன்றியுள்ள காரியப்பிரம்மம் ஸத் என்று சொல்லப்பட்டது. அதனுடைய தோன்ருநிலை அஸத் என்று சொல்லப்பட்டது.*

*இத்தகைய விகாரங்கள் ஒன்றும் நிர்க்குண பிரம்மத்திடத்துக்கிடையாது. அதைத் தோன்றியுளதென்றும் இலதென்றும் சொல்லலாகாது; அது தோற்றம் மறைவு அற்றது. அதனுலேதான் பரபிரம்மம் என்று அது அழைக்கப்படுகிறது. அது ஆதி அந்தம் அற்றது. மாறுபாடே அதனிடத்து இல்லை. அம்ருதம் என்பது அதற்கே முற்றி*

லும் ஒவ்வும். அபரோக்ஷானுபூதியில் அறியத்தக்கது அதுவே. அதை அறிந்தபின் ஜீவனுக்குத் தான் வேறு, அது வேறு என்ற பேதமில்லை. பிரம்மத்தை அறிபவன் பிரம்மமாகிறான். ஆகையால் சாகாத்தன்மை பிரம்மஞானியினுடையதாகிறது. பிரம்ம நிர்வாணம் அல்லது மோக்ஷம் என்பது அதுவே. அது மனம் மொழியைக் கடந்த பெருநிலை.

அகண்ட பரபிரம்மத்தை ஸமாதியில் மட்டும்தான் அறியலாகும்; அப்பால் ஒரே மௌனம்; ஜீவன் ஜகத் இவைகளைப்பற்றிய ஆராய்ச்சி, ஞானம் அக்ஞானம் என்ற விவாதம் இவைகளெல்லாம் அடங்கிவிடுகின்றன. ஸ்வரூபத்தைத்தவிர வேறொன்றும் அங்கிருப்பதில்லை. உண்மையில் உப்புப் பிரதிமை பிரம்மாண்ட ஸமுத்திரத்தில் மூழ்கிய பிறகு தன்னுடைய கதையைச் சொல்ல வெளிவருவதில்லை. இதுதான் பிரம்ம ஞானம்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

இந்த அமிர்த சாகரத்தில் கலப்பதற்கு முன்பு சாதகன் காணும் காட்சி யாது? விடை வருகிறது:—

**सर्वतः पाणिपादं तत्सर्वतोऽक्षिशिरोमुखम् ।**
**सर्वतः श्रुतिमल्लोके सर्वमावृत्य तिष्ठति ॥ १३**

ஸர்வத: பாணிபாதம் தத்ஸர்வதோऽக்ஷிசிரோமுகம் ।
ஸர்வத: ச்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்டதி ॥ 13

तत् தத் *அந்த பிரம்மம்* सर्वतः ஸர்வத: *எங்கும்* पाणि पादं பாணி பாதம் *கை கால்களையுடையது* सर्वतः ஸர்வத: *எங்கும்* अक्षि शिरः मुखं அக்ஷி சிர: முகம் *கண், தலை, வாய் உடையது* सर्वतः ஸர்வத: *எங்கும்* श्रुतिमत् ச்ருதிமத் *காது உடையது* लोके லோகே *உலகில்* सर्वं ஸர்வம் *எல்லாவற்றையும்* आवृत्य ஆவ்ருத்ய *வியாபித்து* तिष्ठति திஷ்டதி *நிற்கின்றது.*

***அது எங்கும் கைகால்களையுடையது; எங்கும் கண், தலை, வாய்களையுடையது; எங்கும் காதுகளையுடையது. உலகில் அனைத்தையும் அது வியாபித்துள்ளது. 13***

கடலையணுகும் நதி கடலின் தன்மையைப் பெறுகிறது. நிர்க்குண பிரம்மத்தில் லயமாதற்கு முன்பு ஞானி

*ஜகத்திலுள்ள வடிவங்களையெல்லாம் ஈசுவர சொரூபமாகப் பார்க்கிறான். அவனன்றி ஓரணுவும் அசைவதில்லை என்பது அவனுக்குப் பிரத்தியக்ஷமாகிறது.*

*அஹங்காரம் என்னிடம் இருக்கும் வரையில் ஜீவனாயும், ஜகத்தாயும் வேறு வேறு ஐசுவரியங்களுடன் தம்மைத் தோற்றுவிக்கும் ஈசுவரன் என் முன்னால் இருக்கின்றார்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**सर्वेन्द्रियगुणाभासं सर्वेन्द्रियविवर्जितम् ।**
**असक्तं सर्वभृच्चैव निर्गुणं गुणभोक्तृ च ॥ १४**

ஸர்வேந்த்ரியகுணாபாஸம் ஸர்வேந்த்ரியவிவர்ஜிதம் ।
அஸக்தம் ஸர்வப்ருச்சைவ நிர்குணம் குணபோக்த்ரு ச ॥ 14

सर्व इन्द्रिय गुण आभासं ஸர்வ இந்த்ரிய குண ஆபாஸம் *எல்லா இந்திரியங்கள் வாயிலாக ஒளிர்வது* सर्व इन्द्रिय विवर्जितं ஸர்வ இந்த்ரிய விவர்ஜிதம் *எல்லா இந்திரியங்களையும் அற்றது* असक्तं அஸக்தம் *பற்றற்றது* सर्व भृत् ஸர்வ ப்ருத் *அனைத்தையும் பற்றித்தாங்குவது* निर्गुणं च एव நிர்குணம் ச ஏவ *குணமே இல்லாதது* गुण भोक्तृ च குண போக்த்ரு ச *குணங்களை அனுபவிப்பதும்;*

***இந்திரியங்கள் அனைத்தின் வாயிலாக ஒளிர்வது; இந்திரியங்கள் யாவையும் அற்றது; பற்றற்றது; அனைத்தையும் பற்றித் தாங்குவது; குணங்களே இல்லாதது எனினும் குணங்களை அனுபவிப்பது;*** ***14***

*பல வடிவங்களைக் காணுதற்குப் பகல் வேளை உதவுகிறது. ஏனென்றால் சூரிய வெளிச்சம் அப்பொருள்களை விளக்குகிறது. பல பொருள்களின் விளக்கமாகச் சூரியப் பிரகாசம் ஒளிர்கிறது எனலாம். மேலும் சூரிய வெளிச்சம் இவ் வடிவங்கள் யாவையும் அற்றது. அவ் வடிவங்களில் அது பற்றற்றிருக்கிறது. ஆத்ம சைதன்யம் இந்திரியங்களில் அத்தகைய தொடர்வுடையதாயிருக்கிறது. சினிமாத் திரையானது படங்களை யெல்லாம் தாங்குவது போன்று*

*சிதாகாசம் ஜகத்திலுள்ள அனைத்தையும் தாங்குகிறது. படத்தில் காணும் விதவிதமான வர்ணங்கள் திரையி னுடைய வர்ணங்களல்ல. ஆனால் அத்தனை வர்ணங்களை யும் திரை உள்ளபடி விளக்குகிறது. அங்ஙனம் முக்குணங் களும் பரமாத்மாவினிடத்து இல்லை. ஆயினும் குணங்களை யெல்லாம் விளக்கவும் ரசிக்கவும் செய்கிறது அறிவு சொரூப மாகிய சிதாகாசம்.*

*ரூபியும் அரூபியுமான கடவுள் ஒன்றேதான். ஒன்றை நம்பி னால் இன்னொன்றையும் நம்பினதாகும். எரிக்கக் கூடிய சக்தியைத் தவிர்த்து நெருப்பையும், நெருப்பைத் தவிர்த்து எரிக்கிற சக்தியையும் சிந்திக்க வொண்ணாது. இன்னும் சூரிய கிரணங்களைத் தவிர்த்துச் சூரியனையும், சூரியனைத் தவிர்த்துச் சூரிய கிரணங்களையும் நினைக்க முடியாது; பாலைத் தவிர்த்து அதன் வெண்மையையும், வெண்மை யைத் தவிர்த்துப் பாலையும் கருதவொண்ணாது. அதுபோல குணஸ்வ ரூபனான ஈசுவரனைத் தவிர்த்து நிர்க்குண ஸ்வரூபனையும், நிர்க்குண ஸ்வரூபனைத் தவிர்த்து குணஸ்வரூபனையும் சிந்திக்கமுடியாது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**बहिरन्तश्च भूतानामचरं चरमेव च ।**
**सूक्ष्मत्वात्तदविज्ञेयं दूरस्थं चान्तिके च तत् ॥ १५**

பஹிரந்தஸ்ச பூதானமசரம் சரமேவ ச ।
ஸூக்ஷ்மத்வாத்ததவிக்ஞேயம் தூரஸ்தம் சாந்திகே ச தத் ॥

तत् தத் *அது* भूतानां பூதானம் *பொருள்களுக்கு* बहिः பஹி: *புறமும்* अन्तः च அந்த: ச *உள்ளும்* अचरं அசரம் *அசையாததும்* चरं एव च சரம் ஏவ ச *அசைவதும்* सूक्ष्मत्वात् ஸூக்ஷ்மத்வாத் *சூக்ஷ்மமாயிருப் பதால்* अविज्ञेयं அவிக்ஞேயம் *அறிய வொண்ணாதது* तत् தத் *அது* दूरस्थं च தூரஸ்தம் ச *தூரத்திலிருப்பதும்* अन्तिके च அந்திகே ச *அருகில் இருப் பதும்.*

***பொருள்களுக்குப் புறமும் உள்ளும் உள் ளது; அது அசையாதது, அசைவது; நுண்மையா னதாதலால் அறியவரிது; எட்டவும் கிட்டவும் இருப்பது அது.*** **15**

கடலுக்குள் மிதக்கிற பனிக்கட்டிக்கு உள்ளும் புறமும் இருப்பது நீர். அங்ஙனம் பரமாத்மா நீக்கமற எல்லாப் பொருள்களிலும் நிறைந்திருக்கிறார். கடலின் மேல் பாகம் அலைவீசி அசைகிறது; அடிப்பாகம் அசையாதிருக்கிறது. பரமாத்மா குணங்களோடு கூடிப் பிரகிருதியாக இயங்குகிறார். குணம்போனவிடத்து அவர் அசையாதிருக்கிறார். கடல் நீர் ஆவியாக மாறி சூக்ஷ்மமாகும் பொழுது கண்ணுக்குத் தென்படுவதில்லை. அங்ஙனம் சுத்த சைதன்யமாகிய நிர்க்குண பிரம்மம் பேரறிவு சொரூபம் எனினும் மன பரிபாகமாகாத மந்த அதிகாரிகளுக்கு அப்பொருள் அறிய வொண்ணாதது.

தன் சொந்த பூமியில் தன் பாதத்துக்குக்கீழ் பொன் இருப்பதை அறியாதவனுக்கும் பொன்னுக்கும் வெகுதூரம். தன்னுள் இருக்கும் பரமாத்மாவை அறியாதவனுக்கு அவர் மறுமையில் எங்கேயோ இருப்பதாக எண்ணம். தன் அந்தராத்மா அவர் என்று அறிகிறவனுக்கு அவரைவிட அருகில் உள்ள பொருள் வேறொன்றுமில்லை.

ஸமாதி நிலையிலிருந்து இந்திரிய நிலைக்கு வருபவனுக்கு இலேசான அஹங்காரம் இருக்கும். இதனால் அவன் ஒரே கடவுளின் பல்வேறு தோற்றங்களாகத் தன்னையும் ஜீவர்களையும் ஜகத்தையும் காண்கிறான். உனக்கென்று தனி வியக்தி இருக்கும் வரையில் அதாவது உன்னிடம் அஹங்காரம் இருக்கும் வரையில், ஈசுவரன் உருவம் உள்ளவன் என்பதைத்தவிர வேறுவிதத்தில் அவனை உன்னால் தியானிக்கவோ, நினைக்கவோ, காணவோமுடியாது. அதுவரையில் அகண்ட நிர்க்குணப் பிரம்மத்தை நீ உள்ளும் புறமும் சகுணக் கடவுளாகத்தான் காணுவாய். சகுணக் கடவுளின் இந்தத் தோற்றங்கள் பொய்யானவையல்ல. சரீரம், மனம், உலகம், இவைகளைக்காட்டிலும் பன்மடங்கு மெய்யானவை.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**अविभक्तं च भूतेषु विभक्तमिव च स्थितम् ।**
**भूतभर्तृ च तज्ज्ञेयं ग्रसिष्णु प्रभविष्णु च ॥ १६**

அவிபக்தம் ச பூதேஷு விபக்தமிவ ச ஸ்திதம் ।
பூதபர்த்ரு ச தஜ் ஞேயம் க்ரஸிஷ்ணு ப்ரபவிஷ்ணு ச ॥ 16

भूतेषु பூதேஷு பொருள்களில் अविभक्तं च அவிபக்தம் ச பிரிவு படாததாயும் विभक्तं इव च விபக்தம் இவ ச பிரிவுபட்டது போலும் स्थितं ஸ்திதம் நிற்பது भूत भर्तृ च பூத பர்த்ரு ச பொருள்களைத் தாங்குவதும் ग्रसिष्णु க்ரஸிஷ்ணு விழுங்குவதும் प्रभविष्णु च ப்ரபவிஷ்ணு ச உண்டுபண்ணுவதும் என்று तत् ज्ञेयं தத் ஞேயம் அது அறியப்பட வேண்டும்.

***அது பிளவுபடாதது, பொருள்களில் பிளவு பட்டதுபோல் இருக்கிறது; பொருள்களைத் தாங்குவதும், விழுங்குவதும், தோற்றுவிப்பதும் அது என்று அறிக.*** ***16***

ஆகாசம் நீக்கமற எங்கும் நிறைந்திருக்கிறது. ஆனால் அது ஒவ்வொருவடிவத்துக்குள்ளும் பிரிவுபட்டதுபோன்று தென்படுகிறது. பிரிவுபடுத்துகிற வடிவத்துக்குள்ளும் அது இடையீடின்றி வியாபித்திருக்கிறது. பரமாத்மா அத்தகையவர். பாக்கி நான்கு பூதங்களையும் ஆகாசம் தாங்குவது போன்று ஜகத், ஜீவன் ஆகிய அனைத்தும் ஆத்ம சைதன்யத்தில் நிலைபெற்றிருக்கின்றன. அவைகள் பிரளய காலத்தில் ஒடுங்குவது ஆத்மாவில்; சிருஷ்டிக் காலத்தில் தோன்றுவது ஆத்மாவில். சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் ஆகிய மூன்று நிலைகளிலும் அவைகள் ஆத்மாவுக்குப் புறம்பாயில்லை. அலைகள் கடலில் தோன்றி, கடலில் நிலைபெற்றிருந்து, கடலில் ஒடுங்குவது போன்று இவையாவும் பரமாத்மாவிடம் தோன்றி, இருந்து, இறக்கின்றன.

மாசு மருவற்று விளங்கிய ஆகாசத்தில் திடீரென்று மேகங்கள் தோன்றுவதையும் அடுத்த நிமிஷத்தில் அவை காற்றினால் அப்பால் போக்கப்படுவதையும் ஒருகால் கண்ட பரமஹம்ஸர் ஒருவர், மிகுந்த குதூகலத்துடன் குதிக்கத் தொடங்கி, "இதைப் போன்றதுதான் ஜகத்தும். முதலில் அது இருந்ததில்லை. பிரம்மமாகிற நிர்மல ஆகாயத்தில் திடீரென்று தோன்றி இத்தனை பொருள்களையும் உண்டாக்கியது. பிறகு அதே பிரம்மத்தின் காற்றினால் அகற்றப்படுகிறது," என்றார்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

பிரளய காலத்தில் காரிருள் நீக்கமற எங்கும் நிறைந்திருக்கிறது. எல்லாவற்றையும் அது விழுங்கவும் செய்

கிறது எனலாம். பர பிரம்மம் அத்தகையதோ என்ற ஐயம் ஏற்படலாம். அதற்கு விடை வருகிறது :—

ज्योतिषामपि तज्ज्योतिस्तमसः परमुच्यते ।
ज्ञानं ज्ञेयं ज्ञानगम्यं हृदि सर्वस्य विष्ठितम् ॥ १७

ஜ்யோதிஷாமபி தஜ் ஜ்யோதிஸ்தமஸ: பரமுச்யதே ।
ஞானம் ஞேயம் ஞானகம்யம் ஹ்ருதி ஸர்வஸ்யவிஷ்டிதம் ॥ 17

तत् தத் *அது* ज्योतिषां अपि ஜ்யோதிஷாம் அபி *ஜோதிகளுக்கும்* ज्योतिः ஜ்யோதி: *ஜோதியாய்* तमसः தமஸ: *இருளுக்கு* परं பரம் *அப்பாற் பட்டது என்று* उच्यते உச்யதே *சொல்லப்படுகிறது* ज्ञानं ஞானம் *ஞானமாயும்* ज्ञेयं ஞேயம் *அறியப்படுவது* ज्ञानगम्यं ஞானகம்யம் *அறிவினுல் அடையப்படுவது* सर्वस्य ஸர்வஸ்ய *எல்லாருடைய* हृदि ஹ்ருதி *ஹிருதயத்தில்* विष्ठितं விஷ்டிதம் *நிலைத்திருப்பது.*

***ஒளிக்கெல்லாம் ஒளியாகிய அது இருளுக்கு அப்பாற்பட்டது என்று சொல்லப்படுகிறது. அறிவும், அறியப்படுபொருளும், அறிவினுல் அடையப் படுவதுமாகிய அது எல்லாருடைய உள்ளத்திலும் நிலைத்திருக்கிறது. 17***

சுயம் ஜோதியாகத் தென்படும் சூரியன் நக்ஷத்திரம் முதலியவைகள் பிரளய காலத்தில் தங்கள் ஒளியை இழந்துவிடுகின்றன. புத்தியானது ஆத்மாவிடத்து வாங்கிய உணர்ச்சியை இழந்துவிடுகிறது. ஆத்மாவோ தன் ஒளியை ஒருக்காலும் இழப்பதில்லை. ஜடப் பொருள்களுக்கு உண்டாகிற இருளும் வெளிச்சமும் ஆத்ம சைதன்யத்தை அணுகமாட்டா. நள்ளிருளில் ஒருவனுக்குத் தன் உடலும் உடையும் தென்படுவதில்லை. ஆயினும் "நான் இருக்கிறேன்" என்ற உணர்ச்சி இருளில் மறைவதில்லை. சூரிய வெளிச்சத்தில் அவ்வுணர்ச்சி அதிகமாகத் தோன்றுவதுமில்லை. ஆத்ம சைதன்யத்தின் அறிவைக்கொண்டே சூரியனையும் அறிகிறோம், இருளையும் அறிகிறோம். அந்த ஆத்மா ஞானவடிவு. அது தன்னைத்தானே அறிகிறது.

அது தன்னைத் தானே சார்ந்திருக்கும்பொழுது தன்னை நிறைபொருளாக உணர்கிறது. ஆக, ஆத்மாவால் அடைதற்கு உரியது ஆத்மாவே. அது ஹிருதய கமலத்தில் யாண்டும் நிலைத்திருக்கிறது.

உள்ளே (ஹிருதயத்தில்) ஈசுவரனையுணர்பவன் புறம்பேயும் அவனைக் காண்பான். தன்னுள்ளே ஈசுவரனைக் காணுதவன் தனக்கு வெளியேயும் அவனைக் காணமாட்டான். ஆகவே, தேகாலயத்தில் தெய்வத்தைக் காண்பவன் அகிலாண்டத்திலேயும் அவனைக்காண்பான்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**इति क्षेत्रं तथा ज्ञानं ज्ञेयं चोक्तं समासतः ।**
**मद्भक्त एतद्विज्ञाय मद्भावायोपपद्यते ॥ १८**

இதி க்ஷேத்ரம் ததா ஞானம் ஞேயம் சோக்தம் ஸமாஸத: ।
மத்பக்த ஏதத் விக்ஞாய மத்பாவாயோபபத்யதே ॥ 18

इति இதி *இவ்வாறு* क्षेत्रं க்ஷேத்ரம் *க்ஷேத்திரமும்* तथा ததா *அவ்வாறே* ज्ञानं ஞானம் *ஞானமும்* ज्ञेयं च ஞேயம் ச *அறியப்படு பொருளும்* समासतः ஸமாஸத: *சுருக்கமாக* उक्तं உக்தம் *உரைக்கப்பட்டுள்ளன* मद्भक्तः மத்பக்த: *என் பக்தன்* एतत् ஏதத் *இதை* विज्ञाय விக்ஞாய *அறிந்து* मद्भावाय மத்பாவாய *என் நிலைமைக்கு* उपपद्यते உபபத்யதே *தகுந்தவனாகிறான்.*

***க்ஷேத்திரமும் ஞானமும் ஞேயமும் இங்ஙனம் சுருக்கமாகச் சொல்லப்பட்டன. இதை அறியும் என் பக்தன் என்னையடையத் தகுந்தவனாகிறான். 18***

மனிதன் எதனிடத்துத்தன் முழுமனதைச்செலுத்துகிறானே அதை அறிய வல்லவனாகிறான். ஈசுவரனை உபாசிக்கிறவன் ஈசுவரனை அறிகிறான். இத்தனையுமாய் இலங்குவது ஈசனே என்ற ஞானம் வந்த பிறகு யாண்டும் அவன் ஈசனுடைய சான்னித்தியத்திலேயே இருந்து ஈசனை அடையத் தகுந்தவனாகிறான்.

ஈசுவரனைக் கண்டவனே ஞானி. அவன் அப்போது குழந்தையின் சுபாவமுடையவனாகிறான். குழந்தைக்குத் தனி வியக்தித்வம் ஒன்று இருக்கிறதென்றாலும் அது வாஸ்தவமானதல்ல; வெளித்

*தோற்றமட்டுமே. குழந்தையின் இயல்பு வயது வந்தவனுடையதைப் போன்றதன்று.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**प्रकृतिं पुरुषं चैव विद्ध्यनादी उभावपि ।**
**विकारांश्च गुणांश्चैव विद्धि प्रकृतिसंभवान् ॥ १९**

ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்த்யனாதீ உபாவபி ।
விகாரான்ஸ்ச குணான்ஸ்சைவ வித்தி ப்ரக்ருதிஸம்பவான் ॥ 19

प्रकृतिं ப்ரக்ருதிம் *பிரகிருதியையும்* पुरुषं एव च புருஷம் ஏவ ச *புருஷனையும்* उभौ अपि உபௌ அபி *இரண்டையுமே* अनादी அனாதீ *ஆதியில்லாதவைகளென்று* विद्धि வித்தி *அறிக* विकारान् च விகாரான் ச *பல்வேறு தோற்றங்களும்* गुणान् च एव குணான் ச ஏவ *குணங்களும்* प्रकृतिसम्भवान् ப்ரக்ருதிஸம்பவான் *பிரகிருதியில் பிறந்தவைகள் என* विद्धि வித்தி *அறிக.*

***பிரகிருதி புருஷன் ஆகிய இரண்டுமே ஆதியில்லாதவைகளென்றறிக. வேறுபாடுகளும் குணங்களும் பிரகிருதியில் பிறந்தவைகளென்றுணர். 19***

*கால தேச வர்த்தமானத்தில் கட்டுப்பட்டதாகத் தென்படும்போது அது பிரகிருதி என்றும், மாயை யென்றும், இயற்கை யென்றும் அழைக்கப்படுகிறது. புத்தி முதல் ஜடப்பொருள் பரியந்தம் வெவ்வேறு வடிவெடுக்கும் தன்மை பிரகிருதியினிடமுண்டு. முக்குணங்களாகப் பரிணமிப்பதும் அதுவே. அது நிர்விகாரியாய், நிர்க்குணமாய்ப் பேரறிவாய்த் தன்மயமாயிருக்கும்போது புருஷன் என்ற பெயர் பெறுகிறது. பொருள் ஒன்று ஆதலால் இவையிரண்டும் அத்வைதம். உண்டாக்கப்பட்டதல்லவாதலால் அது அனாதி.*

*ஸமுத்திர ஜலம் சிலவேளை அமைதியாயும், சிலவேளை அலைகள் பொங்கிக் கொந்தளித்தும் இருப்பதுபோல பிரம்மமும் மாயையும் இருக்கின்றன. சலிக்கும் சமுத்திரம் மாயை; சலனமற்ற சமுத்திரம் பிரம்மம்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

कार्यकारणकर्तृत्वे हेतुः प्रकृतिरुच्यते ।
पुरुषः सुखदुःखानां भोक्तृत्वे हेतुरुच्यते ॥ २०

கார்யகாரணகர்த்ருத்வே ஹேதுः ப்ரக்ருதிருச்யதே ।
புருஷ: ஸுகது:கானும் போக்த்ருத்வே ஹேதுருச்யதே ॥ 20

कार्य कारण कर्तृत्वे கார்ய காரண கர்த்ருத்வே *தேகத்தையும் இந்திரியங்களேயும் உண்டுபண்ணும் விஷயத்தில்* प्रकृतिः ப்ரக்ருதி: *பிரகிருதி* हेतुः ஹேது: *காரணமென்று* उच्यते உச்யதே *சொல்லப்படுகிறது* पुरुषः புருஷ: *புருஷன்* सुख दुःखानां ஸுக து:கானும் *சுக துக்கங்களினுடைய* भोक्तृत्वे போக்த்ருத்வே *அனுபவிப்பதில்* हेतुः ஹேது: *காரணம் என்று* उच्यते உச்யதே *சொல்லப்படுகிறது.*

***உடலுக்கும் இந்திரியங்களுக்கும் காரணம் பிரகிருதி எனப்படுகிறது. இன்ப துன்பங்களை அனுபவிப்பதற்குக் காரணம் ஜீவன் எனப்படுகிறான். 20***

*தந்தையே மைந்தன் ஆகின்றான். மைந்தனுடைய செயல்களில் சில தந்தைக்கு இன்பமூட்டுகின்றன, வேறு சில துன்பமூட்டுகின்றன. புருஷனே பிரகிருதி ஆகின்றான். பிரகிருதியின் வெவ்வேறு விகாரங்களே உடலாகவும், இந்திரியங்களாகவும் பரிணமிக்கின்றன. அவ்விந்திரியங்கள் ஞானேந்திரியங்களாகவும் கர்மேந்திரியங்களாகவும் பாகு படுகின்றன. ஜீவாத்மாவானது பிரகிருதியோடு மேலும் சம்பந்தப்படுதற்கு இந்திரியங்கள் பயன்படுகின்றன. அத்தகைய சம்பந்தம் இன்ப துன்பமாக வடிவெடுக்கிறது. இங்ஙனம் புருஷன் பிரகிருதியோடுசேர்வதால் புருஷன் பாடம் கற்று வருகிறான். இப்படி ஜீவாத்மாவைப் பக்குவப்படுத்துவதே பிரகிருதியின் தொழில்.*

*பிரம்ம ஞானப் பிராப்தி, பரமானந்த போகம் முதலியவைகளெல்லாம் மாயையால்தான் நமக்குக் கிடைக்கின்றன. இல்லாவிட்டால் இவையெல்லாம் நமக்கு லபிக்குமெனக் கனவிலும் கண்டவர் எவர்? மாயையிலிருந்துதான் துவைதமும் மற்ற வியவகாரமும் உண்டாகின்றன. மாயைக்கு அப்பால் போகம், போகி என்பவை கிடையா.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஜீவன் என்ன போக்கில் பாடம் கற்கின்றான் என்பது அடுத்து எழும் வினவாகின்றது. அதற்கு விடை வருகிறது :—*

**पुरुषः प्रकृतिस्थो हि भुङ्क्ते प्रकृतिजान्गुणान् ।**
**कारणं गुणसङ्गोऽस्य सदसद्योनिजन्मसु ॥ २१**

புருஷ: ப்ரக்ருதிஸ்தோ ஹி புங்க்தே ப்ரக்ருதிஜான் குணான் |
காரணம் குணஸங்கோऽஸ்ய ஸதஸத்யோனி ஜன்மஸு || 21

पुरुषः புருஷ: *புருஷன்* प्रकृतिस्थः हि ப்ரக்ருதிஸ்த: ஹி *பிரகிருதியிலிருப்பதனாலேயே* प्रकृतिजान् गुणान् ப்ரக்ருதிஜான் குணான் *பிரகிருதியில் பிறந்த குணங்களை* भुंक्ते புங்க்தே *அனுபவிக்கிறான்* अस्य அஸ்ய *அவனுக்கு* सत् असत् योनि जन्मसु ஸத் அஸத் யோனி ஜன்மஸு *நலம், கேடு, உடைய யோனிகளில் பிறப்பதற்கு* गुण सङ्गः குண ஸங்க: *குணப் பற்றுதலே* कारणं காரணம் *காரணமாகிறது.*

***புருஷன் பிரகிருதியில் நின்று பிரகிருதியில் தோன்றிய குணங்களைத் துய்க்கிறான். அவனுக்கு நலம் கேடு உடைய பிறவிகள் ஆதற்குக் காரணம் குணப்பற்றே. 21***

*வெயிலில் நிற்பவன் வெயிலை அனுபவிக்கிறான். பனியில் நிற்பவன் பனியை அனுபவிக்கிறான். அங்ஙனம் ஜீவாத்மா பிரகிருதியோடு பொருந்தியிருக்கையில் பிரகிருதியின் தன்மைகளையெல்லாம் தன்னுடையவைகளெனக் கருதி அனுபவிக்கிறான். நான் இன்பம் துய்க்கிறேன், நான் துன்பம் துய்க்கிறேன், நான் மயங்கிப் போனேன், நான் அறிவுடையவனாயிருக்கிறேன்—இவை போன்ற உணர்ச்சிகள் குணத்தோடு பற்றுவைப்பதால் வருகின்றன. இனிப் பிறப்புக்குக் காரணமாயிருப்பதும் பற்றுதலே. மேலான குணத்தோடு பற்றுவைப்பவன் தேவன் போன்ற மேலானவனாகப் பிறக்கின்றான். கீழான குணத்தில் பற்று வைப்பவன் விலங்கு போன்ற கீழானவனாகப் பிறக்கிறான். மேலானதும் கீழானதும் கலந்த குணத்தில் பற்றுவைப்பவன் சாதாரண மனிதனாகப் பிறக்கிறான்.*

*இப்படித் தொடர்ந்து வருகிற ஜனன மரண சம்சாரத்தினின்று விடுதலையடைதற்கு வழியொன்றுமில்லையா?. விடை வருகிறது :—*

**उपद्रष्टानुमन्ता च भर्ता भोक्ता महेश्वरः ।**
**परमात्मेति चाप्युक्तो देहेऽस्मिन्पुरुषः परः ॥ २२**

உபத்ரஷ்டானுமந்தா ச பர்த்தா போக்தா மஹேச்வர: ।
பரமாத்மேதி சாப்யுக்தோ தேஹே஽ஸ்மின் புருஷ: பர: ॥ 22

अस्मिन् देहे அஸ்மின் தேஹே *இந்த தேகத்தில்* परः पुरुषः பர: புருஷ: *பர புருஷனாயிருப்பவன்* उपद्रष्टा உபத்ரஷ்டா *சாக்ஷி* अनुमन्ता அனுமந்தா *அனுமதிப்பவன்* भर्ता च பர்த்தா ச *தாங்குபவனும்* भोक्ता போக்தா *அனுபவிப்பவன்* महेश्वरः மஹேச்வர: *மஹேச்வரன்* परमात्मा பரமாத்மா *பரமாத்மன்* इति च अपि उक्तः இதி ச அபி உக்த: *இப்படியெல்லாம் சொல்லப்படுகிறான்.*

***இத்தேகத்திலுள்ள பரம புருஷனானவன் சாக்ஷி, அனுமதிப்பவன், தாங்குபவன், அனுபவிப்பவன், மஹேச்வரன், பரமாத்மன் இப்படியெல்லாம் இயம்பப்படுகிறான்.*** 22

*உடலிலே இத்தனை செயல்கள் நடைபெறுகையில் அக்ஞானத்தில் உழலும் ஜீவனானவன் தன்னை அத்தனைக்கும் கர்த்தாவாக எண்ணுகிறான். அந்த ஜீவ சைதன்யமே பரமாத்மாவின் தோற்றமாகும். உள்ளே இருக்கும் உத்தமன் எத்தகையவன் என்று கேட்குமிடத்து, அவன் :—*

*உபத்ரஷ்டா-அருகிலிருந்து காண்போன் அல்லது சாக்ஷியாக இருக்கிறான். சொக்கட்டான் ஆடுபவர்களை விட அதைப் பார்த்துக்கொண்டிருப்பவனுக்கு யார் எங்கே எக்குற்றம் செய்கிறார்கள் என்பது நன்கு புலப்படுகிறது. மனத்தகத்து சாக்ஷியாயிருக்கும் பரமாத்மா உடலிலும் உள்ளத்திலும் நிகழ்வனவற்றைப் பார்த்துக்கொண்டிருக்கிறார்.*

*அனுமந்தா-அனுமதி அல்லது சம்மதம் கொடுப்பவர். ஒன்றும் தெரியாத அவிவேகி வேடிக்கை பார்த்துக்*

கொண்டிருக்கிறான். பார்த்ததை நல்லது என்று ஆமோதிக்க, மற்றுக் கெட்டதென்று நிராகரிக்க அவனுக்குத் தெரியாது. அறிஞனுக்கு அது சாலும். ஜகத்தின் நடைமுறைக்குப் பரமாத்மா அங்ஙனம் அனுமந்தாவாயிருக்கிறார்.

பர்த்தா—விளையாட்டைப் பார்க்கவும் அனுமதிக்கவும் ஒருவனுக்கு இயலலாம். ஆனால் அதற்கு ஆகிற செலவு கொடுத்து அதை ஆதரிக்க இயலுகிறவன் அதிலும் மிக்கான் ஆகிறான். அவனைப் பர்த்தா என்று சொல்லவேண்டும். தாங்குபவன் என்பது அதன் பொருள். சினிமாத் திரை சினிமாப் படத்தைத் தாங்குவதுபோன்று பரமாத்மா பிரகிருதியைத் தாங்குகிறான்.

போக்தா—சினிமாத் திரை சினிமாப் படத்தைத் தாங்குகிறது எனினும் அப்படத்தை ரசிக்க அதனால் இயலாது. திரை ஜடப்பொருளாயிருப்பதே அதற்குக் காரணம். மனைவிக்குக் கணவன் பர்த்தா. அதற்குமேல் அவளுடன் கூடின இல்வாழ்க்கைக்கு போக்தாவாக, அதாவது இல்வாழ்க்கையை அனுபவிப்பவனாக அவன் இருக்கிறான். அங்ஙனம் சித் சொரூபியாகிய, ஆனந்த சொரூபியாகிய பரம புருஷன் பிரகிருதிக்கு போக்தாவாக இருக்கிறான்.

மகேச்வரன்—கணவன் மனைவியை ஆதரித்து அவளுடன் கூடிய இல்வாழ்க்கையை அனுபவிக்கலாம். ஆனால் மனைவி அவன் கட்டுப்பாட்டில் அடங்காதவளாயிருக்கலாம். பின்பு, பரமபுருஷனோ அரசன் போன்றவன். ராஜாவுக்கு அவனுடைய பிரகிருதிகளெல்லாம் உட்பட்டவைகள். மகேச்வரனது ஆளுகைக்குப் பிரகிருதி அல்லது க்ஷேத்திரம் முற்றிலும் கட்டுப்பட்டது. அவனுடைய ஆணையை மீறுதற்கு அதற்கு இயலாது.

இத்தனை விதங்களில் அவன் இயற்கையோடு தொடர்பு வைத்திருந்தும் அவன் இயற்கையில் கட்டுப்பட்டவனல்லன். ஆகையால் அவன் பரமாத்மன், அதாவது இயற்கைக்கு அப்பாற்பட்டவன்.

இங்ஙனம் இத்தேகத்தினுள்ளேயே பிரகிருதியின் செயல் ஒன்றிலும் கட்டுப்படாதவனாக, ஆனால் அதற்கு ஆதரவும், ஒழுங்குப்பாடும் தருபவனாகப் பரம புருஷன் வீற்றிருக்கிறான்.

புருஷ பிரகிருதியின் மூலமாகவே உலகம் உண்டாயிற்று. அது எப்படி யென்று தெரியுமா? வீட்டு எஜமானன் ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டு அதிகாரம் செலுத்துகிறான். வீட்டு எஜமானி இப்பக்கமும் அப்பக்கமும் ஓடி அலைந்து அலுவல்களைக் கவனிக்கிறாள். சுறுசுறுப்பாக வேலை பார்த்து, வீட்டுக்கு வருபவர்களையும் வரவேற்றுக் கவனித்துக்கொள்கிறாள். அடிக்கடி தன் கணவனிடம் சென்று அலுவல்கள் எவ்வாறு நடந்து வருகின்றன வென்பதை அறிவிப்பதோடு ஆலோசனைகளையும் கேட்டு வருகிறாள். தலைவனும் குறிப்பறிந்து தன் சம்மதத்தைத் தலையசைப்பின் மூலமாகத் தெரிவிக்கிறான். பிரகிருதி புருஷன் இவர்களது காரியமும் இப்படித்தான் நடைபெற்று வருகிறது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

பிரகிருதி புருஷனைப்பற்றிய ஞானத்தினின்று வரும் நலன் ஏதாவது உண்டா? விடை வருகிறது :—

**य एवं वेत्ति पुरुषं प्रकृतिं च गुणैः सह ।**
**सर्वथा वर्तमानोऽपि न स भूयोऽभिजायते ॥ २३**

ய ஏவம் வேத்தி புருஷம் ப்ரக்ருதிம் ச குணை: ஸஹ ।
ஸர்வதா வர்த்தமானோऽபி ந ஸ பூயோऽபிஜாயதே ॥ 23

यः ய: *யார்* एवं ஏவம் *இங்ஙனம்* पुरुषं புருஷம் *புருஷனையும்* गुणैः सह குணை: ஸஹ *குணங்களுடன்கூடிய* प्रकृतिं च ப்ரக்ருதிம் ச *பிரகிருதியையும்* वेत्ति வேத்தி *அறிகிறானோ* सः ஸ: *அவன்* सर्वथा ஸர்வதா *எவ்வாறு* वर्तमानः अपि வர்த்தமான: அபி *வாழ்பவனாயிருப்பினும்* भूयः பூய: *திரும்பவும்* न अभिजायते ந அபிஜாயதே *பிறப்பதில்லை.*

***இங்ஙனம் புருஷனையும் குணங்களுடன் கூடிய பிரகிருதியையும் அறிபவன் எவ்வாறு வாழ்பவனாயினும் அவன் மறுபடியும் பிறப்பதில்லை. 23***

கண்ணாடியின் எதிரே தோன்றும் வடிவங்களின் பிம்பத்தை அப்படியே காட்டவல்லது கண்ணாடி. ஆனால் கண்ணாடி அதனால் நலம் கேடு ஒன்றும் அடைவதில்லை. பிரகிரு

தியின் விகாரங்களால் பிரம்மமும் நலம் கேடு ஒன்றும் அடைவதில்லை. பிரம்மத்தை அறிபவன் பிரம்மமாகிறான். பிராரப்த கர்மத்தால் உடலில் ஏற்படும் இன்பதுன்பங்களில் அவன் கட்டுப்படுவதில்லை. கானல்நீர் போன்றுள்ள பிரகிருதியின் தோற்றத்தைப் போற்றிப் பாராட்டுவதால் அவனுக்குப் பிரகிருதியில் பற்று உண்டாய்விடுவதில்லை. ஜகத் என்பது வெறும் தோற்றம் என்று அவன் அதைப் புறக்கணிப்பதால் அவனுக்கு நஷ்டம் வருவதுமில்லை. இவ்வுடலம் இருக்கும் வரை அதில் வாழ்க்கை பிராரப்தத்துக்கு ஏற்றவாறு விதவிதமாய் நடைபெறுகிறது. அதற்கிடையில் ஞானி ஜீவன் முக்தனாய் வாழ்கிறான். உடல் வீழ்ந்த பிறகு அவன் இன்னொரு பிறவி எடுப்பதில்லை. தீயில் வெந்த கயிறு கட்டுதற்கு உதவாது. அங்ஙனம் ஞானக்கினியில் வெந்த சஞ்சித ஆகாமிக கர்மம் இன்னொரு பிறவியை உண்டு பண்ணமாட்டா.

சூளையில் வேகாத மண்பாண்டம் உடைந்தால் அம்மண்ணை வேறு புதிய பாண்டம் உண்டாக்கக் குயவன் உபயோகிப்பான். ஆனால் சூளையில் வெந்த மண்பாண்டம் உடைந்தாலோ அதன் துண்டுகளை அப்பால் அவன் உபயோகிக்க முடியாது. அதுபோல ஒருவன் அக்ஞானத்துடன் மரணமடைந்தால் மறு ஜன்மம் அடைவான். ஆனால் உண்மை ஞானமாகிய அக்கினியால் வெந்த ஒருவன் பரிபூரணனாக இறப்பானானால் அவனுக்கு மறு ஜன்மம் கிடையாது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஞானத்தை அடைவதற்கான வழிகள் எவை? விடைவருகிறது :—

ध्यानेनात्मनि पश्यन्ति केचिदात्मानमात्मना ।
अन्ये सांख्येन योगेन कर्मयोगेन चापरे ॥ २४

த்யானேனாத்மனி பச்யந்தி கேசிதாத்மானமாத்மனா ।
அன்யே ஸாங்க்யேன யோகேன கர்மயோகேன சாபரே ॥ 24

केचित् கேசித் *சிலர்* ध्यानेन த்யானேன *தியானத்தால்* आत्मनि ஆத்மனி *உள்ளத்திலே* आत्मना ஆத்மனா *தெளிந்த அறிவால்* आत्मानं

ஆத்மானம் *ஆத்மாவை* पश्यन्ति பச்யந்தி *பார்க்கிறார்கள்* अन्ये அன்யே *வேறு சிலர்* सांख्येन योगेन ஸாங்க்யேன யோகேன *ஞானயோகத்தாலும்* अपरे च அபரே ச *இன்னும் சிலர்* कर्म योगेन கர்ம யோகேன *கர்மயோகத்தாலும்.*

***தியானத்தால் தெளிவடைந்த அறிவால் சிலர் ஆத்மாவை உள்ளத்தில் உணர்கின்றனர்; சிலர் ஞானயோகத்தாலும் இன்னும் சிலர் கர்மயோகத்தாலும் காண்கின்றனர்.*** ***24***

*ராஜயோகம், ஞானயோகம், கர்மயோகம் ஆகிய மூன்றும் இங்குச் சொல்லப்பட்டுள்ளன. பக்தியோகம் அடுத்த சுலோகத்தில் வருகிறது.*

अन्ये त्वेवमजानन्तः श्रुत्वान्येभ्य उपासते ।
तेऽपि चातितरन्त्येव मृत्युं श्रुतिपरायणाः ।। २५

அன்யே த்வேவமஜானந்த: ச்ருத்வான்யேப்ய உபாஸதே ।
தேऽபி சாதிதரந்த்யேவ ம்ருத்யும் ச்ருதிபராயணா: ॥ 25

अन्ये तु அன்யே து *இன்னும் சிலரோ* एवं ஏவம் *இவ்வாறு* अजानन्तः அஜானந்த: *அறியாதவர்களாயினும்* अन्येभ्यः அன்யேப்ய: *பிறரிடமிருந்து* श्रुत्वा ச்ருத்வா *கேட்டு* उपासते உபாஸதே *உபாஸிக்கின்றனர்* ते अपि च தே அபி ச *அவர்களும்* श्रुतिपरायणाः ச்ருதி பராயணா: *கேட்ட உபதேசத்தைக் கதியெனக் கருதி* मृत्युं ம்ருத்யும் *மரணத்தை* अतितरन्ति एव அதிதரந்தி ஏவ *நிச்சயமாகக் கடக்கின்றனர்.*

***இன்னும் சிலர் இங்ஙனம் உண்மையை அறியாதவர்களாயினும் பெரியோர் சொற்கேட்டு அதில் பெருநம்பிக்கை வைத்தொழுகி மரணத்தை நிச்சயமாகக் கடக்கின்றனர்.*** ***25***

*பக்தியோகம் மற்ற மூன்று யோகங்களைவிட மிக எளியது. சாஸ்திர ஞானமும் விவேகமும் இதற்கு ஏராளமாய் வேண்டியதில்லை. ஆயர் குலத்துதித்த பெண்களே கல்வியறிவின்றி, நூல் ஆராய்ச்சியின்றி, சுத்த பக்தியால் கண்ணனை அடைந்தார்கள் என்றால் விவேகமும் வைராக்*

*கியமும் உடைய மேலோர்க்கு அது இன்னும் எவ்வளவு எளிதாகாது ?*

*பகவத் பக்தியை ஒரு புலியோடு ஒப்பிடலாம். புலியானது மிருகங்களை விழுங்குவதுபோல், பக்தியானது காமாதிகளான பெரும் பகைவர்களை விழுங்குகிறது. பகவத் பக்தி ஒருதரம் நன்ருக உண்டாகி விட்டால், காமம் குரோதம் முதலிய கெட்ட பாசங்கள் முற்றிலும் நசித்துவிடும். பிருந்தாவனத்துக் கோப ஸ்திரீகள் கிருஷ்ணனிடம் வைத்த தீவிரபக்தியால் இப்படிப்பட்ட நிலைமையை அடைந்திருந்தனர்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*கர்மயோகம், ராஜயோகம், பக்தியோகம், ஞான யோகம் ஆகிய நான்கும் ஸ்ரீமத் பகவத்கீதையில் சம அந்தஸ்துப் பெறுகின்றன. ஒன்றைக் குறைபடுத்துதலும் மற்ருென்றை மிகைப்படுத்துதலும் கீதையில் இல்லை. இந்த நான்கு யோகங்களில் ஏதேனும் ஒன்றே போதுமானது. ஏதேனும் ஒரு யோகத்தின் மூலமாக மனிதன் பரிபூரணத் தன்மையடையலாம். நான்கு யோகங்களும் சமரசம் அடைதலே சாலச்சிறந்தது. கர்மயோகம் ஆற்றலைத் தருகிறது. ராஜயோகம் மனேவலிவை வளர்க்கிறது. பக்தி அன்பைப் பெருக்குகிறது. ஞானம் அறிவை வளர்க்கிறது. நிறை மனிதனிடத்து இவையாவும் பூரண வளர்ச்சியடைந்திருக்க வேண்டும்.*

*இனி, நான்கு யோகங்களையும் முறையாகக் கையாளுவதால் வரும் நிறை ஞானம் விளக்கப்படுகிறது:—*

**यावत्सञ्जायते किञ्चित्सत्त्वं स्थावरजङ्गमम् ।**
**क्षेत्रक्षेत्रज्ञसंयोगात्तद्विद्धि भरतर्षभ ॥ २६**

யாவத்ஸஞ்ஜாயதே கிஞ்சித்ஸத்த்வம் ஸ்தாவரஜங்கமம் ।
க்ஷேத்ரக்ஷேத்ரக்ஞ ஸம்யோகாத் தத்வித்தி பரதர்ஷப ॥ 26

**भरत ऋषभ** பரத ருஷப *பரத சிரேஷ்டா* **स्थावर जङ्गमं** ஸ்தாவர ஜங்கமம் *ஸ்தாவர ஜங்கமமாகிய* **यावत् किञ्चित्** யாவத் கிஞ்சித் *யாதொரு* **सत्त्वं** ஸத்த்வம் *வஸ்து* **सञ्जायते** ஸஞ்ஜாயதே *தோன்றியுள்ளதோ* **तत्** தத்

*அது* क्षेत्र क्षेत्रज्ञ संयोगात् க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ ஸம்யோகாத் *க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞனுடைய சேர்க்கையால் என்று* विद्धि வித்தி *அறி.*

**அர்ஜுனா, நிலைத்திணை, இயங்குதிணையாகிய எவ்வுயிர் தோன்றியுள்ளதோ அது க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞனுடைய சேர்க்கையால் என்று அறிக. 26**

சினிமாத்திரை, அதன்மீது படுகிற நிழல் வெளிச்சம் ஆகியவைகளின் சேர்க்கை உலகக் காட்சிக்குக் காரணங்களாகின்றன. அசையாத திரையின் துணையால் அசையும் மனிதனது தோற்றம் அங்கே தென்படுகிறது. நிறத்தின் அமைப்பு விசேஷத்தால் அவ்விடத்தில் தீப்பற்றி எரிவது போன்று காட்சி உண்டாகிறது. நிழல், நிறம் இவைகளின் தன்மை திரையின்மீது ஏற்றப்படுகிறது. பின்பு திரையின் தன்மையானது நிழல் வெளிச்சம் ஆகியவைகளின்மீது ஏற்றப்படுகிறது. படத் தோற்றத்துக்கு இதுவே காரணம். சித் ஆகாசம் என்கிற திரையின்மீது முக்குண மயமான க்ஷேத்திரம் ஆரோபிக்கப்படுகிறது – அதாவது ஏற்றுவிக்கப்படுகிறது. இங்ஙனம் க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞனுடைய சேர்க்கையால் ஜடமாகிய க்ஷேத்திரம் அறிவுடையதுபோல் தென்படுகிறது. உண்மையில் அறியும் தன்மை ஆத்மாவினுடையது. பிறவாத, இறவாத ஆத்மாவானது பிறந்து இறப்பது போன்று தென்படுகிறது. பிறப்பும் இறப்பும்— அதாவது தோன்றுவதும் மறைவதும் க்ஷேத்திரத்தினுடைய இயல்பு. இது ஆத்மாவினிடத்து நிகழ்கிறது என்ற மித்தியா ஞானம் அக்ஞானிக்கு உண்டாகிறது. தீப்பற்றி எரிகிற சினிமாக் காட்சி தென்பட்டாலும் திரையில் தீப்பற்றிவிடாது என்ற ஞானம் அதன் தத்துவத்தை அறிகிறவர்களுக்குண்டு. உலகம் உண்டாவது, நிலை பெறுவது, மறைவது என்பதெல்லாம் இத்தகையது என்று ஞானி உள்ளபடி அறிகிறான். க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞனைப் பாகுபடுத்தி உள்ளபடி அறிவதே ஞானம்.

*நீ வியக்தி ஸ்வரூபனாக இருக்கும் வரையில், அதாவது நீ ஜீவனாய் இருக்கும் வரையில், வெண்ணெய், மோர் என்ற இரண்டையும் அங்கீ*

கரிக்கவேண்டும்; அதாவது ஈசுவரன் ஜகத் என்ற இரண்டையும் அங்கீகரிக்கவேண்டும். உவமையை விளக்கிச் சொல்வோமானால் முதன் முதலில் இருந்த பாலானது ஸமாதி மூலமாய் அறியப்படும் பிரம்மமாகும்; வெண்ணெய் ஈசுவரனாகும்; மோர் இருபத்திநான்கு தத்துவங்களாலான உலகமாகும். — ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஞானம் அடைந்தவன் பரமாத்மாவை எப்படிக் காண்கிறான்? விடை வருகிறது:—

**समं सर्वेषु भूतेषु तिष्ठन्तं परमेश्वरम् ।**
**विनश्यत्स्वविनश्यन्तं यः पश्यति स पश्यति ॥ २७**

ஸமம் ஸர்வேஷு பூதேஷு திஷ்டந்தம் பரமேச்வரம் ।
விநச்யத்ஸ்வவிநச்யந்தம் ய: பச்யதி ஸ பச்யதி ॥ 27

सर्वेषु भूतेषु ஸர்வேஷு பூதேஷு *எல்லா பூதங்களிலும்* समं ஸமம் *ஸமமாக* तिष्ठन्तं திஷ்டந்தம் *இருக்கிறவனை* विनश्यत्सु வினச்யத்ஸு *அழிவனவற்றுள்* अविनश्यन्तं அவினச்யந்தம் *அழியாததை* परमेश्वरं பரமேச்வரம் *பரமேச்வரனை* य: ய: *யார்* पश्यति பச்யதி *பார்க்கிறானோ* स: ஸ: *அவன்* पश्यति பச்யதி *பார்க்கிறான்.*

***உயிர்களனைத்திலும் ஸமமாயிருக்கிறவனும், அழிவனவற்றுள் அழியாதவனுமாகிய பரமேசுவரனைப் பார்ப்பவனே பார்க்கிறான். 27***

*படங்கள் அனைத்துக்கும் சினிமாத் திரை சமமாயிருக்கிறது. படத்தின் அமைப்பில் இன்ன இடத்தில் அது இருக்கிறது இன்ன இடத்தில் இல்லை என்பது கிடையாது. இனி, படங்களெல்லாம் ஓயாது தோன்றி மறைகின்றன. திரையோ மாறுதல் அடையாது நிலைத்திருக்கிறது. சித் ஆகாசம் என்னும் திரையின்மீது ஜகத் என்னும் படம் உண்டாகி அழிந்துகொண்டிருக்கிறது. சினிமா என்னும் படம் உயிரற்ற ஓவியம். ஜகத் என்னும் படமோ உயிர் ஓவியம். ஏனென்றால் அதற்கு ஆதாரமாயுள்ள சித் ஆகாசம் அல்லது பரமாத்மாவிடமிருந்து அது சைதன்யத்தை அதாவது உணரும் தன்மையைப் பெறுகிறது. ஜகத்து அல்லது க்ஷேத்திரத்துக்கு உயிர் வழங்குவ*

தால் அது பரமேசுவரன் எனப்படுகிறது. திரையின்றிப் படமில்லை. பரமேசுவரனின்றி உலகம் ஒன்றுமில்லை. அப் பரமேசுவரனையும் அவன் மயமாக உலகத்தையும் காண்ப வனே உண்மையைக் காண்பவன் ஆகிருன். மற்றவர்கள் படத்தை மெய்யென நினைக்கும் குழந்தைகள் போன்றவர் களாய்விடுகிருர்கள்.

சூரியன் உலக முழுதிலும் சமனுகப் பிரகாசித்து வெளிச்சம் கொடுக்கிறது. ஆனல் ஒரு சிறு மேகம் அதை நம் கண்ணுக்குத் தெரி யாது மறைத்து விடுகிறது. அங்ஙனம் மாயையாகிய திரை எங்கும் நிறைபொருளை - கடவுளை - நம் கண்ணுக்குத் தெரியாது மறைக்கிறது. மாயையை நீக்கிப் பார்ப்பவருக்கு எல்லாம் சச்சிதானந்த சொரூபமாகத் தோன்றும்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஈசுவர காட்சி காண்பவனது வாழ்க்கையில் ஏதே னும் மாறுதல் ஏற்படுகிறதா ? விடை வருகிறது :—

**समं पश्यन्हि सर्वत्र समवस्थितमीश्वरम् ।**
**न हिनस्त्यात्मनात्मानं ततो याति परां गतिम् ॥ २८**

ஸமம் பச்யன்ஹி ஸர்வத்ர ஸமவஸ்திதமீச்வரம் ।
ந ஹிநஸ்த்யாத்மனுத்மானம் ததோ யாதி பராம் கதிம் ॥ 28

हि ஹி *உண்மையில்* सर्वत्र ஸர்வத்ர *எங்கும்* समं ஸமம் *ஸம மாக* समवस्थितं ஸமவஸ்திதம் *நிலைத்திருப்பவனுகிய* ईश्वरं ஈச்வரம் *ஈசுவரனை* पश्यन् பச்யன் *பார்த்து* आत्मना ஆத்மனு *தன்னுல்* आत्मानं ஆத் மானம் *தன்னை* न हिनस्ति ந ஹினஸ்தி *அழிக்கின்றுனில்லை* ततः ததः *அதனுல்* परां பராம் गतिं கதிம் *பரகதியை* याति யாதி *அடைகிறுன்.*

***எங்கும் ஒப்ப நிலைத்திருக்கும் ஈசனைக் காண் போன் தன்னைத்தானே அழித்துக்கொள்கிருனில்லை. அதனுல் அவன் பரகதி யடைகிருன். 28***

மனிதன் செய்கிற எல்லாக்கேடுகளுக்கும் காரணமா யிருப்பது அக்ஞானம். கேடுகளிலெல்லாம் பெரிய கேடு தன்னை க்ஷேத்திரம் அல்லது பிரகிருதியாக நினைத்துக் கொள்வது. சரீரத்தைத் தான் என்று நினைப்பவன் பல

பிறவிகளை எடுக்கிறான். ஒவ்வொரு தடவையும் தன் உடல் கூற்றை அழித்துக்கொண்டு புதிய பிறவியெடுக்கிறான். அழியாத ஆத்மா அக்ஞானத்தால்பலதடவை அழிக்கப்பட்டது போன்று ஆகிறது. மற்ற உயிர்களை மனிதன் தனக்குவேறான வைகளாக நினைப்பதால் அவைகளுக்குத் தீங்கு செய்கிறான். இது மித்தியா ஞானம் அல்லது மயக்கத்தின் பயனாகும். பிரம்மஞானி பிரம்மத்துக்கு அன்னியமாக எதையும் காண்பதில்லை. அவனுக்கு உலகமெல்லாம் ஒரே பிரம்ம சொரூபம் ஆய்விடுகிறது. அதுவே அவன் அடைகிற பரகதியாம்.

குருவியின் கூண்டு அழிந்து போனால், அக்குருவி ஆகாயத்தில் பறந்துபோய் விடுகிறது. அதுபோல, சரீர உணர்ச்சியும் உலக உணர்ச்சியும் மனத்தைவிட்டு நீங்கினால் ஜீவாத்மாவானது பரமாத்மாவாகிய ஆகாயத்தில் பறந்து சென்று சமாதி நிலையில் ஐக்கியமாகிறது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

பூவுலகில் நடைபெறுகிற கிருத்தியங்களுக்கும் பிரம்ம ஞானிக்கும் ஒருவிதமான தொடர்வும் இல்லையா? இக்கேள்விக்கு விடை வருகிறது :—

**प्रकृत्यैव च कर्माणि क्रियमाणानि सर्वशः ।**
**यः पश्यति तथात्मानमकर्तारं स पश्यति ॥ २९**

ப்ரக்ருத்யைவ ச கர்மாணி க்ரியமாணானி ஸர்வச: ।
ய: பச்யதி ததாத்மானமகர்த்தாரம் ஸ பச்யதி ॥ 29

प्रकृत्या एव ப்ரக்ருத்யா ஏவ *பிரகிருதியினாலேயே* सर्वशः कर्माणि ஸர்வச: கர்மாணி *எல்லாக் கர்மங்களும்* क्रियमाणानि க்ரியமாணானி *செய்யப்படுகின்றன* तथा ததா *மேலும்* आत्मानं अकर्तारं ஆத்மானம் அகர்த்தாரம் *ஆத்மா செயலற்றது என்றும்* यः च ய: ச *யார் இன்னும்* पश्यति பச்யதி *பார்க்கிறானோ* सः ஸ: *அவன்* पश्यति பச்யதி *பார்க்கிறான்.*

***கர்மங்களெல்லாம் பிரகிருதியினாலேயே செய்யப்படுகின்றனவென்றும், ஆத்மா செயலற்றது என்றும் யார் பார்க்கிறானோ அவனேபார்க்கிறான். 29***

*சூரியன் இருக்குமிடத்தில் வெளிச்சம் உண்டு. அக்கினி இருக்குமிடத்தில் வெப்பம் உண்டு. அங்ஙனம் பிரம்மத்தின் சன்னிதானத்தில் சக்தி இயங்குகிறது. அதனால் பிரம்மம் ஒரு விகாரமும் அடைவதில்லை. சக்தி அல்லது பிரகிருதியின் கிருத்தியங்கள் வேண்டியவாறு நடைபெறுகின்றன. நிறை ஞானியின் பிரகிருதியாகிய உடல் உள்ளம் முதலியன வேண்டியவாறு கர்மம் செய்யலாம். அதனால் ஞானியின் சம்பூரண நிலை சிறிதும் கலைந்துவிடுவதில்லை. இவ்வுண்மையைக் காண்பவனே ஞானியாகிறான்.*

*பரம்பொருளை சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களைச் செய்யாத நிஷ்கிரியர் என்ற பாவனையில் பிரம்மம் அல்லது புருஷன் என்று சொல்லுகிறேன். ஆனால் அத்தொழில்களைச் செய்தருளுகின்றார் என்ற பாவனையில் சக்தி, மாயை, பிரகிருதி என்ற பெயர்களுள் ஒன்றால் அழைக்கிறேன்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*க்ஷேத்திரம் க்ஷேத்திரக்ஞனுக்கிடையில் உள்ள தொடர்வு அடுத்த சுலோகத்தில் இன்னும் நன்கு விளக்கப்படுகிறது :—*

**यदा भूतपृथग्भावमेकस्थमनुपश्यति ।**
**तत एव च विस्तारं ब्रह्म संपद्यते तदा ॥ ३०**

யதா பூதப்ருதக்பாவமேகஸ்தமனுபச்யதி ।
தத ஏவ ச விஸ்தாரம் ப்ரஹ்ம ஸம்பத்யதே ததா ॥ 30

यदा யதா *எப்பொழுது* भूत पृथक् भावं பூத ப்ருதக் பாவம் *பிராணிகளின் தனித்தனி வாழ்க்கை* एकस्थं ஏகஸ்தம் *ஓர் ஆத்மாவில் இருப்பதையும்* तत एव தத ஏவ *அந்த ஆத்மாவிலிருந்தே* विस्तारं च விஸ்தாரம் ச *விரிவாகத் தோன்றுவதையும்* अनुपश्यति அனுபச்யதி *காண்கின்றானோ* तदा ததா *அப்பொழுது* ब्रह्म ப்ரஹ்ம *பிரம்மமாக* सम्पद्यते ஸம்பத்யதே *ஆகின்றான்.*

***தனித் தனியாக வாழும் பிராணிகள் ஒரே பொருளிலிருப்பதையும், அந்த ஒரு பொருளிலிருந்தே அவைகள் விரிவடைவதையும் காணும் பொழுது அவன் பிரம்மமாகிறான். 30***

*அலை, திவலை, நுரை முதலிய தனித்தனி வடிவங்களெல்லாம் கடலுக்குப் புறம்பாயில்லை. எல்லாம் கடல் என்ற ஒரு பொருளிலே நிலைத்திருக்கின்றன. மேலும் அவைகளெல்லாம் கடலிலிருந்தே உண்டானவைகள். கடலே தனது சக்தியால் அத்தனைவித வடிவெடுத்திருக்கிறது. அது போன்று மாயாசக்தியின் வல்லமையால் பல்லுயிர்களாகத் தோன்றியிருப்பவைகளெல்லாம் பரபிரம்மத்திடத்தில் நிலை பெற்றிருக்கின்றன. அந்த மாயா சக்தியே பிரம்மத்துக்கு அன்னியமானதல்ல. யார் ஒருவன் சுவானுபூதியில் இதை அறிகின்றானோ அத்தகைய பிரம்ம வித்வான் பிரம்மமாகிறான்.*

*இயங்காப் பரபிரம்மமும் இயங்கும் சக்தியும் உண்மையில் ஒன்றேயாம். அகண்ட சச்சிதானந்த ஸ்வரூபி எவனோ அவனே ஸர்வ சக்தி, ஸர்வஞானம், ஸர்வானந்தம் இவைகளையுடைய ஜகன்மாதாவாகவுமாகிறான். நெருப்பும் அதன் வெப்பமும் ஒன்றானவை. அக்கினியின்றி உஷ்ணத்தையும் உஷ்ணமின்றி அக்கினியையும் மனத்தினால் சிந்திக்கமுடியாது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*சக்தியும் பிரம்மமும் ஒன்று. சக்தி கர்மம் செய்கிறது. அக்கர்மம் பிரம்மத்தைச் சார்கிறதா? இதற்கு விடை வருகிறது :—*

**अनादित्वान्निर्गुणत्वात्परमात्मायमव्ययः ।**
**शरीरस्थोऽपि कौन्तेय न करोति न लिप्यते ॥ ३१**

அனாதித்வாந்நிர்க்குணத்வாத்பரமாத்மாயமவ்யய: ।
சரீரஸ்தோऽபி கௌந்தேய ந கரோதி ந லிப்யதே ॥ 31

कौन्तेय கௌந்தேய *குந்திபுத்திரா* अनादित्वात् அனாதித்வாத் *ஆதியில்லாததாலும்* निर्गुणत्वात् நிர்குணத்வாத் *குணமில்லாததாலும்* अयं அயம் *இந்த* अव्ययः அவ்யய: *அழிவில்லாத* परमात्मा பரமாத்மா *பரமாத்மாவானது* शरीरस्थः अपि சரீரஸ்த: அபி *சரீரத்திலிருப்பினும்* न करोति ந கரோதி *கர்மம் செய்வதில்லை* न लिप्यते ந லிப்யதே *பற்றுவதில்லை.*

**குந்தி புத்திரா, ஆதியில்லாததால், குணமில்லாததால் கேடில்லாத இப்பரமாத்மா சரீரத்திலிருப்பினும், அது செயலற்றது, பற்றற்றது. 31**

*மாயா காரியங்கள் சிருஷ்டிக்கப்பட்டவைகள் ஆதலால் அவைகளுக்குத் துவக்கமுண்டு. பரபிரம்மம் சிருஷ்டிக்கப்பட்டதல்ல; எனவே அது ஆதியில்லாதது. மாயா காரியங்கள் குண சம்பந்தப்பட்டவைகள். எதற்குக் குணம் மாறுகிறதோ அது கேடடைகிறது. பரமாத்மா குணமில்லாதது; ஆதலால் அதனிடத்து மாறுதல் ஒன்றுமில்லை. அது கேடு அடைவதில்லை. நிறை பொருள் அசையாதது; ஆகையால் அதனிடத்துக் கர்மம் கிடையாது. அசையாத ஒன்று, கர்மம் செய்யாத ஒன்று எதையும் போய்ப் பற்றுவ*

*பிரம்ம ஞானியினுடைய சரீரத்துக்கு ஏற்படும் அழிவு அவனுக்குரியதல்ல. சரீரம் செய்கிற வேலை அவனுடையதல்ல. கடலின் மேற் பரப்பு ஆடுகிறது, அலையாக மோதுகிறது, பற்றுகிறது. அதன் உட்புறம் சலனமற்றுத் தன்மயமாயிருக்கிறது. நிறை ஞானியினுடைய தன்மையும் அத்தகையது.*

*பிரம்மம் எப்படிப்பட்டது? பிரம்மத்துக்குக் குணங்கள் இல்லை; சலனமில்லை; அது போக்கு வரவற்றது; மகாமேரு பர்வதத்தைப்போல்*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*எதுபோன்று பரமாத்மா செயலற்றுப் பற்றற்று ? அது மேலும் விளக்கப்படுகிறது :—*

**यथा सर्वगतं सौक्ष्म्यादाकाशं नोपलिप्यते ।**
**सर्वत्रावस्थितो देहे तथात्मा नोपलिप्यते ॥ ३२**

யதா ஸர்வகதம் ஸௌக்ஷ்ம்யாதாகாசம் நோபலிப்யதே ।
ஸர்வத்ராவஸ்திதோ தேஹே ததாத்மா நோபலிப்யதே ॥ 32

यथा யதா *எப்படி* सर्वगतं ஸர்வகதம் *எங்கும் வியாபித்துள்ள* आकाशं ஆகாசம் *ஆகாசமானது* सौक्ष्म्यात् ஸௌக்ஷ்ம்யாத் *சூக்ஷுமமாயிருப்*

*பதால்* न उपलिप्यते ந உபலிப்யதே *களங்கமடைவதில்லை* तथा ததா *அப்படி* सर्वत्र ஸர்வத்ர *எங்கும்* देहे अवस्थित: தேஹே அவஸ்தித: *தேகத்தில் நிறைந்திருக்கிற* आत्मा ஆத்மா *ஆத்மாவானது* न उपलिप्यते ந உபலிப்யதே *களங்கமடைவதில்லை.*

***எங்கும் நிறைந்துள்ள ஆகாசமானது நுண்ணியதாயிருப்பதால் எப்படிக் களங்கமடைவதில்லையோ அப்படியே தேகமெங்கும் நிறைந்துள்ள ஆத்மா களங்கமடைவதில்லை.*** **32**

*ஜலமானது உறைந்த பனிக்கட்டியாக, இளகிய நீராக, நுண்ணிய ஆவியாக—மூன்று நிலைகளில் இருக்கிறது. நுண்ணிய நிலையில் அதை அழுக்குப்படுத்த முடியாது. பஞ்ச பூதங்களுள் ஆகாசம் மிக நுண்ணியது. ஆகையால் அதை மற்றவைகள் அழுக்காக்குவதில்லை. ஆத்மாவைவிட நுண்ணியது ஒன்றுமில்லை. ஆதலால் அது எதனுலும் தோய்வுறுதிருக்கிறது. ஆகாசம் நீக்கமற எங்கும் நிறைந்திருக்கிறது. பூமி முதலியவைகளில் உள்ள வடிவங்கள் ஆகாசத்தைப் பிளவு படுத்துவதில்லை. எண்ணிறந்த உடல்களில் பிளவுபடாது நிறைந்துள்ள சிதாகாசம் அல்லது பரமாத்மா எதிலும் பிளவுபடாது, தோய்வுறுது, களங்கமடையாது இருக்கிறது.*

*ஞானம் அக்ஞானம், நன்மை தீமை, தர்மம் அதர்மம் இப்படிப்பட்ட துவந்தங்களுக்கு அப்பாலும் மேற்பட்டும் பிரம்மம் இருக்கிறது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*இன்னும் அது எத்தகையது ?*

**यथा प्रकाशयत्येकः कृत्स्नं लोकमिमं रविः ।**
**क्षेत्रं क्षेत्री तथा कृत्स्नं प्रकाशयति भारत ॥ ३३**

யதா ப்ரகாசயத்யேக: க்ருத்ஸ்னம் லோகமிமம் ரவி: ।
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்னம் ப்ரகாசயதி பாரத ॥ 33

भारत பாரத *அர்ஜுனா* यथा யதா *எப்படி* एकः रविः ஏக: ரவி: *ஒரு சூரியன்* इमं कृत्स्नं लोकं இமம் க்ருத்ஸ்னம் லோகம் *இந்த அகில*

*லோகத்தையும்* प्रकाशयति ப்ரகாசயதி *பிரகாசிப்பிக்கின்றதோ* तथा ததா *அப்படி* क्षेत्री க்ஷேத்ரீ *க்ஷேத்திரத்தில் வீற்றிருக்கிற ஆத்மா* कृत्स्नं क्षेत्रं க்ருத்ஸ்னம் க்ஷேத்ரம் *க்ஷேத்திரம் முழுவதையும்* प्रकाशयति ப்ரகாசயதி *பிரகாசிப்பிக்கிறது.*

**ஒரு சூரியன் எப்படி உலகனைத்தையும் ஒளியுறச் செய்கின்றதோ, அப்படி அர்ஜுனா, பிரபஞ்சமனைத்தையும் பரமாத்மா பிரகாசிப்பிக்கிறான். 33**

பூமி முழுதுக்கும் ஒரே சூரியன் வெளிச்சம் கொடுக்கிறான். ஆனால் பூமியிலுள்ள நன்மை கேடுகளால் சூரியன் பாதிக்கப்படுவதில்லை. மேலும் உலக முழுதுக்கும் ஒரே சூரியன் வெளிச்சம் கொடுப்பதுபோன்று பரமாத்மா அகிலாண்டத்துக்கும், சரம் அசரம் அனைத்துக்கும் சைதன்யத்தை அல்லது அறிவை வழங்குகிறார். அந்தந்த ஜீவனது அறிவில் ஏற்படும் நலம் கேடு முதலியன பரமாத்மாவைப் பந்தப்படுத்துவதில்லை.

பிரம்மம் ஒரு விளக்கின் ஒளிப் பிழம்பைப் போன்றது. விளக்கின் வெளிச்சத்தில் நீ பாகவதத்தைப் படித்தாலும் படிக்கலாம்; அவ் வெளிச்சத்தின் உதவியைக் கொண்டே பிறரைக் கெடுக்கவேண்டி ஒரு பொய்ப் பத்திரத்தை எழுதினாலும் எழுதலாம். எல்லார்க்கும் அறிவு என்னும் வெளிச்சத்தைத் தருவது பிரம்மம். ஆனால் அது நன்மை தீமைகளோடு சம்பந்தப்படுகிறதில்லை.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

முடிவான கருத்து யாது எனின் :—

क्षेत्रक्षेत्रज्ञयोरेवमन्तरं ज्ञानचक्षुषा ।
भूतप्रकृतिमोक्षं च ये विदुर्यान्ति ते परम् ॥ ३४

க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞயோரேவமந்தரம் ஞானசக்ஷுஷா ।
பூதப்ரக்ருதிமோக்ஷம் ச யே விதுர்யாந்தி தே பரம் ॥ 34

एवं ஏவம் *இப்பிரகாரம்* क्षेत्र क्षेत्रज्ञयोः க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞயோ: *க்ஷேத்திரம் க்ஷேத்திரக்ஞனுக்கிடையில்* अन्तरं அந்தரம் *வேற்றுமையையும்* भूत प्रकृति मोक्षं च பூத ப்ரக்ருதி மோக்ஷம் ச *உயிர்கள் பிரகிருதியினின்று விடுதலையடைதலையும்* ज्ञान चक्षुषा ஞான சக்ஷுஷா *ஞானக்*

*கண்ணால்* ये யே *யார்* विदुः விது: *அறிகிறார்களோ* ते தே *அவர்கள்* परं பரம் *பரத்தை* यान्ति யாந்தி *அடைகிறார்கள்.*

***இவ்வாறு க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞனுக்கிடையில் உள்ள வேற்றுமையையும், உயிர்கள் பிரகிருதியினின்று விடுதலையடைதலையும் ஞானக் கண்ணால் காண்போர் பிரம்மத்தை அடைகின்றனர். 34***

*நோயையும் நோயாளியையும் நன்கு அறிகின்றவளவு மருத்துவன் நோயை நீக்கவல்லவன் ஆகிறான். இரண்டில் ஒன்றைத்தெரியாது போனாலும் சிகிச்சை சிலாக்கியப்படாது. அங்ஙனம் புருஷன் பிரகிருதி ஆகிய இரண்டையும் உள்ளபடி அறிதல் வேண்டும். எது புருஷன் எது பிரகிருதி என்று பாகுபடுத்துதலும் அவசியமானது. இதற்கெல்லாம் மேலாக ஞான வாழ்க்கையின் வாயிலாக ஞானக் கண்ணைப் பெறுதல் மிக முக்கியமானது. வெறும் சாஸ்திர ஞானம் போதாது. ஞானக்கண் திறக்கப்பெறுமிடத்து ஜீவர்கள் பிரகிருதியில் கட்டுண்டு கிடப்பதெல்லாம் அக்ஞானத்தால் என்பது விளங்கும். அதற்கெல்லாம் மேலாகப் பிரகிருதியானது புருஷனைச் சார்ந்திருக்கிறதென்றும், புருஷன் பிரகிருதியைச் சார்ந்திருப்பதில்லையென்றும், பிரகிருதி புருஷனுக்கு அன்னியமானதல்லவென்றும் சுவானுபூதியில் தோன்றும். அத்தகைய அபரோக்ஷ அனுபூதியைப் பெறுபவன் பிரம்ம ஞானியாகிறான். அவனே முக்தன் ஆகிறான்.*

*உலகம் மாயை யென்று சொல்லுவது எளிது. ஆனால் அதன் பொருள் இன்னதென்று உனக்குத் தெரியுமா? அது மிகுதி யொன்றையும் வைக்காத கற்பூரத்தைக் கொளுத்துவது போலாம். சாம்பலை மிகுதியாக்கும் விறகுக் கட்டைகளைக் கொளுத்துவது போன்றதன்று. விசாரணை முடியும் நிலையில், உயர்ந்த சமாதிநிலை கிட்டும். அப்போது நான், நீ, உலகம் என்ற உணர்ச்சி கொஞ்சமேனும் இராது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे क्षेत्रक्षेत्रज्ञविभागयोगो नाम त्रयोदशोऽध्यायः ॥

# चतुर्दशोऽध्यायः

## பதினான்காம் அத்தியாயம்

## गुणत्रयविभागयोगः

### குணத்ரய விபாக யோகம்

**श्री भगवानुवाच**

**परं भूयः प्रवक्ष्यामि ज्ञानानां ज्ञानमुत्तमम् ।**
**यज्ज्ञात्वा मुनयः सर्वे परां सिद्धिमितो गताः ॥ १**

ஸ்ரீ பகவானுவாச

பரம் பூய: ப்ரவக்ஷ்யாமி ஞானானாம் ஞானமுத்தமம் ।
யஜ்ஞாத்வா முனய: ஸர்வே பராம் ஸித்திமிதோ கதா: ॥ 1

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

मुनयः सर्वे முனய: ஸர்வே *முனிவர்கள் எல்லாரும்* यत् ज्ञात्वा யத் ஞாத்வா *எதை அறிந்து* इतः இத: *இவ்வுடல் வாழ்க்கைக்குப்பின்* परां सिद्धिं பராம் ஸித்திம் *மேலான சித்தியை* गताः கதா: *அடைந்தார்களோ* ज्ञानानां ஞானானாம் *ஞானங்களுக்குள்* उत्तमं உத்தமம் *உத்தமமானதும்* परं பரம் *பரம்பொருளைப்பற்றியதுமான* ज्ञानं ஞானம் *ஞானத்தை* भूयः பூய: *திரும்பவும்* प्रवक्ष्यामि ப்ரவக்ஷ்யாமி *பகர்வேன்.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***முனிவர்கள் எல்லாரும் எதை அறிந்து இவ்வுலக வாழ்க்கைக்குப்பின் மேலாம் சித்தியை அடைந்தார்களோ, ஞானங்களுள் சிறந்ததும், பரம்பொருளைப் பற்றியதுமான அந்த ஞானத்தை மீண்டு முரைப்பேன்.*** 1

முன்னமே பகரப்பட்ட இந்த ஞானத்தை இன்னொரு போக்கில் பகவான் பகர்கிறார். பிரம்ம ஞானம்

*அடைந்தவர்கள் மேலும் அடையவேண்டியது ஒன்றுமில்லை. மனது பரிபக்குவம் அடைந்தவர்களுக்கு ஞானசாதனம் மிக எளியது எனினும், பக்குவம் அடையாதவர்களுக்கு அது மிகக் கடினமானது. ஆதலால் வெவ்வேறு பாங்குகளிலே வைத்து அது விளக்கப்படுகிறது. ஞான பராயணர்களாயிருந்தவர்கள் முனிவர் என்ற பெயர் பெற்றனர். ஞான முதிர்ச்சிக்கு ஏற்ப அவர்களிடத்து சித்தி அல்லது பரிபூரண நிலை அமைவதாயிற்று. பிரம்ம ஞானம் அடைந்தவர்கள் நிறைநிலை எய்துகின்றனர் எனினும் அவர்களது உடல் வாழ்க்கை குறைபாடுடையது போன்று தென்படுகிறது. உடலின் குற்றத்தைப் புருஷனது குற்றம் என்றெண்ணி மயங்கிவிடலாகாது. அவ்வுடலத்தைத் துடைத்தான பிறகு முனிவர்கள் பரிபூரணமாகிய பரவெளியில் கலக்கின்றனர். அதற்கேற்ற ஞானம் வேறு ஒரு முறையில் இங்கு விளக்கப் படுகிறது.*

*ஈசுவரனை அறியும் வித்தை பரவித்தை எனப்படும். சாஸ்திரங்கள், தத்துவம், தர்க்கம், இலக்கணம் முதலியனவெல்லாம் மனத்தில் பெருங் குழப்பத்தையுண்டாக்கும். கிரந்தங்கள் எல்லாம் கிரந்தி (முடிச்சு) களைப் போன்றுள்ளன. பரவித்தையைக் கற்பிக்குமானால் தான் அவைகள் பயன்படுவனவாகும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*பிரம்ம வித்தையின் பயன் யாது?*

**इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागताः ।**
**सर्गेऽपि नोपजायन्ते प्रलये न व्यथन्ति च ॥ २**

இதம் ஞானமுபாச்ரித்ய மம ஸாதர்ம்யமாகதா: ।
ஸர்கேऽபி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யதந்தி ச ॥ 2

इदं ज्ञानं இதம் ஞானம் *இந்த ஞானத்தை* उपाश्रित्य உபாச்ரித்ய *அனுஷ்டித்து* मम साधर्म्यं மம ஸாதர்ம்யம் *என் சொரூபத்தை* आगताः ஆகதா: *அடைந்தவர்கள்* सर्गे अपि ஸர்கே அபி *சிருஷ்டிக்காலத்திலும்* न उपजायन्ते ந உபஜாயந்தே *பிறப்பதில்லை* प्रलये च ப்ரளயே ச *பிரளய காலத்திலும்* न व्यथन्ति ந வ்யதந்தி *துன்புறுவதில்லை.*

**இந்த ஞானத்தை அனுஷ்டித்து என் சொரூபத்தை அடைந்தவர்கள் சிருஷ்டியில் தோன்றுவதில்லை, பிரளயத்தில் துன்புறுவதில்லை. 2**

கடலைச்சார்ந்த உப்புப் பொம்மை கடலில் தன் வியக்தியை இழக்கிறது; அதே வேளையில் கடலின் சொரூபத்தைப் பெறுகிறது. ஞானியின் நிலை அத்தகையது. பிரம்ம சொரூபத்தில் அவன் ஒன்றுகிறான். அது பிரகிருதிமயமான தோற்றம் ஒடுக்கம் எல்லாம் கடந்திருப்பதால், அதை அடைகின்றவனுக்குப் பிறப்பு, இறப்பு, பிணி முதலியன கிடையா.

வேகவைத்த நெல்லைப் பூமியில் விதைத்தால் அது மறுபடியும் முளைக்காது. வேகவைக்காத நெல்தான் முளைவிடும். அதுபோல ஸித்தனை பிறகு ஒருவன் இறப்பானானால் அவன் மறு ஜன்மம் அடைவதில்லை. அஸித்தனே தான் ஸித்தனாகும் வரையில் திரும்பத் திரும்பப் பிறவி யெடுக்கவேண்டும். — ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

பிறவி எப்படி உண்டாகிறது? விடை வருகிறது :—

**मम योनिर्महद्ब्रह्म तस्मिन्गर्भं दधाम्यहम् ।**
**संभवः सर्वभूतानां ततो भवति भारत ॥ ३**

மம யோனிர் மஹத்ப்ரஹ்ம தஸ்மின் கர்பம் ததாம்யஹம் ।
ஸம்பவ: ஸர்வபூதானாம் ததோ பவதி பாரத ॥ 3

भारत பாரத *பரதகுலத்தில் உதித்தவனே* महत् ब्रह्म மஹத் ப்ரஹ்ம *பெரிய பிரகிருதி* मम योनिः மம யோனி: *எனது கர்ப்பாசயம்* तस्मिन् தஸ்மின் *அதில்* अहम् அஹம் *நான்* गर्भं கர்பம் *கர்ப்பத்தை* दधामि ததாமி *வைக்கிறேன்* ततः தத: *அதினின்று* सर्वभूतानां ஸர்வபூதானாம் *எல்லா உயிர்களின்* सम्भवः ஸம்பவ: *உற்பத்தி* भवति பவதி *உண்டாகிறது.*

**பாரதா, பெரிய பிரகிருதி எனது கர்ப்பாசயம். அதில் நான் கர்ப்பத்தை வைக்கிறேன். அதினின்று உயிர்களெல்லாம் உற்பத்தியாகின்றன. 3**

பிரகிருதிக்கு பிரம்மா என்பது மற்றொரு பெயர். சதுர்முக பிரம்மா என்பதும் அதுவே. முக்குணமாயுள்ளது

அது. சராசரம் அனைத்துக்கும் அது உபாதான காரணம். காரியமாகப் பரிணமித்துள்ள அனைத்துமாய் அவைகளுக்கு அப்பால் இன்னும் தோன்றா நிலையிலும் அது இருக்கிறது. ஆதலால் அது மஹத்பிரம்மா எனப்படுகிறது. எங்கும் வியாபிக்கும் தன்மை அதனிடத்துள்ளது.

பூமியில் விதையை நடுகிறோம். பூமி யோனியாயிருக்கிறது; விதை கர்ப்பமாகப் பரிணமிக்கிறது. சிசு உண்டாவதில் பெண்பால் பிரகிருதி தத்துவமாகவும் ஆண்பால் புருஷ தத்துவமாகவும் காரியப்படுகிறார்கள். அங்ஙனம் மூல பிரகிருதி என்ற யோனியில் ஆத்ம சைதன்யம் என்ற கர்ப்பம் வைக்கப்படுகிறபொழுது க்ஷேத்திர-க்ஷேத்திரக்ஞனுடைய சம்யோகம் ஏற்படுகிறது. பிரகிருதியில் பிரகாசிக்கும் புருஷன் ஹிரண்யகர்ப்பன் என்று பெயர் பெறுகிறான். அவனுடைய எண்ணிறந்த கிரணங்களே உயிர்கள் அனைத்துமாய் இருக்கின்றன. ஜீவர்களும் க்ஷேத்திரக்ஞன் என்று அழைக்கப்படுகிறார்கள். ஏனென்றால் அறியுந்தன்மை அவர்களுக்கும் உண்டு. அவித்தையால் ஏற்பட்ட உபாதிக்கும், காமத்துக்கும், கர்மத்துக்கும் ஏற்ப எண்ணிறந்த ஜீவாத்மாக்கள் உண்டாகின்றன. அவைகளின் பாங்குகளும் எண்ணிறந்தவைகளாம்.

அடுத்த சுலோகத்தில் இக்கருத்து இன்னும் நன்கு தெளிவுபடுத்தப்படுகிறது.

**सर्वयोनिषु कौन्तेय मूर्तयः संभवन्ति याः ।**
**तासां ब्रह्म महद्योनिरहं बीजप्रदः पिता ॥ ४**

ஸர்வயோனிஷு கௌந்தேய மூர்தய: ஸம்பவந்தி யா: ।
தாஸாம் ப்ரஹ்ம மஹத்யோனிரஹம் பீஜப்ரத: பிதா ॥ 4

कौन्तेय கௌந்தேய *குந்திபுத்ரா* सर्वयोनिषु ஸர்வயோனிஷு *எல்லா கர்ப்பாசயங்களிலும்* याः मूर्तयः யா: மூர்த்தய: *எந்த வடிவங்கள்* सम्भवन्ति ஸம்பவந்தி *பிறக்கின்றனவோ* तासां தாஸாம் *அவைகளுக்கு* महत् ब्रह्म மஹத் ப்ரஹ்ம *பெரிய பிரகிருதி* योनिः யோனி: *பிறப்பிடமா*

*கிறேன்* अहं அஹம் *நான்* बीजप्रदः பீஜப்ரத: *கர்ப்பாதானம் செய்யும்* पिता பிதா *தந்தை.*

***குந்திபுத்ரா, கர்பாசயங்கள் எல்லாவற்றிலும் பிறக்கின்ற வடிவங்களுக்குப் பெரிய பிரகிருதி தாயாகின்றாள்; கர்ப்பாதானம் செய்யும் தந்தை நான். 4***

*கர்ப்பாசயங்கள் அல்லது யோனிகள் கணக்கற்றவை. தேவர்களாக, நரர்களாக, விலங்குகளாக, பறவைகளாக, பூச்சிகளாக, புழுக்களாக, ஸ்தாவரங்களாக அவ்வவைகளுக்கேற்ற யோனிகளிடத்திருந்தே உயிர்களெல்லாம் உண்டாகின்றன. இவைகளுக்கெல்லாம் தாயாயிருப்பவள் மூலப்பிரகிருதி. அவள் பெரியநாயகி என்று அழைக்கப் படுகிறாள். தந்தையாயிருப்பவர் பரமாத்மா.*

*பிரகிருதி எங்ஙனம் உயிர்களை பந்தப்படுத்துகிறது? விடை வருகிறது :—*

**सत्त्वं रजस्तम इति गुणाः प्रकृतिसंभवाः ।**
**निबध्नन्ति महाबाहो देहे देहिनमव्ययम् ॥ ५**

ஸத்த்வம் ரஜஸ்தம இதி குணா: ப்ரக்ருதிஸம்பவா: ।
நிபத்னந்தி மஹாபாஹோ தேஹே தேஹினமவ்யயம் ॥ 5

महाबाहो மஹாபாஹோ *பாதுபலசாலீ* सत्त्वं ஸத்த்வம் *ஸத்வம்* रजः ரஜ: *ரஜஸ்* तमः தம: *தமஸ்* इति இதி *என்று* प्रकृति सम्भवाः ப்ரக்ருதி ஸம்பவா: *பிரகிருதியிலிருந்து உண்டான* गुणाः குணா: *குணங்கள்* देहे தேஹே *தேகத்தில்* अव्ययं देहिनं அவ்யயம் தேஹினம் *அழியாத தேகியை* निबध्नन्ति நிபத்னந்தி *பந்தப்படுத்துகின்றன.*

***பெருந்தோளாய், பிரகிருதியிலிருந்து உண்டான சத்வம், ரஜஸ், தாமசம் என்னும் குணங்கள் அழிவற்ற தேகியை தேகத்தில் பிணிக்கின்றன. 5***

*பிரகிருதி முக்குணமயமாயிருக்கிறது. உருவம் முதலிய பண்புகள் ஒரு பொருளைச் சார்ந்திருப்பதுபோன்று*

*குணம் என்ற பண்பு பிரகிருதி சொரூபமாகிய குணியைச் சார்ந்திருக்கிறது என்று எண்ணலாகாது. அக்கினியும் அதன் உஷ்ணமும் வேறானவைகளல்ல. அங்ஙனம் பிரகிருதியும் குணமும் ஒன்றேயாம். உலகத்தில் உள்ள நிறங்களை யெல்லாம் மூன்று அச்சில் தொகுத்துப் படங்கள் தீட்டிவிடலாம். அங்ஙனம் பிரகிருதி முழுதும் முக்குணங்களில் அடங்கிவிடுகிறது. முக்குணங்கள் என்பனவும் பிரகிருதி என்பதும் சொரூபத்தில் ஒன்றேயாம். முக்குணங்களை முப்பாழ் என்று சொல்லுவதும் உண்டு.*

*பிரகிருதி அல்லது க்ஷேத்திரம் க்ஷேத்திரக்ஞனைச் சார்ந்திருக்கிறது. குணசொரூபம் அல்லாத அவனை குணம் எப்படிப் பிணிக்கமுடியும்? பிணிக்கப்படாத ஆத்மா அக்ஞானத்தால் பிணிக்கப்பட்டதுபோன்று தென்படு நீர் அசைவதால் நீரிலுள்ள சூரிய பிம்பம் அசை சூரியனே அசைவதுபோன்று பிம்பத்தினின்று தென்படுகிறது. உண்மையில் சூரியன் அசைவதில்லை. அங்ஙனம் கட்டுப்படாத ஆத்மா கட்டுப்பட்டதுபோன்று தென்படுகிறது.*

*இனி, முக்குணங்களின் தன்மை விளக்கப்படுகிறது:-*

**तत्र सत्त्वं निर्मलत्वात्प्रकाशकमनामयम् ।**
**सुखसङ्गेन बध्नाति ज्ञानसङ्गेन चानघ ॥ ६**

தத்ர ஸத்வம் நிர்மலத்வாத்ப்ரகாசகமநாமயம் ।
ஸுகஸங்கேன பத்நாதி ஞானஸங்கேன சானக ॥ 6

अनघ அனக *பாபமற்றவனே* तत्र தத்ர *அவற்றுள்* सत्त्वं ஸத்வம் *சத்வகுணமானது* निर्मलत्वात् நிர்மலத்வாத் *கேடின்மையால்* प्रकाशकं ப்ரகாசகம் *ஒளி பொருந்தியது* अनामयं அநாமயம் *உபத்திரவம் உண்டுபண்ணாதது* सुख सङ्गेन ஸுக ஸங்கேன *சுகத்தில் பற்றுதலாலும்* ज्ञान सङ्गेन च ஞான ஸங்கேன ச *ஞானத்தில் பற்றுதலாலும்*. बध्नाति பத்நாதி *பந்தப்படுத்துகிறது.*

**பாபமற்றவனே, அவற்றுள் சத்துவம் அழுக்கின்மையால் ஒளி பொருந்தியது; இடர்ப்படுத்தாதது; சுகப்பற்றுதலாலும் ஞானப்பற்றுதலாலும் அது பிணைக்கிறது. 6**

கண்ணாடி ஒன்று தூயதாய் இருப்பதோடு சத்வ குணத்தை ஒப்பிடலாம். அழுக்குப்படியாததும் ஸ்படிகம் போன்று அமைந்ததுமான கண்ணாடியின் வாயிலாக வெளிச்சம் நன்கு வெளியாகும். சத்வகுணம் அங்ஙனம் ஆத்மபிரகாசத்தை விளக்கவல்லது. ஒப்பமான கண்ணாடியின்மூலம் அப்புறம் பார்த்தால் அது காட்சியை இடர்ப்படுத்துவதில்லை. பொருள்கள் உள்ளபடி அதன்வாயிலாக விளங்குகின்றன. அவைகளை உள்ளபடி கண்டறிவது ஞானம். புறப்பொருள்களைப் பார்த்தறியும்போது அவைகள் தரும் இன்பத்தில் நாட்டம் வருகிறது. சுகத்தை அனுபவிப்பதற்கு ஏற்றவாறு அதில் பற்றுதல் உண்டாகிறது. இன்னும் அதிக சுகத்தைப் புறப்பொருள்கள் எப்படித்தரும் என்ற ஆராய்ச்சி மேலும் ஞானப்பற்றை வளர்க்கிறது. புற உலகத்தைப்பற்றிய ஞானமும் அதனிடத்திருந்து பெறும் சுகமும் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டவைகளாயிருக்கின்றன. ஆதலால் சத்வகுணம் ஓங்கப்பெற்றுள்ள ஒருவன் மனதைப் பிரவிருத்தியிலே திருப்புவானாகில் அவனுக்கு சுகப்பற்றும் பிரகிருதி ஞானப்பற்றும் ஏராளமாயுண்டாகின்றன. மற்ற பந்தங்களையெல்லாம்விட ஸத்வகுணம் உண்டு பண்ணுகிற பந்தம் மிக வலிவுவாய்ந்தது. அந்த பந்தத்தை உடைத்தெறிவது மிகக் கஷ்டமானது. ஏனென்றால் ஆத்மானந்தத்துக்கு ஒப்பான சுகத்தை அது கொடுக்கிறது. நுண்ணறிவையும் அது வளர்க்கிறது. சுகத்துக்கும் அறிவுக்கும் அப்பால் செல்ல மனிதனுக்கு விருப்பம் வருவதில்லை.

**रजो रागात्मकं विद्धि तृष्णासङ्गसमुद्भवम् ।**
**तन्निबध्नाति कौन्तेय कर्मसङ्गेन देहिनम् ॥ ७**

ரஜோ ராகாத்மகம் வித்தி த்ருஷ்ணாஸங்கஸமுத்பவம் |
தன்னிபத்நாதி கௌந்தேய கர்மஸங்கேன தேஹினம் || 7

कौन्तेय கௌந்தேய *குந்திபுத்திரா* रजः ரஜ: *ரஜோகுணத்தை* राग आत्मकं ராக ஆத்மகம் *ஆசைவடிவுடையது* तृष्णा सङ्ग समुद्भवं த்ருஷ்ணா ஸங்க ஸமுத்பவம் *வேட்கையையும் பற்றுதலையும் உண்டுபண்ணுவது என்று* विद्धि வித்தி *அறி* तत् தத் *அது* कर्मसङ्गेन கர்மஸங்கேன *வினைப்பற்றுதலால்* देहिनं தேஹினம் *தேகியை* निबध्नाति நிபத்நாதி *பந்தப்படுத்துகிறது.*

***குந்திமகனே, ரஜோ குணத்தை ஆசை வடிவுடையதென்றும், வேட்கையையும் பற்றுதலையும் உண்டுபண்ணுவதென்றும் அறி. வினைப்பற்றால் அது தேகியைத் தளைக்கிறது. 7***

*ரஜோகுணம் ஆசை வடிவெடுத்து முடிவில்லாத பிரவிருத்தியை உண்டுபண்ணுகிறது. காவிக்கல் வெள்ளை வஸ்திரத்தைச் சிவப்பாக்குவதுபோன்று ரஜோகுணம் ஆத்மாவுக்கு வர்ணம் கொடுக்கிறது. திருஷ்ணா அல்லது வேட்கையென்பது அடையாத பொருளின்மீது அடையவேண்டுமென்று கொண்டுள்ள விருப்பம். ஆஸங்கம் அல்லது பற்றுதல் என்பது பெற்றுள்ள பொருளை விட்டுப்பிரியலாகாது என்ற மனப்பான்மை. தோற்றத்திலுள்ள இவ்வுலகப் பொருள்களில் பற்றும், தோன்றாதுள்ள மறுமையில் பற்றுதலும் ரஜோகுணத்தால் ஆத்மாவுக்கு வருகின்றன. விறகுக் கட்டையானது எரிகின்ற தீயை வளர்ப்பதுபோன்று ரஜோகுணம் வினைப்பற்றை வளர்க்கிறது. கர்மம் செய்யாத ஆத்மாவைக் கர்த்தாவாகப் பண்ணிவைப்பது இக்குணம். ரஜோகுணம் இருக்கும்வரையில் கர்மத்தில் பற்றும் தன்னைக் கர்த்தாவென்று எண்ணுகிற எண்ணமும் ஆத்மாவுக்குண்டு.*

तमस्त्वज्ञानजं विद्धि मोहनं सर्वदेहिनाम् ।
प्रमादालस्यनिद्राभिस्तन्निबध्नाति भारत ॥ ८

தமஸ்த்வக்ஞானஜம் வித்தி மோஹனம் ஸர்வதேஹினம் ।
ப்ரமாதாலஸ்யநித்ராபிஸ்தன்னிபத்னாதி பாரத ॥ 8

भारत பாரத *பரதகுலத்துதித்தவனே* तमः तु தம: து *தமோ குணமோ* अज्ञानजं அக்ஞானஜம் *அக்ஞானத்தில் பிறந்தது* सर्वदेहिनां ஸர்வதேஹினம் *எல்லா தேகிகளுக்கும்* मोहनं மோஹனம் *மயக்கத்தை உண்டுபண்ணுவது* विद्धि வித்தி *அறி* तत् தத் *அது* प्रमाद आलस्य निद्राभिः ப்ரமாத ஆலஸ்ய நித்ராபி: *அசட்டை, சோம்பல், உறக்கம் இவற்றால்* निबध्नाति நிபத்னாதி *பந்தப்படுத்துகிறது.*

***பாரதா, தமோகுணமோ அக்ஞானத்தில் பிறந்ததென்றும், உயிர்களை யெல்லாம் மயக்குவ தென்றும் அறி. அது அசட்டை, சோம்பல், உறக்கம் இவற்றால் கட்டுகிறது.*** *8*

*அக்ஞான இருளினின்று வருவது தமோகுணம். இது விவேகத்தை மறைக்கும் தன்மையுடையது. சத்வகுணத்தைக் கெடுப்பது ரஜோகுணம். தமோகுணமோ சத்வம், ரஜஸ் ஆகிய இரண்டையும் கெடுக்கிறது. அதனால் அறிவற்று, உணர்ச்சியற்று, செயலற்று மனிதன் ஜடம்போன்று ஆய்விடுகிறான்.*

*மூன்று குணங்களும் தொகுத்து மீண்டும் பகரப்படுகின்றன :—*

सत्त्वं सुखे सञ्जयति रजः कर्मणि भारत ।
ज्ञानमावृत्य तु तमः प्रमादे सञ्जयत्युत ॥ ९

ஸத்வம் ஸுகே ஸஞ்ஜயதி ரஜ: கர்மணி பாரத ।
ஞானமாவ்ருத்ய து தம: ப்ரமாதே ஸஞ்ஜயத்யுத ॥ 9

भारत பாரத *பாரதா* सत्त्वं ஸத்வம் *சத்வகுணம்* सुखे ஸுகே *சுகத்தில்* सञ्जयति ஸஞ்ஜயதி *இணைக்கிறது* रजः ரஜ: *ரஜோ குணம்* कर्मणि கர்மணி *கர்மத்திலும்* उत உத *மேலும்* तमः तु தம: து *தமோகுணமோ* ज्ञानं ஞானம் *ஞானத்தை* आवृत्य ஆவ்ருத்ய *மறைத்து* प्रमादे ப்ரமாதே *கவனமின்மையில்* सञ्जयति ஸஞ்ஜயதி *இணைக்கிறது.*

**சத்துவகுணம் சுகத்தில் சேர்க்கிறது; ரஜோ குணம் கர்மத்தில்; தமோ குணமோ, பாரதா, ஞானத்தை மறைத்து கவனமின்மையில் இணைக்கிறது. 9**

ஒரு மனிதன் எதில் பற்று வைத்திருக்கிறானோ அதிலிருந்து அவனிடத்து எக்குணம் தலையெடுத்திருக்கிறது என்பது விளங்கும். விதவிதமான இன்பங்களை அனுபவிக்க வேண்டுமென்று விரும்புபவனிடத்து சத்துவகுணம் முன்னணியில் இருக்கிறது. ஒன்றன்பின் ஒன்றாகப் பலவிதமான அலுவல்களில் ஈடுபட ஆசைப்படுபவனிடத்து ரஜோ குணம் ஓங்கியிருக்கிறது. மேகம் சூரியனை மறைப்பது போன்று தமோகுணம் ஞானத்தை மறைக்கிறது. தனக்கு ஏற்பட்டுள்ள கடமைகளைச் செய்யாது விட்டுவிடுவதால் தமோகுண விருத்தியுடையவனுக்குக் கவலையொன்றும் உண்டாவதில்லை. காலத்தை வீணாகக் கழிப்பது, பொருள் விரயமாவது ஆகியவைகளைக் குறித்து அவன் வருந்துவதில்லை. ஜடம்போன்று அவன் செயலற்றுக் கிடப்பான்.

இக்குணங்களின் ஆதிக்கியம் எப்படி நடைபெறுகிறது? அதற்கு விடை வருகிறது :—

**रजस्तमश्चाभिभूय सत्त्वं भवति भारत ।**
**रजः सत्त्वं तमश्चैव तमः सत्त्वं रजस्तथा ॥ १०**

ரஜஸ்தமஸ்சாபிபூய ஸத்வம் பவதி பாரத ।
ரஜ: ஸத்வம் தமஸ்சைவ தம: ஸத்வம் ரஜஸ்ததா ॥ 10

भारत பாரத *பாரதா* सत्त्वं ஸத்வம் *சத்வகுணமானது* रजः तमः च ரஜ: தம: ச *ரஜசையும் தமசையும்* अभिभूय அபிபூய *அடக்கி* भवति பவதி *மேலெழுகிறது* रजः ரஜ: *ரஜோ குணமானது* सत्त्वं तमः च ஸத்வம் தம: ச *சத்துவத்தையும் தமசையும்* तथा ததா *அங்ஙனமே* तमः தம: *தமோகுணமானது* सत्त्वं रजः च ஸத்வம் ரஜ: ச *சத்வத்தையும் ரஜசையும் அடக்*

**சத்வம் ரஜசையும் தமசையும் அடக்கி மேலெழுகிறது; ரஜஸ் சத்துவத்தையும் தமசையும்**

***ஆளுகிறது; அங்ஙனம் தமஸ் சத்துவத்தையும் ரஜசையும் அடக்குகிறது, அர்ஜுனா.*** ***10***

*தேகம் எடுத்துள்ள ஒருவனிடத்து மூன்று குணங்களும் இருக்கின்றன. அவைகளுள் ஒரு குணம் முன்னணிக்கு வரும்பொழுது மற்ற இரண்டும் பின்னணிக்குப் போய்விடுகின்றன. விழித்திருந்து அமைதியே வடிவெடுத்தவனாக மனிதன் ஆகும்போது சத்வகுணம் ஓங்கி நிற்கிறது. அப்பொழுது இன்பமும் ஞானமும் விரிவடைகின்றன. ரஜோகுணம் தலையெடுக்கின்றபொழுது விதவிதமான கர்மத்தில் மனிதன் ஈடுபடுகின்றான். பின்பு தமோகுணம் ஓங்குமிடத்து, மனிதன் கற்கவும் முடியாது, கர்மம் செய்யவும் முடியாது. சோம்பலும் தூக்கமும் வருகின்றன. நாள்தோறும் மூன்று குணங்களும் மாறி மாறி முன்னணிக்கு வருகின்றன. இது எல்லா மனிதர்களுக்கும் பொதுவானது.*

*அந்தந்த குணத்தின் செயல் மேலும் விளக்கப்படு*

**सर्वद्वारेषु देहेऽस्मिन्प्रकाश उपजायते ।**
**ज्ञानं यदा तदा विद्याद्विवृद्धं सत्त्वमित्युत ॥ ११**

ஸர்வத்வாரேஷு தேஹேऽஸ்மின் ப்ரகாச உபஜாயதே ।
ஞானம் யதா ததா வித்யாத் விவ்ருத்தம் ஸத்வமித்யுத ॥ 11

यदा யதா *எப்பொழுது* अस्मिन् देहे அஸ்மின் *தேகத்தில்* सर्वद्वारेषु ஸர்வத்வாரேஷு *எல்லாப்பொறிவாயில் வழியாக* ज्ञानं प्रकाशः ஞானம் ப்ரகாச: *ஞானத்தின் ஒளி* उपजायते உபஜாயதே *உண்டாகிறதோ* तदा उत ததா உத *அப்பொழுதே* सत्त्वं ஸத்வம் *சத்துவகுணம்* विवृद्धं इति விவ்ருத்தம் இதி *ஓங்கியுள்ளது என்று* विद्यात् வித்யாத் *அறிய வேண்டும்.*

***இத்தேகத்தின் பொறிவாயில் அனைத்திலும் எப்பொழுது ஞான ஒளி வீசுகிறதோ அப்பொழுதே சத்துவம் ஓங்கியுள்ளதென்று அறிதல் வேண்டும்.***

பல வர்ணங்கள் தீட்டிய கண்ணுடிகள் அமைக்கப் பெற்றுள்ள பெட்டி ஒன்றனுள் தீபம் வைத்தால் எல்லாக் கண்ணுடிகள் வாயிலாகவும் அதன் வெளிச்சம் வெளியாகும். தீபத்தின் பிரகாசத்திற்கேற்ப வெளிச்சமும் அதிகரிக்கும். மனிதனுடைய உடல் அத்தகைய பெட்டிபோன்றது. கண், காது, வாய், மூக்கு, மெய் ஆகிய இந்திரியங்கள் வாயில்களாகின்றன. குணவேறுபாட்டுக்கு ஏற்ப ஆத்மப் பிரகாசம் இந்திரியங்கள் வாயிலாக ஒளிர்கின்றது. சத்துவ குணம் ஓங்குமிடத்து ஆத்மப் பிரகாசம் நன்கு மிளிர்கிறது. பார்ப்பதில், கேட்பதில், ஒவ்வொரு இந்திரியத்தையும் கையாளுதலில் எழிலும் தெளிவும் திகழ்கின்றன. இந்நிலையில் மெய்யறிவு ஓங்குகிறது.

**लोभः प्रवृत्तिरारम्भः कर्मणामशमः स्पृहा ।**
**रजस्येतानि जायन्ते विवृद्धे भरतर्षभ ॥ १२**

லோப: ப்ரவ்ருத்திராரம்ப: கர்மணுமசம: ஸ்ப்ருஹா ।
ரஜஸ்யேதானி ஜாயந்தே விவ்ருத்தே பரதர்ஷப ॥ 12

**भरतर्षभ** பரதர்ஷப *பரதருள் காளையே* **लोभः** லோப: *பேராசை* **प्रवृत्तिः** ப்ரவ்ருத்தி: *இந்திரியங்கள் வாயிலாக வெளியுலகை நாடுதல்* **कर्मणां आरम्भः** கர்மணும் ஆரம்ப: *வினைகளை வளர்த்தல்* **अशमः** அசம: *அமைதியின்மை* **स्पृहा** ஸ்ப்ருஹா *வினையில் நாட்டம்* **एतानि** ஏதானி *இவைகள்* **रजसि विवृद्धे** ரஜஸி விவ்ருத்தே *ரஜோகுணம் மேலெழும் பொழுது* **जायन्ते** ஜாயந்தே *உண்டாகின்றன.*

***பரத சிரேஷ்டா, பேராசை, பிரவிருத்தி, வினைப் பெருக்கு, அமைதியின்மை, வினையில் விருப்பம் இவைகள் ரஜோகுணம் மேலெழும்பொழுது உண்டாகின்றன.*** ***12***

பிறர் பொருள்களையெல்லாம் தன்னுடையதாக்கிக் கொள்ள விரும்புதல் பேராசை அல்லது லோபமாகிறது. இந்திரியங்கள் வாயிலாக வெளியுலக வியவகாரங்களில் முனைந்துபோதல் பிரவிருத்தியெனப்படுகிறது. அப்படிச்

*செல்வதால் புதிய புதிய கர்மங்களைத் துவக்குவதில் ஊக்கம் உண்டாகிறது. அங்ஙனம் துவக்கிய கர்மங்களில் வெற்றியடையும்பொழுது மகிழ்வும், தோல்வியடையும்பொழுது மனச்சோர்வும் உண்டாகி, அமைதியின்மையை வருவித்துவிடுகிறது. தொடுத்த கர்மங்களைச் செப்பனிட விருப்பம் ஏற்படுவதால் வினைவேட்கை அல்லது தொழில் தாகம் அதிகரித்துக்கொண்டே போகிறது. இவை யாவும் ரஜோ குணத்தின் அறிகுறிகளாம்.*

**अप्रकाशोऽप्रवृत्तिश्च प्रमादो मोह एव च**
**तमस्येतानि जायन्ते विवृद्धे कुरुनन्दन ॥ १३**

அப்ரகாசோऽப்ரவ்ருத்திஸ்ச ப்ரமாதோ மோஹ ஏவ ச ।
தமஸ்யேதானி ஜாயந்தே விவ்ருத்தே குருநந்தன ॥ 13

कुरुनन्दन குருநந்தன *குருகுலத்துதித்தவனே* अप्रकाशः அப்ரகாச: *விவேகமின்மை* अप्रवृत्तिः च அப்ரவ்ருத்தி: ச *முயற்சியின்மையும்* प्रमादः ப்ரமாத: *அஜாக்கிரதை* मोहः एव च மோஹ: ஏவ ச *மதிமயக்கமுமே* एतानि ஏதானி *இவைகள்* तमसि विवृद्धे தமஸி விவ்ருத்தே *தமோ குணம் தலையெடுத்திடத்து* जायन्ते ஜாயந்தே *உண்டாகின்றன.*

***குருவம்சத்து வீரா, விவேகமின்மை, முயற்சியின்மை, தவறுதல், மதிமயக்கம்-ஆகிய இவைகளே தமோகுணத் தலையெடுப்பால் விளைகின்றன. 13***

*தமோகுணத்தின் ல் மனத்தகத்து இருள் சூழ்கிறது. அதனால் விவேகம் மறைந்துபட்டுப் போகிறது. ஒரு செயலையும் செய்யாது சோம்பித் திரியும் தன்மை வந்துவிடுகிறது. அஜாக்கிரதையே வடிவெடுத்தவனாக மனிதன் மாறிவிடுகிறபடியால் அவன் தவறுதல் செய்தற்கு இடம் ஏற்படுகிறது. மதிமயக்கம் அல்லது திரிவுபட்ட அறிவும் அதன் பயனாக வருகிறது.*

*குணம் மேலோங்குதற்கும் மறுபிறப்புக்கும் தொடர்வு உண்டா? இதற்கு விடை வருகிறது :—*

**यदा सत्त्वे प्रवृद्धे तु प्रलयं याति देहभृत् ।**
**तदोत्तमविदां लोकानमलान्प्रतिपद्यते ॥ १४**

யதா ஸத்வே ப்ரவ்ருத்தே து ப்ரலயம் யாதி தேஹப்ருத் ।
ததோத்தமவிதாம் லோகானமலான் ப்ரதிபத்யதே ॥ 14

यदा तु யதா து *எப்பொழுது* सत्त्वे प्रवृद्धे ஸத்வே ப்ரவ்ருத்தே *சத்துவகுணம் ஓங்கியிருக்கும் பொழுது* देहभृत् தேஹப்ருத் *தேகத்தை எடுத்தவன் (ஜீவன்)* प्रलयं याति ப்ரலயம் யாதி *மரணத்தை அடைகிறனோ* तदा ததா *அப்பொழுது* उत्तमविदां உத்தமவிதாம் *மஹத் தத்துவத்தை அறிந்தவர்களுடைய* अमलान् लोकान् அமலான் லோகான் *குற்றமற்ற உலகங்களை* प्रतिपद्यते ப்ரதிபத்யதே *அடைகிறன்.*

***தேகமெடுத்துள்ளவன் சத்துவகுணம் ஓங்கியிருக்கும் பொழுது மரணமடைவானாயின் ஞானவான்களுடைய நல்லுலகங்களை யடைவான். 14***

*உடலை விடும்பொழுது உள்ளத்தில் என்ன எண்ணம் நிலைத்திருக்கிறதோ அதற்கு ஏற்ப மறுபிறப்பு அமைகிறது. சத்துவகுணம் ஓங்கியிருக்கும்பொழுது தெய்விக சிந்தனையிருப்பது உறுதி. பிரம்மலோகம் முதலிய இடங்களில் சத்துவகுணமே நிறைந்திருப்பதால் அம்மனிதன் அந்த லோகத்தை அடைகிறன். உத்தமத்தை அறிந்தவர்கள் என்று ஈண்டு இயம்பப்படுவது பிரம்மா அல்லது ஹிரண்ய கர்ப்பனை அறிந்தவர்களாம். இன்னும் அந்த ஞானம் பர ஞானம் ஆகவில்லை.*

**रजसि प्रलयं गत्वा कर्मसङ्गिषु जायते ।**
**तथा प्रलीनस्तमसि मूढयोनिषु जायते ॥ १५**

ரஜஸி ப்ரலயம் கத்வா கர்மஸங்கிஷு ஜாயதே ।
ததா ப்ரலீனஸ்தமஸி மூடயோனிஷு ஜாயதே ॥ 15

रजसि ரஜஸி *ரஜோகுணத்தில்* प्रलयं गत्वा ப்ரலயம் கத்வா *மரணம் அடைந்து* कर्मसङ्गिषु கர்மஸங்கிஷு *கர்மப்பற்றுடையவர்களிடத்து* जायते ஜாயதே *பிறக்கிறன்* तथा ததா *அப்படியே* तमसि தமஸி

*தமோகுணத்தில்* प्रलीनः ப்ரலீன: *மரணமடைகிறவன்* मूढयोनिषु மூட யோனிஷு *அறிவிலிகளது கர்ப்பத்தில்* जायते ஜாயதே *பிறக்கிறான்.*

***ரஜோகுணத்தில் காலமாகின்றவன் கர்மப் பற்றுடையவர்களுக்கிடையிலே பிறக்கிறான். அவ்வாறே தமஸில் சாகின்றவன் அறிவிலிகள் கர்ப்பத்தில் பிறக்கிறான். 15***

*முன்பு சொன்ன சத்துவ குணத்தில் உடலை உகுப்பவன் முழு அறிவோடு அமைதியாகச் சாகிறான். ரஜோ குணத்தில் மரணமடைபவன் பதைபதைப்போடும், பேராவலோடும், துன்பத்தோடும் உயிர் துறக்கிறான். இடையறாது கர்மம் செய்யும் பாங்குடையவனாக அவன் பிறக்கிறான். தமோ குணத்தில் தேகத்தை விடுபவன் பிரக்ஞையின்றி ஜடநிலையில் சாகிறான். அவன் மிருகமாக அல்லது அறிவிலியாகப் பிறக்கிறான்.*

*தமோகுணத்தில் இருப்பவன் ரஜோகுணத்துக்கு வர முயலவேண்டும். ரஜோகுணத்தில் இருப்பவன் சத்வ குணத்திற்கு மேலேறுதல் முறை. ஏனென்றால் :—*

**कर्मणः सुकृतस्याहुः सात्त्विकं निर्मलं फलम् ।**
**रजसस्तु फलं दुःखमज्ञानं तमसः फलम् ॥ १६**

கர்மண: ஸுக்ருதஸ்யாஹு: ஸாத்விகம் நிர்மலம் பலம் ।
ரஜஸஸ்து பலம் து:கமக்ஞானம் தமஸ: பலம் ॥ 16

सुकृतस्य कर्मणः ஸுக்ருதஸ்ய கர்மண: *நற்கர்மத்திற்கு* फलं பலம் *பயன்* निर्मलं நிர்மலம் *தூய்மை* सात्त्विकं ஸாத்விகம் *சாத்விகம்* (*என்று*) आहुः ஆஹு: *பகர்கிறார்கள்* रजसः तु ரஜஸ: து *ரஜோ குணத்துக்கோ* फलं பலம் *பயன்* दुःखं து:கம் *துக்கம்* तमसः फलं தமஸ: பலம் *தமோகுணத்தின் பயன்* अज्ञानं அக்ஞானம் *அறிவின்மை.*

***நற்செய்கையின் பயன் ஸாத்விகமும் தூய்மையும் என்பர். ரஜோகுணத்தின் பயனோ துன்பம்; தமோகுணத்தின் விளைவு அறிவின்மை. 16***

*தமோகுணத்தினின்று தொழிலின்மையும் தீவினையும் தோன்றுகின்றன. அதனால் மனிதனுக்கு முன்னேற்றம் இல்லை. ஆழ்ந்து செயலில் ஈடுபடும்போது அது துன்பத்தை விளைவிக்கும். ஆனால் அத்துன்பம் வேண்டப்படாததல்ல. துன்பப்படுபவனே தன்னைத் திருத்தியமைக்கிறான். மனிதனுடைய முன்னேற்றத்துக்குத் துன்பம் பயன்படுவது போன்று வேறு எதுவும் பயன்படுவதில்லை. துயரத்தால் தன்னைத் தூயவனாக்குகின்றவன் நற்செயலுக்கு வருகிறான். அப்பொழுது தர்மம் அவன் மூலம் திகழ்கிறது. அதனால் அவன் சத்துவகுணம் எய்துகிறான்; தூயவன் ஆகிறான்.*

*குணங்களின் பயன் இன்னும் எவ்விதமாகப் பரிணமிக்கிறது? விடை வருகிறது:—*

**सत्त्वात्सञ्जायते ज्ञानं रजसो लोभ एव च ।**
**प्रमादमोहौ तमसो भवतोऽज्ञानमेव च ॥ १७**

ஸத்வாத்ஸஞ்ஜாயதே ஞானம் ரஜஸோ லோப ஏவ ச ।
ப்ரமாதமோஹௌ தமஸோ பவதோऽஞானமேவ ச ॥ 17

सत्त्वात् ஸத்வாத் *சத்துவத்தினின்று* ज्ञानं सञ्जायते ஞானம் ஸஞ்ஜாயதே *ஞானம் உதிக்கிறது* रजसः ரஜஸ: *ரஜஸினின்று* लोभः एव च லோப: ஏவ ச *பேராசையே* तमसः தமஸ: *தமஸினின்று* अज्ञानं அஞானம் *அஞ்ஞானமும்* प्रमादमोहौ एव च ப்ரமாதமோஹௌ ஏவ ச *கவனமின்மையும், மதிமயக்கமுமே* भवतः பவத: *உண்டாகின்றன.*

***சத்துவத்திலிருந்து ஞானம் உதிக்கிறது; ரஜஸிலிருந்து பேராசையும், தமஸிலிருந்து அஞ்ஞானமும் கவனமின்மையும் மதிமயக்கமுமே உண்டாகின்றன. 17***

*இதனால்தான் மனிதன் படிப்படியாகக் கீழான குணங்களினின்று மேலான குணங்களுக்குப் போக ஓயாது முயல வேண்டும். மேலும்:—*

**ऊर्ध्वं गच्छन्ति सत्त्वस्था मध्ये तिष्ठन्ति राजसाः ।**
**जघन्यगुणवृत्तिस्था अधो गच्छन्ति तामसाः ॥ १८**

ஊர்த்வம் கச்சந்தி ஸத்வஸ்தா மத்யே திஷ்டந்தி ராஜஸா: ।
ஜகன்யகுணவ்ருத்திஸ்தா அதோ கச்சந்தி தாமஸா: ॥ 18

सत्त्वस्थाः ஸத்வஸ்தா: *சத்துவகுணத்திலுள்ளவர்கள்* ऊर्ध्वं ஊர்த்வம் *மேல்நோக்கி* गच्छन्ति கச்சந்தி *போகிறார்கள்* राजसाः ராஜஸா: *ரஜோகுணத்திலுள்ளவர்கள்* मध्ये மத்யே *மத்தியில்* तिष्ठन्ति திஷ்டந்தி *நிற்கிறார்கள்* जघन्य गुण वृत्ति स्थाः ஜகன்ய குண வ்ருத்தி ஸ்தா: *கடையான குணம் உடையோர்* तामसाः தாமஸா: *தமோ குணத்திலிருப்போர்* अधः அத: *கீழ் நோக்கி* गच्छन्ति கச்சந்தி *செல்லுகின்றனர்.*

***சத்துவகுணத்திலுள்ளோர் மேலேறுகின்றனர்; ரஜோகுணத்திலுள்ளவர் இடையில் நிற்கின்றனர். கடையான குணமாகிய தமோகுணத்திலிருப்போர் கீழிறங்குகின்றனர். 18***

*ஜீவர்கள் மேலான அல்லது கீழான பிறப்பெடுப்பதற்கும் குணவளர்ச்சிக்கும் நெருங்கிய தொடர்புண்டு. சத்துவகுணம் ஓங்கப்பெற்ற ஒருவன் தெய்வப் பிறப்பும் விவேகம் வைராக்கியம் வாய்க்கப்பெற்ற மானுடப் பிறப்பும் எடுக்கிறான். அவைகளின் வாயிலாக அவன் படிப்படியாகப் பரத்தை நோக்கிச் செல்லுகிறான். ரஜோகுணம் நிறைந்துள்ளவன் கர்மங்கள் பல செய்கின்றானெனினும் விவேகமின்மையால் முன்னேற்றமடைவதுமில்லை, பிற் போக்கில் போவதுமில்லை. தனக்கு விவேகம் வரும்வரையில் அவன் நெடுங்காலம் வினையாற்றுவதிலேயே கருத்துடையவனாயிருக்கிறான். ஆனால் தமோகுணத்தில் ஆழ்ந்தவனோ படிப்படியாகக் கீழ்மையையே அடைகிறான். கீழ்மையகற்றி மேன்மையடைந்தால் மட்டும் போதுமா? விடை வரு*

नान्यं गुणेभ्यः कर्तारं यदा द्रष्टानुपश्यति ।
गुणेभ्यश्च परं वेत्ति मद्भावं सोऽधिगच्छति ॥ १९

நான்யம் குணேப்ய: கர்த்தாரம் யதா த்ரஷ்டானுபச்யதி ।
குணேப்யஸ்ச பரம் வேத்தி மத்பாவம் ஸோऽதிகச்சதி ॥ 19

यदा யதா *எப்பொழுது* द्रष्टा த்ரஷ்டா *காண்போன் (ஜீவன்)* गुणेभ्यः குணேப்ய: *குணங்களுக்கு* अन्यं कर्तारं அன்யம் கர்த்தாரம் *அன்னியமான கர்த்தாவை* न अनुपश्यति ந அநுபச்யதி *பார்க்கிறனில்லையோ* गुणेभ्यः च परं குணேப்ய: ச பரம் *குணங்களுக்கு மேலானதையும்* वेत्ति வேத்தி *அறிகிறனோ* तदा ததா *அப்பொழுது* सः ஸ: *அவன்* मद्भावं மத் பாவம் *என் சொரூபத்தை* अधिगच्छति அதிகச்சதி *அடைகிறன்.*

***ஜீவன் எப்பொழுது குணங்களுக்கு வேருன கர்த்தாவைக் காண்பதில்லையோ, குணங்களுக்கு மேலாகப் பரம் பொருளைக் காண்கிருனே, அப்பொழுது அவன் பிரம்ம சொரூபத்தை யடைகிருன். 19***

*மூன்று குணங்களும் பிரகிருதி சொரூபமாதலால் இக் குணங்களுக்குப் புறம்பாகக் கர்மத்துக்குக் கர்த்தா யாருமில்லை. முக்குணங்களே கர்த்தாக்களாகின்றன. இந்திரியங்கள், இந்திரியார்த்தங்கள் எல்லாம் குணத்தினின்று உண்டானவைகள். கீழான குணத்தைக் கடந்து மேலான குணத்துக்கு வருவது ஜீவிதத்தின் லட்சியமாகும். பின்பு சுத்த சத்துவகுணத்தை யடைந்தால் போதுமா? அதற்கு மேல் ஒன்றுமில்லையா? உண்டு. முக்குணங்களையும் கடந்து அப்பால் செல்லுவதே வாழ்க்கையின் குறிக்கோளாகும். முக்குணங்களுக்கு அப்பால் இருக்கிறது பரமாத்மா. அது ஒரு செயலுக்கும் கர்த்தா அல்ல. அது வெறும் சாக்ஷி மாத்திரம். அப்பரமாத்மாவை அறிகிறவன் பரமாத்மாவுக்கு உரியவன் ஆகிருன். இன்னும் பரமாத்மாவின் சொரூபமும் அவனுக்குரியது ஆகிறது.*

*மனிதனுடைய ஹிருதயத்தில் ஈசுவரன் தோற்றமடைவதின் அடையாளங்கள் யாவை? அருணோதயத்தின்போது தோன்றும் பிரகாசம் சூரியனுடைய உதயத்தைத் தெரிவிக்கின்றது. அதுபோல, ஈசுவரன் உள்ளத்தில் உதயமாவதற்கு முன்னல், சுயநலம் கருதாத் தன்மை, பரிசுத்தம், சன்மார்க்கம் ஆகிய குணங்கள் உண்டாகின்றன.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*பிரம்ம சாக்ஷாத்காரத்தால் வரும் நன்மை யாது? விடை வருகிறது:—*

**गुणानेतानतीत्य त्रीन्देही देहसमुद्भवान् ।**
**जन्ममृत्युजरादुःखैर्विमुक्तोऽमृतमश्नुते ॥ २०**

குணானேதானதீத்ய த்ரீன் தேஹீ தேஹஸமுத்பவான் ।
ஜன்ம ம்ருத்யு ஜரா து:கைர்விமுக்தோऽம்ருதமச்னுதே ॥ 20

देहसमुद्भवान् தேஹ ஸமுத்பவான் *தேகத்தை உண்டாக்கிய* एतान् त्रीन् गुणान् ஏதான் த்ரீன் குணான் *இந்த மூன்று குணங்களையும்* अतीत्य அதீத்ய *கடந்து* जन्म मृत्यु जरा दुःखैः ஜன்ம ம்ருத்யு ஜரா து:கை: *ஜனன மரண, ஜரை, துக்கத்தினின்று* विमुक्तः விமுக்த: *முக்தியடைந்த* देही தேஹீ *தேகமெடுத்தவன் (ஜீவன்)* अमृतं அம்ருதம் *மரணமில்லாத்தன்மையை* अश्नुते அச்னுதே *அடைகிறான்.*

***உடம்பை உண்டாக்கும் இம் முக்குணங்களையும் கடந்து, பிறப்பு இறப்பு மூப்பு துன்பத்தினின்று விடுபட்ட ஜீவன் மரணமிலாப் பெருவாழ்வு பெறுகிறான். 20***

*பிரம்ம சொரூபத்தை அடைதல் என்பதன் பொருள் இங்கு விளக்கப்படுகிறது. குணங்களால் ஆகிய உடலில் ஜீவன் வசிக்கிறான். ஆனால் அவன் உடலோடு சம்பந்தப்பட்டவனல்ல. தேகத்துக்குரிய பிறப்பு, இறப்பு, மூப்பு இவைகளால் வரும் துன்பம் ஜீவன் முக்தனுக்குக் கிடையாது. இவ்வுடலில் இருக்கும் பொழுதே அவன் தங்கு தடையற்ற பிரம்மானந்தத்தில் இருக்கிறான். குணாதீதத்தில் அவன் பேரானந்தம் துய்க்கிறான்.*

*சரீரம் தோன்றியிருக்கிறது. அது மறுபடியும் நசித்துப்போகும். ஆனால் ஆத்மாவுக்கு மட்டும் நாசமே இல்லை. கொட்டைப் பாக்கைப் போல் ஆத்மாவும் உடலும் இருக்கின்றன. பாக்குமுற்றினால் கொட்டை வேறு, மேல் தோல் வேறாகிவிடும்; முற்றாமல் காயாக இருக்கும்போது அப்படிப் பிரித்தெடுப்பது மிகவும் கடினம். ஈசுவர தரிசனம் உண்டான பிறகு ஆத்மா வேறு, சரீரம் வேறு என்ற ஞானம் உதிக்கும்.*

— **ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்**

இப்பொழுது கேள்வி ஒன்று கேட்பதற்கான சந்தர்ப்பம் உண்டாகிறது. அர்ஜுனன் அதைப் பயன்படுத்துகிறான்.

अर्जुन उवाच

**कैर्लिङ्गैस्त्रीन्गुणानेतानतीतो भवति प्रभो ।**
**किमाचारः कथं चैतांस्त्रीन्गुणानतिवर्तते ॥ २१**

அர்ஜுன உவாச

கைர்லிங்கைஸ்த்ரீன் குணானேதானதீதோ பவதி ப்ரபோ ।
கிமாசார: கதம் சைதான்ஸ்த்ரீன் குணானதிவர்த்ததே ॥ 21

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது*

प्रभो ப்ரபோ *பிரபுவே* कैः लिङ्गैः கை: லிங்கை: *எந்த அடையாளங்களால்* एतान् त्रीन् गुणान् ஏதான் த்ரீன் குணான் *இந்த மூன்று குணங்களையும்* अतीतः भवति அதீத: பவதி *கடந்து நிற்பவன் ஆகிறான்* किम् आचारः கிம் ஆசார: *அவனுடைய ஆசாரம் எத்தகையது* कथं கதம் *எங்ஙனம்* च ச *மேலும்* एतान् त्रीन् गुणान् ஏதான் த்ரீன் குணான் *இந்த மூன்று குணங்களை* अतिवर्तते அதிவர்த்ததே *கடக்கிறான்.*

அர்ஜுனன் சொன்னது

***இறைவா, எந்த அடையாளங்களால் (ஜீவன்) இந்த மூன்று குணங்களையும் கடந்து நிற்பவன் ஆகிறான்? அவனது நடத்தை யாது? எங்ஙனம் இம் முக்குணங்களைக் கடக்கிறான்? 21***

*மூன்று குணங்களையும் கடந்துவிட்டதின் அறிகுறிகள் எவை? கடந்தவன் பிறகு உடல் வாழ்க்கையை எப்படி நடத்துகிறான்? ஒருவன் முக்குணங்களைக் கடக்க ஆரம்பித்து விட்டான் என்று எப்படித் தெரிந்துகொள்வது? இதுதான் அர்ஜுனனுடைய கேள்வி. இதற்கு விடை வருகிறது :—*

श्री भगवानुवाच

**प्रकाशं च प्रवृत्तिं च मोहमेव च पाण्डव ।**
**न द्वेष्टि संप्रवृत्तानि न निवृत्तानि काङ्क्षति ॥ २२**

ஸ்ரீ பகவானுவாச

ப்ரகாசம் ச ப்ரவ்ருத்திம் ச மோஹமேவ ச பாண்டவ ।
ந த்வேஷ்டி ஸம்ப்ரவ்ருத்தானி ந நிவ்ருத்தானி காங்க்ஷதி ॥ 22

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

पाण्डव பாண்டவ *பாண்டவா* प्रकाशं ப்ரகாசம் *ஒளி (சத்துவத்தின் காரியம்)* प्रवृत्तिं ப்ரவ்ருத்திம் *செயல் (ரஜஸின் காரியம்)* मोहं एव च மோஹம் ஏவ ச *மயக்கமும் (தமஸின் காரியம்)* सम्प्रवृत्तानि ஸம்ப்ரவ்ருத்தானி *வாய்த்தவிடத்து* न द्वेष्टि ந த்வேஷ்டி *வெறுக்கிறதில்லை* निवृत्तानि நிவ்ருத்தானி *ஒழிந்தவிடத்து* न काङ्क्षति ந காங்க்ஷதி *வேட்கையுறுகிறதிலன்*

ஸ்ரீ பகவான் சொன்னது

***பாண்டவா, (சத்துவத்தின் காரியம்) ஒளி, (ரஜஸின் காரியம்) செயல், (தமஸின் காரியம்) மயக்கம்-இவை வாய்த்தவிடத்து அவன் வெறுக்கிறதில்லை, ஒழிந்த விடத்து வேட்கை யுறுகிறதில்லை. 22***

*சத்துவகுணத்தில் கட்டுண்டிருப்பவன் அறிவையும் இன்பத்தையும் வேண்டுகிறான். சாஸ்திர ஞானப்பற்று மிக வல்லமை வாய்ந்தது. எளிதில் அது மனதைவிட்டு அகலாது. கேள்வி யறிவும் இன்பமும் வாய்க்காதவிடத்து ஒருவன் பேராவலோடு அவைகளை நாடுகிறான். சத்துவ குணத்தைக் கடந்து அப்பாற் சென்றவனுக்கு இந்த விருப்பு வெறுப்பு இரண்டும் இல்லை. ரஜோகுணத்தின் வசப்பட்டவன் சும்மா இருக்கமுடியாது. ஏதாவதுசெய்து கொண்டே இருக்கவேண்டும். சில கர்மங்களில் அவனுக்குப் பெருவிருப்பம் உண்டாகிறது. வேறு சில கர்மங்களில் தாங்கவொண்ணு வெறுப்பு உண்டாகிறது. நல்ல கர்மம் என்று தனக்குத்தோன்றுவதை அவன் ஆவலோடு செய்கிறான். கெட்ட கர்மம் என்று தோன்றுவதை அவன் சினந்து வெறுக்கிறான். குணத்தைக் கடந்தவனோ மறந்தும் கேடுடைய கர்மம் செய்யமுடியாது. தோட்டியின் வேலை*

யிலிருந்து தேவாராதனை ஈறாக எத்தொழிலையும் அவன் பற்றற்றுச் செய்கிறான். அப்படிச்செய்யத் தொழிலொன்றும் இல்லாது போய்விட்டால் அதனால் துன்பம் ஒன்றும் அவனுக்கில்லை. தமோகுண பற்றுடையானுக்குச் சோம்பலிலும் தூக்கத்திலும் விருப்பம். அதற்குப் பங்கம்வந்தால் வெறுப்பு. குணாதீதத்தில் இருப்பவனுக்கு விழிப்பும் உறக்கமும் ஒன்றே. தூய கண்ணாடியின் முன்னிலையில் எது தோன்றினாலும் அதை அப்படியே விளக்குகிறது அக் கண்ணாடி. ஒன்றும் தோன்றாதிருக்கும்பொழுது கண்ணாடி தன்மயமாயிருக்கிறது. அதன் முன்னிலையில் பொருள்களின் தோற்றத்தாலும் மறைவாலும் கண்ணாடிக்கு லாபமும் இல்லை, நஷ்டமும் இல்லை. குணாதீதத்தில் சென்றவனது மனத்தகத்து முக்குணங்களின் தோற்றமும் மறைவும் அத்தகைய இடம் பெறுகின்றன. குணங்களின் செயல்களுக்கிடையில் அவன் குணாதீதனாய் இருக்கிறான். அதாவது அவன் யாண்டும் ஸஹஜ நிஷ்டையில் இருக்கிறான்.

*ஜீவன்முக்தர்கள் உலகத்தில் வாழ்வது எங்ஙனம்? மீன் கொத்திப் பறவைகளைப் போன்று அவர்கள் உலகில் வாழ்கின்றார்கள். அப் பறவை நீரில் ஆழ முழுகுகிறது என்றாலும் அதன் சிறகுகள் தண்ணீரால் நனைவதில்லை. இரண்டொரு துளி நீர் ஒட்டிக்கொண்டிருக்குமானால், சரீரத்தை அசைத்துச் சுலபமாக அதனை நீக்கிவிடுகிறது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*இது அர்ஜுனனுடைய முதற்கேள்விக்கு விடை.*

**उदासीनवदासीनो गुणैर्यो न विचाल्यते ।**
**गुणा वर्तन्त इत्येव योऽवतिष्ठति नेङ्गते ॥ २३**

உதாஸீனவதாஸீனோ குணைர்யோ ந விசால்யதே ।
குணா வர்த்தந்த இத்யேவ யோऽவதிஷ்டதி நேங்கதே ॥ 23

यः யः *யார்* उदासीनवत् உதாஸீனவத் *உதாசீனனைப் போன்று* आसीनः ஆஸீன: *இருந்துகொண்டு* गुणैः குணை: *குணங்களால்* न विचाल्यते ந விசால்யதே *அசைக்கப்படுவதில்லை* गुणाः एव குணா: ஏவ *குணங்களே* वर्तन्ते इति வர்த்தந்தே இதி *தொழில் புரிகின்றன என்று* अवतिष्ठति அவ

திஷ்டதி *ஆத்மாவில் நிலைத்திருக்கிறான்* न इङ्गते ந இங்கதே *அசைகிறதில்லை.*

***வெறும் சாக்ஷியாய் இருந்துகொண்டு யார் குணங்களால் அசைக்கப்படுகிறதில்லையோ, குணங்களே தொழில் புரிகின்றனவென்று ஆத்மாவில் அசையாது இருக்கிறானோ;*** **23**

*மலையில் உள்ள மரம் செடிகொடிகளெல்லாம் அசைந்தாலும் மலை அசைவதில்லை அங்ஙனம் ஆத்மாவைச் சார்ந்துள்ள குணங்களெல்லாம் அசைந்தாலும் ஆத்மா அசைவதில்லை. உதாசீனன் அல்லது ஒரு பக்ஷமும் சாராதவனாய் குணாதீதத்தில் சென்ற ஞானி நடுநிற்கின்றான்.*

*மேலும் :—*

**समदुःखसुखः स्वस्थः समलोष्टाश्मकाञ्चनः ।**
**तुल्यप्रियाप्रियो धीरस्तुल्यनिन्दात्मसंस्तुतिः ॥ २४**

ஸமது:கஸுக: ஸ்வஸ்த: ஸமலோஷ்டாச்மகாஞ்சன: ।
துல்யப்ரியாப்ரியோ தீரஸ்துல்யநிந்தாத்ம ஸம்ஸ்துதி: ॥ 24

यः ய: *யார்* समदुःखसुखः ஸமது:கஸுக: *சமமாக துக்கத்தையும் சுகத்தையும் கருதுகிறவன்* स्वस्थः ஸ்வஸ்த: *ஆத்ம சொரூபத்திலிருப்பவன்* सम लोष्ट अश्म काञ्चनः ஸம லோஷ்ட அச்ம காஞ்சன: *மண், கல், பொன் இவைகளைச் சமமாகக் கருதுபவன்* तुल्य प्रिय अप्रियः துல்ய ப்ரிய அப்ரிய: *இனியதையும், இன்னாதையும் நிகராகக் கருதுபவன்* धीरः தீர: *பேரறிஞன்* तुल्य निन्दा आत्म संस्तुतिः துல்ய நிந்தா ஆத்ம ஸம்ஸ்துதி: *இகழ்ச்சி புகழ்ச்சியை ஒன்றாகக் கருதுபவன்;*

***துன்பத்தையும் இன்பத்தையும் சமமாகக் கொண்டவன், ஆத்மாவில் நிலைத்தவன், மண், கல், பொன்னை நிகராகக் காண்பவன், இனியதையும் இன்னாதையும் ஒன்றாக ஓர்பவன், பேரறிஞன், இகழ்ச்சி புகழ்ச்சியை ஒரே பாங்குடன் பார்ப்பவன்;*** ***24***

*தன் உடலாக வடிவெடுத்திருப்பதும் குணங்கள்; புறவுலகாக வடிவெடுத்திருப்பதும் குணங்கள். இங்ஙனம் குணங்கள் குணங்களோடு விதவிதமாகச் சம்பந்தப்பட்டிருக்கையில் ஆத்மசொரூபத்தை முற்றும் அறிந்துள்ள ஞானி ஆத்ம திருப்தனாக, குணாதீதனாக இருக்கிறான்.*

**मानापमानयोस्तुल्यस्तुल्यो मित्रारिपक्षयोः ।**
**सर्वारम्भपरित्यागी गुणातीतः स उच्यते ॥ २५**

மானாபமானயோஸ்துல்யஸ்துல்யோ மித்ராரிபக்ஷயோ: ।
ஸர்வாரம்பபரித்யாகீ குணாதீத: ஸ உச்யதே ॥ 25

यः ய: *யார்* मान अपमानयोः மான அபமானயோ: *மானத்திலும், அவமானத்திலும்* तुल्यः துல்ய: *சமமானவன்* मित्र अरि पक्षयोः மித்ர அரி பக்ஷயோ: *மித்திரனிடத்தும், சத்துருவிடத்தும்* तुल्यः துல்ய: *ஒரே பாங்குடையவன்* सर्व आरंभ परित्यागी ஸர்வ ஆரம்ப பரித்யாகீ *காமிய கர்ம தியாகம் செய்தவன்* सः ஸ: *அவன்* गुण अतीतः குண அதீத: *குணாதீதன் என்று* उच्यते உச்யதே *சொல்லப்படுகிறான்.*

***மான அவமானத்தை நிகராக நினைப்பவன், நண்பனிடத்தும் பகைவனிடத்தும் ஒரே பாங்குடையவன், தனக்கெனத்தொழில் செய்யாதவன்யாரோ, அவன் குணாதீதன் எனப்படுகிறான். 25***

*குணங்களில் கட்டுண்டு அக்ஞானத்தில் இருப்பவர்களுக்கு மானம், அவமானம், நட்பு, பகை முதலியன உண்டு. ஜீவபோதம் இருப்பதால் தனக்கெனத் தொழில் புரிதலும் உண்டு. குணங்களைக் கடந்த நிறை ஞானிக்கு இவையொன்றுமில்லை.*

*இந்த மூன்று சுலோகங்களும் அர்ஜுனனுடைய இரண்டாவது கேள்விக்கு விடையாக வந்துள்ளன.*

*எந்த உபாயத்தைக் கையாண்டு ஞானி மூன்று குணங்களையும் கடக்கிறான் என்ற கேள்விக்கு இனி விடை வருகிறது :—*

मां च योऽव्यभिचारेण भक्तियोगेन सेवते ।
स गुणान्समतीत्यैतान्ब्रह्मभूयाय कल्पते ॥ २६

மாம் ச யோऽவ்யபிசாரேண பக்தியோகேன ஸேவதே ।
ஸ குணான் ஸமதீத்யைதான் ப்ரஹ்ம பூயாய கல்பதே ॥ 26

यः ய: *யார்* च ச *இனி* मां மாம் *என்னை* अव्यभिचारेण भक्तियोगेन அவ்யபிசாரேண பக்தியோகேன *சிதைவு படாத பக்தியோகத்தால்* सेवते ஸேவதே *உபாசிக்கின்றானோ* सः ஸ: *அவன்* एतान् गुणान् ஏதான் குணான் *இந்த குணங்களை* समतीत्य ஸமதீத்ய *முற்றும் கடந்து* ब्रह्मभूयाय ப்ரஹ்மபூயாய *பிரம்மம் ஆவதற்கு* कल्पते கல்பதே *தகுதியுடையவனாகிறான்.*

***மாறுத பக்தியோகத்தால் என்னை யார் உபாசிக்கிறானோ, அவன் இக்குணங்களை முற்றும் கடந்து பிரம்மம் ஆவதற்குத் தகுதியுடையவனாகிறான். 26***

*பரம பிரேமை சொரூபமாயிருக்கிற பக்தியோகத்தால் யார் ஒருவன் அனைத்தையும் நாராயண சொரூபமாகக் கருதி அந்தர்முக திருஷ்டியில் ஆத்மானுசந்தானம் செய்துகொண்டே இருக்கிறானோ அவன் பிரம்ம சொரூபம் ஆகிறான். வெளிச்சம் வர இருள் இருக்குமிடம் தெரியாது மறைவதுபோன்று பிரம்ம சாக்ஷாத்காரத்தில் திரிகுணத்தைக் கடத்தல் மிக எளிதாகிறது.*

*பக்தனுக்கு ஈசுவரன் பல்வேறு உருவங்களில் தோன்றுகிறான். ஆனால் சமாதியில் பிரம்ம ஞானத்தை அடைந்தவனுக்கு அவன் அகண்ட நிராகார நிர்க்குணப் பிரம்மமாக இருக்கின்றான். இதில்தான் ஞானமும் பக்தியும் ஸமரஸப்படுகின்றன.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*முக்குணங்களைக் கடக்க பக்தியைத் தவிர வேறு மார்க்கங்கள் இல்லையா? விடை வருகிறது:—*

ब्रह्मणोहि प्रतिष्ठाहममृतस्याव्ययस्य च ।
शाश्वतस्य च धर्मस्य सुखस्यैकान्तिकस्य च ॥ २७

ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டாஹமம்ருதஸ்யாவ்யயஸ்ய ச ।
சாச்வதஸ்ய ச தர்மஸ்ய ஸுகஸ்யைகாந்திகஸ்ய ச ॥ 27

अहं हि அஹம் ஹி *நானே* ब्रह्मण: ப்ரஹ்மண: *பிரம்மத்துக்கும்* अव्ययस्य अमृतस्य च அவ்யயஸ்ய அம்ருதஸ்ய ச *அழியாத மோக்ஷ நிலைக்கும்* शाश्वतस्य धर्मस्य சாச்வதஸ்ய தர்மஸ்ய *சாசுவதமான தர்மத்துக்கும்* एकान्तिकस्य सुखस्य च ஏகாந்திகஸ்ய ஸுகஸ்ய ச *ஒப்பற்ற சுகத்துக்கும்* प्रतिष्ठा ப்ரதிஷ்டா *இருப்பிடம்.*

***அழியாத மோக்ஷ நிலையாகிய பிரம்மத்துக்கும், சாசுவதமான தர்மத்துக்கும் ஒப்பற்ற சுகத்துக்கும் நானே இருப்பிடம்.*** *27*

*நான்கு யோகங்களும் இங்கு சமரசம் அடைகின்றன. முன் சுலோகத்தில் பக்தியும் அதன்மூலம் அடையப்படும் சகுணபிரம்மமும் விளக்கப்பட்டன. அழியாத மோக்ஷ நிலையாகிய நிர்க்குண பிரம்மம் ஞானத்தின்மூலம் அடையப்படுகிறது. கர்மயோகத்தின் மூலம் பகவத் கைங்கரியம் செய்து சாசுவதமான தர்மம் அடையப் பெறுகிறது. பின்பு ராஜயோகத்தின் மூலம் அமிர்ததாரையினின்று உதிக்கும் ஒப்பற்ற சுகம் அடையப் பெறுகிறது. ஆக, இந்த நான்கு யோகங்களும் குணாதீதத்துக்குச் செல்ல உற்ற உபாயங்களாகின்றன. இந்த நான்கு யோகங்களும் சேர்ந்தே கையாளப்படவேண்டும். அவைகளை அப்படி அனுஷ்டிக்கின்றவன் குணங்களைக் கடந்துகொண்டிருப்பவன் ஆகிறான். இது கடைசிக் கேள்விக்கு விடையாகிறது.*

*ஒரு மனிதன் ஒரு காட்டு வழியே போய்க்கொண்டிருந்தான். வழியில் மூன்று திருடர்கள் அவனை மடக்கிப் பிடித்துக்கொண்டனர். அவனிடம் இருந்த பொருள்கள் எல்லாவற்றையும் அவர்கள் பிடுங்கிக் கொண்டனர். அப்பால் முதல் திருடன் "இவனை உயிருடன் வைத்திருப்பதில் என்ன லாபம்?" என்று சொல்லித் தன் கத்தியை உருவி அவனை வெட்டப் போனான். அப்போது இரண்டாவது திருடன், "இவனைக் கொல்வதால் லாபம் என்ன? கைகால்களைக் கட்டி ஒரு பக்கத்தில் போட்டுவிட்டுப் போகலாம்," என்றான். உடனே அவர்கள் அப்படியே செய்து சாலையின் பக்கத்தில் அவனைப் போட்டுவிட்டுச் சென்றனர். அவர்கள் கொஞ்சதூரம் சென்றதும் மூன்றாவது திருடன் திரும்பி இவனிடம் வந்து, "அப்பா உனக்கு நோகிறதா? நான் உன்*

கட்டுகளை அவிழ்த்து உன்னை விடுதலை செய்கிறேன்; இரு" என்று சொல்லிக் கட்டுகளை அவிழ்த்து விட்டு "என்னுடன் வா; வழியைக் காட்டுகிறேன்" என்று வெகுதூரம் அழைத்துக்கொண்டு போனான். அப்பால் அவன், "அதோ பார்; உன் வீடு தெரிகிறது. இந்த வழியே போவாயானால் சீக்கிரம் வீடு போய்ச் சேருவாய்," என்றான். இதைக் கேட்டதும் இவன் நன்றியறிவுடன், "அப்பா, நீ எனக்கு ஒரு பெரிய உபகாரம் செய்திருக்கிறாய். என்னுடன்கூட என் வீட்டுக்கு வரக்கூடாதா?" என்று கேட்டான். அதற்குத் திருடன், "நான் வரக்கூடாது. போலீஸார் வந்து பிடித்துக்கொள்வார்கள்," என்று சொல்லிப்போய் விட்டான்.

இந்த உலகந்தான் அந்தக்காடு; ஸத்வ, ரஜஸ், தமோகுணங்கள் மேற்கூறிய மூன்று திருடர்கள். ஜீவன்தான் காட்டு வழியே போன பிரயாணி. ஆத்ம ஞானம் அவனிடம் இருந்த பொருள். தமோகுணமும் ரஜோகுணமும் உலகபந்தங்களாகிய சங்கிலியால் அவனைக்கட்டுகின்றன. உலக பந்தங்களிலிருந்து அவனை ஸத்துவகுணம் காப்பாற்றுகின்றது. ஸத்வகுணத்தைச் சரணமடையும் ஜீவன் தமோ ரஜோகுணங்களின் பயன்களாகிய காமக்குரோதாதி மாயைகளினின்றும் விடுதலையடைகின்றது. உலக பந்தங்களினின்றும் ஜீவனைக் கரையேற்றுவது அந்த ஸத்வகுணந்தான் என்றாலும் அந்தசத்வகுணமும் ஒரு திருடனே. பரம பதத்துக்குச் செல்லும் வழிவரையில் ஒருவனை அது அழைத்து வந்து, "அதோ உன் வீட்டைப்பார்," என்று சொல்லிவிட்டு மறைந்து விடுகிறது. ஸத்வகுணமும் பரம பதத்தினருகே செல்லாது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे गुणत्रयविभागयोगो नाम चतुर्दशोऽध्यायः ॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம் யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே குணத்ரய விபாகயோகோ நாம சதுர்தசோऽத்யாய: ||

**பிரம்ம வித்தையைப் புகட்டுவதும், யோக சாஸ்திரமானதும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமாக வந்துள்ளதுமாகிய பகவத்கீதை என்னும் உபநிஷத்தின்கண் குணத்ரய விபாக யோகம் என்ற பதினான்காம் அத்தியாயம்.**

# पञ्चदशोऽध्यायः

# பதினைந்தாம் அத்தியாயம்

## पुरुषोत्तमयोगः

## புருஷோத்தம யோகம்

**श्री भगवानुवाच**

**ऊर्ध्वमूलमधःशाखमश्वत्थं प्राहुरव्ययम् ।**
**छन्दांसि यस्य पर्णानि यस्तं वेद स वेदवित् ॥ १**

ஸ்ரீ பகவானுவாச

ஊர்த்வமூலமத:சாகமச்வத்தம் ப்ராஹுரவ்யயம் ।
சந்தாம்ஸி யஸ்ய பர்ணானி யஸ்தம் வேத ஸ வேதவித் ॥ 1

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

ऊर्ध्वमूलं ஊர்த்வ மூலம் *மேலே வேருள்ளது* अधः शाखं அத: சாகம் *கீழே கிளைகளுள்ளது* अश्वत्थं அச்வத்தம் *ஆலமரத்தை* अव्ययं அவ்யயம் *அழிவற்றது என்று* प्राहुः ப்ராஹு: *பகர்கின்றனர்* छन्दांसि சந்தாம்ஸி *வேதங்கள்* यस्य யஸ்ய *அதனுடைய* पर्णानि பர்ணானி *இலை கள்* तं தம் *அதை* यः ய: *யார்* वेद வேத *அறிகிறானோ* सः ஸ: *அவன்* वेदवित् வேதவித் *வேதத்தை அறிபவன்.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***மேலே வேருள்ளதும் கீழே கிளைகளுள்ளதும் ஆகிய ஆலமரம்போன்ற சம்சாரத்தை அழிவற்றது என்கின்றனர். வேதங்கள் அதன் இலைகள். அதை அறிபவனே வேதத்தை அறிபவன் ஆகிறான். 1***

*அஸ்வத்தம் என்பது அரசமரம். ஈண்டு அது ஆலமரம் என்று மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. அரசமரம் ஆலமரம் இவையிரண்டும் ஒரே இனத்தைச்சேர்ந்தவைகள்.*

ஆலமரம் உபமானத்துக்கு முற்றிலும் பொருத்தமுடைய தாகிறது. ஆலம் விழுது மற்ற வேர்களுக்கு நேர்மாறாக வேலைசெய்கிறது. வேர் கீழே பூமியில் சத்தை வாங்கி மேலே எடுத்துச்செல்கிறது, விழுதோ மேலே சத்தை வாங்கிக்கொண்டு கீழ்நோக்கி வருகிறது. அஸ்வத்தம் என்னும் சொல்லுக்குப் பொருள் ஒருநாள் இருப்பது போன்று அடுத்த நாளைக்கு இருப்பதில்லை என்பதாகிறது. ஸம்ஸாரமாகிய ஜகத் அத்தகையது. ஆலம் விழுது மேலே சத்தை வாங்கிக்கொண்டு கீழே இறங்கிவருவதுபோன்று மாயப்பிரபஞ்சம் மேலே பரம்பொருளிடத்திருந்து சத்தை வாங்கிக்கொண்டு கீழே பிரகிருதியாகப் பரிணமித்து வருகிறது. தோன்றா நிலையில் சக்தி பிரம்மத்துக்கு அபின்னமாயிருக்கிறது. பிரம்மம் இருக்கும் வரை சக்தியும் இருக்கச் செய்யும். ஆகையால் ஸம்ஸாரத்துக்கு அது முடிவற்ற முதற்காரணமாகிறது. அச்சக்தி மூல பிரகிருதியாக, மஹத் தத்துவமாக, அகங்கார தத்துவமாக, இப்படியெல்லாம் கிளைகளாகக் கீழே பிரிந்து வருகிறது. கீழே வரவர அது ஸ்தூலமாகப் பரிணமிக்கிறது.

பிரபஞ்சம்முழுதும் அந்த அரசமரத்தோடு ஒப்பிடப் படுகிறது. இலைகள் இல்லாவிட்டால் மரம் உருப்படாது. அங்ஙனம் இயற்கையை உருப்படுத்தி வைத்திருப்பது வேதம். இவ்வுலக சம்பந்தமான அறிவைப் புகட்டுகின்ற நூல்கள் அனைத்தும் சேர்ந்து வேதம் எனப் பொருள்படுகிறது. பண்டை நான்மறை மட்டும் வேதமல்ல. நவீன ரசாயன சாஸ்திரம், இயற்கை நூல் ஆகிய அனைத்தும், எல்லா மொழிகளும் எல்லா மொழிகளிலுள்ள நூல்களும் சேர்ந்து வேதம் எனப்படுகின்றது. நலம், கேடு ஆகிய இரண்டையும் பெறுதற்கான வழிகளை வேதம் விளக்குகிறது. பிரம்மஞானம் அடையும் வரையில் இப்பிரபஞ்ச வாழ்க்கைக்கு முடிவில்லை. அது நீடூழி நிலைத்திருக்கிறது. அக் காரணத்தை முன்னிட்டு அது அவ்யயம் அல்லது அழிவற்றது எனப்படுகிறது. எழுதிவைத்த நூலைப்படிப்

பவன் வேதவித்து ஆகான்; பிரபஞ்ச நடை முறையை உள்ளபடி அறிந்துகொள்பவன் வேதத்தை அறிபவன் ஆகின்றான். நல்லறிவு பெற முயலுபவனுக்கு மொழியி னுடைய துணையைவிட இயற்கையின் நடைமுறையின் துணை மிகவும் முக்கியமானது.

ஒரு மனிதன் சந்தைக் கடைக்கு வெகு தூரத்திலிருக்கும்போது உருத்தெரியாத "ஹோ" என்ற சப்தத்தை மட்டும் கேட்கிறான். ஆனால் அவன் சந்தைக்குள் நுழைந்தவுடன் ஒருவன் உருளைக் கிழங் குக்கும் மற்றொருவன் கத்தரிக்காய்க்கும் இம்மாதிரியாக மனிதர்கள் பேரம் பண்ணுவதை ஸ்பஷ்டமாகக் கேட்கிறான். ஒருவன் ஈசுவர னிடமிருந்து வெகு தூரத்துக்கு அப்பாலிருக்கும் வரையில் அவன் குழப்பத்திலும் காரண காரிய வாதப்பிரதிவாத அமளியிலுமே இருப் பான். ஆனால் அவன் ஈசுவரனை நெருங்குங்கால் காரண காரிய வாதம், வாதப் பிரதிவாதம் எல்லாம் நின்றொழிகின்றன. தெய்விக ரகஸ்யங் களெல்லாவற்றையும் வெகு தெளிவாயும் ஸ்பஷ்டமாயும் அறிந்து கொள்கிறான்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

முக்குணமயமாகப் பிரகிருதி இருப்பதும் முக்குணத் தைக் கடந்து அப்பால் பரமாத்மா இருப்பதும் பதினான்கா வது அத்தியாயம் விளக்கியது. இந்த அத்தியாயம், அந்தப் பரமாத்மாவிடத்திருந்து இப்பிரபஞ்சம் கிளையாகக் கீழே இறங்கிவந்திருக்கிறது என்று விளக்குகிறது. அம்பிகை துர்க்காதேவியின் வடிவு இந்த இரண்டு அத்தியாயங்களின் கருத்துக்களை நன்கு விளக்குகிறது. தரையின்மீது கன்னங் கரேலென்று நிற்கிற மஹிஷாசுரனை அம்பிகை மர்த்தனம் புரிகின்றாள். அவள் சிங்கத்தின் மீது உயர நின்றுகொண் டிருக்கிறாள். மஞ்சள் மேனியுடைய அவள் சிவப்பு வஸ்தி ரம் அணிந்திருக்கிறாள். ஆயுதங்கள் பல கையாளுகின்றாள். மஹிஷாசுரன் தமோ குணத்தின் பிரதிநிதியாகவும், துர்க்கை ரஜோகுணத்தின் பிரதிநிதியாகவும் இருக்கிறார்கள். அம்பிகையின் தலைக்குமேல் சதாசிவம் தூவெண் வடிவெ டுத்து ஆழ்ந்து ஆத்ம நிஷ்டையிலிருக்கிறார். அவரது வெண் ணிறம் சத்துவ குணத்தைக் காட்டுகிறது. அவர் தன்னில் தானாயிருப்பது பரதத்துவத்தை விளக்குகிறது. உருவ

மில்லாத அவரிடத்திருந்து சத்துவம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்கள் மூன்று வடிவெடுத்து ஒன்றன்கீழ் ஒன்றாகவருகின்றன. மேலேபோகப்போகக் கர்மத்தின்போராட்டம் குறைகிறது. கீழே எல்லாம் ஒரே அமளி என்பதை அம்பிகையும் மஹிஷாசுரனும் புரியும் போர் விளக்குகிறது. அக்கருத்தை அடுத்த சுலோகம் தெளிவுபடுத்துகிறது.

**अधश्चोर्ध्वं प्रसृतास्तस्य शाखा गुणप्रवृद्धा विषयप्रवालाः ।**
**अधश्च मूलान्यनुसंततानि कर्मानुबन्धीनि मनुष्यलोके ॥ २**

அதஸ்சோர்த்வம் ப்ரஸ்ருதாஸ்தஸ்ய சாகா
குணப்ரவ்ருத்தா விஷயப்ரவாலா: ।
அதஸ்ச மூலான்யனுஸந்ததானி
கர்மானுபந்தீனி மனுஷ்யலோகே ॥ 2

तस्य தஸ்ய *அந்த மரத்தினுடைய* शाखाः சாகா: *கிளைகள்* गुणप्रवृद्धाः குணப்ரவ்ருத்தா: *குணங்களால் செழிப்படைந்து* विषय प्रवालाः விஷய ப்ரவாலா: *விஷயங்கள் என்னும் தளிர்விட்டு* अधः च ऊर्ध्वं அத: ச ஊர்த்வம் *கீழும் மேலும்* प्रसृताः ப்ரஸ்ருதா: *படர்ந்திருக்கின்றன* मनुष्यलोके மனுஷ்யலோகே *மனுஷ்ய லோகத்தில்* मूलानि மூலானி *வேர்கள்* कर्म अनुबन्धीनि கர்ம அனுபந்தீனி *கர்மத்தை விளைவிப்பனவாய்* अधः च அத: ச *கீழ் நோக்கி* अनुसन्ततानि அனுஸந்ததானி *பரவியிருக்கின்றன.*

***அதன் கிளைகள் குணங்களால் செழிப்படைந்து, விஷயங்கள் என்னும் தளிர்விட்டு, கீழும் மேலும் படர்ந்திருக்கின்றன. மானுட வுலகில் வினையை விளைவிப்பனவாய் அதன் வேர்கள் கீழ் நோக்கிப் பரவியிருக்கின்றன.*** **2**

*சம்சாரமாகிய இப்பிரபஞ்சத்துக்கு அரசமரமே மேலும் தகுந்த உபமானமாக அமைகிறது. அதன் கிளைகள் மேலும் கீழும் நாலாபக்கமும் பரவியிருக்கின்றன. இப்பிரபஞ்சம் என்ற மரத்துக்கு மிக மேலானதாக இருக்கும் கிளை பிரம்மாவும் பிரம்மலோகமுமாம். கீழான கிளை மானு*

டலோகமும் மற்றுமுள்ள அஃறிணை உயிர்களாம். ஞானத்துக்கு ஏற்ப மேலான பிறவியும், வெறும் கர்மத்துக்கு ஏற்பக் கீழான பிறவியும், ஞானமும் கர்மமும் கலந்திருப்பதற்கேற்ப நடுத்தரமான மானுடப்பிறவி போன்றவையும் அமைகின்றன. கிளைகளுள் சாரமிருந்தால்தான் அவைகள் தளிர் விடும். இந்திரியங்கள் வாயிலாக இந்திரியார்த்தங்களில் உழல்வது இந்த சம்சாரத்துக்குத் தளிர்களாகின்றன. இந்தக்குணங்கள் இருக்கும் வரை கிளைகள் தளிர்த்துக்கொண்டேயிருக்கும்.

ஒரு மரத்துக்கு இரண்டுவிதமான வேர்களிருக்கின்றன. ஒன்று ஆணிவேர்; மற்றவைகள் சல்லிவேர். மாயா ஸஹிதனுகிய ஈசுவரனிடத்திருந்து ஜகத் கீழே வந்திருப்பதால் ஈசுவரன் இந்த அசுவத்தத்துக்கு மேலே உள்ள ஆணிவேர். பூவுலகில் விதவிதமான கர்மங்களாகப் பரிணமித்து வருவது சல்லிவேர்கள். சல்லிவேர்களை இடையிடையே களைவதால் மரம் பண்படுகிறது. அங்ஙனம் பூவுலகில் கர்மங்களைச் செய்பனிடுவதால் மனிதன் திருந்தியமைகின்றுன். அவனுடைய இயல்பை மாற்றுதற்குக் கர்மம் பயன்படுகிறது. நல்லியல்பில் அல்லது கெட்ட இயல்பில் பந்தப்படுத்தி மனிதனைப் பிறப்பு இறப்பு மயமான பூவுலகில் பிடித்து வைத்திருப்பதும் கர்மம் என்கின்ற வேர். இது ஜீவர்கள் எல்லார்க்கும் பொதுவானதால் வேர் எங்கும் பரவியிருக்கிறது என்று சொல்லப்படுகிறது.

**न रूपमस्येह तथोपलभ्यते नान्तो न चादिर्न च संप्रतिष्ठा ।**
**अश्वत्थमेनं सुविरूढमूलमसङ्गशस्त्रेण दृढेन छित्त्वा ॥ ३**

ந ரூபமஸ்யேஹ ததோபலப்யதே
நாந்தோ ந சாதிர் ந ச ஸம்ப்ரதிஷ்டா ।
அச்வத்தமேனம் ஸுவிரூடமூலம-
ஸங்கசஸ்த்ரேண த்ருடேன சித்வா ॥ 3

इह இஹ *இகத்தில்* अस्य அஸ்ய *அதனுடைய* रूपं ரூபம் *ரூபம்* तथा ததா *அங்ஙனம்* न उपलभ्यते ந உபலப்யதே *புலப்படுவதில்லை*

न अन्तः ந அந்த: *அதற்கு அந்தமில்லை* न आदिः ந ஆதி: *ஆதியில்லை* न च सम्प्रतिष्ठा ந ச ஸம்ப்ரதிஷ்டா *இருப்புமில்லை* एनं ஏனம் *இந்த* सुविरूढमूलं ஸுவிரூட மூலம் *வலுத்து வேரூன்றிய* अश्वत्थं அச்வத்தம் *அசுவத்த மரத்தை* दृढेन असङ्गशस्त्रेण த்ருடேன அஸங்க சஸ்த்ரேண *திடமான பற்றின்மை என்னும் வாளால்* छित्वा சித்வா *வெட்டி;*

**இம்மரத்துக்கு இங்கு வடிவம் தென்படுவதில்லை, முடிவில்லை, துவக்கமில்லை, இருப்புமில்லை. வலுத்து வேரூன்றிய இந்த அசுவத்த மரத்தைப் பற்றின்மை என்ற உறுதியான வாளால் வெட்டி; 3**

*இப்படி ஈண்டு இயம்பப்பட்ட பிரபஞ்சம் என்ற அசுவத்த மரத்துக்கு நிலைத்த வடிவம் ஒன்றுமில்லை. அதனிடத்து நாம் ஒரு வடிவத்தைக் காணுமுன்பு அது இன்னொரு வடிவெடுத்துவிடுகிறது. பார்க்கும்பொழுதெல்லாம் அதற்குப் புதியதொரு வடிவம் வருகிறது. நிலைத்த சொந்த வடிவம் ஒன்றும் அதற்கில்லை. இது எப்பொழுது ஆரம்பித்ததென்று யாருக்கும் தெரியாது. இதற்கு முடிவு ஏதேனும் உண்டா? பிரம்மஞானம் அடைந்தவனுக்கு இது முடிவு பெற்று விடுகிறது. மற்றவர்களுக்கு இது முடிவில்லாததாயிருக்கிறது. துவக்கம், முடிவு காட்டாத இது இடையில் எப்படி இருக்கிறது, இதன் இருப்பு எத்தகையது? இதுவும் விளங்குவதில்லை. ஆக, இதை முழுதும் விளக்க யாரே வல்லவர்! மரத்தை வெட்டுதற்குக் கோடாரி வேண்டும். அங்ஙனம் மாயாகாரியமாகிய பிரபஞ்ச வாழ்க்கை என்ற மரத்தை வெட்டுதற்குப் பற்றின்மை அல்லது வைராக்கியம் என்ற வாள் ஒன்றே தகுந்தது. பற்றின்மை எவ்வளவு வலியதோ அவ்வளவு விரைவில் சம்சார விருக்ஷம் வெட்டப்படும்.*

*வண்ணாத்திப் புழு, தான் கட்டும் கூட்டுக்குள்ளேயே சிக்கிக்கொள்கிறது. அதுபோல உலகப்பற்றுள்ள ஆத்மா அதனுடைய ஆசைகளாகிய வலையில் சிக்கிக்கொள்கிறது. ஆனால் அந்தப் புழு ஓர் அழகிய வண்ணாத்திப் பூச்சியாகப் பரிணமிக்கும்போது, கூட்டை உடைத்துக்கொண்டு வெளியே வந்து வெளிச்சத்தையும் காற்றையும்*

*ஆனந்தமாய் அனுபவிக்கிறது. அதுபோல விவேகம் வைராக்கியம் என்ற இரண்டு சிறகுகளால், உலகப்பற்றில் உழலும் ஆத்மாவானது மாயையாகிய வலையைக் கிழித்துக்கொண்டு வெளிப்படக்கூடும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**ततः पदं तत्परिमार्गितव्यं यस्मिन्गता न निवर्तन्ति भूयः ।**
**तमेव चाद्यं पुरुषं प्रपद्ये यतः प्रवृत्तिः प्रसृता पुराणी ॥ ४**

ததஃ பதம் தத்பரிமார்கிதவ்யம்
யஸ்மின் கதா ந நிவர்த்தந்தி பூயஃ ।
தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே
யதஃ ப்ரவ்ருத்திஃ ப்ரஸ்ருதா புராணீ ॥ 4

ततः ததஃ *பிறகு* तत् पदं தத் பதம் *அந்த பிரம்மபதம்* परिमार्गितव्यं பரிமார்கிதவ்யம் *தேடத்தக்கது* यस्मिन् யஸ்மின் *எங்கு* गताः கதாஃ *போய்* भूयः பூயஃ *திரும்பவும்* न निवर्तन्ति ந நிவர்த்தந்தி *திரும்பி வருகிறதில்லையோ* यतः யதஃ *யாரிடத்திருந்து* पुराणी प्रवृत्तिः புராணீ ப்ரவ்ருத்திஃ *பண்டைத்தொழில்* प्रसृता ப்ரஸ்ருதா *பெருக்கெடுத்ததோ* तं आद्यं पुरुषं एव च தம் ஆத்யம் புருஷம் ஏவ ச *அதே ஆதிபுருஷனை* प्रपद्ये ப்ரபத்யே *சரணடைகிறேன் (என்றுணர்க).*

***எப்பதம் பெற்றுப் பிறப்பெடுப்பதில்லையோ அது அப்பால் தேடத்தக்கது. எவரிடத்திருந்து பண்டைத் தொழில் பெருகி வந்துள்ளதோ அதே ஆதிபுருஷனைச் சரணடைகிறேன் (என்றுணர்க). 4***

*உலகப்பற்று அறவே நீக்குவது எதிர்மறைச் செயல். அதுமட்டும் போதாது. பிறகு அது உடன்பாட்டுச் செயலாக மாறவேண்டும். பிரம்ம பதத்தை ஆவலோடு தேடுதல் அவசியமாகிறது. பிரபஞ்ச வாழ்க்கைக்கும் பிரம்ம பதத்துக்கும் உள்ள வித்தியாசம் என்ன? ஒன்று பிறவிப்பெருங் கடலாகப்பரிணமிக்கின்றது. மற்றொன்று பிறப்புஇறப்பைக் கடந்த பெருநிலை. அது முழுமுதற் பொருள் என்றும் ஆதி புருஷன் என்றும் அழைக்கப்படுகிறது. அது அகண்ட சச்சிதானந்த வஸ்து. கடலினின்று மேகம் வருவது போன்று கர்மசொரூபமாயுள்ள தொல்லுலகம் அப்பரம*

புருஷனிடத்திருந்து வந்துள்ளது. அத்தொல்லுலகம் தோன்றுவதாலும் மறைவதாலும் பரமபுருஷனுக்கு லாப நஷ்டம் ஒன்றுமில்லை. கானலினின்று கானல் நீர் தோன்றுவதுபோன்று அவனிடத்து உலகம் தோன்றி ஒடுங்குகிறது. அந்த ஆதிபுருஷனிடத்து அடைக்கலம் புகுதலே சம்சார விருக்ஷம் திரும்பவும் தழையாதிருக்கும்படி செய்தற்கு உற்ற உபாயம்.

*கண்டுபிடிக்கப்பட்டதும் திருடன் ஓடிப்போய்விடுகிறான். அது போல மாயையின் சுபாவம் இன்னதென்று நீ ஆராய்ந்து கண்டு பிடித்துவிட்டால், அது உன்னிடமிருந்து ஓடிப்போய்விடும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*பற்று நீங்கிப் பரத்தைச் சார்ந்திருப்பது இனித் தெளிவுபட விளக்கப்படுகிறது :—*

**निर्मानमोहा जितसङ्गदोषा अध्यात्मनित्या विनिवृत्तकामाः ।**
**द्वन्द्वैर्विमुक्ताः सुखदुःखसंज्ञैर्गच्छन्त्यमूढाः पदमव्ययं तत् ॥ ५**

நிர்மானமோஹா ஜிதஸங்கதோஷா
அத்யாத்மநித்யா விநிவ்ருத்தகாமா: ।
த்வந்த்வைர்விமுக்தா: ஸுகது:க ஸம்ஜ்ஞைர்
கச்சந்த்யமூடா: பதமவ்யயம் தத் ॥ 5

निर्मान मोहाः நிர்மான மோஹா: *அகங்காரத்தையும் அவிவேகத்தையும் நீக்கினவர்களாய்* जित सङ्ग दोषाः ஜித ஸங்க தோஷா: *பற்று என்னும் குற்றத்தை வென்றவர்களாய்* अध्यात्म नित्याः அத்யாத்ம நித்யா: *பரமாத்ம ஞான நிஷ்டர்களாய்* विनिवृत्त कामाः விநிவ்ருத்த காமா: *வாசனை ரகிதர்களாய்* सुख दुःख संज्ञैः ஸுக து:க ஸம்ஜ்ஞை: *சுகதுக்கமெனப்படுகின்ற* द्वन्द्वैः த்வந்த்வை: *இருமைகளினின்று* विमुक्ताः விமுக்தா: *முக்தர்களாய்* अमूढाः அமூடா: *மயக்கத்தைத் தவிர்த்தவர்கள்* तत् अव्ययं पदं தத் அவ்யயம் பதம் *அந்த அழிவில்லாத நிலையை* गच्छन्ति கச்சந்தி *அடைகிறார்கள்.*

***ஆணவமும் அவிவேகமுமற்றவர், பற்று என்னும் குற்றம் வென்றவர், பரமாத்ம ஞான நிஷ்டர்,***

***ஆசையற்றவர், இன்ப துன்பமென்னும் இருமைகளைக் கடந்தவர், மயக்க மொழிந்தவர் - இத்தகையவர்கள் அவ் அழியா நிலை யெய்துகின்றனர்.*** **5**

*மனத்தகத்து அமைந்துள்ள மாசுகளெல்லாம் நீங்கப் பெறுதல் ஒருபுறம். தீவிரமாகப் பரமாத்மாவிடத்து நாட்டம் கொள்ளுதல் மற்றொரு புறம். ஒரு சாதகனிடத்து இந்த இரண்டு பாங்குகளும் சேர்ந்து அமைகின்றவளவு அவன் விரைந்து பரிபக்குவமடைகிறான். முற்றிலும் பரிபக்குவம் அடைந்தவனுக்குக் கேடு என்பது இல்லை.*

*பந்தப்பட்ட ஆத்மா மனுஷ்யனாகும்; மாயையாகிய சங்கிலியில் கட்டுப்படாத ஆத்மா ஈசுவரனாகும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*பரமபதம் மேலும் விளக்கப்படுகிறது :—*

**न तद्भासयते सूर्यो न शशाङ्को न पावकः ।**
**यद्गत्वा न निवर्तन्ते तद्धाम परमं मम ॥ ६**

ந தத்பாஸயதே ஸூர்யோ ந சசாங்கோ ந பாவக: ।
யத்கத்வா ந நிவர்த்தந்தே தத்தாம பரமம் மம ॥ 6

यत् யத் *எங்கு* गत्वा கத்வா *சென்று* न निवर्तन्ते ந நிவர்த்தந்தே *(அவர்கள்) திரும்பி வருவதில்லை* तत् தத் *அதை* सूर्यः ஸூர்ய: *சூரியன்* न भासयते ந பாஸயதே *விளக்குகிறதில்லை* न शशाङ्कः ந சசாங்க: *சந்திரனும் விளக்குகிறதில்லை* न पावकः ந பாவக: *தீயும் விளக்குகிறதில்லை* तत् தத் *அது* मम மம *என்னுடைய* परं धाम பரம் தாம *பரமபதம் ஆகிறது.*

***எங்குச் சென்றவர்கள் திரும்பிவருகிறதில்லையோ, எதை ஞாயிறும், திங்களும், தீயும் விளக்க மாட்டாவோ அது எனது பரமபதம்.*** **6**

*கடலினுள் பாய்ந்த நதி கடலாய்விடுகிறது. அங்ஙனம் பரத்தைச் சார்ந்த மனிதன் பரவெளியில் கலந்துவிடுகிறான். அதுவே சித் ஆகாசம் எனப்படுகிறது. இருட்டறையில் உட்கார்ந்திருக்கும் ஒருவனுக்கு 'நான் இருக்கிறேன்'*

என்ற உணர்வு இருக்கிறது. இந்த உணர்வை சூரியவெளிச்சம் விளக்குமா? விளக்காது. அப்படியே சந்திரனும், தீயும் அதை விளக்கமாட்டா. இருக்கிறேன் என்ற உணர்வை உணர்வே விளக்குகிறது. அந்த உணர்வு அல்லது பிரக்ஞை யாண்டும் நிலைத்துள்ளது. அது தெளிவடைந்த நிலையே பரமபதம் எனப்படுகிறது. தெளிவடைந்த பிறகு அது அகண்டாகாரமாய் விடுகிறது. அதன்கண் போக்குவரத்து இல்லை. பிறப்பு இறப்பு இல்லை. காலதேச வர்த்தமானம் எல்லாம் அதனுள் ஒடுங்கிவிடுகின்றன. இப்பரவெளியில் கலக்கின்ற ஜீவன் முக்தர்கள் திரும்பவும் ஜீவபோதத்துக்கு வருகிறதில்லை.

*கற்பூரத்தைக் கொளுத்திவைத்தால் மிகுதி யொன்றுமிருப்பதில்லை. பகுத்தறிவு (விவேகம்) ஒழிந்து, மகோன்னதமான ஸமாதி நிலையைப் பெற்றால், அப்போது 'நான்' என்பதும் 'நீ' என்பதும் உலகமென்பதும் இரா. ஏனென்றால் இந்த மனமும் மமகாரமும் விசுத்தப் பிரம்மத்தில் ஒன்றாய்க் கலந்துவிடுகின்றன.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஜீவாத்மாவானது பரமாத்மாவுக்குப் புறம்பானதாயிருந்து பிறகு பிரம்மஞானத்தால் அதற்குரியதாகின்றதா? விடை வருகிறது :—*

**ममैवांशो जीवलोके जीवभूतः सनातनः ।**
**मनः षष्ठानीन्द्रियाणि प्रकृतिस्थानि कर्षति ॥ ७**

மமைவாம்சோ ஜீவலோகே ஜீவபூத: ஸநாதன: |
மன: ஷஷ்டானீந்த்ரியாணி ப்ரக்ருதிஸ்தானி கர்ஷதி || 7

सनातनः मम अंशः एव ஸநாதன: மம அம்ச: ஏவ *என்றென்றும் எனது அம்சமே* जीवभूतः ஜீவபூத: *ஜீவனாகத் தோன்றி* जीव लोके ஜீவலோகே *ஜீவலோகத்தில்* प्रकृतिस्थानि ப்ரக்ருதிஸ்தானி *பிரகிருதியிலேயே நிற்கின்ற* मनःषष्ठानि மன: ஷஷ்டானி *மனதை ஆறாவதாகவுடைய* इन्द्रियाणि இந்த்ரியாணி *இந்திரியங்களை* कर्षति கர்ஷதி *கவர்கிறது.*

***எக்காலத்தும் எனது அம்சமே ஜீவனாகத் தோன்றி ஜீவலோகத்தில் பிரகிருதியிலே நிற்கின்ற***

**மனது உட்பட ஆறு இந்திரியங்களை (போகத்தில்) இழுக்கிறது.** 7

ஸனாதன — எக்காலத்தும் என்று சொல்லுவதன் கருத்து அது ஜீவனாக இருக்கும்பொழுதும் பரமாத்மாவுக்கு உரியதே. பரமாத்மாவுக்கு வேறாக இருந்து பிறகு அதில் கலத்தல் என்பதல்ல. அறியாமையினால் பிரகிருதியில் தன்னைக் கட்டுண்டவனாக நினைத்துக்கொள்பவன் ஜீவாத்மா. பிரகிருதியின் சேர்க்கையாலே அவனுக்கு இந்திரியங்கள் உண்டாகின்றன. புறவுலகை அனுபவிப்பதற்கென்றே அவைகள் உண்டாயிருக்கின்றன. அந்நிலையில் ஜீவன் போகியென்று அழைக்கப்படுகிறான். போகியாக போகத்தில் கட்டுண்டிருப்பவர்களெல்லாம் ஜீவலோகத்திலிருப்பவர்களே. இந்திரிய நிக்கிரகம் செய்கின்றபொழுது ஒருவன் யோகியாகின்றான். புலனடக்கத்துக்கு ஏற்றவாறு அவன் பரத்தைச் சார்ந்தவனாகிறான்.

ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ளதொடர்வுக்குத்தகுந்த உபமானம் ஒன்றுசொல்லலாம். பானைக்குள் உள்ள வெளி கடாகாசம் எனப்படுகின்றது. பரந்து எங்கும் நிறைந்துள்ள வெளி மஹாகாசம் எனப்படுகிறது. கடாகாசம் எப்பொழுதும் மஹாகாசத்துக்குள்ளேயே இருக்கிறது. பானையை உடைப்பதால் அதற்குள் உள்ள ஆகாசத்துக்கு ஒரு கேடும் வருவதில்லை. கடாகாசம் என்ற பெயர் தரித்திருக்கும் பொழுதும் அது மகாகாசமே.

பிரகிருதியோடு வைத்த தொடர்வால் ஜீவன் கர்த்தாவென்றும் போக்தாவென்றும் சொல்லப்படுகிறான். கர்த்தா போக்தாவென்ற உபாதியை நீக்கிவிட்டால் ஆத்மாவின் எதார்த்த நிலை வந்துவிடுகிறது. ஜீவாத்மாவாக இருக்கும்போது அது பரமாத்மாவின் அம்சம். ஜீவபோதம் அற்றுப்போனால் எஞ்சியிருப்பது பரமாத்மாவே.

ஜீவனின் உண்மை ஸ்வபாவம் சச்சிதானந்தமே. உபாதிகள் எல்லாம் அகங்காரத்தினால் உண்டாயின. ஆதலின் ஜீவனுக்குத் தன் உண்மை சுபாவமே மறந்துபோய்விட்டது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*ஜீவன் உபாதியைப் பெறும் விதம் எப்படி? விடை வருகிறது :—*

शरीरं यदवाप्नोति यच्चाप्युत्क्रामतीश्वरः ।
गृहीत्वैतानि संयाति वायुर्गन्धानिवाशयात् ॥ ८

சரீரம் யதவாப்னோதி யச்சாப்யுத்க்ராமதீச்வர: ।
க்ருஹீத்வைதானி ஸம்யாதி வாயுர்கந்தானிவாசயாத் ॥ 8

ईश्वरः ஈச்வர: *உடலுக்கு இறைவன்* यत् யத் *எப்பொழுது* शरीरं சரீரம் *சரீரத்தை* अवाप्नोति அவாப்னோதி *அடைகிறனோ* च ச *மேலும்* यत् யத் *எப்பொழுது* उत्क्रामति अपि உத்க்ராமதி அபி *விட்டுவிடுகிறனோ* वायुः வாயு: *வாயுவானது* आशयात् ஆசயாத் *இருப்பிடத்திருந்து (பூவினின்று)* गन्धान् इव கந்தான் இவ *மணங்களைப்போல* एतानि ஏதானி *இவைகளை* गृहीत्वा க்ருஹீத்வா *கிரகித்துக்கொண்டு* संयाति ஸம்யாதி *போகிறன்.*

***மலர்களினின்று மணங்களைக் காற்றெடுத்தேகுவதுபோன்று, ஜீவன் உடல் எடுக்கும் போதும் விடும்போதும் இந்திரியங்களைப் பற்றிக் கொண்டு போகிறுன். 8***

*உடலை ஆளும் தன்மையுடையவனுதலால் ஜீவன் இங்கு ஈசுவரன் என்று அழைக்கப்படுகிறுன். காற்று தன்னளவில் ஒருவித மணமும் இல்லாதது. புஷ்பத்தோடு வைக்கிற சேர்க்கையால் அதற்கு மணம் உண்டாகிறது. அந்த மணத்தைப் பிறகு சிறிது சிறிதாக நீக்கவும் அதற்கு இயலும். ஜீவன் பிரகிருதியோடு வைக்கிற தொடர்வால் உபாதியுடையவனுகிறுன். பிரகிருதியினிடத்துப் பற்று நீங்குகிறவளவு ஜீவன் சுத்த சைதன்யமாகிறுன். ஆனல் பிரகிருதியில் பற்று வைத்திருக்கிறவளவு ஜாலவித்தைக்காரன்போன்று அவன் நடந்துகொள்கிறுன். ஓரிடத்தில் தன்னுடைய சாமான்களையெல்லாம் விரித்துவைத்து வேடிக்கை பண்ணுகிறுன். பிறகு அவைகளை யெல்லாம் மூட்டை கட்டிக்கொண்டு இன்னோர் ஊருக்குப் போகிறுன்.*

அங்ஙனம் ஜீவன் மனதையும் இந்திரியங்களையும் பிறக்கும் பொழுது விரிக்கிறான்; சாகும்பொழுது ஒடுக்குகிறான்.

இந்திரியங்களைக்கொண்டு ஜீவன் என்ன செய்கிறான்? விடை வருகிறது :—

**श्रोत्रं चक्षुः स्पर्शनं च रसनं घ्राणमेव च ।**
**अधिष्ठाय मनश्चायं विषयानुपसेवते ॥ ९**

ச்ரோத்ரம் சக்ஷு: ஸ்பர்சனம் ச ரஸனம் க்ராணமேவ ச ।
அதிஷ்டாய மனஸ்சாயம் விஷயானுபஸேவதே ॥ 9

अयं அயம் *அவன்* श्रोत्रं ச்ரோத்ரம் *செவி* चक्षुः சக்ஷு: *கண்* स्पर्शनं ஸ்பர்சனம் *மெய்* रसनं ரஸனம் *நாவு* घ्राणं एव च க்ராணம் ஏவ ச *நாசியும்* मनः च மன: ச *மனதும்* अधिष्ठाय அதிஷ்டாய *தனதாக்கிக் கொண்டு* विषयान् விஷயான் *விஷயங்களை* उपसेवते உபஸேவதே *அனுபவிக்கிறான்.*

***அவன் செவி, கண், மெய், நாவு, நாசி, மனது ஆகியவைகளைத் தனதாக்கிக் கொண்டு விஷயங்களை அனுபவிக்கிறான்.*** 9

*ஐம்பொறிகளும் ஐந்துவித ஜன்னல்கள் ஆகின்றன. ஜன்னல் இல்லாத வீட்டுக்குள் ஒருவனை அடைத்துவைத்து விட்டால் வெளியுலகோடு அவன் தொடர்புவைக்க முடியாது. காற்றும் வெளிச்சமும் நீரும் உணவுமின்றி அவன் செத்துப்போய்விடுவான். ஐம்பொறிகள் ஐந்து பூதங்களோடு தொடர்புவைக்க உதவுகின்றன. ஆகாசத்தின் தன்மாத்திரையாகிய ஓசையைக் கேட்க காது உதவுகிறது. அக்கினியின் தன்மாத்திரையாகிய வடிவத்தைக் காண கண் உதவுகிறது. வாயுவின் தன்மாத்திரையாகிய ஊறு அல்லது ஸ்பரிசத்தை உணர்தற்கு மெய் உதவுகிறது. நீரின் நீர்மையாகிய சுவையை அறிய நாவு உதவுகிறது. நிலத்தின் பாங்காகிய நாற்றத்தைப் பெற நாசி பயன்படுகிறது. மனதோ இவ் ஐந்துக்கும் பொது. உடல் என்னும் கோட்டைக்குள் இருக்கும் ஜீவனானவன் ஐம்பொறிக*

ளின் வகை தெரிந்துகொள்ளுதற்கு மனம் என்னும் கருவியே பாலம்போன்று அமைந்துள்ளது. வெளியுலகினின்று இன்பதுன்ப மயமான செய்திகள் அவனுக்கு இங்ஙனம் எட்டுகின்றன.

उत्क्रामन्तं स्थितं वापि भुञ्जानं वा गुणान्वितम् ।
विमूढा नानुपश्यन्ति पश्यन्ति ज्ञानचक्षुषः ॥ १०

உத்க்ராமந்தம் ஸ்திதம் வாபி புஞ்ஜானம் வா குணான்விதம் ।
விமூடா நானுபச்யந்தி பச்யந்தி ஞானசக்ஷுஷ: ॥ 10

उत्क्रामन्तं உத்க்ராமந்தம் *உடலிலிருந்து உடலுக்குப் போகின்றவனை* स्थितं ஸ்திதம் *ஓர் உடலிலேயே இருப்பவனை* भुञ्जानं वा अपि புஞ்ஜானம் வா அபி *அனுபவிப்பவனையும்* गुणान्वितं குணான்விதம் *குணத்தோடுகூடியிருப்பவனை* विमूढाः விமூடா: *விமூடர்கள்* न अनुपश्यन्ति ந அனுபச்யந்தி *காண்கிறார்களில்லை* ज्ञान चक्षुषः ஞான சக்ஷுஷ: *ஞானக் கண்ணையுடையவர்கள்* पश्यन्ति பச்யந்தி *பார்க்கிறார்கள்.*

***உடலை விடும் பொழுதும், உடலில் இருக்கும் பொழுதும், அனுபவிக்கும் பொழுதும், குணங்களோடு கூடியிருக்கும் பொழுதும் ஜீவனை மூடர் அறியார்; ஞானக்கண்ணுடையார் அறிவர். 10***

*அறிவிலிகளுக்கு ஸ்தூல உடல் காட்சியும் உடலின் மூலம் வெளியுலகினின்று பெறும் இன்பதுன்பம் மட்டும் விளங்குகின்றன. உடலுக்குள் தங்களது மேலாம் சொரூபமாகவிருக்கும் உத்தமனைக் காண அவர்களுக்கு இயலாது. இந்திரியங்கள் புறவுலகைப் பார்ப்பதற்கென்றே அமைந்தவைகள். அவைகளின் வசப்பட்டவர்களே மூடாத்மாக்கள். விழாக்களில் பெரிய பொம்மைகளைத் தூக்கிக்கொண்டு அவைகளின் உட்புகுந்து சிலர் விளையாடுகின்றனர். அறிவுடையவர்க்குப் பொம்மையின் உள்ளிருக்கும் மனிதன் வேறு என்பது தெரியும். அங்ஙனம் ஞானக்கண்ணுடையார்க்கு உடல் என்னும் பொம்மைக்குள் இருக்கும் ஆத்மா வேறு என்பது தெரியும்.*

*மனிதர்கள் தலையணையைப் போன்றவர்கள். ஒன்று சிவப்பாயும், மற்றொன்று நீலமாயும், வேறொன்று கருப்பாயு மிருந்தபோதிலும் அவைகளுக்குள்ளிருக்கும் பஞ்சு ஒன்றே. அதுபோலத்தான் மனிதனும். ஒருவன் பார்வைக்கு அழகாக இருக்கிறான்; இன்னொருவன் கருப்பாயிருக்கிறான்; மற்றொருவன் பரிசுத்தனாக இருக்கிறான்; வேறொருவன் கெட்டவனாக விருக்கிறான். என்றாலும் ஈசுவரன் அவர்கள் எல்லாருள்ளும் வாசம் செய்கிறான்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*பெறுவது எங்ஙனம்? விடை வருகிறது:—*

**यतन्तो योगिनश्चैनं पश्यन्त्यात्मन्यवस्थितम् ।**
**यतन्तोऽप्यकृतात्मानो नैनं पश्यन्त्यचेतसः ॥ ११**

யதந்தோ யோகினஸ்சைனம் பச்யந்த்யாத்மன்யவஸ்திதம் ।
யதந்தோऽப்யக்ருதாத்மானோ நைனம் பச்யந்த்யசேதஸ: ॥ 11

यतन्तः योगिनः யதந்த: யோகின: *முயலுகின்ற யோகிகள்* एनं ஏனம் *அந்த ஆத்மனை* आत्मनि अवस्थितं ஆத்மனி அவஸ்திதம் *தங்களுக்குள் வீற்றிருப்பவனைய்* पश्यन्ति பச்யந்தி *பார்க்கின்றனர்* यतन्तः अपि யதந்த: அபி *முயற்சியுடையவர்கள் எனினும்* अकृत आत्मानः அக்ருத ஆத்மான: *பண்படாத பாங்குடையவர்* अचेतसः அசேதஸ: *அறிவிலிகள்* एनं ஏனம் *அந்த ஆத்மாவை* न पश्यन्ति ந பச்யந்தி *பார்க்கிறார்களில்லை.*

***முயற்சியுடைய யோகிகள் அவனை தங்களுக்குள்ளேயே காண்கின்றனர். முயற்சியுடையார் எனினும் ஆத்ம பரிபாகமடையாத அறிவிலிகள் அவனைக் காண்பதில்லை. 11***

*யோகி, ஆத்ம பரிபாகம் அடையாத அறிவிலி, ஆகிய இருவர்க்கும் முயற்சி பொதுவானது. முயற்சியின்றி ஒன்றையும் சாதிக்க முடியாது. ஆனால் மனபரிபாகமில்லாத மனிதன் வெறும் மாடுபோல் உழைக்கிறான். வெறும் வினைப்பயனே அதன் விளைவு ஆகும். முயலுகின்ற யோகியோ ஆத்ம பரிபாகம் அடைகிறான். உலக கிருத்தியங்களைச் செய்து சாதிப்பதற்கிடையில் ஒழுக்கத்தாலும் தவத்*

தாலும் யோகியானவன் மனதைப் பண்படுத்துகிறான். அந்தர்முகமாகவும் அதைத் திருப்பிப் பழகுகிறான். அங்ஙனம் சித்தசுத்தி அடையப்பெற்று, அது ஆத்ம சொரூபத்தில் தேங்கியிருப்பது ஆத்ம தரிசனத்துக்கு இன்றியமையாததாகிறது.

*நீர்ப் பானையின் அடியில் வெகு சிறிய துவாரம் ஒன்று இருந்தாலும் அதன் வழியாக ஜலமெல்லாம் ஒழுகிவிடும். அதுபோல சாதகன் ஒருவனது மனத்தில் உலகப்பற்று வெகு அற்பமாக இருந்தாலும்கூட அவனது பிரயத்தனங்களெல்லாம் வீணாய் முடியும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*பரமாத்ம தரிசனம் அடைந்தவர்கள் அதை எப்படிக் காண்கிறார்கள்? விடை வருகிறது:—*

**यदादित्यगतं तेजो जगद्भासयतेऽखिलम् ।**
**यच्चन्द्रमसि यच्चाग्नौ तत्तेजो विद्धि मामकम् ॥ १२**

யதாதித்யகதம் தேஜோ ஜகத்பாஸயதேऽகிலம் ।
யச்சந்த்ரமஸி யச்சாக்னௌ தத்தேஜோ வித்தி மாமகம் ॥ 12

आदित्य गतं ஆதித்ய கதம் *சூரியனிடத்துள்ள* यत् तेजः யத் தேஜ: *எந்த வெளிச்சம்* अखिलं जगत् அகிலம் ஜகத் *உலகம் முழுவதையும்* भासयते பாஸயதே *பிரகாசிக்கச் செய்கிறதோ* चन्द्रमसि च சந்த்ரமஸி ச *சந்திரனிலும்* यत् யத் *எவ்வெளிச்சம்* अग्नौ च அக்னௌ ச *அக்னியிலும்* यत् யத் *எவ்வெளிச்சம்* तत् तेजः தத் தேஜ: *அந்த தேஜஸை* मामकं மாமகம் *என்னுடையதென்று* विद्धि வித்தி *அறிக.*

***சூரியனிடத்திருந்து வந்து உலகம் முழுதையும் விளக்குகிற வெளிச்சமும், சந்திரனுடையதும், தீயினுடையதும் என்னிடத்திருந்து வந்த பிரகாசம் என்று அறிக.*** **12**

*வெளிச்சத்தைக்கொண்டுதான் ஜடப் பொருள்கள் இருக்குமிடத்தைத் தெரிந்துகொள்ளலாம். நாம் கண்டறிந்த வெளிச்சங்களுள் சூரியன், சந்திரன், தீ இவைகளிடத்திருந்து வருபவை சர்வ சாதாரணமானவைகள். எங்கு வெளிச்சம் இருக்கிறதோ அங்கு சத்துவ குணத்தின் தோற்*

றமுண்டு. மினுக்கெடுத்த சுவரில் அல்லது கண்ணுடியில் முகம் நன்றாய்த் தெரிவதுபோன்று சத்வகுணத்திலே ஆத்ம சைதன்யம் ஒளிர்கிறது. ஆத்ம சைதன்யத்தை விளக்குகின்ற சத்வகுணமும் பரமாத்மாவினிடத்திருந்து வந்தது. சூரிய வெளிச்சம் ஜடப்பொருள் இருக்கிறது என்று விளக்குவதுபோன்று ஆத்ம சைதன்யம் 'நான் இருக்கிறேன்' என்ற பிரக்ஞையை விளக்குகிறது. சூரியனிடத்து இருப்பது ஜடப்பிரகாசம். 'நான் இருக்கிறேன்' என்ற உணர்ச்சியோ ஆத்ம பிரகாசம். ஜடப்பிரகாசத்துக்கு மூலகாரணமாயிருப்பது ஆத்ம பிரகாசம். அது எப்படி என்று ஆராய்வோம். இரண்டு அறைகளினுள்ளே சூரிய வெளிச்சம் சமனுகப் படிகிறது. ஓர் அறையினுள் ஆள் யாருமில்லை. சூரிய வெளிச்சம் இருக்கிறது என்று பொருள்படுத்துவார் இல்லை. 'இருக்கிறேன்' என்ற உணர்ச்சி அந்த வெளிச்சத்துக்கும் கிடையாது. அவ் அறையினுள் வெளிச்சம் இருப்பதும் இல்லாததும் ஒன்றே. மற்ற அறையில் வெளிச்சம் இருக்கிறது. மனிதன் ஒருவன் இருக்கிறுன். தான் இருப்பதற்கும் அவ்வெளிச்சம் இருப்பதற்கும் அம்மனிதனே அத்தாட்சியாகிறுன். சந்திரன், சூரியன், அக்னி சொரூபமாக ஈசுவரனிடத்திருந்து வந்துள்ள ஜடப் பிரகாசத்தை ஈசுவரன் என்னும் ஆத்ம பிரகாசம் அல்லது ஆத்ம சைதன்யம் அறிகிறது. அறிபவனுடைய அறிவே அறியப்படுபொருளை விளக்குகிறது. சூரியன், சந்திரன், அக்கினி முதலியன அறியப்படு பொருள்களாம்.

மேலும் அந்த ஆத்ம சைதன்யம் உயிருக்கு உயிராய் இருக்கிறது. எப்படியெனின் :—

**गामाविश्य च भूतानि धारयाम्यहमोजसा ।**
**पुष्णामि चौषधीः सर्वाः सोमो भूत्वा रसात्मकः ॥ १३**

காமாவிச்ய ச பூதானி தாரயாம்யஹமோஜஸா ।
புஷ்ணாமி சௌஷதீ: ஸர்வா: ஸோமோ பூத்வா ரஸாத்மக: ॥ 13

अहं அஹம் *நான்* ओजसा ஓஜஸா *என் சக்தியால்* गां காம் *பூமியினுள்* आविश्य ஆவிச்ய *பிரவேசித்து* भूतानि பூதானி *உயிர்களை* धारयामि தாரயாமி *தாங்குகின்றேன்* रसात्मकः ரஸ ஆத்மக: *இனிமை வடிவாகிய* सोमः ச ஸோம: ச *சந்திரனாகவும்* भूत्वा பூத்வா *ஆகி* सर्वाः ओषधीः ஸர்வா: ஓஷதீ: *எல்லாப்பயிர்களையும்* पुष्णामि புஷ்ணாமி *போஷிக்கிறேன்.*

***என் வலிவால் நான் பூமியினுள் பிரவேசித்து உயிர்களைத் தாங்குகிறேன்; இனிமைவடிவாகிய சந்திரனாகவும் ஆகிப் பயிர்களை யெல்லாம் போஷிக்கிறேன்.*** ***13***

*ஈசுவர சக்தி ஓஜஸ் என்கிற பெயர் பெறுகிறது. அது அண்டமெங்கும் வியாபித்து அதை உறுதியாய்த்தாங்கிப் பிடித்துக்கொண்டிருக்கிறது. சராசரங்களெல்லாம் அதனிடத்திருந்து நிலைபேறு பெறுகின்றன. சுவைக்கேற்ற ரசம் சந்திரனிடத்திருப்பதாகவும் அது படிவதால்தான் பூமியிலுள்ள பயிர்களெல்லாம் செழித்து வளர்கின்றன என்பதும், அவ்வவைகளின் இயல்பை நன்கு பெற்று வருகின்றன வென்பதும் கோட்பாடு. இங்ஙனம் உயிர்களனைத்துக்கும் ஏற்ற உயிர்ச்சக்தி பரமாத்மாவினிடத்திருந்து வருகிறது.*

*அவரிடத்திருந்து வரும் மூன்றாவது வல்லமை யாதென்று இனி விளக்கப்படுகிறது :—*

**अहं वैश्वानरो भूत्वा प्राणिनां देहमाश्रितः ।**
**प्राणापानसमायुक्तः पचाम्यन्नं चतुर्विधम् ॥ १४**

அஹம் வைச்வானரோ பூத்வா ப்ராணிநாம் தேஹமாச்ரித: ।
ப்ராணாபானஸமாயுக்த: பசாம்யன்னம் சதுர்விதம் ॥ 14

अहं அஹம் *நான்* वैश्वानरः வைச்வானர: *வைச்வானரன் என்கிற உதரக்னகல்* भूत्वा பூத்வா *ஆகி* प्राणिनां ப்ராணிநாம் *பிராணிகளுடைய* देहं தேஹம் *தேகத்தில்* आश्रितः ஆச்ரித: *இருந்து கொண்டு* प्राण अपान समायुक्तः ப்ராண அபான ஸமாயுக்த: *பிராணனுடனும் அபானனுட*

*னும் கூடி* चतुर्विधं अन्नं சதுர்விதம் அன்னம் *நான்கு விதமான அன்னத்தை* पचामि பசாமி *ஜீரணம் செய்கிறேன்.*

***உதரக்கனலாக நான் உயிர்களின் உடலில் இருந்து கொண்டு பிராண அபான வாயுக்களுடன் கூடி நான்கு வித அன்னத்தைச் செமிக்கிறேன். 14***

*வயிற்றுக்குள் இருந்துகொண்டு உணவைச் செமிக்கும் அக்னிக்கு வைசுவானரன் என்கிற பெயர் ஏற்பட்டுள்ளது. அதற்கு உணவு நான்குவிதங்களில் அளிக்கப்படுகிறது. மெல்லுதல், உறிஞ்சுதல், நக்குதல், விழுங்குதல் ஆகிய நான்கு விதங்கள் உணவேற்பதில் உண்டாகின்றன. ரொட்டி போன்ற கடின பதார்த்தம் மெல்லப்படுகிறது. இளம் நுங்கு போன்றது உறிஞ்சப்படுகிறது. தேன் நக்கப்படுகிறது. பாயசம் விழுங்கப்படுகிறது. இவை யாவையும் ஜீரணம் செய்வது வைசுவானரன் என்ற அக்கினி.*

*ஆற்றல் சொரூபமாக இருப்பதுமல்லாமல் மற்றொரு மகிமை பகவானிடத்துண்டு. அதாவது :—*

**सर्वस्य चाहं हृदि सन्निविष्टो मत्तः स्मृतिर्ज्ञानमपोहनं च ।**
**वेदैश्च सर्वैरहमेव वेद्यो वेदान्तकृद्वेदविदेव चाहम् ॥ १५**

ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸன்னிவிஷ்டோ
மத்த: ஸ்ம்ருதிர்ஞானமபோஹனம் ச ।
வேதைஸ்ச ஸர்வைரஹமேவ வேத்யோ
வேதாந்தக்ருத்வேதவிதேவ சாஹம் ॥ 15

अहं அஹம் *நான்* सर्वस्य ஸர்வஸ்ய *எல்லாருடைய* हृदि ஹ்ருதி *ஹிருதயத்தில்* सन्निविष्टः ஸன்னிவிஷ்ட: *தங்கியிருக்கிறேன்* च ச *மேலும்* मत्तः மத்த: *என்னிடமிருந்து* स्मृतिः ஸ்ம்ருதி: *ஞாபகம்* ज्ञानं ஞானம் *ஞானம்* अपोहनं च அபோஹனம் ச *அவற்றின் அழிவும்* सर्वैः वेदैः च ஸர்வை: வேதை: ச *எல்லா வேதங்களாலும்* अहं एव वेद्यः அஹம் ஏவ வேத்ய: *நானே அறியப்படுபொருள் ஆகிறேன்* वेदान्तकृत् வேதாந்தக்ருத் *வேதாந்தத்தைச் செய்தவனும்* वेदवित् च வேதவித் ச *வேதத்தை அறிந்தவனும்* अहं एव அஹம் ஏவ *நானே.*

**எல்லாருடைய உள்ளத்திலும் நான் வீற்றிருக்கிறேன். நினைவும் ஞானமும் அவற்றின் அழிவும் என்னிடமிருந்து உண்டாகின்றன. வேதங்கள் எல்லாவற்றாலும் அறியப்படுபொருள் நானே. வேதாந்தத்தைச் செய்தவனும் வேதத்தை அறிந்தவனும் நானே. 15**

எல்லாருடைய உள்ளத்திலும் பிரக்ஞை அல்லது அறிவு சொரூபமாக அவர் இருக்கிறார். ஆதலால் முன் செய்தவைகளைப்பற்றிய ஞாபகமும், ஓர்ந்து உணரவேண்டிய ஞானமும், அவைகள் தேவையில்லாதபோது அவைகளை அழித்துவிடுதலும் ஆகிய இவையாவும் ஆத்ம சைதன்யத்திலிருந்தே வருகின்றன. வேதம் என்பது பிரபஞ்சம். இயற்கையில் இத்தனையுமாயிருப்பது பரம்பொருள். இயற்கைப்பொருள் ஒவ்வொன்றும் அதனதன் இயல்புக்கு ஏற்றவாறு ஈசுவரனது மஹிமையையே விளக்கிக் கொண்டிருக்கிறது. அழியும் பொருள்களின் மூலம் அவனது அழியாத் தன்மை ஒருபுறம் காண்பிக்கப்படுகிறது. அவன் அறிவாளி என்பதை ஒவ்வொரு ஜடப்பொருளின் அமைப்பும் எடுத்து உணர்த்துகிறது. அவன் இன்ப வடிவினன் என்பதற்கு இயற்கை யாவும் சான்றாகிறது. அவனுடைய ஆற்றலும் இயற்கையினூடு தோன்றிக்கொண்டிருக்கிறது. ஈசன் அழகன் என்பதற்கு இவ்வுலகமே எடுத்துக்காட்டாகும். இயற்கைத் தாய் திரிபுரசுந்தரி எனப்படுவதும் இக்காரணத்தை முன்னிட்டேயாம். பிரபஞ்சமே அவனுக்கு விளக்கம். ஆனால் இந்த விளக்கத்தில் அவன் அடங்கியவன் அல்லன். அது அவனுடைய ஒரு சிறுபகுதி இவை யாவையும் அவன் உணர்கிறான். ஆதலால் அவன் வேதவித் - வேதத்தை அறிபவன் அல்லது இயற்கையை அறிபவன் ஆகிறான். பிரபஞ்சத்தைக் கடந்து வேதாந்த சொரூபமாயிருப்பதும் பரமாத்மாவே.

பரமாத்மாவின் சொரூப விளக்கத்தின் படித்தரங்கள் வருமாறு :—

द्वाविमौ पुरुषौ लोके क्षरश्चाक्षर एव च ।
क्षरः सर्वाणि भूतानि कूटस्थोऽक्षर उच्यते ॥ १६

த்வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஸ்சாக்ஷர ஏவ ச ।
க்ஷர: ஸர்வாணி பூதானி கூடஸ்தோऽக்ஷர உச்யதே ॥ 16

क्षरः க்ஷர: *க்ஷரன் என்றும்* अक्षरः च அக்ஷர: ச *அக்ஷரன் என்றும்* इमौ द्वौ एव இமௌ த்வௌ ஏவ *இந்த இரண்டே* पुरुषौ புருஷௌ *புருஷர்கள்* लोके லோகே *உலகில் (உண்டு)* सर्वाणि भूतानि ஸர்வாணி பூதானி *வடிவெடுத்தவைகள் எல்லாம்* क्षरः க்ஷர: *க்ஷரன்* कूटस्थः கூடஸ்த: *கூடஸ்த புருஷன்* अक्षरः அக்ஷர: *அக்ஷரன் என்று* उच्यते உச்யதே *சொல்லப்படுகிறன்.*

***க்ஷரன் என்றும் அக்ஷரன் என்றும் உலகில் இரண்டே புருஷர்கள் இருக்கிறார்கள். வடிவெடுத்தவர்கள் எல்லாரும் க்ஷரன். கூடஸ்தனே அக்ஷரன் எனப்படுகிறான். 16***

*நிலவுலகம் இருக்கும் வரையில் அதில் நீர் உண்டு. அது ஆற்று நீர், கிணற்று நீர், கடல் நீர், மழை நீர், மேகம் என்று வெவ்வேறு வடிவும் பெயரும் எடுக்கிறது. இந்த வடிவங்களெல்லாம் க்ஷரம் அல்லது அழியும் தன்மையுடையவைகள். நீரோ அக்ஷரம் அல்லது பிரளயம் வரும் வரையில் நிலைத்திருப்பது. அங்ஙனம் ஜகத்திலுள்ள உயிர்கள் எல்லாம் க்ஷரம் அல்லது அழியும் தன்மையுடையவைகள். ஈசுவரன் என்ற புருஷனுக்கு இவைகள் உபாதியாகையால் இவைகளும் புருஷன் எனப்படுகின்றன. பரமாத்மாவைச் சார்ந்துள்ள மாயா சக்தியோ அக்ஷர புருஷன் அல்லது என்றைக்கும் நிலைத்திருப்பது ஆகிறது. பிரம்ம ஞானம் அடைந்தவனுக்கு மட்டும் அது வியவகாரமயமான தோற்றத்தில் இல்லை. மற்று ஈசுவரனை அது சாசுவதமாகச் சார்ந்துள்ளது. கூடஸ்தன் என்பது வெவ்வேறு வடிவங்களும் தோற்றங்களும் மாயக்காட்சிகளும் காட்டவல்லது என்று பொருள்படுகிறது. ஈசுவரன் அல்லது ஸகுண பிரம்மத்தின் வெவ்வேறு சொரூபங்களாகிய சிவன், சக்தி,*

விஷ்ணு முதலியன ஒன்றுசேர்ந்து கூடஸ்தன் ஆகிறது. இதுவும் புருஷனுடைய உபாதியாகையால் புருஷன் என்றே அழைக்கப்படுகிறது. பிரபஞ்ச மயமான மாயாசக்தி என்றென்றைக்கும் இருக்கிறது. அதன் வடிவங்கள் மட்டும் புதியன புதியனவாக மாறிவிடுகின்றன.

*பழத்தின் மேல்தோல், சதை, கொட்டை எல்லாம் மரத்தின் ஓரே மூல விதையினின்றும் உண்டாகின்றன. அதுபோல ஓரே ஈசுவரனிடமிருந்து ஜீவ, ஜட, சித்து, அசித்து ஆகிய ஸர்வ சிருஷ்டிப் பொருள்களும் தோன்றுகின்றன.* — ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*இனிப் பரமாத்மா எப்படி இருக்கிறார் என்றால் :—*

**उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मेत्युदाहृतः ।**
**यो लोकत्रयमाविश्य बिभर्त्यव्यय ईश्वरः ॥ १७**

உத்தம: புருஷஸ்த்வன்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத:
யோ லோகத்ரயமாவிச்ய பிபர்த்யவ்யய ஈச்வர: ॥ 17

अन्यः तु அன்ய: து *மற்றும் க்ஷர அக்ஷரத்துக்கு அன்னியமாக* उत्तमः पुरुषः உத்தம: புருஷ: *புருஷோத்தமன் அல்லது பிரம்மம் என்றும்* परमात्मा इति பரமாத்மா இதி *பரமாத்மா என்றும்* उदाहृतः உதாஹ்ருத: *அழைக்கப்படுவர்* यः ய: *யாரோ அவர்* ईश्वरः ஈச்வர: *ஈசுவரன்* अव्ययः அவ்யய: *மாறுபடாதவர்* लोकत्रयं லோகத்ரயம் *மூவுலகத்தையும்* आविश्य ஆவிச்ய *பிரவேசித்து* बिभर्ति பிபர்த்தி *தாங்குகிறார்.*

***இனி, இவைகட்கு அன்னியமானவர் புருஷோத்தமன். அவ் ஈசுவரன் நிர்விகாரப் பரமாத்மா என்று அழைக்கப்படுகிறார். அவர் மூவுலகினுட் புகுந்து அதைத் தாங்குகிறார். 17***

*சகுண பிரம்மம் அல்லது ஈசுவரன் மாயாசஹிதன். உலகங்களும் உயிர்களும் (ஜகத், ஜீவன்) அவனுடைய தோற்றங்களாம். நமது பண்பட்ட தூய அறிவுக்கு எட்டும் விபூதிகள் யாவும் ஈசுவரனைச் சார்ந்தவைகள். அதற்கு அப்பாற்பட்டவர் புருஷோத்தமன். அவரிடத்து ஒருவிதமான மாறுதலும் உண்டாவதில்லை. சுத்த சைதன்யமாக நீக்கமற*

அவர் எங்கும் நிறைந்திருக்கிறார். பூலோகம் புவர்லோகம் சுவர்லோகம் ஆகிய மூவுலகும் அவரிடத்து அவரது பரா சக்தியில் அடங்கிக்கிடக்கின்றன. அவரே முழுமுதற் பொருளாகிய பரபிரம்மம். நிர்க்குண பிரம்மம் என்றும், நாராயணன் என்றும், சதாசிவம் என்றும் அவர் சமயங்களால் அழைக்கப்படுகிறார்.

சரீரத்தில் ஈசுவரன் எவ்வாறு வசிக்கிறான்? பிச்சாங்குழலின் உள்ளேயிருக்கும் கம்பியைப்போல அவன் சரீரத்தில் வாசஞ்செய்கிறான். அதாவது சரீரத்தின் உள்ளேயிருக்கிறானென்றாலும் அச்சரீரத்தோடு சம்பந்தப்பட்டவனல்லன்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**यस्मात्क्षरमतीतोऽहमक्षरादपि चोत्तमः ।**
**अतोऽस्मि लोके वेदे च प्रथितः पुरुषोत्तमः ॥ १८**

யஸ்மாத்க்ஷரமதீதோऽஹமக்ஷராதபி சோத்தம: ।
அதோऽஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம: ॥ 18

यस्मात् யஸ்மாத் *எக்காரணத்தால்* अहं அஹம் *நான்* क्षरं க்ஷரம் *க்ஷரத்தை* अतीतः அதீத: *கடந்தவனே* अक्षरात् अपि च அக்ஷராத் அபி ச *அக்ஷரத்துக்கும்* उत्तमः உத்தம: *மேலானவனே* अतः அத: *அக்காரணத்தால்* लोके லோகே *லோகத்திலும்* वेदे च வேதே ச *வேதத்திலும்* पुरुषोत्तमः इति புருஷோத்தம: இதி *புருஷோத்தமன் என்று* प्रथितः ப்ரதித: *புகழ் பெற்றவனாக* अस्मि அஸ்மி *இருக்கிறேன்.*

***க்ஷரத்தைக் கடந்து அக்ஷரத்துக்கும் நான் மேலானவனாக இருப்பதால் உலகிலும் வேதத்திலும் புருஷோத்தமன் என்று புகழ்பெற்றிருக்கிறேன். 18***

க்ஷரம் என்பது அழியும் தன்மையுடைய பிரபஞ்சம். இது அரசமரத்தோடு ஒப்பிட்டு ஏற்கனவே விளக்கப்பட்டது. அக்ஷரம் என்பது உலகுக்கு மூல காரணமாயிருக்கும் மூலப் பிரகிருதியோடு கூடிய ஈசுவரன். சித் சக்தியாக இப்பொருளைக் கருதுமிடத்து பரமேசுவரி என்று அவள் பெயர் பெறுகிறாள். ஜீவாத்மாக்களெல்லாம் ஈசுவரனில் அடங்கி விடுகிறார்கள். நிர்க்குண நிர்விகாரமாயிருப்பவர் பரபிரம்மம்.

பக்தர்களும் கவிகளும் அவரைப் புருஷோத்தமன் என்று அழைப்பதற்கு அவரது பெருநிலையே காரணமாகிறது.

இத்தகைய புருஷோத்தமனை அறிந்தவன் எத்தகைய பாங்குடையவனாகிறான்? விடை வருகிறது:—

**यो मामेवमसंमूढो जानाति पुरुषोत्तमम् ।**
**स सर्वविद्भजति मां सर्वभावेन भारत ॥ १९**

யோ மாமேவமஸம்மூடோ ஜானாதி புருஷோத்தமம் ।
ஸ ஸர்வவித்பஜதி மாம் ஸர்வபாவேன பாரத ॥ 19

भारत பாரத *பரதகுல* यः ய: *யார்* एवं ஏவம் *இங்ஙனம்* असम्मूढः அஸம்மூட: *மயக்கமற்றவனாய்* पुरुषोत्तमं புருஷோத்தமம் *புருஷோத்தமன் என்று* मां மாம் *என்னை* जानाति ஜானாதி *அறிகின்றானோ* सः ஸ: *அவன்* सर्ववित् ஸர்வவித் *முழுதுமறிந்தவனாய்* सर्वभावेन ஸர்வபாவேன *முழுமனதோடு* मां மாம் *என்னை* भजति பஜதி *பஜிக்கிறான்.*

***பாரதா, யார் மயக்கமற்றவனாய் இங்ஙனம் என்னைப் புருஷோத்தமன் என்று அறிகிறானோ, எல்லாம் அறிந்த அவன் முழுமனதோடு என்னை வழுத்துகிறான். 19***

*பொருள் ஒன்று. மதி மயக்கம் உள்ளவனுக்கு அது உலகாகக் காட்சி கொடுக்கிறது. மயக்கம் நீங்கப் பெற்றவனுக்கு அது கடவுள் காட்சி கொடுக்கிறது. கடவுள் காட்சியில் சில படித்தரங்கள் இருக்கின்றன. அனைத்தையும் ஆதரிப்பவராக அவர் முதலில் தோன்றுகிறார். அனைத்தும் அவரிடத்து அடங்கியிருக்கின்றன. அவரே அனைத்தும் ஆகியிருக்கிறார். தோற்றத்தளவில் அனைத்தும் இருக்கின்றன; உண்மையில் அவர்தான் இருக்கிறார். அவர் யாண்டும் உள்ளது உள்ளபடி இருக்கிறார். பூரணப் பொருளாகிய அவரிடத்து ஒருவிதமான மாறுதலும் உண்டாகிறதில்லை. இது ஞானத்தின் முடிவான நிலை. கடவுள் காட்சி பெற்றவனே எல்லாம் அறிந்தவன் ஆகிறான். ஏனென்றால் அதற்குமேல் அவன் அறியவேண்டியது*

ஒன்றுமில்லை. கடவுள் காட்சி பெற்றவுடனே மனப்பான்மையும் மாறிவிடுகிறது. மனது எந்த அவஸ்தையிலிருந்தாலும் அது கடவுளை வழுத்தும் பாங்குடையதாகிறது. தெய்வ வழிபாடே வடிவுடையதாகிறது அது.

ஈசுவர தரிசனத்தைப் பெற்ற பிறகு, ஈசுவரன் எங்கும், எல்லாவற்றிலும் இருப்பதாகவே பக்தனுக்குத் தோன்றும். ஆனால் ஈசுவரனுடைய மேலான தோற்றம் மனிதனிடம் காணப்படுகிறது. இன்னும் அதைவிட மேலானதோற்றமோ சுத்தசாத்விக பக்தர்களிடம் இருக்கும்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

கடவுள் காட்சியிலேயே நிலைபெறுவதால் மனிதன் அடையும் நன்மை யாது? விடை வருகிறது :—

**इति गुह्यतमं शास्त्रमिदमुक्तं मयाऽनघ ।**
**एतद्बुद्ध्वा बुद्धिमान्स्यात्कृतकृत्यश्च भारत ॥ २०**

இதி குஹ்யதமம் சாஸ்த்ரமிதமுக்தம் மயாऽனக ।
ஏதத்புத்த்வா புத்திமான் ஸ்யாத் க்ருதக்ருத்யஸ்ச பாரத ॥ 20

अनघ அனக *பாபமற்றவனே* इति இதி *இங்ஙனம்* गुह्यतमं குஹ்யதமம் *ஆழ்ந்த* इदं शास्त्रं இதம் சாஸ்த்ரம் *இந்த சாஸ்திரம்* मया மயா *என்னால்* उक्तं உக்தம் *உரைக்கப்பட்டது* भारत பாரத *அர்ஜுனா* एतत् बुद्ध्वा ஏதத் புத்த்வா *இதை அறிந்து* बुद्धिमान् புத்திமான் *புத்திமானாகவும்* कृतकृत्यः च க்ருதக்ருத்ய: ச *கிருதார்த்தனாகவும்* स्यात् ஸ்யாத் *ஆகிறான்.*

***குற்றமற்றவனே, இங்ஙனம் ஆழ்ந்த இந்த சாஸ்திரம் என்னால் உரைக்கப்பட்டது. அர்ஜுனா இதை அறிபவன் ஞானியும் கிருதார்த்தனும் ஆவான்.*** **20**

பகவத்கீதை முழுதும் சாஸ்திரம் எனப்படுகிறதெனினும் இந்த அத்தியாயம் மட்டும் சிறப்பாக சாஸ்திரம் எனப்படுகிறது. ஏனென்றால் வேதாந்தத்தின் சாரம் முழுதும் இதில் இருக்கிறது. பரத்தை அறிபவனே ஞானியாகிறான். அவனுடைய கடமைகளெல்லாம் பிரம்ம

ஞானத்தைப் பெறுதலில் முற்றுப்பெற்று விடுகின்றன. பரத்தை அறியமுயலுதற்கு மேலான கடமை மனிதனுக்கு இல்லை. பரத்தை அறிந்துகொள்ளுதற்கு நிகரான குறி வேறு ஒன்று இல்லை. பரத்தை அறிதற்கு மேலான புருஷார்த்தமில்லை. பரத்தை அறிபவன் பரத்தை அடைகிறான். பரத்தை அறிபவன் பரம் ஆய்விடுகிறான். அவனே முக்தனாகிறான்.

*பெறுதற்கரிய இம்மானிடப் பிறவியைப் பெற்றவன் இப்பிறவியிலேயே ஈசுவரனை அறிய முயலாது போனால் வீணில் பிறந்தவனேயாவான்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे
श्रीकृष्णार्जुनसंवादे पुरुषोत्तमयोगो नाम
पञ्चदशोऽध्यायः ॥

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே
புருஷோத்தமயோகோ நாம
பஞ்சதசோऽத்யாய: ॥

***பிரம்ம வித்தையைப் புகட்டுவதும், யோக சாஸ்திரமானதும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமாக வந்துள்ளதுமாகிய பகவத்கீதை என்னும் உபநிஷதத்தின்கண் புருஷோத்தம யோகம் என்ற பதினைந்தாம் அத்தியாயம்.***

# षोडशोऽध्यायः

## பதினாறும் அத்தியாயம்

### दैवासुरसम्पद्विभागयोगः

### தெய்வாஸுர ஸம்பத் விபாக யோகம்

**श्री भगवानुवाच**

**अभयं सत्त्वसंशुद्धिर्ज्ञानयोगव्यवस्थितिः ।**
**दानं दमश्च यज्ञश्च स्वाध्यायस्तप आर्जवम् ॥ १**

ஸ்ரீ பகவானுவாச

அபயம் ஸத்த்வஸம்சுத்திர்ஞானயோகவ்யவஸ்திதி: ।
தானம் தமஸ்ச யக்ஞஸ்ச ஸ்வாத்யாயஸ்தப ஆர்ஜவம் ॥ 1

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

अभयं அபயம் *பயப்படாதிருத்தல்* सत्त्व संशुद्धिः ஸத்வ ஸம்சுத்தி: *உள்ளத்தின் தூய்மை* ज्ञानयोग व्यवस्थितिः ஞானயோக வ்யவஸ்திதி: *ஞானத்திலும், யோகத்திலும் நிலைத்திருத்தல்* दानं தானம் *கொடை* दमः தம: *புறக்கரணங்களையடக்குதல்* यज्ञः யக்ஞ: *யாகம்* स्वाध्यायः ஸ்வாத்யாய: *சாஸ்திரம் கற்பது* तपः தப: *தபசு* आर्जवं ஆர்ஜவம் *நேர்மை,*

ஸ்ரீ பகவான் சொன்னது

***அஞ்சாமை, உள்ளத்தூய்மை, ஞானத்திலும் யோகத்திலும் நிலைத்திருத்தல், ஈகை, பொறிகளையடக்குதல், யாகம், சாஸ்திரம் படித்தல், தபசு, நேர்மை,*** 1

*அச்சம் அறியாமையினின்று வருகிறது. அஞ்சுபவன் ஒன்றுக்கும் உதவான். அஞ்சாமை மேன்மையனைத்தையும் கொடுக்கிறது. ஒவ்வொரு தெய்வமும்*

அபயகரம் உடைத்திருப்பது, அஞ்சாமையும் தெய்வத்தை அணுகுதலும் ஒன்றே என்று விளக்குதற்காம்.

உள்ளத் தூய்மை என்பது வஞ்சகமும் பொய்யு மின்றிப் பிறரோடு இணக்கம் கொள்ளுதலாம்.

நித்திய அநித்திய வஸ்துக்களைத் தெளிவுபட அறிதல் ஞானம். அப்படி அறிந்தான பிறகு அதற்கேற்ப ஒழுகுதல் யோகமாகிறது. இங்ஙனம் ஞானத்திலும் யோகத்திலும் யாண்டும் நிலைத்திருத்தல் வேண்டும்.

தனக்குப் பயன்படுகிற பொருள்கள் பிறர்க்கும் பயன்படவேண்டும் என்று அன்புடனும் பணிவுடனும் அவைகளை வழங்குதல் தானமாகிறது.

தமம் அல்லது பொறிகளை அடக்குதல் என்பது வெளியுலகில் உள்ள விஷயங்களின்மீது, அவைகளை அனு பவிக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் இந்திரியங்களை உலவவிடாது தடுத்தலாம்.

தான் செய்கின்ற கிருத்தியங்களின் மூலம் தன்னைக் கடவுளுக்கென்றே ஒப்படைத்தல் யாகம் என்று பெயர் பெறுகிறது. தேவாராதனைகளை யெல்லாம் யாகமென்று சொல்லலாம்.

பாரமார்த்திக விஷயங்களைப் புகட்டுகிற சாஸ்திரங் களைப் பக்தி சிரத்தையுடன் படிப்பது சுவாத்யாயம் என்ற பெயர் பெறுகிறது.

உடலையும் உள்ளத்தையும் கட்டுப்பாடுகளுக்கு உட் படுத்தித் தன்னை மேலான இயல்புடையவனாக மாற்ற முயலுதல் தவம்.

சிந்தையிலும் சொல்லிலும் செயலிலும் கோணலில் லாத்தன்மையே ஆர்ஜவம் அல்லது நேர்மை.

अहिंसा सत्यमक्रोधस्त्यागः शान्तिरपैशुनम् ।
दया भूतेष्वलोलुप्त्वं मार्दवं ह्रीरचापलम् ॥ २

அஹிம்ஸா ஸத்யமக்ரோதஸ்த்யாக: சாந்திரபைசுனம் |
தயா பூதேஷ்வலோலுப்த்வம் மார்தவம் ஹ்ரீரசாபலம் || 2

अहिंसा அஹிம்ஸா *அஹிம்சை* सत्यं ஸத்யம் *உண்மை* अक्रोधः அக்ரோத: *கோபமின்மை* त्यागः த்யாக: *துறவு* शान्तिः சாந்தி: *அமைதி* अपैशुनं அபைசுனம் *கோள் சொல்லாமை* भूतेषु दया பூதேஷுதயா *உயிர்களிடத்து இரக்கம்* अलोलुप्त्वं அலோலுப்த்வம் *பிறர்பொருளை விரும்பாமை* मार्दवं மார்தவம் *மிருதுத்தன்மை* ह्रीः ஹ்ரீ: *நாணம்* अचापलं அசாபலம் *மனத்திட்பம்,*

***தீங்கிழையாமை, உண்மை, சினமின்மை, துறவு, அமைதி, கோள் சொல்லாமை, உயிர்களிடத்து இரக்கம், பிறர் பொருளை விரும்பாமை, இனிமை, நாணம், மனம் சலியாமை,*** 2

*உயிர்களைத் தனக்கும் இறைவனுக்கும் புறம்பாக நினைக்கும்பொழுது அவைகளுக்குத் தீங்கு செய்து தனக்கு வேண்டியதைப் பெறலாம் என்ற எண்ணம் வருகிறது. அவைகளையெல்லாம் இறைவனோடு சம்பந்தப்பட்டவைகளாக அறியும்போது அஹிம்சை தானாக வந்தமைகிறது. கடவுள் ஒருவரே மெய்ப்பொருள் என்னும் தத்துவத்துக்கு ஒப்ப உணர்வதும் உரைப்பதும் சத்தியமாகும். மற்றவர்கள் தன்னை ஹிம்சை செய்கின்றபொழுது தான் அவர்களைத் தன்மயமாயுணர்ந்து அவர்களிடத்துக் கோபித்துக் கொள்ளாதிருப்பது குரோதமின்மையாகும். பொருள்களெல்லாம் பரமனுக்கு உரியவைகளென்று அறிந்து அவைகளிடத்து உரிமை பாராட்டாதிருப்பது தியாகம். மனதின்கண் அமைந்துள்ள நடு நிலை சாந்தி எனப்படுகிறது. உயிர்களிடத்து இரக்கம் அல்லது பூததயை என்பது துன்புறுபவர்களைப் பார்த்து மனம் கசிதல். இந்திரியார்த்தங்களிடத்து இந்திரியங்கள் உலவும் பொழுதும் மனப்பற்று வாராதிருத்தல் அலோலுப்துவம் அல்லது பிறர் பொருளை விரும்பாமை என்பதாகிறது. பிறரைத் தாழ்த்திப் பேசுதல் சிற்றியல்புடையாரது போக்கு. அது पैशुनं பைசுனம் எனப்படு*

கிறது. பிறரது சிறப்பைப்பற்றியே பேசும்பொழுது அது अपैशुनं அபைசுனம் எனப்படுகிறது. புறங்கூறுமை அல்லது கோள் சொல்லாமை சீரியரது பாங்காகும். மார்தவம் அல்லது மிருதுத் தன்மை அல்லது இனிமை பண்பட்டவர்களிடத்தே காணப்படும். மற்றவர்கள் தங்களைப் புகழும் போது நல்லார்க்கு நாணம் வருகிறது. தகாத செயலில் ஈடுபடவும் அவர்கள் நாணுகின்றனர். மனம் சலனமடையும் போது அதன் புறத்தோற்றமாகிய உடலும் அனுவசியமாக அசைகிறது. உள்ளத்தையும் உடலையும் காரணம் ஏற்பட்டாலொழிய அசையாது வைத்திருப்பது அமைதி பெற்றவர்களுடைய செயலாகும்.

**तेजः क्षमा धृतिः शौचमद्रोहो नातिमानिता ।**
**भवन्ति संपदं दैवीमभिजातस्य भारत ॥ ३**

தேஜ: க்ஷமா த்ருதி: சௌசமத்ரோஹோ நாதிமானிதா ।
பவந்தி ஸம்பதம் தைவீமபிஜாதஸ்ய பாரத ‖ 3

तेजः தேஜ: *தைரியம்* क्षमा க்ஷமா *பொறை* धृतिः த்ருதி: *உறுதி* शौचं சௌசம் *தூய்மை* अद्रोहः அத்ரோஹ: *வஞ்சகமின்மை* न अतिमानिता ந அதிமானிதா *செருக்கின்மை (ஆகிய இவைகள்)* दैवीं सम्पदं தைவீம் ஸம்பதம் *தெய்வ சம்பத்துடன்* अभिजातस्य அபிஜாதஸ்ய *பிறந்தவனுக்கு* भवन्ति பவந்தி *இயல்பாகின்றன* भारत பாரத *அர்ஜுனா.*

***தைரியம், பொறை, மனவுறுதி, தூய்மை, வஞ்சகமின்மை, செருக்கின்மை ஆகிய இவைகள் தெய்வ சம்பத்துடன் பிறந்தவனுக்கு இயல்பாகின்றன, அர்ஜுனா. 3***

கயவர்களுக்கிடையில் பயப்படாதிருத்தல் தேஜஸ் அல்லது தைரியமாம். பிறர் செய்த தீங்குகளுக்காக அவர்களைத் தண்டிக்க வல்லவனாயிருந்தும் அவர்களை மன்னித்துவிட்டு, அதை மறந்துவிடுவது க்ஷமை என்ற பெயர் பெறுகிறது. மனதின்கண் அமைந்துள்ள திருதி அல்லது உறுதியானது உடலுக்கும் இந்திரியங்களுக்கும் உண்டாகின்ற

*சோர்வை நீக்குகிறது. விரைவில் சோர்வு உண்டாகாதும் அது தடுக்கவல்லது. மனம், மொழி, மெய் ஆகிய மூன்றும் அழுக்குப்படியாதிருத்தல் சௌசம் அல்லது தூய்மையாம். உடல் அழுக்கை நீக்குவது யாருக்கும் எளிது. மனத்தகத்துக் கீழான எண்ணம் வாராது தடுப்பதால் அது தூயதாகிறது. எண்ணம் சுத்தமாயிருந்தால் சொல்லும் தானே சுத்தியடைகிறது. பிறர்க்குத் தீங்கு செய்யவேண்டும் என்ற எண்ணம் உண்டாகாதிருந்தால் அது அத்ரோகம் அல்லது வஞ்சகமின்மையாகிறது. பிறர் தன்னை மிக மதிக்கவேண்டும் என்று நினைப்பது செருக்கு. அச்சமின்மையிலிருந்து செருக்கின்மை ஈறுக இவை யாவும் தெய்வ சம்பத்துக்களாகின்றன.*

*இனி, இதற்கு மாறுயுள்ள அசுர சம்பத்து விளக்கப்படுகிறது :—*

दम्भो दर्पोऽभिमानश्च क्रोधः पारुष्यमेव च ।
अज्ञानं चाभिजातस्य पार्थ संपदमासुरीम् ।। ४

தம்போ தர்ப்போऽபிமானஸ்ச க்ரோத: பாருஷ்யமேவ ச ।
அக்ஞானம் சாபிஜாதஸ்ய பார்த்த ஸம்பதமாஸுரீம் ॥ 4

पार्थ பார்த்த *ஓ பார்த்தா* दम्भः தம்ப: *பகட்டு* दर्पः தர்ப்ப: *இறுமாப்பு* अभिमानः च அபிமான: ச *தற்பெருமையும்* क्रोधः க்ரோத: *சினமும்* पारुष्यं च பாருஷ்யம் ச *கடுமையும்* अज्ञानं एव च அக்ஞானம் ஏவ ச *அக்ஞானமும்* आसुरीं सम्पदं ஆஸுரீம் ஸம்பதம் *அஸுர சம்பத்தை* अभिजातस्य அபிஜாதஸ்ய *(கொண்டு) பிறந்தவனுக்கு (உண்டு).*

***பார்த்தா! பகட்டும், இறுமாப்பும், தற்பெருமையும், சினமும், கடுமையும், அக்ஞானமும் அஸுர சம்பத்தை உடையவனுய்ப் பிறந்தவனுக்குண்டு.*** 4

*ஒழுக்கத்தில் தன்னைச் சிறந்தவனுகக்காட்டிக்கொள்ளுதலும், ஆடை ஆபரணத்தைக் கொண்டு தன்னை மிகைபட அலங்கரித்தலும் பகட்டாகிறது. தனக்குக் கல்வியும்,*

செல்வமும், குலமும் மிக வாய்த்திருப்பதாக எண்ணித் தற்பெருமைகொள்ளுதல் இறுமாப்பாம். அழகில்லாதவனை அழகன் என்றும், குருடனைக் கண்ணான் என்றும், கீழோனை மேலோன் என்றும் சொல்லிப் பரிகசிப்பது கடுமைக்குச் சான்றாகிறது. தர்மம் அதர்மம் ஆகியவைகளைப் பற்றித் தவறுதலாக நினைப்பது அக்ஞானமாம்.

*பக்ஷணங்களின் மேல்கூடு அரிசிமாவினால் செய்யப்பட்டிருக்கும். அவைகளின் உள்ளே வைக்கப்பட்டிருக்கும் பண்டங்கள் வேறு வேறு விதமானவைகளாக இருக்கும். உள்ளிருக்கும் பொருள்களுக்கு ஏற்ப பக்ஷணங்கள் நல்லவையாகவோ கெட்டவையாகவோ இருக்கும். அதுபோல மானிட சரீரங்கள் எல்லாம் ஒரேவிதமான பொருளால் ஆக்கப்பட்டிருப்பினும் ஹிருதய சுத்திக்கு ஏற்றபடி மனிதர்கள் வித்தியாசப்படுவர்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

இயல்பு வேறுபாட்டால் வரும் பயன் யாது? விடை வருகிறது :—

दैवी संपद्विमोक्षाय निबन्धायासुरीमता ।
मा शुचः संपदं दैवीमभिजातोऽसि पाण्डव ॥ ५

தைவீ ஸம்பத்விமோக்ஷாய நிபந்தாயாஸுரீ மதா ।
மா சுச: ஸம்பதம் தைவீமபிஜாதோऽஸி பாண்டவ ॥ 5

दैवी सम्पत् தைவீ ஸம்பத் *தெய்வசம்பத்தானது* विमोक्षाय விமோக்ஷாய *மோக்ஷத்தின் பொருட்டு* आसुरी ஆஸுரீ *அசுர சம்பத்து* निबन्धाय நிபந்தாய *பந்தத்தின் பொருட்டு என்று* मता மதா *கருதப்படுகிறது* पाण्डव பாண்டவ *பாண்டவா* मा शुचः மா சுச: *வருந்தாதே* दैवीं सम्पदं தைவீம் ஸம்பதம் *தெய்வ சம்பத்தை* अभिजातः அபிஜாத: *பெற்றுப்பிறந்தவனாய்* असि அஸி *இருக்கிறாய்.*

***தெய்வ சம்பத்து மோக்ஷம் தருவதென்றும், அசுரசம்பத்து பந்தப்படுத்துவதென்றும் கருதப்படுகிறது. பாண்டவா, வருந்தாதே; நீ தெய்வ சம்பத்து வாய்த்துப் பிறந்துள்ளாய். 5***

முற்பிறப்பில் மனிதன் செய்த முயற்சி வீண் போவதில்லை. தேவ இயல்பு சம்சார பந்தத்திலிருந்து விடுபடு

தற்கு ஏதுவாகிறது. அசுர இயல்பு பிறப்பு இறப்புக்குக் காரணமான பந்தத்தை பலப்படுத்துகிறது. தன்னிடத்துள்ள இயல்பு எத்தகையதோ வென்று அர்ஜுனனுக்கு சந்தேகம் ஏற்பட்டிருக்கலாம். ஜீவனுடைய முக்கால நிலைமையையும் அறிகிற பகவானுக்கு அர்ஜுனனுடைய வரலாறு நன்கு தெரியும். அவனுக்கு ஆறுதல் சொல்லுவதோடுகூட தேவசம்பத்தையுடைய அவன் முக்திக்கும் தகுந்தவனுகிருன் என்கின்ருர் பகவான். ஒரு ஜன்மத்தில் அடைந்த பயிற்சி அடுத்த ஜன்மத்தில் அந்த ஜீவனது இயல்பாக அவனிடத்து அமைகிறது என்பதும் விளங்குகிறது.

ஜீவர்களுடைய இயல்புகளை யெல்லாம் சுருக்கமாக எப்படி வகைப்படுத்தலாம்? விடை வருகிறது :—

द्वौ भूतसर्गौ लोकेऽस्मिन् दैव आसुर एव च ।
दैवो विस्तरशः प्रोक्त आसुरं पार्थ मे शृणु ॥ ६

த்வெள பூதஸர்கெள லோகேऽஸ்மின் தைவ ஆஸுர ஏவ ச ।
தைவோ விஸ்தரச: ப்ரோக்த ஆஸுரம் பார்த்த மே ச்ருணு ॥ 6

पार्थ பார்த்த *பார்த்தா* अस्मिन् लोके அஸ்மின் லோகே *இந்த உலகத்தில்* दैव: தைவ: *தெய்விகம் என்றும்* आसुर: च ஆஸுர: ச *அசுரம் என்றும்* द्वौ த்வெள *இருவகை* भूतसर्गौ பூதஸர்கெள *உயிர்ப்பிறப்புகள்* दैव: தைவ: *தெய்வ இயல்பு* विस्तरशः விஸ்தரச: *விஸ்தாரமாக* प्रोक्त: ப்ரோக்த: *பகரப்பட்டது* आसुरं ஆசுரம் *அசுர இயல்பை* मे மே *என்னிடம்* शृणु ச்ருணு *கேள்.*

***பார்த்தா, தெய்விகம் என்றும் அசுரம் என்றும் இருவகை உயிர்ப் பிறப்புகள் இவ்வுலகில் உண்டு. தெய்வ இயல்பு விரிவாகப் பகரப்பட்டது; அசுர இயல்பை என்னிடம் கேள்.*** 6

ஸ்தாவர ஜங்கமங்களாகிய உயிர் வகைகள் அனைத்திடத்தும் ஏற்றத் தாழ்வுபட தெய்வ சம்பத்தோ அல்லது அசுர சம்பத்தோ உண்டு. ஒன்று இனியது; மற்ருென்று

இன்னாதது. ஒன்று ஆத்ம வளர்ச்சிக்குத் துணைபுரிகிறது; மற்றொன்று பிற்போக்கை உண்டாக்குகிறது. மனிதர்களுக்கிடையில் உள்ள அசுர இயல்பு இனி விரிவாக விளக்கப் படுகிறது. கருத்தில் வைக்கத் தகுதியற்ற எதிர்மறையான எண்ணங்களும் போதனைகளும் கீதையில் காணப்படுவது அரிது. ஈண்டு அத்தகைய கருத்துக்கள் வருவது ஒரு காரணத்தை முன்னிட்டேயாம். சாதகர்கள் அவைகளின் தோஷத்தை யறிந்து அவைகளை நீக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் அசுர இயல்பு விரித்து விளக்கப்படுகிறது.

**प्रवृत्तिं च निवृत्तिं च जना न विदुरासुराः ।**
**न शौचं नापि चाचारो न सत्यं तेषु विद्यते ॥ ७**

ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச ஜநா ந விதுராஸுரா: ।
ந சௌசம் நாபி சாசாரோ ந ஸத்யம் தேஷு வித்யதே ॥ 7

आसुराः जनाः ஆஸுரா: ஜநா: *அசுரஜனங்கள்* प्रवृत्तिं च ப்ரவ்ருத்திம் ச *செய்யத்தகுந்த நல்வினையையும்* निवृत्तिं நிவ்ருத்திம் *விலக்கத்தகுந்த தீவினையையும்* न विदुः ந விது: *அறியார்* तेषु தேஷு *அவர்களிடத்து* न शौचं विद्यते ந சௌசம் வித்யதே *தூய்மையில்லை* न अपि आचारः ந அபி ஆசார: *நல்லொழுக்கமுமில்லை* न च सत्यं ந ச ஸத்யம் *சத்தியமுமில்லை.*

***செய்யத் தகுந்த நல்வினையையும், தகாத தீவினையையும், அசுர இயல்புடையார் அறியார். அவர்களிடம் தூய்மையும் நல்லொழுக்கமும் வாய்மையும் இல்லை.*** *7*

நலம் தருவது எதுவோ அது செய்யத் தகுந்தது. அது தர்மம் எனப்படுகிறது. கேடு விளைவிப்பது எதுவோ அது செய்யத்தகாதது. அத்தகையது அதர்மம் எனப்படுகிறது. விலங்கு இனங்களும் ஓரளவு நலம் கேடுகளை அறிந்து கொள்கின்றன. அசுர இயல்புடையார்க்கு அவை விளங்குவதில்லை. அவர்கள் மனதில் எழும் எண்ணங்கள் தூயவைகளல்ல; உடலில் ஆகும்செயல் ஒழுக்கமில்லாதது;

வாயில் பேசுவது உண்மையல்ல. ஆக, முக்கரணங்களும் அவர்களால் முறைதவறிக் கையாளப்படுகின்றன.

ஏன் அவர்கள் அப்படித் தாறுமாறாக நடந்துகொள்ளுகிறார்கள் என்று அவர்களைக் கேட்டால் அவர்களிடமிருந்து வரும் விடையாவது :—

**असत्यमप्रतिष्ठं ते जगदाहुरनीश्वरम् ।**
**अपरस्परसंभूतं किमन्यत्कामहैतुकम् ॥ ८**

அஸத்யமப்ரதிஷ்டம் தே ஜகதாஹுரநீச்வரம் ।
அபரஸ்பரஸம்பூதம் கிமன்யத்காமஹைதுகம் ॥ 8

जगत् ஜகத் *ஜகத்தானது* असत्यं அஸத்யம் *சத்தியமில்லாதது* अप्रतिष्ठं அப்ரதிஷ்டம் *தர்ம நிலையில்லாதது* अनीश्वरं அநீச்வரம் *கடவுளில்லாதது* अपरस्परसम्भूतं அபரஸ்பர ஸம்பூதம் *பெண், ஆண் இணக்கத்தால் ஆனது* कामहैतुकं காமஹைதுகம் *காமத்தைக் காரணமாகக்கொண்டது* किं अन्यत् கிம் அன்யத் *வேறு என்ன உள்ளது என்று* प्राहुः ப்ராஹு: *பகர்கிறார்கள்.*

***உலகம் உண்மையில்லாதது, தர்மபிரதிஷ்டையில்லாதது, கடவுளில்லாதது; காமத்தைக் காரணமாகக் கொண்டு ஆண் பெண் இணக்கத்தாலானது அன்றி வேறு என்னவிருக்கிறது, என்கின்றனர். 8***

*சத்தியமும், தர்மமும், ஈசுவரனும் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டவைகள். அவைகளின் ஆதிக்கமின்றி உலகம் நடவாது என்பது ஆஸ்திகர் கொள்கை. லோகாயதர்கள் அம்மூன்றையும் மறுக்கின்றனர். காமத்தின் பயனாக வந்துள்ள உலக வாழ்க்கையை வேண்டியவாறு கையாண்டு களித்திரு, என்பது அவர்களது கொள்கை.*

*சமயானுஷ்டான இன்பங்களில் எதனிடத்தும் வெறுப்புக்கொள்வதிலிருந்து ஒருவனை லௌகிகனென நன்கறியலாம். பகவந் நாமத்தை உச்சரிக்கவும் திவ்விய கானத்தைக் கேட்கவும் அவனுக்குப் பிரியம் இருப்பதில்லை. பிறர் அவ்வாறு செய்வதையும் அவன் தடுப்பான். தோத்திரம் செய்வதை நிந்திப்பவனும், தர்ம ஸ்தாபனங்களையும் தர்மாத்மாக்களையும் ஏளனம் பண்ணுபவனும் சரியான லௌகிகனாவான்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*இக்கொள்கை எத்தகைய வாழ்க்கையாகப் பரிண மிக்கிறது? விடை வருகிறது :—*

**एतां दृष्टिमवष्टभ्य नष्टात्मानोऽल्पबुद्धयः ।**
**प्रभवन्त्युग्रकर्माणः क्षयाय जगतोऽहिताः ॥ ९**

ஏதாம் த்ருஷ்டிமவஷ்டப்ய நஷ்டாத்மானோऽல்பபுத்தய: ।
ப்ரபவந்த்யுக்ரகர்மாண: க்ஷயாய ஜகதோऽஹிதா: ॥ 9

अल्प बुद्धयः அல்ப புத்தய: *அற்ப புத்தியுடையவர்கள்* एतां दृष्टिं ஏதாம் த்ருஷ்டிம் *இந்தக் கொள்கையை* अवष्टभ्य அவஷ்டப்ய *பிடித்துக் கொண்டு* नष्ट आत्मानः நஷ்ட ஆத்மான: *ஆத்ம நஷ்டமடைந்தவர்களாய்* उग्र कर्माणः உக்ரகர்மாண: *கொடூரச்செயல் புரிபவர்களாய்* जगतः ஜகத: *ஜகத்தினுடைய* अहिताः அஹிதா: *எதிரிகளாய்* क्षयाय க்ஷயாய *அதன் அழிவுக்கென்று* प्रभवन्ति ப்ரபவந்தி *தோன்றியிருக்கின்றனர்.*

***இக்கொள்கையையுடைய புல்லறிவாளர் ஆத்ம நஷ்டமடைந்தவர்களாய், கொடுஞ் செயல் புரிபவர்களாய், உலகின் பகைவர்களாய், அதன் அழிவுக்கென்றே தோன்றியிருக்கின்றனர். 9***

*இந்திரியங்களின் வசப்பட்டு விரைந்து விஷயங்களில் மூழ்குமளவு ஒருவன் புல்லறிவாளன் ஆகிறான். தன்னையே அழித்துக்கொள்ளுதல் அதன் முதற்படி. அதர்மம் அபரிமிதமாய்க் கையாளப்படுகிறது. உலகுக்கும் அது கேடாய் முடிகிறது. பொய்யும் அதர்மமும் வாழ்க்கைத்திட்டமல்ல என்பதற்கு அவனுடைய செயலே சான்றாகிறது.*

*அசுர இயல்புடையவரது தீய செயல் என்னென்ன வடிவெடுக்கிறது, என்று வினவுமிடத்து அதன் விரிவான விளக்கம் வருகிறது :—*

**काममाश्रित्य दुष्पूरं दम्भमानमदान्विताः ।**
**मोहाद्गृहीत्वाऽसद्ग्राहान्प्रवर्तन्तेऽशुचिव्रताः ॥ १०**

காமமாச்ரித்ய துஷ்பூரம் தம்பமானமதான்விதா: ।
மோஹாத் க்ருஹீத்வாऽஸத்க்ராஹான் ப்ரவர்த்தந்தேऽசுசி-
வ்ரதா: ॥ 10

दुष्पूरं துஷ்பூரம் *பூர்த்திபண்ண முடியாத* कामं காமம் *காமத்தை* आश्रित्य ஆச்ரித்ய *சார்ந்து* दम्भ मान मद अन्विताः தம்ப மான மத அன்விதா: *ஆடம்பரமும், தற்பெருமையும், மதமும் பொருந்தியவர்களாய்* मोहात् மோஹாத் *மதிமயக்கத்தால்* असद्ग्राहान् அஸத்க்ராஹான் *கெட்ட எண்ணங்களை* गृहीत्वा க்ருஹீத்வா *கிரகித்துக்கொண்டு* अशुचि व्रताः அசுசி வ்ரதா: *தீயதீர்மானங்களுடையவர்களாய்* प्रवर्तन्ते ப்ரவர்த்தந்தே *தொழில் புரிகிறார்கள்.*

***நிறைவேறாத நெடுங்காமம் பிடித்தவர்களாய், ஆடம்பரமும், பெருமையும், மதமும் பொருந்தியவர்களாய், மயக்கத்தால் கெட்ட எண்ணங்களைக் கிரகித்துத் தீய தீர்மானங்களுடன் தொழில் புரிகின்றனர்.*** **10**

चिन्तामपरिमेयां च प्रलयान्तामुपाश्रिताः ।
कामोपभोगपरमा एतावदिति निश्चिताः ॥ ११

சிந்தாமபரிமேயாம் ச ப்ரலயாந்தாமுபாச்ரிதா: ।
காமோபபோகபரமா ஏதாவதிதி நிஸ்சிதா: ॥ 11

प्रलय अन्तां ப்ரலய அந்தாம் *சாகும் வரையில்* अपरिमेयां அபரிமேயாம் *அளவுகடந்த* चिन्तां சிந்தாம் *கவலையை* उपाश्रिताः உபாச்ரிதா: *அடைந்தவர்களாய்* काम उपभोग परमाः காம உபபோக பரமா: *காம நுகர்ச்சியையே அனைத்திலும் மேலானதாகக் கருதி* एतावत् इति ஏதாவத் இதி *இவ்வளவுதான் என்று* निश्चिताः நிஸ்சிதா: *தீர்மானம் செய்தவர்களாய்;*

***சாகும் வரையில் அளவு கடந்த கவலையையுடையவர்களாய், காம நுகர்ச்சியையே அனைத்திலும் மேலானதாகக் கருதி, மற்றொன்றுமில்லை என்று தீர்மானம் செய்தவர்களாய்;*** **11**

*மரணத்தோடு அவர்களது ஆசை முடிவுபெறுவதாக மற்றவர்களுக்குத் தென்படுகிறது. திரும்பப் பிறக்கும்பொழுது அதே ஆசை தோற்றத்துக்கு வருகிறது. ஆகையால் அது பூர்த்திபண்ண முடியாத ஆசையாகிறது.*

கொடிய துன்ப துயரங்களை மிகுதியாக அனுபவித்தாலும் லௌகிகர்களுக்கு நற்புத்தி உண்டாவதில்லை. ஒட்டகங்களுக்கு முட் செடிகளில் ஆசை அதிகம். அவைகளைத் தின்னத்தின்ன ஒட்டகங் களின் வாயிலிருந்து ரத்தம் அதிகமாகப் பெருகும். என்றாலும், அவை கள் முட் செடிகளைத் தின்பதை விடுவதில்லை.

அதைப்போல அநேகரால் ஏமாற்றப்பட்ட போதும் ஆபத்துக் கள் அநேகம் வந்துற்றபோதும் கஷ்டப்படுகிறார்கள். அடுத்த கணத் தில் எல்லாவற்றையும் மறந்து உலக விஷயங்களையே தேடி அலைகின் றார்கள். தன் மனைவி இறந்து விடுகிறாள், அல்லது தன்னைவிட்டு ஓடி விடுகின்றாள். ஆனாலும் உடனே திரும்பவும் விவாகம் செய்துகொண்டு விடுகின்றான்! அல்லது அவனது குழந்தை இறந்துவிடுகிறது; கதறி அழுகின்றான்! பெரிதும் துக்கசாகரத்தில் ஆழ்ந்து வருந்துகிறான். என்றாலும் மறு கணத்தில் அந்தக் குழந்தையின் நினைவே இல்லாது வாழ்க்கை நடத்துகிறான்! குழந்தையைப் பறிகொடுத்த தாய் துக்கத் தால் சோகமாகிவிடுகின்றாள். ஆனால் சற்றுப்பிறகு அவள் தன் நகை களைச்சரிப்படுத்துவதிலும், நல்ல புடவைகள் உடுத்துவதிலும், வாசனை சோப்பைத் தேடுவதிலும் ஈடுபடுகிறாள்! பெண் குழந்தைகளின் விவா கங்களால் பெற்றோர் தரித்திர தசையை அடைந்துவிடுகிறார்கள்; பின் னும் அவர்களுக்குக் குழந்தைகள் பிறந்துகொண்டேதான் இருக்கின் றன! இவர்கள் வழக்கு வியாச்சியங்களில் சகல பொருள்களையும் இழந்துவிட்டு வருந்தினாலும் மேலும் வழக்கு சம்பந்தமாக நீதி ஸ்தலத் திற்குப் போவதை நிறுத்துகிறதில்லை. குழந்தைகளைக் காப்பாற்ற வழி யில்லாமற் போனாலும் ஒவ்வொரு வருஷமும் குழந்தைகளைப் பெற் றெடுக்கத் தவறுவதில்லை. என்ன ஆச்சரியம்!

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**आशापाशशतैर्बद्धाः कामक्रोधपरायणाः ।**
**ईहन्ते कामभोगार्थमन्यायेनार्थसञ्चयान् ॥ १२**

ஆசாபாசசதைர்பத்தா: காமக்ரோதபராயணா: ।
ஈஹந்தே காமபோகார்த்தமன்யாயேனார்த்தஸஞ்சயான் ॥ 12

आशा पाश शतैः ஆசா பாச சதை: *நூற்றுக்கணக்கான ஆசைக் கயிறுகளால்* बद्धाः பத்தா: *தளைக்கப்பட்டவர்களாய்* काम क्रोध परायणाः காம க்ரோத பராயணா: *காமக் குரோதங்களின் வசப்பட்டவர்களாய்* काम भोग अर्थं காம போக அர்த்தம் *காமபோகத்தின் பொருட்டு* अन्यायेन அன்யாயேன *நியாயமற்றவழியில்* अर्थ सञ्चयान् அர்த்த ஸஞ்சயான் *பொருள் குவியல்களை* ईहन्ते ஈஹந்தே *தேடமுயல்கின்றனர்.*

**நூற்றுக்கணக்கான ஆசைக் கயிறுகளால் தளைக்கப்பட்டவர்களாய், காம க்ரோத வசப்பட்டவர்களாய், காமபோகத்தின் பொருட்டுச் செல்வக் குவியல் தேட முயலுகின்றனர். 12**

*செல்வத்தை நேர்மையான வழியில் சம்பாதித்து நல்ல காரியத்துக்குப் பயன்படுத்துவார்களானால் அது திரவிய யக்ஞமாகின்றது. பேராசையில் கட்டுண்டு, பொய்யும் களவும் புரிந்து பொருளைப் பெருமிதமாகத்தேடி போகத்தில் மூழ்குவது அசுரச் செயலாகிறது.*

*மனிதர்கள் இருவகுப்பினர் – மனிதர் என்ற பெயர் மாத்திரம் வகித்தவர் (மனுஷ்யர்), அறிவு விளங்கப்பெற்றவர் (மன்-ஹுஷ்யர்). ஈசுவரனை அடையவேண்டுமென்ற ஒரே நோக்கத்தை உடையவர்கள் பின்னர் சொன்ன வகுப்பினர். காமமும் காசாசையும் பிடித்து அலைபவர்கள் மனிதர் என்ற பெயர் மாத்திரம் வகித்தவர்கள்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

इदमद्य मया लब्धमिदं प्राप्स्ये मनोरथम् ।
इदमस्तीदमपि मे भविष्यति पुनर्धनम् ॥ १३

இதமத்ய மயா லப்தமிதம் ப்ராப்ஸ்யே மனோரதம் ।
இதமஸ்தீதமபி மே பவிஷ்யதி புனர்தனம் ॥ 13

अद्य அத்ய *இன்று* मया மயா *என்னால்* इदं இதம் *இது* लब्धं லப்தம் *அடையப்பட்டது* इदं मनोरथं இதம் மனோரதம் *இந்த விருப்பத்தை* प्राप्स्ये ப்ராப்ஸ்யே *பெற்றிடுவேன்* इदं अस्ति இதம் அஸ்தி *இது இருக்கிறது* पुनः புன: *மேலும்* मे மே *எனக்கு* इदं अपि धनं இதம் அபி தனம் *இந்தச் செல்வமும்* भविष्यति பவிஷ்யதி *வந்துசேரும்.*

**இன்று இது என்னால் அடையப்பட்டது; இவ்விருப்பத்தை நிறைவேற்றுவேன்; இது இருக்கிறது; மேலும் எனக்கு இச்செல்வம் வந்து சேரும். 13**

असौ मया हतः शत्रुर्हनिष्ये चापरानपि ।
ईश्वरोऽहमहं भोगी सिद्धोऽहं बलवान्सुखी ॥ १४

அஸௌ மயா ஹத: சத்ருர்ஹனிஷ்யே சாபரானபி ।
ஈச்வரோஹமஹம் போகீ ஸித்தோऽஹம் பலவான் ஸுகீ ॥ 14

असौ शत्रुः அஸௌ சத்ரு: *அந்தச் சத்துரு* मया மயா *என்னால்* हतः ஹத: *கொல்லப்பட்டான்* अपरान् च अपि அபரான் ச அபி *மற்றவர்களையும்* हनिष्ये ஹனிஷ்யே *கொல்லுவேன்* अहं ईश्वरः அஹம் ஈச்வர: *நான் ஆளுபவன்* अहं भोगी அஹம் போகீ *நான் போகத்தை அனுபவிப்பவன்* अहं सिद्धः அஹம் ஸித்த: *நான் காரியசித்திபெற்றவன்* बलवान् பலவான் *வலிவுடையவன்* सुखी ஸுகீ *இன்புறுபவன்.*

***அப்பகைவன் என்னால் கொல்லப்பட்டான்; மற்றவர்களையும் கொல்லுவேன்; நான் ஆளுபவன்; போகத்தை அனுபவிப்பவன்; காரிய சித்தன்; வலிவுடையவன்; இன்புறுபவன். 14***

आढ्योऽभिजनवानस्मि कोऽन्योऽस्ति सदृशो मया ।
यक्ष्ये दास्यामि मोदिष्य इत्यज्ञानविमोहिताः ॥ १५

ஆட்யோऽபிஜனவானஸ்மி கோऽன்யோऽஸ்தி ஸத்ருசோ மயா ।
யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்ய இத்யக்ஞானவிமோஹிதா: ॥ 15

आढ्यः ஆட்ய: *செல்வமுடையவன்* अभिजनवान् அபிஜனவான் *உயர்குலத்தவன்* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* मया மயா *எனக்கு* सदृशः ஸத்ருச: *சமானமானவன்* अन्यः कः अस्ति அன்ய: க: அஸ்தி *அன்னியன் யார் இருக்கிறான்* यक्ष्ये யக்ஷ்யே *யாகம் செய்வேன்* दास्यामि தாஸ்யாமி *தானம் செய்வேன்* मोदिष्ये மோதிஷ்யே *மகிழ்வடைவேன்* इति இதி *இப்படி* अज्ञान विमोहिताः அக்ஞான விமோஹிதா: *அக்ஞானத்தால் மயங்கினவர்கள்;*

***செல்வம் படைத்து உயர்குலத்தவனாயிருக்கிறேன்; எனக்கு நிகரானவன் வேறு எவன் இருக்கிறான்? யாகம் செய்வேன், தானம் கொடுப்பேன், மகிழ்வடைவேன் என்று அக்ஞானத்தில் மயங்கினவர்கள்; 15***

अनेकचित्तविभ्रान्ता मोहजालसमावृताः ।
प्रसक्ताः कामभोगेषु पतन्ति नरकेऽशुचौ ॥ १६

அனேகசித்தவிப்ராந்தா மோஹஜாலஸமாவ்ருதா: ।
ப்ரஸக்தா: காமபோகேஷு பதந்தி நரகேऽசுசௌ ॥ 16

अनेक चित्त विभ्रान्ताः அநேக சித்த விப்ராந்தா: *பல சிந்தனைகளால் குழப்பமடைந்தவர்* मोह जाल समावृताः மோஹ ஜால ஸமாவ்ருதா: *மோஹவலையில் மூடப்பெற்றவர்கள்* काम भोगेषु காமபோகேஷு *காமபோகங்களிலே* प्रसक्ताः ப்ரஸக்தா: *பற்றுதலுடையோர்* अशुचौ नरके அசுசௌ நரகே *பாழ் நரகில்* पतन्ति பதந்தி *வீழ்கின்றனர்.*

***பல எண்ணங்களில் குழப்பமடைந்தவர்கள், மோக வலையில் மூடப்பெற்றவர்கள், காமபோகங்களில் பற்றுடையவர்கள், பாழ் நரகில் வீழ்கின்றனர். 16***

*மன நிலைக்கு ஏற்றபடி வெளியுலகம் காட்சி கொடுக்கிறது. தெளிந்த மனமுடையவர்களுக்கு உலகம் சுவர்க்கமாகக் காட்சி கொடுக்கிறது. கெட்ட மனமுடையவர்களுக்கு அதே உலகம் கொடிய நரகமாகப் பிரதிபலிக்கிறது.*

*அசுரர்களும் யாகம் செய்வதுண்டு. அதன்விதம் வருகிறது:—*

आत्मसंभाविताः स्तब्धा धनमानमदान्विताः ।
यजन्ते नामयज्ञैस्ते दम्भेनाविधिपूर्वकम् ॥ १७

ஆத்மஸம்பாவிதா: ஸ்தப்தா தனமானமதான்விதா: ।
யஜந்தே நாமயக்ஞைஸ்தே தம்பேனாவிதிபூர்வகம் ॥ 17

आत्म सम्भाविताः ஆத்ம ஸம்பாவிதா: *தற்புகழ்ச்சியுடையவராய்* स्तब्धाः ஸ்தப்தா: *வணங்காதவர்கள்* धन मान मद अन्विताः தன மான மத அன்விதா: *செல்வச் செருக்கும் மதமுமுடையவர்* दम्भेन தம்பேன *இடம்பத்துக்காக* नामयज्ञैः நாமயக்ஞை: *பெயரளவில் யாகம் என்று சொல்லப்படும் கிரியைகளால்* अविधि पूर्वकं அவிதிபூர்வகம் *விதிவழுவி* ते தே *அவர்கள்* यजन्ते யஜந்தே *யாகம் செய்கின்றனர்.*

***தற்புகழ்ச்சியுடையார், வணக்கமிலார், செல்வச்செருக்கும் மதமுமுடையார் பெயரளவில்***

***யாகத்தை விதிவழுவி ஆடம்பரத்துக்காகச் செய்கின்றனர். 17***

*இக்காலத்தில் பலர் கோயில்கள் கட்டுவிப்பதும், விழாக்கள் கொண்டாடுவதும், ஆராதனை அபிஷேகங்கள் செய்வதும் இத்தகைய பாங்குடையவைகளாகின்றன. தங்களை விளம்பரப்படுத்திக் கொள்ளுதல் ஒன்றே அதன் கருத்தாகும். கடவுளின் பெருமைக்கென்றே வினையாற்றுவது தெய்வசம்பத்துடையவர்களது இயல்பு. தங்களது சொந்தப் பெருமைக்கென்றே வினையாற்றுவது மற்றவர்களுடைய இயல்பு.*

अहंकारं बलं दर्पं कामं क्रोधं च संश्रिताः ।
मामात्मपरदेहेषु प्रद्विषन्तोऽभ्यसूयकाः ॥ १८

அஹங்காரம் பலம் தர்ப்பம் காமம் க்ரோதம் ச ஸம்ச்ரிதா: ।
மாமாத்மபரதேஹேஷு ப்ரத்விஷந்தோऽப்யஸூயகா: ॥ 18

अहंकारं அஹங்காரம் *அஹங்காரத்தை* बलं பலம் *பலத்தை* दर्पं தர்ப்பம் *தற்பெருமையை* कामं காமம் *காமத்தை* क्रोधं च க்ரோதம் ச *குரோதத்தையும்* आश्रिताः ஆச்ரிதா: *பற்றியவர்கள்* आत्म पर देहेषु ஆத்ம பரதேஹேஷு *தங்கள் தேகத்திலும் பிறர் தேகத்திலுமிருக்கிற* माम् மாம் *என்னை (ஈசுவரனை)* प्रद्विषन्तः ப்ரத்விஷந்த: *வெறுப்பவர்களாய்* अभ्यसूयकाः அப்யஸூயகா: *அவமதிப்பவர்களாகிறார்கள்.*

***அஹங்காரம், பலம், இறுமாப்பு, காமம், குரோதம்- இவைகளையுடையவர்கள் தங்கள் தேகத்திலும் பிறர் தேகத்திலுமுள்ள என்னை வெறுத்து அவமதிக்கின்றனர். 18***

*தங்களிடத்து உண்மையாகவே அமைந்துள்ள சில மேன்மைகளை மிகைப்படுத்தியும், இல்லாத சிலசிறப்புக்களை இருப்பதாகப் பாவித்தும் அகங்கரிக்கின்றனர் அசுர இயல்புடையவர்கள். அவித்தியா சொரூபமான இத்தகைய ஆணவத்தை அகற்றுவது எளிதன்று. பின்பு தங்களிடத்து வாய்த்த பலத்தையெல்லாம் மற்றவர்களைச் சிறுமைப்*

*படுத்துவதிலேயே உபயோகிக்கின்றனர். இனி, இறுமாப்பு ஒருவனை நெறி பிறழ்ந்து போகும்படியே தூண்டுகிறது.*

*எல்லார் உள்ளத்திலும் ஈசுவரன் வீற்றிருக்கிறான் என்பதை மறந்து, அவனது மேலான ஆலயமாகிய உடலைக் கீழ்மைப்படுத்தி இறைவனையே அவர்கள் புறக்கணிக்கின்றனர்.*

*அதனால் அசுரர்களுக்கு உண்டாகும் வீழ்ச்சியாவது:—*

**तानहं द्विषतः क्रूरान्संसारेषु नराधमान् ।**
**क्षिपाम्यजस्रमशुभानासुरीष्वेव योनिषु ॥ १९**

தானஹம் த்விஷத: க்ரூரான் ஸம்ஸாரேஷு நராதமான் ।
க்ஷிபாம்யஜஸ்ரமசுபானாஸுரீஷ்வேவ யோனிஷு ॥ 19

द्विषतः த்விஷத: *துவேஷமுடையவர்களை* क्रूरान् க்ரூரான் *கொடியவர்களை* नराधमान् நராதமான் *கடையவரை* अशुभान् அசுபான் *இழிந்தோரை* संसारेषु ஸம்ஸாரேஷு *பிறந்து இறந்து உழலும் உலகில்* आसुरीषु योनिषु एव ஆஸுரீஷு யோனிஷு ஏவ *அசுரவம்சத்திலேயே* अजस्रं அஜஸ்ரம் *எப்பொழுதும்* अहं அஹம் *நான்* क्षिपामि க்ஷிபாமி *தள்ளுகிறேன்.*

***துவேஷமுடையவர்களை, கொடியவர்களை, கடையவரை, இழிந்தோரை, பிறந்து இறந்து உழலும் உலகில் அசுரப்பிறவியிலேயே திரும்பத்திரும்ப நான் அவர்களைத் தள்ளுகிறேன்.*** ***19***

*வினைக்கேற்ற பிறவியுண்டாகிறது. வினையின் வேகம் தொடர்ந்து போகுமளவு பிறவியும் வளர்கிறது. இக்காரணத்தைமுன்னிட்டு பகவான் இங்ஙனம் பகர்கிறார்.*

**आसुरीं योनिमापन्ना मूढा जन्मनि जन्मनि ।**
**मामप्राप्यैव कौन्तेय ततो यान्त्यधमां गतिम् ॥ २०**

ஆஸுரீம் யோனிமாபன்னா மூடா ஜன்மனி ஜன்மனி ।
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம் ॥ 20

कौन्तेय கௌந்தேய *குந்தியின் மகனே* मूढाः மூடா: *மூடர்கள்* जन्मनि जन्मनि ஜன்மனி ஜன்மனி *பல பிறவிகளில்* आसुरीं योनिं आपन्नाः ஆஸுரீம் யோனிம் ஆபன்னா: *அசுர யோனிகளையடைந்து* मां अप्राप्य एव மாம் அப்ராப்ய ஏவ *என்னையடையாமலே* ततः अधमां गतिं ததஃ அதமாம் கதிம் *அதனிலும் கீழான கதியை* यान्ति யாந்தி *அடைகிறார்கள்.*

***குந்தியின் மகனே, மூடர்கள் பல பிறவிகளில் அசுரயோனிகளில் தோன்றி என்னையடையாமல் இன்னும் கீழான கதியையே அடைகிறார்கள். 20***

*கெட்ட இயல்பு ஒருவனை இன்னும் அதிக கேடுடையவனாக்குகிறது. ஆதலால் கீழ்மையிலேயே அவன் மேலும் மேலும் செல்பவனாகின்றான். மலையுச்சியினின்று கீழே உருண்டுவருகிற கல் பள்ளத்தாக்கு வரையில் விரைவது போன்று அசுரன் ஒருவன் புல்லிய நிலையின் எல்லை காணும் வரையில் கீழ்மையுறுகிறான்.*

*இத்தகைய கீழ்மைக்கு மூல காரணம் யாது? விடை வருகிறது :—*

**त्रिविधं नरकस्येदं द्वारं नाशनमात्मनः ।**
**कामः क्रोधस्तथा लोभस्तस्मादेतत्त्रयं त्यजेत् ॥ २१**

த்ரிவிதம் நரகஸ்யேதம் த்வாரம் நாசனமாத்மன : ।
காம: க்ரோதஸ்ததா லோபஸ்தஸ்மாதேதத் த்ரயம் த்யஜேத் ॥

कामः காம: *காமமும்* क्रोधः க்ரோத: *குரோதமும்* तथा ததா *அங்ஙனமே* लोभः லோப: *லோபமும்* इदं இதம் *இது* त्रिविधं த்ரிவிதம் *மூன்று விதமான* नरकस्य द्वारं நரகஸ்ய த்வாரம் *நரகத்தின் வாயில்* आत्मनः ஆத்மன: *ஜீவாத்மாவுக்கு* नाशनं நாசனம் *நாசத்தையுண்டுபண்ணுவது* तस्मात् தஸ்மாத் *ஆகையினால்* एतत् त्रयं ஏதத் த்ரயம் *இம்மூன்றையும்* त्यजेत् த்யஜேத் *துறத்தல் வேண்டும்.*

***காமம், குரோதம், லோபம் ஆகிய மூவித வாயிலையுடையது நரகம். இவை ஜீவனைக் கெடுக்***

***கும் தன்மையன. ஆகையால் இம்மூன்றையும் துறத்தல் வேண்டும். 21***

*அசுரப்பான்மைக்குப் பிறப்பிடம் ஈண்டுக் காட்டப் படுகிறது. இம்மூவிதக் குற்றங்களிலிருந்து அரக்கத்தன்மை வளர்கிறது. லோபம் என்பது போகப்பொருள்களைத் தனக் கென்றே கட்டிப் பிடித்தலாம். மனிதன் மேன்மையடை தற்கு இவை இடந்தருதலில்லை. இவைகளை நீக்கினால் மனி தன் மேலோன் ஆவான். இவைகளில் உழன்று உழன்று இறுதியில் மனத்தகத்து விரக்தியுண்டாகும் வரையில் ஒரு வன் அசுரப் பிறவிகளில் அழுந்தியாக வேண்டும்.*

*அவன் எப்படி மேன்மை யடைகிறான்? விடைவரு கிறது:—*

**एतैर्विमुक्तः कौन्तेय तमोद्वारैस्त्रिभिर्नरः ।**
**आचरत्यात्मनः श्रेयस्ततो याति परां गतिम् ॥ २२**

ஏதைர்விமுக்த: கௌந்தேய தமோத்வாரைஸ்த்ரிபிர்நர: ।
ஆசரத்யாத்மன: ச்ரேயஸ்ததோ யாதி பராம் கதிம் ॥ 22

कौन्तेय கௌந்தேய *குந்தி மைந்தா* एतैः त्रिभिः तमोद्वारैः ஏதை: த்ரிபி: தமோத்வாரை: *இம்மூன்று நரக வாயில்களினின்றும்* विमुक्तः नरः விமுக்த: நர: *விடுபட்ட மனிதன்* आत्मनः ஆத்மன: *தனக்கு* श्रेयः ச்ரேய: *நலன்* आचरति ஆசரதி *செய்துகொள்கிறான்* ततः தத: *பின்பு* परां गतिं பராம் கதிம் *மோக்ஷத்தை* याति யாதி *அடைகிறான்.*

***அர்ஜுனா, இம்மூன்று நரக வாயில்களினின் றும் விடுபட்டவன் தனக்கு நலன் செய்து கொண்டு பின்பு மோக்ஷத்தை யடைகிறான். 22***

*துக்கங்களுக் கெல்லாம் காரணம் அக்ஞானம். அக் ஞானத்தினின்றே காமம், குரோதம், லோபம் வருகின்றன. ஆக, அக்ஞான இருள் நரகத்துக்கு வாயிலாகிறது. அதி னின்று விலகியவன் சிறப்பு எய்துகிறான். முக்தியடைதல் அவனுக்கு இயல்பாக வந்தமைகிறது. கெட்டவன் ஒருவன் திரும்பி மேல்நோக்கிப்போக ஆரம்பித்துவிட்டால் அவன் அதிவிரைவில் முன்னேற்றமடைந்துவிடுகிறான். ஏனென்றால்*

*காமத்தையும் குரோதத்தையும் லோபத்தையும் அவன் அறவே நீத்துவிட வல்லவனாகிறான்.*

*அசுரத் தன்மையை அகற்றி மேன்மையடைதற்கு வழிகாட்டுவது எது? விடை வருகிறது:—*

**यः शास्त्रविधिमुत्सृज्य वर्तते कामकारतः ।**
**न स सिद्धिमवाप्नोति न सुखं न परां गतिम् ॥ २३**

ய: சாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய வர்த்ததே காமகாரத: ।
ந ஸ ஸித்திமவாப்னோதி ந ஸுகம் ந பராம் கதிம் ॥ 23

यः ய: *யார்* शास्त्रविधिं சாஸ்த்ரவிதிம் *சாஸ்திர விதியை* उत्सृज्य உத்ஸ்ருஜ்ய *புறக்கணித்துவிட்டு* कामकारतः காமகாரத: *காமத்தால் தூண்டப்பெற்று* वर्तते வர்த்ததே *வினையாற்றுகிறானோ* सः ஸ: *அவன்* सिद्धिं ஸித்திம் *பரிபூரணத்தன்மையை* न अवाप्नोति ந அவாப்னோதி *அடைகிறானில்லை* न सुखं ந ஸுகம் *சுகத்தை அடைகிறானில்லை* न परां गतिं ந பராம் கதிம் *மோக்ஷத்தை அடைகிறதில்லை.*

***காமத்தின் வசப்பட்டு சாஸ்திரத்தின் ஆணையைமீறி நடப்பவன் எவனோ அவன் பரிபூரணனாகான், சுகம் பெறான், முக்தியடையான். 23***

*சித்தி அல்லது பரிபூரணத்தன்மை யடைகின்றவனுக்கு வாழ்க்கை சுகமுடையதாகத் துவக்கி முக்தியடைதலில் முடிவு பெறுகிறது. இன்னதைச் செய் என்றும், இன்னதைச் செய்யாதே என்றும் சாஸ்திரம் ஆணையிடுகிறது. ஆசைக்கு அடிமையானவன் செய்யவேண்டாமென்பதைச் செய்கிறான். செய்யவேண்டியதைச் செய்யாது தவிர்க்கிறான். சாஸ்திரமோ மனிதனை மேலோனுக்குதற்கென்று அமைந்தது. ஆசையை வென்று சாஸ்திரத்தைப் பின்பற்றுபவர்க்கு அசுர இயல்பைக் களைந்து தெய்வ சம்பத்தைப் பெறுவது எளிதாகிறது.*

*இக்காரணத்தை முன்னிட்டுச் சாதகன் ஒருவன் செய்யவேண்டியதாவது:—*

तस्माच्छास्त्रं प्रमाणं ते कार्याकार्यव्यवस्थितौ ।
ज्ञात्वा शास्त्रविधानोक्तं कर्म कर्तुमिहार्हसि ॥ २४

தஸ்மாச்சாஸ்த்ரம் ப்ரமாணம் தே
கார்யாகார்யவ்யவஸ்திதௌ ।
ஞாத்வா சாஸ்த்ரவிதானேக்தம்
கர்ம கர்த்துமிஹார்ஹஸி ॥ 24

तस्मात् தஸ்மாத் *ஆகையினால்* कार्य अकार्य व्यवस्थितौ கார்ய அகார்ய வ்யவஸ்திதௌ *செய்யத்தகுந்தது, செய்யத்தகாதது என்பதை நிச்சயிப்பதில்* ते தே *உனக்கு* शास्त्रं प्रमाणं சாஸ்த்ரம் ப்ரமாணம் *சாஸ்திரம் பிரமாணமாகிறது* इह இஹ *இங்கு* शास्त्र विधान उक्तं சாஸ்த்ர விதான உக்தம் *சாஸ்திரம் ஆக்ஞாபித்து உரைப்பதை* ज्ञात्वा ஞாத்வா *அறிந்து* कर्म कर्तुं கர்ம கர்த்தும் *கர்மம் செய்ய* अर्हसि அர்ஹஸி *கடமைப் பட்டிருக்கிறாய்.*

***ஆகையால் செய்யத் தகுந்ததையும் தகாததையும் நிச்சயிப்பதில் சாஸ்திரம் உனக்குப் பிரமாணமாகிறது. இங்கு சாஸ்திரம் ஆக்ஞாபித்துரைப்பதை அறிந்து கர்மம் செய்யக்கடவாய். 24***

*சம்சார சாகரத்தைக்கடந்து அப்பாற் செல்லுதற்கு சாஸ்திரம் உற்ற துணையாகிறது. ஆதலால் இவ்வுலகில் கட்டுண்டு கிடக்கும் ஒருவன் இதினின்று மீளுதற்குக் கையாளுகிற கர்மங்களெல்லாம் சாஸ்திரத்துக்கு உடன்பாடானவைகளாயிருக்க வேண்டும். முற்றிலும் தெய்வ சம்பத்தில் ஊறியிருப்பவர்கள் இயல்பாகவே சாஸ்திரத்தின் ஆணையைப் பின்பற்றுபவர்களா யிருப்பார்கள். அவர்களுடைய செயலும் சாஸ்திரப் பிரமாணமும் ஒன்றுபட்டு விடுகின்றன.*

*'நீங்கள் எந்த சாஸ்திரத்தைப் பின்பற்றுகிறீர்கள்' என்று ஓர் அன்பர் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் கேட்டார். 'நான் ஒரு சாஸ்திரத்தையும் பின்பற்றுவதில்லை. என் சித்தமிசை குடிகொண்டுள்ள தெய்வத்தின் அனுமதி கேட்டு என் வாழ்க்கையை நடாத்துகிறேன். ஆகையால் நான் தவறிப்போய்விடுவதில்லை. என் வாழ்க்கை சாஸ்திரத்துக்கும் முரண்படாது' என்றார் அவர்.* — ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

# सप्तदशोऽध्यायः

## பதினேழாம் அத்தியாயம்

### श्रद्धात्रयविभागयोगः

### சிரத்தாத்ரய விபாக யோகம்

अर्जुन उवाच

ये शास्त्रविधिमुत्सृज्य यजन्ते श्रद्धयान्विताः ।
तेषां निष्ठा तु का कृष्ण सत्त्वमाहो रजस्तमः ॥ १

அர்ஜுன உவாச

யே சாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய யஜந்தே ச்ரத்தயான்விதா: ।
தேஷாம் நிஷ்டா து கா க்ருஷ்ண ஸத்வமாஹோ ரஜஸ்தம: ॥ 1

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது*

कृष्ण க்ருஷ்ண *கிருஷ்ணா* ये யே *யார்* शास्त्रविधिं சாஸ்த்ரவிதிம் *சாஸ்திர விதியை* उत्सृज्य உத்ஸ்ருஜ்ய *மீறி* तु து *ஆனால்* श्रद्धया अन्विताः ச்ரத்தயா அன்விதா: *சிரத்தையோடு கூடியவர்களாய்* यजन्ते யஜந்தே *ஆராதிக்கின்றார்களோ* तेषां தேஷாம் *அவர்களுடைய* निष्ठा நிஷ்டா *நிலை* का கா *எத்தகையது* सत्त्वं रजः आहो तमः ஸத்வம் ரஜ: ஆஹோ தம: *சத்துவமா, ரஜசா அல்லது தமசா?*

அர்ஜுனன் சொன்னது

***கிருஷ்ணா, யார் சாஸ்திர விதியைமீறி, ஆனால் சிரத்தையோடு கூடியவர்களாய் ஆராதிக்கிறார்களோ அவர்களுடைய நிலை சத்துவமா, ரஜஸா அல்லது தமஸா? 1***

ஈண்டுக் கேள்வியொன்று கிளப்ப அர்ஜுனனுக்கு அவகாசம் ஏற்படுகிறது. முன்னேற்றமடைய வேண்டு

*மென்று யாருக்கு விருப்பம் இருக்கிறதோ அவனிடத்து சிரத்தை யிருக்கிறது. ஆதலால் அவன் காமம், குரோதம், லோபம் இவைகளின் வசப்படமாட்டான். ஆனால் சாஸ்திரத்தைப்பற்றி ஒன்றும் நினையாது தேவாராதனை செய்கிற பாங்குடன் கருமங்களில் ஈடுபடுகிறான். அப்படிச் செய்வதால் அவன் மேன்மையடைகின்றானா, இடைநிலையில் ரஜோகுணத்துக்குட்பட்டு நின்றுவிடுகிறானா, அல்லது தமோகுணத்துக்கு உரியவனாய்க் கீழ்மையடைகின்றானா? மனித வாழ்க்கையில் சாஸ்திரத்தின் ஆணை முற்றிலும் இன்றியமையாததா, என்பது கேள்வி.*

**श्री भगवानुवाच**

**त्रिविधा भवति श्रद्धा देहिनां सा स्वभावजा ।**
**सात्त्विकी राजसी चैव तामसी चेति तां शृणु ॥ २**

ஸ்ரீ பகவானுவாச

த்ரிவிதா பவதி ச்ரத்தா தேஹிநாம் ஸா ஸ்வபாவஜா ।
ஸாத்விகீ ராஜஸீ சைவ தாமஸீ சேதி தாம் ச்ருணு ॥ 2

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

देहिनां தேஹிநாம் *தேகமெடுத்தவர்களுக்கு* स्वभावजा ஸ்வபாவஜா *இயல்பாக உண்டான* सा श्रद्धा ஸா ச்ரத்தா *அந்த சிரத்தையானது* सात्त्विकी ஸாத்விகீ *சாத்விகமென்றும்* राजसी च एव ராஜஸீ ச ஏவ *இராஜஸமென்றும்* तामसी च தாமஸீ ச *தாமஸமென்றும்* इति இதி *இங்ஙனம்* त्रिविधा भवति த்ரிவிதா பவதி *மூன்றுவிதமாயிருக்கிறது* तां शृणु தாம் ச்ருணு *அதைக்கேள்.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***தேகிகளுக்கு இயல்பாயுண்டான சிரத்தையானது சாத்விக மென்றும், ராஜஸ மென்றும், தாமஸமென்றும் மூவிதமாயிருக்கிறது; அதைக் கேள்.*** **2**

*முற்பிறப்பில் செய்த வினைகள் சம்ஸ்காரங்களாக மனதில் பதிந்து அடுத்த ஜன்மத்தில் அந்த ஜீவனது இயல்*

பாக வடிவெடுக்கிறது. பிறகு இயல்புக்கு ஏற்றபடி புதிய ஜன்மத்தில் வினையாற்றுகிறான். இயல்பையும் வினையையும் கொண்டு ஒருவனிடம் படிந்துள்ள குணத்தைக் கண்டு பிடிக்கலாம்.

**सत्त्वानुरूपा सर्वस्य श्रद्धा भवति भारत ।**
**श्रद्धामयोऽयं पुरुषो यो यच्छ्रद्धः स एव सः ॥ ३**

ஸத்வானுரூபா ஸர்வஸ்ய ச்ரத்தா பவதி பாரத ।
ச்ரத்தாமயோऽயம் புருஷோ யோ யச்ச்ரத்தः ஸ ஏவ ஸः ॥ 3

भारत பாரத *பரத குலத்துதித்தவனே* सर्वस्य ஸர்வஸ்ய *ஒவ்வொருவருடைய* श्रद्धा ச்ரத்தா *சிரத்தையானது* सत्व अनुरूपा ஸத்வ அனுரூபா *அந்தக்கரணத்தில் ஏற்பட்ட சம்ஸ்காரத்தை அனுசரித்ததாக* भवति பவதி *இருக்கிறது* अयं पुरुषः அயம் புருஷः *இந்த ஜீவன்* श्रद्धामयः ச்ரத்தாமயः *சிரத்தை மயமானவன்* यः யः *யார்* यत् श्रद्धः யத் ச்ரத்தः *என்ன சிரத்தையுடையவனோ* सः ஸः *அவன்* सः एव ஸः ஏவ *அந்த சிரத்தைக் கேற்றவனே.*

***பாரதா, ஒவ்வொருவனுடைய மனப்பாங்குக் கேற்ப சிரத்தை யமைகிறது. மனிதன் சிரத்தை மயமானவன்; சிரத்தை எதுவோ அதுவே அவனுமாம்.*** 3

*விழிப்பும், மன எழுச்சியும், வகையுடன் விரைந்து வினையாற்றுதலும், வினையாற்றுதலில் உள்ள மகிழ்ச்சியும் நம்பிக்கையும் இத்தனையும் சேர்ந்து சிரத்தையெனப் பெயர் பெறுகிறது. இதுவரையில் மனிதன் அடைந்துள்ள பாங்கு, இனி அவன் அடையப்போவது, இவை யாவையும் அவன்பால் உள்ள சிரத்தையைக்கொண்டு அளந்து விடலாம். வானை நோக்கி வீசிய கல், அதற்குக் கொடுத்த வேகத்துக்கு ஏற்ப உயரப்போகிறது. மரம் தன் உள்வலிவுக்கு ஏற்ப வானுற வளர்கிறது. அங்ஙனம் மனிதனிடத்துள்ள சிரத்தைக்கேற்ப அவன் மேலோன் ஆகிறான். நசிகேதன் என்னும் ரிஷி புத்ரன் சிரத்தையே வடிவெடுத்தவன்*

ஆனான். அவனுடைய தந்தை ஆற்றிய விச்வஜித் யக்ஞம் குறைபட்ட யக்ஞமாயிருந்தது. மைந்தனுக்கு அக்குறை வைக்காணப்பிடிக்கவில்லை. ஆகவே சிரத்தையானது அவனுடைய மனத்தகத்து எழுந்தது. தந்தையின் ஆணைப்படி அவன் யமலோகத்துக்குச் சென்றான். பிதாவின் குறை நிலையை நிறைநிலையாக்கினான். உலக முன்னேற்றத்துக்கு ஏதுவான முயற்சி யாது என்பதைத் தெரிந்துகொண்டான். மேலும் தானே ஆத்ம ஞானத்தை யமனிடமிருந்து கற்றுக் கொண்டான். இத்தனையும் சீரிய சிரத்தையால் அவனுக்கு அமைந்தன. ஒருவனுடைய சிரத்தையை அளப்பது அவனையே அளப்பதற்கு ஒப்பாகிறது.

வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனையது உயர்வு —குறள்

சிரத்தையானது வாழ்க்கையில் வெவ்வேறு விதமாக வடிவெடுக்கிறது. அவைகளில் ஒன்று ஆராதனை அல்லது வழிபாடு. அது வருமாறு :—

**यजन्ते सात्त्विका देवान्यक्षरक्षांसि राजसाः ।**
**प्रेतान्भूतगणांश्चान्ये यजन्ते तामसा जनाः ॥ ४**

யஜந்தே ஸாத்விகா தேவான் யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸா: ।
ப்ரேதான் பூதகணான்ஸ்சான்யே யஜந்தே தாமஸா ஜனா: ॥ 4

सात्त्विकाः ஸாத்விகா: *சாத்விகர்கள்* देवान् தேவான் *தேவர்களை* यजन्ते யஜந்தே *வணங்குகின்றார்கள்* राजसाः ராஜஸா: *ரஜோகுணமுடையவர்கள்* यक्ष रक्षांसि யக்ஷ ரக்ஷாம்ஸி *யக்ஷர்களையும் ராக்ஷசர்களையும்* अन्ये तामसाः जनाः அன்யே தாமஸா: ஜனா: *மற்ற தாமஸ ஜனங்கள்* प्रेतान् ப்ரேதான் *பிரேதங்களையும்* भूतगणान् च பூதகணான் ச *பூதகணங்களையும்* यजन्ते யஜந்தே *வணங்குகிறார்கள்*.

**சாத்துவிகர்கள் தேவர்களை வணங்குகிறார்கள்; ரஜோகுணமுடையவர்கள் யக்ஷ ராக்ஷசர்களையும், மற்ற தாமஸ ஜனங்கள் பிரேத பூதகணங்களையும் போற்றுகிறார்கள்.**

*அவரவர் தன்மைக்குத் தகுந்தாற்போன்று மனிதர் மனிதரோடு இணக்கம் வைக்கிறார்கள். நல்லவர் நல்லாரைச் சார்தலும், கெட்டவர்கள் கெட்டவர்களோடு இணக்கம் வைப்பதும் இயல்பு. அதேபோன்று தெய்வ வழிபாட்டிலும் படித்தரங்கள் பல அமைகின்றன. சாத்விக குணமுள்ள நல்லார் பரமாத்மாவைப்பற்றி நிற்கின்றார்கள். பரமாத்மாவின் சொரூபங்களாக சிவம், சக்தி, விஷ்ணு, கணபதி, சுப்ரமண்யம் முதலிய தெய்வங்கள் இலங்குகின்றன. இயற்கையில் துஷ்டத்தனம் நிறைந்த சக்தியைக் கையாளுபவர்கள் ரஜோகுணத்தினின்றுவந்த சிற்றியல்பையுடையவர்களேயாம். அத்தகையவர்கள் வழிபாட்டுக்காகவென்று கற்பித்துக்கொள்ளும் தெய்வங்களும் கொடூரம் வாய்ந்தவைகளாக, துஷ்டத்தனம் நிறைந்தவைகளாக இருக்கும். சோம்பலும் அக்ஞான இருளும் நிறைந்தவர்கள் அதற்கேற்ற இயற்கையின் பகுதியைப் பாராட்டுகிறார்கள். தமோகுணம் பொருந்தியவர்கள் கற்பிக்கும் வனதேவதைகள் எப்பொழுதும் பிறர்க்குத் தீங்கு செய்பவைகளாகத் தென்படும். இவர்களுள் சாத்துவிக சுபாவமுடையவர்கள் மிகச் சிலர். பெரும்பான்மையோர் போக்கு எத்தகையது எனின் :—*

**अशास्त्रविहितं घोरं तप्यन्ते ये तपो जनाः ।**
**दम्भाहङ्कारसंयुक्ताः कामरागबलान्विताः ॥ ५**
**कर्शयन्तः शरीरस्थं भूतग्राममचेतसः ।**
**मां चैवान्तः शरीरस्थं तान्विद्ध्यासुरनिश्चयान् ॥ ६**

அசாஸ்த்ரவிஹிதம் கோரம் தப்யந்தே யே தபோ ஜநா: ।
தம்பாஹங்காரஸம்யுக்தா: காமராகபலான்விதா: ॥ 5

கர்சயந்த: சரீரஸ்தம் பூதக்ராமமசேதஸ: ।
மாம் சைவாந்த: சரீரஸ்தம் தான் வித்யாஸுரநிஸ்சயான் ॥ 6

दम्भ अहंकार संयुक्ताः தம்ப அஹங்கார ஸம்யுக்தா: *வீம்பும் அகங்காரமும் உடையவர்களாய்* काम राग बल अन्विताः காம ராக பல

அன்விதா: *காமமும் பற்றுதலும் வலுத்தவர்களாய்* ये யே *யார்* अचेतस: जना: அசேதஸ: ஜனா: *அறிவற்ற ஜனங்கள்* शरीरस्थं சரீரஸ்தம் *சரீரத்தி லிருக்கின்ற* भूत ग्रामं பூதக்ராமம் *இந்திரியங்களையும்* अन्त: शरीरस्थं அந்த: சரீரஸ்தம் *சரீரத்தில் வீற்றிருக்கும்* मां च மாம் ச *என்னையும்* कर्शयन्त: கர்சயந்த: *துன்புறுத்தி* अशास्त्र विहितं அசாஸ்த்ர விஹிதம் *சாஸ் திரத்தில் விதிக்கப்படாத* घोरं तप: கோரம் தப: *கோரமான தபசை* तप्यन्ते தப்யந்தே *செய்கிறார்களோ* तान् தான் *அவர்களை* आसुर निश्चयान् ஆஸுர நிஸ்சயான் *அசுர வழியில் துணிந்தவர்கள் என்று* विद्धि வித்தி *அறி.*

***டம்பும் அகங்காரமும் உடையவர்களாய், காமமும் பற்றுதலும் வலுத்தவர்களாய், எந்த அறிவிலிகள் உடலிலுள்ள இந்திரியங்களையும் உள்ளத்திலுறையும் என்னையும் துன்புறுத்தி சாஸ்திரத்துக்கு ஒவ்வாத கொடுந்தவம் புரிகிறார்களோ அவர்களை அசுர வழியில் துணிந்தவர்களென்று அறிக. 5-6***

*அசுர இயல்புடையவர்கள் புரியும் கொடுந்தவம் அவர்களுக்கே இன்பம் தருவதில்லை. முள்ளின்மீது படுத்துக்கிடக்கின்றனர்; கையைத் தூக்கிக்கொண்டு ஒற்றைக் காலில் நிற்கின்றனர். பார்க்கின்றவர்களுக்கும் அக்காட்சி துன்பமளிக்கிறது. சூரியனையே உற்று நோக்குதல்போன்ற செயல்களால் இந்திரியங்களை அவர்கள் பாழாக்குகிறார்கள். மனத்தகத்து மனசாக்ஷியாக சர்வேசுவரன் வீற்றிருக்கிறான். சலனமடைந்த நீரில் சந்திர பிம்பம் நன்றாக விளங்காதது போன்று பகட்டும், ஆணவமும், ஆசையும் நிறைந்துள்ள அவர்களது மனதில் ஈசுவர சான்னித்தியம் உணரப்படுவதில்லை. இறைவன் புறக்கணிக்கப்படுகிறார். இன்ப துன்பம் கடந்துள்ள அவர் துன்புறுத்தப்படுபவர் போன்று காணப்படுகிறார். சான்றோர்கள் செல்லும் நெறி இதுவன்று. ஆதலால் இது சாஸ்திரத்துக்கு சிறிதும் பொருந்தாது. இத்தகைய பாங்குடையவர்களே அசுரர் ஆவர்.*

*இன்னும் எவைகளைக்கொண்டு மக்களை வகைப்படுத்தலாம் என்று கேட்குமிடத்து அதற்கு விடை வருகிறது:—*

**आहारस्त्वपि सर्वस्य त्रिविधो भवति प्रियः ।**
**यज्ञस्तपस्तथा दानं तेषां भेदमिमं शृणु ॥ ७**

ஆஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய த்ரிவிதோ பவதி ப்ரிய: ।
யக்ஞஸ்தபஸ்ததா தானம் தேஷாம் பேதமிமம் ச்ருணு ॥ 7

सर्वस्य ஸர்வஸ்ய *ஒவ்வொருவருக்கும்* प्रियः ப்ரிய: *பிரியமாயுள்ள* आहारः तु अपि ஆஹார: து அபி *ஆகாரமும்கூட* त्रिविधः த்ரிவித: *மூன்று விதங்களாக* भवति பவதி *இருக்கிறது* तथा ததா *அங்ஙனமே* यज्ञः யக்ஞ: *யக்ஞமும்* तपः தப: *தபசும்* दानं च தானம் ச *தானமும்* तेषां தேஷாம் *அவைகளுள்* इमं भेदं இமம் பேதம் *இந்த பேதத்தை* शृणु ச்ருணு *கேட்பாயாக.*

***ஒவ்வொருவர்க்கும் விருப்பமான உணவும் மூவகைப்படுகிறது. யாகமும், தபசும், தானமும் அங்ஙனமே அமைந்துள்ளன. அவைகளுள் இவ் வேற்றுமையைக் கேள்.*** 7

*யக்ஞம் அல்லது யாகம் என்பது நாளடைவில் தேவாராதனை என்னும் வடிவெடுத்துள்ளது. முன்னாளில் தீ மூட்டி அதன் மூலம் நிகழ்ந்த வழிபாடானது காலக் கிரமத்தில் ஆலய வழிபாடாக மாறிவிட்டது.*

**आयुः सत्त्वबलारोग्यसुखप्रीतिविवर्धनाः ।**
**रस्याः स्निग्धाः स्थिरा हृद्या आहाराः सात्त्विकप्रियाः ॥ ८**

ஆயு: ஸத்வபலாரோக்ய ஸுகப்ரீதி விவர்தனா: ।
ரஸ்யா: ஸ்நிக்தா: ஸ்திரா ஹ்ருத்யா ஆஹாரா: ஸாத்விக-ப்ரியா: ॥ 8

आयुः सत्त्व बल आरोग्य सुख प्रीति ஆயு: ஸத்வ பல ஆரோக்ய ஸுக ப்ரீதி *ஆயுள் அறிவு பலம் ஆரோக்கியம் சுகம் விருப்பம் ஆகியவைகளை* विवर्धनाः விவர்தனா: *விருத்தி செய்கின்றவைகள்* रस्याः ரஸ்யா: *ரசமுள்ளவைகள்* स्निग्धाः ஸ்நிக்தா: *பசையுள்ளவைகள்* स्थिराः ஸ்திரா: *உரம் தருபவைகள்* हृद्याः ஹ்ருத்யா: *இன்பமானவைகள்* आहाराः ஆஹாரா: *ஆகாரங்கள்* सात्त्विक प्रियाः ஸாத்விக ப்ரியா: ***சாத்துவிகர்களுக்குப் பிரியமானவைகள்.***

***ஆயுள், அறிவு, பலம், ஆரோக்கியம், சுகம், ருசி ஆகியவைகளை வளர்ப்பவைகள், ரசமுள்ளவைகள், பசையுள்ளவைகள், வலிவு தருபவைகள், இன்பமானவைகள் ஆகிய ஆகாரங்கள் சாத்விகர்களுக்குப் பிரியமானவைகள். 8***

*பிரீதியானது என்பது பசியை உண்டுபண்ணுவது என்றும், ஸ்திரமானது என்பது நெடுநேரம் தாங்குவது என்றும் பொருள்படும். சத்தில்லாத உணவு விரைவில் ஜீரணமாகிவிடுகிறது. அது உடலுக்கு பலம் கொடுக்காது. மற்று ஜீரணம் பண்ணமுடியாத கடினமான உணவு ஜீரணக்கருவிகளைக் கெடுத்துவிடுகிறது. அதனால் ஆயுளும் குறைந்துபோம். இந்த உணவு வகைகள் காலத்துக்கும் இடத்துக்கும் ஏற்றவாறு மாறுபடுதல் இயல்பு. காலையில் உண்ணும் உணவு இலேசானதாக இருக்கவேண்டும். இரவில் தூங்கப்போகும்பொழுது உண்ட உணவில்பெரும் பகுதி ஜீரணமாயிருக்கவேண்டும். குளிர்ப்பிரதேசங்களில் உடலுக்குக் கதகதப்பைத்தரும் உணவை அருந்துதல் அவசியம். வெப்பம் நிறைந்த நாடுகளிலோ குளிர்ச்சி தருகிற உணவு வேண்டப்படுகிறது.*

*பகல் வேளையில் வேண்டியவாறு உணவு அருந்து, ஆனால் இரவில் அருந்தும் உணவைப் பெரிதும் குறைத்துவிடு.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**कट्वम्ललवणात्युष्णतीक्ष्णरूक्षविदाहिनः ।**
**आहारा राजसस्येष्टा दुःखशोकामयप्रदाः ॥ ९**

கட்வம்லலவணாத்யுஷ்ணதீக்ஷ்ணரூக்ஷவிதாஹின: ।
ஆஹாரா ராஜஸஸ்யேஷ்டா து:கசோகாமயப்ரதா: ॥ 9

**कटु अम्ल लवण** கடு அம்ல லவண *கசப்பு, புளிப்பு, உவர்ப்பு* **अत्युष्ण** அத்யுஷ்ண *அதிக உஷ்ணம்* **तीक्ष्ण** தீக்ஷ்ண *காரம்* **रूक्ष** ருக்ஷ *உலர்ந்தவை* **विदाही** விதாஹீ *எரிச்சலூட்டுபவை* **दुःख शोक आमय प्रदाः** து:க சோக ஆமய ப்ரதா: *துக்கத்தையும் சோகத்தையும் நோயையும்*

*உண்டுபண்ணுபவைகள்* आहाराः ஆஹாரா: *ஆகாரங்கள்* राजसस्य ராஜஸஸ்ய *ரஜோகுணமுடையவர்களுக்கு* इष्टाः இஷ்டா: *இஷ்டமானவைகள்.*

***கசப்பு, புளிப்பு, உவர்ப்பு, பெருவெப்பம், காரம், வறட்சி, எரிச்சல் மிகுந்தனவும், துன்பம்-துயரம்-நோய் உண்டு பண்ணுபவைகளுமாகிய உணவுகள் ரஜோகுணத்தாருக்கு விருப்பமானவைகள். 9***

*நாவில் சுரீலென்று பாய்கிறது; கண் சிவந்து கண்ணீர் சொட்டுகிறது; நாசியில் நீர் வடிகிறது; தலை சுழல்கிறது; வயிறு எரிகிறது — இத்தகைய பாங்குடையவைகள் ரஜோகுணத்தை வளர்க்கும் உணவுகள். ஆயுளைக் குறைக்கும் தன்மை இவைகளிடத்தில் உண்டு.*

**यातयामं गतरसं पूति पर्युषितं च यत् ।**
**उच्छिष्टमपि चामेध्यं भोजनं तामसप्रियम् ॥ १०**

யாதயாமம் கதரஸம் பூதி பர்யுஷிதம் ச யத் ।
உச்சிஷ்டமபி சாமேத்யம் போஜனம் தாமஸப்ரியம் ॥ 10

यत् யத் *எது* यातयामं யாதயாமம் *யாமம் கழிந்த* गतरसं கதரஸம் *சுவையிழந்த* पूति பூதி *துர்நாற்றமெடுத்த* पर्युषितं பர்யுஷிதம் *பழையது* उच्छिष्टं உச்சிஷ்டம் *எச்சிலானது* अमेध्यं च அமேத்யம் ச *தூய்மையற்றதும்* भोजनं போஜனம் *போஜனமானது* तामसप्रियं தாமஸப்ரியம் *தமோ குணத்தாருக்குப் பிரியமானது.*

***யாமம் கழிந்த, சுவையற்ற, துர்நாற்றமெடுத்த, பழைய, எச்சிலான, தூய்மையற்ற உணவு தமோகுணத்தாருக்குப் பிரியமானது. 10***

*மூன்று மணி நேரத்துக்கு முன்பு சமைக்கப்பட்ட உணவு யாமம் கழிந்த உணவாகிறது. ஆகையால் அது சுவையிழந்து விடுகிறது. மேலும் அது ஊசிப்போய் துர்நாற்றமெடுக்கிறது. முந்திய இரவு சமைத்தது பழைய உணவாகிறது. மற்றொருவர் உண்டு எஞ்சியிருக்கும் உணவு*

*எச்சில்பட்டது அல்லது உச்சிஷ்டமானதாகிறது. இன்னும் சில உணவுகள் தீண்டுதற்கும் தகுதியற்றவைகளாய் விடு கின்றன. தமோகுண இயல்புடையார் இத்தகைய உணவு களை விருப்புடன் புசிக்கின்றனர்.*

*இனி, ஈசுவர ஆராதனையிலுள்ள மூன்று படித் தரங்கள் விளக்கப்படுகின்றன :—*

**अफलाकाङ्क्षिभिर्यज्ञो विधिदृष्टो य इज्यते ।**
**यष्टव्यमेवेति मनः समाधाय स सात्त्विकः ॥ ११**

அபலாகாங்க்ஷிபிர்யக்ஞோ விதித்ருஷ்டோ ய இஜ்யதே ।
யஷ்டவ்யமேவேதி மன: ஸமாதாய ஸ ஸாத்விக: ॥ 11

अफल आकांक्षिभिः அபல ஆகாங்க்ஷிபி: *வினைப்பயனை விரும்பாத வர்களால்* यष्टव्यं एव इति யஷ்டவ்யம் ஏவ இதி *ஆராதனையாகச் செய்தே ஆகவேண்டும் என்று* मनः மன: *மனதை* समाधाय ஸமாதாய *ஸ்திரப் படுத்திக்கொண்டு* विधि दृष्टः விதி த்ருஷ்ட: *சாஸ்திர ஆணைப்படி* यः ய: *எந்த* यज्ञः யக்ஞ: *யாகம் (வழிபாடு)* इज्यते இஜ்யதே *செய்யப்படு கிறதோ* सः ஸ: *அது* सात्त्विकः ஸாத்விக: *சாத்துவிகமானது.*

***ஆராதனையாகச் செய்தே ஆகவேண்டு மென்று மனதை உறுதிப்படுத்திக்கொண்டு, வினைப் பயனை விரும்பாதவர்களால் சாஸ்திர விதிப்படி எந்த யாகம் செய்யப்படுகிறதோ அது சாத்விக மானது.*** ***11***

*குழந்தையைப் பராமரிக்கும் தாய் கைம்மாறு கரு தாது சேவையை தன்கடமையென்று செய்கிறாள். நல்லார் கடவுள் வழிபாடுசெய்வது கைம்மாறு கருதியல்ல. கடவுளை வழிபடுவதே அவர்களது இயல்பு. அந்த ஆராதனை சாஸ் திர ஆணைக்கு முற்றும் ஒத்ததாயிருக்கிறது. சத்துவகுண மேலீட்டால் வரும் வேள்வி அத்தகையது. பாண்டவர் ஐவர் திரௌபதியுடன் வனவாசம் செய்தபொழுது அவர் களுக்கு ஏற்பட்ட கஷ்டங்கள் எண்ணிக்கையில் அடங்கா. " தர்மமே வடிவெடுத்துள்ள தங்களுக்கு இத்தனை துன்பங்*

கள் ஏன் வரவேண்டும்?'' என்று திரௌபதியானவள் கணவன் தர்மராஜாவிடம் கேட்டாள். அதற்கு விடையாக தர்மராஜா பகர்ந்ததாவது :— "தேவி, தூரத்தில் தென்படும் ஹிமயமலையைப் பார். மகிமை நிறைந்த அதை நான் வணங்குகிறேன். துன்பம் ஒன்றையும் நான் அறியேன்.'' இங்ஙனம் நல்லதை வணங்குவது அவரது இயல்பு ஆயிற்று.

சாத்விகம் நிறைந்தவர்களுடைய மனப்பான்மைக்கு இது சான்றாகும்.

अभिसंधाय तु फलं दम्भार्थमपि चैव यत् ।
इज्यते भरतश्रेष्ठ तं यज्ञं विद्धि राजसम् ॥ १२

அபிஸந்தாய து பலம் தம்பார்த்தமபி சைவ யத் ।
இஜ்யதே பரதச்ரேஷ்ட தம் யக்ஞம் வித்தி ராஜஸம் ॥ 12

फलं பலம் *பயனை* अभिसन्धाय तु அபிஸந்தாய து *விரும்பியோ* दम्भार्थं अपि एव च தம்பார்த்தம் அபி ஏவ ச *ஆடம்பரத்துக்காகவோ* यत् யத் *எது* इज्यते இஜ்யதே *செய்யப்படுகிறதோ* भरतश्रेष्ठ பரதச்ரேஷ்ட *பரதகுல சிரேஷ்டனே* तं यज्ञं தம் யக்ஞம் *அந்த யாகத்தை* राजसं ராஜஸம் *ராஜஸமானதென்று* विद्धि வித்தி *அறி*.

***பரதகுல சிரேஷ்டனே, பயனை விரும்பியோ, ஆடம்பரத்துக்காகவோ செய்யப்படுகிற ஆராதனையை ராஜஸமானதென்றறிக.*** ***12***

*கடையில் பண்டம் மாற்றுவதுபோன்று, தனது விருப்பத்தை நிறைவேற்றிவைக்கவேண்டுமென்று கடவுளை வேண்டி வணங்குவது சிறந்த வழிபாடாகாது. தற்பெருமைக்காகவென்று பூஜைகள் பல செய்வாரும் உளர். தங்களை விளம்பரப் படுத்திக்கொள்வதற்காகத் தெய்வ வழிபாடு செய்கிறவர்களும் உண்டு. இவ்விருவித ஆராதனைகள் ரஜோகுணத்தினின்று உதிப்பவைகளாம்.*

विधिहीनमसृष्टान्नं मन्त्रहीनमदक्षिणम् ।
श्रद्धाविरहितं यज्ञं तामसं परिचक्षते ॥ १३

விதிஹீனமஸ்ருஷ்டான்னம் மந்த்ரஹீனமதக்ஷிணம் ।
ச்ரத்தாவிரஹிதம் யக்ஞம் தாமஸம் பரிசக்ஷதே ॥ 13

विधिहीनं விதிஹீனம் *வேதநெறி வழுவியது* असृष्ट अन्नं அஸ்ருஷ்ட அன்னம் *அன்னதானமில்லாதது* मन्त्रहीनं மந்த்ரஹீனம் *மந்திரமற்றது* अदक्षिणं அதக்ஷிணம் *தக்ஷிணையில்லாதது* श्रद्धा विरहितं ச்ரத்தா விரஹிதம் *சிரத்தையற்றது* यज्ञं யக்ஞம் *யக்ஞமானது* तामसं தாமஸம் *தாமஸிகம் என்று* परिचक्षते பரிசக்ஷதே *பகரப்படுகிறது.*

***வேதநெறி வழுவியதும், அன்னதானமில்லாததும், மந்திரமற்றதும், தக்ஷிணையில்லாததும், சிரத்தையற்றதுமாகிய யக்ஞம் தாமஸிகமென்று சொல்லப்படுகிறது. 13***

*எந்த ஆராதனையில் குற்றமிருக்கிறதோ அது வேத நெறி வழுவியதாகும். அன்னதானம் எல்லா உயிர்களுக்கு மிடையிலுள்ள தொடர்வை நிலைநாட்டுகிறது. அன்னம் வழங்காதவிடத்து வேற்றுமை பரவுகிறது. அதனால் கேடு விளைகிறது. எண்ணமில்லாத செயல் மந்திரமில்லாத செயல் எனப்படுகிறது. ஒவ்வொரு செயலுக்கும் அடிப்படையாகவுள்ள எண்ணமே அதற்கு சிறப்பளிக்கிறது. எண்ணமில்லாத வழிபாடு யந்திரம் செய்கிற செயலுக்கு ஒப்பாகிறது. கடவுள் வழிபாடு சம்பந்தமான கிரியைகளைப் பிரதி பலன் எதிர்பாராது செய்துவைப்பவர் புரோகிதர் ஆகிறார். புரோகிதர்க்கும் அறிவு ஒழுக்கமுடைய மற்றவர்க்கும் வழங்கும் பொருள் தக்ஷிணை எனப்படுகிறது. தக்ஷிணை வழங்காத வழிபாடானது பிறரைப் பொருள் படுத்தாதது. எனவே அது வழிபாடாகாது. ஊக்கமின்றி, விசுவாசமின்றிக் கடனைக் கட்டுவதுபோன்று செய்யப்படும் காரியம் சிரத்தையற்றதாகிறது. இத்தனை குறைபாடுகளோடு கூடியதால் அந்த ஆராதனை கீழ்த்தரமானதாகிறது.*

*மனிதன் சிரத்தையோடு எதைப் பூஜிக்கிறானோ அவன் அதுவாகிறான். அதற்குத் தவம் பெருந்துணை புரிகிறது. தவம் யாது என்பது இனி விளக்கப்படுகிறது :—*

देवद्विजगुरुप्राज्ञपूजनं शौचमार्जवम् ।
ब्रह्मचर्यमहिंसा च शारीरं तप उच्यते ॥ १४

தேவத்விஜகுருப்ராக்ஞபூஜனம் சௌசமார்ஜவம் ।
ப்ரஹ்மசர்யமஹிம்ஸா ச சாரீரம் தப உச்யதே ॥ 14

देव द्विज गुरु प्राज्ञ पूजनं தேவ த்விஜ குரு ப்ராக்ஞ பூஜனம் *தேவர், பிராம்மணர், குருக்கள், ஞானிகள் ஆகிய இவர்களைப் பூஜிப்ப தும்* शौचं சௌசம் *சுத்தமும்* आर्जवं ஆர்ஜவம் *நேர்மையும்* ब्रह्मचर्यं ப்ரஹ்மசர்யம் *பிரம்மசரியமும்* अहिंसा च அஹிம்ஸா ச *அஹிம்சையும்* शारीरं तपः சாரீரம் தப: *சரீர தபசு என்று* उच्यते உச்யதே *சொல்லப் படுகிறது.*

***தேவர், பிராம்மணர், குரவர், ஞானிகள் ஆகியவர்களைப் போற்றுவதும், தூய்மையும், நேர்மையும், பிரம்மசரியமும், அஹிம்சையும் தேகத்தால் செய்யும் தவமெனப்படுகிறது. 14***

*தப: என்பது உலையில் உருக்குதல் என்று பொருள் படுகிறது. பூமியில் வெட்டிய தாதுக்களை உருக்கித் தூய உலோகங்களாக்குகிறோம். துருப்பிடித்த உலோகங்களை உருக்கிப் புதியதாக்குகிறோம். அங்ஙனம் தவத்தின்மூலம் மனிதன் தன்னைப் புதுப்பிக்கிறான். மெய், மொழி, மனம் ஆகிய மூன்று கரணங்களோடு கூடியவன் மனிதன். இம் மூன்று கரணங்களையும் புதுப்பிப்பது தவம். அதன்விவரம் வருகிறது.*

*பரபிரம்மத்தின் வெவ்வேறு தோற்றங்கள் தேவர்கள் எனப்படுகின்றனர். பாரமார்த்திக வாழ்க்கையில் புதிய பிறவியெடுத்தவர்கள் பிராம்மணர். நல்வாழ்க்கையில் மற்றவர்களுக்கு வழிகாட்டியாயிருப்பவர்கள் குரவர்கள். மெய்ப்பொருளை அறிந்தவர்கள் ஞானிகள். இவர்களை வணங்குவது மேன்மையடைதற்கு உற்ற உபாயம். சரீராடி உடலைத் தூயதாய் வைத்திருத்தல் வேண்டும். காயத்தைக் கொண்டுசெய்கிற செயல்களெல்லாம் ஒழுக்கம் நிறைந்*

*டத்து அது ஆர்ஜவம் அல்லது நேர்மையெனப் பெயர் பெறுகிறது. சம்போகத்துக்குக் கருவியாயிருப்பது உடல். இந்திரியங்கள் வாயிலாக வரும் அவ் இன்பங்கள் துன்பங்களாகப் பிறகு பரிணமிக்கின்றன. போகம் என்னும் குறைவின்கண் சென்றழியாது யோகம்என்னும் நிறை நிலையில் தன்னைக் காப்பது பிரம்மசரிய விரதமாம். தேகத்தால் மற்ற தேகங்களுக்குத் துன்பம் செய்யாதிருப்பது அஹிம்சை. உடலைக்கொண்டு செய்கிறபடியால் இவை யாவும் ஒன்று சேர்ந்து சரீர சம்பந்தமான தவமெனப் படுகிறது.*

**अनुद्वेगकरं वाक्यं सत्यं प्रियहितं च यत् ।**
**स्वाध्यायाभ्यसनं चैव वाङ्मयं तप उच्यते ॥ १५**

அனுத்வேககரம் வாக்யம் ஸத்யம் ப்ரியஹிதம் ச யத் ।
ஸ்வாத்யாயாப்யஸனம் சைவ வாங்மயம் தப உச்யதே ॥ 15

अनुद्वेगकरं அனுத்வேககரம் *துன்புறுத்தாததும்* सत्यं ஸத்யம் *சத்தியம் (வாய்மை)* प्रियहितं ப்ரியஹிதம் *இனியதும் நலம் தருவதும்* यत् वाक्यं च யத் வாக்யம் ச *எந்த வாக்கியமோ அதுவும்* स्वाध्याय अभ्यसनं एव च ஸ்வாத்யாய அப்யஸனம் ஏவ ச *வேதம் ஓதுதலும்* वाङ्मयं तपः उच्यते வாங்மயம் தப: உச்யதே *வாக்கு மயமான தபசு என்று சொல்லப்படுகிறது.*

***துன்புறுத்தாத வாய்மையும் இனிமையும் நலனும் கூடிய வார்த்தை, மற்றும் வேதம் ஓதுதல்– இது வாக்கு மயமான தபசு என்று சொல்லப்படுகிறது. 15***

*காயத்தால் அடித்துத் துன்புறுத்துவதைவிடக் கொடியது கடுஞ்சொல்சொல்லிக்காய்தல். தவசி ஒருவனுக்கு அது பொருந்தாது. சில வேளைகளில் உண்மையை உரைக்குங்கால் அது துன்பந்தருவதாகிறது. ஆதலால் பொய் பேசலாமா வென்றால் அது ஒண்ணாது: சத்தியத்தையே சொல்லவேண்டும். எப்போக்கில் சத்தியம் சொல்லவேண்*

டும்? ஏற்றுக்கொள்ளுபவர்களுக்கு இன்பம் தருவதாய் அது இருத்தல் வேண்டும்.

மெய்ம்மையே மொழிந்து முகஸ்துதி செய்யலாமா? கடுஞ்சொல்லைக் கேட்டுக் கெட்டுப்போனவர்கள் மிகக் குறைவு. இச்சகம் கேட்டு, இறுமாப்புற்றுக் கெட்டுப் போனவரோ பலர். ஆகையால் முகஸ்துதி மொழியலாகாது. கேட்கின்றவர்களுக்கு இதம் தரும் இன் சொற்களையே செப்புதல் வேண்டும்.

பரத்தினை சாக்ஷாத்கரித்த பெருமக்கள் பூரித்துப் பகர்ந்துள்ள ஆப்த வாக்கியங்களே வேதமெனப்படு கின்றன. இதை வேதாந்தமென்பது இன்னும் பொருத்த முடையதாகும். வேத வேதாந்தம் எம்மொழியில் வேண்டு மானாலும் அமையலாம். அவை யாண்டும் அருள் நிறைந் திருக்கும். அத்தகைய சாஸ்திரங்களை வாய்விட்டு ஓதிப் பழகுவதால் சொல் சுத்தப்படுகிறது. பிறகு அது சாதக னது சொந்த அருள் மொழியாகவும் வடிவெடுக்கிறது. இங்குப் பகர்ந்துள்ள நான்கு பகுதிகளும் முறையாக அமையப்பெற்றதே வாக்கு மயமான தபசாகிறது.

**मनः प्रसादः सौम्यत्वं मौनमात्मविनिग्रहः ।**
**भावसंशुद्धिरित्येतत्तपो मानसमुच्यते ॥ १६**

மன: ப்ரஸாத: ஸௌம்யத்வம் மௌனமாத்மவிநிக்ரஹ: ।
பாவஸம்சுத்திரிதயேதத்தபோ மானஸமுச்யதே ॥ 16

मनः प्रसादः மன: ப்ரஸாத: *மன அமைதி* सौम्यत्वं ஸௌம்யத்வம் *அன்புடைமை* मौनं மௌனம் *மௌனம்* आत्म विनिग्रहः ஆத்ம விநிக்ரஹ: *தன்னடக்கம்* भावसंशुद्धिः பாவஸம்சுத்தி: *தூய நோக்கம்* इति एतत् இதி ஏதத் *இது* मानसं तपः மானஸம் தப: *மானஸ தபசு என்று* उच्यते உச்யதே *சொல்லப்படுகிறது.*

***மன அமைதி, அன்புடைமை, மௌனம், தன்னடக்கம், தூய நோக்கம் - இது மானஸ தபசு எனப்படுகிறது.*** **16**

*சோர்வடையாது, குழப்பமடையாது, குதூகலத்தில் அமைதியுற்றிருத்தல் மனப்பிரசாதமாம். சீரிய எண்ணங்களே உள்ளத்தில் உதிக்க இடந்தருதலும், எண்ணங்களை வரவொட்டாது தடுத்தலும், தைலதாரை போன்று எண்ணம் ஈசுவர சிந்தனையிலேயே திளைத்திருப்பதும் மௌனமெனப்படும். சொல்லிலும் செயலிலும்விடச் சிந்தனையில் தன்னடக்கம் பயிலுதல் சாலச் சிறந்தது. சிந்தனையில் அடக்கம் பழகியவனுக்கு வாயடக்கமும் மெய்யடக்கமும் தாமே வந்துவிடுகின்றன. மனதில் உண்டாகிற உணர்ச்சி பாவமெனப்படுகிறது. வியவகார வேளையிலும் இந்த உணர்ச்சி தூயதாயிருத்தல் வேண்டும்.*

**श्रद्धया परया तप्तं तपस्तत्त्रिविधं नरैः ।**
**अफलाकाङ्क्षिभिर्युक्तैः सात्त्विकं परिचक्षते ॥ १७**

ச்ரத்தயா பரயா தப்தம் தபஸ்தத் த்ரிவிதம் நரை: |
அபலா காங்க்ஷிபிர்யுக்தை: ஸாத்விகம் பரிசக்ஷதே || 17

अफल आकांक्षिभिः युक्तैः नरैः அபல ஆகாங்க்ஷிபி: யுக்தை: நரை: *பயனை விரும்பாதவர்களும் யோகத்தில் உறுதி பெற்றவர்களுமான நரர்களால்* परया श्रद्धया பரயா ச்ரத்தயா *பெருமுயற்சியுடன்* तप्तं தப்தம் *செய்யப்படும்* तत् त्रिविधं तपः தத் த்ரிவிதம் தப: *இம்மூவிதத் தபசு* सात्त्विकं ஸாத்விகம் *சாத்விகமானதென்று* परिचक्षते பரிசக்ஷதே *பகரப்படுகிறது.*

***பயனை விரும்பாதவரும், யோகத்திலே உறுதி பெற்றவருமான நரர்களால் பெருமுயற்சியுடன் செய்யப்படும் இம் மூவிதத் தபசு சாத்விகமானதென்று பகரப்படுகிறது.*** ***17***

*பயனை விரும்புமளவு தவம் புனிதத்தை இழந்துவிடுகிறது. பயன் விரும்பாதிருப்பது, செய்யும் தவத்தை நிறுத்தாதிருப்பது சாத்துவிகர்களது போக்கு. வெற்றியே வாய்த்திடினும் தோல்வியே தோன்றிடினும் அவைகளால் அலக்கழிக்கப்படாதிருப்பவர்கள் யோகத்தில் உறுதி பெற்*

றவர்களாகின்றார்கள். அவர்களது பெருமுயற்சியோ ஒரு பொழுதும் தளர்ச்சியடைவதில்லை. முக்கரணங்களைக் கொண்டு அவர்கள் முறையாகப் பாடுபடுகின்றனர்.

सत्कारमानपूजार्थं तपो दम्भेन चैव यत् ।
क्रियते तदिह प्रोक्तं राजसं चलमध्रुवम् ॥ १८

ஸத்காரமானபூஜார்த்தம் தபோ தம்பேன சைவ யத் ।
க்ரியதே ததிஹ ப்ரோக்தம் ராஜஸம் சலமத்ருவம் ॥ 18

सत्कार मान पूजा अर्थं ஸத்கார மான பூஜா அர்த்தம் *பாராட்டுதலை யும், பெருமையையும், போற்றுதலையும் முன்னிட்டு* दम्भेन च एव தம்பேன ச எவ *ஆடம்பரத்தோடே* यत् तपः யத் தப: *எத்தபசு* क्रियते க்ரியதே *செய்யப்படுகிறதோ* इह இஹ *இங்கு* चलं अध्रुवं तत् சலம் அத்ருவம் தத் *தற்காலிகமான உறுதியற்ற அது* राजसं ராஜஸம் *ராஜஸமானதென்று* प्रोक्तं ப்ரோக்தம் *பகரப்படுகிறது.*

***பாராட்டுதலையும் பெருமையையும் போற்றுதலையும் முன்னிட்டு ஆடம்பரத்தோடே ஈண்டு எத்தவம் புரியப்படுகிறதோ, தாற்காலிகமானதும் உறுதியற்றதுமான அது ராஜஸமானதென்று பகரப்படுகிறது. 18***

தவம் ஒன்றுதான் தங்களைத் தக்கவர்களாகத் திருத்தியமைக்கிறது என்ற தெளிவு ராஜஸ இயல்புடையவர்களுக்கு வருகிறதில்லை. வெறும் வெளி வேஷத்துக்காகவே அவர்கள் அதைச் செய்கிறார்கள். தவமுடையவர்களென்று மற்றவர்கள் தங்களைப் பாராட்டி வரவழைக்க வேண்டும்; போற்றிப் புகழவேண்டும்: வீழ்ந்து வணங்க வேண்டும். இப்பாங்குடன் தவமிழைப்பவர் போன்று அவர்கள் நடிக்கின்றனர். பாசாங்காகச் செய்யும் அத்தவம் சில நாட்களுக்கு நடைபெறும். பிறகு இல்லாது போய்விடும். செய்யும்பொழுதே அதில் உறுதிப்பாடு ஒன்றும் இராது. இப்பூவுலகில் மட்டும் அது பெயரையும் புகழையும் தாற்காலிகமாகத் தருகிறது.

मूढग्राहेणात्मनो यत्पीडया क्रियते तपः ।
परस्योत्सादनार्थं वा तत्तामसमुदाहृतम् ॥ १९

மூடக்ராஹேணாத்மனோ யத்பீடயா க்ரியதே தப: ।
பரஸ்யோத்ஸாதனார்த்தம் வா தத்தாமஸமுதாஹ்ருதம் ॥ 19

मूढ ग्राहेण மூடக்ராஹேண *மூடக்கொள்கையால்* आत्मनः ஆத்மன: *தன்னை* पीडया பீடயா *துன்புறுத்தியோ* परस्य பரஸ்ய *பிறரை* उत्सादन अर्थं वा உத்ஸாதன் அர்த்தம் வா *அழித்தல் பொருட்டோ* यत् तपः யத் தப: *எத்தவம்* क्रियते க்ரியதே *செய்யப்படுகிறதோ* तत् தத் *அது* तामसं उदाहृतं தாமஸம் உதாஹ்ருதம் *தாமஸம் என்று இயம்பப் படுகிறது.*

***மூடக்கொள்கையால் தன்னையே துன்புறுத்தியோ அல்லது பிறரை அழித்தற் பொருட்டோ செய்யப்படுகிற தவம் தாமஸ மெனப்படுகிறது. 19***

*விவேகமில்லாதவர்கள் தவத்தின் உட்கருத்தை உள்ளபடி அறிகிறதில்லை. திரிவுபட அதைப் பொருள் படுத்துகிறார்கள். பட்டினி கிடந்து உடலைக் குலைத்து, அதைத் தீயில் வாட்டி, நீரில் நனைத்துச் சிறிது சிறிதாகத் தற்கொலை செய்வது போன்று தங்களையே அவர்கள் துன் புறுத்துகிறார்கள். அல்லது ஏவல் முதலிய மாந்திரிகச் செயல்களால் பிறரை அழிக்க அவர்கள் முயலுகிறார்கள். அக்ஞான இருளில் தோன்றிய இத்தகைய தபசு தாமச மெனப்படுகிறது.*

दातव्यमिति यद्दानं दीयतेऽनुपकारिणे ।
देशे काले च पात्रे च तद्दानं सात्त्विकं स्मृतम् ॥ २०

தாதவ்யமிதி யத்தானம் தீயதேऽனுபகாரிணே ।
தேசே காலே ச பாத்ரே ச தத்தானம் ஸாத்விகம் ஸ்ம்ருதம் ॥ 20

देशे தேசே *தகுந்த தேசத்தில்* काले च காலே ச *காலத்திலும்* पात्रे च பாத்ரே ச *பாத்திரத்திலும்* दातव्यं इति தாதவ்யம் இதி *கொடுத்தல் கடமையென்று* अनुपकारिणे அனுபகாரிணே *பிரதியுபகாரம் செய்யாத*

வர்க்கு यत् दानं யத் தானம் *எந்த தானம்* दीयते தீயதே *கொடுக்கப்படுகிறதோ* तत् दानं தத் தானம் *அந்த தானம்* सात्त्विकं ஸாத்விகம் *சாத்விகமானதென்று* स्मृतं ஸ்ம்ருதம் *கருதப்படுகிறது.*

***தக்க இடத்திலே, வேளையிலே பிரதியுபகாரம் செய்யாதவர் எனினும் தகுந்த பாத்திரமாயுள்ளவர்க்குத் தானம் செய்வது முறையெனக் கருதி வழங்கும் தானம் சாத்விகமானது.*** ***20***

*செய்த உபகாரத்துக்குப் பிரதியுபகாரம் எதிர் பார்ப்பது வியாபாரமாகிறது; அது தானமாகாது. தனக்குப் பயன்படும்பொருள் மற்றவர்களுக்கும் பயன்பட வேண்டுமென்று மனமுவந்துகொடுப்பது தானம். கொடுத்த பொருள் யாரிடம் சென்றால் பலர்க்குப் பெரிதும் பயன் படுமோ அவரே தகுந்த பாத்திரமாகிறார். ஒரு நாட்டிலிருப் பவர்க்கு வேறு ஒரு நாட்டிலுள்ள நிலம் அல்லது பொருளைத் தானம் பண்ணுவது தக்கவிடத்தில் செய்யப்பட்ட தாகாது. இருக்குமிடத்திலேயே நன்கு பயன்படுவதே சிறந்த தானமாகிறது. பயன்படுத்துகிற காலத்துக்கு மிக முன்போ பின்போ கொடுப்பது காலத்தில் செய்த தான மாகாது. தக்க தருணத்தில் பயன்படும்படி தானம் செய் வதே மேலானது.*

यत्तु प्रत्युपकारार्थं फलमुद्दिश्य वा पुनः ।
दीयते च परिक्लिष्टं तद्दानं राजसं स्मृतम् ॥ २१

யத்து ப்ரத்யுபகாரார்த்தம் பலமுத்திச்ய வா புன: ।
தீயதே ச பரிக்லிஷ்டம் தத்தானம் ராஜஸம் ஸ்ம்ருதம் ॥ 21

तु து *மற்று* यत् யத் *எது* प्रत्युपकारार्थं ப்ரத்யுபகாரார்த்தம் *பிரதியுபகாரத்தை எதிர்பார்த்தாவது* फलं च பலம் ச *பலனையும்* उद्दिश्य वा உத்திச்ய வா *உத்தேசித்தாவது* पुनः புன: *மேலும்* परिक्लिष्टं பரிக்லிஷ்டம் *வருத்தத்தோடு* दीयते தீயதே *தரப்படுகிறதோ* तत् दानं தத் தானம் *அந்த தானமானது* राजसं ராஜஸம் *ராஜஸமென்று* स्मृतं ஸ்ம்ருதம் *கருதப்படுகிறது.*

**மற்று கைம்மாறு கருதியோ பலனை உத்தேசித்தோ வருத்தத்தோடு வழங்கப்படும் தானம் ராஜஸமென்று எண்ணப்படுகிறது. 21**

தானம் கொடுக்கும் விஷயத்தில் வலது கை செய்வதை இடது கை அறியலாகாது என்பது கோட்பாடு. அதாவது அவ்வளவு அடக்கத்துடனும் பணிவுடனும் ஊக்கத்துடனும் பொருளை எடுத்துமற்றவர்களுக்கு வழங்க வேண்டும். ரஜோகுணமுடையவனது பாங்கு இதற்கு முற்றிலும் மாறுனது. ராஜஸ சுபாவமுடையவனுக்குத் தன் பொருளைப் பிறர்க்குக் கொடுக்கவிருப்பமில்லை. வருத்தப்பட்டுக்கொண்டு அரை மனதோடு தானம் பண்ணுகிறுன். அப்படிக் கொடுக்கும்பொழுதும் அது தனக்குப் பன்மடங்காகத் திருப்பிக் கொடுக்கப்படவேண்டும் என்று எதிர்பார்க்கிறுன். தான் ஒரு மடங்கு தானம்செய்தால் தெய்வம் தனக்குப் பத்து மடங்காகப் பலனைக் கொடுக்க வேண்டுமென்று விரும்புகிறுன். இது கொடுப்பவர் ஏற்பவர் ஆகிய இருதரத்தாருக்கும் துன்பம் விளைவிக்கிறது. ரஜோ குணமுடையவனிடத்து மற்றொரு மனப்பான்மையுண்டு. ஒரு பொது ஸ்தாபனத்துக்கோ, ஒரு தேவாலயத்துக்கோ அவன் ஏதாவது கைங்கரியம் செய்தால் அதைப்பற்றித் தனக்கு நிரந்தரமான விளம்பரம் வேண்டுமென்கிறுன். தன்னுடைய பெயரை மிக முன்னணியில் பகட்டுடன் பொறித்து வைக்கவேண்டுமென்பது அவனுடையவிருப்பம். தன்னுடைய சொந்தப் பதுமையை அத்தகைய பொது இடங்களில் வைத்துப் பாராட்டவேண்டுமென்பதும் அம் மனிதனுடைய பெரு விருப்பமாகும். இனி, தேவாலயங்களில் ஒவ்வொரு மனிதனும் தனது சொந்தப்பெயர் சொல்லி அர்ச்சனை பண்ணவேண்டுமென்று விரும்புகிறுன். இத்தகைய விருப்பமும் ரஜோ குணத்தினின்று உதித்ததாம்.

**अदेशकाले यद्दानमपात्रेभ्यश्च दीयते ।**
**असत्कृतमवज्ञातं तत्तामसमुदाहृतम् ॥ २२**

அதேசகாலே யத்தானமபாத்ரேப்யஸ்ச தீயதே ।
அஸத்க்ருதமவக்ஞாதம் தத்தாமஸமுதாஹ்ருதம் ॥ 22

अदेश काले அதேச காலே *தகாத இடத்திலும் காலத்திலும்* अपात्रेभ्यः च அபாத்ரேப்ய: ச *தகுதியற்ற மனிதர்களுக்கும்* असत्कृतं அஸத்க்ருதம் *வணக்கமின்றி* अवज्ञातं அவக்ஞாதம் *இகழ்ச்சியுடன்* यत् दानं दीयते யத் தானம் தீயதே *எத்தானம் தரப்படுகிறதோ* तत् தத் *அது* तामसं தாமஸம் *தாமசமென்று* उदाहृतं உதாஹ்ருதம் *உரைக்கப் படுகிறது.*

***தகாத இடத்திலும் காலத்திலும் தகுதியற்றவர்களுக்கு வணக்கமின்றி இகழ்ச்சியுடன் செய்யப் படும் தானம் எதுவோ அது தாமஸ மெனப்படுகிறது.*** **22**

*புனிதமற்றதும் வசிக்க உதவாததும் தகாத இடமாகிறது. தூங்கும் வேளை, உடலின் தேவைகளைக் கவனித்துக் கொண்டிருக்கும் வேளை, வேறு அலுவல்களில் ஆழ்ந்து ஈடுபட்டிருக்கும் வேளை — ஆகிய இவைகள் தானம் செய்தற்குத் தகாத காலங்களாம். ஒழுக்கம் கெட்டவர்கள், அடக்கம் பயிலாதவர்கள், பொதுநல சேவை செய்யாதவர்கள், பணத்தை வீண் விரயம் செய்பவர்கள் ஆகியவர்கள் தானத்துக்குத் தகுதியற்றவர்களாம். முகமலர்ச்சியோடு கூடிய வரவேற்பும் உபசாரமும் இல்லாதுபோவதுமன்றி, புன்மொழிகளால் இகழ்ந்துபேசி, ஏற்பவர்க்கு மனவருத்தம் உண்டுபண்ணிக்கொடுக்கும் தானம் தாமசமானது.*

*ஆதிக்கம் செலுத்துகிற அரசாங்க உத்தியோகஸ்தர் போன்றவர்களின் வற்புறுத்தலுக்காக இணங்கிக் கொடுக்கும் தானம் தமோகுணமானது. லஞ்சம் அல்லது கைக்கூலி கொடுப்பதற்குப் பதிலாக ஏதேனும் ஒரு பொது நலத்துக்கு நன்கொடை கொடுப்பதாக வெளிக்குக் காட்டிக்கொள்வது பொருத்தமான தானமாகாது. ஒழுக்கமின்மையையும் அச்சத்தையும் அடிப்படையாகக் கொண்*

டது அத்தகைய தானம். அது தமோகுணத்தைச் சேர்ந்த தாகும்.

செய்கின்ற யக்ஞ, தான, தபக் கர்மங்களில் குற்றம் வாராது காப்பது எப்படி என்ற வினு எழலாம். அதற்கு விடை வருகிறது:—

**ॐ तत्सदिति निर्देशो ब्रह्मणस्त्रिविधः स्मृतः ।**
**ब्राह्मणास्तेन वेदाश्च यज्ञाश्च विहिताःपुरा ॥ २३**

ஓம் தத் ஸதிதி நிர்தேசோ ப்ரஹ்மணஸ்த்ரிவித: ஸ்ம்ருத: ।
ப்ராஹ்மணஸ்தேன வேதாஸ்ச யக்ஞாஸ்ச விஹிதா: புரா ॥ 23

ॐ तत् सत् इति ஓம் தத் ஸத் இதி *ஓம் தத் சத் என்று* ब्रह्मण: ப்ரஹ்மண: *பிரம்மத்தினுடைய* त्रिविध: த்ரிவித: *மூவித* निर्देश: நிர்தேச: *பெயர்* स्मृत: ஸ்ம்ருத: *கூறப்பட்டுள்ளது* तेन தேன *அதனுல்* ब्राह्मणा: च ப்ராஹ்மண: ச *பிராம்மணர்களும்* वेदा: च வேதா: ச *வேதங்களும்* यज्ञा: யக்ஞா: *யாகங்களும்* पुरा புரா *பண்டைக்காலத்தில்* विहिता: விஹிதா: *வகுக்கப்பட்டன.*

***"ஓம் தத் ஸத்" என்று பிரம்மம் மூவிதமாய் மொழியப்பட்டுள்ளது. அதினின்று வேதியர், வேதம், வேள்வி பண்டு படைக்கப்பட்டனர். 23***

ஓம் தத் ஸத் என்ற மூன்று பெயர்களால் பிரம்மம் சர்வ சாதாரணமாக அழைக்கப்படுகிறது. மூன்றும் மூன்று குறிப்புப் பெயர்களாக அதற்கு அமைந்துள்ளன. அது ஓசையாகப் பரிணமிக்கிறது. ஓசையினின்று உலகெலாம் உண்டாகிறது. ஆதலால் அது நாதப்பிரம்மம் எனப்படு கிறது. ஓம் என்பது அகிலாண்டத்தின் ஓசையின் தொகை. ஓசையின் தொகை ஓம்கார சொரூபமாக ஓயாது ஒலித்துக் கொண்டிருக்கிறது. பிரணவம் என்றும் அதைப் பகர்வது உண்டு. ஆக, பிரம்மத்தை ஓம்கார வடிவினன் என்பது ஒவ்வும். கற்புடைய மாது ஒருத்தி தன் கணவனை "அவர்" என்று குறித்துச் சொல்லுகிருள். அங்ஙனம் ஞானிகள் அது என்று சொல்லும்பொழுதெல்லாம் பிரம்மத்தைக்

குறிக்கிறார்கள். तत् என்னும் சொல் அது என்று பொருள் படுகிறது. பெரிய பொருளைப் பெயரிட்டு அழையாது வெறும் தத் என்ற பதத்தால் வேதம் அதைப் பல்கால் குறிப்பிடுகிறது.

எது சத்தியமாயுள்ளதோ அது ஸத் எனப்படுகிறது காலத்தால் இடத்தால் செயலால் அடிபடாதிருப்பது பிரம்மம். எனவே அது ஸத் என்னும் பெயர் பெறுகிறது. ஆக, ஓம் தத் ஸத் என்பதன் பொருள் ஓசை வடிவமாயுள்ள அந்த பிரம்மமே மெய்ப்பொருள் என்பதாம்.

பாலினின்று மோரும் வெண்ணெய்யும் உண்டாகின்றன வெனினும் சிறந்த பொருளாகிய வெண்ணெயே பாலினின்று வந்ததாகச் சொல்லப்படுகிறது. பிரம்மத்தினிடத்திருந்து அனைத்தும் உண்டாயின வெனினும் அவைகளுள் சிறப்பாயுள்ள அந்தணர், வேதம், வேள்வி முதலியன உண்டாயினவென்று சொல்லப்படுகின்றன. உயிர் வகைகளுள் சிறந்தவர்கள் செந்தண்மையே வடிவெடுத்துள்ள அந்தணர். அறிவைப் புகட்டும் நூல்களுள் சிறந்தவைகள் வேதம். செயல்களுள் புனிதமும் நல்லுணர்ச்சியும் நிறைந்தவைகள் வேள்வி அல்லது யக்ஞம். நாத பிரம்மமாகத் தோன்றியுள்ள பிரபஞ்சத்தில் இம் மூன்றும் முக்கியமானவைகளென்று குறிப்பிடப்படுகின்றன.

இம் மந்திரங்கள் எதற்கு உதவுகின்றன வென்று இனி இயம்பப்படுகிறது:—

तस्मादोमित्युदाहृत्य यज्ञदानतपःक्रियाः ।
प्रवर्तन्ते विधानोक्ताः सततं ब्रह्मवादिनाम् ॥ २४

தஸ்மாதோமித்யுதாஹ்ருத்ய யக்ஞதானதப: க்ரியா: ।
ப்ரவர்த்தந்தே விதானோக்தா: ஸததம் ப்ரஹ்மவாதினாம் ॥ 24

तस्मात् தஸ்மாத் *ஆகையினால்* ओं इति ஓம் இதி *ஓம் என்று* उदाहृत्य உதாஹ்ருத்ய *உச்சரித்து* ब्रह्म वादिनां ப்ரஹ்ம வாதினாம் *வேதமறிந்தவர்களின்* विधान उक्ताः यज्ञ दान तपः क्रियाः விதான உக்தா: யக்ஞ

தா்ன தப: க்ரியா: *சாஸ்திரம் உரைகதும் யக்ஞ தான தபககரியைகள்* सततं ஸததம் *எப்பொழுதும்* प्रवर्तन्ते ப்ரவா்த்தந்தே *தொடங்குகின்றன.*

***ஆகையால் வேதமறிந்தவர்கள் வேத விதிப் படி செய்யும் யக்ஞ – தான – தபக்கிரியைகள் எப் பொழுதும் "ஓம்" என்று உச்சரித்துத் தொடங்கு கின்றன.*** **24**

*குறைபாடில்லாத கர்மமில்லை. குறைபாட்டை முகாமையாகக் கொண்டு கர்மம்செய்யாமலிருக்க முடியாது. தேகமெடுத்தவன் கர்மம் செய்யாமலிருக்க முயற்சி பண்ணு வதும் பொருந்தாது. கருமத்தில் உள்ள அக் குறைபாட் டைப் போக்குதற்கு கருமம் ஒவ்வொன்றும் 'ஓம்' என்று உச்சரித்துக்கொண்டு துவக்கப்படுகிறது. அதாவது இயற் கையின் நடைமுறைக்கு ஒத்ததாக ஒவ்வொரு செயலும் இருக்கவேண்டும். இயற்கையின் நடைமுறையில் ஒழுங் குப்பாடு இருக்கிறது. ஜீவர்களின் முன்னேற்றத்துக்கு அந்த ஒழுங்குப்பாடு துணைபுரிகிறது. அருள் நிறைந்த அந் தத் திட்டத்தை உணர்ந்து அதற்கேற்றபடி வினையாற்ற வேண்டும் இச்செயல் நாளடைவில் விக்கினேசுவர பூஜை யாக வடிவெடுக்கலாயிற்று. விக்கினேசுவரனே ஓம்கார வடிவினன். செய்கிற வினை ஒவ்வொன்றிலுமுள்ள விக்கி னத்தை நீக்குதற்கும், அதை வெற்றிகரமாக முடித்தற்கும் விநாயக வணக்கம் செய்யப்படுகிறது. ஓசையெல்லாம் ஓங் காரத்தில் ஒடுங்குவது போன்று தனித்த செயல்களெல்லாம் இயற்கைத் திட்டத்திற்கு ஒத்திருக்கவேண்டும். அப் பொழுது அது குறையின்றி நிறைவேறுகிறது. 'ஓம்' என்று உச்சரித்து ஒவ்வொரு கருமத்தையும் துவக்குவதன் உட்கருத்து இதுவேயாம்.*

**तदित्यनभिसंधाय फलं यज्ञतपः क्रियाः ।**
**दानक्रियाश्च विविधाः क्रियन्ते मोक्षकाङ्क्षिभिः ॥ २५**

ததித்யனபிஸந்தாய பலம் யக்ஞதப: க்ரியா: ।
**தானக்ரியாஸ்ச விவிதா: கரியந்தே மோக்ஷகாங்க்ஷிபி: ॥ 25**

तत् इति தத் இதி *தத் என்று (பிரம்ம வாசக சப்தத்தை) உச்சரித்து* फलं பலம் *பலனை* अनभिसन्धाय அனபிஸந்தாய *கருதாது* मोक्षकांक्षिभिः மோக்ஷகாங்க்ஷிபி: *மோக்ஷத்தை நாடுபவர்களால்* विविधाः விவிதா: *நானாவிதமான* यज्ञ तपः क्रियाः யக்ஞ தப: க்ரியா: *யக்ஞ தபக்கிரியைகளும்* दानक्रियाः च தானக்ரியா: ச *தானக்கிரியைகளும்* क्रियन्ते க்ரியந்தே *செய்யப்படுகின்றன.*

***"தத்" என்று (பிரம்மத்தைக் குறிக்கும் சொல்லை) உச்சரித்துப் பலனை விரும்பாது மோக்ஷத்தை நாடுபவர்களால் நானாவிதமான யக்ஞ தபக்கிரியைகளும் தானக்கிரியைகளும் செய்யப்படுகின்றன.*** **25**

*"தத்" என்று பிரம்மத்தைச் சிந்தித்துச் செயல் புரிகின்றபொழுது எல்லாம் அவன் உடைமையென்றும், எல்லாம் அவன் செயல் என்றும் எண்ணம் வருகிறது. கருமம் எவ்வளவு நல்லதாயிருந்தாலும் அது தனக்கென்று செய்யப்படும்பொழுது அதில் தோஷம் அதிகரிக்கிறது. போர் புரிதல் போன்ற கருமங்கள் பொதுப்படப் பார்க்குமிடத்துக் கேடு நிறைந்தவைகளாகும். சில நெருக்கடிகளில் அத்தகைய கருமங்களைச் செய்தே ஆகவேண்டும். உலக நடைமுறையில் ஈசனது பெருந்திட்டத்தை அறிபவன் அவை யாவும் ஈசன் செயல் என்று கருதி அவனுடைய ஆராதனையாக அச்செயலைச் செய்யவேண்டும். அப்படிச் செய்தால் கர்ம பலன் தன்னுடையதல்ல என்கிற தெளிவு ஏற்படுகிறது. பரத்திலேயே நாட்டமதிகரிக்கிறது. அதனால் முமுக்ஷுத்வம் வந்தமைகிறது. பின்பு யக்ஞமும் தபசும் தானமும் அதற்கேற்ற சாதனங்களாய்விடுகின்றன.*

**सद्भावे साधु भावे च सदित्येतत्प्रयुज्यते ।**
**प्रशस्ते कर्मणि तथा सच्छब्दः पार्थ युज्यते ॥ २६**

ஸத்பாவே ஸாது பாவே ச ஸதித்யேதத் ப்ரயுஜ்யதே ।
ப்ரசஸ்தே கர்மணி ததா ஸச்சப்த: பார்த்த யுஜ்யதே ॥ 26

पार्थ பார்த்த *பார்த்தா* सद्भावे ஸத்பாவே *உண்மை என்ற கருத்திலும்* साधुभावे च ஸாதுபாவே ச *நன்மை என்ற கருத்திலும்* सत् इति एतत् ஸத் இதி ஏதத் "*ஸத்*" *என்ற இச்சொல்லானது* प्रयुज्यते ப்ரயுஜ்யதே *வழங்கப்படுகிறது* तथा ததா *அங்ஙனமே* प्रशस्ते कर्मणि च ப்ரசஸ்தே கர்மணி ச *மங்களகரமான கர்மங்களிலும்* सत् शब्दः ஸத் சப்த: *ஸத் என்ற சொல்* युज्यते யுஜ்யதே *உபயோகிக்கப்படுகிறது.*

***அர்ஜுனா, உண்மை யென்ற கருத்திலும் நன்மை யென்ற கருத்திலும் "ஸத்" என்றசொல் வழங்கப்படுகிறது. மங்கள கர்மங்களிலும் "ஸத்" என்ற சொல் உபயோகிக்கப்படுகிறது.*** **26**

*முக்காலத்திலும் மாறாத, அழியாத, நகராத பிரம்மமே "ஸத்" என்று சொல்லப்படுகிறது. பிரம்மம் ஒன்று தான் உள்ளது. பிரபஞ்சமும் அதிலுள்ள ஜீவர்களும் "அஸத்" என்றாலும் புத்திரன் பிறந்தால் அவனைக் குறித்துச் சிரஞ்சீவி என்கிறோம். நிலையற்ற உயிரை நிலையானதென்று சொல்லுவது உபசாரத்துக்காக. லௌகிக வாழ்க்கை முறையில் உண்மையல்லாததை உண்மையென்று பாவித்தல் வேண்டும் என்ற கருத்துடன் "ஸத்" என்ற சொல் வழங்கப்படுகிறது.*

*சாது பாவம் என்பது நன்மையை வளர்க்கும் கருத்து. பிரம்மம் ஒன்றே நிர்தோஷம் அல்லது குற்றமற்றது. பாக்கி அனைத்திடத்தும் சிறிதளவாவது கேடு உண்டு. கேடு உடைய மனிதனைக் கெட்டவன் என்று சொல்லலாகாது. அவனை நல்லவன் என்றே சர்வகாலமும் சொல்லிக்கொண்டிருந்தால் நல்லவனாகிவிடுகிறான். சாது பாவம் உலகத்தைச் சீர்திருத்த உற்ற உபாயமாகிறது. இது வாழ்க்கை சம்பந்தமான சிறந்ததொரு கோட்பாடு ஆகிறது. இதற்காகவும் "ஸத்" என்னும்சொல் வழங்கப்படுகிறது.*

*இனி, ஸ்வஸ்தி வசனமும் "ஸத்" எனப்படுகிறது. மங்களமல்லாததை மங்களமென்று சொல்லி மனதை ஒழுங்குப்படுத்துதற்கு அது உதவுகிறது. பொய்யானதெல்*

லாம் பொருந்தியது நம் உடல். அதை "மெய்" யென்று மொழிகிறோம். மங்களம் வேண்டி அங்ஙனம் மொழிகிறோம். விவேகமுடையவர்க்கு விவாகத்தைவிடக் கொடியது ஒன்றுமில்லை யென்பது விளங்கும். மனிதனுடைய வீழ்ச்சிக்கு விவாகம் காரணம். அமங்களமான மணச்சடங்கை சுபகாரியம் என்கிறோம். "அஸத்"தை "ஸத்" என்கிறோம். மங்களமல்லாததை மங்களமாக்குதற்கு "ஸத்" என்ற சொல்லை வழங்குகிறோம்.

பொய்யானதும், கெட்டதும், பொருந்ாததுமான உலக வாழ்வை நித்தியமானதென்றும், நலம்நிறைந்ததென்றும் முற்றிலும் பயன்தரவல்லதென்றும் எண்ணுவது அவசியம். வாழ்வில் இனிமை காண்பதற்கு அது உற்ற உபாயமாகிறது. "ஸத்" என்னும்சொல் அத்தகைய மனநிலையை வருவிக்கிறது.

இன்னும் எதற்கெல்லாம் "ஸத்" என்னும்சொல் வழங்கப்படுகிறது? விடை வருகிறது:—

**यज्ञे तपसि दाने च स्थितिः सदिति चोच्यते ।**
**कर्म चैव तदर्थीयं सदित्येवाभिधीयते ॥ २७**

யக்ஞே தபஸி தானே ச ஸ்திதி: ஸதிதி சோச்யதே ।
கர்ம சைவ ததர்த்தீயம் ஸதித்யேவாபிதீயதே ॥ 27

यज्ञे யக்ஞே *யக்ஞத்திலும்* तपसि தபஸி *தவத்திலும்* दाने च தானே ச *தானத்திலும்* स्थितिः ஸ்திதி: *நிலைத்திருப்பது* सत् इति उच्यते ஸத் இதி உச்யதே *ஸத் என்று சொல்லப்படுகிறது* च ச *மேலும்* तदर्थीयं ததர்த்தீயம் *அதன் பொருட்டு* कर्म च एव கர்ம ச ஏவ *கர்மமும்* सत् इति एव ஸத் இதி ஏவ *ஸத் என்றே* अभिधीयते அபிதீயதே *இயம்பப்படுகிறது.*

***வேள்வியிலும், தவத்திலும், தானத்திலும் நிலைத்திருப்பது 'ஸத்' என்று சொல்லப்படுகிறது. இன்னும் பிரம்மத்தின் பொருட்டுச் செய்யும் கர்மமும் 'ஸத்' என்றே இயம்பப்படுகிறது. 27***

யாகம், தபசு, தானம் ஆகியவைகளை முறையாகச் செய்தால் அவைகள் இயல்பாகவே "ஸத்" என்னும் வாக்கியத்துக்கு இலக்காய்விடுகின்றன. சான்று ஒன்று எடுத்துக் கொள்வோம். உயரமாக வீடு கட்டுதற்கு முதலில் மூங்கில், பலகை முதலியவைகளைக்கொண்டு சாரம் கட்டுகிறோம். வீடு கட்டுவது நிலைத்துள்ள செயல். சாரம் கட்டுவது நிலையற்ற செயல். அப்படி யிருந்தும் சாரம் கட்டினால்தான் வீடுகட்ட முடியும். நிலைத்த செயலுக்குத் துணை புரிகின்றவளவு சாரம் கட்டுதல் இன்றியமையாச் செயல் ஆகிறது. யாகம், தபசு, தானம் ஆகியவைகள் தம்மளவில் நிலைத்த செயல்கள் ஆகா. நிலை பொருளாகிய தெய்வத்தை அடைதற்கு அவைகள் பயன்படுகின்றனவாதலால் அவைகள் "ஸத்" கருமங்கள் எனப்படுகின்றன. முறைதவறிச் செய்யப்படும்பொழுதும் "ஸத்" என்ற மந்திரத்தை உச்சரித்துச் செய்துவந்தால் அவைகளிடத்துள்ள குறைபாடுகள் நீங்கி நாளடைவில் நலம் பெறுகின்றன. அதற்கும் சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். பதரிகாச்ரமம் செல்ல விரும்பும் மனிதன் ஒருவன் இந்தியாவின் தென்முகமாக நடந்து செல்வானானால் அது முறைதவறிய செயல். தனது விருப்பம் ஹிமயமலையில் பதரிகாச்ரமம் போய்ச் சேர்வது என்று அவன் வழிநெடுகச் சொல்லி வருகிறான் என்று வைத்துக் கொள்வோம். அப்பொழுது விஷயம் தெரிந்த ஆள் ஒருவன் அவனுடைய செயலைத் திருத்தியமைக்கத் தோன்றிவிடுவான். தென்திசையைநோக்கிப்போகலாகாது, வடதிசையை நோக்கிப் போகவேண்டும் என்ற ஆணை பிறக்கும். பிறகு அவன் பதரிகாச்ரமம் போய்ச்சேருவான். இங்ஙனம் கடவுளைக் குறித்துச் செய்யும் செயல் துவக்கத்தில் குற்றமுடையதாயிருந்தாலும் அது விரைவில் திருத்தியமைக்கப் பெறுகிறது. தன்பொருட்டுச் செய்யும் கர்மம் எவ்வளவு நல்லதாயிருந்தாலும் அது கேடுடையதாய்விடும். கடவுள் பொருட்டுச் செய்யப்படும் கர்மம் எவ்வளவு குற்றமுடைய

தாயிருந்தாலும் அது விரைவில் "ஸத்" கர்மமாய் மாறி விடுகிறது.

अश्रद्धया हुतं दत्तं तपस्तप्तं कृतं च यत् ।
असदित्युच्यते पार्थ न च तत्प्रेत्य नो इह ॥ २८

அச்ரத்தயா ஹுதம் தத்தம் தபஸ்தப்தம் க்ருதம் ச யத் ।
அஸதித்யுச்யதே பார்த்த ந ச தத்ப்ரேத்ய நோ இஹ ॥ 28

अश्रद्धया அச்ரத்தயா *சிரத்தையின்றி* हुतं ஹுதம் *ஹோமம் செய்ததும்* दत्तं தத்தம் *தானம் செய்யப்பட்டதும்* तप्तं तपः च தப்தம் தப: ச *செய்யப்பட்ட தபமும்* कृतं च க்ருதம் ச *செய்யப்பட்ட கருமமும்* यत् யத் *எதுவோ அது* असत् इति उच्यते அஸத் இதி உச்யதே *அஸத் என்று சொல்லப்படுகிறது* पार्थ பார்த்த *பார்த்தா* तत् தத் *அது* प्रेत्य च ப்ரேத்ய ச *(செத்தபின் வருகிற) பரலோகத்துக்கும்* न ந *உதவாது* इह न இஹ ந *இகலோகத்துக்கும் பயன்படாது.*

***சிரத்தையின்றிச் செய்யும் யாகமும் தானமும் தபசும் மற்றக் கருமமும் "அஸத்" எனப்படும். அர்ஜுனா, அது மறுமைக்கும் உதவாது, இம்மைக்கும் உதவாது.*** 28

*யாகத்தையும் தானத்தையும் தபசையும் முறையாகச் செய்தால் பரபோதம் மேலிடுகிறது, ஜீவபோதம் தேய்கிறது. இச் செயல்களை சுய நலத்துடன் செய்தால் ஜீவபோதம் மேலும் வளர்கிறது. இயற்கையினின்று வருகிற இன்பங்களை அனுபவிப்பதற்கு ஜீவபோதம் வேண்டும். பரம்பொருளிடத்திருந்து வரும் பேரானந்தத்தை அனுபவிக்கப் பரபோதம் வேண்டும். சிரத்தை இல்லாத மனிதனுக்கு ஜீவபோதமும் இல்லை, பரபோதமும் இல்லை.*

*சிரத்தையில்லாது செய்யும் கர்மம் எத்தகையதாயிருந்தாலும் அது எவ்வுலகுக்கும் பயன்படாது. கர்மம் செய்வதால் யந்திரங்கள் முன்னேற்றமடைவதில்லை. அவைகள் ஒழுங்காக நன்கு உழைக்கின்றன. ஆனால் எப்பொழுதும் அவைகள் யந்திரமாகவே இருக்கின்றன*

சிரத்தையில்லாத மனிதனும் யந்திரம் போன்று ஆய்விடுகிறான். யாகம், தானம், தபசு ஆகியவைகளுக்குப் புறம்பாயுள்ள மற்றக் கருமம் என்று சொல்லுவது, தனியாக இவ்வுலகுக்கு மட்டும் பயன்படுகிற கல்வி, செல்வம், உடல் திட்பம் முதலியன அடங்கப்பெற்ற செயலாம். பொருள் சம்பாதிப்பதை அதற்குச் சான்றாக எடுத்துக்கொள்ளலாம். சிரத்தையில்லாதவன் பொருள் சம்பாதிக்க முடியாது. தற்செயலாய் அவனுக்குப் பொருள் சேர்ந்தால் அவன் அதைக் காப்பாற்ற முடியாது. அதை அனுபவிக்கவும் அவனால் இயலாது. யாருக்கும் பயன்படாது அது விரயமாய்விடும். சிரத்தையுடன் செய்யப்படுகிற கருமங்களெல்லாம் நன்மை பயக்கின்றன. சிரத்தையுடன் செய்யும் பொழுதே ஓம் தத் ஸத் என்று உச்சரித்துக்கொண்டு செய்தால், அம்மூன்று சொற்களுக்கும் அடிப்படையாயுள்ள பரம்பொருளை நினைந்து செய்ததாகும். அதனால் கர்மங்களில் இயல்பாயுள்ள கேடுகள் நீங்கி நலம் நிறைகிறது. பரத்தைப் பெற அதுவே உற்ற உபாயமாகிறது.

**इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे श्रद्धात्रयविभागयोगो नाम सप्तदशोऽध्यायः ॥**

இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம் யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே ச்ரத்தாத்ரயவிபாகயோகோ நாம ஸப்ததசோऽத்யாய: ॥

***பிரம்ம வித்தையைப் புகட்டுவதும், யோக சாஸ்திரமானதும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமாக வந்துள்ளதுமாகிய பகவத்கீதை என்னும் உபநிஷத்தின்கண் சிரத்தாத்ரய விபாக யோகம் என்ற பதினேழாம் அத்தியாயம்.***

---

# अष्टादशोऽध्यायः

# பதினெட்டாம் அத்தியாயம்

## मोक्षसंन्यासयोगः

## மோக்ஷஸன்யாஸயோகம்

अर्जुन उवाच

संन्यासस्य महाबाहो तत्त्वमिच्छामि वेदितुम् ।
त्यागस्य च हृषीकेश पृथक्केशिनिषूदन ॥ १

அர்ஜுன உவாச

ஸன்யாஸஸ்ய மஹாபாஹோ தத்வமிச்சாமி வேதிதும் ।
த்யாகஸ்ய ச ஹ்ருஷீகேச ப்ருதக் கேசிநிஷூதன ॥ 1

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது*

हृषीकेश ஹ்ருஷீகேச *இந்திரியங்களுக்கு இறைவா* महाबाहो மஹாபாஹோ *தோள் வலிவுடையோய்* केशिनिषूदन கேசிநிஷூதன *கேசி என்ற அரக்கனை அழித்தவனே* संन्यासस्य ஸன்யாஸஸ்ய *ஸன்யாஸத்தினுடையவும்* त्यागस्य च த்யாகஸ்ய ச *தியாகத்தினுடையவும்* तत्त्वं தத்வம் *தத்துவத்தை* पृथक् ப்ருதக் *தனித்தனியாய்* वेदितुं வேதிதும் *அறிந்துகொள்ள* इच्छामि இச்சாமி *இச்சிக்கிறேன்.*

அர்ஜுனன் சொன்னது

***ஹ்ருஷீகேசா, மகாபாகுவே, கேசிநிஷூதனா, சன்யாசத்தினுடையவும் தியாகத்தினுடையவும் தத்துவத்தைத் தனித்தனியே தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.*** ***1***

ஏற்கனவே இயம்பியுள்ள முக்கியமான கோட்பாடுகள் முடிவுரையில் மீண்டும் ஒருமுறை விமர்சனம் செய்யப்

படுகின்றன. ஆக இந்த அத்தியாயத்தின் முதற்பகுதியானது யோகங்களை யெல்லாம் தொகுத்து சமரசப்படுத்தும் பாங்கில் அமைகிறது. ஒரே கோட்பாட்டை சந்தர்ப்பத்துக்கு ஏற்றவாறு வேறு வேறு விதங்களில் விளக்கலாம். புதிய வடிவம் பெறுமிடத்து அது புதிய கோட்பாடாகவே தென்படும். சந்தர்ப்ப பேதத்தை முன்னிட்டும் பழைய கோட்பாடு புதியபோதனை போன்று தென்படுவது இயல்பு. யானையின் அவயவம் ஒவ்வொன்றுக்கும் தன்னளவில் அழகு இருக்கிறது. அவைகளை யெல்லாம் தொகுத்து யானை வடிவத்தில் பார்க்குங்கால் அவைகளின் அழகு பன்மடங்கு அதிகரிக்கிறது. பதினெட்டு அத்தியாயங்களும் பதினெட்டு யோகங்கள் என்று பெயர் பெற்றிருக்கின்றன. அவைகள் அனைத்துக்கும் பொதுவாக யோக சாஸ்திரம் என்னும் பெயர் இந்த அத்தியாயத்தில் பூர்த்தி பெறுகிறது.

கேசி என்கிற அசுரன் குதிரைவடிவெடுத்துக் கிருஷ்ணனை விழுங்க வாயைத் திறந்துகொண்டு வந்தான். கண்ணனே தன் கையை அதன் வாயினுள் நீட்டி வயிற்றுக்குள் செலுத்திக் கசக்கிக் கொன்றுவிட்டான். ஆதலால் அவனுக்குக் கேசிநிஷூதனன் என்ற பெயர் வந்தது. கைவலிவை இங்குக் காட்டியதால் அவன் மகாபாகு என்றும் அழைக்கப்படுகிறான். இச்செயல்களுக்கிடையில் அவன் இந்திரியங்களுக்கெல்லாம் இறைவனாயிருந்தமையால் ஹிருஷீகேசனாகிறான்.

அத் 5 – சுலோ 13, அத் 9 – சுலோ 28, இவை போன்ற இடங்களில் பகவான் சன்னியாசத்தைப்பற்றிப் பகர்ந்தார்.

அத் 4 – சுலோ 20, அத் 12– சுலோ 11, இவை போன்ற இடங்களில் தியாகத்தைப்பற்றிச் சொன்னார். இவ்விரண்டுக்குமுள்ள வித்தியாசம் என்னவென்பது கேள்வி.

வாழ்க்கையைப் பற்றிய கோட்பாடுகளில் சன்னியாசமும் தியாகமும் மிகச் சீரியவைகளாகும். அவைகளை

வெறும் சாஸ்திரத்தின் மூலம் தெரிந்துகொள்ள முடியாது. தீப்பற்றி எரிவதுபோன்று படம் வரையலாம். ஓவியத்தில் தீட்டிய தீயானது உணவு சமைக்க உதவாது. உண்மையாக எரிந்துகொண்டிருக்கும் தீ ஒன்றே அச் செயலுக்கு உதவும். எரிகின்ற தீ போன்றவை தியாகமும் சன்னியாசமும். யார் ஒருவர் சன்னியாசியோ அல்லது தியாக மூர்த்தியோ அவர்தான் அவ் உயர் நிலையை மற்றவர்க்கு வழங்க முடியும். ஸ்ரீ கிருஷ்ணன் அச் செயலைச் செய்யத் தகுந்தவரா என்ற கேள்வி எழலாம்.

அர்ஜுனனால் அவர் ஹிருஷீகேசன் என்றும், மஹாபாகு என்றும் கேசிநிஷூதனன் என்றும் அழைக்கப்பட்டார். சிற்றுயிர் பேருயிராகப் பரிணமித்துப் பரிபூரணன் ஆகும் வரையில் உள்ள படித்தரங்கள் எல்லாம் இம்மூன்று சொற்களில் அடங்கிவிடுகின்றன. அசுரனைக் கொல்லுதல் தீமையை எதிர்த்துப் போராடி வெற்றிபெறுதற்கு அறிகுறியாகும். எல்லா உயிர்களும் தீமையை எதிர்த்துப் போராடிக்கொண்டிருக்கின்றன. ஒவ்வோர் உயிருக்கும் அதனதன் நிலையில் எதிர்ப்பும், பகையும், தீமையும் உண்டு. இயற்கையில் யாண்டும் இக்காட்சியைக் காணலாம். தீமையை வெல்லுதலில் மற்ற உயிர்கள் ஏகதேசம் வெற்றி பெறுகின்றன; மனிதனே பெரும் வெற்றி பெறுகின்றான். ஆயுதங்களை நன்கு கையாண்டு நிறைவெற்றி பெறுதற்கு அடையாளமாகக் கிருஷ்ணன் பெருந் தோள்வலிவு பெற்றவன் (மகாபாகு) ஆகிறார். உடல் அமைப்பில் பரிபூரணநிலை அவரிடத்திருக்கிறது. மனத்தகத்து உள்ள கேடுகள் இந்திரியங்கள் மூலம் வெளியாகின்றன. கிருஷ்ணனே இந்திரியங்களையும் மனதையும் முற்றிலும் வென்றவர். ஆதலால் அவருக்கு ஹிருஷீகேசன் என்ற பெயர் வந்தது. ஜன்மம் எடுத்தவனது பரிபூரண நிலைக்கு எடுத்துக்காட்டு ஸ்ரீ கிருஷ்ணன். யோகேசனாகிய அவரே சன்னியாசத்தையும் தியாகத்தையும் விளக்கவல்லவர். அத்தகையவரிடம் அர்ஜுனன் இக்கேள்வி கேட்டது முற்றிலும் பொருத்தமானதாம்.

श्री भगवानुवाच

**काम्यानां कर्मणां न्यासं संन्यासं कवयो विदुः ।**
**सर्वकर्मफलत्यागं प्राहुस्त्यागं विचक्षणाः ॥ २**

ஸ்ரீ பகவானுவாச

காம்யாநாம் கர்மணாம் ந்யாஸம் ஸன்யாஸம் கவயோ விது: ।
ஸர்வகர்மபலத்யாகம் ப்ராஹுஸ்த்யாகம் விசக்ஷணா: ॥ 2

श्री भगवान् उवाच ஸ்ரீ பகவான் உவாச *ஸ்ரீ பகவான் சொன்னது*

कवयः கவய: *ஞானிகள்* काम्यानाम् कर्मणां காம்யாநாம் கர்மணாம் *காமிய கர்மங்களின்* न्यासं ந்யாஸம் *துறவை* संन्यासं ஸன்யாஸம் *சன்னியாசமென்று* विदुः விது: *அறிகிறார்கள்* विचक्षणाः விசக்ஷணா: *தீர்க்கதரிசிகள்* सर्व कर्म फल त्यागं ஸர்வ கர்ம பல த்யாகம் *சர்வ கர்மத்தின் பலனை விடுதலை* त्यागं த்யாகம் *தியாகமென்று* प्राहुः ப்ராஹு: *பகர்கிறார்கள்.*

ஸ்ரீ பகவான் சொன்னது

***காமிய கர்மங்களைத் துறப்பதை சன்னியாசமென அறிகிறார்கள் ஞானிகள். எல்லாக் கர்மங்களின் பயனை விடுவதைத் தியாக மென்கின்றனர் தீர்க்கதரிசிகள்.*** **2**

*காமிய கர்மம் என்பது இம்மையில் தனக்குப் பட்டம், புகழ், பேர், புத்திர பாக்கியம், செல்வம், தீர்க்காயுள், ஆரோக்கியம் முதலியன அமையவேண்டுமென்று ஆசைப்படுவதும், மறுமையில்சுவர்க்காதி பதவிகள் வேண்டுமென்று விரும்புவதுமாம். இத்தகைய ஆசைகளை ஒழிப்பது சன்னியாசம். இது சில ஞானியர்கள் கருத்து. வேறு சில ஞானிகள் நித்திய, நைமித்திய, காமியமாகிய எல்லாக் கர்மங்களின் பயனை விட்டுவிடுவதே தியாகம் என்கின்றனர். சன்னியாசம் என்பதும் தியாகம் என்பதும் ஒரே கருத்தைத்தான் விளக்குகின்றன. அற்றது பற்று எனில் உற்றது வீடு. இது விஷயத்தில் பேரறிஞர்களுக்கிடையில் அபிப்பிராய வித்தியாசமில்லை. தனது முன்னேற்றத்துக்கு*

இடைஞ்சலா யிருப்பவைகளை யெல்லாம்
வேண்டும். காமிய கருமங்கள் புதிய பந்தங்
பண்ணுகின்றன. அவைகளை நிறைவேற்று
பிறவிகள் எடுத்தாகவேண்டும். பிறவிப்பிண
மென்கிற விவேகிகள் அதற்குப் புதியவித்துக்க
லாகாது. ஏற்கனவே முளைத்து வளர்ந்திருக்கு
துக்கு ஒப்பான இவ்வுடல்வாழ்க்கை தா
போம் பரியந்தம் அதைத் தன்போக்கில்
முறை என்பது சில ஞானிகளின் கோட்பாடு
புதிய மரத்துக்கு விதையும் நடவேண்ட
மரத்தை விட்டும் வைக்கவேண்டாம், என்
அனைத்தையும் வேரறக் களைந்து எடுத்து
என்பது அவர்களது கோட்பாடு. கருமத்தை
ஒழித்துவிடவேண்டுமாம்.

சத்வகுணமுள்ளவர்களுக்குக் கருமங்கள் செய்ய
சியமில்லை. கருமங்கள் தாமாகவே அவர்களைவிட்டு
கின்றன. வலிய முயன்றாலும் அவர்களால் கருமஞ்
கடவுள் அவர்களைக் கருமஞ்செய்யவிடமாட்டார். க
மருமகப்பெண், வீட்டுவேலைகளிலிருந்து கொஞ்சங் கொ
விக்கப்படுகிறாள்! குழந்தை பிறந்தபிறகு அவள் முழுக்
குழந்தையைப் பராமரிப்பதிலேயே செலுத்தும்படி
அதேபோல, சத்வகுணமுள்ளவர்களது கருமங்களை
அகற்றிவிடுகின்றார். ஆனால் சத்வகுணம் வாய்க்கப்
எல்லா உலகக் கடமைகளையும் கவனிக்கவேண்டும். இ
னுடைய வேலையாள்போலத் தன்னைப் பாவித்துக்கொ
அலுவல்களை யெல்லாம் கவனிக்கவேண்டும். இது
மெனப்படும். இவ்வித பரித்தியாக புத்தியோடு சகல
புரிந்துகொண்டு, பகவன் நாமத்தை உச்சரித்து அ
செய்வதிலேயே கருமயோகத்தின் சாரமெல்லாம் அட

— ஸ்ரீ ராமகிரு

**त्याज्यं दोषवदित्येके कर्म प्राहुर्मनीषिणः ।**
**यज्ञदानतपः कर्म न त्याज्यमिति चापरे ॥**

**த்யாஜ்யம் தோஷவதித்யேகே கர்ம ப்ராஹுர்ம**
**யக்ஞதானதப: கர்ம ந த்யாஜ்யமிதி சாபரே ॥**

एके मनीषिणः ஏகே மனீஷிண: *சில அறிஞர்* कर्म கர்ம *எல்லாக் கர்மங்களும்* दोषवत् தோஷவத் *தோஷமுடையவை* त्याज्यं इति த்யாஜ்யம் இதி *துறத்தற்குரியவை யென்று* प्राहुः ப்ராஹு: *பகர்கிறார்கள்* अपरे च அபரே ச *இன்னும் சிலர்* यज्ञ दान तपः कर्म யக்ஞ தான தப: கர்ம *யக்ஞம், தானம், தபம் ஆகிய கர்மங்கள்* न त्याज्यं ந த்யாஜ்யம் *துறக்கப் படலாகாது* इति இதி *என்கின்றனர்.*

***கருமங்களெல்லாம் குற்றமுடையவைகளாதலால் துறத்தற் குரியவைகளென்று சில அறிஞர் பகர்கின்றனர். வேறு சிலர் வேள்வி, தானம், தபசு ஆகிய கருமங்கள் துறக்கப்படலாகாது என்கின்றனர்.*** 3

*கருமங்கள் அனைத்திலும் காரணம், காரியம் என்று இரண்டு பிரிவுகள் உண்டு. காரணம் இருக்கும் வரையில் காரியமும் உண்டு. மழை பெய்கிறது; அது காரணம். பூமி நனைகிறது; புதிதாகக் கட்டுகிற வீடும் நனைகிறது; இவ்விரண்டும் காரியங்கள். பூமி நனைதல் என்னும் காரியம் கிருஷிகனுக்கு நல்லது. புதிதாகக் கட்டுகிற வீடு நனைதல் என்பது கட்டுகிறவனுக்குக் கெட்டது. ஆக மழைபெய்தல் என்னும் கருமத்தில் நலம் கேடு ஆகிய இரண்டும் உண்டு. தீபம் எரிகிறது. அது பகவத் கீதை வாசிக்க உதவுகிறது. அச்செயலை நலம் எனலாம். தீபத்தில் பூச்சிகள் பறந்து வந்து வீழ்ந்து சாகின்றன. அச்செயலோ கொடியது. ஆக, தீபம் எரிதலில் நலம் கேடு ஆகிய இரண்டும் உண்டு. உயிர் வாழ்ந்திருக்க சுவாசிக்கிறோம். உயிர் வாழ்க்கை தேவாராதனைக்கென்றே பயன்படுத்தப்படுகிறது. அது சீரிய செயல். சுவாசிக்கும் மனிதன் காற்றிலுள்ள எண்ணிறந்த சிற்றுயிர்களைக் காற்றுடன் உறிஞ்சி ஒழிக்கிறான். அது கொடிய செயல். இங்ஙனம் எல்லாச் செயல்களிலும் நலமும் கேடும் நிறைந்திருக்கின்றன. கருமத்திலுள்ள கேடுகளையெல்லாம் கருத்தில் வாங்கும் மனிதர் கருமம் துறத்தற்குரியதென்று பகர்*

இன்றனர். வேள்வி, தானம், தபசு ஆகிய வினைகளில் கேடு இருந்தாலும் அவைகளை விடலாகாது. மக்கள் அவைகளைச் செய்துகொண்டிருக்கவேண்டும் என்பது மற்றும் சிலரது கருத்து. ஏனென்றால் வாழ்க்கையிலேயே கேடு இருக்கிறது. அதை முன்னிட்டு வாழ்க்கையை யாரும் அழித்துவிடுவதில்லை. ரோஜாச் செடியில் முள் உண்டு. முள்செடி என்று எண்ணி அதைப் பயிர்செய்யாவிட்டால் மணமும் அழகும் நிறைந்த மலர் நமக்குக் கிடையாது போய்விடும். விஷம் கொடியது. உடலினுள் சென்றால் அது உயிரை வாங்கி விடும். பின்பு அதே விஷத்தை ஔஷதமாக மாற்றியமைத்தால், அதை உடலினுள் செலுத்தலாம், உயிரையும் அது காப்பாற்றவல்லது. கருமம் அத்தகையது. மனிதனை அது பந்தப்படுத்தும் தன்மையுடையது. ஆனால் அதே கருமத்தை யாகமாகவோ, தபசாகவோ, தானமாகவோ செய்தால் தோஷம் நீங்கப்பெற்று நலன் உண்டாகும். ஆக, இத்தகைய ஸத்கருமங்களை நீத்தலாகாது என்பது அவ் அறிஞரது கோட்பாடு.

அப்படியானால் இவைகளைப் பற்றிப் பகவானது கோட்பாடு யாது? விடை வருகிறது:—

**निश्चयं शृणु मे तत्र त्यागे भरतसत्तम ।**
**त्यागो हि पुरुषव्याघ्र त्रिविधः संप्रकीर्तितः ॥ ४**

நிஸ்சயம் ச்ருணு மே தத்ர த்யாகே பரதஸத்தம ।
த்யாகோ ஹி புருஷவ்யாக்ர த்ரிவித: ஸம்ப்ரகீர்த்தித: ॥ 4

भरतसत्तम பரதஸத்தம பாரதகுலத்தவரில் சிறந்தவனே पुरुषव्याघ्र புருஷவ்யாக்ர புருஷருள் புலியே तत्र தத்ர அந்த त्यागे த்யாகே தியாக விஷயத்தில் मे மே என்னுடைய निश्चयं நிஸ்சயம் சித்தாந்தத்தை शृणु ச்ருணு கேள் त्यागः த்யாக: தியாகமானது त्रिविधः हि த்ரிவித: ஹி மூவிதமாகவே सम्प्रकीर्तितः ஸம்ப்ரகீர்த்தித: பகரப்பட்டுள்ளது.

**பாரதகுலக் கோவே, புருஷருள் புலியே, தியாகத்தைக் குறித்து நான் கொண்டுள்ள சித்தாந்தத்**

**தைக் கேள். தியாகமானது மூன்று விதமான தென்றே பகரப்பட்டுள்ளது.** **4**

சன்னியாசமும் தியாகமும் ஒன்றே என்பது பகவானுடையகோட்பாடு. தியாகமே வாழ்க்கைக்குப்பற்றுக்கோடு ஆகிறது. பார்க்குமிடமெங்கும்இயற்கை இக்கோட்பாட்டை விளக்கிக்கொண்டிருக்கிறது. தன்னிடத்துள்ளவெப்பத்தை சூரியன் ஓயாது தியாகம் பண்ணிக்கொண்டிருக்கிறது. அதனால் கோளங்களில் உள்ள உயிர்கள் வாழ்ந்திருக்க முடிகிறது. மரத்தைப் பற்றிப்பிடித்திருக்கிற காயானது கனிந்ததும் தனக்குப் பற்றுக்கோடாயிருந்த மரத்தைத் தியாகம் செய்கிறது. அப்படி அது மரத்தை விடுதலில் பண்பும் பயனும் சேர்ந்தே அமைந்திருக்கின்றன. தாய் ஒருத்தி தன் சொரூபமாகக் கர்ப்பத்தில் சிசுவை வைத்திருக்கிறாள். பத்து மாசம் ஆனதும் அதை அவள் தன் உடலினின்று தியாகம் செய்யாவிட்டால் அவளுக்கும் கெடுதல், அக்குழவிக்கும் கெடுதல். பழுதுபட்ட சரீரத்தை ஜீவன் தியாகம் செய்கிறான். சுகம் பெறுதற்கு தியாகம் ஒன்றே உற்ற உபாயம். மனிதனுக்குப் பாடம் புகட்டுதற்கென்றிருக்கிறது கருமம். பயன்படுகிற பள்ளிக்கூடத்தை மாணக்கன் ஒருநாள் தியாகம் பண்ணியாகவேண்டும். ஆயுளெல்லாம் அப்பள்ளிக்கூடத்தில் கட்டுண்டு இருப்பது அவனுடைய குறிக்கோள் அன்று. கருமத்தை மனிதன் முடிவில் துறந்து அதற்கு அதீதத்தில் போகவேண்டும். கருமத்தை விடுதற்கு முன்பு கர்ம தத்துவத்தைத் தெரிந்து கொள்வது அவசியமாகிறது. அதாவது :—

यज्ञदानतपः कर्म न त्याज्यं कार्यमेव तत् ।
यज्ञो दानं तपश्चैव पावनानि मनीषिणाम् ॥ ५

யக்ஞதானதப: கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவ தத் ।
யக்ஞோ தானம் தபஸ்சைவ பாவனானி மனீஷிணாம் ॥ 5

यज्ञ दान तपः कर्म யக்ஞ தான தப: கர்ம *யக்ஞம், தானம், தபசு ஆகிய கருமம்* न त्याज्यं ந த்யாஜ்யம் *விடப்படுவதன்று* तत् தத் *அது*

कार्यं एव காரியம் ஏவ *செய்ய வேண்டியதே* यज्ञः யக்ஞ: *யக்ஞமும்* दानं தானம் *தானமும்* तपः च एव தப: ச ஏவ *தவமும்* मनीषिणां மனீஷிணாம் *அறிஞர்களுக்கு* पावनानि பாவனானி *தூய்மை தருபவை.*

***யக்ஞம், தானம், தபசு ஆகிய கர்மம் விடப்படுவதன்று. அது செயற்பாலதே. யக்ஞமும் தானமும் தவமும் அறிஞர்களுக்குப் புனிதம் வழங்குபவைகளாம்.*** **5**

*பட்டுப்புழு தனக்கென்று கூடு கட்டுகிறது. கட்டிய கூட்டினுள் பிறகு அது அடைபட்டுப் போகிறது. சிறைவாசம் செய்வதுபோன்று நெடுநாள் அதனுள் கிடக்கிறது. தன்னை பந்தப்படுத்தும் செயலை அது தனக்குத் தானே செய்துகொள்கிறது. அப்படித் தன்னை அடைத்து வைப்பதில் பயன் ஒன்று உண்டு. புழுவாக இருந்தது, அழகிய பட்டுப்பூச்சியாக மாறுகிறது. இனி வெளிச்சத்தையும், காற்றையும், வெட்ட வெளியையும் காண அது வெளியே வந்தாகவேண்டும். அதற்காகத் தான் கட்டிய கூட்டை அது தானே உடைத்துத் தள்ளுகிறது. முதலில் கூட்டைக் கட்டுவது எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியம் பின்பு கூட்டை உடைப்பதில் இருக்கிறது. மனிதனுக்குக் காமிய கர்மங்களெல்லாம் கூடு கட்டுதற்கு ஒப்பானவை. காமிய கருமத்தின் வாயிலாக உலக வாழ்வின் தரத்தை மனிதன் கற்றுக்கொள்கிறான். அவனைப் பக்குவப் படுத்துதற்கு அது பயன்படுகிறது. பக்குவம் அடையும்போது அவனுக்கு விரக்தி வருகிறது; அதாவது பற்று நீங்குகிறது. இவ்வுலக வாழ்வைக் கடந்து பரத்தினைச் சாரவேண்டுமென்ற எண்ணம் உதிக்கிறது. அதன் பிறகு செய்கிற செயல்கள் யக்ஞமாகவும், தானமாகவும், தபசாகவும் மாறிவிடுகின்றன. பட்டுப்பூச்சி கூட்டை உடைத்தல் என்கிற செயலைச் செய்கிறது. ஆத்ம சாதகனிடத்து அதற்கு நிகரான செயல் யக்ஞம், தானம், தபசு ஆகியவைகளில் அடங்கியிருக்கிறது. ஆகையால் வேள்வி, தானம்,*

*தபசு ஆகியவைகளை எல்லா மனிதர்களும் செய்யவேண்டும். அவைகளைச் செய்கின்றவளவு உலகுக்கு நன்மை உண்டாகிறது. இப்பூவுலக வாழ்க்கை அதனால் மேன்மையடைகிறது. அதற்குமேல் மற்றொரு பிரயோஜனமும் உண்டு. அவைகளைக் கையாளும் வகை தெரிந்துள்ள அறிஞர்களை அவைகள் புனிதப்படுத்துகின்றன.*

*அறிஞர் யார்? விடை வருகிறது:—*

**एतान्यपि तु कर्माणि सङ्गं त्यक्त्वा फलानि च ।**
**कर्तव्यानीति मे पार्थ निश्चितं मतमुत्तमम् ॥ ६**

ஏதான்யபி து கர்மாணி ஸங்கம் த்யக்த்வா பலானி ச ।
கர்த்தவ்யானீதி மே பார்த்த நிஸ்சிதம் மதமுத்தமம் ॥ 6

पार्थ பார்த்த *பார்த்தா* एतानि कर्माणि अपि तु ஏதானி கர்மாணி அபி து *இக்கருமங்கள் அனைத்தும்கூட* सङ्गम् ஸங்கம் *பற்றுதலையும்* फलानि च பலானி ச *பயனையும்* त्यक्त्वा த்யக்த்வா *ஒழித்து* कर्तव्यानि கர்த்தவ்யானி *செய்ய வேண்டியவைகள்* इति இதி *என்பது* मे மே *என்னுடைய* निश्चितं நிஸ்சிதம் *நிச்சயமான* उत्तमं உத்தமம் *உத்தமமான* मतं மதம் *கொள்கை.*

***பார்த்தா, பற்றுதலையும் பயனையும் ஒழித்தே இக்கருமங்கள் யாவும் செய்யப்பட வேண்டும் என்பது எனது நிச்சயமான உத்தமமான கொள்கை. 6***

*தாய் ஒருத்தி தன் உடலினின்று பாலை உண்டுபண்ணித் தன் குழந்தைக்கு ஊட்டுகிறாள். குழந்தையின் பொருட்டு தான் பத்தியம் இருக்கிறாள்; ஊண் உறக்கத்தை ஒழிக்கிறாள். பசுவொன்று தன் கன்றுக்கும் உலகுக்கும் பாலைத் தன் உடலிலிருந்து உண்டுபண்ணிக் கொடுக்கிறது. இவ்விரண்டும் சுயநலம் கருதாத கருமத்துக்கு நல்ல சான்றுகளாகின்றன. தியாகத்தின் உச்ச நிலையை ஆங்குக் காணலாம். தவத்துக்கு விளக்கமும் அச்செயல்களில் அடங்கியிருக்கிறது. அதற்கு நிகரான தானத்தை வேறு எங்கும் காணமுடியாது. இடையறா யக்ஞம் இவ்வுயிர்களிடத்து*

ஓயாது நிகழ்ந்துகொண்டிருக்கிறது. பற்றற்ற செயலின் பண்பை இங்குக் காண்கிறோம். கொடுக்கின்றவர், ஏற்கின்றவர் ஆகிய இருதரத்தாரும் புனிதமடைகின்றனர். பற்றுதலையும் பயனையும் ஒழித்தவர்களே மேன்மைக்கு இருப்பிடமாகின்றனர். ஆசையை வென்ற மேலோர் இவ்வுலகக் கிருத்தியங்களை யக்ஞமாகச் செய்வார்களானால் இவ்வுலகமே பரலோகமாகக் காட்சி கொடுக்கும். உலகம் மேன்மையடைதற்கு ஏற்ற கோட்பாடு இதுவாதலால் இது பகவானுடைய நிச்சயமான உத்தமமான கொள்கை யெனப்படுகிறது.

*ஈசுவரனை அடைய விரும்புவோரும் ஸாதன மார்க்கத்தில் அபிவிருத்தியைக் கோருவோரும் ஆசையாகிய வலையில் விழாமல் தங்களைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் அவர்கள் ஒருபோதும் பரிபூரணர்களாகார்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

नियतस्य तु संन्यासः कर्मणो नोपपद्यते ।
मोहात्तस्य परित्यागस्तामसः परिकीर्तितः ॥ ७

நியதஸ்ய து ஸன்யாஸ: கர்மணோ நோபபத்யதே ।
மோஹாத்தஸ்ய பரித்யாகஸ்தாமஸ: பரிகீர்த்தித: 7

तु து *மேலும்* नियतस्य कर्मणः நியதஸ்ய கர்மண: *நித்திய கர்மத்தினுடைய* संन्यासः ஸந்ந்யாஸ: *சந்நியாசமானது* न उपपद्यते ந உபபத்யதே *பொருந்தாது* मोहात् மோஹாத் *மயக்கத்தால்* तस्य தஸ்ய *அதனுடைய (நித்திய கர்மத்தினுடைய)* परित्यागः பரித்யாக: *துறவு* तामसः தாமஸ: *தாமஸமானதென்று* परिकीर्तितः பரிகீர்த்தித: *கூறப்பட்டுள்ளது.*

***மேலும் நித்திய கர்மத்தை விடுவது பொருந்தாது. அறிவின்மையால் அதைத் துறப்பது தாமஸமென்று கூறப்படுகிறது.*** 7

பருவத்தில் பழுத்த பழங்களை உதிர்த்து உலகுக்கு ஊட்டுவது பழம் உதிர் சோலையின் தியாகமாகும். அதற்காகப் பூத்துக் காய்த்துக் கனியாக்குவது அச்சோலையின் நித்திய கருமமாகும். சோலையின் தியாகத்தை விரைவில்

*பயன்படுத்த வேண்டுமென்று எண்ணிய அறிவிலி காய்களை மரங்களினின்று பிடுங்குகின்றான். அது பலவந்தத்தில் செய்த தியாகமாகும். அங்ஙனம் எடுத்த காய்கள் கனிதற் குப்பதிலாக வெம்பிப்போம். சுவையற்ற கனியும் முளைக் கப்போடத் தகுதியற்ற விதையும் அதன் பயனாகும். அறி யாமையினால் செய்வித்த கருமத்தியாகத்தின் விளைவு அது.*

*மனிதனுடைய பரிபாகத்துக்கு ஏற்றவாறு நித்திய கருமம் உயர்கிறது. உண்பதும் உறங்குவதும் அறிவிலிக்கு நித்திய கர்மமாயிருப்பது போன்று விவேகிக்கு யக்ஞம், தானம், தபசு முதலியன நித்திய கர்மமாகிறது. உடல் இருக்கும் பரியந்தம் நித்திய கர்மம் நடைபெற வேண் டும். ஏனென்றால் உடல் வாழ்வும் நித்திய கருமமும் இணை பிரியாதவைகள். மேலோனை அது மேலும் மேலும் பரிசுத் தப்படுத்திக்கொண்டே வருகிறது. அவிவேகத்தால் அதை விடுவதால் கேடு விளையும். அக்ஞான இருள் இன்னும் அதி கரிக்கும். பணக்காரனைப் போன்று தானும் சுக ஜீவனம் செய்யவேண்டுமென்று கூலியாள் தன் வேலையை நிறுத்தி னால் அவன் வருந்துவான். தமோகுணத்தினின்று உதித்த நித்திய கருமத் தியாகம் அது போன்றது.*

*மனம் சச்சிதானந்தத்தில் லயமாகிற வரையில் ஒருவன் பகவந் நாமத்தை உச்சரிப்பதும், உலக காரியங்களைக் கவனிப்பதும் ஆகிய இரண்டையும் செய்து வரவேண்டும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**दुःखमित्येव यत्कर्म कायक्लेशभयात्त्यजेत् ।**
**स कृत्वा राजसं त्यागं नैव त्यागफलं लभेत् ॥ ८**

துःகமித்யேவ யத்கர்ம காயக்லேசபயாத் த்யஜேத் ।
ஸ க்ருத்வா ராஜஸம் த்யாகம் நைவ த்யாகபலம் லபேத் ॥ 8

दुःखं इति एव துःகம் இதி ஏவ *துக்கம் என்ற கருத்தாலே* काय क्लेश भयात् காய க்லேச பயாத் *உடலுக்கு உபத்திரவம் என்ற அச்சத் தால்* यत् कर्म யத் கர்ம *எக்கர்மத்தை* त्यजेत् த்யஜேத் *தியாகம் செய் கிறானோ* सः ஸः *அவன்* राजसं ராஜஸம் *ராஜஸமான* त्यागं த்யாகம் *தியா*

கத்தை कृत्वा க்ருத்வா செய்து त्यागफलं த்யாகபலம் தியாக பலத்தை (மோக்ஷத்தை) न एव लभेत ந ஏவ லபேத் அடைவதே இல்லை.

**உடம்பின் வருத்தத்துக்கு அஞ்சி, கர்மத்தைத் துக்கமெனக் கருதி அதை விடுகிறவன் ராஜஸ தியாகம் செய்கிருன். அதனுல் அவன் தியாகபலனை அடைவதேயில்லை. 8**

மெய் வருத்தமில்லாத மண்ணுலக வாழ்க்கையில்லை. உலகக் கடமைகளைச்செய்து வருத்தப்படவேண்டாமென்றும், சன்னியாச ஆஸ்ரமம்எடுத்துக்கொண்டு பிறர்செய்யும் சத்காரத்தைப் பெற்று நிம்மதியாக சுகஜீவனம் செய்யலாமென்றும் தியாகம் பண்ணுபவர்கள் இருக்கிருர்கள். பள்ளிக்கூடத்துக்குப்போவது சிரமமென்றெண்ணிச்சிறுவன் ஒருவன் பள்ளிக்கூட வாழ்க்கையைத் தியாகம் பண்ணுவானுகில், அங்குப் படித்து முடித்தவன் அடைகிற பயனை அடையமாட்டான். அதாவது அவனுக்கு நல்லறிவும் மேலாம் படிப்பும் உண்டாகமாட்டா. பரிபூரணமடைந்தவன் செய்கிற கர்மத்தியாகம் மோக்ஷமாகிறது. ஆகையால் அதுவே தியாக பலன் எனப்படுகிறது. உழைப்புக்கு அஞ்சுபவனுக்கு அது கிட்டாது.

போர்க்களத்துக்கு யுத்த சன்னத்தனுக வந்த அர்ஜுனனுக்கு திடீரென்று தியாகபுத்தி வருகிறது. உற்றுரைக்கொன்று துன்பமடைதல் வேண்டாமென்கிற மனப்பான்மை வருகிறது. வலிய வந்துள்ள அறப்போர் புரிவது அவனுடைய நித்திய கருமமாகிறது. நெறிவழுவாத வேந்தனுக்கு உறவினரைவிட அறம் பெரியது. அறப்போரை அவன் புறக்கணிக்க எண்ணியது ரஜோகுணத்தினின்று உதித்த தியாகம். ஆகவே பகவான் அதற்குச் சம்மதம் கொடுக்கவில்லை.

कार्यमित्येव यत्कर्म नियतं क्रियतेऽर्जुन ।
सङ्गं त्यक्त्वा फलं चैव स त्यागः सात्त्विको मतः ॥ ९

கார்யமித்யேவ யத்கர்ம நியதம் க்ரியதேऽர்ஜுன ।
ஸங்கம் த்யக்த்வா பலம் சைவ ஸ த்யாக: ஸாத்விகோ மத: ॥ 9

अर्जुन அர்ஜுன *அர்ஜுனா* सङ्गम् ஸங்கம் *பற்றுதலேயும்* फलं च एव பலம் ச ஏவ *பயனேயும்* त्यक्त्वा த்யக்த்வா *தியாகம்பண்ணி* कार्यं इति एव கார்யம் இதி ஏவ *செய்யத்தக்கதே என்று* यत् नियतं कर्म யத் நியதம் கர்ம *எந்த நித்திய கர்மம்* क्रियते க்ரியதே *செய்யப்படுகிறதோ* सः त्यागः ஸ: த்யாக: *அந்த தியாகமானது* सात्त्विकः ஸாத்விக: *சாத்விகமான தென்று* मतः மத: *கருதப்படுகிறது.*

***அர்ஜுனு, பற்றுதலேயும் பயனேயும் விட்டு, செய்தற்குரியதென்றே எந்த நித்திய கர்மம் செய்யப்படுகிறதோ, அந்தத் தியாகம் சாத்விகமான தென்று கருதப்படுகிறது.*** **9**

*தாமஸ தியாகத்திலும் ராஜஸ தியாகத்திலும் கருமமே செய்யாது விட்டொழிக்கப்படுகிறது. சாத்விக தியாகத்திலோ கர்மம் நின்றுவிடுவதில்லை. கருமம் முறையாக நடைபெறுகிறது. நித்திய கருமம் உட்பட எல்லாக் கருமங்கட்கும் கருமபலன் உண்டு. சாத்துவிக சாதகனே கருமத்துக்குத் தான் கர்த்தா என்று அபிமானிக்காது, கருமத்தில் பற்று வைக்காது, வினைப்பயனை விரும்பாது, தன் கடமையென அதைச் செய்து வருகிறுன். அத்தகைய மனநிலேயே அமைதியையும் அந்தக்கரண சுத்தியையும் உண்டுபண்ணுகிறது.*

*மருத்துவசாலேயில் சிகிச்சைபெறுகிறநோயாளி மருத்துவசாலேயிலேயே இருக்கவேண்டும் என்ற பற்றுதல் உடையவன் அல்லன்; சிகிச்சை பெற்றுக்கொண்டே இருக்க வேண்டும் என்ற வினைப்பயனை விரும்புபவனும் அல்லன். ஆயினும் அங்குத் தங்கியிருந்து தன் கடமையாகிய சிகிச்சை பெறுதல் என்ற கருமத்தை அவன் முறையாகச் செய்கிறுன். அவனே உண்மையில் நோயைத் தியாகம் பண்ணியவன் ஆகிறுன். கருமபலத் தியாகம் சாத்விக சாதகனுக்கு அத்தகையதாகிறது.*

*ஆனால் நோயினிடத்து நோயாளிக்குக் கசப்பு ஏற்படுகிறது. தனது நித்திய கருமத்தை சாத்விக குணமுடைய தியாகி மேலான பாங்கில் கருதுகிறான். சுவாசிப்பது உயிர் வாழ்பவைகளுக்கு நித்திய கருமமாகிறது. அவ் உயிர் வகைகளுள் ஆரோக்கியமுடைய மனிதன் முறையாக ஆழ்ந்து சுவாசிக்கிறான். ஆயினும் சுவாசிப்பதற்கு தான் கர்த்தா என்ற உணர்ச்சி அவனிடத்தில்லை. உண்மையில் உடல் உணர்ச்சியின்றி உடல்வாழ்க்கை வாழ்பவனே நோயற்ற நிலையில் இருப்பவன் ஆகிறான். கடவுள் வழிபாடு, சமூக சேவை, தியானம் முதலியன நல்ல ஆத்ம சாதகனது நித்திய கருமங்களாகின்றன. அவைகளை அவன் ஒழுங்காகச் செய்கிறான். அப்படி வினையாற்றுதற்கிடையில் அவன் கருமத்தைப் பற்றிய உணர்ச்சியில்லாதிருக்கிறான். ஆத்மபோதத்தில் அவன் நிலைத்திருக்கிறான். அந்த மனநிலையே சாத்விக தியாகமாகிறது.*

*அவன் பற்றற்றவன் என்பதை எத்தகைய மனப்பான்மை விளக்குகிறது? விடை வருகிறது:*

**न द्वेष्ट्यकुशलं कर्म कुशले नानुषज्जते ।**
**त्यागी सत्त्वसमाविष्टो मेधावी छिन्नसंशयः ॥ १०**

ந த்வேஷ்ட்யகுசலம் கர்ம குசலே நாநுஷஜ்ஜதே ।
த்யாகீ ஸத்வஸமாவிஷ்டோ மேதாவீ சின்னஸம்சய: ॥ 10

सत्त्व समाविष्टः ஸத்வ ஸமாவிஷ்ட: *சத்வம் மேலோங்கப் பெற்றவனும்* मेधावी மேதாவீ *பேரறிஞனும்* छिन्न संशयः சின்ன ஸம்சய: *சந்தேகத்தை அகற்றியவனும் ஆகிய* त्यागी த்யாகீ *தியாகியானவன்* अकुशलं कर्म அகுசலம் கர்ம *துன்பவினையை* न द्वेष्टि ந த்வேஷ்டி *இகழான்* कुशले குசலே *இன்ப வினையில்* न अनुषज्जते ந அநுஷஜ்ஜதே *விருப்பம் வைப்பதில்லை.*

***சத்வம் நிறைந்தவனும், பேரறிஞனும், ஐயத்தை அகற்றியவனும் ஆகிய தியாகியானவன் துன்ப வினையை வெறுக்கான், இன்ப வினையை விரும்பான். 10***

சத்வ குணத்திலேயே உறுதியாக நிற்பவன் தெளிந்த மனமுடையவனாகிறான். தூயதும் தெளிந்ததுமாகிய உள்ளத்தில் ஞானம் உருவெடுக்கிறது. ஆத்ம சொரூபத்தையும் பிரகிருதி சொரூபத்தையும் அவன் உள்ளபடி உணர்கிறான். அக்காரணத்தை முன்னிட்டு அவன் மேதாவியென்று அல்லது பேரறிஞனென்று அழைக்கப்படுகிறான். அத்தகையவனுக்கு கர்மம் அகர்மம் நன்கு விளங்குகிறது. நிலைக்கண்ணாடி போன்றது ஆத்ம சொரூபம். பிம்பங்களைக் காட்டும்பொழுதும் காட்டாதிருக்கும்பொழுதும் கண்ணாடி தன்மயமாயிருக்கிறது. கர்மம் நடைபெறும் பொழுதும் நடைபெறாதபொழுதும் ஆத்ம சைதன்யம் தன்மயமாயிருக்கிறது. அழகான வடிவம் எதிரில் வருவதால் கண்ணாடிக்குப் புதிய பெருமையொன்றும் வருவதில்லை. கோணலானதும் அழுக்குப் படிந்ததுமான வடிவம் எதிரில் வருவதால் கண்ணாடிக்குக் குறையொன்றுமில்லை. பொருள்களை உள்ளபடி பிரதிபிம்பிப்பதற்கிடையில் கண்ணாடி யாண்டும் தன்மயமாயிருக்கிறது. ஆத்ம சாக்ஷியின் முன்னிலையில் நிகழும் பிரகிருதியின் செயல் எதுவானாலும் தன் எதார்த்த சொரூபத்தைப் பற்றிப் பேரறிஞனுக்குச் சந்தேகம் ஒன்றும் வந்துவிடுவதில்லை.

அர்ஜுனனுக்கு ஏற்பட்ட ஸ்வதர்மம் அறப்போர் புரிவது. உழைத்துப் பாடுபடுவது எல்லார்க்கும் ஏற்பட்டுள்ள தர்மம். இச் செயல்களைத் துன்பம் நிறைந்தவைகளாகக் கருதுபவர்கள் இருக்கிறார்கள். ஆனால் வாழ்க்கைத் தத்துவத்தை அறிந்த பேரறிஞருக்கு அவைகளைப்பற்றி ஐயம் உண்டாவதில்லை. அவைகளை வெறுக்காது, மனதை நடுநிலையில் நிறுத்தித் தம் கடமையை அவர்கள் முறையாகச் செய்கின்றனர். உண்டு, உடுத்துக் களித்திருப்பது பாமரர்களுக்கு இன்ப வினைகளாகின்றன. அவர்கள் அவைகளைப் பெரிதும் விரும்புகின்றனர். ஆனால் சத்வம் நிறைந்த விவேகி அவைகளில் மகிழ்வுறுவது கிடையாது. இன்ப துன்ப வினைகளைச் சமனாக அவன் நினைக்கின்றான். அதுவே அவனது பற்றற்ற நிலைக்கு அறிகுறியாகும்.

*பற்றற்றுக்கருமம் செய்தற்குப் பதிலாகக்கருமத்தை ஏன் அடியோடு விட்டுவிடலாகாது? விடைவருகிறது:—*

**न हि देहभृता शक्यं त्यक्तुं कर्माण्यशेषतः ।**
**यस्तु कर्मफलत्यागी स त्यागीत्यभिधीयते ॥ ११**

ந ஹி தேஹப்ருதா சக்யம் த்யக்தும் கர்மாண்யசேஷத: ।
யஸ்து கர்மபலத்யாகீ ஸ த்யாகீத்யபிதீயதே ॥ 11

देहभृता தேஹப்ருதா *உடலெடுத்துள்ள ஜீவனால்* अशेषतः அசேஷத: *மிச்சமில்லாது* कर्माणि கர்மாணி *கருமங்களை* त्यक्तुं த்யக்தும் *தியாகம் செய்வது* न हि शक्यं ந ஹி சக்யம் *சாத்தியமல்ல* तु து *ஆனால்* यः ய: *யார்* कर्मफलत्यागी கர்மபல த்யாகீ *வினைப்பயனைத் துறந்தவன்* सः ஸ: *அவன்* त्यागी इति த்யாகீ இதி *தியாகி யென்று* अभिधीयते அபிதீயதே *இயம்பப்படுகிறான்.*

***உடலெடுத்தவனுக்குக் கருமங்களை அறவே விடுவது இயலாது. ஆனால் வினைப்பயனைத் துறந்தவன் எவனோ அவன் தியாகி யெனப்படுகிறான். 11***

*ஒருவன் ஆகாய விமானத்தில் ஊர்ந்து செல்லுகிறான். அதனுள் அமர்ந்திருக்கும் பரியந்தம் அவனுக்குப் பிரயாணி என்று பெயர். அவ் விமானம் அழகான சமவெளிக்கு மேலே பறக்கிறது, ஆபத்து நிறைந்த மலைப் பிரதேசத்துக்கு மேலே பறக்கிறது, மேகப் படலங்களைப் பொத்துக்கொண்டு போகிறது, மழையில் நனைகிறது, வெயிலில் காய்கிறது, கடலுக்கு மேலே வானத்தில் நீந்துகிறது; ஆங்கு மேலும் கீழும் ஆக இரண்டு இடத்திலும் ஆபத்து உண்டு. இத்தனைவிதச் செயல்களுக்கும் விமானத்தின் உள்ளே இருக்கும் பிரயாணி உட்பட்டாக வேண்டும். அவனுக்கு விருப்பமில்லாத இடத்துக்கும் அவன் அஞ்சுகிற இடத்துக்கும் விமானம் செல்லாது இருக்கமுடியாது. பயணத்தின் திட்டப்படி அது போயாக வேண்டும். விமானத்தின் போக்கில் நிகழ்வனவற்றைப் பற்றிக் கவலையற்றவனாகப் பிரயாணி தன் அலுவலைப்*

பார்த்துக்கொண்டிருக்கலாம். தொல்லையை ஒழிப்பதற்கு அது ஒன்றே உற்ற உபாயம். உடல் வாழ்வு என்ற பயணத்தில் ஆத்மா அங்ஙனம் இருந்து பழகவேண்டும்.

தேகம் இருக்கும் வரையில் கருமமும் உண்டு. மூச்சு விடுவதே கருமம். சுவாசிக்காது யார் வாழமுடியும்? உண்பது கர்மம், உறங்குவது கர்மம். ஆக, உடல் எடுத்தவனுக்குக் கருமத்தை விடுதல் என்பது வெறும் பேச்சு. கருமத்தை விட முயலுபவன் தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்கிறான். மற்றுக் கருமத்தைப் பற்றற்றுச் செய்ய வேண்டும். விவேகி ஒருவனது விவேகத்துக்கு ஏற்றவாறு பற்றற்றுக் கருமம் செய்தல் அமைகிறது. உடலில் பட்ட காயத்தை நாம் நன்கு கவனிக்கிறோம். அதை ஜாக்கிரதையாகக் கட்டிவைக்கிறோம். அதன்பொருட்டு பணச்செலவு செய்து மருந்து முதலியன போடுகிறோம். அப்படியெல்லாம் செய்வது அக் காயம் நிலைத்திருக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் அல்ல; காயத்தை ஒழித்தல் பொருட்டே அவ்வளவு கவனம் செலுத்துகிறோம். அதில் பற்றற்று அதைப் பாங்குபடுத்துகிறோம். அவரவர் கருமத்தை அங்ஙனம் பற்றற்றுச் செய்யவேண்டும். கர்மத்தை மனிதன் நீத்துவிடமுடியாது; கர்மத்துக்குத் தான் கர்த்தா என்னும் எண்ணத்தை நீத்துவிடவேண்டும். அப்படிச் செய்கின்றவனே தியாகியாகின்றான். பற்றற்றவனுக்கு வினைப்பயன் இல்லை.

பின்பு பற்றுடையவனுக்கோ? விடை வருகிறது:—

अनिष्टमिष्टं मिश्रं च त्रिविधं कर्मणः फलम् ।
भवत्यत्यागिनां प्रेत्य न तु संन्यासिनां क्वचित् ॥ १२

அனிஷ்டமிஷ்டம் மிச்ரம் ச த்ரிவிதம் கர்மண: பலம் ।
பவத்யத்யாகிநாம் ப்ரேத்ய ந து ஸன்யாஸிநாம் க்வசித் ॥ 12

अत्यागिनां அத்யாகிநாம் *தியாகம் பண்ணாதவர்களுக்கு* प्रेत्य ப்ரேத்ய *மரணத்துக்குப் பிறகு* अनिष्टं அனிஷ்டம் *இஷ்டமில்லாதது,*

இன்னாதது इष्टं இஷ்டம் இனியது मिश्रं च மிச்ரம் ச இரண்டும் கலந்தது என त्रिविधं த்ரிவிதம் மூன்று விதமாக कर्मणः फलं கர்மண: பலம் கருமத்தின் பயன் भवति பவதி உண்டாகிறது तु து ஆனால் संन्यासिनां ஸந்யாஸிநாம் தியாகிகளுக்கு क्वचित् न க்வசித் ந ஒருபொழுதும் இல்லை.

***தியாகிகளல்லாதார்க்கு மரணத்துக்குப் பிறகு இன்னாதது, இனியது, இவ்விரண்டும் கலந்தது என மூன்றுவிதமான வினைப் பயன் விளைகிறது; தியாகிகளுக்கோ ஒருபொழுதுமில்லை.*** **12**

நரகப் பிராப்தியும் விலங்கு இனமாகப் பிறப்பதும் இன்னாதது அல்லது அனிஷ்ட கர்ம பலனாகிறது. சுவர்க்கப் பிராப்தியும் தேவகணப் பிறப்பும் இஷ்ட கர்மத்தின் பலன். பூவுலகப் பிராப்தியும், மக்களாகப் பிறத்தலும் கலப்புக் கர்மத்தின் பயனாகும். இனியது, இன்னாதது ஆகிய இரண்டும் சேர்ந்தது கலப்புக் கருமம். கரும பலத்தில் பற்று வைக்கிறவர்களுக்கு பிறவிகள் மாறி மாறி வந்துகொண்டிருக்கின்றன. அவைகள் வாயிலாக சுக துக்கங்களுக்கு அவர்கள் ஆளாகவேண்டும். கரும பலனில் பற்று வைக்காதவர்களுக்கு பிரபஞ்ச சம்பந்தமான இன்பமுமில்லை, துன்பமுமில்லை. பிறப்பு இறப்பும் உண்டாவதில்லை. அவர்கள் முக்தியடைகிறார்கள்.

எடுத்த பிறவிகளுள் இது கடைசி ஜன்மம்; இத்துடன் பிறவியை ஒழித்துவிட்டு முக்தியடையும் பாங்கில் இருப்பவர்களைச் சில அறிகுறிகளால் கண்டுகொள்ளலாம். அத்தகைய ஜீவன் முக்தர்கள் எப்பொழுதும் ஆத்ம திருப்தர்களாக இருக்கிறார்கள். நிழல் போன்று உடல் அவர்களைச் சார்ந்திருக்கிறது. அவ்வுடலின் மூலம் ஒழுங்காகக் கருமம் நடைபெறுகிறது. ஆனால் அதையெல்லாம் ஜீவன் முக்தர்கள் கருத்தில் வாங்கிக் கொள்ளார்கள்.

தியாகியல்லாதவர்கள் இனி எடுக்கப்போம் பிறவி எத்தகையது என்பதையும் இப்பொழுது இவ்வுலகிலேயே

யூகித்துத் தெரிந்துகொள்ளலாம். தூங்கி எழுந்திருப்பது போன்றது மரணம். தூங்குகிற மனிதன் அதே சரீரத்தில் எழுந்திருக்கிறான். செத்தவன் புதிய சரீரத்தில் புதிய இடத்தில் எழுந்திருக்கிறான். படுக்கப் போம்பொழுது கெட்டவனாயிருந்தவன் தூங்கி யெழுந்திருக்கும்போதும் கெட்டவனே. நல்லவனுடைய பாங்கும் அத்தகையது. இங்கு, இவ்வுலகில் இருக்கும்போதே நரகத்தில் இடர்ப்படுபவர் உண்டு; விலங்குபோன்று வாழ்பவர் உண்டு. சுவர்க்க வாழ்வை இங்கேயே காண்பவர் உண்டு. இவ்விரண்டுக்கும் இடையில் உள்ள மனுஷ நிலையில் இருப்பாரும் உளர். இதே பாங்கு சரீரத்தை மாற்றும்பொழுதும் தொடர்ந்து வருகிறது. ஆக, இயல்புக்கு ஏற்ற உடல் அமைப்பு உண்டாகிறது.

கர்மத்துக்கு தன்னைக் கர்த்தாவென்று நினைக்கிறவனுக்குக் கர்மபலன் உண்டாகிறது. அவன் சுக துக்கங்களுக்கும் ஆளாகிறான். உண்மையில் மனிதன் கர்மத்துக்குக் கர்த்தாவா? இக்கேள்விக்கு விடை வருகிறது :—

**पञ्चैतानि महाबाहो कारणानि निबोध मे ।**
**सांख्ये कृतान्ते प्रोक्तानि सिद्धये सर्वकर्मणाम् ॥ १३**

பஞ்சைதானி மஹாபாஹோ காரணானி நிபோத மே ।
ஸாங்க்யே க்ருதாந்தே ப்ரோக்தானி ஸித்தயே ஸர்வகர்மணாம் ॥

महाबाहो மஹாபாஹோ *பெருந்தோளுடையவனே* कृत अन्ते க்ருத அந்தே *கருமகாண்டத்தின் முடிவு காட்டும்* सांख्ये ஸாங்க்யே *சாங்கய சாஸ்திரத்தில்* सर्वकर्मणां ஸர்வகர்மணாம் *எல்லாக் கருமங்களினுடைய* सिद्धये ஸித்தயே *சித்திக்கு* प्रोक्तानि ப்ரோக்தானி *பகரப்பட்டுள்ள* एतानि पञ्च कारणानि ஏதானி பஞ்ச காரணானி *இந்த ஐந்து காரணங்களையும்* मे மே *என்னிடமிருந்து* निबोध நிபோத *அறிந்துகொள்.*

**பெருந்தோளாய், கர்மத்தின் முடிவு காட்டும் சாங்கய சாஸ்திரத்தில் சகல கர்மங்களின் சித்திக்கென்று பகரப்பட்டுள்ள இந்த ஐந்து காரணங்களையும் என்னிடம் அறிந்துகொள். 13**

*சாங்கய சாஸ்திரம் என்பது வேதாந்த சாஸ்திரம். கபில முனிவர் இயற்றியுள்ள சாங்கியம் வேறு. ஆறு சாஸ்திரங்களில் அது நான்காவது ஸ்தானம் பெறுகிறது. பிரபஞ்சத்தின் அமைப்பைப்பற்றிய கோட்பாடுகளை அது விளக்குகிறது. வேதாந்தத்தின் கோட்பாட்டின்படி கர்மம் செய்வதெல்லாம் விரைவில் ஒழுங்காகக் கர்மத்தை முடித்துக்கொண்டு கர்மாதீதத்தில் போவதற்கேயாம். கர்ம சொரூபமாயுள்ள இயற்கையானது ஜீவாத்மாவுக்கு ஒரு பள்ளிக்கூடம் போன்று இருக்கிறது. அறிவு வேண்டுமென்கிற ஒவ்வொரு குழந்தையும் பள்ளிக்கூடத்திற்குப் போகவேண்டும். அங்கு வீண்காலம் கழிக்கலாகாது. ஒழுங்காகப் பயிற்சிபெறவேண்டும். அறிவை வளர்க்கவேண்டும். கற்றபின் பள்ளிக்கூடத்தைவிட்டு வெளியில் வருவதுதான் மாணாக்கனது குறிக்கோள். பள்ளிக்கூடத்தில் இருக்கும்போதே அவ்வுண்மையை அவன் தெரிந்துகொள்கிறான். மனிதன் கரும மயமான உலகில் இருக்கும்போதே கருமத்தின் இயல்பைத் தெரிந்துகொள்ளவேண்டும்.*

*எது எவ்விதத்தில் கர்மத்துக்குக் காரணமாகிறது என்பது இனி பகரப்படுகிறது :—*

अधिष्ठानं तथा कर्ता करणं च पृथग्विधम् ।
विविधाश्च पृथक्चेष्टा दैवं चैवात्र पञ्चमम् ॥ १४

அதிஷ்டானம் ததா கர்த்தா கரணம் ச ப்ருதக்விதம் ।
விவிதாஸ்ச ப்ருதக்சேஷ்டா தைவம் சைவாத்ர பஞ்சமம் ॥ 14

अधिष्ठानं அதிஷ்டானம் *இருப்பிடமாகிய உடல்* तथा ததா *அப்படியே* कर्ता கர்த்தா *கர்த்தா* पृथग्विधं ப்ருதக்விதம் *வெவ்வேறு விதமான* करणं கரணம் *இந்திரியங்கள்* विविधाः விவிதா: *பலவிதமான* पृथक् ப்ருதக் *வேறுபட்ட* चेष्टाः சேஷ்டா: *செயல்கள்* अत्र அத்ர *இவற்றினுள்* पञ्चमं பஞ்சமம் *ஐந்தாவது* दैवं च एव தைவம் ச ஏவ *தெய்வமுமே.*

***உடல், கர்த்தா, வெவ்வேறுவிதமான இந்திரியங்கள், பலவிதமாக வேறுபட்ட செயல்கள்,***

**இவற்றிற்கு ஐந்தாவதாக தெய்வமும் காரணங்களாகின்றன. 14**

ஒரு மோட்டார் வண்டி ஓடுகிறது. அதன் இயக்கத்துக்கு முகாமையாயிருப்பவைகள் எவை என்று தெரிந்து கொள்ளவேண்டும். அத்தகைய வண்டி ஒன்றைப் பூட்டுதற்கு முன்பு கணக்கற்ற ஆணிகள், வில்லைகள், தகடுகள், சக்கரங்கள், இரும்புச் சட்டங்கள் குவியல் குவியலாகத் தொழிற்சாலையில் வைத்திருப்பதைக் காணலாம். மரத்தில் ரப்பர் பால் இருக்கிறது. மண்ணினுள் பெட்ரோல் என்னும் எண்ணெய் இருக்கிறது. மண்ணின்மேல் நீர் இருக்கிறது. விண்ணில் காற்று இருக்கிறது. இனி, இவைகளை முறையாகப் பொருத்தியமைக்குமிடத்தே வண்டி யுண்டாகிறது. தொழிற்சாலை அதற்கு அதிஷ்டானம் அல்லது இருப்பிடம். தொழிற்சாலைக்குச்சொந்தக்காரன் அதற்குக்கர்த்தா வாகிறான். சக்கரங்கள், ஓட்டும் கருவி, நிறுத்தும் கருவி முதலியன அதன் இந்திரியங்கள் ஆகின்றன. அதற்கு விசைகொடுக்கும் பெட்ரோல் எண்ணெய் அதன் பிராணன் ஆகிறது. அதை ஓட்டும் சாரதி அதற்கு அதிஷ்டான தெய்வமாகிறான். இதேபாங்கில்தான் உடல் அமைப்பு ஏற்பட்டிருக்கிறது.

விருப்பு வெறுப்பு, இன்ப துன்பம், ஞானம் முதலியவைகளை விளக்குதற்கு இருப்பிடமாயிருப்பது உடல். ஆகையால் அது அதிஷ்டானம் எனப்படுகிறது. இன்ப துன்பங்களாகிய உபாதிகளை ஏற்றுக்கொண்டு அவைகளை அனுபவிக்கும் அகங்காரமே கர்த்தா எனப்படுகிறது. ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து ஆகிய இவைகள் வெவ்வேறு இந்திரியங்களெனப்படுகின்றன. பிராணன் அபானன் முதலியவைகளின் பலவகைப்பட்ட செயல்கள் அதன்பின் குறிக்கப்படுகின்றன. பிராணனுடைய துணையின்றி ஒரு செயலும் நடைபெறாது. அந்தராத்மாவாகிய தெய்வம் அந்தந்த இந்திரியத்துக்கு அதிஷ்டான தெய்வமாகிச் செயல்புரிகிறது.

शरीरवाङ्मनोभिर्यत्कर्म प्रारभते नरः ।
न्याय्यं वा विपरीतं वा पञ्चैते तस्य हेतवः ॥ १५

சரீரவாங் மனோபிர்யத்கர்ம ப்ராரபதே நர: ।
ந்யாய்யம் வா விபரீதம் வா பஞ்சைதே தஸ்ய ஹேதவ: ॥ 15

नरः நர: *மனிதன்* शरीर वाक् मनोभिः சரீர வாங் மனோபி: *சரீரத்தால், வாக்கால், மனத்தால்* न्याय्यं वा विपरीतं ந்யாய்யம் வா விபரீதம் *நியாயமான அல்லது விபரீதமான* यत् कर्म யத் கர்ம *எக்கர்மத்தை* प्रारभते ப்ராரபதே *தொடங்குகிறானோ* एते पञ्च ஏதே பஞ்ச *இவ்வைந்தும்* तस्य தஸ்ய *அதற்கு* हेतवः ஹேதவ: *காரணங்கள்.*

***மெய்யால் மொழியால் மனதால் மனிதன் நியாயமாக அல்லது அநியாயமாக எக்கர்மத்தைச் செய்தாலும் இவ்வைந்துமே அதற்குக் காரணங்களாம்.*** ***15***

*வெவ்வேறு காரணங்களைக்கொண்டு அமைத்துள்ள மோட்டார் வண்டியைக் கொண்டு, களவின் பொருட்டு ஒரு சாரார் எடுத்துச்செல்லலாம். ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டவர்களை மீட்டெடுப்பதற்காக இன்னொரு சாரார் அவ்வண்டியைச் செலுத்தலாம். நோயாளிக்கு விரைவில் சிகிச்சை செய்வதற்கு அது உதவுகிறது. களியாட்டத்தில் வீண்பொழுது போக்குதற்கும் அது பயன்படுகிறது. வெவ்வேறு இடங்களுக்குச்சென்று அறிவைப் பெருக்குதற்கும் அதே வாகனம உதவுகிறது.*

*கிட்டத்தட்ட அதேமுறையில் உடலை நாம் பயன்படுத்துகிறோம். தர்மக்ஷேத்திரம் என்று இவ்வுடல் இயம்பப்படுகிறது. செய்கின்ற எக் கருமங்கள் அனைத்துக்கும் ஐந்து ஹேதுக்களாலாகிய உடல் வாழ்வு பயன்படுகிறது. இதே உடலத்தைத் தேவாலயமாகப் பாராட்டிப் பயன்படுத்துபவரும் உளர். இத்தகைய செயல்களெல்லாம் தர்மத்துக்கு உடன்பாடானவைகள். ஆகவே அவைகள் நியாயமானவைகள். அதர்மமே வடிவெடுத்து வந்து அடாத*

செயலைச் செய்தற்கும் இவை காரணங்களாகின்றன. இவ் ஐந்தின் துணையின்றி நலம் கேடு ஆகிய எச்செயலும் நடைபெறுவதில்லை.

உடலின் மூலம் நிகழ்கின்ற செயல்களை சாதாரண வாழ்க்கைமுறையில் திரிகரணங்களைக்கொண்டு செய்தவைகள் என்கிறோம் மனம், வாக்கு, காயம் அம்மூன்று கரணங்களாகின்றன. எண்ணுவதும், பேசுவதும், செய்வதும் ஒவ்வொன்றும் தன்னளவில் கருமமாகிறது எண்ணத்தால் நிகழும் கருமம் எண்ணிறந்தவை.

கர்ம நடைமுறைக்கும் ஆத்மாவுக்கும் உள்ள தொடர்பு யாது? விடை வருகிறது:—

**तत्रैवं सति कर्तारमात्मानं केवलं तु यः ।**
**पश्यत्यकृतबुद्धित्वान्न स पश्यति दुर्मतिः ॥ १६**

தத்ரைவம் ஸதி கர்த்தாரமாத்மானம் கேவலம் து ய: ।
பச்யத்யக்ருத புத்தித்வான்ன ஸ பச்யதி துர்மதி: ॥ 16

तत्र एवं सति தத்ர ஏவம் ஸதி *அவ்விஷயம் அங்ஙனமிருக்க* यः तु ய: து *யார் இனி* केवलं கேவலம் *முழுமுதற் பொருளாகிய* आत्मानं ஆத்மானம் *ஆத்மாவை* कर्तारं கர்த்தாரம் *கர்த்தாவாக* पश्यति பச்யதி *காண்கின்றானோ* अकृत बुद्धित्वात् அக்ருத புத்தித்வாத் *புத்தி தெளிவடையாமையினால்* दुर्मतिः सः துர்மதி: ஸ: *அறிவிலியாகிய அவன்* न पश्यति ந பச்யதி *பார்க்கிறானில்லை.*

***அது அங்ஙனமிருக்க, முழுமுதற்பொருளாகிய ஆத்மாவைக் கர்த்தாவாக இனி யார் காண்கிறானோ புத்திபண்படாத அவ்வறிவிலி மெய் காண்கிறானில்லை.*** ***16***

*இக்கோட்பாட்டை அறிதற்கும் மோட்டார் வண்டி அமைப்பதையே மீண்டும் உபமானமாக எடுத்துக்கொள்ளலாம். மண், நீர், தீ, காற்று ஆகிய நான்கு பூதங்களும் அவ்வண்டியமைப்புக்கு இன்றியமையாதவைகளாகின்றன. வண்டிக்குத் தேவையானவைகளெல்லாம் பூமியினின்று*

வந்தவைகள். அவைகளை யெல்லாம் கொடுத்து உதவியது பூமி. பிறகு வண்டி ஓடுதற்கு நிலைக்களமாயிருப்பதும் பூமி. ஆனால், மோட்டார் வண்டியின் செயல் ஒன்றிலும் பூமி சம்பந்தப்பட்டதல்ல. அது எப்பொழுதும் தன்மயமா யிருக்கிறது. வண்டி ஓடும் விஷயத்தில் பூமியைக் கர்த்தா வென்று கருதுவது பொருந்தாது.

எது கர்மம் செய்கிறதோ அது கர்த்தா. பிரகிருதி யின் கூறுபாடுகள் கர்மம் செய்கின்றன. மேலே சொன்ன ஐந்தும் பிரகிருதியினுடைய கூறுபாடுகள். ஐந்து காரணங் களில் ஒன்றாகிய அந்தராத்மா அல்லது தெய்வம் பிரகிருதி யோடு சேர்ந்ததா அல்லது ஆத்மசொரூபமா என்ற கேள்வி எழலாம். எங்கும் வியாபகமாகிய ஆகாசத்துக்கு அடுத்த படியில் இருப்பது வாயு. அது கிட்டத்தட்ட ஆகாசம் போன்றது. என்றாலும் அது ஆகாசம் ஆகாது. ஆகாசம் அசைவற்றது. வாயு அசையும் தன்மையது. இங்குதெய்வம் என்று சொல்லுவது சித் ஆபாசனாகிய ஜீவாத்மா. அது சேதனம் போன்று தோன்றுகிறது. உண்மையில் அது ஜட மாகிய பிரகிருதியே. ஆத்மாவின் சன்னிதான விசேஷத் தால் பிரகிருதி வேலை செய்கிறது. சித் ஆகாசத்தில் அது தோன்றி, நின்று, பிறகு நீங்குகிறது. ஆத்மாவோ செய லற்றது. அது சுத்த சைதன்யம். மாயாசக்தியாகிய பிரகிருதி அதை ஆரோபித்து அதன்மீது தோன்றிக்கொண் டிருக்கிறது. அதனால் ஆத்ம சொரூபத்துக்கு லாபமும் இல்லை; நஷ்டமும் இல்லை. கருமத்துக்கு அப்பாற்பட்டுள்ள சுத்த சைதன்யம் அல்லது பேரறிவு மனிதனது எதார்த்த சொரூபம். புத்தி தெளிவடையாதவனுக்கு இது விளங்குவ தில்லை. ஆகையால் அவன் மெய் காண்கிறானில்லை.

यस्य नाहंकृतो भावो बुद्धिर्यस्य न लिप्यते ।
हत्वापि स इमाँल्लोकान्न हन्ति न निबध्यते ॥ १७

யஸ்ய நாஹம்க்ருதோ பாவோ புத்திர்யஸ்ய ந லிப்யதே ।
ஹத்வாபி ஸ இமான் லோகான்ந ஹந்தி ந நிபத்யதே ॥ 17

यस्य யஸ்ய *யாருக்கு* अहंकृतः भावः அஹம் க்ருத: பாவ: *நான் கர்த்தா என்ற எண்ணம்* न ந *இல்லையோ* यस्य யஸ்ய *யாருக்கு* बुद्धिः न लिप्यते புத்தி: ந லிப்யதே *புத்தி பற்றுகிறதில்லையோ* सः ஸ: *அவன்* इमान् लोकान् இமான் லோகான் *இவ்வுலகத்தாரை* हत्वा अपि ஹத்வா அபி *கொன்றாலும்* न हन्ति ந ஹந்தி *கொல்கிறனல்லன்* न निबध्यते ந நிபத்யதே *பந்தப்படுகிறனல்லன்.*

***யாருக்கு அகங்காரமில்லையோ, யாருடைய புத்தி பற்றுகிறதில்லையோ, அவன் இவ்வுலகத்தாரைக் கொன்றாலும் கொல்லாதவனே, பந்தப்படாதவனே.*** ***17***

*தன்னைக் கர்த்தாவென்று கருதுவதிலும், அகங்காரம் கொள்ளுதலிலும் மனிதனுக்கு மனிதன் வித்தியாசம் காட்டுகிறான். நாடகமேடையில் ஒருவன் கொலைபுரிபவன் போன்று நடிக்கிறான். மற்றொருவன் கொலையுண்பவனாக நடிக்கிறான். மற்று இதே செயல் உலகில் உண்மையாக நிகழ்கிறது. பாசாங்காகச் செய்த கருமம் அகங்காரத்தையோ கர்த்ருத்வத்தையோ உண்டுபண்ணவில்லை. வாஸ்தவத்தில் நிகழ்ந்த கொலைச்செயல், அதில்சம்பந்தப்பட்டவர் உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்தது. இவ்விரண்டு நிகழ்ச்சிகளும் ஒன்று கூடியது ஞானியின் செயல். போர்க்களத்தில் அர்ஜுனன் தன் பாட்டனாராகிய பீஷ்மரைக் கொன்றான். ஆயினும் கொன்றவனாக அவன் தன்னைக் கருதவில்லை. ஏனென்றால் அகங்காரமும் பற்றுதலும் அவனுடைய மனதைவிட்டு அகன்றுவிட்டன. பீஷ்மர் கொல்லப்பட்டவராகத் தம்மைக் கருதவில்லை. அணிந்திருந்த சட்டையைப் பலவந்தமாகக் கிழித்து எறிந்ததற்கு ஒப்பாயிற்று அவர் உடலைக் களைந்த செயல்.*

*கண்ணாடியில் ஒருவனுடைய பிம்பம் தோன்றி ஆடுகிறது. அத்தோற்றத்துக்கும் ஆட்டத்துக்கும் கர்த்தா கண்ணாடியல்ல. இனி, அந்த பிம்பம் கண்ணாடியில் பதிந்துவிடுவதும் இல்லை. பிம்பத்தை விளக்குதற்கிடையில் அது பற்றற்றிருக்கிறது.*

ஆத்ம சைதன்யத்தின் மீது பிரகிருதியின் செயல்களெல்லாம் தோன்றுகின்றன. அதனால் ஆத்மா ஒரு செயலும் செய்வதன்று. அப்பொழுது பிரகிருதியை விளக்கியதால் அது பிரகிருதியில் பந்தப்பட்டதல்ல. தனது நிஜ சொரூபமாகிய சைதன்யத்தில் உறுதி பெற்றிருப்பவன் உடலும் இந்திரியங்களும் செய்கின்ற செயலில் கட்டுண்டு போவதில்லை. கொல்லுதல் முதலியன பிரகிருதியின் வியவகாரங்களேயாம்.

புருஷன் யாதொரு காரியத்தையும் செய்யாது சலனமற்றுக் கிடக்கிறான் என்றும், பிரகிருதியே சகலத்தையும் செய்துவருகின்றதென்றும், புருஷன் வெறும் சாக்ஷிமாத்திரமாகத்தானிருக்கிறானென்றும் சாங்கியவாதம் கூறுகின்றது. மேலும், பிரகிருதியும் புருஷனில்லாது எதனையும் செய்யவியலாது என்றும் கூறுகின்றது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ज्ञानं ज्ञेयं परिज्ञाता त्रिविधा कर्मचोदना ।
करणं कर्म कर्तेति त्रिविधः कर्मसंग्रहः ॥ १८

ஞானம் ஞேயம் பரிஞாதா த்ரிவிதா கர்மசோதனா ।
கரணம் கர்ம கர்த்தேதி த்ரிவித: கர்மஸங்க்ரஹ: ॥ 18

ज्ञानं ஞானம் *ஞானமும்* ज्ञेयं ஞேயம் *அறியப்படுபொருளும்* परिज्ञाता பரிக்ஞாதா *அறிபவனும்* त्रिविधा த்ரிவிதா *மூன்று விதமான* कर्मचोदना கர்மசோதனா *கர்ம பிரவர்த்தகங்கள்* करणं கரணம் *கருவி* कर्म கர்ம *செய்யப்படுபொருள்* कर्ता கர்த்தா *செய்பவன்* इति இதி *என* कर्मसंग्रहः கர்மஸங்க்ரஹ: *கருமத்துக்கு இருப்பிடம்* त्रिविधः த்ரிவித: *மூன்று விதமானவைகள்.*

***அறிவு அறியப்படுபொருள், அறிபவன் எனக் கருமத்துக்குத் தூண்டுதல் மூன்றுவிதம். கருவி, கருமம், கர்த்தா எனக் கருமத்துக்கு இருப்பிடம் மூன்றுவிதம். 18***

அறிவு அல்லது ஞானம் என்பது இவ்வுலக சம்பந்தமான ஞானம். அறியப்படுபொருள் அல்லது ஞேயம் என்பது பொதுவாயுள்ள உலகப் பொருள்கள். அறிபவன் அல்

லது பரிஞாதா என்பவன் உபாதிகளோடு கூடியுள்ள ஜீவன். இம்மூன்றும் சேர்ந்து திரிபுடி எனப்படுகிறது. ஒன்று உள்ள இடத்தில் மற்ற இரண்டும் இருக்கும் அதாவது அறிபவன் ஒருவன் இருந்தால் அறிவு என்னும் பாங்கு அவனுக்குரியதாகிறது. அத்தகையவன் எதை அறிகிறான் என்ற கேள்வி வருகிறது. முக்கோணம் ஒன்றோடொன்று இணைந்திருப்பது போன்று திரிபுடியும் இணைந்திருக்கிறது. கருவி, கருமம், கர்த்தாவாகத் திரிபுடி மற்றொரு விதத்தில் தன்னை விளக்குகிறது. இம்மூன்றினுடைய சேர்க்கையால் மனம், மொழி, மெய் ஆகிய மூன்றின் கர்மம் நடைபெறுகிறது. கருமத்தில் இனியது எது, இன்னாதது எது என்ற பாகுபாடு திரிபுடியால் ஏற்படுகிறது.

கருவியில் அகக் கருவி புறக்கருவி என இருவகை உண்டு. மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய இவை அந்தக்கரணம் அல்லது அகக்கருவி. மெய், வாய், கண், மூக்கு, காது ஆகிய ஐந்தும் புறக்கருவிகளாம். இவைகள் ஞானேந்திரியம் ஐந்து, கருமேந்திரியம் ஐந்து ஆகப் பரிணமிக்கின்றன. கர்மம் செய்பவனாகிய ஜீவனே கர்த்தாவாகிறான். இங்ஙனம் ஞானமும் கர்மமும் ஜீவனிடத்து இணைபிரியாது அமைந்திருக்கின்றன. ஜீவாத்மாவைப் பக்குவப்படுத்துதற்கு ஞானமும் கருமமும் இன்றியமையாதவைகள். படிப்பும் விளையாட்டும் சேர்ந்திருந்தால்தான் சிறுவன் ஒருவன் முன்னேற்றமடைய முடியும். அவனது உடலும் உள்ளமும் சேர்ந்தே வளரவேண்டும். ஜீவாத்மாவோ ஞான அனுபவம் இருக்கிறவளவு கர்மத்தைச் செவ்வையாகச் செய்கிறான். முயன்று வினையாற்றும் பொழுது அது ஞான அனுபவத்தை உண்டுபண்ணுகிறது. ஆக, ஞானதிரிபுடியும் கரும திரிபுடியும் அவனுக்குத் தேவை.

ஜீவன் பெறுகிற ஞானத்திலும், செய்கிற கர்மத்திலும் உயர்ந்தது தாழ்ந்தது என்ற வேறுபாட்டைக் காண்கிறோம். இந்த வேறுபாட்டுக்குக் காரணம் யாது? விடை வருகிறது:—

ज्ञानं कर्म च कर्ता च त्रिधैव गुणभेदतः ।
प्रोच्यते गुणसंख्याने यथावच्छृणु तान्यपि ॥ १९

ஞானம் கர்ம ச கர்த்தா ச த்ரிதைவ குணபேதத: ।
ப்ரோச்யதே குணஸங்க்யானே யதாவச்ருணு தான்யபி ॥ 19

ज्ञानं ஞானம் *ஞானமும்* कर्म च கர்ம ச *கர்மமும்* कर्ता च கர்த்தா ச *கர்த்தாவும்* गुणभेदतः குணபேதத: *குணபேதத்தினால்* त्रिधा एव த்ரிதா ஏவ *மூவிதம் என்றே* गुणसंख्याने குணஸங்க்யானே *குணங்களைப் பற்றிக் கூறும் சாங்கய சாஸ்திரத்தில்* प्रोच्यते ப்ரோச்யதே *சொல்லப்பட்டிருக்கிறது* तानि अपि தானி அபி *அவைகளையும்* यथावत् யதாவத் *உள்ளபடி* शृणु ச்ருணு *கேள்.*

***ஞானமும், கர்மமும், கர்த்தாவும் குணபேதத்தினால் மூவகையென்று சாங்கய சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அவைகளையும் உள்ளபடி கேள். 19***

*ஆறு சாஸ்திரங்களில் சாங்கய சாஸ்திரம் நான்காவது ஸ்தானம் பெறுகிறது. இது கபில முனிவர் இயற்றியது. பிரகிருதி தத்துவங்களை விளக்குதற்கு இது முடிவான பிரமாணம். ஆகையால் குணங்களின் பாகுபாடுகளை இந் நூலினின்றே தெரிந்துகொள்ளவேண்டும். பல புருஷர்கள் இருப்பதாக சாங்கய சாஸ்திரம் சொல்லுகிறது. அவைகளுக்கெல்லாம் மேலாக ஒரு பரமாத்மா உள்ளது என்பதை சாங்கய சாஸ்திரம் சொல்லுவதில்லை. பரபிரம்மத்தை அறிதற்கு சாங்கய சாஸ்திரம் பிரமாணமல்ல. அதற்கு வேதாந்த சாஸ்திரமே பிரமாணமாகிறது. முக்குணமயமாயுள்ள இயற்கைத் தத்துவங்களுக்கு சாங்கய சாஸ்திரம் பிரமாணமாகிறது. "அவைகளை உள்ளபடி கேள்" என்று பகவான் பகர்வது யுக்திக்கும் அனுபவத்துக்கும் அவைகள் ஒவ்வும் என்பதாம்.*

*அதிகாரி பேதம் என்பது முக்கியமானதொரு கோட்பாடாகும். உத்தமம், மத்திமம், அதமம் என்று அதிகாரி*

யின் பேதம் பிரித்தெடுக்கப்படுகிறது. தலைமாணுக்கன், இடைமாணுக்கன், கடைமாணுக்கன் என்பது இதுவே. உத்தம அதிகாரிக்குச் சிறிது புகட்டினாலும் உண்மை விளங்கிவிடுகிறது. அவனுக்கு மௌனோபதேசம் ஒப்பற்ற உபதேசமாகிறது. கீழ்நிலைக்குப் போகப்போக உபதேசம் வெவ்வேறு வடிவெடுத்தாகவேண்டும். பின்பு, புகட்டுகின்றவனிடத்து வல்லமையிருந்தால் மிக மந்த அதிகாரிக்கும் ஓரளவு உண்மையைப் புகட்டிவிடலாம்.

**सर्वभूतेषु येनैकं भावमव्ययमीक्षते ।**
**अविभक्तं विभक्तेषु तज्ज्ञानं विद्धि सात्त्विकम् ॥ २०**

ஸர்வபூதேஷு யேனைகம் பாவமவ்யயமீக்ஷதே ।
அவிபக்தம் விபக்தேஷு தஜ்ஞானம் வித்தி ஸாத்விகம் ॥ 20

विभक्तेषु सर्वभूतेषु விபக்தேஷு ஸர்வபூதேஷு *வேறு வேறுயுள்ள பூதங்களில்* अविभक्तं அவிபக்தம் *வேறுபடாததை* अव्ययं அவ்யயம் *அழியாததை* एकं भावं ஏகம் பாவம் *ஒருவஸ்துவை* येन யேன *எதனால்* ईक्षते ஈக்ஷதே *பார்க்கிறானோ* तत् ज्ञानं தத் ஞானம் *அந்த ஞானத்தை* सात्त्विकं ஸாத்விகம் *சாத்விகமானதென்று* विद्धि வித்தி *அறி.*

**வேறு வேருயுள்ள பூதங்களில், வேறுபடாத, அழியாத, ஏகவஸ்துவை எதனால் பார்க்கிருயோ அந்த ஞானத்தை சாத்விகமானதென்று அறிக. 20**

பிரகிருதியின் கூறுகள் வேறுவேருய்ப்பிரிந்துள்ளன. சராசரங்களனைத்தும், ஜட சேதனங்களனைத்தும் மாயா காரியங்களே. அவைகளுக்கெல்லாம் ஆதாரமாயிருப்பது பரமாத்மா. அது ஏகவஸ்து. ஆகாசத்தைப்போன்று அது பிளவுபடாதது. ஜகத் அதனிடத்திருந்து தோன்றிவருவதால் அது குறைபடுகிறதில்லை. ஏனென்றால் அது அகண்ட வஸ்து; கூட்டுதல் குறைத்தல் என்பது அதற்கு இல்லை. ஆகையால் அது அழியாதது. வெவ்வேறு பூதத்திடத்து அது வெவ்வேறு ஆத்மாவாக இல்லை. துவைதமல்லாத இந்த ஆத்மாவை உள்ளபடி யறிவது சாத்விகமானது.

*காற்று நல்ல வாசனையையும் கெட்ட வாசனையையும் கொண்டு வீசுமாயினும் அவைகளால் விகாரப்படுவதில்லை. பரம்பொருளும் அந்தக் காற்றைப் போன்றது.*

—ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**पृथक्त्वेन तु यज्ज्ञानं नानाभावान्पृथग्विधान् ।**
**वेत्ति सर्वेषु भूतेषु तज्ज्ञानं विद्धि राजसम् ॥ २१**

ப்ருதக்த்வேன து யஜ்ஞானம் நாநாபாவான் ப்ருதக்விதான் ।
வேத்திஸர்வேஷு பூதேஷு தஜ்ஞானம் வித்தி ராஜஸம் ॥ 21

तु து *பின்பு* यत् ज्ञानं யத் ஞானம் *எந்த ஞானமானது* सर्वेषु भूतेषु ஸர்வேஷு பூதேஷு *எல்லா பூதங்களிலும்* पृथग्विधान् ப்ருதக் விதான் *வெவ்வேறுவிதமான* नानाभावान् நாநாபாவான் *பல ஜீவர்களை* पृथक्त्वेन ப்ருதக்த்வேன *தனித்தனியாக* वेत्ति வேத்தி *அறிகிறதோ* तत् ज्ञानं தத் ஞானம் *அந்த ஞானம்* राजसं ராஜஸம் *ராஜஸம் என்று* विद्धि வித்தி *அறிந்துகொள்.*

***பின்பு எந்த ஞானம் எல்லா பூதங்களிலும் வெவ்வேறு விதமான பல ஜீவர்களை ஒன்றினின்று ஒன்று வேறானதென்று அறிகிறதோ அந்த ஞானத்தை ராஜஸமென உணர்க. 21***

*ஒவ்வொரு தேகத்திலும் ஒரு தனி ஆத்மா இருக்கிறதென்றும், அதற்கு அலாதி லக்ஷணங்கள் இருக்கின்றனவென்றும் அறிவது ராஜஸ அறிவு. பொன் தாதுவை பூமியில் வெவ்வேறு பிரதேசங்களில் வெட்டி யெடுக்கலாம். தாதுவில் படிந்துள்ள அழுக்கு தேசத்துக்கு ஒருவிதமாயிருக்கலாம். அவ் அழுக்குகளை யெல்லாம் நீக்குதல் முறை. அழுக்கு நீங்கப்பெற்ற பின் தூய தங்கம் ஒரே பாங்குடையது. இது இன்ன தேசத்துத் தங்கம் என்ற வேற்றுமை போய்விடுகிறது. உபாதி பேதத்தால் ஆத்மாக்கள் பலவாகத் தென்படுகின்றன. உபாதிகளுக்கு முதன்மை கொடுப்பது ரஜோகுண அறிவின் இயல்பு. உபாதிகள் என்ற அழுக்கை நீக்கிவிட்டால் எஞ்சியிருக்கிற சுத்த சைதன்யம் அல்லது ஆத்ம சொரூபம் யாண்டும் ஒன்றே என்பு*

விளங்கும். கனவு இல்லாத ஆழ்ந்த உறக்கத்துக்கு சுழுத்தி ன்று பெயர். ஆங்கு வெவ்வேறு பிரக்ஞைகள் இல்லை. வற்றுமையைக் கடந்துள்ள அந்நிலையை எண்ணிப்பார்க்க வேண்டும். ஒற்றுமையை உணர அது உதவும்.

**यत्तु कृत्स्नवदेकस्मिन्कार्ये सक्तमहैतुकम् ।**
**अतत्त्वार्थवदल्पं च तत्तामसमुदाहृतम् ॥ २२**

யத்து க்ருத்ஸ்னவதேகஸ்மின் கார்யே ஸக்தமஹைதுகம் ।
அதத்வார்த்தவதல்பம் ச தத்தாமஸமுதாஹ்ருதம் ॥ 22

तु து *மற்று* यत् யத் *எந்த ஞானம்* एकस्मिन् ஏகஸ்மின் *ஒரே* कार्ये கார்யே *காரியத்தை* कृत्स्नवत् க்ருத்ஸ்னவத் *முழுதும் என்று* सक्तं ஸக்தம் *பற்று வைத்து* अहैतुकं அஹைதுகம் *யுக்திக்குப் பொருந்தாததாய்* अतत्त्वार्थवत् அதத்வார்த்தவத் *உண்மைக்கு ஒவ்வாததாய்* अल्पं च அல்பம் ச *அற்பமாயுள்ள* तत् தத் *அது* तामसं தாமஸம் *தாமஸமென்று* उदाहृतं உதாஹ்ருதம் *சொல்லப்பட்டுள்ளது.*

***ஒரு காரியத்தையே முழுதுமென்று பற்றிக் கொண்டு யுக்திக்குப் பொருந்தாததாயும், உண்மைக்கு ஒவ்வாததாயும், அற்பமாயுமுள்ள ஞானம் எதுவோ அது தாமஸ மெனப்படுகிறது. 22***

*பஞ்ச பூதங்களால் ஆகிய தேகத்தை ஆத்மா வென்று கருதுபவர் இருக்கின்றனர். கடவுள் வழிபாட்டுக்கு விக்கிரகம் துணைபுரிகிறது. கல்லால் அல்லது மரத்தால் செய்த விக்கிரகத்தையே கடவுளாக நினைப்பவர் உளர். அந்த விக்கிரகம் சிதைவுபட்டுப்போனால் கடவுளே அழிந்துபோய்விட்டார் என்பது அத்தகையவர் நம்பிக்கையாகும். ஒரு காரியத்தை முழுதுமென்று பற்றிக்கொள்ளுதற்கு இது சான்று ஆகும். தான் தேகத்தைவிட மேலானவன் என்பதையும், கடவுள் வடிவத்துக்கு அப்பாற்பட்டவர் என்பதையும் மந்த புத்தியுள்ள அம்மனிதன் அறியான். விக்கிரகமானது கடவுளுடைய சொரூபத்துக்கு வெறும் புறச்சின்னமாகிறது. கடவுள் அவ்வடிவத்தில்*

அடங்கியவர் அல்லர். புல்லறிவாளர்க்கு இது விளங்குகிறதில்லை. தமோ குணத்தில் உதித்துள்ள இவ்வறிவை ஆராய்ந்து பார்த்தால் அது யுக்திக்குப் பொருந்தாதது என்பது விளங்கும். யுக்திக்கு அது முற்றிலும் முரண்பட்டது. உண்மைக்கும் அப் புல்லறிவுக்கும் வெகு தூரம். நன்மை ஒன்றும் அவ்வறிவினின்று விளைந்துவிடாது. ஆக, அது அற்பமானதென்று இயம்பப்படுகிறது.

नियतं सङ्गरहितमरागद्वेषतः कृतम् ।
अफलप्रेप्सुना कर्म यत्तत्सात्त्विकमुच्यते ॥ २३

நியதம் ஸங்கரஹிதமராகத்வேஷத꞉ க்ருதம் ।
அபலப்ரேப்ஸுநா கர்ம யத்தத்ஸாத்விகமுச்யதே ॥ 23

अफलप्रेप्सुना அபலப்ரேப்ஸுநா *பயனில் விருப்பம் வைக்காதவனால்* सङ्गरहितं ஸங்கரஹிதம் *பற்று இல்லாமல்* अरागद्वेषतः அராகத்வேஷத꞉ *விருப்பு வெறுப்பு இன்றி* नियतं நியதம் *நியமிக்கப்பட்டுள்ள* यत् कर्म யத் கர்ம *எக்கருமம்* कृतं க்ருதம் *செய்யப்படுகிறதோ* तत् தத் *அது* सात्त्विकं ஸாத்விகம் *சாத்விகம் என்று* उच्यते உச்யதே *உரைக்கப்படுகிறது.*

***பயனில் விருப்பம் வைக்காதவனால், பற்று இல்லாமல், விருப்பு வெறுப்பு அற்று, நியமிக்கப் பட்டுள்ள எக் கருமம் செய்யப்படுகிறதோ அது சாத்விகமான தெனப்படுகிறது.*** ***23***

சுவாசிப்பது உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத கர்மமாகிறது. ஆயினும் அது விருப்பு வெறுப்பு அற்றுச் செய்யப்படுகிறது. ஒருவனுக்கு நியமிக்கப்பட்டுள்ள கருமமே அவனுடைய நித்திய கருமமாகிறது. நித்திய கருமம் மனபரிபாகத்துக்கு ஏற்றபடி மாறுகிறது. கணிதத்தில் கூட்டல் கழித்தல் போடுவது புதிதாகப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்திருக்கும் சிறுவன் ஒருவனுக்கு நித்திய கருமமாகும். உயர்நிலைப்பள்ளியில் படிக்கும் மாணாக்கனுக்கு அத்தகைய கணக்குப்போடுவது நித்திய கருமமாகாது. அவனது வகுப்

புக்கேற்ற மேலான கணக்குகளை அவன் போடவேண்டும். அதுபோன்று அவரவர் பரிபாகத்துக்கு ஏற்றபடி சமுதாயத்தில் எல்லார்க்கும் கடமையுண்டு. அறப்போர் புரிந்து தீமையைக்களைந்து நலத்தைக் காப்பாற்றுவது அர்ஜுனனுக்கு நியமிக்கப்பட்ட கர்மமாகும். நம் ஒவ்வொருவருக்கும் அத்தகைய மேலான கடமையுண்டு. அதை முறையாகச் செய்யவேண்டும். சுவாசிப்பதுபோன்று இடைவிடாது செய்யவேண்டும். பின்பு அதில் பற்றுவைக்காது செய்ய வேண்டும். பற்று அற்றவன் தன்னை எக்கருமத்துக்கும் கர்த்தாவென்று எண்ணுவதில்லை. அது சாத்விகமான கருமமாகும்.

சாத்விக இயல்புடையவன் செய்யும் ஆத்ம சாதனங்களை ஆடம்பரமாக மற்றவர்களிடம் காட்டிக் கொள்வதில்லை. கூடியவரையில் தனியாக அவன் அவைகளைச் செய்து முடிக்கிறான். இரவில் மற்றவர்கள் தூங்கிக் கொண்டிருக்கும் பொழுது அவன் கொசுவலைக்குள் உட்கார்ந்து கொண்டு அமைதியாகத் தியானம் செய்கிறான்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

यत्तु कामेप्सुना कर्म साहंकारेण वा पुनः ।
क्रियते बहुलायासं तद्राजसमुदाहृतम् ॥ २४

யத்து காமேப்ஸுநா கர்ம ஸாஹங்காரேண வா புன: ।
க்ரியதே பஹுலாயாஸம் தத்ராஜஸமுதாஹ்ருதம் ॥ 24

कामेप्सुना காமேப்ஸுநா *ஆசையின் வசப்பட்டவனால்* वा வா *அல்லது* पुनः புன: *மேலும்* साहंकारेण ஸாஹங்காரேண *அகங்காரமுடையவனால்* बहुल आयासं பஹுள ஆயாஸம் *அதிக பிரயாசையுடன்* यत् कर्म யத் கர்ம *எக்கருமம்* क्रियते க்ரியதே *செய்யப்படுகிறது* तत् तु தத் து *அதுவே* राजसं ராஜஸம் *ராஜஸமானதென்று* उदाहृतं உதாஹ்ருதம் *உரைக்கப்படுகிறது.*

**ஆசையின் வசப்பட்டவனால் அல்லது அகங்காரமுடையவனால் பெரும் பிரயாசையுடன் இனி எக்கருமம் செய்யப்படுகிறதோ அது ராஜஸமானதெனப்படுகிறது.** 24

ஆசையில் இரண்டுவிதமுண்டு. ஒன்று மனிதனுடைய முன்னேற்றத்துக்குத் துணைபுரிவது. ஞானதாகம், சீலத்தில் விருப்பம், பரோபகார சிந்தனை முதலியன வேண்டப்படும் ஆசைகளாகின்றன. மனிதனை மேலும் உலக பந்தத்தில் ஆழ்த்தும் கீழான ஆசைகளை அகற்றவேண்டும். முறையாக, அளவாகப் பணம் சம்பாதிப்பதும் செலவிடுவதும் திரவிய யக்ஞமாகும். ஆனால் பொருந்தாத வழிகளில் மனிதன் பணம் சம்பாதிக்கும் யந்திரமாய்விடலாகாது. அப்பேராசையானது அவனிடத்திருந்து மனுஷத் தன்மைகளையெல்லாம் அகற்றிவிடுகிறது.

சரீரம் உடைத்திருப்பதே ஒருவித அகங்காரம். அதை சுகபோகத்துக்கென்றே வைத்திருப்பது, அதை அலங்கரிப்பது, கொழுக்கச் செய்வது முதலியன கொடிய அகங்காரமாகும். கிடைப்பதற்கு அரிய மானுடப் பிறவி அதனால் அனர்த்தமாய்ப் போய்விடும். தனக்கு நிகரானவர் யார் இருக்கிறார் என்ற பாங்குடன் உடலை வளர்ப்பவருடைய தடித்த அகங்காரம் ரஜோகுணத்திலிருந்து உண்டானது. சரீரம் ஈசனுடைய ஆலயம் என்ற எண்ணத்தால் அதை வெல்லவேண்டும்.

*துஷ்ட அகங்காரம் என்பது யாது? "என்னைத் தெரியாதா? எனக்குஅவ்வளவு செல்வமிருக்கிறது. என்னிலும் மேம்பட்டவர் யார்?" என்று சொல்லுகிற அகங்காரந்தான்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**अनुबन्धं क्षयं हिंसामनपेक्ष्य च पौरुषम् ।**
**मोहादारभ्यते कर्म यत्तत्तामसमुच्यते ॥ २५**

அனுபந்தம் க்ஷயம் ஹிம்ஸாமனபேக்ஷ்ய ச பௌருஷம் ।
மோஹாதாரப்யதே கர்ம யத்தத் தாமஸமுச்யதே ॥ 25

अनुबन्धं அனுபந்தம் *விளைவின் விளைவையும்* क्षयं க்ஷயம் *கஷ்டத்தையும்* हिंसां ஹிம்ஸாம் *துன்பத்தையும்* पौरुषं च பௌருஷம் ச *தன் வல்லமையையும்* अनपेक्ष्य அனபேக்ஷ்ய *எண்ணிப்பாராது* मोहात् மோஹாத் *மோகத்தால்* यत् कर्म யத் கர்ம *எக்கருமம்* आरभ्यते ஆரப்யதே

*ஆரம்பிக்கப்படுகிறதோ* तत् தத் *அது* तामसं தாமஸம் *தாமஸமென்று* उच्यते உச்யதே *உரைக்கப்படுகிறது.*

**வினையின் விளைவையும், நஷ்டத்தையும், துன்பத்தையும், தன் திறத்தையும் எண்ணிப்பாராது மயக்கத்தால் எக்கருமம் தொடங்கப்படுகிறதோ அது தாமஸமெனப்படும். 25**

தமோகுணம் நிறைந்த மனிதனுக்குத் தான் தொடுத்த கருமத்தினின்று விளைவது நன்மையா, கேடா என்று எண்ணிப்பார்க்கும் நல்லறிவு இல்லை. உடலின்கண் உள்ள வலிவு நஷ்டமும், பொருள் நஷ்டமும், ஆயுள் நஷ்டமும் சேர்ந்து உண்டாகும் என்பது அறிவின்மையில் ஆழ்ந்திருப்பவனுக்கு விளங்காது. அவனுடைய முயற்சி தனக்கு மட்டுமல்ல, மற்றவர்களுக்கும் துன்பத்தை உண்டுபண்ணும் தன்மையது. தான் படைத்துள்ள திறமையானது தான் எடுத்துக்கொண்டுள்ள கருமத்தைச் சமாளிப்பதற்கு ஏற்றதல்ல என்பதை அம்மனிதன் அறியான். விவேகமின்மையே அதற்குக் காரணமாகும்.

மிகுந்த தபசுக்குப் பிறகுதான் மனிதர்கள் கபடமற்றவராகவும், தயாளகுணம் வாய்ந்தவராகவும் ஆகின்றனர்கள். கள்ளங் கபடமற்ற மனதையுடையவராயிருந்தால் கடவுட்காட்சி கிடைக்கும். அவ்வித எளிய மனதையுடையவர்க்கே கடவுள் தம்மைக் காட்டுவிப்பார் என்று பகவான் கூறுவது வழக்கம். ஆனால் எளிமை உண்மை இவற்றின் பேரால் ஒருவன் ஏமாந்தவனாகிவிடக் கூடாதென்று அஞ்சிப் பின்வருமாறு குறிப்பிடுவதும் உண்டு. "பக்தனாக இருக்கவேண்டும்; ஆனால் அதன் பேரில் மூடனாக இருக்கக் கூடாது. எப்பொழுதும் மெய்ப்பொருளிலிருந்து பொய்ப் பொருளையும், நித்தியத்திலிருந்து அநித்தியத்தையும் அகற்றுவதற்காக மனதிலே விசாரணை செய்து பார்க்கவேண்டும். பிறகு அநித்தியத்தை அகற்றிவிட்டு நித்திய வஸ்துவின்மீது மனத்தை நிறுத்த வேண்டும்."

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஞானத்தையும் கருமத்தையும் பாகுபடுத்தியான பிறகு பகவான் இனி கர்த்தாவைப் பாகுபடுத்துகிறார்.

**मुक्तसङ्गोऽनहंवादी धृत्युत्साहसमन्वितः ।**
**सिद्ध्यसिद्ध्योर्निर्विकारः कर्ता सात्त्विक उच्यते ॥ २६**

முக்தஸங்கோऽனஹம் வாதீ த்ருத்யுத்ஸாஹஸமன்வித: |
ஸித்த்யஸித்த்யோர்நிர்விகார: கர்த்தா ஸாத்விக உச்யதே || 26

मुक्तसङ्गः முக்தஸங்க: *பற்று நீங்கியவன்* अनहंवादी அனஹம்வாதி *அகங்காரமற்றவன்* धृति उत्साह समन्वितः த்ருதி உத்ஸாஹ ஸமன்வித: *உறுதியும் ஊக்கமும் உடையவன்* सिद्धि असिद्ध्योः ஸித்தி அஸித்த்யோ: *வெற்றி தோல்வியில்* निर्विकारः நிர்விகார: *வேறுபடாதவன்* कर्ता கர்த்தா *இத்தகைய கர்த்தா* सात्त्विकः ஸாத்விக: *சாத்விகமானவனென்று* उच्यते உச்யதே *உரைக்கப்படுகிறான்.*

***பற்று நீங்கியவன், அகங்காரமற்றவன், உறுதியும் ஊக்கமுமுடையவன், வெற்றி தோல்வியில் வேறுபடாதவன் - இத்தகைய கர்த்தா சாத்விகனெனப்படுகிறான்.*** 26

*எல்லா வடிவங்களும் ஈசன் பொருள்; எல்லாச் செயல்களும் அவனுடையவை என்ற எண்ணத்தில் சாதகன் நிலைத்திருக்கிறான். எனவே அவன் பற்று நீங்கியவன் ஆகிறான். உடல் தன்னுடையது என்பது அல்லாது அது ஈசனுடைய ஆலயம் என்று சாதகன் கருதுகிறான். அவ்வுடலின் மூலம் நிகழ்கின்ற கருமங்களுக்குத் தான் பொறுப்பாளன் அல்லன், அது ஈசன் செயல் என்று அவன் உறுதியாக உணர்கிறான். ஆதலால் அவனிடத்து அகங்காரமில்லை. தன்னை பகவானுடைய தொண்டன் என்று கருதுகிறபடியால் தொடுத்த கருமங்களில் அவனுக்கு உறுதியும் ஊக்கமும் உண்டாகின்றன.*

*பற்றுடையார் வெற்றியில் மகிழ்வுறவும், தோல்வியில் துன்புறவும் செய்கின்றனர். கடவுளுடைய செயல் என்று எண்ணுபவன் கர்மத்துக்குக் கர்த்தாவாகத் தோன்றுகிறானெனினும், மனத்தகத்து எல்லாம் ஈசன் செயல் என்று திட நம்பிக்கையிருப்பதால் அவன் நிர்விகாரியாக மனத்தகத்து வேறுபாடு அடையாதவனாக இருக்கிறான்.*

*கள்ளங் கபடமற்ற மனமிருந்தால் ஈசுவரனை எளிதில் அடையலாம். கற்கள் இல்லாமல் உழுது பண்படுத்தப்பட்ட மிருதுவான பூமி*

*யில் நடப்படும் வித்து எளிதில் முளைத்துக் கிளம்பி, சீக்கிரத்தில் பயன் அளிப்பதைப் போல, கள்ளங் கபடமற்ற மனத்தில் ஆத்மீய உபதேசங் கள் எளிதில் பயன் அளிக்கின்றன.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**रागी कर्मफलप्रेप्सुर्लुब्धो हिंसात्मकोऽशुचिः ।**
**हर्षशोकान्वितः कर्ता राजसः परिकीर्तितः ॥ २७**

ராகீ கர்மபலப்ரேப்ஸுர்லுப்தோ ஹிம்ஸாத்மகோऽசுசி: ।
ஹர்ஷசோகான்வித: கர்த்தா ராஜஸ: பரிகீர்த்தித: ॥ 27

रागी ராகீ *ஆசையுள்ளவன்* कर्म फल प्रेप्सुः கர்ம பல ப்ரேப்ஸு: *வினைப்பயனை விரும்புபவன்* लुब्धः லுப்த: *லோபி* हिंसात्मकः ஹிம்ஸாத்மக: *துன்புறுத்தும் தன்மையன்* अशुचिः அசுசி: *சுத்தமில்லாதவன்* हर्ष शोक अन्वितः ஹர்ஷ சோக அன்வித: *மகிழ்வும் சோர்வும் கொள்பவன்* कर्ता கர்த்தா *அத்தகைய கர்த்தா* राजसः ராஜஸ: *ராஜஸனென்று* परिकीर्तितः பரிகீர்த்தித: *சொல்லப்படுகிறான்.*

***ஆசையுள்ளவன், வினைப்பயனை விரும்புபவன், உலுத்தன், துன்புறுத்தும் தன்மையன், சுத்தமில்லாதவன், மகிழ்வும் சோர்வும் கொள்பவன் - இத்தகைய கர்த்தா ராஜஸனெனப்படுகிறான்.***

ஏதேனும் ஒருவிதத்தில் பிறர் பொருளைத் தன்னுடையதாக்கிக்கொள்ள முயலுபவன் உலுத்தன் அல்லது உலோபியாகிறான். அதன்பொருட்டு மற்றவர்களைத் துன்புறுத்தவும் அவன் ஆயத்தமாயிருக்கிறான். அத்தகையவன் எண்ணுவதிலும், பேசுவதிலும், செய்வதிலும், உடலை வைத்துக்கொள்ளும் முறையிலும் சுத்தமில்லை. விரும்பியது வந்தமையுங்கால் அவன் விரைவில் மகிழ்வடைகிறான். வேண்டாதது வந்தமையுங்கால் அவன் விரைவில் சோகித்துத் துன்பப்படுகிறான்.

ரஜோகுணம் நிறைந்தவனது கருத்ருத்வம் (கர்த்தா என்று உணரும் பான்மை) இத்தகையதாம்.

*வீண் கர்வம் பிடித்தவனாக இருப்பது கேவலம் தாழ்ந்தசுபாவம். காக்கையைப் பார். தான் சாமர்த்தியமுள்ள பக்ஷியென அது நினைத்*

*துக்கொண்டிருக்கிறது. ஒருபோதும் அது வலையில் அகப்படுவதில்லை. ஆபத்து வருமென்பதைச் சற்றுத் தெரிந்துகொண்டதும் பறந்தோடி விடுகிறது. வெகு தந்திரமாக ஆகாரத்தைத் திருடுகிறது. என்றாலும் மலம் தின்பதில் மட்டும் அதற்கு அருவருப்பில்லை. அதிகச் சமர்த்தாக இருப்பதின் பலன் இதுதான்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

अयुक्तः प्राकृतः स्तब्धः शठो नैष्कृतिकोऽलसः ।
विषादी दीर्घसूत्री च कर्ता तामस उच्यते ॥ २८

அயுக்த: ப்ராக்ருத: ஸ்தப்த: சடோ நைஷ்க்ருதிகோऽலஸ: ।
விஷாதீ தீர்க்கஸூத்ரீ ச கர்த்தா தாமஸ உச்யதே ॥ 28

अयुक्तः அயுக்த: *யோகத்துக்கு ஒவ்வாத மனமுடையவன்* प्राकृतः ப்ராக்ருத: *அறிவு வளரப்பெறாதவன்* स्तब्धः ஸ்தப்த: *முரடன்* शठः சட: *வஞ்சகன்* नैष्कृतिकः நைஷ்க்ருதிக: *பழிகாரன்* अलसः அலஸ: *சோம்பேறி* विषादी விஷாதி *துயருறுவோன்* दीर्घसूत्री च தீர்க்கஸூத்ரீ ச *காலம் நீடிப்பவனும்* कर्ता கர்த்தா *அத்தகைய கர்த்தா* तामसः தாமஸ: *தாமஸனென்று* उच्यते உச்யதே *உரைக்கப்படுகிறான்.*

***யோகத்துக்கு ஒவ்வாத மனமுடையவன், அறிவு வளரப்பெறாதவன், முரடன், வஞ்சகன், பழிகாரன், சோம்பேறி, துயருறுவோன், காலம் நீடிப்பவன் - இத்தகைய கர்த்தா தாமஸனெனப்படுகிறான்.*** ***28***

*அடக்கமும், ஒடுக்கமும், சாதனமும் உடைய மனது யோகத்துக்கு உரியது. அத்தகைய பாங்கு ஒன்றும் இல்லாத மனது ஈண்டு உரைக்கப்படுகிறது. புத்தி வளர்ச்சியடையாது பாமரனாகவும் பாலன்போன்றும் இருப்பவன் பிராகிருதன். வணங்கவேண்டிய இடத்தில் வணங்காதிருப்பவன் முரடனாகிறான். வேலை செய்தற்கு விருப்பமில்லாது தன் வல்லமையையெல்லாம் மறைத்து வைத்துக்கொள்பவன் வஞ்சகனாகிறான். பிறருக்கிடையில் வேண்டுமென்றே பகைமையை உண்டுபண்ணுபவன் பழிகாரனாகிறான். செய்ய வேண்டியதை ஒன்றும் செய்யாதிருப்பவன் சோம்பேறி.*

மனம் தளர்ந்து யாண்டும் துன்பம் துய்க்கும் தன்மையன் ஒருவன் அரும்பெரும் செயலுக்கு அருகன் ஆகான். துன் பப்படுபவனிடத்திருந்து பேராற்றல்களெல்லாம் மறைந்து போய்விடுகின்றன. தாற்காலிகமாகத் துன்பத்தின் வசப் பட்டிருந்த அர்ஜுனனைத் தட்டி யெழுப்புதற்கே கீதா உப தேசம் நிகழ்வதாயிற்று. ஒரே நாளில் முடிக்கவேண்டிய வேலையை ஒரு மாசத்துக்கு நீட்டிக்கொண்டு போகிறவன் காலத்தை வீணே நீட்டுபவன் ஆகிறான். அதனால் அவனது வாழ்க்கைப்பயன் குன்றுகிறது.

ஒரு செம்படவன் ஆற்றில் வலையை வீசி அனேக மீன்களைப் பிடித்தான். சில மீன்கள் வலைக்குள் அசைவற்றிருந்து, வெளியே போகக் கொஞ்சமேனும் பிரயத்தனப் படாமலிருந்தன. வேறு சில மீன்கள் பிரயத்தனப்பட்டுத் துள்ளிக் குதித்தன. ஆனால் வெளியே போகமுடியவில்லை. இன்னும் சில மீன்கள் எப்படியோ வலையைவிட் டுத் தப்பித்துக்கொண்டு போய்விட்டன. உலகத்திலுள்ள மனிதர்களும் இவ்வாறு மூவகையினராக இருக்கின்றனர்:- (1) முக்தியடையப் பிர யத்தனப்படாது பந்தப்பட்டிருப்பவர்கள் (2) பிரயத்தனப்படும் முமு க்ஷுக்கள் (3) விடுதலையடைந்த முக்தர்கள்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

அறிவும் உறுதியும் பெறுகிற படித்தரங்கள் இனி விளக்கப்படுகின்றன :—

बुद्धेर्भेदं धृतेश्चैव गुणतस्त्रिविधं शृणु ।
प्रोच्यमानमशेषेण पृथक्त्वेन धनञ्जय ॥ २९

புத்தேர்பேதம் த்ருதேஸ்சைவ குணதஸ்த்ரிவிதம் ச்ருணு ।
ப்ரோச்யமானமசேஷேண ப்ருதக்த்வேன தனஞ்ஜய ॥ 29

धनञ्जय தனஞ்ஜய *தனஞ்ஜயா* बुद्धेः புத்தே: *புத்தியினுடைய வும்* धृतेः च एव த்ருதே: ச ஏவ *அங்ஙனமே உள்ள உறுதியினுடைய வும்* गुणतः குணத: *குணங்களுக்கேற்ற* त्रिविधं भेदं த்ரிவிதம் பேதம் *மூன்று விதமான பேதத்தை* पृथक्त्वेन ப்ருதக்த்வேன *தனித்தனியாய்* अशेषेण அசேஷேண *பாக்கியில்லாமல்* प्रोच्यमानं ப்ரோச்யமானம் *பகரப் படுவதை* शृणु ச்ருணு *கேள்.*

***அறிவினுடையவும், மன உறுதியினுடைய வும் ஆகிய மூவகை வேற்றுமையை குணங்களுக் கேற்பப் பாகுபடுத்திப் பாக்கியில்லாமல் பகர்கின் றேன் கேள், தனஞ்ஜயா.*** **29**

*திக்விஜயம் செய்தபொழுது அர்ஜுனன் தேவலோ கத்திலும் பூலோகத்திலுமுள்ள தனத்தையெல்லாம் ஜயித் தானதலால் அவன் தனஞ்ஜயன் என்று பெயர் பெற்றான். யாருக்கும் பயன்படாது ஓர் இடத்தில் அடைபட்டுக் கிடக் கும் செல்வத்தைப் பயன்படுகிற இடத்துக்கு ஈட்டெடுத் துக்கொண்டுவருவது அரசனுடைய கடமையாகும்.*

*செய்யத்தக்கது எது, தகாதது எது என்று முடிவு கட்டுந் தன்மையானது அறிவு என்றும் புத்தி என்றும் பக ரப்படுகிறது. அத்தகைய புத்தியினிடத்து மூன்றுவிதமான பாகுபாடுகள் இருக்கின்றன. செய்யவேண்டிய காரியத் தைத் தளர்வுறாது திட்டத்துடன் செய்வது உறுதி அல்லது திருதி என்றுபெயர் பெறுகிறது. அதுபோன்ற மனவலிவின் கண் மூன்று படித்தரங்கள் அமைந்திருக்கின்றன.*

*உப்பினாலும் துணியினாலும் கல்லாலும் செய்யப்பட்ட மூன்று வகைப் பதுமைகள் இருக்கின்றன. அவைகளைத் தண்ணீரில் அமிழ்த் தினால் முதலாவது பதுமை கரைந்து தன் உருவத்தை இழந்துவிடும். இரண்டாவது தன் உருவத்துடனிருந்தே நிறையத் தண்ணீரைத் தன் னுள் கிரகித்துக்கொள்ளும். மூன்றாவதில் தண்ணீரே நுழையாது. முதல் பதுமை பரமாத்மாவிடம் சேர்ந்து அதனோடு ஒன்றி ஐக்கியமாய் விடும் மனிதனைக் குறிக்கும். அவன் முக்த புருஷன். இரண்டாவது பதுமை திவ்யானந்தத்தையும் திவ்ய ஞானத்தையுமுடைய வாஸ்தவ மான பக்தனைக் குறிக்கும். மூன்றாவதோ, ஞானமானது கொஞ்ச மேனும் நுழையாத இருதயத்தையுடைய உலகப் பற்றுள்ளவனைக் குறிக்கும்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*அவ் அறிவுக்கும் உறுதிக்கும் இனி விளக்கம் வரு கிறது :—*

**प्रवृत्तिं च निवृत्तिं च कार्याकार्ये भयाभये ।**
**बन्धं मोक्षं च या वेत्ति बुद्धिः सा पार्थ सात्त्विकी ॥ ३०**

ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச கார்யாகார்யே பயாபயே ।
பந்தம் மோக்ஷம் ச யா வேத்தி புத்தி: ஸா பார்த்த ஸாத்விகீ ॥

पार्थ பார்த்த *பார்த்தா* प्रवृत्तिं निवृत्तिं च ப்ரவ்ருத்திம் நிவ்ருத்திம் ச *பிரவிருத்தியும் நிவிருத்தியும்* कार्ये अकार्ये கார்ய அகார்யே *செய்யத் தகுந்த காரியத்தையும் தகாத காரியத்தையும்* भय अभये பய அபயே *பயத்தையும் பயமின்மையையும்* बन्धं मोक्षं च பந்தம் மோக்ஷம் ச *பந்தத்தையும் மோக்ஷத்தையும்* या யா *எது* वेत्ति வேத்தி *அறிகிறதோ* सा बुद्धिः ஸா புத்தி: *அந்த புத்தி* सात्त्विकी ஸாத்விகீ *சாத்விகமானது.*

***பார்த்தா, பிரவிருத்தியையும், நிவிருத்தியையும், செய்யத் தகுந்ததையும் தகாததையும், பயத்தையும் பயமின்மையையும், பந்தத்தையும் மோக்ஷத்தையும் அறியும் புத்தி சாத்விகமானது. 30***

*பிரபஞ்சத்தில் ஜீவனைப் பந்தப்படுத்திப் பிறப்பு இறப்பைப் பெருக்கிக்கொண்டு போகும் கருமம் பிரவிருத்தி எனப்படுகிறது. மற்று மோக்ஷத்துக்கு ஏதுவான கருமம் நிவிருத்தி என்று சொல்லப்படுகிறது. இதையே அகர்மம் என்றும் சன்னியாசம் என்றும் சொல்லலாம். ஏனென்றால் கருமத்தைக் கடப்பதற்கு அது உறுதுணை யாகிறது. கால தேச வர்த்தமானத்தை அனுசரித்து எதைச் செய்தால் மனிதனுக்கு நலன் வருகிறதோ அது செய்யத் தகுந்த கருமம். எதைச் செய்தால் கேடு உண்டாகுமோ அது தகாத கருமமாகிறது. தகாத கருமத்தைச் செய்ய மனிதன் பயப்படவேண்டும். பெயரளவில் அது பயமெனப்படுகிறது. உண்மையில் அது வீரத்தின் தோற்றமாம். விஷப் பாம்பு, புலி முதலியவைகளுடன் பழக பயப்படவேண்டும். அதாவது மடைத்தனமாகப் பாதுகாப்பின்றி அவைகளின் அருகில் செல்லலாகாது. தானாக வந்தமைகிற மரணத்துக்குப் பயப்படலாகாது. பிசாசு, பூதகணங்கள் முதலியவைகளைப்பற்றிப் பயப்படவேண்டியதில்லை. அவைகளைப் பற்றிய பயமெல்லாம் அக்ஞானத்தால் வருவது. இல்லாததை இருப்பதாகக் கோழைநெஞ்சம் கற்பித்துக்கொண்டு*

அஞ்சுகிறது. பிரவிருத்தியும், தகாத கருமமும், பயமும் பந்தத்தை உண்டுபண்ணுகின்றன. நிவிருத்தியும், தக்க கருமமும், அபயமும் மோக்ஷத்தைத் தருகின்றன. அக்ஞானத்தால் பந்தம் ஏற்படுகிறது. ஞானத்தால் மோக்ஷம் விளைகிறது. சாத்விக புத்தி இவைகளையெல்லாம் நன்கு ஓர்கிறது.

*இவ்வுலகம் அநித்தியமா? நீ ஈசுவரனை அறியாமலிருக்கும் வரையில் அது அநித்தியந்தான். ஏனெனின், நீ ஒவ்வொரு பொருளிலு முள்ள ஈசுவரனைக் காண்பதில்லை. ஆகவே, "நான், எனது" என்ற மனோபாவம் உன்னிடம் ஆழ்ந்துகிடக்க, நீ உலக வாழ்க்கையனாகிறாய். இவ்விதம் அக்ஞானத்தினால் மதிமயங்கிய நீ, விஷயப் பொருள்களையே கருதுபவனாகி, மாயையாகிய ஸமுத்திரத்தில் மேலும் மேலும் ஆழமாக மூழ்கிக்கொண்டேயிருக்கிறாய். வழி நேராக இருப்பினும், ஸம்ஸாரத்தினின்று கரையேற வொண்ணாதபடி, மாயையானது மனிதர்களுடைய கண்களை முற்றிலும் குருடாக்கிவிடுகின்றது. ஸம்ஸாரம் எவ்வளவு அநித்தியமென்பது உனக்கே தெரியும். நாம் வசிக்கிற வீட்டைப் பற்றிச் சற்று யோசனை செய்வோம். எத்தனை பேர்கள் அதில் பிறந்து இறந்து போயிருக்கின்றனர்! உலகப் பொருள்கள் ஒரு நிமிஷத்தில் நம் முன்னர் தோன்றி, அடுத்த நிமிஷத்தில் மறைந்து போகின்றன. பந்துக்கள் என யாரை நீ கருதுகிறாயோ அவர்கள் நீ கண்மூடிய பிறகு உனக்குப் பந்துக்கள் ஆகிறதில்லை. அப்படியிருந்தும், ஜனங்களுடைய பற்று எவ்வளவு பலமானது! குடும்பத்தில் அவனுடைய பராமரிப்பை எதிர்பார்ப்பவர் ஒருவருமில்லாத காலத்திற்கூட அவனுக்குக் காசிக்குப் போய்வரச் சந்தர்ப்பப்படுவதில்லை. பக்தி சாதனம் செய்ய அவனுக்கு அவகாசம் கிடைப்பதில்லை. "பேரன் ஹரீசன் என்ன செய்வான்?" என்ற விசாரம் அவனை உலகத்தோடு பிணைக்கின்றது. மீன் பரியின் வாய் எப்போதும் திறந்திருக்கிறது; என்றாலும் மீன்கள் வெளியே ஓடிப்போவதில்லை. வண்ணாத்திப் புழு தான் இழைத்த கூண்டிலேயே கிடந்து சாகின்றது. அப்படிப்பட்ட ஸம்ஸாரம் அநித்தியமென்றும் அழிந்து போகக்கூடியதென்றும் ஏற்படவில்லையா?*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**यया धर्ममधर्मं च कार्यं चाकार्यमेव च ।**
**अयथावत्प्रजानाति बुद्धिः सा पार्थ राजसी ॥ ३१**

**யயா தர்மமதர்மம் ச கார்யம் சாகார்யமேவ ச ।**
**அயதாவத் ப்ரஜாநாதி புத்தி: ஸா பார்த்த ராஜஸீ ॥ 31**

पार्थ பார்த்த *பார்த்தா* यया யயா *எதனல்* धर्मं अधर्मं च தர்மம் அதர்மம் ச *தர்மமும் அதர்மமும்* कार्यं अकार्यं एव च கார்யம் அகார்யம் ஏவ ச *தகுந்த காரியமும் தகாத காரியமும்* अयथावत् அயதாவத் *உள்ள படியல்லாது* प्रजानाति ப்ரஜாநாதி *அறிகிறதோ* सा बुद्धिः ஸா புத்தி: *அந்த புத்தி* राजसी ராஜஸீ *ராஜஸமானது.*

***பார்த்தா, தர்மத்தையும் அதர்மத்தையும், தகுந்த காரியத்தையும் தகாத காரியத்தையும் தாறுமாருக எந்த புத்தி அறிகிறதோ அது ராஜஸ மானது.*** **31**

*அசைகின்ற நீரில் பிம்பம் உள்ளபடி தெரிகிறதில்லை. அங்ஙனம் ராஜஸ புத்தியில் சாஸ்திரோக்தமான தர்மமும் காரியமும் உள்ள படி தென்படமாட்டா; திரிவுபட்டே தென்படுகின்றன. சூதாடுதலாகிய தகாத காரியத்தைத் தகுந்த காரியமாக துர்யோதனன் எண்ணி தர்மராஜனை அதில் இணைத்துவிட்டான். தனக்கு உரியதல்லாத ராஜ்யத்தை உரியதென்று பற்றிக்கொண்டு பாண்டவரை போரில் தூண்டியது அதர்மச் செயல். ஆயினும் அவன் அதை தர்மமென்று எண்ணினன்.*

*ரஜோகுணத்தினின்று உதித்த புத்தியுடையவனிடத்துப் பெருமிதமான உழைப்பு இருக்கிறது. ஆனல் அந்த உழைப்பில் நேர்மையைக் காணமுடியாது. அயலார் இருவர் கிருஷியோ, வர்த்தகமோ, கைத்தொழிலோ செய்கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். அவர்களுள் ரஜோகுண விருத்தியுடையவன் தனது ஆற்றலையும் அறிவையும் ஓயாது உபயோகப்படுத்துவான். ஆனல் அம்முயற்சி ஆக்கத்துறையில் இராது. அயலான் சம்பாதித்ததைத் தான் அபகரித்துக்கொள்ள அவன் எத்தனிப்பான். அல்லது அயலானுக்கு நலம் செய்வதுபோன்று வெளிப்படையில் காட்டிக் கொண்டு, மறைமுகமாக அவனைக்கெடுக்க எத்தனிப்பான். வெளிப்படையாக அவனோடு போட்டி போட்டும் அவனை அழிப்பான். தன்னருகில் அமைதியாக வாழ்ந்திருக்க அவன்*

யாரையும் விடமாட்டான். ஏதேனும் ஒரு விதத்தில் அயலானை அல்லல்படும்படி செய்துவிடுவான். வழக்குத் தொடுப்பதில் ரஜோகுணத்தானுக்கு நிகரானவனைக் காண முடியாது. காலமெல்லாம் நீதி மன்றங்களில் வியாச்சியங்களும் வில்லங்கங்களும் தோன்றிக்கொண்டே இருக்கும். மெய்யைப் பொய்யாக்குதலிலும் பொய்யை மெய்யாக்குதலிலும் அவனுக்கு ஒப்பானவனைக் காணமுடியாது. முறை தவறிய முயற்சியிலேயே அவன் பெரு மகிழ்வடைவான். நேர்மையாக நடந்துகொள்பவர்களை ஒன்றுக்கும் உதவாத அப்பாவிகளென்று அவன் ஏளனம் பண்ணுவான். நல்லார் அருகில் அவன் ஒருநாளும் செல்லான். பாரமார்த்திக வாழ்வு சம்பந்தமான பேச்சு அவனுக்குக் கசப்பாக இருக்கும். பிழைக்கத் தெரியாதவர்களது போக்கு அத்தகையது என்று அவன் அனுதாபம் காட்டுவான், அல்லது பராமுகமாய் இருந்துவிடுவான். கெட்ட வழியில் சம்பாதி அவன் செல்வம் கெட்ட காரியத்துக்கே ஓயாது போய்க் கொண்டிருக்கும். நல்ல காரியத்துக்குச் செல்வத்தைச் சிறிதேனும் அவன் ஈயான். ரஜோகுணத்தில் உதித்த அறிவு செய்யும் செயல்கள் இவை போன்றவைகளாம்.

**अधर्मं धर्ममिति या मन्यते तमसावृता ।**
**सर्वार्थान्विपरीतांश्च बुद्धिः सा पार्थ तामसी ॥ ३२**

அதர்மம் தர்மமிதி யா மன்யதே தமஸாவ்ருதா ।
ஸர்வார்த்தான் விபரீதான்ஸ்ச புத்தி: ஸா பார்த்த தாமஸீ ॥

पार्थ பார்த்த *பார்த்தா* तमसा आवृता தமஸா ஆவ்ருதா *அக்ஞான இருளால் மூடப்பெற்று* अधर्मं அதர்மம் *அதர்மத்தை* धर्मं इति தர்மம் இதி *தர்மம் என்றும்* सर्वार्थान् ஸர்வார்த்தான் *எல்லாப் பொருள்களையும்* विपरीतान् च விபரீதான் ச *விபரீதமாகவும்* या யா *எது* मन्यते மன்யதே *நினைக்கிறதோ* सा बुद्धिः ஸா புத்தி: *அந்த புத்தியானது* तामसी தாமஸீ *தாமஸமானது.*

***பார்த்தா, அக்ஞான இருளால் மூடப்பெற்ற எந்த அறிவானது அதர்மத்தை தர்மமாகவும்,***

**பொருள்களை யெல்லாம் விபரீதமாகவும் நினைக்கிறதோ அது தாமசமானது. 32**

நல்லதைக் கெட்டதாகவும், கெட்டதை நல்லதாகவும் நினைப்பது விபரீத புத்தி. நோயாளி ஒருவன் மருந்தை அருந்தமாட்டேன் என்று நோயை வளர்க்கிற உணவை உண்டால் என்னுகுமோ அதுவே தாமஸ புத்தியின் விளைவு. அறிவிலியாகிய சிறுவன் ஒருவன் பள்ளிக்கூடத்துக்கு ஒழுங்காகப் போவதில்லை. துஷ்டப் பிள்ளைகளுடன் கூடிக்கொண்டு வீண்காலம் போக்குகிறுன். அவனுக்குப் பள்ளிக்கூடம் போவது கெட்டதாகத் தோன்றுகிறது. கூடா நட்புக் கொள்வதை நலமென நினைக்கிறுன். முதியவர்களில் பலர் உழைத்துப் பாடுபடுவதில்லை. சோம்பலே வடிவெடுத்திருக்கின்றனர். உழைப்பவர், சுகஜீவனம் பண்ணத்தெரியாதவர்கள் என்று அன்னவர் நினைக்கின்றனர். கடவுள் வழிபாடு, பாரமார்த்திக விஷய ஆராய்ச்சி ஆகியவைகளில் அவர்களுக்குக் கசப்பு ஏற்படுகிறது. வேதாந்த விசாரம் செய்தற்கு இப்பொழுது அவசரம் ஒன்றுமில்லை என்பது அவர்களது கருத்து. விருத்தாப்பியத்தில் அதைப் பார்த்துக்கொள்ளலாம் என்று சாக்குச் சொல்லுகின்றனர். ஊரார் விஷயங்களைப்பற்றி வீண் பேச்சுப் பேசுவது, அவர்களிடத்துள்ள குணத்தைக் குற்றமாகவும் குற்றத்தை குணமாகவும் ஓர்தலில் தமோகுணவிருத்தி யுடையவர்க்குப் பெருமகிழ்வு உண்டாகிறது. ஆண்மை தரக்கூடிய நல்ல விளையாட்டுக்களை அவர்கள் விளையாடமாட்டார்கள். சூதாடுவது போன்ற விளையாட்டுக்களில் அவர்கள் வீண் காலம் கழித்துக்கொண்டிருப்பார்கள். இலவசமாக உணவு கிடைக்கக்கூடிய இடங்களில் அவர்கள் அழைப்பின்றி வந்து கூடிவிடுவார்கள்.

இனி, திருதி விளக்கப்படுகிறது:—

**धृत्या यया धारयते मनः प्राणेन्द्रियक्रियाः ।**
**योगेनाव्यभिचारिण्या धृतिः सा पार्थ सात्त्विकी ॥ ३३**

த்ருத்யா யயா தாரயதே மன: ப்ராணேந்த்ரியக்ரியா: ।
யோகேனாவ்யபிசாரிண்யா த்ருதி: ஸா பார்த்த ஸாத்விகீ ॥ 33

पार्थ பார்த்த *பார்த்தா* योगेन யோகேன *ஒருமை மனதைக் கொண்டு* अव्यभिचारिण्या यया धृत्या அவ்யபிசாரிண்யா யயா த்ருத்யா *பிறழாத எந்த உறுதியால்* मनः प्राण इन्द्रिय क्रियाः மன: ப்ராண இந்த்ரிய க்ரியா: *மனம் பிராணன் இந்திரியங்களின் கிரியைகள்* धारयते தாரயதே (*ஒருவன்*) *காக்கின்றானோ* सा धृतिः ஸா த்ருதி: *அந்த உறுதியானது* सात्त्विकी ஸாத்விகீ *சாத்விகமானது*.

***பார்த்தா யோகத்தைக்கொண்டு பிறழாத எந்த உறுதியால் மனம் – பிராணன் – இந்திரியங்களின் செயல்களை ஒருவன் காக்கின்றானோ அந்த உறுதி சாத்விகமானது. 33***

*திருதி என்னும் சொல்லை உறுதி என்று மொழி பெயர்த்திருக்கிறோம். மனத்தகத்து அமையும் திட்பம் என்பதும் அதுவே. நல் வாழ்க்கையில் நிலைத்துள்ள மனதுக்கு அது உண்டாகிறது. சூரிய வெளிச்சம் கிரணங்களாகச் சிதறடைந்து போகிறது. அக்கிரணங்களைத் திரும்பவும் ஒருமுகப்படுத்தினால் பேரொளி உண்டாகிறது. அப் பேரொளியை எப்பொருளின்மீது திருப்பினாலும் அப் பொருளை அது நன்கு விளக்கிக்காட்டவல்லது. அறிவும் ஆற்றலும் ஒன்றுபட்ட அந்தக்கரணநிலை திருதி என்பதாகிறது. திருதி படைத்துள்ள யோகியின் மனதும், பிராணனும், இந்திரியங்களும் திருத்தமாகவும் அழுத்தமாகவும் வேலைசெய்ய வல்லவைகளாகின்றன. இந்த செயல்களெல்லாம் பரமாத்மாவினுடைய சேவைக்கென்றே ஒப்படைக்கப்படுகின்றன. அதாவது மனதில் உண்டாகிற உணர்ச்சியும், பிராணன் உயிர்பிடித்திருப்பதும், கர்மேந்திரியங்களும் ஞானேந்திரியங்களும் தத்தம் வேலைகளைச்செய்வதும் ஆகிய இவை யெல்லாம் விதவிதமான ஈசுவர வழிபாடுகளாகின்றன. வஸ்திரத்தில் அமைந்துள்ள நூலானது பல இழைகளைக்கொண்டது. அங்ஙனம் திருதி என்பது மனம், பிரா*

ணன், இந்திரியங்களின் உயர்ந்த செயல்களைக் கொண்டது. நூலானது ஊசியின் காதிலே நுழைதற்கு இழைகள் பிளவு படாதிருக்கவேண்டும். இழைகள் குவிந்து இருந்தால் ஊசியின் காதில் எளிதில் செல்லும். ஆனால் ஊசியின் காது அடைபட்டிருந்தால் குவிந்த நூலும் வளைந்துபோய்விடும், உள்ளே நுழையாது. ஏனென்றால் நூலில் உறுதியில்லை. யோகி ஒருவனுடைய திருதியோ குவிந்த நூல்முனைபோன்றும், கூரிய உறுதியான ஊசிமுனைபோன்றும் இருக்கும். அத்தகைய பண்பட்ட திருதியானது பரமாத்மாவுக்கென்றே ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. வேறு எப்பொருளுக்கும் அது பங்கிட்டுக் கொடுக்கப்பட்டதன்று. காந்த ஊசி யாண்டும் வடதிசையையே நோக்கி நிற்பதுபோன்று யோகியின் திருதி எப்பொழுதும் பரமாத்மாவுக்கென்றே ஒப்படைக்கப்பட்டதாகிறது. அந்த உறுதிப்பாடு சாத்விகமானது. அது மனிதனை மேலோன் ஆக்குகிறது.

**यया तु धर्मकामार्थान्धृत्या धारयतेऽर्जुन ।**
**प्रसङ्गेन फलाकाङ्क्षी धृतिः सा पार्थ राजसी ॥ ३४**

யயா து தர்மகாமார்த்தான் த்ருத்யா தாரயதேऽர்ஜுன ।
ப்ரஸங்கேன பலாகாங்க்ஷீ த்ருதி: ஸா பார்த்த ராஜஸீ ॥ 34

पार्थ பார்த்த *பார்த்தா* तु து *மற்று* यया धृत्या யயா த்ருத்யா *எந்த உறுதியினால்* धर्म काम अर्थान् தர்ம காம அர்த்தான் *தர்மம், காமம், அர்த்தம் ஆகியவைகளை* धारयते தாரயதே *காக்கின்றானோ* प्रसङ्गेन ப்ரஸங்கேன *பெரும்பற்றுதலால்* फलाकाङ्क्षी பலாகாங்க்ஷீ *பயனை விரும்புபவனாகிறானோ* अर्जुन அர்ஜுன *அர்ஜுனா* सा धृतिः ஸா த்ருதி: *அந்த உறுதி* राजसी ராஜஸீ *ராஜஸமானது.*

***மற்று, எந்த உறுதியினால் அர்ஜுனா, அறம் பொருள் இன்பங்களை ஒருவன் காக்கின்றானோ, பற்றுதலால் பயனை விரும்புகின்றவனாகிறானோ அந்த உறுதியானது பார்த்தா, ராஜஸமானது. 34***

புருஷார்த்தம் அல்லது உறுதிப்பொருள் நான்கு. தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் அல்லது அறம், பொருள்,

இன்பம், வீடு என்பனவாம் அவை. சாத்விக திருதி மோக்ஷத்தை நாடுகிறது. தர்மம், அர்த்தம், காமம் ஆகிய வைகள் பிரபஞ்ச வாழ்க்கையின் முக்கியபகுதிகளாகிய இவ் வுலக வாழ்க்கைக்கும் சுவர்க்க வாழ்க்கைக்கும் உதவுகின் றன. உலகப்பற்றைப் பொதுவாக இரண்டாகப் பிரித்து விடலாம். காசு ஆசை அல்லது பொருளில் பற்றுதல். இது எவ்வளவு உறுதியாக மனதைப்பற்றிப் பிடித்திருக் கிறது என்பது மனிதனுக்குத் தெரியாது. உணவையும் உறக்கத்தையும் தியாகம் செய்துவிட்டு மனிதன் அல்லும் பகலும் உழைக்கிறான். அதன் பயனாக இன்னும் கொஞ் சம் செல்வம் சேரும் என்ற நம்பிக்கை அவனை அச் செய லில் தூண்டுகிறது. சொந்த ஊரையும் உற்றாரையும் உற வினரையும் பிரிந்து தூரதேசத்துக்கு ஒருவன் போகிறான். ஆங்கு அதிகம் திரவியம் கிடைக்கும் என்ற நம்பிக்கை அவனை இழுத்துச் செல்லுகிறது. இனி, உடலின் தேவை களையும் சுருக்கிக்கொண்டு ஒருவன் பாடுபடுகிறான். மேலும் செல்வம் சேரவேண்டும் என்ற நோக்கம் அவனை அப்படித் தூண்டுகிறது. அடுத்தபடியாக இருப்பது இன்பத்தில் வைத்துள்ள பற்றுதல். எல்லா உயிர்களும் இன்பத்தை நாடுகின்றன. இன்பம் கிடைப்பதாலேயே அவைகள் இவ் வுலக வாழ்க்கையை விரும்புகின்றன. அவைகள் எடுத்துக் கொள்ளும் முயற்சிகளெல்லாம் காமத்தை நிறைவேற்றுதற் பொருட்டேயாம். சலிப்படையாது, தளர்வுறாது எல்லா உயிர்களும் உழைக்கின்றன. இன்பத்தின் பொருட்டே அவைகள் அங்ஙனம் செய்கின்றன. வெவ்வேறு உயிர்கள் வெவ்வேறு விதங்களில் இன்பத்தைப் பெறலாம். ஏதே னும் ஒருவிதத்தில் அது அகப்பட்டால் போதுமானது. உயிரைக் கொடுத்து இன்பத்தைப்பெற அவைகள் எத்த னிக்கின்றன வென்றால் அது மிகையாகாது. நல்லறம் பயி லுதல் பொருளையும் இன்பத்தையும் பெற்று வைத்திருத் தல் பொருட்டேயாம். பொருளோடும் இன்பத்தோடும் கூடிய அறம் இவ்வுலக சம்பந்தமானது. இம்மைக்கு ஏது

வாகிய அறம் பொருள் இன்பங்களில் பெரும் பற்றுதல் வைப்பது ரஜோகுணத்தின் இயல்பு. ஆகையால் இம்மூன்றைக் கடைப்பிடிக்கும் உறுதி ராஜஸமானது. அது மனிதனை உலக பந்தத்திலேயே ஆழ்த்திவைக்கிறது.

தாபஜ்வரத்தினால் பிதற்றுகிறவன் சமீபத்தில் குளிர்ந்த ஜலத்தையும் இனிமையான தின்பண்டங்களையும் வைத்திருந்தால் அவன் அத்தண்ணீரை அருந்தாமலும் தின்பண்டங்களை ருசி பார்க்காமலும் இருப்பானா? அதுபோல, காமஜ்வரத்தினால் வாதைப் பட்டுச் சிற்றின்பங்களில் ஆசை வைத்த உலகப்பற்றுள்ளவன் ரூபலாவண்யங்களின் வனப்பினிடையும் செல்வத்தின் கவர்ச்சியின் மத்தியிலும் இருந்தால் அவனால் ஆசையை அடக்கமுடியாது. அவன் பக்தி மார்க்கத்தை விட்டுப் புறம்பே போவது நிச்சயம்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**यया स्वप्नं भयं शोकं विषादं मदमेव च ।**
**न विमुञ्चति दुर्मेधा धृतिः सा पार्थ तामसी ॥ ३५**

யயா ஸ்வப்னம் பயம் சோகம் விஷாதம் மதமேவ ச ।
ந விமுஞ்சதி துர்மேதா த்ருதி: ஸா பார்த்த தாமஸீ ॥ 35

पार्थ பார்த்த *பார்த்தா* दुर्मेधाः துர்மேதா: *புத்திகெட்டவன்* यया யயா *எதனால் (எந்த உறுதியால்)* स्वप्नं ஸ்வப்னம் *தூக்கத்தையும்* भयं பயம் *பயத்தையும்* शोकं சோகம் *துயரத்தையும்* विषादं விஷாதம் *மனக் கலக்கத்தையும்* मदं एव च மதம் ஏவ ச *செருக்கையும்* न विमुञ्चति ந விமுஞ்சதி *விடுகிறதில்லையோ* सा धृतिः ஸா த்ருதி: *அந்த உறுதியானது* तामसी தாமஸீ *தாமஸமானது.*

***பார்த்தா, தூக்கத்தையும், அச்சத்தையும், துயரத்தையும், மனக்கலக்கத்தையும், செருக்கையும் விடாது பிடிக்கும் அறிவிலியின் உறுதியோ தாமஸமானது.*** **35**

தமோகுணமும் அக்ஞான இருளும் ஒன்றோடொன்று சேர்ந்தவைகளாகின்றன. தூங்குகின்ற நிலை ஜட அவஸ்தைக்கு ஒப்பானது. கனவு காணும் இயல்பும் அதில் அடங்கியிருக்கிறது. பகற் கனவு காணும் தமோகுணமுடையவனை உலகில் காணலாம். அத்தகையவன் விழித்

திருந்து வியவகாரம் செய்வது தூக்கத்தில் சொப்பனம் காண்பது போன்று உறுதியற்றது. அவன் புரியும் செயல்கள் உலகுக்கும் பயன்படாதவைகளாகும்.

தமோகுண உறுதிக்குத் தக்க சான்று திருதராஷ்டிர மன்னன் ஆவான். அவன் பிறவியிலேயே குருடன். தெளிந்த அறிவும் நல்ல விவேகமும் இன்மைக்கு அவன் அந்தகனாயிருந்தது புறச் சின்னமாகும். துர்யோதனன் முதலாயினோர் அவனுக்குப் புதல்வர்களாயிருந்ததும் பொருத்தமானது. ஏனென்றால் அக்ஞானத்தினின்றே கேடுகள் அனைத்தும் உதிக்கின்றன. குருட்டு அரசனுக்கு ராஜ்யத்தில் பெரும் பற்றுதல் இருந்தது. தன் புதல்வர்கள் கையை விட்டு அது ஒருவேளை போய்விடுமோ என்ற அச்சம் அவன் உள்ளத்தில் அடிக்கடி உண்டாயிற்று. அவர்கள் புரிந்த அடாத செயல்களை அரசன் கேள்வியுற்றுத் துயரத்தையடைந்தான். ஆனால் புதல்வர்கள்மீது அவன் தீவிரமான நடவடிக்கை ஒன்றும் எடுத்துக் கொள்ளவில்லை. தனது புகழுக்கே பங்கம் வந்து கொண்டிருந்ததைக் குறித்து அரசன் மனம் கலங்கினான். ஆனால் பீஷ்மர், துரோணர், கிருஷ்ணன் போன்றவர்களது புத்திமதியைக் கேட்க அவன் ஆயத்தமாயில்லை. எப்படியிருந்தாலும் தானே பேரரசன் என்ற செருக்கும் அவனுடைய உள்ளத்தில் நிறைந்திருந்தது. விவேகமில்லாத அவ்வேந்தன் விடாது பிடித்த திருதியானது தமோகுணத்தினின்று உதித்ததாம்.

திருதராஷ்டிரன் போன்ற மக்கள் பலரை இன்று நாம் சமூகத்தில் காணலாம். முன்னோர்கள் தேடிவைத்த செல்வம் அவர்களுக்குச் சொந்தமானதாயிருக்கிறது. ஆனால் நல்லறிவும் முயற்சியும் அவர்களிடத்து இல்லை. அந்த அளவில் அவர்கள் குருடரே யாவர். உண்பதும் உறங்குவதுமே அவர்களுக்கு முக்கியமான தொழில்களாகும். செல்வத்தை முறையாகக் காக்கவும் வளர்க்கவும் அவர்களுக்குத் தெரியாது. எனவே அது கைவிட்டுப் போய்விடுமோ என்ற

*அச்சம் உள்ளத்தை உறுத்திக் கொண்டிருக்கும். செல்வத்தில் சில பகுதி விரயமான பிறகே அவர்களுக்கு விஷயம் விளங்குகிறது. பின்பு அதைக்குறித்து அவர்கள் துன்பத்தில் அழுந்துவார்கள். மனக்கலக்கத்துக்கு இங்கு மூலத்தில் விஷாதம் என்னும் சொல் அமைந்திருக்கிறது. கீதையின் முதல் அத்தியாயத்தின் தலைப்பு அர்ஜுன விஷாதம் என்பதாம். அதாவது தாற்காலிகமாக அவனுக்கு மனம் கலங்கிற்று. தமோகுணத்தில் உதித்த உறுதியுடையவருக்கோ ஓயாத மனக்கலக்கமாம். ஏனென்றால் அவர்களுடைய வாழ்வு துர்மேதை என்னும் சேற்றில் கட்டிய வீடு போன்றது. ஓயாது அது இடிந்து விழுந்துகொண்டே இருக்கும். இத்தனை வித கேடுகளுக்கிடையில் தங்களைக் குறித்துப் பெருமை பாராட்டும் செருக்கு அவர்களை விட்டு அகலுவதில்லை. இது தமோகுணத்தினின்று உதித்த உறுதியாம்.*

**सुखं त्विदानीं त्रिविधं शृणु मे भरतर्षभ ।**
**अभ्यासाद्रमते यत्र दुःखान्तं च निगच्छति ॥ ३६**

ஸுகம் த்விதானீம் த்ரிவிதம் ச்ருணு மே பரதர்ஷப ।
அப்யாஸாத்ரமதே யத்ர து:காந்தம் ச நிகச்சதி ॥ 36

भरतर्षभ பரதர்ஷப *பரதகுலக்காளையே* यत्र யத்ர *எதில்* अभ्यासात् அப்யாஸாத் *பயிற்சியால்* रमते ரமதே *இன்படைகிறானோ* दुःख अन्तं च துக்க அந்தம் ச *துக்கத்தின் முடிவையும்* निगच्छति நிகச்சதி *அடைகிறானோ* त्रिविधं सुखं तु த்ரிவிதம் ஸுகம் து *மூன்று விதமான சுகத்தையும்* मे மே *என்னிடம்* इदानीं இதானீம் *இப்போது* शृणु ச்ருணு *கேள்.*

***ஒருவன் எச்சுகத்தைப்பயிற்சியால் துய்த்துத் துன்பத்தின் முடிவையடைகிறானோ, அதன் மூவிதப் பாகுபாட்டையும் இப்போது என்னிடம் கேளாய், பரதகுலக்காளையே. 36***

*உயிர் வாழ்க்கைக்கு உற்சாகம் தருவது சுக பிராப்தி. சுகம் வேண்டாத உயிர் எவ்வுலகிலும் இல்லை. அதன் பொருட்டு ஜீவர்கள் எடுத்துக்கொள்ளும் முயற்சிக்கு ஓரள*

வில்லை. ஆயினும் அதை அடைதலில் தாரதம்மியமுண்டு. மின்னல் போன்று சிலருக்கு அது தோன்றுகிறது. இதோ சுகம் கிட்டிவிட்டது என்று உணருதற்கு முன்பு அது மாயமாய் மறைந்து போகிறது. மீண்டுமொரு நீண்ட முயற்சி. இங்ஙனம் பெரு முயற்சிக்கிடையில் இன்பப்பேறு மின்னல் போன்று இடையீடு உடையதாகிறது. இன்னும் சிலர்க்கு அது ஓட்டைப் பாத்திரத்தில் கொட்டும் ஜலம் போன்று வந்துகொண்டும் போய்க்கொண்டும் இருக்கிறது. எங்கிருந்து வருகிறது என்பது அவர்களுக்கு விளங்குவ தில்லை. பிறகு எங்கேபோய் மறைகிறது, ஏன் போகிறது என்பதும் பிடிபடுவதில்லை: பூரண கும்பம்போன்று ஒரு நாளைக்கு இன்பம் நிறைநிலையடைந்துவிடும் என்று நம்பி யிருக்கின்றனர். அந்த நம்பிக்கையே வாழ்க்கைக்குத் தூண்டுகோலாகிறது. ஏதோ ஒரு சிலர்க்கு வளர்பிறை போன்று சுகம் ஓங்குகிறது. அது இடர்ப்படுவதில்லை. இன்பம் துய்ப்பதில் வாய்க்கும் இத்தகைய ஏற்றத் தாழ் வுக்குக் காரணம் ஏதாவது உண்டா என்று ஆராய்ந்து பார்க்கவேண்டும்.

அப்பியாசம் அல்லது பயிற்சியானது வாழ்க்கையை வேண்டியவாறு மாற்றியமைக்கவல்லது. உடலுக்கு ஏற்ற பயிற்சியுண்டு. அதேபாங்கில் உள்ளத்துக்கு ஏற்ற பயிற்சி களும் உண்டு. ஜன்மாந்தரத்தின் வாசனைகள் என்று சொல்லுவது எல்லாம் பயிற்சியினின்று வந்தவைகள். பயிற்சியை மாற்றினால் வாசனையை மாற்றலாம். அப்பி யாசத்தின்மூலம் சுபாவத்தையே மாற்றிவிடலாம். விலங்கி னிடத்து ஒழுங்குப்பாட்டை உண்டுபண்ணுதற்கும் பயிற்சி பயன்படுகிறது. அதை ஒரு நாள் அல்லது இரண்டு நாளைக்குக் கையாளுவது போதாது. இடையறாப் பழக்க மாக அது வடிவெடுக்கவேண்டும். துன்பத்தைத் தவிர்ப் பதற்கும் இன்பத்தைப் பெறுதற்கும் அப்பியாசம் சிறந்த தொரு உபாயமாகிறது.

यत्तदग्रे विषमिव परिणामेऽमृतोपमम् ।
तत्सुखं सात्त्विकं प्रोक्तमात्मबुद्धिप्रसादजम् ॥ ३७

யத்ததக்ரே விஷமிவ பரிணாமேऽம்ருதோபமம் ।
தத்ஸுகம் ஸாத்விகம் ப்ரோக்தமாத்மபுத்திப்ரஸாதஜம் ॥ 37

यत् तत् யத் தத் *எந்த ஒன்று* अग्रे அக்ரே *முதலில்* विषं इव விஷம் இவ *விஷம்போல* परिणामे பரிணாமே *முடிவில்* अमृत उपमं அம்ருத உபமம் *அமிர்தத்துக்கு ஒப்பானது* आत्म बुद्धि प्रसादजं ஆத்ம புத்தி ப்ரஸாதஜம் *ஆத்மாவில் நிலைபெற்ற புத்தியின் தெளிவிலே தோன்றுகிற* तत् सुखं தத் ஸுகம் *அந்த சுகமானது* सात्त्विकं ஸாத்விகம் *சாத்விகமென்று* प्रोक्तं ப்ரோக்தம் *பகரப்படுகிறது.*

***எது முதலில் விஷம் போலவும் முடிவில் அமிர்தத்துக்கு ஒப்பானதுமாகிறதோ அந்த சுகம் சாத்விகமாம்; ஆத்ம நிஷ்டையில் தெளிவடைந்த புத்தியில் அது தோன்றுகிறது.*** 37

*வைராக்கியமும் தியானமும் கூடிய பாரமார்த்திக வாழ்க்கை துவக்கத்தில் துன்பம் நிறைந்ததாகத் தென்படுகிறது. பிறகு மனத்தெளிவினின்று விளையும் சித்சுகோதயம் ஒப்பு உயர்வு அற்றது. அது ஒன்றே பிறவிப்பெரும் பயன் என்பது அப்பொழுது விளங்குகிறது.*

*பாரமார்த்திக வாழ்வினின்று வரும் பேரின்பம் சாதாரண சாதகர்களுக்குப் பிடிபடாது போய்விடலாம். ஆனால் நல்லொழுக்கத்தின் பயனை எல்லாரும் எளிதில் காணலாம். விஷயங்களில் விரைந்து செல்லும் இந்திரியங்களைத் தடுத்து ஆளுதல் ஆரம்பத்தில் கஷ்டமாயிருக்கும். அதில் வெற்றிபெற்றான பிறகு வரும் நிலைத்த இன்பமானது நிலையற்ற விஷய சுகத்தைவிட மேலானது என்பது விளங்கும். யோகிகளுடைய வாழ்க்கையையும் போகிகளுடைய வாழ்க்கையையும் சீர்தூக்கிப் பார்த்தாலும் இவ்வுண்மை விளங்கும்.*

முற்காலத்தில், ஜயபுரியிலிருக்கும் கோவிந்தஜியின் கோவிலிலுள்ள அர்ச்சகர்கள் கல்யாணம் பண்ணிக்கொள்வதில்லை. ஆகவே அவர்கள் ஆத்ம சக்தியால் வெகு பலம் படைத்தவர்களாக இருந்தனர். ஒரு சமயம் அவ்வூர் அரசன் அவர்களைத் தன்னிடம் வரும்படி சொல்லியனுப்பினான். அவர்கள் போகாமல், 'அரசனைத்தான் எங்களிடம் வரச் சொல்லுங்கள்,' என்று பதில் அனுப்பினர். அப்பால், அவர்கள் கல்யாணம் பண்ணிக்கொண்டனர். அதன் பின் அர்ச்சகர்களை அரண்மனைக்கு வரவழைக்கவேண்டிய அவசியம் அரசனுக்கு இல்லாது போயிற்று. ஏனெனில், அவர்கள் தாமாகவே அரசனிடம் வந்து, "மகராஜ்! நாங்கள் ஆசீர்வாதம் செய்ய வந்திருக்கிறோம். சுவாமிக்குச் சாத்திய புஷ்பங்களைக் கொணர்ந்திருக்கிறோம். அங்கீகரிக்கவேண்டும்," என்று சொல்லவாரம்பித்தனர். இவர்களுக்கு அப்படிப்பட்ட அவசியம் நேர்ந்துவிட்டது. பாவம்! அவர்கள் வேறு என்னதான் செய்வார்கள்? ஒரு நாளைக்கு வீடுகட்டவேண்டியிருந்தது; இன்னொருநாள் குழந்தைக்கு அன்னப் பிராசனம் செய்யவேண்டியிருந்தது; வேறொருநாள் பெண்ணுக்குக் கல்யாணம் பண்ணவேண்டியிருந்தது. இப்படியாக அவர்களுக்கு இடைவிடாத பண முட்டுப்பாடு உண்டாயிற்று. இதனால் ராஜஸபைக்குப் போகவேண்டிய அவசியம் நேர்ந்தது.

பிறர்க்கு அடிமையாக வேலை செய்வதன் பயனை நீங்களே நன்கு உணர்வீர்கள். ஆங்கிலமும் மேனாட்டுப் பயிற்சியும் பெற்ற வாலிபர்களில் அனேகர் பிறர்க்கு அடிமைவேலை செய்து தங்கள் எஜமானர்கள் கொடுக்கும் உதைகளை வாய்பேசாது பெற்று அனுபவிக்கின்றார்கள். ஏன் இவ்வளவு அவமதிப்புக்கெல்லாம் அவர்கள் உட்பட்டிருக்கின்றார்கள் என்பது தெரியுமா? இவைகளுக்கெல்லாம் அடிப்படையாக இருப்பது பொதுப்படப் பெண்ணாசையே யாகும்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

இந்திரிய நிக்கிரகம் அல்லது புலனடக்கம் பழகுதல் ஒன்றே வளர்பிறை போன்று சுகத்தை வளர்ப்பதற்கு உற்ற உபாயம். அம்மனிதன் எவ்வுலகில் எதற்கும் அடிமைப்படான். உலப்பில்லா ஆனந்தம் அவன் பெறும் பேறு ஆகும்.

**विषयेन्द्रियसंयोगाद्यत्तदग्रेऽमृतोपमम् ।**
**परिणामे विषमिव तत्सुखं राजसं स्मृतम् ॥ ३८**

விஷயேந்த்ரியஸம்யோகாத்யத்ததக்ரேऽம்ருதோபமம் ।
பரிணாமே விஷமிவ தத்ஸுகம் ராஜஸம் ஸ்ம்ருதம் ॥ 38

विषय इन्द्रिय संयोगात् விஷய இந்த்ரிய ஸம்யோகாத் *புலன் பொறிகளின் பொருத்தத்தால்* यत् तत् யத் தத் *எந்த ஒன்று* अग्रे அக்ரே *முதலில்* अमृत उपमं அம்ருத உபமம் *அமிர்தத்துக்கு ஒப்பானது* परिणामे பரிணாமே *முடிவில்* विषं इव விஷம் இவ *விஷம் போன்றது* तत् सुखं தத் சுகம் *அந்த சுகமானது* राजसं स्मृतं ராஜஸம் ஸ்ம்ருதம் *ராஜஸ மென சொல்லப்படுகிறது.*

***புலன் பொறிகளின் பொருத்தத்தால் முதலில் அமிர்தம் போன்றிருந்து முடிவில் விஷம்போன்றாகும் சுகம் ராஜஸமென்று சொல்லப்படுகிறது. 38***

*இந்திரியங்களைக்கொண்டு இந்திரியார்த்தங்களை அணைந்து பெறும் இன்பம் நஞ்சு ஆகிறது. அதனால் பலம் குறைகிறது. வீரியத்துக்கு விரயம் உண்டாகிறது. அதாவது ஆண்மையோடு செயலாற்ற இயலாது. ரூபம் அல்லது சுந்தரவடிவம் குலைகிறது. வயோதிகம் விரைவில் வருகிறது. நிறம் மங்குகிறது. இயல்பாக மேதாவியாக வேண்டியவன் விஷய சுகத்தால் புல்லறிவாளனாகிவிடுகிறான். இறைவனைப்பற்றிய ஞாபகசக்தி போய்விடுகிறது. செல்வமும் கையைவிட்டுச் சென்றுவிடுகிறது. ஊக்கத்தோடு வினையாற்றும் தன்மை வருவதில்லை. அதர்மமே மேலும் மேலும் தலையெடுக்கிறது. அதனால் வாழ்க்கையே நரகவேதனையாய்விடுகிறது. ஓட்டைப்பாத்திரத்தில் வார்க்கும் ஜலம்போன்று இன்பம் தோன்றவும் மறையவும் செய்கிறது.*

*வாழ்வு என்னும் பாற்கடலை தேவர்களும் அசுரர்களும் கடைந்தார்கள். முதலில் அவர்கள் பெற்ற உலக விஷயங்களாகிய செல்வம், கல்வி, வண்டி, வாகனம், ஆபரணம் முதலியன அமிர்தம் போன்று இன்பம் கொடுத்தன. ஒவ்வொரு செயலுக்கும் எதிர்ச் செயல் என்பது உண்டு. யாரும் அதைத் தடுக்கமுடியாது. வாழ்வு என்பதற்கு எதிர்ச் செயல் மரணம். அது விஷத்துக்கு ஒப்பானது. வாழ்வில் விருப்பங்கொண்டிருந்த தேவர்களுக்கும் அசுரர்*

களுக்கும் பின்பு மரணம் என்னும் விஷம் வந்தது. அதை ஏற்றுக்கொள்ள அவர்களுக்கு விருப்பம் வரவில்லை. எனவே அவர்கள் மிக வருந்தினார்கள். எங்கெங்கேயோ ஓடினார்கள்; என்னென்னவோ செய்து பார்த்தார்கள். ஒன்றும் பயன்படவில்லை. முன்பு பெற்ற சுகவாழ்வே இப்பொழுது துன்பம் நிறைந்ததாகத் தென்பட்டது. புலனடக்கமே வடிவெடுத்துள்ள துறவிவேந்தனாகிய சங்கர மகாதேவனிடம் ஓடினார்கள். மரணத்தை வென்றவனாகிய அப்பரம புருஷன் தன்னை வந்தடைந்த உயிர்களை மரணத்தினின்று காப்பாற்றினான். ரஜோகுண சுகத்தைத் தவிர்த்து சத்வகுண சுகத்துக்குப் போகவேண்டும். இறுதியாக குணாதீதத்திலுள்ள சுகத்தைப் பெறவேண்டும்.

**यदग्रेचानुबन्धे च सुखं मोहनमात्मनः ।**
**निद्रालस्यप्रमादोत्थं तत्तामसमुदाहृतम् ॥ ३९**

யதக்ரேசானுபந்தே ச ஸுகம் மோஹனமாத்மன: ।
நித்ராலஸ்யப்ரமாதோத்தம் தத்தாமஸமுதாஹ்ருதம் ॥ 39

यत् सुखं யத் ஸுகம் *எந்த சுகம்* अग्रे அக்ரே *துவக்கத்திலும்* अनुबन्धे च அனுபந்தே ச *முடிவிலும்* आत्मनः मोहनं ஆத்மன: மோஹனம் *தனக்கு மயக்கம் உண்டுபண்ணுகிறதோ* निद्रा आलस्य प्रमाद उत्थं நித்ரா ஆலஸ்ய ப்ரமாத உத்தம் *நித்திரை, சோம்பல், தடுமாற்றம் இவற்றினின்று பிறக்கும்* तत् தத் *அது* तामसं தாமஸம் *தாமஸமான தென்று* उदाहृतं உதாஹ்ருதம் *உரைக்கப்படுகிறது.*

***துவக்கத்திலும் முடிவிலும் தன்னை மயக்குவதும், தூக்கம் சோம்பல் தடுமாற்றத்தினின்று பிறப்பதுமாகிய சுகம் தாமஸ மென்றுரைக்கப்படுகிறது.***

ஏதேனும் ஒருவிதத்தில் தனக்கு இன்பம் கிடைத்தால் போதுமென்று அறிவிலி ஆர்வத்தோடு அதை நாடுகிறான். சுகத்தை அவன் அனுபவிக்க ஆரம்பிக்கும் பொழுதே அது மயக்கத்தைக் கொடுத்துத் துன்பமாக மாறி விடுகிறது. கள் குடித்தல் அல்லது மதுபானத்தை அதற்குச்

*சான்றாக எடுத்துக்கொள்ளலாம். அதன் வெறியில் விவேகம் போய்விடுகிறது. மற்றவர் ஏளனம் செய்வது குடிகாரனுக்குப் புலப்படுவதில்லை. மிகைப்பட்ட துக்கத்தை அது உண்டுபண்ணுகிறது. வெறி அடங்கியதும் தளர் வுற்ற மனதும் வலிவற்ற உடலும் மேலும் துன்பத்தை விளைவிக்கின்றன. அவன் சோம்பலே வடிவெடுத்தவன் ஆகிறான். இங்ஙனம் துவக்கத்திலும் இடை வேளையிலும் இறுதியிலும் தமோகுணப் பிரவிருத்தி துன்பத்தையே வளர்க்கிறது. மின்னல் போன்று இடையிடையே இன்பம் தோன்றி மறைந்ததுதான் மிச்சம்.*

*ஒட்டகம் முட்செடியைப் பெருவிருப்பத்தோடு தின்கிறது. முள் தைத்து அதன் உதடெல்லாம் ரத்தம் சொட்டினாலும் அது முள்ளைத் தின்பதை நிறுத்துவதில்லை. விஷய சுகத்தை நாடுபவர் போக்கு அத்தகையது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

न तदस्ति पृथिव्यां वा दिवि देवेषु वा पुनः ।
सत्त्वं प्रकृतिजैर्मुक्तं यदेभिः स्यात्त्रिभिर्गुणैः ॥ ४०

ந ததஸ்தி ப்ருதிவ்யாம் வா திவி தேவேஷு வா புன: ।
ஸத்வம் ப்ரக்ருதிஜைர்முக்தம் யதேபி: ஸ்யாத் த்ரிபிர்குணை: ॥

प्रकृतिजैः एभिः त्रिभिः गुणैः ப்ரக்ருதிஜை: ஏபி: த்ரிபி: குணை: *பிரகிருதியினின்றுதித்த இந்த மூன்று குணங்களினின்று* यत् मुक्तं स्यात् யத் முக்தம் ஸ்யாத் *எது முக்தியடைந்திருக்கிறதோ* तत् सत्त्वं தத் ஸ்த்வம் *அந்த உயிர்* पृथिव्यां ப்ருதிவ்யாம் *பூவுலகிலோ* वा வா *அல்லது* पुनः புன: *மேலும்* दिवि देवेषु திவி தேவேஷு *தேவலோகத்தில் தேவர்களுக்கிடையிலோ* न अस्ति ந அஸ்தி *இல்லை.*

***இயற்கையினின்றுதித்த இம் முக்குணங்களினின்று விடுதலை யடைந்த உயிர் மண்ணுலகில் அல்லது விண்ணுலகில் வானவர்களுள்ளும் இல்லை. 40***

*புல் முதல் பிரம்மா ஈறாக எல்லா உயிர்களும் முக்குணமயமான பிரகிருதியில் கட்டுண்ட ஆத்மாக்களாவார்*

*கள். அவர்கள் மக்களாக இருந்தாலும் சரி, தேவர்களாக இருந்தாலும் சரி, முக்குணங்களைக் கடக்கும் வரையில் அவர்கள் எல்லாரும் பத்தாத்மாக்களேயாம். அதாவது பிறப்பும் இறப்பும் அவர்களுக்கு மாறிமாறி வந்து கொண்டிருக்கின்றன. குண பேதத்துக்கு ஏற்ப அந்த ஜீவர்களின் பிறப்பு மேலானதாகவோ கீழானதாகவோ அமைவதும் இயல்பு. ஜீவர்கள் எல்லாரிலும் மிகப் பெரியவர் பிரம்மா. அவர் அடைந்திருப்பது ஒரு பதவியே யொழிய முக்தியல்ல. அதாவது முக்குணங்களில் அவரும் சம்பந்தப்பட்டிருக்கிறார். முக்குணங்களைக் கொண்டல்லாது படைப்புத் தொழில் நிகழாது. பிரகிருதி லயம் என்பது அவர் பெற்றுள்ள ஒரு பெரிய பதவியாகும். மற்ற ஜீவர்களுக்கு இருப்பதுபோன்று பிரம்மாவுக்கு மேலும் பிறப்பு இல்லை. ஒரு கல்பத்தின் முடிவில் பிரம்மாவானவர் கிரம முக்தியடைகிறார். அப்பொழுது அவர் முக்குணங்களைக் கடந்தவர் ஆகிறார்.*

*ஒருவன் தாழ்ந்த சுபாவத்தோடு நெடுங்காலம் போராடியும் ஆத்ம ஞானத்தின் பொருட்டு இடைவிடாது உழைத்தும் ஸமாதி நிலையை அடையும்போது அகங்காரம் அடியோடு அகலும். ஆனால் ஸமாதி நிலையை அடைவது மிகவும் கஷ்டம். முக்குணத்தில் பிறந்த அகங்காரமானது எளிதில் நீங்குவதில்லை. அதனால்தான் நாம் இவ்வுலகில் மறுபடியும் பிறவித் துன்பத்தை அனுபவிக்கிறோம்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*இனி, மோக்ஷத்துக்கு ஏதுவான மார்க்கங்கள் விளக்கப்படுகின்றன:—*

**ब्राह्मणक्षत्रियविशां शूद्राणां च परंतप ।**
**कर्माणि प्रविभक्तानि स्वभावप्रभवैर्गुणैः ॥ ४१**

ப்ராஹ்மண க்ஷத்ரியவிசாம் சூத்ராணும் ச பரந்தப ।
கர்மாணி ப்ரவிபக்தானி ஸ்வபாவப்ரபவைர்குணை: ॥ 41

परंतप பரந்தப *எதிரிகளை எரிப்பவனே* ब्राह्मण क्षत्रिय विशां ப்ராஹ்மண க்ஷத்ரிய விசாம் *பிராமண, க்ஷத்திரிய, வைசியர்களுடைய*

शूद्राणां च சூத்ராணும் ச *சூத்திரர்களுடையவும்* कर्माणि கர்மாணி *கர்மங்கள்* स्वभाव प्रभवैः ஸ்வபாவ ப்ரபவை: *சுபாவத்தினின்று பிறந்த* गुणैः குணை: *குணங்களுக்கு ஏற்றவாறு* प्रविभक्तानि ப்ரவிபக்தானி *பிரிக்கப் பட்டிருக்கின்றன.*

***எதிரிகளை எரிப்பவனே, பிராமண க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களுடைய கருமங்கள் அவரவர் இயல்பில் உதித்த குணங்களுக்கு ஏற்பப் பிரிக்கப் பட்டிருக்கின்றன.*** ***41***

ஸ்வபாவம் என்பது ஈசுவரனுடைய பிரகிருதி அல்லது மாயை. அது முக்குணமயமாயுள்ளது. குணத்துக்குத் தகுந்தபடி கருமம் வேறுபடுகிறது. கருமத்தினின்று பெறுகிற சம்ஸ்காரத்துக்கு ஏற்ப சுபாவம் மாறுகிறது. அதாவது கருமமும் சுபாவமும் இணைபிரியாதவைகள். சுபாவம் எப்படியோ அப்படி வருணமும் மாறுகிறது. ஆக, ஒரு மனிதன் எந்த வர்ணத்தைச் சேர்ந்தவன் என்பதை அவனுடைய சுபாவத்தினின்றும் கருமத்தினின்றும் தெரிந்து கொள்ளலாம். சுபாவமோ மிக சூக்ஷ்மமானது. எளிதில் அதைத் தெரிந்துகொள்ளமுடியாது. ஞானிகளுக்கு மட்டும் அது கண்ணுடிப் பெட்டிக்குள் வைத்துள்ள வஸ்து போன்று நன்கு விளங்கும். பின்பு, கர்மம் ஸ்தூலமானது. ஒருவன் செய்கிற கருமத்திலிருந்து அவனுடைய வருணத்தைத் தெரிந்துகொள்ளலாம்.

வர்ணபேதத்தை பகவான் சிருஷ்டிக்கலாமா, உயர்வு தாழ்வை அவர் உண்டு பண்ணலாமா, என்ற கேள்விகள் பிறப்பதுண்டு. இந்தியாவில் வர்ணபேதமும், மேலோன் கீழோன் என்ற வேற்றுமையும் இருக்கும் வரையில் அந்நாடு சிறந்த நாடு ஆகாது என்று கருதுவாரும் உண்டு.

சிருஷ்டி என்பதன் பொருளே பேதத்தை உண்டு பண்ணுவது என்பதாகும். எல்லாம் ஒரே பாங்கை யடைவதும் சம்ஹாரம் ஆவதும் ஒன்று. ஆக, பேதம் இருந்தாக

வேண்டும். உடலில் அவ்யவ பேதம் உண்டு. வயதில் குழந்தை, யுவன், விருத்தன் என்ற பேதம் உண்டு. பாலில் ஆண்பால் பெண்பால் என்ற பேதம் உண்டு. மனபரிபாகத்திலும் புரிகின்ற செயலிலும் உள்ள பேதம் வர்ணபேதம் என்று சொல்லப்படுகிறது. இது சிருஷ்டி முழுதிலும் அமைந்திருக்கிறது. அப்படி அமைக்காது சிருஷ்டி செய்யவும் முடியாது. வர்ண பேதம் இயற்கையின் பாங்கு. அது இந்தியாவில் மாத்திரம் இருக்கிறது என்று எண்ணுபவர் இயற்கையின் பாங்கை உள்ளபடி அறிந்துகொள்ளவில்லை. ஆக, வர்ண பேதத்தை அங்கீகரிப்பதைத் தவிர மனிதன் வேறு ஒன்றும் செய்யமுடியாது.

உலகில் எங்கும் வர்ணபேதம் இருக்கிறது. ஆனால் மேல் நிலைக்கு வந்திருப்பவன் கீழ்நிலையில் இருப்பவனை அலட்சியப் படுத்தலாகாது. அப்படி அலட்சியப்படுத்தும் சமூகம் விரைவில் கீழ்நிலைக்கு வந்துவிடும். இக்கோட்பாடு எல்லா சமூகங்களுக்கும் பொதுவானது.

வருணத்துக்குரிய கருமத்தின் பிரிவினை வருமாறு:—

**शमो दमस्तपः शौचं क्षान्तिरार्जवमेव च ।**
**ज्ञानं विज्ञानमास्तिक्यं ब्रह्मकर्म स्वभावजम् ॥ ४२**

சமோ தமஸ்தப: சௌசம் க்ஷாந்திரார்ஜவமேவ ச ।
ஞானம் விக்ஞானமாஸ்திக்யம் ப்ரஹ்மகர்ம ஸ்வபாவஜம் ॥

शमः சம: *அந்தக்கரணத்தை யடக்குதல்* दमः தம: *புறக்கரணங்களை யடக்குதல்* तपः தப: *தபசு* शौचं சௌசம் *தூய்மை* क्षान्तिः க்ஷாந்தி: *பொறுமை* आर्जवं ஆர்ஜவம் *நேர்மை* ज्ञानं ஞானம் *ஞானம்* विज्ञानं விக்ஞானம் *சுவானுபவம்* आस्तिक्यं एव च ஆஸ்திக்யம் ஏவ ச *ஈசுவர நம்*

ஜ ஸ்வபாவஜம் *சுபாவத்தில் உண்டாகிய* ब्रह्मकर्म
*ம்மண கர்மங்களாகின்றன.*

**ளை யடக்குதல், புறக்கரணங்**
**தவம், தூய்மை, பொறுமை,**
**ஞானம், சுவானுபவ ஞானம்,**

**ஈசுவர நம்பிக்கை-இவையாவும் இயல்பாயுண்டாகிய பிராம்மண கர்மங்களாம். 42**

எக்குடியில் பிறந்தவன் என்பதை முன்னிட்டு ஒருவனை பிராம்மணன் என்கிறது லௌகிகம். மனபரிபாகத்தையும் வாழ்க்கை முறையையும் பார்த்து ஒருவனை பிராம்மணனென்கிறது வேதாந்தம். எந்த சமூகத்தில் எந்தக் குடியில் எக்காலத்தில் வேண்டுமானாலும் பிராம்மணன் தோன்றலாம். ஏனென்றால் பிறப்பு உரிமையில் பொருள் ஒன்றுமில்லை. மனபரிபாகமே முக்கியமானது. வேதாந்தம் விளக்குகிறபடி பிராம்மண இயல்பை அடையப் பெற்றவர்களை உலகில் காண்பது அரிது. ஆனால் அந்நிலையை அடைய மனிதன் முயல வேண்டும்.

கட்டுப்பாடான வாழ்க்கையே வடிவெடுத்தவன் அந்தணன். மனவடக்கமும் பொறிகளின் அடக்கமும் இயல்பாக அவனிடத்து அமைந்திருக்கின்றன. பரத்தை நாடித் தவம் புரிதல் ஒன்றே அவன் தொழில். தவத்தால் அவனது மனம் மொழி மெய் ஆகிய திரிகரணங்களும் தூய்மையடைகின்றன. புறவுலகினின்று அவனுக்கு ஏற்படும் இடுக்கண்களிடத்து பிராம்மணன் பொறுமையே வடிவெடுத்தவனாகிறான். துன்புறுத்துவார் யாரையும் அவன் நொந்து கொள்ளான். தனது சிந்தையிலும் சொல்லிலும் செயலிலும் அவன் நேர்மையே வடிவெடுத்தவனாகிறான். சாஸ்திர ஞானத்துக்கும் சுவானுபவ ஞானத்துக்கும் அவன் களஞ்சியமாகிறான். சாஸ்திரத்தின் உட்கருத்தையும் பிரபஞ்சத்தில் உயிர் வாழ்க்கையின் தத்துவத்தையும் அவனே உள்ளபடி அறிய வல்லவனாகிறான். ஆஸ்திக்யம் அல்லது ஈசுவர நம்பிக்கை யென்பது கடவுளைச் சார்ந்திருந்து கடவுளுக்கென்றே உயிர் வாழ்தலாம். அந்தணன் அருளுக்கே உரியவன் ஆகிறான். பொருளை அவன் ஒருபொழுதும் தேடான். எளிய வாழ்க்கையே வடிவெடுத்தவன் அவன். உடலை அலங்கரிப்பது அந்தணன் செயலன்று. எல்லா உயிர்களி

டத்தும் அவன் அருளைச் சொரிந்து செந்தண்மை பூண்டொழுகுகிறான். ஸ்ரீ ராமகிருஷ்ணரது ஜீவிதம் அந்தணன் ஒருவனுடைய பாரமார்த்திக வாழ்க்கைக்கு நல்ல எடுத்துக்காட்டாகும். இத்தகைய வாழ்வுடையவனே பிராம்மணன். இங்ஙனம் பண்பாடு அடைந்துள்ள பிராம்மணர் தொகை அதிகரிக்கின்றவளவு உலகத்துக்கு க்ஷேமம் உண்டாகிறது.

**शौर्यं तेजो धृतिर्दाक्ष्यं युद्धे चाप्यपलायनम् ।**
**दानमीश्वरभावश्च क्षात्रं कर्म स्वभावजम् ॥ ४३**

சௌர்யம் தேஜோ த்ருதிர்தாக்ஷ்யம் யுத்தே சாப்யபலாயனம்
தானமீச்வரபாவஸ்ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வபாவஜம் ॥ 43

शौर्यं சௌர்யம் *சூரத்தன்மை* तेजः தேஜ: *துணிவு* धृतिः த்ருதி: *உறுதி* दाक्ष्यं தாக்ஷ்யம் *சாதுரியம்* युद्धे च अपि अपलायनं யுத்தே ச அபி அபலாயனம் *போரில் புறங்காட்டாமை* दानं தானம் *கொடை* ईश्वरभावः च ஈச்வரபாவ: ச *இறைமையும்* स्वभावजं ஸ்வபாவஜம் *இயற்கையில் உண்டாகிய* क्षात्रं க்ஷாத்ரம் *க்ஷத்திரியருடைய* कर्म கர்ம *கர்மங்களாம்.*

***சூரத்தன்மை, துணிவு, உறுதி, சாதுரியம், போரில் புறங்காட்டாமை, கொடை, இறைமை ஆகியவைகள் இயற்கையில் உண்டாகிய க்ஷத்திரிய கர்மங்களாம். 43***

*அறம் அல்லது தர்மமே வடிவெடுத்திருப்பவன் க்ஷத்திரியன் ஆகிறான். சமூகத்தினுடைய இகலோக வாழ்க்கையை ஒழுங்குபடுத்துதல் அவனது வாழ்க்கைக் கடமையாகும். க்ஷத்திரியன் என்பதன் பொருள் உடலில் காயம் பட்டவன் என்பதாகிறது. நலத்தை நிலைநாட்டுதற்காக உடல் வாழ்க்கையை அவன் ஒப்படைத்திருக்கிறான். அப்பெரு முயற்சியின் விளைவாக உடல் அடிக்கடி புண்பட்டாலும் அல்லது சிதைக்கப்பட்டாலும் அதை அவன் பொருள்படுத்தான். பீஷ்மர் வதைக்கப்பட்டது போன்று க்ஷத்திரியன் ஒருவனுடைய தேகம் வதைக்கப்படுமானல், அதற்*

கிடையில் அவர் படைத்திருந்த உயர்ந்த மனப்பான்மையை அவன் கொண்டிருப்பானாகில் அவ்வரசன் நன்கு வாழ்ந்தவன் ஆவான். இனி, எல்லாரும் அரசன் ஆகமுடியுமா என்ற கேள்வி எழலாம். நாடு ஆளும் முறையில் எல்லாரும் அரசர் ஆகவேண்டியதில்லை. சமூகத்தில் மேலாம் பொறுப்பை நிறைவேற்றும் பாங்கில் பலபேர் அரசர் ஆகலாம்.

கேடும், கேடுடைய மனிதனும் ஒன்றே. நல்லான் ஒருவன் கேடுடைய மனிதனை யாண்டும் எதிர்க்கக் கடமைப்பட்டிருக்கிறான். பயிர்களுக்கிடையில் உள்ள களைகளைக் களையக் கிருஷிகன் கடமைப்பட்டிருப்பதுபோன்று உயிர்களுக்கிடையில் உள்ள அறமொவ்வாதவர்களை அடக்கவும், ஒடுக்கவும், வெல்லவும், ஒழிக்கவும் அறவாளன் கடமைப்பட்டிருக்கிறான்.

எதிரிக்கு அஞ்சாது வீரத்தோடு பாய்ந்து தாக்க வல்லவன் சூரத்தன்மை யுடையவனாகிறான். அச்சத்தை அறியாத மனநிலை தேஜஸ் அல்லது துணிவெனப்படுகிறது. எவ்வளவு ஏராளமாக உழைத்தாலும் களைப்பை அறியாத மனநிலை திருதி அல்லது உறுதி யெனப்படுகிறது. காலதேச வர்த்தமானம் அறிந்து எதிரியை வல்லமையோடு தாக்கக் கூடிய நிலைக்குச் சாதுரியம் என்று பெயர். திடீரென்று எதிரி வந்து தாக்கிவிட்டாலும் மனம் தளராது நொடிப் பொழுதில் தூக்கி வினைசெய்வது சாதுரியமாகிறது. சில வேளைகளில் பின்னோக்கிச் சென்று எதிரியைப் பின்பு வளைத்து அடிப்பது சாதுரியமாம். ஆனால் பகைவனுக்குப் பயந்து போர்க்களத்தினின்று புறங்காட்டி யோடிப் பிழைக்க நினைப்பவன் க்ஷத்திரியனாகான். பகைவனுக்கு அடிமைப்படுவதைவிட வீரத்துடன் எதிர்த்து நின்று அடிபட்டுச் சாவது மேல். குடிகளை முறையாக ஓம்புதலே தானமென்று சொல்லப்படுகிறது. வள்ளலாக இருந்து அவர்களுக்கு அரசன் யாண்டும் பொருளை வழங்கவேண்டும்.

மக்கள் நேர் கோடா வண்ணம் அவர்களை ஆளுதல் இறைமையாகிறது. இதற்கு ஈச்வர பாவம் என்பது மூலம். தலைவனாயிருத்தல் என்றும் இச் சொல் பொருள்படும். இரண்டு அல்லது மூன்று பேர்களுடன் சேர்ந்து வாழும்பொழுதும் ஒருவன் தலைவனாகத் திகழலாம். எப்பொழுதும் தலைவன் ஆவது தகைமையினாலேயாம். சுயநலம் கருதாது காரியத்தை நிர்வகிப்பவனும் அதை வெற்றிகரமாகக்கொண்டு சாதிப்பவனும் தலைவன் ஆகிறான். தாய் ஒருத்தி வீட்டுக்குத் தலைவியாகிறாள். ஏனென்றால் அன்புடன் பணிவிடை செய்யும் திறமையும், காரியங்களை நன்கு நிர்வகிக்கும் திறமையும் அவளிடத்து உண்டு. இறைமை வாய்க்கப் பெற்ற மக்கள் மேன்மக்கள் ஆகின்றனர். பகைவரிடத்து நடந்துகொள்ளுகிற முறையும் நாட்டு மக்களிடத்து நடந்து கொள்ளுகிற முறையும் சேர்ந்து ஈண்டு விளக்கப்பட்டுள்ளன. அந்தணனுடைய அருளையும் வைசியனுடைய பொருளையும் அரசன் இனிய முறையில் சேகரிக்கிறான். அவைகளுடன் தனது ஆண்மையை அவன் உவந்து கலக்கிறான். பின்பு, இவை யாவையும் உலக நன்மைக்கு எடுத்து வழங்குகிறான். பாரமார்த்திகத் துறையிலே விவேகானந்த சுவாமிகள் இச்செயலைச் செய்திருக்கிறார். அவர் ஒரு ராஜரிஷி.

**कृषिगोरक्ष्यवाणिज्यं वैश्यकर्म स्वभावजम् ।**
**परिचर्यात्मकं कर्म शूद्रस्यापि स्वभावजम् ॥ ४४**

க்ருஷிகோரக்ஷ்யவாணிஜ்யம் வைச்யகர்ம ஸ்வபாவஜம் ।
பரிசர்யாத்மகம் கர்ம சூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம் ॥ 44

कृषि गोरक्ष्य वाणिज्यं க்ருஷி கோரக்ஷ்ய வாணிஜ்யம் *உழவு, பசுக்காத்தல், வர்த்தகம்* स्वभावजं ஸ்வபாவஜம் *இயல்பாலுண்டாகிய* वैश्यकर्म வைச்ய கர்ம *வைசிய கர்மங்களாம்* शूद्रस्य अपि சூத்ரஸ்ய அபி *சூத்திரனுடையவும்* स्वभावजं ஸ்வபாவஜம் *இயற்கையில் உண்டான* कर्म கர்ம *கர்மமானது* परिचर्य आत्मकं பரிசர்ய ஆத்மகம் *குற்றேவல் வடிவெடுத்துள்ளது.*

**உழவும் கால்நடை காத்தலும் வாணிகமும் இயல்பாயுண்டாகிய வைசிய கர்மங்களாம். இட்ட பணி ஆற்றுவது சூத்திரனுக்கு இயல்பாயுண்டாகிய கருமம்.** **44**

பயிர்த் தொழில் புரிவது, ஆடுமாடுகளை வளர்த்தல், வியாபாரம் பண்ணுதல், தொழிற்சாலைகளை நிறுவுதல் ஆகிய இவையாவும் செல்வத்தை உண்டுபண்ணும் தொழில்களாம். சுதந்திர வாழ்க்கை வாழ்ந்து பணத்தைப் பெருக்குபவர்களெல்லாம் வைசியர்கள். இக்காலத்தில் புதியதாகத் தோன்றியுள்ள வக்கீல்களும் டாக்டர்களும் இடை அல்லது கடைத்தரமான வைசியர்கள். இவர்கள் சமூகத்துக்குச் செல்வத்தை உண்டுபண்ணுபவர்களல்ல; செல்வத்தை ஏற்பவர்களாம். இகலோக வாழ்க்கைக்கு இன்றியமையாத தன தானியங்களை விருத்திபண்ணுவதும், மூலப் பொருள்களைச் சேகரிப்பதும், அவைகளைப் பண்படுத்திப் பயன்படும் பொருள்களாக மாற்றியமைப்பதும், வாணிகத்தின் மூலம் பொருள்களை நாலாபக்கங்களிலும் பங்கிட்டுக் கொடுத்தலும் வைசிய தர்மமாகும். கஞ்சா, அபினி, மதுபானம் போன்றவை மக்களுடைய நல்வாழ்வைக் கெடுக்கின்றன. அத்தகைய பொருள்களை உண்டுபண்ணுவதும், அவைகளில் வர்த்தகம் பண்ணுவதும் வைசிய தர்மமாகாது.

பிறரிடத்து வேலைக்காரனுயிருந்து இட்ட வேலையைச் செய்து சம்பளம் ஏற்று ஜீவிப்பவன் சூத்திரனுகிறான். இக்காலத்து குமாஸ்தாக்களெல்லாரும் சூத்திரர்களாம். நல்ல மனப்பான்மையுடன் ஆசிரிய வேலை செய்கிறவர்கள் பிராம்மண கர்மம் செய்கிறார்கள். அரசாங்கத்தில் முறையாக ஆட்சி முறையைச் செலுத்துபவர்கள் க்ஷத்திரிய கர்மம் இயற்றுகிறார்கள். அவர்கள் சம்பளம் ஏற்பதில் குறையில்லை. ஆனால் வயிற்றுப் பிழைப்புக்காக வென்று அத்தொழில்களை நாடுவார்களானால் அவர்கள் சூத்திரர்களாகிறார்கள். கைக்கூலி அல்லது லஞ்சமேற்கிற எல்லாரும் சூத்

திரர்களேயாம். உடல் வாழ்க்கை ஒன்றில் மட்டும் கருத்து வைத்திருப்பவன் சூத்திரன். அதற்குமேல் மேலான சிந்தையும் செயலும் உடையவன் செய் தொழிலுக்கு ஏற்ப வைசியன், க்ஷத்திரியன் அல்லது பிராம்மணன் ஆகிறான்.

இந்த நான்கு வர்ணங்களும் மன பரிபாகத்தைப் பொறுத்தவைகள். உலகெங்கும் உள்ள ஜன சமூகங்களில் இவைகள் இயல்பாய் அமைந்திருப்பதைக் காணலாம். ஒரே குடும்பத்தில் பிறந்துள்ள நான்கு சகோதரர்க்கிடையில் ஒவ்வொருவனும் ஒவ்வொரு வர்ணத்தைச் சேர்ந்தவனாயிருக்கலாம். ஒரு சமுதாயத்தில் உள்ள மக்களுள் பெரும்பான்மையோர் ஏதேனும் ஒரு வர்ணத்தின் சுபாவத்தை உடைத்திருக்கலாம். பள்ளிக்கூடம் ஒன்றில் கீழ்வகுப்பும் மேல் வகுப்பும் இருப்பதுபோன்று சமுதாயத்தில் நான்கு வர்ணத்தாரும் இருக்கிறார்கள். மேல்வகுப்பில் இருப்பவனுக்குக் கீழ் வகுப்பின் பாடமும் தெரியும். அங்ஙனம் நான்கு வர்ணங்களின் கருமங்களையும் நன்கு செய்யத் தெரிந்தவன் அந்தணன். மூன்று வர்ணங்களின் கர்மங்களை நன்கு செய்யத் தெரிந்தவன் க்ஷத்திரியன். இங்ஙனம் வினையாற்றும் திறமை கீழே இறங்கி வருகிறது.

கருமயோகத்துக்கு ஒப்பானது சூத்திரனுடைய தர்மம். ராஜயோகத்துக்கு ஒப்பாகிறது வைசியனுடைய தர்மம். ராஜயோகி தன் சொரூபத்தில் உள்ள சக்தியை சேகரிக்கிறான். வைசியன் புறவுலகில் சக்திக்குச் சின்னமாயிருக்கும் பொருளைச் சேகரிக்கிறான். பக்தியோகத்தின் வடிவினன் ஆகிறான் க்ஷத்திரியன். சமூகத்தினிடத்து அன்புகொண்டிருந்தால்தான் அதனிடத்து நல்வாழ்க்கையை அவன் வழங்க முடியும். சமூகத்துக்குப் பெருங்கேடு செய்பவன் கொடுங்கோல் வேந்தன். ஞானயோகத்துக்கு எடுத்துக்காட்டாவான் பிராம்மணன். சிருஷ்டி முழுதையும் பிரம்ம சொரூபமாக அவன் காண்கிறான். நான்கு யோகமும் ஒரு மனிதனிடத்து ஒழுங்காக அமைந்திருந்தால் அவன் நிறை மனி

தன் ஆகிறான். பின்பு நான்கு வர்ண தர்மங்களையும் ஒருங்கே ஆற்றவல்லவனே நிறை மனிதன் ஆகிறான். நான்கு வர்ணங்களும் ஒரு சமூகத்தில் நன்கு அமைந்திருந்தால் அது தலை சிறந்த சமூகமாகும்.

நல்ல சமூகம் ஒன்றில் உள்ள பாடசாலைகளில் படிப்பைக் கட்டாயப்படுத்தி எல்லாச் சிறுவர்கள் சிறுமிகளுக்கும் நான்கு வர்ணங்களுடையவும் பயிற்சிகளைக் கொடுத்து அவரவர் பாங்குக்கு ஏற்ப மேலே வரத் தூண்டுதல் செய்தால் இரண்டு மூன்று தலை முறைகளுக்குள் அந்தச் சமூகத்தைத் தலையாயதாக்கலாம்.

**स्वे स्वे कर्मण्यभिरतः संसिद्धिं लभते नरः ।**
**स्वकर्मनिरतः सिद्धिं यथा विन्दति तच्छृणु ॥ ४५**

ஸ்வே ஸ்வே கர்மண்யபிரத: ஸம்ஸித்திம் லபதே நர: ।
ஸ்வகர்மநிரத: ஸித்திம் யதா விந்ததி தச்ச்ருணு ॥ 45

स्वे स्वे ஸ்வே ஸ்வே *தத்தமக்குரிய* कर्मणि கர்மணி *கருமத்தில்* अभिरतः அபிரத: *இன்புறுகின்ற* नरः நர: *மனிதன்* संसिद्धिं ஸம்ஸித்திம் *நிறைநிலையை* लभते லபதே *அடைகிறான்* स्व कर्म निरतः ஸ்வ கர்ம நிரத: *தன் கருமத்தில் கருத்து வைப்பவன்* यथा யதா *எப்படி* सिद्धिं ஸித்திம் *பரிபூரணத்தன்மையை* विन्दति விந்ததி *அடைகிறான்* तत् தத் *அதை* शृणु ச்ருணு *கேள்.*

***அவனவனுக்குரிய கருமத்தில் களிப்புறும் மனிதன் நிறைநிலையெய்துகிறான். தன் கருமத்தில் கருத்து வைப்பவன் எப்படி நிறைநிலை யடைகிறான் என்பதைச் சொல்லக்கேள். 45***

பயிற்சியால் எந்தக் கருமத்துக்குத் தகுதியுடையவனாக மனிதன் தன்னைச் செய்து கொள்கிறானோ அது அவனுடைய ஸ்வகர்மமாகிறது. ஸ்வதர்மம் என்பதும் அதுவே. ஸ்வகர்மத்தை மகிழ்வுடனும் ஊக்கத்துடனும் செய்பவன் நல்ல ஆத்ம சாதகன் ஆகிறான். அர்ஜுனனுக்குத் தன் ஸ்வதர்மத்தில் வெறுப்பு ஏற்பட்டது சிறிய மனப்பான்மை

யின் விளைவு அன்று. தாற்காலிகமாகத் தோன்றிய மனக் குழப்பமே அதற்குக் காரணமாயிற்று. பள்ளியில் படிக்கும் மாணுக்கன் ஒருவன் தனது வகுப்பிலும் பாடத்திலும் மகிழ்வு கொள்ளுதல் வேண்டும். தன் கருமத்தில் களிப்புறுபவனே முன்னேற்றமடைகிறுன். படிப்புப் பூர்த்தியாவதற்குப் பள்ளிப்பிள்ளை மேல் வகுப்புக்குப் போவது அவசியம். மற்று ஆத்ம சாதகன் பரிபக்குவம் அடைதற்கு ஸ்வகருமத்தை மாற்றவேண்டிய அவசியமில்லை. தோட்டிவேலைசெய்கிற ஒருவன் அவ்வேலையில் மகிழ்வுறுதல் வேண்டும். வேலையில் மேலானது என்பதும் கீழானது என்பதும் கிடையாது. மனத்தகத்து உள்ள மாசு ஆனது கருமத்தில் மாசு படிந்திருப்பது போன்று காட்சி கொடுக்கிறது. எத்தொழிலைச் செய்தாலும் நல்ல பாங்குடன் அதைச் செய்தால் மன பரிபாகமடையலாம். அதன் விவரம் வருமாறு:—

**यतः प्रवृत्तिर्भूतानां येन सर्वमिदं ततम् ।**
**स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः ॥ ४६**

யத: ப்ரவ்ருத்திர்பூதாஞம் யேன ஸர்வமிதம் ததம் ।
ஸ்வகர்மணு தமப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மானவ: ॥ 46

यतः யத: *யாரிடத்திருந்து* भूतानां பூதாஞம் *உயிர்களுக்கு* प्रवृत्तिः ப்ரவ்ருத்தி: *உற்பத்தி* येन யேன *யாரால்* इदं सर्वं இதம் ஸர்வம் *இந்தப் பிரபஞ்சம் எல்லாம்* ततं ததம் *வியாபிக்கப்பட்டிருக்கிறதோ* मानवः மானவ: *மனிதன்* स्वकर्मणा ஸ்வகர்மணு *ஸ்வகருமத்தால்* तं தம் *அவரை* अभ्यर्च्य அப்யர்ச்ய *அர்ச்சித்து* सिद्धिं ஸித்திம் *சித்தியை* विन्दति விந்ததி *அடைகிறன்.*

***யாரிடத்திருந்து உயிர்கள் உற்பத்தியாயினவோ, யாரால் இவ்வையகமெல்லாம் வியாபிக்கப் பட்டுள்ளதோ அவ் ஈசுவரனை சுயகருமத்தால் வணங்கி மனிதன் மேன்மையெய்துகிறுன். 46***

இப் பிரபஞ்சத்தை முறையாக இயக்குவது ஈசனுடைய செயல். இதில் பயன்படாத உயிர் என்பது ஒன்று

யில்லை. ஒவ்வொரு ஜீவனும் அவனவன் தொழிலை முறையாகச் செய்வதன் மூலம் பிரகிருதியின் நடைமுறைக்கு நன்கு துணைபுரிகிறான். ஆகையால் அறிவுடைய மனிதன் தான் எக்கருமத்தை நன்கு செய்யமுடியுமோ அதை ஈசுவர ஆராதனையாகச் செய்ய வேண்டும். அதன்மூலம் அவன் மனபரிபாகம் அடைகிறான். ஞானத்தைப் பெறுதற்கும் ஈசுவரனை அடைதற்கும் அக் கருமம் சாதனமாகிறது.

ஈசுவர ஆராதனை வேறு, அவரவர் தொழில் புரிவது வேறு என்று பலர் எண்ணியிருக்கின்றனர். கடவுள் வழிபாட்டின் தத்துவம் அறியாதவரே அத்தகைய எண்ணம் கொள்ளுவர். செய்கிற ஒவ்வொரு வேலையும் தேகத்துக்கு வலிவு கொடுக்கிறது என்பதை நாம் காண்கிறோம். தேகப் பயிற்சியையும் பொருள் சம்பாத்தியத்தையும் ஒரே தொழிலில் அடக்குவது சாத்தியம். இனி, அதே தொழிலை தேவாராதனையாகச் செய்யவும் முடியும். வியாதன் ஒருவன் கசாப்புக்கடை வைத்து ஜீவனம் பண்ணினான். அதே தொழில் அவனுக்கு சமுதாய சேவையும் ஆயிற்று, தேவாராதனையும் ஆயிற்று. அவன் பரம ஞானியானான். அவன் ஒரு துறவிக்குச் செய்த உபதேசம் வியாதகீதை என்னும் பெயர் பெற்றுள்ளது. வயிற்றுப் பிழைப்புக்கு என்பதை அடியோடு மறந்துவிட்டு ஈசுவர ஆராதனையென்றே கருதி ஒருவன் தன் தொழில் புரியலாம். அத்தகைய உணர்ச்சியின் வாயிலாக அவனது தொழில் அதிவிரைவில் அவனை ஈசனிடம் அழைத்துச் செல்கிறது. உலக வாழ்வே யோகிக்குக் கடவுள் வழிபாடாக வடிவெடுத்துவிடுகிறது.

தென்னை நெற்று ஒன்றில் தேங்காய், ஓடு, மட்டை முதலியன இருக்கின்றன. தேங்காயை உண்ண மட்டையை உரித்து ஓட்டை உடைக்க வேண்டும். ஸ்வகர்மத்தை தேவாராதனையாகச்செய்வது மட்டையை உரித்து ஓட்டை உடைப்பதற்கு ஒப்பாகும். அதனால் தெய்வம் என்னும் தேங்காய் நமக்குரியதாகிறது.

श्रेयान्स्वधर्मो विगुणः परधर्मात्स्वनुष्ठितात् ।
स्वभावनियतं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम् ॥ ४७

ச்ரேயான் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத் ஸ்வனுஷ்டிதாத் ।
ஸ்வபாவநியதம் கர்ம குர்வந்நாப்னோதி கில்பிஷம் ॥ 47

विगुणः விகுண: *நற்குணமில்லாத* स्वधर्मः ஸ்வதர்ம: *ஸ்வதர்மமானது* सु अनुष्ठितात् ஸு அனுஷ்டிதாத் *நன்கு அனுஷ்டிக்கப்படுகின்ற* परधर्मात् பரதர்மாத் *பரதர்மத்தைக்காட்டிலும்* श्रेयान् ச்ரேயான் *சிறந்தது* स्वभाव नियतं ஸ்வபாவ நியதம் *சுபாவத்திலமைந்த* कर्म கர்ம *கர்மத்தை* कुर्वन् குர்வன் *செய்கிறவன்* किल्बिषं கில்பிஷம் *கேட்டை* न आप्नोति ந ஆப்னோதி *அடைகிறானில்லை.*

***நிறைவாயனுஷ்டிக்கும் பரதர்மத்தை விடக் குறைவாயனுஷ்டிக்கும் ஸ்வதர்மம் சிறந்தது. சுபாவத்திலமைந்த கருமத்தைச் செய்பவன் கேடு அடையான்.*** ***47***

*சுபாவத்திலமைந்த கருமமே ஸ்வதர்மம் அல்லது தனக்கு உவந்த தொழில் எனப்படுகிறது. அர்ஜுனனுக்கு நன்றாகப் போர்புரிய முடியாவிட்டாலும் யுத்த நெருக்கடியில் அவன் போர் புரிவதே உசிதம். அதர்மிஷ்டர்கள் சமூகத்துக்குக் கேடு செய்துகொண்டிருக்கையில் தான் வனத்துக்குச் சென்று நன்கு தவம் புரிவது ஒவ்வாது. போக்கிரிகளை எதிர்த்துப் போராடி மாய்வது மேல்.*

*வைத்தியத்தில் பயிற்சி பெற்ற ஒருவன் தனக்கு வாக்கு வன்மையிருக்கிறதென்று வழக்கறிஞனாக மாறமுடியலாகாது. விருப்பத்தாலோ அல்லது வெறுப்பினாலோ தூண்டப்பெற்று ஒருவன் தன் தொழிலை மாற்றலாகாது. அதனால் காலமும் ஆற்றலும் வீணாக்கப்படுகின்றன. குறைந்த முயற்சியில் பரந்த காரியத்தைச் சாதிப்பவன் நல்ல யோகியாகிறான். உலக வாழ்க்கையை வெற்றிகரமாக முடிப்பதும் ஈசனுடைய அருளுக்குப் பாத்திரமாவதும் யோகிக்குக் குறிக்கோள். எந்த நகையை வேண்டுமானாலும்*

பொன்னுக மாற்றலாம். பொன்னுக்கும் விஷயத்தில் பாதி வேலையை ஒரு நகையிலும் மற்ற பகுதியை இன்னொரு நகையிலும் செய்யலாகாது. பொருள் நஷ்டம், அறிவின்மை ஆகிய இரண்டும் ஆங்குப் புலப்படும். எக்கருமத்தை முறையாகச் செய்தாலும் அது கடவுள் வழிபாடாகிறது. தனக்கு வாய்த்த கருமத்தையே விடாதுசெய்வதால் ஸ்திரபுத்தி ஏற்படுகிறது. ஸ்திரபுத்தியில்லாதவன் யோகியாகமுடியாது. அப்படியானல் பொல்லாங்கு நிறைந்த போர்க்களத்துக் கென்று தன்னை ஆயத்தப்படுத்தியவன் அதை வேண்டாமென்று விலக்கிவிட்டுத் தூய்மை திகழும் தவச் செயலில் துணியலாகாதா என்ற கேள்வி பிறக்கலாம். அதற்கு விடை வருகிறது :—

**सहजं कर्म कौन्तेय सदोषमपि न त्यजेत् ।**
**सर्वारम्भा हि दोषेण धूमेनाग्निरिवावृताः ॥ ४८**

ஸஹஜம் கர்ம கௌந்தேய ஸதோஷமபி ந த்யஜேத் ।
ஸர்வாரம்பா ஹி தோஷேண தூமேனக்னிரிவாவ்ருதா꞉ ॥ 48

कौन्तेय கௌந்தேய *குந்தியின் மைந்தா* सदोषं अपि ஸதோஷம் அபி *தோஷத்தோடு கூடியது எனினும்* सहजं कर्म ஸஹஜம் கர்ம *உடன்பிறந்த கருமத்தை* न त्यजेत् ந த்யஜேத் *ஒருவன் துறக்கலாகாது* हि ஹி *ஏனென்றால்* अग्निः धूमेन इव அக்னி꞉ தூமேன இவ *அக்கினி புகையால் சூழ்ந்திருப்பது போன்று* सर्वे आरंभाः ஸர்வ ஆரம்பா꞉ *எல்லாக் கருமங்களும்* दोषेण தோஷேண *தோஷத்தால்* आवृताः ஆவ்ருதா꞉ *சூழப் பட்டுள்ளன.*

***குந்தியின் மைந்தா, கேடுடையதெனினும் உடன்பிறந்த கருமத்தை விட்டுவிடலாகாது. ஏனென்றால் தீயைப் புகை சூழ்வது போன்று வினைகளையெல்லாம் கேடு சூழ்ந்துள்ளது.*** ***48***

விருப்பு வெறுப்பு இன்றி நடுவு நின்று ஆராய்பவனுக்கு இப்பேருண்மை விளங்கும். அதாவது கேடு இல்லாத கருமம் இப்பிரபஞ்சத்தில் எங்குமில்லை. சுவாசிக்கி

றோம்; அதனால் காற்றிலுள்ள அணுப்போன்ற உயிர்கள் மடிகின்றன. உண்கிறோம், மற்றொருவருக்கு அவ்வுணவு இல்லாது போய்விடுகிறது. கருவி கரணங்களை ஒடுக்கித் தவம் புரிகிறோம். பிறர் உழைப்பால் வளர்ந்த நம் உடல் பிறருக்கு உழையாது போகிறது. ஆக, தீங்கு இல்லாத கருமம் இயற்கையில் இல்லை. அப்படியானால் நல்வினை தீவினை யென்று பிறகு ஏன் பாகுபடுத்துகிறோம்? தீவினை யகற்றி நல்வினையை நன்கு இயற்றுக என்று சான்றோர் சாற்றியிருப்பது எதற்காக என்ற கேள்வி யெழலாம். விறகுக்கட்டை எரிகிறது, எந்த விறகில் அதிகம் புகையிருக் கிறதோ அது கெட்ட விறகு. எதில் புகை குறைந்திருக் கிறதோ அது நல்ல விறகு. ஒரு சந்தர்ப்பத்தில் அதிக நலத் தையும் குறைந்த கேட்டையும் உண்டுபண்ணும் ஒரு வினை யானது மற்றொரு சந்தர்ப்பத்தில் மிகையான கேட்டையும் குறைந்த நலத்தையும் விளைவிக்கலாம். காலத்துக்கும், இடத்துக்கும், சந்தர்ப்பத்துக்கும் ஏற்றவாறு ஒரு வினையில் அமைந்துள்ள நலமோ, கேடோ மாறுபாடு அடைகிறது. வினைப்பயனை விரும்புபவர் இவைகளை யெல்லாம் தூக்கி வினைசெய்கிறார்கள். யோகியின் இயல்பு மிக உயர்ந்தது. தனக்கு அமைந்த கடமையை அவன் தேவ ஆராதனையாகச் செய்கிறான். வழிப்போக்கன் ஒருவன் ஒரு சத்திரத்தில் கிடைத்த விறகைக் கொண்டு சமைத்துப் புசித்துவிட்டுப் புறப்படுகிறான். நல்ல விறகு கிடைக்கவில்லை யென்று ஆங்கு அவன் காத்திருக்கமாட்டான். யோகி ஒருவன் எடுத்த உடல் எக்கருமத்துக்குத் தகுதியானதோ அக் கருமத்தை தேவ ஆராதனையாகச் செய்து முடித்துவிடுகிறான். தேகம் தாங்கியுள்ள ஒவ்வொருவனும் ஏதேனும் ஒரு கருமம் செய்தே ஆகவேண்டும். ஆகையால் தன் இயல்புக்கு ஒத்த கர்மம் எதோ அதைச் செய்வது முறை.

தனக்கு அமைந்த கர்மத்தை எப்படிச் செய்வது என்பது இனி விளக்கப்படுகிறது:—

असक्तबुद्धिः सर्वत्र जितात्मा विगतस्पृहः ।
नैष्कर्म्यसिद्धिं परमां संन्यासेनाधिगच्छति ॥ ४९

அஸக்த புத்தி: ஸர்வத்ர ஜிதாத்மா விகதஸ்ப்ருஹ: ।
நைஷ்கர்ம்யஸித்திம் பரமாம் ஸன்யாஸேனுதிகச்சதி ॥ 49

सर्वत्र ஸர்வத்ர *எங்கும்* असक्त बुद्धिः அஸக்த புத்தி: *பற்றற்ற புத்தியுடையவனுய்* जितात्मा ஜிதாத்மா *சிந்தையை யடக்கியவனுய்* विगत स्पृहः விகத ஸ்ப்ருஹ: *ஆசையற்றவனுய்* संन्यासेन ஸன்யாஸேன *சன்னியாசத்தால்* परमां பரமாம் *மேலான* नैष्कर्म्य सिद्धिं நைஷ்கர்ம்ய ஸித்திம் *நைஷ்கர்ம்ய சித்தியை* अधिगच्छति அதிகச்சதி *அடைகிறுன.*

***யாண்டும் பற்றற்ற புத்தியுடையவனுய், சிந்தையை யடக்கியவனுய், ஆசையற்றவனுயிருப்பவன் சன்னியாசத்தால் உத்தமமான நைஷ்கர்ம்ய சித்தியை யடைகிருன். 49***

*கருமயோகி ஒருவன் ஓயாது வினையாற்றுகிருன். ஓய்வு ஒழிவை அவன் அறிந்தவன் அல்லன். அவனைப் பார்ப்பவர் கண்ணுக்கு அவன் இத்தகைய காட்சி கொடுக்கிருன். மற்று மனத்தகத்து அவனுடைய பாங்கு எத்தகையது என்று பார்க்க வேண்டும். எந்த இடத்தையாவது தேசத்தையாவது தனக்குச் சொந்தமானதென்று அவன் அபிமானிப்பதில்லை. ஊரெல்லாம் அவனுக்குச் சொந்தமெனலாம், அல்லது ஓர் ஊரும் இல்லான் எனலாம். பொருள்கள் பல அவனுல் கையாளப்படுகின்றன. அவைகள் வந்ததும் போனதும் அவனுடைய மனதில் ஒரு விகாரத்தையும் உண்டுபண்ணவில்லை. பாலத்தில் ஒருபுறம் நீர் வருகிறது; மற்ருெரு புறம் அது வடிகிறது; நீரில் பற்றற்றுப் பாலம் இருக்கிறது. பொருளில் யோகியின் மனது அங்ஙனம் பற்றற்று இருக்கிறது. மக்களுள் எத்தனை பேர் தன்னைச் சார்ந்திருக்கின்றனர், உதாசீனராயிருப்பவர் யார், பகைகொள்பவர் யார் என்றெல்லாம் அவன் எண்ணுவதில்லை. பற்றற்ற புத்தியின் பாங்கு இதுவாம். கடலில்*

அலைகள் தோன்றுவது போன்று சிந்தையில் ஓயாது எண்ணங்கள் உதிப்பது இயல்பு. திரைகடல் போன்றது உலகத்தவர் உள்ளம். யோகியின் உள்ளமோ தேங்கித் திரையற்ற கடல்போன்றது. சிந்தையை அடக்கிச் சும்மா இருப்பவன் என்று அவனை இயம்பவேண்டும். போகத்துக்கு உரிய பொருள்களை ஏராளமாகச் சிறு குழந்தையின் முன்னிலையில் கொண்டுவரலாம். அவைகளைப் போகவஸ்து என்று குழந்தை பொருள்படுத்துவதில்லை. யோகியின் மனநிலையும் அப்படிப்பட்டது. ஏனென்றால் அவன் ஆசையற்றவன். நிராசையின் நேர்மை அத்தகையது. அது போன்ற பாங்குடையவன் சன்னியாசியாகிறான். ஏனென்றால் கர்மாதீதத்திலுள்ள பிரம்மத்தில் அவன் நிலை பெற்றவனாகிறான். நைஷ்கர்ம சித்தி அல்லது வினையொழிந்த பெருநிலை யென்பதும் பரபிரம்மம் என்பதும் ஒன்றேயாம்.

**सिद्धिं प्राप्तो यथा ब्रह्म तथाप्नोति निबोध मे ।**
**समासेनैव कौन्तेय निष्ठा ज्ञानस्य या परा ॥ ५०**

ஸித்திம் ப்ராப்தோ யதா ப்ரஹ்ம ததாப்னோதி நிபோத மே ।
ஸமாஸேனைவ கௌந்தேய நிஷ்டா ஞானஸ்ய யா பரா ॥ 50

कौन्तेय கௌந்தேய *குந்தியின் மகனே* सिद्धिं प्राप्तः ஸித்திம் ப்ராப்த: *சித்தியை அடைந்தவன்* यथा யதா *எப்படி* ज्ञानस्य या परा निष्ठा ஞானஸ்ய யா பரா நிஷ்டா *ஞானத்தின் மேலாம் முடிவாகிய* ब्रह्म ப்ரஹ்ம *பிரம்மத்தை* आप्नोति ஆப்னோதி *அடைகிறானோ* तथा ததா *அவ்வகையை* समासेन ஸமாஸேன *சுருக்கமாக* मे மே *என்னிடம்* निबोध நிபோத *அறிந்துகொள்.*

***குந்தியின் மகனே, சித்தியடைந்தவன் ஞானத்தின் உயர்நிலையாகிய பிரம்மத்தை எப்படி யெய்துகிறான் என்பதைச் சுருக்கமாக என்னிடம் அறிந்துகொள். 50***

*சித்தியடைதல் என்பது பக்குவப்படுதல் என்று பொருள்படுகிறது. பக்குவப்படுத்துதல் இயற்கையின் இடை*

யருத் தொழில் ஆகிறது. சேதனம் அசேதனம் ஆகிய எல்லாப் பொருள்களும் ஓயாது பண்படுத்துக்கொண்டு வருகின்றன. பூமியில் ஆழத்தில் புதையுண்டு கிடக்கும் அடுப்புக்கரியானது நாளடைவில் வைரமாக மாறுகிறது. பளபளப்புடைய ஆபரணமாகி அது காதை அலங்கரித்துக் கொண்டிருக்கும் காட்சியைக் கண்டுகளிக்கிறோம். அத்தகைய பரிபாகம் அடைதற்கு அது எத்தனை ஆயிரம் ஆண்டுகள் எடுத்துக்கொண்டது என்பதை நாம் எண்ணிப்பார்ப்பதில்லை. சுவை நிறைந்த ஆப்பிள் கனியொன்றை உண்டு மகிழ்வடைகிறோம். அது அடைந்துள்ள சித்தியானது நமக்கு ஆனந்தத்தை ஊட்டுகிறது. மகிழ்வடையும் நாம் சித்தியின் பொருட்டு ஆப்பிள்செடி எடுத்துக்கொண்ட முயற்சியை எண்ணிப்பார்ப்பதில்லை. வெயிலும், மழையும், பனியும், நீரும், நிலமும், காற்றும் அதன் பண்பாட்டுக்குத் துணை புரிந்திருக்கின்றன. ஒவ்வோர் உயிரும் அதனதன் நிலையில் சித்தியடைய முயன்று வருகிறது.

எல்லா உயிர்களின் முயற்சிகளுக்கிடையில் மனிதனது முயற்சி மிக மேலானது. மற்றவைகளின் சித்தி ஸ்தூல வடிவத்தில் அமைகிறது. ஸ்தூல வடிவத்தோடு அழிந்தும் போகிறது. மனிதனுடைய பரிபாகம் மனத்தகத்தில் அமைகிறது. ஒரு மனிதனைப்போன்று இன்னொரு மனிதன் இருப்பதில்லை எத்தனை மனிதரோ அத்தனைவித மன பரிபாகம் எனலாம். பல ஜன்மாந்தரங்களில் அது வந்து அமைகிறது.

யோக சாதனங்கள் எல்லாம் மனதை ஒழுங்குபடுத்துதற்கென்றே அமைந்துள்ளன. திண்ணிய மனதையுடையவனே சித்தன். பிறகு அம்மனிதன் பரஞானத்தைப் பெறுதலும் பரத்தை அடைதலும் எளிதில் கைகூடுகின்றன. ஆகையால் அதை விஸ்தரித்து விளக்கவேண்டியதில்லை. சுருக்கமாகச் சொன்னால் போதுமானது.

बुद्ध्या विशुद्धया युक्तो धृत्यात्मानं नियम्य च ।
शब्दादीन्विषयांस्त्यक्त्वा रागद्वेषौ व्युदस्य च ॥ ५१

புத்யா விசுத்தயா யுக்தோ த்ருத்யாத்மானம் நியம்ய ச ।
சப்தாதீன் விஷயான்ஸ்த்யக்த்வா ராகத்வேஷௌ வ்யுதஸ்ய ச ॥

विशुद्धया बुद्धया युक्तः விசுத்தயா புத்யா யுக்த: *பரிசுத்தமான புத்தியுடன் கூடியவன்* धृत्या த்ருத்யா *உறுதியுடன்* आत्मानं ஆத்மானம் *உடலையும் உள்ளத்தையும்* नियम्य च நியம்ய ச *அடக்கியும்* शब्दादीन् विषयान् சப்தாதீன் விஷயான் *சப்தம் முதலிய இந்திரிய விஷயங்களை* त्यक्त्वा த்யக்த்வா *துறந்தும்* रागद्वेषौ ராகத்வேஷௌ *ராகதுவேஷத்தை* व्युदस्य च வ்யுதஸ்ய ச *விட்டொழித்தும்;*

***தூய அறிவுடன் கூடியவன் உறுதியுடன் தன்னையடக்கியும், சப்தம் முதலிய இந்திரிய விஷயங்களைத் துறந்தும், விருப்பு வெறுப்பை விட்டொ 51***

*சுத்தியடைந்துள்ள ஒரு பொருளில் அதற்கு அன்னியமானது ஒன்றும் இருக்கலாகாது. சுத்த ஜலம் என்று சொல்லுமிடத்து அது ஜலவாயுவும் பிராணவாயுவும் சேர்ந்து உண்டானது. வேறு எப்பொருளுக்கும் அதில் கலந்திருக்க இடமில்லை. பரிசுத்தமான புத்தி எது என்பது கேள்வி. தூய கண்ணாடி போன்றது அது. நீலக்கண்ணாடியில் மஞ்சள் வஸ்துவைப் பார்த்தால் அது பச்சை நிறமுடையது போன்று தென்படும். நிறமில்லாத தூய கண்ணாடியில் பார்த்தால் மஞ்சள் மஞ்சளாகவே தோன்றும். புத்தியின்கண் உள்ள கலக்கம் அதை அழுக்குப்படுத்திவிடுகிறது. கோணலான புத்தியில் காணப்படுபொருளும் குற்றமுடையதாகத் தென்படும். சுத்தியடைந்த புத்தியானது ஐயமும் திரிவும் நீங்கப்பெற்றுள்ளது. இறைவனைப் பற்றிய நினைவு அதனிடத்து இடையறாது நிலைத்திருக்கும். உறுதியுடன் உடலையும் உள்ளத்தையும் அடக்கி ஆளுபவன் மேலோன் ஆகிறான். மிகைப்பட்ட பொருள்களை ஆத்ம சாதகன் தனக்கென்று வைத்துக் கொள்வதில்லை. உடல் வாழ்க்கைக்கு இன்றியமையாத உணவுப் பொருள், உடை முதலியவைகளைத் தவிர வேறு ஆடம்பரமான பொருள்களை அவனி*

டத்துக் காணமுடியாது. அப் பொருள்களிடத்தும் அவன் விருப்பு வெறுப்பு அற்றவனாக இருக்கிறான். அடக்கமும் எளிய வாழ்வும் வடிவெடுத்தவன் ஆகிறான் அவன். மேலும் :—

**विविक्तसेवी लघ्वाशी यतवाक्कायमानसः ।**
**ध्यानयोगपरो नित्यं वैराग्यं समुपाश्रितः ॥ ५२**

விவிக்தஸேவீ லக்வாசீ யதவாக்காயமானஸ: ।
த்யானயோகபரோ நித்யம் வைராக்யம் ஸமுபாச்ரித: ॥ 52

विविक्त सेवी விவிக்த ஸேவீ *தனித்திருப்பவனாய்* लघु आशी லகு ஆசீ *குறைத்து உண்பவனாய்* यत वाक् काय मानसः யத வாக் காய மானஸ: *வாக்கு காயம் மனதை அடக்கியவனாய்* नित्यं நித்யம் *எப்பொழுதும்* ध्यानयोगपरः த்யானயோகபர: *தியான யோகத்தில் விருப்புள்ளவனாய்* वैराग्यं வைராக்யம் *வைராக்கியத்தை* समुपाश्रितः ஸமுபாச்ரித: *அடைந்தவனாய்;*

***தனித்திருந்து, உண்டி சுருங்கி, மனம் மொழி மெய்யை யடக்கி, யாண்டும் தியான யோகத்தில் திளைத்திருந்து, வைராக்கியம் பூண்டவனாய்; 52***

*விஷயப் பற்றுடன் கூடிய லௌகிக புத்தியுடைய ஒருவன் பலபேருடன் சேர்ந்திருந்து காலங்கழிக்க விரும்புகிறான். பேச்சுக்கு ஆள் இல்லாவிட்டால் பைத்தியம் பிடித்தவன் போன்று அவன் ஆய்விடுகிறான். யோகிக்கோ தனித்திருக்குமளவு பெருமகிழ்ச்சி யுண்டாகிறது. புதிதாகத் தனித்திருந்து பழகுபவனுக்கு மனதைப் பரிசீலனை பண்ண இயலுகிறது. உணவு உடலைப் பேணுவது போன்று ஏகாந்தம் மன பரிபாகத்துக்குப் பயன்படுகிறது. சாதனத்தில் முதிர்ந்தவன் தனித்திருக்கும்போது ஆத்ம போதத்தில் திளைத்திருக்கிறான். மிகைப்பட்ட உணவு உடலுக்குச் சுமையாகிறது; சோம்பலையும் உண்டுபண்ணுகிறது. குறைபட்ட உணவு பலவீனத்தில் கொண்டு சேர்க்கும். அளவுடன் உண்பவன் யோகியாகிறான். மனதில் தெளிவும் உட*

லில் ஊக்கமும் அதனால் உண்டாகின்றன. யோகியின் ஆணைக்கு உட்பட்ட சித்த விருத்திகளே அவனுடைய உள்ளத்தில் உண்டாகின்றன. மனது அடங்கியிருப்பதற்கு அது அறிகுறியாகும். அவன் மிகைபடப் பேசான். பயன்படாத புன்மொழிகள் அவன் வாயினின்று வர மாட்டா. மொழியை அடக்கியதன் பயன் அதுவாம். நல்ல சாதகனது உடல் யாண்டும் அசைவற்றிருக்கும். அனாவசியமாக அது இயங்காது. ஆத்ம சொரூபத்தில் மனது மகிழ்ந்து குவிந்திருப்பது தியானமாகிறது. உலக வியவகாரம் பண்ணுவது சாதாரண மனிதனுக்கு எவ்வளவு இயல்பானதோ அவ்வளவு இயல்பானது அவனுக்குத் தியானம் பண்ணுவது. வைராக்கியம் என்பது பற்றின்மை. இம்மையிலும் மறுமையிலும் உள்ள விஷய இன்பங்களில் பற்று வைக்காதிருப்பது யோகத்துக்கு உற்ற உபாயம்.

**अहङ्कारं बलं दर्पं कामं क्रोधं परिग्रहम् ।**
**विमुच्य निर्ममः शान्तो ब्रह्मभूयाय कल्पते ॥ ५३**

அஹங்காரம் பலம் தர்ப்பம் காமம் க்ரோதம் பரிக்ரஹம் ।
விமுச்ய நிர்மம: சாந்தோ ப்ரஹ்ம பூயாய கல்பதே ॥ 53

अहंकारं அஹங்காரம் *அகங்காரத்தையும்* बलं பலம் *ஆசையின் வலிவையும்* दर्पं தர்ப்பம் *செருக்கையும்* कामं காமம் *காமத்தையும்* क्रोधं க்ரோதம் *குரோதத்தையும்* परिग्रहं பரிக்ரஹம் *உடைமையையும்* विमुच्य விமுச்ய *நீத்துவிட்டு* निर्ममः நிர்மம: *மமகாரமற்று* शान्तः சாந்த: *சாந்தமாயிருப்பவன்* ब्रह्मभूयाय ப்ரஹ்மபூயாய *பிரம்மமாவதற்கு* कल्पते கல்பதே *தகுதியுடையவனாகிறான்.*

***அகங்காரம், வன்மை, செருக்கு, காமம், குரோதம், உடைமை ஆகியவைகளை நீத்து மமகாரமற்று சாந்தமாயிருப்பவன் பிரம்மமாதற்குத் தகுந்தவன். 53***

மனிதன் வேறு, அவன் அணிந்திருக்கும் உடை வேறு. உடையைத் தன் சொரூபமாக எண்ணி இன்பமும் துன்பமும் அடைவார் உண்டு. அது ஒருவிதமான அகங்

காரம். ஜன்மாந்தரங்களில் தனக்கு வந்தமையும் எண்ணிறந்த தேகங்களைத் தான் என்று அபிமானித்தல் பிறவிக்கு ஏதுவான அகங்காரமாகும். ஆத்ம போதத்தில் வளரும் வன்மை அல்லது பலம் வேண்டப்படுகிறது. அத்தகைய பலமில்லாதவன் ஆத்மாவை அடையமாட்டான். பின்பு ஆசைக்கு ஒருவிதமான பலம் உண்டு. அதை ஆசையின் வேகம் என்று சொல்லுகிறோம். ஆசையின் வேகம் கெட வேண்டும். காமங்களை நிறைவேற்றுதற்கு வருவிக்கப்படும் பலம் வேண்டப்படுவதன்று. தனக்கு உடல் வலிவு மிகவும் அமைந்திருக்கிறதென்று மகிழ்ந்து ஒருவன் அதர்மத்தில் ஈடுபடுவதுண்டு. அத்தகைய இயல்பு செருக்கு என்னும் பெயர் பெறுகிறது. குற்றங்கள் பல செய்வதற்கு சிலர்க்கு உடல் வலிவே முதற்காரணமாகிறது. இந்திரிய விஷயங்களில் வைத்துள்ள ஆசைக்குக் காமம் என்று பெயர். காமத்துக்கு இடைஞ்சல் பண்ணுகிறவனிடத்து சினம் வருகிறது. க்ரோதம் என்பது இதுவே. உடல் வாழ்க்கைக்குப் பொருள் தேவை. ஆனால் நான் பொருள் படைத்தவன் என்ற எண்ணம் உதவாது. ஆத்ம சாதனத்துக்கும் தர்மானுஷ்டானத்துக்கும் அது இடைஞ்சலாய் வந்தமைகிறது. பொருள் படைத்தவன் என்ற பாங்கு பரிக்கிரஹமெனப்படுகிறது. வாழ்க்கைக்கு இன்றியமையாததும் எளிதில் அகப்படுவதுமாகிய பொருளை யோகி ஒருவன் உடைத்திருக்க வேண்டும். பின்பு அதைத் தன்னுடையதென்று அவன் கருதலாகாது. தன்னுடையதென்று கருதாத மனப்பான்மையே நிர்மமகார மெனப்படுகிறது. இந்தக் கோட்பாடுகளெல்லாம் யாரிடத்து அமைந்திருக்கின்றனவோ அம்மனிதன் சாந்தியடைகிறான். அவனுக்கு மனத்தெளிவு இயல்பாக உண்டாகிறது. அதனால் அவன் பிரம்மத்தை யடையத் தகுந்தவனாகிறான். அது எப்படியெனில் :—

**ब्रह्मभूतः प्रसन्नात्मा न शोचति न काङ्क्षति ।**
**समः सर्वेषु भूतेषु मद्भक्तिं लभते पराम् ॥ ५४**

ப்ரஹ்மபூத: ப்ரஸன்னத்மா ந சோசதி ந காங்க்ஷதி ।
ஸம: ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதே பராம் ॥ 54

ब्रह्मभूतः ப்ரஹ்மபூத: *பிரம்மஞானத்தில் உறுதிபெற்று* प्रसन्न आत्मा ப்ரஸன்ன ஆத்மா *தெளிந்த மனமுடையவனுகி* न शोचति ந சோசதி *துயருறுகிறனில்லை* न काङ्क्षति ந காங்க்ஷதி *அவாவுறுகிறனில்லை* सर्वेषु भूतेषु ஸர்வேஷு பூதேஷு *எல்லா உயிர்களிடத்தும்* समः ஸம: *சமமாயிருப்பவன்* परां मद्भक्तिं பராம் மத்பக்திம் *என்னிடத்து மேலாம் பக்தியை* लभते லபதே *அடைகிறன்.*

***பிரம்ம மயமாகித் தெளிந்த மனமுடையவன் துயருறுவதில்லை, அவாவுறுவதில்லை; எல்லா உயிர்களிடத்தும் சமனுயிருப்பவன் என் மீது மேலாம் பக்தி பெறுகிருன்.*** **54**

*ஞானம் பெரியதா, பக்தி பெரியதா என்னும் கேள்வி பலர் உள்ளத்தில் எழுகிறது. சிலர் ஞானம் பெரியது என்பர்; இன்னும் சிலர் பக்தி பெரியது என்பர். அப்படியெல்லாம் பகர்வது அவரவர் மனப்பான்மையை விளக்குகிறது. முதிர்ந்த நிலையில் பக்தியும் ஞானமும் ஒன்றே. குழந்தை ஒன்றுக்குத் தாயினிடத்து அன்பு பெருக்கெடுத்திருக்கிறது. தாயும் தன் குழந்தையினிடத்து ஆழ்ந்த அன்பு காட்டுகிருள். பக்தியின் தோற்றம் இருவரிடத்திலும் காண்கிரும். இதில் ஞானம் எங்கே இருக்கிறது என்னும் கேள்வி எழலாம். குழந்தை தாய்க்குரியது; தாயே அக்குழந்தையாக வடிவெடுத்திருக்கிருள் என்ற ஞானம் அதில் மறைமுகமாயிருக்கிறது.*

*ஒரு பணக்காரனிடம் எத்தனையோ யாசகர்கள் வந்துகொண்டிருந்தார்கள். வந்தவர்களை யார் என்று கவனியாது அம் மனிதன் தானம் செய்துகொண்டிருந்தான். ஒரு நாள் தோன்றிய வயிராகிகள் கூட்டத்தில் இருந்த பதினைந்து வயது இளைஞன் அப் பணக்காரனுடைய மனதைச் சிறிது கவர்ந்தான். அவ் இளைஞனது இடது கன்னத்தில் இருந்த தழும்பும் முகச்சாயலும் ஆராய்ச்சிக்கு உரியவைக*

ளாயின. பிரக்ஞை கெட்டு ஆற்றங்கரையில் கிடந்த குழந்தையைத் தாங்கள் எடுத்து வளர்த்ததாக வயிராகிகள் சொன்னார்கள். பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்பு படகு விபத்து ஒன்றில் தான் இழந்துவிட்ட குழந்தை இப்பொழுது அகப்பட்டான்! விசாரித்து உண்மையைத் தெரிந்தவுடன் தந்தையின் மனதில் அன்பு சுரந்தது. ஞானத்தினின்று அன்பு தோன்றுவதற்கு இது சான்று ஆகும். ஆக, ஞானமுள்ள இடத்தில் பக்தியிருப்பதும் பக்தியுள்ள இடத்தில் ஞானம் இருப்பதும் இயல்பு. பிரம்ம ஞானத்தில் உறுதி பெறுகின்றவனுக்கு ஈசுவர பக்தி மேலிடுகிறது. தன்னையும் மன்னுயிர்கள் எல்லாவற்றையும் ஒரே பாங்குடன் அவன் காண்கிறான். ஏனென்றால் எல்லா உயிர்களும் ஈசுவரனுடைய பல்வேறு தோற்றங்கள் என்பது அவனுக்கு நன்கு விளங்குகிறது. தனக்கு ஏதாவது நஷ்டம் வந்துவிட்டதென்று அவன் துயரப்படுவதுமில்லை; தான் அடையவேண்டிய பொருளை இன்னும் அடையவில்லை என்று அவாவுறுவதுமில்லை. ஏழாம் அத்தியாயம் பதினேழாவது சுலோகத்தில் பகர்ந்த மேலாம் பக்தி ஈண்டு குறிப்பிடப்படுகிறது.

**भक्त्या मामभिजानाति यावान्यश्चास्मि तत्त्वतः ।**
**ततो मां तत्त्वतो ज्ञात्वा विशते तदनन्तरम् ॥ ५५**

பக்த்யா மாமபிஜாநாதி யாவான்யஸ்சாஸ்மி தத்வத: ।
ததோ மாம் தத்வதோ ஞாத்வா விசதே ததனந்தரம் ॥ 55

यावान् यः च अस्मि யாவான் ய: ச அஸ்மி *எத்தன்மையனாகவும் யாராகவும் நான் இருக்கிறேன் என்று* मां மாம் *என்னை* भक्त्या பக்த்யா *பக்தியினால்* तत्त्वतः தத்வத: *உள்ளபடி* अभिजानाति அபிஜாநாதி *அறிகிறான்* ततः தத: *அதன் பிறகு* मां மாம் *என்னை* तत्त्वतः தத்வத: *உள்ளபடி* ज्ञात्वा ஞாத்வா *அறிந்து* तदनन्तरं ததனந்தரம் *விரைவில்* मां மாம் *என்னிடம்* विशते விசதே *பிரவேசிக்கிறான்.*

***நான் எத்தன்மையன், யார் என்று பக்தியினால் ஒருவன் என்னை உள்ளபடி அறிகிறான்; உள்ளபடி அறிந்தபின் விரைவில் என்னை அடைகிறான்.***

ஆகாததை ஆக்குவிப்பது அன்பு அல்லது பக்தி. தெரியாததைத் தெரிவிப்பதும் அதே அன்பு. டாக்டர் ஒருவர் வெறும் நோயை ஆராய்ச்சி பண்ணுவதைவிட நோயாளியிடம் அன்பு கொள்ளுவாராகில், அந்த அன்பால் நோயாளியின் வருத்தத்தை உள்ளபடி அறிகிறார். பின்பு அது நோயையே உள்ளபடி அறிந்ததாகும். அன்பின் மூலம் எதை அறிந்தாலும் அது உண்மையான அறிவாகிறது.

பகவானிடத்து பக்தி பண்ணுபவர் அவரை நன்கு அறிகின்றனர். அவரை அறியுமளவு பக்தி அதிகரிக்கிறது. ஞானத்தோடு கூடிய பக்தி மிகச் சிறந்தது. அவரே சகுண பிரம்மமாகவும் நிர்க்குண பிரம்மமாகவும் இருக்கிறார் என்பது பக்தனுக்கு விளங்குகிறது. உலகெல்லாம் அவரிடத்திருந்து வந்தது. தனக்கும் தன் தலைவனுக்கும் உள்ள தொடர்பு தெரியும்போது பக்தன் பகவானுக்கு உரியவன் ஆய்விடுகிறான். உண்மையை அறிந்த அக்கணமே பக்தன் பகவானை அடைந்தவன் ஆகிறான்.

ஜீவாத்மாவால் பரமாத்மாவுடன் இரண்டறக் கலக்க முடியும். அப்போதுதான் ஒருவன் "அவனே நான்" என்று உணர்ந்து சொல்லக் கூடும். ஒரு வீட்டில் நெடுநாளாக வேலை செய்து வந்த வேலைக்காரன் ஒருவன், காலக்கிரமத்தில் அவ்வீட்டார்களுள் ஒருவனாகவே பாவிக்கப் படலாம். வீட்டு எஜமானன் இவனுடைய வேலைத்திறமையைக் கண்டு மகிழ்ந்து, ஒரு நாள் அவனைத் தன்னுடைய ஆசனத்தில் உட்காரச் செய்து தன்னைச் சுற்றியுள்ளவர்களை நோக்கி " இந்த க்ஷணமுதல் இவனுக்கும் எனக்கும் யாதொரு வித்தியாசமுமில்லை. நானும் இவனும் ஒன்று. எனது கட்டளைக்குக் கீழ்ப்படிவதைப் போல இவனுடைய கட்டளைக்கும் நீங்கள் கீழ்ப்படிய வேண்டும். இல்லாவிட்டால் தண்டிப்பேன்" என்று சொல்லலாம். அப்போது அந்த வேலைக்காரன் சங்கோசத்தினால் இந்தப் புதிய கௌரவத்தைக் காட்டிக்கொள்ளத் தயங்கலாமானாலும், எஜமானன் அவனைக் கட்டாயப்படுத்தி கௌரவ ஸ்தானத்தில் வைப்பான். ஈசுவரனை நெடுங்காலம் வழிபட்டு அவனுடன் ஐக்கியமான தன்மையை உணர்ந்த ஜீவன்களுடைய நிலைமையும் இப்படிப்பட்டதுதான். ஈசுவரன் தன்னுடைய மஹிமையையும் குணங்களையும் இவர்களுக்கு அருளி, இவர்களைத் தனது ஒப்பற்ற ஸ்தானத்துக்கு உயர்த்துகிறான்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

सर्वकर्माण्यपि सदा कुर्वाणो मद्व्यपाश्रयः ।
मत्प्रसादादवाप्नोति शाश्वतं पदमव्ययम् ॥ ५६

ஸர்வகர்மாண்யபி ஸதா குர்வாணோ மத்வ்யபாச்ரய: ।
மத்ப்ரஸாதாதவாப்னோதி சாச்வதம் பதமவ்யயம் ॥ 56

सदा ஸதா *எப்பொழுதும்* सर्वकर्माणि ஸர்வகர்மாணி *எல்லாக் கர்மங்களையும்* कुर्वाणः अपि குர்வாண: அபி *செய்தபோதிலும்* मद्व्यपाश्रयः மத்வ்யபாச்ரய: *என்னைச் சரணடைகிறவன்* मत्प्रसादात् மத்ப்ரஸாதாத் *எனது அனுக்கிரகத்தினால்* शाश्वतं சாச்வதம் *நித்தியமாயிருப்பதும்* अव्ययं அவ்யயம் *நிலைபேறுடையதும் ஆகிய* पदं பதம் *பதத்தை* अवाप्नोति அவாப்னோதி *அடைகிறான்.*

***எப்பொழுதும் எல்லாக் கர்மங்களையும் செய்தபோதிலும் என்னைச்சரணடைகிறவன் எனதருளால் சாசுவதமானதும் அழியாததுமாகிய பதமடைகிறான்.*** **56**

*முடிந்த நிலையில் எப்படி ஞானமும்பக்தியும் ஒன்றோ அதே விதத்தில் முடிந்த நிலையில் ஞானமும் கர்மமும் ஒன்றாய் விடுகின்றன. சத்வகுணத்தில் நிலைத்திருப்பவன் கருமத்தைத் தியாகம் பண்ணுவதில்லை; கருமத்துக்குத் தான் கர்த்தா என்ற எண்ணத்தைத் தியாகம் செய்கிறான். தான் கர்த்தா என்ற எண்ணம் போய்விடும்பொழுது அத்துடன் ஜீவ போதமும் போய்விடுகிறது. தன்னைக் கர்த்தாவென்று எண்ணிக்கொள்ளாது ஏராளமாகக் கர்மம் செய்பவனுக்கு ஆயாசம் வருவதில்லை. தன்னைக் கர்த்தாவென்று எண்ணிக் கொள்பவனுக்கு விரைவில் ஆயாசம் வருகிறது. அவன் சிறிது வினையாற்றினாலும் அது ஏராளமானதாகத் தோன்றும். மன நிலையே அதற்குக் காரணம். ஈசுவரனுக்காகக் கர்மம் செய்பவன் ஈசுவரனை நினைக்கிறான், தன்னை நினைப்பதில்லை. ஈசுவர நினைவில் தன்னை மறந்துவிடுபவன் சரணடைந்தவன் ஆகிறான். கடலைச் சென்று அடையும் வரையில் நதிக்குச் சொந்த வியக்தியிருக்கிறது; சொந்தச் செயலும்*

இருக்கிறது. கடலினுள் நுழைந்த பிறகு நதி என்ற பெயர் போய்விடுகிறது. கடலில் இருக்கிற நீரோட்டத்தில் நதியும் கலந்து கொள்ளலாம். ஆயினும் அச்செயல் யாவும் கடலி னுடையது; நதியினுடையதன்று. ஈசுவரனிடம் அடைக்கலம் புகுந்த ஜீவனது பாங்கு அத்தகையது. சரீரம் என்ற வடிவம் இருக்கிறது எனினும் அதனுள் இருக்கிற உணர்ச்சி முற்றிலும் பரபோதமாம். அச்சரீரத்தில் நிகழ்கின்ற கிருத்தியங்கள் எல்லாம் ஈசன் செயலேயாம். அங்ஙனம் விதவிதமான செயல்கள் நிகழலாம். போர் புரிவதுபோன்ற பயங்கரமான செயல் நடைபெறலாம். அக்கருமங்களைச் சொந்தம் பாராட்டுதற்கு ஜீவபோதம் மிச்சமில்லை. நிலைத்த நித்தியமான பரபோதம் ஜீவனால் அடையப் பெற்றதாகிறது.

கர்மம் செய்தலே வாழ்க்கையின் முடிவன்று; அது மார்க்கமே பற்றுதலற்றுச் செய்யப்படுமானால் அது வாழ்க்கையின் முடிவாகிய இறைவனிடம் அழைத்துச் செல்லுகிறது. மார்க்கத்தையே முடிவென்று மருள் கொள்ளவேண்டாம். ஓர் ஊருக்குச் செல்லும் வழி ஊராகிவிடாது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஆகையால் நீ வாழ வேண்டிய விதமாவது :—

**चेतसा सर्वकर्माणि मयि संन्यस्य मत्परः ।**
**बुद्धियोगमुपाश्रित्य मच्चित्तः सततं भव ॥ ५७**

சேதஸா ஸர்வகர்மாணி மயி ஸன்யஸ்ய மத்பர: ।
புத்தியோகமுபாச்ரித்ய மச்சித்த: ஸததம் பவ ॥ 57

चेतसा சேதஸா *விவேகத்தால்* सर्वकर्माणि ஸர்வகர்மாணி *எல்லாக்கர்மங்களையும்* मयि மயி *என்னிடத்து* संन्यस्य ஸன்யஸ்ய *ஸமர்ப்பித்து* मत्परः மத்பர: *என்னைக்குறியாகக்கொண்டு* बुद्धियोगं புத்தியோகம் *புத்தியோகத்தை* उपाश्रित्य உபாச்ரித்ய *சார்ந்திருந்து* सततं ஸததம் *எப்பொழுதும்* मच्चित्तः மச்சித்த: *சித்தத்தை என்பால் வைத்தவனாக* भव பவ *ஆகக்கடவாய்.*

***விவேகத்தால் கர்மங்களையெல்லாம் என்பால் ஒப்படைத்து, என்னைக் குறியாகக் கொண்டு, புத்தி***

**யோகத்தைச் சார்ந்திருந்து, யாண்டும் சித்தத்தை என்பால் வைப்பாயாக. 57**

ஒரு மனிதனை ஒரு அரசாங்க உத்தியோகத்தில் வைத்தால் அந்த அரசாங்கத்துக்குரிய ஆதிக்கம் அவனிடத்துச் சிறிது வருகிறது. தன் கடமையை முறையாகச் செய்துகொண்டு போனால் இன்னும் அதிகமான பொறுப்பும் ஆதிக்கமும் அவனுக்கு வரும். அந்த உத்தியோகஸ்தன் சமூகத்தில் ஆணை செலுத்துதற்கிடையில் அப்பதவியில் தனக்குச் சொந்தமானது ஒன்றுமில்லையென்றும் எல்லாம் அரசாங்கத்தினுடையதென்றும் அறிவானாகில் அவன் தனது பதவியைப்பற்றிய புத்தியோகம் பெற்றவன் ஆகின்றான். அதைத் தனது என்று சொந்தம் பாராட்டுவானாகில் அவன் விவேகத்தைப் பெற்றவன் ஆகான். அதேபாங்கில் ஜீவாத்மாவுக்கு ஏற்பட்டிருக்கும் வியக்தியைப் பற்றிய உண்மையை ஜீவன் அறிவானானால் அவன் புத்தியோகம் பெற்றவன் ஆகின்றான். தான் என்பதற்கு இலக்காகத் தன்னிடத்து இருப்பது யாது என்று அவன் ஆராய்ந்து பார்க்க வேண்டும். தனது என்பதற்கு இலக்காக இருப்பது எது என்று அடுத்தபடியாக விசாரித்துப் பார்க்க வேண்டும். கருமத்தையும் அதே பாங்கில் துருவிப்பார்ப்பது அவசியம். தான் என்பதும், தனது என்பதும், தன் செயல் என்பதும் உண்மையில் இல்லை.

புத்தியோகத்தைச் சார்ந்திருப்பவன் இங்கு பகவான் இடுகின்ற ஆணைகளையெல்லாம் அப்படியே நிறைவேற்றி வைப்பான். காயத்தால் அவன் கருமங்களை விட்டொழிக்க மாட்டான். விவேகத்தின் துணைகொண்டு கருமத்தில் வைத்த பற்றுதலையே ஒழித்துவிடுவான். சர்வேசுவரனுடைய கிருத்தியமே யாண்டும் நிகழ்கிறது. எந்த ஜீவன் அதற்குக் கருவியாயிருந்தாலும் இல்லாவிட்டாலும் இறைவன் செயல் நின்றுவிடாது. ஈசுவரன் செயலை ஈசுவரனுக்காகச் செய்வது சன்னியாசமாகிறது. பரம்பொருளில்

ஒடுங்குவதைத் தவிர ஜீவாத்மாவுக்கு வேறு ஒரு அலுவலும் கிடையாது, அதற்காகத் தனது முழு மனதையும் பரம்பொருளினிடத்து நாட்டிவிடவேண்டும்.

*பகவானைக் காணும் பாக்கியம் உனக்குக் கிடைத்தால் நீ அவரிடம் என்ன கேட்பாய்? வைத்திய சாலைகள், குளங்கள், பாடசாலைகள், அன்ன சத்திரங்கள் - இவைகள் வேண்டுமென்று இறைஞ்சுவாயா? இவைகளெல்லாம் நாம் கடவுளைக் காணும் வரையில் நமக்கு உண்மையாகத்தோன்றும். ஆனால் கடவுளை நேருக்கு நேர் கண்டதும் இவையனைத்தும் நிலையில்லாதனவாகக் கனவில் காணப்படுவன போலத் தோன்றும். ஆகையால் அவனிடம் அன்பு வேண்டியும், அறிவு வேண்டியும் பிரார்த்திப்போம். அவனிடம் அன்பு செலுத்துவதால் மனிதத் தன்மையிலிருந்து நாம் தெய்வத்தன்மைக்கு உயர்த்தப்படுவோம். அவ்வன்பு, பராபர வஸ்துவும், அறிவு ஆனந்தத்திற்கு உறைவிடமுமான பகவானது உரிமைப் புதல்வர்களென்ற நம்பிக்கையை நம்மிடம் எழச் செய்கிறது.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*புத்தியோகத்தால் விளையும் நலன் எதுவெனின்:—*

**मच्चित्तः सर्वदुर्गाणि मत्प्रसादात्तरिष्यसि ।**
**अथ चेत्त्वमहङ्कारान्न श्रोष्यसि विनङ्क्ष्यसि ॥ ५८**

மச்சித்த: ஸர்வதுர்க்காணி மத்ப்ரஸாதாத்தரிஷ்யஸி ।
அத சேத் த்வமஹங்காராந்ந ச்ரோஷ்யஸி விநங்க்ஷ்யஸி ॥ 58

त्वं த்வம் *நீ* मच्चित्तः மச்சித்த: *சித்தத்தை என்பால் வைத்து* मत्प्रसादात् மத்ப்ரஸாதாத் *எனது அனுக்கிரகத்தால்* सर्वदुर्गाणि ஸர்வதுர்க்காணி *எல்லா இடைஞ்சல்களையும்* तरिष्यसि தரிஷ்யஸி *தாண்டிச் செல்வாய்* अथ அத *அன்றி* अहंकारात् அஹங்காராத் *அகங்காரத்தால்* न श्रोष्यसि चेत् ந ச்ரோஷ்யஸி சேத் *நீ கேளாவிட்டால்* विनंक्ष्यसि விநங்க்ஷ்யஸி *அழிவடைவாய்.*

***சித்தத்தை என்பால் வைத்து எனதருளால் இடைஞ்சல்களை யெல்லாம் தாண்டிச் செல்வாய். அன்றி அஹங்காரத்தால் கேளாவிட்டால் கேடு அடைவாய். 58***

உலக வைபவத்தில் இரண்டு பகுதிகள் உண்டு. ஒன்று புறவுலகம், மற்றது அகவுலகம். விக்கினங்களும்

இடைஞ்சல்களும் வெளியுலகிலும் உண்டு, அகவுலகமாகிய மனதிலும் உண்டு. வெளியுலகைத் திருத்தியமைக்கின்றோம். நோய் வரக்கூடிய இடத்தை நோயற்ற இடமாக்கலாம். நீர் இல்லாத இடத்துக்கு நீர் கொண்டு வரலாம். வெப்பம் நிறைந்த இடத்தில் வெப்பத்தைக் குறைக்கலாம். இப்படியெல்லாம் செய்வது புறவுலகில் உள்ள விக்கினங்களை அகற்றுவதாகும். நவீன பௌதிக சாஸ்திரத்தின் துணைகொண்டு அச்செயல் ஏராளமாகச் செய்யப்படுகிறது. ஆனால் அதனாலேயே உலகுக்கு இன்பம் வந்துவிடாது. வெளியுலகைத் திருத்தியமைப்பதைவிட முக்கியமானது அகவுலகமாகிய மனதைத் திருத்தியமைப்பது. மனதைத் திருத்தியமைக்கத் தெரியாதவனுக்குப்புறவுலகம் எவ்வளவு நல்லதாயிருந்தாலும் அது இன்பம் தராது. புறவுலகம் எவ்வளவு கெட்டதாயிருந்தாலும், மனதைத் திருத்தியமைத்துக் கொண்டவனுக்கு அது கேடு செய்யாது.

இடைஞ்சல்களும் விக்கினங்களும் வெளியுலகிலில்லை. மனிதனுடைய மனநிலையில்தான் இருக்கிறது. மனதை ஈசன்பால் வைத்தவர்களுக்கு உலகம் தரும் இடைஞ்சல்களும் ஈசன் செயலாகவே தோன்றும். அதற்குச் சிறந்த சான்று அப்பரது வாழ்க்கையில் திகழ்கிறது. வந்த விக்கினங்களைக் குறித்து அவர் பகர்ந்ததாவது :—

நாமார்க்குங் குடி அல்லோம்; நமனை அஞ்சோம்;
நரகத்தில் இடர்ப்படோம்; நடலையில்லோம்;
ஏமாப்போம், பிணி அறியோம்; பணிவோம் அல்லோம்;
இன்பமே எந்நாளும் துன்பமில்லை;
தாமார்க்கும் குடியல்லாத் தன்மையான சங்கரன் நற்
சங்க வெண் குழை ஓர் காதில்
கோமாற்கே நாம் என்றும் மீளா ஆளாய்க்
கொய்ம் மலர்ச் சேவடி இணையே குறுகினோமே.

ஆனால் எல்லாத் துன்பங்களும் அஹங்காரத்தினின்றே வருகின்றன.

என்னதான் முயன்றாலும் ஈசுவரனுடைய கிருபைமட்டும் இல்லாது போனால் உனக்கு ஒன்றும் லபிக்காது. நீ ஈசுவரனை அடைய

*மாட்டாய். ஆனால் இந்தக் கிருபை எளிதில் கிடைத்துவிடும் என்று நம்பாதே. உனது ஹிருதயத்திலிருந்து அகங்காரம் முழுவதும் நீங்க வேண்டும். "நான் கர்த்தா" என்ற எண்ணம் உன் மனத்திலிருந்தால் நீ ஒருபோதும் ஈசுவரனைக் காணமாட்டாய். "நானே கர்த்தா" வென்று எவன் நினைக்கிறானோ அவன் உள்ளத்தில் ஈசுவரன் ஒருபோதும் தோன்றுவதில்லை.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*அகங்காரத்தால் விளையும் கேடு யாது? விடை வருகிறது:—*

**यदहङ्कारमाश्रित्य न योत्स्य इति मन्यसे ।**
**मिथ्यैष व्यवसायस्ते प्रकृतिस्त्वां नियोक्ष्यति ॥ ५९**

யதஹங்காரமாச்ரித்ய ந யோத்ஸ்ய இதி மன்யஸே ।
மித்யைஷ வ்யவஸாயஸ்தே ப்ரக்ருதிஸ்த்வாம் நியோக்ஷ்யதி ॥

अहंकारं அஹங்காரம் *அஹங்காரத்தை* आश्रित्य ஆச்ரித்ய *அடைந்து* न योत्स्ये ந யோத்ஸ்யே *போர்புரியேன்* इति இதி *என்று* मन्यसे यत् மன்யஸே யத் *நினைப்பாயாகில்* ते தே *உன்னுடைய* एष व्यवसायः யேஷ வ்யவஸாய: *இந்தத் துணிவானது* मिथ्या மித்யா *பொய்* प्रकृतिः ப்ரக்ருதி: *உன் இயல்பு* त्वां த்வாம் *உன்னை* नियोक्ष्यति நியோக்ஷ்யதி *பிணித்திழுக்கும்*

***அஹங்காரங்கொண்டு போர்புரியேனென்று நினைப்பாயாகில் உன் துணிவு வீணாகும். உன் இயல்பே உன்னைப் போரில் பிணித்துவிடும். 59***

*கைக்குழந்தை ஒன்றின் முன்னிலையில் கொலையும், களவும், சூதும் நிகழ்கின்றன. கொலை புரிவதைப் பார்த்துக் குழந்தை சிரித்துக் கொண்டிருக்கலாம். ஏனென்றால் அதனிடத்து இன்னும் அஹங்காரம் தோற்றத்துக்கு வரவில்லை. பெரியவனாக வளர்ந்தபின் வியாபகத்துக்கு வரக்கூடிய அவனுடைய சுபாவமும் இப்பொழுது குழந்தைப் பருவத்தில் தோன்றா நிலையில் இருக்கிறது. கொலையையும், களவையும், சூதையும் குழந்தை ஏன் எதிர்த்துப் போராடவில்லை என்ற கேள்வியை நாம் கேட்க முடியாது. அகங்*

காரம் அடையப்பெருத குழந்தையின் காட்சியில் அக் கொடிய செயல்கள் இல்லே. ஆனால் கொடுமையை உலகில் காண்பவர்களின் கடமை வேறு. குழந்தை போன்று தாங் கள் ஆய்விட்டதாக அவர்கள் பாசாங்கு செய்யலாகாது. அர்ஜுனனுக்கு பகவான் பகர்வதாவது :—

இன்றுவரை நீ பெற்றுள்ள பண்பும் பயிற்சியும் க்ஷத்திரிய சுபாவத்துக்கு ஒத்தது. தீமையை எதிர்த்துப் போராடும் பாங்குடையவன் நீ. தீமை தாண்டவமாடுவ தைப் பார்த்துக்கொண்டு நீ சும்மாவிருக்க முடியுமா? தூங் கும் பொழுது நம் உடலைக் கொசுக் கடித்தால் நம் கை தானே கொசுவை அடித்து ஓட்டுகிறது. அங்ஙனம் உன் சுபாவமே போருக்கு எழுந்து நிற்கும். அதற்கு மாருகத் தீர்மானிப்பது உன் ஆத்ம சக்தியைக் கெடுப்பதாகும். எண்ணமும் செயலும் மாறுபடுவதைவிட ஒரு மனிதனுக் குக் கேடு வேறு ஒன்றுமில்லை.

தீமையைக் களைந்தாகவேண்டும் என்ற எண்ணம் உன் உள்ளத்தில் கொதித்துக் கொண்டிருக்கிறது. ஆயினும் காயத்தால் செயல் புரிய மாட்டேன் என்று உன் இயல் பைக் கரக்கின்ருய். ரஜோகுணத்தில் உதித்த பயன்படாத அகங்காரம் அது. அதன் வசப்பட்டு வீணுக்குத் தீர்மானிக் காதே.

அஹங்காரம் இருக்கும் வரையில் ஞானமும் முக்தியும் கைகூடா. ஜனன மரணமும் நீங்கா.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

மேலும் :—

**स्वभावजेन कौन्तेय निबद्धः स्वेन कर्मणा ।**
**कर्तुं नेच्छसि यन्मोहात्करिष्यस्यवशोऽपि तत् ।। ६०**

**ஸ்வபாவஜேன கௌந்தேய நிபத்த: ஸ்வேன கர்மணு ।**
**கர்த்தும் நேச்சஸி யன்மோஹாத்கரிஷ்யஸ்யவசோऽபி தத் ॥ 60**

कौन्तेय கௌந்தேய *குந்தியின் மகனே* मोहात् மோஹாத் *மோகத்திஞல்* यत् யத் *எதை* कर्तुं கர்த்தும் *செய்ய* न ந இச்சஸி இச்சஸி

*நீ இச்சிக்கிறதில்லையோ* स्वभावजेन स्वेन कर्मणा ஸ்வபாவஜேன ஸ்வேன கர்மணு *சுபாவத்தில் பிறந்த சொந்தக் கர்மத்தால்* निबद्धः நிபத்த: *கட்டுண்டவனுய்* अवशः அவச: *உன்வசமில்லாதவனுய்* तत् अपि தத் அபி *அதையே* करिष्यसि கரிஷ்யஸி *செய்வாய்.*

***குந்தியின் மைந்தா, மயக்கத்தால் எதைச் செய்ய மறுக்கிருயோ, உன் இயல்பில் பிறந்த வினையினுல் கட்டுண்டு, உன்வசமிழந்தவனுய், அதையே நீ செய்வாய். 60***

ஒவ்வொரு மனிதனிடத்திலும் அவனது இயல்பு அல்லது சுபாவம் உள்ளூற உறைந்து கிடக்கிறது. அதன் வேகம் எத்தகையது என்பதற்குச் சான்று ஒன்று எடுத்துக் கொள்ளலாம். ஒரு கொடிய நோயைப் போக்குதற்கு ஒரு வன்மருந்து உண்ணவேண்டியது அவசியமாயிற்று. மருத்துவனும் அதற்கேற்ற மருந்தைக் கொடுத்தான். பிறகு அதற்குப் பத்தியம் எத்தகையது என்ற கேள்வி எழுந்தது. நோயாளி மருந்து உண்ணும்போது குரங்கைப்பற்றி நினைக்கலாகாது என்ற நிபந்தனை ஏற்பட்டது. அதுதான் பத்தியம். அது மிக எளியது என்று நோயாளி எண்ணிக்கொண்டு பத்தியத்துக்கு உட்பட இசைந்தான். காலையில் மருந்து ஜாடியைக் கையில் எடுத்தபொழுதெல்லாம் குரங்கைப்பற்றிய எண்ணம் முன்வந்து நின்றது. பத்திய நிபந்தனையை நிறைவேற்ற அவனுல் இயலவில்லை! எண்ணத்துக்கு எவ்வளவு வலிவோ அதைவிட அதிகம் வலிவுண்டு இயல்பில் பிறந்த வினைக்கு.

மற்றொரு சான்றும் இங்குத் தேவையாகிறது. பிறரைத் தாக்கித் துன்புறுத்தும் ஒருவன் தானே அடியுண்ண விரும்புவதில்லை. அத்தகையவன் பிறரால் தாக்கப்படுவது போன்று கனவு கண்டான். கனவில் அவனுடைய நிலைமை அனுதாபத்துக்கு உரியதாயிருந்தது. உண்மையில் பிறர் யாரும் வந்து அவனைப் புடைக்கவில்லை. அவனது சுபாவத்தினின்று உதித்த சித்த விருத்தி அச்செயலை வரவழைத்துக்

*கொண்டது. கனவில் அடிபடுவதினின்று தப்பித்துக் கொள்ள அவனுக்குச் சுதந்திரம் இல்லை. தன் இயல்பில் பிறந்த வினையின் வன்மை அத்தகையது. சுவர்க்கத்துக்குச் சென்றாலும் நரகத்துக்குச் சென்றாலும் மனிதன் தன் இயல்பைத் தன்னுடன் எடுத்துச் செல்லுகிறான். தன் நிழல் எப்படித் தன்னை விட்டுப் பிரிவதில்லையோ, தன் சுபாவமும் அப்படியே தன்னைவிட்டுப் பிரிவதில்லை. அதிலிருந்து உதிக்கும் கருமத்தை அவன் செய்தே ஆகவேண்டும். பின்பு அதன் வேகத்தை முறையாகக் கையாளுதலே அதை ஒடுக்குதற்கு உற்ற உபாயமாகும்.*

*வெள்ளைப் பூண்டின் சாறு வைக்கப்பட்டிருந்த பாத்திரம் எத்தனைதரம் கழுவித் துடைக்கப்பட்ட போதிலும் நாற்றத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கும். அகங்காரமானது வெகு பிடிவாதமுள்ள அக்ஞானம். எவ்வளவுதான் சிரமப்பட்ட போதிலும் அதை முற்றிலும் போக்குவது முடியாத காரியம்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*வினையின் வேகத்தை முறையாகக் கையாளுதல் என்பதன் பொருள் யாது? விடை வருகிறது:—*

**ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति ।**
**भ्रामयन्सर्वभूतानि यन्त्रारूढानि मायया ॥ ६१**

ஈச்வர: ஸர்வபூதானாம் ஹ்ருத்தேசே$ர்ஜுன திஷ்டதி ।
ப்ராமயன் ஸர்வபூதானி யந்த்ராரூடானி மாயயா ॥ 61

**अर्जुन** அர்ஜுன *அர்ஜுனா* **ईश्वरः** ஈச்வர: *ஈசுவரன்* **मायया** மாயயா *மாயையினால்* **यन्त्र आरूढानि** யந்த்ர ஆரூடானி *யந்திரத்திலேற்றிய* **सर्वभूतानि** ஸர்வபூதானி *எல்லா உயிர்களையும்* **भ्रामयन्** ப்ராமயன் *ஆட்டிக்கொண்டு* **सर्वभूतानां** ஸர்வபூதானாம் *எல்லா உயிர்களினுடைய* **हृद्देशे** ஹ்ருத்தேசே *ஹிருதயத்தில்* **तिष्ठति** திஷ்டதி *நிற்கிறான்.*

***அர்ஜுனா, ஈசுவரன் உயிர்களை யெல்லாம் உடல் என்னும் யந்திரத்திலேற்றி மாயையினால் ஆட்டிக்கொண்டு அவைகளின் உள்ளத்திலிருக்கிறான்.*** ***61***

கிருஷ்ணனும் அர்ஜுனனும் போர்க்களத்துக்குவந்த கோலமே இக் கோட்பாட்டை விளக்குகிறது. ரதத்தின் மீது அர்ஜுனன் ஏறியிருந்தான். அந்த ரதம் உடலுக்கு சமானம்; அவன் ஜீவாத்மாவாகிறான். ரதமும் இயங்கியது, பார்த்தனும் போர் புரிந்தான். இயங்கியதைப்பற்றிய உணர்ச்சி ரதத்துக்கு இல்லை. சண்டை செய்ததைப்பற்றிய உணர்ச்சி அர்ஜுனனுக்கு இருந்தது. நிகழ்ந்தது தன் செயல் என்று எண்ணியிருந்த அப் போர்வீரன் அது உண்மையில் ஈசன் செயல் என்று அறிந்துகொள்ளக் கடமைப் பட்டிருந்தான். கிருஷ்ணன் தேர் ஓட்டினான்; ஆனால் ஆயுதம் எடுத்துப் போர் புரியவில்லை. அங்ஙனம் எல்லாருடைய ஹிருதய கமலத்தில் அவன் சாக்ஷியாக வீற்றிருக்கிறான்.

அர்ஜுனன் என்பது வெள்ளையானவன் அல்லது தூயவன் என்று பொருள்படுகிறது. தூய மனமுள்ளவன் உண்மையைத் தெரிந்துகொள்ள வல்லவனாகிறான். ஹிருதயத்தில் வீற்றிருக்கின்ற சர்வேசுவரனின் சன்னிதான விசேஷத்தால் மாயை இயங்குகிறது. இயங்குகின்ற மாயை அதன் வசப்பட்டிருக்கிறவர்களை யெல்லாம் இயக்குகிறது. சக்கரங்களில் கட்டுண்ட பொம்மைகள் போன்று அவர்கள் அசைகிறார்கள். அசைவைத் தங்கள் சொந்தக் கர்மமென்று அவிவேகிகள் எண்ணிக்கொண்டு இதைச் செய்வேன் என்றும், இதைச் செய்யமாட்டேனென்றும் இச்சா சுதந்திரம் பாராட்டுகிறார்கள். அதனால் மாயையில் அவர்கள் அதிகம் கட்டுண்கின்றனர். ஈசா, நீ ஆட்டுவிக்கும் விதத்தில் நான் ஆடுகிறேன் என்ற பாவனை வேண்டும். விதவிதமான கருவிகளைக்கொண்டு ஈசன் தன் செயலைச் செய்துகொள்கிறான் என்ற எண்ணத்துடன் கர்மம் செய்தலே அதை முறையாகக் கையாளுவதாகும்.

பாம்புக்குப் பல்லில் விஷமிருந்தபோதிலும், அவ் விஷத்தால் அது தீமையை அடைவதில்லை. ஆனால் அது பிறரைக் கடித்தால் அவ் விஷம் கடியுண்டவனுக்கு மரணத்தைத் தரும். இதைப்போல ஈசுவர

னிடத்திலும் மாயை உள்ளது. ஆனால் அது அவரைப் பந்தப்படுத்தாது. ஜகத் முழுதையும் தனக்கு உள்ளாக்கிக் கொண்டிருக்கிறார்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

கடவுள் ஆட்டுவிக்கிறார் என்ற கருத்தில் வரும் பயன் இனி விளக்கப்படுகிறது:—

**तमेव शरणं गच्छ सर्वभावेन भारत ।**
**तत्प्रसादात्परां शान्ति स्थानं प्राप्स्यसि शाश्वतम् ॥ ६२**

தமேவ சரணம் கச்ச ஸர்வபாவேன பாரத ।
தத் ப்ரஸாதாத்பராம் சாந்திம் ஸ்தானம் ப்ராப்ஸ்யஸி சாச்வதம் ॥ 62

भारत பாரத *பரதகுலத்துதித்தவனே* सर्वभावेन ஸர்வ பாவேன *எல்லாப் பாங்கிலும்* तं एव தம் ஏவ *அவனையே* शरणं गच्छ சரணம் கச்ச *சரணமடை* तत् प्रसादात् தத் ப்ரஸாதாத் *அவனுடைய கருணையால்* परां शान्ति பராம் சாந்திம் *மேலான சாந்தியையும்* शाश्वतं स्थानं சாச்வதம் ஸ்தானம் *நிலைத்த பதவியையும்* प्राप्स्यसि ப்ராப்ஸ்யஸி *அடைவாய்.*

***அர்ஜுனா, எல்லாப் பாங்கிலும் அவனையே தஞ்சமடை. அவனருளால் மேலாம் சாந்தியும் நிலைத்துள்ள வீடுபேறும் பெறுவாய். 62***

எல்லாப் பாங்கிலும் அவனையே தஞ்சமடைதல் ஜீவாத்மாவினது செயற்கரிய செயலாகும். உடலைத் தன்னுடையது என்று கருதுதல், தன் செயலுக்குத் தான் கர்த்தாவென்று நினைத்தல், உலக நடைமுறையில் தனக்குத் தனி யந்தஸ்து ஒன்று உண்டு என்று எண்ணுதல் இவையாவும் ஜீவபோதத்தை வளர்க்கின்றன. அது தஞ்சமாகாது. கடலில் அலை இருப்பது போன்று ஜீவாத்மாக்கள் பரமாத்மாவில் இருக்கின்றன. அலைக்குச் சொந்தமான நீர் கிடையாது. ஜீவனுக்குச் சொந்தமான சரீரம் கிடையாது. அலைக்கிருக்கின்ற வடிவம் வேளைக்கு ஒன்று. தேகத்துக்கு இருக்கிற வடிவமும் அத்தகையது. அலையின் செயலோ

உண்மையில் கடலின் செயல். கடலுக்கு அன்னியமாக அலை இருக்க முடியாது. ஜீவனுடைய செயல்களெல்லாம் உண்மையில் ஈசனுடைய செயல்கள். ஈசனுக்கு அன்னிய மாக ஜீவர்கள் இல்லை. இப் பேருணர்ச்சியில் நிலை பெற்றிருப்பது தஞ்சமாகும்.

பாண்டவர், விதுரர், திரௌபதி, குசேலர் முதலாயினோர் கிருஷ்ணனைத் தஞ்சமடைந்திருந்தனர். உடன்பிறந்த சகோதரர்கள் ராமனைத் தஞ்சமடைந்திருந்தனர். குகன், சுக்ரீவன், விபீஷணன் முதலாயினோர் அவனைத் தஞ்சமடைந்தனர். அங்ஙனம் அடைக்கலம் புகுந்தவர்க்கு மன அமைதி உடனே உண்டாயிற்று. கைகேயி, வாலி, ராவணன் முதலியவர்கள் அடைக்கலம் புகவில்லை; அவர்கள், பெருந் துன்பத்திற்கு ஆளாயினர்.

ஈசனுடைய அருள் என்னும் காற்று சதா வீசிக் கொண்டிருக்கிறது. தங்களை முற்றும் ஈசனிடம் ஒப்படைத்தவர்கள் அக்காற்றைப் பயன்படுத்தும் மாலுமிகளுக்குச் சமானமானவர்கள். காற்றைப் பயன்படுத்திக் கப்பலைச் செலுத்தும் மாலுமிக்குக் கஷ்டமில்லை. அருளைப் பயன்படுத்தும் அன்பனுக்கு அல்லல் இல்லை. அவன் கருமம் செய்வதற்கிடையில் கரும பந்தம் கலைகிறது. சாந்தியும் முக்தியும் அவனுக்கு வாய்க்கின்றன.

ஸ்ரீ ராதை தன் கற்பு நிலையை நிரூபிப்பதற்கு ஆயிரம் துவாரங்கள் உள்ள ஒரு பாத்திரத்தில் ஜலங்கொண்டு வரும்படி கட்டளையிடப்பட்டாள். ஒரு துளி ஜலங்கூடக் கீழே விழாமல் அவள் கொண்டுவந்தவுடன், அங்கிருந்தவர்கள் எல்லாரும் 'இவளைப்போல் கற்புடைய ஸ்திரீ ஒருத்தி இதுவரையில் இருந்ததுமில்லை, இனி இருக்கப்போவதுமில்லை' என்று வெகுவாகச் சிலாகித்தனர். அப்போது ராதை "ஏன் என்னை சிலாகிக்கிறீர்கள்? கீர்த்தியெல்லாம் கிருஷ்ணனுடையதே என்று சொல்லுங்கள், நான் கேவலம் அவனுடைய பணிப்பெண்" என்றாள்..

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

**इति ते ज्ञानमाख्यातं गुह्याद्गुह्यतरं मया ।**
**विमृश्यैतदशेषेण यथेच्छसि तथा कुरु ॥ ६३**

இதி தே ஞானமாக்யாதம் குஹ்யாத்குஹ்யதரம் மயா ।
விம்ருச்யைததசேஷேண யதேச்சஸி ததா குரு ॥ 63

इति இதி *இங்ஙனம்* गुह्यात् गुह्यतरं குஹ்யாத் குஹ்யதரம் *இரகசியங்களில் இரகசியமான* ज्ञानं ஞானம் *ஞானம்* ते தே *உனக்கு* मया மயா *என்னால்* आख्यातं ஆக்யாதம் *இயம்பப்பட்டது* एतत् ஏதத் *இதை* अशेषेण அசேஷேண *பாக்கியில்லாமல்* विमृश्य விம்ருச்ய *விமர்சனம் செய்து* यथा யதா *எப்படி* इच्छसि இச்சஸி *இச்சிக்கிறயோ* तथा ததா *அப்படி* कुरु குரு *செய்.*

***மறைபொருள்களுளெல்லாம் மறை பொருளாகிய ஞானம் இங்ஙனம் உனக்கு இயம்பப் பட்டது. இதை முழுதும் ஆராய்ந்து விரும்பியதைச் செய். 63***

*விளங்காத ஒன்றை இரகசியம் என்றும் மறை பொருள் என்றும் பகருகிறோம். இயற்கையின் உட்பொருள் முழுதும் நமக்கு விளங்குகிறதில்லை. அது ரகசியமாய் மறைந்து கிடக்கிறது. இயற்கையைப் பற்றி இப்பொழுது நாம் அறிந்துள்ள பல மர்மங்கள் பல்லாயிரம் ஆண்டுகளாக மறைந்திருந்தன. உதாரணம் ஒன்று எடுத்துக்கொள்வோம். மின்சக்தியை உண்டுபண்ணும் முறை இப்பொழுது நமக்குத் தெரிந்துவிட்டது. இயற்கையில் இதுகாறும் மறைந்து கிடந்த விசையானது இப்பொழுது வெளிப்படையாயிற்று. அந்த விசையின் தன்மை எத்தகையதென்றும், அதை எப்படி உண்டுபண்ணுவது என்றும், அதை எங்ஙனம் உபயோகப்படுத்தலாம் என்றும் புகட்டுவது சாஸ்திரம். விளங்காததை விளக்குவது சாஸ்திரம். இயற்கையைப் பற்றி அப்படி எண்ணிறந்த சாஸ்திரங்கள் இருக்கின்றன. மானுட வாழ்க்கையைப்பற்றிய சாஸ்திரமும் இருக்கிறது. அது பிரம்ம வித்தையென்றும் யோக சாஸ்திரம் என்றும் பெயர் பெற்றுள்ளது. அனுஷ்டான முறையில் சாஸ்திரம் நமக்கு அளிக்கப்படும்பொழுது அது உடன்பாட்டு முறையென்றும் எதிர்மறை முறையென்றும் இரண்டுவித வடிவெடுக்கிறது.*

இன்னதைச் செய் என்று ஆக்ஞாபிக்கும்பொழுது அது உடன்பாட்டு முறை. இன்னதைச் செய்யாதே என்று ஆக்ஞாபிக்கும்பொழுது அது எதிர்மறை முறை. ஏன் ஒருவிதத்தில் ஒழுகவேண்டும், ஏன் மற்றொருவிதத்தில் ஒழுகலாகாது என்று தக்க காரணங்களையும் அது எடுத்துப் போதிக்கிறது. யுக்தி பூர்வமாகப் புகட்டுவது சாஸ்திரம். குருட்டு நம்பிக்கையை சாஸ்திரம் ஆமோதிப்பதில்லை. குருட்டு நம்பிக்கையை விரைவில் கலைத்துவிடலாம். ஆனால் யுக்திக்கும் அனுபவத்துக்கும் ஒத்திருக்கும் கோட்பாட்டை யாரும் அசைக்க முடியாது.

மிக ஆழ்ந்தவைகளான வாழ்க்கைத் தத்துவங்களைக் கருணைகூர்ந்து கிருஷ்ணபகவான் அர்ஜுனனுக்கு எடுத்து வழங்கினார். அவர் புகட்டியவைகளை வேண்டியவாறு ஆராய்ச்சி செய்வதற்கான இச்சா சுதந்திரத்தையும் அவனுக்கு அவர் அன்புடன் அளித்தார். உண்மையானது எம் மனிதன் சொல்லுகிறான் என்பதை அடிப்படையாகக் கொண்டதல்ல. உண்மை தனக்குத்தானே சான்று ஆகிறது. உண்மையை நன்றாக அலசிஆராய்ந்து நீ விரும்பியதைச்செய் என்கிறார் பகவான். உடல் வளர்ச்சிக்கும், அறிவு வளர்ச்சிக்கும், ஆன்ம வளர்ச்சிக்கும் சுதந்திரம் முற்றிலும் அவசியமானது. அடிமைத் தனத்தில் அடக்கி வைக்கப்பட்ட உயிர் ஓங்கி வளராது. புகட்ட வேண்டிய யாவையும் சொல்லியான பிறகு அவைகளுள் விரும்பியதைச் செய் என்று கிருஷ்ணன் அனுமதி கொடுக்கிறார். சான்றோர் புகட்டும் செந்நெறியின் சிறப்பு இதுவேயாம்.

மனிதனுடைய முயற்சிகளெல்லாம் எதில் முற்றுப் பெறுகின்றன என்ற முடிவான உண்மையை இனி மூன்று சுலோகங்களில் பகவான் பகர்கின்றார் :—

सर्वगुह्यतमं भूयः शृणु मे परमं वचः ।
इष्टोऽसि मे दृढमिति ततो वक्ष्यामि ते हितम् ॥ ६४

ஸர்வகுஹ்யதமம் பூய: ச்ருணு மே பரமம் வச: ।
இஷ்டோऽஸி மே த்ருடமிதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம் ॥ 64

मे மே *என்னுடைய* सर्व गुह्यतमं ஸர்வ குஹ்யதமம் *எல்லாவற்றிலும் ஆழ்ந்த* परमं वचः பரமம் வச: *மேலாம் மொழியை* भूयः பூய: *திரும்பவும்* शृणु ச்ருணு *கேள்* मे மே *என்னுடைய* दृढं த்ருடம் *திடமான* इष्टः अस्ति இஷ்ட: அஸி *இஷ்டனுயிருக்கிறய்* ततः தத: *ஆகையினுல்* ते தே *உனக்கு* हितं ஹிதம் *நலத்தை* वक्ष्यामि வக்ஷ்யாமி *நவிலுகிறேன்.*

***அனைத்திலும் ஆழ்ந்த எனது மேலாம் மொழியை மீண்டும் கேள். நீ எனக்குற்ற நண்பனுகையினுல் உனக்கு நலத்தை நவிலுகிறேன். 64***

*நீருக்குள் மிக ஆழமான இடத்தில் எல்லாரும் மூழ்கிப்பார்க்க முடியாது. அதில் வல்லமை பெற்றவர்க்கே அது இயலும். இப்பொழுது பகவான் புகட்டுகிற கோட்பாடு மிகவும் ஆழ்ந்தது. ஏனென்றல் அது ஜீவனுக்குச் சிறப்பை அளிக்க வல்லது. சிரேயஸைப் பெறவேண்டும் என்று அர்ஜுனன் ஆரம்பத்தில் விண்ணப்பித்தான். அதைப் பெறுதற்கு உற்ற வழி இப்பொழுது புகட்டப்படுகிறது. அதைக் குறித்து அவர் பகரும் சொல்லானது – பரமம் வசனம் – மேலாம் மொழியாகிறது. மகாவாக்கியம் என்று அதை இயம்பலாம். வேதங்களில் உள்ள மகாவாக்கியங்கள் ஞானிகளால் நவிலப்பட்டவை. இது பரமாத்மாவானவர் தாமே பகரும் சொல்லாகிறது. ஏற்கனவே இயம்பிய கோட்பாட்டை முடிவுரையில் சித்தாந்தப்படுத்திவிடுகிறர்.*

*புறவுலகின் அமைப்புப் பலர்க்கு மறைபொருளாயிருப்பது போன்று மனத்தகத்து உள்ள தெய்விக மாண்பும் மறைபொருளாயிருக்கிறது. எல்லார் உள்ளத்திலும் உறைந்திருக்கும் நல்ல உறவு ஆகின்றன் இறைவன். உயிர்களை உய்விப்பதற்கென்றே அவனுடைய அருள் இயங்குகிறது. இயற்கையில் நிகழ்கின்ற நிகழ்ச்சிகள் அனைத்தும் முடிவில் அந்த ஒரு காரியத்தை நிறைவேற்றி விடுகின்றன.*

*ஒன்றுக்கும் உதவாத ஜீவனைத் தனக்கு உகந்தவனாக்கிப் பிறகு அவனைத்தெய்வம் தன்மையதாக்கிவிடுகிறது. இயற்கை யென்னும் பெரிய தொழிற்சாலையில் இந்த அற்புதமானது ஓயாது நிகழ்ந்துகொண்டிருக்கிறது. மக்கள் காலில் மிதியுண்டு ஒன்றுக்கும் உதவாத செத்தையாகப் போகக்கூடிய நாணல் ஒன்றைக் கண்ணன் கையில் எடுத்துப் புல்லாங்குழலாக மாற்றுகிறான். பிறகு அவன் அதில் உண்டுபண்ணும் கானமோ மண்ணுலகத்தவரை விண்ணுலகுக்குக் கொண்டுபோகவல்லது. ஜடப்பொருளில் அவன் செய்யும் ஜாலம் அத்தகையது. பிறகு சேதன வஸ்துவாகிய ஜீவனைத் தனக்குரியவன் என்று அவன் ஆட்கொள்கிறான். இனி, இதிலும் ஆழ்ந்ததொரு கருத்து இயற்கையின்கண் உளது. அது அடுத்த சுலோகத்தில் வருகிறது.*

*உண்மையான பக்தன் ஒருவன் ஈசுவரனை எவ்விதம் காண்கிறான்? பிருந்தாவனத்திலுள்ள கோபஸ்திரீகள் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவை ஜகந்நாதனாகக் காணாமல் அவர்களுடைய பிரிய கோபிநாதனாகவே கண்டதைப்போல, பக்தனும் ஈசுவரனைத் தனது நெருங்கிய பிரிய பந்துவாகவே காண்கிறான்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*பகவான் புகட்டும் நலந்தான் யாது? விடை வருகிறது :—*

**मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।**
**मामेवैष्यसि सत्यं ते प्रतिजाने प्रियोऽसि मे ।। ६५**

மன்மனா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு ।
மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜானே ப்ரியோऽஸி மே ॥

**मन्मनाः** மன்மனா: *என்னிடம் மனம் வைத்தவனாய்* **मद्भक्तः** மத்பக்த: *என்னிடம் பக்தி வைத்தவனாய்* **मद्याजी** மத்யாஜீ *என்னை ஆராதிப்பவனாய்* **भव** பவ *ஆவாய்* **मां** மாம் *என்னை* **नमस्कुरु** நமஸ்குரு *நமஸ்காரம் செய்* **मां एव** மாம் ஏவ *என்னையே* **एष्यसि** ஏஷ்யஸி *அடைவாய்* **अहं** அஹம் *நான்* **ते** தே *உனக்கு* **सत्यं** ஸத்யம் *உண்மையாக* **प्रतिजाने** ப்ரதிஜானே *பிரதிக்ஞை செய்கிறேன்* **मे** மே *எனக்கு* **प्रियः** ப்ரிய: *பிரியமானவனாக* **असि** அஸி *இருக்கிறாய்.*

**என்பால் மனம் வைத்து, என்னிடம் பக்தி பூண்டு என்னை ஆராதித்திடுவாய். என்னை வணங்கு, என்னையே அடைவாய். உனக்கு உறுதிகூறுகிறேன். எனக்கினியான் நீ. 65**

சத்தியம் சொல்லுகிறேன் என்று சத்தியப்பொருளாகிய பகவான் பகர்கிறார். சூரியனிடத்திருந்து கிளம்பி வருவதெல்லாம் அக்னி சொரூபம். வெப்பத்தைத் தவிர வேறு ஒன்றும் ஆங்கில்லை. பரமாத்மா உடல் தாங்கிவந்து உரைப்பது சத்தியமே. அதைப் பின்பற்றுகின்ற சான்றோரது ஜீவிதம் அதை சத்தியமென்றே நிரூபிக்கிறது. நீ எனக்குப்பிரியமானவன் என்பது மகாவாக்கியம். ஜீவர்கள் எல்லாம் இறைவனுக்குப் பிரியமானவர்களே. அந்த அன்பை விளக்குதற்கான பரிபாகம் வந்துவிடும்போது தனிச் சிறப்புடன் அப்பேரிணக்கம் பகரப்படுகிறது. துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் ஆகிய மூன்று நிலைகளும் பிரியத்தைப் படிப்படியாய் உறுதிப்படுத்திக் கொண்டு போகின்றன. அன்பிற்கும் உண்டோ பிரித்து அடைக்கும் தாழ்? நானே நீ, நீயே நான் என்பதைவிட உயர்ந்ததொரு நிலை இல்லை. இது வெறும் பேச்சில் நிரூபிக்கப்படுவதல்ல; சுவானுபவத்தில் அடையப் பெறுவதாம்.

வண்டியில் ஏறி ஓர் ஊருக்குப் போகிறோம். வண்டியில் செல்லுவது நெறி. ஊரை அடைவது குறி. கடவுள் விஷயத்தில் நெறியும் குறியும் ஒன்றே. அவனைத் துணையாகக்கொண்டு அவனை அடைகிறோம். அவன் அருளால் அவன் தாள் வணங்குகிறோம். பிறகு அவன் அருளால் அவனை அடைகிறோம். அவன் யாண்டும் துணைபுரிந்தும் அவன் துணையை ஏற்க நம்மில் பலர் மறுக்கிறோம். இதற்கெல்லாம் இடையில் இடைஞ்சலாய் நிற்பது நமது பண்படாத மனது. அந்த மனது பல ஜன்மாந்தரங்களில் வேறு பல காரியங்களுக்கு உதவி வந்தது. விழலுக்கு நீர் இறைத்தவாறு அது அநித்தியப் பொருள்களை நாடி நின்றது. ஆனால்

அது கடவுளை அடைதற்கே கருவியாக அமைவது அவசிய மாகிறது. உள்ளம் அவனுக்கே இடமாக வைக்கப்பட வேண்டும். மனிதன் செய்யவேண்டிய செயல் அதுவேயாம். அவன்மீது பக்தி பண்ணுமளவு மனது மிக உயர்ந்ததா கிறது. பக்தனிடத்து இறைவனே பித்துப்பிடித்தவன் ஆகிறான். பக்தன் செய்கிற செயலெல்லாம் இறைவனது ஆராதனையாகிறது. கடவுள் உணர்ச்சியிலேயே அவன் ஊறியிருப்பதால் செயல்கள் அனைத்தின் வாயிலாக இறை வனுக்கு அவன் இடையறு நமஸ்காரம் செய்கிறான். கடலை அணுகிய நதியானது கடலுக்குள் நுழைந்தே ஆகவேண்டும். அங்ஙனம் இத்தகைய பான்மையைப் பெற்றுள்ள பக்தன் பரம்பொருளை அடைந்தே ஆகவேண்டும். பரமாத்மாவே அதைக்குறித்து சத்தியம் செய்கிறார், உறுதிமொழி கூறு கிறார்.

ஒன்பதாவது அத்தியாயம் முப்பத்தொன்றாவது சுலோகத்தில் பக்தன் அழிந்துபட்டுப் போவதில்லை என்ப தைப் பிரகடனம் பண்ணும்படி அர்ஜுனனைத் தூண்டி னார். இறுதியில் அப்பேருரையைப் பகர பகவான் தாமே முன்வந்துள்ளார்.

தண்ணீரில் மூழ்கிவிட்டவன் மூச்சுவிடுவதற்கு மிகவும் தவிப் பதைப்போல, ஈசுவரனைக் காண்பதற்கு முன்னால் ஒருவருடைய மனம் அதற்காக மிகவும் ஆசைகொள்ளவேண்டும்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

பகவான் கூறும் அந்த உறுதிமொழிதான் யாது? விடை வருகிறது:—

सर्वधर्मान्परित्यज्य मामेकं शरणं व्रज ।
अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि मा शुचः ॥ ६६

ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ ।
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச: ॥

सर्वधर्मान् ஸர்வதர்மான் எல்லா தர்மங்களையும் परित्यज्य பரித் யஜ்ய பரித்தியாகம் செய்துவிட்டு मां एकं மாம் ஏகம் என்னை ஒரு

*வனையே* शरणं व्रज சரணம் வ்ரஜ *சரணடைவாயாக* अहं அஹம் *நான்* त्वा த்வா *உன்னை* सर्वपापेभ्यः ஸர்வபாபேப்ய: *எல்லாப்பாபங்களிலிருந்தும்* मोक्षयिष्यामि மோக்ஷயிஷ்யாமி *விடுவிப்பேன்* मा शुचः மா சுச: *விசனப்படாதே.*

***தர்மங்களை யெல்லாம் அறவே தியஜித்து விட்டு என்னையே சரணடைக. பாபங்களனைத்தினின்றும் உன்னை நான் விடுவிப்பேன். வருந்தாதே.***

ஜீவன் செய்கிற செயல்களிலெல்லாம் கடைசியான செயல் ஈசனிடத்து அடைக்கலம் புகுதலாம். அடைக்கலம் புகுதல் என்பதன் பொருள், தன் முயற்சி போதவில்லை அல்லது பலிதமாகவில்லை; ஆகையால் தெய்வத்தினிடம் தஞ்சமடைந்து அவர் துணையையும் கொஞ்சம் தேடிக்கொள்ளலாம் என்பதல்ல. சிற்றோடை பெரிய நதியில் கலந்து பிறகு சமுத்திரத்தில் சங்கமமாவது போன்றது சரணாகதி. ஜீவனுடைய இச்சா சுதந்திரமெல்லாம் ஈசுவர சங்கற்பத்தில் சேர்ந்துவிடுகிறது. தனக்கெனத் தனிச்செயல் ஒன்றுமில்லை. ஈசன் செயல் கடலின்செயல் போன்றது. ஜீவன் செயல் அலையின் செயல்போன்றது. அலை கடலுக்கு அன்னியமானதல்ல. ஜீவன் செயலெல்லாம் உண்மையில் ஈசுவரன் செயல். கருமயோகம் ஜீவனை முடிந்த இந்நிலைக்குக் கொண்டுவந்து சேர்க்கிறது.

பக்தன் எப்பொழுதும் தன் தெய்வத்தைச் சார்ந்திருக்கிறான். தனக்கு வரும் நன்மை கேடுகளெல்லாம் கடவுளது ஆணை. ஆகையால் ஒரு செயலை நன்று என்றும் மற்றொரு செயலைக் கேடு என்றும் பக்தன் பொருள்படுத்துவதில்லை. தர்மம் அதர்மம் ஆகிய இரண்டும் ஈசன்செயல் என்ற புனித நிலையை அடைந்துவிடுகின்றன.

அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமுங்
குன்றே அனையாய் என்னை ஆட்கொண்டபோதே கொண்டிலையோ
இன்றோர் இடையூறெனக்குண்டோ எண்தோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே!

பக்தர்கள் எல்லாரும் அடைக்கலம் என்னும் பெரு நிலையை அடைந்திருக்கிறார்கள். இறைவனது பேரன்பில் அவர்கள் தங்களை மறந்துவிட்டார்கள். ஞாபகக் குறைவில் ஒருவன் நடுவீதியில் நடப்பானாகில் அவன் ஓடும் வண்டிகளின் ஆபத்துக்கு உள்ளாவான். பக்தனோ அன்பில் தன்னை மறந்தவன் என்றாலும் ஒரு சிறு செயலிலும் சொப்பனத்திலும் அவன் பிழைபோவதில்லை. ஒழுங்குப்பாடே வடிவெடுத்ததாக அவனது வாழ்க்கை நடைபெறுகிறது. தாயின் மார்பில் அணைக்கப்பெற்ற சேய்போன்று அவன் சரணாகதியில் இன்பம் துய்க்கிறான்.

இனி, ஞானியின் ஞானோதயமும் சரணாகதி எனப் படுகிறது. கண்ணாடியில் நல்லது கெட்டது ஆகிய இரண்டின் பிம்பங்கள் தோன்றலாம். எனினும் கண்ணாடியின் சொரூபம் மாறுவதில்லை. தர்மம் அதர்மம் என்று சொல்லப் படும்கர்மங்களெல்லாம் பிரகிருதியினுடையவைகள். அந்த—ராத்மாவாயிருக்கும் சித் சொரூபம் என்னும் பரவெளியை அவைகள் பாதிக்கமாட்டா. சுத்த சைதன்யமாகிய தன்னில் தானாயிருப்பவன் உபாதிகளையெல்லாம் நீயக்கிந்து பர வெளியில் ஒன்றாய்விடுகிறான். பேரறிவு அல்லது பேருணர்வு ஒன்றே பாக்கியிருக்கிறது. உள்ளும் புறமும் என்கிற பாகுபாடுகள் அப்பரவெளிக்கில்லை. ஞானி யடையும் சரணாகதி இதுவே.

யோகி, பக்தன், ஞானி ஆகிய மூவரும் அடையும் சரணாகதி ஒன்றேயாம். அது மூன்று விதமாக விளக்கப்படுகிறது. சத் சொரூபத்தில் யோகி லயமாகிறான்; சித் சொரூபத்தில் ஞானி லயமாகிறான்; ஆனந்த சொரூபத்தில் பக்தன் லயமாகிறான்.

சிறு குழந்தையொன்று தாயின் மடியில் உட்கார்ந்திருக்கிறது. அதனிடத்து மற்றவர்கள் காட்டும் அன்பை அங்கீகரிக்கும் பாங்கு அதற்கு வந்துவிட்டது. ஆனால் அதனுடைய மனது இன்னும் விகாரப்படவில்லை. எந்த

நாட்டுக்கு உரிய குழந்தை, எந்த மொழி பேசும் குழந்தை, எத்தகைய பழக்கவழக்கங்களையுடையது ஆகிய பேதங்களையும் பாகுபாடுகளையும் அது இன்னும் அறியவில்லை. பூர்வ ஜன்மத்திலிருந்து அது கொண்டு வந்திருக்கும் இயல்புகளும் இன்னும் அவ்யக்தமாக மறைந்துகிடக்கின்றன. அதாவது அதன் மனத்தகத்து இருக்கும் மனோதர்மங்களெல்லாம் இன்னும் வடிவெடுக்கவில்லை. இந்த நிலையில் குழந்தையானது ஞானிக்கு ஒப்பானது. அதன்பால் உள்ள அபேத நிலை உயிர்வர்க்கத்தையும் தனக்குரியதாக்குகிறது. குழந்தையின் தூய அன்புக்கு வசப்படாத உயிர் இல்லை.

தான் அடைந்துள்ள மன பரிபாகத்தால் ஞானி குழந்தைபோன்று ஆய்விடுகிறான். அந்தக்கரணமடங்கத் துறப்பதுவே எந்தத் துறவினும் நன்று என்பது கோட்பாடு. ஞானியாவதற்கு முன்பு விதவிதமான இயல்புகள் மனதைப் பற்றிப் பிடித்துக் கொண்டிருக்கின்றன. அவரவர் ஸ்வதர்மம் என்பது அதுவே. ஸ்வதர்மத்தைக் கையாளுதலே ஸ்வதர்மத்தை விட்டொழிப்பதற்கு உற்ற உபாயம். நோய் வந்துவிட்டால் அது தன் வேலையைச் செய்ய இடங்கொடுப்பதே அதை ஒழிப்பதற்கு உபாயமாகிறது. நோயை அடக்கினால் வேறு ஒரு நோயாக அது வடிவெடுக்கும். வந்துள்ள நோய் உடலில் வேலை செய்தால் அந்நோய் ஓய்ந்து போய் அறவே அகன்றுவிடும். நாம் எடுத்துக்கொண்ட ஸ்வதர்மம் அத்தகையது. ஸ்வதர்மத்தைக் கையாண்டு அதன் வேகத்தை ஒழித்துவிடுவது நம் குறிக்கோள். மழை பெய்து மேகம் ஒழிந்துபோனால் எஞ்சியிருப்பது வெட்ட வெளி. பற்றற்று தர்மம் செய்து தர்மத்தை ஒழித்து விட்டால் எஞ்சியிருப்பது சுத்த சைதன்யமாகிய ஆத்ம சொரூபம்.

தனக்கு அன்னியமானதெல்லாம் தன்னை வந்து சாரும்பொழுது அது அழுக்கு அல்லது பாபம் ஆகிறது. ஜீவபோதம் பெற்றிருப்பது பாபம். அது தனது நிஜசொரூ

பமல்ல. கடலுக்குள் வந்த நதியின் நதித்தன்மையை நீக்கி விட்டு கடலின் தன்மையைப் பெறும்படி அது செய்துவிடு கிறது. பரமாத்மாவை சரணடைந்த ஜீவனிடத்திருந்து ஜீவபோதம் என்றபாபத்தை அகற்றிவிட்டு பரபோதத்தை அது வழங்குகிறது. ஜீவபோதத்திலிருந்து விடுதலை யடை வதே மோக்ஷமாம். பரமாத்மா அமிர்த சொரூபம்; அதனுள் அழிவு என்பதில்லை. அது பரமானந்தம். ஆக அதனுள் துன்பமில்லை. அது பரஞானச்சுடர்; ஆக அதனுள் அக் ஞான இருள் இல்லை. சத்தியம், ஞானம், ஆனந்தம் பிரம் மம். அந்தக்கரணம் அகன்றபின் ஜீவன் பிரம்மமே.

நனத்தை அகற்று; ஆண்மையுடன எழுந்திரு; உன் கடமையைச் செய்" என்ற கருத்துடன் கீதா ஆசாரியன் கீதையைத் துவக்கினான். "உன் கடமை களையெல்லாம்நீத்துவிட்டு எனது அகண்ட சத் சித் ஆனந்த சொரூபத்தில் திளைத்திருப்பாயாக" என்று கீதாசாரியன் முடிவு கூறினான். இடையில் பகர்ந்துள்ள யாவும் கர்மத் தைக் கடப்பதற்கு உற்ற உபாயங்களாம். அவனைச் சர ணடைந்து, அவன் அருளைநாடி நிற்பவர்க்கு அவனருளால் அவனுடைய போதனையும் நன்கு விளங்கும். பிறகு ஜீவ போதத்தைக் கலைத்துவிட்டு அவனுடைய அகண்ட ஸத் சித் ஆனந்த சொரூபத்தில் இரண்டறக் கலத்தலும் எளிதா

பரிபூரண சரணாகதியின் தன்மை எப்படிப்பட்டது? கலைப் படைத்தவன், அன்றைய வேலையை முடித்த பிறகு, தலையணையின்மீது சாய்ந்துகொண்டு, நிம்மதியாய்ப் புகைச் சுருட்டுப் பிடித்துக்கொண்டி ருக்கும் ஆனந்த நிலையைப் போன்றது. துயரமும் துன்பமும் இல்லாத நிலையாகும் அது.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

இத்துடன் கீதா உபதேசம் முற்றுப் பெறுகிறது. இந்தக் கீதா சாஸ்திரத்தைப் படித்தும் அனுஷ்டித்தும் பயன் அடையவல்ல அதிகாரி யார் என்னும் கேள்வி எழு கிறது. அதற்கு விடை வருகிறது :—

इदं ते नातपस्काय नाभक्ताय कदाचन ।
न चाशुश्रूषवे वाच्यं न च मां योऽभ्यसूयति ॥ ६७

இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசன ।
ந சாசுச்ரூஷவே வாச்யம் ந ச மாம் யோऽப்யஸூயதி ॥ 67

इदं இதம் *இந்த கீதா உபதேசம்* अतपस्काय அதபஸ்காய *தவமில்லாதவனுக்கு* ते தே *உன்னால்* कदाचन கதாசன *ஒருபொழுதும்* न वाच्यं ந வாச்யம் *சொல்லத்தக்கதல்ல* न अभक्ताय ந அபக்தாய *பக்தியில்லாதவனுக்கும் அல்ல* न च अशुश्रूषवे ந ச அசுச்ரூஷவே *சேவை செய்யாதவனுக்கும் அல்ல* यः ய: *யார்* मां மாம் *என்னை* अभ्यसूयति அப்யஸூயதி *நிந்திக்கிறானோ அவனுக்கும்* न च ந ச *சொல்லலாகாது.*

***தவமில்லானுக்கும், பக்தி யில்லானுக்கும், தொண்டு புரியாதவனுக்கும், என்னை இகழ்பவனுக்கும் இக்கோட்பாட்டை நீ இயம்பாதே.*** 67

*வாழ்க்கைத் தத்துவங்கள் அனைத்தும் அடங்கப் பெற்றது பகவத்கீதை. அதை முறையாக எல்லார்க்கும் எடுத்து வழங்கவேண்டுமென்பதே பகவானது கருத்து. இந்த அறிவு பரவுமளவு வாழ்க்கை திருந்தியமையும். ஆனால் இதை யாருக்குப் புகட்டலாகாது என்கிற எச்சரிக்கையை பகவான் பண்ணுகிறார். கண்ணில்லாதவர்க்கு சித்திரம் பயன்படாததுபோன்று தவம் அல்லது நெறியான வாழ்க்கையில்லாதவர்களுக்குக் கீதோபதேசம் பெரும் பயன் அளிக்காது. தனித்தவம் மட்டும் போதாது. அது பக்தியோடு கூடியதாயிருக்க வேண்டும். பக்தியே தவத்தைத் தூயதாக்குகிறது. பிறகு பக்தியின் அறிகுறியாக சேவை வந்தமைகிறது. ஈசனிடத்தும் உயிர்களிடத்தும் விருப்பமிருக்குமளவே தொண்டுபுரிய ஒருவன் துணிகிறான். தோன்றாத் துணையாயுள்ள ஈசுவர பக்தி பண்ணுகிறவர்களும் தோற்றத்தில் வந்துள்ள கிருஷ்ணனைச் சாமான்ய மனிதன் என்று இகழ்பவர் உண்டு. பலவிதச் செருக்கும் தேகாத்ம புத்தியும் உடையவர்கள் அக்காலத்தில் இருந்தது போன்று எக்*

காலத்திலும் இருக்கிறார்கள். அப்படி அகங்கரிக்கிறவர்கள் கீதையின் உட்கருத்தை அறிந்துகொள்ள மாட்டார்கள். அத்தகையவர்களுக்கு அதைப் புகட்டுவதும் பயன்படாது.

अशुश्रुषवे அசுச்ரூஷவே என்பது கேட்க விருப்பமில்லாதவனுக்கு என்றும் பொருள்படுகிறது. தன்னைப் பற்றிப் பெரிதாக நினைத்துக்கொண்டோ, அல்லது வேறு எக் காரணத்தை முன்னிட்டோ இதை ஊக்கத்தோடு கேட்க மனமில்லாதவனுக்கு இதை உபதேசிக்கலாகாது.

மழைத்தண்ணீர் மேட்டுநிலத்தில் தங்கி நிற்பதில்லை. பள்ளமான இடத்துக்கு ஓடிவந்து விடுகிறது. அதுபோல ஈசுவர கிருபையானது தற்பெருமையும், கர்வமுமுள்ளவர்களுடைய உள்ளத்தில் தங்கி நிற்பதில்லை. பணிவுள்ளவர்களின் உள்ளத்தில்தான் தங்கி நிற்கும்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஈசுவர கைங்கரியமாக கீதா பிரசாரம் செய்பவன் அடையும் நன்மை யாது? விடை வருகிறது:—

**य इदं परमं गुह्यं मद्भक्तेष्वभिधास्यति ।**
**भक्तिं मयि परां कृत्वा मामेवैष्यत्यसंशयः ॥ ६८**

ய இதம் பரமம் குஹ்யம் மத்பக்தேஷ்வபிதாஸ்யதி ।
பக்திம் மயி பராம் க்ருத்வா மாமேவைஷ்யத்யஸம்சய: ॥ 68

यः ய: *யார்* परमं गुह्यं इदं பரமம் குஹ்யம் இதம் *மிக ஆழ்ந்த இத்தத்துவத்தை* मद्भक्तेषु மத்பக்தேஷு *என் பக்தர்களிடத்து* अभिधास्यति அபிதாஸ்யதி *போதிக்கிறானோ* मयि परां भक्तिं कृत्वा மயி பராம் பக்திம் க்ருத்வா *என்னிடத்து மேலாம் பக்தி பண்ணி* असंशयः அஸம்சய: *சந்தேகமில்லாது* मां एव மாம் ஏவ *என்னையே* एष्यति ஏஷ்யதி *அடைவான்.*

**மிக ஆழ்ந்த இத்தத்துவத்தை என் பக்தர்களிடத்து உபதேசித்து, என்னிடத்து மேலாம் பக்தி பண்ணுகிறவன் ஐயமின்றி என்னையே அடைவான்.**

மனிதன் பிறர்க்கு எதை எடுத்து மனமுவந்து வழங்குகிறானோ அது அவனுக்குச் சொந்தமானதாகிறது.

தனக்கென்று எதைப் பிடித்து வைக்கிறானோ அது சொந்தமாவதில்லை. உடலுக்கு இன்றியமையாத ஒன்றை முதல் சான்றாக எடுத்துக் கொள்வோம். உணவு இல்லாது யாரும் உயிர்வாழ முடியாது. உணவைத் தனக்கென்று தேடி வைத்துக்கொள்ளுதல் உயிர்களிடத்து அமைந்துள்ள இயல்பு. ஒருவன் பிறர்க்கு உணவுவழங்கிப் பிறகு தான் உண்கிறான். மற்றொருவன் பிறரைப்பற்றி ஒன்றும் நினையாது தனக்கென்றே தேடி வைத்து உண்கிறான். இவ்இருவருள் பிறரைப்பற்றி நினைப்பவன் அடைகிற உடல் நலனை மற்றவன் அடையமாட்டான். இதை ஒவ்வொருவனும் தன் சொந்த அனுபவத்தில் காணலாம்.

அடுத்தபடியாக அறிவுக்கு உரியது கல்வி. கற்பவர்களுள் நன்கு கற்பவன் யார் என்ற கேள்வி எழலாம். தனக்கு என்று கற்பவனைவிடப் பிறர்க்குப் புகட்டுதற்குக் கற்பவன் நன்கு கற்கிறான். பிறர்க்குப் புகட்டும் பொழுதெல்லாம் தனது அறிவு தெளிவடைகிறது. பிறர்க்கு ஒரு விஷயத்தை விளங்கச் செய்யுமளவு தனக்கே அது நன்கு விளங்குகிறது. கிணற்றில் நீர் இறைக்குமளவு நீர் ஊறுவது போன்று கல்வி புகட்டுமளவு ஒருவனிடத்துக் கல்வி வளர்கிறது.

பகவத்விஷயங்களைப் பக்தர்களிடத்து பக்தி விசுவாசத்தோடு எடுத்தோதுவதே பகவத் சேவையாகிறது. ன்னை ஓர் ஆசாரியன் என்று அத்தகையவன் அகங்கரிப்ப ல்லை. அகங்காரம் கொள்கிறவனுக்கு பக்தி பெருகுவ ல்லை. பகவத் மகிமையானது நல்லார்க்கிடையில் பேசப் படுகிறது என்று இன்புறுபவனுக்கு அன்பும் அறிவும் ர்கின்றன. அத்தகைய பேச்சாளன் பணிவுடன் செய் , பகவத் கைங்கரியமாக அது கருதப்படுகிறது. கடவுளை ட்டதாலே அதில் விளையும் பயனாகும்.

பகவான் பாகவதம் (சாஸ்திரங்கள்) பக்தர்கள் இவையாவும் யாம்.

— ஸ்ரீ ராமகிருஷ்ண உபதேசம்

சாஸ்திரங்களின் உட்கருத்தை நல்லாரிடம் பரப்புப வனைக் கடவுள் எப்படிப் பொருள்படுத்துகிறார்? விடை

**न च तस्मान्मनुष्येषु कश्चिन्मे प्रियकृत्तमः ।**
**भविता न च मे तस्मादन्यः प्रियतरोभुवि ॥ ६९**

ந ச தஸ்மான்மனுஷ்யேஷு கஸ்சின்மே ப்ரியக்ருத்தம: ।
பவிதா ந ச மே தஸ்மாதன்ய: ப்ரியதரோ புவி ॥ 69

मनुष्येषु மனுஷ்யேஷு *மனிதர்களுள்* तस्मात् தஸ்மாத் *அவனை விட* कश्चित् கஸ்சித் *யாரும்* मे மே *எனக்கு* प्रियकृत्तमः च ப்ரியக்ருத்தம: ச *பிரியமானதைச் செய்பவனும்* न ந *இல்லை* तस्मात् தஸ்மாத் *அவனை விட* अन्यः அன்ய: *அந்நியமானவன்* मे மே *எனக்கு* प्रियतरः च ப்ரியதர: ச *அதிகப்பிரியமானவனும்* भुवि புவி *புவியில்* भविता न பவிதா ந *இருக்கமாட்டான்.*

***மாந்தருள் எனக்கு விருப்பமான செயல் புரிப வனும் அவனைவிட வேறு யாருமில்லை; எனக்கினி யானும் வையகத்தில் அவனைவிட யாருமில்லை. 69***

*எல்லாச் செயல்களும் இறைவனுடைய செயல்களே. இயற்கை விளக்குவதெல்லாம் இறைவனுடைய மகிமை யையேயாம். அவ்விளக்கங்கள் அனைத்திலும் பகவத்கீதை யின் விளக்கம் தனிப்பெருமை பெற்றுள்ளது. இயற்கை யின் சிறப்பை அது விளக்குகிறது. வாழ்க்கைத் தத்து வத்தை அது விவரித்துச் சொல்லுகிறது. அனைத்துக்கு மூலப்பொருள் எது என்பதை அது இயம்புகிறது. ப வித்தை அபரவித்தை ஆகிய இரண்டும் கீதையில் அடங் யிருக்கின்றன. அதாவது கடவுளை அடைதற்கான வழிய இவ்வுலக வாழ்க்கையை நன்கு நடாத்துதற்கான வழி: கீதையினால் புகட்டப்படுகின்றன. அதன் போதனை கேட்டு அதன்படி நடப்பவன் விரைவில் நல்லான் ஆய் கிறான். ஆகவே தக்கார்க்கிடையிலே கீதா தத் ... புகட்டுதற்கொப்பான செயல் வேறுஎதுவும் ...*

*வனைப்போன்று கடவுளுக்குச் சொந்தமானவனும் யாருமில்லை. கடவுளின் மகிமை அவன்மூலம் நன்கு ஆவதே அதற்குக் காரணமாகிறது.*

*வீட்டுக் கூரையின் மேலிருந்து விழும் மழை ஜலம் புலித்தலை போன்ற குழாயின் மூலமாகக் கீழே தரையில் விழும்போது, பார்வைக்குப் புலித்தலையினின்றும் விழுவதாகத் தோன்றினாலும், வாஸ்தவத்தில் ஆகாயத்திலிருந்து விழுகிறது. அதுபோல, தெய்விகம் வாய்ந்த மனிதர்கள் கூறும் உபதேச மொழிகள் பார்வைக்குக் கேவலம் மனிதர்களிடமிருந்து வருவனவாகத் தோன்றினாலும், வாஸ்தவத்தில் ஈசுவர ஸன்னிதியினின்றே வருகின்றன.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

*பிறர்க்கு எடுத்துப் புகட்ட இயலாதவர்க்கும் கீதையின்பால் ஒரு கடமையுண்டு. அது யாதெனின் விடை வருகிறது:—*

**अध्येष्यते च य इमं धर्म्यं संवादमावयोः ।**
**ज्ञानयज्ञेन तेनाहमिष्टः स्यामिति मे मतिः ॥ ७०**

அத்யேஷ்யதே ச ய இமம் தர்ம்யம் ஸம்வாதமாவயோ:
ஞானயக்ஞேன தேனாஹமிஷ்ட: ஸ்யாமிதி மே மதி: ॥

यः ய: *யார்* च ச *மேலும்* आवयोः ஆவயோ: *நமது* इमं இமம் *இந்த* धर्म्यं தர்ம்யம் *தர்மம் நிறைந்த* संवादं ஸம்வாதம் *சம்வாதத்தை* अध्येष्यते அத்யேஷ்யதே *கற்றறிகிறானோ* तेन தேன *அவனால்* अहं அஹம் *நான்* ज्ञानयज्ञेन ஞானயக்ஞேன *ஞான யக்ஞத்தால்* इष्टः இஷ்ட: *ஆராதிக்கப்பெற்றவன்* स्यां ஸ்யாம் *ஆவேன்* इति இதி *இது* मे மே *எனது* மதி: *கொள்கை.*

**தர்மம் நிறைந்த நமது இச் சம்பாஷணை இன்னும் யார் கற்றறிகிறானோ, அவனால் ஞான ஞத்தால் நான் ஆராதிக்கப்படுபவன் ஆவேன். ... கொள்கை.**

...யால் கீதையை அறிந்து கொள்வதுமே
*தித்த தழுப்பம்* ...யும் கீதையை அறிய மனித
...மை மன... குதிக்கின்றன...

யத்தை அறிவதாகிறது. பகவத் விஷயத்தை நன்குடை தவனே பகவானை வழுத்த வல்லவனாகிறான். உண் அறிந்து அதற்கேற்ற பிரகாரம் வாழுதல் சிறந்த மாகிறது. வாழ்க்கையைப் பற்றிய மேலாம் தத்துவ உபதேசிப்பவன் ஒருவன் இருக்கிறான். அக்கோட்பாட்டு படி வாழ்பவன் மற்றொருவன் இருக்கிறான். இவ்விருவருள் நல்வாழ்வு வாழ்பவனே நல்ல பிரசாரம் செய்கிறான். நல்ல பேச்சைவிடச் சிறந்தது நல்ல பழக்கம். பேசுபவர் ஏராளமாயிருக்கின்றனர்; நல் வாழ்வு வாழ்பவர் மிகச் சிலரே. கீதையை ஓதும் அவர்களது நல்வாழ்வு மற்றவர் களை நல்வழியில் தூண்டுகிறது. ஆக, அது ஞான யக்ஞ ஆராதனை என்னும் பெயர் பெறுகிறது.

தனக்குத் தானே கற்றுக்கொள்ள ஒரு மனிதனுக்கு இயலவில்லை. அப்பொழுது அவன் என் செய்வது என்ற கேள்வி எழுகிறது. அதற்கு விடை வருகிறது :-

வது
யா

श्रद्धावाननसूयश्च शृणुयादपि यो नरः ।
सोऽपि मुक्तः शुभाँल्लोकान्प्राप्नुयात्पुण्यकर्मणाम् ॥ ७१

இ
ச்ரத்தாவானனஸூயஸ்ச ச்ருணுயாதபி யோ நர: ।
ஸோऽபி முக்த: சுபான் லோகான் ப்ராப்னுயாத் புண்ய
கர்மணாம் ॥ 71

श्रद्धावान् ச்ரத்தாவான் சிரத்தையுடையவனும் अनसूयः அனஸூய: ச அவமதிப்பில்லாதவனுமாகிய यः नरः ய: நர: எம்மனிதன் अपि शृणुयात् அபி ச்ருணுயாத் அபி கேட்கவாவது செய்கிறானோ सः अपि ஸ: அபி அவனும் मुक्तः முக்த: விடுதலை அடைந்தவனாய் पुण्यकर्मणां புண்ய கர்மணாம் புண்ணிய கர்மம் செய்பவர்களுடைய शुभान् लोकान् சுபான் லோகான் நல்லுலகங்களை प्राप्नुयात् ப்ராப்னுயாத் அடைவான்.

கீதை ஊக்கங்கொண்டு, அவமதிச் ...
கேட்டாவது செய்யும் மனிதனும்
கிறான். யாளர் எய்தும்
புகட்(

73 ]



ஈவை அலட்சியப்படுத்துபவன் தனது உடல் அலட்சியப்படுத்துகிறான். உணவுப் பொருளின் தை அறிந்து ஒருவன் உணவு உண்கிறான். மற் நவ் அதன் தத்துவம் தெரியாது விருப்புடன் அதைப் ஸ்ன். அறிந்தவன் அறியாதவன் ஆகிய இருவரும் ரின்று பெறும் நன்மை ஒன்றேயாம். அதேபாங் தா சாஸ்திரத்தை சிரத்தையோடு கேட்டுத் தெரிந்து ரபவன் எல்லா நன்மைகளையும் அடைகிறான். பிறர்க்கு துப் புகட்டுவதால் அது ஒருவன் மனதில் நன்கு பதி ி. பக்தி விசுவாசத்துடன் கேட்பதால் இன்னொருவன் தில் அது பதிகிறது. இருவரும் கீதா தத்துவத்தை ிந்துகொண்டவர் ஆகின்றனர். மனதுக்கு ஊட்டும் நல் ண்ணங்களுக்கு சம்ஸ்காரம் என்று பெயர். பகவத் ிஷயங்களைக் கேட்பது சம்ஸ்காரங்களுள் சிறந்த சம்ஸ்கார மாகிறது. பக்தி சிரத்தையுடன் கேட்பவன் கீழ்மையி னின்று விடுதலையடைந்து மேலோங்குவது இயல்பு.

மாணாக்கனுக்கு எல்லாம் பிடிபட்டுவிட்டதாவென்று ஓர்வது ஆசிரியரின் இயல்பு. அக்கோட்பாட்டுக்கு இணங்க பகவான் இப்பொழுது கேட்பதாவது :—

**कच्चिदेतच्छ्रुतं पार्थ त्वयैकाग्रेण चेतसा ।**
**कच्चिदज्ञानसंमोहः प्रनष्टस्ते धनञ्जय ॥ ७२**

**கச்சிதேதச்ருதம் பார்த்த த்வயைகாக்ரேண சேதஸா ।**
**கச்சிதக்ஞானஸம்மோஹ: ப்ரநஷ்டஸ்தே தனஞ்ஜய ॥ 72**

पार्थ ।பார்த்த *பார்த்தா* त्वया த்வயா *உன்னால்* एकाग्रेण चेतसा ஏகாக்ரேண சேதஸா *ஒருமை மனதுடன்* एतत् ஏதத் *இது* श्रुतं कच्चित् ச்ருதம் கச்சித் *கேட்கப்பட்டதா* धनञ्जय தனஞ்ஜய। *தனஞ்ஜயா* ते தே *உன்னுடைய* अज्ञानसम्मोहः அக்ஞான ஸம்மோஹ: *அக்ஞானத்தி லு உதித்த தழப்பம்* प्रनष्टः कच्चित् ப்ரநஷ்ட: கச்சித் *அழிந்ததா ?*

ான். தீயில் குதிக்கின்ற மை மனதுடன் உன்னால் இது ... உனது அறியாமை

ஞானோபதேசம் புகட்டுபவர் புகட்டப்படுப வரிடத்து எதை எதிர்பார்க்கிறார் என்பது ஈண்டுவிளைகின்றது. ஒருமை மனது உண்மையைத் தெரிந்துகொள்ளுவது, எல்லாவற்றிலும் அவசியமானது. எவ்வளவுதான் புகட்டினாலும் சிதறுண்ட மனது போதனையின் உட்பொருளைத் தெரிந்து கொள்ளாது. கொஞ்சம் எடுத்துப் புகட்டினாலும் ஒருமைப்பட்ட மனது புகட்டப்பெறும் கோட்பாட்டை உள்ளபடி விளக்கிக்கொள்கிறது. புகட்டப்பெறுபவன் அத்தகைய ஒருமையை அடையவேண்டும் என்பதே புகட்டுபவரது எண்ணமாகும்.

குவிந்த மனது ஞானத்துக்கு உரியதாகிறது. சூரிய கிரணங்கள் குவிந்துவருமளவு அவை பேரொளி பெறுகின்றன. ஒளிப் பிழம்பு மற்ற பொருள்களையும் விளக்கவல்லது; தன்னையும் சர்வகாலமும் விளக்கிக் கொள்ளுகிறது. அங்ஙனம் குவிந்த மனது க்ஷேத்ரம் க்ஷேத்ரக்ஞன் ஆகிய பொருள்களை உள்ளபடி தெரிந்து கொள்கிறது. ஞான வெளிச்சமும் அக்ஞான இருளும் ஒன்று சேர்ந்து இருக்கமாட்டா. ஞான வெளிச்சத்தில் பொருள் உள்ளபடி தென்படுகிறது. அக்ஞான இருளில் அதே பொருள் வெவ்வேறு வடிவெடுத்துத் தென்படுகிறது. இருளில் தென்பட்ட ஒரு வடிவத்தைத் திருடன் போலீஸ்காரன் என்று நினைத்தான். அதே வடிவத்தைப் போலீஸ்காரன் திருடன் என்று எண்ணினான். அச்சம் கொண்ட ஒருவன் அவ் வடிவத்தைப் பிசாசு என்று பொருள்படுத்தினான். வெளிச்சத்தில் அதை ஏற்கனவே பார்த்திருந்த ஒரு விவேகி இத்தகைய மயக்கம் ஒன்றும் கொள்ளவில்லை. அதை ஒரு மரக்கட்டை என்று உள்ளபடி ஓர்ந்தான். ஞானோதயம் பிறந்திருக்குமிடத்து அக்ஞான ஸம்மோஹம் தானே அகன்றுவிடுகிறது. அத்தகைய தெளிந்த நிலை அர்ஜுனனுக்கு வந்துவிட்டதாவென்று பகவான் வினவுகிறார்.

நல்லாசிரியரை அடையும்-

अर्जुन उवाच

**नष्टो मोहः स्मृतिर्लब्धा त्वत्प्रसादान्मयाच्युत ।**
**स्थितोऽस्मि गतसन्देहः करिष्ये वचनं तव ।। ७३**

அர்ஜுன உவாச

நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர்லப்தா த்வத்ப்ரஸாதான் மயாச்யுத ।
ஸ்திதோऽஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே வசனம் தவ ॥ 73

अर्जुन उवाच அர்ஜுன உவாச *அர்ஜுனன் சொன்னது*

अच्युत அச்யுத *அச்யுதரே* मोहः மோஹ: *மயக்கம்* नष्टः நஷ்ட: *அழிந்துவிட்டது* त्वत्प्रसादात् த்வத்ப்ரஸாதாத் *உமது பிரசாதத்தால்* स्मृतिः ஸ்ம்ருதி: *ஞாபகம்* मया மயா *என்னால்* लब्धा லப்தா *அடையப் பெற்றுள்ளது* स्थितः ஸ்தித: *உறுதியாய்* अस्मि அஸ்மி *இருக்கிறேன்* गत सन्देहः கத ஸந்தேஹ: *சந்தேகங்கள் போய்விட்டன* तव वचनं தவ வசனம் *உமது சொல்லை* करिष्ये கரிஷ்யே *செய்வேன்.*

அர்ஜுனன் சொன்னது

***அச்யுதா, மயக்கம் ஒழிந்தது. உமது அருளால் எனக்கு நினைவு வந்துள்ளது. ஐயங்கள் அகன்று உறுதியாயிருக்கிறேன். உமது சொற்படி செய்வேன். 73***

போர் புரியமாட்டேன் என்று சொல்லித் தேர்த்தட்டின்மீது அர்ஜுனன் சும்மா இருந்துவிட்டான். அப்படிச் சும்மா இருந்தவன் மேலும் ஒரு சிறந்த செயலைச் செய்தான். மிச்சமின்றித் தன்னை மாதவனிடம் ஒப்படைத்துவிட்டான். விறகுக் கட்டையானது பச்சையாயிருந்தாலும் உலர்ந்திருந்தாலும் தன்னைத் தீயினிடம் ஒப்படைத்தால் அது தானே அக்னி சொரூபத்தை யடைகிறது. அங்ஙனம் அர்ஜுனன் கிருஷ்ணனுக்கு சிஷ்யன் ஆனான். பிரபத்தியும் பண்ணிவிட்டான். அதாவது மேலும் நிகழ்வது எதுவாயினும் தான் கண்ணனிடமிருந்து பின்வாங்குவதில்லை; அதைப்பற்றி நினைப்பதும் இல்லையென்று முடிவு கட்டி விட்டான். தீயில் குதிக்கின்ற விட்டில் பூச்சி அதன் விளை

வைப்பற்றி நினைப்பதில்லை. பகவானிடம் பிரபத்தி பண்ணு பவன் மனநிலை அத்தகையது. செயற்கரிய அச்செயலை தனஞ்ஜயன் செய்தான்.

அத்தகையவனுக்கு கீதோபதேசம் நிகழ்ந்தது. அது நல்லார் அனைவருக்கும் நலம் தரும் அருள் விருந்து. எக் காலத்துக்கும் உதவுகிற இன்னமுது என்று அதை இயம்ப வேண்டும். பெருவாழ்வுக்கு அதுவே உற்ற துணை. பிறவிப் பிணியைப் போக்கவல்ல அருமருந்து அது. ஆனால் உலகில் ஒருவர்க்காக ஆயத்தப்படுத்தும் அரிய பொருள் ஒன்று வேறு யார்க்கோ உதவுவதாக முடிந்துவிடுவதுண்டு. ஓர் இடத்தில் மேகம் கூடி மற்றோர் இடத்தில் போய் அது பொழிவது போன்று பல சம்பவங்கள் நிகழ்ந்துவிடுவதைக் காண்கிறோம். கீதா சாஸ்திரம் அப்படிப் போய்விடவில்லை. ஒருவன்பொருட்டு உதித்த அந்த அருள்வெள்ளம் உலக னைத்துக்கும் யாண்டும் அருட்பேறு ஆயிற்று. யாருக்காக அந்த ஆரமுது உதயமாயிற்றோ அவன் அதை வாய்மடுத்து உண்டு பெரும் பேறு பெறலானான். அதன் விளைவை இங் குக் காண்கிறோம். அதுவரையில் அஞ்ஞானத்திலிருந்த அர் ஜுனன் பெரியதொரு வாக்குமூலம் பண்ணுகிறான். அவன் பெற்ற பேறு எது என்பதை அந்த வாக்குமூலம் தெரிவிக் கிறது. அவன் வாயிலின்று வந்த ஒவ்வொரு சொல்லிலும் பொருள் ஏராளமாகப் புதைந்து கிடக்கிறது :—

அச்யுதா என்று தன்னை ஆட்கொண்டவனை அவன் அழைக்கிறான். அச்யுதன் என்பது பெருநிலையினின்று விழா தவன் எனப் பொருள்படுகிறது. தீயில் நுழைந்த விட்டில் பூச்சி தீயின் செயலுக்கு இரையாகிறது. அச்யுதனிடம் அடைக்கலம் புகுபவன் தானும் பிறவி என்னும் படுகுழியில் வீழாத பெருநிலை யடைவனன்றோ! அர்ஜுனன் பெற்ற பேறு அதுவே.

மோஹ: நஷ்ட: — மோகம் அழிந்துவிட்டது, அல்லது மயக்கம் போய்விட்டது என்பது முதல் வாக்குமூலம். மயக்

கம் வரும்பொழுது நடுப்பகலில் விண்ணில் நக்ஷத்திரம் தென்படும். வாமனன் போன்ற சிறிய ஆள் ஈரடியாலே மூவுலகளக்கும் பெரிய ஆள் போன்று அவனுக்குத் தென்படுவான். அத்தகைய மயக்கம் அர்ஜுனனைப் பிடித்திருந்தது. இவ்வுலக வாழ்வு அவனுக்கு ஒரு பெரிய தலைச்சுமையாகத் தோன்றியது. அதைக் கீழே இறக்கிவைக்கவும் முடியவில்லை; தூக்கிக்கொண்டு நடக்கவும் இயலவில்லை. இப்படித் தனக்குத் தானே அவன் கற்பித்துக்கொண்டிருந்த மயக்கம் ஒழிந்தது.

ஸ்ம்ருதி: மயா லப்தா – ஞாபகம் என்னால் அடையப் பெற்றுள்ளது என்பது இரண்டாவது வாக்குமூலம். மயங்கியிருப்பவனுக்குத் தான் எங்கு, எக்காரணத்தால், எந்நிலையில் இருக்கிறான் என்பது விளங்காது. மயக்கம் தெளிந்த பிறகே உண்மையான ஞாபகம் வருகிறது. தான் ஏன் மண்ணில் கிடந்தான் என்பதைப் பிறகு சிந்திக்கிறான்; எதைப் பிதற்றினான் என்று விசாரிக்கிறான். பின்பு அதையெல்லாம் ஒதுக்கிவிட்டுத் தன் எதார்த்த நிலையைப்பற்றி நினைவு கூர்கிறான். தனது பேரியல்பைப் பற்றிய ஞாபகம் இப்பொழுது அர்ஜுனனுக்கு வந்துவிட்டது. ஒவ்வொரு ஜீவனும் மயக்கத்தால் ஜனன மரணங்களுக்கு ஆளாயினான். சித்த சுத்தி யடைந்து பிறகு உறுதியான ஞாபகம் வருகிறது. அது தனக்கும் கடவுளுக்கும் இடையில் உள்ள இணக்கத்தைப்பற்றிய ஞாபகமாம். ஜீவன் எத்தகைய பெருநிலைக்குரியவன் என்பதை அந்த ஞாபகம் விளக்குகிறது.

த்வத் ப்ரஸாதாத் – உமது பிரசாதத்தால் அல்லது உமது அருளால் என்பது மூன்றாவது வாக்குமூலம். மயங்கிக் கிடந்த ஒருவனை மற்றொருவன் கிருபைகூர்ந்து, நீர் தெளித்து, விசிறி வீசிப் பிரக்ஞைக்குக் கொண்டுவருகிறான் என்று வைத்துக்கொள்வோம். அச்செயல் சாமானியமானதன்று. அது பாராட்டுதற்குரிய பெருஞ் செயலாம். கண்டு அர்ஜுனனுக்கு மயக்கம் தெளிந்ததும், தனது பேரியல்

சொரூப ஞாபகம் வந்ததும் தன் சுயப்பிரயத்தனத்தா லன்று. அது சுயப்பிரயத்தனம் என்று எண்ணி அவன் செருக்குறலாகாது. அது கண்ணனது காருண்யத்தால் விளைந்தது. குந்தியின் மகன் அதற்குக் கடப்பாடு உடையவன் ஆனான். முழுமனதோடு அதை எடுத்து அவன் மொழிந்துவிடுகிறான். ஜீவாத்மா பரபோதம் பெறும்போது அது பரம்பொருளின் பேரருள் என்று இயம்புகிறான். தன் முயற்சியின் சிறுமையும், அவனருளின் பெருமையும் அப்பொழுது உள்ளபடி அவனுக்கு விளங்குகிறது.

ஸ்தித: அஸ்மி — உறுதியாய் இருக்கிறேன் என்பது இதன் பொருள். இது நான்காவது வாக்குமூலம். புயல் காற்றும் பெரு மழையும் சேர்ந்து வந்துவிட்டால் மரம், செடி, கொடி யெல்லாம் அசைகின்றன, ஒடிகின்றன, வேருடன் பெயர்த்து எடுக்கப்படுகின்றன. அந்நிலைமையில் அவைகளுள் உறுதி பெற்றிருப்பது ஒன்றுமில்லை. பூமியில் உள்ள மண்ணும் பறித்தெடுக்கப்படுகிறது. ஆனால் மலையொன்று இதற்கெல்லாம் அசைவதில்லை. அது உறுதியாக நிற்கிறது. ஞானம் அங்ஙனம் உறுதிபெறவேண்டும். அத்தகைய ஞானம் அடையப்பெற்றவன் ஸ்திதப்பிரக்ஞன் எனப்படுகிறான். அர்ஜுனன் இப்பொழுது ஸ்திதப்பிரக்ஞன் ஆய்விட்டான். தன் சொரூபத்தைப்பற்றி இப்பொழுது அவன் கொண்டுள்ள பேரறிவை யாரும் கலைத்துவிட முடியாது. பரஞானம் அடையப்பெற்றபின் அது மறைந்து போய்விடுவதில்லை.

கத ஸந்தேக: — சந்தேகங்கள் போய்விட்டன. இது ஐந்தாவது வாக்குமூலம். ஆத்ம சொரூபத்தை அனுபூதி வாயிலாக சாக்ஷாத்கரித்தவனுக்கு அதைப்பற்றி ஐயம் உண்டாவதில்லை. இன்னும் உயிரோடிருக்கும் ஒருவனுக்குத் தன் உயிர் வாழ்க்கையைப்பற்றி எப்படிச் சந்தேகம் உண்டாவதில்லையோ அப்படி அனுபூதி பெற்றவனுக்கு ஆத்ம சொரூபத்தைப்பற்றி சந்தேகம் வருவதில்லை.

தவ வசனம் கரிஷ்யே என்பது உமதுசொற்படி செய்வேன் என்று பொருள்படுகிறது. இது கடைசி வாக்குமூலம். அவன் எதைச் செய்ய ஆரம்பத்தில் மறுத்தானோ, அதைச் செய்ய இப்பொழுது துணிந்தான். செய்வது இன்னதென்று இப்பொழுது விளங்கிற்று. மெய்ஞ்ஞானம் பெற்றதே அதற்குக் காரணமாயிற்று. சாஸ்திரம் புகட்டுவதும், குரு கிருபை புரிவதும், சாதகன் அனுபவ பூர்வமாகப் பெறுவதும் முடிந்த நிலையில் ஒன்றாயிற்று.

தவளைக்குஞ்சினுடைய வால் விழுந்ததும் அது தண்ணீரிலும் தரையிலும் வாழக்கூடும். அஞ்ஞானமாகிய வால் மனிதனிடமிருந்து விழுந்துவிட்டால் அவனுக்கு முக்தியுண்டாகிவிடுகிறது. அப்போது அவன் கடவுளிடத்தும், அது போலவே உலகத்தினிடத்தும் நன்கு வாழக் கூடியவனாகிறான்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதம் இத்துடன் முடிவடைகிறது. இனி, இது மற்ற சம்பவங்களுடன் தொடர்வு பெறுவது மேலும் வரும் சில சுலோகங்களில் விளக்கப்படுகிறது.

सञ्जय उवाच

**इत्यहं वासुदेवस्य पार्थस्य च महात्मनः ।**
**संवादमिममश्रौषमद्भुतं रोमहर्षणम् ॥ ७४**

ஸஞ்ஜய உவாச

இத்யஹம் வாஸுதேவஸ்ய பார்த்தஸ்ய ச மஹாத்மன: ।
ஸம்வாதமிமமச்ரௌஷமத்புதம் ரோமஹர்ஷணம் ॥ 74

सञ्जय उवाच ஸஞ்ஜய உவாச *சஞ்ஜயன் சொன்னது*

अहं அஹம் *நான்* इति இதி *இங்ஙனம்* वासुदेवस्य வாஸுதேவஸ்ய *வாசுதேவனுக்கும்* महात्मनः पार्थस्य च மஹாத்மன: பார்த்தஸ்ய ச *மகாத்மாவான பார்த்தனுக்கும்* इमं இமம் *இந்த* रोमहर्षणं ரோம ஹர்ஷணம் *மயிர்க்கூச்சுண்டுபண்ணுகிற* अद्भुतं संवादं அத்புதம் ஸம்வாதம் *அற்புதமான சம்வாதத்தை* अश्रौषं அச்ரௌஷம் *கேட்டேன்.*

சஞ்ஜயன் சொன்னது

***இங்ஙனம் வாசுதேவருக்கும் மகாத்மாவான பார்த்தனுக்கும் இடையில் நிகழ்ந்த மயிர்க்கூச்சு உண்டுபண்ணும் அற்புதச் சம்பாஷணையை நான் கேட்டேன்.*** 74

உள்ளத்தில் பேருணர்ச்சி உண்டானால் மயிர்க்கூச் செடுக்கிறது. நல்லது கெட்டது இரண்டும் உடலில் மயிர் சிலிர்க்கச் செய்யும். பொதுவாக நல்ல விஷயந்தான் நல்ல வர்களுக்கு இப்படிப்புளகாங்கிதம் உண்டாகும்படிச் செய் யும். பேசுபவனாகிய கிருஷ்ணன், பேசப்படுபவனாகிய அர் ஜுனன், பேசும் விஷயமாகிய கீதா தத்துவம் ஆகிய இம் மூன்றும் சேர்ந்து ஸஞ்ஜயன்பால் புளகாங்கிதம் உண்டாக் கியதில் வியப்பொன்றுமில்லை. திருதராஷ்டிரனுக்கு அது எவ்வளவு தூரம் பயன்பட்டது என்பதற்குச் சரித்திரமே சான்றாயிருக்கிறது.

அர்ஜுனனை மகாத்மாவென்று மொழிவதன் மூலம் அவன் பக்கத்தைச் சேர்ந்தவர்கள் நேர்மையாக நடந்து கொள்ளுபவர்கள் என்பது குறிப்பிடப்படுகிறது.

தொலைவில் போர்க்களத்தில் நிகழ்ந்த இந்த சம்பா ஷணையைக் கேட்க சஞ்ஜயனுக்கு எப்படி முடிந்தது என்று கேள்வி பிறக்கிறது. அதற்கு விடை வருகிறது:--

**व्यासप्रसादाच्छ्रुतवानेतद्गुह्यमहं परम् ।**
**योगं योगेश्वरात्कृष्णात्साक्षात्कथयतः स्वयम् ॥ ७५**

வ்யாஸப்ரஸாதாச்ருதவானே தத்குஹ்யமஹம் பரம் |
யோகம் யோகேச்வராத் க்ருஷ்ணாத் ஸாக்ஷாத்கதயத:
ஸ்வயம் ‖ 75

ஏஹ் அஹம் *நான்* व्यास प्रसादात् வ்யாஸ ப்ரஸாதாத் *வியாச பகவான் அனுக்கிரகத்தால்* इमं परं गुह्यं योगं இமம் பரம் குஹ்யம் யோகம் *இந்த மேலான ஆழ்ந்த யோகத்தை* स्वयं ஸ்வயம் *தாமே* कथयतः கதயத: *சொல்லுபவராகிய* योगेश्वरात् कृष्णात् யோகேச்வராத் க்ரு

க்ருஷ்ணாத் யோகேசுவரனாகிய கிருஷ்ணனிடத்திருந்து साक्षात् ஸாக்ஷாத் நேரே श्रुतवान् ச்ருதவான் கேட்பவனானேன்.

***வியாசர் அருளால், இந்த மேலாம் ஆழ்ந்த யோகத்தைத் தாமே சொல்லலுற்ற யோகேசுவரக் கிருஷ்ணனிடத்திருந்து நான் நேரே கேட்டேன். 75***

ஸஞ்ஜயனுக்கு ஞானக்கண்ணை வழங்கியவர் வியாசர். ஆகையால் கிருஷ்ணனுடைய திவ்விய தர்சனத்தைப் பெறவும் விச்வரூபதர்சனத்தைப் பெறவும் அவர் பகர்ந்ததையெல்லாம் அப்படியே கேட்கவும் அவனுக்கு இயன்றது. நெல்லுக்கு இறைத்த நீர் புல்லுக்கும் பயன்படுவதுபோன்று தான் பெற்ற பேறு யாது, அது யாருடைய அனுக்கிரகத்தால் ஆயிற்று என்பதை சஞ்ஜயன் தெரிவிக்கிறான்.

அது பெரும்பேறு என்பதற்கு அத்தாட்சி மேலும் வருகிறது :—

**राजन्संस्मृत्य संस्मृत्य संवादमिममद्भुतम् ।**
**केशवार्जुनयोः पुण्यं हृष्यामि च मुहुर्मुहुः ॥ ७६**

ராஜன் ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ஸம்வாதமிமமத்புதம் ।
கேசவார்ஜுனயோ: புண்யம் ஹ்ருஷ்யாமி ச முஹுர்முஹு: ॥

राजन् ராஜன் *அரசே* केशवार्जुनयोः கேசவார்ஜுனயோ: *கேசவனுக்கும் அர்ஜுனனுக்குமிடையில் நடந்த* इमं पुण्यं अद्भुतं संवादं இமம் புண்யம் அத்புதம் ஸம்வாதம் *இந்தப் புண்ணியமும் அற்புதமுமான சம்வாதத்தை* संस्मृत्य संस्मृत्य ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய *நினைத்து நினைத்து* मुहुः मुहुः முஹு: முஹு: *திரும்பத் திரும்ப* हृष्यामि ஹ்ருஷ்யாமி *மகிழ்வடைகிறேன்.*

***வேந்தே, கேசவார்ஜுனரின் வியப்புக்குரிய இப்புண்ணிய சம்வாதத்தை நினைந்து நினைந்து நான் மீண்டும் மீண்டும் மகிழ்வடைகிறேன். 76***

சஞ்ஜயன் அடைந்த மகிழ்வு சாஸ்திரத்தின் மகிமையைக் குறிக்கிறது. நலத்தை அடையப்பெற்ற நல்லார்

*அந்த நலத்தினின்று உலப்பிலா ஆனந்தத்தை அடைவது இயல்பு.*

**तच्च संस्मृत्य संस्मृत्य रूपमत्यद्भुतं हरेः ।**
**विस्मयो मे महान्राजन्हृष्यामि च पुनः पुनः ॥ ७७**

தச்ச ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ரூபமத்யத்புதம் ஹரே: ।
விஸ்மயோ மே மஹான் ராஜன் ஹ்ருஷ்யாமி ச புன: புன: ॥ 77

राजन् ராஜன் *அரசே* हरेः ஹரே: *ஹரியினுடைய* तत् अद्भुतं रूपं தத் அத்புதம் ரூபம் *அந்த அற்புத வடிவத்தை* संस्मृत्य संस्मृत्य ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய *எண்ணியெண்ணி* मे மே *எனக்கு* च ச *இன்னும்* महान् विस्मयः மஹான் விஸ்மய: *பெரும் வியப்புண்டாகிறது* पुनः पुनः புன: புன: *மேலும் மேலும்* हृष्यामि च ஹ்ருஷ்யாமி ச *களிப்பும் அடைகிறேன்.*

***அரசே, ஹரியின் அந்த அதிசய வடிவத்தை இன்னும் எண்ணியெண்ணி எனக்குப் பெரு வியப்புண்டாகிறது. மேலும் மேலும் களிப்படைகிறேன்.*** ***77***

*பல யோகிகளுக்கும் பக்தர்களுக்கும் காண்பதற்கரிய விச்வரூபதரிசனத்தைத் தற்செயலாய் ஸஞ்ஜயன் கண்டான். சூழ்நிலையால் சிலருக்குக் கிடைக்கும் வாய்ப்புகளில் இது மிகப்பெரியது. விசுவரூப தரிசனத்தின் ஒரு சிறு பகுதியைக் காணாத ஜீவன் ஜகத்தில் இல்லை. வியப்புக்குரியதும் மனதை மேல் நிலைக்குக் கொண்டுபோகக்கூடியதும் எதுவாயினும் அது இறைவனுடைய மகிமையேயாம். ஒவ்வொரு மனிதனுக்கும் அத்தகைய காட்சிகள் கிடைக்கின்றன. பெரும்பாலர்க்கு அவைகளைப் பயன்படுத்தும் வழி தெரிகிறதில்லை. திரும்பத் திரும்ப அக்காட்சிகளைப்பற்றி நினைப்பது ஒருவித தியானமாகும். மனது அதனால் நன்கு பண்படுகிறது. தனது மனதை உயர்நிலைக்குக் கொண்டுபோன காட்சி எதுவென்று சாதகன் ஒருவன் நினைத்துப் பார்க்கவேண்டும். பிறகு அதை பக்தியுடன் ஞாபகத்துக்குக் கொண்டுவரவேண்டும்.*

यत्र योगेश्वरः कृष्णो यत्र पार्थो धनुर्धरः ।
तत्र श्रीर्विजयो भूतिर्ध्रुवा नीतिर्मतिर्मम ॥ ७८

யத்ர யோகேச்வர: க்ருஷ்ணோ யத்ர பார்த்தோ தனுர்தர: ।
தத்ர ஶ்ரீர்விஜயோ பூதிர்த்ருவா நீதிர்மதிர்மம ॥ 78

यत्र யத்ர *எங்கு* योगेश्वरः कृष्णः யோகேச்வர: க்ருஷ்ண: *யோகேசுவரனாகிய கிருஷ்ணன்* यत्र யத்ர *எங்கு* धनुर्धरः पार्थः தனுர்தர: பார்த்த: *தனுசைத் தாங்கிய பார்த்தன்* तत्र தத்ர *ஆங்கு* श्रीः ஶ்ரீ: *திரு* विजयः விஜய: *வெற்றி* भूतिः பூதி: *பெருக்கு* ध्रुवा नीतिः த்ருவா நீதி: *நிலைத்த நியாயமும் உள* इति இதி *என்பது* मे மே *என்னுடைய* मतिः மதி: *கொள்கை.*

***யோகேசுவரக் கிருஷ்ணனும் தனுசைத் தாங்கிய பார்த்தனும் எங்குளரோ ஆங்குத் திருவும், வெற்றியும், பெருக்கும், நிலைத்த நீதியும் உளவென்பது என் கொள்கை.　　78***

*இது சஞ்ஜயனுடைய சொந்த அபிப்பிராயம் என்றாலும் சிறந்த கீதா தத்துவங்களில் இதுவும் ஒன்றாகும். கண்ணன் யோகேசுவரனாதலால் புருஷார்த்தங்களெல்லாம் அவன் மூலம் நிறைவேறுகின்றன. தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் ஆகிய நான்கில் ஜீவாத்மாவுக்கு எது வாய்க்கப்பெற்றாலும் அது யோகமாகிறது. அவைகளுள் சிறப்பாயுள்ள மோக்ஷத்தைக் கிருபைகூர்ந்து வழங்க வல்லவன் கிருஷ்ணன். முதல் அத்தியாயத்தில் தனுசைத் தூர எறிந்து விட்டவனாக அர்ஜுனன் காட்சி கொடுத்தான். முயற்சியற்ற அல்லது முயற்சி குன்றிய வாழ்க்கையை அது எடுத்துக்காட்டுவதாகும். இப்பொழுது காண்டீவம் என்னும் வில்லை ஏந்திய அர்ஜுனன் காட்சி கொடுக்கிறான். கிருஷ்ணனுடைய யோக வல்லமையும் பார்த்தனுடைய பராக்கிரமமும் சேர்ந்து ஆகாத கா' யத்தை ஆக்குவிக்கும். இதைக் கேட்டபிறகாவது திரு ராஷ்டிரனுக்கு மனது மாறியிருக்கவேண்டும்! அதாவ தன் பிள்ளைகளுக்கு வெற்றியுண்டாகாது; உயிர் ந*

மும், பொருள் நஷ்டமும் ஏற்படுவது உறுதி. அதைத் தடுக்க ஒருவிதத்தில் சமாதானம் செய்துகொள்ளலாம் என்ற எண்ணம் வந்திருக்கவேண்டும். ஆனால் அவிவேகமே வடிவெடுத்திருப்பவனுக்கு அதொன்றும் விளங்காது. கடவுளே அருகிலிருந்துகொண்டு செய்கிற செயலும் அவனுக்குப் புலப்படாது.

தெய்வத்தின் சகாயமும் மனிதனுடைய நேர்மையான முயற்சியும் ஒன்றுசேர்ந்திருக்கவேண்டும். மனிதனுக்கு ஆகவேண்டியதை யெல்லாம் தெய்வம் செய்து வைக்கும் என்று நினைத்துக்கொண்டு தன் முயற்சியையெல்லாம் நிறுத்திவிடலாகாது. பிறகு துர்யோதனன் கூட்டம் செய்தது போன்று ஈசுவரனது திட்டத்தைப் புறக்கணித்து விட்டுத் தனது சொந்த முயற்சியால் எல்லாம் ஆய்விடும் என்று கருதி வினையாற்றலாகாது. யாண்டும் கடவுளைச் சார்ந்திருந்து தன் கடமையைக் கடவுள்பொருட்டு முழு மனதுடன் செய்யவேண்டும்.

ஸ்ரீ என்பது இங்கு ராஜ்யலக்ஷ்மி. எடுத்துக் கொண்ட காரியங்களெல்லாம் ஈசுவர சங்கற்பத்துக்கு உட்பட்டவைகளாக இருக்கவேண்டும். அப்பொழுது விஜயம் அல்லது வெற்றி நிச்சயமாக வந்தமையும். அதற்கு மேல் நல்ல முயற்சியுடையவனுக்குச் செல்வமும் சிறப்பும் வளரும். வெற்றியையும் ஆக்கத்தையும் முன்னிட்டுக் கடவுளை நம்பியிருப்பவன் முறைதவறி நடந்துகொள்ள மாட்டான். நேர்மையையும், நிலைத்த நீதியையும், தெளிந்த ராஜ தர்மத்தையும் அவனிடத்துக் காணலாம்.

ஈசுவர கிருபையும் ஜீவப்பிரயத்தனமும் ஒன்றுசேருமானால் இகபரமிரண்டுக்கும் அவை நல்சாதனமாகின்றன. -சுவர கிருபை சந்ததமும் நம் பொருட்டுக் காத்துக்கொண் ருக்கிறது. அதைப் பயன்படுத்தி நாம் நேர்மையாக ற்சி செய்வது ஒன்றே பாக்கி. இப்பொழுதே முயலு முறை.

*சூரிய வெளிச்சம் எங்கும் சமமாய் விழுகிறது. ஆனால் ஜலம், கண்ணாடி, மெருகிட்ட உலோகம் இவைபோன்ற வஸ்துக்களில் அவ் வெளிச்சம் நன்றாகப் பிரதிபலிக்கின்றது. அதுபோலத்தான் தெய்விக ஒளியும். அது எல்லாரிடத்தும் சமமாயும் பாரபக்ஷமின்றியும் வருகின்றது. என்றாலும் நல்லாருடைய தூய மனமும், ஸாதுக்களுடைய இருதயமுமே அவ்வொளியை நன்றாய்ப் பிரதிபலிக்கச் செய்கின்றன.*

*பகவத் பக்திகொண்ட பரிசுத்த பக்தர்களுக்காகவே பகவான் உலகத்தில் அவதாரம் செய்கின்றார். அவதார புருஷரோடு வருபவர்கள் நித்தியமுக்தர்களாயாவது, கடைசி ஜன்மம் எடுத்தவர்களாயாவது இருப்பார்கள்.*

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

इति श्री महाभारते शतसाहस्र्यां संहितायां वैयासिक्यां भीष्मपर्वणि श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ब्रह्मविद्यायां योगशास्त्रे श्रीकृष्णार्जुनसंवादे मोक्षसंन्यासयोगो नाम अष्टादशोऽध्यायः ॥

இதி ஸ்ரீ மஹாபாரதே சதஸாஹஸ்ர்யாம் ஸம்ஹிதாயாம் வையாஸிக்யாம் பீஷ்மபர்வணி ஸ்ரீமத் பகவத்கீதா-ஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம் யோக-சாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே மோக்ஷஸன்யாஸயோகோ நாம அஷ்டாதசோऽத்யாய: ॥

***வியாசர் இயற்றிய ஒரு லக்ஷம் சுலோகங்களையுடைய மஹாபாரதத்தில், பீஷ்மபருவத்தில், பிரம்ம வித்தையைப் புகட்டுவதும், யோக சாஸ்திரமானதும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமாக வந்துள்ளதுமாகிய பகவத்கீதை என்னும் உபநிஷதத்தின்கண் மோக்ஷ ஸன்யாஸ யோகம் என்ற பதினெட்டாம் அத்தியாயம்.***

# ஸ்ரீ கீதா மாஹாத்மியம்

**श्रीगणेशाय नमः ॥ श्रीराधारमणाय नमः ॥**

ஸ்ரீ கணேசாய நம: ॥ ஸ்ரீ ராதாரமணாய நம: ॥

*ஸ்ரீ கணேசனுக்கு நமஸ்காரம்; ஸ்ரீ ராதா ரமணனுக்கு நமஸ்காரம்.*

**धरोवाच**

**भगवन् परमेशान भक्तिरव्यभिचारिणी ।**
**प्रारब्धं भुज्यमानस्य कथं भवति हे प्रभो ॥ १**

தரோவாச

பகவன் பரமேசான பக்திரவ்யபிசாரிணீ ।
ப்ராரப்தம் புஜ்யமானஸ்ய கதம் பவதி ஹே ப்ரபோ ॥ 1

தரை சொன்னது

*பகவானே, பரமேசா, பிராரப்த கர்மத்தால் கட்டுண்டு கிடக்கும் ஒருவன் மாற்று அறியாத பக்தியைப் பெறுவது எங்ஙனம்? 1*

**विष्णुरुवाच**

**प्रारब्धं भुज्यमानो हि गीताभ्यासरतः सदा ।**
**स मुक्तः स सुखी लोके कर्मणा नोपलिप्यते ॥ २**

விஷ்ணுருவாச

ப்ராரப்தம் புஜ்யமானோ ஹி கீதாப்யாஸரத: ஸதா ।
ஸ முக்த: ஸ ஸுகீ லோகே கர்மணா நோபலிப்யதே ॥ 2

விஷ்ணு சொன்னது

*கீதா அப்பியாசத்தில் ஒருவன் சதா மகிழ்வடைந்திருப்பானாகில், பிராரப்த கர்மத்தில் கட்டுண்டு கிடக்கினும்,*

அவனே முக்தன். இவ்வுலகிலேயே சுகத்தை அனுபவிப்பவனும் அவனே. புதிய கர்மத்தில் அவன் தோய்வுறுன். 2

**महापापादिपापानि गीताध्यानं करोति चेत् ।**
**क्वचित्स्पर्शं न कुर्वन्ति नलिनीदलमंबुवत् ॥ ३**

மஹாபாபாதிபாபானி கீதாத்யானம் கரோதி சேத் ।
க்வசித்ஸ்பர்சம் ந குர்வந்தி நலினீதலமம்புவத் ॥ 3

*கீதா தியானம் செய்கின்றவனை பாபங்களில் மஹா பாபமும் தீண்டுவது கிடையாது. தாமரையிலை தண்ணீரில் தோய்வுறுதிருப்பதுபோன்று அவன் இருக்கிறுன்.* 3

**गीतायाः पुस्तकं यत्र यत्र पाठः प्रवर्तते ।**
**तत्र सर्वाणि तीर्थानि प्रयागादीनि तत्र वै ॥ ४**

கீதாயா: புஸ்தகம் யத்ர யத்ர பாட: ப்ரவர்த்ததே ।
தத்ர ஸர்வாணி தீர்த்தானி ப்ரயாகாதீனி தத்ர வை ॥ 4

*கீதா புஸ்தகம் எங்கு இருக்கிறதோ, எங்கு கீதா பாடம் நடைபெறுகிறதோ அங்குப் புண்ணிய தீர்த்தங்களனைத்தும், பிரயாகைகளும் மற்றும் உள்ளவைகளும் வந்து கூடுகின்றன.* 4

**सर्वे देवाश्च ऋषयो योगिनः पन्नगाश्च ये ।**
**गोपाला गोपिका वापि नारदोद्धवपार्षदैः ॥ ५**

சர்வே தேவாஸ்ச ருஷயோ யோகின: பன்னகாஸ்ச யே ।
கோபாலா கோபிகா வாபி நாரதோத்தவ பார்ஷதை : ॥ 5

*தேவர்கள் அனைவரும், ரிஷிகளும், யோகிகளும், பன்னகர்களும், கோபாலர்களும், கோபிகளும், நாரதரும், உத்தவரும், அவர்கள் கூட்டத்தைச் சேர்ந்தவர்களும் ஆங்கு உளர்.* 5

सहायो जायते शीघ्रं यत्र गीता प्रवर्तते ।
यत्र गीताविचारश्च पठनं पाठनं श्रुतम् ।
तत्राहं निश्चितं पृथ्वि निवसामि सदैव हि ॥ ६

ஸஹாயோ ஜாயதே சீக்ரம் யத்ர கீதா ப்ரவர்த்ததே ।
யத்ர கீதாவிசாரஸ்ச படனம் பாடனம் ச்ருதம் ।
தத்ராஹம் நிஸ்சிதம் ப்ருத்வி நிவஸாமி ஸதைவ ஹி ॥ 6

*எங்கு கீதை வாசிக்கப்படுகிறதோ அங்கு சீக்கிரம் சஹாயம் வருகிறது. எங்கு கீதை ஆராய்ச்சி செய்யப்படுகிறதோ, ஓதப்படுகிறதோ, புகட்டவும் கேட்கவும் செய்யப் படுகிறதோ, ஆங்கு நிலமகளேகேள், நான் நிச்சயமாக ஸதா வாசம் செய்கிறேன்.* (6)

गीताश्रयेऽहं तिष्ठामि गीता मे चोत्तमं गृहम् ।
गीताज्ञानमुपाश्रित्य त्रींल्लोकान्पालयाम्यहम् ॥ ७

கீதாச்ரயேऽஹம் திஷ்டாமி கீதா மே சோத்தமம் க்ருஹம் ।
கீதாஞானமுபாச்ரித்ய த்ரீன்லோகான் பாலயாம்யஹம் ॥ 7

*கீதை என்னும் புகலிடத்தில் நான் வீற்றிருக்கிறேன். எனக்கு உத்தமமான இருப்பிடம் கீதை. கீதா ஞானத்தில் நின்றுகொண்டு மூவுலகங்களையும் நான் பரிபாலிக்கிறேன். 7*

गीता मे परमा विद्या ब्रह्मरूपा न संशयः ।
अर्धमात्राक्षरा नित्या स्वानिर्वाच्यपदात्मिका ॥ ८

கீதா மே பரமா வித்யா ப்ரஹ்மரூபா ந ஸம்சய: ।
அர்த்தமாத்ராக்ஷரா நித்யா ஸ்வானிர்வாச்ய பதாத்மிகா ॥ 8

*எனது பரம வித்தையாயிருப்பது கீதை; அது பிரம்ம ரூபம் என்பதில் சம்சயமில்லை. அர்த்தமாத்திரையாய், அக்ஷரமாய், நித்தியமாய், எனது சொரூபத்தை சொல்லால் விளக்க முடியாததாய் இந்த ஞானம் உளது. 8*

चिदानन्देन कृष्णेन प्रोक्ता स्वमुखतोऽर्जुनम् ।
वेदत्रयी परानंदा तत्त्वार्थज्ञानसंयुता ॥ ९

சிதானந்தேன க்ருஷ்ணேன ப்ரோக்தா ஸ்வமுகதோऽர்ஜுனம் ।
வேதத்ரயீ பரானந்தா தத்வார்த்தஞான ஸம்யுதா ॥ 9

மூன்று வேதங்களின் வடிவமாய், பேரானந்த வடிவமாய், தத்துவத்தை உள்ளபடி விளக்குவதாயுள்ள இந்த ஞானம் சிதானந்த கிருஷ்ணனால் அர்ஜுனனுக்குத் திருவாய் மலர்ந்தருளப் பெற்றது. 9

योऽष्टादशजपो नित्यं नरो निश्चलमानसः ।
ज्ञानसिद्धिं स लभते ततो याति परं पदम् ॥ १०

யோऽஷ்டாதசஜபோ நித்யம் நரோ நிஸ்சலமானஸः ।
ஞான ஸித்திம் ஸ லபதே ததோ யாதி பரம் பதம் ॥ 10

உறுதியான உள்ளத்துடன் எம்மனிதன் நாள்தோறும் பதினெட்டு அத்தியாயங்களையும் ஓதுகின்றானோ, அவன் ஞானசித்தியடைந்து பிறகு பரமபதத்தைச் சேருகிறான். 10

पाठे समग्रेऽसम्पूर्णे ततोऽर्धं पाठमाचरेत् ।
तदा गोदानजं पुण्यं लभते नात्र संशयः ॥ ११

பாடே ஸமக்ரேऽஸம்பூர்ணே ததோऽர்தம் பாடமாசரேத் ।
ததா கோதானஜம் புண்யம் லபதே நாத்ர ஸம்சயः ॥ 11

முழுதும் படனம் செய்ய இயலாவிட்டால் அதன் பாதியைப் படிக்கலாம். அப்படிச் செய்கின்றவன் கோதானத்துக்கு நிகரான புண்ணியத்தைப் பெறுகிறான். அதில் சந்தேகமில்லை. 11

त्रिभागं पठमानस्तु गङ्गास्नानफलं लभेत् ।
षडंशं जपमानस्तु सोमयागफलं लभेत् ॥ १२

த்ரிபாகம் படமானஸ்து கங்காஸ்னன பலம் லபேத் ।
ஷடம்சம் ஜபமானஸ்து ஸோம யாகபலம் லபேத் ॥ 12

*மூன்றில் ஒரு பகுதி படிக்கின்றவன் கங்கா ஸ்நான பலனை அடைகின்றான். ஆறில் ஒரு பங்கு படிப்பவன் சோமயாக பலனைப் பெறுகின்றான். 12*

**एकाध्यायं तु यो नित्यं पठते भक्तिसंयुतः ।**
**रुद्रलोकमवाप्नोति गणो भूत्वा वसेच्चिरम् ॥ १३**

ஏகாத்யாயம் து யோ நித்யம் படதே பக்தி ஸம்யுத: ।
ருத்ரலோக மவாப்னோதி கணோ பூத்வா வஸேச்சிரம் ॥ 13

*பக்தியுடன் ஓர் அத்தியாயமாவது நித்தியம் படிப்பவன் ருத்திர லோகத்தையடைந்து அவனுடைய கணங்களில் ஒருவனாக அங்கு நெடிது வாழ்கின்றான். 13*

**अध्यायं श्लोकपादं वा नित्यं यः पठते नरः ।**
**स याति नरतां यावन्मन्वन्तरं वसुन्धरे ॥ १४**

அத்யாயம் ச்லோகபாதம் வா நித்யம் ய: படதே நர: ।
ஸ யாதி நரதாம் யாவன்மன்வந்தரம் வஸுந்தரே ॥ 14

*வசுந்தரே, ஒரு அத்தியாயத்தின் அல்லது ஒரு சுலோகத்தின் காற்பங்கு நாள்தோறும் படிப்பவன் ஒரு மன்வந்தரம் முடியும் வரையில் மானுடப் பிறப்பு எடுக்கிறான்.*

**गीतायाः श्लोकदशकं सप्त पञ्च चतुष्टयम् ।**
**द्वौ त्रीनेकं तदर्धं वा श्लोकानां यः पठेन्नरः ॥ १५**
**चंद्रलोकमवाप्नोति वर्षाणामयुतं ध्रुवम् ।**
**गीतापाठसमायुक्तो मृतो मानुषतां व्रजेत् ॥ १६**

கீதாயா: ச்லோகதசகம் ஸப்த பஞ்ச சதுஷ்டயம் ।
த்வௌ த்ரீனேகம் ததர்த்தம் வா ச்லோகானாம் ய: படேன்னர: ॥

சந்த்ரலோக மவாப்னோதி வர்ஷாணாமயுதம் த்ருவம் ।
கீதாபாடஸமாயுக்தோ ம்ருதோ மானுஷதாம் வ்ரஜேத் ॥ 16

*கீதையினுடைய பத்து, ஏழு, ஐந்து, நான்கு, மூன்று இரண்டு, அல்லது ஒன்றோ, பாதியோ சுலோகத்தைப் படனம் பண்ணுபவன் சந்திரலோகத்தில் பதினாயிரம் வருஷங்கள் வசிக்கிறான். கீதையைப் படித்துக்கொண்டிருக்கும்போது உயிர் துறப்பவன் மனுஷ்ய லோகத்தை அடைகிறான். 15-16*

गीताभ्यासं पुनः कृत्वा लभते मुक्तिमुत्तमाम् ।
गीतेत्युच्चारसंयुक्तो म्रियमाणो गतिं लभेत् ॥ १७

கீதாப்யாசம் புன: க்ருத்வா லபதே முக்திமுத்தமாம் ।
கீதேத்யுச்சார ஸம்யுக்தோ ம்ரியமாணோ கதிம் லபேத் ॥ 17

*கீதா அப்பியாசம்செய்துகொண்டிருப்பவன் உத்தமமான முக்தியடைகிறான். மரணமடையும்போது "கீதை" என்று உச்சரிக்கும் மனிதன் வீடுபெறுவான். 17*

गीतार्थश्रवणाऽऽसक्तो महापापयुतोऽपि वा ।
वैकुण्ठं समवाप्नोति विष्णुना सह मोदते ॥ १८

கீதார்த்தச்ரவணாऽऽஸக்தோ மஹாபாபயுதோऽபி வா ।
வைகுண்டம் ஸமவாப்னோதி விஷ்ணுனா ஸஹ மோததே ॥ 18

*மஹாபாபம் செய்தவனும் கீதையின் அர்த்தத்தைக் கேட்பதில் விருப்பமுடையவனாயிருப்பானாகில் அவன் வைகுண்டம் ஏகி விஷ்ணுவுடன் பேரானந்தம் திளைப்பான்.*

गीतार्थं ध्यायते नित्यं कृत्वा कर्माणि भूरिशः ।
जीवन्मुक्तः स विज्ञेयो देहान्ते परमं पदम् ॥ १९

கீதார்த்தம் த்யாயதே நித்யம் க்ருத்வா கர்மாணி பூரிச: ।
ஜீவன்முக்த: ஸ விக்ஞேயோ தேஹாந்தே பரமம் பதம் ॥ 19

ஓயாது கர்மம் செய்துகொண்டிருப்பதற்கு இடை
யில் யார் கீதையின் அர்த்தத்தை இடையறாது எண்ணிக்
கொண்டிருக்கிறானோ அவனை ஜீவன்முக்தன் என்று கருத
வேண்டும். உடல் அழியும்போது அவன் பரமபதத்தை
அடைகிறான். 19

**गीतामाश्रित्य बहवो भूभुजो जनकादयः ।**
**निर्धूतकल्मषा लोके गीता याताः परं पदम् ॥ २०**

கீதாமாச்ரித்ய பஹவோ பூபுஜோ ஜனகாதய: ।
நிர்தூதகல்மஷா லோகே கீதா யாதா: பரம் பதம் ॥ 20

இந்த கீதையைத் துணையாகக்கொண்டு ஜனகன்
போன்ற பூபாலர்கள் பலர் இவ்வுலகில் குறைகள் நீங்கப்
பெற்றவராயினர். பின்பு பரமபதத்தையும் பெற்றனர்
என்று பாடப்பட்டிருக்கிறது. 20

**गीतायाः पठनं कृत्वा माहात्म्यं नैव यः पठेत् ।**
**वृथा पाठो भवेत्तस्य श्रम एव ह्युदाहृतः ॥ २१**

கீதாயா: படனம் க்ருத்வா மாஹாத்ம்யம் நைவ ய: படேத் ।
வ்ருதா பாடோ பவேத்தஸ்ய ச்ரம ஏவ ஹ்யுதாஹ்ருத: ॥ 21

கீதையை வாசித்தான பிறகு, இங்கு இயம்பியபடி
அதன் மாஹாத்மியத்தை வாசிக்காதவனுக்கு வாசிப்பு
வீண் போனதாகும்; முயற்சியும் வீண்போனதேயாம். 21

**एतन्माहात्म्यसंयुक्तं गीताभ्यासं करोति यः ।**
**स तत्फलमवाप्नोति दुर्लभां गतिमाप्नुयात् ॥ २२**

ஏதன்மாஹாத்ம்ய ஸம்யுக்தம் கீதாப்யாஸம் கரோதி ய: ।
ஸ தத்பலமவாப்னோதி துர்லபாம் கதிமாப்னுயாத் ॥ 22

இந்த மாஹாத்மியத்தோடு கூடிய கீதா அப்யா
சத்தை யார் செய்கின்றானோ அவன் ஈண்டு இயம்

ச பலனைப் பெறுகின்றான். கிடைப்பதற்கு அரிய உயர்கதியும் அவனுக்குக் கிடைக்கிறது. 22

सूत उवाच

**माहात्म्यमेतद्गीताया मया प्रोक्तं सनातनम् ।**
**गीतान्ते च पठेद्यस्तु यदुक्तं तत्फलं लभेत् ॥ २३**

ஸூத உவாச

மாஹாத்ம்யமேதத் கீதாயா மயா ப்ரோக்தம் ஸநாதனம் ।
கீதாந்தே ச படேத்யஸ்து யதுக்தம் தத்பலம் லபேத் ॥ 23

ஸூதர் சொன்னது

*கீதையை வாசித்தான பிறகு என்றால் இயம்பப்பட்ட இந்த கீதா மாஹாத்மியத்தை யார் வாசிக்கிறாரோ அவன் இதில் விளக்கியுள்ள பலனைப் பெறுவான்.* 23

*கீதா மாஹாத்மியத்தில் பகர்ந்துள்ள இக்கருத்துக்கள் ஒரு விதத்தில் மிகைப்பட்டவைகளாகும். ஆகவே அவைகளை இருந்தபடி வாச்சியார்த்தம் பண்ணலாகாது. தாய் ஒருத்தி குழந்தைக்கு உணவூட்டுகிறாள். விளையாட்டில் கருத்துடைய குழந்தையோ ஆகாரம் ஏற்றுக் கொள்ளமாட்டேன் என்கிறது. உணவு உண்டால் விளையாட்டுச் சாமான்கள் சில வாங்கித்தருவதாகத் தாய் இயம்புகிறாள். உண்மையில் விளையாட்டுச் சாமான்களை விடக் குழந்தைக்கு அதிகம் பயன்படுவது ஆகாரமே. கீதா மாகாத்மியம் அங்ஙனம் சிறிய பொருள்களில் ஆசை காட்டிப் பெரிய பொருளை மறைமுகமாக வழங்க முயலுகிறது. இனி, உணவை சிறிது சிறிதாக நாள்தோறும் ஏற்றுவந்தால் அது நன்கு ஜீரணமாகி உடல்மயமாய் மாறிவிடுகிறது. அங்ஙனம் கீதையின் கோட்பாடுகளில் அப்போதைக்கப்போது ஏற்கும் சிறு பகுதிகள் நாளடைவில் நிறைஞானமாகவும் யோகமாகவும் சாதகனுக்கு அமைந்துவிடும். அதன்மூலம் அவன் இகலோகத்தில் சாதிக்கவேண்டியவைகளையெல்லாம் நன்கு சாதித்துவிட்டுப் பிறவிப் பெருங்கடலைத் தாண்ட வல்லவனாவான்.*

**इति श्रीवाराहपुराणे श्रीगीतामाहात्म्यं सम्पूर्णम् ।**

இதி ஸ்ரீ வாராஹபுராணே ஸ்ரீ கீதா மாஹாத்ம்யம் ஸம்பூர்ணம் ।

கீத[illegible]ராஹ புராணத்தில் கீதா மாஹாத்மியம் ஸம்பூரணம்

ஜீவன்(

---

ந்து அதனருகில் போக முயன றது.

ன் இன்னல் குறைந்தது. தான் மற்ற பறவையின ாற்றம் என்று உணர்ந்தது. பிறகு செயலற்ற பறவை ப தான் லயமாயிற்று. ஜீவாத்மா நிறை நிலையடைந்து மாத்மாவில் லயமாகும் பாங்கு இங்ஙனம் விளக்கப்படு து. ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஏற்பட்ட ணக்கம் இக்கோட்பாட்டை நன்கு தெளிவுபடுத்துகிறது. ந்வரும் இணைபிரியாத தோழர்கள். அப்போதைக்கப் ாது அர்ஜுனனுக்கு வந்த குறைகளைக் கிருஷ்ணன் தற்றிவைத்தான். பள்ளியில் பயிற்சி பெற்றபொழுது ணை; விளையாடியபொழுது துணை; போட்டிகள் பல ாட்டபொழுது துணை; வனவாசத்தில் வருந்திக்கொண் ருந்தபொழுது துணை; மணம் புரிந்துகொள்ள விரும்பிய ாழுது தன் தங்கையையே மணம் செய்வித்துத் துணை; ார்க்களத்தில் துணை; பிறகு கீதோபதேசம் என்ற ஞானோ தேசம். இதுவே முடிவான துணை. பல பிறவிகளில் வான் மனத்தகத்து வீற்றிருந்து ஜீவர்களுக்கு அப்போ தக்கப்போது தேவையானவைகளைத் தந்தருள்கின்றான். வை யாவையும் வைத்தனுபவித்தானபிறகு வாழ்க்கையில் ரியதொரு நெருக்கடி வருகிறது. பெற்ற செல்வமும், ற்றமும், பதவியும், போகமும் அப்பொழுது ஒன்றுக்கும் தவாதவைகளாகத் தென்படுகின்றன. மனத்தகத்து நள் சூழ்ந்துவிடுகிறது. வாழ்வு வெறும் சூன்யமாய்விடு து. ஒவ்வோர் உயிரும் ஒரு காலமல்லாவிட்டால் ஒரு லத்தில் அத்தகைய சோதனைக்கு ஆளாகவேண்டும். பர னம் ஒன்றே அவ்வேளைக்கு உற்ற துணையாகிறது. பர னத்தைப் பெற்ற பின்பே வாழ்வின் உட்பொருள் ஜீவ க்கு உள்ளபடி விளங்குகிறது. கருமத்தின் கதி, ஜீவிதத் ர் பாங்கு, மரணத்தின் அவசியம் ஆகியவைகள் பர னம் வருவதற்கு முன்பு விளங்கமாட்டா. பிறவிப் பிணி யும் பிற பிணியையும் வேரறப் போக்கவல்லது பர னம். அதைப் பெறுதற்கேற்ற தருணம் வாய்த்த

பொழுது பகவான் பரிவுடன் பார்த்தனுக்கு அதைப் பக தருளினார்.

## 8. அர்ஜுனன் மக்களின் பிரதிநிதி

பாண்டவர் ஐவருள் பகவான் கீதையைப் பார்த்தனுக்கு உபதேசித்தருளியதின் கருத்து யாது? போர் புரிதல் அப்போதைக்கேற்பட்ட அவசரச் செயல் என்றால் அர்ஜுனனைவிட பீமன் அதற்கென்றே துடித்துக்கொண்டிருந்தான். கொஞ்சம் தூண்டியிருந்தால் அவனைக்கொண்டு அக்காரியம் எளிதில் நிறைவேறியிருக்கும். மற்று, அமர் புரிதல் அல்ல, அறன் வலியுறுத்தலே அண்ணாவின் நோக்கமென்றால் அதற்கேற்றவன் அறக்கடவுளின் வடிவான அண்ணன் யுதிஷ்டிரன். போர் புரிதற்குப் பொருந்தியவன் பீமன். தர்மத்தை உணரத் தகுந்தவன் தர்மராஜா. இவ்விருவரையும் விட்டுவிட்டு, வில்லாளி அர்ஜுனனைப் பொறுக்கி யெடுத்ததில் பொருளொன்றுண்டு. பீமனிடமிருந்தது முரட்டுத்தனம்; கிட்டத்தட்ட அது விலங்கின் பாங்கு. கீழ்மையே வடிவெடுத்திருப்பவனுக்கு யோக சாஸ்திரம் உதவாது. கீழ்மகன் அதைக் கேட்கவும் மாட்டான், அனுஷ்டிக்கவும் மாட்டான். மூத்தவன் தர்மராஜா போன்று தெய்வத்தன்மையில் நிலை பெற்றிருப்பவனுக்கும் யோக சாஸ்திரம் முற்றிலும் தேவையானதல்ல. நூலின் துணையின்றியே அவன் நன்மை கடைப்பிடிக்க வல்லவன். இனி, அர்ஜுனனுடைய பாங்கு இவ்விருவருடைய பாங்குகளுக்கு நடுவில் இருக்கிறது. அவன் விலங்குத் தன்மையைக் கடந்து மேலே வந்துவிட்டான். ஆனால் தெய்வத் தன்மையில் இன்னும் அவன் நிலைபெறவில்லை. விலங்குத் தன்மைக்கும் தெய்வத் தன்மைக்கும் இடைநிலையாகிய மனுஷத் தன்மை அர்ஜுனனுக்குச் சொந்தம். நலம் கேடு ஆகிய இரண்டும் மனிதன்பால் கலக்கப் பெற்றிருக்கின்றன. கேட்டைக் களைந்து நலத்தில் நிலை பெற்றிருப்பது மானுட வாழ்க்கையின் குறிக்கோள். கீதா சாஸ்திரம் அதற்

# ஸ்ரீமத் பகவத்கீதை

## சுலோகங்களின் முதல் அகராதி

சுலோகங்களின் முதல் அகராதி

ப — प

மாம் கர்மாணி 4-14

7-15

பஞ்சைதானி மஹா 18-

9-

த — द



த — ध



ந — न

ர — र

### ஹ — க்ஷ

# விஷய சூசகம்

தமிழ் அகராதி-Tamil Lexicon-முறையைப் பின்பற்றியது

( ச, ஸ, ஒன்றுக்கொன்று மாறுபட்டும் அமைந்திருக்கின்றன )

## விஷய சூசகம்

---

## ஸ்ரீ கிருஷ்ணபகவானுக்கு கீதையில்
### அமைந்துள்ள பல பெயர்கள்

---

ஹ்ருஷீகேசன் = இந்திரியங்களுக்கு ஈசன்

அச்யுதன் = தன் நிலையினின்று வழுவாதவன்

கிருஷ்ணன் = கருப்பு நிறமானவன், அழுக்கைப் போக்குபவன், மும்மூர்த்திசொரூபம், பிரம்ம சொரூபம், அடியார் படும் துயரம் துடைப்பவன்

கேசவன் = அழகியமுடியுடையவன், மும்மூர்த்திகளை வசமாய் வைத்திருப்பவன், கேசின் என்ற அசுரனைக் கொன்றவன்

கோவிந்தன் = ஜீவர்களை அறிபவன்

மதுசூதனன் = மது என்ற அசுரனை அழித்தவன்

ஜநார்தனன் = மக்களால் துதிக்கப்படுபவன்

| | | |
|---|---|---|
| மாதவன் | = | திருமகளுக்குத் தலைவன் |
| வார்ஷ்ணேயன் | = | வ்ருஷ்ணி குலத்தில் உதித்தவன் |
| அரிசூதனன் | = | எதிரிகளை அழிப்பவன் |
| கேசிநிஷூதனன் | = | கேசின் என்ற அசுரனை அழித்தவன் |
| வாசுதேவன் | = | வசுதேவன் மைந்தன், எல்லா உயிர்களிடத்திலும் இருப்பவன் |
| புருஷோத்தமன் | = | பரம புருஷன் |
| பகவான் | = | ஷட்குண சம்பன்னன் |
| யோகேச்வரன் | = | யோகத்துக்குத் தலைவன் |
| விஷ்ணு | = | எங்கும் வியாபகமாயிருப்பவன் |
| ஜகந்நிவாசன் | = | உலகுக்கு இருப்பிடம் |
| யாதவன் | = | யதுகுலத்தில் தோன்றியவன் |

## அர்ஜுனனுக்கு கீதையில் அமைந்துள்ள பெயர்கள்

---

| | | |
|---|---|---|
| அர்ஜுனன் | = | தூய இயல்பு உடையவன் |
| பாண்டவன் | = | பாண்டுவுக்கு மைந்தன் |
| தனஞ்ஜயன் | = | அடைபட்டுக் கிடக்கும் செல்வத்தை சேகரிப்பவன் |
| கபித்வஜன் | = | குரங்குக்கொடியுடையவன் |
| குடாகேசன் | = | தூக்கத்தை வென்றவன் |
| பார்த்தன் | = | பிரிதாவின் மைந்தன் |
| அனகன் | = | பாபமற்றவன் |
| பரந்தபன் | = | எதிரிகளை வாட்டுபவன் |
| கௌந்தேயன் | = | குந்தியின் மைந்தன் |
| பாரதன் | = | பரத குலத்தில் உதித்தவன் |
| குருநந்தனன் | = | குருகுலத்தின் தோன்றல் |
| ஸவ்யஸாசின் | = | இடதுகையில் அம்பு எய்பவன் |